ITHIHASA MANJARI SERIES.

உ

கணபதிதுணை.

# ஸ்ரீமகாபாரதம்.

## விராடபர்வம், உத்தியோகபர்வம், வீஷ்மபர்வம்.






இவை

திருமயிலை - வித்வான் ...

சண்முகம்பிள்ளையவர்களால்

வசனரூபமாகஎழுதுவித்து

ப - மு - செல்வராஜமுதலியாரவர்களால்

தமது

அமரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பித்துப்பிரசுரிக்கப்பட்டன.

சென்னை:

1894.

# அட்டவணை.

## ஸ்ரீ மகாபாரதத்தில்

## விராடபர்வம், உத்தியோகபர்வம், வீஷ்மபர்வமும்,

அடங்கியிருக்கின்றன.

---



சகூ0 - தாம் பக்கத்தில் முதல் நாள் யுத்தம் என்பதை முதற்போர்ச்சருக்கமெனத் திருத்துக.

---

உ

கணபதிதுணை

நான்காவது

# விராடபர்வம்.

## கரந்துறை சருக்கம்.

### கண்ணன் தோத்திரம்.

*கருவிடையெய்தார் நரகிடைப்புகுதார் காலனைக் கனவிலுங்கருதார்*
*வெருவி[illegible]விழிவேன் மடந்தையர்காம வேட்கையாம் வேலையினழுந்தார்*
*பொருமொருகிரி வலக்கரத்தணிந்த புண்ணியன் விண்ணவர்பெருமான்*
*திருமறுமார்பன் றிருவடிக்கடிமை செயுமடி யவர்க்கடி யவரே.*

தன்னைப் பரிவாயடையும் பத்தர்களைக் காக்கும் கண்ணபிரானையும் ஸ்ரீவியாச பகவானையும் பணிந்து, பொன்னிறமாகிய சடைமுடி புனைந்த வைசம்பாயனர், இதுவரையிலுஞ் சொல்லிவந்த ஐந்தாம்வேதமென்னும் பரிசுத்த அமுதத்தை, கற்புடைமையோடு மனமாட்சியிலு மிக்குயர்ந்த பொற்பினையுடைய வபுஷ்டாதேவிக்குப் புருஷரத்தினமாகிய ஜெனமேஜெய மஹாராஜன், காதென்னும் வாய்வழியாலுண்டு அற்புதமடைந்து மற்புயம்வளர்ந்து மகிழ்ந்து, அறிஞர் பெருமானாகிய வைசம்பாயனரை நோக்கி, சுவாமீ! அப்பாலென்மூதாதைகளாகிய பாண்டவர்களுக்கு நேர்ந்த தன்மையைச் சொல்லவேண்டுமென்று வணங்கிக்கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

அரவக்கொடிபடைத்த துரியோதனனேவலால் பாண்டவரைவரும், பாஞ்சாலியும், தௌமியரும், பன்னீராயிரம்பிராமணர்களும், மிருகங்கள்திரியும் வனத்தில வாசம்புரிந்து, பலவகைப்பழமும் வெகுவிதக்கிழங்குகளும்சருகாதிகளுந்தின்று, பகலும் இரவும் பனியும் மழையும் காற்றும் காடும் மேடும் கல்லும் புல்லும் கலந்த வனத்தில் பன்னிரண்டுவருடமுங் கழித்தபின்பு அஞ்ஞாதவாசஞ் செய்வதற்குச் சிந்திக்கவேண்டுமென்று தாங்கள்வசித்த வனத்தையகன்று அப்பாற்சென்று தருமதேவதையை வணங்கி; எந்தையே? யாம் எண்ணியகாரியந் தடையின்றி நிறைவேற நச்சுப்பொய்கையில் வரங்கொடுத்தவண்ணம், இப்போது கைகூடவேண்டுமென்றிரந்து மகிழ்ச்சியடைந்த யுதிட்டிரன் தம்முடனிருந்த அந்தணரைவணங்கி பிரமஞானமுடைய மேலோர்களே? இத்தனைநாளு மெம்முடன்பொருந்தி மிகவுருந்தி வனத்தில் வசித்தே உபவாசமிருந்தீர்கள். இனிமேல் யாமொருவருடம் மறைந்திருக்க வேண்டியகாலம் நேர்ந்ததனால் நீங்களனைவரும் ஆசீர்வதித்து எங்களுக்கு

விடைகொடுத்தருள வேண்டுகின்றோமென்று வணங்கிக்கேட்டனர். இவ்வா றாகத்தலைமேற்கரங்குவித்துக்கேட்டமுரசக்கொடியையுடையதருமாராசனைப் பார்த்து அந்தணர்கூறலாயினர்.

பாண்டவர்கள் திலகனே? நீங்களெண்ணிய காரியமெல்லாம் திண்ண மாகவே கைகூடும், இனி யாதொருதாழ்ச்சியு முண்டாகாது, இன்னுஞ் சில போதில் நீங்கள் வெளிப்பட்டுப் பகைவரை வெற்றிகொண்டு சகல ராஜவைப வத்துடன் உலகை ஆளப்போகின்றீர்களென்று மங்களவாழ்த்துடன் ஆசீர் வதித்தனர். இவ்வாறு பல்லாண்டுகூறிய பெரியோர்களை நோக்கித் தரும ராசன் சொல்லலாயினன்.

ஐயமார்களே? இப்போதெமக்கு நேர்ந்த துயர நீங்கி வெளிப்பட்டு உம்முடன் கலந்திருந்து உசிதவார்த்தைகள்பேசி நேசித்து விசுவசிக்கக்கூடு மோ? கூடாதோ? நான் தேடிய புண்ணியப்பயனெப்படியோ அறியமாட்டே னென்று கண்ணீர்பெருக உள்ளமுருகச்சோர்ந்து நின்றனன். அவ்வாறு சோர்ந்த தருமராசனைத் தம்பிமாரணைத்து உபசரித்து ஆயாசநீங்கத் தேற் றிப்போற்றினர். எவ்வாற்றானுந் தேறாமல்மயங்கிய சத்தியசீலனைத் தௌமி யர்கண்டு உதிஷ்டிரனே! சாந்தம், உதாரம், தருமமுதலிய நற்குணங்களி லும், சத்தியவிரதம் சாஸ்திரவிசாரணைகளிலும், சிறந்த நீதிநிறைந்த கரு ணைக்கடலாகிய நீரேகிலேசப்பட்டால் மற்றியார்தான்பொறுப்பர். முத்தொழி லியற்று மூவர்க்காயினும், பொன்னாட்டிலுறையும் தேவர்க்கானாலும், கேள்வி முதலிய தவத்துற்றோர்க்காயினும் விபத்துவாராமற்போகாது; அவ்வாறுவரின் அது அநுபவிக்காமலவரை விடமாட்டாது. இதற்குத் திருஷ்டாந்தஞ்சொ ல்லுகிறேன் கேளும்; தேவர்கட்கிறைவனாகிய இந்திரன் சூக்குமவடிவாய் ஒரு தாமரைத்தண்டினுள் ஒளித்து வெகுகாலந் தவஞ்செய்திருந்து தனக்கு நல்வினைப்பயன் நேர்ந்தபோது வல்லவனானான். உலகத்தைக்காக்கும் கள்ள மாமாயப்பிரானும் அதிதியின் கருப்பத்திலடங்கிக் குறள்வடிவாய்வந்து பலிச் சக்கரவர்த்தியினிடத்தில் நடந்துசென்று மூவடிமண் தானமாகக்கொண்டு வானமளாவிச் சேவடியாலளந்து தன்சிந்தையி லெண்ணியவாறே முடித் தருளினான். அக்கினிதேவனே அவுரவமஹாமுனியின் மனைவி தொடையில் மறைந்து நெடுநாளிருந்து தீவினை தீர்ந்தபின்னர் வெளிப்பட்டனன். சூரிய பகவானே பசுவின் வயிற்றிலொளித்துப் பலநாள் கழித்து, விண்ணவர் யாவ ருங்கொண்டாட உதயகிரியிலுதயஞ் செய்தருளினான்.

இவ்வாறாக இன்னும் பலருமிப்படியே காலத்திற்குத்தக்க கோலங்கொ ண்டு ஞாலத்தில்வாழ்ந்து வாழ்நாளைக்கழித்தனர்; ஆதலால் தீவினையாலெய் துகின்ற ஆபத்தானது யாவரையுந் தீங்கின் வசப்படுத்தும், நீங்களும் அவ் வாறே அஞ்ஞாதவாசந்தொலைந்து முன்போல் அரசுசெய்யவருவீர்களென்று அன்புடனுரைத்தனன். அச்சொல்லை இன்பமாகக்கேட்டு மகிழ்ச்சியெய்தி எங்கள்வினை இனி யெப்படியாமோவென்றுவருந்தி நின்ற தருமராசனே; மிக்க பலசாலியாகிய வீமசேனன் நோக்கி முகம்வேர்த்து, அண்ணாவே! கதாதர

னாகியயானும், காண்டீபனாகிய அர்ச்சுனனும், நகுலசகதேவராகிய இரட்டையரும், உமது கட்டளைக்கே கீழ்ப்படிந்து, நடந்துவரும்போது இப்போதும் இனியெப்போதும் உமக்கென்ன குறையுண்டு; தேவரீர் உள்ளங்கலங்கவேண்டிய காரியமென்னை? இன்னும் சற்றே கடைக்கண் நோக்குவீராயின் இதுவரையிலும் பற்பல துன்பங்களையே செய்துவந்த பகைவர்களை அடிவேரறுத்து முடிசாய வீழ்த்திப் படியையாளுமரசர்பலரு முடியால்வணங்கக் கொடித்தலாதிபனென்னுங் கீர்த்தி உமக்குண்டாக்கி வைப்போம், சீக்கிரத்தில் உத்தரவு கொடுத்தருளவேண்டும், எங்கள் வல்லமையைப் பாரும், தேவரீரரசாளுகிற வேலையைமுன்னே முடித்துவிட்டு மற்றவேலைகளைப் பின்னேபார்க்கின்றோமென்று துடித்தெழுந்து சொல்லிய தம்பியைக் கையமர்த்தி, அப்பா வீமா! நாம்சத்திய நிலையைக்காத்துத் தருமமுறையைப்பார்த்து உத்தமமான கீர்த்திசேர்த்து உண்மைக்குறுதிநிறுத்தவேண்டும்; அதுவோ வெகுநாளில்லை; இன்னுஞ் சிலநாளிருக்கின்றன. இதற்குள் நீங்கள் ஆத்திரப்படுதல் தகுதியன்றென்று தம்பிமார்களுடன் சாந்தமாகச் சொல்லிக்கொண்டு இரண்டு நாழிகை வழிதூரங்கடந்துசென்று மேல்நடக்கவேண்டிய காரியத்தைக்குறித்து தௌமியர் முதலிய பெரியோருடன் ஆலோசனைசெய்யத் தொடங்கினர். கேளும் ஜனமேஜய மகாராஜனேயென்று வைசம்பாயனர் சொல்லி மேலுஞ்சொல்லத் தொடங்கினர்.

## கரந்துறையும் ஆலோசனை.

சகல கலைஞானங்களையும், ஐயந்திரிபு அறியாமை யில்லாமற்கற்ற தருமராசன் வையம்புகழு மகாவீரராகிய தம்பிமாரை நோக்கி ஆ! என் சகோதரரே, கல்லும் புல்லு நிறைந்த காடுமேடுஞ் செறிந்த கருங்கல் மலையுயர்ந்த இடங்கள்தோறும் நமக்கிருப்பிடமாகப் பொருந்திப் பன்னிரண்டாண்டு பலருமறியக்காலங் கழித்தோமே, இனியொருவரு மறியாமே ஒருவருடன் தொலைக்க வேண்டியிருப்பதால் நாம் மறைந்திருப்பதற்குத் தகுதியான இடம் யாதோ; அதை முன்னமே யோசிக்க வேண்டுமென்று அன்புள்ள தமையன் கேட்க, இந்திரகுமாரனாகிய அருச்சுனனெழுந்து தாமரை மலர்போன்ற தாள் மேற்பணிந்து, அண்ணாவே! நமது குருதேசத்திற்குச்சமீபத்தில் பாஞ்சாலம், மச்சம், சாளவம், விதர்ப்பம், பாகுலிகம், விதேகம், தசார்ணவம், சூரசேனம், கலிங்கம், மகதம் இவைகளெல்லாம் மனக்களிப்பே தருவதாயிருப்பன. இந்நாட்டுக்குள் மிச்சமாகச்சிறந்தது மச்சம், அதேனெனில், நீதிநெறிநிறைந்து நிலவளம் நீர்வளமுயர்ந்து நிறையும் பொறையு மிகுந்து நிலைத்து மாதமும்மாரி பொழிந்து, தருமமும்நற்கருமமுந்தழைந்து சகலநிதிகளுஞ்செறிந்து, பழுதற்ற குடிகளும், படைகளும்புகழ்ந்து தொழுதுவணங்கச்செழித்து, மநுநீதிவழியே புரந்து, எட்டுத்திக்களவும் தன் ஆக்கினைசக்கரம்போக்கிச் செங்கோல்செலுத்தி, வேதவேள்வியையுடைய வேதியர் பலரும், வானவர் விற்பனர் மாதவர் சிலரும், மாதுர்ஸ்தானம்போற் பொருந்திவாழ்வைப் பெறும்படியாகியவிராடராசனுடைய மச்சநாடு ஐயா, இவ்வகையான நன்மைகட் கிருப்பிடமாகிய

பட்டணஞ்சேர்ந்து நமதுருவமறைத்துப் பயமின்றிக் காலங்கழிப்பதே வெற்றி தருவதாகும், நமக்கொருநாளுந் தீங்கேவராது, நாதனே! வேறொரு நாட்டை விரும்புவோமானால் நமது காரியங்கள் ஒருவேளை வெளிப்பட்டாலும் வெளிப் படும். இவைதன்றியும், துரியோதனனுடைய தூதர்களும் காரியத்தரும் மந் திரி சாமந்தரும், தினந்தோறும் போக்குவரத்தாயிருப்பர்; அப்படிப்பட்டகிர்ப் பந்தமாகிய வருத்தம் நமக்கிந்த விராடநகரத்திலிருக்கவே மாட்டாது. மே லும் இப்பட்டணத்து மச்சராஜன் நமக்குப் பூர்வசம்பந்தப் பொருத்தத்தி னாலும், மிகுந்த குணசாலி யாதலாலும், நாம்நாட்டில் அநுபவித்த கஷ்டத் தை இம்மச்சநாட்டில் ஆற்றிக்கொள்ளும் வகையாயிருப்பதனாலும், அத்தினா புரத்தைவிட்டு வனவாசஞ்செய்ய வரும்போது சோதிட நூலோருரைத்த ஆரூடத்தாலும், நாமிந்தப்பேச்சைப் பேசும்போது நல்ல சகுனங் கிடைத் ததனாலும், அடியேனுக் கிந்நகரத்தின்மேல் ஆசையுண்டாவதனால் என்புத்தி யில் தோன்றியதைச் சொன்னேன், கற்றவரு மற்றவரும் புகழ்ந்து பேசும் பொன்னாடும் பின்னிடத்தக்கது இந்நகரத்தின் பெருமை. தேவரீர் சித்தம் யாதோ? இதைவிட வேறோரிடமில்லை யென்று வணங்கினான்.

இப்படி அருச்சுனன் சொன்னமொழியை அருளுக் காதாரமாயிருக்கும் தருமராசன் கேட்டு, மிகவுமாலோசித்து தம்மைக்காண வனத்தில் வந்திருக் கும் அரசர்க்கு இச்செய்தியைத்தெரியாமலடக்கிஅவரைநோக்கி அரசர்களே! இன்னமுமெம்மை வருத்தாநின்ற தீவினை தீரும்வழியைப் பார்க்கின்றோம்; நீங்களுங்கள் பட்டணமேபோய்ச் சேருங்களென்று சொல்லிவிட்டு, அந்தணர் களைநோக்கி ஐயன்மீர்! இனி எக்காலம் உம்மையாங்கள் காண்போமென்று இனிய வார்த்தைகளைச்சொல்லி, அவர்கள் மனங்களிந்துரைத்த மொழிகளை யும் ஆசீர்வாதங்களையும் பெற்று முக்காலும் வலம்வந்து எட்டுறுப்பு நிலமுற வணங்கி, எக்காலுமுங்கள் கிருபை எங்கள்மேல் இருக்கட்டுமென்று உப சரித்து, பிரிதற்கரிய வருத்தத்துடன் விடைகொடுத்தனுப்பி; அன்றிரவு முழுதும்நடந்து சூரியோதயத்திற்கு முன் செல்வத்தாற் சிறப்புற்றோங்கிய விராடநகரஞ்சேர்வோமென்று பாஞ்சாலியும் பாண்டவரைவரும், கலைஞான முணர்ந்த தௌமியரும், தொலைதூரம் வழியடர்ந்த கொடிபடர்ந்த மலை களும் காடுகளும் கடந்து, பருக்கைக் கற்களும் பாலைவனமும், வருக்கை, மா, முதலிய மரச்சோலையும், அருவிபெருகிய ஆறுகளும், குருவிமருவிய கூடும் ஏரி யெதுவாயுள்ள நாடும், பள்ளர்வாழும் வீடும், பரந்த மணல்மேடுங் கடந்து சென்று பற்பல தேசமன்னர் வந்தொதுங்குகின்ற வெண்கொற்றக் குடை யினையுடைய விராடராசனது மச்சநாட்டெல்லையை வந்தடைந்தனர். அப் போது பச்சைப்புரவி பூட்டி ஒற்றையுருளைத்தேரினை யோட்டிவருஞ் சூரி யனுங் கிழக்குத்திசையில் உதயமானான்.

அன்றிரவுமுழுது நடந்த பாண்டவரைவரும் பாஞ்சாலியும் புரோகிதரும் இனிமேல் தங்களெண்ணம் பலித்ததென்றே களிப்படைந்து, மீன்கள் முதலை கள் நீரானைகள் நீர்க்குதிரைகள் பொருந்திய மடுக்களும், பசுக்கள், பறவைக

னுலாவுகின்ற முல்லைக்காடும், பயிர்ப்புலங்கள் சூழ்ந்த நல்லநாடும், காவலனிருக்குங் கோட்டையையும், கால்நடை நடக்கின்ற பாட்டையையும், மாடமாளிகையாகியவீட்டையும், மகரதோரணமுடையவாசற்பேட்டையும், மேகமளாவிய கோபுரங்களையுங்கண்டு, களிப்பெய்திப் பாதலம்வரையிலும் ஆழ்ந்து அகன்ற ஒரு தாமரைத் தடாகத்திலிறங்கி, நித்திய கரும முடித்துக்கொண்டு அருக்கியம் கொடுத்துச்சூரியநமஸ்காரமுஞ்செய்துவழிநடந்தவருத்தமெல்லாந்தீர ஓர் மரத்தினிழலில் தங்கி அருளே குடிகொண்ட தௌமியரை நோக்கி, இருகரங் குவித்திறைஞ்சி வாழ்த்தி, இதுவரையிலும் பெருவாழ்வைப் பெற்ற நாங்கள் இனி நடக்கவேண்டிய முறைமையைக் கட்டளையிட்டருள வேண்டுகின்றோமென்று தருமராசன் கேட்க, நான்கு வேதமுமறிந்த தௌமியர் சொல்லத் தொடங்கினார்.

சந்திரகுலத்தரசனாகிய தருமராசனே! நீங்களறியாதகாரியமென்ன சொல்லவிருக்கின்றது, ஆயினும்நீங்கள் காட்டில்காலங்கழித்ததும் பெரிதன்று, நாட்டிலொருவருடம்மறைந்திருப்பதே பெருங்காரியம். கருங்கல்லேபோன்றதோளிணையுடைய அரசர்களே, நீங்கள் உருவமறைந் திருக்குங்காலத்தில் உங்கள் வடிவத்தாலாவது வார்த்தையாலாவது செயலினாலாவது சிறிதேனுந் தெரியுமாயின் மீண்டும்பன்னிரண்டுவருடம்வனவாசஞ்செய்யநேரிடுமே. ஆகையால், உங்களை யாரும் அறியாவண்ணம் மாறுவேடம்பூண்டு பெயர்வேறுகொண்டு குலச்சிறப்பெய்திய விராடராசனிடஞ்சென்று உங்கட்குரிய தொழில் செய்து, அத்தொழிலுக்கிணங்கநடந்து காலங்கழிப்பதேயன்றிஉறுதிவேறில்லையென்று தௌமியர்சொல்ல, அவருடையசொற்கேட்ட தருமராசன் மகிழ்ச்சியெய்தி, இவ்வாறு நடத்துவதினும் இன்பம் வேறில்லையென்றுநேர்ந்தனர். அவ்வாறுநேர்ந்த தமையன்பாதத்தில் தம்பியர் வீழ்ந்து வணங்கி, மதிமயங்கி அண்ணா! நமது குலமுதலாகிய சந்திரனும், நம்மைப்பெற்ற பாண்டுராசனும் நீயேயன்றி வேறின்றென வணங்கி வாழ்த்துகின்றோம். எங்கட்கு முன் பிறந்தாராய் விளங்கிய தேவரீர் உமக்குக் கீழ்ப்பட்ட அரசனிடத்திற்சென்றடைந்து அவன் மனத்திற்கிணங்கி வேலைசெய்யத்தகுமோ! தௌமியரே! இவ்வகையான அநியாயத்திற் கென்செய்யக்கடவோம். இவ்வுலகத்தைப் பணாமுடியால்தாங்கு மனந்தன்போலும், சப்தமேகம்பெய்யுந் தாரைபோலும், மெய்ம்மைப்பொருள் உணர்ந்து ஞானமுதலிய வேதக்கருத்துங்கடந்து, சத்துருக்களைச் செயம்கொண்டு வெற்றிமாலைவேய்ந்து எத்திசையிலுமுள்ள அரசர் பணியும் பெருமையையடைந்து பொதுக்கடிந்துதனியரசுநடாத்தும் தருமராசனே ஏழைகள்பாலடங்கி யொதுங்கி யிருக்கத்தகுமா! வினையே யென்று வாடி வாய்விட்டரற்றினர்.

இவ்வாறு வருந்தித் துன்பக்கடலிலழுந்திய தம்பியரைத் தருமராசன் பார்த்து என்னுள்ளமேபோன்ற தம்பியரே! நீங்களென்பொருட்டு வருந்த வேண்டாம், பின்னால் இப்படிநடக்குமென்றுமுன்னரே சாக்கிரதையாயிருக்கின்றேன். அதென்னையெனின், தென்றிசைக்கோமான் பக்குவமாக அனுக்

இரகித்த மந்திரத்தால் வேதவேதாங்கமறிந்த வேதியனாய் மச்சராசனது உச்சிதசபையிற்போந்து அவ்வரசன்முதலிய யாவரும் எனக்கெதிர்வந்துவணங்கவும், நான் அவனுக்கு ஆசிர்வசனஞ்சொல்லவும் பெற்றிருக்கின்றேன். இதன்றியும், உமக்கிருப்பிடம் யாது? உமது பெயரென்ன? நீரிவ்விடம்வந்ததற்குக்காரணமேதென்று கேட்பானாயின், நான் தருமராசனைவிட்டுப் பிரியா நண்பன், அவர் பன்னிரண்டு ஆண்டு வனவாசஞ்செய்யப்போன காலத்தில் நானுமவருடன்போயிருந்தேன்; இன்னுமோராண்டு கழிப்பதற்காகவே இங்கே வந்தேன்; என்பெயர் கங்கபட்டனென்றே சொல்வேன். இதன்றியும், பெரியோர்களாலியற்றப்பட்ட அக்கரவிலக்கணம் கணிதம் சங்கிராமலக்கணம் எழுத்திலக்கணம் வேதம் வேதாங்கம் புராணம் வியாகரணம் நீதிசாத்திரம் சோதிடசாத்திரம் தருமசாத்திரம் யோகசாத்திரம் போகசாத்திரம் மந்திரசாத்திரம் சகுனசாத்திரம் சிற்பசாத்திரம் வைத்தியசாத்திரம் சொரூபசாத்திரம் இதிகாசகாவியம் அலங்காரம் மதுரபாடனம் நாடகம் நிருத்தம் சத்தப்பிரமம் வீணை வேணு மிர்தங்கம் தாளம் அத்திரபரீட்சை இரத்தின பரீட்சை கனகபரீட்சை இரதபரீட்சை கஜபரீட்சை அச்சுவபரீட்சை ஆயுத பரீட்சை பூமிபரீட்சை மல்லயுத்தம் ஆக்ருஷணம் உச்சாடனம் வித்துவேஷணம் ஜாலாதிஜாலம் மோகனம் வசியம் இரசவாதம் மந்திரவாதம் கந்தருவ வாதம் பைபிலவாதம் தாதுவாதம் காருடம் நட்டம் முட்டி ஆகாயப்பிரவேசம் பரகாயப்பிரவேசம் வானகமனம் அதிரிசியம் இந்திரசாலம் மகேந்திரசாலம் அக்கினித்தம்பனம் வாயுத்தம்பனம் திருட்டித்தம்பனம் வாக்குத்தம்பனம் சுக்கிலத்தம்பனம் சுவாசத்தம்பனம் கட்கத்தம்பனம் அத்திரப்பிரயோகமுதலிய, அறுபத்துநான்கு கலைகளுமறிவேன்; நிக்கெட்டுங்கொண்டாடுஞ் சொக்கட்டாணுடும் பக்குவமும் எனக்குத்தெரியும். ஓ! விராடராசனே! நீர் தயவுசெய்து உம்மிடத்தில் நானிருக்கச் செலவுகொடுத்தால் ஒருநாளைப்போல் ஓராண்டு இவ்விடம்விட்டு நீங்காமல் மகிழ்ச்சியாயிருப்பேனென்றுசொல்லி, அவ்வரசன் அருகிலிருந்து அவன் கருத்துக்கிசைந்த தேசவர்த்தமான காரியகாரணங்களை யாய்ந்தறிந்துபேசி, விநோதமான விந்தைகளை நிந்தையில்லாமற்சொல்லி, விசாரணையான அரசாட்சியைப் பெருமையாக நடத்தி அரசனுள்ள மகிழச்செய்து சுற்றிலுஞ்சூழ்ந்த வெற்றி வீரர்களும், கற்றவர்முதலிய சுற்றத்தவர்களும், தந்திரி மந்திரி சாமந்தர்களும் இவரோ உத்தமரென்று கொண்டாட மிக்க மேன்மையாய்க்காலங்கழிப்பேன்; தம்பிமார்களேயென்று ஏழுலகத்திற் கோராழிசெலுத்துங் குருகுலக்கோமகனாகிய தருமராசன் தன்தம்பியர் நால்வருக்கும் அன்பாகவே எடுத்துச் சொல்ல, அதை வீமார்ச்சுனர் முதலிய தம்பியர் நால்வருங் கேட்டு நமதுதமயனுக்கு இத்தொழில் தகுந்ததுமென்றே அகமகிழ்ந்தனர்.

அத்தருணத்தில், பொறுமையையே ஆபரணமாகப்பூண்ட தருமராசன் வீமசேனனுடைய முகத்தைப்பார்த்து கருணைததும்பிக்கண்ணீர் சொரிந்து வல்லமை நினைத்தற்கரிய தாகிய வாயுபுத்திரனே! நீ அரக்குமாளிகை விட்

டெழுந்தபோது உரக்கக்கூவிக் கொடும்பகைகொண்டு எதிர்த்த இடும்பாசுரனைக்கொன்றும், வேத்திரகீயத்திருந்த வேதியர்கள் துன்பமகற்றப் பகாசுரனுயிரை வென்றும், கிம்மீராசுரனைக் கெடுத்தும், குபேரலோகம்புகுந்து மணிமாலனுயிரும் பொற்றாமரைமலரும் பறித்துவந்தும், சடாசுரனைத் தாக்கியும், போருக்கெதிர்ந்த பேரைப் போக்கியும், இரக்கமில்லாத கொடியோனாகிய துரியோதனன் அன்னத்தில் விடங்கலந்தூட்டி, அநேகங் கொடிகளாற் கட்டி ஆற்றுப் பெருக்கத்தில் இட்டகாலையில் நாகலோகம் சென்று, விடாமிர்தமுண்டிருந்த உன்னை நாங்கள் ஏழுநாள்வரையிலுந் தேடிப் பறவைபோற் பறந்து, பரதவித்தலைந்த துன்பத்தை எட்டாநாள்வந்து போக்கியும், வணங்காமுடியோன் செய்த வஞ்சனைகளெல்லாம் நீக்கியும், பெற்றதாயாகிய குந்திதேவியுடன் எங்களையுங் காத்துநின்றசதுரப் பாடுடையானே! நீயொருவனுடைய நகரமடைந்து, அவனைத்தாழ்ந்து, அவனுக்கிசைந்த குற்றேவல்செய்து காலமறிந்து நாம் கடக்கவேண்டிய நாளைக்கழிக்கவறிவையோ? நீயொருவனிடத்திலடங்கி யேவற்பணி செய்துகொண்டிருக்கப்பாவியான என்னிருகண்ணும் பார்க்கத்தக்கதோ! என்னசெய்வேனென்றுபரதவித்துப்பெருமூச் செறிந்து தம்பி தம்பி, நமது காலபலமறிந்து, காலத்துக்குத் தகுந்த வேடம்போட்டு நாளைப்போக்கத் துணிந்ததும் ஒருவரைத்தாழ்ந்துவணங்கி இதவசனம்பேச அறியமாட்டாயே; அரசனது சமையந்தெரிந்து, நலமாக உறவாடி நேசம் பெற நினைக்கமாட்டாயே; எக்காலத்தில் எத்தொழில் செய்யவேண்டுமோ அக்காலத்தில் அவ்வேலைமுடித்து அரசனை மனமகிழச்செய்யும்படியான நெறிகற்றிலையே, ஐயோ! பரிசுத்த குலத்தானாகிய விராடன்புகழவும், அவனைச்சேர்ந்த சபையோர் மனமகிழவும், நாமிவ்விடத்தில் மறைந்திருப்பதை மற்றவர்களறியாதிருக்கவும், அஞ்ஞாதவாச மகற்றவும் வேண்டுமே; நீ எவ்வாறிருக்கப் போகிறாய் என்றே மனந்தளர்ந்து இருந்தனன்.

இவ்வாறு தம்பியைக்குறித்து வெம்பிநின்ற அண்ணனை வீமன்வணங்கி, எமது தந்தை இறந்த தளர்ச்சி தோன்றாமலே காத்த அண்ணாவே! தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு கைப்பு என்னு மறுவகைச் சுவையுடன் ஐவித கச்சாயங்களும் பச்சடிகளும் நான்குவகைக்கறி மூன்றுவித ரசம் இரண்டுவகைக்குழம்பு ஒருவிதப் பாயசம் புளியோதனம் எள்ளோதனம் மிளகோதனம் ததியோதனம் பாலோதனம் சர்க்கரைப் பொங்கல் அக்கார வடிசில் முதலிய வகை வகையான அன்னங்களும், பலகார வகைகளும் நான் நன்றாகச் செய்யக் கற்றிருக்கின்றேன். இச்சுயம்பாகத் தொழிலால் உதிரக்கறை நீங்காத வேலாயுதந் தாங்கிய விராடனும், மற்றவர்களும் திருத்தியடைந்து, அமுதத்தை யிகழ்ந்து, நான் செய்யும் பாகத்தைப் புகழ்ந்து பாகசாத்திரங் கற்றுவல்ல பக்குவனென்றென்னை மனமகிழ்ந்து உபசரிக்க விருந்து, விருந்து முதலியன பரிந்து எக்காலத்திலும் ஏது வேண்டியதோ அக்காலத்தில் ஆயிற்றென்றுதவி, அடுக்களையுள் விறகு வேண்டுமானால் ஆகாய மளாவிய விருட்சங்களையும்கோடரியாற் பிளக்காமல் என்னிருகையாலுமுறித்து ஏற்படுத்திக் கொள்வேன்; ஒருகாலத்தில் மலைபோன்ற திண்புயத்

தையுடைய மச்சராசன், மல்லர்களோடு சண்டைசெய்ய விடுப்பானாயின் மற்போர் வல்லாரைச் சொற்பமாயழித்துப் பற்பல வகையான பரிசும் அடைந்து அறிஞர்கள் மெச்சவும் பேரெடுப்பேன். இன்னும், யாளி, சிங்கம், புலி, கரடி, யானை முதலிய மிருகங்களைப் பிடித்து, அரசனுக்கு முன்னேவிடுத்து, அதிசயம் விளைவிக்கக் காட்டுவேன்; உன் பெயர் என்னவெனிற் பலாயனனென்பேன்; உன் நகரேதென்னின் தருமராசன் கீர்த்தியைப் புகழ்ந்துபேசும் புண்ணிய நகரமென்பேன், உன் குலகோத்திர மென்னெனின் அறப்பெருங் கடவுள் மகனாகிய முரசக்கொடியோனுக்கு அடிமைசெய்யு மடியேன், அறிவிலாச் சூத்திர னென்பேனென்றான். அவன் சொன்னசொல்லைத் தருமராசன் கேட்டு, இருபுயமும் பெருமலைபோலோங்கி, பசு கன்றின்மேல் வைக்கும் பட்சத்திலும் இலட்சம் பங்கதிகமாய்க் கருணைகூர்ந்து, தம்பி! இத்தொழில் உனக்குரியதுதான், என்றென்றைக்கும் அன்னத்திற்கு வற்கடமேயில்லை, அஞ்ஞாத வாசத்தை வெறுப்பில்லாமல் நிறைவேற்றலாமென்று வியந்து, இப்பால் தன்பக்கத்தில் பயந்து நிற்கின்ற பார்த்தன் முகத்தை நோக்கி மிக்க துயரத்தால் குழந்தாய்! தேவர்களாலும் வெல்லப்படாத காண்டவவனத்தை யழித்து, அக்கினிதேவனுக்கு அவியாகவளித்துப் பசிதணித்தாயே! மேருமலைக்கப்பாலுஞ்சென்று வெற்றிபெற்று, விசயனென்று வெற்றிக்கொடிநாட்டி அரசர்களளித்த திறைகொண்டு, அடங்காத மறுமன்னரையும் வென்று செயத்துடன் மீண்டாயே! இஃதன்றியும், நான்கு வேதமும், நான்முகனும், நாரணனும், நாகலோகத்தார் முதலானவரும் அறிதற்கரிய தேவாதிதேவன், ஆதிபாண்டரங்கன், சேற்றடங்கட் சிவகாமியுடனே விடைமேலெழுந்தருளியபோது, உன்னிருவிழியுடன் உள்ளமுங்களித்து, ஆனந்தபாஷ்பத்துடன் தொழுது பழுதுபடாத இன்பமேபடைத்தனையே; மூலகாரணனாகிய கண்ணுதற்பெருமானளித்த பாசுபதமும் பெற்றனையே, பிரமனாலும் அட்டவசுக்களாலும், எட்டுத்திக்குப்பாலகராலும், துளபமாலையணிந்த நாரணனாலும், இந்திரனாலும், தேவர்களாலும், மந்திரக்கணைகளும் பெற்றனையே! கற்பகநாட்டாருக்கு நெடுநாட்பகைவராகிய காலகேயநிவாதகவசர்களை நொடியிற்பொடியாகமுடித்தனையே! மானாபரணமும், ஞானாபரணமுமணிந்த மிக்கபதிவிரதையான இந்திராணி உன்திராணியறிந்து சாவாமருந்தாகிய தேவாமிர்தத்தை ஊட்ட இன்பமாயுண்டு இந்திரனுடன் சிங்காதனமேறிச் சிறப்புற்றிருந்தனையே! அரவக்கொடிபடைத்த துரியோதனனையும், அவன் தம்பிமாரையும், அவர்கட்குரிய தருமபத்தினிகளையும் தாமணியாகக் கட்டிக்கொண்டுபோன சித்திரசேனனைக் கைப்பிடியாகக் கொண்டுவாவென்று நான்சொல்லி வாய்மூடு முன்னமேசென்று, அவனைத் திருப்பிக்கொண்டுவந்து, என்முன்னேநிறுத்திக் கட்டுப்பட்ட துரியோதனனைக் கட்டவிழ்த்துவிட்டனையே! மேலும், தேசுடையவரில் அக்கினிதேவன்போலும், தேவராசர்களில் தேவேந்திரன்போலும், திசையானைகளில் ஐராவதம்போலும், மும்மைப்பெருந்தேவரில் விடையுடையிறையோன்போலு மிருக்கின்றனையே! அநுமக்கொடியும், அழியாச்சிலையும், அக்ஷயதூணியும், அழகியதேரும், சுவேதப்புரவியும் படைத்தனையே! விராட

ராசனுடைய பதியிற் புகுந்து, உன்னுருமாறி, கல்வியிற்சிறந்த உன்னுள்ள மடங்கி, ஒருவருட மொடுங்கி எவ்வகையாகக் குற்றேவல் செய்வையோ? வென்று புத்திமயங்கிக் கண்ணீர் ததும்ப மனம் வெதும்பிக் கரைந்து வருந்தினன். அவ்வாறு வருந்திய தருமராசனது உள்ளத் தளர்ச்சியும் பெருமிதமான நன் மனக்கிளர்ச்சியுஞ் சிறிதுநிதானித்து ஆராய்ந்தெண்ணிய சவ்வியசாசி, அண்ணலே! என்னைக்குறித்து எண்ணங்கொள்ளா திருக்கும்படி சொல்லுகிறேன். தேவரீர் திருவுள்ள மகிழ்வீரென்று அர்ச்சுனன் சொல்லத் தொடங்கினன்.

தருமக்கடலே! முன்னே யான் தெய்வலோகம் போயிருந்த காலத்தில் வண்ணப் பெண்ணாகிய ஊர்வசி கருத்திற்கிசையாத என்னைப்பெண் தன்மையிலும், ஆண் தன்மையிலும் இழிந்த பேடித்தன்மையாகவெனச் சபித்தாள். அச்சாபத்தால் மனந்தளர்ந்துவருந்தியவாட்டத்தை ஆயிரநாட்டமுடையனாகியஅயிராவதமுடைய இந்திரன் அறிந்து, அவ்வூர்வசியிடத்தில் சென்று என்னடிபாவி! தேவர்கட் கநுகூலஞ் செய்யவந்த செஞ்சிலைச் சேவகனைப் பாவகாரியான நீயிப்படியும் சபிக்கலாமா? இப்போது நீயிட்டசாபத்தை விலக்கி என் சஞ்சலத்தை நீக்கென்று வருந்திச் சொன்னான். அச்சொல்லைக்கேட்ட ஊர்வசி நானிட்டசாபமும் பழுதுபடாது, இவர்வேண்டும்பொழுதுவந்து ஒருவருடமிருக்கவும், வேண்டா மென்றபோது அகன்றுபோகவுங் கடவதென்று பிரதிசாபமுங் கொடுத்திருக்கின்றனள். அந்நாளையில்வந்தசாபம்தந்தையாகிய இந்திரன் உபகாரமென்றெண்ணி வந்தேன். இப்போதந்த ஊர்வசியிட்ட சாபம் நாம் நாடியவழி உபயோகப்பட்டு நன்மைசெய்வது போலாகும்.

நானப்படியே பேடியுருக்கொண்டு, இம்மச்சராசனிடத்தி லடுத்துப் பெண்களுக்குப் பரதநாட்டியம் படிப்பிக்க வல்லவளென்று சொல்லி, அவனருள் பெற்று ஆடரங்கச் சாலையிலிருப்பேன்; உன் பெயரென்ன வென்றால், பிரகநளை யென்பேன்; நீயிருந்த பட்டண மெதுவெனின், தீயிற் பிறந்த பாஞ்சாலிக்கு நடனத்தொழில் செலுத்தினவ ளென்பேன்; நீயேதிப்படி வந்ததெனில், பாண்டவர்களுடன் பாஞ்சாலியும் வனவாசஞ் செய்யப் போன காலத்தில் நானும் போயிருந்து, ஒருவருடம் அஞ்ஞாதவாசஞ் செய்வதற்கவர்சென்றதனால்உன்னிடத்தில்அடைந்தேனென்றுஇசைத்து அரசனை மனமகிழச்செய்வதற்கு என்மனங் குவிந்திருக்கிறதென்றுபகர்ந்தான். அவன் கருத்தை யறிந்த தருமராசன் இஃதுனக்குத் தக்கதேயென்று மகிழ்ந்து பக்கத்தில்நின்ற நகுலனைப்பார்த்துப் பரதவிக்கத் தொடங்கினன்.

நொடிப்போது மென்னைவிட்டுப்பிரியாவிளஞ்சிங்கமே! நான் சொன்னவாறு கேட்டு நடக்கத் தக்கவனே யன்றி உன்சுயபுத்தியா லொன்றையுந் தொடங்கிச்செய்யும் வல்லவனன்றே, மெய்வருந்தும் •வேலையின் முயலமாட்டாயே, வியர்வுண்டாக மேனிவருந்தாயே, முன் பின்னென்று முணராயே, அறியாச் சிறியவனாகிய நீ பகைவர் கண்ணுக் கெட்டாமல்

மச்சராசன் நாட்டில் உருமாறி, ஒருவருடமிருந்து எவ்வாறு காலங்கழித்து வருவையோவென்று தருமராசன் கேட்கச் சிவபெருமானுடன் விற்போரும், மற்போரும்புரிந்த சிலைவிசயன்பின் தோன்றலாகியநகுலராசன், தன் அண்ணனைப்பணிந்து கமலமலர்போல முகமலர்ந்து பின்வருமாறு சொல்லத் தொடங்கினன்.

தேவரீர் அடியேனுக்குப் படிப்பித்த சாத்திரங்களில் அச்சுவசாத்திரத்தை முக்கியமாறிந்துள்ளேன்; பரீட்சையுங் கைகண்டிருக்கிறேன். அதனால், குதிரைகளின் குலமும் குணமும் குரனும் நலமும் பலமும் நன்மையும் வன்மையும் திறனும் தீதும் தேசமும் வாசமும் சீரும் சிறப்பும் சித்தமும் உன்மத்தமும் பேதமும் அபேதமும் முகமும் கண்களும் சுழியும் சுத்தமும் துலக்கமும் விலக்கமும் வருணமும் ஆரோகணமும் அவரோகணமும், வட்டம் கோணம் வளைவு வையாளி சிறுநடை பெருநடை முதலியகதிகளும், குதிரைப்பிணிகளும், அவைகட்குக் கொடுக்கு மருந்தும், செவ்வையாகத் தெரிந்திருக்கின்றேன்; ஆகையால், அச்சுவசாத்திரத்தில் வல்லோனென்ன வேடங்கொண்டு மச்சராசனிடஞ்சென்று அவனிச்சையுண்டாம் வண்ணம் பச்சைப்புரவிதூண்டும் பாகனிலுமேலாயினவனாயிருப்பேன்; அவர் என்னூரையும் என்பேரையும் என்சீரையும் கேட்டாற் குருமரபிலுயர்ந்த தருமராசனுடைய நாட்டிற் குதிரை நடத்திவருபவன் யான். என்பெயர் தாமக்கிரந்தியென்றுரைத்து, கொடிய குதிரைகளையும் திருப்பிவிட்டுச் சமயத்திற்குத் தகுந்த சவாரியுங்கொடுத்து, அரசனை மகிழ்வடைவித்து, ஆடையாபரணமுதலாகிய பரிசுகளும்பெற்றுக் குதிரைத்தலைவர்கள் கொண்டாடக் காலங்கழிப்பேனென்றான். தம்பிவார்த்தையைக்கேட்ட தருமராசன் மனக்களிப்பெய்திக் காலத்திற்குத் தக்க கோலமாய் நீ கொள்ளப்போந்தொழில் மிகவும் நன்றென்று உரைத்துசாத்திரவாராய்ச்சியிற்சிறந்த சகதேவனை நோக்கிச் சொல்லத் தொடங்கினன்,

தம்பீ! தந்தையாகிய பாண்டுமகாராஜன் மார்பிலும், என் தோளிலும், வேற்றரசர் தலையிலும் விளையாடிமிதித்து, நடைபழகி யுலாவிக்கொண்டிருந்த உன் மெல்லியபாதம் செம்பருக்கைக் கற்களுடன் சிவந்த தீப்பொறி கலந்த மலைச்சாரலிலும், வனங்களிலும் திரிந்து பன்னிரண்டாண்டுதொலைத்தும் இன்னுந்தீரவில்லையே! முன்செய்த தீவினையென்றேங்கிக் கன்னெஞ்சமுடைய அன்னவாகனனே! கார்செறிந்து நீர்சொரிந்த பார்புரந்து வந்த பாண்டுராசனுக்கு மைந்தனாகத்தோன்றியும், அருளிலாத எம்போல்வார்க்கும் தம்பியாகச்சிறந்தும், சாத்திரகலைஞானங்களையுணர்ந்தும், சாது சங்கப் பழக்கம்புணர்ந்தும்,பழவினையொழியாது அநுபவித்தனையே, என்செய்வேனே என்னிரு கண்மணியே! புத்தியிற் பிருகற்பதியும், சுக்கிராசாரியரும் நிகரென்று சொல்லும்படிசிறந்து மந்திரசாத்திரமுழுதும் நீதிநூல்முதலியயாவுங் கற்றுணர்ந்த இளையோனே! நீ யெத்தொழில்செய்வாய்? எவ்வாறுகுற்றேவல் புரிவாய்? எவர்க்குந் தெரியாதிருக்க எவ்வேட மெடுப்பாய்? எப்படி காலங்

கழிப்பாய்? தம்பீ! தம்பீ! என்று கண்ணீர்சொரிந் தேங்கியிருந்த தருமராசனைத் திரிகாலமுந்தெரிந்த சகதேவன் வணங்கிப் பேசத்தொடங்கினன்.

வையகமாடுஞ் செய்ய கோலோச்சும் ஐயனே! தருமதேவதைக் கொப்பாகிய பசுவினங்களைக் காத்துவருங் கோபாலவேடங்கொண்டு விராடராசனிடத்திற்சென்று பசுக்கள் மேய்ப்போனுகவும், அப்பசுக்களுக்கு நேரிடும் கோமாரி அடைப்பன் தெறிப்பன் வெக்கை தொம்மை சூலை இசிவு வயிறுப்பல் பொருமல் செருமல் இருமல் வாய் அசைவுபோடாதிருத்தல்முதலிய நோய்களைப்போக்கவும், புல்லுள்ள புலத்தின் மேயவோட்டி, நீருள்ள இடத்தில் தண்ணீர்காட்டி, நிழலுள்ள தோப்பில் மந்தையைக்கூட்டி மடக்கவும், கறவாப்பசுக்களைக் கறக்கவும், கன்றை மறவாப்பசுக்களை மறக்கச்செய்யவும், ஆடிக்கறக்கும் பசு, அதட்டிக்கறக்கும் பசு, அணைத்துக்கறக்கும் பசு, பாடிக்கறக்கும் பசு, பழிச்சுக்கறக்கும் பசு இவைகளைத்தெரிந்துகொள்ளவும், இப்பசுக்களின் தேசம் வாசம்குணம்மணம் இவைமுதலியவற்றையு முணர்ந்து நடத்தவும் அறிவேன்; உன்பெயரென்னவென்னின், தந்திரபால னென்பேன்; உன் னகரேதெனின், பாண்டவர்களாகிய ஆண்டவமாரிடத்தே பசுமேய்த்துக் காலங்கழித்தேன்; (நந்தகோபாலன்) என்றன் மைத்துனனென்றுனாத்து அவ்வரசன் சிந்தை களிகூரச் செல்வமோ டிருப்பேனென்றே சகதேவன் சொல்லினன். அந்த வார்த்தையைக்கேட்ட தருமராசன் மகாதேவ சம்போவென்று பெருமூச்சுவிட்டு, நம்பாவரினுஞ் சிறந்தொழில் இவன் பெற்றனென்றிசைந்து கற்புக்கணியான பாஞ்சாலி மதிமுகத்தைநோக்கி, விழிர்விதிர்த்து விளம்பத் தொடங்கினன்.

அழகுக்காலயமான அன்னமே, பிறவிச் செல்வமுள்ளபேதையே! உனக்கு அநேகந் தாதியர் குற்றேவல்செய்யத்துன்பமில்லாமல் இன்பமடைந்த தோகைபோன்ற நீ எத்தொழிலியற்றிக் காலங்கழிப்பையோ? இளம்பிடியே! என்றேங்கி வருந்திய தருமராசனது மனக்கருத்தறிந்து, பெண்ணிற்சிறந்த பாஞ்சாலி கண்ணீருகுத்துச் சொல்லத்தொடங்கினள்.

புண்ணிய மனமும் திண்ணிய புயமுமுள்ள வள்ளலே! நான் வண்ணப் பெண்ணென்னும் வடிவங்கொண்டு, மச்சராசனுடைய மனைவியிடஞ்சென்று ஆபரண அலங்காரஞ்செய்யவும், கண்ணுக்கு மைதீட்டவும், தனத்திற்குத் தொய்யிலெழுதவும், கோக்கவும், கொண்டையில் முடிக்கவும், இடையிற் சேலையுடுக்கவும், நெற்றியில் விபூதிரேகை யிடவும், செந்தூரத் திலதம் வைக்கவும், சாந்து சந்தனம் சவ்வாது கூட்டவும், கதம்பப்பொடி கலக்கவும், இன்னும் பலவகையான சின்னங்களுஞ் செய்ய அறிவேன்; உன்னிடத்தில் ஒருவருடமிருந்து காலங்கழிக்க வந்தேன், என்னைக்காதலித்த ஐந்து கந்தருவர் கணவராய்க்காவலிருக்கிறார்கள்; அவர்களைப் பகைத்துப் போராடும் வல்லமை யுடையவர்களில்லை, எப்படிப்பட்டவர்களும் என்னைப்பார்த்துத் தப்பெண்ணங்கொள்ளப்போகாது; அப்படியே மாறான நினைப்புக்கொண்டால், நூறுநூறுகூறாய் வேறுவேறாய் மாய்வார்கள். இப்படிப்பட்ட

வல்லமையுடையவர்கட்கு இல்லாளாயே நீ வேலைசெய்ய வெளிப்படுவானே னென்று கேட்டால், என் குலத்திற்குரிய நல்லொழுக்கமும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பும், குறைவுபடாமற் கீர்த்திபெற்ற பாஞ்சாலிக்குப் பணி செய்து மாங்குயில்போல்விசுவாசத்துடன் வாழ்ந்தேன்; அவ்விடம் விட்டிவ் விடம் வரும்படி. அவசியம் என்னவெனில், நல்வினைப்பயன்பெற்ற மாதுசி ரோமணி தீவினைவசத்தால் வனவாசம் போனபோது, நானுமவருடன்போயி ருந்தேன்; அவர்கள் அஞ்ஞாதவாசஞ் செய்யப்போயினர், நான் அக்காட்டி லலைந்து, விசனமடைந்து, உன்னுட்டிற் சிலபகல்கழித்து அவர்கள் வெளிப் படும்போது நாம் போய்க்கூடிக்கொள்ளலாமென்றே யெண்ணிவந்தேன். என்னைச் சேர்த்தாதரிக்க இட்டமுண்டோவென்று இனியமொழிசொல்லி அவளன்புடனுரைக்க, ஆசைபோடிருந்து சமயோசிதமானவசனங்கள் பேசி, முன்னிருந்த தாதியரெல்லாம் நாணப்பட என் வல்லமையைக்காட்டி, அச் சீமாட்டி இச்சைப்படும்படிக் கவின்மலர்சூட்டி, நாளுக்குநாள் அன்புண்டாக நடந்து அஞ்ஞாதவாசங் கழிப்பேனென்றுகற்புக்கொருபொக்கிஷமே போன்ற காதலிசொல்ல, அற்புப்பெருங்கடலாகிய தருமராசன்கேட்டு வெற்புக்கிணை யான சொர்க்கந்தங்கிய மின்னே! நீ சொன்ன நன்னயமொழியால் நற்பய னைப் பெறுவையென்றுரைத்து இன்னுஞ்சில சொல்லத் தொடங்கினுர்.

அன்னம்போலுநடையும் மின்னல்போலிடையும் உடைய பாஞ்சால ராசன் வேள்வித்தீயிற்பிறந்த மடமானே, என் வார்த்தையைச் சற்றேகேட்க வேண்டுகிறேன். வேதியரொழுக்கமும், வேந்தர்நீதியும், மாதர்கள் கற்பும் பொ ருந்தி, மாதமும்மாரி பொழிவதென்றும், அம்மழையினுல் கற்காடுகள் திருந் திப் புற்பூடுகள் பொருந்தி, செந்நெற்பயிர் நெருங்கி நானிலந்தழைத் தோங்கு மென்றும், புண்ணியவான்கள் தவம்புரிவரென்றும், பெரியோர் சொல்லியிருக் கின்ற நீதியைக்கேட்டு நெறிமுறைவழுவாமல்நடக்கும் நிலையினையுடையாள், நீ யாகையாலும்; ஒருகற்புடையாளை மணஞ் செய்துகொண்ட கணவனுக்கு விற்பன விவேகவேதசாத்திரங்களும் பற்பலசுகுணப்பயனும், அன்பும் இன்ப மும் அழகும் புகழும் வெற்றியும் புத்தியும் மெய்ம்மையும் பொறுமையும் செல்வமும் சிரும்திடமும் தீரமும் குறைவின்றிப் பெருகுமென்று மேலோர் கள் குறித்திருக்கின்றனர். மனைமாட்சியுடையாள் 'கற்பெனப்படுவது சொற் றிறம்பாமை' என்னுங் கருத்திற்கிணங்க நடக்கவேண்டும்; கணவன் கருத் திற்கு மாறுபடுவளாகில் அவட்குரிய கணவனுடைய மெய்த்தவத்தையும், செல்வத்தையும், ஆயுள் முதலிய யாவற்றையும் அழித்து, மீளாநரகத்திற் காளாக்கிவிடுமென்றே வேதமாதி ஆப்தகலைகள்முறையிடுகின்றன; பதிவிரதை யுடன்கூடி, இல்லற தருமமியற்றி நல்லமனத்துடன் வாழ்க்கைசெய்வோருக் குக் கீர்த்தியும், பொருளுங்கிடைக்குமென்று உண்மை ஞான முணர்ந்தோர் உரைத்திருக்கின்றனர். அதற்குத் திருட்டாந்த மென்னவெனின்,சகன்மாதா வாகிய சானகியினுடைய பதிவிரதாதன்மத்தால் இராவணகும்பகர்ணதியரை யழித்துத் தேவர்முதலிய தண்டகாரணிய ரிஷிகளுக்கு அபயங் கொடுத்தளி த்த சிராமனுடைய பட்டாபிடேகக் கீர்த்தியைப்பலமுறையுங் கேட்டிருக்கின்

றனே. இப்படியெல்லா மிருக்கினும், 'காவல்தானே பாவையர்க்கழகு' என்னுங் கருத்தின்படி முதற்காவல் தந்தை, இரண்டாவது காவல் கொழுநன், மூன்றாவது காவல் புத்திரன், இம்மூன்று காவலுக் குட்பட்டிருப்பவள் மிக்க பதிவிரதையாம்; அதுவே மாதர்கட்கழகாகும். நாம் அஞ்ஞாத வாசம் பண்ணவேண்டிய இத்தருணத்தில் உனக்கு யாதொரு காவலுமில்லை. ஆகையால், நான் சொல்லவேண்டுவ தென்னெனின், உன்புத்தியைப் பெருங்காவலாகக்கொண்டு, இஷ்ட தெய்வத்துணையை யிடைவிடாமல் நம்பி, நிறையாகிய அழிவின்மையை முறையாக நிறுத்தி இக்காலத்தைக் கழிக்கவேண்டும்; உன்னிட்டத்தைத் துட்டர்கள்கருதிக் கிட்டிவந்தாலும், அம்மூடர்களை நீ பார்த்தபோதிலும், அவர்கள் கண்ணுக்கெட்டாம லகன்று, அக்கொடியோருடைய துற்புத்திக்கும், உனது சத்துருவின் பார்வைக்கும் அகப்படாமலேயிருந்து, அரசன்மனைவிக்கு விரோதம்வராமல்நடந்து, நமக்கு நற்காலம்வரும் வரையிலும் இத்துற்காலத்தைத் தொலைத்துவிட வேண்டுமென்றுசொல்லி முடித்த தருமராசனுடைய சத்திய மொழியான தரும நீதிகளை உத்தமகுணசாலியாகிய பாஞ்சாலி வணங்கிக்கேட்டுப் புத்தி புத்தியென்று பேசத் தொடங்கினாள். ஐயா! பொய்யாவிரதமுடைய புனிதனே! தேவரீருரைத்தசிலாக்கிய வாக்கியமு சென்மாந்திர பாக்கியமென்றும், வேதமொழியென்றும் என் தலைமேற்கொண்டேன்; தேவரீர்சொன்ன தெவ்வண்ணமோ அவ்வண்ணமே நடக்க விருக்கின்றேன்; எனக்காகச் சிந்திக்க வேண்டாம், சத்திய வத்துவின் தத்துவநிலையேயென்று வணங்கி நின்றாள். அப்பாஞ்சாலி சொல்லிய பாரமார்த்திகமான மொழியைப் பாண்டுமைந்தன் கேட்டு மகிழ்ந்து, தௌமியரை நோக்கிச் சுவாமி! அடியேங்களிழைத்த வினை யிப்படியாயிற்று. அரசாட்சி முதற் பெருமையும் போயிற்று. எம்மைப் பணிவாரை யாம்பணியக் காலம் வாய்த்தது. இனி யெப்படி கட்டளையோ அக்கட்டளைக்குக் கீழ்ப்பட்டிருந்து தமது கிருபையின்படி நடக்கக் காத்திருக்கின்றோமென்று தருமராசன் சொல்ல, தௌமியர் மனமகிழ்ந்து நீங்கள் அறுவரும் விராடராசனை யடுத்து, இச்சையின்படி திரியாமல், ஒருவர்க்குந் தெரியாமல், ஒருவரையொருவர் பிரியாமல் இப்போதிவ்விடத்தில் நிச்சயித்துக்கொண்டவாறு வேறுவேடம் பூண்டு அவரவர்க்குரிய தொழில்களை சோர்வில்லாமலும், அவசரப்படாமலுஞ் செய்யவேண்டும். அப்படிசெய்கிற விடயத்திற் களங்கமறக் கனவானாயினும், தனக்குமேற் புத்தியுடையோரிடத்தில் ஆலோசித்து நடக்கத்தக்கதென்று நீதிநூலோர் சொல்லியிருப்பதால், நீங்களறியாத நீதிநெறியில்லை. அப்படித் தெளிந்தாலும், நானறிந்திருப்பதையுங் கொஞ்சஞ் சொல்லுகிறேன் வெறுப்பின்றிக் கேட்டருளுங்களென்று சொல்லத்தொடங்கினான்.

ஆ! ஐவர்களே? செகமுழுதும் ஒருகுடையிலாளுந் தீரனாயினும், திகந்தவரையிலும் ஒரு நொடியில்வெற்றிகொள்ளும் வீரனாயினும், ஒருவரிடத்தில் சேவகஞ்செய்யப்புகுந்தால், தீரமும் வீரமுமொடுங்கிச் சேவகஞ்செய்ய வேண்டுமென்றே பாகவ நீதிசாத்திரமே வகுத்திருக்கின்றது; ஆகையால்,

நீங்களைவரும் வேற்றுருக்கொண்டு, விராடராசனிடஞ்சென்று தொழில் புரிகையில், உங்கள்பெருமையையும் புகழையும் பேசாமல் மறந்துவிடவேண்டும்; துளவமாலையணிந்த ஆண்டகை ஒவ்வொரு காரியங்களை நிறைவேற்றுவதற்காக எத்தனைபாடோ பட்டு அவதரித்துக் காரியசித்திகண்டு இந்திரன் முதலிய தேவர்களுக்கு அருள் செய்கின்றார்; அதுபோல் நீங்களும் காலங்கருதி, உங்கள் சிறப்பை மறந்து, மச்சராசனிடமருவி, ஏவலாளரினும் எளியராயிருந்தே நாளைக்கழிப்பது நலம். ஒருவனிடத்தில் ஊழியஞ் செய்வதும் அரசருக்கடிமையாவதும், வேற்றுவேடங்கொண்டு வேலைக்கமர்வதும் கொடுமை கொடுமை; இம்மூன்றில் அரசனிடத்தில் உத்தியோகஞ் செய்கின்றமுறைமையும், ஏவற்றொழில் கேட்குந் திறமையும், அரசன் தயவைச் சம்பாதிக்க வேண்டிய நன்மையும், கீர்த்திதேடுந் தன்மையும், உச்சித வார்த்தை சபைமெச்சப்பேசு முசிதமும், கசிதமும் நானறிந்தவண்ணம் சொல்கிறேன், பகைவருடலிற்பரவிய உதிரமாமிசத்தை முனைத்தலையிற்சுமந்த வேலாயுதந்தரித்த அரசன்சபைக்கு வருமுன்னமே, தனக்குத்தக்க இடத்தில் தான் வந்திருந்து, அரசன் வாக்கிலிருந்துவருஞ் சொல்லினுடைய பொருள் நுட்பமறிந்தே, அச்சொல்லின் சூட்சத்திற்குத் தகுதியாகப் பதிலுத்தரங் கொடுத்து, மரியாதையாயடுத்து, மனமகிழச் செய்தால், அவ்வரசனது பாக்கியங்களெல்லாம் அவனே பெறத்தக்கானுவான். உலக காவலனாகிய வேந்தனிடத்தில் நாம்வந்தடுத்த அந்நாள்முத லிந்நாள்வரையிலும் வீணாய்த் துன்பப்பட்டோம், இவனால் என்னபலன் கண்டோமென்று பலருமறியத்தூறி மனவெறுப்போடொறுத்துக் கொள்ளுகின்ற அவசரப்புத்தியுடையவர்கள், இனிமேல் அரசனால் கிடைக்கப்போகின்ற பெருமை புகழ் ஐசுவரியமுதலியசன்மானத்தைப் போக்கடித்துக் கொண்டவர்களென்று சொல்லலாம்.

இராசமாளிகைக்கு மேற்பட்டவீடும், அவன் சிறப்புக்கதிகமான சிறப்பும், அவன்நாகரீகத்திற்கதிகமான நாகரீகமும், அவனலங்காரத்திற்கு அதிகமான அலங்காரமும், அவனுபரணத்திற் குயர்ந்த ஆபரணமும், அவனது சுகந்த பரிமளத்திற்கு மிகுந்த வாசனையும், அவன்வஸ்திரத்திற் குயர்ந்த வஸ்திரமும், அவன் சொல்லிய நீதி போதிக்கப் பேசுகின்ற துட்டவார்த்தையும், மதிப்பில்லாத மரியாதையும், வணக்கமற்ற இணக்கமும் கூடாது; இவைகளொருவேளை, அதிகப்பட்டிருந்தால், நல்லபாம்பின்விடத்தை நாடோறும் அருந்துவதுபோல் நன்மையைக் களைந்து உயிரழிக்குந் தீமையைவிளைக்கும். பூபதிக்குரிய புத்திரராயினும், அவர்களாசைக்குரிய மித்திரராயினும் அவர்களன்புமேற்கொண்ட பௌத்திரராயினும், இனவருக்கமாயினும் சனப்பெருக்கமாயினும், வெட்டிச்சயிக்கும் வீரமுள்ள சகோதரராயினும் அரசனது ஆணைமீறி நீதிவழுவி நடக்கலாகாது; அப்படி நடப்பார்களாயின், மிக்க கோபங்கொண்டு மனுநெறிக்கு மாறாக உயிர்வதைசெய்து விடுவார்கள். மன்னர்க்கு மகிழ்ச்சியைத்தருமைந்தரும், யுத்தமுனையில் வெற்றிபெறும் வல்லமையுடைய சுத்தவீரர்களும், செய்யத்துணிந்து பிரவேசித்த யாதொருகாரியத்தில் யாதாயினுங் காரியத்தாழ்வு நேரிட்டு அச்செய்தி அவ்விடத்தி

லிருக்கின்ற மற்றையோருக்குத் தெரியுமேல், அதைவெளியிற் பிரசித்தப்படுத்தப்படாது.

திசை யானைகளைப்போன்ற திறம்பெற்றவராயினும் வேந்தனால் முடியாத காரியத்தை நானே முடிக்கிறேனென்று சொல்லப்படாது. அரசன் நமக்கு மிக்க நண்பனுயிருக்கிறானென்று அவனிடத்தில் தனக்கினிய காரியங்களைச் சொல்லி முடித்துக்கொள்ளுகிற அன்பு அவ்வரசனை அடுத்தசிலருக்குத் துன்பத்தை விளைக்குமாயின் அதுமிக்க கொடுமையென்றறிந்து அறிவுடையோர் என்று வெளிக்குக் கொண்டுவரப்படாது. தாம் நினைத்த காரியங்களில் யாதொரு பயனுமில்லாமலே இருக்குமானால், கல்வி யறிவுடையார் சபையில் அப்பயனில்லாச் சொல்லைக் கூறிப்பழிப்புக்கிடமாகிய இழிவெய்தப்போகாது. ஆராய்ச்சியி லுயர்ந்த பேரறிவாளர்கள் ஏழை யெளியோர்முதலிய யாவராயினும் அவர்களைக் கடிந்து, கறுவி, 'வெட்டெனப் பேசேல்' என்றபடிவெட்டெனப் பேசுதல் விட்டிடலென்று மேலோருரைத்த நீதியைநினைத்துக் கோபங்கொள்ளல் தகுதியென்று போராற்றலையுடைய வேந்தனிடத்தில் உரிமையா யிருப்பாரைப் பகைத்துத் தன்னருமை பெருமை கொடுமைமுதலிய ஆணவப்பேச்சால்பகையுண்டாக்குமவதூறனகடினமொழிகள்சொல்லப்படாது ; அப்படி பகைப்பாராயின் யாவராலு மாற்றப்படாத கூற்றுவனுற் கொல்லுங் கொலைத்தொழிலை நாடோறும் விளைக்குமென்றே நன்றுயறிந்து, யாவருக்கு நல்லவராகவே நடந்து கொள்ளவேண்டும்.

அரசன் கொலுவிருக்குஞ்சபையில் தாராளமாய் எதிரில் நிற்கப்படாது ; அரசனுக்குப் பின்புறத்தேயு நிற்கப்படாது. சிங்காசனத்திலிருக்கும் அரசனுக்கு இருமருங்கும் நெருங்கினின்று, அவனுடைய கண்கள் யாரைப்பார்க்குமோ என்றும், அக்கண்ணினோக்கு கருணை நோக்கோ, கலக நோக்கோவென்றுங் கண்டறிந்து, காலமுமிடமுங்கருதி நடக்கவேண்டும். அவ்வரசனுடைய வாக்கிலிருந்து வருமொழியை கண்சிமிட்டாமற் பார்த்துக் காது கொடுத்துக்கேட்டு எவர்களுக் கென்னசிறப்போ, ஏழைகளுக்கென்ன பாக்கியமோ, எதிரிகளுக்கென்ன அபாக்கியமோ என்றும்ஆராயவேண்டும். அரசன் அரண்மனையிலுள்ள நன்மை தீமைகளைத் தானறிந்தாயினும், ஒருவரால் கேள்விப்பட்டாயினும், அரசகாரியங்களெதுவாயினும், வேறொருவருடனுஞ் சொல்லாமல், மறைக்கவும் வேண்டும் ; உடனே அதை மறக்கவும்வேண்டும். அயலார்முதலிய மன்னவரால்சண்டைசச்சரவுபொல்லாங்காகிய கட்டுவார்த்தைகள்நேரிட்டதாகக்கேள்விப்பட்டால்அதைக்கெட்டியாய்விசாரித்துத்தீர்க்காலோசனைசெய்து, உடனேதன் எசமானனுக்குத் தெரியப்படுத்திமேன்மையைப்பெற்று, அவ்வரசனுக்கு மெய்ப்பட்பொருந்தியிருப்பதே அழகுக் கழகாகும். ஐம்புலங்களை அடியோடறுத்து, காமம் வெகுளிமயக்கங்களையும் வேர்களைந்து காட்டில் வாசஞ்செய்யும் அருந் தவத்தரையும், கலவைதிமிர்ந்த கலசமுலையார் கடைக்கண் மருட்டுமாயின் பஞ்சேந்திரியங்களுடன் காட்டில் வாழுகிற நம்மை விட்டுவிடத் தக்கதோ ? ஆதலால், அரச மாதர்களிருக்குமிடத்தில் தனித்துப் போகப்படாது ; அவர்களுடன் சரசவார்த்தை

யும் பேசப்படாது. நாணம், மடம், அச்சம், பயிர்ப்பும், என்னும் இந்நான்கு மமைந்த மாதர்களிடத்திலும், குள்ளனிடத்திலும், கள்ளனிடத்திலும், சிறுவனிடத்திலும், ஈனசாதியானிடத்திலும், நட்புச் செய்யலாகாது ; சிநேகம்பண்ணினால், உடனேகலகம்நேர்ந்து அவமரியாதைக்குள்ளாகி உயிர்த்தண்டனை வரையிலுங் கொண்டுபோய் விட்டுவிடும். உலகமெல்லாந்தொழுவதற்குரிய உயர்ந்தோராயினும், சிங்காசனக் கொலுமுகநோக்கிச் செல்லின் அவ்வரசன் தனக்கு மரியாதை செய்திலனென்றும், வாகனங் கொடுத்தில னென்றும், பேசிலனென்றும், ஆசன மளித்தில னென்றும், போசன மருத்திலனென்றும், வண்மை மணியணிப்பணி தந்திலனென்றும், விசனமேற்கொண்டு குறைப்படலாகாது, ஒருவேளை அக்கொற்றவனாற் சகல வெகுமானமும் பெற்றால் உடல்பூரித்துத் தன்னைத்தானே மறந்து, மனமகிழ்ந்து கர்வங் கொள்ளப்படாது; மிக்க களிப்பே அதிகதுக்கந்தருமென்றுசாத்திரஞ் சொல்லுகின்றமையால், அவ்வரசனாலப்போதே அவமான நேரிட்டாலும் நேரிடும் ; அதனைக்குறித்துச் சிந்தை வாடப்போகாது. அரசனால்வந்த நன்மை தீமைஇரண்டுஞ் சமமாக வெண்ணியவரோ சஞ்சலமில்லா திருந்தார்களென்று இயம்பத் தக்கவராம். அரசன் ஒருவன்மீது கோபங்கொண்டு அவன் செல்வங்களைக் கைக்கொள்ளக் கருதிய காரணத்தைத் தாங்களறிந்த துண்டானால், அந்தப் பேச்சை யாரிடத்தும் பேசலாகாது, அதைக்குறித் தரசனையு மேசலாகாது. கார்மேகங் கலந்து பொழிகின்ற மழையிலும், ஊர்வெந்து உலர்ந்து கரிந்துபோகக்காயும் வெயிலிலும், பைசாசு நித்திரைசெய்யும் பாதிராத்திரியிலும், வீசிமோதுங் கடுங்காற்றிலும் வேந்தன் ஒருவேலையாக அனுப்புவானாயின் தன்னிடத்தில் சொல்லிய காரியமே கண்ணாரக்கொண்டு தான்போன அக்காரியத்தை முடித்துவரவேண்டு மல்லது வேறொன்று நினைக்கப்படாது. இராச காரியம் நிறைவேறுகின்ற வரையிலும் சோகம், சோம்பல், தேக வருத்தம், பசி, இளைப்பு, ஆயாசம், தாகம், மனத்தாபம், நித்திரை பெருமை, அருமை, சிறுமை, இவைமுதலிய ஒன்றையும் பொருளாய்க் கொள்ளாமல் மானத்தையும் மன்னன் சொன்ன தியானத்தையும் முக்கியமாநெஞ்சிற் கருதி முடிவுபெற நடத்திவரவேண்டும். கொலுமுகத்தினின்ற ஒருவனையழைத்துப்பகைவர்மேலனுப்பினால் அப்பகைவர் குடிகெடும்படிவென்று தங்களரசாட்சியைக் காக்கவேண்டும் ; அவ்வரசனைத் தத்தம் கண்மணிபோற் பார்க்கவேண்டும் ; எக்காலமும் அரசனைப் புகழ்ந்து பேசவேண்டு மல்லது எப்போது மிகழ்ந்து பேசலாகாது. உற்றதுணையாய்க் கொற்றவ னட்புப்பெற்றிருக்கினும், அரசனவனை உவர்போல் வைத்திருந்தாலும், அவனது பொன்னைப் பொருளைப் பூமியை நேமியைக் கன்னக்கோற் கள்வரைப்போல் கைப்பற்றக் கருதலாகாது ; கணக்குமுதலிய காரியங்களிலும் மறந்தும் வழுவலாகாது. ஒருகாலத்தேஅரசன்களிப்படைந்து பொன்னைப் பொருளைப் பூமியை மாளிகையை மனையைக் கொடுப்பனேயாயின் அன்புடன்அவைகளைப்பெறத் தக்கது ; மற்றோர்வகையாய்கிரகிக்க நினைப்பது ஆலவிடத்தை அமுதென்றே கருதிய ஆசைபோலாகுமென்று அறிவிலுயர்ந்தோர் மோசம் போய்விடா

மல், கிடைத்தமட்டுந் திர்த்தியடைந்துசத்தியந்தவறாதிருப்பர். இஃதன்றியும், 'காற்றுள்ளபோதேதூற்றிக்கொள்ளு' என்றபடி இக்காலத்திற்றேடாமல் இனியெக்காலத்திற் றேடப்போகின்றோ மென்று கைகொண்டவரைக்குங் கொள்ளையடிப்பதற் குடன்படுவோர் கயவரென் றுரைக்கப்படுவர்; அவர்கள் முன்னுள்ள முதலுமிழந்து முனையுமிழந்து தேசப்பிரஷ்டத்துவ மடைவார்கள். கொலுவீற்றிருக்குங் கோமகனிடத்து பொய் புரட்டு பெருமோசம் டம்பஞ் சோம்பல் கொட்டாவி குறுகுறுத்தல் திமிர்விடுதல் முதலானவை செய்யக்கூடாது; ஒருகாலத்தே வருமாயின் அவ்விடத்தை விட்டு அப்பாற்போய்த் தீர்த்துக்கொண்டு வரவேண்டும், களிப்பாகச்செய்யுங் கயப்பாகிய வஸ்துக்களைக் கனவிலுங் கருதப்படாது; அதையுட்கொண்டு காவலன் சமுகமேறப்படாது. கண்ணாரக்கண்டதும் பொய்; காதாரக்கேட்டதும் பொய்; தீரவிசாரிப்பது மெய்; இது முதியோர் மொழியாதலால் யாதொரு காரியத்தையும் நாவடக்காமற் பதறிச்சொல்லப்படாது; அப்படிச் சொன்னவருக்குப் பெருந் துன்பத்தையும் மானிடப் பதரென்னும் பெயரையும் வருவிக்கும். அரசனால் நியமித்த குற்றவாளி முதலிய கொலையாளருடன்கூடிக் கலந்து குலாவலாகாது; கூடினால், இவனும் அக்குற்றத்திற் குரியவனாவான். அர்சன்கையெடுத் தழைத்தால் ஆநந்தமகிழ் வடையாமல், அந்த கனழைக்க வந்தபோது, அவனைக்கண்டு நொந்தழுகின்ற அறிவில்லா ருயிர் போலொடுங்கி, அடங்கி, வாய்பொத்தி வணங்கிவரவேண்டும். அரசனாலழைக்க வரும்போது, பூமியதிரத்திடுதிடென்றுநடந்து அலட்சியமாய்ப் பதறிவரலாகாது. 'அடக்கம் அமரருளுய்க்கும்' எனப் பெரியோருரைத்தபடி மருவிச் சுகம் பெறவேண்டும். வெற்றிவேலேந்திய வேந்தன்பால் கட்டிக்காத்துப் பொருந்தியிருப்பவர்கள் கொசுகு போன்ற சிற்றறிவுடை யாரானாலும், அவர்களையெதிர்த்துப் பகைத்துக் கொள்ளப்படாது; அவர்கள் பகையோ நல்லதருணத்திற்கழுத்துக்குக் கத்தியாய்வந்து நேரும். இவ்வரசனிடத்தில் வெகுவாகிய செல்வமும் சுபமாகிய இன்பமும் பெறுகிறதற்காக வல்லவோ எக்காலமுங் கோள் குண்டுணிசொல்லி, நயிச்சியமாய் நடந்துகொண்டானென்று அரசனைச் சூழ்ந்திருப்பவர் யாவரும் இகழ்ச்சியாய்ப்பேசிக் கொள்ளும்படி இடங்கொடுத்துப் பலவகைவளங்கள் சுலபமாய்க் கிடைப்ப தானாலும் அறிவினை யுடையோர் அவ்வகைப் பழிச்சொல்லுக் காசையேவையார்கள். அரசன் கொண்டாடிப் புகழ்ந்த போதிலும், பேரறிவகன்ற பெருஞ்செல்வமுடைய பெரியோர் பலர் நம்மை மெச்சவேண்டுமென் றிச்சைகொண்டு, தம்மைத்தாம் மறந்து, ஆணவத்தாற் சிறந்து அகந்தை கொள்ளமாட்டார்கள். பரிசுத்தராகிய உத்தமர் இறைவனாகிய அரசனையும், உபதேசஞ்செய்தருளிய குருவையும், வித்தியாப்பியாசம் பண்ணியஉபாத்தியாயனையும், புத்தென்னு நரகநீங்குதற்குப்பெற்றதந்தையையும், பத்திசெலுத்துந் தெய்வத்தையும், தந்தையெனச்சிந்தித்துத், தினமுமேத்தித் தொழுது, வாழ்த்திப்போற்றுவார்கள். ஆதலால், நீங்களெவரும் இவ்வகையான உலக வியற்கைகளை மனத்துட்கொண்டு, நாடோறுங் குற்றமகன்ற ஏவற்றொழிலை முடித்து, அகந்தை

யற்ற மனத்தினராய்ப் பெருமைபொருந்தி, இன்சொல்விளைத்து அஞ்ஞாத வாசம் ஒருவருக்ஷமுங் கழிப்பீராயின், அது உம்மிலுண்டாகிய நல்லகினைப்புக்குத் துணைக்காரணமா யிருக்குமென்று தௌமியர்சொல்லினர். அப்போது, மலைபோலும் குவிந்த தோளினையுடைய பாண்டவர்கள் வெற்றி கொண்டதைப்பார்க்கிலு மேலான விருப்பமுடையராய்ப் பௌரோகிதருடையமனமகிழச் சொல்லத்தொடங்கினர்.

வேதியர்பெருமானே! காவலனிடத்தில் ஏவல்செய்யு முறைமைகளை எங்களுக்கின்று கற்பித்தருளினீர், குறைவற்ற தவராசனாகிய தந்தையே! நீருரைத்த மொழிகளை வேதபாடங்கற்குஞ் சந்தைபோலுஞ் சிந்தையுட்கொண்டோம். இனிமேல் நாங்கள் மறைந்துறைந்து ஒருவருடந் தொலைக்கிறவரையிலும் தேவரீர் தவவேடம்பூண்டு, மாதவர்கள்வாழும் வனமடைந்து மருவத்தக்கதென்று, செந்தாமரை மலர்போன்ற அவரது திருவடியைத்தொழுது போற்றி, இதுவரையிலும் பத்தியுடன் பூசைபண்ணிக்கொண்டு வந்த நித்தியாக்கினியை நெறியோ டளித்தார்கள். விசுவாசமாய்ப் பூசித்துவந்த ஔபாசாக்கினியைத் தௌமியர், கைப்பற்றிக்கொண்டு பாண்டவர் ஐவரையும் பட்சமாய் நோக்கி, அருள்மலர்ந்தமுகத்தோடு ஆசீர்வதித்து, அவ்விடம்விட்டெழுந்து, மாசகன்றமாதவர் நிறைந்தவனம்புகுந்து தவஞ்செய்திருந்தனர். இப்பால் பாண்டவர்களுக்கும், பாஞ்சாலிக்கும் ஏவல் செய்துவந்த பாங்கியர்களைப் பார்த்து நாங்கள் ஒருவருடம் ஒளித்திருக்குங்காலம் நேரிட்டமையால், அதுவரையிலும் நீங்களெல்லாம் வருந்தாமல் பாஞ்சால நாட்டிற் சேர்ந்திருங்களென்று அவர்களுக்குச் சொல்லியனுப்பிப், பெருமையிற் சிறந்த பாண்டவர்கள் பாஞ்சாலியுடன் சிலதூரம் போகையில், தருமராசன் தன் தம்பியரை நோக்கிச் சொல்லுகின்றனன். என்னருமைச் சகோதரர்களே! நாம் இவ்வரசன் சார்பிற்சாராது வேலைத்தொழில் நடத்துகையில் நமது கையிலிருக்கும் ஆயுதங்களை ஒருவருமறியாவண்ணம் ஒளித்துவைத்தால், நம்மைப்பகைவர் முதலாகிய யாவருங் கண்டுகொள்ள மாட்டார்களென்றனர். அந்தச் சொல்லைக்கேட்ட பார்த்தன் வணங்கி அண்ணாவே! தேவரீர் சொன்னது நியாயமேயென்று பெற்ற தாயைப்பிரியுங் கன்றேபோ லேங்கிப், பகைபதைத்து வெற்றிகொண்ட காண்டீவத்தையும், அத்திரநிறைந்த அக்ஷய தூணியையும், சந்திரமாகிய மற்ற ஆயுதங்களையுங் கழற்றிக் கொடுத்தான். வீமசேனனும் கடல்போற்பொங்கிக், கோபங்கொண்டு, மனச்சோர்வடைந்து, துன்பத்தால் நைந்து, வில்லையும், கதையையும், படையையும் அயர்ந்து மனமுருகிவைத்தான். நகுல சகாதேவரென்னும் இரட்டையரும் தமையனாகிய தருமராசனுரை தவறாதவராய்ப், பல்லோருங் கவலைகொள்ளும் வில்லும், வேலும், வாளும், தோமரமும், சூலமும், கேடயமும், அம்பறாத்தூணியும் அவிழ்த்துக் கொடுத்தனர். சாந்தகுணமுள்ள தயாளுவாகிய தருமராசன் தன்னுடைய ஆயுதங்களையுங்கழற்றிவைத்து, ஒருங்குசேர்த்துஇவற்றையொருவரும் உணராதிருக்கும் இடந்தேடி வைக்கவேண்டுமென்று சிந்தித்துச், செழுமையுடன் வளர்ந்து இருளுக் கிருப்பிடமாக வுயர்ந்து தழைத்து கவிந்

திருந்த ஒரு வன்னிமரத் தோப்பின் வளப்பத்தைக்கண்டு, மிக்கமகிழ்ச்சி கொண்டு அதில் ஓர் மரப்பொந்தில் இவ்வாயுதங்களை வைத்துப், பகைவர்முதலாகிய பலருக்குந் தோன்றாமலிருக்க வேண்டுமென்று மான்தோலால் மறைத்து, மூடிக்கட்டும்படி வீமசேனனுக்குக் கட்டளையிட்டுத் தருமசொரூபியாகிய தருமராசன், தந்தையாகிய யமதருமராசன் திருவடியைச் சிந்தித்து, வந்தித்து சுவாமி! எங்களுக்கு வெற்றியையும் வீரத்தையுங் கொடுக்கின்ற ஆயுதங்களனைத்தையும் இவ்வன்னிமரத்தில் வைத்திருக்கின்றோம், இவற்றை நானாவது பார்த்தனாவது எடுக்கத்தக்கதேயன்றி மற்றியார்வந்தெடுத்தாலும், இம்மரத்தின் கிளையை யடுத்தாலும், பெரும் பாம்புருவமாய் ஆலவிடத்தை வீசிக்கொணடு மேல்விழக்கடவன வென்றுபேசிக், கட்டுரையாகிய உறுதி மொழியால் திடத்தவரத்தைப்பெற்று அவ்வரத்தைப் பரீட்சிக்கவேண்டி, வீமசேனனையழைத்து நீபத்திரப்படுத்திய படைகளைப் பாரென்றுரைத்தனர். அப்போதே வீமசேனன் அம்மரத்தின் கிளைமேற்சார்ந்து எட்டியெடுக்கக் கிட்டியபோது மட்டற்ற கொடுவிடத்தைக் குபீரென்றுகக்கி அழலால் தகித்துப் பெரும்பாம்புருவமாகித் தாத்தக்கண்டு, பேச்சு மூச்சடங்கிப், பொறி புலன்கலங்கிப், புலம்பிப் பொன்போன்ற முகந்திரிந்து, இரைந்தகன்றிழிந்த இயற்கையைக்கண்டுதருமராசன்முதலிய யாவரும்முதலைவாயினீங்கியயானை போல் துயர் நீங்கி மகிழ்ந்து, துர்க்கையின் திருவடிதொழுது, அவ்விடம் விட்டு நீங்கிச் சில தூரஞ்சென்று அப்பாலுள்ள செந்தாமரைப் பொய்கையடைந்து, நீராடி நீர்துவட்டி, நெடுமயிராற்றி, வேதவிதிப்படியேமாத்தியானக் கடன்முடித்துத் தந்தையின் பதத்துணையைச் சிரமேற்கொண்டு, திக்குநோக்கித் தெண்டனிட்டுத் தென்றிசைக் கடவுளாகிய தெய்வமே! நாங்களெடுக்க வேண்டிய வேடத்திற்குத்தக்க உபகரணப்பொருள்களெல்லாம்உதவிசெய்து, சுஜாதிகப் பிரகாசமுந் தரவேண்டுமென்று வருந்திக்கேட்ட தன்மகனாகிய தருமராசனிட்டப்படித் தென்றிசைக்கோமான் அநுக்கிரகஞ்செய்தருளினன்.

செங்கோற்கடவுளது திருவருட்பயனால் தருமபுத்திரன் ஒளிவிடும் பாலசூரியன்போல் மறையவனுருவாய்த் தழைத்தபின் குடுமியும், செழித்த முப்புரிநூலும், கவித்தவெண்குடையும், பிடித்த தண்டுகமண்டலமும், உத்தரீயமும், காதிற்குண்டலமும், கையிற்பவித்திரமும், கண்டவர்மதிக்கும் புண்டரநுதலும், கரத்தேசெபமாலையும் கனிந்த மொழியாசியும், முனிவரிற்சிறந்த முகவிலாசமு முடையானானன். மற்போர் வல்லானாகியவீமன் மடைத்தொழிலாள ருருவெய்தி நுதற்கிசைந்த திலதமும், செவிக்கிசைந்த மணிககையும், பாகசாத்திரப்பேச்சும், சந்தனபாளிதப்பூச்சும், தாழ்ந்தகைவீச்சும், சரிகை வேட்டிப்போர்வையு முடையானாய்ச் சிருஷ்டிகர்த்தாவினாலுஞ் செய்தற்கரிய நூதனவேடமடைந்தான். மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் போற்றி விரும்பும் பவளமலைபோன்ற பரமசிவமும் அப்பவளமலைமேற்படர்ந்தபச்சைப் பசுங்கொடிப் பர்வதவர்த்தனியும், ஆசைப்பெருக்கோடெடுத்து முன்னின்று அருட்பார்வையளிக்கத் தன்னிலைதவறாமே தவத்திலிருந்து உன்னியவைகளொருங்குடன்பெற்றுக் காட்சிகண்டருளிய காண்டீபனாகிய அர்ச்சுனன் கண

னுதலுடன்கலந்து விளையாடிய தன்திருமேனிப் பிரகாசத்தைநீக்கி வாசனை தங்கு மலர்க்குழலும், கலகலவென்னுங்கைவளையும்உடலைமறைக்கும் அனைச் சட்டையும் கருங்குவளைபோன்றகண்களும் உடுக்கைக் கிணையாஞ் சிற்றிடையும் உயர்ந்தசரிகைப் பட்டுடையும் உலவுமன்னம் போலுநடையுஞ் செந்தூரப் பொட்டணி நுதலுந்தரளக் கோவை முதலிய சதங்கையும் உடையானுய்ப் பேடியரிலுயர்ந்த பேருருவமைந்தான். பின்னவரிருவரில் முன்னவனுகிய நகுலராசன் தலைப்புறத்துங் காதின்புறத்துஞ் சுருள்செய்து கத்தரித்து விட்ட மயிர்க்குச்சும், வன்னப்பிச்சமும், முறுக்குமீசையும், கனகமயச்சுருணை கலந்துகட்டிய வண்டிப்பாகையும் நெற்றிக்கோபியும் கஞ்சுகக்கவசமும், கலகலவென்னுங் குதிரைச்சம்மட்டியும் கதிநடைபழக்குங் கயிறுங்கொண்டு குணமும்குற்றமும் கோணமும் வட்டமும்வளைவுமாறலும் பிணிவருவிதமும் பிணிதீர்க்குமவுடதமு முணர்ந்த குதிரைப்பாகனைப்போற் குறைவிலா வடிவங்கொண்டான். மகாவிற்பன விவேக சகாதேவன் சிரத்தில் கிறைந்து பரந்த கொண்டையும் வளர்ந்த தாடியும் கிளர்ந்த மீசையும், செம்மண் வெண்மண் திலகக்காப்பும் கருங் கம்பளமுங் கச்சப்பையும், கயிறுங்கோலும் கன்றின் வாய்ப்பூட்டும் காதணிகுழையும் தாதுகுதழையும் கந்தைவேட்டியும், பெருங்குரல் தாட்டியு முடையானுய்ப் பலகோடி பசுக்களைப் பாதுகாக்குங் கோபாலனைப்போல் வடிவ மடைந்தான். வேலாயுதம் போன்ற கண்ணினளாகிய பாஞ்சாலி தலைசிவி வகிர்ந்து, கூந்தல்விட்டு முடிந்து நெற்றிக்குச் சுட்டிகட்டி நீலவிழிக்கு மைதீட்டி இரத்தினப் பணிகள்பூட்டி வாசக்கலவைப் பொடிகூட்டி தருமர் முதலிய ஐவருங்காண வண்ணமக ளுருவாமெனச் சமைந்தனள்.

இவ்வாறறுவருந்தாங்கள் எண்ணிக்கொண்டவண்ணம்வேறுவேடமெய்தி ஒருவரை யொருவர் பார்த்து, உற்சாகமடைந்து, மச்சராசனிடத்தி லொருவருடம் வாழலாமென்று இச்சை மேற்கொண்டு அச்சமில்லாதவர்களா யிருந்தபோது,மறுவகன்றதருமராசன்மனமகிழ்ந்துபலவகையுபாயுவளப்பமும் பேசித்திறமுடையவர்களே ஊன் நாறும் வேலோங்கிய விராடனிடத்தில் நானபோய்ச் சேர்ந்த பின்னர் நீங்களைவரும் முறையாகத் தனித்தனிவந்து சேருங்கள்; நானவ்விடத்திலிருப்பதால்என்னைநோக்கி,வணங்கியிணங்கி, போற்றுதற்கெளிதாயிருக்குமென்று விளம்பிக்கிளம்பிய அறக்கடமை என்பது நீங்காத அண்ணலைவாழ்த்தித்தம்பிமாரும் வேள்வியிற்பிறந்த பாஞ்சாலியும் பரதவித்துவாடத் தேவர்முதலியயாவருங்கொண்டாட,அருமையானமூதவவேதியர்வடிவங்கொண்டதருமராசன் கங்கபட்டனென்னுந்திருநாமமும் உதயமான இளஞ்சூரியன்போற்பிரகாசமும்பாற்கடலலைபோல்முப்புரிநூலும்பரந்தமார்பும்உயர்ந்ததோளும் சுகந்தமலர்மாலையு முடையவராய் மதவாரணம்போற் சென்று மராடகர்நாட கன்னுட கிரூத மலைநாடர் வந்திறைஞ்சு மணிக்கதவமைந்த வாசலிற்போய்நின்று வெண்குடை நிழலில் நன்குடன்பொருந்தியவிராடராசனுக் கறிவிக்கச் சொல்லினுன். அவ்விடத்திற் காவலிருந்த தூதுவர்சென்று, வாய்மூடிக் கைகட்டிச் சுவாமி! பராக்கு, யாரோவொரு பெரியவர் நமது கொலு

முகவாசலில் வந்திருக்கின்றன ரென்றனர். அவர்கள் பேச்சைக்கேட்ட மச்ச ராசன் உடனே எதிரோடிச்சென்று ஐம்புலனொடுங்கப்பணிந்து, முகமலர்ந்து அகங்கனிந்து கையிரண்டையுங்குவித்துச் சிரத்திற்பொருத்திக் கருத்தில் துதித்துச் சேவித்துநின்றனன். உடனே கங்கபட்டர் ஆசீர்வதித்தருளினர். அவ்விராடராசன் சபையிலிருந்த யாவரும் வந்த வேதியர்பெருமானைக்கண்டு விந்தையென்றுட்கொண்டு தொழுதனர். அச்சமையத்தில் கங்கபட்டரால் மங்களாசனம்பெற்ற மச்சராசன் அவரை இச்சைமிகுந்த பட்சத்துட னழைத்துச் சென்று வைதிகர்களிருக்க வமைந்த ஆசனத்தில் எழுந்தருளப்பண்ணி அவருபயதிருவடிகளுக்கு மருக்கியபாத்தியம் ஆசமனியம்அபிடேகம்வத்திரம்புட்பம் அரிசந்தனம் அட்சதை தூபம் தீபம் நைவேத்தியம் இவைமுதலிய உபசாரங்கள்யாவும்புரிந்து பத்திசெலுத்திப்பரிந்தேத்திப்போற்றிவாய்பொத்திநின்று, சுவாமி! தேவரீர்யார்? எவ்விடமிருப்பது? இவ்விடத்திற்கெழுந்தருளியகாரணம் யாது? தங்களுடைய நாமமென்ன? என்றுகேட்டான். அதற்குக் கங்கபட்டர் சொல்லுகின்றனர், அதிதீவிரபக்குவமுள்ள அரசனே! இச்சக்கரவாளஞ்சூழ்ந்த பூமியை ஆக்கினைச் சக்கரஞ் செலுத்தியாண்ட தருமராசனுடன் பழகியிருந்தேன்; அவர் வனவாசம்பண்ணிய காலையிலுங் கனநேசம்பண்ணிக் கலந்து திரிந்தேன்; என்னைவிட்டோராண்டு பிரிந்திருக்கவேண்டி வந்ததால், நான் உம்மிடத்திற் சிலநாள்கழிக்கலாமென்றே வந்தேனென வேள்வியினாலும் கேள்வியினாலும் மிக்கோனாகிய தக்கோனுரைக்க, மநுநீதிதவறாதமச்சராசன்கேட்டு, மதியால்மகிழ்ந்து துதியாற்புகழ்ந்துபரவசமெய்தித் தெளிவாகிய அறிவும் அன்பும் ஆசையும் உள்ளக்களிப்பும் ஒளிவிட்டிலங்க, என் ஆண்டவனே! தேவரீர் இப்பட்டணத்திற் கெழுந்தருளிய பயன் யான் எழுபிறப்பினுந் தேடிக்கொண்ட நல்வினையின் நலமேயல்லது வேறின்று. ஆதலால் முனிவராகிய தேவரீர் இவ்விடத்திலெத்தனைநாளைக்கிருக்க இட்டமோ அத்தனைநாளும் அதிபதியாயிருக்கலாமென்றே விராடராசன் எடுத்துச்சொன்னான். அவ்வாறே புனிதமாகிய சிங்காதனத்திருந்து வேதியர்முதலிய மாதவரும் பல சாதியரும் தொழப் பவளச்செபமாலைகரத்தினும் குவளைத்தொடைமாலை உரத்தினும் தரித்த தருமராசன் எழுந்தருளினான்.

பின்னுஞ்சிலநாள்சென்றபின்னர் விற்போருக்கும், மற்போருக்கும்இவன் தானென்னும் கதாபாணியாகிய வீமசேனன், தெளிந்ததேவாமுதத்திற்கொப்பாகச் சமையல்செய்யும் பக்குவத்தைக்குறித்தும், கல்வியின் திடத்தைக்குறித்தும், தெரிவிக்க ஏகபோகத்திற்கொருவனாகிய விராடராசன் சபையிற்புகுந்து, நாகரத்தினம்போல் நலம்பெற்றிருந்த தருமராசன் திருவடியில் தண்டனிட்டு இம்மண்டலத்தரசே! யான் மடைத்தொழிற்குரியேன்; கூட்டுக்கறி குழம்புக்கறி குழைக்கறி பொறிக்கறி பச்சடி முதலிய ஐந்துவகைக்கறிகளும், உண்ணல் தின்னல் நக்கல் பருகலுடன் அறுசுவையுண்டியும், குறைவறச் சமைப்பேன்; ஒருசமையத்தில் மல்லுங்கொடுப்பேன்; வில்லுமெடுப்பேன்; அல்லும்பகலும் நல்லவனாய் நடப்பேன்; பலாயனனென்னும் பெயர்பெற்றேன்; திரிபுவனத்திலுந்தேடிப்பார்த்தாலும், என்தொழிற்கொப்புரைக்க எத்

தொழிலுமிலது ; எனக்கிடாவார் யாவருமிலர் ; சமயபேதத்தால் தருமராச னுக்கிளைய வீமனென்பவனைவிட்டு உம்மிடத்தி லொருவருட மிருக்கும்படி நினைந்துவந்தேனென்றான்.

இவ்வண்ணம் பேசிய பலாயனன்மேல் இட்டங்கொண்டு முகமலர்ந்த விராடராசன் அவன்தலைமேற் கைவைத்து பொன்னாரமும், பூவாரமும், இரத்தினாபரணமும், முத்தாரமும், வச்சிரவாகுவலயமும், மரகதமதாணியும்,மெல்லியவத்திரங்களும், யானை குதிரை பல்லக்குமுதலியவாகனங்களும் பெருமையாகக்கொடுத்து, சுயம்பாகி! அரசரிடத்திலிருக்கின்ற உத்தியோகங்களிற் சிறந்தது தாய்போலூட்டுகின்ற சுயம்பாகித்தொழிலே ஆதலால், நீ இன்று முதல் எனக்கும், என் சுற்றத்தவருக்கும், இனிமையுடன் உண்பிக்கும் உரிமையும், இங்குள்ளமடைத்தொழிலாளரனைவருக்குந் தலைமையாகிய அதிகாரமும், உனக்கே கொடுத்தோம். இவ்வேலையை உன் சொந்தவேலையாகவே பார்த்துச் சிந்தை வேறுபடாதிருக்க வேண்டுமென்றனுப்பி, விந்தைதங்கும் புயமுடைய விராடராசன் மிகக்களித்திருந்தனன்.

இப்பால், வாயுபுத்திரன் சேர்ந்து, மடைத்தொழிலில் தலைமைபூண்டிருந்தனன். பின்பு மறுநாட்காலையில் அறிவாலுயர்ந்த பிரகந்நளையென்னும் பேடி வட்டவெண்குடையும், மணிமகுடமுந்தரித்த மச்சராசனிருந்த உச்சிதசபை சிறக்கும்படிசென்று, முப்புரிநூலினையுடைய அந்தணராகிய கங்கபட்டனென்னும் முதல்வன் பாதத்தில் ஒருவகையாகவணங்கி, ஐயா! எண்டிசைகொண்டாடுங் காண்டீபபாணியாகிய அருச்சுனன் அரண்மனையிலிருக்கும் பேடிகள் அநேகரில் நானொருபேடி; நாதப்பிரமம் சத்தப்பிரமம் ஒலி ஒத்து தாளம் மேள முதலியவைகளுங் கலந்து, சுரம் சுதி லயை குறையாமற்பாடவும், ஆடவும், நடனசாத்திரப் பிரசங்கஞ்செய்யுஞ் சபைக்கு யோக்கியமாகப் பேதைப்பருவப் பெண்களுக்குப் பரதங்கற்பிக்கவுங் கற்றிருக்கின்றேன் ; பிரகந்நளையென்னும் பெயரினையுடையேன் ; உமது செல்வநகரிலிருந்து, சிலநாள் கழிக்கும் பொருட்டு அடைந்தேன். என்னை நீர் ஆதரிப்பீராயின், வேதமும் வேள்வியுமுள்ள மேதினியில் உம்முடைய மரபு விருத்தியாமென்று பேடி வாழ்த்தினள். அவள் வாழ்த்தியதைச் சாத்திரமுணர்ந்த விராடராசன்கேட்டு, இத்தன்மையாளர்கள், கடல்புடைசூழ்ந்தகாசினியிற்கிடைப்பதே அருமையென்று பெருமையாய்ப்பேசி, வரிசைமுதலிய வர்க்கமுங்கொடுத்து இன்னுமுனக்கு வேண்டுவனவெல்லாந்தருவேன்; என்பெண்ணுக்கு உயிர்ப்பாங்கிபோற் கண்ணுக்குக்கண்ணாயிருந்து, பரதசாத்திரம் முழுதும் பயிற்றென்று உத்தரகுமாரத்தியிருக்கின்ற அந்தப்புரத்திற் கனுப்பினன்.

பின்னுஞ் சிலநாள் சென்றபின்பு அழகில் மன்மதனையும்,அறிவிற் சுக்கிரனையும்பழிக்கச்செழிக்கும் நகுலன்போய்விராடராசனுடைய குதிரைச்சாலைக்கெதிராகநின்றான். அன்று சாயங்காலவேளையில், மின்னலோங்கிய வேல் தாங்கிய விராடராசன், வன்னக்குதிரையேறி, வையாளிவிட்டு வரும்போது கடிவாளமும், கம்பியும், கயிறும், கிலுகிலுக்கும், கட்டையும், முட்கோலும் பிடித்துப் பார்த்தவரெல்லாரும் அச்சுவசாத்திரந்தெரிந்த விற்பனனென்றே

மதிக்கும்படியிருந்த பரிவல்லவனை இச்சைமேற்கொண்டு, பார்த்துக் கையை நீட்டிக்குதிரைச்சம்மட்டிகொண்டு நிற்கின்ற குதிரைப்பாகனே! நீ எங்கிருந்து வருகிறாய்? உன்பெயரென்ன! சொல்லென்றான். இவ்வாறுகேட்ட அம்மச்சராசனைக் குதிரைச்சேவகஞ்செய்யும் வேடங்கொண்ட கோமான், மிகக் குறுகித் தன் றொழிற்குத்தகுந்த மரியாதைசெய்து, அரசனே! அடியேன் விசயனுக்கிளைய நகுலனென்று பலதிசையிலுமெழுதிய வெற்றிபெற்றவன். அவனது கீர்த்தியைச்சொல்ல வல்லவருமுண்டோ? அந்நகுலராசனுடைய குதிரைத்தளங்களுக்குத் தலைவர்களில் எளிமையாகத் தாழ்ந்துவாழ்ந்தவன்; தாமக்கிரந்தி யென்னும் நாமம்புனைந்தவன்! விரைவில் நடக்கும் பரியும், அரசர்களேறுங் குதிரையும், அவற்றின் மனமும், வடிவமும், சுழியும், சுத்தமும், நிறமும், திறமும், திடமும், குணமும், மணமும், குலமும், குரலும், வேகமும், கதியும், உற்பவதேசமும், வீரமும், ரோஷமும், மறுவும், பிறவுமுள்ள மார்க்கமுமறிவேன்; தீராக் குதிரைப்பிணிகளையுந்தீர்ப்பேன்; மண்டலம், கோணம், வளைவு, முன்னோட்டம், பின்னோட்டம், நேரோட்டம், நரி, கரி, அரி, வரிவேங்கை நடையுங்காட்டுவேன்; தேருக்குப் பூட்டுங் குதிரையும், போருக்குமூட்டுங் குதிரையும், பட்டாபிடேகப்பரியும், கலியாணப்பரியும், யாகப்புரவியும், வாயுவேக மனோவேக சரவேக சர்ப்பவேகப் புரவியுந்தெரிந்து வகுப்பேன். சத்துவகுணசாந்தனே! அண்டினோரை யாதரிக்கும் பாண்டுமைந்தரைவரும், வனவாசஞ் செய்யபோனபின்பு உண்டியுமிழந்தேன்; உறுதியுமழிந்தேன்; உமது கீர்த்தியைக்கேட்டு இவ்விடம்வந்தேன். என்னை யாதரித்தருளுமென்றான். அப்புரவித்தலைவனது பொய்யாமொழியைக்கேட்டு, துன்னிநெருங்கியமன்னவர்யார்க்கும், பொன்னுலகோர்க்கும், மண்ணுலகோர்க்கும், புனிதஞானியர்க்கும், பூசுரருக்கும், விசுவாசமுள்ள மெய்யறிவோர்க்கும் உற்றகவலையை யொருங்குடன் தீர்க்கும் வித்தக விராடராசன், மெய்ப்புளகிதமுடையானாய் மந்திரிமார்முதலியயாவருங்கொண்டாடச் செந்திருக்கலைமகள் சேர்ந்துநின்றாடப் பொன்னின் குடநிறைந்த வாசவில்வந்திறங்கித் தன்னைவந்தடுத்தோருக்கும், சத்தியநெறிபெற்ற தருமராசன் தம்பிமாருக்குங்கொடுத்த வெகுமானத்திலும் மூன்றுபங் கதிகமாகக்கொடுத்துச்சன்மானஞ்செய்து தன்னுடைய குதிரைவல்லவருக்கெல்லாந்தலைவனென்னுமுதன்மையுங்கொடுத்தான்.

அதன்பின் ஒருநாள் அசுவங்களை அபிவிர்த்தியாக அளிக்கும்படிக்கமைந்த நகுலராசனுக்கிளைய சகாதேவன், நந்தகோபன் மைந்தன்போல் வேடங்கொண்டு, அசைந்தாடிய செவிகளுக்கிசையச்சூடிய பச்சிலையுடன், புள்ளாங்குழலிசைபாடுந் தடியும், துறட்டுக்கோலும், கன்றணைக்குங் கயிறும், மாடுகட்டுந் தும்பும், சிக்கக்கச்சமுந் தோள்மேற்கொண்டசைந்து கீர்த்தி தழைத்த விராடராசன் சபையைக்கிட்டினான். அவனைக்கண்ட அரசன் கருங்கம்பளப் போர்வையுடைய கானவனே! நீயாரென்றுகேட்டான். அப்போது, தருமராசனுடன் சமமாயிருந்த விராடராசனைப்பணிந்தும் பணியாதவன்போற்பணிந்து ஒ! மகாராசனே! துரியோதனனுடன் சொக்கட்டா

ஞடி, இக்கட்டடைந்து, நாட்டைவிடுத்துக் காட்டையடுத்து வனவாசம்பண்ணிய பாண்டவர்களில் இளஞ்சிங்கமாகிய சகாதேவராசனுடைய பசுக்களைப் பார்த்து மேய்த்துக் காத்துவந்த கோபாலன்யான்! என்பெயர் தந்திரபாலனென்றான். அவன்சொல்லைக்கேட்டவிராடராசன், உள்ளமகிழ்ந்து அவனைத் தன்னருகழைத்து, வேண்டிய வெகுமானமுங்கொடுத்து, நமது பசுமந்தைகளை உன் சொந்தம்போற் காத்துக்கொண்டிருவென்றேயனுப்பிவிட்டுச் சந்தோடமுற்றிருந்தான்.

உடனே ஓமாக்கினியில் தோன்றிய பாஞ்சாலியும், வண்ணப்பெண்வடிவாகிவந்து, மருமலர்மாலைவேய்ந்த மச்சராசனது தோளணைந்த சுதக்கணை வாழும் அந்தப்புரமேநாடி, அவ்விடத்திற் காவலிருக்கும்பாங்கிமாரை நோக்கி யாரோவொருத்தி வந்திருக்கின்றனளென்று உங்கள் அரசிக்குச் சொல்லுமென்ன, அவர்களவ்வர்றேகித் தங்களரசியைவணங்கி எங்களையாளும் அம்மணி! தேன் நிறைந்த செந்தாமரைமலரிற்பிறந்த செந்திருவு நாணுங் கண்மணிபோன்ற வோர் பெண்மணி இடையசைய விசையாய்நடந்து, நமது தலைவாயலைக்கடந்து வந்திருக்கின்றனள். தாயே! தங்கள் கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கின்றோமென்று உபசரித்தனர். அந்தப்பாங்கியருரைத்ததைக் கேட்டுப் பாரமார்த்தியமுள்ள சுதக்கணை மிகுந்த பட்சமுள்ளவளாய் அக்கணமே யழைத்துவரச்சொல்லினள். அந்நேரமே சேடியர்கள்பாடுங்குயில்போலோடி வாடிய மருங்குலையுடைய மயில்போல் வாசலில்நின்ற மங்கையைநாடி நூதனமான மாதனமே! வாரும்வாருமென்றேயன்போடழைத்தனர்; அவ்விடமிருந்த பெண்ணமுதாகிய வண்ணப்பெண் மகாபாக்கியமென்று வந்தனள். அம்மாதின் துடியிடைப் பிடிநடைச் சுந்தரங்கண்ட சுதக்கணை திடீரொன்றெழுந்து, மலர்முகமலர்ந்து கைகொடுத்தணைத்துப் பக்கத்திலிருத்திக் குங்குமச்சாந்து சந்தன சுகந்த கதம்ப தாம்பூல மஞ்சள் புட்ப வத்திராபரணங்களினாற் பூசித்து அன்னையே! உன்னூடி யாது, யாதுகாரணமாயிவ்வளவுதூரமெழுந்தருளியது, உன்பெயரென்ன? அடியேன் அறியச்சொல்லுமென்று இன்னியம்போன்ற தன் மொழியால் நன்னயமாக்கேட்டாள். அப்படிக்கேட்ட சுதக்கணைக்கு உபசாரவார்த்தைசொல்லி அருட்கண்ணையுடைய ஆரணங்கே! இந்திரப்பிரத்த முதலிய எல்லாவற்றையும் சகுனியாடிய சூதால் தோற்றுக் காடே வீடாகவும் பறவை மிருகங்களே பந்துவாகவும் பன்னிரண்டாண்டு வனவாசம்பண்ணிய பாண்டவர் மருவிய மான்விழிமடந்தையைப் பிரியாதிருந்தேன்; என்பேரோ விரதசாரணி என்பர். சந்தனுதி சுகந்தகதம்பம் பூசுவதிலும், சேலை மாலை சேர்த்துக் கட்டுவதிலும், பூணுபரணங்கள் பூட்டுவதிலுங் கூந்தலைவகிர்ந்து முடித்துப் பின்னுவதிலும், மார்பில் தொய்யிலெழுதி யலங்கரிப்பதிலும், மைதீட்டுவதிலும் புகழ்பெற்றவள்; உமக்கிச்சையானபடி அழகுண்டாக்கி மனமகிழச்செய்ய வேண்டுமென் றெண்ணியே வந்தேன்; பெண்கள்சிந்தாணியே! இன்னுமொருகாரிய மியம்பக்கேளும். யான் என் தாய்வீட்டிற் சஞ்சரித்துலவுங் கன்னிப்பருவத்தே கந்தருவர் காவலிலடங்கிக் கற்புடையாளாயினேன்; மற்ற மனிதரோ நோக்கப்படாது, மனிதர்

முகநோக்கி நான் மகிழவுமாட்டேன், நீ மாதவமுடையவளென்று உன் மாளிகை நோக்கியே வந்தேனென்றனள். இவ்வுண்மைகூறிய வண்ணப்பெண் வசனம்கேட்டுத் திடுக்கிட்டுப்பயந்து, நடுத்துடனயர்ந்து, மகிழ்ச்சியாய் விரும்பிப் புகழ்ச்சியாய்த் திரும்பிப் பூமகளேபோன்ற வண்ணமகளெனத் தெய்வப் பெண்போல்வந்தஉன்னைச் செவ்வையாகப்பார்த்துச் சிந்தைமகிழ்ந்தேன்; இன்றுமுதல் நீர்என்னிரு கண்ணுகவும், எங்களோடொப்பாகவும், வண்ணப்பெண்ணுகவும், என்னுடனுமுயிரு முன்காவலாகக்காத்து, உற்ற தாயாகிய நீர் பெற்றதாய்போலப் பார்த்துப் புகழ்படவாழ்ந்து, நன்மொழிபுகன்று, நலம்பெற நடத்துவது உன் கடனென்றுரைத்து, என்னைக் காத்தருளுமென்று உபசரித்தனள். இவ்வண்ணமுபசரித்த மிக்க புத்திசாலியாகிய சுதக்கணையைப் பாஞ்சாலிபார்த்து அப்படியே யாகட்டுமம்மா! என்று எந்தெந்த வேளைக் கெப்படி செய்யவேண்டியதோ அந்தந்தவேளைக்கான அலங்காரங்களை வெறுப்பின்றி விருப்பத்துடன் வகைவகையாகச்செய்து நாளுக்கு நாள் மிக்க விசுவாசமுண்டாக நடந்துகொண்டனள்.

இவ்வண்ணம், மைதீட்டிய வாள்போல் நீட்டிக்காட்டுங் கருங்கண்ணினையுடைய பாஞ்சாலியுஞ்சந்திரகுலமைந்தராகிய பாண்டவரைவரும் உருவமறைந்து, அரசசின்னங்கள் யாவையுந் துறந்து, உல்லாசப்பேச்சுகள் மறந்து அஞ்ஞாதவாசத் தோராண்டுங்கழிக்கச்சிறந்துவருங்காலையில், மெய்ப்பயிர் விளைத்துப் பொய்க்களைகளைந்து தீவினைநீர்த்து நல்வினைசேர்த்து இராச்சியபரிபாலனஞ் செய்துவருகின்ற விராடராசனுடைய மச்சநாடானது, நித்திய சுபமங்கலப் பெருஞ்செல்வமும், மாதமும்மாரியும், நன்செய் புன்செய் இஞ்சி மஞ்சள் இரத கஜ துரகபதாதிகளும் விஞ்சியும், நான்கு வருணத்தவருங் குலாவிக்கொஞ்சியும், குருநாட்டுக்கொப்பாகக் குறைவற வோங்கியும், பூவாமரம் பூத்தும், காயாமரங்காய்த்தும், பசுப்பாக்கியம் பால்பாக்கியம் மிகுந்தும், சுப சோபனங்களுடன் சந்தோடசம்பிரமங்கள் நிரம்பியுமிருந்தது. கேளும்! செனமேசெய மகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிவந்தனர்.

## மற்போர்ச்சருக்கம்.

எவ்வகைவளமு நீங்காத செல்வச்சிறப்போங்கிய விராடபுரத்தில் பாஞ்சாலியும்பாண்டவரைவரும்போகபோக்கிய வினிமையிற் பூர்ணசந்திரன்போல் விளங்கினர். அவர்களறுவருங்களங்கரகிதராய்க்கலந்து, பேசுங்காலமறிந்து, ஒருவர் கண்ணிற்படாமல் திரிந்து, ஒருவரையொருவர் பிரியாமற் பொருந்தித் தாழ்வறவாழுங்காலத்தில், யானைபுலி கரடி சிங்கம் காட்டெருமை கலைமான் முதலிய மிருகங்களுடன் மல்லரைச்சண்டைவிட்டு, வகைவகை வேடிக்கைகளை இச்சையின்படிவிளைத்து மச்சராசனும் மற்றவர்களும் மகிழ்வுற்றிருந்தனர். அப்படிப்பட்ட சமையத்தில், வேலாயுதத்திற்கு வேளென்றும் சூலாயுதத்திற்கு நமனென்றும், வில்லுக்கு இராமனென்றும், சொல்லுக்கு அகத்தியனென்றும், மல்லுக்குநானேமகாதேவனென்றும், தேசமெல்லாந்திரிந்துசீர்பெற்றவாசவனென்னும்பெயருள்ள மல்லனொருவன், கொலுமுகவாசலில்வந்தான்.

அவன் எப்படிப்பட்டவனெனின், அண்டமுகட்டையளாவிய மெய்யான், எண்டிசைமட்டு மேந்தியகையான், வாகுவலயம் வணைந்ததோளான், வீரகண்டைபுனைந்த தாளான், வாடைக்காற்றைமறிக்கும் வலத்தான், ஓடத்தக்கயானையை யொடுக்கும் வலத்தான், சிவந்த மயிர்விரிந்த தலையான், தீரபராக்கிரமப்புயமலையான், அவனிழல்போ லாயிரமல்லர்களடுத்துவரும்படி எழுபுரவிபூட்டிய ஒற்றையாழித்தேரினையுடைய சூரியன்போல், உன்னதத்தேரேறி விருது, டால், கொடி, குடை, செயபேரி, டங்கா, பாங்கா, கொம்பு, தாரை, பூரி, வீரசின்னம், எக்காளமுதலிய வாத்தியமொலிக்கவும், கடல்சூழ்ந்த உலகத்தில் இவனுடன் சண்டைசெய்தவர்கள் யாருமில்லையேயென்று கட்டியக்காரர்எச்சரிக்கைசொல்லவும், பட்டுவர்கள் கொண்டாடிக்கொக்கரிக்கவும், நவமணிப்பணிமகுடஞ் சொலிக்கவும், நாகரத்தினத்தணிப்பட்டயமிலங்கவும், நவமோகனமன்மதனிவனென்ன, இராசசிங்காதனத்திற் கொலுவீற்றிருந்த விராடராசன் சமுகத்திற்கு வந்தான். இவ்வகையாடம்பரத்துடன் வாசவனென்னுமல்லன் தேசபூசிதராசனைப்பணிந்து மகாராசசிங்கமே! எழுகடல்வளைந்த உலகத்தில் என்னுடனெதிர்த்து மற்போரிடத்தக்க வல்லவரில்லை; நானே அநேகம் பட்டினங்களினுந் திரிந்து, அரசர் பலரையுங்கண்டு, என் சமர்த்தையுங்காட்டிப்பொன்பூடணவாகனாதி வரிசைகளையும் பெற்றிருக்கின்றேன்; இவ்விடத்திலுமதுமகாசபையைநோக்கிவந்தேன், என்வல்லமையைச் சொல்லுந்தரமன்றென் றுரைத்தனன். அந்த மற்போர்த்தொழில் முறைதெரிந்த விராடராசன் வந்த மல்லன்கூறிய வார்த்தையைக் கேட்டுத் தன் சபையிலிருந்த ஆத்தான மல்லர்களைநோக்கி, உதட்டைப்பிதுக்கித் தலையையசைத்துப் புதிதாகவந்த மல்லனுக்குக் கொடுக்கத்தக்க பரிசுகள் கொடுத்து நமது சபையில் நிர்வாகமுள்ள மல்லர்களில்லையோவென்று வாய்விட்டுச் சொல்லமாட்டாமன் மனம் புழுங்கியிருந்தனன்.

அச்சமையத்தில், விராடராசனுடைய சொந்தமல்லர்களுக்கு மனம்பொறாமல், கோபாவேசங்கொண்டு, வந்த மல்லனிவ்வளவு வரிசை பெற்றுப்போகவும், நாம் வல்லமையற்றவர்களாகக் குந்தியிருக்கவும், மானக்கேடும், மரியாதைத் தாழ்வுமாயிற்றேயென் றெழுந்து, காரிடிபோற் பேரொலிகாட்டி, ஓரடியாய் நடந்து, ஆக்கிரமித்துப் பராக்கிரமம்பேசிப் பதைத்துத் துடித்து, அதட்டிப் புயந்தட்டி, மீசையை முறுக்கிக் கண்கள் சிவக்க வுறுக்கிவிழித்துப் புறக்களைக்கடித்துப் புதுமல்லனை வளைத்து, இது நல்ல சமையமென்றிரைந்து எங்களுடன் சண்டைபோட வாவென்று மறித்து, அவன்பெற்ற ஆடையாபரணவெகுமானங்களைப் பறித்து மற்போர் நூலில் வகுத்தபடி விற்போர் வாட்போர் வகையெல்லாம் விளைத்து, வேந்தர்கள்முதலிய வெகுசனர் காணப்பாய்ந் தெதிரோடிச் சண்டைவிளைத்தனர். தனித்தனி யொருவன் சண்டைசெய்யும்போது தாளம்விட்டகலாமல் தத்தியும், ஒருவனை யொருவன் சுற்றியும், உடலுடனுட லொத்தியும், தோளுடன் தோளடித்துப் பற்றியும், தலையோடு தலைமோதியும் புயமலையோடு புயமலைமோதியும், இடசாரி வலசாரியோடியும், இளைப்பெடுத் தொருபுறம்வாடியும், இடைந்து முன்பாய்ந்து கூத்

தாடியும், இடம்விட்டிடஞ் சாய்ந்து கூடியும், வச்சிரமுஷ்டியா லிடித்தும், வைரக்கையாலடித்தும், காலுடன் கால்மாட்டியும், சுகாங்கத்தை நீட்டிக் காட்டியும், கருங்கற்பாறையுடன் கருங்கற்பாறை இடித்துக்கொள்ளுங் காட்சி போல், மார்புமார்புங் கலங்கிமோதி வாரிவாரியெடுத்துவீசி நெடுநேரம் வாது புரிந்து போராடும்போது பிரிந்து பார்ப்பவர்கள் கண்கள் பதறிக்கலங்க வேர்க்க விதிர்க்க மற்போர் புரியுங்காலையில் ஊர்திரிந்த மல்லன்கையால் விராடராசனூரிலிருந்தமல்லர்களெல்லாம் எமலோகஞ்சேர்ந்தனர். இவ்வகை யாகத் தன்னுறுதியைச் சோரவிடாமல், போர்செய்து விராடபுரத்து மல்லர் ஒருசேர வீரசொர்க்கத்திற்கனுப்பியவாசவனென்னு மல்லனை நேசவிசுவாசத் துடன் மெச்சி நீ, மெத்தவுநல்லவன், கைமுடக்கிக்குத்தவும் வல்லவனென்று விராடராசன்புகழ்ந்து, உயர்ந்த வத்திராபரணங்களுமீந்து, விருதுமுடி குடை கொடியுடன் எவ்வகைச் சிறப்புஞ் செய்துவிட்டுப் போர் புரிந்திறந்த மல்லர் களைப் புதைக்கும்படி கட்டளையளித்துத் தானுஞ் சபையைவிட்டெழுந்து அரண்மனைக்குட்சென்று அன்றிரவு விடியுமளவும் நித்திரைபிடியாமல், மெத்த வும்வருந்திமறுநாட்காலையில் நித்தியவிதிமுடித்துக் கொலுக்கூடத்திற்குவந்து தனக்கு முன்னெழுந்தருளியிருந்த கங்கபட்டர் தாளில்வீழ்ந்து, அவரால் சுப மங்களாசீர் வசனம்பெற்று, மந்திரி சாமந்தர் முதலிய மன்னவருடன் துன்னி யிருந்தனன். அந்தவேளை வாசவனாகிய மல்லன்வந்து பணிந்து, இராச போச மகாராச பூசாதுரந்தரனே! அடியேனுக்குச் செலவு கொடுத்தருளுமென்று கைதொழுது நின்றான். அவனைக்கண்ட மச்சராசன் நேற்றிறந்த தன்சொந்த மல்லர்கள் பரிதாபத்தைப் பாராட்டி, இவனை வெல்வதற்குத் தகுந்த மல்லர் கள் நம்மிடத்தி லில்லாமையால் இவ்விடத்திலுண்டான மல்லனையும் வா ரிப் போர்கொடுத்து, ஆருக்கும் பயங்கரமுண்டாகப் பேரெடுத்து ஊருக்கும் போகப்போகின்றானென்று மனத்தாங்கலாகப் பேசினான். அந்தக் கருத்தை அண்டையிலிருந்த கங்கபட்டரறிந்து மாங்குயில்கூவும் வளநாட்டிறையாகிய மச்சராசனே! கேளும், அரசரிடத்தில்வரிசைபெற்றுஉரிசைகண்ட இவ்வாசவ னாகிய மல்லனை வெல்லவாவது கொல்லவாவது வேண்டுமாயின், தகுந்த மல் லன் நமது மடைப்பள்ளியிலிருக்கின்றானே; அவனும்மெத்தவும்வல்லவன்; மகா சமர்த்துள்ள நல்லவன்; பூருவத்தில, தருமராசனுடைய தம்பி வீமசேன னிடமிருக்கும்போது, வெகுபேர்மல்லர்களைவென்றுபலாயனனெனப் பேருங் கொண்டு, வெற்றிமாலையும் வெகுமதியும் பெற்றிருக்கின்றனனே; அஞ்சாநெ ஞ்ச முற்றிருக்கின்றனன்; அசுரகுலகாலனென்னும் பலசாலி; அவனாலிவனை யடக்கிப் போடலாமென்று நினைக்கின்றேனென்றனர். அதை அரசன் கேட்டு மகிழ்ந்து, அப்படியாயின், அந்த மடைத்தொழிலாளியை வருவியுங்களென் றான். உடனே தூதனையனுப்பி அழைத்துவரச் சொன்னார்கள். அவ்வாறு போயழைத்தவர்களைப் பலாயனன் கண்டு, அடா தூதர்களே! அரசன் அழை த்த காரண மென்னவென்று கேட்கத் தூதர்கள் ஐயா! யாரோவொரு மல் லன் நின்று நமது சில்லனா மல்லனா யெல்லாங்கொன்று, வெகுமானங் கொண்டு, நமக்கெல்லாம் அவமானங்கண்டனன். அதனால் அவனோடு சண்

டை போடுவதற்கோ, அல்ல தும்மைக்கண்டு பேசுவதற்கோ நாங்களறியேம் ; அன்றியும் உம்மைக் குறித்துக் கங்கபட்டர் செம்மையாகச் சொல்லியிருக்கின்றனர் ; அதனு லழைப்பித்ததுபோலு மிருக்கின்றதென்றனர். அவர்கள் வார்த்தையைக்கேட்ட வீமசேனன் முகமலர்ந்து, அகமகிழ்ந்து, இதோ வந்தேன் வந்தேனென்று மகாமேருவைச் சக்கரவாளகிரி வளைந்ததுபோல இடுப்பிற் கச்சைவரிந்திறுக்கி, அண்டமுகட்டுக்கு முட்டுக்கொடுக்குந் தண்டமொரு கையிற்கொண்டு, விடாமிர்தம் புசித்த திடகாத்திர தீரனாய்ச் செயசிங்கம் போற் சீக்கிரம்வந்து, சிங்காசனத்திருந்த கங்கபட்டரைத் தொழுது சுவாமி ! பராக்கென்று வந்து நின்றனன். அவ்வாறு நின்ற சுயம்பாகியை விராடராசன் கண்டு நீ இந்த மல்லனோடு யுத்தஞ்செய்ய வல்லையோ? என்றான். ஐயா! ஏதோ, உமது அநுக்கிரகத்தாலும், இதோ, எழுந்தருளியிருக்கும் பெரியோர்களின் ஆசீர் வசனத்தினாலும் போர்புரிய மாட்டுவேன் ; தேவரீர்! கால தாமதமில்லாமற் கட்டளையிட்டருளும்; இதோ ஒருநொடியில் இவனைத் தானப்பிரட்டத்துவமாக்கி நீராடி வருகின்றேனென்றான். அந்தப் பாகசாத்திரப் பலாயனன்சொல்லை விராடராசன்கேட்டு, நகைமுகங்காட்டிப் புதுமல்லனையழைத்து இவனுடன் யுத்தஞ்செய்வதற்கு உனக்கிட்டந் தானோவென்றனன். ஆகா! நீர் நல்லபுண்ணிய பூபாலன், உமதுசபையிலிருந்தமல்லர்களையெல்லாம் விணாய் மடித்துவிட்டேன் ; இவனாயினும், மல்லனென்னும் பேருக் கிருக்கட்டும்; இவனுமிறந்து போவானாயின் எனக்குமெத்த மனத்தாபமாயிருக்கும், உம்மைப்பற்றிஇவனை மருந்தும்பால்வைத்துவிடுகின்றேன்; அந்தோ! இவனது ஊழ்வினைப்பயனால் நமனுக்கு விருந்தாக வந்திருக்கின்றான் போலுமிருக்கின்றது; நீங்களும் இவனுயிருக்கு உலை வைத்திருக்கின்றீர்கள் ; என்மேற் குற்றஞ் சொல்லவே வேண்டாம்; எமனுடனெதிர்த்த வுயிரும், சிங்கத்தைப்பகைத்த யானையும், என்னுடன் போராடவந்தாரும் பிழைக்கப்போவதேயில்லை. ஆகையால், இவனின்றைக்கே இறந்துபோய்விடுவானே; இவனுக்காராவது பெண்டு பிள்ளை தந்தை தாய் அண்ணன்தம்பி மாமன்மைத்துனன் உற்றார் உறவினர்களுண்டானால் முன்னே சொல்லியனுப்பித் தலைமுழுகிப்போடப் பண்ணுங்கள்; உங்களுக்குஞ் சம்மதமானால் என்னுடன் சண்டைக்கு வரச்சொல்லுங்களென்று, அண்டை அயலைப் பார்த்துக் கண்ணுருட்டிக் கறுத்து விழித்து, மீசையை முறுக்கித் திரித்துச் சிரித்து ஆர்ப்பரித்துக் கொக்கரித்து வீமனுக்கண்டையில் வந்தான். அவ்விடமிருந்த கங்கபட்டரொருவரோ ஒழிய மற்றவர்கட்கெல்லாம் பயமுண்டாகிப் பலாயனனிறந்து போவானென்று திண்ணமாயெண்ணங்கொண்டு தியங்கிமயங்கித் தத்தளித்து நின்றுவிட்டனர்.

இவ்வாறிருக்க, காமதகனனுக்கொப்பாகியவீமன், தன்னண்டையிற் சண்டைக்குவந்தவீரமல்லனைக்கிட்டி, உதயகிரி அத்தமானகிரிஇரண்டும் நெருங்கிப் போராடப்புகுந்தாற்போற்பொருந்தினன், அவ்விருவருந்தோளடித்து, பெருங்குரல்முழக்கி, இடித்துப் பிரதாபப்பேச்சுகள் படித்துக் கையாலுங்காலாலும் பின்னிப் போரிடத்தொடங்கி, ஒருவரையொருவரடித்தும், ஒருவரையொருவருதைத்தும், ஒருவரையொருவர் பற்றியும், ஒருவரையொருவர் சுற்றியும்,

ஒருவரையொருவ ரெறிந்தும்; ஒருவரையொருவர் செறிந்தும் ஒருவரை விட்டொருவர் பிரிந்தும்; ஒருவரையொருவர் பின்பறிந்தும்; மார்புடன் மார்பழுந்த இறுக்கிக்கட்டி யணைத்துச் சுற்றியும்; கையைமுடக்கி மார்புந் தோளுந் தொளைபடக்குத்தியும்; கால்மேலாகவிழ எற்றியும்; புருவம் வாய் மூக்குக்காதுமுதலியஉறுப்புகளழியச்சிதைத்தும்;பொருப்பென்னும்புயத்தொடுபுயமிடித்துப்பதைத்தும்;ஒருவரையொருவர் துரத்திப்பிடித்தனர்.ஓடி,வாடி, நாடி நிலையில் மீண்டனர், மேலும் ஒதுங்கிப் பதுங்கி,ஒடுங்கி,அடங்கிப்பாய்ந்து, காய்ந்து, சாய்ந்து, மாய்ந்தார்போல் மயங்கிவாடினர். இத்தன்மையாக, இருவரும்போர் புரிந்துவருகையில் புதுமல்லன் கற்றவித்தைகளையும், சாகசங்களையும், கைலாகவத்தையும் வீமசேனன் கண்டுகொண்டு, இவ்வளவுதானிவனிடத்திலிருக்கின்ற மகிமையென்றுதெரிந்துகொண்டு எதிரிக்கிடங்கொடுத்துஏழைபோல்நின்றிருந்து,தனக்கு எதிரிலிருந்த புதுமல்லன் மேல் திடீரெனப் பூமியிற்குதித்து, குபீரெனப்பாய்ந்து, தொடையிற் கைநுறுத்துத் தூக்கித் தொப்பென்று பூமியிற் குப்புறப்போட்டுத் தோள்மேலேறத் துணிந்தபோது, இடும்பாசூரனையும் பகாசூரனையு மெற்றிக்குத்தி நமலோகமனுப்பி இவ்வுலகத்திற் பேருபகாரியெனப் பெயரெடுத்த வீமன் தன்னுடையசாகசசமர்த்தினால் வீராவேசங்கொண்டு, அம்மல்லன் கையினின்றும் நீங்கி நிலத்திற்பாய்ந்து,பதறி,நிமிர்ந்து குதித்து, நிதானமாய் மதித்து, நேருக்கு நேர்சென்று, ஒருகையை நீட்டி, அவனுடலை நெருக்கிப்பிடித்து, மற்றொருகையாற் கழுத்தைமடக்கியொடித்து, நிலத்தினில் மோதி, ஒரேயமுக்கா யமுக்கிப் பழுத்த பாலைப்பழம் போல், கொழுத்த கண்கள் பிதுங்கத்தக்கதாகக் கரசரணுதிகளை யொடித்து, உயிரையுமடித்து, வெறுப்பில்லாமல் வீசியெறிந்து, எங்கே? இவன் பின்னால் வந்த மல்லனென்று புயங்கொட்டி யார்த்துக் கண்கள் பொறியெழவிழித்து, முகம்வியர்த்து, ஆர்ப்பரித்து, வீறிட்டெழுந்தான். இவ்வாறடங்காத் திடங்கொண்டெதிர்ந்தசுயம்பாகியை விராடராசன்கண்டு,ஒப்புரைப்பதற்கிடமில்லாமல், அப்பப்பா வென்றயர்ந்து, இப்பாலென்னமோவென்று பயந்து, உடனே முகநயந்து, சகமதிலுந்திடவானேயென்று புகழ்ந்து, தன்னிருகரத்தாலு மணைத்து, பொன்னரிமாலை பூடணங்கொடுத்து, இனிமேலென்னுடைய போர்முகத்திற்கு உன்னையன்றிஉற்றதுணையில்லையென்றேயுபசரித்து, மன்னர்மதிக்க வானார்துதிக்க மனங்களிக்க வரிசைகளளிக்க, முன்னவனென்னப் பொருந்திய கங்கபட்டரைப் பூசித்துச் சுவாமி! உம்மா லெனக்கிவ்வளவு பெருமையுண்டாயிற்றென்று உவந்து வாழ்த்தி, தன்னுடல் போலும் தன்னுயிர்போலும் தன் பொருள்போலும் பக்கத்திலிருத்தி, இச்சுயம்பாகிக் கொப்பாகச் சீராமபிரானைத்தான் சொன்னாலும் என்காதுக் கினிமையாயிராதே; அவனென்செய்தனன்போவென்று தினந்தோறுஞ் சந்தோடமடைந்து சிறப்புற்றிருந்தனன்.

இப்பால் பாண்டவரைவரும் தத்தந் தொழில்களிற் குறைவின்றி அதிக சாக்கிரதையாயிருந்து, விராடராசன் நடத்துமரியாதைகளினால் அன்னியதேசத்திலிருக்கின்றோமென்னும் வெறுப்பின்றி, விசனமற்ற சுசனங்களுடன் இந்திரப் பிரத்தத்திலிருந்து, அரசாண்ட செல்வம்போற் சுகமுற்றிருந்தனர். இப்

படியிருக்குங் காலத்தில், இந்தப்பட்டினத்திற் கதிபதியாகிய மச்சராசனுக்கு மைத்துனரும் சுதக்கணைதேவிக்குத் தம்பியருமான கீசகர்கள் ஆச்சரியப்பட்டுத்தேசங்கள்தோறுஞ் சிறப்படைந்துவந்த வாசவனென்னும் பெயருடைய மல்லனைத் தங்கள்வாசலிலிருந்த மடைத்தொழிற்குரிய மல்லன்நாசகாலநமன் போலெதிர்த்துக் கொன்றுவிட்டானென்றே கேட்டுச்சந்தோடங்கொண்டாடியும் நேற்றிறந்த பழையமல்லனைக்குறித்து இரக்கமடைந்துமிருந்தனர். அன்று முதலாகச் சுயம்பாகியாகிய பலாயனனைப் பார்க்குந்தோறும் அவ்வூரிலுள்ளாருக்கும், மற்றவர்களுக்கும், பயமும் வயிற்றிற்பெருநெருப்புமுண்டாயிருந்தது. கேளுஞ் செனமேசெய மகாராசனே! என்று வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

## கீசகவதைச்சருக்கம்.

பஞ்சபாண்டவரும், பாஞ்சாலியும், வித்தியாசமேயின்றிப் பத்துமாதங் கழித்து மற்றநாளுந் தொலைக்கவேண்டுமென்றே, ஒருநாளை ஒருயுகம்போற் போக்கிச் சோர்வடையாமலுந் தேகசுகமும்பாராமலுந் தங்கள்வலிமையையும் காட்டாமல் ஒருவகையாய்க் காலங்கழித்தனர். அப்படி வருநாளையிலொருநாள் சுதக்கணையுடன்பிறந்த நூற்றுநாலுபேருக்குமூத்தவனும், விராடராசனுக்கு மைத்துனனும், அவன் படைக்கதிபதியுமாகிக் காமனைப்பழிக்குங் காந்தியும் அளவிடப்படாத ஆண்மையுமுடைய கீசகன் தன்னுடன்றோன்றிய சுதக்கணையைப் பார்க்கவேண்டுமென்றேவந்து, அந்தப்புரத்திற்புகுந்து, சிலம்புபுலம்புஞ் சீறடிபணிந்து, சிலநேரம்வரையிலும் பேசியிருந்து, தன் தமக்கையிடத்திற் செலவுபெற்றுச் சிங்காரவனத்தின் வழியாய்வந்தான். அவன் வரும்போது,பாண்டவர்கள் மனைவியாகிய விரதசாரணியென்பவள், தேவேந்திரனுடைய நந்தவனத்திற்கொப்பாகிய அந்தப்புரத் தோட்டத்திற் சுகந்த பரிமளமிகுந்த புட்பங்களைப்பறித்துச் சோடசகலைகணிறைந்த மதிமுகம்வெயர்த்துச் சொரூபவுல்லாசமும், புருவவிலாசமும், செந்தாமரை மொட்டேபோல் திரண்ட கொங்கையும், இரண்டுமலையைச் சுமக்கமாட்டாமல் துவண்டாடும் இடையும், அன்னநடையும், வன்னவுடையும், உடையாளாகிச் சாயல்கண்டு தோகைமயிலாடக் குரலோசை கேட்டுக் குயிலிசைபாட, அளிமொழிக்கிடைந்து கிளியினம்வாட, அடிப்புறவடிக்கு ஆமையொளிக்க, பசும் பொன்னொளி பார்த்து மின்னல்நெளிக்க, இன்னெழில்பெற்ற கன்னிகையாவாள் பொன்னங்காவிற்பொலிந்தெதிர்ப்பட்டனள். செயற்கையழகின்றி இயற்கையழகுவாய்ந்த அப்பாவையைக் கீசகன் கண்டு, ஆசைமேற்கொண்டு, மோக சோக மூச்சுமேவிட்டுக் காமன்கணையாற்கலக்கப்பட்டு ஒகோ கோ! இப்படிப்பட்ட பெண்ணையும் இதுவரையிலுங் கண்டிலேனே; இவருலகமயக்கவந்த மாயையோ? சும்மாயிருப்பவர் மேல்தொடுக்கு மோகனாத்திரமோ? திக்குப்பாலருக்குச் சொக்குப்பொடியோ?பிரமன்மைத்தவிசித்திரமோ? கம்மியன் கையாற் சமைத்த சித்திரமோ? அம்மா!இதொன்றுமறிகிலேன்;தெய்வப்பெண்ணோ?இவராரோ?எவரோ? என்றையங்கொண்டு, அவளண்டையில்வந்து, இருகண்ணுமிமைக்குந் தன்மை

யால் மானிடமெனத் துணிந்து, காமுகனுகிவருந்தி, நைந்து, நினைந்து, மைய லால்வெந்து, வாடிமயங்கி, மானம்மகிழ்ச்சிபெருமைபுகழ்ச்சியாவுமறத்துறந்து ஐம்புலனும்புரண்டு, அறிவுமருண்டு மோகப்பயிர்விளைக்கு முதல்விரேரிட்டும் விரகதாகந்தீராத சங்கடமென்னே? ஆகா? நேசப்பெண்ணரசே! உன்சரித்திரத் தைக்கேளாத் தரித்திரனு யிருக்கின்றேனே. நீர் யாரோ! எவ்விடமிருப்பது! உன்னுயக னெங்கே! நீர் என்னகாரியமாய் இங்கே வந்தீர்? உமது பெய ரென்ன? என்மேல் தயைபுரிந்துசொல்லுமென்று பலவகையிலும்கேட்டான்.

அதற்கோ ருரையுஞ் சொல்லாமலிருந்த சித்திரப்பாவையைப் பார்த்து, நானுமக்குப் பொருளாகத்தோன்றவில்லையோ, என்சொல் லுமதுசெவிக்கேற வில்லையோ! நான்படிந்துபர நீரறியாததோ, உமதுமனமென்னகல்லோகடிதோ இரும்போ எழுகோ என்னுடன் வார்த்தையாடினல் உமதுவாய்முத்தம் சிந்தி விடுமோ, ஆபத்துநீக்காவிட்டாற் பாபத்திற்கிடமன்றோ? என்மேற்கோபத்தை வைக்காதிரும், நான்கொண்ட சோபத்தைத்தீர்த்தருளும், சோலைக்கண்ணு றையும் வாலைப்பருவக்குயிலே! என்மனமிரங்கப்பேசிப் பக்கத்தில்தங்கிய பாங் கியனைநோக்கி அடி தாதியரே! இந்தப் பெண்மணியோயார்! இவருக்கென்ன பேர்! இவரெந்தவூர்! இதுவரையிலும் நானறியேனே, நீங்களாராவதுஞ்சொல் லுங்களென்று கேட்டான். அவர்களவனுக்குப் பயந்து ஐயா! இந்த வண்ணம கள் உங்கள் தமக்கையிடத்திற் பத்துமாதமாய் வேலைக்கமர்ந் திருக்கின்றன ளென்றனர்; அந்த வாசகங்கேட்ட கீசகன் ஊழியஞ்செய்ய வந்தவள்தா னே யென்று இலேசாகவே நினைத்துக் காமத்தீப்பெருக்காற் கருகியுருகி, நாணங்கொண்டொடுங்கி முகங்கோணித் தன்முன்னின்ற விரதசாரணிபாதத் தில்வீழ்ந்து, என்னுவியே! நான்மகாபாவியே! என்னைக்கொல்வது உமதுஆசை வசனுவியே! நான் வசந்தகால வண்டைப்போல் உமது வாய்மலரிற் சுரக்குந் தேனையுண்டு, பிரமானந்தங்கொண்டேமேன்மைபெறவிரும்புகின்றேனே. உமக் குண்டாகிய வழகும், அந்தவழகுக்கேற்ற பருவமும், அப்பருவத்துக்குரிய வுருவமும், அவ்வுருவத்திற்கிசைந்த காந்தியும், அக்காந்திக்குத்தக்க சாந்தியு முண்டாயிருந்தும் உமக்குத்தகுந்த ஆண் நாயகனில்லாமையால்உமதுதாலம் அநியாயமா யகன்றுபோமன்றோ; ஐயோ! நானுமக்குடன்பாடாகிய கிரீட்டி, நீரெனக்கிசைந்த கண்ணுட்டியே! அடிசீமாட்டி! பெண்ணுகப் பிறந்தவர் உம்மழகைக்கண்டு பின்றொடரவேண்டுமே; அலங்காரமென்பன வெல்லாம் உமக்கலங்காரமாயமைந்த அடிமையே; இவ்வளவு நிறைவுற்றிருக்கு முமக்கு மெனக்கும் என்னகுறைவு? நாம்பேசிக்குலாவிக் கூடுவதேயுறவு. உமக்கு வேண்டிய நவரத்தினுபரணங்களும் கட்டுவர்க்கங்களும் பட்டுவர்க்கங்களும் பொற்பாத்திரங்களும் பொருள்களுந்தருகிறேன்; எனக்கெவ்வளவு மோகங் கொடுப்பீரோ அவ்வளவு போகங் கொடுக்கிறேன்; நித்தியம் உமதுத்தரவின் படி நடக்கிறேன்; சத்தியம்பண்ணித் தருகிறேன். சற்றேனு மனமிரங்க வேண்டுமென்று எத்தனையோகோடி உபசாரவார்த்தைகள்சொன்னுன். அத் தனைமொழிகளுக்கும் எள்ளத்தனைப்பேச்சும் பேசாமல், ஓர்மரத்தினேரமாய் மறைந்திருந்து ஆ, கீசகா! பாவமாகிய மூட்டையும், பழிப்பாகிய கேட்டை

யும் பாசப் பெருங்கோட்டையும் ஏன்கட்டித் தள்ளுகின்றனை? ஏழைப்பெண் பாவத்தைஏன்தொட்டிக்கொள்ளுகின்றனை; இம்மைப்பயனைவீணேயே யொழிக்கின்றனை; மறுமைப்பயனையழிக்கின்றனை; இம்மைமறுமையிரண்டையுநினைக்கவில்லையோ; ஏதோ, விபரீதமாய்நினைத்த வீண்நினைப்பையு மாற்றவில்லையே; நற்குடிப்பிறப்பையும் போற்றிலே; நாடாத காரியங்களையே நாடுகின்றனை; விறுதாவாகிய சொற்களையும் படிக்கின்றனை. அந்தோ! இந்தப்பேச்சு உன்னுடனற்றுப்போவதா யிருக்கவில்லையே. பல மன்னரும் வெகுவாகிய ஆன்மகோடிகளும் வந்தொதுங்குகின்ற சந்திரவட்டக் குடைநிழலையுடைய விராடராசனது பெருமைக்கும், அவனது புகழுக்கும், அழிவுதேட ஏற்பட்டாற்போ லு மிருக்கின்றதே! முடிவுகாலத்தைத் தேடிக்கொண்ட மூர்க்கனே; விவேகமற்ற வெறியனே! மன்மதபாணமாகிய நெருப்புக்குப்பயந்து, மகாபதிவிரதைகள் வயிற்றெரிச்சலாகிய வடவாமுகாக்கினியில் வீழ்ந்து, வாழ்நாளழிந்து மாளப்போகின்றனை, அடா பாவி! சிறந்த மரபிற் பிறந்தவர் தம்முடலழிந்தாலும், பிறர்மனை பிறர்பொருள் இவற்றைவிரும்பமாட்டார்களே; வாய்புழுக்கவசைமொழி சொல்லார்களே; நொய்யவுரையார்களே; நொந்தகண்ணாலும்பாரார்களே; அவர்களைத்தான் மிக்காரென்று துதித்தும் தக்காரென்று மதித்தும் சாத்திரங்களிற் பேசியிருப்பது. நீ இழிந்த பிறப்புள்ள ஈனனாகையால் தூர்ப்பாஷைகளையேறக்குறையப் பேசினை. அவைகளையெல்லாஞ் சுதக்கணையைப்பற்றி மனம் பொறுத்தேன். அம்மட்டும் உன் தூர்ப்புத்தியை விலக்கி நற்புத்தியைத் துலைக்கினால், தொல்லுலகி லின்னுஞ் சிலநாளிருந்துவாழ்வடையலாம், இல்லாவிட்டால் நமனுலகஞ்சேர்ந்து நரகத்திலாழ்வாய்; என்னை நீயாரென்றே நினைத்தாய்? தேவபுருடர்களாகிய ஐவருடைய காவலிலிருக்கின்றவள். அத்தேவர்களுக்கு முனக்கு மிருக்கிற பேதத்தையே யோசித்துப்பார். உன்னடக்கையை இதுவரையிலு மவர்களறியார்கள்போ லு மிருக்கின்றது. அவர்களிலொருவனாகிய வீரபோச னென்னுமேலோ னறிந்தானாயின் கண்மூடித் திறப்பதற்கு முன் உன்னுடல மண்மூடிப் போய்விடும்; உன்னுயிரு மொழிவாய். அடா, காலாந்தகா! என்று காமவேதனை மேற்கொண்ட கயவனுக்கெதிரில் நாமம் வேறுகொண்ட நாயகி பேசிமுடித்தனள்.

அந்நாசகாலனாகிய கீசகனுக்கு ஆசைநோயதிகப்பட்டுக், கூசுதலற்று வண்ணப்பெண்ணைநோக்கி, உன்னைப்பார்த்தகண்ணுக்குமற்றொருபெண்ணைப் பார்க்க, எண்ண மில்லையே; என்னிரு கண்ணணியே; அதற்கிசைந்த மணியே, அம்மணியினொளியே, ஒளியிடத்தின் வெளியே! இந்திர லோகத்திற்கொப்பாய்ச் சந்திரமண்டலத்திற்கப்பாலளாவிய என்மாளிகையைத் தருகின்றேன்; அம்மாளிகை நிறைந்த சாளிகை தருகிறேன்; சகல வநுபவ வதிகாரமுந்தருகிறேன்; நானுமுனக் கேவல்செய்யவருகின்றேன். என்னையும்விட்டோரஞ் சொல்லலாமா! என்னிட்டதெய்வம் போலாண்டருள்; ஆரணங்கே! உன்னன்புள்ள கருணைப்பார்வையால் எனக்கு விபரீதத்தை விளைத்த காமப் பேயையோட்டிவிடு, என் கலக்க மயக்கத்தை மாற்றிவை, நான் கடைத்தேறத் தேற்றிவிடு; கலவியமளியை யேற்றிவிடு, உன்சிறுநகை நிலவினால் என் புத்திம

ருண்ட மோகவிருளையும் பிரகாசிக்கப்பண்ணி மன்மதன் கணை துளைத்த என் மார்பிற்புண்ணுக்கு மதமேறியதனத்தாலொத்தடம்போடு, கரங்களிரண்டாற் கட்டியிறுக்கு, என்னுள்ளுக்கு மருந்தாய் உன்னிதழமுதமூட்டு, உயிர்போய் விடும், எனக்குன்னுறுதிமொழிசொல்லி மதப்பயல்சண்டைக்குவந்து முன் னில்லாமல் என்னைத் தடுத்தாட்கொள்ளும். சரணஞ்சரணம் பெண்களுக்குச் செல்வமே! என்றிவ்வகையாகவணங்கு மென்னை இன்னுனென்றறிந்துகொள்; இந்திரன்முதல்யாவரையும்தந்திரத்தில்வெற்றிகொள்ளுஞ்சுந்தரமுடையநான், திரிபுவனஞ் சேர்ந்தெதிர்த்தாலும், அபசயமடையமாட்டேன்; இளமைப் பருவத்தில் மாரன், வளமைச்செல்வத்திற் குபேரன், கல்வியிற் சேடன், கல வியில் விசேடன், நன்மைக்குவந்தவன், நானுந் தன்மைக்குத் தகுந்தவன், இந்த மச்சதேசத்தில் நான்வைத்தது பிச்சை. இந்நாட்டரசனுகிய விராட ராசனை மேன்மையாயெண்ணுதை; அவனென் தமக்கைப்புருடனுகையாலும், சிங்காதனத்திலேறி யிருப்பதற்கு எனக்குச் சாவகாச மில்லாமையாலும், இவனை இவ்விடத்திற்கு முடிசூட்டி நிலைநாட்டி ஆள்காட்டிபோல் வைத் திருக்கின்றேன். அவனுல் ஒன்றுமில்லை; எல்லாமென்னுலிருக்கின்றது, என் பெயர்சொன்னுல், மராடமுதலியகருநாடகமுநடுங்கும். ஆதலால், நானெரு வனைமதிப்பதுமில்லை, துதிப்பதுமில்லை; என்மகிமையை நீநன்ருகவிசாரிக்கவு மில்லை. உனக்கு எது வேண்டியிருந்தாலும், நீயெப்படி நடத்தவேண்டியிருந் தாலும், உனக்கேவல்செய்யப் பார்த்திருக்கிறேன். நீ வண்ணப்பெண்ணென னுஞ் சின்னத் தொழிலை விடுத்து,என்னைப்படுத்தே மேன்மையாயிருக்கலாம். நீயெனக்கு வசப்படுவீராகுல், இடபத்துவசனுகிய முக்கண்முதல்வனைப் பூசித்துப் பிரமோச்சவம் பண்ணிவைக்கிறேன்; யானிதுவரையிலும் பண் ணிய புண்ணியங்களை உமக்கே தத்தஞ்செய்கின்றேன்; உடல் பொருள் ஆவி மூன்றையுமுமக்கே யொப்பிக்கிறேன். உம்மாசையால் மோசம்போகின்றேன். நான்கொண்ட மோகலாகிரி தலைக்கேறியே விட்டது. இக்காம மயக்கத்தைத் தணியாவிட்டால் என்னுடலு முயிரு மொருங்கேபோய்விடும்; அதனுலுமக் கும் பாவஞ் சம்பவிக்கும். பருவரதியே! நான் மெத்தப் பெரியமனிசன்; மே ன்மையாக வாழ்ந்தேன்; காமக்குழியில் கால்தவறிவீழ்ந்தேன்; மோகக்கடலி லாழ்ந்தேன், ஆதரவற்றலைந்தேன், ஆசைவலையாலுலைந்தேன், ஐயோ! என்ன றிவுதொலைந்தேன். நீயென்னுயிர்க் குறுதியாகித் தெப்பம்போற் கைகொடுத் துக்கரையேற்றவேண்டும். கலாநிதியே, நிலாமதியே, சீவசஞ்சீவியே,தெய்வப் பிரசாதமே, கருணைப் பிரவாகமே, காந்திப்பிரவாளமே! உனக்கு மேலாகிய புண்ணியமுண்டாகும்,இனிநான்என்னசொல்லப்போகின்றேன்; தன்னந்தனி யனுகியநானென்னசெய்வேன்? உமதுசித்தமென்பாக்கியம். தருமத்தையெண் ணித்தயவுசெய்துஇனிஎன்னைக்காக்கவேண்டும்; என்மனமோபதைபதைக்கின் றது. என்னுடலோ துடிதுடித்துச்சோர்கின்றதே; என்பொறியோடுபுலன்கல ங்குகின்றதே; என்புத்திவிலங்குகின்றதே; பிராணனெடுங்குகின்றதே, நான்பி ழைத்தபிழைப்பெல்லாம்வீணுய்ப்போயிற்றே,பிறருக்குநகைப் புண்டாயிற்றே; உள்ளமுருகுகின்றதே; உடலங்கருகுகின்றதே, உயிருமுலைகின்றதே,உரையுங்

குழலுகின்றதே. ஆகா, பெண்ணமுதமே! உமதரவிந்தபாத மலர்க்கடைக்கல மென்றே நம்பினேன் நம்பினேனென்று வெம்பிவீழ்ந்து; அவ்விரதசாரணியின் காலடிப்பொடியில் இவன் தலைமுடி படும்படி யாகத்தாழ்ந்துகண்டவண்ண மெல்லாம் பிதற்றிநின்றான்.

அப்பொழுது, வண்டுமொய்க்குங் கூந்தல்விரிந்த மாதரசி, கைநெரித்து முகத்திற் கடுமைகாட்டி-அடா, கொலைப்பாதகனே! ஆசாரமில்லாதவனே! உத்தமகுலத்திற்பிறந்தும், உயிர்வாழ்க்கையி லிருந்தும், சிறிதுமெண்ணுமற்போனுயே, பாத்திரமில்லாத சூத்திரசாதியாயும், அரசமாதருக்குப் பணிவிடைசெய்பவளாயும், தாழ்ந்த நிலையிலிருக்கின்ற என்மேலாசைப்பட்டுமோசம்போய்ப் பேசுவதும் உனக்கு நாசகாலமன்றோ? அடா கீசகா! ஏழையாகிய எனக்குக் கொடுக்கின்றேனென்ற செல்வங்களைஉன்குலத்துக்குரியபெண்களுக்குக்கொடுத்து, அக்கினி சான்றாக மணம்புரிந்துகொண்டு, கலந்துண்டு அழகாயிருக்கலாமே, கந்தருவர்கள் இன்பத்தைவிட்டுவிட்டுவயிறுவளர்க்கவந்துமாறுவேடங்கொண்டு, தலையும் பம்பை, இடையுங்கந்தை, இக்கோலமான என்னை விரும்பியேனுசை கொண்டாய், வானுசைகொண்ட மாபாதகனே! ஓமகுண்டத்தமுதென்றெண்ணுமற் கலங்குகின்றாயே, உயர்ந்த பொருளுக்குத் தளர்ந்தாசைப் படுகின்றாயே. அடா, துன்மார்க்கனே! புத்திமானுகிய வொருவன் தான் மணம்புரிந்த மனைவியைத் தனியேவிட்டு அன்னிய மாதர்களைநாடி, அவர்கள் காலடியில்வாடிக்கிடப்பதும் அழகன்றே; அக்கினிசான்றாகச்செய்த சத்தியந் தப்பினவர்களுக்கு இம்மையில் வாழ்வுமாறுமே, மறுமையில் நரகமீறுமே, எப்பிறப்பினும்பழிபாவம் அபகீர்த்திஇவைகளுமேறுமே; ஐயோ! நான் சொல்வதைக்கேள்; பரமாதர்மேல் மையல்கொள்வதும் அநியாயமே, அம்மையலால் விளைவதும் அபாயமே, இக்கருத்துநோக்கியே பெரியாரும், "புக்கவிடத்தச்சம்போதரும்போதச்சம்,துய்க்குமிடத்தச்சந்தோன்றாமற்-காப்பச்சம், எக்காலுமச்சந் தருமாலெவன் கொலோ, உட்கான் பிறனில் புகல்" என்றும் கூறியிருக்கின்றனர். ஆகையால் எக்காலமும் அச்சமும் துன்பமுமே சேரும், இதுவோ தொல்லை, இன்பமோ இல்லை; அன்றியும், அன்னியமாதர்கள் தங்களை விரும்பியநாயகனுடையஇன்பத்துன்பத்திற்கு உரியராகவேமாட்டார்கள். அதேதெனின், தங்களைச்சேர்ந்தசோரநாயகனிறந்தானுயின், அவனுக்குக்கருமக்கிரியை முதலாகிய சிரார்த்தங்கள்செய்ய அதிகாரமேயில்லை; அவள் கருப்பங்கொண்டுபெற்ற பிள்ளையும் தந்தைவழிக்கிசைந்த கருமச் சடங்குகளைச் செய்யவொண்ணுது; அப்பிள்ளையினுல் வமிசவிருத்தியுமாகாது; ஒருவேளை வமிசவிருத்தியாயினும் தந்தைகுலம்நசித்துப்போம்; அபிமானத்தால்வந்தஇம்மைந்தன் தலையெடுத்து மேம்பாடடையான், இவனெவ்வளவு செல்வம் பெற்றிருந்தாலும், எருமைச்சாணம்ஐக்கியத்திற்காகாதென்பதுபோற்பயனிலதாம்; குலத்திற்கொண்ட குரங்கானுலும், குறைசொல்வதற் கிடமேயிராது; வேதவிதியும் நீதிமுறையும் பேசகமாட்டாது; திதிமுதலிய பிதுர்க்கடனுக்கும் அதிகாரியாவான். இவற்றையெல்லாம் ஓதியுணர்ந்த கோத்திரத்தானுகிய நீ,சாதியிலிழிந்தவர்போற் பேசுவதும், இட்டமாகத் தேடுவதும், உன்குலத்திற்குரிய

ஒழுக்கமன்றே; முடவனுக்குக் கொம்புத்தேன் எட்டுமோ! மூடனுக்கென் அன்புத்தான் கிட்டுமோ! ஓமூர்க்கனே! நானொரு விரதம்பற்றி இவ்விடத்தில் வந்திருக்கின்றேன்; என்பேரோ விரதசாரணி; நீ தப்பு நினைப்புக்கொள்ளவேண்டாம்; சாகவே யெண்ணவேண்டாம், முன்னாளில் சீதையையெடுத்துச் சென்று சிறையில்வைத்து, உண்ணுமல் தின்னுமல், ஊருக்கவலமாய்ப், புத்திர மித்திர பௌத்திராதிகளோடு நிர்மூலமாய்ப்போன இராவணன் சரித்திரத்தையும் கேட்டறியாயோ? இந்நாட்டிலேயோ! உனக்குமதுவேகதி; உருள எண்ணியதே தலைவிதி, நீஎன்னசெய்வாய், என்னைமணம்புணர்ந்த கந்திருவர் ஐவர்; அவரோ மிக்கபேராற்றலுடையவர், என்விடயத்தில் தீங்குசெய்பவர் தலையைப்பனங்காய்போல் உருண்டலைய, ஓங்கிய விற்பிடித்திருக்கின்றனர்; இவ்விரகசியத்தை நானுனக்குச் சொல்லவேண்டிய அவசியமேயில்லை. ஆயினும், விராடராசன் பத்தினியாகிய சுதக்கணையையடுத்து, அவளன்னம் புசித்தேவருகின்றமையினால் நன்றிகுன்றுமற்சொன்னேன். கெடுவான்கேடுநினைப்பானென்றால் இன்னமுங்கெடுவேன் பந்தயமென்ன வென்பதுபோல், என்னை விரும்பி அற்பவார்த்தைபேசுகின்றனை; துர்ப்புத்தியைவிட்டுவிடு. வாய்க்கடங்காப் பிடிபிடித்து மண்டையுடைந்து மடியவேண்டாம், என்னண்டையடைந்து துடியாதை, என்னுடன் பேசத்தான் அத்தெய்வலோகத்தாரும், திடுக்கிடுவார்கள். அப்படியிருக்க, நீ பயமில்லாமற் பேசினையே; பாவி! எனக்குரிய கந்திருவர் இப்பொழுது இந்நகரத்திலிருக்கின்றவரே; அவர்க்குப்பகைவரில்லை, சில சமயத்தில் பகைவர்கள் ஆகாயத்திற் பதுங்கினாலும், அலைகடல்மூழ்கியொதுங்கினாலும், பாதலத்தில் மறைந்தாலும், பூதலத்தி லுறைந்தாலும், திக்குப்பாலருடையபேருதவிபெற்றாலும், நவக்கிரகங்களின்நன்மையுற்றாலும் பிரமன்முதலிய மும்மைப்பெருந்தேவர்துணை நேர்ந்தாலும் அவருயிரையழிக்காமல் விடார்கள். ஆகையால், நீ என்பொருட்டு உன்னினத்தாருடன் மடியவேண்டாம்; காமபாசத்தினற் கொழுத்து எமபாசத்தையிழுத்துக்கழுத்தில் மாட்டிக்கொள்ள வெண்ணுவானேன், அப்பால் கண்ணீர்சொரிந்து கலங்குவானேன், எரியுநெருப்பை யெடுத்து முடிவானேன், கரிய விடத்தைக் கண்டு குடிப்பானேன்? தன்வலியும் மாற்றான்வலியும் எண்ணுல் தவிக்கின்றனையே. இதுபற்றியே "வினைவலியுந்தன்வலியு மாற்றான்வலியுந் துணைவலியுந் தூக்கிச்செயல்" என்று பெரியாருங்கூறியிருக்கின்றனர். அடா சண்டாளா! அப்பாலகன்றுபோடாவென்று கெட்டியாய்க் கூவி யெட்டிநடந்தாள்.

இவ்வாறு அட்டதிக்கும் வெற்றிக்கொடி நாட்டிய பட்டாபிடேகப் பாண்டவர்தேவி பாஞ்சாலி ஏசக்கேட்ட கீசகன் திடுக்கிட்டுச் சோர்ந்து அவளையடுத்துப்பின்சென்று, கையால்தடுத்து முன்னின்று, ஆகா! என்னுசைக் கனியே, உமக்குரிய கந்திருவரால் என்னுயிர்போனாலும் போகட்டும்; என்னெண்ணங் கைகூடினாலும் கூடட்டும்; உமது கருணைப்பார்வை யென்மேலிருக்கட்டும். நீர், வேண்டுமென்று நினைத்தால், எம்மையுங்காத்து உம்மையுமீத்துக்கொள்ளலாம்; அப்பாலுமதுசித்த மென்பாக்கியமென்று கீசகன் பேசினன். அப்போது கூரியவேற்கண்படைத்த வண்ணப்பெண்ணே மலர்வாய்

வறண்டு, கோபங்கொண்டு, இனி இப்பாதகனுக்கெதிரில் நிற்கப்படாதென்று தூதுளங்கனிவாயும், முத்துப்போன்ற பல்வரிசையுமுடைய சுதக்கணை எதிரோடி, நடுங்கியதேகமுந் தேய்ந்தே ஒடுங்கியவுயிரும், நாணமும்மானமும் நாவறட்சியுங்கொண்டு, குருசந்திர யோகத்திற் பொழியு மழைபோல் கண்ணீர் விட்டுச், சித்திரப்பாவைபோல் அத்தகவடங்கித்திகைத்துத், தேம்பித்தேம்பி நின்று கடுங்கோபக் கண்ணையுடைய பட்டத்தியானைமேற் பவனிவரும் பார்த்திபன் பத்தினியாகிய தாயே! நமது பூந்தோட்டத்திற் பூப்பறித்துக்கொண்டு திரும்பிவரும்போது, வீரகண்டைதரித்தஉன்தம்பிசொல்லாதவார்த்தைகளைப் பலவாகவெடுத்துச்சொல்லிப் பொல்லாதஎண்ணங்கொண்டுதூரத்தினன். உன்னிடத்தில் நானூழியஞ்செய்ய வரும்போது, நான்கொண்டிருக்கும் விரதமும் கந்திருவரைவர்காவலும், என்னை இச்சித்தவர்களிறப்பார்களென்றும், உனக்குறுதிமொழிசொல்லியிருந்தேனே; இப்போது வீணாய்வாணாளழியவழிதேடிக்கொண்ட உன்னுடன் பிறந்தானுக்குப் புத்திமதிகள் போதித்துச், சரச சல்லாப சுரத லீலைகளைச்செய்யும் தாசிகளை யழைத்துவந்து, அவன் தலைக்கேறிய காமத்தைத் தணித்துவையும்; சத்தியந்தவறாமற்புத்தியாயிருக்கச்செய்யும்; உத்தமியாகிய நீர் முன்சாக்கிரதை படாமற்போனால், என்சாக்கிரதையில் நான் முந்தியிருப்பேன்; அதனாலவனுயிர் சிந்திப்போய்விடுமே; இச்சொல்லை யுண்மையாகவே நம்புமென்றனள்.

அத்தையலுரைத்த சங்கதியைக்கேட்ட சுதக்கணையோதன்னிருகையையுநெரித்து, வயிற்றைப்பிசைந்து, சந்திரபிம்ப முகமலர் தளர்ந்து, கேகயப்பறவைபோற்கொஞ்சிப் பேசுகின்ற சொல்லுங் குழறி, மயிலுக்கொப்பான சாயலுமாறி, அன்னம்போன்ற நடையுமயர்ந்து, கோடையிடியைக் கேட்ட பாம்பென்ன வொடுங்கி, வசலைக்கோடிபோல் வாடிவதங்கி, வெதும்பி, விம்மி, வியர்த்து, வண்ணமாமகளை யணைத்துக்,கண்ணீர் துடைத்து அம்மா! வாரும்; என்னருகேவந் துட்காரும்; அவன்கெட்டான் கொடியதுட்டன், உம்மைத் தொட்டானா? அதற்காக, நீர் பயப்படவேண்டாம்; அம்மட்டும் பாவிகையில் அகப்படாமல், தப்பிவந்துவிட்டதே நான்செய்தமகாபாக்கியமென்று, அருமை பாராட்டி, அவ்வழகியசீமாட்டியுடன் பேசிக்கொண்டிருக்கும்போது, துரத்திக் கொண்டுவந்த காமாட்டியாகிய கீசகன், பணிப்பெண்ணாகிய அம்மடந்தையைப்பார்த்துச், சுதக்கணையைப் பணிந்து, அம்மா! உன்னிடத்திலிருக்கின்ற வண்ணப்பெண்ணால் என்உயிர்போவதேதிண்ணம்; எனக்குநேரிட்ட சோபத்தைநீக்கி, ஆபத்தைக்காத்து உன்கோபத்தை மாற்றவேண்டும்; அன்னையே! நமதுபூந்தோட்டத்தில் இவளைக்கண்டேன்; மோகங்கொண்டேன். மாஞ்சோலைக்குயில்கூவ, மன்மதன்கணைதாவ, அதனால்மனம்வேக இச்சிதேவிகாலில் விழுந்தேன்; உடனேயென்னை ஆதரிக்காமல், சிச்சீமூதேவியென்று முகத்தாலிடித்து விடவிடத்துப்பேசினள்; படபடத்தேசினள். வீணாயழியப்போகின்ற நான் இவளுடன்கூடி, இன்பநுகர்ந்து இவளுக்குச் சொந்தமானகந்திருவர்கையால் மாண்டுபோனாலுஞ் சுகிர்தமுண்டு. ஐயையோ! இவளைச்சேராவிட்டால், எப்படியும் நான் நமனுலகஞ்சேர்வேன். நான்மாண்டால், உன்கணவனுடைய

அரசாட்சியும் பறக்கும்; பகைவர்கள் மேலிடுவர் என்றுசொல்லி மிகுந்த வணக்கமாகப் பணிந்துவேண்டிக்கொண்ட அக்கீசகன் முகத்தை நெருப்பைப் போற் பார்த்து, அவனுக் கிடங்கொடுக்காமலே அதட்டி ஆமடாவென்று கறுவி; அடாபாவீ; என்ன வார்த்தைபேசினாய் ஆ! கொடியாய்! அரிகரியென்று, இரண்டு காதையும் பொத்திக்கொண்டு, மானம் பெரிதென்று மதித்தவருக்கு பிராணன் துரும்பென்றே புத்திமான்க ளெண்ணுவார்களே. புத்தியீனர்கள் பிராணனைப்பொருளாக நினைத்து மானங்கெடவயிறுவளர்த்து, அப்பிராணனைச் சிலநாளில்இழந்துவிட்டு, மண்ணுள்ளவரையிலும் வரிசையிலழிந்து, விண்ணுள்ளவரைக்கு மிகுநரகிழிந்து, வேறுவேறு யோனியிற்பிறந்து, தாறுமாறுயலைந்து சங்கடப்படுவரோ! ஐயோ! துரோகி. இச்சைரந்திரியோ என்னிடத்தில் வரும்பொழுதே தனக்குமானக்கேடு வாராமல், பெற்றதாய்போற் காப்பாற்ற வேண்டுமென்றும், தன்னை யாரேனுஞ் சிந்தித்து நிந்திப்பாரானால், தனக்கு நாயகராகிய கந்திருவரால் அநர்த்தம் விளையுமென்றும், தானொருகாரணத்தின் பொருட்டுச் சிலநாள் கழிக்கவேண்டுமென்றும், உனக்கு நானடைக்கலமென்றுஞ்சொல்லியிருந்தனளேநானுமவ்வாறே வாக்குத்தத்தமும்பண்ணி, விராடராசன்முதலிய வேந்தர்களாலும் மற்ற மாந்தர்களாலும் பொல்லாங்கு வரவொட்டாமல், பெண்பழி, பெண்தோடம் பேசவொட்டாமல், என் கருப்பத்தில் வைத்துக் காப்பதுபோல் இதுவரையிலும் கண்ணுண்டாய்க் காத்துவந்தேனே, அடா துரோகி! நீ என்கட்டுக்காவலையுங்கடந்து, என் பெயரையுங் கெடுத்து நீ எங்களையு நடுத்தெருவிலிழுத்துவிடுத்து உன்னுயிரையு நமனுக்குக் கொடுத்து விராடராசனது செங்கோலையுங் கொடுங்கோலாக்கி, நிட்டூரத்தாற் கட்டப்படுமார்க்கத்தை இலேசாகத் தேடிக்கொண்டனையே, அடா தீவினையாளனே! இது உனக்கழகன்றே; அறிவன்றே; என்சொல்லைநம்பிப் பேசாமற்போய்விடடா, தம்பிஇப்பெண்ணணங்குக்குக் கண்ணாகியகந்திருவர்கள், கருடனுக்கும் காற்றுக்கும்மேலான வேகமுள்ளவர்களாமே; வருணனுக்கும் இந்திரனுக்கும் மேம்பட்டவல்லமையுள்ளவர்களாமே; அக்கினியையும், சூரியனையும்பழிக்கும்காந்தியுடையவர்களாமே, அவர்களுடையகோபாவேசத்திற்கு மூன்றுலகமுந்தாங்கமாட்டாதாமே; இவ்விருத்தாந்தங்களை நான்முன்னேயறிந்திருக்கின்றேன். நீபிழைக்க மனமுள்ளவனாயின், இப்பெண்மேற்கொண்ட மோகத்தைக் கனவிலு நினையாமல் மறந்துவிடு. மறவாவிட்டால், வீணே கெட்டழிந்து போவை; ஆ! மிகுபழிகாராவென்று சுதக்கணை சொன்னாள்.

அம்மொழியைக்கேட்ட கீசகன் விந்தையாகச் சிரித்துச் சிந்தைநொந்து என்தந்தைக்கொப்பாகிய தமக்கையே என் ஆற்றலறிந்திருந்துந் தெரியாதவர்போற் பேசுகின்றீரோ. அவ்வளவு ஆற்றலுடையவர்களாகிய கந்திருவர் பதினாயிரம்பேர் ஒன்றாகத் திரண்டுவந்தாலும், என்னோடெதிர்த்து என்னைப் பகைத்தும்வெல்வார்களோ? நானொருவருக்குப்பயந்தவனோ? அவர்களைப் பஞ்சுபோலடித்துத் தென்றிசைநோக்கிப் பறக்கவிடுத்து இவளிதழைக்கடித்து இன்பாசங்குடித்து என்னெண்ணமுடித்து உன்னெதிரிலேநகைத்து உலாவிவிளையாடப் போகின்றனனே! யான்துன்பப்பட் டிறப்பேனென்று நீசொல்லியது

பேதைமதியோ பெரியவளென்னப்பெயர்வைத்துக்கொண்டனையே! போபோ வென்றுநொடித்தீ நல்லதம்மா! அந்தப்படியே யிருக்கட்டும்; நீ பெண்ணாகப் பிறந்திருந்தும் எனக்குத் தமக்கையெனப் பேர்பெற்றிருந்தும் மனைவாழ்க் கையில் நன்றாய்ச்சிறந்தும் பெண்களுக்கு வேண்டிய சிறந்த காரியங்கள் ஒன் றாயினு முனக்குத் தெரியவில்லையே; உலகிலுள்ள பெண்களின் குணநிச யத்தையும் அந்தரங்க ரகசியத்தையும் நீயறியாமற் பேசினையே; மாதர் களின் சுபாவகுணமென்னவென்றால், 'கைக்கிறைந்த பொன்னிலுங்கண்ணி றைந்த கணவனே போதும், என்றெண்ணுவர். அன்றியும் பெற்றவனானாலும், உடன்பிறந்தவனானாலும் தான்பெற்ற பிள்ளையானாலும் அழகுடையனாயிருந் தால், முறைபாராமலே அவனை அம்மாதர்கள்மோகங்கொள்வர்; அழகிலும்இன் சொற் சொல்வதிலும் பருவத்திலும் உருவத்திலும் சங்கீத சாகித்தியத்திலும் யாவராலு மதிக்கத்தக்க நாயகன் வாய்த்திருந்தாலும், அம்மான் பிள்ளை அத்தைபிள்ளையா யிருந்தாலும், அப்படிப்பட்டவர்கள்மே லாசையைவிட்டு அன்னிய புருடர்மே லிச்சைப்படுவது பெண்ணுருவாகத் தோன்றிய பேதை மையுடையோருக் கியற்கையென்றே பெரியோர்கள் பேசி யிருக்கின்றார்கள். இதுபற்றியே. "தந்தையாயினும் விழைவிற்றன்னுடனே யொருவயிற்றிற் சார்ந்தாரேனும், மைந்தராயினு மிகவும்வனப்புடைய ரெனிலவர்மேன்மட நல்லார்தஞ், சிந்தைநடந்திடு மதனாற்சாம்பன் மலர்க்கணைவேளிற் செவ்வி வாய்த்தோன், பைந்தொடியாரினித மருமுவளகத்திற் றனிவருதல் பான்மை" என்றும். "ஏந்தெழின்மிக்கா னிளையானிசைவல்லான், காந்தையர்கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த, நயனுடையின்சொல்லான் கேளெனினுமாதர்க், கயலார்மேலாகுமனம்." என்றும் இன்னும் பலபெரியோருஞ் சொல்லிய வாற்றான் மாதர்கள் விவத்தையற்றவர்க ளென்றும்; மாதர்களை நம்பப் படாதென்றுஞ் செப்பி யிருக்கின்றனர். ஆகையால், நீ இவட்குப்போது மான புத்திமதியைப் போதித்து, என்னைக்கலந்து இன்புறச் செய்வது உனக்குரிய கடமையையென்றுங் கெஞ்சினான். இவ்வாறுகெஞ்சிய கீசகனைச் சுதக்கணை நோக்கிப் பஞ்சமாபாதகனே! சிறிதேனும் நாணமேயின்றி அயலி லிருக்கும் பாங்கிமாரையும் பாராமல், என்னிடத்தில் இப்பேச்சை பேச லாம் பேசப்படாதென்றும் எண்ணாமல் துணிந்து பேசினை யன்றோ? நீ என்னகதி யடைவையோ, என்னபாடுபடுவையோ? சைரந்திரிமேற்கொண்ட மோகாக்கினியில் தனக்குத்தானே வீழ்ந்திறக்கின்ற விட்டிற் பூச்சிபோலா வையோ? நீயுமுன்னைச்சார்ந்தவரும் எவ்வாறாவீரோ? பசிக்குப்பனம்பழந் தின்னப்பார்க்கவே வேண்டாம்; துட்டகாரியங்களைத் தொடங்கிக்கெட்டுப் போனவரோ கோடானுகோடியுண்டு; அடாமட்டி! என்னுடன் பிறந்தவர்கள் நூற்றைந்து பேரென்னுங் கணக்கு இன்றைக்கே யொழிந்ததுபோலும்; குட்டாயிருந்தகட்டுங்தளர்ந்ததே; காவலழிந்ததே;போங்காலமாயிற்று;சாங்கா லம் வாய்த்ததே; இப்போது உன்னையு மிழந்தவளானேனே; இனிஎன்தலைவா மிதிக்கவேவேண்டாம். என்னெதிரிலு நிற்கவேண்டாம், நீ செத்தாலும் நான் முகத்தில் விழியேன்; அப்பாற்போடாவென்றே யதட்டினாள். அப்போது

பாவபுண்ணிய மெண்ணிப்பாராத பாவியாகிய கீசகன் கோபமேலிட்டுக் கொதித்துச் சோபதாபத்துடன் தன் மாளிகையே நோக்கிச்சென்றான்.

போம்போதே சுரமும் குளிரும் சோம்பலும் தும்மலும் தேம்பலும் திகிலு முடையவனாய் ஆகா! பணிப்பெண்ணாகிய பாதகி என்னையுங்கெடுத்தாளே. பாம்பின்வாய்ப்பட்ட தேரையாக்கினாளேயென்று பரிதாபப்பட்டு மூச்சுத்திணரிப் பதைபதைத்தான். அவ்வேளையில் மன்மதனே பிரவேசித்து இதுதான் நல்லதருணமென்றூநடிக்கொள்ளைக்காரனைப்போற் பஞ்சபாணத்தையெடுத்துக் கொஞ்சமேனும்நெஞ்சிரக்கமேயின்றித் தொடுத்தான். அதனாற் கீசகன் சிந்தையழிந்து, செயல் வேறுபட்டுத் தட்டுக்கெட்டுத்தடுமாறி மெத்தையின்மேற் பொத்தெனவிழுந்து, ஐயோவென்னும் அவச்சொல் மிகுந்து அரண்டுபுரண்டு அவத்தைப்படும்போது, தாதியர்கூடிச் சயித்தியோபசாரஞ் செய்தனர். எத்தனைவித வுபசாரம்பண்ணியும் அத்தனையும் அவனுக்கு வெறுப்பாயிருந்ததனால் ஐயோ! இம்மலரணை வெதுப்புகின்றதே! வாசப்பனிநீர் கொதிக்கின்றதே! சந்தனச்சேறு தழல்போல் தகிக்கின்றதே! அடிபாங்கிமாரே! நீங்களெல்லாரும் பெண்ணாகையால் ஒன்றாகச்சேர்ந்துகொண்டு என்னைப் புண்ணாக்கவோ அன்றி மண்ணாக்கவோ பாலைநிலத்தின் நெருப்பை மெத்தையென்றே பரப்பி வைத்தீர்களே? சிற்றாலவட்டம், பேராலவட்டம், பொன்னாலவட்டம், பூவாலவட்டமென்று வகைவகையாய்ச்சொல்லி வீசுகின்றீர்களே; இவ்வாலவட்டக்காற்றும் சாளரத்திற்புகுந்து பெரும்புலிபோற் பாய்ந்துவருகிறதென்றலும்கூடிவாசுகிமுதலாகிய பாம்புகளின்விடக்காற்றுப்போல் என்னுடலையு முயிரையும் வாட்டுகின்றனவே; ஓசைப்பட் டொலிப்பதென்ன கடலோ, அக்கடலுக்கென்மேலென்ன அடலோ! இளஞ்சந்திரன் காய்கின்றதே, இதென்ன வடவைத்தீயின் வரவையோ? கோடைக்காய்ச்சலிற் சூரியவேதையோ, இம் மாலைப்பொழுது வந்ததென்ன காளவிடக்கறுப்போ, மகாதேவன் நெற்றிக்கண்ணெருப்போ, இரவுமூடி எத்தனைகால மாயிற்றோ; பொழுது விடியாமலிருக்கும்படி பெண்கள்கூறிவிட்ட சாபப்பேச்சோ, வண்ணப்பெண் முகச்சாயல் வந்துபாய்கின்றதோ, மதிதானெழுந்து காய்கின்றதோ, நித்திரைபிடியாதது சித்தப்பிரமையோ! ஏகமாய்வருவது மோகவாசனையோ, அல்லது அவள் தேகவாசனையோ! நான்கொண்ட காமவேதனையோ! அவள் கடைக்கண் சோதனையோ? அம்மம்மா! அவள் குரலோ, குயில்போற்கூவி யேசுவது; அவள் மொழியோ? கிளிபோலத் தூறிப்பேசுவது; என்னை மோகப்பேய்பிடித்துத் தலைசுற்றியாட்டுகின்றது; காமச்சோகபாசங் காலனூருக்கோட்டுவது; அடி தோழிகளே! அங்கே பேசுவதாரடி? பஞ்சவன்னக்கிளியோ? கொஞ்சும்பணிப் பெண்ணளியோ? அவ்விடத்திலசைந்து நடப்பது அன்னமோ? இவ்விடத்திலிசைந்த தலைவாயிலைக்கடப்பது விரதசாரணியாகிய சொன்னமோ? என்று அன்றிரவுமுழுதும் அவன்பட்டபாடு மற்றியார்தான் படுவார்கள்? இவ்வகையாக விபரீதம்விளைந்த சமையத்தில், ஊழியப்பெண்கள்யாவருஞ் சேர்ந்து ஐயோ! ஈதென்ன அநியாயமென்று பயந்து சந்தனபாளித படீர குங்கும பங்கச பராகங்களைக்கலந்து,

அவன்தேகத்தில் தெளித்துத் தாமரைக்கொழுந்து முத்துச்சரம் வாழைக் குருத்து முதலிய சீதள வஸ்துகளினால் படுக்கையைவிரித்துப் பக்குவம் பண்ணினர். அத்தனையுமவனுக்கு ஒத்துக்கொள்ளாமன் மெத்தவருத்தப் பட்டு எரிகின்றதே! மேனிபொரிகின்றதே! கண்ணீர்சொரிகின்றதே! கைகால் கரிகின்றதே! கண்களிருளுகின்றதே! கருத்துமருளுகின்றதே! கட்டுவிட்டுப் போகின்றதே! நாவும் புலர்கின்றதே! நாபிவறள்கின்றதே! செவியுமடைக்கின் றதே! சிரமோவுடைகின்றதே! யென்றுகதறிக்கொண் டிருக்கும்போதே பேச் சடங்கிப்போயிற்று.

பக்கத்திலிருந்த பத்தினிமார்களும் பாங்கிமாரும்பார்த்து, ஆயிற்று ஆயி ற்று பெருமூச்சு வாய்த்தது வாய்த்தது பேச்சும்போயிற்று பிழைமோச மாயி ற்றென்று கதறி இனிமேல்நாம் சும்மாவிருப்பது காரியமல்லவென்று பத் திப் பாவிபடும்பாடு இவ்வண்ணமுடிந்ததே யென்று கண்ணீர்விட்டழுது, தெய்வத்தைத்தொழுது, இவனினைத்த நினைபோபழுது, இதுசொற்பமாகத் தக்கதன்றென்றே பலவாறாகப்பேசி, அப்பால்யாவரும் தங்கள் மேற்பழி சாராமல், எசமானிக்கறிக்கையிடவேண்டுமென்று கால்பதறவோடி அரசபத் தினியாகிய சுதக்கணையைப்பணிந்து குலக்கொடியே! தேவரீர் கோபித்துக் கொண்ட கடுமையினால் கூசாமற்சென்ற கீசகராசன் படுக்கைமேல்வீழ்ந்து, காமத்தீயாற்கருகி மோகக்காற்றால் மொத்துண்டு பித்தலும்பிதற்றலு முடை யானுய்ச் சிந்தைவாடிவருந்தித் தலையெடுக்கமாட்டாமல் தன்னையுமறந்து அர ட்டலும் புரட்டலுங்கொண்டு அயர்ந்துபோய்விட்டான். எங்களாற்கூடிய வுபசாரமெல்லாஞ்செய்தும் பார்த்தோம். ஏதேது தேறுவதாகக்காணோம். காமக்கடலூ டழுந்தியேபோனான்; இனிக்கரையேறுவா னென்று கனவிலும் நினைக்க வேண்டியதேயில்லை. ஆனால் உடன்பிறப்பென்னுங் கருணைபெருகி அதனால்உமதுள்ளமுருகியே சீவகாருணியஞ்செய்யஇரங்குவீராயின்,இன்னுஞ் சிலநாளைக்குக் கீசகராசனிருப்பானென்றே ஒருவாறெண்ணலாம். அவனுயிர் பெறுவானாயின், விராடநகர்ப் புரிசையும் நமதுவாழ்க்கையாம் வரிசையும் குறைவுபடாமற் கண்டுமகிழலாம். எங்களைப்போன்ற ஏழைக் குடும்பங்க ளுங் காலங்கழிக்கலாம். அப்படியிராவிட்டால், கீசகனுக்கு நேரிட்ட கெடுதி வெளிப்பட்டவுடனே பகைவர் மேலிடுவார்கள். பலவகையான விரோதங்க ளும் விளையும். அதனால், நமதுமச்சநாட்டின் வட்டமும் பச்சைக்கொடி நாட்டிய பட்டமும்போய்விடும். அப்பாலுங்களை யண்டிய நாங்களும் பிச்சை யெடுத்துப்பிழைக்கநேரிடும். கொச்சைமொழிமானே! இனிமேல் வினைச்செய லெவ்வண்ணமோ அறியோம்; தாயே! என்றுகையை நெரித்துக்கொண்டு,கண் ணீர்விடுத்துச் சுதக்கணை கால்மேற்படுத்துக் கதறிப்பதறியழுதனர். அப்படி கண்கலங்கிய பாங்கியரைப்பார்த்துச் சங்கதியென்னடியென்று கேட்டனள்.

அப்போது அவ்விடத்தேநின்ற பாங்கிமார் அம்மா! பின்னொன்றுமில்லை, கருங்குவளைக் கண்ணையுடைய வண்ணப் பெண்ணாகிய நுண்ணிடையாளை வசப்படுத்தி எப்பாடுபட்டாயினும் கீசகனிடத்திற் கனுப்புவீராயின் அவன்

கொண்ட வெறியும் கடுங்காதற்குறியுந் தனக்குத்தானே தணிந்துபோய் விடும்; போனபிராணனு மீளும்; அவன்மனைவிமார்களு மங்கிலியத்தோ டிருப் பர்; இப்படிப்பட்ட விபத்து எப்பொழுதும் வந்ததேயில்லை. இப்போதுநே ரிட்ட இத்தத்துக்குத்தப்பிப்பிழைக்கும்படி நீரோ சாந்திசெய்யவேண்டும் எம். மரசியே! இவ்வேளை நீ ரிரங்காமற்போனால், இப்போதோ? இன்னுஞ் சற்று நேரத்தோ? பொழுதுவிடியுங்காலத்தோ? கீசகனுயிர்நீங்கும், ஊழியராகிய எங் கள்மேற் குற்றஞ்சொல்லவேண்டாம். எங்களால் உபசரிக்க வேறுவழியுமில்லை யேயென்று பாங்கிமாருரைத்தனர். அப்பசப்புமொழியைச் சுதக்கனைகேட்டுத் தோழிமாரே! ஆசைப்பட்ட பாவியாவது, வேறுபெண்கள்மே லாசைப்படலா காதா? ஐயோ! மோசம்வந்துவிட்டதே. கந்திருவர் காவலிலடங்கிய தெய்வப் பெண்ணை நானெப்படி வசப்படுத்தியனுப்புவது; அப்படிச்செய்வதோ நன்மை யன்றே; ஒருவேளை யனுப்புவித்தால், மோகாந்தகனாகியபாவி மேல்விழுந்து தொந்தரை செய்வானாயின் இந்நாடும் நகரமும் குலமும் கோத்திரமும் குடி யும் படையும் குன்றிப்போய்விடுமே. நானென்னசெய்வேன்; சகிமாரே! கெடுவழியிற்பிரவேசிக்கலாகாது. என்மனத்திற்குச் சஞ்சலமென்னுந்தழலை மூட்டினீர்களேயென்று முகத்திலும் வயிற்றிலும் அறைந்துகொண்டு கலாப மயில்போ லசைந்து கலங்கினாள். அப்பொழுது வஞ்சகனாகிய கீசகனுடைய தாதிமார் அரசவஞ்சியைநோக்கி, அம்மா! நீரேன் அஞ்சுகின்றீர்? பெண்ணென் பதெல்லாமொன்றே; நாமெல்லாம் மாதரினமேயன்றி வேறன்று; மானமென் பது யாருக்குமுண்டு; கீர்த்தி அபகீர்த்தி எவர்கட்குமுள்ளதே. இவ்விட யத்தைக்குறித்து உமக்கும் உம்முடைய கணவனுக்கும் பொல்லாங்கு நேரிடு மாயின், எங்களுக்குத்துன்பமுந் துயருமில்லாமற் போமோ? நீங்கள் நன்மை யாயிருந்தாலன்றோ எங்களுக்கு மின்பமுண்டு. நாங்கள் நீங்காமல் கீசகன் பக் கத்தி லிருக்கும்போது வேறுவித்தியாசமும் விளையுமென்றே நினைக்கின்றீரா? அப்படிநினையாதீர். எங்களுயிரை விட்டாலும் விடுவோமேயொழிய அபகீர்த் திக் காளாக்கமாட்டோம்; அவனுடைய அக்கிரமத்திற் கிடங்கொடுக்க மாட் டோம். எங்கள்மொழியை நீர் உண்மையாய்நம்பும்; நாங்கள்செய்யப்போகின்ற தந்திரத்தைக்கேளும். இவ்விரதசாரணியை யழைத்துப்போய் அவன் முன் னே நிறுத்தி இவளைச்சுற்றிலும் நாங்கள் நின்றுகொண்டு இதோ வந்தாள் வண்ணமாதென்போம், இச்சொல் அவன்செவியில் விழுந்தவுடனே மோகினி யைக் கண்டமுனிபோ லெழுந்து இவளுடைய கான்மேற்பணிந்து கண்ணே பெண்ணே யென்று புலம்பிக்கதறுவான்; காமவேட்கையாற் பதறுவான்; அண்டையிலிருக்கின்ற நாங்கள் அவனைத்தடுத்து ஐயா! உமதுடம்பு வேறு பட்டிருப்பதனால் நீராடி சந்தனம் புழுகு சவ்வாது பனிநீர்சாந்து கதம்பக்கல வையுந் திமிர்ந்து, போசனமுண்டு, தாம்பூலந்தரித்து ஆபரண வலங்காரத் துடன் பழவருக்கங்களும் பட்டுப்பட்டாவளியும் புட்பச்செண்டுங்கொண்டு இப்பெண்ணுக்குக் கொடுத்து உல்லாசப்படுத்திச் சல்லாபமாய்ப்பேசுமெ ன்று அவ்வல்லாளன் புத்தியைமாற்றித் தேற்றி உடனே இச்சைரந்திரியை உம்மிடத்திற் கனுப்பிவிடுகிறோம்; அம்மா! பெருநெருப்பை ஈமொய்க்குமா?

இரும்பைச் செல்லரிக்குமா? எவ்வளவும் வித்தியாச மெண்ணவேண்டாமென் றுறுதியாகச் சொல்லினர்.

இவ்விடத்தில் உறுதியாய்ப்பேசிய சேடிமார்களைச் சுதக்கணை பார்த்து ஆமடி பெண்களே! நீங்கள் சொல்லுவதும் பக்குவந்தான். இவ்வாறுநடந்தால் எவருக்குந் தோடமில்லை; அவனுயிருக்கும் நாசமில்லை; ஒருவேளை கரைபுரண் டவெள்ளம் அணைகடந்துபோனாலெப்படி? நீங்கள்தா னென்னசெய்வீர்கள்? நான் பாவியாய்ப்பழிகாரியாய்விடுவேனே. அன்றியும் கட்குடியன் காமுகன் பொய்யன்பொறாமைக்காரன்புறங்கூறுபவன் கள்ளன் ஊராருடைமைக் குலை வைத்திருப்பவன் வறியன் மூடன் முதலிய இவர்களுக்குச் சத்தியம் சவுசம் ஆசாரம்சாந்தம் தன்மை உண்மைஆணையாக்கினையொன்றுமிராதே. இப்படிப் பட்டமூடர்கள் சற்றும் யோசிக்க மாட்டார்களே; மோகக்காற்றும்காமத்தீயும் முடுகிவரும்போது, கைகொண்டு மறிக்கப்போமோ? தடுக்கப்படுமோ? சொல் லுங்கள் தோழிமாரேயென்று, தருமந்தவறாத சுதக்கணை சொல்லும்போது, அக்கீசகனிடத்திலிருந்து வேறுதாதிமார்க ளோடிவந்து எப்படி என்செய் வோம்! மைப்படிந்தகண்ணுளாகிய மதனரதியே! உன்மேலாணைப்படி கீசகன் முடியப்போகின்றான்; காலங்கிட்டிவிட்டது. சாலம்பண்ணாமல் இச்சைரந் திரியை யனுப்பும், ஆபத்திற்குப்பாவமில்லை; இத்தருணத்தில் நீரவனைக்காக்க வேண்டும். இவ்வண்ணமகள்மேல் அவன்கைப்படவொட்டாமற் செய்து, இவள்பதிவிரதாதன்மத்தையுங்காப்பாற்றி உங்கள் சத்தியத்தையுங் கீர்த்தியை யுந்தழைக்கப்பார்க்கிறோம்; கிருபைசெய்யுமென்று பல்லைக்காட்டிக்கெஞ்சினார் கள். அத்தாதிகள்பட்ட பரிதாபத்தைப் பார்த்த சுதக்கணை காலகதியாற் கரு த்துமயங்கி, ஊழ்வினைவசத்தா லுணர்வுமழிந்து அந்தோ, அடாபாபி, கீசகா! பாசகாரிகளாகிய ஐம்புலன்களின் சேட்டையறிந்து, கேட்டையொழிந்து, தேறித்தெளிந்த பாக்கியவான்களின் வாக்கியங்களைக் கற்றும், யோக்கியமா கக்கேட்டும் இன்னுந் தெளியாமற் போயினையே; மன்மதவேதமார்க்க மகி மையும் பார்த்திலையே; ‘கேடுவரும்போது மதிகெட்டுவருமென்பது’ போல் நாசம்வரும்போது ஞானமும்உண்மையுங்கெட்டு நன்மையும்விட்டுப்போமோ! மழைக்கா லிருட்டானாலும், கொம்புதவறிக் குரங்குபாயுமா? புலிபசித்தா லும் புல்லைத்தின்னுமா? சிங்கஞ்சிறுத்தாலும் பங்கப்படுமா ; யானைமாமிச மன்றி வேறாகாரந் தீண்டுமோ என்றழுது ‘தானாடாவிட்டாலும் தன்தசையா டும்’என்னும்பழமொழிக்கிணங்கச் சகோதரபாசத்தான் மனவருத்தமடைந்து, நெஞ்சுபுண்ணாய்க்கொட்டிய பஞ்சுபோற்படிந்து, கண்மாரிசொரிந்து தன்ன ருகில்வந்தபணிப்பெண்க[illegible] மேல்வணங்கித்திருந்திய குலத்திற்பிறந்து அரு ந்ததியினுஞ் சிறந்ததேவியே! நீர், கண்ணருள் செய்வீராயின் எங்கள்செங்கோ லும் வாழ்வும் நீதியு நெறியும் சீருஞ் சிறப்புங் குறைவுபடமாட்டா. தேவரீர் கிருபைசெய்யாவிட்டால், எங்களரசுரிமையாவும் அழிந்துபோய்விடும்; எங்கள் தலைமேலிடிவிழாதிருப்பதற்கு உமதுவாய்மொழியைப் பார்த்துக்கொண்டிருக் கின்றோம். நீர் ஆமென்றொப்புக்கொண்டால்நாங்கள்பிழைப்பதற்கிடமுண்டாம். நீர் ஒத்துக்கொள்ளாவிட்டால் நாங்களடியோ டழிந்துபோம்படிநேரிடும். நான்

பேசப்போகின்ற வசனத்தைப்பொறுமையாய்க் கேட்டருளுமென்று விராடராசன் பத்தினி சொல்லத்துணிந்தனள்.

என்னுயிருக் கொருதுணையே! எனக்குத் தம்பியென்று பிறந்த வம்பன் அறிவில்லாச் சிறுவனாகையால், மனவுறுதியில்லாமல் மதனவெறி யேறிப்போனானும்; மதிமயங்கிப் பிணமானானும்; இதுவரையிலும் உயிரிருக்கின்றதோ? இல்லையோவென்று தாதியரோடிவந்து செய்திசொல்லினர். காமம்வெகுளிமயக்கமென்னுமூவாசையு மொழிந்தமுநிவோரையும்பெண்ணாசையோவிடாது. பிரபஞ்ச மாயை யென்பதோ இதுதான். நான் மகாபாவியானேனே. நீரென்மேற் கோபியாதிரும். உமதுவிரதங்குறையாமல் பதிமார் மெத்தப்பிரயாசப்படுவோமென்றே எனக்குச் சத்தியவசனமுஞ் சொன்னார்கள். அப்படி சொன்ன போதிலும், மகாபாதகனாகிய கீசகன் அடாதகாரியமாக உம்மைநாடியாசைப்பட்டதும் அபிப்பிராயம். ஆயினும், உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். இவ்வாபத்துக்காலத்திலிரங்கி அடியேன்முகத்தைப்பார்த்து என் மனத்துயரத்தையும் அவன்படுகின்ற துன்பத்தையும் போக்கும் வகையை நீர் எண்ணவேண்டும்; உமது கற்புக்கும்பழுதுவராமல், என்னையும் புனிதவதியாக்கி, அவனையும் பிழைக்கும்படி கிருபைசெய்தருளும். நீரிவ்வளவு சீவகாருண்யம் வைத்து எங்களைக் காப்பீராயின், உமது குலமும் கோத்திரமும் குணமும் நீர்கொண்டிருக்கின்ற நோன்பும் குறைவுறாமல் மேன்மேலும் விருத்தியாகும்; உலகுள்ளமட்டும் உமது மகத்துவமும் நிலைநிற்கும். எங்கள் நூற்றைந்து பேரையும் பெற்றுவளர்த்தாயென்றே நாங்கள் கொண்டாடுவதுமன்றி; உலகத்தாரும் புகழ்ந்து மகிழ்ந்து வாழ்த்துவர். தினமுந் திருவிளக்கேற்றிவைத்து, எங்கள்குலதெய்வமென்றே உம்மைக்கும்பிடுவேன்; மிகமேலாகிய உன்பத்தினித்தவத்திற்குப் பங்கம்வரும்படியாகப் பார்க்கமாட்டேன்; நானும்மை நம்பினேன்; எனக்கொருவருந் துணையேயில்லையென்று சொல்லிக் கதியில்லாத அடியேனுக்கு உன்னிரண்டுபாதமே கதியென்று பணிந்து, அவள் காலைப்பிடித்துக்கொண்டு, துணிந்தாளொருத்தி ஒன்றுநினைத்திருக்கின்றேன். அது உன் சித்தத்திற் கெப்படியிருக்குமோ? தெரிகிலேன்; சிறியேனாகிய என்மொழியைச் சிந்தையிற் கொண்டருளவேண்டும், நாசகால வழியைநாடி மோசம்போய்க் கிடக்கின்ற அக்கீசகனிடத்திற்குச்சென்று வாசமலர்மாலையுந் தேனும் உன் தமக்கை வரிசை யனுப்பினாளென்று கொடுத்து வருவீராயின், என்னிட்டம் உம்மைவிட் டெப்பொழுது மகலாதென்று மிக்கவருத்தத் தோடுரைத்தும், இவ்வுத்தமியை யனுப்புவதற்குச் சற்றுமனமேயில்லாதவளாய்க் கவலைகொண்டிருந்தனள்.

இத்தன்மையாகச்சொல்லிய விராடராசன்மனைவியை நோக்கிக் கற்புக்கணியாகிய பாஞ்சாலி என்னை ஆதரிக்கத்துணிந்த அன்னையே! உம்முடைய தம்பியாகிய கீசகன் அற்பவிடயத்திற் காசைப்பட்டுப் பூந்தோட்டத்திலிருந்த என்னைத் துரத்திவந்தபோது, நீர்கடுமையாகப்பேசியவார்த்தையாற் கொல்லத்தக்க பகைகொண்டுசென்றான். அவனுடையகருத்தோ உமக்குநன்றாய்த் தெரிந்தேயிருந்தும், அவ்விடத்திற்குப்போவென்றெவ்வாறு சொல்லுகின்றீர்;

அவன்பா லென்னையனுப்ப நினைப்பதும் உமது மேலானபுத்திக் கழகன்றே! நானும்மிடத்தில் வந்தடுத்தபோது, என்மேலொருவர் காதல்கொள்ளப்படாதென்றும்,கொண்டால்,உடனே உயிரிழக்கவே வேண்டுமென்றும் முன்னமே சொன்னேனே;அப்படியே குறைவுவாராமற்காக்கின்றேனென்றுவாக்களித்து அதுமுதல் இதுவரையிலுந் தளர்வின்றிக்காத்து இப்பொழு தச்சண்டாளனிடத்திற் கனுப்ப எப்படி உமது மனந்துணிந்ததோ? அறியேனே; அப்படியேயாகட்டுமென்று உமது வார்த்தையைத் தள்ளாமற்போவேனாகில் அக்கொடியோன் என்னைக் கண்டவுடனே காதல்மீறிக் காமமேறிக் கைகலக்கத் துணிவானே; அப்போது நான் கைகலக்கப்படலாமா; அப்பால் விருதாவாய் அநர்த்தம் விளைந்துபோமே; 'மறந்து செத்தேன் பிராணனே வாவென்றால் வாராதே' ஆகையால், அவனிடத்திற்கென்னையனுப்புவதைநிறுத்திவிட்டு,வேறெந்த வேலைக்கனுப்பினாலும், உமது சொல்லுக்குத் தடைசொல்லேன். இவ்வேளையிலென்னை விலக்கிவிடும்; என்னைப்போல இன்னும் அநேக தாதிமாரிருக்கிறார்கள்; அச்சௌந்தரியவதிகளிற் சிலரை யனுப்புவது உத்தமமாயிருக்கும்; என் மர்மத்தை யுமக்குச்சொல்லிவிட்டேன். அப்பால் உமதிட்டமென்று சைரந்திரிசொல்ல, அதற்குச் சுதக்கணை சொல்லுகின்றாள், விரதனைசாலியே: உம்மைக்கண்டு, ஆசைப்பட்டு, உயிரொழியும்படியா யுமக்கம்கொண்டு படாதபாடும்படுகின்ற பதிதனுக்கு மற்றொருபெண்ணைக்கண்டுபேச இச்சையுமுண்டாமோ, அப்படியன்றென்றனுப்பினாலும், உம்மேற்கொண்ட மோகம்மற்றொரு பெண்ணால் மாறுமோ? உமதுருக்கண்டாலும், உமது இன்சொற்கேட்டாலும், இறக்க வழிபார்க்கும் கீசகன் எழுந்திருப்பானென்று சொல்லுகிறார்களே; என்னிட்டமே! நீர்பட்ட கட்டத்தோடுசென்று திரும்புவதே என் பாக்கியம்; நீடூழிவாழ்விர் நீர் போய்வந்து, எங்களை நிலைபெறச் செய்வீரென்றாள். இவ்வகையாக வணங்கிப் போகத்தகாத காரியத்திற்குப் போகச் சொல்லிய சுதக்கணையைப் பேரறிவாலும்பிசகாமொழியாலும் பெருமையாலுமுயர்ந்த பாஞ்சாலி பார்த்து மேதினிபோற்று மாதரசே! கொடிய பாதகனிமித்தமாய்க்கொடியவார்த்தையைக்கூசாமற்சொன்னபடியால்,உமதுசொல்லைத்தள்ளக்கூடாததாட்சண்யத்தின்பொருட்டேசெல்கிறேன்.பின்னாலென்ன கெடுதிவிளையுமோ? அன்னமே! சொன்னேன்;என்னையும்வெறுக்கவேண்டாம்; இதுவரையும் தழைத்துவிளங்கிய சுற்றத்தாருக்கும் மற்றையோருக்கும் மெத்தவருத்தமேமேலிடும்போலிருக்கின்றது. 'கெடுமதிகண்ணுக்குத்தோற்றாது' என்பதையெண்ணாமல் காலாநுகூலத்திற்குத் தகுதியாய் நீருமிப்படி கட்டளையிட்டிருக்கிறீர். அப்படியேநானும்போய்வருகிறேனென்றுசொல்லி, வினையின்பயனே பயனென்றெழுந்து, முத்துப்போல் கண்ணீராவடித்து முகஞ்சோரவிட்டு, வாசமலர்மாலையுந் தேனுங்கைக்கொண்டு, அந்தப்புரவாயிலுக்கு வெளியே வந்து நின்று தேவேந்திரன் வாயுதேவன் எமதருமராசன் அச்சுவனிதேவர்கள் இவ்வைவரையுஞ்சிந்தித்து எசமானியுத்தரவைக் கடக்கக்கூடாமையால், நாசகாலக் கீசகன் வாசத்தலத்தை நாடிச்சென்றாள் என்று வைசம்பாயனர்சொல்லினர், அதற்குச், செனமேசெயன்வைசம்பாயனராகிய

எமது சுவாமிகளே! பாஞ்சாலி விரதசாரணி யெனவேடங்கொண்டு சுதக்கணை யிடத்துக்கு வந்தபோது, கந்திருவனாவர்தனக்குக் கணவனென்றும், மற்றவர் தன்னைத் தீண்டப்படாதென்றும், கண்ணெடுத்துப்பார்த்தவர்கள் வெண்ணீறாய்ப் போவரென்றும் ஒருதரத்திற்குப் பத்துத்தரமாகச் சொன்னதாகத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளினீர். அப்படியிருக்க,ஆசானு பாகுவாகிய மச்சராசன்மனைவி நீதிநெறிகெட்ட கீசகனிடத்திற்கு இவ்வன்னையை யனுப்பியவகை யென்ன? அச்சுதக்கணையை மெத்தவும் புத்திசாலியென்றே கற்றவராகியநீரும் புகழ்ந்து பேசிவந்தீரே; அவள் புத்திசாலித்தனம் எத்தன்மையாய்ப்போயிற்றென்றுஜெனமேஜயமகாராஜன்வினவ, அதற்குவைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர். சன்மார்க்கர வினைவசத்தால் வந்த அனுபவத்தை யாவருமனுபவித்தேயொழிக்கவேண்டும், அனுபவியாமல் வெல்லவல்லார் ஒருவருமில்லை. இன்னும்வீமன்கையால் அக்கீசகன்முடியவேண்டியகாரணமுமிருப்பதனால், பாஞ்சாலியைப்பார்த்து அவனுசைப்படவும்இவளையவனிடத்திற் கனுப்பவும் சமயத்திற்குத் தக்கபடி தாதிமார் சொல்லவுநேரிட்டது. ஆதலால் மேல்நடந்த விர்த்தாந்தத்தைக்கேளென்று சொல்வாராயினர்.

இப்பால் பூமாலையுந்தேனுங்கொண்டு சென்ற பாஞ்சாலி முன்னே நினைத்துவந்த ஐந்து தேவருடன் சூரியன் குபேரன் வருணன் உருத்திரன் உருத்திரை மகாவிட்டுணு மகாலட்சுமி சண்முகன் பிரமன் நாமடந்தை இவர்களையுந் தனக்கு வழித்துணையாக வரும்படி வருந்தித் துதித்துச் சத்துரு சங்காரஞ்செய்யும்படிவந்தித்துவேடன் வீசியவலைக்குள் அகப்படப்போகின்றமானைபோற் கண்களிரண்டு மிரண்டு வெருண்டு, நாற்புறமுந் தேடிப்பார்த்து இருட்டிலுண்டாகிய பயத்தினாலும் நாணத்தினாலும் விதிர்விதிர்த்து மெய்சிலிர்த்து, இராசவீதியாகச்சென்று அக்கீசக னரண்மனையிற்புகுந்து, மெய்ம்மறந்து தூக்கமும், ஊக்கமும்விட்டு, அன்னபானுதிகசந்து, அவத்தையா லுள்ளுடைந்து விரதசாரணியைப்போல் தனக்கெதிரில் உருவெளித் தோற்றங்கண்டு வாய்பிதற்றிக்கொண்டு நாவறண்டு புரண்டுருண்டுகிடக்கின்ற பேயனைக் கண்டனள். அப்பொழுது மோகத்தாற் சிதைந்து, மோசவலையிற் புதைந்து கிடக்கின்ற கீசகன் எப்படியிருக்கின்று னெனின் தனக்கு அகால மிருத்துவாகப் பூங்காவில்நேரிட்ட மங்கையையே நினைத்துப் புன்னகை நகைத்து இதோ, என்மேற் பாசங்கொண்ட ஆசைப்பெண் வந்தாள்; என்னுன்மாவைக்காக்கும் அமுதசஞ்சீவிவந்தாள்; சிவகாருணிவந்தாள்; மூதமான அஞ்ஞானகேவலத்தைப்போக்கும் ஞானசொரூபி வந்தாள்; சித்தசன் தொடுங்கணையை வெற்றிகொள்ள வந்தாள்; ஆசைக்கடலுளமூழ்கிய நான் ஆதரவாகப்பற்றி நீந்திக்கரையேறுவதற்கே அமுதமயமான கொங்கைக்குடங்கொண்டு வந்தாள்; என்னை அடிமைகொண்டாளு மங்கைவந்தாள்; இருநிதிப் பொக்கிடச் செல்விவந்தாள்; பட்டாபிடேகத் தேவிவந்தாள்; என் சீமாட்டிவந்தாள்; சுன் கண்ணுட்டி வந்தாளென்று சரச சந்தோடச் சைகைகாட்டித் தலையாட்டி இன்றெனக்கு நல்லகாலம். என்னுடைய சிறுகுடிலில் நல்லவர்கள் திருவடியெயர்த்தருளப் பெற்றேன். சைரந்திரியாகிய தனமே! தேவரீர் செங்கமல பாதமுஞ்சிவ

க்க நடந்ததோ! 'அடிசேடிமார்களே ஓடிவாருங்க ளோடிவாருங்கள். நான்பிற ந்தபிறப்பு இன்றுதான் பயன்பட்டது,இதோ என்னெண்ணப்பெண் வந்தாள்; இவர்வந் தெந்நேரமாகின்றது? ஒதுங்கி நிற்கவேண்டிய காரணமென்ன ? உப சாரஞ்செய்து உள்ளேயழையுங்கள்; வாசங்கலந்தபனிநீர் கொண்டுவாருங்கள்; நீராடிவையுங்கள், பத்தரைமாற்றுப் பசும்பொன்னிறூற் சித்திரித்த உத்தரியப் பட் டுடுத்துங்கள்; இந்திரவன்னப்பட்டு வெண்பட்டு செம்பட்டு இவைகளா லமைந்திருக்கிற பாவாடை இரவிக்கைகளைக் கும்பிட்டுக் கொடுங்கள்; முத்து மாலை மோகனமாலை ஆணிப்பொன்மாலை அல ர்ந்தபூமாலை மாணிக்கமாலை வச்சிரமாலை மரகதமாலைஇம்மாலைகளாலலங்கரியுங்கள்; புனுகுசவ்வாதுகதம்ப கத்தூரி பனிநீர் அத்தர் சந்தனாதிகளைப் பூசுங்கள் ; அறுவகைச்சுவையுணவும் கனிவர்க்கங்களும் இச்சையானமட்டுந் தின்னக்கொடுங்கள்; வழிநடந்துவந்த இளைப்பாற்றுங்கள். ஓகோ! விரதசாராணியென்னு மின்னே! என்மேலன்பு வைப்பதற்குஇத்தனைகாலமுஞ்சென்றதோ?வாரும்வாரும். என்மஞ்சத்திலுட் காரும், வாடிப்போன என்முகத்தைப்பாரும், உம்மைநாடிவந்த என்மோகத் தைத்தீரும். இதனாலுமக் கதிகபுண்ணியமுஞ்சேரும். இன்பரசமே! இனியசு கமே! எனப்புலம்பி, மூடியகண்ணை விழித்துப்பாராமல், முரணிக்கொண்டி ருக்கின்ற மூர்க்கனைப் பாஞ்சாலிபார்த்து நம்மைக்கண்ணிறூற்காணுதபோதே கண்டபாவனையாகப் பேசிக்கலங்கும் உலோபி நம்மை எதிரிற்கண்டால், என் னசெய்வனோவென்று மனங்கலங்கிப் பெருமூச்செறிந்து இப்பாதிராத்திரியி லிவனைப் பார்ப்பதைப்பார்க்கிலும் பொழுது விடிந்தபின்பே காணலாமென்று அழகிய பூஞ்சோலை நெருங்கிய தடத்திற்புகுந்தாள். அச்சமயத்தில் ஒருகா லுள்ள தேரைக்கூட்டி மின்னற்கொடி நாட்டிப் பரிமாவேழும்பூட்டி இரு காலில்லாச் சாரதியோட்டி உதயகிரியி னுச்சியினீட்டிக் கதிர்க்கிரணங்களை க்காட்டி முக்காலும் அருக்கியமேற்குஞ் சூரியனை எக்காலுங் கொண்டுவரு வதுபோல் வாராமல், அக்காலையி லவசரத்துடன் கிழக்குத்திசையில் அரு ணன் கொணர்ந்துவந்தான்.

முருக்கம்பூப்போன்ற சூரியோதயங் கண்டவுடனே செருக்கியெழுந்த சேவலும் பட்சிகளும் தறிதலைக் கீசகன் பிதற்றிய சங்கதிகளைச் சகிக்கமாட் டாமல், சங்கடப்பட்டுப் பரதவித்துத், தியங்கித் திட்டுவதுபோல் சிறகு களினால் வயிற்றிலடித்துக்கொண்டு கூவிப்பறந்தன; தடாகமென்னும் பெண் பாஞ்சாலி சஞ்சலத்தைப் பார்க்கமாட்டாமற் கண்ணீர்பெருக்கிக் கண்க ளைச்சுருக்கிக் கையைவிரிப்பதுபோல், கருங்குவளைமுதலிய பூக்கள் குவிந்து தாமரை மலர்கள் தேன்சொரிந்து விரிந்தன; மகாபாவியாகிய கீசகனையிகழ் ந்து பாடுவதுபோல் வண்டோலமிட்டது. இத்தன்மையாகிய காலத்தில் தேங்கு மா கோங்கு பலா கமுகுமுதலிய மரங்களோங்கும்வனஞ்சூழ்ந்தஒரு பொய்கையினிடத்தில் பாஞ்சாலிசேர்ந்து, கைகால்முகங்கழுவிக்கொண்டுநித் தியவிதிநிறைவேற்றிச்சூரியனுக்குஅருக்கியம்கொடுத்துவிட்டு இருகரத்தையுங் கூப்பி நின்று மந்திரஞ்செபித்துவணங்கினாள்.அஃதெவ்வாறெனில், உலகெலா ம்விளக்குமொருபெருஞ்சோதியாஞ்சர்வசாட்சியே! தனிப்பரம்பொருளே!பாவ

மும் புண்ணியமும் பரிகரிக்கும்பருதியே! புத்தியுஞ்சித்தியும்பொருத்துமாதபனே! சத்துருசெயந்தருமித்திரவெயிலோய்! உத்தமகுணமும்சுத்தமும் வீடும் வித்தகக்கல்வியும்மேம்பட்டசெல்வமும்பத்திசெய்வோர்கட்கித்தனைப்பேறும் பாலித்தருளும் பாபரகிதனே; எந்தையே போற்றி; இரவியேபோற்றி; சுந்தரச்செங்கதிர்ச் சுடரேபோற்றி; ஆயிரங்கிரணத் தலரியேபோற்றி; இருள்வலிகெடுக்கும் இனனேபோற்றி; தினகரவெய்யோய் தினமணிபோற்றி; பங்கய பதங்கப் பரிதியேபோற்றி; பனிப்பகைபானுப் பகலோய்போற்றி; மித்திரவிருச்சிக விண்மணிபோற்றி; சித்திரபானுதிவாகரபோற்றி; அண்டயோனி அரியமால்போற்றி; அருக்கனனலி யருணனேபோற்றி என்று துதித்து நான் சுதக்கணை சொற்பிசகாமல், கீசகனிடத்தேபாற்கிட்டுகிறேன்; இவ்வேழைக்குத் துன்பமுங்கெடுதியுந் துயரமுமெய்தாமல் என்றும் இன்பங்கொடுத்தாளென்றாமொளியே! உன்னைத்தொழுவேற்குத் துன்பமென்பதில்லாமல், இந்நகர் மன்னனுக்கிடர்விளையாமல்விராடன்மனைவியும் விசனமுறாமல்என்குலதெய்வமாயென்றுமிருந்துதன்மங்காத்தருள் சத்தியமணியே! சரணஞ்சரணஞ்சவிதா சரணம். சான்றோய்சரணம். தரணிசரணம். தருணந்தருணமென்று பிரதக்கணஞ்செய்துவணங்கிப் பூமியைத்தொட்டு நெற்றியிற்பொட்டிட்டுச் சலம்புரோட்சித்துச்சங்கற்பமுஞ்சொல்லித், தற்சனியைவைத்துச்சற்றுநேரமிருந்து தடாகத்திலிறங்கி ஆசமன்ய முடித்துக்கொண்டு கரையேறிக் காமவிகாரத்தாற் கன்றிவருந்திய கீசகனிருந்த நெடுமனைகிட்டி நமனையெதிர்ந்த உயிர்போல்மெலிந்து ஐயா! உம்முடையதமக்கையார்தந்த பூவுந்தேனும் இந்தாவென்றுகொடுத்து அவன்மாறுத்தரஞ் சொல்லுமளவும் வேறோர்புறத்திலொதுங்கியிருந்தனள்.

அவ்வேளையில் கீசகன் கதியெப்படியென்றால் ஆறாத மோகநெருப்பால் நீறாய்வெந்து வெதும்பித் தலைவிசிறி, நிலைதவறி மதிபதறி விதிகுறுகி மேனிகருகிமெலிந்து ஊனுமுருகி யுலர்ந்து செந்தாமரைக் கொழுந்தும் இளவாழைக் குருத்தும் யானைத்தந்தப் பலகையும் அனிச்சந்தளிரும் அலர்ந்த மலரும் அணையாகப்பரப்பி அதன்மேற் படுத்திருந்தான். அஃதெப்படி யிருந்ததென்னின், கட்டையுடன் முட்டைகலந்தடுக்கி அதன்மேற் சுட்டெரிக்க நீட்டிவைத்த பிணம்போலத்துலங்கினன். இதன்றியும்சிலர்சந்தனபாளித குங்குமம்பனிநீரைத் தெளிக்கின்றனர். அதெவ்வாறிருந்ததென்னில் சமயதீக்ஷை விடுவித்துக், கலசச் சலமிறைக்குங் காட்சிபோ லிருந்தது. மேலும் அவனைச் சுற்றிலும் வாசனை வத்திகளைத் தாதிப்பெண்கள் வைக்கின்றனர், அஃதெவ்வண்ண மெனிற்கருமக்கிரியை செய்வதற்குப் புத்திரனில்லா தவர் பெண்கள் கையில்தர்ப்பையளித்துக்கொள்ளியைக்காட்டுங்கொள்ளைபோலிருந்தது. இவ்வாறுசெய்த சயித்தியோபசாரத்தினாலுந் தணியாமல், ஐயையோவென்று ஓங்கியிளைத்தேங்கிய கீசகனுக்குப் பாங்கிலிருந்த பாங்கியர்பலரும் ஆலவட்டம் தாலவட்டம் மயில்விசிறி குயில்விசிறி குறுவேர்விசிறி சிவிவேர்விசிறி பட்டுவிசிறி வெட்டிவேர்விசிறி தந்தவிசிறி சந்தவிசிறி இவைகளாலுபசரித்தார்கள். அவர்கள்வீசிய விசிறிக்காற்றினால் கூசி மெய்குலைந்து தோழிகளே!

ஈதென்ன ஊழித்தீக்காற்றோ? ஆழித்தீக்காற்றோ? என்னுயிரைக் கொள்ளை யாடவந்த கூற்றோ? ஆகா! என்னுள்மா அயர்கின்றதேயென்று அவசத்த மிட்டனன். அப்பொழுதே அவ்விடமிருந்த பெண்கள் ஆத்திரப்பட்டுப் பூவாரம் பொன்னாரம் புநுகாரம் சந்தனாரம் சந்திராரம் விந்தாரம் முத்தாரங்கொண்டுத்தாரஞ் செய்தார்கள். அவைகளவன் சரீரத்திற்பட்டவுடனே பளபளபள பளவென்றுபொரிந்து, நீறுநெருப்புமாய்வெந்துபோனமையால்தளதளவென்று தக்காளிப்பழம்போற் கொப்புளமெழும்பக் குப்புறப்படுத்திருந்தனன்.

இஃதன்றியும் காமநோய் கலந்த கலக்கத்தால் சந்திரனைத் தூடித்துச் சமுத்திர தோடத்தைக் கோபித்துத் தென்றலைச் சீயென்றேசி வரிச்சிறைக் குயிலை இருபிறப்பென்றுபேசிக், கிள்ளைமொழியைக் கழறிந்து கடகடவென்று புரண்டுகிடைகொடுக்காமல் உடையுடுக்காமல் உணவெடுக்காமல், கன்னியை விரும்பித் தன்னந்தனியனாய் வெதும்பினான்கு புறமுமென்று நப்பார்த்து மெத்தைமேல்வீழ்ந்து தத்தளிக்கும் பாதகனுக்குச் சன்மார்த்தாரஞ்செய்தத்தவங் கைகூடியதுபோலத் தாழ்ச்சியில்லாத வண்ணமடந்தை காட்சியாய் முன்னிற்கக் கண்டனன். அவளைக்கண்டு நான்பண்ணிய புண்ணியம் பலித்ததென்று கக்கடகைத்துப் பக்கமாய்ப்படுத்துத் திக்கென்றெழுந்து தீர்க்கமாய் வீழ்ந்து சரணஞ்சரணம், இது நல்லதருணந்தருணம், என்மாதவம் வந்தது; என்வழித்துணைவந்தது; என்னிட்டதெய்வம் வந்தது; நான் கும்பிட்டதெய்வம் குறுக்கே வந்தது; என்பிராண சஞ்சீவி வந்தது; என்னுடையயாகிய சோபம் போக்கும் அமுதமிதோவந்தது; பேசப்பிரசம் பெருகுங்குமுதம் வந்தது; என்தேகத்துணை வந்தது; என்னுகத்துயிர்வந்தது; மோக வித்து விளைந்தது; போகமுத்து வந்தது; என்கண்ணிற்பாவை வந்தது; என்முன் வண்ணப்பெண் வந்தது; என் ஆபத்திற்குதவு மணங்கேவாரும். என்தாகத்தைத் தணிக்குந் தயாரசமேவாரும். என்னருகி லுட்காரும். வறண்டு போன என்மண்டைக்குந் தொண்டைக்குஞ் சுருண்டுபோன நாக்குக்கு மூக்குக்கும் பசையுண்டாம்படி மதுர வார்த்தையைப் பொழியும்; என்னை நெருகக் கட்டிச்சேரும். கைப்பாகிய என்வாய்க்குக் கனிவாய் முத்தந்தாரும். என் துயரம் போக்கவந்த பதமே! என்னைவிட்டுப்பிரியாதிருக்கவேண்டும் நிதமே. நானுமக்குச் சதமேயென்று நிலத்தில்தலைகுப்புறவிருந்த கீசகன் நிமிர்ந்து எக்களிப்பிட்டெழுந்து முன்பின்பாராமல் விரதசாரணியைத் தொட்டணைக்கக் கிட்டினன்.

மீளாநரகத்திற் காளாகும் கீசகன் காமவிகாரத்தினாற் பேய்போலோடி வருவதை அவ்விரதசாரணிகண்டு, அடா சண்டாளத்துரோகி! என்னைத் தொடவேண்டாம். என்னை யொருவருந் தீண்டப்படாது. வீணாசைகொண்டு வாணாளை நீயொழிக்கவேண்டாம். நெருப்பிலழுந்திய புழுப்போற் சாகவேண்டாம். விளக்கில் வீழும் விட்டிற் பூச்சிபோல் வேகவேண்டாம். மறுமாதர்மேலாசைப்பட வேண்டாம். மையல் மோசத்தால் நாசப்படவேண்டாம். காமப்பேயாற் கண்கலங்க வேண்டாமென்று கடுஞ்சொற்களால் கண்டித்தனள். அவ்வாறு கண்டித்துந் தேறுதானாய்த் தேடியமருந்து எதிரே

நேர்ந்ததுபோற் கிடைத்த தேவியே! என்னுயிரே! நான்மகா பாவியேயாமெ ன்றுமிக்க காமாக்கினியாலுருகி, வாடுகிறநான் நூறுயிரவர் தடுத்தாலும் உன்னை விடமாட்டேன். தூறட்டுக்கெட்டாப் பழம் வாய்க்கெட்டும்போது அப்பழத்தைச் சுவைக்காமல்விட்டுவிடு மூடனுமுலகிலுண்டோ? தோகை யே! என்று தூரத்தினன். அதனால் நீந்துதற்கரிய துன்பங்கொண்ட பாஞ் சாலியயர்ந்து உடல்வியர்த்துக் கொலைத்தொழின்மேற்கொண்ட வேடனைக்க ண்ட கலைமானேபோற்சேலைகுலைய மாலையலையக் கமலமுகம்வாடக் கண் ணீரோடக் கருங்கூந்தலாடக் குடர்குலுங்க குலைநடுங்க துடியிடைமானன்னா ள் விடுவிடென்றோடினாள். அவ்வாறோடிய பாஞ்சாலி நவமணியிழைத்தகதிர் முடிதரித்த விராடராசன் கொலுவில் தருமராசன் முதலிய யாவரும்பார்க்கு ம்படி அபயம் அபயமென்றலறி வாடியகொடிபோல் வந்துவீழ்ந்தழுதாள். அந் தவிராடபுரத்திற்கங்கபட்டர் வந்தநாள்முதல்உதயத்திற்சபைசேரும்படிவழக் கப்படுத்தியவகையேமகாசனர்களுடன்கூடியிருந்தமநுகுலத் தோன்றலாகிய மச்சராசனும் மந்திரிமார் முதலிய சாமந்திரிகளும் தேம்பியழுகின்ற அத்தெரி வையைக்கண்டு கவலைமேற்கொண்டு கருத்து வேறுபட்டொன்றுந் தோன்றா மலிருந்தனர். அச்சமயத்தில் காமப்பிணியாற் கலங்கிவருந்திய கீசகன் மதி வதனத்துரோபதையைத் தொடர்ந்து பிடிக்கத் துணிந்தாங் கெய்தினன். அச்சமயத்தில் பூமகளேபோன்ற மாதரசியைப் பற்றுவதற்கு நீட்டிய கீசகன் கையிரண்டும் அப்பதிவிரதையின் மேற்படவொட்டாமல், சூரிய பகவானநுக்கிரகத்தாற் சுழற்காற்றேபோல் தோன்றிய ஒரு கிங்கரன் கெடுங் காலக் கீசகன் கரத்தைப்பற்றிக் கிறுகிறெனச்சுழற்றி விறுவிறென விட்டெ கிந்துபோயினன். அதனாற் கைவீச்சோடு கடுகிய கீசகன் பெருமூச்செறிந்து நொந்துமன்னர்சபைக்கப்புறவிழுந்துபின்னும்பிடிக்கவெழுந்தான். பின்னே அவன் தானிருக்கு மிடத்திற்கும் பாஞ்சாலியிருக்குமிடத்திற்கும் வெகு தூரமென்று கண்டு தலைகவிழ்ந்து உடல்குனிந்து வெட்கிச் சந்தடிகாட்டா மல் வந்தவழி நாடியேயோடிப்போனான். அவ்விடத்தில்நடந்த அதிசயத்தை க்கண்டார் யாவரும் 'திக்கற்றவருக்குத்தெய்வமேதுணை' என்று சிந்தைநைந்து ருகித்திகைத்திருந்தனர்.

இப்பால் அச்சபையில் வந்து வீழ்ந்தழுத அவ்வேழைப் பெண்ணின் அலங்கோலத்தையும் தொட்டிழுத்த தன்மைத்துனன் துராக்கிருதத்தையும் அதனால் தனக்கு நேரிட்ட நிந்தையையும் விராடராசன் ஆராய்ந்து, அவ்விட மிருந்த பெரியோர்களையும் இராசராசர்களையும் மந்திரி பிரதானி முதலிய மதிவல்லோரையும் பார்த்து அறிவினை யுடையவர்களே! துர்ப்புத்தியை யுடைய இக்கொடிய கீசகன் துறைதப்பிநடந்ததைப் பார்த்தீர்களா? என்று ஆத்திரப்பட்டு அவனுக்கு நற்புத்திசொல்லி அவன் செய்தவேலைக்குத்தகுந்த தண்டனை விதிக்கத் தன்னாற் கூடாமையால், அக்கீசகனுடைய திடதைரிய பராக்கிரம திக்குவிசயத்தைக் குறித்துப் பயந்து சிந்தித்திருந்தான்.

அக்காலத்தில் இராசசபையில் நின்ற விரதசாரணி ஐயோ! இதென்ன அநியாயம், தெய்வமேயென்று விசனப்பட்டனள். அப்பொழு தவ்விடத்

தில் நிறைந்திருந்த வெகுசனர்களுள் தானுமொருவனாக வந்திருந்த வீமசேனனாகிய பலாயனனென்பவன் மனத்துயரத்தையடைந்து, அஞ்சிக் கெஞ்சிப் பஞ்சுபோற் பறந்து ஓடிவந்த பாஞ்சாலியையும் அவளைப் பிடிக்கவந்த கீசகனையும்பார்த்துப் பஞ்சேந்திரியமும் பதறத்துடித்து ஆசாரவாயல் முகப்பிலிருக்கிறஒரு பெருந்தருவைப்பிடுங்கியொடித்துக்கீசகனையும்விராடராசனையும்ஒருங்கு முடித்து விடுவதற் கெண்ணினான். அப்பொழுது தம்பியாகிய வீமன் எங்கே பதறுகிறானோவென்று அதுவே நினைப்பாகப் பார்த்துக்கொண்டிருந்த தருமராசன் அவனதுகோபக் குறிப்பையும் எண்ணத்தையும் அறிந்துகொண்டு, அப்பா பலாயனா! நீ மடைப்பள்ளிக் கெசமானாகையால் காய்ந்தவிறகு எங்குண்டோவென்று உயர்ந்த மரங்களைக்கண் ணோட்டமிடுவது போலக் காண்கின்றது. நீ இப்பொழுது பார்க்கின்றமரம் அவசரத்திற்கு விறகாகமாட்டாதே. இதைக்காயவைத்துக் கொள்ளலாமென்று கருதினாலும் இன்னும் இரண்டுமாதஞ் செல்லாமல் உலராதே. முக்கியமாய் விறகுவேண்டியிருந்தால் தக்கமனிதருடன் காட்டுக்குப்போய் நீ நினைத்தமரங்களை வெட்டி உன்னிட்டப்படி முடித்துக்கொள்ள வேண்டுமேயன்றி இவ்விராடராசன் சபையில் நிற்கக்கண்ட மரத்தை அவசரப்பட் டழிக்கக் கூடாதே; மிகுந்த பலசாலியாகிய உனக்கு எதுவும் இலட்சியமேயில்லை. ஆதலால் இந்நகரத்தின் புறம்பேசென்று வேண்டுமரங்களை வேருடன்கல்லி எளிதாக எரிக்கலாம். இங்கிருக்குந் தருவானது அநேகம் பறவைகட் காதாரமாயும் நமது வாழ்நாளுக் குதவியாயும் குளிர்ந்த நிழலைக்கொடுத்துக் கொலுமுகத்திற் கழகாயுமிருக்கின்றது. ஐயோ! இம்மரத்தைப் புத்திமான்கள் குறைக்க நினையார்கள். 'பச்சைமரத்தை வெட்டலாகாது' என்றும் பெரியோரால் சொல்லப்பட்டிருக்கின்றது. என்ன ஆபத்துநேர்ந்தாலும் பாவத்திற்குப் பயப்பட வேண்டுமென்று தமதுகாலாற் பூமியைத் தேய்த்தார். அவர் இங்கே விறகின்மேலேற்றி வெளிப்படையாகச் சொல்லியவற்றின்பொருளைப் பரோபகாரியாகிய விராடராசனைக் கொல்லாமல் கீசகனைக் காட்டிற் கொண்டுபோய்க் கொல்ல வேண்டுமெனக் குறிப்பால் விளக்கிற்று.

அதை யறிந்துகொண்ட வீமசேனன் ஓகோகோ! இவரிங்குந் தடையானாரேயென்று உடலெங்கும் பதற எழுந்த கோபாவேசத்தை யடக்கிப் பாஞ்சாலியைப் பார்த்தான். அந்தப்பார்வைக் குறிப்பை அறிந்துகொண்ட பாஞ்சாலி தனக்குநேரிலிருந்த விராடராசனை நோக்கி, மகாராசனே! நல்லொழுக்கத்தைமுழுதும்ஒழுகவிட்டகீசகன் துன்மார்க்கமாகவே என்னைத் தொடர்ந்து தொட்டிழுக்க வந்தது நீதிதானோ? சாத்திரங்களைப் படித்தும் சாதுசங்கத்தையடுத்தும்தன்னுயிர்போல்மன்னுயிரைக்காத்தும் பரதாரசோதரமெனப் பார்த்தும் பாவபுண்ணிய மின்னவென்றறிந்தும் அடைக்கலம் புகுந்தாரை யாதரித்தும் தெய்வபத்தி ஆசாரியபத்தி செலுத்தியும் குலமுறை பிழையாமல் நடத்தியும் ஏழைகள்மன நோவாமலும் படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் இவ்வாறினையு முடையாராகியும் செங்கோல் செலுத்துஞ் சீமானாகிய நீர் உமது மைத்துனனுடைய துர்ப்புத்தியை விசாரித்து எனது

உள்ளக் கலக்கத்தைமாற்றி ஆறுதல் சொல்லி ஆதரியாதிருப்பது உமதரசாட்சிக்கழகாமோ? நீதியரசனே! நெறிமுறையறிந்தார்கள் தம்மைச்சரணுகவண்டினோைத் தம்மக்களைப்போற் காக்க வேண்டுமென்று தரும சாத்திரமுஞ் சொல்லி யிருக்கின்றதன்றோ? தயாநிதியே! வலியவனுகியவொருவன்எளியவனை யடித்தாலும் ஒருவன்பொருளை யொருவன் அபகரித்தாலும் வம்புவார்த்தைகளை வழங்கினுலும் அவைகளை அரசன்விசாரித்தே துட்டநிக்கிரக சிட்டபரிபாலனம் செய்யவேண்டுவ துண்டோவில்லையோ? அவ்வாறு விசாரியாத கொடுங்கோலமன்னன் இருந்தென்ன? என்றுஉலகம் நினைக்குமே, இதனுலன்றோ நீதிநூலாரும் 'கொடுங்கோல்மன்னன் வாழுநாட்டிற் கடும்புலிவாழுங் காடு நன்றே' என்றுஞ் சொல்லியிருக்கின்றனர். உத்தமனே! உயர்ந்தோர்முதலிய சர்வசனங்களும் துர்ச்சோபம் துர்ப்பயங்கரம்துர்வியாதிமுதலிய பீடைகளடையாமல் சற்சிநேகம் சன்மார்க்கம் சற்குணம் சதாயுமுதலிய நன்மைகளைப் பெறும்படிக் கன்றோ அரசனுக்குச் சிங்காசனப் பட்டாபிடேகஞ் செய்வது,

அவ்வாறு பட்டங் கட்டிக்கொண்ட அரசனுக்கினியா லன்றோ வருணநான்கும் வரிசைமுறைபிறழாதிருப்பது. முன்னுளில் ஒருபாதம்சந்தனக்குழம்பினும் மற்றொருபாதம் அக்கினிப்பிழம்பினும் நாட்டி அரசுபுரிந்துவந்த சக்கரவர்த்திகளுடையசரித்திரத்தையும்கேட்டறியீரோ? தருமபிரபுவே! உமது மனைவியாருக்குப் பணிவிடை செய்து பிழைக்கவந்த ஏழையாகிய வென்னை இக்காட்சி கண்ட சிங்கபலக் கீசகனைத் தீரவிசாரியாமற் போவீராயின் எனக்கு வேறுகதியில்லை. உமதுதிடத்தைத் தெரிந்து கொண்ட இப்பாதகன் இனிமேல் என்னை யெங்கும் பிழைக்கவொட்டானே. எல்லாந்தெரிந்த பெரியோருக்குச் சொல்லாலுணர்த்துவ தியாதொன்றுமில்லையே, தோன்றலே! இவ்வுலகத்தில் தவஞ்செய்வதும்யாகம்புரிவதும் தீர்த்தமாடுவதும் தெய்வந்தொழுவதும்பெரிதன்று. அபயமென்றுவந்து அடைக்கலம் புகுந்தவர்களை யாதரிப்பதுவே தருமங்க ளெல்லாவற்றினுஞ் சிறந்ததென்று சதுமறைப்புரோகிதன் பிரமசூத்திரத்திலுஞ் சொல்லியிருக்கின்றனே! அதற்குத்திட்டாந்தங் கேளும். முற்காலத்திலொருநாள் பிரமனுடையசபைக்குத் தேவேந்திரன்சென்றான். அவனைக் கண்ட பிரமன்சந்தோடங்கொண்டு இந்திரனே! சுவர்க்கமத்தியபாதலத்தோர் நடத்துகின்ற தர்மா தர்மங்கள் உன்னதீனமா யிருக்கிறபடியால் நீ தருமகுக்குமமறிந்து நடத்தவேண்டியதா யிருக்கின்றது. நீஅவ்வண்ணம் நடத்தாவிட்டால், இப்பூலோகத்தார் செய்யும் பாவங்களிற் பாதி யுன்னைப்பிடியாமற் போகாது. அப்படிப்பிடித்த பாவங்களை நீ நீக்கிக்கொள்ள வேண்டுமானுல், பற்பலஅதர்மஞ் செய்கின்றவர்களை உடனேயழித்துவிட வேண்டுமென்றனர். இப்படிப் பலவாருகிய அதர்மஞ் செய்யும் பாவிகள்யாரென்று தேவேந்திரன் கேட்க, வேதவிதியும் நீதிவழியும் உலகநடையுந்தவிர்ந்து நடந்தவர்கள்யாரோ அவரேபாவிகள். இவர்களில் நன்றிகெட்டவர் அடைக்கலம்புகுந்தோரையாதரியாதவர் இவர்களையே மகாபாவிக ளென்னப்படும். ஆதலால் இனிக்கொடிய அதர்மிகளை வச்சிராயுதத்தான் மண்டைகிழியமோதிப் பண்டுசெய்த பாவங்

களைப்போக்கித் தருமத்தைப் பிரகாசிக்கச் செய்வையானால் அவர்கள்செய்த புண்ணியங்களிற்பாதியுனக்குண்டாகும்.மும்மையுலகிற்குமுதற்பதியாகையால் இத்தருமசூட்சுமத்தை யுனக்குச்சொன்னேனென்றனன். அச்சதுமுகன் மொழியைக்கேட்ட இந்திரன் பூலோகத்தில்வந்து துட்டர்களைச் சிட்சித்துச், சிட்டர்களை இரட்சித்துப், புண்ணியம்பெருகப் பொருந்திவாழ்ந்திருந்தானென்று பெரியோருரைக்கக் கேட்டிருக்கின்றேன். விராட ராசனே! உன் மனைவியினிடத்தில் வந்துசேர்ந்த அந்நாள்முதலிந்நாள்வரையிலும் இத்தன்மையாகிய துன்பம் நான்கண்டறியேன். இன்றென்பொல்லாவினையால், வல்லாண்மைக்காரக் கீசகன் இக்கொடிய எண்ணமே கொண்டனன். அவனையப்படி நினைத்தாலும், உலகந்தாங்கிய நீரும் பேசாமலிருப்பதும் என் தீவினைதான். ஐயா! உம்மிடத்தி லிப்படிப்பட்ட குணமிருக்குமாகில், அரசாட்சியெவ்வாறுநடக்கும். உம்மை யார் மதிப்பார்கள்? உம்மையார் துதிப்பார்கள்? உம்மை யாரடுப்பர்? வருந்திவந்தவர்கள் துன்பத்தைமாற்றிக்காக்க வேண்டியது உமதுகடமையன்றோ? நீர் அவ்வாறு செய்யாமற்போனால், சாத்திரப்படி உமக்கு மோட்சங்கிட்டாதே. இரௌரவமுதலிய நரகமும் உம்மை விட்டகலாதே. அதிலும் பேதைப்பெண்கள் நாதனற்றவர்கள் முடவர் ஊமை செவிடு குருடு பிணியாளர் தரித்திரர் தவசிகள் முதலானோருக்குத் தாயுந்தந்தையும் அரசனே ஆகையால், அவர்களைத்தன்பிராணனைப்போலாதரிக்கவேண்டுமே. பழிக்குடன்படாத பார்த்திபனே! நான் அநாதையாயிருக்கின்றேன். நீரென்னை நிராதரவு செய்யாமல் காக்கவேண்டுமென்று சொல்லிமுடித்தனள்.

இவ்வாறு அவ்விரதசாரணி மொழிந்ததை விராடராசனறிந்து, அம்மா! நான்கீசகனை விசாரிக்கவில்லையென்று கிலேசப்படுகின்றனை. உனக்கும் அவனுக்கும் நேரிட்டநேசமும் நீஅவன் வீட்டுக்குப்போன காரணமும் உன்னைத்துரத்திவந்த விசுவாசமும் இன்னதென்று எனக்குத் தெரியாமையால் ஒருதலைவழக்காகத் தண்டிப்பதும்உத்தமமன்றே.பின்காரணகாரியங் தெரிந்துகொண்டு தீர்க்கவிசாரணைசெய்ய வேண்டியிருப்பதனாலும் உனக்குவந்த தீங்கு ஒருவாறாக விலகிப்போனதினாலும் நான்சும்மாவிருந்தேன். அம்மா! நீ இவ்வேளை மனம்பொறுத்துக் கொள்ளென்றுவாய்குளிரப் பேசிமுடித்தான். அவனது இன்சொல்லைக் கேட்ட பாஞ்சாலியோ அவ்விராட ராசனுக்கு மனோதைரிய மில்லையென்றுணர்ந்து ஐயா! நீர் சத்தில்லாவசனஞ்சொன்னீர்; நான் உற்றதுரைக்கிறேன்கேளும், அடியேனுக்குக் கந்திருவரைந்துபேர் கணவர்கள்; புயபல பராக்கிரமசாலிகள்; ஒப்பற்றவர்கள்;விற்பனவிவேகிகள்; அவர் கட்குப்பகைவரில்லை. யாருக்கேனும் அழிவுகாலநேரிட்டால், அவர்களேதாம் சத்துருவாய்த் தோன்றி அழிப்பார்கள். அக்கந்திருவர் வருகின்ற தேரோசையும் அவர்கள் கைக்கொண்டிருக்கும் வில்லோசையும் எட்டுத் திக்குப்பாலரையும் திடுக்கிட்டு விழிக்கச்செய்வது மன்றிச் சக்கிரவாள முடிமட்டும் உக்கிரமாக வுடைபட்டும் தத்தளித்தாடப்பண்ணுமே. அவர்களை அண்டினோருக்கு

வேண்டிய பாக்கியங்களுண்டாமே. அப்படிப்பட்ட மகாபுருஷர்களை மாலை யிட்டு மருவிவாழுமென்னை இப்படிப்பட்ட நாணத்துக்கிடமாக்கி விட்ட கீசக னுக்கு நாசகாலங் கிட்டியதென்பதற்கு ஐயமேயில்லை. ஐயோ! இரும்பை நசுக்கி யொடிக்குஞ் சம்மட்டி நெருப்புக்கும்பலுவதுபோல், உம்மையெங்கே மாட்டிக் கொள்ளுகிறதோ வென்னுந் துக்கத்தால் இவ்வளவு தூரஞ் சொல்லி யழுகிறேன். ஐயா! மச்சராசனே! இத்தியாதி வல்லமைபெற்ற கந்திருவர் கட்கு மனைவியாகிய நீ என்மனைவிக்கு வேலைசெய்ய வருவானேனென்றால், வினைப்பயனை வெல்ல வல்லாரில்லாமையால், என் கணவரைவரும் தீவினை வசத்தால் தங்களுருமாறி யிருக்கின்றார்கள், அவ்வாறிருந்தபோதிலும், (கடுகு சிறுத்தாலுங் காரம்போகா தென்பதுபோல்) தங்கள் பேராற்றல் மாறினர்க ளல்லர்; இப்பொழு திவ்விடத்தில்நடந்திருக்கின்றகலகத்தையும்அவர்களுமறிந் திருப்பார்கள்; தடையின்றி எங்குஞ் சஞ்சரிக்கும் நெஞ்சுரமுள்ளவர்கள், தமக்குத்தாமே சங்கதி தெரிந்துகொள்ளுஞ் சத்தியுடையவர்கள்; இந்நேரம் இவன் பிராணனுக்கு முடிவுதேடி உலைவைத் திருப்பர். ஆயினும் மண் ணாளும் வேந்தன் வாய்பேசாதிருந்தால் பெண்ணாகிய நான் போவதெவ்வா றோ? அறியேனே! நான் ஒருவரையும் நோகத்தக்கதில்லை. முன்னே தேடிக் கொண்ட வினையையே நோகவேண்டுமென்று பொருமி விம்மிப் புலந்து சபைநிறைந்த புண்ணியவான்களே! சத்திய தருமமென்றும் அசத்தியதரும மென்றும் இரண்டு உண்டு, அவ்விரண்டினுள் சத்திய தருமமேமுக்கியம். அச் சத்தியதருமம் எவ்விடத்தில்விளங்குமோ? அவ்விடத்தில் திருமகளுடன் கள்ளமாமாயப்பிரானிருப்பான். அப்பரமபதி யிருக்குமிடத்தில்கிளர்ச்சியும் சத்துரு செயமுமுண்டாம்.

அசத்திய தருமம் எவ்விடத்திலிருக்கின்றதோ? அவ்விடத்தில்மூத்தாள் குடிபுகுவாள்; மூடருறவே எய்தும்; அன்றியும், கொடுநரகுக் காளாகத் தளர் ச்சியடைந்து தூக்கமும் சோம்பலும் ஏக்கமும் அடைவார்களென்றே சுருதி முறையிடுகின்றன. ஆதலால் ஆணைப் பெண்ணைப் பெற்ற நீங்களேனு மென் தருமத்தை யநுசரித்துப் பொதுவாய்ப் பேசப்படாதா? 'அரசனெவ்வழி அவ் வழிகுடிகள்' என்பதைநிலைநாட்டினீர்களே. நீதிநெறி யழிந்தீர்களோ? ஓகோ! இந்நெடுங் கடலுலகத்தில் நான் பெண்ணாகப்பிறந்த பெரும்பிழையாதோ? தெய்வமே! என்று தளர்ந்து வாடினாள். அவ்வன்னை தளர்ச்சியைச்சபையி லிருந்த யாவரும் பார்த்துக் கீசகனையும் விராடராசனையும் நிந்தித்து விரத சாரணியின் பதிவிரதா தருமத்தைச் சிந்தித்துப் பெண்ணிலக்கணம் பூரண மாக அமைந்து கிடக்கின்ற இப்புண்ணிய சாலியை நிதானித்து இவ்வன்னை நல்ல குடிப்பிறப்பாகக்காணுகின்றது, தேவபுருடசம்பந்தம்போற்றோன்றுகின் றது. குணம் மணம் குரல் வசனம் இவற்றை நோக்குங்கால், பதுமினிமாதா யிருக்கிறாள். இத்தன்மையராகிய உத்தமிகள் நினைத்த காரியங்களெல் லாம் சித்தியாகாமல் போமோ? இலேசானமாதரைப்போல் எண்ணப்படாது. கெடுமதியுள்ள கீசகன் துட்டநினைப்பால் தொடர்ந்த 'மூடத்தனம் அவன் பிராணன்முடிவுக்கோ? யாதுகாரணமோ?தெரியவேயில்லை. முன்னாள் சானகி

யாருக்குத் துன்பம் நேரிட்டாற்போல் நேரிட்டதன்றோ? என்று தம்மனத்தைத் தாங்களே தேற்றிக்கொண்டு அம்மா! சும்மாவிரு. விசனப்படவேண்டாம். உமக்கு நல்லகாலம் இவ்விராடபுரத்தில் வரப்போகின்றதென்று வாழ்த்தினர். அக்காலையில் இவற்றையெல்லாம் பார்த்து உள்ளே மாச்சரியமும் வெளிக்கு ஆச்சரியமுங் கொண்டிருந்த கங்கபட்டர் சைரந்திரிப் பெயர் பெற்ற பெண்பாவாய்! பெண்களுக்குரிய நாணமட முதலிய நாற்குணங்களு மாறி அரசசபையேறி அத்துமீறிப் பேசுகின்றாயே. அநியாயக்காறி! தருமபதியாகிய விராட பூபதியோ மகாதயாநிதி. சத்திய வாக்கியர். சாதுசங்கப் பழக்கமுள்ள யோக்கியர். பலவகையான சம்பத்துடைய பாக்கியர். சதுர் வேத மறிந்தவர். தநுர்வேதந் தெரிந்தவர். மனுமுறை கற்றவர். மக்களைப் பெற்றவர். நடுவுநிலையாகவிசாரிப்பவர். பக்ஷபாத மிராது;நீ யஞ்சவேண்டாம் அவசரப்படாதை. இம்மச்சராசன் விசாரியாமல் போனாலும் உனக்குரிய கந்திருவர்கள் அவசியம் விசாரிப்பார்களென்று உன்சொல்லினாலேயே விளங்குகின்றதே. நீ இச்சபையில் ஆத்திரப்படவேண்டாம். உன் எசமானிகட்டளையைப் பரிபாலிப்பதே சிறந்த தர்மம். சாந்தகுணமே தகுந்த பூஷணம். பெண்ணாகப் பிறந்தோருக்கு அடக்க மிருக்கவேண்டும். ஆதரவற்றவர்க்கு அரசனே தெய்வமென்று நம்பி வாயடங்கி ஒடுங்கிப்போக வேண்டும். அன்றித் தாங்களெவ்விடத்தில் வேலை செய்கின்றார்களோ அவ்விடத்திற் சொல்லி அவர்கள் மூலமாக விசாரணைக்கு வரச்செய்யவேண்டும். அப்பொழுது மனக்குறை எப்பொழுது மில்லாமல் நீங்கும். இப்பொழுது நீ அந்தப்புரம்போய்ச் சேர்வதே நன்றென்றார். கங்கபட்டருரைத்த கருத்தைத் தெரிந்துகொண்ட பாஞ்சாலி அங்கைகுவித்துப் புத்தியென்று போற்றிச், சுதக்கணை யிடத்திற் சென்று பெருங்காற்றி லலைந்த சருகேபோற் சுருங்கி ஒடுங்கி நின்றாள். இவ்வாறு ஓய்ந்துநின்ற மாதை அரசன்பத்தினி பார்த்துக் கருங்குவளை நெருங்கிய கண்களும் வெண்டாமரைபோன்ற முகமும் சண்பகப்பூவனைய மூக்கும் முல்லை யரும்பைப் பழிக்கும் பல்லும் அமுதமாகிய சொல்லும் கொவ்வைக் கனிக் கொப்பாகிய விதழும் இராகுவினால் தீண்டப்பட்ட சந்திரன்போல் குறைந்து அடங்கிய உடலும் வாடியநடையுமாய் வருவானேன்? கண்ணீர் சொரிவானேன்? கழுத்து முத்தாரம் பழுத்துப் போவானேன்? போன இடத்தில் பொல்லாங்குண்டோ? அப்படியா தாயினுமுண்டானால் இப்பொழுதே சொல்லும் தப்பாமல் தண்டிக்கிறேனென்று கேட்டாள். அப்படி அன்புடன் கேட்ட சுதக்கணையைத் பாஞ்சாலி பார்த்து, அம்மா! கைவிரலாற் கண்ணைக் குத்திவிட்டு யார்குத்தினார்கள்? குத்தியதற்குக் காரணமென்ன? என்று கேட்பது அதிசயத்தின்மே லதிசயமன்றோ? என் நிர்வாக முதலிய வற்றையும் முன்னமே சொல்லியிருந்த என்னை உன் தம்பியினிடத்திற் கனுப்பிவைத்துப் பின்னே ஒன்றுந் தெரியாதவள்போல் துடிதுடித்துப் பேசுகின்றாயே. ஆயினும் பெரிதன்று. உன்சொல்லின் வண்ணம் பூவும் தேனும் கொண்டுபோய்க் கொடுத்தேன்; அக்கீசகன் என்னைக்கண்டவுடனே எழுந்தோடிவந்து என்கையிலிருந்த மாலையையும் மதுவையும் வாங்காமல்

என்மேல் விழுந்து அநுபவிக்கக் கருதினன். நான் அப்பாதகன் கையிலகப் படாமல் தப்பியோடி விராடராசன் சபையில் விழுந்தேன். அப்பாலென் னைத் தொடர்ந்து வந்தபாவி எப்பாடுபட்டானோ? என்னகதி கெட்டானோ? நானறியேன். உத்தமியே யென்றழுதாள்.

இவ்வாறு உருகி யழுகின்ற விரதசாரணி துக்கத்தையும் சோபத்தையும் போக்கி அம்மா! வண்ணமாதே! அப்படுபாவி என் தம்பியாலும் மகா பதிவிரதையான உன்சித்தஞ் சிதையப் பண்ணியபடியால் கடைகட்டனாகிய துட்டனானான். தாய்க்காகாதபிள்ளை ஊர்க்காகா தென்பதுபோல் உனக்கா காத சாவான் எனக்கு மாகாமற் போனவனே. உனக்கொருநாளுங் குறை வில்லை. பங்கமில்லாத சங்கமே! காமி வாமி வெறியன் முறியன் வறியன் சிறியன் இவர்களுக் கெல்லாம் மட்டுமரியாதை கட்டுத்திட்டம் ஈனமானம் விதிவிலக்கு விவேக முதலியனவுங் கிடையா. நன்மையினால் வமிசவிர்த்திக்கு வரமாட்டார்கள். சவுக்கடியே தெய்வம். ஆதலின், முறைகெட்ட மூடனாகிய அக்கீசனைக் கொல்லவேண்டு மென்னும் நினைப்பிருந்தாற் சொல்லும். விராட ராசனுடன் கலந்துபேசி வேலையை முடிக்கச் செய்கிறேன். உமதெண்ணத் தை எமக்குணர்த்துமென்று சுதக்கணை கேட்டாள். அம்மொழியைக்கேட்ட விரதசாரணி அம்மா! ஏதோ என்னுடைய கர்மாநுபவம் இப்படி யிருந்தது; இராசசபையி லிருந்தவர்கள் நகைப்பதற் கிடமுண்டாயிற்று; திக்கற்ற எனக் குத் தெய்வமிருக்கின்றது; 'அடாது செய்பவர் படாது படுவார்' என்னும் பழ மொழியுண்டு; அதுவும் பழுதுபடாது. என்விடயத்தில் அபராதியாகிய கீச கன்கந்திருவர்ஐவரால்கால்சாய்ந்து போவதுதிண்ணம். எனக்குரியகணவர்கள் இன்றைக்கோ நாளைக்கோ வரப்போகின்றனர். அப்பொழுதிவன் தலையொடு போமோ?யாதோதெரியேன்.நான்உன்னைவந்தடுத்து உன்னுடையஉப்புந்தண் ணீருமுண்டு காலங்கழித்துவந்த என்னால் உனக்கு ஒருகுறைவும் இல்லா திருக்க என்னிட்ட தெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொண்டேன், அன்னை யே! என்று வண்ணமகள் வாழ்த்தினள். அப்பெண் சொல்லைக்கேட்ட சுதக் கணை யானவள் கண்ணீர்விடுத்து அவள் கண்ணைத்துடைத்து விம்மி மெ லிந்து, நம்மிலொருவனாகிய தம்பி வெம்பி விழுங்காலம் வந்ததே. புத்திரமித் திராதிகளை யிழந்துபோக நேரிட்டதேயென்று கலக்கமுற்று மிகவும் ஏக்கங் கொண்டிருந்தாள். இப்படி துக்கப்பட்ட சுதக்கணையாகிய வண்டு விழியா ளுக்குப் பண்டுதொட்டுத் தொண்டு புரிந்து அண்டையில் நின்ற பெண்டுக ளெல்லாம் ஒன்றுகூடி அம்மாதைக்கண்டுமதிமருள்கொண்டுஐயோ! கண்டக னாகிய கீசகன் பண்டை வினையால் பொன்றுங்காலம் தேடிக்கொண்டானே. அது பெருந்தீயைப்போல் மூண்டு விட்டதே. விராடராசனுக்கும் விதண்டை யான வியாகூலம் விளைந்ததே. இம்மோசத்திற்கு நாம் தப்பிப்பிழைக்கும் வகை யெப்படியென்று சிந்தித்து எண்ணமிட்டுக்கொண் டிருந்தார்கள். இப் பால், பாஞ்சாலியைப் பிடிக்கவந்த கீசகன் ஆதித்தன் அனுப்பிய கிங்கரனால் வீசியெறிய வீழ்ந்து மிகவும் வேட்கையால் தாழ்ந்து நாம் வாழ்ந்தவாழ் விது வோவென்று மனமெலி வடைந்து தாட்டீகந் தளர்ந்து மோக சமுத்திரம்

வடிந்து, திம்மை திரும்பிச் சிந்தைதெளிந்து மயக்கமாறித் தன்மாளிகை சென்று சேர்ந்தான். இவனது நிலை யிப்படியிருக்க, அச்சமில்லாதிருந்த மச்ச ராசன்குயில் மொழிப்பாஞ்சாலி கேட்ட கேள்வியினால் நாணப்பட்டுச்சபையி லுள்ளோர் சொல்லிய தன்விவகாரத் தாழ்வையும் கீசகன் தேடிக்கொண்ட நாசத்தையும் தன்மனத்திற்கொண்டு மைத்துனனைக் கொல்லுந்திறம் தனக் கில்லாமையாற் புல்லியர்களைப்போல் பொருமலுற்றிருந்தான்.

இத்தன்மையாயிருந்தவிராடராசனை, வேதவிதியுமநீதிவழியுந் தெரிந்தகங் கபட்டர் பார்த்துச் சாந்தகுண வேந்தனே! ஆண்மையுடன் அரசு புரியும் அரசர்கள் துட்டரைக் கொட்ட மடக்காவிட்டால் அப்பட்டணத்துச்செல்வ மும் அரசநீதியும் நிலைபெறுவாம். புகழும் பிரதாபமுங் கைகூடாது. செங் கோல் செலுத்துந் திறமையுடையவர்கள் விவகாரதிசையில் தன்னவன் பிறன் என்னும் பட்சபாதம் பார்க்கப் போகாது. வயிறு வளர்ப்பதற்கே வந்து உம் முடைய மனைவியை யடுத்துக் குற்றேவல்செய்து சீவனம் பண்ணுகிற ஒரேழைமேல் மச்சராசன் மச்சான் இச்சை வைச்சானென்பது வசையே அன்றி இசையோ? பெரியமனிசன் நேயமாயொருபெண்ணைத் துரத்திவந்தது ஞாயமா? சூத்தவீரன் கொடுமை நினைத்தது தர்மமா? நீர்சும்மா இருந்து விட்டது மர்மமா? இது கீழ்மக்கள் செய்கையல்லவோ? அக்கீசகன் தன்னை விடப் பிரபஞ்ச மில்லையென்றுஉம்மைமதியா திருக்கின்றானே, உம்முதுனைத் தனத்தில் இப்படிப்பட்ட கெடுதியைச் செய்து கெலித்துப் போனான். இவ னுக்கு எதிரொருவரு மில்லை. அப்பணிப் பெண்ணுக்குத் திக்கொருவரு மில்லை. அப்படி இருந்தபோதிலும் எல்லோருக்கும் பொதுவில் தெய்வ மொன்றிருக்கின்ற தன்றோ? பாவ புண்ணியங்களைப் பார்க்குந் தருமதேவ தை சற்றேனுஞ் சகிக்கமாட்டாதே. அரசன் அன்றேகொல்லும் தெய்வம் நின்றே கொல்லும். உலகமாயை யொழித்த ஞானியையும், தீவினை தொடா ராமல் விடாது. 'தருமத்திற்கு விரோதமான காரியம் கழுத்தறுப்பு,' என்பது கதையிலுங் கேட்டறியீரோ? இது சகலஆத்மகோடிகளுக்கும் இயற்கையா யிருப்பது; அவ்வாறிருப்பினும் இலைமறைவோ காய்மறைவோ ஒன்று தராதரமறிந்து காலமிடந்தெரிந்து காற்றடித்தது தாழை பூத்ததென்னுங் கற்பனைபோல், அநுபவியாமல் அதுவே உற்பனமாய்க் கண்டவிடத்தில் கண் ணுங் கருத்துஞ் செலுத்திப் பெண்ணாசைகொண்டு பிதற்றித் தவிப்பது துன் பத்திலும் பெருந்துன்பமாய்முடியுமே. ஐயோ! நீரிதுவரையிலும் பெற்ற மகிழ்ச்சியும் புகழ்ச்சியுங் கெட்டுப்போமே. இனி இகழ்ச்சிக் கிடமாமே. இறைவனே! என்று தருமராசன் சொல்லினான். இங்ஙனமுரைத்த கங்கபட் டர் சொல்லும் விரதசாரணிக்கு நேரிட்ட அபாக்கியமும் அதனால் தனக்கு வந்த சிலாக்கியமும் தன்னிருகாதையுந் துளைத்து உருவிப்போனதினால்களைத் துப் புந்தியுமிளைத்துச் சிங்காசனம் விட்டெழுந்து தன்மனைக்குட் புகுந்து, தியங்கித் திகைத்து மயங்கி மலைத்துப் பிரக்ஞை தப்பியிருந்தான். அக் கொலுமுகத்திலிருந்த வீமன் நெருப்பிலும் அதிகமாகப் பொங்கிப் பொறி சிதறக்கண்களை யுருட்டிவிழித்து நறநறவென்று பல்லைக் கடித்துக் கையிரண்

டையுந் தேய்த்து முறுக்கி மோதி முகஞ்சுளித்து விராடனைப் பழித்து, விண்ணு மண்ணும் வேகக் கலகலவென்று சிரித்துக் குகைக்கட்புகுஞ் சிங்கம்போல் மடைப்பள்ளியிற் புகுந்தான். பின்பு தருமராசனும் மற்றதம்பிமாரும் தம்காலத்தையே மிகநினைந்து நாடி வருந்தித் தம்மிருக்கையை நாடிச் சேர்ந்தனர்.

வெற்றிவேலேந்திய விராடராசன் படுக்கை பொருந்தாமல் புரண்டு, அழிவில்லா அரசுக்கு பொல்லாங்கு வந்ததேயென்று பழிகாரக் கீசகனைவெறுத்துக் குறுகுறுத்துத் தன்தீவினையை யொறுத்து இனிநாம் முடிபொறுத்திருப்பது எப்படியென்று ஏங்கியிருந்தான். திருமாமகளுக்கொப்பாகிய சுதக்கணையும் துன்பமடைந்து எப்படி விளையுமோ? என்னநேரிடுமோ? நமது செல்வங்கள் எவ்வாறுமோ? என்று திகிலடைந்திருந்தனள். அம்மச்சநாட்டில் மருவிய நான்குவருணத்தவரும்தங்களுயிரின்மேலும் உடலின்மேலும் இச்சைவிட்டு அச்சமோடிருந்தனர்.

இக்கொடிய செய்கைக்கு யார்தான்விசனப்படமாட்டார்கள். அரசனே! என்று வைசம்பாயனர் சொல்லிவரும்போது, சந்திரகுலத் தோன்றலாகிய ஜெனமேஜய மகாராஜன் மனத்தாபமடைந்து, இதென்னபாவமென்றேங்கிப் பக்கத்திலிருந்த தன்மனைவியாகிய வபுஷ்டாதேவியுடனெழுந்து, புராணிகனைப்பணிந்து சுவாமி! மகாபதிவிரதையாகிய பாஞ்சாலி அத்துன்மார்க்கனாகிய கீசகனைச்சபித்துத், தன்மகத்துவத்தை நிலைநாட்டி வரிசைபெறப்படாதோ? ஏன் சும்மாவிருந்தனள்? மானங் கெடுங்காலத்திலில்லாத மகத்துவம் மற்றொருகாலத்தில் இருந்தென்ன? போயென்ன? அக்கீசகன் எம்மாத்திரமனுஷன்? எவ்வளவு பலமுள்ளவன்? எக்குலத்திற் பிறந்தவன்? சுதக்கணைக்கும் அவனுக்கும் சகோதரசம்பந்தம் எவ்வாறுண்டாயிற்று? இவனுக்கு விராடனடங்கியிருக்கவேண்டிய காரணமென்ன? இவ்விவரங்களையெல்லாம் எனக்கு அறிவிக்கவேண்டும்; புண்ணியனே! என்று ஜெனமேஜயன் கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

## கீசகன் வரலாறு.

கேளும் ஜெனமேஜயமகாராஜனே! பிரம சிருட்டியாலுண்டான பிரபஞ்சத்தில் பிராமணமாதுக்கும் அரசனுக்கும் பிறந்தோர்களைச் சூதகுலத்தாரென்று சொல்லுவார்கள். அச்சூதகுலம் அரசகுலத்திற்குத் தாழ்ந்ததென்றும் வைசியர்க்கு உயர்ந்ததென்றும் சாதிநூலில் சொல்லியிருக்கின்றது. அப்படியிருந்தாலும்; அதுமுதலிருவரையிலும் சூதகுலத்தில் அரசர்கள் சம்பந்தம் பண்ணிக்கொண்டிருக்கின்றனர். அரசர் குலத்தில் சூதகுலத்தாருக்குச் சம்பந்தமில்லை. இப்பரத கண்டத்திலுள்ளவர்கள் அச்சூதவமிசத்தைக் குறைவாகவே பேசிக்கொள்வர். அப்படிப்பட்ட சூதகுலத்திற் கேகயராசனொருவனிருந்தான்; அக்கேகயராசன் இராசகன்னிகையென்பவளை விவாகம்பண்ணிக்கொண்டுலகப்பிரசித்தனாய் வாழ்ந்திருந்தான்; அவனுக்கொரு

பெண்பிறந்தாள்; அப்பெண்தான் ஐயா! இச்சுதக்கணையென்பவள். இவள்பிறந்தபின்பு வேறேபிள்ளைகளில்லாமையால்,இச்சுதக்கணையைநாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்துவந்தனன். இப்படிவளர்த்துவருகையில், இவள்தந்தையாகியகேகயராசன் ஆண்பிள்ளை பிறக்கவேண்டுமென்னும் ஆசையால்,மாளவதேவியென்பவளை இரண்டாவதுமணம்புரிந்துகொண்டனன்அவள் கருப்பத்தில்நூற்றுநாலுபிள்ளைகள்பிறந்தனர். அவர்களில்இக்கீசகன்தான்மூத்தவன்; சிங்கபலனென்று பேர்வாய்ந்தவன்; மகாபலசாலி இப்படியிருக்க, விராடராசனுடைய முதற்பெண்சாதி சுரதையென்பவள் சதானீகன் சங்கன் வராகன் ஆதிவராக கேதுஎன்னும் இந்நால்வரைப் பெற்றுவைத்து இறந்துபோயினள். பின்னர் இச்சுதக்கணையைக் கலியாணஞ்செய்து கொண்டனன். இவள்வயிற்றில் உத்தரன் உத்தரையென்னும் ஆணும் பெண்ணும் ஒருபேருப்ப் பிறந்தனர். இவ்விராடனுக்கு அபிமானபுத்திரனாக முதலிற்பிறந்த சுவேதனென்பவ னொருவனுளன், இவர்கள்யாவருங் குழந்தைக ளாகையாலும் விராடன் தம்பிமார்கள் பதின்மர் இடந்தப்பினவர்களாகையாலும் விராடனுடைய மச்சதேசம் சகலவளங்களும் உள்ளதாகையாலும் சத்துருக்கள் அநேகரிருந்தனர். அதனால் விராடன் சித்தங்கலங்கி இச்சுதக்கணைக்குத் தம்பியாகிய கீசகன் சத்துரு சங்காரனென்று கேள்விப்பட்டு அவனைவருவித்துத் தனக்குதவியா யிருக்கும்படி கேட்டுக்கொண்டனன். அதற்குடன்பட்ட கீசகன் உபகீசகர்களாகிய தன் தம்பிமார்களுடன் இவ்விராடபுரத்தையடுத்துச் சேனைபதிப் பட்டமுடையானாய்த் திக்குவிசயம்புரிந்து சகலகாணியாட்சிக்கும் தானேசுதந்தரனானன்.

இப்பொழுது நான்சொன்ன கீசகர்கள்யாவரும் பூர்வசநநத்திற் காலகேயர்களென்னுங் கந்திருவர்கள். பாணனென்பவன் முதலாக நூற்றுநாலுபேர்கள் வாமகாரிகளாகவும் காமவிகாரிகளாகவும் சாமவேதியர் சாபம்பெற்றுப் பூமியிற்பிறந்தனர். பாணனென்னும் சிங்கபல கீசகன் அத்திர சத்திர சாத்திரங்களை அப்பியசித்துப் பகைவரைக்கொன்று பலரையும்வென்று விராடபுரத்தரசை நிலைநிறுத்திவைத்தனன். இவனைப்பகைத்தெதிர்த்த திரிகர்த்ததேசாதிபன் தசார்ணவதேசத்தரசன் கசேருக தேசாதிபதி மாளவ தேசபோசன் யவனதேசராசன் புளிந்தநகர்த்தலைவன் கோசலதேசமுதல்வன் அங்கராசன் வங்கதேசன் களிங்கராசன் தக்கண தேசாதிபன் நிடததேசாதிபதி முதலானோர்களும் கிராதகுலத்தலைவர்களும் இவனுடன்போர்செய்து வெல்லமாட்டாமல் தேரழிந்து வில்லொடிந்து இனிச்சாமளவும் இவனுடன் சண்டைக்கு வருவதேயில்லையென்று சபதம்பண்ணிக்கொண்டு புறமுதுகிட் டோடிப்போயினர். அதனால் இவன் மிக்கவெற்றிபெற்றவனாய் மதிமந்திரி யுத்திகற்றவனாய் இத்தேசமுழுவதும் தனக்குச் சுவாதீனமாக்கிக்கொண்டு ஏதேச்சையாக விருக்கின்றனன். எல்லாமர்மங்களுந் தெரிந்தவனாகையால் இவனுக்கு விராடராசனடங்கி யிருக்கின்றான். இதனாலேதான் துரோபதியைத் தூர்த்திவந்த தூராக்கிருதத்தைப்பற்றி யொன்றுங்கேளாமற்போனது. இதன்றியும் பாஞ்சாலி கீசகனைச் சபிக்கப்படாதா வென்று வினவினீரோ அதற்குக்

காரணஞ்சொல்லுகின்றேன் கேளும். தனக்குரிய கணவர்கள் கண்குத்திப்பா
ம்புபோல் பிரத்தியட்சமாகப் பார்த்திருக்கும்போது சபிப்பதுதருமமன்றென்
றும் சூரியநமஸ்காரஞ்செய்த சுகிர்தத்தால் தனக்குத் துன்பமில்லாமற் போ
யிற்றென்றும் எப்படியும் வீமன் தப்பாமற் கொல்லுவானென்றும் தைரியங்
கொண்டே சபிக்காமல் விடுத்தாள். வெண்கதிர்க்குலத்தோனாகிய வேந்தனே!
நீர் கேட்ட சங்கதியை ஐயமறச் சொன்னேன். மேல்நடக்குங் கீசகனுடைய
அழிவையுஞ் சொல்கின்றேனென்று வைசம்பாயனர் ஸ்ரீவேதவியாசபகவா
னைச் சிந்தித்து வந்தித்துச் சொல்லத்தொடங்கினார்.

## கீசகசங்காரம்.

இப்பால் மாதமொன்றுக்கோவ் வொருவராக மகாமேருவை வலம்வருகி
ன்ற துவாதசாதித்தர்களில் அம்மாசத்தி லுதயமான மித்துருவென்னுஞ் சூ
ரியன் துரோபதிதன்னைப் பூசித்தபடியால் துரோபதாதித்தனென்று பேர்பெ
ற்று விரதசாரணிக்கு விளைந்த துன்பத்தைக்குறித்துச் சூரியகுலத்தோனா
கிய கீசகனைவெறுத்துக் குலதர்மத்தைவிடுத்து வழுவினானென்று கோபித்து
வித்தாரமான தன்கிரணத்தைக்கூட்டி அத்தமானகிரியில் தேரோட்டி
மேற்றிசை சிவக்க நாற்றிசையுவக்கச் சாய்ந்து சமுத்திரத்தில் தோய்ந்தனன்.
பொழுதுபடவே அந்நகரிலுள்ளோர் யாவரும் அடிவயிற்றில் வடவாமுகாக்
கினியைக் குடிவைத்துக்கொண்டு பகீரெனத் திகிலடைந்து நித்திரைவிட்டு
நினைவுங்கெட்டு நெட்டுயிர்ப்பெறிந்து உயிராசைதுறந்து உறக்கமற்றிருந்த
தனர். சூதக்கனையிடத்திலிருந்த பாஞ்சாலி தீராத்துயரத்தினால் சிந்தைவரு
ந்திக் கண்கலங்கிக் கவலைகொண்டு செப தப நான போசனாதிகளுந்துறந்து
எண்ணாதுமெண்ணி நமது புகழுக்குப் பழுதுவந்ததே யென்று அனலிடை
யிட்டமெழுகேபோல் நெஞ்சமுருகி ஏக்கமேலிட்டுத் தூக்கங்கொள்ளாமல்
பாதிராத்திரியில் வெளிப்பட்டுத் தருமராசனுடைய சரணாரவிந்தத்தைத் தியா
னித்துக் காவலாளிகளின் கண்ணிற்படாமல் மடப்பள்ளிக்குச் சென்று வெண்
பட்டுமெத்தைமேற்சயனித்து நித்திரைசெய்வதுபோலிருக்கின்றபலாயனனைப்
பார்த்து வருஷாகாலத்துவிருஷபம்போன்ற மதகரிமன்னனே! என்மானங்கெட
நினைத்த கீசகனைவாட்டாமல் மெய்ம்மறந்து உறங்குவதுயாதோ? கவலையுள்ள
வர்க்குங் கண்ணுறக்கம்வருமா? நான் பட்டபாட்டைப் பார்த்திருந்த நீர்சிறிதே
னும் படபடப்பின்றி முற்றிலும் மறந்துவிட்டீரோ? நல்லது; எழுந்திருமெழுந்
திருமென்றாள். இவள் வருவதற்குமுன்னமே எண்ணமிட்டுக் கண்ணைமூடிக்
கொண்டு கலவரத்திலிருந்த வீமசேனன் திடுக்கென்றெழுந்து பேதையே!
நீ இவ்வேளையில் தனித்துவருவானேன் என்றான். அச்சொல் பொறுக்கமா
ட்டாமல் பாஞ்சாலிபதைத்து ஆகா! ஆரோ எவரோ ஏனோ தானோ வென்று
கேட்கின்றீர். பாஞ்சால புத்திரியாயும் பாண்டவர்க்குப் பத்தினியாயும் இந்
திரப்பிரத்தத்தி லிருந்த என்னை அத்தினாபுரத்திற் கழைத்துவந்து நூறுதுட்
டனை வெளியிட்ட பட்டத்தேவியை எனக்கிட்டமான மாமியென்று அவன்

அருகேவைத்துப்போய்ச் சொக்கட்டானாடித்தோற்றுத், திக்கெட்டுமுள்ள துராத்துமாக்கள் நிறைந்தசபையில் அத்துச்சாதனன் என்னைமற்கட்டியிழுத்துவரக் கர்ணன் துரியோதனன் முதலியபலரும் இகழ்ந்து தீயமொழிகள்வழங்க அதனால் என் அங்கம் பங்கப்படுநாளில் வீட்டுமர் துரோணர் கிருபர் விதுரர் திரிதாஷ்டிரர் ஊமைபோலிருக்க, நீங்களைவரும் ஐம்பொறி யடக்கியென்னும் ஆமைபோலிருக்க, ஆபற் பாந்தவனும் ஆதிமத்தியாந்தனும் ஆதிமூலப்பொருளும் அநந்தகல்யாணகுணனும் யதுகுலமுதல்வனுமாகிய கள்ளமாமாயப்பிரானே சன்மானத்துடன் என்மானங்காத்தருளினான். நீங்கள் அந்நாளிலிருந்த தன்மையாகவே இந்நாளிலும் இருக்கப்போகின்றீர்களென்று முன்சாக்கிரதை செய்ய முழுராத்திரியில் வந்தேன். நான் பிறந்தகத்திலும் புகுந்தகத்திலும் மின்கோவமாய் ஓராயிரஞ்சேடியர் புடைசூழ்ந்து ஊழியஞ்செய்ய வாழ்ந்திருந்தேன். உங்களைநம்பிக் கற்களும் முட்களுமுள்ள கானகமெங்குந் திரிந்தலைந்து கலங்கிவருந்திக் காய்கனிபருந்திப் பன்னிரண்டாண்டுங்கழித்தேன். ஓராண்டும் அஞ்ஞாதவாசஞ்செய்வதற்கு உருமாறிப் பெயர்வேறுகொண்டு என்னிருகையுங்கன்றி என்மெய்யொளியுங்குன்றிக் குற்றேவல்புரிந்து வருகையில், கொடியகீசகன் இவ்வகை அவதிப்படுத்தினான். பூமண்டலமுழுதும் புகழ்பெறவிளங்கிய தருமபுத்திரரோ வைதிகவேடம்பூண்டு ஒரு மார்க்கமாயிருக்கின்றார். திரிபுவனகண்டக செயசிகாமணியாகியகாண்டீவதரரோபேடியுருக்கொண்டு நாடகத்தொழிலடுத்து ஆடல்பாடல்தொடுத்தூழுடு காட்டிக்கொண்டிருக்கின்றனர். நகுலசகாதேவரிருவரும் வெளியில் தத்தமக்கேற்ற தொழிலில் அமைந்திருக்கின்றனர். இவரிடத்திலெல்லாஞ்சொல்லிக் காரியமென்ன? பயனுமில்லை. எனக்குரிய ஐவரில் உம்மைப்பார்க்கிலும் வேறோர்துணையுமில்லை. எனக்கு உற்றதுணை நீரே. வாயாற்கூறிய சபதத்தையும் மனத்தால்நினைத்த குரோதத்தையும் முன்பின்பாராமலே முடிக்கத்தக்க பலசாலி ஆகையால், உம்மிடத்தில் என்குறையையெடுத்துச்சொல்லி முறையிட்டுக்கொண்டேனென்றனள். கொண்டல்போன்ற கூந்தலையுடைய பாஞ்சாலி மொழியை வீமன்கேட்டு வெடுக்கென்றெழுந்து காரணகாரியங்களை நினைத்துபெண்கள்நாயகமே! புருஷர்களுக்குரியஆபரணம்பொறுமை. அதிலும் நீதிவழுவியகிர்மூடரைக்கணப்போதாயினுந்தாமதியாமல் குப்புறத்தள்ளியுதைத்துத் தலைபிளக்கமிதித்துக் கீர்த்தியை நிலைநாட்டுவதே சிறந்த ஆபரணமாம். கலனிறைந்தமங்கையருக்கு நலனிறைந்த ஆபரணம் நாணமென்பதேதான். மாதராடவர்கள் கூடுங்காலத்திலும் அந்நாணம்நீங்காமல் சரசஞ்செய்து அநுபவிப்பதுவே பொன்னாபரணங்களிற் சிறந்த நல்லாபரணமாகும். இப்படியிருக்க, எனக்குப்போதுமான பலமிருந்தும் என்கைக்குத்தக்க கதாயுதமிருந்தும், தனஞ்செயனுக்குச் சௌரியபராக்கிரமமிருந்தும் காண்டீவமிருந்தும் என்ன லாபம்? அத்தினபுரத்தில் மாயச்சகுனியுடன் சூதாடித்தோற்றபோதும் உன்னைத் துச்சாதனன் இழுத்துவந்தபோதும், இராசசபையில் மானபங்கம் பண்ணியபோதும், துரியோதனன் கர்ணன் இவர்கள் வட்புவார்த்தைகள் பிதற்றியபோதும், ஆற்றக்கூடாமல் உடல்பதறியெழுந்த எங்களை ஆக்கிரப்படவே

ண்டாமென்று அடக்கிய எங்கள் இறைவனுகிய தருமராசன் இப்போதும் இவ்விராடன் சபையில் உன்னைத்தூர்த்திவந்த கீசகனைக் கொல்லவெ ண்ணிய என்கோபக்குறிதெரிந்து சவுக்ஞையாகச் சொல்லியுஞ் சாடை காட்டித் தடுத்துவிட்டனர். இவர் என்றும் இவ்வாறாகவே இருந்தால் எங் கள் மானமழிந்து போவோமென்பதற்கு ஐயமில்லையே; எங்களைச் சமயத் தில் மீறவொட்டாமற் வருத்தப் படுத்திவரும் யுதிட்டிரரா லுண்டாகிய என் மனத்தாபத்தையும், துரியோதனுதியரால் விளைந்திருக்கும் கோபத்தையும், இக்கீசகன்மேற் காட்டி என் இசையை நிலைநாட்டி யானை மத்தகத்தைப் பிளக்குஞ் சிங்கம்போற் பாய்ந்து, அவனுடலைவாட்டிக் குடலைப் பிடுங்கு கிறேன். இனிமேல் இவன்விடயத்தில் யார்குறுக்கிட்டாலும், நானுடன்படப் போவதுமில்லை. இவனை ஆருயிருடன் விடப்போவதுமில்லை. இவ்வுலகத்தில் அற்பர்களுடைய மனைவிமாரெல்லாரும் அதிக சுகமடைந்திருக்கும்போது, விற்பனர்களாகிய எங்கள் மனைவியான நீ மெலிந்து துன்பப்படவேண்டிய விதியென்ன? நல்லதாகட்டும். வல்லவருக்கு வாழ்க்கைப்பட்டும் இப்படி வருத்தப்படுகின்றோமேயென்று நீசற்றும் மனம்வருந்தாமலிரு. மாதரசியே! முன்னாளில் தீவினைவசத்தால் அகத்தியருக்கு அன்புடைய மனைவியாகிய உலோபாமுத்திரையென்பாள் தன்கணவனுக்குப் பணிவிடைசெய்து ஆகாரம் நித்திரையின்றி நெடுநாள் வருத்தப்பட்டுப் பின்னைநல்வினைப் பயத்தால் சுப மும் சுகமும் கீர்த்தியும் பெற்றாள், இதன்றியும், யயாதிமகாராசன் மகளாகிய சுகன்னி சவனகமகா முனிவனுக்குச் சிசுரூஷைசெய்து சிலநாள் வருத்தப் பட்டுப்,பின்பெருநாளும் பாக்கியத்துடன் வாழ்ந்து கண்ணியம்பெற்றுப் புண் ணியலோக மடைந்தாள்.

வீமராசன்மகளாகிய தமயந்திமக்களைப்பிரிந்து கணவனைநீங்கித் தன்னந் தனியளாய்க் காட்டில்அலைந்து கரும்பாம்பின்வாய்ப்பட்டு,வேடனால் வெளிப் பட்டுச் சிற்றன்னை வீடுசேர்ந்து, அங்கே குற்றேவல் செய்துகொண்டிருந்து, சிலநாளைக்குள் தாய்தந்தையரையடுத்துத் தூதுவிடுத்து தன்னைப்பிரிந்த கண வனைக்கண்டுகூடித் தன்சேயொடுமகிழ்ந்து, சிந்தைசிறந்து வாழ்ந்திருந்தனள். இவ்வாறு எத்தனையோகோடி அரசமாதர் படாதபாடும்பட்டுக் கற்புக்கோ ரிடையூறுமின்றிப் பதம்பெற்றிருந்தனர்; ஆகையால் தேவர்களானாலும் நல் வினை தீவினைகளை அநுபவித்தே தீரவேண்டும். இப்போது நமக்குண்டாகிய துன்பம் இன்னும் முப்பது நாளைக்குமேல் இன்பத்தை விளைவிக்கக் காத்திருக் கின்றது. 'பட்டவர் பதத்திலிருப்பர்' என்னும் பழமொழியறியாயோ? அப்படி யிருந்தாலும், இப்பகையை எவ்வகையிலும் விரைவாய் நானேமுடிக்கிறேன். பாக்கியவதியே அஞ்சவேண்டாமென்று வீமசேனன் சொல்லி முடித்தான். இம்மொழியைப் பாஞ்சாலிகேட்டு முரசக்கொடி முதல்வனுகிய தருமராசன் உமது குறிப்பையறிந்து கோபமேலிட வொட்டாமல், தடுத்தாரென்று மனக் குறைகொள்ள வேண்டாம். நம்பகைவர் நிச்சயித்த பன்னிரண்டு ஆண்டுங் கழித்து ஓராண்டு அஞ்ஞாதவாசஞ் செய்யும்படியாக இவ்விராடபுரத்திற்கு வந்து சிறிதுநாளாயிற்று. இன்னுஞ் சிலநாள் ஒருவரும் அறியாமலே இருந்து

காலம்போக்கவேண்டுமென்றும், இதற்குள்ளாக நம்மையாவரேனுங் கண்டால் பகை வெல்லவந்த நற்காலம் துர்க்காலமாமென்றும், பழயபடி வனவாசம் பண்ணவருமென்றும், அதனால் உங்கள் சீருஞ் சிறப்பும் சபதமும் பலவீனப் படுமென்றும் நினைத்து, உம்மை அவசரப்பட வொட்டாமல் அடக்கினர். அவர் காலதேச வர்த்தமானம் தெரிந்த புத்திமானாகையால், உமது வெகுளியைக் கண்டவுடன் அடக்கவேண்டிய கடமையே. அதனால் அவர்மேற்குற்றமில்லை. இப்பஞ்சையாகிய கீசகன் என்னைக் கொஞ்சமாக நினைத்தானே! அவனை நான் பார்த்து அடாபாவகாரி! உனக்குக் கேடுகால நேரிட்டது; துரோகி! எனக்கு கந்திருவர் ஐவர் கணவர்கள்; மிகுந்த திடவான்கள்; சத்துருவை வீரசொர்க்கஞ் சேர்க்கும் விடயத்தில் மகாவல்லவர்; மித்துருக்களுக்கு உத்தமகுணமுள்ள நல்லவர்; எல்லாமறிந்தவர்கள்; பொல்லாங்கொழிந்தவர்கள்; எங்குமிருப்பவர்கள். நீ செய்த தீமைகள் அனைத்தையும் தெரிந்துகொள்ளத்தக்க ஞானமுள்ளவர்கள்; சொல்லாமற் சொல்லிக் கொல்லாமற் கொல்லத்தக்கவர்கள். நீயும் உன்குடும்பமும் நீறாயழிந்துபோகவேண்டாமென்று, பலநீதிகளையும் பழமையாக நடந்திருக்கிற சில செய்திகளையுஞ் சொன்னேன். அக்கீசகன் நான் சொல்லியவற்றை அலட்சியஞ்செய்து போ போ அவர்கள் எப்படிப்பட்ட கந்திருவாரானாலும் என்முன் னிற்பரோ? என்று ஏசித் துரத்திக்கொண்டு வந்தான். அந்தப்பதிதன் உமக்குமுன் எதிர்ப்படுவானாயின் என்னபாடுபடான். கருடனது நிழல்பட்ட பாம்புபோல் கெடுவான். என்மனம் பற்றி எரிகின்றதே. அந்நாசகால கீசகன் வந்தவழிபோன வழிதெரியாமல், நொந்தழியும்படி நீர் பிரவேசிக்கவேண்டும். ஆனால் ஆத்திரப்படவேண்டாம். இன்னும் இரண்டொருநாள் காலதாமதஞ்செய்து இவனைத் முடித்தால் விரதசாரணிக்கு அன்பர்களாகிய கந்திருவர் கீசகனைப் பிடித்துத் துடிதுடிக்க அடித்து முடித்துவிட்டார்களென்று பேசிக்கொள்வார்கள். அப்போது உம்மேல் ஐயங்கொள்ளவே இடமிராது. ஆகையால் உமதுயுத்திக்கு இசைந்தபடி பார்த்துக்கொள்ளுமென்று துரோபதி சொன்னாள். அக்கற்புடையாள் வார்த்தையை வீமன்கேட்டுப் பாஞ்சாலியே! கீசகனைக் குறித்துச் சிறிதேனும் நீ யோசிக்கவேண்டாம். அவனென்றைக்கு உன்னைத் தொடர்ந்தானோ? அன்றைக்கே அழிந்தானென்று நம்பு. உன்னிட்டமெப்படியோ? அப்படியே அவனுயிரை நட்டப்படுத்திவிடுகின்றேன்.

ஆனால், இப்பொழுதோ விடியற்காலமாயிற்று. இனிநாம் அக்காரியத்திற்குப் பிரவேசித்தால், அஞ்ஞாதவாச ரகசியம் வெளிப்பட்டுப்போய்விடும். தருமபுத்திரர் சித்தத்திற்கு மெத்தவருத்தம்வரும். அன்னமே! நீ முன்னே சொன்னவண்ணமே எண்ணித்துணிவது கருமமாதலால், இன்றிரவு முழுதும் நாளைப்பகல் முப்பதுநாழிகையும் பொறுத்து நாளையிரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நீ அச்சுதக்கணைமாளிகைக்குப் போவையேயாகில், அத்துர்ப்புத்தியுள்ளகீசகன் நாளைக்காலமே உன்னிடத்திற்குவந்து இறுமாந்து கர்வங்கொண்டு இப்பொழுது என்னசொல்லுகிறாய்? விரதசாரணி! நானுன்னைத் துரத்திவந்தபோது என்னை யார்கேட்டார்கள்? யார்தடுத்தார்

சள்? எனக்கும் எதிரில்லை. உனக்குந் திக்கில்லையென்றுசொல்லி, மிக்கதாராளமாய்க் கிட்டிப்பேசுவான். அவனை நீ பார்த்தவுடனே அன்புள்ளவனைப்போல் அரைக்கண்பார்வைநாட்டி, அதிமோக முகநய சாடைகாட்டி, ஆசைவிநய அபிநயமீட்டி, மோகவிடத்தை அவன் முடிமேலேற்றி, உன்கற்புக்கு மாத்திரம் பழுதில்லாமல், அக்கயவனுடன் கலந்துபேசி விராடபுரத்திற்கு மேற்கில் மாஞ்சோலைசூழ்ந்த வசந்தமண்டபத்தில் நாளை இரவிலே பத்துநாழிகையில் அவனை வரும்படியாகப் பக்குவப்படுத்திக் கொள்ளென்று யுத்திசொல்லித் துரோபதியை அனுப்பி விட்டுத் தருமராசனுக்கிளைய சத்தியவிரதனும் கருமலைபோல் வளர்ந்த இருபுயமுள்ளவனும் பதினாயிரம் யானைப்பலம் பெற்றவனுமாகிய வீமசேனன் நெய்வார்த்த நெருப்பெனப்பொங்கி முகம்வேர்த்து, நித்திரைபிடியாமற் சித்தம்பிரமித்துப் பகலிரவென்பதொன்றும் பாராமல் தான்குறித்த கால அளவைக்கருதிச் சுடச்சுடவே முடிப்பதற்கில்லையே என்று மனக்கலக்கங்கொண்டே படுக்கையில் மல்லாந்தெண்ணமிட்டுக் கொண்டிருந்தான். இத்தன்மையனாயிருந்த வீமனிடத்தில் விடைபெற்றுச்சென்ற விரதசாரணி சுதக்கணைமாளிகைக்குச் சென்று பொழுது விடியுமளவும் ஒரு வகையாய் முகங்கவிழ்ந்து கொண்டிருந்தாள். அப்படி யிருந்த பாஞ்சாலி மனோதுக்கம் பரிகரிப்பதுபோல், ஒளியைக்கூட்டி இருளையோட்டி அவள்முகத்தை மலரச்செய்வதுபோல், தாமரைமலர்களை மலரக்காட்டிக் கதிர்க்கிரணங்களை நீட்டிக்கொண்டு சூரியன் உதயமானான்.

அழகிய உதயகிரியிலெழுந்த அருக்கனைக்கண்ட விரதசாரணிவழக்கப்படி காலைக்கடனைமுடித்துச் சுதக்கணைக்கு மலரொடுத்துத் தொடுத்துக் கொடுப்பதற்குப் பூஞ்சோலைக் குட்புகுந்து வரும்போது, இராசபத்தினியாகிய சுதக்கணைமுன் தன்னை நிந்தித்த நிற்பாக்கியவசத்தால் மனம்வருந்திச்சென்ற கீசகன் தன்தமக்கையைச் சந்தித்துப் பொறுமைகேட்டுக்கொண்டு வருவோமென்று நினைத்து மந்தமாருதமுலாவிய நந்தனவனத்தினைநாடி வந்தான். அவன்வந்தவழியில் சந்திரவுதயம்போல் கொத்துமலர் பறித்துக்கொண்டு நின்ற கோதையன்னவள் அந்தகனைக்கண்ட ஆருயிர்போலநடுங்கித் தெளிந்த சிதேந்திரியர்களைப்போல் உடனேதேறி மனந்தளராமல் சங்கடப்படாமல் தள்ளாடி ஓடாமல் தவித்து வாடாமல் சற்றும் அச்சமில்லாமல் தலைகுனிந்து தன் காற்புறவடியைப்பார்த்து நிமிடத்திற்கொருதரம் கீசகன் முகத்தைநோக்கிச் சற்றேபுன்சிரிப்பாக நகைத்து அவனது துர்ப்புத்தி படருவதற்குத் தானே கொழுகொம்பாகி வீமனிடத்தில் பேசிக்கொண்ட சங்கேதப்படி நிலைசெய்ய வெண்ணினாள். இவ்விடத்தில் கற்புநிலைதவறாமல் பொற்பாவைபோலிருந்த மாதினைப் பழிவழிக்குவந்தமூடமூடன் கண்ணுற்றுச் சந்திரனைக்கண்ட கடல்போல் பெருகிச் சந்திரகாந்தக் கல்லைப்போலுருகிச் செல்வத்தைக்கண்ட தரித்திரன்போல் மகிழ்ந்து கல்விப்பொருளிற் கற்பனையலங்காரக் கவிதைமேற்கொண்ட கனவான்போல் முகமலர்ந்து விழிகுளிர்ந்து அவள் கால்முதல் தலைவரைக்கும் இமையாமல் பார்த்துத் தன் அறிவுகெட்டு அற்பப்புத்திமேலிட்டுத் திக்குநோக்கிக் கும்பிட்டு விரதசாரணி! நீ எனக்குப்பிரா

ணுதாரமே யன்றி வேறன்று. நான்சொல்லப்போவதை நன்ருய்க்கேள். இப் பட்டினமும் இந்நாட்டுவெளப்பமும் விராடராசனுடைய வாழ்க்கையும் என்த மக்கையாரது மாங்கலிய சூத்திரமும் இதோ! என் இடதுகையில் மூடிவைத் திருக்கின்றேன். என்கையை விரித்துவிடுவேனுயின் அவைகளெல்லாம் தூரு வாசர்சாபத்தால் சமுத்திரம் போயழுந்திய இந்திரன் செல்வம்போலாய்வி டும். என்னை என்னமோ வென்றெண்ணுதை. முன்னமே என்வல்லமையா வுஞ் சொல்லியிருக்கிறேன். உன்னைநான் துரத்திவந்தபோது சபையில் யாரெ ன்னைத்தடுத்தார்கள்? எவர்கள் என் அருகில்வந்தார்கள். விராடராசனுவது ஏனிப்படிசெய்தாயென்று கேட்டானே? உனக்காயினும் உதவியேதேனுஞ் செய்தானே? ஒன்றுமில்லையே. இன்னும் நான் சொல்லவேண்டுமோ? இவ்வேலை என்னையல்லாமற் இன்னொருவன் செய்திருப்பானுயின், இந்நேரம் அவனை எமலோகத்தில் புழுவாய்த்துடிக்கச்செய்வேன். யாவரும் என்காலில் வீழ்வ தினல், சகலமுமெனக்கேசொந்தமென்று உனக்கே தெரியவில்லையா? இவ் விராடராசனுக்கு நான்கட்டிவைத்திருக்கின்ற பட்டத்தை இப்பொழுதேஉன க்குங்கட்டி உன்னைப் பெண்ணரசியாக்கிவைக்கிறேன். வேண்டுமானல் பிரத் தியக்ஷமாய்ப்பார். இஃதன்றியும் உன்னைக்காக்குங் கந்திருவருண்டென்று பேதைமதியால் நம்பிப் பெருமோசம்போயிருக்கின்ருயே! என்னைப்பேசா தும் பேசிக்கருக்குகின்ருயே! வீண்கர்வங்கொண்டு செருக்குகின்ருயே! இப் படிப்பட்ட சமையத்தில் உதவிசெய்யவாராதவர்களையும் உனக்கு உரியவர்க ளென்றும் எண்ணலாமா? அவர்கள்பண்டவாளத்தையும் பட்சத்தையுங் கண் டுகொண்ட நீ இனிவேறுபேசவும் போமோ! அற்பமனிதர்பேச்சு அவலமாய்ப் போயிற்று. நான் ஆருக்குமடங்காதவன், ஆர்படைக்குந்தோராதவன், என்னை க்குறித்து இன்னுமென்ன சொல்லப்போகின்ருய். உன் எண்ணந்தானென்ன; அடிவண்ணமகளே! ஒருவேளைஎன்மேற்குற்றம் எத்தனையோ இருக்கலாம். சி றியோர்செய்தபிழையைப் பெரியோர் பொறுக்கவேண்டுமென்று புண்ணிய வான்கள் பேசியிருக்கின்றனர். அம்மொழிக்கு விக்கினமின்றி மன்னித்து என்னைக்காத்துப் பொறுமையுடன் ஆதரிப்பது உன்கருணைக்குரியகடனென் று தன் இருகரத்தையுந் தலைமேற்குவித்துச்சேவித்து என்கன்மனம் இளகி என்கருத்து முற்றவேண்டுமென்று காலில்வீழ்ந்தான்.

அவனை வண்ணமகள் பார்த்து, முகநயத்துடன் புன்முறுவலுங்காட்டி, நாம் நினைத்தகாரியம் இன்றைக்கே நிறைவேறுமென்று மாயச்சாயல் மயக்க நோக்கம் வஞ்சனைப்பேச்சுமுதலிய மார்க்கங்களினல் வசனிக்கத்தொடங்கி ஞள். சிங்கபல கீசகராசனே! நான் உம்மைத்தடுத்ததும் விரகதாபப்பட விடுத் ததும் என்னத்தினலென்ருல், என்மேலான மரபினலும் நல்லொழுக்கத் தினலும் நான்கொண்டிருந்த விரதத்தினலும் உமது எண்ணத்தைப் பின்னப் படுத்தினேன். நீர் என்மேல் ஆசைப்படுமுன்னமே நான் உன்மேல் ஆசை கொண்டிருந்தேன். அஃதல்லாமலும், நீரென்மேல்வைத்த மோகம் நிலையா னதுவோ? நெறியானதுவோ! வேறொரு பெண்ணைக்கண்டால் பின்வாங் குமோ? மனமேங்குமோ? என்னமோ? ஆண்பிள்ளைகள்புத்தி சபலமாமே

யென்று சோதிக்குநிமித்தமாக இட்டமில்லாதவள்போன்று, அபிநயித்தேன். என்மெய்தொட்டிருந்த கந்திருவர் ஐவரும் என்னைக் கைவிட்டார்போலுங் காண்கின்றது, இனிக்காரியமேயில்லை, கனவானே! என்மேல்காவலுமில்லை, நிராதரவான என்னைத் தாரதரமறியத்தக்கநீர் அபேட்சித்தபோதே நான் புநிதவதியாயினேன். என்னைப்பெண்டாள நினைத்த உமக்குச் சீக்கிரத்தில் மேலானபாக்கியமுண்டாம். என்னால் உமக்குவிளைந்த வருத்தம் இன்றே கூண்டோடுபோய்விடும். பெண்கள் குணமறிந்திருந்தும், வீணாக இத்தனை தூரம் பிரபலப்படுத்திவைத்தீர். நீர்காணாதுகண்டு கருதிமோகித்ததும் வீணாசைகொண்டு விறுதாவாகப் பழிசுமந்ததும் நான்நாணாதுநாணி நலியவாதித்ததும் நீயென்னைப் பிடிக்கவந்ததும் நான் இராசசபையிலோடிவிழுந்ததும் அங்கே உமக்கோர்அனர்த்தம் விளைந்ததும் ஊர்நாடெல்லாஞ்சிரிக்க உடம்பெடுத்ததும் ஏதோ? காலவித்தியாசத்தால் நடந்து போய்விட்டது. போனதுபோகட்டும்; இவ்வுலகத்தில் ஆலவிடத்தையும் அந்தகனையும் களிற்றியானையையும் வேங்கைப்புலியையும் அறிவில்லாதமூடனையும்ஒருவாறுநம்பலாம். சேலைகட்டியமாதரைக் கணமும்நம்பப்படாது. அஃதெவ்வாறெனில், இந்திரன்முதலிய தேவர்கள்வந்து, ஆடையாபரணந்தந்து ஆசைப்பட்டாலும் மாதர்கள் தாங்கள்கொண்ட மையலை வெளிப்படுத்தாமல், ஆசையற்றவர்போல் முகத்தைச்சுளித்து, முடுக்காய்முறுக்கி ஏன் என்னைப்பார்க்கின்றனை, நானென்ன வேசியா? தாசியா? உங்களுக்குத் தங்கைதமக்கையில்லையா? எங்கள் வீட்டார்கண்டால், சும்மாவிடுவார்களா? என்று தலைகுனிந்து கலகலவென்று கண்ணீர்சொரிந்து சிறுநகைகாட்டிக் குறுவியர்வுவழித்தெறிந்து மாராப்புத் துணியைப் பத்துத்தரமிழுத்திழுத்துச்சொருகிவாயைமூடிக்கையைநெரித்துச் சாலமான மாயநடைகளைகாட்டிக் கால்கடுக்க நிற்பானேனென்று தனக்குத் தானே பேசிக்கொண்டு அப்பாற் சிலதூரம்போய் இப்பால் வந்து எட்டிப் பார்த்து ஒருபக்கத்திலொதுங்கித் தலையை நீட்டிக்காட்டி மறைந்து மறுபடியுங்கிட்டி உறவுபோற்கலந்து உடனே ஓடி ஊடிக்கலந்து கூடித்திரிவா. இது பெண்களின் கெட்ட இயற்கை. இப்படிப்பட்டவர்கள் மனத்தையும் எப்படித் தெரிந்து கொள்ளலாமென்றால் அந்நிய மாதர்களாவது தாதிமார் முதலிய வேலைக்காரிகளாவது குழந்தைகளாவது அருகே நின்றால் அவர்கள் மேல் விழுந்தும் வல்லிக்கொடிபோல் துவண்டு வளைந்தெழுந்தும் பிள்ளையை அணைத்துக் கொஞ்சி முத்தாடியும் பூவைமுகந்தும் பெருமையாய் டம்பம் பேசியும் விறுதாவாய் ஒருவரையேசியும் அற்பமானமொழிகளை ஓடியமாய்ச் சொல்லியுங் கூசுவார்கள். கணவன் அவர்களைக் கண்டால், மாதர்கள் நிலநோக்குவார்கள். கணவன் அம்மாதர்களைப் பார்க்காதபோது தலையெடுத்துக் கணவனை நன்றாய்ப்பார்த்து நாணி நகைப்பர். இப்படி இன்னும் அநேக சாலதந்திரங்களுண்டு. இக்குறிப்புகளை யெல்லாம் வேறுபாடின்றிச் சரசநாயகன் தெரிந்து மேளத்திற்குத் தகுந்த தாளம்போட்டு எண்ணத்தை முடித்துக் கொள்வான். மற்றவன் கண்டால் அச்செய்தியறியாமல் இஃதெப்படிபோமோ? என்னுமோ? என்றுபயந்து ஓடிப்போவான். ஆதலால் பெண்கள் கொண்ட

மோகம்கல்லாதான்கற்ற கல்வியைப்போல்வெளியாய்ப்போய்விடும். இக்காரியங்தெரியாமல் அவசரப்பட்டவர்கள்பலனடையார்கள். நீரும் அவ்வாறே ஆத்திரப்பட்டுவிட்டீர். இப்பொழுதுதானென்ன? உமது இட்டத்தை என்னிட்டப்படி முடிப்பதனுற் பாவமில்லை. உமக்குள்ள காமவெள்ளத்தைக் கடந்து கரையேறுவதற்கு வழியும் காட்டுகின்றேன். நீர் கள்ளமில்லாமல் வாரும். எத்தனைவகைச் சாகசங்கற்றிருந்தாலும், உள்விட்டிற் கரணம்போடலாகாது. என்கணவராகிய கந்திருவர்கள்ஒருவேளை இச்செய்தியைத்தெரிந்துவந்து விட்டால் உம்முயிரும்போம்என்தலைமயிரும்போம். அல்லாமலும்,நேற்றுஎன்னைத் தூத்திய உம்மை இந்நாட்டிலுள்ள பெண்டுகளும் புருடர்களும் இராசன் முதலிய அனைவரும் நன்றாயறிந்தார்கள். உலகப் பிரசித்தியாய்விட்டது. அப்படியிருக்க நாமிருவரும் இன்றைக்கு உறவாடுவதைப் பார்த்தால் மெத்தவும் எளிதஞ்சொல்லிப் பழிப்பர்.

உம்முடைய தமக்கையாகிய சுதக்கணைக்குத் தெரிந்தால் என்னைமிகவு நம்பமாட்டாள். இதுவரையிலும், நான்பிழைத்த பிழைப்பும் பேய்ப்பிழைப்பாய் விடும். அல்லாமலும் பல பொல்லாங்குகளும் விளையும். இது நன்றன்று. சந்தனமணிந்த தோளானே! நீ இன்றிரவில் பத்துநாழிகைக்குமேல் வருவாயாகில், உன்னிட்டப்படி முடியுமென்று பாஞ்சாலி சொன்னாள். அத்தேன்மொழியோகீசகன்காதிற்புகுந்து அமுததாரைபோல் விரகாக்கினியை ஆற்றிய போது வெளியெழும்பிப்போக வழிபார்த்திருந்த பிராணன் நிலைத்து இளைத்தவுடம்பும் பூரித்துத் துன்பங்கள் நீங்கி இன்பப்பயிரோறத் தேகம் பரவசமடைந்து மோகஞ்சிறந்து மேகங்கண்டாடு மயிலே! இப்போதன்றோ உன் சொல்லாகிய ஆபரணம் என்காதிற் கணியாயது. இக்கர்மபூமியில் நான் உடலெடுத்தபயன் இன்றுதான் பயன்பட்டது. துர்ப்பலனாகிய நான் நற்பலனுற்றேன். என்பாவங்கள் யாவும் பறந்தோடிப் போயின. நானிதுவரையிலும் பண்ணிய புண்ணியம் இன்றே ஈடேறிற்று. என்பாக்கியமே பாக்கியம். நான் பிழைப்பதற்குத் துணைக்காரணம் உன்வாக்கியமே வாக்கியமென்று வாய் புதைத்துக் கைகட்டி மெய்யொடுங்கி வணங்கிப்பணிந்து என் ஆவியே! பாவியாகிய நான் எவ்விடத்தில் வரும்படியாய்க்கட்டளையிட்டருளுகின்றனை? என்னிட்டகாமியமே! என்று கேட்டான். கனவானே! நமது விராடராசனது கோட்டைக்கு மேலண்டையி லிருக்கின்ற மாஞ்சோலையிற் குயில்கள் கூவவும் மயில்களாடவும் கிளிகள்கொஞ்சவும் அளிகள்மிஞ்சவும் அலங்காரமாகப் பளிங்குக் கற்களாற் கட்டப்பட்ட வசந்தமண்டபத்தில் வந்துசேர்ந்துவிடு. நீ வருமுன்னமே நான் வந்திருக்கிறேன். மலைகள்மேலும் ஓட்டுந்தேரினையுடைய வல்லவனே! இப்பொழுது நான்சொன்னஇடம்சந்தடியற்ற தனியிடமன்றோ? என்று விரதசாரணி வினவினாள். அம்மொழியைக்கேட்ட கீசகன் ஆகா! அதுவேயெனக்குந்தகுந்த இடம். தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய வண்ணம் விரைவாய் வருகின்றேன். உமதுதிருமேனிபுழுதிபடிந்து அசுத்தமாயிருக்கின்றதென்று கூச்சம் வேண்டாம். உமக்கு நல்லநல்ல ஆபரணங்களும் விலையேறப்பெற்ற ஆடைகளும் புநுகு சவ்வாது கதம்பம் கத்தூரி அத்தர் பனிநீர்

முதலிய பூச்சுவைகளும் பூச்செண்டுகளும் பஞ்சகச்சாய பரமான்னமும் பல காரங்களும் பழவர்க்கங்களும் பஞ்சவிடய தாம்பூலங்களும் என்தலைமேல் சுமந்துகொண்டு வருகின்றேன். நீர் அவைகளை யங்கீகரித்து என்கோரிக்கை யை யீடேற்றவேண்டும். கோமளமே! என்குல தெய்வமே! சித்தசன் கொலுக்கூடத்திற் கமைத்த பொக்கிடமே! என் பிராணனை உமக்கே யொப் பித்தேன். இதையன்றி வேறெயுபசாரஞ் சொல்ல அறியேன். அடிமையாகிய சிறியேன். என்னுயிருள்ளவரையும் உம்மை நான் பிரியேன். மறுமாதரை நோக்கேன். என்மேல் கருணைபாலிக்க வேண்டுமென்று விடைபெற்றுக் கொண்டு காளவிடத்தைத் தாகத்திற்கு உட்கொள்ளக் கருதிய தரித்திரன் போலும், கீசகன்சென்று இச்சூரியனெப்பொழுது தொலைவானென்று அந்தக ன்பாசந்தன்னைக்கலக்கும் அத்தமானத்தை நாடியிருந்தான். இப்பால் கொலை செய்யுங் கூரியவேல்போன்ற கண்ணுளாகிய பாஞ்சாலி சுதக்கணை மனைக்குப் போய்ப் பூமாலை தொடுத்து பூசுவனவுங் கொடுத்து அவளுத்தரவின்மேல் மடைப்பள்ளிக்குச்சென்று மதகரி வீமனைக்கண்டு நாம் பேசிக்கொண்டபடி அவனும் இசையச்செய்து கொண்டேன். அப்பால் தெய்வச்செய லெப்படி யோ? என்றாள். அந்தப் பாஞ்சாலியை வீமசேனன் பார்த்து காதலி! நீ யேன் கவலைப்படுகின்றாய். ஒருவேளை அக்கீசகன் வாராமல் போவானாகில், அவனுடைய வீட்டுக்கு நானேபோய்க் கொல்லுகின்றேன். அஞ்ஞாதவாசந் தவணைக்குள் இவ்வூரார் அறிவார்களேயென்று நினைப்பையாகில் இந்தவிராட புரத்திலுண்டாகிய ஆண்பெண் அடங்கலையுங்கொன்று துரியோதனனுதியருக் குச் செய்தி தெரியாமல் பண்ணுகின்றேன். சிலவேளை துரியோதனனறிந்து பெரும்படை கொண்டுவந்து அஞ்ஞாதவாசம்பூரணமாய்நிறைவேறாமற் குறை வுபட்டுக் கெட்டுப்போனமையால் மீண்டும் பன்னிரண்டாண்டு வனவாசம் பண்ணவேண்டிய நிபந்தனைப்படி போகவேண்டுமென்று புகன்றானாகில், அப் போதே அத்துரியோதனனையும் கௌரவரையுங் கொன்று, பள்ளத்திற்புதை த்து அத்தினபுரம் விராடபுரம் உபப்பிலாவிய முதலிய நரகங்களுக்கெல் லாம் தர்மராசனைப் பட்டங்கட்டிவைத்து, யாவருங் கொண்டாட எங்கும் பிரக்கியாதியா யிருப்பேன். 'சண்டிபுரண்டால் காடு கொள்ளாது' என் னும் செய்தி யறியாயோ? சமுத்திரந் தடையாயிருப்பது கரையினாலேயா? சத்தியத்தினாலேயா? பாஞ்சாலி! நீயாதொன்றுக்கும் பயப்பட வேண்டாம். போவென்றனுப்பினான்.

அவ்வாறே விடைபெற்றுக்கொண்ட பாஞ்சால ராசகுமாரி வீமசேன னைப் பார்த்து கெடிவீரசிங்கமே! அங்கம் பங்கப்பட்டழியப் போகின்ற கீசகன் என்சொல்லை நம்பி எப்படியுந் தப்பாமல் வருவான். நீரின்று இரவில் வந்து, காலதாமசஞ் செய்யாமல் சந்தடி காட்டாமல், வேலையை முடிக்கவேண்டும். வேந்தனே! இப்படியாக இதனை நடத்திவிட்டால் சாந்தமூர்த்தியாகிய தரும ராசனுடைய சித்தமுங்களிக்கும். இச்சொல் வெளிப்படுமாயின் நமதெண்ண மெல்லா மழிந்துபோய்விடும். அன்றியும் பதிவிரதையைக் கருதிய பாவி யாகிய கீசகன் பாழாய்ப்போனான் பார்த்தீர்களாவென்று உலகிலுள்ள பதி

விரதைகள் மகத்துவமாய்ச் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகளுங் கெட்டுப் போய்விடும். பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் பண்ணும்போது தவணையொரு வருடங் கழிப்பதற்கு முன்னமே வெளிப்பட்டு விட்டார்கள். சொற்சோர் வுடையவர்கள், பஞ்சவர் பேச்சுப் பஞ்சுபோலாச்சே, பாரும் பாருமென்று யாவரும் நகைப்பர். நீங்காப் பழிச்சொல்லு நிலைபெற்றிருக்கும். ஆகையால் நீர்மனம் பொறுத்து அவசரப்படாமல் ஆடம்பரங் காட்டாமல் யாருமறியா மல் அடக்கமாய் முடிக்கவேண்டுமென்று கூறினாள். அம்மொழியைக்கேட்ட பலாயனன் சிந்தைமகிழ்ந்து நல்லதப்படியே யாகட்டும். நீ மாத்திரம் பிற ரறியாமல் விரைவாய் அவ்விடம்வந்து சேரென்று தலைவாயல் வரையிலும் வந்து, விடைதந்து இச்சூரியனெப்பொழுது தொலைவானென்பதாய்ச் சிந்தை வருந்தி மயங்கியிருந்தான். இவ்விடத்தில் பாஞ்சாலி சுதக்கணைக்கு வேண் டிய சித்திரான்னமும் திவ்விய மணக்குழம்பும் கச்சாயவகைகளும் கதம்பப் பொரியலும் அறுசுவையுண்டியும்சுயம்பாகியாகிய வீமனிடத்தில் வாங்கிவந்து கொடுத்து வழக்கப்படி வேடிக்கையாக விளையாடிச் சந்தணுதிகந்தந்திமிர்ந்து சிந்தைநோயற்ற செல்வியைப்போல் கபடமில்லாமல், யாருடனுங் கலந்துற வாடிக் களங்கமில்லாமற் காலம் பார்த்திருந்தாள். அப்படி யிருக்கும்போது எட்டுத்திசையுங் கெட்டழிந்தோடிய இருளெல்லாந் திரண்டு தம்பகையாகிய சூரியனை வெல்வான் வந்ததுபோல் சூழ்ந்து கொண்டது. அவ்விருளைக் கண்டு பாவத்திற்குப் பயந்தோடும் பாக்கியவான்களைப்போல் புண்ணியப் பொருளாகிய வெய்யவன்மேற்றிசைபுகுந்து அத்தமானகிரியை அணைந்தான். அக்காலத்தில் அளவிறந்த ஆசையை அடைத்து வைத்திருந்தான் மோசம் போவதறியாமல், வண்ணப்பெண்மேல் மையல்கொண்ட காமவிகாரத்தினால் வாசநீராடி பூசாவிதி முடித்துப் போசனமுண்டு இளைப்பாறவுஞ் சமயமெய் தாமல் சந்தன குங்கும சிந்தூர பாளித கந்த கதம்பமிருந்த சுகந்த நிறைந்த மகரந்த மலர்மாலையும் நவமணிபதித்த அழகிய ஆபரணமும் சித்திரித் தெழுத் தினிற் பிரித்துக் கொத்து முத்து வைத்திழைத்த சரிகைகள் சுற்றிய ஆடை யும் கொத்துச்சரப்பணி இரத்தினமுருகு முத்தினா மோதிரம் அத்தகடகம் விசித்திரமகுடம் பவித்திர முதலிய வணிகளுமணிந்து வாசத்தாம்பூலமும் போசனபாயச பொரிவிளங்காயும் பண்டுபலாதிகளுங் கொண்டு கறுத்த இரு ளில் காலால்வழிதேடி தென்றிசைக் கோமகன் திசைநோக்கிச் செல்வது போல் அந்த மடந்தை சொன்ன வார்த்தையை மெய்யென்றே நம்பிச் சுதக் கணை தம்பி மாஞ்சோலையி லிருக்கிற வசந்தனுக்கிசைந்த மண்டபமே நாடி யோடிவந்தான். 'இவ்வாறுவந்த கீசகனுடைய பிராணனென்னும் பனியைக் கெடுக்கப்புகுந்த சூரியன்போன்ற பாஞ்சாலி இரவுதோன்றியவுடனே விரைவி னீராடி நித்திய செபமுடித்துச் சூரியன்முதலிய தேவர்களையுந் தொழுது அந்தப்புரம் விட்டுப்புறப்பட்டுப் பகைவர்க ளுயிரையும் சமையல் வேலைகளை யும் இம் என்பதற்கு முன்முடிக்கும் செம்பொன்மலையை நிகர்த்த தோளும் வீரகண்டை தாங்குந்தாளும் உடைவாளுமுடைய வீமசேனனிடத்திற்குப் போய் விரைவிற் புறப்படுமென்றாள். அவள் சொல்லைக்கேட்ட வீமசேனன்

எவ்வேளையில் எவ்வேடமெடுக்க நினைத்தாலும், அவனிட்டப்படி அமைய வரங்கொடுத்திருக்கும் எமதருமராச னருளினாற் சகலாபரண அலங்கார சௌந்தரியப் பெண்ணுருவெடுத்துக் கையில் அள்ளிக்கொள்ளத் தக்கதாய்க் கலந்த கள்ளிருளில் மெல்ல மெல்லச்சென்று, கீசகக்கள்ளன் வருவானோ வாரானோவென்று மனக்கவலைகொண்டு கநகமயவுசித சிகரமாடமுடைய பளிங்கு மண்டபத்தை அடுத்துத் தெய்வப் பெண்ணாகிய பாஞ்சாலியை அவ்விடத்திலொளித்து வண்ணமகள் போலாகிய தன்னுருவத்தைத் தூணில் மறைத்துக் கண்சிமிட்டாமல் காட்டுவழிமேல் நாட்டம் வைத்திருந்தான்.

அவ்வேளையில் செத்தபிணம் மிக்கபணிபூண்டு வருவதுபோலும் எக்கியத்திற்கிசைந்த நெய்யை நக்கிப் புசிக்கவரும் நாய்போலும் வருகின்ற கீசகன் உயர்ந்த மாமரச்சோலையில் சாந்தினால் மெருகிட்ட வெண்ணிறமுள்ள வசந்த மண்டபத்தைக் கண்டு கெண்டையங்கண்ணா ளிங்குவந்தனளோ? ஒண்டியாய் வரப்பயந்து நின்றனளோ? வந்து என்னைக் காணாமையாற் சென்றனளோ? மறைந்திருந்து மனஞ்சோதிக்கின்றனளோ? என்னமோ? அவளெண்ணம் அறியேன், வாசப்பூமலர்மேனி மானே! என்று கூவிக்கொண்டு நின்றான். அவனை ஆசானுபாகுவாகிய தண்டதரனென்னும் வீமன்கண்டு வெட்கங்கொண்டொதுங்கும் மாதரேபோல் அத்தூண்மறைவி லொதுங்கித் தலையைநாட்டிச் சந்திர பிம்பமுகங்காட்டி, இன்னும் பற்பல அபிநயங்களால் அவனைப் பேய்போலாட்டி அடங்கிக்கிடந்த காமத்தீயைத் தொடங்கச் செய்த சிமாட்டியை அக்கீசகன் கண்களாரக்கண்டு பெண்ணுருவெனச் சிந்தையுட்கொண்டுகுனிந்துநேராக அத்தையல்கால்மேற்பணிந்து இவ்வனத்துள் என்னையொருபொருளாகவே மதித்து, என்மேலிட்டம்வைத்து, இத்தனை தூரம் தனித்துக் கால்வருந்தத் தக்கதாக வரும்படி பொருத்துகின்ற தவம் யாருடையதோ? இத்தலம்புரிந்த தவமோ? என்குலம்புரிந்த தவமோ? வலம்புரிக் கழுத்தினையுடைய மாதே! அறியேனறியேன். காலதாமச மாயிற்றேயென்று கோபங்கொள்ள வேண்டாம். நான் மானாபிமானம் பாராமல் உம்மைத் தூரத்திவந்து மனக்குறையினை விளைத்தேன். அப்பிழைபொறுத்து எளியேனை ஆண்டருள வேண்டுமென்று நவம் பொலிமணிமுடி நிலம்பட வீழ்ந்து மீண்டுமெழுந்து பின்னும் விரைந்து அன்னமே! என்று புகழ்ந்து செங்கையிரண்டையுஞ் சிரமேற்குவித்து அவள்முகத்தைப் பார்த்துச் செவ்விள நீரைப்பழித்துத் திரண்ட இரண்டு கொங்கையையுடைய மங்கையே! புனல்படிந்து புகைபரந்து புறுகளைந்து பூவணிந்து புள்ளுறைந்து பொங்கு மங்குலைப் பொருத்தித் தங்குகங்குலைத்திருத்தி முடித்த குழற்பூங்கோதையே! குழலிசைக்கினிய மொழிபலபயிலும் பேதையே! உமக்குத் தீதுநினைத்த மாபாவி யானாகையால் நீர் மனவைரம் வையாமல் என்னை யாட்கொள்ள வேண்டும். இக்கடுங்காட்டில் கொடியகபவர் மனமேபோற் கறுத்த இருளில் அடியேன் பொருட்டுக்கலவியை நாடிவந்து காத்திருக்கும். உமக்கு நானென்ன உதவி செய்யப்போகின்றேன்? எவ்வகையுபசாரம் பண்ணுவேன்? நீர் கிருபைவைத்து நடத்தநினைத்த உதவிக்குப்பிரதியுபகாரம் புரியவகையறி

யேன். நீரின்று கொடுக்கப்போகிற தனத்திற்கு நான்கோடிதனங் கொடுத்தாலும் ஈடாகாதே. என்னுசைக்கண்ணே! இனிமேல் நானென்செய்வேன், ஆயினும் பதிலுதவி செய்வதற்கு ஒருவகையிருக்கின்றது. அதென்னெனில், என்னுயிரை உமக்கு ஒப்பிப்பதுதான் உயர்ந்த கைம்மாறு. இதைப்பார்க்கிலும் விதியில்லை. இப்போதும்தமக்குவேண்டிய பொருள்களெல்லாம் இதோ கொண்டுவந்திருக்கின்றேன். தயையாய் அங்கீகரித்துக் கொள்ளும். திப்பிரமைகொண்ட என்னைத்தாங்கிக் கொள்ளும். ஏன்சும்மா விருக்கிறீர்? ஐயோ! பொழுது அநியாயமாய்ப் போகின்றதே. பலவுணவுப் பொருள்கள் ஆறியழிந்து போகின்றதே. கிஞ்சுகவாய்திறந்து கொஞ்சம் பேசப்போகாதோ! அஞ்சாதையென்று ஆதரிக்கப்படாதோ? கெஞ்சியவென்னை ஈடேற்றப் போகாதோ? தித்திப்பான உன்மொழி என்செவிக்கேறுங் காலமாயிற்று நீயிப்படி மர்மமாயிருந்தாயானால் மன்மதனால் நொந்து வெந்துபோன நான் கடைத்தேறுங் காலமெதுவோ? நீயெனக்கிசைந்து இவ்வளவுதூரம் அருகில் வந்திருந்தும் ஒட்டாமலெட்டியிருப்பது என்னபாவமோ? உத்தமமாதர்களுக்குள்ள இயற்கையோ? எதுவும் உன்கருணைக்கெதிர் நிற்கமாட்டாதே. தழைந்திருக்குந் தோப்பில் தனித்திருக்கு நாமிருவரும் கொஞ்சிவிளையாடவேண்டாமோ? ஆவிதுளங்கத் தாவித்துளைக்கும் பாவிமதன் கணையோ பொல்லாதே. என்னிட்டதெய்வமும் எவ்வகை ஐசுவரியமும் உன்னையன்றி வேறொன்றும் இல்லை. உண்மையாக நம்பினேன். உன்காலடியழகுக்கீடுபடாத என்மனைவிமார்கள் தேகத்தையும் அவர்கள்மேலுண்டான மோகத்தையும் இன்றேதுறந்தேன். உன்னாணை. என்கண்ணாணை. இன்றுமுதல் என்றென்றைக்குங் கண்ணெடுத்தே பார்க்கமாட்டேன். இதுவே சத்தியம். என் சொல்லே நித்தியம், உன்னையிணங்காத நாளே அநித்தியம். என்னைப்பற்றியெரிக்குங் காமாக்கினி வெதுப்பிக்கருக்கிக் கவிழ்க்கப் பார்க்கின்றதே. இத்தருணத்தில் நீகைகொடுக்க வேண்டுமே, இனித்தாளமாட்டேன். இன்னுஞ் சற்றுநேரம் போனால் உன்னை நான் ஆளமாட்டேன். வாளாயுதக்கண்வாய்ந்த என் மனோரதமே! என்று அவளுக்கு நேர்சென்று நின்று ஆகா! நீ முந்திப் பேசலாகாதோ? பேசினால் உன்வாய்முத்தஞ் சிந்திப்போய்விடுமோ? என்மேல் கோபமோ? அல்லது மனத்தாபமோ? பெண்ணரசே! என்றுபல்வாறுகப் பஞ்சைப்பாட்டைப் பாடினான்.

அவன்பிதற்றிய மொழிகளைக் கொஞ்சநேரம் வரையிலுங் கேட்டிருந்த வீமன் தன்முகத்தைக் கீசகனுக்குக்காட்டாமல் தூணில்மறைந்து ஒருபக்கத்திற் கொருபக்கந்திரும்பி அவனைப் பார்க்கப்பார்க்க மனமுறிந்து ஆணவமலமுதலான அஞ்ஞானவிருள்மூடி நிற்போர் வாசாகயிங்கரியஞ்சொல்லி ஊர்மெச்சப் பால்வார்த் துண்பார்போல் உலகமெச்சச்செய்கின்ற வெளிப்பகட்டுப் பூசாவிதியின் புன்பயனால் அப்பூசைசெய்பவரையும் அவர்கால்வழியையும் நாசமாக்க நகைக்குங்கடவுள்போல் நகைத்துக் கோபாக்கினியால் கீசகனைக்குறித்து வெறித்துப்பார்த்தான். அதுபோது கீசகன் கவுரவமாய்ச்சிரித்துவண்டுலாவு மலர்க்குழன்மாதே! என்மேலன்பு இன்றுதான் வந்ததோ?

இத்தனைநாட்சென்றதோ? இவ்வளவு தயவு போதுமென்று தன்னிருகரத்தி லுந்தாவி என்பிராண சஞ்சீவியேயென்று தழுவப்போனான். அத்தூணில்மறைந்திருந்தவீமன் கீசகன்கைக்குச்சிக்காமல் யானைத்துதிக்கைபோன்ற தன்னிரு கையையுநீட்டி முறைவழுவித் துறைதப்பித் தழுவநீட்டிய கீசகன் கையிரண்டையும் பற்றிக்கொண்டு நெருக்கினான். நெருக்கவே செந்தேள்கொட்டித் திகைப்பதுபோல் துடித்து உதட்டைமடித்து ஈதென்னவதிசயம்! ஐயோ! விபரீதமாகத் தோன்றுகின்றதே. பெருமோசம்போல் காணுகின்றதே, நாமெண்ணிய வண்ணமகளாயின், அவளுடைய உள்ளங்கை தாமரைமலர் போலு மெல்லியதாயிருக்குமே. இக்கைகல்லினுங்கடிதாகக் காணுகின்றதே. இப்படி எமலோகத்திற் கிழுத்துக்கொண்டு போகவந்த காலதூதராற் கழுத்திற்கிடுங்கத் திரித்தகயிறுபோலு மிருக்கின்றதே. இது ஆர்செய்தமாயமோ? அவள்தேடிய உபாயமேயாமோ? என்னுருயிருக் கபாயமோ? ஒருவேளை நம்மை நம்பவைத்து மோசம்பண்ணியிருப்பாளா? ஏறவிட்டேணியைவாங்கும் புன்னெறியுடையாரைப்போலு நினைப்பாளா? நமதுதமக்கையினிடமாய் அண்டிப்பிழைக்கவந்தஅநாதை இவ்வஞ்சனைவிரோதமனத்தில்வைப்பாளா? கொஞ்சமேனும் நன்றிநினையாளா? என்னைச்செய்யும் வினைச்செயலெப்படியோ வறியேனே. ஆயினும் 'மாதர்களைநம்பலாகாது' என்பது பெரியபேச்சு, அச்சொல்லை யெண்ணுமிடத்தில், எல்லாப்பெண்களும் மோசமுள்ளவர்களா யிருப்பார்களா? சிலவேளை நாம்கொண்ட மோகசோபத்தினால் மதிமருண்டு சத்திமாறியதோ? நம்மை இங்கே வரச்சொன்னகாதலி அவளோ? அல்லது இன்னமெவளோ! இதை நன்றாய்ச் சோதித் தறியவேண்டுமென்று தனக்குள்ளே மனக்கலக்கங்கொண்டுஎன்கையைப்பிடித்தஅடிதையலே மையலாகிரிவந்தது நீவசமாய்ப்பிடித்த என்கையைச்சற்றேவிட்டுவிடடி. நீபிடித்தபிடிப்புக் கிளையாதிருக்கின்ற என்வல்லமையைப்பாரடி. உன்பலத்திற் கென்பலம் ஒன்பது பங்குயர்ந்ததடி. உன்னை நான் அடிபிடி யென்பதாய்ப் பேசுகின்றேனென்று நீ ஆயாசப்படவேண்டாமடி. காமச்சரசக்கலவிக்களிப்பால்கசிந்துவருகின்ற உசிதவார்த்தையடி. என்னிருகண்ணே! காதலிப்பெண்ணே! என்றுதன்கையைப் பிடுங்கினான். இவனெத்தனையோ பராக்குக்காட்டி அயர்ப்பில் தன்கையை யிழுத்தபோது, சாக்கிரதையிலிருந்த வீமன் தான்பிடித்தபிடிவிடாமல் வலது கையைநீட்டி இடதுகையையிழுத்து, இடதுகையைநீட்டி வலதுகையையிழுத்து, நிலைமத்திட்டுத் தயிர்கடையுந் தன்மைபோல் மாறிமாறியிழுத்து, வலித்துத் தூணுடன்தேய்த்து, அவனிருகரத்தையுஞ் சேர்த்துத் தன்னொருகரத்தால் பற்றிக்கொண்டு, மற்றொரு கரத்தினால் மொத்தியும் குத்தியும் கிள்ளியும் நிமிட்டியும் பிசைந்தும்சரசக்குத்து சரசக்கிள்ளென்றுசொல்லியும் ஒவ்வொரு கிள்ளுக்கு அள்ளுச்சதை அள்ளும்படியாயும் ஒவ்வொருகுத்துக்கு உழக்கிரத்தம் பீறிடவுஞ்செய்துஅவன்தேகத்தைவருத்தியுந் தீமைபுரியும்போது, கீசகன் சகிக்கமாட்டாமல் வாய்விட்டிரைந்து நாடாதும்நாடி வாட்டாமுகமும்வாடி தேகம்வியர்த்துச் சூரசங்காரச் சுப்பிரமண்யக்கடவுளோ? 'இராக்கதவைரியாகிய மகாவிஷ்ணுவோ என்று நிலவரம்விண்டு கலக்கங்கொண்டு வகைதப்பி

மாட்டிக்கொண்டு தன்கைகளைத் தன்னாற்கூடியமட்டும் சாகசஞ்செய்து வாங்கினான்.

அப்போது அவ்வீமசேனன் மின்னொளிபோல விளங்கிக் கீசகனுடைய இரண்டுகையில் ஒருகையைவிட்டுவிட்டு, மற்றொருகையைப் பிடித்தபிடி தளராமலிறுக்கி விறுவிறென்று சுழற்றி விசைக்கயிற்றை இழுப்பதுபோல் அவனுடைய தலைமயிரைப் பற்றியிழுத்து, நான்குதிசையிலுங் கரகரவென்று சுழற்றி மேலேதூக்கிக் கீழேதாக்கினான். அப்போது கீசகன் பெருமூச்சிட்டெழுந்து ஐயையோ! ஆண்டவனே! பெண்ணென்றெண்ணிய எண்ணம்போயிற்றே, இப்போதிது பேயுருவாய் வந்துவாய்ந்ததே; இனிபிழைக்கும் வழியெப்படி? இவ்வேளையில் இளைப்போமாயின் வந்திருப்பவன் மனிதன் எப்படியும் நம்மை மாட்டுவான்போ லிருக்கின்றது; நாமிவனை முந்திமுடித்து விட்டால், பின் அப்பெண்ணுடன் கூடிப்பேசிக்கொள்ளலாம். இவனைப் பிராணனுடன் விடப்போகாதென்று விரைந்தோடிவந்தான் வந்தகீசகனை வீமன்மடக்கினான்; மடக்கியபிடியைச் சடுக்கென்று தட்டினான்; தட்டியகீசகன் தலையில்குட்டினான்; குட்டியவீமனை முகத்தைப்பார்த்துக்குத்தினான்; குத்தியகீசகன்மேல் கொதித்தெழுந்து குதித்து அவன்மூக்கில் தாக்கினான்; தாக்கியவீமனைத் தடுத்துப்பிடித்தான்; பிடித்தகீசகனைப்புரட்டிப் பூமியில்சாய்த்தான்; சாய்த்தவீமனைக் காலால்தளைந்தான்; தளைந்தகீசகனைப் புரட்டியுதைத்துத் தள்ளினான்; அவ்வாறு தள்ளியவீமனுக்கிளையாமல் பின்னுங் கீசகனெழுந்து, முன்பேசிய ஆணவமும் நாணமும் மானமும் விடாமல், மற்போர் கொடுக்கவந்தான்; அவ்வேளையில் வீமன் ஆக்கிரமித்தெழுந்து எதிரிதோள்மேற் கோடையிடிபோல் இடித்தான், அவ்விடியைப் படியத்தாங்கிய கீசகன் இவனை முடியப்பார்ப்பேனென்று, விடியற்காலத்துக் காக்கைபோல் கதறிக்குத்துக்குத்துவதில் கதறக்குத்தினான், அவன்குத்தியகுத்தை மகமேருவோடொத்த தோளில்தாங்கிய வீமன்வருந்தாமல், முகஞ்சுளித்துத் தன் கைவிரல்களை மடக்கிக் கீசகன் மார்புகிழியவும் அவன் தலையெழுத்து அழியவும் முதுகெலும்பு நொறுங்கவும் பழுவெலும்பு முறியவுந் தலையோடுடைந்து இரத்தந்ததும்பி வழியவும் தாக்கினான்.

அத்தாக்குதலைமேற்கொண்ட கீசகன் கார்காலமேகமேபோல்கனைத்து, வீரங்கொண்டுசுழன்று, இருகையையுமுடக்கி உக்கிரங்கொண்டெழுந்தான்; எழுந்தவன் கையிரண்டுங்கொழுந்தென வாடும்படி தட்டிவிட்டுக்குலத்திற்குப் பழுதுதேடிக்கொண்ட கீசகனைத்துன்னித் தன்காலால் அவன்காலைப்பின்னிச் சேர்த்துத் தூக்கியெடுத்துப் பாஞ்சாலியை யழைத்துத் தீராமோகங்கொண்ட விகாரவடிவனைப்பாரென்று சூறுவளியிலகப்பட்டதுரும்பேபோலும் வானிற்சுழலுங் கறங்கோலைபோலவும் சுழற்றிக்கொக்கரித்துப் போர்த்திறங்கொண்டசிங்கம்போல் பூரித்துப் பூமியிலெறிந்தான்; வீமனால் எறியப்பட்டுவிழுந்த கீசகன் காமவின்பத்தைக் கட்டோடுமறந்து மதிகுலந்துலங்கப்பிறந்த பாண்டவர்களில் இவன்வீமனென்றேஅறிந்துதுன்பநிறைந்து ஐயோ! இவனையிம்மட்டும் விட்டுவிட்டு என்னோட்டத்தை நீபிடிக்கமாட்டாய் போடாபோவென்று

ஓடலாமென்றால் இவன்நம்மையெந்நாளைக்கும்பிராணனோடுவிடப் போவதேயில்லை; நாமிதுவரையிலும் பிழைத்தபிழைப்புக்கெல்லாம்பழுதுநேர்ந்துபோமே; நம்மையாரும்சட்டைபண்ணார்களே; பெட்டாகிய குட்டுக்கெட்டுப்போய்விடுமே, ஆதலால் இவனை ஒருகைபார்ப்பபோம். நமக்கு நல்வினைப்பயன் கைகூடுமாயின் இவனை நமனுலகஞ்சேர்ப்போம். ஆகாமற்போனால் இவனிடத்தில் நமது உயிரைத் தாரைவார்ப்போமென்று எழுந்துவிரைந்து கந்துபாய்ந்து விமன்தலைமயிரைப்பிடித்துக் கைவிரலிற்சுற்றி நொடித்துக் கறகறவென்றுசுழற்றி நிலத்திடையேதள்ளித் தன்னிருகாலாற் புரட்டிப்புரட்டி யுதைத்து அவனுடலைத் தேய்ந்துமழுங்கிய திரண்ட கற்றூண்போலாக்கி உள்ளங்கையிரண்டும் உதிரவெள்ளங்காணமிதித்துத் தேகம்சிவக்கச்சீறி அறைந்தான். இவ்வாறாகக் கீழேவீழ்த்தி மோதிப்பிடித்துமாறிபடித்து மொத்துகின்றகீசகன் இடத்தில் வகைமோசமாய் மாட்டிக்கொண்ட வாயுகுமாரனைப் பாஞ்சாலிகண்டு, பரதவித்துப் பாவம்பெரிதோ? புண்ணியஞ்சிறிதோ? சத்தியக்குறைவோ? அசத்தியநிறைவோ? தெய்வங்களா! வனதேவதையே! வீமராசனுக்குப் பொல்லாங்கு நேரிட்ட பின்னர் இம்மேதினியில் நானும் பிராணனோ டிருக்கவேண்டுமோ? அவருக்கு முன்னே என் உயிரைமாய்த்துவிடுகின்றேன். முதல்வனே! என்றழுதுபரதவிக்கும்போது, இப்பாஞ்சாலியினது துன்பம்வீமசேனன்காதில்நுழைந்தது. அதனால், வீரசந்தமேறி மேலாள் கீழாளாகப்புரட்டிக் கீழாள் மேலாளாகிக் கண்ணுருட்டி அஞ்சவேண்டாம், உயிர்விடமிஞ்சவேண்டாம், பாஞ்சாலி! பதறாதை, இதோ நான்பிழைத்தேனென்று தேக ஆயாசந்தீர்ந்து, பிராணனைத்திரணமாகமதித்து, நீருண்டு வேகங்கொண்டெழுந்த மேகம்போலிரைந்து பூமியில்தோய்ந்து குபீரெனப்பாய்ந்து கீசகனைப்பற்றிக் கிறுகிறெனச் சுழற்றி வானத்திலெறிந்தான். ஆகாயத்திற்போன கீசகனவன் வாயுவைத் தம்பித்துக் கேசரி மார்க்கத்திற்கிளம்பி விறுவிறெனச்சுழன்றுவீமசேனன்றலைமேற்குதித்து அவன்கழுத்தைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்டு தொங்கினான்.

அக்கீசகனை வீமசேன னெடுத்துக்கொண்டு அவனிருகரத்தையுந் தன்னொருகரத்திலடக்கி ஆளையிழுத்துக் கீழேபோட்டுமடக்கி வயிற்றைமிதித்து வாயிலுமுதைத்துப் பற்கள்பதினாறையும் உதிர்த்தான். வீமனிடித்த இடியினால் கீசகன்வாய்கிழிந்து கெட்டநினைப்பழிந்து பல்லெல்லாம் பதர்போற் பறந்து போனமையால், பொக்கைவாய்க்கீசகன் புறங்கொடுக்காமல் உரங்கொண்டோங்கி மரங்களைப்பிடுங்கி வரிசைகள்தொடங்கினான். வீமசேனனும்அவனை விடாமல்தொடர்ந்து வேண்டியமரங்களைவேருடன்களைந்து வகைவகையான போர்புரிந்து வீரவெறிகொண்டாடினான். ஒருவரையொருவர்விடாமல், இடம் வலம்வருதல்கெடாமல், இருவரும் அடிகள்படாமல், ஆயுதமென்பதே எடாமல் அடிக்கடி முதுகுகொடாமல் சோபதாகந்தொடாமல், மிகருக்குமமாயொட்டிநடத்திய போரையும் அவர்கள் மனோதிடத்தையும் தேகாபிமானம் விட்டு அமர்செய்கின்றதிறத்தையும் நாய்சொல்லத்தக்கதன்றே, வல்லவனாகிய ஜெனமேஜெயமகாராஜனே!

இவ்வாறாக இவர்களிருவரும் தத்தம் முழுவலியையுங்காட்டி மாறாமல் போராடிவரும்போது பொழுதுவிடியப் போகின்றதே, நமது பூர்வோத்திரம் வெளிப்படுமே யென்று வீமசேனன் துடித்து இவனைவிரைவில்முடித்துவிடவே ண்டுமென்று நினைத்துப் பங்கப்படாத சிங்கமானது அற்பமிருகத்தை அமுக் குவதுபோல் அக்கீசகனை அமுக்கிக்காலிரண்டையும் மேலாகத்தூக்கிக் கவிழ் ந்தவகையாய்ப் பூமியில்தாக்கி, அவன்மீதேறி அமுக்கி உட்கார்ந்து, மார்பும் தோளும் வயிறும்பிடரும் வலிப்பெடுக்கக் குத்தினன். அவன் குத்தியகுத் தைச் சிங்கபலம்பெற்ற கீசகன் தடுத்து அதையொருவரவு செலவில்வைக்கா மற் காலால்வீமன் கழுத்தைமடக்கித் தன்னிருகையையும் தரையில்தேய்த்து வாயுகுமாரன் தலையோடு நெறியத்தாக்கினன். அக்கீசகன் அறைந்த அறை வீமன்தலைமேல் விழுந்தகாலையில் அரைநாழிகைவரையிலும் அறிவுமயங்கி நெ ருப்பில் நெய்விட்டதுபோற் கோபங்கொண்டோங்கிக் கருப்பைக்குள் கட்டுப் பட்ட பாலகனைப்போல் அடங்கியகீசகனை அசையவொட்டாமல் ஒரே அழு த்தாக அழுத்தி அவன்தலைமயிரைக் கெட்டியாய்ப்பிடித்து வச்சிராயுதத்தால் மாட்டுவதுபோல் கையைமுடக்கி நகங்களைநீட்டி முட்டி அடிக்கொப்பாய் அவன் உச்சியில் குட்டினன். அதனால் கீசகன் தலைகிழிந்து மலசலாதிவழி ந்து கண்ணிரண்டுங்குவிந்து காதில் உதிரம்பொழிந்து அந்தக் கரண வாதனையாற் பதறி வந்த மரணவேதனையினால் கதறி ஆவியழிந்து பூமிமேல் சாய்ந்துவிழுந்தான். மண்மேற் கிடந்தவிராடன் மைத்துனனை அம்மட்டில் விட்டுவிடாமல் வாரிப்பிடித்து மார்பொடிய இடித்துக் கையைமுறித்துக் காலைக்குறைத்து மெய்யைச் சுருக்கிக் கையால் பிசைந்து மாவிளக்குப் போடு வதுபோல் மாமிசத்தைத்திரட்டி உண்டையாகவைத்து அவ்வுண்டையின் மேல் மீசையுங்கண்களும் விரிந்தவாயும் பரந்தமுகமுமுடைய தலையைநா ட்டித் தன்தலையையாட்டிப் பணிப்பெண்ணுக்காகக் கொண்டுவந்த வஸ்திரா பரண வலங்கார புட்பங்களையும் சூட்டிப் பண்டுபலாதி கச்சாயங்களையும் அவன்கொண்டுவந்த தலைவாழையிலைபிற் படையல்போட்டுக் கந்தகதம்ப கஸ்தூரிகளை வாரி இறைத்து இவ்வுலகவழக்கத்தில் பேயோட்டிப் பதிபோடப் பூசாரிகள் சிங்காரிக்கும் பொம்மை முகம்போலமைத்து இந்தவேடிக்கையைப் பாஞ்சாலிக்குக் காட்டிக் காமப்பேயோட்டிக்காட்டில் பூசைபோட்டுப் பேய்ப் பதிசிங்காரித்திருக்கின்றேன் பாரென்று சொல்லுவோ மென்பதாக நினைத் துக் காயுங்கனியும் பூவுமாயிருந்த ஒருபெரிய மரத்தைப் பிடுங்கிக் கசக்கித் தீயெழத்தேய்த்து பூ பூ வென்று வாயினூதிப் பக்கத்திருந்த காட்டைக் கொளுத்திவிட்டு எங்குஞ் சோதியாய் எரியும்போது வெற்பெனத்திரண்ட சொர்க்கத்தைச் சுமந்த கற்பினி லுயர்ந்தபதுமினிப்பெண்ணே! உன்கால் மேல் விழுந்த கடையனைப்பார், கசடனைப்பார், கயவனைப்பார், காமக்கவிப் போடாடிய பேயனைப்பாரென்று காட்டினன்.

வேலுஞ்சேலும் விழியாயமைந்து பாலுந்தேனும் மொழியாய்ச் சமைந்த பங்கயப் பெண்பெருமாள்பார்த்துத் தன்வயிறும் வாயும் மனமும் பதறிக் கத றிய வாட்டமொழிந்து வீமசேனன்மேல் நாட்டமாயிருந்தாள். அரைவர்தே

டிய வினைப்பயன்களை அநுபவித்தே தீரவேண்டுமெல்லது அநுபவியாமல்விட மாட்டாது. தாம் ஒருகாரியத்தைப் பெறஎண்ணினால் நினைத்தபடிமுடியாது. எண்ணியவண்ணம் எவர்களும் பெறவில்லை. எண்ணமுன்னுக்குவாராது. உண்மைக்குத் தெய்வபலமிருந்தொருவேளை முடிந்தால் முடியும். சிங்கபலம் பெற்ற கீசகன் பாஞ்சாலியினளவில் நினைத்தபொல்லாங்கனைத்தும் நாமெல் லோரும் நாவால் பேசப்படாத கொடுங்காரியமாதலால், அதனால்வந்த மித மற்றபலனை உடனே அவன் அனுபவித்தான். அதைப்பற்றி நாம பேசவேண் டும் அவசரமில்லை. கோபதியாகிய பூபதியே! என்று ஜெனமே ஜெயனுக்குச் சொல்லி வைசம்பாயன முனிவர்மேலுஞ் சொல்லத்தொடங்கினர். இப்பால் வாயுமகனாகிய வீமசேனன் அக்கினியில்பிறந்த அணங்கைநோக்கி உமக்குப் பகையான கீசகன் ஒருவகையாய் அழிந்துபோனன். உன்விடயத்தில்இன்னும் யாராவது மன்மதகோலாகல மயக்கத்தைக் கொண்டார்களாகில், அவர்களு மிப்படியே அநுபவிப்பார்கள். நீ ஒன்றுக்குமஞ்சாதை. இனி நாம் இவ்விடத் திலிருப்பது தகாது. பொழுதுவிடியுமுன் போய்விடவேண்டுமென்று காட் டைவிட்டுப் புறப்பட்டு, மச்சநாட்டைநோக்கி வருகையில், வழியில் ஓர்தாம ரைக் குளத்திலிறங்கித் தேகப்பரிசுத்தஞ் செய்துகொண்டு தீர்த்தமருந்தித் தெய்வப் பிரார்த்தனையுடன் சுதக்கணை அரண்மனைக்குப் போம்படி பாஞ் சாலியை அனுப்பி வீமசேனன் மடைப்பள்ளிக்குப்போய் மலரணைமேற்படு த்து நித்திரைவாராமல் குத்துக்காலிட்டுக் கொண்டிருந்தான்.

இப்படியிருக்க மடலவிழ்ந்து இதழ்பரந்து மலர்விரிந்து மதுநிறைந்து மணமுறைந்து தளிர்தழைந்து தலைசெறிந்து கிளைமிகுந்து மிகவுயர்ந்து இருளடர்ந்து கொடிபடர்ந்து காய்சொரிந்து கனியுதிர்ந்து கதிர்மதிநுழை யாக் கவிப்போடிருந்த மாந்தோப்பில் இவரிருவரும் பேசியவோசையும் கைக் குத்தின்முழக்கமும் மண்டபத்திலுண்டான எதிரொலியும்மரங்களைப் பிடுங்கி மாட்டிய ஆர்ப்பும் சத்தமடங்கிய இருபதுநாழிகைச்சமயமாதலால்விராடநகர முதலியசுற்றுக்கிராமங்களிலும் கேட்டது கேட்டும்,சனங்கள்அப்போதுஇராக் காலமாகையாலும்நித்திரைமயக்கத்தாலும் எப்பொழுதும்யுத்தம் இல்லையென் றிருந்த மப்புப்புத்தியினாலும்பயத்தினாலும்விசாரிக்கவேண்டிய அவசியமில்லா மையினாலும் கலவரப்படாமல் நிதானித்துக் காரணகாரியங்களை யெண்ணா மல் நிலைகுலைந்து திரும்பிப்பாராமல் நித்திரை செய்தார்கள்.

ஆனால் முன்னமே கலவரங்கொண்டிருந்தகீசகன் தம்பிமார் இப்பேரோ சையைக்கேட்டுப் படுக்கைவிட்டெழுந்து உப்பரிகைமேலேறிப்பார்த்து அச்சத்தம் வருகிறவழியை யுற்றுக்கேட்டுத் தங்கள் அண்ணன் நினைத்த எண் ணமும் வண்ணப்பெண்வாடிய வயிற்றெரிச்சலும் ஊரார் பேசிக்கொண்ட வலதும் தம்மைச் சந்தேகத்தில் கொண்டுவந்து விட்டதாக அச்சப்பட்டுக் கீசகன் படுக்கை வீட்டைப்பார்த்து அவன் அவ்விடத்தி லில்லாமையால் பாங்கிமார் முதலாகிய பணிப்பெண்களைக் கேட்க, அவர்கள் இன்றிரவில் பத் துநாழிகைக்குமேல் சகலவலங்கார சம்பிரமமாய் மேனிமினுக்கி வெளியே போனரென்றுரைக்க, அம்மொழிகேட்ட உபகீசகர்கள் பரதவித்து நன்று

நன்று! நமது சுதக்கூணக்குச் சாந்து சந்தனஞ் மலர்முதலியதும் புனைந்துவந்த தெய்வப்பெண்மேல் இச்சைவைத்தமையால் அன்னத் துவேஷங்கொண்டு தனக்குரிய போகமாதனையும் விண்டு மன்மதன்கணையா லுடைந்து பாகொத்த மொழியாளாகிய பணிப்பெண்ணைத் தொடர்ந்து சோகமேலிட்டுத் தூக்கமுங்கெட்டுத் துபரமாயிருந்தவன் தான்கொண்ட விரகவேதனை தணிவதற்காக மாமரச்சோலையடர்ந்தவசந்தமண்டபத்திற்குப் போனவனாகவேண்டும். அவ்வேளையில் வண்டாருமலர்க் கொண்டையையுடைய சைரந்திரி ஏதோ ஒரு காரணார்த்தமாய் அவ்விடத்திற்குப் போயிருக்கவேண்டும். பிரசண்டவேக மதயானைபோன்ற கீசகன் அவளைக்கண்டு ஏதடா! நமக்குடன் படாதவள் இவ்வளவுதூரம் வந்திருக்கிறாள். இவ்விருளில் தனித்து வருவதற்குக் காரணமென்ன? என்று சற்றேனும் கருதாமல், காமக்கலவியைக் கருதினவனாக வேண்டும். இதற்கு முன்னாள் இவளைத் தூரத்திச் சின்னாபின்னப் படுத்தியசெய்தியை அவளுக்குரிய கந்திருவரைவர்கட்குத் தெரிவித்திருந்தவளாக வேண்டும். அவர்கள் அவ்வாறே வசந்தமண்டபச்சோலையில் வந்திருந்தவராகவேண்டும். இவனுடைய பொல்லாத வினைவசத்தால் போர் மூண்டதாக வேண்டுமென்று தங்களுக்குள்ளே துணிந்து இனி நாம் சும்மாவிருக்கலாகாது. விரைவாய்ப்போய்ப் பார்ப்போம். அப்படிப் பார்க்குமிடத்தில் சிந்தனைக்குடன்பட்ட மிட்டேன், உயிரோடிருப்பானாயின் வந்திருக்குங் கந்திருவருடன் முந்திப் போர்விளைத்து, அவரைக் கைப்பிடியாய்ப் பிடித்துக் கண்கலக்கப் படுத்துவோம். ஒருவேளை கீசகன் நாசமடைந்திருப்பானாயின் அவனைப் பறிகொடுத்து நாம் உயிருடனிருந்து மானமில்லாமல் வாழ்வது மரியாதையன்றே! உடன்பிறந்த தோடத்துக்காக அந்தக் கந்திருவருடன் போராடி அவன் மடிந்த விடத்திலேயே நாமுமடிந்துபோவோம். இதைப் பார்க்கிலும் உறுதி வேறில்லையென்று, தம்பியர் யாவரு மொன்றாய்க் கூடிக் கண்பொறியெழ விழித்துக் கடகடவென்று பல்லைக்கடித்து, விடவிடவென்று வில்லைப்பிடித்து, மடமடவென்று பலபடைகளுங்கொண்டு, தடதடவென்று விரைந்து வந்து கசந்தமனம்கொண்டு, கருகியவிருளில்வசந்தமண்டபத்தைச் சேர்ந்து, சங்குச்சுண்ணந்தடவிய சோதி திங்களொளிபோல் எங்கும் விளங்கக் கொழுந்துவிட்டெரியும் வெளிச்சத்தில் அழிந்து சிதைந்து அரைந்து திரைந்து திரண்டுருண்டு மொத்தாகாரமாயிருந்த மாமிசத் திப்பையின் மேல் தமையனுடைய தலைமாத்திரம் அழியாமலிருக்கக்கண்டு, திக்கென்று வயிறெரிந்து திடீலென்று வீழ்ந்து வாடிவதங்கி வயிற்றைப்பிசைந்து கைகளை நெரித்துச் செய்வதென்னென்று வெம்பித் தேம்பி விம்மி விழித்து மண்டபத்தைச் சுற்றிப் பார்த்து, ஒருவரையுங் காணாமல் வாய்விட்டழுது முகத்திலுந் தலையிலு மோதிக்கொண்டு புலம்பி அண்ணனுடைய கால்கை முதலான அவையவங்களொன்றுங் காணாதவர்களாய்ப் பிண்டாகாரமாயிருக்கும் பேருடலைக்கண்டு ஓ! கோ கோ! இதென்னவிந்தை! இதுவரையிலும் வாழ்ந்த எங்களுக்கு நேரிட்ட நிந்தை, அளவிறந்த பல பராக்கிரமங்களுள்ள நமது முன்னோனை இப்படியாகக்கொன்ற பேரொவர்களோ? இவனைக் கொல்லத்

தக்க வல்லவருந் தொல்லுலகிலுளரோ? இவனைக்கொன்றவன் மானிடனே யல்லன், தேவப்பிறப்பா யிருக்கவேண்டும். வேறொருபிறப்பிலவிளைந்தவ னாயின் கழுத்தை முறித்து வயிற்றைக்கிழித்துக் கை காலை யொடித்துக் கசக்கிக் கோசபீசத்துடன் நையக்குத்தி மொத்தையாகவுஞ் செய்வானா? ஐயோ? வைச்சபதமிருக்கப் பிச்சைக்குப்போவானேன்? வசந்தப்பித் துர்மா ணமடைவானேன்? அவனெப்படிப்பட்டதேவனா யிருந்தபோதிலும், இவனை வன் கையா லிறக்கமாட்டானே! ஏதோ சூதுவிளைத்துத்தீதுசெய்துவிட்டார் கள். அப்பெண் மோகத்தாலும் இவனது தீவினை வசத்தாலு மாண்டானெ ன்றே மார்பிலடித்துக்கொண்டு மண்மேல் வீழ்ந்து புரண்டு மானம்போயிற் றே, வையகத்தார் பழிக்கும்படி ஈனமாயிற்று. ஆகா, தெய்வமே! இவனிப்படி அழிந்ததைப் பிறரறியாம லடக்கம்பண்ணிவிடவேண்டும் பிறரறிந்தால் பெரு மோசம் வந்துவிடும். நமது சுதக்கணைக்குமாத்திரந் தெரிவித்து அவள் கருத்தின்வண்ணம் நடந்துகொள்வோமென்று அவளிடத்திற்குச் சென்று அடித்து மோதிவிழுந்து அவள் பதத்தில் தாழ்ந்துநாம்வாழ்ந்தவாழ்வுஇன்றோ டழிந்தது. மாதரசி! நமது வண்ணப்பெண்மேல்மோகங்கொண்ட அண்ணன் விண்ணுலகேறினன், இனிமேல் நடத்துங் காரியங்களுக்கு நாங்கள் ஆலோ சனைசெய்ய வந்தோமென்றுஞ் சொன்னார்கள். அவர்கள் கருத்தை அச்சு தக்கணை கேட்டுத் தம்பிமாரைத் தழுவி நின்று கொம்பிலாக் கொடிபோற் றுவண்டும் தரைமேற் புரண்டும் தலையி லடித்துக்கொண்டும் பெருமூச் சடைந்தும் பதறியெழுந்தும் அடாபாவி! எங்களைத் தெருவில்விட்டாயே; வாழ்ந்தவாழ்வு இவ்வளவுதானா சாய்ந்தது; மன்மதபாணமா உன்மேற் பாய்ந் தது அதனாலேயா நீ மரணமடைந்தது? ஐயோ? அப்பாவென் றுடல்தளர் ந்து உயிருலைக் தூசலாடி ஓ சகோதரர்களே! நானெவ்வளவோ சொல்லி யும் பாவி கீசகன் கேளாமற் போகழிந்தான். அன்னியமாதராசை யென்றும் ஆயுளழிக்கு மென்று மோகநிவாரண நூலில் மொழிந்திருந்தும் காலாந்தரத் தாற் கதிசேர்ந்தானோ, ஐயோ! கீசகக்களிறே! யென்று கண்ணீர்வடித்து அவனது புயபலபராக்கிரமங்களைப் படித்து ஒருவருமுணராமலொப்பனையிட் டழுது கீசகனிறந்தானென்னுங் கேள்வி பலராசர்களுணர்ந்தால் படையெ டுத்துப் போர்கொடுத்து இப்பட்டத்தை அபகரிப்பார்களே! என் நாயகனுக்கு மெனக்கும் இந்கட்டத்தை வைத்தானே. நடுக்கடல்துரும்பானேமே. நடுத் தெருப் புழுதியானேமே. அடடா, என்று பட்டப்பகலில்தோன்றிய சந்திர ன்போல், முகத்தொளிமழுங்கி என்சோதரர்களே! நானிந்தவார்த்தையை உங்கள் மைத்துனராகிய விராட ராசனுக்குப் பக்குவமாய்ச் சொல்லிவிடுகி றேன். நீங்கள் சீக்கிரத்திற்சென்று அண்டை அயலாரறியாமல் அடக்கம் பண்ணிப் போடுங்கள்; பாப்பில் விடாதீர்கள்; பழிப்புக்கிடம் பண்ணாதீர்கள்; பதறாதீர்கள்; என்னைப் பரதேசி யாக்கிப்போடாதீர்கள்; நமக்கு நான்குதிக்கி லும் பகைவர்களிருப்பதினால் கீசகனுயிருடனிருக்கின்றானென்னுங் கொடி யைக்காட்டி அவனுக்குச் செய்யவேண்டிய உரிமைக்கடன்களைத் தீர்த்து விடுங்களென்று உறுதி மொழிகள்சொல்லி யனுப்பிவிட்டு, உள்ளநடுங்கி யொ

டுங்கி வெள்ளம்போல் கண்ணீர்விடுத்துப் பூமிமேற்படுத்துத், தெய்வமே! என்று தேம்பித்தொழுது துக்கமற்றவள்போல் பக்கத்தி விருப்பவர்கட்குத் தெரியாமல் விக்கியிருந்தாள்.

அச்சுதக்கனை சொன்னவண்ணம் அண்ணனைத் தகனஞ்செய்வதற்கெண்ணிய தம்பிமார்நூற்றுமூவரும் பிரேதத்திற்குவேண்டியசல்லா சாதராஷால் வைசந்தனக்கட்டைகள் ஸ்நானதிரவியங்கள்முதலிய சகலமுங்கொண்டு, தமக்கை யரண்மனையிலிருந்து சுறுக்கில் குறுக்குவழிவரும்போது, வீமசேனனை விட்டுவரும் வண்ணப்பெண்ணைத்தாங்கள் கண்ணிற்கண்டு வழிமறித்துநின்று மனத்தாபங்கொண்டு மனோதிடமுடைய நமது தமையன் மாள்வதற்கு இவளே காரணமல்லது வேறில்லை. நாமெண்ணியபடி இப்பொழுதுதான் முடித்துவருகிறாள். இதற்கியாதொரு சந்தேகமுமில்லை. அவனிவள்மேல்வைத்த ஆசையும்இவளவனைக்கெடுத்த மோசமும்அடியோடு நாசமாகும்படி இவளையுமவனுடன் சேர்த்துக் கொளுத்திவிடுவது உத்தமதர்மம். இம்மையிற் கலந்தெரிந்தால் அம்மையிலும் உம்மையிலும் பிரியாவிடையா யிருப்பார்கள். ஆகையால், இவளைக்கூசாமல் பிடியுங்களென்று நான்குதிசையிலும் பரந்து நாய்போல் வளைந்து மான்போல் மருண்டுசெல்லும்பாஞ்சாலியைத் துரத்தினார்கள்.

வனவேடர்போன்ற உபகீசகர்களைக்கண்ட சைரந்திரி எப்பேச்சும்பேசாமல் அல்லலடைந்து, ஆவிபதியக்கதறும் அன்னம்போற்பதறிப் பொறிபுலன் சிதறிக் கைகாலுதறியோடி ஆ,கந்திருவர்களே! எனக்குக்காவலாகிய தெய்வங்களே! பேய்களுலாவுங்காலமாகிய இவ்விரவில்யமதூதரைப்போல், சிலதுட்டர்களடுத்து என்னைப்பிடித்து நெருப்பிலிட்டுக் கொளுத்தும்படி நிச்சயித்தார்கள். அதனால் கொழுகொம்பில்லாக் கொடிபோல் துவளுகிறேன். என்ன செய்வார்களோவென்று வாடுகிறேன். இவ்வீணர்கையி லகப்படாமலோடுகிறேன். இப்பாவிகள் வசப்பட்டு ஆவியழியுந் துன்பத்தைப் பார்க்கிலும் இப்போது தானே உயிரையொழித்து விடுவது இன்பமென்று நாடுகின்றேன். இப்பஞ்சைகள் கையிலகப்பட்டுப் பாதவிக்குமுன்னே அஞ்சேலஞ்சேலென்று நீங்களைவரு மோடிவாருங்கள். இவ்வாபத்து வேளையில் வந்தென்னைக்காக்க வேண்டும் மலைகளை மண்ணாகவாட்டும் புயபலத்தைக் காட்டுங்கள். அத்துன்மார்க்கர்களைமுடித்ததுபோல்,இக்கயவர்களையும்வாட்டுங்கள்.மனோவேகத்திலுங்கடுகியோடிவந்து இவர்களைத் தென்றிசைக் கோட்டுங்கள் ஜயவிஜயஜயந்தஜயசேனஜயற்பலனேயென்று அஞ்ஞாதவாசமுதலில் நேமித்துக்கொண்ட சங்கேதப் பெயர்களைச் சொல்லிக் கூப்பிட்டாள். இவள் கெட்டியாய்க்கூவிய ஓசையை மடைப்பள்ளியிலிருந்த வீமசேனன்கேட்டு, வாரிச்சுருட்டியெழுந்து ஏதோ பிரமாதம் விளைந்ததென்று இடையிற் கச்சையையிறுக்கி வரிந்து தொடையிலுதிரந் துடிக்கப்பரிந்து, இதோ வந்தோம், உன்மனந் தளரேலென்று பேரிடிபோல் விரைச்சலிட்டுக் கொக்கரித்து, எக்களிப்புடன் எதிரிலிருந்த மரங்களைப்பிடுங்கி,'விறுவிறெனச் சுழற்றிக் கையொடுகையறைந்து, காடுகலங்கக்குதித்துநீண்டவிருட்சங்கள் நெறியும்படி மிதித்துவந்தான். அவன்வருகிறதி

சையையும் வந்தவிசையையும் உபகீசகர்கள் பார்த்து, உடனே முகம்வேர்த்துத்தங்களுக்குள் தயங்கித் தைரியமில்லாமல்மயங்கி ஆ, தம்பிகளே! இவளினைந்துகூவியபோது, இதோ விரைந்து வந்தோமென்று ஒருபேரொலிகேட்டது, அவ்வோசை யடங்குவதற்கு முன்னே பெருங்காற்றுப் புறப்பட்டது. மரங்களியாவும் மடமடவென்றுமுடிந்தது.இவளுக்குரிய கந்திருவர்துணைவருகிறது போலுமிருக்கின்றது. நம்முன்னோனையடித்து முடித்துவிட் டிப்போதுதான் போகிறவர்கள்போலுங் காண்கின்றதே. நம்முன்னோனை இக்கேடு கண்டவர்கள் நம்மையுமெளிதில் விடார்கள்போலுந் தோன்றுகின்றதே. இனி என்செய்வோமென்று பயந்து, உடல்பதறி நடுங்கிக் கட்டழகமைந்த விரதசாரணியை விட்டுவிட்டோடிப் பிழைப்பதேமேலென்று துணியுமுன்னமே, காலபாசச்சூலங்கொண்ட காலனைப்போலும் ஆலகால விடம்போலும் வீமன்வந்து புகுந்து விளாசும்போது, புத்தித்தாழ்வாற் பிராணனைப்போக்கடித்துக்கொண்ட கீசகன்தம்பியர்கள்சுற்றியோடி விலகினார்கள். அவர்களைக்கொத்துப்போற் சேர்த்து வளைத்துப் பத்துப்பேர்க் கோரடியாயடித்து, ஒருவருந் தப்பிப்பிழைக்காமல் மடித்து, அவரவரொலும் பையுமொடித்து மேலுலகிலேற்றினான். அவ்வுபகீசகர்கள் சகோதரவாற் சல்யந்தப்பாமலுந்தமையனைப்பிரியாமலும்அவன் போனவழியே இவர்களும் போயினர்கள்.

இப்பால் துவளுமிடையுஞ் சுவணப்பட்டுடையும் அன்னநடையும் அரம்பைத்தொடையும் அருட்கட்கடையும் அணிபூஞ்சடையும் கற்புடைமையுமுள்ள விரதசாரணிமேல்விருப்பம்வைத்த கீசகனை வீமசேனனழித்தபோது அவன் ஒருவருமறியாமல் உபாயத்திலொழிந்தான். இவ்வுபகீசகர்களை மடித்தபோது, பொழுதுவிடியுஞ் சமயமாகையாலும் பேரோசையாலும்,ஊரார்அறிந்து உறக்கமற்றுவருந்திக் கலங்கிப்பயந்து சரிசரி திண்ணியனாகியகீசகனைவண்ணமகளாகிய அப்பெண்ணுக்கிசைந்தகந்திருவர்வந்து கொன்றார்கள்போலும். அவனுக்காகப் பரிந்துவந்த கீசகன் தம்பிமார்கள் ஒன்றுகூடிசண்டைவிளைக்க அந்நூற்றுமூவரையும் வென்றார்கள்போலும். ஆயினும் தேவமாதினை மனிதன் நாடுவது தீங்கு! தேவர்களுடன் மனிதரெதிர்த்துச் சண்டைசெய்வது தீமையிலுந்தீமை. தன்பலமும் எதிரிபலமும்எண்ணுமற்சண்டையிட்ட கீசகர்களில் ஒருவரேனும் பிழையாமல் விண்ணுலகடைந்தார் போலும், இதனாலன்றோ 'வினைவலியுந் தன்வலியு மாற்றான்வலியுந் துணைவலியுந்தூக்கிச் செயல்,' என்று பெரியோருஞ் சொல்லியிருக்கின்றன ரென்று பட்டினத்திலுள்ளவர் யாவரும் பேசிக்கொண்டார்.

இவ்வாறு உலகநடுங்கி யொடுங்கும்படி அன்றிரவில் கண்டகராகிய கீசகர்களைக்கொன்று, நாய் நரி பேய் பிசாசம் காக்கை கழுகு கூளி காளிமுதலியவற்றிற்குவிருந்தளித்துச் சுயம்பாகியாகிய வீமசேனனும்பரிவினற்பதமளித்த பாஞ்சாலியும் திரும்புகையில்வாயுகுமாரன் பாஞ்சாலியையணைத்து வண்டுறுமலர்க் கொண்டைமாதே! கற்புடையமாதர்க் கெப்போதும் ஆபத்து நேரிடாது. ஒருவேளை தீவினைப்பயனால் நேர்ந்தாலும் சூரியனைக்கண்ட பனிபோலகலும். மேலும் நற்குண நற்செய்கையுடையபதிவிரதைகள் தாங்களெவ்

வண்ண நினைத்தாலுமுடியும். அதற்கொப்பாக ஒருகதை சொல்லுகிறேன், கேளும். பூருவத்தில் இமையபர்வதராசகுமாரியாகிய பவானியிடத்தில்பணி விடைபண்ணிக்கொண்டிருந்தசயையென்னும்பெயரினையுடைய தெய்வப்பெண் ணொருத்தி இப்பூவுலகத்தில்வாழு மாதர்களுடைய இல்லற தருமமெப்படியோ வென்று ஐயங்கொண்டு பார்வதியாரைக்கேட்டாள். அதற்கு அம்பிகையோ அப்பெண்ணை நோக்கி நான்சொல்வதினாலுனக் கனுபவமாகாது. நீபோய்ப் பூமியிற்பிறந்து, இல்லறவொழுக்கத்தைக் காட்சிப்பிரமாணமாகக்கண் டநுப வித்துவரக் கடவாயென்று அநுக்கிரகம்பண்ணினாள். அவ்வாறே மண்ணிற் பிறந்து வளர்ந்து சிறந்துவருங்காலையில், தேவராதனென்றொரு முனிவன் தனக்குபசாரஞ்செய்வதற்கு உத்தமகுணசாலியான பத்தினியொருத்தி வே ண்டுமென்று தேசமுழுதுந் தேடித்திரிந்து வாடிவருந்தி வரும்போது, ஒரு சீ றூர் அக்கிராரத்திலிருந்த இப்பெண்ணைக்கண்டு கன்னிகையென்றுணர்ந்து அவளது பதிவிரதாகுணத்தைச் சோதிக்கவேண்டுமென் றெண்ணிப்பெரியரா க்கதவடிவங்கொண்டு கோரமாயெதிர்சென்று நின்று அவளைப் பருந்தாய் ஞ்சும் பாவனைப்போல் தூக்கிக்கொண்டு பெரியவாரணியத்திற்சென்று நூறு யோசனை விசாலமுள்ள தாமரைத்தடாகக் கரைமேல்வைத்து வெகுவகை யான சந்தோடமுண்டாக்கிப் பற்பல கனிதேன் கிழங்குகளுங்கொடுத்து உற் பலந் தாமரைமல்லிகை முதலிய புட்பங்களுமளித்துப் போகப்புணர்ச்சியின் பொருட்டுப் பேசுவனவெல்லாஞ் சரசமாய்ப்பேசித் தன்னூற்கூடியமட்டுந் திருத்தி நயபயங்காட்டிப் பொருத்திப் பார்த்தான். அவளெவ்வகையிலுமய ங்காமல் திடசித்தமாயிருந்து கலவியமளிக்கலத்தலுக்குச் சம்மதியாமற்போ னாள். அப்போது இராக்கத வடிவங்கொண்டவன் தன்கையிற் பிடித்திருந்த கோலால் அவளைக் கீழேதள்ளிப் பலவந்தமாய் ஒருதலைக்காமப் புணர்ச்சிசெ ய்ய ஆரம்பித்தான். அவளதற்குமஞ்சாமல் தன்னிருகையையுந் தலைமேற் குவித்து ஓ தர்மதேவதையே! நானிதுவரையிலும் மனோவாக்குக் காயங்களி னால் வழுவுதன்முதலிய பழுதுமில்லாமல் கற்புடைமைகாத்து ஒப்புவமை யில்லாதிருந்தேன். இப்போதிந்த விராக்கதன் கையென்மேற்படுமுன்னமே அற்பமாகிய என்னுடலங் கருங்கல்லாய்ப் போகக்கடவதென்று கூவினாள். அவ்விடத்தில் உரத்திக்கூவினவளை யதட்டி அவ்வரக்கன் வெருட்டிப் பயங் காட்டி மேல்விழுந்து தழுவப்போகையில் அவள் கல்லாய்ச்சமைந்தாள். அவ ளுக்குநேரிட்ட அபாயங்கண்ட முனிவன் இராக்கத வடிவத்தைவிட்டுப் பழையவடிவெடுத்து அவளுடல் கல்லாகியதைத் தடுத்துத்தான் அதுவரையி லுந் தேடிய தபோமகிமையை அதற்கீடாகக்கொடுத்து, அவளைத் தன்வாழ்க் கைத் துணைநலத்திற்குரிய மனைவியாக்கத்வேதவிதிப்படி மணந்து கொக் கோகநூலிற்கூறியவண்ணம் ஆலிங்கனமுதலிய யாவுநடத்தி அநேகவரங்க ளுமளித்துத் தன்னாச்சிரமமடுத்து, அறம் பொருள் இன்பம் வீடு திறம்பாம லடைந்து இல்லறவொழுக்கை இத்தன்மையதென்றே யாவருமறிய இகத் தில் அவ்விருவரும் நாட்டிவைத்தார்கள்.

கேளாய் பாஞ்சாலி, நல்லவர்களுக்கொருநாளும் பொல்லாங்குவராதே, வந்தாலும் நிலையாயிராது. பின்னே நன்மையுண்டாம். ஆனால் எப்படிப் பட்ட ஆபத்துகள் வந்தாலும் அதற்கஞ்சி விசனப்படலாகாது. இப்போது உனக்குநேரிட்ட கஷ்டநிஷ்டூரங்களுக்காகத் துக்கப்படவேண்டாம். இன்னுஞ் சிலநாளைக்குள் நமக்கு நல்லகாலம்வருமென்று நயந்துபேசிச் சுதக்கணையிடத் திற் கவலையனுப்பிவிட்டு, ஒரு தடாகத்திலிறங்கி நீராடி நித்தியவிதி நிறைவே ற்றிக்கொண்டு தான் வெளியே போய்வந்தசெய்தி ஒருவரு முணராதிருக்கும் படி மடைப்பள்ளிக்குப் போய்விட்டான்.

இப்படி வீமசேனன்போகவே பாஞ்சாலி பொழுதுவிடிந்து போயிற்றே யென்றுபயந்து ஒடுங்கியொதுங்கி வாடிவதங்கி நம்மையார்பார்ப்பார்களோ? என்னநினைப்பார்களோ? என்னவென்றேசுவார்களோ? நாம்போகிறவழியில் சந் திப்பார்களோ? ஏதோ என்னவோவென்று அச்சத்துடன்போய்ச் சுதக்கணை யரண்மனைக்குட்புகுந்தாள். இவ்வகையாகச்சொன்ன வைசம்பாயனரை ஜெ னமேஜெயமகாராஜனெழுந்து எதிர்விழுந்து பணிந்து புகழ்ந்து மகிழ்ந்து சுவாமி! உபகீசகர்கள் கையிலகப்பட்ட பாஞ்சாலியை வீமசேனன்வந்து விடு விக்காமற்போனாற் கீசகனுடன் சேர்த்துக்கொளுத்திப் போடுவார்களே. கிர் தார்த்தனேயென்று பரிக்ஷித்துவின் பாலன்கேட்க, வைசம்பாயனர் சொல்லு கிறார். மதிமரபிலுதித்த மன்னவனே கேள். கள்ளமாமாயப்பிரானாகிய கண் ணனுடைய கடைக்கண்ணருளாலும் தருமபுத்திரமகாராசனுடைய சத்திய நித்திய தவத்தினாலும் பாஞ்சாலியினது பத்தினித்தன்மையாலும் அப்படிப் பட்ட பொல்லாங்கு நேரிடாது. ஒருவேளை நேரிட்டாலும் தான்பெற்றபெ ண்ணைத் தானே கொளுத்துவானா? தானே சுட்டெரிப்பானா? தந்தையாகிய அக்கினிதேவன் அப்படி நேரிடுங்காலையில், தருமதேவதையும் அதற்குச்சகா யப்படுமா? தருமந்தலைகாவாமற் போமா? சந்திரகுலாதிபனே! என்று ஐயந் தீர்த்து மேல்நடந்த வர்த்தமானங்களையுஞ் சொல்லத்தொடங்கினார். இப்பால் கறுத்தவிருள்கலந்து கவிந்துபரந்து நிறைந்து சகத்தைமறைத்துப் போர்த்த திரைக்களங்கத்தை வெறுத்து விலக்கி நிலத்தைநோக்கி விளர்த்த கிழக்கின்க ணுதித்த கதிர்க்கிரகணமாலிகையின் சோதி உதயகிரிமுடிமேலேற்றிய மணிவி ளக்கேபோல் எட்டுத்திசையும் பிரகாசிக்கப் பிரபைவிட்டொளிகாட்டிச் சூரி யோதயமானவுடன் அன்றிரவில்நடந்த யுத்தவிபரீதமும் சத்தப்பிரதாபமும் விராடபுர மெங்கும்பரவி, ஆபிரங்கிரணனிலு மதிகமாய்விரிந்து, மச்சநாட்டுள்ள மகாசனர்களும் கோட்டைக்கு மேற்புறத்தடைந்து வனத்தில் மாண்டுகிடக் கின்ற உபகீசர்களையும் அவியாமலெரிகின்ற மாஞ்சோலையில் மகமாயிக்குப் பூசைபோடச்செய்த பதியலங்காரம்போலிருக்கும் கீசகன்தலையையுங்கண்டு விசனமேற்கொண்டுபயந்து ஓட்டமாயோடிவந்து விராடராசனுக்குச்சொல்லி வெறுப்படைந்தனர். கீசகனழிந்தசெய்தியைத் தன்பெண்சாதி சொல்லக் கேட்டு முன்னமே மன்னன்வருந்தி இனிநா னென்னசெய்வேன்! கன்னியன் னமே! என்தோள் போயிற்றேயென்று துடிதுடித்துக்கண்ணீர்வடித்துப் படுக் கையைவிட்டெழுப்பலமற்றவனாய்ப் பரதவித்தான், அப்படியிருந்த பார்த்திவன்

செவியில் உபகீசகர்களு முயிரொழித்தார்களென் றுரைத்தவுடனே இடிமே லிடியும் அடிமேலடியும் எய்தியவாறுபோ லிரங்கி இரைந்து விரைந்தெழுந்து கொலுச்சாவடியிற் கூடிய தூதர்களைக்கூவி, என்மைத்துனரிறந்த காரணகாரியங் கண்டறிந்து வாருங்களென் றனுப்பினான். அப்படியே அவர்களும் போய்ப் பார்த்துச் சிதைந்து வதைந்த கீசகரைக்கண்டு ஆச்சரியமு மாச்சரியமுமுள்ளவர்களாய் அரசன் திருமுகத்தைப் பார்த்து இராசகுலராசனே! பராக்கு. கீசகராசனுடன் உபகீசகராசரும் இறந்துபோயினர். அவர்கள்பேரு மிறந்துபோயிற்று. அப்பிணங்க ளலங்கோலமாய்க் கிடப்பதைநோக்கி, அப்பட்டணத்துச் சனங்களெல்லோரும் பயங்கொண்டு, வெளிவரமாட்டாமல் வேசாறி வெம்புகின்றார்கள். இவ்விபரீதமெல்லாம் சைரந்திரியென்னும் பெண்ணால் விளைந்ததன்றி மற்றொன்றுமில்லை. அப்பாக்கியசாலி இன்னுஞ் சிலநாளிவ்விடத்திலிருந்தால், இவ்வூரிலுள்ளோர்யாவருஞ் சாகாமற்போகார்கள். தருமசீலதயாளுவாகிய தராபதியே! இப்பால் தாங்களே யோசிக்கத்தக்கதென்று சரணஞ்செய்தார்கள். அவர்களுரைத்த மொழியை யோசித்து மந்திரிகளுடன் கலந்து வார்த்தையாடித் தந்திரயுத்தியினாலும் மந்திரசித்தியினாலும் அக்கந்திருவரைக் கைப்பிடியாய்ப் பிடிப்பதற்கான உபாயந்தேடி விற்படை வேற்படை யோங்கிய வீரர்களைவிடுத்து மற்புயவலிமிகுத்த என்மைத்துனரை அற்பமாயெண்ணிச் சர்ப்பனைசெய்து பிராணனைவாங்கித் துர்ப்பலமுள்ள துட்டர்களை எப்படியாயினுங் கைப்பிடியாகப்பிடித் தென்சொற்படி வரச்சொல்லுங்களென்று பற்கடித்து விராடன்பகர்ந்து இறந்துபோன மைத்துனருக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்முடித்து இனி என்னமோசம் வருமோவென்று ஏக்கமேலிட்டுத் தூக்கம்பிடியாம லிருந்தான்.

நேற்றிரவில் நடந்தசங்கதிகளைப் பாண்டுமக்களைவரும் பாஞ்சாலியும் தனித்தோரிடத்திற் சேர்ந்து கலந்து வார்த்தையாடி அஞ்ஞாதவாசஞ் செய்யவந்த நமதவதிநாளாயிற்று. இன்னுமிருக்கும் கொஞ்சநாளுந் தொலைந்தால், வெறுப்பாயெடுத்த வேடத்தைவிடுத்து விருப்பாம் பழையவேடமடுத்து வெகுசனங்களுங்காண வெளிப்பட்டுப் பேசவேண்டிய செய்திகளையெல்லாம் பேசிக்கொள்ளலாம், அதுவரையிலுஞ் சந்தடிபண்ணாதிருப்போமென்று பேசிக்கொண்டு விற்பன விவேகிகளாகிய அவ்வேந்தர்கள் தங்கள் கற்பனைத்தொழிலில் பக்குவமாக விருந்து காலங்கழித்தார்கள். அதுமுதல் விராடராசனும் சுதக்கணையும் புறம்பேயுண்டான சுற்றத்தவரும் மற்றையரும் அவ்விரதசாரணியிடத்தி லதிகமாய் நெருங்கவும் வேடிக்கையாய்க் கொஞ்சவும் குலாவவும் போவாவென்று வாய்ப்பேச்சுப்பேசவும் பயந்து, அவளாலாகவேண்டிய வேலைகளைத் தாங்களேசெய்துகொண்டு அம்மா தாயே! சும்மாவிருவென்று பசரித்து எங்களுக் குயிர்த்துணையாயிருந்த கீசகர்கள் உன்மேலாசைவைத்து மானமதிகெட்டு நாசமாயினர். நீயெங்கள்மே லியாதொரு குற்றங்குறை வையாமற் கோபதாபஞ்செய்யாமல் உனக்குக் காவலாகிய கந்திருவரிடத்திற் சொல்லி எங்களைக் காக்கும்படி பிராணபிக்ஷைதரவேண்டும். நீரெங்களுக்குப் பக்கத்துணையிருந்து காத்தருளாயென்று உபசாரம் பண்ணிப் பொன்னைப்

போற்றுமாறுபோற் பூசித்துவந்தனர். அந்நகரிலுள்ள நான்கு வருணத்தவரும் பாஞ்சாலியைக்கண்டால் எதிர்சென்றோடித் தீர்க்கதண்டனிட்டு மரியாதையுடன் பாதபூசைபண்ணி, மஞ்சள் குங்குமம் கந்தசதம்பம் சந்தனுதி அக்ஷதைகளைச்சாத்தித் தூபதீபங்கொடுத்து வணங்கி வாய்க்குற்றம் கைக்குற்றம் வரப்போகின்றதென்று வயிற்றில்வாள்கட்டிக்கொண்டவர்போல் பயங்கரத்துடன் மதித்துத் துதித்துச் சன்மானம்புரிந்து தேவதா வுபசாரம் இராசோபசாரம்போல் பலஉபசாரங்களையுஞ்செய்துவந்தனர். பாஞ்சாலியோ இப்பூசையும் பாலைக்குடிக்குமா வென்பதுபோல், எனக்கென்னதெரியும்; நானென்ன அறிவேன் அம்மாவென்னச் சுதக்கணதுயரம் பொருந்தி அமர்ந்து வாழ்ந்திருந்தனள்.

பாண்டவர்கள் அத்தினபுரத்திற் சொக்கட்டாடித் தோற்றுப் பன்னிரண்டாண்டும் வனவாசஞ்செய்யப்புகுந்து, காடாக்கினியோங்கிய காட்டிலும் காளவிடாக்கினிதங்கிய பாலைநிலத்திலும் வடவாமுகாக்கினிவந்து குடிகொண்டமலைச்சாரிலும் திரிபுராக்கினிசிறந்த பருக்கைக்கல் மேட்டிலும் மதனக்கினிமலர்ந்த மடுக்கரை குளக்கரை நதிக்கரைகளிலும் திரிந்து மழை பனி காற்று வெயில் முதலாகிய வருத்தங்களையும் பொறுத்து அலைந்த சரித்திரத்தைச் சொன்னேன். பஞ்சவரைக் காட்டிலோட்டிவிட்டு விரகண்டைதாங்கிய தன்பாதத்தில் சத்துருவெல்லாம் மித்துருவாய்ப்பணிந்து கப்பணங்கட்டிவரப் பொற்பணிமுடிபூண்டு எட்டுவனங்களுக்கும் ஏகசக்கராதிபதியாயிருந்து துரைத்தனஞ்செய்துவருகின்ற பாவமே குடிகொண்ட இனம்படைத்த துரியோதனமகாராசன் அச்சமில்லாத சேனைகளுடன் மச்சநாட்டைப் பகைத்து இச்சையின்படி பசுநிரைகளைக் கொள்ளையிடலாமென்று கொச்சைமதியால் இலச்சைகெட்டுவந்த தக்ஷணநிரைமீட்சி உத்தரநிரைமீட்சி யென்னும் மாடுபிடி சண்டையைச் சொல்லுகின்றேன். கேளும் ஜெனமேஜெயமஹாராஜனே ! என்று வைசம்பாயனர் சொல்லிவருகின்றனர்.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

கீசகன் யுத்தமுற்றிற்று.

---

## தக்ஷணநிரைமீட்சிச்சருக்கம்.

---

கண்ணன்துதி.

தொழுவார்தம் வினைதீர முற்கோல மாய்வேலை சூழ்பாரெயிற்
றுழுவானை நன்றும மொன்றாகி லுங்கற்றோ ருருவோ திஞேர்
வழுவாத சுரராக நரராக புள்ளாக மாவாகபுன்
புழுவாக வொன்றிப் பிறந்தானு நாகிற் புகார்காணுமே.

மராடமன்னர் முதலிய யாவரும் வணங்கும் விராடபுரத்திற் கீசகர்களை வென்றபின்னர்,பாண்டவர்களும் பாஞ்சாலியும் அஞ்ஞாதவாசஞ்செய்துவரும்போது கீசகர் நூற்றுநால்வருங் கேடுண்டதைக் குறித்து, மச்சராஜன்

பெருமூச்செறிந்து கிலேசமுற்று இந்நாள்வரையிலும் இந்தராச்சியத்திற் கிடையூறுவராமற் காத்துச் சேனாதிபதித்துவ விசாரணையுஞ்செய்து எனக்குத்திகிலுந் தீங்குமில்லாமல் தன்சொந்தம்போற் பார்த்துவந்த என்மைத்துனனுமாண்டானே. ஆ! இனிநானெப்படிப் பகைவரைவெல்லுவேன்? இறைகேட்டனுப்பும் குறைமையுடைய வேந்தற்கு இல்லையென் றென்னமாய்ச்சொல்லுவேன்? எங்கும்பகைவர்களாகப் படைகொண்டு சண்டைசெய்யவருவார்களே. அப்படி வருபவர்களுக்குப் பயிர்களை பலித்தபாவனையாயிற்றே. கோட்டையையிடித்த கொள்கைபோலாயிற்றே, என்னிடத்தில்வைத்த மதிப்புமுதலிய கௌரவமும் இன்றேயொழிந்ததே, நமது கீசகனுக்குச் சமானமான பலசாலியைச் சம்பாதித்துச் சேனாபதி யாக்கவேண்டும். தெய்வமேயென்று மனக்கவலையுற்றிருந்தான். அந்தச்சமையத்தில் பக்கத்திருந்த கங்கபட்டர் மச்சராசன் மனத்தைத்தேற்றி, வாய்பிதற்றலை மாற்றித் துட்டகீசகர்களுடைய நஷ்டத்தைப்பற்றிக் கஷ்டப்படுகின்றீர். அந்நியராசபயங்கரங்கொண் டச்சப்படுகின்றீர். நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். படுபாவியான கீசகன் பட்டதே உமதிட்டதெய்வானுக்கிரகமென் றெண்ணிக்கொள்ளும். இனியுமக்கேநல்லகாலம், அக்கீசகனின்னுமிருப்பானாயின் சத்தியவாக்கியமும் சகலபாக்கியமும் யோக்கிய சிலாக்கியமும் பாழாய்ப்போய்விடும். இதுவனாயிலும் உம்மைப் பிடித்திருந்த ஏழரைநாட்டுச்சனி இன்றேயேபோயிற்று. துட்டத்துரோகியை நினைத்துத்துன்பப்படாதீர்; நமதுமடைப்பள்ளிமல்லனைவிட வேறு சேனாபதியும் வேண்டுமோ? இனி உமக்குப் பகைவரென்பாருமில்லை. உம்மைப் பகைத்துவந்து பிழைப்பாருமில்லை. உமது சத்திய சவுசவாசாரவிரதம் உற்றதுணையாயிருந்து மேலானசம்பத்தையுமக்குண்டாக்கிவைக்கும். நீர் வருத்தப்படவேண்டாம். சாந்தகுணனே! என்று தருமராசனுரைத்துச் சமாதானப்படுத்தியபோது, விராடராசன் வேதியர்பெருமானுரைத்த புத்தியைக்கேட்டு மிகமகிழ்ச்சிகொண்டு மேன்மையோடிருந்தான். அன்னியமாதர்மேல்வைத்த ஆசாபாசத்தால் மோசம்போய்த் தம்பிமார்களுடன் கீசகன்பட்டானென்று தேசாதேசமெல்லாம் பேசிக்கொண்டார்கள்.

இதுநிற்க, நிலைபெற்ற இருபுறத்திலும்அலையெறிந்தொதுங்கிய பொற்சன்னங்களும் நவமணிக்குப்பைகளும் இராசிராசியாய்ப்புரண்டு பிரகாசித்திருக்கின்ற கங்கைவளமோங்கிய குருநாட்டுக்கதிபதியான துரியோதனமகாராசன் அஸ்த்தினபுரத்தை யாண்டுவருங்காலத்தில் ஒருநாள் வஞ்சகச்சூதால் தோற்றுப்போனகுந்திமக்கள் இன்னும் வனவாசஞ்செய்யவேண்டியிருக்குமா? அல்லது, அஞ்ஞாதவாசம் பண்ணப்போயிருப்பர்களா? அவர்கள் நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போன நாளைக் கணக்கிட்டுப்பாருங்கள். சம்பிரதிகளேயென்றான். அவ்வரண்மனைக்கணக்கரில் பெரியராயசக்காரனெழுந்திருந்து வணங்கி, இராசாதிராசபரமேசுவரா! ராசமார்த்தாண்டா! ராசவுத்தண்டா! ராசகெம்பீரா! ராசப்பிரபுடிகா! ராசதுரந்தரா! ராசராசேசுவரா! வணங்காமுடிபெற்ற துரியோதனமகாராசனே! பராக்கு. ஆண்டவனுத்தரப்படிப் பாண்டவர்கள் வனவாசங்கழித்து அஞ்ஞாதவாச முக்கால்வாசியுந் தொலைத்துவிட்டார்களென்றான்.

அம்மொழியைக்கேட்ட அரவகேதனன் சிந்தைவருந்தி அவசரப்பட்டு அருகில் நிறைந்திருந்த சாரணர்களையழைத்து, அடா தூதரே! பாண்டவருறைந்திருக்கும் பதியையும் அவர்கள்கொண்ட மாறுவேடத்தையுங் கண்டறிந்து நமக்கு வெளிப்படுத்துவீர்களாகில் உங்களுக்குக் கோடிதிரவியமும் குதிரை யானை தேர் குடை கொடி பட்டுப்பட்டாவளி ரத்னபரணம் சிவிகை அருகு தீவட்டி செயபேரி பாங்காவாத்தியம் கிராமம் பூமி முதலாகிய வெகுமதிகளுங் கொடுப்பேன். நான்கு திக்கும் நன்றாய்த்தேடிப்பார்த்து வாருங்களென்று, சந்தனதாம்பூலங் கொடுத்துவிடுத்தான். அரசன் சொல்லிய வாசையை நம்பி அநேக தன்தூதர் புறப்பட்டுச் சபைமெச்சும்படி வெகுமதிபெறவேண்டு மென்னுஞ் சந்தோடமிகுதியால் வானமளாவிய மதில்வளைந்த கோட்டைகளும் மாடமாளிகைகளும் கூடகோபுரங்களுமுள்ள பட்டணங்களும் சிறூர்களும் கிராமங்களும் அக்கிராரங்களும் துருவங்களும் நதி குளம் ஏரி தடாகம் ஓடை கயம் கால்வாய் முதலியவைகளும், வாழை கமுகு கரும்பு தெங்கு வருக்கை மரமுதலிய வளப்பமும்பெற்ற நாடுகளும் மேன்மை பொருந்திய வீடுகளும் வண்டோலஞ்செய்யும் பூங்காடுகளும் விண்டலமுயர்ந்த மலைகளும் சுரபுன்னை தாழை கரும்பனையடர்ந்த மணல்மேடுள்ள கழிக்கரையும் வழிக்கண்யுந் தேடித்தேடிப் பாண்டவர்கள் காலடிச்சுவடுண்டோவென்று நாடி நாலுதிக்கும் பிரிந்தவர்கள் கூடி வேசாறிவாடி நாமெல்லோரும் அதிர்ஷ்டமில்லாதவர்களென்று தங்களைத் தாங்களே நொந்துகொண்டு அத்தினபுரத்திற்கு வந்து சூரியபுத்திரனாகிய கர்ணன் சௌபலராச குமாரனாகிய சகுனி பாரத்துவாச குமாரராகிய துரோணாச்சாரியர் அவர்குமாரராகிய அசுவத்தாமா சரத்துவந்த மகாரிஷி சந்ததியில்வந்த கிருபாசாரி சந்தனு குமாரராகிய வீட்டுமர் பச்சைமுதலிய ரத்னபரணமும் வெட்சிமாலையும் புனைந்த திரிகர்த்தன் வியாசன் வழித்தோன்றலாகிய விதுர திரிதராட்டிரர்கள்! இன்னுமுள்ள பலதேசராசரும் மந்திரி சாமந்தரும் தந்திரி சாளுவருஞ் சூழ்ந்திருக்கச், சந்திரனை விட்டகலாத தாராகணம்போல் தம்பிமார் மொய்த்திருக்க, முடிமன்னர் முறைமையுடனிணங்கிக் கப்பஞ்செலுத்திக் கால்மேல்வணங்கக், கட்டியக் காரரெச்சரிக்கைகூறப் பட்டுவர்புகழத் துட்டர்கள்தாழக் கவிவாணர்துதிக்க இசைவாணரிசைக்க மறையவர் ஆசீர்வதிக்கப் பரதநாட்டியப் பாவையராடச் சுருதிகூட வெண்சாமரைபோட வீரர்களெதிரோட வெண்பட்டுக் குடை நிழற்றச் செம்பதுமராகத்தாலமைத்த வீரசிங்காதனத்தின்மேல் மந்தியான சூரியன்போல் வேந்தர் பெருமானாகிய சுயோதனராசன் கொலுவிற்றிருந்தான்.

வினைப்பயனுக்கேற்ப விதியைக் கதியாக்கிக்கொண்ட வேந்தனிருந்த கொலுமுகத்தில் பாண்டவர்களைத்தேடி இளைத்துவந்த தூதர்கள் போய் நின்று தீர்க்கதண்டனிட்டு நந்தியாவட்ட மாலைபுனைந்த நராதிபனே! கொன்றைமாலையணிந்த பரமசிவனுக்கு வலக்கண்ணாகிய சூரியகிரணங்கள் பாயுமிடத்திலும் அப்பெருமானுக்கு இடக்கண்ணாகிய சந்திரப்பிரகாசம்பரவுமிடங்களிலும் அவ்வாதி பாண்டரங்க னெற்றிக்கண்ணாகிய அக்கினிதேவன் பொரு

ந்து மிடங்களிலும் காலகண்டன் காலருள்கண்ட காலனுடைய கரும்பாசஞ் செல்லுமிடங்களிலும் புகுந்து சோர்வில்லாம லாராய்ந்து பார்த்தோம். எங்கும் பாண்டவரைக் காணாமல் பங்கப்பட்டே இங்குவந்தோம். தங்கள் சமுகத்தில் நாங்களுண்மையாய்ச் சொல்லுகின்றோம். ஆண்டவ னருளால்மாண்டவர் மாண்டேபோயினர். ஐயமேயில்லை. தேவரீரிடத்தில் தவணைவைத்துக்கொண்டு போனநாள்முத லிதுவரையிலும் தேடித்தேடி விறுதாவாய்க் காலம் போக்குவதிற் பயனில்லை; விரைந்து சென்று மன்னர்பெருமானுக்கு முன்னே சொல்லிவிட்டால் இன்னும் வேண்டியவுபாயந் தேடிக்கொள்வாரென்று எண்ணியே வந்துவிட்டோம். தேவரீர் கட்டளையின்படி நடக்கின்றோமென்று வணங்கி வாய்புதைத்துக் கைகட்டிப் புத்திபுத்தியென்று விண்ணப்பம்பண்ணினார்கள்.

மன்மதனையொத்த வடிவமைந்த துரியோதனராசன் சாரணருரைத்த லோபமொழியைக் கேட்டுக் காதிரண்டுங் கும்மென்றடையக் கதறி, உடல் பதறி இருகரத்தையுமுதறித் தன்னருகேயிருந்த சாதுக்கள்முகத்தைநோக்கி ஐயா! பெரியோரே! இத்தூதர்கள் அவனிமுழுதுந்தேடி யலைந்துவந்து உரைத்ததைக்கேட்டீர்களே. இனிநான் செய்யவேண்டிய காரியமின்ன தென்றே யியம்புங்கள். பாண்டுமக்களைவரும் பாஞ்சாலன் தையலும்பன்னிரண்டாண்டும் வனவாசம்பண்ணித் தேகமிளைத்துக் களைத்து ஆவியழிந்து போனார்களோ? அல்லது அஞ்ஞானவிருளைப் போக்கிச்சுஞ்ஞானச் சுடரொளிக்கச்செய்யுந் தவமுனிவர்களினால் மண்ணாசையும் பெண்ணாசையும் பொன்னாசையும்விட்டு, மனோதிடம்பெற்று விஞ்ஞான விளக்கத்தால் வேதாந்திகளானார்களோ? ஒருவேளையாருமறியாமலஞ்ஞாத வாசங்கழித்து முடிவிலிவ்விடம்வந்து முளைப்பார்களோ? தெரியவில்லை. உங்களுங்களுள்ளத்தில் செவ்வையாக நிதானித்து யோசித்துச் சொல்லுங்களென்று கள்ளமனத்தோனாகியகாந்தாரிபுதல்வன்கேட்கச் சூரியன்புத்திரனாகிய கர்ணன் சொல்லத்தொடங்கினான். அரவக்கொடி நிலவிய கௌரவகுலமுதல்வனே! என்சொல் லுறுதியைக்கேளும். பாண்டவரைவரும் வனவாசம்பண்ணிப் பன்னிரண்டு வருடத்தையுங் கழித்துக் காடுவிட்டகன்று நாடுபற்றிச் சென்று கூடுவிட்டுக் கூடுபாய்வதுபோல் மாறுவேடம்பூண்டு பெயர்வேறுகொண்டு குலம்வேறுகாட்டிக் குணம்வேறுநாட்டி நீதிநெறிபிசகாமல் ஆசாரம் வழுவாமல் பழமைச்செல்வம் பாராட்டாமல் அடங்கி ஆயுதங்களை மறைத்துவைத்துக் காலத்துக்குத்தக்ககோலமாக ஒவ்வொரு வேலையிலிருந்து, அஞ்ஞாதவாசவருடமுந் தொலைத்து அப்பால் வெளிப்பட்டு ஆபரணமணிமாலைகள் பிரகாசிக்கு மார்பினையுடையவராய் ஆயுதபாணிகளாய் இறுமாந்திவ்விடம்வந்து, நாங்கள் முன்னஞ் சூதாடித்தோற்ற நாடுகொடுப்பையா? அல்லது, போர் தொடுப்பையா? என்று நம்மைக் கேட்பார்கள். அவர்களுயிருடன் வருவார்களென்பதற் கையமேயில்லை. வேறாக நினைக்கவேண்டாம். இலங்கியவலம்புரி மாலையைப்பார்த்து அரிவையராசை கொண்டடரும் அலங்கார மார்பனே! என்று வீரப்பிரதாபம் பொருந்தியமார்த்தாண்டபுத்திரவரோதயனாகிய அங்கதேசாதிபன்எடுத்துக்கூறினான்.

இவ்வாறிசைத்த கர்ணன் கருத்தைத் துச்சாதனன்கேட்டுத் துடிதுடித்து மனங்கொதித்தெழுந்து கண்ணுங்கருத்துங் காதும்புகைய்க்கனன்று அண்ணனடிமலரிற் பணிந்து மலையிரண்டுபோலும் திரண்டதோளாகிய வள்ளலே! ஏழையாகிய வென்சொல்லையு மிரங்கிக்கேட்டருளும். பாண்டவர்கள் நாட்டைவிடுத்துக் காட்டையடுத்தபோதே செத்தபிணத்தோ டொத்தபிணமாயினர். மனுடத்தன்மையுள்ள மானிகள் இந்நாள்வரையிலும் உயிரோடிருந்து இனியிவ்விடம் வரப்போகிறார்களென் றெண்ணுகின்றீர்களா? ஐயோ, பாவம்! அவர்களப்போதேகெட்டு மண்ணில் மட்கிப்போயினர். அவர்களைப் புதைத்த விடமும் புல்முளைத்தாயிற்று. ஐவர்கள்பேரு மறைந்துபோயிற்று, அக்காரியங்களை நிதானிக்காமல் கர்ணராசன் இப்படிசொன்னது தப்படியன்றோ? இதன்றியும் அவருயிருடனிருந்தால் பாதாளபேத வஞ்சனம்போன்ற நம்முடைய தூதர்களின் கண்ணிலகப்படாமற் போவார்களா? இதுவே நமக்குப் போதுமான சாட்சியாயிருக்க வேறுவேறெண்ணி விரிக்கவேண்டியதென்ன? தேவரீர் கட்டளையிட்டருளுவீராகில், காட்டிற்றுன்பப்பட்டுக் காலங்கழித்த ஐவர்கள் தாறுமாறாயிறந்ததற்குக் காரணஞ் சொல்லுகிறேன். காவலர்க்கிறையே! கவனித்தருளும். வாரேறியமலைபோலுமுலையும்வாடியவல்லிக்கொடியிடையும் வாழைத்தொடையும் அன்னநடையும் வர்ணவுடையுமுடைய மங்கைமார்க்கெல்லாங் கடைப்பட்ட அந்தஸ்தினால் வறுமையுடைய பாஞ்சாலி மர்மம் விட்டுத் தருமராசனைநோக்கி ஐயோ பாவியே! அன்னமில்லாமல் நானழிகின்றேனே; ஆவியொழிக்கின்றேனே; ஏழையெளியவர்க்குப் பெண்சாதியானவர்கள் எவ்வளவோ செல்வங்களை இன்பமாயநுபவிக்கிறார்களே. கோழையாகிய உங்களுக்குப் பெண்டாகிய நான் ஏழையாகிக் குந்தித்தவித்துக் கண்டார் நகைக்கக் கலங்குகின்றேனே. முகத்திற்கு மஞ்சளுண்டா? நெற்றிக்குக் குங்குமமுண்டா? கூந்தலுக்குமாலைகளுண்டா? வயிற்றுக்குக் கஞ்சியுண்டா? அஞ்சலென்பவருண்டா? ஆதரிப்பாருண்டா?ஒஞ்சரித்துப்படுக்க வோலைப்பாயுண்டா? குந்தியிருக்கக் குடிசையுண்டா? வஞ்சியர்களைப்போல் வரிசைகளுண்டா? வெளுத்தவாய்க்கு வெற்றிலையுண்டா? ஆகா,தெய்வமே! சாண்பிள்ளையானாலும், ஆண்பிள்ளை மேலென்பர். நீங்கள் வேலும்வில்லும் வாளும் பூரித்த தோளுமுடையவர்களாய் இருந்தென்ன பலன் பெற்றீர்கள் எனக்கென்ன நலம்வைத்தீர்கள்?நீங்களைவரும் ஆண்பிள்ளைகளிற் சேர்க்கைதானா? உம்மைப் போன்றவர்களைப் பார்க்கும்போது, வெட்கமில்லையா? என்று நாடோறும்சலித்துக்கொண்டுபேசி வீணாய்வெறுத்து அவமதித்தேசிமுகங்கடுகடுத்துத் தினமுஞ் சண்டைதொடுத்துவந்தாள். அதனால் தருமராசன் குக்கல்வாய்ப்பட்ட முசல்போல் மனங்கூசிவருத்தமுற்றநாளையில் தம்பிமார்நால்வரும் தமையனையடைந்து வடவைக்கனல்போற் கொதித்துக் கோபித்து அடாதுரோகி! உன்னுடன்பிறந்து என்னபலங்கண்டோம்?பெண்சாதிபிள்ளைகளையும் விட்டோம். நாடுநகரங்களைச் சூதாலிழந்துகெட்டோம். சகோதரர்களாகிய துரியோதனதியரைப் பிரிந்தோம். உண்டுதின்று உறங்கும் பருவத்தில் உண்ணாமல் தின்னாமல் ஓட்டாண்டியானோம். ஒருவருக்கொரு காசுகொடுக்கவும் கதியற்றோம்.

யுத்தமுனையில் வெற்றிபெறுதற்கும் வகையற்றோம், இனியுன்னிடத்தில் பொருந்தியிருப்பது தர்மமா? எங்களையிப்படி பரிதாபஞ்செய்தது மர்மமா? பாண்டுவுக்குப் புத்திரராகப்பிறந்த கர்மமா? உனக்கு ஊழியஞ்செய்ய எங்களை மடக்கிவைத்துக்கொண்டாயே. வேப்பம்வித்துக்கொப்பானவனே!என்று மரியாதை தப்பி யெதிர்த்துக்கொண்டார்கள். தன்னோடொருநாளு மாறுபட்டுப்பேசாத தம்பிமார்கள் வாயில்வந்தபடி பேசியவருத்தத்தினாலும்துரோபதி படுத்துந் தொந்தரையினாலும் தனக்குள்ளிருக்கும் சில அசந்தர்ப்பங்களினாலும் அகாலபோசனத்தினாலும் காட்டுத் தீவெப்பத்தினாலும் மலைக்கானலினாலும் பனியினாலும் தன்னைப்பிடித்த சனியினாலும் சமானமானவரசர்கள் பழித்துச்சின்னத்தனஞ் சொல்வதினாலும் பாவமும்பழியுமேலிட்டதனாலும் நம்மிடத்தில்வந்து முகத்தில்விழிக்க வியலாததினாலும் தன்னாற்கூடியவரையிலுந் தாழ்ந்து குழைந்து விரகாக்கினியால்வெந்து சஞ்சலத்துடன் சலித்து உயிர்விட்டான். பிரியாமலிருந்த தருமராச னுயிர்பிரிந்தபோது தம்பிமாரும் பாஞ்சாலியுந் தழுவியழுது அந்தோ! பாழதுவந்ததேயென்று பரதவித்து, அண்ணனைப் பறிகொடுத்து மண்ணிலிருந்தென்ன வாரிக்கொள்ளப் போகின்றோம். என்றைக்கிருந்தாலும், நமக்குமிதுவே கதியெனத் தேறியிறந்துபோயினர். அவ்விடமிருந்த கழுகு பருந்து காக்கைமுதலிய பட்சிகளும் மிருகங்களும் வயிறாரத்தின்று கழித்துவிட்ட வெலும்புகள் மண்ணில்மட்கி மறைந்துபோயின. அவர்களைக் குறித் தின்னும்பேசுவதுவீண். எனக்கநேக விதங்களினால் திருட்டாந்தமாயிற்று. அண்ணா! நான் திண்ணமாய்ச் சொல்லுகின்றேன். கருமானுலையிற் காய்ச்சித்துவைத்த இரும்பிலேறிய நீர் திரும்பிவந்தாலும் வரும் காடேறிய பாண்டவர்கள் இனி நாடேறப்போவதில்லை. என்சொல்லுக்கு எதிரொவர்சொன்னாலும்,அதுஈடேறப்போவது மில்லையென்றுரைத்தான். அத்துச்சாதனன் சொல்லைத் தேவர்கள் விரும்புந் திவ்வியஞான இச்சாசுதந்தரராகிய துரோணர் கேட்டுப் பச்சாதாபப்பட்டுப் புன்னகைவிளைத்துப் பாண்டவர் பட்சத்தில் வைத்த பட்சமும் பண்பும் அன்பும் செவ்வையாய்த் தெரியும்படி சொல்லத்துணிந்தனர்.

இராசாதிராசனாகிய சுயோதன மகாராசனே! கேளும் உம்முடைய தம்பியாகியதுச்சாதனராசன் க்ஷாத்திரமாகச்சொன்ன ஆத்திரவார்த்தையை யோசித்துப்பார். பாண்டவர்களை இலேசாகவே நினைக்கவேண்டாம். சிறுபிள்ளையுடுத்த சிற்றாடைபோற் பேசவேண்டாம்,முன்பின் எண்ணிப்பாராமல் முழுமோசம் போகவேண்டாம், முறைதப்பான ஆலோசனை பண்ணவேண்டாம்,பாண்டவர்களெத்தன்மையர்; அவர்கள் வேதமுறை வழுவாத வித்தகர்கள். விண்ணவர்கொண்டாடு மேன்மைபெற்றவர்கள். யாவருடைய நாவுக்குமினிமையானவர்கள். எத்தலத்தவர்க்கு முதன்மையானவர்கள். முற்றத்துறந்த முனிவராலுங் காணுதற்கருமையான கண்ணுதலான்தந்த பாசுபதமுதலிய பாணவலிமையுடையவர்கள்; மிகுந்த சுகந்த கற்பகமாலைபுனைந்தவர்கள், விற்பனவிவேக முயர்ந்தவர்கள். எங்கும் விளங்கும் இளஞ்சூரியன்போல் சரீரகாந்தியுடையவர்கள். மந்திரஞானிகள்.எப்புவனமுமதிக்கும் ஒப்புவமையில்லா

தவர் மருதமரத்தை யுதைத்துக்காத்துக் குருந்தமரத்திற் குதித்துவிளையா டிய பன்னகசயனனாகிய திருமாலைப் பாண்டவர் சகாயனென்று யாவருஞ் சொல்லும் பதம்பெற்று இறுமாந்திருக்கும் பார்த்திபர். காலகேயநிவாத கவசர் களுடைய உரத்தையும் வரத்தையும் சிரத்தையும் புரத்தையும் போக்கித் தே வர்களிடரை நீக்கித் தேவேந்திரனுக் காதிக்கமுண்டாக்கி வைத்து அழியாத கீர்த்தியைப் படைத்தவர். கடலிலுமுயர்ந்த கண்ணருளுடையோர். அமுதினு மினிய அன்புடையோர். சற்றும் பிசகாத சத்தியசம்பன்னர். வித்தகமனு நூல் மேம்படுமன்னர். இத்தன்மையராகிய அதியுத்தமவேந்தரைச் செத்தன ரென்பதுதகுமோ? அத்தனபுரியில் உத்தமர்கூடிய சபையிற்கூறிய உறுதிச் சபதமுடிக்காமற் போவரோ? மத்திமர்கூடி வசைபேசும்படியாய்ச் சாவ ரோ? பாண்டவரை மாண்டவரென்று மனப்பால் குடிக்கவேண்டாம்; பகை வருக்கு ஆண்டவரென்று யோசிக்கவேண்டியது. தங்களுண்மையை நிலை நிறுத்தும்படி தவணைகழித்து இன்னுஞ் சிலநாளையி லிவ்விடம்வந்து சேரப் போகின்றனர். நாமெல்லோருங் கண்ணாற் காணப்போகிறோம். தேனொங்கு மாலையணிந்த பூமானே! நான் சொல்லியதைச் செவ்வையாய்த் தெரிந்துட் கொள்ளுமென்று துரோணசாரியர் சொன்னர். இப்பால் வில்லின்மறை வல்ல வராகிய கிருபர் சொல்லத்தொடங்கினர். நல்லவிவேக சுகபோக முற்றஇராச னே! சத்தியம்விட்ட அசத்தியர்களுக்கு மிர்த்தியுகிட்டிவருமேயன்றிச் சத்தி யந்தொட்ட உத்தமர்கட்கு உரியகாரிய நிறைவேறுமுன் மிர்த்திபு எட்டிப் பாராது; ஆகலால் உண்மையுள்ளபாண்டவர்கள்மரணமாயினரென்று அகால மரணத்திற்கு இடமானவர்களே சொல்வார்கள். புத்திமான்கள் அவை களையொருபோதும் ஒப்புக்கொள்ளார்கள். விம்முதலுடன் சென்ற வேந்தர் கள் ஐவரும் நம்மிடத்திலொப்புக்கொண்ட ஈராறாண்டு மெளிதிற்கழித்து அஞ்ஞாதவாசங்குறித்து அவரவருருவமறைத்து, எந்தநகரத்திலாவதடுத்து எடுத்தகாரிய முடிப்பதற்குந் தொடுத்தவேலை நடத்துவதற்குங் காலங்கருதிக் காத்திருப்பார்கள். அவர்களைக்கண்டு பிடிப்பவர்களுமுண்டோ? மண்டலதுரந் தர மதிகுலத்தவனே! அவர்கள் மகாசூரர்கள், தருமமறைமுதலிய சாத்திரமறி ந்த வீரர்கள். சாதுசங்கப் பழக்கமுற்ற தீரர்கள். தனகனகவஸ்துவாகன தரும விசாரணையிற் குபேரன் போன்றவர்கள். தவம்பெற்றவர்கள். மதிமந்திரிகள். ஒருமையும் பெருமையு முறவாய்க்கலந்தவர். இவ்வைவர்களில் தருமநந்தனர் சதாநிட்டைகூடினவர். அவாவறுத்தலும், பொறுமையும் அழுக்காறின்மை யும் நற்குணநற்செய்கையும்புறங்கூறாமையுமுடையவர். தம்பிமாரிடத்தி லன்பு தவறாமல் அவர்களிட்டபடி மாறுபடாமல் நடந்து, காலத்துக்குத் தகுந்த புத்தியுத்திகளை யெடுத்துக்காட்டி அவர்களைத் தன் வசப்படுத்திக்கொண்டிரு க்கத் தக்கவர். அத்தம்பிமார்களோ தமையன் சொல்லுக் கிரண்டில்லாமலிரு ந்து அவராந்கிரியகோட்டைக் கடவாமல்நடந்து தமையனைத் தந்தையாகவே நெஞ்சிற்கொண்டு நிந்தைதேடாதிருப்பவர்கள். ஆதலால் அவர்களுக் கொருக் காலும் பொல்லாங்குநேரிடாது. அப்படிப்பட்ட அறிவாளிகள் மனவெறுப்பி னால் தமையனைத் தாறுமாறுப்பேசி அவருமிறக்கத்தாங்களுமிறந்தார்களே

ன்பது மாச்சரியமுன்றி ஆச்சரியமன்று. அங்ஙனெப்பமுற்றும்மறந்து எப்படியுமிவ்விடம் வருவார்களென்னும் எண்ணமமைத்து.அவர்கள்வந்துவிட்டால், அதற்குஎன்செய்வோமென்று அச்சத்தோடிருக்கவேண்டும். அர்ச்சுனனோவென்றால் அசகாயசூரன், அதிரதவீரன், மூன்றுலகையும்வெல்லுந்திறன், சுந்தரதிற்சொருசுடையமாரன், தேவதாஸ்திரந்தெரிந்தகௌமாரன். வீமனெப்படிப்பட்டவனென்னில், ஊழிகாலத்துநமன்போல யுத்தம்பண்ணத்தக்கசண்டப்பிரசண்ட தண்டதரன். சாந்தகுண தருமராசன்சண்டைசெய்யவந்தால் திரிபுவனமுந்திக்கென் றெரிந்துபோம். வடவாமுகாக்கினியும்வாடிச் சாம்பராய்ப்போய்விடுமே. அவருடைய மகிமையை யாருமறியார்கள். அறியத்தொடங்கினால் அளவிறந்திருக்கும், அரவக்கொடியோனாகிய அரசனே இளையவரிருவர் எத்தன்மையரெனில், இராமபாணத்திலுங் கொடிய அம்பினையுடையவர்கள். பரதன்போலும் இலக்குமணன்போலும் விரதங்காப்பவர்கள். பாஞ்சாலியோ பதிவிரதைகளிற் சிறந்தவள், சொல்லைக்கடந்து சொற்புகலாதவள், பல்லைத்திறந்து நகைக்கறியாதவள், இல்லையென்றுரைத்தல் என்றுமில்லாதவள், வல்லவர்தம்பால் மாறுகொளாதவள், குடியினையுடையவள். தூற்றலிலாதவள். நற்குணநற்செய்கைவாய்ந்தவள், இப்படிப்பட்ட எழிலுடையாளுள். இவள் தருமராசனுடன் சண்டைபோடலாகுமென்பது தவறினுந்தவறேற இவர்கள்முக்கியமாய் அஞ்ஞாதவாசந் தொலைந்து இவ்விடம்வருவார்கள். உங்களெண்ணத்தைப்பார்த்தால் அநத்தம் விளையுமென்பதற் கையமேயில்லை. அவர்கள் வெளிப்படுவதற்குமுன் எவ்வகையிலாவது கண்டுபிடித்துச் சபையிற் பேசியிருக்கிறபடி மறுபடியும் வனவாசம்போகச் செய்வோமாயின் நாம் சுகப்படலாம். அப்படி செய்யாவிடின் அர்ச்சுனன்கணை அதிக்கிரமித்து வந்து நம்மைக் கொண்டுபோய் நமனுலகத்திற் சேர்ப்பிக்கும்.

இதல்லாமலும் வேதியருக்கும்வேதமேகண்கள். அரசருக்குத் தூதரேகண்கள். ஆகையால் நீங்கள் சாரணரைவிடுத்து முன்சாக்கிரதைப் படவேண்டும். நம்புத்திக்கு மேலான புத்தியையுடைய பாண்டவர்கள் ஆண்டவனருளைப் பெற்றவர்கள். எவர்கண்ணுக்கும் அகப்படார்கள். பகலளவுபோதுலொழிய இரவுவாராது. இரவளவு சென்றாலல்லது பகல்தோன்றாது. அதுபோல் உருவமறைந்துறையும் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசங்கழித்து வெளிப்படுவார்கள். நமது பலாபலத்தை நாமெண்ணி மெச்சும்போது எதிரிகளின் பலாபலமுணர்ந்து துணியவேண்டும். இப்படியெல்லாம் யோசித்து ஒன்றைச்செய்தால், என்றென்றைக்கும் பழுதுபடாது. அதைவிட்டுத் தூராலோசனை செய்வதினாற்பயனென்ன? என்று மதியிலுயர்ந்த கிருபாச்சாரியர் வகுத்தார். இந்தப்படி துரோணரும் கிருபரும் பேசிய விவரங்களைச் சபைநிறைந்த சகலருங்கேட்டுப்பெரியோர்கருத்தைத் தங்கள் தங்கள் புத்திக்கிசைந்தபடி யோசித்து. முடியப்போகிற காரணகாரியங்களையும் நிதானித்து வாய்மூடி மௌனம்போலிருந்தார்கள். அவ்வேளையில் கௌரவகுல பிதாமகனாகிய வீஷ்மாசாரியார் துரியோதனனைப் பார்த்து அப்பா! திரிதராஷ்டிரனுக்குச் சுபுத்திரனும் எனக்குப் பௌத்திரனுமான சுகுணனே! நீ தூதர்

களையனுப்பிப் பாண்டவர்களைத் தேடச்சொன்னது ஞாயமே. அவர்கள் தேசமெங்குந் தேடிப்பார்த்துத் திரும்பிவந்துரைத்தது அபாயமே. அதற்காகக் கர்ணராசன் பேசியது நேயமே. உன்றம்பி துச்சாதனன் சொன்னதுனக் கதியாயமே. துரோணருங் கிருபரு மொழிந்தது காயமே. நீ அப்பாண்டவர்களையெப்படியுங் கைப்பிடியாய்ப் பிடிக்கவேண்டுமென் றெண்ணுவ துபாயமே. இதனாற்காரியமில்லை. பாண்டவர்கள் பன்னிரண்டாண்டு வனவாசஞ்செய்து அஞ்ஞாதவாச மோராண்டுங் காலைப்பகற்குன்றி உருவமறைந்து ஒருதேசத்திலுறைந்து மூங்காலமுமன்றுமாதமுமாண்டுங் கழித்துவிட்டனர். இப்போது நீங்கள் ஐவர்களைக்கண்டுபிடிக்குமுன் மற்ற நிகரமுள்ள மாகாளவிருஷத்தையு மொழித்துவிட்டு வெளிப்படுவர். அப்படிப்பட்ட அறிவுடையாரை மரணமடைந்தாரென்று பேசினவர்கள் அப்பாண்டவர்களால் மரணமடையத்தக்கவர்களே. அந்தன்மையான அவசரப்பேச்சை எத்தன்மையோரெடுத்துரைத்தாலும் புத்திமானாகிய நீ எவ்வளவுங்கொள்ளப்படாது. ஆயின் ஐவரிருக்குமிடத்தை நீங்களறியவேண்டுமென்னு மெண்ணமுண்டாகில், முந்நூலாசிரியர்களாலதற்கோருபாயமுண்டாயிருக்கின்றது. அந்தக்குறிப்பின்வழியை நான்குறிக்கின்றேன். நீங்கள் கிரகித்துக்கொள்ளுங்களென்று காங்கேயர் சொல்லத்தொடங்கினார்.

முற்றத்துறந்த முனிவர்களால் மதிக்கத்தக்க தருமராசனும் பாஞ்சாலியும் நால்வரும் பொருந்திவாழ்கின்ற நாடும் நகரமும் மாதமும்மாரி வருஷிக்க வளங்கொண்டிருக்கும். காடுகளிலுள்ள மலைகளெல்லாம் தேன்வாரிகசிந்துகொண்டிருக்கும். ஆறுகுளத்தி னலைகள் யாவும் நவரத்தினங்களைக் கொழித்துக்கொண்டிருக்கும். கழனிகளிலார்ந்து தவழாகின்ற இப்பிகள் முத்துக்களை முறைமுறையே ஈன்றுகொண்டிருக்கும். கருங்கடற்கரைகளில் சிவந்த பவளக்கொடிகள் படர்ந்திருக்கும். காடுகள்தோறுந் தேடற்கரிய பொருள்வளம் நிறைந்திருக்கும். பசுவினங்கள் வேளைக்குப் பத்துப்படி பால்கறக்கும். வெகுசனர்கள் நடக்கும்வழிகளெங்குங் கரும்பாலைசிறக்கும். எப்போது முப்போகந் தப்பாமல்விளையும், நித்திய சுபமங்களமாயிருக்கும். அருந்ததிபோலும் பதிவிரதையான மாதர்கள் பொருந்தியிருப்பர். சாரபயம்வாராது. சோரபயமிராது. தெருக்கடோறுந் தருமக்கொடி நாட்டியிருக்கும். போர்முகத்தில் வெற்றிகொள்ளுஞ் செயக்கொடி காட்டியிருக்கும், வண்டினம் மதுவுண்டு மகரந்தந்தோய்ந்து காந்தாரம்பாடும். அந்நகரப்பதியோர் அண்டினபேரை யாதரித்துக் கீர்த்திப்பிரதாபம்பெற்று சீவகாருணியராயிருப்பார்கள். துர்ச்சோபம் துர்ப்பயங்கரம் துர்மரணம் துர்வியாதி முதலிய தேகபீடை வாரா யோகமார்க்கவழிதேடித் தீவினையொழிந்திருப்பர். பொதுச்சாலையிற்கட்டிய ஆராய்ச்சிமணி யென்றுமசையாது. அசையும்படியான அக்கிரமங்களுமிராது. எளியவரென்றும் வலியவரென்றும் பாராமல் யாவர்க்குந்நடுவுநிலைமையாகிய நீதியொன்றாயிருக்கும். எவர்க்கு மறிவுகுறையாது. சகலகலைஞானங்களுந் தவறாது. உடனுக்குடனே துட்டநிக்கிரகசிட்டபரிபாலனம்நடந்தேறிவரும். ஆசாரபூசாவிதிக ளதிகமாயிருக்கும். தேவாலயம் விஷ்ணுவாலயமிகுதியாய்ச்

சிறப்புற்றிருக்கும். பாவத்திற்குங் கோபத்திற்கும் பயந்தடங்கி வாழ்வார்கள்.
புண்ணியத்திற்கும் பொறுமைக்கும் பொக்கிடமாயிருப்பர். தைரியம் கல்வி
ஞானம் குணம் பெருமை மேன்மை தபம் செபம் தானம் நிதானம் வெகுமா
னம் சன்மானம் வேதமந்திரவேள்வி ஓமம் பூரணகும்பம் புண்ணியாவசனம்
போசனம் நவமணிமாளிகை யாண்டும் எங்குஞ்சிறந்திருக்கும். சுமங்களகல
யாண முரசும் தியாகமுரசும் வெற்றிமுரசும் எங்கெங்கும் வலம்புரிச்சங்கங்
களு முழங்கிக்கொண்டிருக்கும். காயாமரங்காய்க்கும். பூவாமரம் பூக்கும்.
கமலக்கருணைக் கண்ணனும் மகாலட்சுமியுடன் வாசமாயிருப்பர். இத்தன்
மையாகிய உத்தம நகரமெதுவோ? அதுதான் புண்ணிய புருஷர்களிருக்கும்
பதியென் றுணர்ந்துகொள். இதைப் பெரியோர்கள் பேசியவண்ணம் நானு
முண்மையாய்ச் சொன்னேன். இனிமேலுன்னுடைய வல்லமையினால் யோ
சித்து உறுதிசெய்துகொள்ள வேண்டியதென்று வீட்டுமர் விளம்பினர்.

பக்கத்திலிருந்த கிருபாசாரி மகிழ்ந்து வணங்காமுடி மன்னனைநோக்கி
வில்லும்வேலுந் தாங்கிய வேந்தனே! உன்னெண்ணப்படி முடியும் வண்ணஞ்
சுலுபமாகியசூட்சியை உங்கள் பாட்டனார் சொல்லிவிட்டபடியால் திண்ணிய
தூதனை விடுத்துத் தேடச்செய்வதற்கிதுவே நல்ல ஆதரவென் றுரைத்து
மேலுஞ் சொல்லுகின்றனன். அன்புடைமையுடைய பாண்டவர்கள் இராச
சபையிற் சொக்கட்டானாடித் தோற்றநாளையில் என்போலொத்தவர்க ளேற்
படுத்திய வாக்கியம் பழுதுபோகாமல், பன்னிரண்டாண்டுங் காடுறைந்து ஒரு
வருடநாடுறைந்து காலங்கழிப்பதற்காகவே தங்கள் தங்கள் வடிவத்தை
மறைத்திருப்பார்களென்பதற் கையமின்று. முன்னாள் நாமிருந்த இவ்விராச
சபையி லுடன்பட்டுப் பேசினபேச்சின்படி சொற்சோர்வுபடாமல் தவணை
யைத்தவிர்த்து விவகாரப்பழுது வாராமல் மெய்வழி நிற்கின்றனன். அப்பதின்
மூவாண்டுஞ் சென்றபிற்பாடு பாண்டவர்களே! நீங்களிவ்விடம் வருவீர்களா
யின் உங்கள் நாட்டையொப்பித்துவிடுகிறேனென்று உறுதியுடன் எங்கள்
முன்பாக நீ சொல்லியிருக்கின்றா யன்றோ? நீ அப்போதுரைத்த வாக்கியத்
தை இப்போது தவறியேதேதோ பேசுகின்றனை! இன்னும் பாண்டவரைக்
கண்டுபிடித்துப் பின்னும் பன்னிரண்டுவருடம் காட்டிலோட்டிவிடவேண்
டுமென்று மிகப்பிரயாசத்துடன் சித்தப்பிரமையடைவது அநியாயமன்றோ?
ஐயோ! தலைபோங்கால நேரிட்டாலும், சரீரத்தைவிட் டுயிர்கெட்டாலும்,
உன்னைப்போலொத்த உத்தமன் சொன்னிலைதவறிச் சோர்வடையலாமோ?
அப்படி நிலைதவறுவையாயின் உன்னரசாட்சி யென்னபயன்பெறும்? உன்னை
யார்தான் மதிப்பர்? ஆயின் எனக்கொன்று தோன்றுகின்றது. பாவங்களைந்து
பாராளும் பார்த்திவரிடத்தில் சத்தியந்தப்பிய குணம் தோன்றுமாயின், அவ
ர்களரசாட்சி பராசர் பங்காய்விடும். அஷ்டலட்சுமியு மகன்று கஷ்டலட்சுமி
கலந்துற வாடுவளென்றே வேதத்தில் விளம்பிய மொழியொன்றுண்டு. அதை
யுன்னுங்கால். உன்னுடைய செல்வமுழுமையும் சத்தியவான்களாகிய ஐவர்க
ளுடைய தென்பதற்கு யாதொரு சந்தேகமேயில்லை. இதைநீ செவ்வையாயோ
சித்துப்பார். உன்னுடைய நாவைத்திரமாகக்காக்கவேண்டும். முற்காலத்தில்

நாங்களெல்லோரும் உன்னுடன்கூடிக் குலாவியிருந்து பேசியவித மென்ன வெனில், பாண்டவர்கள் வனவாசம்பண்ணிவந்தால் அவர்கள் நாட்டைக் கொடுத்துவிடுவதென்னுந் தீர்மானமேயன்றி வேறொன்றில்லை. இப்போது உனக்கிஷ்டமாகிய தம்பிமார்முதலியோர்களும் நீயுந் தாறுமாறாய்ப்பேசுவது சரியன்றே; அறியாதவர்க ளெப்படிபேசினாலும் பெருமையுடைய பெரிய வனாகிய நீ பேசப்படாதே. உங்கள்குணத்தை நிதானிக்குமிடத்தில் நீங்கள் நினைத்தகருத்தை நேரேயறிந்தோம்; நீங்களொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்னு நெறியறியீரோ? நீங்களெண்ணிறந்தநாள்தேடினும்உங்கள் கண்ணுக்குப் பாண்டவரகப்படப்போவதேயில்லை; அவர்களைக் கண்டுபிடிக் குஞ்சாமார்த்தியமுங்களிடத்திலில்லை. அப்படி யன்றென்றுகாண்பதற்கெத் தனிப்பீர்களாயின் வீணேநாள்கழியும்; மேலானவிழிவுங்குறைவும் நேரிடுமே யல்லது நிறைவேறாது. அவர்களெந்நாளும் நன்னாளாகவே யனுபவிப்பார்கள். ஆயிற்று அஞ்ஞாதவாசமும் பண்ணிவிட்டார்கள். நீ கங்கணங் கட்டிக்கொண்டு இதுவரையிலும் தேடவிட்டிருந்த தூதரால் பாண்டவரிருக்குந் தானந் தெரிந்துகொள்ளாமற்போனாய். இனிமேல் தேடவிட் டென்னலாபங் காணப்போகின்றாய். விருதா ஆலோசனையாற் பிரயோசனமில்லை. யாதொரு காரியத்திற்கும் முன்சாக்கிருதை யிருக்கவேண்டும். பின்னெண்ணிப்பார்ப்பது பேதையர்பக்ஷம். தவணைநாள்கழியுங்காலையில் தடவிப்பார்க்கத்துணிவது மேலானோர்பட்சமன்று. ஆயினும் பாகீரதிபெற்ற கோமுனியாகிய பரிசுத்த இருதயரான வீஷ்மர் சொன்னகுறிப்பின்படி தூய்மையும் வாய்மையும் பொருந்திய தேசம் எவ்விடமிருக்கின்றதென்று அதையாயினுந் தெரிந்துகொள். அப்பால் மற்றகாரியம்யோசிக்கலாமென்று வில்லாசாரியர் பேசியபோது, அவரிடத்தில் நேசவிசுவாசமுள்ள துரியோதனமகாராசன் மனம் வருந்தி நானிலமெல்லாந்தேடித் திரிந்தலைந்துவந்த சாரணர்களைநோக்கி நீங்கள் பார்த்ததேசத்தில் எங்கள் மூதாதையாருரைத்த வார்த்தையின்படி அழகும் வளப்பமும் அன்பும் நோன்பும் நேயமும் நிலையும் நீதியும் நெறியும் மானமுஞ் ஞானமும் வண்மையும் பண்பும் இசைந்திருக்கும் பட்டணமியாதோ அதைத் தெரியச் செய்யுங்களென்று சுயோதனன்கேட்க, உடனே வேவுகாரரெல்லோருங்கூடி அரவக்கொடிக் கதிபனுடைய அடிமேற்பணிந்து விளம்பினார்கள், ஸ்ரீ சுவாமி பராக்கு! பெரியமூதாதை பேசியபடியே மாதமும்மாரியின் யோகமும் பூதலப்பயிர் பொருந்துமுப்போகமும் ஆதுலர்க்களிக்கும் அன்னமுதலாகிய தியாகமும் சீருஞ்சிறப்புந் திகழுநற்செல்வமும் அறம்பொருளின்ப மானமேம்பாடும் கறந்தருபசுக்கள் நெருக்கமுஞ்சுத்தமும்பாவச்சுருக்கமும் படையின்பெருக்கமும் வாழையுங் கமுகும் வளர்தருதெங்குங் கரும்பும் வளம்படவிளைந்து பார்ப்பவர் மனத்தையுங்கவர்ந்து மேன்மேற் சிறந்த நாடு மச்சநாடல்லது வேறில்லை; வேறே மாற்றிச்சொல்லுவதற்கும் வகையில்லை; எங்கு மாராய்ந்துணர்ந்தோம். அந்நாட்டின் மகிழ்ச்சியை நாங்களென்னென்றே சொல்லுவோம்? இந்நாட்டுக்கிசைபெற்ற ஏந்தலே! நம்முடைய பிதாமகன்பேசியவார்த்தைக்குபிசகில்லை; சத்தியந்தானென்று பேசிவந்ததூதர்

கள் மற்றோரதிசயத்தையுங் கேள். யாரோவொருபெண் சைரந்திரியென்றும் மாலினியென்றும் பிரகநளையென்றும் வண்ணமாமகளென்றும் பேர்கொண்டு விராடராசன் மனைவியினிடத்தில் வந்து சேர்ந்திருக்கின்றாளாம்; அவள்மேற் கீசகன் ஆசைகொண்டு துரத்தினானாம்; எவனோவொரு சிங்கான் குறுக்கே நுழைந்து அவனைப்பிடித்தெறிந்து விசிறினானாம்; சபையிலிருந்தவர்களென்றார்களாம். அக்கீசகனையும் அவன் தம்பியார்களையும் சிலர் நாசஞ்செய்து பொழுதுவிடியுமுன்னமே கொன்றுபோட்டார்களாம். இவ்வகையாகக்கொன்றவர்கள் யாரென்று விசாரிக்குமிடத்தில் மேற்கூறிய வண்ணமாமகளுக்கு மெய்க்காவலாக விண்ணுலகிற் சஞ்சரிக்குங் காந்திருவரைவரென்று அங்கமெல்லாம் பேசிக்கொள்ளுகின்றனர். நாங்களதை நன்றாக யோசிக்குங்காலையில் அக்காந்திருவரைவரும் பாண்டவர்களென்றும் அவர்க்குரிய பாஞ்சாலியே வண்ணமாமகளென்றுந் துணிவாகச் சொல்லுவோம்; இதுவே நிச்சயமென்றுஞ் சொன்னார்கள்.

இவ்வகைக்ஷத்திரிய சாரணர்களுடைய ஸ்திரவார்த்தையும் வீஷ்மாச்சாரியர் மனங்குவிந்துரைத்த சத்தியமொழியையுஞ் சேர்த்துத் தன்கருத்துக்கிசையச் சீர்தூக்கிப் பார்த்துங் காரணகாரியத்தை யோசித்துந் துரியோதனன் பூரணமனத்தோடு பேசத்தொடங்கினான். ஐயா! கிருபர் வீஷ்மர் முதலிய கிருபைக்கடலாகிய பெரியோர்களே! கேளுங்கள். வீமசேனன் சராசந்தன் பகாசூரன் மத்திரராசன் பலதேவன் இவர்களியாவரும் இந்திரன்முதலியபேர்கள் புகழத்தக்க தோள்வலிமையுள்ளவர்களாய்ப் பதினாயிரம்யானை பலம் படைத்தவரென்றும், இவர்களில் ஒருவரையொருவர் கொல்லலாமேயன்றி மற்றொருவரால் மடியாரென்றும் பெரியோர்கள்பேசக் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியிருக்க, காந்திருவர் வந்துகீசகர்களை மடித்தாரென்பதை மெய்ப்படிநம்பலாம். அச்சைரந்திரி நிமித்தமாய்க் கீசகர்கள் சங்கரிக்கப்பட்டார்களென்பதை நன்றாய் யோசிக்குமளவில் அவள் சைரந்திரியல்லள், துரோபதையென்றும், காந்திருவரல்லர் பாண்டவரென்றும் அப்பாண்டவரில் வீமசேனனேகீசகர்களைநாசஞ்செய்தவனென்றும் பெட்டிப்பாம்புபோலடங்கி விராடநகரத்தி லிருக்கின்றார்களென்றும் கெட்டியாய்ச்சொல்லுவதற்கு யாதொரு அட்டியுமில்லை. அதேனெனில் வல்லிரும்பென்னத் திருந்திய புயவலி பொருந்திய இயக்கர்கள் அமரர்கள் நாகர்கள் அசுரர்கள் இராக்கதர்கள் காந்திருவர்கள் முதலாகிய யாவரும் அக்கீசகன் வல்லமைக்கு ஆற்றமாட்டாமல் கால் கைநடுங்கியொடுங்கி யிருந்தார்கள். இவர்களிலோர்பிரிவாகிய காந்திருவர்வந்து கொன்றார்களென்பது எனக்குமிகவு மாச்சரியமாகவேயிருக்கின்றது; தேன்துளிர்க்கு முடியானாகிய கீசகனை மடித்தவன் காமனுக்கொப்பாகிய வீமனென்றே துணிவதற்கியாது மையமில்லை; நிச்சயமே. வண்டுமொய்க்குங் கொண்டையினையுடைய வண்ணப்பெண் வடிவினாள்; ஐவர்க்குமுரிய தேவியே, இதற்கையமென்பதேயில்லை. ஆகையால் பாண்டவர்கள் விராடநகரில் மறைந்திருக்கின்றார்கள். அஞ்ஞாதவாசத்தவணை கழிக்குநா ளின்னுமிருக்கிறபடியால் தாங்கள் வெளிப்படாமற் சிங்கபல கீசகனுயிரைத் தீர்த்துவிட்டார்கள்.

இதற்குமேல் நடக்கவேண்டிய யோசனையென்ன? இன்னதென் றுரையுங்கள்,
பொன்னனைய பெரியோர்களேயென்று சயங்கொண்டானும் புயங்கக் கொடி
யோன்கேட்க, சூரியகுமாரனாகிய கர்ணன் ஓர்மொழி யுரைக்கலானான். மன
ங்காதலிக்கும் வணங்காமுடி மன்னனே! முன்னமெண்ணியதே நிசம். இன்னு
மென் தாமசம். மேகமண்டல மளாவிய தேர்விதங்களும் மும்மதம்பொழியும்
யானையினங்களும் குப்புற்றுலவுங் குதிரைத்திரள்களும் ஆலாலம்போன்ற கா
லாட்களும் இக்கணமே புறப்பட்டு மச்சநாட்டைவளைத்துப் போர்கொடுத்துப்
பசுக்கணங்களைத் தடுத்து நமதூர்புகவிடுத்துக் கண்மூடிக் கண்திறப்பதற்கு
முன்னமே கலகம் விளைத்துவிடுவோம். நாமெண்ணியவண்ணம் பாண்டவர்க
ளிருப்பார்களாயின் விராடராசனுக்குப்பரிந்து நம்மேற்சண்டைதொடுக்க வரு
வார்கள்; சும்மாவிருக்க மாட்டார்கள்; அவர்களைக்கண்டுபிடித்துவிவகாரஞ்செ
லுத்தலாம். அவர்களவ்விடத்திலில்லாமற்போனால்,மடக்கியபசுமந்தைகளெல்
லாமுங்கட்கடைக்கலந்தானே.இரண்டுவகையிலுநமக்கிலாபமிருக்கின்றது.இது
வே பாங்கென்று அங்கதேசத்தரசன் சொல்ல, அங்கிருந்தவரசர் யாவரும்
பொங்கிப்பூரித்து இதுவே யாவருக்குஞ் சம்மதமென்றிசைந்தார்கள். பெரு
மையுடைய துரியோதன மகாராசனும் இக்கருத்துக் கொத்திருந்தான்.

அவ்வேளையில் திரிகர்த்த தேசாதிபனாகிய சுசர்மனெழுந்து, கரத்தைச்
சிரத்திற்குவித்துப் பணிந்து கௌரவகுலாதிபனே! முன்னொருநாள் சேனாதி
பதியாகிய கீசகனுக்கும் எனக்கும் போர்விளைந்து மன்னர்களுடன் வந்துவளை
ந்து என்னைப்பிடித்து இறுகப்பிணித்துத் தன்னகரத்திற்குக் கொண்டுபோய்
விட்டான். அவனே கையைவிட்டுத் தப்பித்து வரப்பட்டபாடு தெய்வமறிந்
தது; அச்சத்துருவை வெல்லுவதற் கென்னான்முடியாமையால்,அந்நாள்முத
லிந்நாள்வரையிலுநன்னாள்நமக்கெப்போது வருமென்றே தான்காத்திருக்கின்
றேன்.முன்னாள்செய்தமுழுவினைவசத்தால்அவனே அகப்பட்டுக்கொண்டான்;
காமாந்தகனாகிய கீசகன் வாசஞ்செய்த மச்சதேசத்திற்கு என்னைப் போகச்
சொல்லுவீராயின் விராடராசன்முதலியவேந்தரையும்பிடித்துக்கட்டி என்பனை
த்தில் வைத்துக்கொண்டிருக்குங் குரோதத்தையும் காட்டித் தீட்டி அவ்விராட
ராசன்மைத்துனனாகியகீசகன் என்னைப்படுத்திய அவமானத்தைஇவன்பாற்படு
த்தி, அவ்விடத்திலொளிக்கும் பாண்டவரைப் பக்குவமாயறிந்து மச்சராசன்
வளப்பங்களைக் கைவசப்படுத்திக் கீசகன்பலத்தால் நமக்குக் கப்பங்கட்டா
திருந்த கருவத்தையடக்கிப்பசுநிரைகளையுமடக்கி அத்தினாபுரமேவந்து சேரு
கின்றேன். கர்த்தனே! என்று திரிகர்த்தன் சொல்ல, இராசாதிராசன் நகை
த்துமகிழ்ந்து படையிலுமொருவன் கொடையிலுமொருவனெனப் புகழ்ந்து,
அண்ணாகர்ணா!சுசர்மன்சொல்லியவாக்கியம்உமக்கெப்படி யிருக்கின்றதென்று
கேட்டான். அடடா! இப்போதே அப்படிசெய்வது உத்தமமென்றான். அப்
போதே சேனாசயினியங்களைச் சேகரிக்கும்படி உத்தரவளித்து, சுசர்மனு
க்கு வரிசைகளுந் தாம்பூலமரியாதையுநடத்தி அண்டகடாகமதிரும் வாத்தி
யங்களுடன் சண்டைக்கனுப்பினான். அவ்வாறு விடைகொண்டு திரும்பிய
திரிகர்த்தன் விந்தகிரிக்கொப்பாகிய தேரேறிப்பூலோக தேவேந்திரன்போல்

புறப்பட்டுச் சிறப்புப்பொருந்திய விராடநகரத்தின்மேற் போர்புரியப் போனான். இப்பால் சுந்தியாவட்டமாலை யணிந்தநராதிபன் சபையிலுயர்ந்த சாதுக்களை நோக்கி, ஐயா! பூரணஞான சீலபுண்ய மூதாதையாவார் புகன்ற குறிப்பிற்கிணங்க நமது தூதருரைத்த சொற்களினாலும் என்னுடைய நிச்சயத்தினாலும் அவ்விராடநகரத்தில்பாண்டவரிருக்கின்றனரொன்பது பரிஷ்காரமாய்த் தெரியவந்தது. அதற்குக் காரணமென்னவெனில், கேகயராஜ குமாரனாகிய கீசகனிறந்த காட்சியே சாட்சியாய்விட்டது. அவ்விடத்திற்குத் தண்டெடுத்துப்போன திரிகர்த்தன், மச்சநாட்டிற்புகுந்து மாட்டை படக்குங்காலத்தில், எதிரிகள் சும்மாவிருக்க மாட்டார்கள். அவர்கள் மேல்விழுந்து போர்தொடுத்து மாட்டைத் திருப்பிக் கொள்வார்கள். ஆயுதங்களாலடிபட்டு மூளைகெட்டுப் படைமுறிபட்டு பிடித்த பசுக்களைவிட்டு முதுகிட்டோடிவருந் திரிகர்த்தனுடைய வருத்தத்தைகேட்டுப் பின்பு நாம் படைத்துணைபோவது நன்றோ? அல்லது, இப்போதே செல்வது நன்றோ? குற்றமற்ற வுத்தமர்களே! நீங்கள் சொல்லுங்களென்று வெற்றிபெற்ற துரியோதன மகாராசன் கேட்கப் புத்தியிற்சிறந்த கர்ணராசன் மனம்பூரித்துக் கொற்றவனே! வித்தகவிராடராசன் மைத்துனனாகியகீசகனையனுப்பி, அடிக்கடி யுத்தம்பண்ணச்சொல்லி நம்மைத் திடுக்கிடப் பண்ணிக்கொண்டிருந்தானே. அந்தவஞ்சந்திர நாமவனைத் தண்டிக்கவேண்டுமாதலால், உமது பெரியவர்களுடைய அனுமதிகேட்டுப்பெருஞ்சேனைப் படைகூடிப் புறப்பட்டுப் போர்செய்யட்டுமென்று கவசகுண்டலன் கழற,அவன்மொழியைச் சிவன்மொழியா யுட்கொண்டு பின்னும் பெரியோர்களைப்பார்த்து நான்நினைத்தநினைப்புக்கென்னசொல்லுகின்றீர்கள்? உங்கள்கருத்தையு மொளிக்காமல் வெளியிடுங்களென்று திங்கள்குலத்துதித்த துரியோதனன் வினவினான். அப்போதங்கிருந்த விரதப்பொருளாகிய கிருபாசாரியரும், மெய்த்தவவித்தக வீட்டுமரும், வேதவித்தாகிய துரோணரு முக்கியமாகப் படையெடுத்துப் போகவேண்டியதென்று சம்மதித்துப்கொண்டு போனபிற்பாடு போவோமென்றுரைத்தனர். அம்மொழியைச் சர்ப்பக்கொடியோன் கேட்டுச் சந்தொஷித்துத் துச்சாதனனையழைத்து எனக்கு நற்றுணையாகிய தம்பி! இரத கச துரக பதாதிகள் முதலிய சேனைகளைப் பிரயாணபேரிகை அறைந்து புறப்படச் செய் என்றான். அப்படியே செய்வேனென்று பிரயாணபேரி முழக்கச்செய்து மிக்கவிடங்கொண்ட நாகக்கொடிபொருந்திய சுயோதனன் தம்பிமார் தொண்ணூற்றொன்பதுபேரும் சௌபலன் சகுனி கர்ணன் முதலாகிய அரசர்களையுங்கூட்டித் தங்களெண்ண மிவ்வாறென்று தெரியக்காட்டி யுத்தகோலங்கொண்டிருந்தனர். கொத்துச் சித்திரவேலை பதிந்த இரதத்தை செலுத்தி மச்சநாட்டின்மேற் சென்ற திரிகர்த்ததேசாதிபனுடைய செய்தியைச் சொல்லுகிறேன். கேளும் ஜெனமேஜெயமகாராஜனே! என்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

பெருமையினுயர்ந்த பெரியோர்பேச்சைப் பொருளாகக்கொள்ளாத துரியோதனன் கட்டளையிட்டவண்ணம் படைசேர்த்தெழுந்த வெட்சிமாலைபெற்ற திரிகர்த்தனோ முரசவாத்தியம் பேரி டங்கா பாங்கா காகளம் சங்கம்தாரா

பூரி வீரசின்னம் தப்பட்டை முதலாகிய வாத்தியங்களைத் திக்கெட்டுஞ்செவிடுபட முழக்கிக் கத்தி கட்டாரி கேடயம் ஈட்டி எறிவேல் சூலம் பிண்டிபாலம் வாள் முசலம் தோமரம் குந்தம் சக்கராயுதம் மற்றுமுள்ள ஆயுதங்களெல்லாம் பளபளவென்று விளக்கொளிபோல் மின்னப்பிடித்துக் கவசகுண்டலகிரீடமதாணிகடககங்கண தோளணிப்பதக்கமுதலியன துலங்கியிலங்கும் வீரர்களையும் திடகாத்திரதேககதிரர்களையும் திசாதிசைகளிற்போகவிட்டுஓரக்குரோணிப்படைகளுடன் மச்சதேசத்திற்குத் தட்சணத்தில்வந்து இறங்கிக்கட்டுக்காவலில்லாமல் எதேச்சையாகத்தின்று கொழுத்துக் கன்றுடன்தழைத்துத் திரிகின்ற பசுமந்தைகளனைத்தையு மடக்கினான். அப்போதந்த மாடுகளெல்லாம் காதுகளைநெறித்துக் கண்களையுருட்டி விழித்துக் கடைப் பார்வைபார்த்துத் தலையேறிட்டுத் தங்களை மடக்கினவர்கள் அன்னியரென்றறிந்து தத்தங்கன்றுகளுடன் பெயர்ந்து, கும்பலினின்று முறிந்து கும்மாளமிட்டு நாலுபக்கமும் பிரிந்து அம்மாவென்றலறி வீரிட்டதிர்ந்து அயர்ந்துபயந்துசெம்மான்பாய்வது போற் பாய்ந்து, சும்மாவொருமூலையிற் கொம்பசைந்துக் கூட்டமாய்ச் சாய்ந்து வெருண்டு பதறிக்கதறிக் கால்கள்தவறிக் கலங்கித்திகைத்துமயங்கித் தியங்கிய கன்மேடும் பசுநிரையைச் சுசர்மனுடைய சேனைசயின்யங்கள்துரத்தித் துரத்தி மறித்துப்பிரித்து இருப்புக்கண்ணியால் தடுத்தார்கள். அப்பசுநிரைகளைக் காத்திருந்த காவலர்களும் அவற்றை மேய்த்திருந்த கோவலர்களும் ஆக்கிரமித்து அதிர்த்தெழுந்து ஏழுலகதிரும்படிதாவிப் பகைவர் சேனைமேல் விழுந்து அஸ்திரசஸ்திரங்களாலும்கொடுதடிகுண்டாந்தடி சுக்குமாந்தடி வளைதடி கிலுக்குத்தடி முறுக்குத்தடி பாறைத்தடி ஈட்டி எறியீட்டி திருகீட்டி சொருகீட்டி உருகீட்டி குலத்தீட்டி குயீட்டி பாலா பல்லயம் பட்டா பாங்கு சாங்கு கத்தி கட்டாரி பிச்சுவா கவண்கல் உண்டைவில் சுண்டுவில் அம்புவில் இத்தன்மையவாகிய படைகள் பலவுங்கொண்டெதிர்ந்து சினமுதிர்ந்து பாய்ந்து சினத்தாற் காய்ந்து அவர்கள் மாய்ந்துபோம்படி சிலரைவெட்டியும் பலரைக்குத்தியும் அடித்தும் மடித்தும் சிலரையுதைத்தும் சிலரைவதைத்தும் பலரைமறித்தும் பலரைமுறித்தும் துண்டித்தும் கண்டித்தும் சுற்றியவரைக் குத்தியும் பற்றியவரை யெற்றியும் தங்கள்மாட்டைத் திருப்பினர். திரிகர்த்தனைச்சேர்ந்த சேனைகள் சித்தப்பிரமைகொண்டு ஒருமுகமாய்ச் சாய்ந்து கணக்குமிதமற்ற கடுங்கணைகளைத் தூண்டி மும்மதயானைகளை முடுக்கிக் கோட்டைமதில்போற் குயுகிவகுத்துச் சிகரம்பெற்ற தேர்களைச் செலுத்தித் திசைகளிலோடி நிரைகளைவளைத்துக் குப்புற்றுப்பாயுங் குதிரைகளைவிடுத்துக் கூட்டமாகியசேனைகள் நிலைகெட்டழியக் கெடுத்துத் தன்சேனைகளாலச் சேனைகள் குறைந்துபோம்படிசெய்து மீண்டு நிரையைத் திருப்பிக்கொண்டு கட்டுக்காவலமைத்துச் செயஞ்செயமென்னச் சங்கநாதமுழக்கி அப்பசுநிரைக்காக மேலிட்டுவந்த கோபாலரையும் பூபாலரையும் வில்லெடுத்துவளைத்துச் சரமாரிதொடுத்துத் திசைமாறவிடுத்து விசனப்படும்படி மீட்டி வாட்டியபோது இடையர்களெல்லாம் உடைந்திடைந்து கையிழந்தவரும் காலிழந்தவரும் மெய்யுளைந்தவரும் மேலுளைந்தவரும்தலைகளற்றவரும்தாள்களற்றவரும்

முனைகெட்டவரும் நிலைவிட்டவரும் கண்ணீராறு கரையின்றிப்பெருகி வாரி நீர் வழிவதுபோல் வழியவந்து விராடநகரத்திற் புகுந்து முடிவேந்தனுடைய கொலுமுகத்தின்முன்சென்றுநின்று சங்காழிமுகுந்தனைப்போற்சிங்காதனத்தி ருந்தருளிய அரசனை நோக்கி, எங்கோனே! என்றுவணங்கிச்சுசர்மனுடன் திரிகர்த் தர்களும் குருசேனைசகிதமாய் நேர்ந்து தென்றிசையில் நிறைந்த பசுநிரையை மடக்கினர்; அவருடன் நாங்களும் பகைத்து எங்களாற்கூடியவரையும் போரி ட்டுப் பார்த்தோம்; அவர்களைவெல்ல வல்லமையில்லாமலடிபட்டு வெம்பி வெதும்பியோடி வந்துவிட்டோம்; அறுபதினாயிரம் பசுக்கள் அவர் வசப்பட் டன; இன்னும் நாற்பதினாயிரம் பசுக்களையுங் கைக்கொள்ளப் பார்க்கின்றனர். நாதனே! தேவரீர் ஆலசியம்செய்யாமல் அமர்க்கெழவேண்டுமென்றனர். முல்லை நிலமாக்கள் மொழிந்ததைக்கேட்ட வல்லவன் நகைத்துக் கண்ணிரண்டுங் கறு கறுத்து வெறுத்துக் கைந்நெரித்துப் பற்கடித்துச்சிரித்து ஓகோ! விசுவாசமோ சத்தைக் கண்டீர்களா? சொப்பனத்திலும் நினைக்கப்படாத அற்பனாகிய திரிகர் த்தனே எங்களால் கட்டுப்பட்டு நொந்து கால்மேல்விழுந்திரந்து என்றென்றை க்கும் அடிமையென்று புகன்று இழிவுபட்டுப்போனதையுமறந்துமூவர்முதலிய தேவர்களாலும் வேறுநினைக்கப்படாதஇவ்விராடநகரத்துக்குவந்துமிக்கசேனை யுட னெதிர்த்துப் போர்தொடுத்து வெகுபேரையுங் கெடுத்து மாட்டையுமட க்கி யிருக்கின்றானாம்; நல்லதாகட்டும். சேனாபதிகளே! வீரபட்டம்பெற்ற இரத கச துரக பதாதிபலமுள்ள ஓரக்குரோணி சேனையையும் யுத்தசன்னாகப் படுத் துங்களென்று மெத்தமுழக்கமாய் வெடிபடச்சொன்னான். அச்சொல் செவி யிற்புகுமுன்னமே கரத்தில்வில்லும் கழுத்தில்மாலையுந்தரித்தகாவலர் அநேகர் எட்டுத்திசையிலு மட்டுப்படாத வாத்தியமுழங்கத் திரண்டுதேரேறி வெள் ளம் புரண்டுவருவதுபோல் வந்துமொய்த்தனர். இதல்லாமலும் வெல்லும்படி யான அதிரதர்களெழுந்து நவமணிகளாற் சிறந்தமுடியும் சூரியனுநாணத்தக்க மாணிக்கப்பதக்கமும் ஆணிப்பொன்னாலாகிய மதாணிப்ப தக்கமும் நிரை வென்றோர் அணியும் தும்பைமாலையும் கேயூரமணி குண்டலகண்டியும் பிர தாபவில்லும் சபதச்சொல்லும் பொங்கமாக்கொண்டு சிங்கம்போற்சென்று பொன்னுலகைவிட்டிழிந்த இந்திரனென்னும்படி திக்கசங்களை நிகர்த்த யானையின்மேலேறிப் பெரும்புலியென்னச் சீறிப்புறப்பட்டனர். எண்ணிய எண்ணத்தை நிறைவேற்றும் திண்ணியபுய திடகாத்திர தீரர்கள் யாவரும் ஒருங்குகூடி விராடராசன் வெளிப்படுமுன்னமே நாம்போய்த் திரிகர்த்தனு டன்அவன்சேனைகளையுங்கொன்று பசுநிரைகளையுங்கைக்கொண்டு விராடராச னுக் கெதிர்சென்று நாங்கள் வென்று வந்தோம்; நீங்கள் போகவேண்டிய அவ சரமில்லை என்றுசொல்லிஉயர்ந்தவிருதுகள்பெறுவோமென்பதாகஆணிவில்லை வளைத்து நாண்பூட்டி அம்பறாத்தூணிமாட்டி வாளுங்கேடகமும் வல்லயமும் பல்லவமுங்கொண்டு பகைவர் பட்டார்; அவர்கள் கெட்டார்களென்று கெரு வித்தெழுந்து கட்டுக்கடங்காமல் அட்டாளதேசமு முலவிவரும் பட்டாளக் குதிரையேறி வந்தனர். சேனாவீரர்கள் திரண்டு திக்கென்றெரியச் சேல்விழி காட்டிச் சீறிப்புகைந்து செம்பொறிசிதறக் காய்ந்து வீரகண்டையை யாட்டி

வெதுப்பும் வெறுப்புங்காட்டி படைகளைப்பிடித்து அரைக்கணமுந் தாமதியா மல்துடித்து அலைபரந்த கடலேழும் அடியோடுபெயர்ந்த அந்நாளேயிந்நாளென்று அகிலசராசரமும் பேசிக்கொள்ளும்படிபேரோசைமுழக்கிப்பெருங்கும்பு சேர்ந்தார்கள். இவ்வகையாகச் சதுரங்கசேனைகள் புறப்பட்ட வீராவேசத்தை விராடராசனுடைய முதற்பிள்ளை சுவேதனென்பவன் கேள்விப்பட்டு நாமிருக்க நம்முடைய தந்தை வருந்துவானேனென்று தனது பிராணனையும் எதிராளியையும் துரும்பாகமதித்துப் பம்பரம்போற்சுழலும் செய்பொற்றேரேறி வீரலட்சுமியை விவாகஞ்செய்வதற்கு விரும்பிவருந் தீரபுருடனைப் போற் கூரம்புப்புட்டிலும் கார்முகவட்டமும் தாங்கிக் குவலயநடுங்கக் கவலையோடடைந்தனன்.

இரண்டாவதுபிள்ளை சதானீகனென்பவன் சங்கதிகளறிந்து முகச்சுளிப்புடன் வெளியேவந்து அப்படியா ? இந்நாள்வரையிலும் பின்னமில்லாத இம்மச்சநாட்டிற்புகுந்து சிறிதேனுமச்சமில்லாமல் மாட்டைமடக்கிய லச்சைகெட்ட திரிகர்த்தனுடைய சேனையென்னுஞ் செய்காலநிலத்தை என் வில்லம்புகொண்டுழுது உதிரநீர்பாய்ச்சி உயிராகிய விரையைவிரைத்து அக்கிரமமென்னுங் களைகளைக்களைந்து வெற்றிப்பயிர்விளைத்துப் பூபாரப்பிணைப் போர் கட்டி, எமனுக்கு மேல்வாரங்கொடுத்து என்தந்தைக்கு இசையென்னு நிலவாரம் கொடுக்கிறேனென்று திடுக்கென்றெழுந்து வில்லைவளைத்து நாணை தெறித்துப் பங்கப்படாதசிங்கக்குருளைதங்கமலையில்தாவுந்தன்மைபோல் விசாலமான தேரேறி வீதியில்வந்தான். மூன்றாவதுபிள்ளை சங்கனென்பவன் சிங்கநாதஞ்செய்தெழுந்து எங்கள்மாமனாகிய கீசகராசனிருக்கிறவரைக் குஞ்சிறிதேனும்கோப்பியமாயிருந்தது, அவனிறந்தபின்பு மெத்ததொந்தரைக்கிடமாய்விட்டதே; இனிமேற் பலரும் வசையாயேச, அம்மொழியைக்கேட்டு நானுயிரோடிருந்து இன்பமனுபவிக்கவேமாட்டேன். இதோ! வாளாயுதமெடுத்துப் புறப்படுகின்றேன்; வந்தவர்நொந்தழியக்கொந்தித்தள்ளுகின்றேன்; அவர்களை வெல்லாமலுங் கொல்லாமலும் போவேனாயின், என்னுயிரழிந்து பொன்னுலகம்போய்ச் சேருகின்றேன்; இதுவேசத்தியமென்று சபதம்பேசி விசையுடனோடித் திசையசையுந் தேரேறிக் கவசமணிந்து தன்னையொத்த தாராபதிக்குமரரும் மின்னுக்கிணையாம் ஆயுதந்தாங்கி வீராவேசங்கொண்டு வரத் தானும் பிரயாணமானான். நான்காவதுபிள்ளை வராககேது நான்குவேதமும் தநுர்வேதமும் தருமசாத்திரமும் மநுவிஞ்ஞானமும் தேர்ந்து அறம் பொருளின்பம் வீடென்பவற்றையறிந்து பொறுமைக் கவசம்பூண்டு,மன்னுயிரனைத்தையுந் தன்னுயிராய்ப்பரிந்து பாதுகாக்கும் பருவநாயகன்; குலமன்னர்கூட்டமும் பலமன்னரீட்டமும் காலாட்படைகளும் கசரததுரகமும் வேற்படை விற்படையுங்கொண்டு மச்சதேசத்துத் தட்சணதிசையிற்சென் றிலட்சியம்வையாமல்,அத்திரிகர்த்தனை இக்கணமே கொன்றுகளைந்து,வீரசொர்க்கத்திலேற்றிவிட்டு, வேறுவேலைபார்க்கிறேனென்றுவிசித்திரக்கவசம்பூண்டு தேரேறிப்போரேறுபோற் புறப்பட்டான். இவ்வகையாக நான்குமக்களும் நால்வகைச்சேனைகளும் ஆரவாரித்தெழுந்து சத்திரம் சாமரம் ஆலவட்டம்

கொடி குடை பீலிச்சுஞ்சம் மகரதோரணம் நால்வகைகளும் படைமன்னரும் வாத்தியகோஷமும் பின்னுமுன்னும் பெரும்புறக்கடல்போல்வரச் சிங்கநாதம் சங்கநாதம் எங்குநாதமாய் முழங்கத் தேர்நிரை யானைநிரையுடன் சேர்ந்தசேனையை விராடராசன் கண்குளிரக்கண்டு பிள்ளைகள் நால்வரும் செல்வதைப்பார்த்து ஐயோ! இந்நாள்வரைக்கும் என்னைவிட்டுப்பிரியாமலும் போர்முகமறியாமலுமிருந்த அறியாத சிறுபிள்ளைகள் முன்பின் எண்ணாமல் போயிருக்க, நானிவ்விடமிருப்பது நியாயமோ? அவ்விடம் விளைவது என்ன அபாயமோ? என்றெண்ணித் தன்சகோதரர்களாகிய சதானீகனையும் மதிராசுவனையு மழைத்து, வாருங்கள் தம்பிமார்களே! தட்சணநிரை மீட்சிக்குப்போன நமதுபிள்ளைகளின் போர்த்திறத்தையும் குருசேனையுடன் வந்த திரிகர்த்தனது போர்த்திறத்தையும் நான் பார்க்கவேண்டியிருப்பதால், சீக்கிரத்தில் தேர்கொண்டுவரச் செய்யுங்களென்றான். தமையன்மொழிதவறாத தம்பியிருவரும் இரதவலங்காரம் புரிந்து, திடவேகமுள்ள குதிரைகள்பூட்டி மதிமோகனென்னுஞ் சாரதியுடன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். பொற்றகடு வேய்ந்து நவரத்தினமிழைத்த அஸ்திர சஸ்திர திரஸ்காரவயக் கவசந்தரித்து, அம்புப்புட்டிலும் வரிநெருங்கியவில்லும் வாளும் வேலும்மகுடமும் மகரகுண்டலமும் வாகுவலயமும் கச்சையும் வீரகண்டையும் விரற்சாமும் கரச்சாடும் மின்னுகின்ற நெற்றிப்பட்டமும் புனைந்து தம்பிமாரும் அரசகுமாரரும் மிக்க பிரபலமான சேனைகளும் - விருதுமேளவாத்தியங்களும் வெண்சாமரையும் வெண்கொற்றக்குடையும் மயிற்பீலியும் புடையேதாங்கிவரப் புறப்பட்டுச், சேனாதிபதிகளும் படைவீரரு முன்னேடக் கட்டியக்காரரும் பட்டுவான்களும் புகழ்பாடப் பரதநாட்டிய மாடத், திருநீறணிந்த திரிநேத்திர தாரியாகிய உருத்திரமூர்த்தி இவனேயென்று சாதிக்க வடிவில்லாமரபோனுகிய விராடபூபதிவந்தான். அம்மன்னவனைத்தொடர்ந்து வழிவிடப்போன தருமராசனை வீமசேனன் நகுல சகாதேவ ரிவர் மூவரும்பார்த்து, இவ் விராடராசன் மாடுபிடிசண்டைக்கு நம்மைச்சகாயமாயழைக்காமற் போகிறானே; இதென்னகாரணமென்று கண்சாடையிற் பேசிக்கொண்டனர். அவர்கள் கருத்தையறிந்த கங்கபட்டர் மச்சராசனைநோக்கி, நமது மடைப்பள்ளியிலிருக்கின்ற பலாயனன் மல்லர்களைவென்றபோதே மிக்கபலசாலியென்றே நீரறிந்தீரல்லவா? அவன் மிஞ்சியமற்போரிலும் கொஞ்சம்விற்போரிலும் பழகினவனாகத் தோன்றுகின்றது. இதோ! நிற்கின்ற தந்திரபாலனும் தாமக்கிரந்தியும் போர்புரிவார்கள்போலு மிருக்கின்றது. இவர்கள் தருமராசனிடத்திலிருக்கும்போது, கௌரவர்களுடன்கூடி ஆயுதப்பரீட்சையில் பயின்றிருக்கின்றனர்; சிலசமையத்தில் சண்டையிலுஞ் செயங்கொண்ட தாட்டீகர்; அவர்களைக்காக்கும் நீர் சண்டைக்குப்போம்போது இவர்கள் உம்மைவிட்டுத் தனித்திருப்பது தருமமன்றே; இம்மூவரையும் அம்மூவராகப் பாவித்துக் கூட்டிப்போவதே நலமாம்; நான்மாத்திரந்தனித்திருப்பதுநியாயமன்று; நீங்களியாவரு முன்னேசெல்லுங்கள். நான் நடந்து பின்னேவருகின்றேனென்று கங்கபட்டர்சொல்ல, அவர்சொன்ன மொழியை அன்பாகக்கேட்டவிராட

ராசன் சிந்தைமகிழ்ந்து இது என்தவப்பயனே யென்றுரைத்துத் தம்பியாகிய சதானீகனையழைத்து இம்மகானுபாவராகிய கங்கபட்டருக்கும் மற்றவர்களுக்கும் சிங்கமுக லலாடத்தேரும் பங்கப்படாதவில்லும் அம்பறாத்தூணியும் தினுசுவாரி ஆபரணங்களும் ஆயுதங்களுங்கொடுத்து அதிசீக்கிரத்திலுன்னுடன் அழைத்துக்கொண்டுவாவென்று ஆக்கினைசெய்து போக்கினன். அரசனுத்தரவின்படி சகலவரிசையுஞ் சதானீகனுற் பெற்றுத் தடந்தேரேறி எவர்களுக்குமுன்னே இவர்கள்சென்று விராடராசன் தெற்குக்கோட்டை வாசலில் யாவர்க்குமுன்னமே சேனையுடன்கலந்து போயினர். அக்காலையில் பொன்மலையையொத்த எண்ணாயிரந் தேர்களும் மும்மதம்பொழியும் ஐயாயிரம் யானையும் இம்மெனப் பறக்கும் இருபதினாயிரங் குதிரையும் பொம்மெனநெருங்கிய இலட்சம் காலாட்களும் தம்பியரும் சாதுரியமுள்ள சூரர்களும் மந்திரிமாரு மகுடவர்த்தனரும் சுந்தரமைந்தரும் சுதந்தரவேந்தரும் மேவினார்கள். கொம்பு கொடிமுரசு வாத்தியகோஷங்கள் எட்டுத்திக்குஞ் செவிடுபட்டுப்போகத் தும்புதூசிகள் அம்பரமட்டு மேகச் செம்பரத்தம்பூப்போற் சிவந்தவிழிகளையுடைய படையைத் தூசியணியாகநிறுத்தித் தன்மாட்டை மடக்கிய பகைவர் சேனைகள்மேற் சென்று போர்தொடுத்தான்.

அவ்விராடராசன் கோபாக்கினியால்பகைவராருயிரை வாங்கச்செறிந்து வெற்றிவேல் தாங்கித்திரிந்து முகங்கரிந்து புரிந்தசண்டையைத் தேவேந்திரன்முதலிய தேவர்களும் காணச் சொர்ணமயமான விமானமூர்ந்து சென்று ஆகாயத்திலிடமில்லையென்ன நெருங்கத்திரண்டு வேடிக்கைபார்த்திருக்கும் வேளையில் இருதிறப்படைகளுங் கைகலந்து யானையும் யானையும், குதிரையும் குதிரையும், தேரும்தேரும், காலாளும் காலாளும் தொந்தயுத்தம்பண்ணினர். அப்போரில் யாரையாரழித்தனர், யாரையார் துவைத்தனர், யாரையார் வதைத்தனர், யாரையார் சிதைத்தனர், எவரைஎவர்கொன்றனர், எவரை எவர் வென்றனர். எவரையெவர் துன்பப்படுத்தினர், எவரை யெவரோட்டினர், எவரையெவர் மாட்டினர், எவரையெவர்வாட்டினர்; இன்னவகையென்று நானெனப்படிதான் சொல்லுவேன்? ஆயினும் வரிசையாகப்புகுந்து மாச்சரியத்துடன் உடலைவகிர்ந்து இரத்தவெள்ளம் புரண்டோடச் செய்தமையால் போரின்பெருமையைப் புகழ்ந்துபேச வல்லவரில்லாமற்போயினர். இத்தன்மையான காலத்தில் நூறுநூறாயிரம் இரதங்கள் நீறுநீறாகி யழியக் குதிரைகளிறந்துகுவிய கொம்புள்ள யானைக் கும்புகள் யாவுமொழிய மாறுமாறாகிய மன்னவருடல்களும் வேறுவேறாகிய வீரர்குடல்களும் நாறுமாறாகச்சிதைய மலைநிகர் புயபல மண்டலேசுவரர்கள் தலைபோயுருண்டு சங்கடமடைய, இதனைக்கண்டயாவருமஞ்சி இன்சொல்லுரைக்கத் திறங்காட்டிவந்த திரிகர்த்தன் சேனைகள் புறங்காட்டிநொந்து புலம்பியோடும்படியாக விராடராசன் சேனைகள் மேலிட்டுச் சாடியபொழுது கோபமாயெழுந்த குருகுலச்சேனைகள் கூறுகூறாய்நிலைகெட்டோடினர்;வீரிட்டடர்ந்தவிராடராசன்சேனைகள்வீரரோடெதிர்த்துப் போர்விளைத்தலால், அப்போரிலாற்றமாட்டாம லஞ்சிப்பயந்தோடுகின்ற அலங்கோலத்தைத் திரிகர்த்தன் தம்பியாகிய திடனென்பவன்

கண்டு முகம்வேர்த்து அண்டகடாகம் பிளக்கமிக ஆரவாரித்து வில்லெடுத்து நாணிதொடுத்து புங்கானுபுங்கமாய் பாணங்களைவிடுத்துச் சூரியனுமஞ்சியோ துங்கத் தேரைச்செலுத்திப் போராடினுன். வாரிநீரைவாரிய மாரிபோற் பொழியும் வாளியின் வல்லமையால் விராடராசனது நால்வகைப்படையும் இரதிகர்களும் பின்னிட்டு இரதமுமுடைந்து யானைகுதிரைகளுமழிந்து மானுபரணமகிபருமொழிந்துபோயினர். தனுர்வேதசாத்திரிகளும்விராடராசன்மக்கள் நால்வரும் சதானீகன்முதலியதம்பிமாரும் வெற்றிப்பயிர்விளைக்கும் வீரவேந்தரும் விதரணசாலிகளாகிய மாந்தரும் இசைகெட்டழிந்து திசைவிட்டோடும்படி திரிகர்த்தன்தம்பியாகிய திடனென்பவன்மலைந்து செயம்பெறுகின்ற நன்மையைத் திரும்பிப்பாராமலோடிய துரியோதனன் சேனைகள் கண்டு வருந்தியதோஷம் போக்கிப்புகழ்ந்து புளகாங்கிதமாய் வாடியபயிர் மழைகண்டவாறுபோன் மனமகிழ்ந்து கடல்முழக்கம்போலிருந்து திரும்பி விரைந்தோடிப் புகுந்து திரிகர்த்தன் தம்பியைக் கலந்து நாற்புறமும் பரந்து அணியணியாய்ப் பிரிந்து வில்லினைவளைத்து கார்காலமேகம்போற் பாணவருஷங்களைச் சொரிந்தனர்.

அத்தெப்பலினுல் விராடராசன் சேனைகள் வெருண்டு அரண்டு புரண்டு மருண்டு மேனிபுண்ணாகி விலங்கிக் கண்களிருண்டுகலங்கி எண்ணாததெல்லா மெண்ணிக்கசிந்துருகிவியாகுலமடைந்து அச்சமேலிட்டுஅமர்முனைவிட்டோடி நின்றஅரசனைவிராடராசனுடையமுதற்குமாரனுகியசுவேதன்கண்டு கோபத்தாற்கொதித்து நெஞ்சம்பதைபதைத்து ஓடாதிருங்களென்று கையமைத்துத் திரிகர்த்தனையுங் குருசேனைகளையுஞ்சிதைத்துவிடுகின்றேனென்றுதேரைச்செலுத்திச்சென்று வயிரவில்லைவளைத்து நாணிதொடுத்துக் குணத்தொனிசெய்து அஸ்திர சஸ்திரங்களை யெய்து மாறுபடாத யானைப்பெருக்கத்தையும் கூறுபடாத குதிரைக்கூட்டங்களையும் வேறுபடாத மிகுதீரவீரர்களையும் நீறுநீறாக நெரித்ததுமன்றி மேலிட்டுவரும் வேந்தரையுமாட்டிநூறிரதங்களை நொடியிற் பொடிபடக்காட்டி மற்றோர் திசையில்வளைந்து போர்மூட்டிச் சுற்றிய பெருஞ்சேனைகளின் தலைகள்சுழலப் பேய்போலாட்டிப் பின்னிட்டோட்டினுன். இவனுக்கிளையவனுகிய சதானீகன் மன்னவர் மதிக்க வயச்சிலை வளைத்துப் பொன்னுருள்பூண்ட தேர்மேல்வந்த மன்னவர்முடிகளைத் தென்னங்குலைபோற் சிதறவுதிர்த்து முன்னும்பின்னு முடுக்கியதிர்த்துச் சின்னபின்னப்பட்டுப் பயந்தொதுங்கும்படி துன்பப்படுத்தி உருத்துச்சினந்து உறுக்கிச்சிரித்து உரத்துஉன்முனைந்து ஒருதிசைபுகுந்தான். அவனுக்குத் தம்பியான சங்கனென்பவன் முன்னவன்காட்டிய முடுக்கைப்பார்த்து வன்னத்தேரோட்டி வரிச்சிலைநாட்டி நவமணிபதித்த கிரீடம்பொறுத்த வெற்றிவீரக் கொற்றவரேறிய ஆயிரந்தேர்களை யடித்துக்குறைத்து அச்சுமச்சுமுறிய நிறைத்து அநேகரைமடித்துப் பிணமலைகுவித்துத் தானொருதிக்கிற்சென்று செயசிங்கம் போலத் தாங்கிச் சத்துருக்களை யமனிடத்திற்குப் போக்கினுன். இவனுக்கிளவலாகிய வராககேது வாசமாலைகள் மணக்கவணிந்து பூசலுக்குரிய புகழுடனெதிர்த்து பலம்பெற்ற வில்லைவளைத்துப்பாணத்களால்உருவத்துளைத்துப்பதறிக்

கதறிச் சிதறிமுறியும்படிசெய்து வேங்கைப்புலிக் கெதிர்ப்பட்ட மான்போ
லோடிய பகைவர்யாவரும் கெட்டொழியும்படி நிர்த்தூளியாக்கிவிட்டுப்
பூணணியும்புயஞ்செழிக்கப்பொருந்தினான். இப்படிபாற்கடலைமந்தரகிரி கலக்கி
க்கடைந்தவாறுபோல்விராடராசனதுநான்குமக்களுநால்வகைச் சேனைகளை
யும் எட்டுத்திக்கும் புகுந்துமிகுந்த போராடியவேளையில் தந்தையாகிய விரா
டராசன் அம்மக்கள் சாமர்த்தியங்கண்டு உற்சாகங்கொண்டு ஆலமரத்தின்
விழுது அம்மரத்தைத் தாங்குமாறுபோல் தனக்குத்துணையாய் வந்துவளை
ந்த தன்மக்களைப் புகழ்ந்து மகிழ்ந்து தளர்ச்சியில்லாமற் களித்து வெற்றிமா
லையுமுடியுந்தரித்த விராடராசன் தானும்வெகுண்டு எக்களித்து விசித்திர
வின்னாணேற்றி முச்சட்டை முழங்கக்காட்டி அச்சுடனமைந்த தேரோட்டிச்
சங்குகளீன்ற முத்தினங்கள் சந்திரனைப்போல் பிரகாசிக்கும்படி வயல்சூழ்ந்த
நாட்டுக்கதிபனாகிய திரிகர்த்தன் தம்பியை வளைந்து பத்துக்கணைகளைப் பாயத்
தொடுத்து அவன் விடுத்தபாணங்களை யழித்துக்கெடுத்துக் கொடி குடை
தேர் குதிரை சாரதி வில்லையுமழித்து அவனுடன்வந்த வீரரையுங் குறைத்து
நேருக்குநேர் தாராளமாக நெருங்கி அவன்மேற்கூரிய வடிக்கணைமுடுக்கிச்
சேனைவேறு யானைவேறு தேசராசர் கூட்டம்வேறு ஆகச்சிதறும்படித் தாறு
மாறாக முறித்துத் தனிப்படப் பிரித்துப் போர்விளைத்த மச்சராசனால் திரிகர்
த்தன் தம்பி சிந்தைநைந்துவருந்தி தோளுந்தோளைபட்டு வாளுந்தறிபட்டுச்
சேனையுங்கெட்டுச் செருத்தருச் செருமுகம்விட்டு ஓடுகின்ற பதாதிகட்கோடி
முந்திப் புறங்கொடுத்தோடும் புன்மையைத்திறம்படைத்தவிராடராசன்கண்டு
ஊழிகாலத் தொருவனாகிய உருத்திரமூர்த்திபோ லுருத்தெழுந்து வாடிப்
போங் குருசேனைகளை மறித்துத் தறித்துப் படியச்சிதைத்து ஒருவருந் தனக்
கெதிர்ப்படாமல் வதைத்துப் பிணக்குப்பைமேற் சக்கரப்புதையத் தேர்விடு
த்துச் சென்றான்.

இவ்வகையாக விராடராசனால் நிலையழிந்துவிட்ட குருசேனையும் திரிகர்
த்தன்தம்பியும் பலங்குறைந்து படைமுறிந்து நொந்துபோகவே, அப்போரில்
உதிரம்பெருகி ஆறுபோலோடப் பிணங்கள் மலைபோற்குவிந்து கூறுடக் காக்
கையுங் கழுகுங் கலந்துவிளையாட நாயுநரியுஞ் சிறிப்பாராடப் பேயும் பூத
மும் புகழ்ந்துகொண்டாட எமபடர்களுயிரை யழைத்துங்கொண்டோடக்கூளி
யும்பருந்தும் விருந்துண்டாடப் பைசாசகணங்கள் பாடிநின்றுகூட அறுபட்ட
தலைகளைப்பூமிதேவியம்மனையாடப் புயமுந்தலையும் பொருந்திப்புரளப்பொடி
ப்பொடியாக்கிஒருகோடிசுடுசரங்களையும்அருகோடியதேனையுந்தூண்டிச்சயங்
கொண்டுவருகின்ற விராடராசனது பிரதாபத்தைத் திரிகர்த்தன்கண்டுவெகு
ண்டுகொதித்துவெருண்டு வில்லைவளைத்துப்புரண்டுபோனசேனைவெள்ளத்தை
ப்போகவொட்டாமல் திருப்பிச் சந்திரனைக்கண்ட சமுத்திரம்போற் பொங்கி
அட்டதிக்கயங்களும் அயர்ந்து நடுநடுங்கி மதம்பொழியும்படிநாணொலிசெய்து
வெற்றிப்பாடல்கள் பாடுகின்ற நால்வகைப்படைகளுடன் சேர்ந்து மகாமேரு
வைப்போன்ற இரத்தினத்தேர்மேலிருந்து கடுவிடநாகக். கணைமழைபொழி
ந்து விராடராசன் சேனைகள்யாவும் விருதிழந்து புறங்காட்டச்செய்து . திக்

கெட்டுக் திடுக்கிட்டு திக்குமுக்கிட்டு விக்கிட்டோடச்செய்து மதயானைக் கூட்டத்தில் வந்துபுகுந்த மடங்கல்போற் பாய்ந்து தேரனிகத்தையும் யானையினத்தையும் குதிரைப்பந்தியையும் காலாள்களையும் போக்கிவிட்டுச் சோர்வடையாத தோளாண்மைபூண்ட சுசர்மனைச்சுற்றிச்சுற்றித் துமிசஞ்செய்கையில்விராடராசன்மக்கள்வந்துமேல்விழுந்துகொள்ளைகளானகொடுஞ்சமர்விளைத்தனர். அவர்களை வெங்கணையாயுதமும் வில்லுமிழுந்து கரிபரிதேர் காலாளுங்குறைந்து குடர்கலங்கி உடல்நடுங்கிக் குலைகுலைந்து தலைநடுங்கி; உயிரொடுங்கிப் பெருமூச்செறிந்து உடன்பட்டோருடன் திடங்கொண்டோடவும் தேகத்தில்தங்கிய காயங்களுடன் சேனைகள் மருண்டோடவும் பசுக்காவலரும் படைவீரரும் பறந்து பின்வாங்கவும் படாதபாடும்படுத்தி மச்சராசனுடைய பசுநிரையைத் தன்னிச்சையின்படி கைக்கொண்டு நச்சரவக்கொடியை நாட்டி நாம்வெற்றிகொண்டோமென்று சயபேரியடித்துச் சிந்தைமகிழ்ந்து சிலதூரத்திற்கப்பால் சேனைகளையும் பசுக்களையுஞ் சேர்த்துத் திறம்பேசியிருந்தான். இவ்வகையாக வீரகண்டையும் வீரபட்டமும் விண்மணிமுடியுஞ் செங்கழுநீர்மாலையும் கரந்தைமாலையும், பொருந்தித் திருந்தியிருந்த பெருந்தகையாகிய திரிகர்த்தராசனை மச்சநாடன்கண்டு மதிமுகம்வேர்த்துத் தேருடனெதிர்த்துச சிலைவளைத்திழுத்து முறுக்குநாணியை யிறுக்கி யேறிட்டு, ஐம்மலர்வாளி ஐம்முகவாளி, ஐஞ்சிகைவாளி ஐம்பூதவாளி ஐம்பிறைக்கணை ஐந்துவடிக்கணை ஐந்து இடிக்கணை ஐந்துவிடக்கணை முதலிய வேறுவேறு அத்திரங்களை விறுவிறெனவிடுத்துத், திரிகர்த்தனேறிய தேரை முறித்துச் சாரதிதலையைத் தறித்துக் கொடியைக் குறைத்துக் குதிரையை வதைத்து வில்லைப்பிளந்து நாணைத் துணித்துக் கவசத்தைப் பொடித்துக் கருத்தைக்கலக்கி அச்சமுண்டாகும்படி கொத்தாகிய பத்தம்பை அவனுடைய மார்பில் விடுத்தான். அவ்விராடன்விட்ட கணைகளினால் சோர்புகுந்த சுசர்மன் தேரழிந்து சிலைமுறிந்து சீரொழிந்து பரதவித்துப் பின்பு நெஞ்சுரமற்று இவ்விராடராசனைநாமெளிதில் விடமாட்டேனென்றுசேமத்தேரேறிச் சிலைக்கணைகொண்டு சென்று நேர்நின்று ஆரவாரித்து இருபதுபாணம் இடிபோல் தொடுத்து அவனது நேராச்சுமச்சு குற்றுக்கால் கொடுங்கை கொடி குடை குதிரை சாரதி முதலியவெல்லாந் தூள் தூளாக்கி, பஞ்சுபோற் கொட்டிப் பறக்கவிறட்டி அவனுடைய இடக்கைவில்லினைச் சடக்கெனத் தறித்துத் துவசமழித்துக் கவசங்கிழித்துச் சாடும்பொழுது, தட்டுக்கெட்டுத் தடுமாறியுலைந்து கட்டுவிட்டுக் காவலழிந்து நிலத்தினின்று மலர்த்திவிழித்த கண்களுடன் வாடிவருந்தினன். அப்பொழுது அவனுடன்வந்த சேனைகளழுது ஐயையோ! நமதரசனுக்கும் வந்ததோபழுது ஆகா! தெய்வமேயென்று தொழுது நாவறண்டு நாணமேலிட்டு யுத்தமுனைவிட்டுச் சித்தம் பிரமித்தோடும்படியாகச் சிதறுக்காட்டிப் பலம்பெற்ற வில்லாளியாகியவிராடராசன்கழுத்தில் வில்நாணியையமாட்டி இரதக்காலுடன்பூட்டிச் சயசங்கபேரி முழக்கி நால்வகைச் சேனையோடு சென்று நான்கு புறத்திலும் காவலாகவடர்ந்து பசுமந்தைகளுந் தொடர்ந்து வரும்படி ஓட்டிக்கொண்டு பணிக்கொடி தரித்த பார்த்

திவனை நாடிப்போனான். அவ்வபசயத்தைக்கண்ட விராடராசன் மைந்தரும் பசுக்கூட்டங்களுக்குக் காவலான நந்தரும் படைத்தலைவந்தவேந்தரும் பராக்கிரம வீரமாந்தரும் தங்களாற் கூடியவரையிலு நேர்ந்து காலகதியை யோர்ந்து, மனநொந்து கங்கப்பட்ட திருக்குமிடத்திற்குவந்து அவர்கால்மேல்விழுந்து தந்தையை யிழந்தோம்; எந்தையாகிய அரசனைப் பிரிந்தோமென்றேங்கி யழுதார்கள்.

அவ்வேளையில், நெடுந்தூரத்திலிருந்து யுத்தவிந்தையைப் பார்த்திருந்த தருமராசனான குருகுலக்கோமகன், பயப்படாதீர்களென்று அவர்கள் படும் பரிதாபத்தை மாற்றித், தன்பக்கத்திருந்த பலாயனனாகிய தம்பியைக் கடைக்கண்ணாற் பார்த்தனர்; அவாறு கண்சாடையைக்கண்ட வீமசேனன் ஊழித்தீயைப்போற்கனன்றெழுந்து தன் உடலையுமறந்து யுகமுடிவில் தோன்றும் சங்கார கர்த்தாவாகிய உருத்திர மூர்த்திபோல் பேராசைகொண்ட வாயுதேவன் உயர்ந்தமலைகளையும் உவரியலைகளையும் உலைத்துமோதிச் சிதைக்குமாறுபோல் மற்றொரு தேரைவாரித் திரிகர்த்தன் தேர்மேல்மோதி அவன் படைவீரர்களையும் கொன்று பசுநிரைகளையும் வென்று விராடராசனையும் விடுவித்துக்கொண்டு திரும்புதற்கெண்ணித் திடுதிடெனச் சென்றான். எடுத்தடிவைக்கு முன்னமே ஏற்றக்கோல்தூரம் போய்விட்ட இளஞ்சிங்கத்தின் ஆத்திரக்குறிப்பைத் தருமராசனுணர்ந்து, ஓகோகோ! மோசம்வந்து விட்டதே என்றுணர்ந்து தம்பியைத் தனியாக வழைத்து, அடாகுழந்தாய்! அப்பனே! வீமா! ஒப்பிலாத சுப்பிரதீபம்போன்ற உத்தமனே! என்றணைத்துப் புகழ்ந்து உன்கருத்தை நானறிந்துகொண்டேன்; என்கருத்தை நீ கண்டு கொள்ளவில்லை, ஆத்திரப்படவேண்டாம் நமதடக்கம்விடாதே. இதுவரையிலுங்கழித்த வனவாசத்தைக் கெடுத்துப்போடவேண்டாம். இப்போது உதயமான சூரியன் அத்தமனமாகிற வரைக்கும் நாம் இன்னாரென்று எவர்களு மறியப்படாதே; ஒருகாற் பகைவர்கள் நம்மைத் தெரிந்துகொண்டால் நாமிதுவரையிலும் பட்டபாடு பாழாய்ப்போய்விடுமே; இது உன்கருத்திலிருத்திச் சென்று பெருஞ்சண்டை விளைத்து, வீமசேனனென்னும் பெயரை வெளிப்படுத்தாமல், வில்லும் பாணமுங்கொண்டு தேர்மேற்சென்று திரிகர்த்தனுக்குன் திறங்காட்டிநின்று அவனைத் தேருடன்வென்று நம்விராடராசனை மீட்டுவிடென்று வேண்டிய புத்தி யுத்திகளை வீமனுக்குரைத்து வீராவேச மிவனுக்கு மேலிடாதிருக்கும்படி. எமதருமராசனாகிய தன்தந்தையைச் சிந்தனைசெய்து விடுவித்தான். அவ்வாறு அண்ணன்சொல்லுக்கடங்கியவீமசேனன்கேயூரமணிமகுட குண்டல முதலிய பணிபூண்டு அம்பறாத்தூணிமுதலியன தரித்து ஆகாயமளாவிய குன்றனைய தேர்மேற்பாய்ந்து வில்லைவளைத்து நாணேற்றி வெற்றி பெற்ற சிங்கம் யானைமேல்தாவும் வீருப்புப்போலும் வேகின்ற தீயைப்போலும் வெறித்துப்போகின்றான். அவ்வீமசேனன்செல்லும்வேடிக்கையைப்பார்க்கும்படி இந்திரன் முதலிய தேவர்களும் ஆகாயத்தினிறைந்து அழகிய விமானத்தமர்ந்து பார்த்திருந்தனர். இப்பால், வீமசேனனுக்குப் புத்திமதி சொல்லி விடுத்த முரசக்கொடிபடைத்த தருமராசன் மனந்தளராமலும் தம்பியை

நம்பாமலும் நகுல•சகதேவர்களாகிய தாமக்கிரந்தி தந்திர பாலர்களைப்பார்
த்து ஐயா,இளந்தம்பிமார்களே! உங்களண்ணனாகியவீமசேனனையனுப்பியிருக்
கின்றேன்; அவனோ மிருந்த ஆத்திரமுடையவன்; அவசரக்காரன்; முன்
கோப முடையவன்; அவனொருகாற் சுசர்மன்மேற் பாய்ந்துசுடுசரந்தொடுத்
துச் சமர்புரியும் காலையில் அவனுடைய நீண்டவில்லும்பாணமுமுறிந்துமேனி
வருந்தி வம்பு நேரிடுமானால் தேரைவிட்டுக் கீழே குதித்து அம்புகள் பறக்குங்
கும்பலிற் புகுந்து விற்போர்விடுத்துமற்போர்கொடுத்துமலைகளையுமரங்களையும்
வன்னத்தேர்களையும்வாரியடித்துமாறுகொடுப்பான் வீமசேனனென்றுவெளி
யாய்ப் பாண்டவ ரிவ்விடத்திலிருக்கின்றனரென்று பகைவரறிந்து கொள்வார்
களே; அவர்களறிந்தால் மறுபடியும் நாம்வனவாசம் பண்ணவருமே; நா
மெண்ணிய வெண்ணம் சிறிதும்பலிக்காமற் போய்விடுமே; உலகமும்பழிக்க
இடமுண்டாகுமோ என்றுதம்பியரிருவர்க்கும்தழைக்கச்சொல்லி,நீங்களிரண்
டுபேருமுடன்சென்றிருந்து,வீமசேனனைமிஞ்சவொட்டாமலடக்கித் திரிகர்த்
தனைமடக்கி யுத்தந்தொடங்கிப் பசுக்களையும் விராடராசனையும் விலக்கி வே
டிக்கை பார்ப்பவர்தலைகுலுக்கிவியக்கும்படி அமர்முடித்துச் சயத்துடன்வரு
வதேபெருமையென்றுரைத்தனுப்பினான். அத்தருமராசன்சொன்ன இதோப
தேசஞ்சிரமேற்கொண்டு அவ்வாறே முடிப்போமென்று அண்ணனைத்தொழுது
வெகுளிமேற்கொண்ட இளங்காளையரிருவரும்பொன்மயமானநெடுந்தேரூர்ந்து
கல்லென்றிசைக்குங் கார்முகம்வளைத்து நூற்றிலொருவன்ஆயிரத்திலொருவ
னென்னு மதிரத வீரருடைய தலைகள் குதிரையினுடைய காலிலும் யானை
யின தடியிலு மகப்பட்டுருளச் சேனைகளை நடாத்திப் பாணப்பிரயோகம் பண்
ணிக் கண்ணுக்கெட்டிய தூரம் பறந்து ஓட்டமாயோடிவருகின்ற வாயு புத்திர
னாகிய வீமசேனன்மேல் நாட்டமாய்நாடிச் சென்றவர்களாகித் திரிகர்த்தன்
சேனைவெள்ளத்தை நீந்திப்போய்த் தேருடன் தேர்கலக்கப் போராடினர்.
தேவர்களும் புகழ்கின்ற குருகுலத்தரசர்பெருமான் தருமராசன், தம்பிமார்
மூவரும் போயிருக்கிறார்களே; தாழ்வென்னவோ? சண்டையாதோ? என்று
மனந்தரியாதாராய்த் தானெடுத்த வேடத்திற்குத் தக்கமரியாதையும் மகிமை
யும் தப்பாமற் சங்கார காலத்திற் புரண்டெழுகின்ற சலதிபோல் குணக்க
டலு மருட்கடலுங் குலவத்தேறி அட்சதையிறைத்துக் கட்டுகளொட்டும்
குச்சுப்பட்டுமுடைய வில்லைத்தொட்டெடுத்து வாயுவேக மனோவேகத்துடன்
வந்து தம்மைத் தம்பிமார் பார்க்கும்படி சமர்முனையிற் கலந்தார்.

இவருக்கு முன்சென்ற தம்பியரிருவரு நெருங்கி எப்புறத்துச்சேனைகளு
மப்புறத்திலகலாமல் துப்புறவொழித்து மன்னர்களுயிரை வானுலகேற்றிச்
சின்னபின்னம்படச் செய்துவரும் தம்பிமார் செய்கையை வீமசேனன்கண்டு
மேலாகிய சந்தோடங்கொண்டு பலம்பொருந்திய வில்லிற் சரங்களைப்பூட்டித்
தலம்புரண்டோடத் தாக்கினான். அப்போது திரிகர்த்தன், இவர் ஆரடா,
அப்பா! என்று, சென்றதேரைத் திருப்பி யெதிர்நின்று, வீரலட்சுமி விளை
யாடுகின்ற வில்லைவளைத்துப் பாணங்கள் பற்பலதிசையிலும் பரந்திடச்சொரிந்
தான். அக்காலையில் அழிவில்லாத பலம்படைத்த ஆண்சிங்கம்போன்ற வீம

சேனன் தன்தேனைத் திரிகர்த்தன் தேருக்கெதிரே முடுக்கிஅமிர்திராஸ்திரங் களை விட்டுமடக்கி அவன்தொடுத்த கணைகளை யெல்லாம் தறித்து வில்லையு முறித்து நாணியுமறுத்துச் சாரதிகுதிரைகள் தலைகளையும் பறித்துத் தேரையு முடைத்து மயக்கினன். அப்போது திரிகர்த்தன் திடதைரியம் விடாமல் வேறுதேரேறி மின்னெனவிளங்கும் வடிவேலை வீமசேனன்மேல் வீசினன்; அவ்வேலாயுதம் பூரணசந்திரனைப் பிடிக்கத் தாவிய செம்பாம்புபோற் புர ண்டு திசாதிசையிலுந் தீப்பொறியிறைத்து வருவதை மாருதி கண்டு மடமட வென்று பற்களைக் கடித்துநின்று அதைப் பிரமாத்திரத்தால் ஒடித்தான். வேற்படை முறிந்ததைச் சுசர்மன்கண்டு வெகுண்டு வச்சிரக்கட்டு முட்கட்டு களுடைய கதையைச் சுழற்றிக் காகரவென் றெறிந்தான். விறுவிறெனச் சுழன்று வெங்கதை வீமசேனனையேநோக்கிவருவதைப்பார்த்துநெருப்புத்தலை பெற்ற இருப்புக் கணைகள் பத்தெடுத்துத் தொடுத்துத் தனக்கு நேர்வருங் கதாயுதத்தைநொடியில் பொடிபடுத்து அசைவற்றிருந்தான். புலவர்கள் புக ழும்படி பொடிப்பொடியா யுதிர்ந்தழிந்த தன்கதாயுதத்தைத் திரிகர்த்தன் நோக்கி, நாம் வந்தவேளை யெந்தவேளையோ? என்று மனநொந்துவாடி வாளை யுருவிவிண்டலத்துயர்ந்துமண்டலத்திற்பாய்ந்து வீசிய வீரத்தை வீமசேனன் பார்த்து நகைத்து நாகம்போற் பொங்கிச் சினந்து மேகக்கணைபோக்கித் தே கஞ் சோகங் கொள்ளும்படி தொளைத்துத் தாக்கி அவனைச்சார்ந்த யானை சேனை பரிவாரங்களையுங் கலக்கி அப்பாலோட்டிச் சுசர்மனையும் அவன்கை யிற்பிடித்த வாளையும் அலங்கோலமாக்கி எங்குமில்லாமல் இலவம் பஞ்சு போற் பறக்கடித்து அவன்தலைமயிரையும் பற்றியிழுத்தான். அக்காலையில் திரி கர்த்தன் பொறிபுலன்மயங்கித்திக்குமுக்கிட்டுத் தலையிறக்கமாய்த்தளர்ந்தான். அதெப்படி இருந்ததென்னில், பாண்டவர் வனவாசம் பண்ணும்போது அவர் களைப் பங்கப்படுத்தவந்ததுரியோதனன்சித்திரசேனனிடத்திற் சிக்கிப் புத்திர மித்திர களத்திரத்துடன் தாமணிப் பிணையாகத் தானுங்கட்டுண்டுபரதவித்த தன்மைபோல் யுத்தமுகத்தில் மற்றெருருவரையும் வெற்றிபெற வொட்டாத சுத்தவீரத்தன்மையுள்ள திரிகர்த்தனென்னுஞ் சுசர்மன் சிங்கத்தினிடத்திற் சிக்கிக்கொண்ட மத்தகயம்போல் வல்லமை குறைந்து வாயுகுமாரனாகிய வீம சேனனிடத்தி லகப்பட்டுப் போனன். உடனே வீமசேனன் விராடராச னைக் கட்டவிழ்த்து அவனைத் திரிகர்த்தன் தேரினின்றுந் தன்தேரி லேற்றிக் கொண்டு தான்பிடித்த சுசர்மன் தலைமயிரைச் சுற்றிப்பிடித்த பிடிவிடாமல் தன்தேர்மேலிழுத்து இரத்தத்துளி பீறிட்டுச் சுற்றிலுந் தெறிக்கும்படி, மட லோடு மடல்சேர மணிக்கயிற்றினல் இறுக்கிக்கட்டி அவனைத் தன்னெதிரி லிருக்குங் குருசேனைகளுக்குங்காட்டி இதோ சண்டைசெய்யச் சமர்த்துள்ள வர்கள் வாருங்களென்று அவர்கள்மேற் சரமாரிபொழிந்து கோபாவேசங்கொ ண்டு நின்ற வீமசேனனைச் சுசர்மன் சேனைகள்கண்டு பயங்கொண்டு புறங் காட்டி யோடிப்போயினர்; அவ்வேளையில் சர்வசங்கார காலவுருத்திரன் போலுருத்தெழுந்த வாயுகுமாரனை விராடராசன் நோக்கி, நமது பங்குத் தெய்வமோ இவ்வுருக் கொண்டெழுந்ததென்று மிக மகிழ்ச்சியடைந்தபோது

பதினாயிரங் குதிரை வீரர்கள்பாய்ந்து கோபாலருடன் சேர்ந்து திரிகர்த்தன் கைக்கொண்ட விராடராசனுடைய பசுநிரைகளைத் திருப்பிக்கொண்டு சயம் சயம் சயமென்று சயக்கொடிநாட்டிச் சிறுபறைகொட்டிப்பலவகை வாத்தியங்களு முழக்கிக்கொண்டு, தங்கள் ஏதாஸ்தானமாகிய மச்சதேசத்திற்குத் தென்புறத்திற்கலந்து முன்போலிருந்தனர். கங்கபட்டராகிய தருமராசன் நமது பக்கஞ்சயமென்றறிந்து முந்தக் கூடாரத்துக்குப்போய் ஒன்றும் அறியாதவர்போல் தாமிருக்கத்தக்க ஆசனத்தி லிருந்தருளினர். இப்பால், சத்துருவாகிய திரிகர்த்தனை வென்று அவனைத் தேர்க்காலில் இறுகக்கட்டிக் கொணர்ந்த வீமசேனனும் விராடராசனும் தேரூர்ந்துசென்றுசேனைகளுடன் பிள்ளைகளுந் தம்பியருஞ்சூழத் தர்மராசனுக் கெதிரில்போய்ப் பணிந்துநின்று, சுவாமீ! தேவரீருடைய அனுக்கிரகத்தாற் சயங்கொண்டு வந்தோமென்று செப்பினர். இணையில்லாத கங்கபட்டரும் அவர்களையாசீர்வதித்துத் தம்மருகிலிருந்த ஆசனத்தி லிருத்தினர். அப்போது கங்கபட்டரை விராடராசன் பணிந்தெழுந்து ஆண்டவனே! போர்முகத்தில் வீரர்களைப் பொருதோட்டி ஊர்முகத்தில் என்னைக்கொண்டுவந்து காட்டி உலையாப்பெரும்புகழை நிலைநாட்டி எனக்குக் குலதெய்வமாகத் தோன்றிப்பகைவர்கைப்பட்டவென்னையும் பசுக்களையும் மீட்டுக்காத்த பலாயனனுடைய பேருதவிக்கு நானென்னகைம்மாறு செய்யப்போகின்றேன்? அப்படியன்றென்றுசெய்தாலும் இவர்செய்த உதவிக் கீடாகமாட்டாதே. இதற்கொத்த கைம்மாறுண்டோவென்று யோசிக்குமிடத்தில் இப்புவியினு மெப்புவியினும் இப்பிறப்பினுமெப்பிறப்பினு மில்லையென்றுரைத்துப் பலாயனனைத் தன்மார்போடணைத்து என் மைத்துனனாகிய கீசகனைப் பறிகொடுத்துக் கதியற்றிருந்த என்னை நீங்களிவ்வேளையிலடுத்து எதிரிகையிற்பட்ட சிறையைவிடுத்து எனக்குயிர்ப்பிக்ஷைகொடுத்தீர்களே. நீங்கள் இவ்வுதவிசெய்யாவிட்டால்இந்நேர மென்கதி யெப்படியாமோ? அறியேன். ஆகையால் என்னரசுரிமையும் என்பட்டணமும் என்செல்வ முதலாகிய யாவும் என்னுயிரும் உங்களுக்கேதத்தமாகக்கொடுத்தேன். உங்கள்பெருமைக்கும் அருமைக்கும் நீங்கள்செய்த நன்மைக்கும் நான், தத்தம் பண்ணியபொருள்கள் தகுதியற்றனவா யிருப்பினும், பக்தி சிரத்தையாக ஏழையேன்செய்கின்ற பூசையை எப்பொருட்குமுரிய ஈசன் அங்கீகரித்துக் கொள்வதுபோல் தாங்களுந் தயைபுரிந்து ஒப்புக்கொள்ளவேண்டுமென்றும் எப்பொழுது மென்னைவிட்டு நீங்காமலிருந்து காக்கவேண்டுமென்றும் பற்பலவகையாக உபசார வார்த்தைகளைச்சொல்லிப் பிரார்த்தித்தான்.

அவ்வரசன் மொழியைக்கேட்ட தருமராசனும் தம்பியர் மூவருமகிழ்ந்து புகழ்ந்து வாழ்த்தினர்கள். பின்னும் முரசக்கொடியுடைய முதல்வன் நகைத்து மச்சதேசாதிபனாகிய மன்னனே! பாண்டவர்களிடத்தில் பட்சமாயிருந்த நாங்களைவரும் ஒருவரைவிட்டொருவர் பிரியாமல் உத்தமனாகிய உம்மிடத்தில் வந்தடைந்த அந்நாள்முத லிந்நாள்வரையிலும் விரதசாரிணியுடன் நன்னாளாகக்கழித்துச் சோறுங் கூறையு மனுபவித்து மகிழ்ச்சியுடன்வாழ்ந்தோம; இன்னுஞ்சிலநாளிருக்கின்றன நாங்கள் வெளிப்பட்டுப் போவதற்கு,

அப்படியே நாங்கள்போயினும் உமக்கொருநாளுங் குறைவில்லையென்று உபசா ரஞ்சொல்லிப் பரிசுத்த இதயம்படைத்த பார்த்திபனே! நீரளித்த சகலசம் பத்தையும் நாங்கள் அநுபவித்ததைப்போல் ஆயிரம்பங்கதிகமாக ஆநந்தப் படும்படியான உமதுதேரிற் கட்டுப்பட்டிருக்கின்ற திரிகர்த்தனைக் கட்டவிழ்த் துவிட்டு உபசரித்துச் சன்மான வெகுமானத்துடன் ஓரிரதமுங் கொடுத்து அனுப்பவேண்டுமென்றார். தன்னருகிருந்து இரக்கமாகச்சொல்லிய தரும ராசனுடைய கருணைமொழியைக் காதாரக்கேட்டு மறுவாய்திறவாமல் தானே யெழுந்துபோய்க் கட்டவிழ்த்துவிட்டு ஆபரண வஸ்திராதிகளும் வழங்கி அழ கிய தேருமளித்து திரிகர்த்தனே! முன்னொருநாள் நீ அவமானப்பட்டிருக்கப் பின்னும்வந் தகப்பட்டமையால் மன்னர் முறைமைப்படி உன்னை வாளால் வெட்டவேண்டிய வெட்டை இம்மகானுபாவராகியகங்கட்டர் தப்புவித்தனர். இவரால் கிடைத்தது பிராணபிச்சை யென்று எப்போது மறவாமலிருவென் றனுப்பினன். அத்திரிகர்த்தன் விராடராசனைப்பார்க்க வெட்கப்பட்டு மெ த்தவிசனமுற்றுப் புத்திமயங்கிச் சித்தப்பிரமைகொண்டு சுயோதனன்முதலா கிய கொற்றவர்கள் தனக்குப் பின்னுதவிவந்து கைகொடுக்காமற் போயினரே, அவர்முகத்தில் நாமெப்படிப்போய் விழிப்போமென்று மனமெலிந்து ஓடி யொ துங்கிப்பதுங்கிய தன்படையுடன் கலந்து கங்கபட்டரென்பவரைக் கருணை யில் தருமராசனென்றே புகழ்ந்து பிழைத்தது போதும்போதுமென்று போ னன். அப்பால் தருமராசன் விராடராசனைப் பார்த்து இப்பொழுதுபோன திரிகர்த்தன் ஒருவேளை மேற்படை கூட்டிக்கொண்டுவந்தாலும்வருவானென் றுரைக்க, அதைக்கேட்ட மதிகுலவேந்தனாகிய மச்சராசன் இரத கச துரக பதாதிகளாகிய நால்வகைப் படையையும் பிள்ளைகள் மூவரையும் பேரணிநிறு த்தி மேற்படை வருமார்க்கத்தில் வேவுகாரரை யனுப்பிவைத்து, அன்றிரவு முழுது மவ்விடத்தில் முகாம்போட்டுக் கொண்டிருந்தனன். மூத்தபிள்ளை யாகிய சுவேதன் திரிகர்த்தனாலடியுண்டு முறிபட்டோடி முக்கட்பெருமா னாகிய முதல்வனைப்பூசித்து எக்காலத்து முரம்பெற் றெவர்களுக்கு மிளையாம லிருக்கும் வரம்பெறக்கருதித் தவஞ்செய்திருந்தனன். இங்கே சூரியனஸ்த மனமானன். அதெப்படி யிருந்ததென்றால் வீமசேனன் திரிகர்த்தனைத் தே ருடன்கட்டிய திறத்தை கடற்காசனாகிய வருணராசன்கண்டு, இன்னும் ஐவரை வெளிப்பட வொட்டாமல் தடுத்திருக்கின்றான் சூரியனென்று கோப ங்கொண்டு மேனிசிவக்கக்காட்டி மேற்றிசையிற் கொண்டுபோன வகைபோ லிருந்தது; கேளாய் ஜெனமேஜெய மஹாராஜனே யென்று வைசம்பாயனர் சொல்லிவந்தனர்.

தட்சணகிரைமீட்சிச்சருக்கம்

முற்றிற்று.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## உத்தரநிரைமீட்சிச்சருக்கம்.

கண்ணன் றுதி.

உருவ மாயரு வாயகம் புறத்தினு முளாவும்
ஒருவன் மூவுல கோரடி யளந்தசே வடிகள்
வருவ தாகியும் போவதா கியுந்தடு மாறுங்
கருவெ னும்பெருங் கடற்கரை யேறலாங் கலமே.

இப்பால் திருமாலின் திருவடிகளைச் சிந்தையால்தொழுது எந்தையாகிய வேதவியாசரையும் வந்தித்து ஒப்பற்ற சித்திரமணித் தேரேறிக் குருசேனையுடன் வந்த திரிகர்த்த னென்னுஞ் சுசர்மன் விராடபுரத்தின் தென்பால்சேர்ந்து ஆதிசேடனாற் சுமக்கப்பட்ட இப்பூமியதிரும்படி பெரும்போர்தொடுத்து விராடராசனுடைய மாட்டுமந்தைகளை மடக்கிப்பிடித்துச் சயம்படைத்துத் திரும்புங்காலையில் பசுக்காவலரடிபட்டோடி விராடராசனுக்கறிவித்தவுடனே அவ்வரசன் ஓரக்குரோணி சேனையுடன்வந்து திரிகர்த்தனுடன் சண்டைபுரிந்து தேரிற்கட்டப்பட்டுச் சுயம்பாகியினால் விடுபட்டு மறுபடியுந் திரிகர்த்தனைப்பிடித்துத் தேர்க்காலிற்கட்டி அவமானப்படுத்திக்கங்கபட்டர்மொழியால்விடுத்து அவன் கைக்கொண்ட மந்தைகளைத் திருப்பிக்கொண்ட கதையைச்சொன்னேன். அத்திரிகர்த்தனுக்குப் பின்படையாகவந்த துரியோதனனும் பெருஞ்சேனைகளும் மச்சநகரத்தின் வடபாலடுத்து அங்கிருந்த மாட்டுமந்தையை மடக்கியதையும்பேடியினால் மானங்கெட்டுப் பசுநிரைகளை விட்டோடியதையும் சொல்கின்றேன்கேள். ஜெனமேஜெயமஹாராஜனே யென்று வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர். குவலயம்புகழுங் குருகுலக்கோமகனே! திரிகர்த்தன் கைவசப்பட்ட மாட்டையும்விட்டுத் தானுங்கட்டுண்டு விடுபட்டுச் சேனையுடன்முதுகிட்டுத் திரும்பிவிட்டசெய்தியைச் சுயோதனன் கேட்டு ஆக்ரமித்து வியாக்கிரம்போலெழுந்து பாண்டவர்கள் ஐவரும் பதுங்கியிருக்கும் பருவமும்பாராமல் பசுநிரைமடக்கிய பக்குவத்துடன் பட்டணம் வந்துஞ்சேராமல் விருதாவேலை செய்துவிட்டான் சுசர்மனென்றுவெம்பி ஐயோ! ஆண்டன்மையுடையவ னிவனென்று நம்பி வீண்மோசம்போனோமே; அடா துச்சாதனனாகிய தம்பி! நமது நால்வகைப்படையு மெழும்படி விளம்பி நான் போர்க்கோலங்கொள்ள வெற்றிமுடி கொண்டுவாவென்று கிளம்பி நாம் திக்கெட்டுஞ் செவிடுபடப் பேரிகைமுழக்கிக்கொண்டு பட்டப்பகலில் புறப்படுவது பக்குவமன்றென்று சொல்லிவிட்டெறிக்குங் கிரணங்களையுடைய சூரியன் உதயஞ்செய்யுமுன்பாக எட்டுக்களிற்றிற்கிணைப்பட்ட துட்டயானைகளை நடாத்திக் கட்டுக்காவலுடன் மட்டுப்படாத சேனைகள் புடைசூழப் புறப்பட்டு விராடநகரத்து உத்தரதிசையிற்சென்று நவதானியம்விளைந்த நாடுகாடுகளையழித்து நால்வகைச்சேனையை நிறைத்து ஊரிலுள்ளோரை யோடவிட்டடித்து ஓடியவரை யோடாமல்மறித்துச் செழித்துவளர்ந்த கருப்பங் கொல்லைகளைத் தீயிட்டுக்கொளுத்தி நன்செய் புன்செய்ப் பயிர்களை நாசப்படு

த்தி ஆழ்ந்தகுளங்கள் அனைத்தையுந் தூர்த்துத் தங்கள் மடங்களைச் சரிய விடித்து ஆறு கால் ஏரி அணைக்களை அழித்துப் போராக்குவித்த நெற்களைப் பொரிபறக்கக் கொளுத்தி நாடுகாடாகக் காடுமேடாகக் கெடுத்து மாடுகளைப் பிடித்து அறம்பறந்தேங்கவும் மறஞ்சிறந்தோங்கவும வில்லைவளைத்து அல்லல் விளைத்தனர். அப்போது அம்மந்தைகளுக்குக் காவலாயிருந்த கோவலர்வந்தெதிர்த்துப் போர்புரிந்து சிந்தைநொந்து திறனழிந்து ஊர்புகுந்துஇராசகுமாரனாகிய உத்தரகுமாரனோடுரைத்தனர்.

அவர்களைநோக்கி என்னதுன்ப நேரிட்டதென்றுகேட்க அவர்கள் இராசகுமாரனடிமேல் வீழ்ந்தெழுந்து இருகையையுங் குவித்து இளஞ்சிங்கக் கன்றாகிய சுவாமி பராக்கு! தென்திசையில் திரிகர்த்தன்வந்து புகுந்து பசுமந்தையைமடக்கிய செய்தியறிந்து அப்பசுக்குலங்களை மீட்கவேண்டிச் சேனைகளுடன் விராடராசன் சென்றிருக்கு மமையம்பார்த்து அரவக்கொடியோனாகிய துரியோதனராசன் பலம்பொருந்திய படைகளுடன்வடதிசையிற் பதாதிகளைப்பிரித்துவிட்டு நாட்டிலுள்ள பலன்கள் யாவையுமழித்து அதஞ்செய்து மாட்டையுங்கவர்ந்து கூட்டமாயெதிர்ந்த எங்களையு மாட்டிப்பிளந்தான். நீர் இத்தருணம் வீட்டிலிருப்பது தகுதியோ? சந்திரகுலேந்திரனே! என்று முறையிட்டார்கள். இவ்வண்ணம் தன்பிள்ளையினிடத்தில் வினையுரைப்போர் விளம்பிய சொல்லை உத்தரனாகிய சுபுத்திரனைப்பெற்ற சுதக்கணையறிந்து ஆ! இதென்ன? நாட்டில் அரசனில்லாத சமயம்பார்த்து மாட்டை மடக்குவார்களோ அரசநீதிக்கேற்குமோ? பெண்பாலாகிய நானென்செய்வே னென்றேங்கித் தன்பக்கத்திலிருந்த பாங்கியனை நோக்கி அடிதாதியரே! இவ்வேளை தப்பித்துக்கொள்வதற் கெவ்வழியுங் காணேமே. வந்திருக்குங் குருகுலச்சேனைகள் நம்மதிற்புறம் புகுந்து தொந்தரை செய்யுமுன்னமே சாக்கிரதைப்படவேண்டும். அதற்கு என்சிந்தையிலொரு தந்திரந்தோன்றுகின்றது. அதைக்கேள். எப்படிப்பட்டவர்களும் பெண்மேற் படையெடுக்க லாகாதென்று அரசநீதியு மிருக்கின்றது; அதைப் பலரறியாவிட்டாலும் சிலராயினும் அறிந்திருப்பர். ஆதலால் நீங்கள் யாவரும் ஆயுதபாணிகளாய்ப் புறப்பட்டுக்கோட்டை மதிலிமேலேறிக் கூட்டங்காட்டி, நமது மச்சநாட்டைக் காத்திருங்களென்றாள். அவளுரைத்த மொழியைக்கேட்ட உத்தரன் நெருப்பில்விழுந்த புழுப்போல் துடிதுடித்துப்பெருமூச்சுவிட்டுப்பெற்றதாயைவணங்கிஅம்மா! நானிருக்க நீ யாதுகூறினாய், ஓகோகோ! நீஇப்போதுசொல்லிவிடுத்தமொழிமிகவுநன்றாயிருந்ததென்று வெகுண்டு நகைத்து ஐயையோ! என்னைக் கொல்லமாட்டாமல் புல்லியமொழி சொல்லினையே, உன் வயிற்றிற்பிறந்து சகலகலைகளுமுணர்ந்து செல்வச் சிறுவனாயிருந்து செழித்து அமுதருந்திய வென்னை மன்னனுக்குப்பிறந்த மைந்தர்களிற் கடைசியிற்பிறந்த மகனென்னப்பூரித்து ஆதரித்து அன்னையாகிய நீ என்னையருமையாக இதுகாறும் வளர்த்து பகைவர்களால் பகைவந்து நேர்ந்தபோதுபெண்டுகள்கூடிச் சண்டைசெய்துதாங்குவதற்கோ? இம்மாதரால் மச்சநாட்டுக்குவந்த வருத்த நீங்கிப்போமாயின் நானுனக்குப்பிள்ளையென்றிருந்து பயனென்ன? எனக்கு வீரனென்றே மேம்பாடென்ன?

நான் கற்றகல்வியாற்பயனென்ன? நானொருவ னிருக்கின்றேனென்று சற்றுமதியாது பயனற்ற சொல்லையுஞ் சொல்லினையே! நானந்தப் பகைவர்களைவெற்றிகொள்ளமாட்டேனென்றெண்ணினைபோலும். ஒலிக்குமெழுகடல் போற்படையெடுத்துவந்து நமதுபசுநிரைகளைக்கவர்ந்த பகைவருக்கெதிரே நானொருவனுமுனைந்து முழுப்போர்புரிந்து இமைகொட்டு முன்னமே யிளைத்தோடவாட்டி விசயக்கொடிநாட்டி சயபேரியடித்து யாவரும்புகழ்ந்து மெச்சும்படி திரும்பிவந்து உன்பொன்னடியைப் பூசிக்கின்றேனம்மே! ஆயினும் அப்போர்முகத்திற் காலமறிந்து சமயந்தெரிந்துமனக்கருத்துணர்ந்து முகக்குறிப்போர்ந்துஎதிரியினெண்ணங்கண்டுதேர்விடுக்கத்தக்கவனும் என்மனத்துக்கொத்தவனுமிருக்கின்றசாரதியொருவன் கிடைப்பனாயின்யாரென்னைவெல்லவல்லவர். அம்மணி! அப்படிப்பட்ட சாரதியொருவன் இல்லாக்குறையால் நீயுரைத்த பேதைமைச் சொல்லுக்குப் பின்னிட்டுத் தவிக்கிறேன். இப்போது வந்தெதிர்க்கின்ற கர்ணராசன் வீஷ்டுமாசாரியர் கிருபாசாரியர் துரோணாசாரியர் அரவக்கொடிபடைத்த துரியோதனன் இவர்களியாவரும் புறங்கொடுத்தோடப் போராடி அவர்கள்குலத்தில் அவதரித்திருக்கின்ற மகாவீரசிகாமணியாகிய அருச்சுனனும் அதிசயிக்கவேவெற்றிகொண்டுநமது மாட்டுமந்தையை மீட்டுக் காட்டுக்கோட்டிவிட்டு இந்நாட்டில்வந்து அடிவைப்பேன்; அம்மாவென்று உத்தரகுமாரன்சொல்ல, அதைக்கேட்ட சுதக்கணை என் அப்பனே! நீயிப்போதுரைத்ததெல்லாஞ் சரிதான். உன்னிட்டப்படி தேரைச் செலுத்தத் தக்க வல்லவனை நானெங்கேகண்டு தேடுவேன்? உனக்குச் சாரதி தேடுதற்குமுன்னமே எதிரிகள்வந்து கோட்டையைக் கைக்கொண்டுபோவரேயென்றுசொல்லித் தாயும்பிள்ளையும் ஏக்கமுற்றிருக்கையில், இக்கருத்தைப் பக்கத்திலின்றுங்கேட்டிருந்த பணிப்பெண்ணாகிய விரதசாரணி உத்தரனுரைத்த உறுதிச்சொல்லையும் அருச்சுனனைப் புகழ்ந்துபேசிய அன்பையும் தன் சித்தத்திற்குறித்துச் சற்றுநிதானித்துச் சித்திரவிற்கொண்டு சிவபெருமான் தலைமேற்புடைத்துப் பாசுபதாத்திரம் பெற்ற தனஞ்சயனாகிய பேடியிருக்கும் நாடகசாலையிற் புகுந்தாள்.

மிக்க அவசரமாகவந்த விரதசாரணி அக்கறையையும் முகக்குறிப்பையும் பிரகந்நளையாகிய பேடிகண்டு ஓடிவந்து உட்காரென்றுபசரித்து இதுவரையிலும் பேதமில்லாமற்பேசுவதுபோற்பேசித் தங்களுக்குள் அமைத்துக்கொண்ட சைகையினால்தனித்துச்சென்றுதென்றிசையில் திரிகர்த்தனையனுப்பிவிட்டுத்திரண்டசேனையுடன்வடதிசையிற்புகுந்துமாட்டை மடக்கினான் துரியோதனனென்று கோவலர்வந்துகூறினர். அம்மொழியைக்கேட்ட சுதக்கணை சிந்தைநொந்து அருகிருந்ததாதியரையழைத்துவிராடராசன்வருமளவும் கோட்டைமதில்மேற்கூட்டங்கூட்டிநாட்டைக்காக்க வேண்டுமென்று நவின்றாள். அப்பேச்சைக்கேட்ட உத்தரகுமாரன் மனம்பொறாமல் மாதாவைவெறுத்துத் தன் வீரப்பிரதாப் வெற்றியைப் தன்மனத்துக்கிசைந்த வலவனிருப்பானாயின் தனஞ்சயனுங் கொண்டாடச் சண்டைபோடுவேன், பகைவரைச்சாடுவேன்; க்ஷத்திரியபத்திறத்தைச்சாதிப்பேன், நீயேன்சஞ் சலப்படுகின்றாயென்றுசொன்

னாள். அம்மொழிகேட்ட விவேகத்தில்வல்ல பேடி ஆத்திரப்படாமல் தாங்கள் கடத்தவேண்டிய அஞ்ஞாதவாசத் தவணைநாளைக் கணக்குப்பார்த்து, ஊர்வசி சாபமுற்ற ஒருவருடத்தொகையும் காலமும்பலமுங் கண்டறிந்துகொண்டு வெளிப்படுங்காலம் இதுதானென்று மிக்க மகிழ்ச்சியுடன் துரோபதியைப்பார்த்துப் பெண்கணாயகமே! இவ்வளவு தூரம்வந்து என்காதிலேற்றிய வீரரசம் விருதாவாய்ப்போகாமல், எப்படியேனும் சுதக்கணைக்கும் உத்தரனுக்குந் தெரியப்படுத்திச் சாரதித்தொழிலுக்கென்னை யிசைவிப்பது உன் கடமையேயென்று, ஒருதரத்திற் கொன்பதுதரமாகச்சொல்லி வேண்டினாள். அவ்வாறே நல்லதென்றுநடந்த வண்ணப்பெண் நெருங்கித்திணிந்த தனமும் சுருங்கிக்கனிந்த மனமும் துவண்ட விடையுஞ் சிறந்த நடையுமுடைய உத்தரைக்குச் சங்கதியாவுந்தெரிவித்து அவளுடன்சென்று விராடபுத்திரனாகிய வீரகண்டைதரித்த இளஞ்சிங்கத்தைக்கண்டு, ஐயா! நானொரு நன்மைசொல்கின்றேன். ஐயமில்லாமல்அங்கீகரியும். வையமுழுது மும்மையேவாழ்த்தும்; பொய்யில்லாப் புகழணிபூணலாம். இப்போது நேரிட்டிருக்கின்ற துட்டரை வெல்லுவதற்கிட்டமிருந்தால் திருத்தமாகியதேரைப் பொருத்தமாகச்செலுத்துஞ் சாரதியில்லையென்றே சங்கடப்படவேண்டாம். நம் உத்தரையாருக்கு நடனத்தொழில் பயிற்றிவரும் பிரகநளையென்னும் பேடிக்கொப்பாகிய சாரதி இப்புவனத்திலுமில்லை, எப்புவனத்திலுமில்லை. அவள் கண்ணபிரான் தங்கையாகிய சுபத்திரையைத் திருமணமுடித்தவன் காண்டாவனத்தை யெரித்த காலத்தில் அக்கினிதேவன்கொடுத்த அழிவில்லாத இரதத்தைச்செலுத்தி, யாவருந்துதிக்கத் தேவருங்களிக்க அடுபோர்புரிந்து வெற்றிபெற்றிருக்கின்றாள். நான் பாண்டவர்க்குரிய பத்தினியிடத்திருந்தகாலத்தில், இப்பேடிதிறத்தையறிவேன். மெத்தமகிமைபெற்றவள்; வீரப்பிரதாபமுற்றவள்; மேலும் வல்லவள்; மிகவு நல்லவள்; என்பேச்சை நம்பி யோசித்துப்பாரும். வேந்தன்மைந்தனே! என்று விரதசாரணிசொல்லவும் உத்தரகுமாரனுக் குடன்பிறப்பாகிய உத்தரை அலர்ந்த செந்தாமரைக்கொப்பாகிய தமயன்முகத்தைத் தயவுடன்நோக்கி, என்னண்ணாவே! இம்மாதரசிசொன்ன வாக்கியம் ஒருக்காலும் பிசகாது. ஒருநாள் பரதசாத்திரத்தைக்குறித்து நானும் அப்பேடியும் பேசிக்கொண்டிருக்கும்போது, சாரதித்தொழிற்குரிய சாத்திரப்பேச்சும் வந்தது; அவ்விடயங்கள் யாவையும் கிரமமாகப்பிரசங்கித்து என்சித்தம் பிரமிக்கச்செய்து தேர்விடுந்திறமெல்லாந் தனக்குத் திட்டமாய்த்தெரியுமென்று உண்மையைச் செப்பியிருக்கின்றாள். அதனால் அப்பேடியையொப்புக்கொள்ளும்படி நானும்விரும்புகின்றேனென்று தங்கைபேசவும் இவ்விருவர் பேச்சையுங்கேட்ட உத்தரகுமாரன் கலீரென நகைத்துப் பளாபளா! நல்லவார்த்தை சொன்னீர்கள், கேடில்லாக் கீர்த்தியையுடையவர்கள் பேடியையுஞ் சாரதியாகப் பெறுவர்களோ? ஆணும்பெண்ணுமல்லாத அலியைச் சாரதியாகக் கொண்டு போர்க்களத்திற்சென்று பகைவர்களைவென்று வெற்றிபெற்றாலும், அது நிலைநின்ற புகழாமோ? என்பெருமைக்கழகாமோ? பேடிமுகத்தில் விழித்துவிட்டு ஒருவேலைக்குப்போனாலும் அக்காரியங் கெட்டேவிடும், நமக்

குண்டாகிய ஆண்மையும் அறிவும் புகழ்ச்சியும் மகிழ்ச்சியும் பொருளாகாமற் போய்விடுமே; அட்டா! இப்படிப்பட்ட அலிகள் முகாலம்பனம் பண்ணவும் படாதே. அந்தோ! பேதையைப்புத்தியாற் பேசவந்தீர்களே! போங்கள் போங்களென்று பொருமியுரைத்தான். அமிபாதவன்கொண்ட ஆத்திரங் கண்ட சைரந்திரி சரசவிராடராசன் தனயனே! நான் சொன்னவளைப் பேடியென்றெண்ணிப் பேசவேண்டாம். அவளுடையகாரிய மிப்போதுதெரியாது. இனிமேல் தெரியவரும். அப்போது என்னை நீ எப்போதுங்கொண்டாடப் போகின்றாய். ஐயனே! இவளைவலவனாகக்கொண்டுவெற்றியடையப்போகின்ற மேன்மையும் நான்சொன்னவாய்மையும் நீ சொன்ன தூய்மையும் இன்னுஞ் சற்றுநேரத்தில் அறியப்போகின்றாய். வெகுகாலத்திற்கு முன்னமே இவளுடன்கூடி ஒரிடத்திருந்து பழகியறிந்தவளாகையால், இப்படிப்பட்டவளென்று இவள் குணங்களையெல்லாம் எடுத்துச் சொல்லத்துணிந்தேன். இன்னுஞ் சொல்லுகின்றேன்; உனக்கு நல்லகாலமிருந்து இவ்வல்லவியைச் சாரதியாகக்கொண்டு போர்க்களத்திற்புகுவையானால், வீரமும் பிரபலவெற்றியும்பெற்றுப் பசுமந்தைகளையு மீட்டுக்கொண்டு, சுபாகரமாய்த்திரும்பிவந்து உன் அன்னையாகிய சுதக்கணையைத்தொழுது மகிழ்வாய். இவளுக்குக் கைவாசியுண்டு. இப்பேடியைவிட்டு நீ வேறொருசாரதியைக் கொண்டுபோனாலும், போர்முனையில் இழிவாகிய அபசெயமடைவதற்கையமேயில்லை. அல்லாமலும் சாரதியெப்படிப்பட்டவனா யிருந்தாலும் சாமர்த்தியனாகிய உனக்குத் தாழ்ச்சியென்ன? 'வல்லவனுக்குப்புல்லாயுதம்' என்னும் வாசகமறிந்திலையா? மண்பூனையானாலும் எலிபிடிப்பதேகாரியம். நானுங்கட்குப் பகையாளியன்றே, உங்களுடைய சுகதுக்கங்களுக்குடன்பட்டவளே இனிநானுனக்குச்சொல்லவேண்டியது யாதொன்றுமில்லை இளங்களிறே! என்று பணிப்பெண்ணியம்பினள். உத்தரையும் அதற்கொத்துப்பேசினாள். இவற்றையெல்லாங்கேட்ட இளஞ்சிங்கம் சாரதித்தொழிற்குவேறுவழியில்லாமையால், ஒருவாறியைந்து, மண்குதிரையைநம்பி யாற்றிலிறங்கும் வகையாயிருக்கின்றதே; வண்ணமாமகளே! உன்சொல்லையே நம்பினேன். நல்லது அப்படியேயாகட்டும். தெய்வச்செயல் உள்ளபடியே நடக்கட்டும்; அப்பேடியை யழையுங்கள் பார்ப்போமென்றான். அவனுடன்பட்டமையைத் தெரிந்துகொண்டு, பத்தரைமாற்றுப் பசும்பொன்னாகிய பணிப்பெண்ணும் உத்தரையும் ஓரடியாகவோடிப் பேடியுருவந்தாங்கிய பெருந்தகையைக்கண்டு வாடியமைந்தன் மனத்தையுந்திருப்பினோம். கூடியவரையிலுடன்பட்டு உன்னையழைக்கிறான் என; அப்படி வாவென்றழைக்குமுன்னமே பிரகன்னளை இதோ வந்தேன்வந்தேனென்றெழுந்து அதிவேகமாகநடந்து கையிலணிந்தவளையல் கலகலவென்றொலிக்கக் கமலக்கண்ணிலங்கு மதிமுகஞ்சொலிக்கவந்து, இராசகுமாரனைக்கண்டு, உபசரித்து நின்றாள். இப்படியாகவந்த பேடியைப் இராசபுத்திரன்பார்த்துப் பேடியே! அசுவங்களுடைய சுபாவமறிந்து எசமானன் கருத்துணர்ந்து காலசமயங்கண்டு கைத்திறங்காட்டிச் சமயோசிதமாகக் குதிரைகளைநடத்திப் போர்முகத்தில் தேரைச்செலுத்துந்திறம் உனக்குண்டோவென்று சிறுவன்கேட்க, எதிரில்வணங்கிநின்றபேடி

எங்களிளஞ்சிங்கமே! கூலிக்குக்குற்றுகிறவளைக் கேளிக்கையாடச்செய்வது போல், நாட்டியங்கற்பிக்கும் அலியாகிய பேதையை விற்பூட்டிப்பொருதும் போர்முனையில் தேர்விடச்செய்வதுந்திறமோ? இராசராசர்களறியுந்தொழிலை நானறியத்தக்கவளோ? ஐயா! அச்சாரதித்தொழிலென்ன சாமானியமோ சொல்லும். அழகு ஈகை குணம் புகழ் மெய்ம்மை வண்மை முதலிய யாவுமுள்ள மச்சராசன் மகனே! ஆணும்பெண்ணுமல்லாத பேதை உமதுள்ளக் குறிப்பும் குதிரைகளின் குணநிச்சயங்களு முணர்ந்து தேர்விடத்தக்க திறமுடையவளாவேனோவென்று, தலையையசைத்துக் கைகளைநெரித்துக் குறுநகைகொண்டுசொன்னாள். அவள்காட்டிய புன்னகையின் குறிப்பை மன்னன் மகனறிந்து இவளிடத்திலேதோ, கொஞ்சம் வித்தையின் இயமாயிருக்கின்றதென்றோர்ந்து அடிபேடி! என்மனமொத்தசாரதி மாண்டுபோய்விட்டான்; அதுமுதல் என்பராக்கிரமமும் ஓய்ந்துபோய்விட்டது. இனியெனக்குத்தக்க சாரதி யெப்படியகப்படுவானென் றேக்கமுற்றிருந்தேன்; இப்போதுன்னுடைய திறமையுந் தெளிவும் நெளிவும் அநுபோகசாலிகள்சொல்லத் தெரிந்துகொண்டேன்; தேர்விடுந்தொழிலுக்கு உன்னையே விரும்பியிருக்கின்றேன்; சுத்தவீரனாகிய அரசன் எத்தனை பலசாலியாயிருந்தாலும் யுத்தஞ்செய்தல் ஓய்ந்திருத்தல் உடன்சென்றெதிர்த்தல் திரும்பியோடல் போர்மறுத்தல பிராணனிறத்தல்முதலாகிய இவைகட்கெல்லாம் சமயம் காலம் இடம் திடமறிந்து தேரைச்செலுத்துஞ்சாரதி தீர்க்காலோசனைசெய்யாவிட்டால், எசமானனுக்கும் இன்பமென்ப தெவ்வளவுமிராது. அல்லாமலும் அரசன் வெற்றிமாலையணிவதும் பெரும்புகழ்பெறுவதும் பெரியகாரியங்களைமுடிப்பதும் எதிரிகளையோடவிட்டோடிப்பதும் இவைகளியாவும் சாரதியின் பேருதவியினாலுண்டாகத்தக்கனவேயன்றி வேறன்று. ஆதலால், நான் விரித்துச்சொல்லவேண்டுவதுமில்லை. நாமிப்போதுசெல்லுகின்ற போர்முகத்தில் தேர்செலுத்தும் உன்றிறமையை நன்றாய்க் கண்டுகொண்டால், அளவுபடாத என்சம்பத்துகள் யாவும் உனக்கே சொந்தமென்று ஐயமில்லாமற் கைமேற்கொண்டு வையம் வாழ்த்த மகிழ்வுற்றுய்யலாம். வாசனைதங்கிய கருங்குழலோங்கிய பேடியே! என்னை நீ வேறாகநினையாதை, உன்மனம்போலவேநடந்துகொள்வேன். நமது விராடநகரத்திற்கு வடதிசையில் வளைந்திருக்கிற பகைவர்களோடெதிர்த்துச் சண்டைவிளைத்து வென்று மாட்டுமந்தையை மடக்கிவருவோம். சீக்கிரந் தேர்கொண்டுவாபோவென்று கட்டளையிட்டான்.

உத்தரனுரைத்ததைக்கேட்ட பிரகநளை நான் பலவகைச்சாதுரியமுள்ள இச்சாரதித்தொழிற்கு வல்லமையற்றவளாயினும் அரசலட்சணமமைந்த உமது கருணைக்கண்ணின் கடாட்சவிட்சண்ணியத்தினாலும் மேன்மைதங்கிய விராடராசனது சத்தியநெறியினாலும் பொன்னாட்டினர்புகழ இந்நாட்டினர்மகிழ என்னாற்கூடியமட்டும் தேர்விடுகின்றேன். மன்னா! நீ யாதொன்றுக்கும் மயங்காமல் யுத்தகோலங்கொள்ளென்று பேடிகூறிய தீரமொழியை உத்தரன் சிந்தித்துத் தேர்விடுந்திறம் இவளிடத்திலில்லாவிட்டால் நமது பண்ணியாது இத்தனை துணிவாகப்பேசுவளா? ஏதோ கொஞ்சம் பசையிருக்கின்றது. இனி

நமக்குப்பயமில்லையென்று மனங்களிகூர்ந்து யுத்தகோலச்சாலையில் நுழைந்து,
குத்தினிச்சல்லடங் தொடுத்துத் தட்டிவரிந்து அரைப்பட்டிகைகட்டிவச்சிரக்
கவசம் உருக்குக்கவசம் இருப்புக்கவசம் தரித்துப் பாசிபந்து கடககங்கண
மணிந்து வாகுவலயம் புனைந்து, அங்கைமூடி புறங்கைமூடி விரற்சாடு கரச்
சாடு முன்கைப்பூண்தொடுத்து முழங்கைத்தோற்கட்டு இருப்புச்சிரா மார்
புறை பூண்டு குண்டலம்பரித்துத் திரிபுண்டரந்தரித்து செந்தூரத்திலகமு
மிட்டு, முத்தாரம் இரத்தினாரம் மோகனாரங்களும் அணிந்து மாணிக்கப்பதக்
கம் வயிரப்பதக்கம் தும்பிப்பதக்கம் துத்திப்பதக்கம் சரப்பணிகண்டசரம்
உத்தரசஞ்சம் மோகனமாலைமுதலிய ஆபரணங்களும் தொடுத்தமாலை கோத்
தமாலை தும்பைமாலை வெட்சிமாலை முதலிய மாலைகளுந்தரித்து சாந்துசவ்
வாதும்பூசி நவமணிபதித்த சோதிமாமகுடந் தலைமேல்தாங்கி வீரபட்டங்
கட்டி வாளும்வேலு மருங்கிற்சேர்ந்து உச்சிதமான பச்சைவில்லேந்தி அம்ப
றாத்தூணி யழகுடனிறுக்கிக் காலில் வீரகண்டாமணி தொடுத்துப்போ
ரலங்கிர்தம்பாவும் புகழ்பெறக்கொண்டு யுத்தசன்னத்தனாகத்தோன்றித்
தலைவாயிலிற்சென்று நின்றான். இத்தன்மையான உத்தரகுமாரனைப்பெற்ற
தாயாகிய சுதக்கணை தன்மகனைக் கண்ணாரக்கண்டு கருத்துமகிழ்ந்து ஒன்றுந்
தோன்றாமல் உள்ளங்குளிர்ந்து திருட்டிபடப்போகின்றதென்று சிந்திக்கும்
வேளையில், மைந்தனோடிவந்து எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து வணங்கினான்.
அச்சேய் தன்னைத் தொழுதகாட்சியைத் தாயானவள்பார்த்து ஆசையாகத்
தழுவி முத்தமிட்டு அன்பினாலுருகி ஆநந்தம்பெருகி அடா என்கண்மணியே!
தேர்மேற்சிறந்து போர்முனைபுகுந்து தீரசத்தியினருளால் வீரவேந்தரைவெ
ன்று வெற்றிமேற்கொண்டு பசுக்களுடன்மீண்டு பட்டினம்வரக்கடவாயென்று
வாழ்த்தினாள். இதற்குள்ளே பேடியோ நேர்பாய்ந்து குதிரைப்பந்தியையாரா
ய்ந்து சுழி சுத்தம் சாதி குணம் தேசம் வாசம் இரவிற்பிறந்தது பகலிற்பிறந்
தது மானம் வயிரம் தீரம் திடம் உரோஷம் வேகம் இவைமுதலியவற்றிற்சிற
ந்த சுபகரமுள்ள குதிரைகளை நாடிப்பிடித்து இரதத்திற்பூட்டி, அம்புமுதலிய
ஆயுதவகைகளும் வைத்துச் சுற்றிலும் பத்திபத்திபாக வெற்றிக்கொடிநாட்டி
ஆசாரவாசலிற்கொண்டுவந்து தேரைநிறுத்தினாள். அத்தருணத்தில் உத்தரன்
தங்கையாகிய உத்தரையும் முத்து இரத்தினமுதலிய நவமணிகளாலமைத்த
ஆலஞ்சுற்றி வெண்ணீறளித்துத் தமயனைப்போற்றி அருமையான என்அண்
ணாவே! தேவரீர் போர்முகத்திற்சென்று பகைவர்களைவென்று அவர்கள்
தேரிற்கட்டிய சித்திரவத்திர விருதுத்துணிகள் எல்லாவற்றையுங்கொண்டு
வந்துகொடும், நான்விளையாடும் பொம்மைகட்குக்கட்ட வேண்டுமென்றாள்.
இளையவள் வார்த்தையைக்கேட்ட அரசகுமாரன் வளையாத்தலையைவளைத்து
"அக்காடுவெட்டிப் பருத்திவிளைக்கில் அப்பாவெனக்கொரு துப்பட்டிதா"
என்னும் பழமொழியை ஒத்திருக்கின்றதே; நமது தங்கைமொழியென்று
மாறுத்தரஞ் சொல்லமாட்டாமல் நகைத்துக்கொண்டிருந்தனன். அவனுக்
கருகிலிருந்தபேடியோ ஆகாகா, அம்மா! அவ்வாறே கொண்டுவருவதற் கட்டி
யென்ன ? ஆண்டன்மையுள்ள உன்தமையனுக்கிதுவுமொருபெரிதா ? தேர்த்

துணியுடன் அவரவர் தலைத்துணிகளையுங்கொண்டு வெற்றிபெற்றுவருவது மரிதோ. நீ சந்தேகப்படவேண்டாமென்று உறுதியாகச்சொல்லி உத்தரனை நோக்கிச் சகுனங்களெல்லாஞ் சரியாயிருக்கின்றன ; இதுவே நல்லவேளை இரதமீது ஏறுமென்றாள். அவன் அப்படியே யாகட்டுமென்று அன்னைமுத லிய பெரியோர்யாவரையும் வணங்கி, விடைபெற்றுப் பொன்மலைபோன்ற தேரிற்பொருந்தி போர்ச்சிங்கம்போற் பூரித்திருந்தான். அப்பொழுது, சுதக் கணை தன்புத்திரன் முன்னழகையும் பின்னழகையும்பார்த்துப் பொங்கிப் பெருமூச்சுவிட்டு ஒருபக்கம் பூரிப்பும் மற்றொருபக்கத்தில் அறியாச்சிறுவன் யுத்தத்திற்குச் செல்லுகின்றானேயென்ற ஏக்கமுங்கொண்டவளாகி நின்றாள். அவ்வேளையில் அரண்மனைப்பெண்களியாவரும் கர்ப்பூரதீப நீராஞ்சனமெடுத் துத் தங்கள்தங்கள் இட்டதெய்வங்களைத் துதித்துப் பேடியைவாழ்த்தி எங் கள்பிள்ளை பத்திரம்பத்திரமென்றுசொல்லிநின்றார்கள். பேடியும் அவர்களைப் பார்த்து நாங்கள் போய்வருகின்றோமென்றுசொல்லி அரசமாதினிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு, குதிரைகளின் கவினக்கயிற்றை இடக்கையாற்பிடித் துக் குறடாவை வலக்கரத்தில் தாங்கித் தேரின்மேல் ஒருகால் ஊன்றுமுன் னமே கதி கவனம் தாவலென்று சொல்லப்பட்ட ஐந்துவேகத்தையுமுடை யனவாய்ப் பூமி கிடுகிடென்றதிரவும் தும்புகள் மேலெழுந்து ஆகாயத்தைக் கப்பிக்கொள்ளவும் புரவிகள் அதிவேகமாகச்சென்றன, அந்த விராடபுர த்திலுள்ள பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திராதிகளில் ஆண்களும் பெண்க ளும் அணியணியாகநின்று எங்கள் இளவரசாகிய உத்தரனுக்கு மங்களமுண் டாகுகவென்று மனமாரவாழ்த்தித் தங்கள்தங்கள் வழிபடுகடவுளைத்தொழுது துதித்தார்கள். இப்படியிருக்கக் கண்மூடிக்கண்திறப்பதற்குமுன்னமே வானுற நிமிர்ந்து ; வளைந்தமதில்சூழ்ந்த அரசவீதியையும் மற்றும் பற்பல வீதிகளையுந் தாண்டி ஒற்றைச்சக்கரமும் சப்தாவென்னுங் குதிரையுமுடைய தேர்மேற்பிர காசிக்குஞ் செங்கதிர்போல சங்கிராமசயவுத்தண்ட தீரனாகிய உத்தரன் உத் தரதிசைக்கு வந்துவிட்டான். இப்படி விராடநகரத்தின் வடதிசையைநோ க்கி அதிவேகமாகவருகின்ற இரதத்திற்பொருந்திய இளஞ்சிங்கம்போன்ற அவ் வுத்தரன் சிராமனைப்போற் குபேரதிசையைக் குறிக்குங்காலையில், வான் இடமறச்செறிந்து நிறைந்த நட்சத்திரங்கள்போலும் அளவிடுதற்கரிய கடற் கரைமணல்போலும் திரண்டுபரவிய துரியோதனன் சேனைகள் தன் கண்க ளுக்கெட்டியதூரம்வரையில் விரிந்து நிறைந்திருப்பதைக்கண்டு ஆகா ! அடி பேடி! பொறு பொறு பொறு பொறு; அவசரப்படாதை. நீ விடுந்தேர் விறுவி றென்றோடுகின்றதே, ஐயோ ! என்தலை கிறுகிறென்று சுற்றுகின்றதே, பூமி நெறுநெறவென்று நெரிகின்றதே, என்குலையோ நடுங்குகின்றதே, குடல் குழ ம்புகின்றதே. எதிர்நிற்குஞ் சேனைகளைப்பார்த்தால் கர்ப்பங்கலங்குகின்றதே. பாவி! தேரைச் சற்றே நிறுத்தடி. நமக்கெதிராகிய படைகளைக் கண்ணால் தான்பாரடி. யானையெத்தனை யெத்தனை கோடியோ ? குதிரையெத்தனை யெத்தனைகோடியோ ? சேனையெத்தனை யெத்தனைசேனையோ? தேர்களெத் தனையெத்தனை இலட்சமோ? நாம் எப்படிகணக்கிடப்போகின்றோம்; என்செய்

வோம்? ஐயையோ! பேடி நீயாகிலும்பார்த்துச் சொல்லடியென்றேங்கி உள்ளங்கலங்கிக் கைகால்கள்நடுங்கி கண்களிருண்டு உடல்பதைத்து உயிர்துடித்து நாவரண்டு முடிசோர்ந்து பிணம்போல் தேர்மேற்சாய்ந்துபோனான். இவ்வாறு பிதற்றி முருகக்கடவுளாகிய செவ்வேள்விட்ட வேலாயுதத்தாற் கிழிபட்டு வீழ்ந்த கிரவுஞ்சமலைபோற் போர்முனைபுகுதற்கு ஆற்றலில்லாதவனாய்த் தேர்மேற்சாய்ந்த உத்தரனைப் பேடிபார்த்துத் தன்னிருகையாலு மணைத்து, எடுத்து நிறுத்தி வேர்வைதுடைத்துச் சோபந்தீரத்தாகமளித்து ஆளைத்தேற்றி அவன்முகத்தைநோக்கி ஏனப்பா இப்படியானாயென்று அறிவாலுயர்ந்த பேடி சொல்லத்தொடங்கினாள்.

வாளும்வேலுங்கொண்ட விராடன் மைந்தனே! நீ எதிர்நிற்கும் படையைப் பார்த்துப் பயந்தாயோ? ஏன் கலங்கிவீழ்ந்தாய், இறுமாந்தெதிர்த்த பகைவரை யெஞ்சுதலில்லாமல் அழித்துவிடுவதொன்று அல்லது நாமாவது யுத்தகளத்தில் மாள்வதொன்று; இதுவே சுத்தவீரருடைய துணிவு; வேறே சிந்திக்கத்தக்க தொன்றுமில்லை. இதனினும் யாதேனுமுண்டா யிருக்குமானால், அதை யெனக்குச்சொல்லு. முற்றிலும்வளைந்த பகைவர்களை வெற்றிபெற்றுவருகின்றேனென்று நீஉன் அன்னைமுதலியயாவரிடத்திலும் உரைத்துவிட்டு உத்தரதிசையைநாடி இன்னுஞ் சற்றுநேரமாகவில்லையே! இதற்குள் மறந்துபோனாயோ? நல்லது கைப்பிடித்தவில்லைவளைத்துக்கடுங்கணைதொடுத்துப் போர்செய்து அணுவத்தனையேனுங் காயம்பட்டுத்திரும்புவையேயானால் அப்பொழுதும் சிலர் உன்னைக்கிஞ்சித்துச்சூரத்துவமுள்ளவனென்றுமதிப்பார்கள். இல்லாவிட்டால் அதிக இலேசாக எண்ணுவார்கள். சற்றுமுன் நீ வீட்டிற்பேசிவந்த வீரவாசகங்களை முற்றிலுமறந்து இப்பொழுது முதுகிட்டோடும் இழிவையோசிக்குமிடத்தில் குறைந்த பெண்டுகள்கூடக் குலுக்கென்று நகையார்களோ? இப்படிப்பட்ட உடம்பும் எடுக்கலாமோ? உன்னையார்தான் பூசித்துப் புகழ்வார்கள்? ஐயோ! அடா தம்பி! நீபுறப்படும்போது புலிபோற்கர்ச்சித்து பார் சத்துருக்களையெல்லாம் அதஞ்செய்து நமதுமாடுகளை மடக்கிக்கொண்டு வருகின்றேனென்று வாய்ப்பதட்டமா யுளறினையே; அப்படி மகாவீரம்பேசி வெளிப்பட்ட நீ எதிராளிகளிருக்குமிடத்தை மிதிக்குமுன்னமே உயிருலைந்து உடல்நடுங்கித் திடனொழிந்து மயங்கிவிட்டனையே உலகமென்ன சொல்லும்? படையைப்பார்த்துப் பதறிக்கதறியோடினானென்னும் பழிப்பிற்கிடமாகுமே, இத்தன்மையாகிய நிந்தைநேரிட்டபின்பு உயிரிருந்தென்ன? மானங்கெட்டும் பிராணனைவைப்பது மரியாதையோ? நீயே யோசித்துப்பார், பயப்படாதை, இடமாக இரதத்தின்மேல் உட்கார், அலைகடற்கொப்பாகிய பெரும்படைகளை வென்றுவருவோம் அப்பா! இன்னொன்று சொல்லுகின்றேன்; கேள். 'கற்றூண் பிளந்திறுவதல்லாற் பெரும்பாரந்தாங்கித் தளர்ந்துவளையுமோ' என்பதுபோல், 'அளவிடப்படாத யானை சேனையடுத்தாலும் கூடியமட்டுஞ் சண்டைசெய்துதளர்ந்தவிடத்து அப்போர்க்களத்திலேயே யுயிரையொழித்துவிடவேண்டும். மெலிந்து வெருண்டு புறங்கொடுத்தோடுவது வேந்தர்க்குத் தக்கதன்றென்று விளம்பியிருக்குஞ் சாத்திரத்தை விசாரித்ததில்லையோ? இப்

பொழுது தானென்ன? ஒன்று முழுகிப்போகவில்லை. போர்முகநிலையுங் கார்
முகமுறையும் கடுங்கணைத்தொகையுங் கற்றிருக்கின்ற நீ பெரியமலையைக் குறி
யாகக்கொண் டடிப்பதுபோல் பெருங்கும்பாகிய சேனைகளின்மேல் பொத்த
மாகப் பாணங்களைத் தூற்றிவிட்டால் கும்பலிற் கோவிந்தம் போடுவதுபோல்
அம்புகள் போய்விழுந்து இன்னாரினியாரென்று பாராமல் யாவரையுங்கொல்
லும், உனக்குத் தகுந்தபடி யானுந் தேரைச்செலுத்துவேன். அப்போதுன
க்கு மேலான புகழ்விளையும், வைத்தகுறிதப்பாமல் மாட்டுகிறான் விராட
ராசன் மைந்தனென்று கடல்சூழ்ந்தவுலகக் காவலரும் படைகளும் உனக்கெ
திர்வராமல் ஒருமிக்க வொழிவார்கள். அப்பனே இப்படியாக அடித்து வேந்
தர் யாவரையுமுடித்து அவர்கைக்கொண்ட பசுக்கூட்டங்களைப் பிடித்துச்
சயபேரிகையடித்து விராடநகரம்போய்ச் சேருவோமானால் சந்திரவம்சத்தா
சர் அனைவரும் பந்துவருக்கத்தாரெல்லோரும் உன்னைப் புகழ்வார்கள்; நெடு
நாளைக்குன்புகழ் நிலைபெற்றிருக்கும். அவ்வாறன்றிப் புறங்காட்டியோடுவை
யானால் உலகுள்ளளவுந் தீராதவசையடைவாய், வந்தபகைவரைவென்று திரு
ம்புவோமானால் வையகமெல்லாங் கைகுவித்துப் போற்றுவதுமன்றி உன்தந்
தையுஞ் சிந்தைமகிழ்ந்து அளவில்லா ஆனந்தத்தையடைவான், ஒருவேளை
நமதெண்ண முன்னுக்குவாராமல் நாமிறந்துபோனாற் புகழுடம்புபெற்று அரம்
பாஸ்திரீகளுடைய இளமுலைப்போகந்துய்த்து வீரசொர்க்கமுற்றுக் கற்பகத்
தருவினிழலில் வீற்றிருந்துவாழலாம். இரண்டுவகையிலும் இன்பமக்குண்
டாம். இளங்கன்றே! பேடியாயிருப்பவளைப் பேடியென்றுபேசுவது பெருமித
மன்று, பெரும்போர் புரிவேனென்றுவந்து பேச்சுத்தடுமாறிச்சோர்ந்து படை
யைக்கண்டு பயந்து ஓடவழிபார்க்கும் ஒருவனையே பேடியென்று உயர்ந்தோ
ருரைப்பார்கள். 'சொற்சோர்வுபடேல்' 'சோம்பித்திரியேல்'என்னும் வாக்கி
யங்களை விற்போருடையவேந்தர் மறக்கவே துணியார்கள். கலகத்திற்சென்று
கல்நாட்டநின்று உயிரழிந்த வீரர்கள் கதைத்திறத்தையும் உணர்ந்திலையோ ?
அரசிளங்காளையே! என்று பற்பல வகையினாலும் உத்தரனைத்தேற்றிக் கல
வரத்தைமாற்றிக் கட்டுரையாகிய சரிதங்களாற் கரைத்தாள்.

இவைகளை யெடுத்துக்காட்டிய பேடியின்கருத்திற் கிணங்காமல் தேரோ
டும் வீதியில் தேரழுந்துஞ் சிறப்பினையுடைய மச்சநாடன் மைந்தனாகிய உத்
தரகுமாரன் விற்பிடித்து வெகுண்டு, பற்கடித்து மருண்டு கண்ணீருகுத்துங்
கடைவாய் குழைத்துப் புருவநெறித்து நெற்றிவியர்த்துப் பொருமிச்சொல்லு
கின்றான். ஆரடி? அடிபேடி, உற்றுப்பாரடி! குடிகேடி உனக்குக் கண்ணி
ல்லையோ? அவர்கள் சேனைக் கெண்ணில்லையோ? இப்படையோ டெதிர்ப்ப
தாரடி? இப்படியே திரும்பிப்போவது சீரடி, அப்பப்பா! என்கர்ப்பங் கலங்கு
கின்றதே, குடைகளும் நாற்படைகளும் கருங்கடல்போற் றுலங்குகின்றதே,
பூமிமுழுதுஞ் சேனைக்காடாகப் பொங்கி நிறைகின்றதே, ஐயோ! என்சித்தம்
பிரமிக்கின்றதே, இந்தக்கும்பலில் நானொருவனுஞ்சென்று மீண்டுவருவேனெ
ன்பது விந்தைப்பேச்சே, பெற்ற தந்தைக்கும் ஏச்சே, என்மதியுங் கெட்டுப்
போச்சே, ஏதேது? இனிக்காரியமேயில்லை. நான் சண்டைக்குப்போனால் தப்

பாமற்சாவேன், சந்தேகமில்லையடி பேடி! என்கதியை இன்னதென்றறியடி, என்தந்தைதாய்க்கு நான் கடைக்குட்டிப் பிள்ளையானதால் இனிப் பெறப் போகின்ருேமா வளர்க்கப்போகிருேமா? என்று செல்வமாகவும் மிக அருமை யாகவும் வளர்த்தார்களே, நானும் என்போல்பவராகிய சிறுவர்களோடு சேர்ந்து உண்டைவில் கையிற்பிடித்து விளையாடித் திரிந்துகொண்டிருந்தேனே, என்னைச் சண்டைமுகத்திற்கொண்டுபோகாதையடி, யுத்தஞ்செய்யும் பருவம் எனக்கின்னுமில்லையடி, நான் அறியாதபிள்ளையடி, எனக்கேனிந்தச்சள்ளையடி, ஆகா! இதென்னஅநியாயம்? கொடையாளியாகிய கர்ணன் வீட்டுமர் துரோணர் கிருபர் அசுவத்தாமா மற்றுமுள்ளவீரர் பலருஞ்சேர்ந்து முனைந்த போர் முகத்திற்புகுந்து போராட அறிவேனே? போடிபோ அடிபேடி! நல்லதுதெய்வச்செயலுள்ளபடி யாகின்றதென்று மனோவேகதிடங்கொண்டு சண்டைசெய்வோமென்றெண்ணினாலும் தேர்கள் அநேககோடி, யானை பலகோடி, குதிரை வெகு கோடி, பதாதிகள் கோடாகோடி, இவையன்றியும் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் அதிரதர் சமரதர் மகாரதர் அர்த்தரதர் இவர்களையெல்லாம் படைத்துணையாகக் கொண்டுவந்து நமது பசுமந்தைகளைக் கவர்ந்த வணங்கா முடியோனுக்கெதிரில் வணங்குகின்ற முடிபெற்ற பேடியாகியவுன்னை உதவியாக நம்பிப்போய்ச் சண்டைதொடங்கலாமோ? சொல்லடி பேடி! காலமும் தன்பலமும் மாற்றான்பலமும் துணைப்பலமும் ஆராய்ந்துணராத அரசனது முயற்சிகள் அனைத்தும் பயன்படாதென்று பெரியோர்கள் சொல்வார்கள். நானோ மெத்தவுஞ் சிறியவன் அதிலுஞ்சொற்ப வலியுள்ளவன் இத்தன்மையனாகிய வென்னை அதிரதரிற்சிறந்து பின்பலம் விரும்பாமற் போர்முகத்திற் புகுந்து மதயானைகளைப்பிளந்து புயபலபராக்கிரம விக்கிரமம்பெறும் போர்விசய சிங்கம்போன்ற அருச்சுனராசனென் றென்னை மதித்திருக்கின்றனையோ? ஐயோ பேதையே! அவ்விசயன்புரியும் போர்க்களத்தில் எழுந்து பறந்துபோகின்ற பரமாணுவுக்கும் ஈடாகுவேனோ? பாவி! ஏண்டி வம்புசெய்கிருய்? அடிபேடி! யாரெப்படியானாலும், விளைந்தபோர் எப்படிபோனாலும் உனக்கென்ன? நயநட்டங்கள் என்னைத்தானே சாரும், நீயேன் வீணே துள்ளுகிருய். அரசமாதர்களுக்கு ஆடல்பாடல் கற்பித்து பத்துநாளைக்கிருந்து வயிறுவளர்த்துப் போகின்ற உனக்கேன் இத்தனைவீம்பு? பிள்ளையருமை யறியாத பெருமூடிபோடி, இப்பொழுதுதான் புதிதாக வில்வித்தையிற் கைப்பழகிவருகின்ற நான் நெடுநாளாகக்கற்ற வில்லாளருக்கெதிர்போய் வில்வளைப்பேனானல் மானங்கெட்டு ஈனம்பட்டு மாள்வேனென்பதற்கு ஐயப்பாடென்ன? ஐயையோ! உன்னாலென்னாவி ஒழியவந்திருக்கின்றதே என்று கண்சிவந்து கடுங்கோபங் கொண்டு என்பேச்சுக் கெதிர்பேசாதே பேசாதே என்று பின்னுஞ்சொல்லுகின்ருன். ஆ, பிரகன்னளையென்னும் அலியே! எங்கள் பசுமந்தைகளையெல்லாம் பகைவர் கொண்டுபோனாலும் மச்சநாடுமுழுவதும் நாங்களிழந்தாலும் குடிபடை அமைச்சுநிதி நிட்சேபங்குறைந் தொழிந்தாலும், முடிமுதற்செங்கோல் முனையழிந்தாலும் இதனால்வருங் பெரும்பழி எனக்கடுத்தாலும் எங்களைத் தெய்வம் நடுத்தெருவில்விடுத்தாலும் உனக்கொன்றுமில்லையே; என்னைத்தடுத்

துரைக்கவேண்டிய அவசியம் உனக்கென்ன? நானிப்போது சொல்லுகின்ற
சொற்படி வாயைமூடிக்கொண்டு அப்படி யிப்படிப்போகாமல் ஊரைப்பார்க்
கத் தேரைத்திருப்படி. அடிமகராசி! உனக்குக் கோடி புண்ணியமுண்டடி,
தயைசெய்து என்நாய்முகத்தில் விழிக்கப்பண்ணடி, உனக்கு வேண்டியவை
யெல்லாம்தருகின்றேன். நான் சொன்னசொல்லுமாறேன். சண்டைசெய்யப்
போகின்றேனென்று என்னுயிருள்ளவரையிலும் இனிப் பதறிப்பேசேனென்று
கூகூவெனக்கதறிநின்ற அச்சிறுவன்மொழியை அர்ச்சுனன்கேட்டு அந்தோ!
ஏது இனிக்காரியமில்லை. இவன்கருத்தைப் பார்க்குமிடத்துத் தேரைவிட்டுக்
குதித்துப் புறங்கொடுத்தோடுவான்போலும் இருக்கின்றதென்றெண்ணி, மறு
படியும் மனவெறுப்பில்லாமல் மன்னவன்மகனை மகிழ்ந்துநோக்கி அப்பா க்ஷத்
திரியகுலாதிபனே! மும்மையுலகத்திலும் ஏகசக்ராதிபத்தியமும் ஆக்கினைச்
சக்கரமுஞ்செல்லும்படிசெய்து இப்பொழுது நிரைகிளையாகவந்தடர்ந்த பெரு
ஞ்சேனைகளை யொருகணையால் மாளச்செய்து உன்சிந்தைமகிழ இக்கணத்தே
திரும்பிவந்துவிடுவோம். நீ யாதொன்றுக்கும் பயப்படாதை, உன்னை நம்பிவந்த
வென்னையே நீ திடமாகநம்பு, இப்பகைவருடைய வாளாயுதம் வேலாயுதம் குந்
தாயுதம் சக்கராயுதம் தோமராயுதம் வில் கணைமுதலிய ஆயுதங்களெல்லாம்
நெற்பதர்போல் நெருப்பெழப் புடைத்துச் சேனையானைகளைத் துடைத்து
வெற்றிபடைத்து மேன்மையாகத் திரும்புவதைவிட்டுக் கீர்த்தியைப்போக்கி
விராடராசன்பெற்ற பெரும்புகழையும் பாழாக்கி எதிரிகளுக்கஞ்சி யோடினா
னென்னும் நிந்தையுண்டாக்கி என்புகழையு மண்ணாக்கிப்போட நினைப்பதும்
அரசகுலத்திற்பிறந்த உனக்குத்தகுதியோ? உன்தாயாகியசுதக்கணையும் உனக்
கிளையாளாகிய உத்தரையும் உன்பந்துவர்க்கங்களும் உன்னிடம்வந்து வணங்
கும் பணிப்பெண்களும் பட்டணத்திலுண்டாகிய வெகுசனங்களும் நமதிள
வரசாகிய உத்தரன் யுத்தத்திற்குப்போயிருக்கின்றான். பகைவர்களைவென்று
அவர்கள் கைக்கொண்ட பசுமந்தையைத் திருப்பி வருவானென்று மேகத்
துளியைவிரும்பிய பயிர்போல் வாட்டமுற்று வாய்திறந்து நீ வரும்வழியைப்
பார்த்திருப்பார்களே! அப்படிப்பட்டவர்கள்முன்னர் நீயெப்படிபோய் விழிப்
பாய்! என்னசொல்லிசைப்பாய்! ஐயோ! இவ்வவமானத்தைப்பார்க்கிலும் நான்
சொல்வது கசப்பா? நினைக்கநினைக்கவெனக்கும் துக்கந்தோன்றுகின்றதே!
நான் பேடியானாலும் இதுவரைக்குந் தேர்விடுத்த போர்முகத்தில் யார்பிழைத்
தார்கள்; கண்டதுண்டம்படக்கொன்று கைகண்டதன்றிச் சண்டைக்குப்பயந்
தோடிய செய்தியைப் பார்த்துமறியேன். கதைதனிற்கேட்டுமறியேன். என்
னாற்பிழைவந்ததுமில்லை, என்னை நம்பிய பேருக்கிடர்தந்ததுமில்லை. இப்போது
மென்ன? இதழ்விரிந்த மலர்செறிந்த மணமுறைந்த வரிநிறைந்த தொடையணி
ந்த படைதிணிந்த பலவான்கள் அடங்கலும் விறுவிறென்று தலைசுழன்று தந்
நிலைதெரியாமல் மயங்கும்படி இரதஞ்செலுத்துகின்ற என்கைச் சாகசத்தி
னால் செல்வமிகுந்த நமது பசுமந்தையைத்திருப்பிக்கொள்வோம். திடதைரிய
முடைய சிந்தைசிதையாமல்வா, நான்விடப்போகின்ற தேர்ச்சாகசத்தைப்
பார், ஒருவேளை உனக்குப்பகைவர்களாற் குற்றநேரிடுமானால் உடனே உன்

னுயிருக்கென்னுயிரைத் துணையாகக் கொடுக்கின்றேன். நீ யென்னை நம்பித் தேரிலுட்கார், எத்தனையோ கோடானுகோடி சேனைகளென் றிதயங்கலங் காதை, இன்னுமெழுகடல்போற் படையெழுந் தெதிர்த்தாலும் பெரும்புறக் கடல்போற் பெயர்ந்துவந்தாலும் வரட்டுமென்று உறுதியாய் மனத்துணிவு பெறுவையேயானால் தேவர்கள் மதித்துத் துதித்துச்செய்யும் ஆசீர்வசனமும் வெற்றித்திருவின் கருணைப்பெருக்கமும் பூதலத்தோர் காதலித்துப்புகழும் புகழ்ச்சியும் உனக்குண்டாமென்பதற்கியாதொரு ஐயமுமில்லை. நீமாத்திரங் குருகுலநாயகன் போரைக்குறித்து வில்வளைத்துக் குணத்தொனியெழுப்புமுன்னமே பெருங்காற்றிற்பறக்கு முருங்கைச் சருகேபோலடித்துக் காலேயமந்தையைக் கைப்பிடித்துக்கணப்பொழுதில் உன்னை மச்சதேசத்திற்கொண்டுபோய் விட்டு மறுவேலைபார்க்கின்றேன். இன்னாரைக் கொல்லவேண்டும். இவ்வாறு வெல்லவேண்டும். இப்படிக்குச் செய்யவேண்டுமென்னும் வருத்தம் உனக்கெவ்வளவும்வேண்டாம். நீபஞ்சாதை, நன்மை தீமைகட்குடன்பட்ட வென்னுடன்கூடிவாவென்று புத்தியிலுயர்ந்த பேடிமெத்தவு மனம்வருந்திச் சொன்னாள். தன்னாற்கூடியமட்டும் உத்தரனுடைய மனத்தைக் கரைத்துரைத்த வார்த்தையத்தனையினும் அணுவத்தனையேனும், அவன்சித்தத்திற்பொருந்தாமல், யுத்தவீரந்திருந்தாமல், மானம்போமென்னவருந்தாமல், வேறொன்றுந் தோன்றாமல், புறங்காட்டியோட நாணாமல், புகழாபரணம் பூணாமல், போக்கின்மேல் நோக்கமுள்ளவனாய்ப் பெண்யானைகள்போன்ற வெருமைகள் கடைபுரளவிழித்துக் கன்றைநினைந்து, மடிசுரந்து வழியப்பொழிகின்ற பால் காலில் வீழ்ந்துசென்று, மேலாகியநெற்பயிரிற்பாய அப்பயிர் கர்ப்பம்போற்றழைத்துக் கதிருடன்சாயும் வளம்பொருந்திய மச்சநாட்டுக்கதிபதியாகிய விராடகுமாரன் பெருமூச்செறிந்து, பேச்சுந்தளர்ந்து, பேடியைநோக்கிப்பேசத்தொடங்கினான். அடி, மோசக்காரி! நான் எத்தனைவிதத்திற் சொன்னாலும், எள்ளத்தனையுந் தெரிந்துகொள்ளச் சத்தியுனக்கில்லையே. உன் சுயபுத்தியாற் றுணிவுபெறுவையென்றாலோ வதுவுமில்லை. சொற்புத்தியுஞ் சுயபுத்தியுமில்லாத் துட்டியைக்கொண்டு சண்டைக்கெப்படிபோகலாம்? இவ்விடத்தில் மேகம்போற் கவிந்த துரியோதனனுடைய சேனைக்கெதிரில் யுத்தஞ்செய்யத்தெரியாத என்னைக் கொடும்போரில்விட்டு நீ வெற்றிபெறலாமென் றெண்ணினையோ? நரிவாலைக்கொண்டு கடலாழம் பார்க்கலாமோ? அதற்குநான் ஆளல்லவே. என்னைப் பெற்றவனானாலும், அவனைப்பெற்ற பாட்டனானாலும், தனுர்வேதங்கற்ற சாதுரியரானாலும், இப்படையைவெல்லும் வல்லமையெவர்க்குண்டாயிருக்கும்? சொல்லடிபெருமூடி. புத்திகெட்டபேதையே! உனக்கென்னதெரியும்? நீயென்னவறிவாய்? மறுமன்னர்க்குண்டாகிய வுறுதியும் போர்மேற்செல்லும் திறனும் காலபலமும் காரியாகாரியங்களுந் தெரியாத கயவருக்கென்னசொன்னாலுங் கண்டறியமாட்டார்கள். ஐயோ! இதென்னபாவம்? அடியேண்டி பழிசுமந்து கொள்ளுகின்றனை. வேண்டாமடிபாவி! நான்சொல்வதை யின்னுங்கேளடி, லோபி! படமுடைய பாம்புக்கொடிபடைத்த பார்த்திபனுடன் சத்தியவிரதசாதநெறிபெற்ற சாந்தரும் வெற்றிவேலேந்திய வேந்தரும் முனைந்து சண்டை

செய்யும் போர்முகத்திற் குற்றமற்ற தனுர்வேதங்கற்றவருங்கால்வைக்க மாட்டார்களே. நமனும் எட்டிப்பார்க்கநடுங்கிக் கண்கலங்குவானே. அப்படிப்பட்ட அதிரதர்களுக்குமுன் விற்பிடிக்க அறியாச்சிறுவனாகிய என்னைக் கொண்டு போய்விட்டுச் சண்டைபோடென்பதுந் தகுதியோ? அவர்கட்கெதிரில் நானெப்படிபோய் நிற்பேன்? என்னயுத்தம்பண்ணுவேன்? நல்லது, உன்பேச்சை நம்பி நானெதிர்த்தபோதிலும், தொலைதூரத்திலிருந்து பாணம்விடுப்பேன் நானொருகணைவிடுக்குமுன்னமே அவர்கள் ஓராயிரங்கணை தொடுப்பார்களே. அவர்களெய்யுமம்பினால் உன் கையும்மெய்யுங் கலங்கி முதற்பலியாய் நீ விழுவையே. அப்பால், நான்செய்வதென்ன? அடிகுடிகேடி! பின்னர் என்தேருஞ் சாரதியுங் குதிரையு மொழிந்து, வில்லுந்துணிந்து, நானுமழிந்துபோனால், வெற்றி யெவர்பட்சமாகும்? ஐயா வொருவேளை தெய்வச்செயலால் தப்பிப்பிழைத்தால் சுடுகணையேவித் துரத்தியடிப்பார்களே. அதனால் துயருழந்து, அருமையான தேகமலக்கழிந்து, கால்நடுங்கிக், கைநடுங்கிக், கண்கலங்கிப, புன்கண்பட்டுக் கருத்தழிந்து விழுந்து புரண்டெழுந்து, உள்ளங்கால் சிவக்க வுரங்கெட்டோடி, மச்சநாட்டிற்போய்ச்சேர்ந்து வாடிவருந்துவது உனக்கிச்சையோ, அஃதுனக்கு இலச்சையோ? அதனுலிகழ்ச்சியோ, புகழ்ச்சியோ? நிதானித்துப்பாரடி. இதைவிட, நான் சொல்வதைக்கேளடி. நாமேறிவந்த இரதமுறியாமல் வில்லழியாமல் குதிரைசாகாமல் நீ மடிவுறாமல் நானடிபடாமல், ஒருகுறைவுமில்லாமல் உயிருடன்திரும்பி, வீரம் பெறுதவர்போல் மீண்டேர்புகுவது பெருமையோ; சிறுமையோ? யோசித்துச் சொல்லடி. உயிரழிக்கும் பேடியென்று பற்பலவகையாகப்பேசி, மலையருவிபோற் கண்ணீருகுத்து, உண்ணீருலர்ந் துள்ளமுருகிக், கொடியபாவியாகிய இந்தப்பேடி நம்மைப்பிராணனுடன் விடமாட்டாள் குடிகேடியென்றுயோசித்துக் கைப்பிடித்தவில்லையும் அம்பறாத்தூணியையும் வீரகண்டையையும் தேர்மேற் போட்டுவிட்டுப் பின்புறமாய்ப் பூமியிற்பாய்ந்து விராடபுரத்தை நோக்கி விரைவிலகன்றோடினன். வாரணப் போர்முனைவெல்லப் பூரணவாண்மைபெறாத விராடகுமாரன் தேர்விட்டிழிந்தோடுவதைக் கருணைக் கடற்கொழுந்தாகிய அருச்சுனன்கண்டு, பச்சாத்தாபப்பட்டுக் குதிரைக்கடிவாளத்தைத் தேர்க்காலிற் பிணித்துவிட்டு, நிலத்திற்குதித்து இளைத்தோடுகின்ற உத்தரகுமாரனைப் பின்றொடர்ந்தான். திரண்டகற்றூணையொத்த தோளாற்றலையுடைய விசயன் உத்தரகுமாரனுக்குப் பின்னோடியபோது, நந்தியாவட்டமாலையணிந்த துரியோதனனுடைய படைமன்னர்பார்த்துச் சங்கதியொன்றுந் தெரியாதவர்களாய், ஒல்லென்று சமுத்திரம்போலிரைந்து, தம்மிற்றாமே பொங்கிமகிழ்ந்து கைகொட்டிக் கலீரென்று நகைத்தனர். அவ்வேளையிற் சிவந்தகண்களையுடைய வீட்டுமரும் மற்றபெரியோர்களும் தம் விவேகத்தால் நிதானித் துரைத்தார்கள். நமக்கெதிராக வந்த தேரைவிட்டோடுஞ் சிறுவனைத் தொடர்ந்துசெல்லுஞ் சாரதியை நோக்குமிடத்தில், விசாலமாகநீண்ட விழிப்பார்வையும் ஏறுநெற்றியும் ஆசானுபாகுவாகிய துணைக்கரமும் வயிரமலைபோன்றமார்பும் பச்சைவர்ணத் தாமரைமலரையொத்த முகமும் பருத்த

விடையுங் கனத்ததொடையும் சிவந்தபதமும் சிரித்தநகையுமுள்ள சிலை விசயனைப்போற்றோன்றுகின்றது. ஆனால் அணிந்திருக்குங் காதோலையினா லும் திணிந்திருக்கும் ஆபரணங்களினாலும் கலகலக்கும் வளையல்களினாலும் கட்டியிருக்கும் புடைவையினாலும் பின்புறமுடித்த கொண்டையினாலும் முன்புறமை விழிந் கொண்டையினாலும் பெண்ணுருவாயுங் காணகின்றதே. ஆகையால், பெண்ணுருவென்றும் ஆணுருவென்றும் பெண்ணும் ஆணுமல்லாத பேடியுருவென்றும் எப்படிப்பேசலாம்? இதன்றியும் முத்துச்சரக் குடைகள் பத்திப்பத்தியாகச்சிறந்த விராடநகரத்திலிருந்து ஒருதேரே புறப்பட்டது. அத்தேரிற் பொருந்தினவன் சிறுபிள்ளையாகவே தோன்றினன். அவன் நம்முடன் யுத்தஞ்செய்யத்துணிந்து விற்பிடித்து வந்தவன்போலு மிருக்கின்றது. அவனுக்குத் தேர்விடுஞ்சாரதி ஆணென்றும் பெண்ணென்றுந் தெரியாமலேயப்படுதற் கிடமுண்டாகின்றது. அவர்களின்னாரென்றும் இன்னகாரணமாக வந்தார்களென்றும் எடுத்துரைப்பவர் யாருமில்லையே. அந்தோ! இச் சூதை யெவ்வாறறியலாம், எப்படியுணரலாம், ஈதென்ன சூதோ, இனி விளையப்போகின்ற தென்னவாதோ? என்று மனமறுகி, மறுபடியுந் தெளிந்து ஆலோசனைச்சங்கங்கூடி அவரவர்களும்நாடித் திரமாய்ச்சொல்லலாயினர்.

திரிகர்த்ததேசத்தரசனுனசுசன்மாவென்பவன்விராடநகரத்திற்குத்தென் பால்சேற்றடைந்து, பசுக்கூட்டங்களை யோட்டியகாலையில் விராடராசன் துடித்து மலைபோற்றிரண்ட தனது தோண்மேலடித்து வைரங்கொண்டு பற் கடித்து விற்பிடித்து நால்வகைத்தானையுடனடந்து பகையையடர்ந்து எவரையும்வென்று தங்கள் பசுநிரையைக் கைக்கொண்டு, மண்ணுலகத்தோரும் விண்ணுலகத்தோருங்கொண்டாடும்படி யாண்டுமைந்தனைவரும் வெற்றிபெற்றவராகவேண்டும். இப்பதியிலவரிருந்தாரென்பதற்கு ஐயமேவேண்டுவதில்லை. மச்சராசன் தென்றிசையிற் சண்டைக்குப்போம்போது, உத்தரகுமாரனென்னும் இளங்காளையைவிட்டு, மற்றபிள்ளைகளுட னுடன்பட்டு அஞ்ஞாதவாசஞ்செய்வதற்கு மாறுவேடத்துடன் அமர்ந்திருந்த தருமராசன் வீமன் நகுலன் சகாதேவன் இவர்களுள்வரும் தன்னுடன்வரச் சென்றவனாகவேண்டும். ஊர்வசிசாபம்பெற்ற பேடியுருவத்துடன் வெளிப்புறப்பட வெட்கப்பட்டு அரசகன்னிகைக்கு நாட்டியம்பழக்கிய தபுஞ்சனனவன் நரனாகவேண்டும். நாமெல்லோருந்திரண்டு சமுத்திரம்போற்புரண்டு மச்சநாட்டின் வடதிசையையடைந்து, வீட்டை நாட்டை வேகக்கொளுத்தி, மாட்டைக்கூட்டி மடக்கிய வன்மையைத் தூதர்களோடித் துயருடன்சொல்ல வில்வேளைப் போல வீட்டிலிருந்துகேட்ட உத்தரகுமாரன் விசனமெய்திக் கண்சிவப்பேறி என்றந்தைமாருந் தமையன்மாருமில்லாத சமயம்பார்த்துவந்தார்களே! எனக்கொருசாரதியுமில்லையேயென்று மயங்கிச் சோர்வடைந்தவனாக வேண்டும். இக்காரியங்களைக் கேள்விப்பட்ட அருச்சுனன் எக்களிப்புடனெழுந்து, பயிர்க் கொள்ளைக்குத் திட்டிபரிகாரமாகச்செய்துவைத்திருக்கிற புல்லாடவனையொத்த உத்தரகுமாரனுக்குப்போர்க்கோலஞ்செய்து தானேசாரத்தியம்பண்ணச்

சமைந்தவனாகவேண்டும். அப்பேடிஎடுத்துக்கூறிய சாதுரியவசனச்சமர்த்தி னாலும், உறுதியூக்கமுடைமையினாலும் தான் சிறுவனாயிருக்கின்ற தன்மை யாலும், பின்முன் னெண்ணிப்பாராமல், பகைவரையுந் தன்னையுமெண்ணா மல் மானமபிமானத்தையுமறியாமல், "இளங்கன்றுபயமறியாதென்பதுபோல்" தேர்மேலேறிப் போர்மேல்வந்ததாகத் தெரியவருகின்றது. இதுவேயுண்மை. இதற்குவேறாக நினைக்கவேண்டியதில்லை. அப்பேடிநடத்திய தேரில்வந்த உத் தரகுமாரன் கங்குகரைகாணாத நமது சேனைக்கடலைப்பார்த்துக் கருப்பமுமன முங் கண்ணுங்கலங்கித் தானினைத்துவந்த சண்டைநினைப்பையுமறந்து, தாய் தங்கையரிடத்திலுரைத்த தைரியத்தையும் துறந்து வாட்டத்துடன் ஓட்டங் கொள்ளநினைத்தோடினவனாகவேண்டும். அவன்மடமையைத்தெரிந்து சாரதி சொல்லவேண்டிய கடமையையும் தீரவீரத் திறமையையும் மிகத்தேற்றியுந் தேறாமே தேர்விட்டிறங்கி உயிர்க்குறுதிதேடி யூரைப்பார்த்தோடுகின்றான். மிக்க பயங்கொண்டோடுகின்ற அவ்விராடகுமாரனைச் சாரதியாகவந்த பேடி நோக்கிப் பின்றொடர்ந்தோடுகின்றாள். இதுதானிப்பொழுது நடந்திருக்கின்ற காரியமென்று ஆலோசனைச் சங்கமாகக்கூடிய யாவருந் தங்கள்பேரறிவினால் நிச்சயித்தார்கள். இவர்கணிதானத்தைக்கேட்ட துரியோதனனும் அவன்மன த்திற்கிசைந்த மன்னவரும் பயங்கொண்டு, இதயத்திற் பசுமரத்தாணிபோற் பதித்துக் கீர்த்தியுமிழ்ந்த ஈராசமென்ன நலிந்து, நாமென்னினைந்தென் செய் தோம், என்னவோ ஏதோவென்று பிராந்தியாற் பதைத்தோடுகின்ற உத்தர குமாரனைக் கண்சிமிட்டாமற்பார்த்துகொண்டேயிருந்தனர். இப்படியிருக்க, ஊர்முகமாயோடிய உத்தரகுமாரனைப் பிடிக்கப்போன பேடி கணப்பொழுது செல்லுமுன்சென்று எதிர்நின்றுமறித்து அவனுடையமுன்கையைத் தொட் டிழுப்பதற்கஞ்சினாள். அதேதெனெனின், விரப்பிரதாப பென்மையில்லாத வேந் தனானாலும் தான் சாரதித்தொழிற்கிசைந்த தன்மையினால், எசமானன் கை யைத்தொடுவது மரியாதையன்றென்றிருந்தாள். இப்பால், ஏமபாசம்போல் இருகரத்தையும் விரித்துத்தடுத்தெதிர்நின்றபேடியைப் பிதிர்கலங்கி யோடுகி ன்ற உத்தரகுமாரன்கண்டு மதிமயங்கிமிகவுமனம்வாடி என்னடி பேடி குடி கேடி., நீர்மூடி! இன்னுமென்னை விட்டுவிடாயா? கொடியாளேயென்று பூனை யைக்கண்ட கிளிபோலும், பூதத்தைப்பார்த்த வுயிர்போலும், பயந்து மெய்ந் நடுங்கி யொடுங்கி யுளறிப்பேசுகின்ற உத்தரகுமாரனைப்பேடிவேடப்பிரதாபன் பார்த்து இளவரசாகிய இறைவனே! உன்னைத்துணையாகநம்பித்தேர்செலுத்தி வந்தவென்னை நோக்குமிடத்தில், வினையைத் துணையாகநம்பியவினைவனாயோ த்தேதெனென்று வெறுத்துச் சற்றுநேரம் பொறுத்து, அரசிளங்கன்றே! இப்படி யுஞ் செய்யலாமா வென்றிசைத்தனள். அவள் பேச்சைக்கேட்டுக் கலகல த்த உத்தரகுமாரன் அப்பேடியின் அழகிய முகத்தைப்பாராமல் நிலத்தைப் பார்த்து நெடுமூச்செறிந்து நிக்குமுக்காடித் திடுக்கிட்டோடிக் கண்ணீர் சொரியவும் விடவிடவென்று கைகால்நடுங்கவும் முத்துப்போல் வேர்வை முகத்திற்றுளிக்கவும் எண்ணங்குலையவும் இதயந்துடிக்கவும் வாயினின்றும் வரும் சொல்லுங்குழற வெருண்டு விம்மிச்சொல்லலாயினன்.

அடிசீமாட்டி! இவ்வுலக வாழ்க்கையைவிரும்பிய வுயிரானது நமனைக் கண்டு நடுக்கங்கொள்வதுபோல், உன்னைக்கண்டு ஒடுங்கிவிட்டேனடி பேடி! நான்சொல்லு நன்மையைக்கேளடி. பிள்ளையாகப்பிறந்த அந்நாண்முதல் இந் நாள்வரையிலும் தாய்தந்தையரைவிட்டுப் பிரியாத தனயனடி. நான்போர்க் கோலங்கொண்டு தேரேறிவரும்போது, என்னைப்பெற்ற சுதக்கணை என்முக நாடி தன்முகம்வாடி வாயிற்படிவரைக்கும்வந்து வழிவிட்டனளே. அவளு டையமனமும் வயிறும் எப்படிவருந்தியதோ? என்னதிகிலடைந்ததோ? நானறியேன் சிறியேன். அவளப்படி அவலமுற்றிருக்க, நானிவ்விடத்திற் கோடிச்சேனைகளைக்கொன்று வென்று வெற்றியுடன் திரும்பினால் தாய்வயி றெரியச் சம்பிரமங்கொண்டாடுந் தறிதலையர்களில் நானொருபாவியல்லவோ! அடிசதிகாரி! உனக்கு வெகுகோடிபுண்ணியமுண்டு. கண்ணியமுண்டு சுகிர் தமுண்டு சுபமுமுண்டு நான்வந்தீ களிப்புமாறுமற் கொண்டுபோய் விராட நகரத்திற் சேர்த்துவிடுவையானல், என் தாய்தந்தையர் பக்கம் உன்மேலதிக மன்புண்டாகும. அவர்களுனக்கு வெகுமானஞ்செய்யுமுன்னமே யானை தேர் குதிரை ஆடையாபரணங்களும் அடியேன்கொடுக்கின்றேன். அடி பேடி! உன்னை நான் கனவிலுமறவேன். நீயுநானும் உடலிரண்டு உயிரொன் றென மிகவுமொருமையாயிருப்போம், எக்காலமும் உன்பேர்விளங்கும்படி யாக இவ்வுலகி லுன் உபகாரச்செய்கையைத் தாபித்து என்னிட்டதெய்வ மாக உன்னைக்கொண்டாடுவேன். நான்மாத்திர நகரம்போய்ச் சேர்வேனு னல், மன்னரையடக்கி மாட்டைமடக்கிப் பின்னமில்லாத வெற்றிபெற் றதுபோலாவேனடி, அடியுத்தமி! ஏதோ என்மனங் கலவரப்படுகின்றது. இன்னொருதரமென் தாயைப்பார்க்கவிச்சைமேலிடுகின்றது. மச்சநாடுபோய்த் திரும்பிவாராமல், சண்டைக்கடியெடுத்துவைக்கமாட்டேன். என்மண்டைக் கோலைகொண்டுவைத்த கொடும்பாவி! கண்மூடித் திறக்குமுன்னம் பட்ட ணம்போய்ச்சேரடி. கலங்கவிடாதையடி. கடவுண்முகத்தைப்பாரடி. என் மார்பைத் தொட்டுப்பாரடி. ஐயோ! குலைதுடிக்கின்றதே. கரைந்துருகிய வென்னைக்காவடி. அடிபேடி! நீயென்பங்கிற் கட்டமத்துச்சனிபோல் எங்கிரு ந்துவந்தாயடி? நீயாரடி? ஒட்டா, உறவா? ஒன்றுமில்லையே. ஆனாலும் இவ் வேளை நீதான் எனக்குத்தாயடி. இரும்போ, கருங்கல்லோ? உன்னிதயமிரங் கடி. எனக்குமுனக்கு மென்னபகையடி. எங்களுக்குந்தெரியாத சன்மப்பகை யுண்டோடி? தாட்சண்யம்வையடி, தைரியஞ்சொல்லடி. நீயெனக்குச்செ ய்யுமுபகாரம் நன்மை தீமையிரண்டும்வேண்டாம். ஓடிப்போமென்னைத்தடுக் காமல் விட்டுவிடுவதே கோடிபுண்ணியமடியென்று இவ்வாறு பற்பலவ கையாகக்கூறி இச்சனியைத் தப்பியோடுவதற்கு வழியில்லாமல் மிரளமிர ளவிழித்துவெம்பிய விராடபுத்திரனை விசயன்பார்த்து மிக்கவிசனப்பட்டு, ஏதேதிவனினித் திரும்பானென்றெண்ணியபோதிலும் இப்போதிவனை விடப் படாது. மற்றொருவகையால் மனந்தேறச்செய்வோமென்று, உத்தரகுமாரனை நோக்கி, விராடராசகுமாரனாகிய வுத்தமனே! உனக்கு நித்தியவாழ்வைத் தரவேண்டுமென் றெண்ணியிருந்த என்னெண்ணத்தையுங்கெடுத்து, நீயுமயங்

கிப்போய் விட்டாய். போனதுபோகட்டும். இனியாவது செவ்வைப்படும் படி உன்சித்தப்பிரமையை விட்டுவிடு. நான்சொல்லப்போகிற வுறுதிமொழி யைக்கேட்டு, உன்மனத்தைத்தேற்றி, என்மனம்போலிசைந்து வருவையா னால் மேலானதிறம்பெற்ற வில்வல்லவர்களினுஞ் சிறந்தவனீயேயென்று யாவ ருமதிக்க உன்னை முதன்மையாக்கி, இப்பொழுது நேரிட்டிருக்கும் பகைவர் கள் வாடும்படியாய்மாட்டி, நமது ஆனிரைகளேயெல்லாங் கூட்டிப் பெரும் புகழினை நிலைநாட்டி விராடநகரம்போய்ச்சேர்வோம். இவ்வாறு வெற்றிபெறு வதற்குமுன் மனந்தளர்ந்து வந்தவழியே திரும்பியோடுவதைக்கண்டால், என்னைப்போலொத்தவர்கள் நகைசெய்யார்களோ ? விராடராசன்மகனே! பேயென் றென்னைப் புறகிடநினையாதை. நீயெப்போது வெற்றிகொண்டு வருவாயென்றுன்வரவை யெதிர்பார்த்திருக்குமுன் தாய் தந்தையரும் உறவி னரும் களிப்புடன் உன்னைத்தழுவவும் அன்பினாலுருகிப் பேரானந்தக் கண் ணீர்பெருகி முத்தந்தரவும் பொன்னுலகத்திற் கிணையாகிய உன்னுலகத்தவர் யாவரும் உன்னையும் என்னையும்புகழ்ந்து மகிழ்ந்து புகன்றெதிர்கொள்ளவும் மலையாகிய புகழினை வளர்த்து, நிலையாகியவெற்றியைவிளைத்து, ஒருகணத் திற்குக்கணம் வெற்றிபெறுகின்ற விசயனென்றென்னைப் பலரும் நினைக்கவும் மந்தரகிரியாலலைபட்ட பாற்கடல்போல், பகைவரது சேனைக்கடலைப் படுபா ழாகக்கலக்கியடித்துக் கருந்தாள் செந்தாளெழும்பமுடித்து நீடூழிவாழ்வையுன க்கு நிலைபெறச்செய்வேன். மச்சராசன் மாதவப்பேறே! நீ இச்சொல்லுக்கிண ங்கிச் சப்தாவென்னும் பச்சைப்புரவித் தேர்க்கொப்பாகிய அச்சுவச்சிரத்தா லமைத்திட்ட நமதுசிதத் தேர்மேலிருந்து அச்சமில்லாமற் சாரதித்தொழி லாயினுஞ்செய்வையானால் முச்சகங்கொண்டாடு முதன்மையைப் பெறலாம். இதற்காகிலும் உடன்பட்டு வருவையோ வரமாட்டையோ? என்று போரு க்கு முதற்பாதமான பேடிகேட்க, உத்தரகுமாரன் சற்றுழ்ந்து நினைத்து நிதானித்து நாம் தனித்திவள்கையிற் சிக்கிக்கொண்டோம்! என்னவோ கால கதியின்னதென்றுதெரியவில்லை. நாம் போர்செய்வோமென்றுபுறப்பட்டகால மெப்படிப்பட்டதோ? இன்றுதயத்தி லியார்முகத்தில் விழித்தோமோ? இப் பேடிப்பாவி நமக்கெமன்போல்வந்து நேர்ந்தாளே! இவள் நம்மை யுயிருடன் விடாள்போலுமிருக்கின்றதே. சேனையைப் பார்க்கப்பார்க்கப் பயமேலிட்டிரு க்குகின்றதே, ஐயோ வாய்க்கொழுப்புச் சீலையால் வடிந்ததுபோல என்வாய்ச் சொல்லே யெனக்கிடர் விளைத்துவிட்டதே, இனித் தெய்வச்செயலெப்படி யோ? தெரியாதே, தாய்தந்தைதேடிய தவம் இதுதானோ, தர்மந்தலைகாக்கு மென்பது பொய்யோ, இந்நபுஞ்சகி வெற்றிபெறுகின்ற வில்வல்லமையை தீரர் களைப்போற் பேசுகிறாளே என்று பயமகன்று சாரதித்தொழிலாவது பண்ணெ ன்று பகர்கின்றாளே, இதற்கும் மாட்டேனென்று குதர்க்கம்பேசுவது தகுதி யல்லவே,நல்லதுள்ளபடியாகின்றது, நாமுங்கொஞ்சஞ் சாரதிசாத்திரம் பார்த் திருக்கின்றோமே ஆதலால் தேர்விடுந்தொழிற் கிசைந்துகொண்டாற் போர் முனைபுகுந்த பேடியைத்தெரிந்து சமயத்திற்குத் தக்கபடி பார்த்துக்கொள்ளு வோமென்று ஒருவாறுடன்பட்டு நடுக்கமுமேக்கமுநீங்கி ஊக்கமேலிட்டுள்ளங்

தேறித்திடுக்கிட்டுமுடுக்குஞ்சிங்கம்போற்சீறி வீரப்பார்வைகாட்டி அடிமோட்டி, உனக்குமெனக்கு மேதோவொரு சம்பந்தமுண்டாயிருக்கின்றது ; அதின்னதென்றுந் தெரியவில்லை. உன்னிட்டப்படியே யொப்புக்கொண்டேன். என்னிடத்திற் றப்பெப்பாட்பிருந்தாலும், நீயே பொறுக்கவேண்டுமென்று உத்தரகுமாரனுரைத்தான். அதைக்கேட்ட பேடி சித்தமகிழ்ந்துதிரும்பி உத்தரனுந்தானும் ஒருமையுடனோடிவந்து தேர்மேலேறிக்கடிவாளம்பிடித்துக் குதிரைகளைமுடுக்கச்செய்து அதிரதனாகிய அருச்சுனன் நாயகனாகவமர்ந்து முன்செய்தவப் பயனிப்போது கூடியதென்று களித்து வில்லும்பாணமுங்கரத்திலேந்தி வேந்தனாகிய உத்தரகுமாரனுக்குத் தயிரியஞ்சொல்லி ஐயா விராடகுமாரனே! நமக்கு நேர்வடக்காகிய வுருத்திரபூமியிற் சாமுண்டி சந்நிதானத்திலிருக்கும் வன்னிமரத்திற்குநேராக நமது தேரைச்செலுத்தென்றாள். அவள்சொல்லி யடங்குமுன்னமே யென்னவோகாரணந் தெரியவில்லையென்றெண்ணிப் பொன்மயத் தேரை வன்னிமரத்திசையிலோட்டினான். இச்செய்தி யிவ்விடத்திலிப்படியிருக்க, நேராக வடதிசையைநாடிவந்த தேர்மாறி வடகிழக்கிற் போவதைத் துரியோதனன்முதலிய பெரியோர்களும்பார்த்து நமது படையின்மேல் இலட்சியம்வைத்துவருகின்றவன் அருச்சுனனல்லது மற்றொருவருமல்லர், அன்னியரென்னுமையப்பாடு வேண்டுவதில்லை. அவனைப் பேடியென்றுமதித்தது நமது பேதைமைத்தன்மையென்றெண்ணிப் போர்முனைவிட்டோடிப் புத்திமயங்கிப் பொறிபுலன்குன்றிக் கண்கலங்கிக் கவலைகொண்டார்கள். உடனே அநர்த்தமான அவசகுனங்கள்விளைந்தன. இவற்றையெல்லாந்துரோணர்கண்டு ஆராய்ந்து விசனப்பட்டு அரவக்கொடிபடைத்த அண்ணலுக்குச் சொல்லுகின்றார்.

மதிமரபிற்றோன்றிய வணங்காமுடிபெற்றமகிபனே! யான்சொல்லுகின்றதைக்கேள். வானமுழுதுமதிர்ந்து, திக்கெட்டுங் கம்பிதமெழுந்து பகற்காலத்தில் நட்சத்திரமுதிர்ந்து மேகம் இரத்தமழைபொழிந்து பூமாலைகள் கரிந்து புலால்நாற்றமிகுந்து யானைகுதிரைகள் கண்ணீர்சொரிந்து பருந்துங் காக்கையும் பறந்து மேல்வீழ்ந்து நாயும் நரியும் புரண்டூளையிட்டுக் கழுகுங் கூளியுங் கவிந்து நிறைந்து ஆயுதமுனைகளனற்புகைமலியச் சேனைகள்மயங்கித் திடுக்கிட்டலையப் பற்பல அவசகுனங்களுமுண்டாவதை யாயுமிடத்தில், சகுனநூற்படி அரசனுக்குத் தீங்குமபசயமும் விளையுமென்பதற்குச் சந்தேகமேயில்லை. சாத்திரந்தப்பென்றெண்ணாமல் நீ முன்சாக்கிரதைப்படவேண்டுமென்றுரைத்து வீட்டுமர் கிருபர் முதலிய மேலோரைநோக்கி விளம்புகின்றனர்.

அதிரத மகாரத சமரதத்தலைவர்களே! சமுத்திரம்போற்பரவிய நமது தேர்வீரர்கட்கெதிரே ஒற்றைத்தேர் செலுத்திவருகிற வுறுதி யுணர்ந்தீர்களே, அவன் நமது எண்ணிறந்த சேனைகளையு மொருகணையால் வெற்றிபெறத்தக்க வீரப்பிரதாபனல்லனாயின், தானொருவனுந் தனித்துவரத்துணிவனோ? ஆதலின் நம்முடன் எதிர்ப்பவர்களில்லையென்றிறுமாந்து வாய்மதம்பேசிமகிழ்ந்து திரிவதுந்தகுதியன்று. சுத்தவீரர்கள் தங்கள்தங்கள்படைகளை யணிவகுத்துக் காத்துக்கொள்வதே உத்தமம். தெற்கே ஆனிரைமீட்சிக்குச்சென்ற திரிகர்த்தனையிகழ்ந்த சாதுரியவான்களே! நமது தேகமழிந்தாலும், பிராணனழிந்தா

லும், மானமழியாமலும், மடக்கியமாட்டை விடாமலும், தீரவீரதிடங்காட்டி வெற்றிபெறுவதே திடவான்கட்குரிய கடனுமென்றுணர்த்து, அப்பொழுதே யானை குதிரை தேர் காலாள்களை யணிபெறவகுத்து, இடைக்கிடைப் படைத்தலைவர்களை நிறுத்தி, அவர்கட்குநடுவிற் பசுநிரையை மடக்கிவைத்துக்கொண்டு, கட்டுக்காவல் திட்டப்படுத்தி மட்டுப்படாத தனுர்வேதவரோதயனின்றான். இத்திறமோர்ந்த அரசவீரர்களனைவரும் இனிஇப்பசுநிரையைக் கவர்வாருமுண்டோ வென்றிரைந்து பேசிக்கொண்டிருந்தனர். அவ்வேளையில், தேவர்கள் கொண்டாடுஞ் சத்தியவிரத வுத்தமனாகிய வீட்டுமருடைய அரிய முகக்குறிப்பைத் துரோணருணர்ந்துகொண்டு தேவரீரெண்ணிய கருத்துக்குமாறில்லை. வருகின்றவன் தனஞ்சயனே. அவன் வாளாண்மை வில்லாண்மையிற்சிறந்த குருகுலச்சேனையை மதியாதானாய் ஒற்றைத்தேருடன வெளிப்பட்டிருக்கிறான். இவன் வருகிறவகையை யோசிக்குமிடத்தில், சூரபன்மன்மேலெதிர்த்த சுப்பிரமணியக்கடவுள்போலிருக்கின்றது. இதில் யார் யார் மாள்வர்களோ, யார்யார் பிழைப்பார்களோ, என்ன அனர்த்தம்விளையுமோ? அறியேனறியேனென்று சொல்லிய துரோணரை அருச்சுனன்மேல் உள்ளன்புடைய வீட்டுமர்பார்த்து; வீரர்கள்மதிக்கும் வில்லாசிரியனே! பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் பண்ணவேண்டிய ஒருவருடமுங்கழித்து வெளிப்பட்டிருப்பார்களா? அல்லது, மாடுபிடிசண்டையென்று மகிழ்ந்து கோபத்தினால்வெளிப்பட்டிருப்பார்களா? ஒருவேளை, காலவளவையைக்கடந்து அவசரப்பட்டிருப்பார்களானால், மேல்நடக்கவேண்டுவதென்னவென்று வேந்தர் அவையில்நியமித்த நிபந்தனையைச் சிந்தித்துப்பார்த்தேனன்றி வேறொன்று நினைக்கவில்லையென்றிருவருங்கலந்துபேசிக்கொண்டு, துரியோதனனிடத்தில் தாங்களெண்ணியகருத்தைக்காட்டாமல், வேறுவகையாய்ச்சொல்லநினைத்து குருகுல சிந்தாமணியே! எதிரியுடனெதிர்த்துப் போர்புரியத்தக்க நாளின்றேயென்று அப்பாண்டவாளிதுவரையிலும் பொறுத்தனுபவித்த கடவநாள் முழுவதும்போக்கிப் புறப்பட்டார்போலுங் காண்கின்றதென்று வீட்டுமர்சொல்ல, அம்மொழியைக்கேட்ட தனுர்வேதசம்பன்னர் தெவிட்டா வமிர்தமுண்ட தேவர்போற்களித்து ஒருவசனஞ்சொல்லுகின்றார்.

ஐயா, மதிகுலவரோதய விரதசிகாமணியே! இவ்விடமிருக்கும் நமது சேனையைநாடி ஒருவில்லுடன் தேர்செலுத்திவரும் ஒருவன்றிறத்தை யுன்னுமிடத்திலெப்படியிருக்கின்றதென்னில், ஒருபுருடசிங்கமானது வெகுகாலங் குகைக்குளடங்கிப் பசிதாகத்தாலிளைத்து, நற்காலநேரிடுகிறவரையிலும் வாட்டமுற்றிருந்து, கரடகுஞ்சரக்கூட்டங்களைக்கண்டு களித்துத் தாவியெழுந்து தனித்துவருந் தன்மைபோலிருந்தது. கறைமிடற்றண்ணலாகிய பிறைமுடிப் பிஞ்ஞகனளித்த பாசுபதாத்திரம்பெற்ற பார்த்தனையெதிர்த்துப் போர்தொடங்கத்தக்க வில்வீரர்கள் இத்தொல்லுலகிலுமில்லை. வெயிலுக்கிணையாக மின்மினி பிரகாசிக்குமோ? சொல்லுங்கள் வல்லவர்களேயென்று, துரோணர் சொல்லினார். அச்சொல்லாகிய நாராசம் கன்னன்காதில் நுழைந்தமாத்திரத்தில், செயலுஞ்சிந்தையுந் திகைத்துநொந்து வாயுங்கண்ணும் வறண்டுபுகைந்து

வேசாறி யுள்ளம்வெந்து, வெகுளிமிருந்து, வில்வேதந்தெரிந்த வேதியனைப்
பார்த்து, இருகண்களுஞ்சிவந்து, துரோணரே! இப்போ தென்னசொன்னீ
ரென்றுகறுவி, அங்கிருந்த மணிமகுடமன்னரெல்லாங்கூசி மடங்கவும், தடவி
கடகுஞ்சரவீரர்கள் வாய்பேசாமலொடுங்கவும், சுற்றிநின்ற மற்றசேனைகள்
குலைகுலைந்தேங்கவும், மிக்க இறுமாப்புடன் ஒருத்தரஞ்சொன்னான். தனுர்
வேதியரே! சதுர்வேதமொழிந்த தன்மமுணர்ந்தீரா! 'நன்மை கடைப்பிடி'
'நன்றிமறவே'லென்ப தல்லவா மகுடமன்னர்கோடி வந்துவணங்கு மகாமண்
டலேசனாகிய சருப்பக்கொடிதரித்த துரியோதனராசன் உன்னிடத்திற் பட்
சம்வைத்து இராசவைபவ வலங்கார வணிமணிப் பணியாடையும் படையும்
வீரபட்டமும் பெருமையுங்கொடுத்துச் சவுக்கியபோசன சம்பிரமத்துடன்
சீர்பெறச்செய்து உன்னுதவியினால வெற்றிபெறலாமென்னு மாசையைமிகுதி
யும்வைத்திருந்தான். நானு மஃதுத்தமமென்றெண்ணினேன். இப்பொழுதும
தெண்ணத்தை நிதானிக்குங்காலையில், எதிரிகளைக்கொண்டாடி, அவர்கள்புய
பலத்தைப்புகழ்ந்து, அன்னமிட்ட ஆண்டவனுடைய ஆண்மையைக் குறைத்
துப்பேசி, புலகமிகழும்படிசெய்து, நன்றிகுன்றி, தன்னைவைத்து வளர்த்
தவனுக்குப் பலன்கொடாமல், அண்டைவீட்டுக்காரன் அனுபவிக்கும்படியா
கச்சாய்ந்த முடக்குத் தென்னமரம்போற் குறைந்த மதியைக்கொண்டிருக்
கின்றாய். தருணத்தில் தண்ணீர்வார்த்துவளர்த்த கௌரவகுல முதல்வனை
விட்டுச் சொல்வண்மையும் வில்வண்மையுமுள்ள பாண்டவர்கள்மேற் பட்சங்
கொண்டீர். ஐவர்மேல் அன்புமாசையும் உனக்குண்டாயிருக்குமானால்,
அப்பஞ்சைகட்கு நீ நினைத்ததாகப் புகழ்ந்து பேசவேண்டுமேயன்றி, மற்ற
வர்களைக் குறைத்துப்பேசுவதி லுமக்கென்னலாபம்? எவ்வளவேனு மேன்
மைகிடைக்குமோ? எம்போல்வாரை வெல்லும்வல்லபம் அந்தப் புல்லியருக்
குண்டாயிருக்குமானால், போர்க்களத்திறங்கண்ட வீரர்கள் அவர்களைப்புகழா
திருப்பார்களோ? 'கற்றாரைக்கற்றாரேகாமுறுவர்' என்பதுபோல் வீரரைவீரர்
வியந்துரையாரோ? மணங்கமழுமாலையணிந்த தோளினையுடைய மறையோ
ரே! நீரிப்படிக்கெல்லாம் பூச்சிக்காட்டவேண்டாம். இவ்வேளை நம்மையெதிர்ந்
தவன் அசகாயசூரனாகிய விசயனாயினும், அவனுக்கெதிர் நானொருவனே முனை
ந்து வில்வளைத்தமர்புரிந்து, மன்னுளவிரும்பிய அவனை விண்ணுளவிடுகின்
றேன். இதுவேயுண்மை. உலர்ந்த சருகு, எரிநெருப்பிற்கரிந்து வேகாதிருக்கு
மானால், தேர்மேலேறிப் போர்மேல்வருஞ் சிலைவிசயனுங் கீர்த்திபெறுவா
னென்றுணரலாம். நீயேன் விருதாவாகச் சொற்சோர்வுபடுகின்றனை. வேதிய
குலத்தனாகிய நீயேன் வீண்பழிசுமக்கின்றனையென்றான். கன்னன்சொன்ன
வார்த்தைகளைக் காதிற்கொண்ட துரியோதனராசன் அண்ணா! எதிரியைப்
புகழ்ந்து பெருமையாகப் பேசுகின்றவர்களெல்லாம்பேசட்டும். நீரேன் அவ
சரப்படுகின்றீர்? போர்செய்யவருகின்றவன் பார்த்தனாயிருப்பானானால், நமக்கு
நல்லகாலமென்றே எண்ணும். அதேதெனில், அவர்களொப்புக்கொண்டு
போனபன்னிரண்டாண்டு வனவாசத்திலும் ஓராண்டு அஞ்ஞாதவாசத்திலும்
நாட்குறைவிருக்கின்றது. அதைக்கண்டுபிடித்து மறுபடியும் அவர்களை வன

வாசம்பண்ண வனுப்பிவிடலாம். அப்படியல்லவென்றால், இப்போர்க்களத்திலுயிரழிந்து போவார்களென் றுறுதியாகச்சொல்லிவிடும். தாட்சணியமாக முன்பின்பார்க்கவேண்டுவதில்லையென்று மனக்களிப்புடன்சொல்லத் தாமரைமாலைதரித்த தனுர்வேதியரும் பனைமாலைதாங்கிய வீட்டுமர்முதலாகிய வேந்தரும் சரிதான்சரிதானென்று சிரக்கம்பனஞ்செய்து வரவரக்கண்டறிவோமென்றிருந்தனர்.

இப்பால், உத்தரகுமாரனை யுடன்படுத்திக்கொண்டுவந்த பேடியானவள் அரசகுமாரனே! எப்படிப்பட்டவனானாலும், எக்குலத்தானானாலும், போர்முகவீரனென்று பேர்பெற்று யுத்தமுனைபுகுந்தவன் முன்காயம்பெறாமல், முடிசாய்க்கப்படாது. புறங்கொடுத் தோடிவருங்காலையினும், புகழுண்டாக மார்பிற்காயம்வாங்கி வரவேண்டும். அப்படிவரத்தக்க வல்லமையில்லாதவன் தேகம் ஆறில்லா நாட்டையும், அரணில்லாக் கோட்டையையும், தர்மபத்தினியில்லா வீட்டையும், வளநீங்கிய காட்டையும், பொறையிலா வரசையும், ஞானமில்லாக் கல்வியையும், நன்மணமில்லா மலரையும், மதியில்லாவிசும்பையும், மைந்தனில்லாச் செல்வத்தையு மொப்பானென்று, இராச தருமங்களால் அவன் மனத்தைத்தேற்றி, பயங்கரத்தைமாற்றி, வீராவேசம்விளைத்து, ஆறுகோடி மாயாசத்தியானு மாறுபடா வரன்போன்ற வீபற்சு வன்னிமரத்தைச் சேர்ந்தான். பராசத்திகோயிலும் பாலைநிலமுஞ்சிறந்தடர்ந்த வன்னிமரத் தோப்பில்வந்த உத்தரகுமாரன் கன்னிப்போரால்வந்த சந்தித்தோடத்தாற் கண்விழிக்கமாட்டாதவர்போற்கலங்கி, யசைவற்றிருந்தான். அப்படிக்கிருந்த சாரதியைப் பேடிபார்த்து, அப்பா! நீ என்சொல்தப்பாமல் இந்தமரத்திலேறி வடபுறத்திற் பணைத்துப்பருத்த கிளையின்பொந்திற் சேமஞ்செய்திருக்கின்ற ஐவர் ஆயுதங்களையும் அம்பறாத்தூணியையு மெடுத்துவாவென்று கூறினாள். அப்பேடிமொழியால் தேறியமைந்தன் இதென்னவதிசய மென்றெண்ணி, உயர்ந்து தழைந்துவிரிந்த வன்னிமரத்தை நோக்கி, ஐயா! பூதப்பிரேதங்கட்குரிய பிணக்காட்டகத்திலென்னை அபாயமாகக்கொண்டுவந்து நிறுத்தி இப்பெரியமரத்திலேறென்பதென்ன பேதைமையடி. பேடி! ஓரோமட்டா யென்னுயிர்வாங்குவதற்கோ? அடிபாவி! இம்மரம் என்னிரண்டு கைகளுக்கும் அடங்காதே. நானெப்படி யணைத்தேறுவேன் என்மார்பிடம்போதாதே. காலணைத்தேறும் வல்லமையுமில்லையே. உனக்குக் கொஞ்சமேனுஞ் சீவகாருண்ய மில்லையா? அடி நபுஞ்சகி! நானொரு யுத்திசொல்லுகிறேன் கேள். மச்சநாட்டைநோக்கிச் சற்றுதூரம்போவோமானால், வேண்டியவேலைக்காரராகப் படுவார்கள். அவர்களா லாயுதமெடுப்பிக்கிறேன், இப்படிப்பட்ட மரமேறுகின்றவழக்க மெனக்கில்லை. கடன்வாங்கி யிறைகொடுத்தவரும் மரமேறிக் கைவிடுத்தவருந் தலையெடுக்கப்போகிறதில்லையே. நானுன்கையிலகப்பட்டேன்; வீரமாகாளி! உன்சந்நிதானத்தில்வந்தேன்; இனியென்னுயிராசைவிண்டேன்; ஆகெட்டேனென் றிருகண்ணிலுங் கண்ணீருகுத்தேங்கினான். இவ்வாறிரங்கிப் பின்வாங்கியபாலனை யவன்பாங்கிலிருந்த பேடியானவள் கைகளாற்றாங்கி, மார்போடணைத்து, மகிழ்ச்சியாய்த்தழுவித் தடவிக்கொடுத்து, உள்ளன்புகர

ட்டி, அப்பா! நீ அஞ்சாமலேறி ஆயுதமெடுப்பையானால், உனக்கதிக மங்கள கரமுண்டாமென்று, அவனைத் தேர்க்கொடுங்கைச்சிகரத்திலேற்றி, மரக்கிளை யிற் றூண்டிப்போம்வகையான உபாயஞ்சொல்லிப்போக்கினாள். அப்படிப் பேச்சுப்பிழைமாமல், பின்னாற்பெற்றனுபவிக்கப்போகின்ற பெரும்பயனென்று காத்திருப்பதினால், மச்சகுமாரன் அச்சமில்லாமல் கிளைமேற்றாவி, ஆயுதங்க ளைப் பாண்டவர்கள் மறைத்துவைத்தார்களென்னும்பேச்சு நிச்சயமோ வென் னவோ நிதானிப்போமென்று, கிட்டிக் கிருஷ்ணசலத்தினாற் கட்டியிருந்த கட்டை யவிழ்த்துப் பார்க்கும்போது, உசிதமான கிருட்டின சருப்பமொன்று சீறித் தூரத்தியதைக்கண்டு, மதிமருண்டுமயங்கி, வருந்திநின்று, அடிவஞ்ச கப்பேடி! சண்டைமுகத்திற்கு வாரோனென்ற வென்னை உபாயமாய்க்கூட்டி வந்து, வன்னிமரத்திலேற்றிப் பாம்புக் கிரையாக்கவோ பார்த்தாய். நான் பண்ணியபாவ மென்னவோ! உன்னைச்சாரதியாக வெண்ணிவந்ததோடமோ? இன்னமுமென்னை யென்னசெய்யப்போகின்றாய்? இம்மட்டுமென்னை விட்டு விடடி. எனக்குப் புத்திவந்தது. அடிசதிகாரியென்று மயங்கி யிறங்கிவரத் திரும்பிய உத்தரனியற்கையைப் புத்திசாலியாகிய பேடிகண்டு, இறங்காதை யிறங்காதையென்றுகையமைத்து நீகண்டபாம்பானதுன்னைப்பதறிக்கடியாது. அதற்கு நீ பயப்படாதை. அதிகுணசாலியாகிய வரசகுமாரனே! உனக்குப் பொல்லாங்கு விளைக்கும்படியான பொறாமை யெனக்கில்லை. நீ விறுதாவிற் கவலைப்படுகிறாய். இன்னஞ்சற்றுநேரத்தி லுனக்கு மேலானசுபங் கிட்டப்போ கின்றது, எப்போதுமென்சொ லுனக் கொப்பில்லாவின்பத்தை யுண்டாக்கக் காத்திருக்கின்றது, உத்தரகுமாரனேயென்று அவன் கருத்திலெழுந்த கல வரத்தைக்களைந்தாள். அம்மரத்தின்மேலிருந்த அரசகுமாரன் என்பிராணன் போனாலும்போகட்டும். பேடியறிந்து வருந்திசொன்ன பேச்சைப் பார்ப்போ மென் றுளந்தெளிந்து, பேடியிடத்திற்சிக்கிப் பேய்போலலைவதிலும், பெரும் பாம்பின் வாய்ப்பட்டிறப்பது புண்ணியவசந்தானென்று துணிந்து, பாம்புரு வாய்க்கண்ட படையின்மேற் கைவைத்துக்கலைத்தான். அப்போதொரு பொல்லாங்கு மில்லாதிருந்ததைப்பார்த்து, அடடா! இதிலென்னவோ மகத் துவமிருக்கின்றதென்று, தன்னுக்குள்தானேமகிழ்ந்து, பூமியினின்ற பேடியை நோக்கி, வீணாகிய கிட்ரேத்திற்காளாகிய வித்தைக்காரி! இம்மரப்பொந்தில் வைத்திருக்கும் ஆயுதங்களுடன் மலைப்பாம்பொன்று சுற்றிக்கொண்டிருக்கின் றது. உன்றாலெனக் கென்னதைரிய நேரிட்டாலும், 'பாம்பென்றாற் படையு நடுங்கும்' என்னும் பழமொழி யுண்டன்றோ? அதனால், அளவுபடாமலென் மனம்வருந்தி வாடுகின்றது. அப்படியிருந்தபோதிலும, பாண்டவர்களின்படை களிவ்விடத்தில்வந்த வரலாறும் விடாக்கினியுள்ள பாம்பொன்று சீறிக்கொண் டிருக்குந் தன்மையும் அவர்களில் வன்னிமரத்திலொளித்துவைத்த காரண மும் இவ்விரகசியமுனக்குத்தெரிந்தவகையும் எனக்கொளியாமல் விவரமாகச் சொல்லுவையானால், நானிந்தவாயுதங்களை யெடுத்துக்கொண் டுன்னுடன் கூடவருவேன். இல்லாவிட்டால், இம்மரத்தைவிட்டிறங்கமாட்டேனென்று உத்தரகுமாரனுரைத்து அம்மரத்தி லட்டகாசஞ்செய் தமர்ந்திருந்தான். அம்

மைந்தனறைந்த வார்த்தைகளைப் பேடிகேட்டுச், சிந்தைமகிழ்ந்து, சிரித்து மகிழ்ந்து, தேர்த்தட்டின்மீதினின்று, அடுத்தோரைக்காக்கும் அரசிளஞ்சிங்கமே! பாண்டவர்கட்குரியபடைகளை யிவ்வன்னிமரத்தில் மறைத்துவைத்த போது, இருவர்தவிர மற்றவர்கள் கண்ணுக்குப் பாம்புருவமாய்த் தோன்றக் கடவனவென்று தருமராசனுரைத்த சத்தியவாக்கின்படிச் சருப்பமாகத் தெரிவதைக்கண்டு சஞ்சலப்படாதை. அதுவொரு பெரியவில்லென்றறிந்து கொள்ளக்கடவை. அவ்வில்லின் பிரதாபமும் அதுகிடைத்த முறைமையும் எப்படிப்பட்டதென்னில், சிருட்டிகருத்தாவாகிய பிரமனிடத்தில் ஆயிர வருடம், தக்கனிடத்தில் பதினாயிரவருடம், தேவேந்திரனிடத்தில் ஆயிரவருடம், சந்திரனிடத்தி லைஞ்ஞூறுவருடம், வருணனிடத்தில் நூறுவருடம், மற்றும்பலரிடத்தில் நெடுங்காலமிருந்து இவர்கட்குண்டாகிய பகைகளைக்களைந்து பின்னும் வருணனிடத்தில் வந்துசேர்ந்து பொன்னுமணியும் பூசையாகக்கொண்டு, சிலவருடஞ்சென்ற பின்பு, கடைசியில் அக்கினிதேவனடுத்துக்கேட்க அவனிடத்தி லாசைவைத்து வருணராசன் தீக்கடவுட்குக்கொடுத்தான். இவ்வில்லினால் வெற்றிபெற்றுவரும் அக்கினிதேவன் காண்டாவன தகனகாரணத்தில்அருச்சுனனுக்குக்கொடுத்துத் தனக்குவேண்டியகாரியங்களை முடித்துக்கொண்டான். அதுமுதலிதுவரையிலும் அறுபத்தைந்துவருடமாக அருச்சுனன் கைக்கிசைந்து அநாவிர்தகண்டம் அளாவிர்தகண்டமுதலிய வெண்டிசையும்வென்று வாகைமாலைபுனைந்து தன் எண்ணமனைத்துமுடித்து வெகுவிதவதிசய வெற்றியைப்பெறக் கடவதென்று தேவர்களுரைத்தருளிய வாசீர்வதத்தினால் அசைவற் றிசைபெற்றிருக்குங் காண்டீவப் பேர்கொண்ட வில்லென்றறிய இவ்வில்லுக்கொப்பாகிய வில்லு இந்திரவுலகமுதலிய வெவ்வுலகத்தினுமில்லை. இந்திரநீலம் வைத்திழைத்த வொளிபோற் பிரகாசிக்கும் அதனை நீ நன்றாய் நிதானித்துப்பார்த்தால் உனக்கே செவ்வையாய்த்தெரியும் அல்லாமலும் பஞ்சபூதங்களினாலும் மானிடர்முதலிய பதினெண் கணங்களினாலும் பழுதுபடாத காண்டீவமென்பது அதன்பெயர்; பூருவம் சொர்க்கலோகத்திற் குற்ற துன்பத்தினை நீக்கும்பொருட்டுக் காலகேயநிவாத கவசர்களைவென்று எமபுரத்திற் கனுப்பியதிறமையும் இராயசூயத்திற்காக விசயம்பெற்றுத் திரவியஞ்சேகரித்த முறைமையும் சித்திரசேனன்முதலிய கந்திருவரைக் கண்கலக்கித் துரியோதனனைக் குடும்பத்துடன் கட்டவிழ்த்துமீட்ட கருணையும் காண்டீவமடைந்த பெருமையும் இவ்வில்லின் வலியேயன்றி மற்றொன்றுமன்று; இம்மட்டுமிதுநிற்க, பாற்கடலைக்கடைந்த மத்தாகிய மந்தரகிரிபோன்று கொத்தாகிய மற்றவாயுதங்களுடன் கலந்து வெவ்விய கதையானது வீமசேனனுக்குரியது மற்றுமுள்ள வாயுதங்களியாவும் தருமராசன் நகுலன் சகாதேவன் என்பவர்களுடைய வாமென்று பேடிசொல்ல, வெற்றிமேற்கொண்ட விராடகுமாரன் தன்மனக் கலக்கந்தெளிந்து சகலபடைகளையுங் கண்களாரக்கண்டு சொல்லுகின்றான். கடையேனாகிய எனக்கு இவற்றையெல்லாங் காண்பித்தென்னை யாளாக்கிவிட்ட காரிகையே! இட்டதெய்வம் போலென்னைத் தடுத்தாட்கொண்ட ஏந்திழையே! மகாபுண்ணியவதியாகிய குந்திதேவியீன்ற மைக்

தனைவரும் தத்தமுயிர்போற்கருதிய வாயுதங்களையொருநாளும் பிரியார்களே! அப்படிப்பட்ட மகாபுருஷர்கள் இவ்வன்னிமரத்தில் மறைத்துக் குறிப்பிட்டு வைக்கவேண்டிய அவசரமென்னவோ இப்பொழுதவர்களெங்கிருக்கின்றார்களோ எப்படி யானார்களோ? அதையெனக்குணர்த்தவேண்டுமே; பாக்கியசாலி! என்று உத்தரன்கேட்க, வாசநிறைந்த மலர்போற்சிறந்த கருணை ததும்பும் புங்கடைக் கண்ணிணையுடைய பேடியானவள் முகமலர்ந்து புன்னகைபுரிந்து அகமகிழ்ந்து அன்புள்ள வாசனையணிந்த நராந்தகனுடைய வஞ்சகத்திற்குள்ளாகச்சொக்கட்டாடித் தோற்றுச் சோர்வடைந்தவராய்ப் பன்னிரண்டாண்டு வனவாசமும் ஓராண்டு மஞ்ஞாதவாசமும் போக்குவதற் குடன்பட்டுச்சென்று காட்டிற்கழிக்கு நாட்களைக்கழித்து நாட்டிலிருக்கு நாளைநினைத்து யாவராலுந் தங்களை யின்னரென் றறியாதிருக்கும்படித் தங்களாயுதங்களை இம்மரத்தில் மறைத்துவிட்டு வேடமாறி வேற்றுருக்கொண்டு எவரும் ஐயப்பாடடையா வண்ணம் அவரவர்க்குத் தக்கதொழிலை மேற்கொண்டனர். இப்பொழுதவர்களெவ்விடத்தி லிருக்கின்றார்களோ எனக்குத்தெரியாதென்றான், திங்கள்குலஞ்சிறக்கப்பிறந்த வில்லிவிசயன் மறுவில்லாதமச்சருமாரன்பெருந்தகைப் பேடிபேசிய வார்த்தையைக் கேட்டுப் பெருமூச்செறிந்து உடல்பதைத்து உயிர்துடிதுடித்து ஒருவாக்கியம் புகன்றான். ஐயோ தெய்வமே! சத்தியந்தவறாத சாதுக்கள் அதிதுட்டராகிய சுயோதனனதியரா லிப்பாடுபடத் தக்கவரோ? பாவமேலிட்டதோ? நீதிவழுவிக்கெட்டதோ? கொடியோர்களிக்கப் பாண்டவர்கள் துன்புற்றுத் தேம்பிவாடச்செய்தது தீவினையோ மெய்த்தவத்தையும் மேலான தருமத்தையும் சத்தியத்தையும் இவ்வுலகிலுள்ளோர்கள் கொண்டாடுகின்றார்களே; அந்தோ! இனியெப்படி தருமத்தை நம்பலாம், அசத்தியமேலிட்டு அக்கிரமிகளுக்குத் துணைசெய்யுமானல் சத்தியத்தை நம்பிச் சங்கடப்படுவதுந் தகுதியோ; தருமமே சத்தியம் சத்தியமேநித்தியமென்றிருந்த தருமராசனும் தோள்வலியைத் துணையாய்க்கொண்ட வீமசேனனும், திறம்பெற்ற வில்லுடைய விசயனும், இரட்டையரும் பெருமையாகவாழ்ந்த புண்ணியர்கள். வாசமணக்கு மலர்க்குழலினையுடைய பாஞ்சாலியாருடன் எவ்விடத்திற் றுன்பமனுபவிக்கின்றார்களோ எத்தொழிற்செல்கின்றார்களோ! ஐயோ! பற்பலயாகங்கள் செய்து கோடசமதானமும் பண்ணி, மேலாகிய வாழ்வனுபவித்து மும்மைப்புவனமும் வெற்றிபெற்றிருந்தாலும் அவ்வாழ்வைக்கீழ்ப்படுத்தித் தாழ்வைமேற்படுத்தி நல்லோரைப் பொல்லாராக்கிப் பொல்லரை நல்லோராக்கி வீரர்களை விதவையாக்கி விதவைகளை வீரர்களாக்கி சாதியீனரைத் தனவானாக்கித் தனவான்களைத் தரித்திரராக்கிப் புனிதமுடையபேர்க்குப் பிணியைவிளைத்துப் பொய்யரை மெய்யராக்கி மெய்யரைப் பொய்யராக்கி இவ்வாறு தலைகீழாகப்பண்ணுவதோ, ஊழ்வினைப்பயனென் றுருகித் தன்மனங்கருகிக் கண்ணீர் பெருகியோடக்கசிந்து பெருமூச்செறிந்து தெய்வமே! பாண்டவர்கள் இப்போ தெங்கிருக்கின்றார்களோ! நல்லவர்கட்குத் தீவினைவிளையும் காரணமென்னவோ என்று உயிர்வேதனையுட னேக்கங்கொண்ட உத்தரகுமாரனுடைய உண்மையையும் உறுதியையும் பேடிதெரிந்துகொண்டு உள்ளமகிழ்ந்து உரைக்கத் தொடங்கினள்.

பள்ளநீர்க்கயங்கடோறும் பால்பெருகியோடும் மச்சநாட்டிறைவன் மைந்தனே! நிந்தையில்லாப் பாண்டவர்களைக்குறித்து நைந்துவருந்தாதை, அவர்களிப்போதுன் னாட்டிலும் நகரிலும் படைவீட்டிலு மிருக்கின்றனர்களென்று சொன்னாள். அவள் வார்த்தையைக்கேட்ட உத்தரகுமாரன் சித்தம்பிரமித்து அம்மம்மா என்னாட்டிலும் வீட்டிலு மெப்படியிருக்கின்றனர். அவ்விந்தையை யெனக்கு விவரமாகச்சொல்லுந் தாயேயென்று உத்தரன்கேட்கப் பேடி சொல்லுகின்றாள். அப்பா! முதன்மையான குலத்தையும முடிவில்லாத நலத்தையுமுடையவராய் விராடராசனுக்கருநாசனத்திலிருந்து திவ்விய மங்களவிக்கிரகமாய்விளங்கி விவகாரதரும நீதிகளைவிளம்பிக் கங்கபட்டனென்னுங் கருணையாளனே முரசக்கொடிபடைத்த தருமராசன், நாவிற்கினிய அறுசுவைப்பதார்த்தத்துடன் அன்னஞ்சமைக்கும்படியாக உங்கள் மடைப்பள்ளியிலிருக்கும் பலாயனனென்னுஞ்சூயம்பாகிதான் வீமசேனன், எங்கும்பிரசித்தமாகிய குதிரைக்கூட்டங்களுக் கெசமானனாகிய தாமக்கிரந்திதான் நகுலராசன், உங்கள் பசுநிரைகட்குத் தலைவனெனவந்த தந்திரபாலன் சகாதேவன், உன்தாயாகிய சுதேக்கணையினிடத்திற் பணிப்பெண்ணாயமைந்த விரதசாரணியே திருமகட்கிணையாகிய பாஞ்சாலி, உன்தங்கையாகிய உத்தரைக்கு மத்தளதாளவகையுடன் திந்தித்திமிதாவென நடனம் பழக்கிக்கொண்டிருந்த பிருகந்நளையென்னும்பேர்கொண்ட பேடியாகிய நானே அருச்சுனன்; அல்லாமலும் உன் அம்மானாகிய கீசகன் பாஞ்சாலிமேற்காதல்கொண்டு துன்மார்க்க நினைத்தமையால் அவனை வசந்தமண்டபச்சோலையிலடித்து அவன் தம்பிமார்களையுமுடித்துக் கந்திருவர்மேற்பழிவைத்தவன் வீமசேனனென்று தெரிந்துகொள்; வீமன் கொன்றும்போட்டுக் கந்திருவர்மேற் பழிசுமத்திய தென்னெனின் நாங்கள் கழிக்கவந்த அஞ்ஞாதவாசத்திற்கிடையூறுவருமென்றஞ்சி மந்திரத்தால் தடையுண்டிருந்த மாநாகமேபோ லடங்கியிருந்து தவணைநாளைக் கழித்துவிட்டோம். நாங்கள்கழிக்கவேண்டிய பதின்மூன்றாண்டும் நேற்றோடே தீர்ந்துபோய்விட்டன, இனிமேலெங்கட் கியாதொரு பயமுமில்லையென்றுசொல்ல உத்தரகுமாரன்கேட்டு அதிசயத்துடன்புகழ்ந்து இது நல்லகாலமாயிருப்பதால், இவ்வேளையிலின்னஞ்சில இரகசியங்களை வெளியாக்கிக்கொள்ளவேண்டுமென்றெவிரும்பி ஒமோனமாய்த்துணிந்து ஐயா தேவர்கள்கொண்டாடாநின்ற பேரழகும் சிவபெருமானளித்த வருளாண்மையும் சிலைவிசயத் திறமும்பெற்ற தீரவீரனாகிய வருச்சுனன் நானே யென்று நீரே சொன்னசொல்லை நானம்பமாட்டேன். நீரே நானென்று திரமாகச்சொல்லுவீரேயானால் உமக்கெத்தனை பெயர் கிடைத்திருக்கின்றன; அப்பெயர்கள் வந்ததற்குக் காரணமென்ன? நீரிதுவரையிலும் பெற்ற பெருமைகளென்ன? அவற்றை என்மனக் கலக்கந்தீரச் சொல்லிமுடித்தால் நானுனக் கடிமையாவேனென்பதற் கியாதொரு தடையுமிராதென்று உத்தரகுமாரனுரைக்கச் சித்திரப்பாவைபோ லிருந்துகேட்ட விசயன் சிந்தைகளித்துச் சொல்லத்தொடங்கினான்.

அருச்சுனனுக்குற்றபெயரும், அப்பெயர்வந்தவரலாறும்.

வெற்றிபெற்ற விராடபுத்திரனாகிய உத்தரகுமாரனே! எனக்குக் கிடைத்திருக்கின்றபெயர் பதினொன்று. அவற்றின் விவரமென்னையெனிற் பற்குனன் பார்த்தனன் கிரீடி தனஞ்சயன் விசயன் சுவேதவாகனன் வீபற்சு சவ்வியசாசி கிட்டினன் அருச்சுனன் கிருட்டினன் என இவ்வாறமைந்தஎன்பெயரைப்பெரியோர்முதலியயாவரும் பெருமையாகவே கொண்டாடிப் பேசுவர். இப்பெயர் வந்ததற்குக் காரணம் யாதெனிற் பங்குனியுத்தரத்திற் பிறந்தமையால் பற்குனனென்றும், என்னையீன்ற அன்னைதன்பெயர் பிருதையாதலிற் பிருதை சம்பந்தம் பார்த்தனென்றும், தேவலோகத்திற்புகுந்து இந்திரன்கொடுத்த கிரீடம்புனைந்து சிங்காதனத்தில் வீற்றிருந்தமையாற் கிரீடியென்றும், இராசசூயமியற்றியவந்நாளில் உத்தரகுரு கண்டத்துச்சென்று சித்தர்கள் தேவர்கள் கந்திருவர்முதலிய பேர்களைவென்று எண்ணிறந்தபொருட்குவையை மாமேருபோற் குவித்தமையான் தனஞ்சயனென்றும், மும்மைப்புவனத்துமென்னை வெற்றிகொள்பவரின்றித் திசைமுற்றும்யானொருவனேவென்றுவிசயங்கொண்டமையால் விசயனென்றும், பரமசிவத்தின் வெள்ளிவிடைபோல் விளங்கும் நான்கு வெள்ளைப்புரவிகள்பூட்டிய தேரோட்டுகின்றமையாற் சுவேத்வாகனனென்றும், என்னைக்கண்டவேந்தர் யாவரும் மண்பொன் பெண்ணாசைகளைவிட்டுக் கண்ணைப்பிசைந்து கலங்கிப்பின்னிட்டு விண்ணாடுசேரவிடுக்குந்திறத்தால் வீபற்சென்றும் இடக்கை வலக்கை இரண்டினாலும் பாணந்தொடுக்குந்திறத்தால்சவ்வியசாசியென்றும், என்னையும்என்வில்லையும் என்தமையனையும் இகழ்ந்துபேசுகின்றவர்கள் மட்டற்ற வல்லமைபெற்ற. வானவராயினும் மன்னவராயினும் அவர்தலையை நட்டப்படுத்திநாசஞ்செய்வேனென்று சபதங்கொண்டிருக்கின்றமையால் கிட்டினனென்றும், யான் மரகதமணிபோல் நிறம்பெற்ற வுடல்கொண்டிருத்தலால் அருச்சுனனென்றும், காண்டாவன தகனகாலத்தில் மாதவனும் யானும் வேற்றுமையின்றி மருவியவாற்றால் கிருட்டினனென்றும், இத்தன்மையாயிசைந்த பதினொருபெயரும் தேவர்கள்முதலிய யாவராலும் வந்தனவென்றறிந்து ஐயா, உத்தரகுமாரனே பூர்வம் திரிபுர நீறெழச்சிரித்தருளிய சிவபெருமான் அநுக்கிரகஞ்செய்த திவ்வியாத்திரங்களும் பிரமன் விட்டுணு இந்திரன்முதலிய தேவர்களளித்த கூரிய பாணங்களும் பெற்றிருக்கின்றேன், அவைகளைநாங்கள் அஞ்ஞாதவாசஞ்செய்ய எத்தனித்தபோது இவ்வன்னிமரப்பொந்தில் வைத்திருக்கின்றோம். இப்போது உனக்குப் பாம்புருவமாய்க் கரணுகின்ற காண்டீவமும் அட்சயதூணியும் அக்கினிபகவானாற்கிடைத்தன. முப்பத்துமுக்கோடி தேவர்களும் இந்திரனுங் கொண்டாடிக் கொடுத்த தேவதத்தத்துடன் பதினாயிரங்குதிரைபூட்டிய இந்திரவிமானத்தை மாதலியோட்டிய காலத்தில் அதன்மேலாரோகணித்துத் தோயமாபுரத்திற்சென்று மூன்று கோடிநிவாதகவசர்களைக்கொன்று வெற்றிகொண்டு தேவமாதர்களாலத்தியெடுக்கவும், புட்பமழை பொழிந்து புகழ்ந்துவாழ்த்தவும் பிரதாபம்பெற்றேன். இரணியபுரவாசிகள் அறுபதினாயிரம்பேர் காலகேயர்களையும்

அவர்கட்குதவியான பதினாயிரமரக்கரையும் பாசுபதக்கணையால் மாய்த்து யான் மந்தாரமாலைபுனைந்து வரிசைபெற்றுப் பூலோகத்திற்குவந்த மேன்மையை நீ கேட்டறியாய்போலு மிருக்கின்றது. நல்லது உத்தரகுமாரனே. ஆயிரம் பேச்சென்னத்திற்கு? ஒருவார்த்தை சொல்லுகின்றேன். நீ யோசிக்கத்தக்கது சத்துருவைமுடிப்பதும் தாகத்திற்குச்சலங்குடிப்பதும் இவ்விரண்டும் எனக்கு அதிசொற்பமான வேலையன்றி வருத்தமிராது ஆதலால் நானருச்சுனனென்பதற்கு ஐயப்பாடில்லை, இப்போது நமக்குநேராகிய சேனைகளைக் கண் காணுமலோட வடிக்கிறேன். கன்றுகளுடன் கலந்த பசுநிரைகளை மீட்கிறேன், நீ இனித் தாமதஞ்செய்யாமற் புறப்படென்றுசொன்னான். அம்மொழிகேட்ட உத்தரன் ஒருவாறுதேறி மகிழ்சிறந்து இனிநமக்குப் பயமில்லையென்று தானேறியிருந்த விருட்சத்தைவிட்டிறங்கிஇரதத்தின்மேல் இளஞ்சூரியனைப் பனிமூடியவாறுபோல் பேடியுருவமமைந்த பெருமானைக்கண்டு நெடுநாளாகத்தேடிய தேவைப்பணியும் அன்பர்போற்பணிந்து துன்பமுந்துயருந் தொடராச் சொருபனுடையதிருவடியைச் சிரத்திலுங்கண்களிலும் முகத்திலுஞ்சேர்த்து முத்தமிட்டுத் தன்னைத்தானே மறந்து தனக்குத்தானே திடுக்கிட்டுப்பயந்து இனிய வசனமொழிந்து நயந்துநின்றான். அக்காலையில் பார்த்தன் விளாவிற் றேர்விட்டிழிந்து பிரியாப்பிரியத்துடன் முகமலர்ந்து உத்தரகுமாரனை உடல் குழையவணைத்து ஐயனே! இன்னமுனக்குப் பயமுண்டாயிருக்கின்றதோ? என்னளவில் ஐயமுண்டோ? நீயாதொன்றுக்கும் அஞ்சாதை, தீதில்லாத வெற்றிபெற்று வாழ்வாயென்று உறுதிவார்த்தைக ளுரைத்துத்தேற்றினான். அதனாலுத்தரகுமாரன் களித்து முகமலர்ந்து சிவந்தகைகளைச் சிரத்திற்குவித்துக் கண்ணீர்பெருகக் கசிந்துள்ளமுருகிப் பாற்கடல்போற் கீர்த்திபடைத்த பார்த்தனே தேவரீரின்னதொன் றறியாமல் கன்றுபின்றுவென்று ஏழைமதியாற்பிதற்றிய அபசாரங்களைப் பெரிய மூட்டையாகக் கட்டிக்கொண்டேன். நான் மகாபாவியானேன், சிறியேன்செய்த பிழையைப்பொறுத்து அருள்சுரந்தாளவேண்டும்அத்தனே என்னிட்டமாகிய இறைவனேஎன்று பற்பலவசனங் களினாற் பரதவித்துக்கூறி மேலுஞ் சொல்லுகின்றான். கருங்கடலகடுகிழிய ஒருங்குடனோடிக் கலக்கும் கங்கைநீர்வளம்பெருகிய குருநாட்டரசே! கேட்டருளும், தேவரீர் திருவடிபெயர்த்தருளிய சாரதித்தொழில் எமக்குக்கிடைக்குமா? சன்மாந்தரபுண்ணிய பலன் எண்ணியவண்ணங் கைகூட்டுமாவென்று வெகுநாளாகக் கவலைகொண்டு மனநண்ணியிருந்தேன். அண்ணலே மெத்தப் பிரயாசப்பட்டுத் தான்கற்றவித்தையைப் புகழ்ந்து பேசுகிறவர்களைப்போற் பேதப்படாதென் றிருந்தாலும் தமது கருணை என்னைப் பேசச்செய்கின்றது. அருமையறியும் பெருமானிடத்திற் பேசாமல் பின்னை யாரிடத்திற் பேசப் போகிறேன். அரவாபரணம்பூண்ட பெருந்தகைக்கு வேதப்பரிதூண்டிய பிரமனுல்விதித்திருக்கின்றசாரதி நூல்களெல்லாம்பார்த்து எல்லா வல்லமையிலுங் கைதேர்ந்திருக்கின்றேன், கருணைக்கண்ணையுடைய காண்டீவதரனேயென்று சொல்லிப்பணிந்தான். அவ்விராடகுமாரனை அருச்சுனன்தழுவியணைத்துஎன்னிதயத்திற்குவந்த இளஞ்சிங்கமே நீயுநானும் நெருங்கிய இட்டமானோம்.

இனி நெருப்புங்காற்றுஞ் சேர்ந்த பின்பு சத்துருவாகியகாடு நீறுபடாதிருக்கக் கூடாது இன்னம் யோசனைக்கிடங்கொடாது விரைவிலேறி இம்மரத்திலொளித்து வைத்திருக்கும் வில்லும் பாணமும் எடுத்துவாவென்று விசயன் விளம்பினன் உடனே உத்தரகுமாரன் தடையில்லாமல் ஏறிஉத்தரவின்படி தேவதத்தமும் காண்டீவமும் அட்சயதூணியும் எடுத்துக்கொண்டு மற்றவாயுதங்களை முன்போல்வைத்து யான்தோலாற்கட்டி மறைத்துவிட்டு மரத்தைவிட்டிழிந்து அருச்சுனனைத்தொழுது அவர்கையிற் கொடுத்துத்தனக்குத் சாரதித்தொழில்கிடைத்த சந்தோடத்தால் திடீரென்று தேரிற்குதித்துக் குதிரைக்கடிவாளங்களைக் கையிற்கொண்டான். அப்பொழுது அருச்சுனன் இந்திரன் முதலிய தேவர்களையும் ஊர்வசியையுஞ் சிந்தித்துத் தந்தைதாய் தமையன் முதலானவர்களையும் வந்தித்துத் தர்மதேவதையையும்போற்றினன்; அவ்வேளையில் பாண்டுமகனாகியபார்த்தன் பேடியுருவ நீங்கி ஆதிபுருட ரூபலாவண்ணியவடிவமானன், ஆகாயத்திலுள்ள அமரரியாவரும் வாழ்த்தினர்கள் அருச்சுனனைக்கண்ட ஆடவர்யாவரும்பெண்மையை அவாவுந்தன்மையால் அருகிலிருந்த மச்சகுமாரன் இச்சைமேற்கொண்டான். கணத்திற்குமுன்னேஇருள் மூடியவாறுபோற் பேடியாயிருந்து இப்போது பச்சைமணியின் பிரகாசம்வீசிச் சொலிப்பதுபோற் றுலங்கியதன்மை யெவ்வாறிருந்ததென்னில் இந்திரசாலங் கற்றவர்கள் கணத்திற்குக்கணம் வெவ்வேறு வடிவங்காட்டுகின்ற வித்தைபோன்றிருந்தது. அருச்சுனனது தேககாந்தியைக்கண்ட உத்தரகுமாரன் மின்னலுக்கெதிரில் விழித்தவர்கண்போற் கூசிக்கவிழ்ந்து, இரண்டுகையினலுஞ் சேர்த்திறுகத்தழுவி என்னையனே! உன் மாசற்ற திருமேனிக்கு மறுவுவந்த காரணம் யாதோவென்று வணங்கிக்கேட்க, விசயன்சொல்லுகின்றான். அரசச்செல்வமே! தேவர்கட்குப் பகையாகிய காலகேயநிவாதகவசர்களை வெற்றிகொண்டு வெள்ளையானைமேற் பவனிவந்து, அமுதபோசனமுண்டு, இந்திராசனத்திலிருந்த எனக்குச் சந்தோடமுண்டாக்கும்படித் தேவேந்திரன் நினைத்து, அரம்பை ஊர்வசி மேனகை திலோத்தமை இவர்களால் நாட்டியமாடுவித்தான். அவர்களாடிய ஆட்டிலும் பாடியபாட்டிலும் சிறந்த முகநயமுள்ள ஊர்வசியை நான் மெச்சிச் சிரக்கம்பஞ்செய்தேன். அங்கிருந்த தேவர்முதலிய யாவரும் ஊர்வசியின்று செவ்வையாய் நடித்தனளென்று கொண்டாடினர். அற்றையிரவில் எனக்கமைத்த அரண்மனையிற்போயிருந்தேன். நள்ளிரவில், இவ்வூர்வசி என்னிடத்திற்குவந்தாள். எங்கள் பாட்டனை புரூரவச்சக்கரவர்த்தி பத்தினியென்று மிகப்பயந்து நானெழுந்து அவள் பாதத்தில்விழுந்துகின்றேன். கொழுந்துவிட்டெரியுஞ் சுடர்போற்கொதித்து நானெண்ணிவந்த எண்ணத்தைப் பின்னம்பண்ணியபடியால் மண்ணினில் வாழு மனுக்களில் நீ பேடியாகவென்று சபித்துப்போயினள். பொழுதுவிடிந்த பின்பு அவ்வுருவத்தோடு வெளியேவருவதற்கு நாணங்கொண்டிருந்த என்னை இந்திரன்கண்டு, விசனமடைந்து நடந்தசெய்தியறிந்துகொண்டு ஊர்வசியினிடத்திற்குச்சென்றுஅவட்குவேண்டியஉறுதிமொழிபுகன்று என்சாப நிவர்த்திசெய்தான்; அச்சாபம் நானினைத்தபோதுதொடர்ந்திருக்கவும் நானினையாத

போது என்னைவிட்டு நீங்கியிருக்கவும் அனுக்கிரகித்தனள். அவ்வூர்வசி யனுக்கிரகத்தால், உன்னுடையவிராடபுரத்தில்ஓராண்டளவும் பேடியாயிருந்து அஞ்ஞாதவாசம் பண்ணும்படி நேரிட்டது. அப்பனே! எனக்குப் பேடியுருவம் அமைந்த வரலாறிதுவென்றுரைத்து இப்பால் அருச்சுனன் தன்தந்தையாகிய இந்திரனையும் வமிசநாயகனாகிய சந்திரனையும் துரோபதியைப்பெற்றவனாகிய அக்கினிதேவனையுஞ் சிந்தையிற்றுதித்து வந்தனைபுரிந்து தனக்குவேண்டிய அணிமணிப்பணிகளைக்குறித்து விரும்பினான். அவ்வேளையில் இந்திரன் தன் மைந்தன் பழையவடிவங்கொள்ளப் போவதுகண்டு மகிழ்ந்து கதிர்மணிக் குண்டலம் கனகமகுடம் நவமணியிழைத்த இரத்தினாபரணங்கள் ஒப்புவமையில்லா முப்புரிநூலுடன் கற்பகமாலையுங் கந்தமுந்தந்தான். அவற்றையெல்லாம் அருச்சுனன் பெற்றுக்கொண்டு, ஊர்வசியன்னையை உள்ளத்தில்நினைத்துப் பஞ்சாயுதம்போலும், செஞ்சிலைமதன்போலும், அஞ்சனமேனி யழகனானான். இவ்வாறு கட்டழகமைந்த காண்டீவனென்னுங்காளை அக்கினிதேவனாகிய அனுமக்கொடியும் அசுவகதியும்வரும்படிச்செய்துக்கொண்டு சகலாபரணமுந்தரித்துப் பூரணவலங்காரத்துடனிருந்து, தானேறிய தேரில்நாட்டிய சிங்கக்கொடியைமாற்றி, அண்டமுகடதிர ஆகாயமார்க்கமாய்வந்த அனுமக்கொடியை உத்தரகுமாரனுடைய சிங்கக்கொடி கண்டு துவண்டு நாமிவ்வனுமக்கொடிக்குச் சரியாகோம் இவ்வனுமான் இராமராவணயுத்தத்திற் சங்கை தீர்ந்திருக்கிறவனென்று தைரியம்விட்டு சந்துபார்த்து நுழைந்துகொண்டதோ எனச்சாதுரியவான்கள் சாற்றும்படியாய் அதனை வன்னிமரப்பொந்தில் மறைத்துவைத்தார்கள். இப்பால் அருச்சுனனும் உத்தரகுமாரனும்ஒருவரையொருவர்நோக்கிக்களித்து, அவ்விடத்திருந்த காளியைக்கைதொழுதெழுந்து, இரதத்தின்மேலேறி, ஆகாயமளாவித்தழைந்தவன்னிமரத்தைவலம்வந்துதொழுது, விசயகாண்டீவவில்லைநிறுத்தி, வாசமலர்மாலைசாத்திப் பூசைபுரிந்து, நாணேற்றி டங்காரஞ்செய்தான். அந்நாணத்தொனியினால் உலகெல்லாம்பெயரும் ஊழிகாலம்போ லோசையெழுந்து எங்குநெருங்கிப் பொங்குகடல்போன்ற சேனைகளெல்லாம் நின்றநிலையில் நிலைதவறிப்போய், யானைவீரர் அசுவவீரர் அழகியதேரோள் அணிபடைக்காலாள் அதிரத மகாரத சமரதர்முதலிய யாவரும் பேரிடிமுழக்கங்கேட்ட பெரும்பாம்பினம்போல், தலையெடுக்கமாட்டாமல், தட்டழிந்தார்கள். அக்காலையில், கற்பகமாலையணிந்த மற்புயகோலாகல விற்பனவிவேக விதரணசாலியாகிய வீபற்சு யாவருந்திடுக்கிட்டுக்கண் கலங்கும்படியாகத் தேவதத்தத்தை யெடுத்துத் தன் செய்யவாயில்வைத்தூதினான். அவன்செய்த சங்கத்தொனியால் மகமேருமுதலாகிய மலைகளும் அதிர்ந்து, கடலும் கீழ்மேலாகக்குழம்பிச் சப்தமேகமும்பிதிர்ந்து, அட்டநாகமும்பிதிர்ந்து, நட்சத்திரங்களும் உதிர்ந்து, அண்ட முகடு விண்டு நொறுங்கிப் போயின. இவ்வகைச் சங்கத்தொனியினாலும் வில்லொலியாலும் நாணோசையாலும் தேரிற்கட்டிய புரவிகளும்பதைக்கச் சாரதியாகிய உத்தரகுமாரனும் சங்கடப்பட்டுத் தலைநட்டுக்கொண்டு பிடித்த கடிவாளத்தையும்விட்டு கண் பொறிகலங்கிச் செவிடுபட்டு உணர்வுகெட்டு ஒடுங்கிவீழ்ந்தான். இவ்வாறு

நடுங்கி நிலத்திற்சாய்ந்த உத்தரகுமாரனைக் காண்டாவனதகன காண்டீவன் கண்டு தன் நீண்டகைகளாலெடுத்தணைத்து ஆலவட்டம் சாமரைகளினால் வீசி ஆயாசந்தணித்து வியர்வுபோக்கி அபர்வுநீக்கிப் பனிநீர்தெளித்து, வெந்நீரளித்துக் களையாற்றினான். களைதீர்ந்தெழுந்து கண்விழித்துப்பார்த்த உத்தரகுமாரன் நடுக்கமுங்கவலையு நீங்காதவனாய்க் கும்மென்று காதடைபட்டு ஈனசுரமாய்ப்பேசினான். அப்பிள்ளையை இரக்கமாகப்பார்த்துப் பொருப்பைக் குடைந்து கடைந்துபொருத்திய புயப்பூரிப் படைத்த விராடராசனளித்த புனிதகுமாரனே! நான்செய்த சங்கத்தொனியினால், ஐம்புலன்களுமயங்கி அவசமடைந்த உன்பேதைத்தனம் யாதோவென்று அருச்சுனன்கேட்டான். ஐயா! சப்தசமுத்திரங்களும்பொங்கி நெருங்கிவழிந்து உலகழியுஞ் சர்வசங் கார ஊழிகாலத்தோசையென்பது தேவரீர் முழக்கிய சங்கோசையைப்பார்க் கிலும் பெரிதாமோ? எல்லாவுலகிலும் எழும் பற்பலவோசைகளியாவும் இப் போதிவ்விடத்தில் உமது வில்லாலுண்டாகிய விபரீதத்தைப்போலும் விந்தை யைப்போலும் விளைக்குமோ? இத்தன்மையாகிய பேரோசையைக்கேட்ட தேவர்களினும் திக்குப்பாலர்களிலும் யார்தான் பயந்து நடுங்காமற்போவார் கள்? அப்படியிருக்க, உமது கால்மாட்டிலிருந்த நான் பயப்பட்டுவிழுந்தது பெரிதன்றே, அம்மட்டும் உயிர்தப்பிப்பிழைத்துத் தேவரீருடன் பேசப்புறப் பட்ட நான் மிகவுந் தயிரியசாலியன்றோ? முத்தொழில்நடத்துகின்ற மும் மைத்தேவருநடுங்கி முழக்கத்திற்குச் சித்தப்பிரமைகொண்டு தேறியவென்னை ஆதரித்தருளும். அருச்சுனராசனே! இனி நானென்னசொல்லப்போகின் றேன் என்றிரங்கிய விராடராசகுமாரனை அன்புடனேக்கித், தோளுடன் மார்பு தோயத்தழுவி, மாதவமுனிவரால் தான்கற்ற மயக்கந்தீரு மந்திரத்தை உபதேசித்து, ஓ உத்தரகுமாரனே! உனக்குங் குதிரைகளுக்கும் இனியொரு நாளும்பயமில்லை. ஈரேழுலகுங் குலுங்கினாலும், ஓரேழ்கடலுங்கலங்கினாலும், என்றென்றைக்குங் கவலையில்லாதிருக்கலாம். இப்பொழுது, விரைவில் தேர் செலுத்தென்று தனஞ்சயன் சொன்னான். அச்சொல்லைக்கேட்ட மச்சராசன் மதலை அருச்சுனன்தனக்குக்கிடைத்த ஆசையினால் அன்புமேலிட்டு, கையிற் கடிவாளம்பிடித்து, உச்சவான்கதிர்த் தேரிற்பூட்டிய பச்சைமாவேழையுமோட் டிய அருணனைப்போலும், அக்குதிரைகளைப் படபடவென்று செலுத்தினான். அப்பொழுது, பனியினால் மறையப்பட்டு ஒளிமழுங்கி உடலொடுங்கிய ஆயிரங் கிரணங்களையுடையமார்த்தாண்டன் உதயமானதன்மைபோல், பேடியுருவால் மறைந்து பெருமைகுறைந்திருந்த அருச்சுனன் பின்னழகும் முன்னழகும் பிர காசிக்கச்சிறந்து, நெடுஞ்சிலையுங்கொடுங்கணையுங்கைப்பிடித்துக்கௌரவமுதல் வன் சேனையிலுள்ள நிருபர்களியாவரும் நடுநடுங்கி நாவறண்டு கிடுகிடுத்துப் போகும்படி அவர்களுக்கு நேராகத்தோன்றினான்.

இவ்வகையாக, அழகியதேர்மேல்வந்த அனுமக்கொடியுடையானை வீட் டுமர்முதலாகிய வீரர்களுங்கண்டு, வேறுவேறெண்ணங்கொண்டு, விருதுமுத லிய வீரச்சின்னமும் சோரநின்றனர். அவ்வேளையில், நான்மறைக்கொடி படைத்த துரோணர் பாம்புக்கொடியும் நந்தியாவர்த்தமாலையுமுடைய துரி

யோதன மகாராசனைப்பார்த்து வணங்காமுடிபெற்ற மகிபனே! இடைபெற்ற விசயன் சர்வசங்காரகாலக் கடவுள்போற் சலனமில்லாமல் வருகின்றான், பா ரென்று சொல்லத்தொடங்கினர். இதோ நமக்கெதிரில் ஓடிவருகின்ற தேர் வேகத்தினால் இப்பூமியைத்தாங்கும் பணமகுடமுடைய ஆதிசேடன் என்ன பாடுபடுகின்றானோ? அத்தேரிலிருக்கிற மகாபுருடன் கைப்பிடித்தவில்லின் நாணோசையால் தேவலோகந்தத்தளியாதிருக்குமோ, போர்முகத்தின் முழக் குஞ் சங்கத்தைப்பூரித்த பேரொலி எட்டுத்திசையுஞ் செவிடுபடுத்தாமல் விட்டுவிடுமோ, இப்படியிராவிட்டால் ஒற்றைத்தேரும் ஒற்றைவில்லுங்கொ ண்டு ஒன்றுக்கும் அஞ்சாமல்தனிமையாய்வருவானோ? இவ்விடத்திலிருப்பவர் இன்னாரின்னாரென் றறியாமலும் நன்மை தீமைகளை நாடாமலும் நம்மோடெ திர்த்து யுத்தஞ்செய்யவருகின்றவன் அசகாய சூரனென்றுந் திடதைரிய தேக காத்திர முள்ளவனென்றுந் தேர்ந்தாயோ, எப்போதும் யாதொரு காரியங் களையும் செவ்வையாய்ப்பார்த்து ஆராயவேண்டியதே ஐயா துரியோதனராச னே! சோதிப்பிரகாச குண்டலம் சுடர்விடுகிர்மணி மகுடமும் உதயகிரியி லெழுகிற சூரியன்போற்றுலங்கும்படி வருகின்றவன் இந்திரன் மைந்தனென்ப தற்கு ஐயமேயில்லை. அதற்குத் திருட்டாந்த மென்னவென்றால் சந்திரனைப் பாதியாகப்பிளந்து வைத்ததையொத்த கோரதந்தம்பெற்ற கொடிய இராக் கதப்படைகளை அடியோடு மடியப்படுத்திய அநுமக்கொடிக் காட்சியே சாட் சியாயிருக்கின்றது. அல்லாமலும் அவன் வருகின்றதிறத்தை நோக்குமிடத் தில் வெற்றிபெற்ற வில்லைப்பற்றி ஈரேழுலகையும் இன்றேவென்று செல்லுவே னென்று இறுமாப்படைந்து யாவரையும் ஒரு பொருளாகவெண்ணிப்பாராமல் யானைகளை நோக்கித்தாவும் ஆண்சிங்கமேபோலும் வந்துவிட்டான் மேல்நட க்கவேண்டியதென்ன இனிச் சும்மாவிருப்பது காரியமன்று; நம்சேனைகளை வீரியங்கெடச்செய்து சூரியனுக்கெதிர்ப்பட்ட பனிபோலோடப் பண்ணுவான் இதல்லாமலும் ஆழ்ந்தபேரறிவுடைய அருச்சுனன் இதுவரையிலும் வாழ்ந்த நமக்கெதிரில்வந்து வெல்லவேண்டுமென்று வில்வளைத்தானால் இவ்விடத் தில் நிறைந்த பெருங்கும்பலில் அவனோ டெதிர்த்துப் போராடத்தக்கவர் யாரிருக்கின்றனர்? ஒருங்கிவனைத் தப்பி ஓடிப் பிழைப்போ மென்றாலோ அவன் கையிலிருக்கும் அத்திரவலிமையால் அதலசுதல பாதலம் போ னாலும் அங்கும்வந்து போர்புரிந்து கொல்வான் நாம் அறிந்த அருச்சுன னேயன்றி வேறன்று; ஆகையால் நானென்று நினைக்கின்றேன் நம்மோடவன் எதிர்க்கு முன்னே அத்தினபுரத்திற்குப் போய்விடுவோமானால் ஒருவருக்கும் ஒன்றுமில்லை, ஊர்சிரிக்கும் பழியுமில்லை; யோசிக்குமிடத்தில் வேறு வழியு மில்லை. அப்படிக் கல்லாமல் தானென்னுங் கருவத்தால் தலைகாட்டி நிற்போ மானால் என்றைக்கும் அவனைவெல்லும் வல்லப நமக்கில்லாதிருந்தாலும் இன் றைக்கும் உண்மையாக நாமவனை வெற்றிகொள்ளமாட்டோம்; அதேனென் றால் நாம் நாடுவிட்டுப் புறப்பட்டதுமுதல் மாடுமடக்கிய இதுவரையில் நேரிட் டதுர்ச்சகுனத்தினாலும் மனச்சோர்வினாலும் வெற்றிபெறுவதரிது, ஆதலால் நாமடக்கிய பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டு பட்டணம் போய்ச்சேர்வோ

மானல் நமக்கு இலாபமுண்டு, நாம்பயந்து ஓடிவிட்டோமென்று யாவரும்பழி யார்கள். அதற்கு ஓர் உபாயமுமுண்டு அவ்வுபாய மென்னவென்னில் குல நாயகனாகிய வீட்டுமரும் கிருபரும் அஸ்வத்தாமாமுதலிய பலரும் நானும் இங்கே நெருங்கிநின்று எதிர்வருகின்ற தனஞ்சயனைமறித்து யுத்தஞ்செய்கின் றோம் நீயும் உனக்குரிய சிலவேந்தரும் வீரர்களும் பாதிப்பதாதிகளும் மடக் கிய பசுக்கூட்டங்களும் இவ்விடம்விட்டுப்பெயர்ந்து அரவக்கொடிநாட்டிய தேரைத்திருப்பிக்கொண்டு நாடுபோய்ச்சேர்ந்து விடுவையானால் துரியோதன ராசன் பெரும்படையுடன்வந்து விராடராசனுடைய பசுமந்தைகளை மடக்கிக் கொண்டுபோய்விட்டானென்று உன்னைப்பலருங் கொண்டாடுவார்கள். "ஆரி யக்கூத்தாடினாலுங் காரியத்தின்மேற்கண்" என்பதை எண்ணவேண்டும். அப் பனே! நான்சொல்வது உனக்கு ஒப்போ ஒப்பில்லையோ? சொல்லென்று துரோணர்கேட்க அவருரைத்த சொற்சூசகத்தையுணராத துரியோதனன் பதைத்துச்சொல்லலாயினன்.

சதுர்வேத பாராயணராகிய தனுர்வேதியரே! பாண்டுபுத்திரர்கள் எங்கள் மாமனிடத்திற் சொக்கட்டானாடித்தோற்று சீர்வளம்பெற்றநாடும் சீர்நலமுற்ற நகரும் மற்றும்பற்பல செல்வங்களும்சேனைகளும் இழந்து காட்டிற்பன்னிரண் டாண்டுங்கழித்து நாட்டில் ஒருவருடம் அஞ்ஞாதவாசமொழிந்து ஒருவருக் குத் தெரியாமலிருந்து வெளிப்படும்படியாக உங்களைப்போல் தேறித்தெளிந்த பெரியோர்களால் நிச்சயித்த நிபந்தனையை ஒத்துக்கொண்ட காலத்தில் மற் றொருவகை நிருணயம் பண்ணியிருந்ததை மறந்து பேசுகின்றீரோ? ஐயரோ! ஐவரும் உருவமறைந்து கருவங்குறைந்து அஞ்ஞாதவாசத்தி லிருக்கும்போது அவர்கள் இன்ன இடத்திலிருக்கின்றன ரென்று நாமறிந்தால் அன்றுமுதற் பன்னிரண்டாண்டும் வனவாசம்பண்ணி ஓராண்டு அஞ்ஞாதவாசஞ்செய்ய வேண்டுமென்று தாபித்திருக்கின்ற மொழிப்படி சத்தியந்தவறுமற் போக்க வேண்டுமென்றே? அப்படியிருக்க அந்த அஞ்ஞாதவாசத் தவணைநாள் அகல்வ தற்குமுன்னே எப்படி வெளிப்படலாம்? என்னுடைய நல்லகாலம் இப்போது வருகின்றவன் அருச்சுனனாக விருப்பானானால் நமக்கு மேலான நியாயவழி யைத் தருவதல்லாமல் தாழ்வான தீமையைத் தரமாட்டாதே! தநுவேதிய ரே! மாறுபட்டுப்போராடும் பெருஞ்சமரில் வல்லவராகிய பாண்டவர்கள் இம்மச்சநாட்டிலிருந்ததை தெரியாமல் வந்தோமோ? விராடபுரத்தின்மேல் நமக்கிருந்த வெகுநாளைப் பகையைக் கெடுத்துவிடவேண்டுமென்று ஓர்மன மாய்முன்னே திரிகர்த்தனை யனுப்புவித்துப் பின்னாடி நாமெல்லோரும் ஆலோ சித்துப் பஞ்சவர்களின் அஞ்ஞாதவாசத்தைக் கெடுத்துவிட வேண்டுமென்று தானே வந்தோம். துரோணரே! இப்படியெல்லாமிருக்க அருச்சுனன் வந்தா னென்று அதயிரியமாய்ப் பேசுகின்றீரோ ஐயோ அவனேவந்து நமக்கெதிர்நின்று போர்செய்யத் தொடங்குவானானால் நாம் அவனுடன் பகைத்துப் போர்செ ய்யவேண்டிய *அவசர விவகாரமென்கின்ற கயிற்றினால் அவனையும் அவனு டைய சகோதரர்களையும் அவனுக்குத் துணையாக வருவோர்களைக் குண்டுக் கட்டாகக்கட்டி யுருட்டிவிடலாமே; அவனெவ்வகை நம்மை வெல்லக்கூடும்?

இன்று வருகின்றவீரனைப் புறங்கண்டு விவகாரமேற்கொண்டு செயபேரிமுழக்கி என்தேசத்திற்குப் போவேனன்றித் திருடனைப்போற்பதுங்கி, யோடிப்போக மாட்டேன் நூலுணர்விற்பயின்ற நுண்ணறிபமைா இதுவரைக்கும் பகைவர்கள் மேல் போர்செய்ய வேண்டுமென்று சொல்லுமுன்னமே கண்கள்சிவந்து கறு விப்புகைந்து கைதேர்ந்த காரியவான்கள்போல் மேகமண்டலம் அளாவிய தேர்மேலேறி ஆயுததீர ஆரவார வீராவேசத்துடன் அடுத்து வீரச்சேவகங்கா ட்டி எட்டுத்திசையிலும் இசையைநாட்டிவந்த உங்களுடைய பகல்வேடமெல் லாம்மெய்யென்று நம்பியிருந்தேன். இப்போது வெட்டவெளியாயிற்று. ஐயா நமக் கெதிரோடிவந்த பகைவரைக் கண்டவுடன் வருந்தி மயங்கி வாடி ஒருவர் முகத்தை யொருவர்பார்த்து நெடுமூச்சுவிட்டு நீ நாட்டைநோக்கி ஓடிப்பிழை; நான் காட்டைப்பார்க்க ஓடிப்பிழைக்கிறேனென்று கலங்கலங்கப்படுவதற்குத் தானோ இவ்வளவு பிரயாசமெடுத்துக்கொண்டு வந்தது? என்னத்திற்காக இவ் விடம்வந்தோம்; புறங்கொடுத் தோடுவதற்கோ இதை நீர் நன்றாய்த்தெளிந்து சீர்தூக்கிப்பாரும் தேசிகனே! விற்றிறமேன்மைபடைத்த வேந்தர் யாவரும் விசயனுக்கெதிர்நின்று மேன்மைபடைத்து வெற்றிகொள்ளுந் திறத்தைச் சிந் தையினினைக்கமாட்டார்கள். அப்பப்பா! மகாதீரனென்று சொல்லித் தளரு கின்ற சிலைக்குருவாகிய உமது சொல்லைக்கேட்டு மீதலத்தோரும் பூதலத்தோ ரும் கலகலவென்று கைகொட்டிநகையார்களோ? இனி உம்மைக்கண்ட கைம் பெண்களும் அலட்சியமாக நினைத்துப் பகையார்களோ! காயத்திரிதேர்ந்த கலைவேதியனே! மற்போர்நிறைந்த விற்போர்சிறந்த வானவர்கோமான் மகன் வருவதைப்பார்த்து நான்மாத்திர மாட்டையோட்டிக் கொண்டோடுங்கி மாநகர்க்குப்போவேனாகில் அதனாலெனக்கு வருவது வசையோ? இசையோ? அல்லது வருகிறவனைக்கண்டு பயமில்லாமல் எதிர்நின்று போர்புரிந்துவென்று செயம்பெறுவது புகழோ? சொல்லும். மித்துருவையிகழ்ந்து சத்துருவைப் புகழ்ந்து மகிழ்ந்து பாடாநின்ற நைச்சியனே! தனுமறைகற்ற சதுமறையோ னே! எண்ணிறந்தகோடிகளாக இவ்விடத்திற்சேர்ந்த நமதுவீரப்படைகளெல் லாஞ்சேர்ந்து ஒருவனாகத் தனித்துவருகின்ற வில்லாளியைச் செயிக்கமாட் டார்களென்றால் ஒற்றைத்தேரோட்டிவருகின்ற ஒருவன் இத்தனைபேர்களை யும் எப்படி வெற்றிகொள்வான்? வருகின்ற சுத்தவீரன் பிராணனைத்துரும் பாக மதிப்பானென்றால் அத்தன்மை பெற்றவர் நமது சேனைகளிலில்லையோ? ஆனாலும் போர்செய்யப் புகுந்தபேருக்கு பிராணன் பெரிதோ? மானம்பெரி தோ? கடல்புடைசூழ்ந்த காசினியிற் பெருமையும் மானமும்பின்னர் நடைப் பிணம்போல் பிராணனுடனிருப்பதில் என்னபயன் புண்ணிய வடிவனே! இனி நான்பலவாறாகப்பேசுவதில் பயனில்லை, ஒரேவசனஞ் சொல்லுகின்றேன் கேளும்; இதோவருகின்ற என்பகைவனைக்கண்டுபயந்து அத்தினாபுரத்திற் குப் போகமாட்டேன்; எனக்குபகாரம்போற் சொல்லுகிறவர்கள்பேச்சையுங் கேட்கமாட்டேன் இது அவரவர்கள் புத்தியிற் கெட்டியாயிருக்கட்டும். ஆனாலிப்பொழுதுவருகின்ற அருச்சுனன் சண்டைக்குப்பயந்தவர்கள் ஆவிக் காசைப்பட்டவர்கள்; பெண்சாதி பிள்ளைகள் மண் மனை நிதி நிட்சேபமிகுதியு

முள்ளவர்கள். இவர்கள் யாவரும் நன்மையுடன் பட்டணம்போய்ச்சேரலாம். நாம் கைக்கொண்ட மாடுகளை அவனெவ்வாறு கைப்பற்றக்கூடும்? அவன் கழிக்கவேண்டிய அஞ்ஞாதவருடத் தவணையில் இன்னம் ஒருநாள் போகவேண்டியதாயிருக்கின்றது. இதற்குள் அவசரமாக வெளிப்பட்டிருக்கின்றான். எங்கள் குலமுதல்வராகிய வீட்டுமருக்கு இவ்வித்தியாசங்களெல்லாம் நன்றாய்த்தெரியவரும். மகாநுபாவரோ இவ்விவகாரத்தைக் கண்டறிந்து மறுபடியும் பாண்டவர்கள் வனவாசம்பண்ணும்படித் தாபிக்கப்போகின்றார். இதற்குள் நீரேன் ஆத்திரப்படுகின்றீர் யுத்தத்திற்கிளைத்த உலோபனைப்போல் என்னை ஊருக்கு ஓடிப்போவென்று உறுதி சொல்லவந்தீரோ என்னகாரணத்தால் இவ்வாறு கூறினீர்? நல்லது துரோணரே! நீர்சொல்லிய வண்ணம் ஒற்றைத்தேர் வருகின்றவன் தனஞ்சயனாகிச் சண்டைகொடுத்தாலும் அவனுக்குச் சகாயமாகத் திக்குப்பாலர்கள் தடுத்தாலும் தேவர்கள் கந்திருவர் அரக்கர் இயக்கர் அரசர்முதலியோர்வந்து என்னுடன் போர்கொடுத்தாலும் நம்மை அசைக்கப்படாது; எப்படியும் நாமெண்ணிய வண்ணம் பழுதுபடாமல் மாட்டுமந்தையை மடக்கி நம்வசம்பண்ணிக்கொண்டோம்; நாமுந்துணிந்து வந்திருக்கின்றோம்; ஆகையால் இவ்விடம்விட்டுப் பெயராமலிருந்து ஒருகைபார்த்து விடுவோம், அப்படிப்போக மனமுடையவர்களுக்கு யாதொருதடையுமில்லை, இவ்விடத்தில் வந்திருக்கும்படைகள் அடங்கலையுஞ் சாய்த்துக்கொண்டுபோனாலும், என்னதிட்டம்போவதில்லை. ஒருவருக்கொருவர் துணையென்பதில்லை. அவரவர்கட்குத் துணையாய்நிற்கும். அறிவிலுயர்ந்த மறைவேதியரே! நீர் நன்றாயறிந்துட்கொள்ளுமென்று, அடங்காக்கோபங்கொண்டு, துச்சாதனன் முதலாகிய தம்பிமார்களையும் தார்வேந்தர்களையு நோக்கி, இடபமுழக்கம்போற் களைத்துத் தழல்நெருப்பைச்சிந்தி அதிகப் படபடப்புடன் சொன்னான். என்னன்புக்குரிய தம்பிமார்களே! எனக்கு வெற்றிதரவந்த சம்பிரமவீராகிய வேந்தர்களே! பிரமதேயசுடைய முதற்குலத்தோனாகிய விற்குருவாகிய துரோணர் நன்னெறிகற்றபெரியோராயிருந்து, சமையோசிதப்பேச்சை துரிதமாய்ப்பேசி சாப்பாட்டுக்கு சங்கடப்படமாட்டாமல், காலபோசனங்கொண்டு காலங்கழித்திருப்பதேகாரியமென்று, ஆரியசித்தாந்தமுதலிய சாத்திரம் யாவும் படித்தவர். அல்லாமலும், தனுவேதத்திலுள்ளனவெல்லாந் தப்பாமலுணர்ந்து, புத்திமான்களுக்குப்போதிக்கத்தெரிந்தவர். வாதித்துவரும் பகைவர்களுடன் போர்க்குச்சென்று, வென்றுவருகின்ற வீரத்திறம் இவருடையதன்றென்று நன்றாய்ப் பிரசித்தமானவர். ஆகையால், இப்படிப்பட்டவரை நீங்கள் நம்பியிராமல், வருகின்ற எதிரியென்னும் போர்யானையின் முனையிற்புகுந்து, தனிமுகச்சிங்கம்போற் சாதித்து விடுங்கள். சண்டைபோடப்பயந்த வைதிகர்களெல்லோரும் அர்த்தரதப்படைக்குப்பின்னின்று, நமக்கு வெற்றிகொள்ளும்படி சபம்பண்ணிக்கொண்டிருக்கட்டும், உங்கள்வேலையில் நீங்கள் சாக்கிரதையாயிருங்கள். ஒருவருதவியைப் பார்க்கவேண்டாம்; போங்களென்றுரைத்தான். இப்படியாக, துரியோதனன்சொன்னசொல் அங்ஙனமிருந்தவர்கள் செவிகளில் நுழைவதற்குமுன்னமே துரோணர் குமாரனாகிய அசுவத்

தாமாகேட்டு, நெருப்பில்வீழ்ந்த புழுப்போற்றுடித்துக் கண்கள்சிவந்து பொறி பறந்து, புகைமலிந்து, பொருப்பெழும்படியான புயம்படைத்த புயங்ககேதனனைப்பார்த்து, வணங்காமுடியையுடைய மன்னவனேயென்றுமத்தகயம் போற் கூவியழைத்து நம்மரபுக்கொருவராகிய வீட்டுமரும் கிருபரும் கர்ணராசனும் துச்சாதனன்முதலிய தம்பிமார்களும் மன்னமண்டலீகரும் மற்றுமுண்டான முடிமன்னரும் கண்ணிரண்டுமூடிக் காதிரண்டு மடைத்து, உள்ளங்கலங்கி, உடலுநடுங்கி, உயிரொடுங்கும்படி சிலவார்த்தைகள் சொல்லத்தொடங்கினன்.

அசுவத்தாமன் தந்தைக்காகப்பரிந்து பேசுதல்.

கௌரவகுலாதிபனே! நாம் அத்தினபுரத்தைவிட்டுவந்ததும் விராடராசனுடைய பசுமந்தையை மடக்கிக்கொண்டதும் கூட்டமாகிய நால்வகைச் சேனைகளை வசப்படுத்தி வைத்ததும் வெற்றி பெறுவதற்கோ? அல்லது அபசயமடைவதற்கோ நீர்சொல்லும். அப்படியிருக்க, விசயலட்சுமிவாசமாயிருக்கும் வெற்றிவேல்பெற்ற துரோணருடைய மனம் நொந்து நையும்படி வசைமொழிகளை வழங்கி வைவது தகுதியோ? கூரியவேலும் வில்லுங்கொண்ட கோமானே! நீ பிள்ளையாய்ப்பிறந்த நாள்தொடங்கி இதுவரையிலும், யுத்தமென்பதுசெய்து எங்கே வெற்றியடைந்திருக்கின்றாய்? இவ்விராடநகரத்திற்கு வந்து, பசுக்காவலாளரையடக்கி மந்தையைமடக்கிவிட்டோம்; இதுவொரு வெற்றி. முதலிலே சுகமாயிருந்த பாண்டவர்களையழைத்து, மோசச்சூதாடிப் பூமிமுதலிய செல்வங்களை அபகரித்துக்கொண்டு காட்டுக்கோட்டிவிட்டோம்; இதுவொரு வெற்றி. இதுதானே நீ கண்காட்சியாய்க்கண்டிருப்பது. இதைப் பார்க்கிலும் வேறுசொல்ல யோக்கியதை உண்டா? என்னமோ பெரியயுத்தங்களெல்லாஞ்செய்து, சூரர்களைவென்று, வாகைமாலைபூண்டு, கோட்டை கொத்தளங்களை முற்றுகையிட்டதுபோல், மெத்தமெத்த இறுமாந்துபேசுகின்றாய். இதென்ன கட்டுக்கதை. இவ்வீரம் ஒருகாசும்பெறாதே. நமது திறத்தை நாமே யெடுத்துப் பேசிக்கொள்ளுகிறதா? இது நன்றாயிருக்கின்றது. போம்போம். அரசனே! இராசசபையிலிருக்கும் பெரியோர்களுக்குக்கடமையென்னவென்றால், காமாந்தகராகிய காவலருக்குக் காரியாகாரியங்களை யெடுத்துக் காட்டிக்கொண்டிருக்கவேண்டுமென்பதாக நீதிநூல் முறையிடுகின்றதே. ஆதலால், அந்நீதிப்பழக்கத்தையும் உலகவழக்கத்தையும் அனுசரித்துச்சொல்லவேண்டிய தருமத்தைச் சொன்னார்போலும். அவ்வாறிடித்துச்சொல்லுந் தருமவாக்கியம் உனக்குச் சம்மதமில்லாமற்போனால், வருகிற வீரனுக்கு எதிரேபோய்நின்று போர்புரியலாமே! அப்படிப்போகின்ற உன் வீரத்திறத்தை யார் தடுத்தவர்கள்? நீயென்ன சண்டைபோடாதவனா? பூர்வத்தில் நீபுகுந்த போர்முகத்தில் எங்கேயானாலும் அடிபட்டுப்புறங்கொடுத்து ஓடியிருக்கின்றையா? இல்லையே. கையில் வில்லுங்கணையுமிருக்கச் சத்துருக்கள் கையில் அகப்பட்டுக்கொண்டு சண்டைபோடமாட்டாமல், கட்டுப்பட்டிருக்கின்றையா? இல்லையே. இப்போதுதானென்ன? நீ தேரேறிப் புறப்படுவதே

தான் தாமதம். துரியோதனன் வில்வளைத்தானென்று கேட்டவுடனே போர்
முகத்திலுள்ள அதிரதவீரர்கள் முதலியவரும் அபசயமடைந்து உயிர்தொலை
வார்கள். அப்படிப்பட்டவாகைமாலைபெறுஞ்சேவகனாகிய அரசனைப்பார்த்து,
நீ மாட்டையோட்டிக்கொண்டு, ஊர்முகநோக்கி, ஓடிப்போவென்று இவ்விரு
த்தவேதியர் சொல்லலாமா? ஐயோ, உத்தமனே! அவர்சொன்னசொல்லா
னது, நீ இதுவரையிலும் பெற்றிருந்த வீரத்திற்கு மிகவுங் குறைவாயிற்றே.
அப்பா, சுத்தவீரனே! சகோதரர்களிடத்திற்சூதாடிப் பூமியைப்பறித்து, மூத்
ததமையன் பெண்சாதியாகிய துரோபதையின் தலைமயிரைப் பிடித்திழுத்துச்
சபைநடுவே ஆடையை உரிந்து, மானக்கேடுண்டாக்கிக், காட்டுக்கு வழிகாட்டி
விட்ட கதைபோல், நினைத்தையோ? அல்லது, உன்மாமனாகிய இச்சகுனி
முதலியவரும் வாய்கொண்டமட்டும்பேசி வெற்றிகொண்ட வீரமென்றெண்
ணினையோ? ஐயோ! அப்படி வெற்றிகொண்ட வெற்றியெல்லாம் கரும்பூமி
யில் பாவமென்னுங் காணியாட்சியைக் கொடுக்கத்தக்கது. அவ்வளவு எளி
தென்று இப்போது எண்ணாதை; வருகின்றவன் தனஞ்சயன். இவனுக்கெ
திரிலிருந்து, வில்வளைத்துப் பாணந்தொடுத்துப் போர்செய்தே தீரவேண்டும்.
வேந்தனே! சூதாடித்தோற்ற அந்நாளையிலிருந்த அர்ச்சுனன்தானேயென்று,
அலட்சியமாய் நினைத்தால், இந்நாளையில் உங்களை வெளியில் விடுவானென்று
எண்ணங்கொள்ளவேண்டாம். உன்னம்மானை சகுனிராசன் உனக்காகப்
பாடுபட்டுச்சம்பாதித்த தருமமானது, சீக்கிரத்தில் திரண்டுருண்டு வளர்ந்து
இப்போது வந்தெதிர்த்துக்கொண்டது. இதைக்குறித்து நீ யொருவருக்குச்
சொல்லவேண்டிய அவசரமில்லையே. ஒருவரும் உங்களுக்குச்சொல்லவேண்
டிய அவசியமுமில்லையே. நீ யாரையுந் துணைப்பற்றவேண்டாம். நீயொருவரை
விரும்பித் துணைவரக்கேட்பையாகில், யாருந்துணையாகமாட்டார்கள். அந்த
ஆசையைவிட்டுவிடு. சூதாடி உனக்குச் சந்தோடமுண்டாகப் பண்ணினவன்
இதோ உனக்குநேராக நிற்கின்றான். இப்போது நேரிடப்போகிறபோர்முனைக்
கெதிரில், அவனைப்போகச்செய்வது நியாயம். ஆயுதபாணியாய் அவன் போர்
மேற்புறப்படும் வகையைப்பார். நல்லநல்ல ஆயுதங்கள் அவனிடத்திலிருக்
கின்றன, யாரொருத்தர் உடன்படுகின்றார்களோ அவர்கள்குடித்தனத்தைக்
கெடுத்துவிடும். அப்படிப்பட்ட ஆயுதமிருக்க, உனக்கென்னகுறைவு. அத்
தன்மையான ஆயுதம் எத்தன்மையுடையதென்றால், பன்னிரண்டு - எட்டு -
இருக்கால் - துகை முதலிய சில்லறைப்படைகள். இவைகளினால், கட்டு -
வெட்டு - குத்து - பிரித்துவிடு - தனியே ஓட்டிவிடு-கீழேதள்ளிப் படுக்கவை
யென்று இப்படியெல்லாஞ்சொல்லி, விசயனுக்கெதிராகி வெல்லுவான். அப்
பார்த்தனைவெல்லும் பராக்கிரமம் எங்களைப்போன்றவர்களாலுமில்லை. எங்க
ளையல்லாமல் நாகலோகத்தார்முதலிய மூன்றுலோகத்தாரும் நரனுக்கெதிரில்
நிற்கவேமாட்டார்கள். ஒருவருநிகரில்லாதவனாய் வருகிற அருச்சுனனைக்கண்டு
நான் வெல்லுகிறேனென்று, வாய்வண்ணம்பேசுகிற வல்லவர்களுமுண்டு.
வாய்சொற் சொல்லுவதற்கென்ன பஞ்சமா? வருகிறவனை வெற்றிகொள்ளலா
மென்பதென்ன கொஞ்சமா? சந்திரகுலத்திற்பிறந்தவனே! பெரியோனாகிய

சிலையாசிரியனை அவமதித்து, சொல்லத்தகாத சொல்லையெல்லாஞ்சொல்லி, வெல்லவல்லவன் நீயே யாகையால், இதோ நான் சொல்லுகிறேன். இம்மண்டலத்திலும் அவ்விண்டலத்திலும் அருச்சுனனுக்கு ஒப்புச்சொல்வது தப்பு; அவனுக்கெதி ரொருவருமில்லை. அவனுடைய போர்முனையில் நீதானாவது இன்னம் எப்படிப்பட்டவர்களாவது கிட்டி எட்டிப்பார்த்து வந்தாலும் போதுமே. இதுவே அவனை வெற்றிகொண்ட புகழினும் எண்மடங்கதிகமான பெருமையை விளைவிக்குமே. அவனுடைய போர்முகத்தில் நீ நேர்முகமாகப் போய் வரமாட்டுவையோ? உனகண்ணிற்கண்டு கலங்காதிருப்பையோ? நாகக்கொடியோனே! உன்னிடத்தில் விசுவாசம்வைத்த ஆசிரியர் எதிரி யிப்படிப் பட்டவன் அவனோடு சண்டைசெய்ய வல்லவர் எண்டிசையிலுமில்லையென்று சொன்னால், இதற்குத் தகாத வார்த்தைகளைப்பேசினாய். அருமையறியாத உன்னுடைய யுத்தமுனையில், எங்களைப்போன்றவர்க ளிருக்கமாட்டோம். வீரத்தைவிட்டு நாணமுங்கெட்டிருக்கிற துரோணர் தனுமறைக்குருவாயிருந்தும், துரியோதனன்பேசிய ஈனவார்த்தைகளைக்கேட்டும், இன்னமும் போகாமலிருக்கின்றார். இவர் இவ்விடத்திலிருந்து யுத்தமுஞ்செய்வார்போலுமிருக்கிறது. ஐயோ! அவமரியாதை நேரிட்டபோதே அந்த அரசனுடைய உறவை நீக்கிவிடவேண்டும். அல்லது, பேசினவன்பிராணனை அறப்போக்கிவிடவேண்டும். இவ்விரண்டிலொன்றும் இல்லாதிருப்பது, மனுடத்தனமல்லவேயென்று அசுவத்தாமா தன்தந்தையை நொந்துகொண்டு, அரவக்கொடிக் கதிபனைப் பார்த்து, அரசனே! இப்போது நான் சொல்லுகின்றதைக்கேள். எல்லாவுயிரையுங்கவரும்படியான எமதருமராசனையும் கடல்நீரைவறட்டும் வடவாமுகாக்கினியையும், உருத்திரமூர்த்தியின் கண்டத்தைக்கருக்கிய ஆலவிடத்தையும், மட்டுப்படாத எட்டுத்திக்கையும், அட்டமாநாகத்தையும், ஒருநொடியில் மடிக்கப்பார்ப்போம். அல்லது, வெற்றிகொள்வோம். இந்திரகுமாரனாகிய சிலைவிசயனைமாத்திரம் வெற்றிகொள்ளமாட்டோம். நீ உன்சிந்தையில் இதை விந்தையாகக்கொண்டு, மனவுறுதியோடுநின்று தெளிந்துபாரென்று கூறினான். அச்சொற்களையெல்லாம் துரியோதனனுக்குச் சமீபத்திலேநின்ற கர்ணன்கேட்டு, நறநறவென்று பல்லைக்கடித்து, வெற்றிவேல்பெற்ற பெரியோர்களைநோக்கிப்பேசத்தொடங்கினான்.

### கர்ணன்பேசுவது.

பூலோகபுரந்தரராகிய புநிதர்களே! விராடராசனுடைய பசுநிரைகளை மடக்கும்படி நிதானித்து, அத்தினபுரத்தைவிட்டு புறப்பட்ட நாம், வாசமாலைதரித்துவராநின்ற விசயனென்னும் வில்லாளியை வியந்து, புகழ்ந்துபேசுவது மேன்மையோ? குந்திதேவியின் மைந்தர்தொடுக்குங் கொடுங்கணைக்கஞ்சிப் பயப்படுகிறவர்கள், விருதாவில் இவ்வளவுதூரம் ஏன்வரவேண்டும்; ஐயோ! வீட்டிலிருக்கப்போகாதா? அப்படியே வேலைவினைகெட்டு வந்தவர்கள் எதிரியைச்சயிக்கத் திறமில்லாவிட்டாலும், வாயைமூடிக்கொண்டு சும்மாவிருக்கலாகாதா? திறவான்களாகிய தீரர்களுக்குநேரில் வாய்க்குவந்த

மட்டும் பிதற்றுவானேன்? இவ்வளவுகாரியத்திற்குப் பெரியவர்களென்று பேர் வைத்துக்கொள்ளுவானேன்? தனக்குவெல்ல வல்லமையில்லாவிட்டால், தரணியிலுள்ளவர்களெல்லோரும் வெல்லமாட்டார்களென்று தப்புந்தாறுமாய் வீண் பேச்சுப்பேசவேண்டிய வேலையென்ன? சுத்தவீரர்கள் மனமுறிய மெத்த வருத்தப்படுத்துவானேன்? இருளைக்கெடுத்துவந்த மத்தியான சூரியன்போன்ற நானொருவனுமெழுந்து, நெருப்புக்கொழுந்துபோல் வருகிற விசயனையடித்து, அச்சமில்லாமல் நாணிதொடுத்து, அபாரமாகக் கணைகளைவிடுத்து, என்னிச்சையின்படி எதிர்த்துப் போர்கொடுத்து, அவனேறிவந்த தேரின் அச்சுமச்சுக்குத்துக்கால்களைமுறித்துக், குதிரை நான்கையும் அறுத்துக், காண்டீவத்தையும் அனுமக்கொடியையுங்குறைத்து, வெற்றிபெறப்போகின்ற என் வீரத்தை அருச்சுனனைக்கண்டு கொண்டாடுகிறவர்கள் அச்சப்படுகிறவர்கள் யாவருமிருந்து காட்சியாய்க்காணுங்கள். மேலும், மண்டலத்தைக்கீறி, விண்டலத்தைப்பீறி, குண்டலமசையவருந் தேரோனாகிய தண்டதரன் தம்பியைக் கண்டவுடனே, எண்டிசையதிர, மண்டலாகிர்தியாகிய வில்லைவளைத்து, வருணாத்திரம் பிரயோகஞ்செய்து, வடவைத்தீவேகத்தை மாற்றுந்தன்மைபோல ஒருகணத்தில் அவன் வன்மையைமாற்றி, நீங்கள்கண்டு கண்களிக்கச்செய்கின்றேன் பாருங்கள். பன்னிரண்டாண்டும் அஞ்ஞாதவாசமான ஓராண்டும் துருப்பிடித்து, அழுக்கடைந்து, மழுங்கிக்கிடந்த காண்டீவத்தையும் கணைப்புட்டிலையுங் கைக்கொண்டு கலங்காமல், நமக்கெதிர்வருகின்ற நரனுடைய திடத்தையுந் தீரத்தையுந் தேகத்தையும் சின்னபின்னமாம்படிச் சேதிக்கின்றேன். நீங்களெல்லோருங்கூடிப் பார்க்கலாம். பெரியோர்களே! அருச்சுனனுக்கெதிரி அங்கர்கோனென்று இச்சகமெல்லாம் பிரசித்தமாகப் பேசிக்கொண்டிருக்க, நான் அவனை யெளிதில்விடப்போவதில்லை. நானும் ஒருவில்லைப் பிடித்து, மலைபோலெதிர்த்து, மலைந்து, போர்த்திறந்தெரிந்த புண்ணியவான்களைப்போல், புகழ்பெறுகின்ற பிரதாபத்தைக் காணவாருங்கள், குளம்படியாற்கிளம்பும் மண்பொடிகள் ஓயாமற்கிளம்பப் பாய்ந்துவருங் குதிரைகள்மேலும் அக்குதிரைகள்பூட்டிய தேரின்மேலும் கோடிகோடி பாணங்களைச் செலுத்திக் கொல்லுவதல்லாமலும், அவனது ஆசானுபாகுவாகிய கரங்கள் தறிபடவும் கால்கள் முறிபடவும் விரிந்தமார்பு தொளைபடவும் அணிந்த முடியுடன் தலையறுபடவும் விரைந்து போர்புரிந்து நான் வெற்றிகொள்ளப்போகின்ற விந்தையைப்பார்த்து நீங்கள் மகிழுங்கள். இவ்விடத்தில், நானுறுதியாகச்சொல்லுகிறேன். ஞாபகமாய்க்கேளுங்கள், நானிதுவரையில், நரபதியாகிய துரியோதனனிடத்தில் உண்டு, வளர்ந்துவந்த செஞ்சோற்றுக்கடனும் கர்ணன் அருச்சுனன் என்றுசொல்லப்படும் எங்களிருவரில், வல்லவர்யாரோவென்று ஐயங்கொண்டிருந்த யாவருக்கும் ஐயந்தீருஞ்சயமும் இளமைப்பருவத்தில் தனுர்வேதபரீட்சை பார்த்தபோது அருச்சுனன் தலையையறுத்து அரங்குபூசைசெய்கின்றேனென்று அரசருக்குமுன்னே நான்கூறியிருந்த சபதவார்த்தை முடியுங்காலமும் பற்குனனைவெல்லும் வல்லவரில்லையென்று சிலையாசிரியனும் அசுவத்தாமாவும்பேசிய கட்டுக்கதைகேட் டோடச்செய்யுந்

தருணமும் இப்போதெனக்கு நேரிட்டிருப்பதினால், என் பரமகுருவாகிய பரசுராமர் அற்புதமாகக் கற்பித்துவைத்த அஸ்திரவித்தைகளை நிலைபெறச் செய்து, அவருடைய திருவடிகளைத்துதிக்குங் காலங்கிடைத்திருக்கின்றதை நினைக்குங் காலங்கிடைத்திருக்கின்றதை மதிக்கும் விவேகிகளாகிய மன்னவர்களே பாருங்கள். பெருந்தேரிலோங்கி ஒருசிலைதாங்கி வருகின்றவனைக்கண்டேங்கி மயங்குகின்ற ஒருகோடி நரபாலரும் என்சுற்றிலுமிருந்து, வெற்றி பெறும் வேடிக்கையை முற்றிலும் அறியுங்களென்று உருத்திரமூர்த்திக்கொப்பான வீட்டுமர்முதலியயாவருக்குங் கேட்கும்படியாகச் சொன்னான். அந்தச் சொல்லைக் கிருபர்கேட்டுமனம்பொறாமல் பேசத்தொடங்கினார்.

### கிருபர் கர்ணனோடு பேசுதல்.

ஆகா அங்கதேசத்தரசாகிய அறிஞனே! நெடியகடல்சூழ்ந்த உலகத்தை ஆளுகின்ற அரசருக்குச் சாம பேத தான தண்டமென்னுஞ் சதுர்வித உபாயமுண்டு. இந்நான்கில் தண்டமென்னும் உபாயத்தை அநுசரித்துச் சண்டை செய்யக் கற்றிருக்கின்றாயன்றி மற்றமூன்று உபாயமும் அறியமாட்டாய்போலுமிருக்கின்றது. அவ்வுபாய மூன்றையும் அறிந்துகொள்ளத்தக்க சுயபுத்தி உனக்கில்லாவிட்டாலும் தெரிந்தபெரியோர்கள் சொல்லுகின்ற நற்புத்தியானாலுங் கேட்டு நடக்கவேண்டும், தண்டமென்பதைத் தாமதகுணத்தோர் விரும்புவார்கள், சாத்விககுணமுள்ளவர்களுக்கு மற்றமூன்றுந்தகுதியுடையனவாகும். அதெவ்வாறெனில் அரசனானவன் காரியத்தைக் கருதி யோசியாமல் பகைவர்மேற் செல்லுதல் அப்பகைவனைத் துன்பமில்லாமல் நிலைக்கச்செய்வதாகும். மேலும் தொழில்வல்லமையையும் தன்வல்லமையையும் எதிரிவல்லமையையும் துணைவல்லமையையும் ஆராய்ந்து தன்வல்லமை மேலிட்டிருக்குமாயின் தானெடுத்த காரியத்தை முடிக்கலாம். ஆகையாற் காரியாகாரியங்களெல்லாவற்றையுங் கருதிப் பின்னே போராடப் புகுந்தவர்களுக்கு எவ்வுலகத்தும் எக்காலத்தும் ஒப்பில்லாத புகழையுண்டாக்குமென்று நீதி நூலோர் பேசியிருக்கின்றார்கள். அதுவுமல்லாமல்தன்வலியும் பகைவலியும்மாற்றான்வலியுந்துணைவலியும் அறிந்து வீரியமாகப் போர்செய்யக்கற்ற புத்திமான்களானபோதிலும் 'பெரியாரைத் துணைக்கொள்' என்னும் நீதிவாக்கியப்படி தனக்குமேற்பட்ட மிக்க அறிவாளர்களைக்கேட்டு அவர்கள் புகன்ற புத்திவழி நடக்க வேண்டும்; அப்படிகேளாத அரசன் உன்மத்தனாயிருப்பானுகில அவனது சுகதுக்கத்திற் கொக்கப்பொருந்திப் பக்கமிருக்கும் எம்மைப்போன்ற பெரியோர்கள் அவனுக்கு இடித்துச்சொல்லவேண்டியகடமை. நிசையளவுநாறும் உதிரப் பசைவிரும் வேலேந்திய கர்ணனே! வருகின்றதேர் ஒன்றென்றும் அத்தேர்மேல்வருகின்றவன் தனியனென்றும் அவன் கைப்பிடித்தவில்லொன்றென்றும் அவனெம்மாத்திரமென்றும் வெகுசொற்பமாக வெண்ணி ஆத்திரப்பட்டுச் சொல்லினையல்லவா? உன்னைப்போலொத்தவன் இவ்வாறுரைத்தால் மாற்றுயர்ந்த பொன்னைப்போன்று வருகின்றவன் என்ன என்னவென்று புகலவேண்டும். அவனுன்னுவுக்கடங்கினவனு! இலேசானவனு? அந்தோ! மாசானவனே!

இப்பாராளுந் துரியோதனன்முதலாகிய பலபடைக் கூட்டங்களையும் வீஷ்டு மர்முதலிய என்னையும் வீரியம்பேசுகின்ற உன்னையும் ஒருபொருளாய் நினைக் காமல் திரஸ்காரஞ்செய்யத் தக்கவனென்று உனக்குத்தெரியாதது ஆண்சிங் கஞ்சிறி யானைக்கூட்டத்தின்மேலே பாயுந்தன்மைபோல் வருகிறானே அவ னுக் கெதிர்நின்று போராடுபவர்களுமுண்டோ? சிவபெருமானொருவனுஞ்சென் று திரிபுரம் நீறாகக்கண்டு திரும்பினானென்று இதுவரையிலும் நீகேட்டிருக்க வில்லையோ? செருமுகப்புலியே! சீர்படைத்த பாஞ்சாலராசனுடைய பட்டணத்தில் பாஞ்சாலிக்குத் திருக்கலியாண முகூர்த்தமென்று சுயவரஞ் சாட்டியபோது மச்சேந்திர இலட்சியத்தைமுடித்து இச்சைவைத்து வந்த அரசரெல்லோரையும் ஓடவிட்டடித்துக் கச்சணிந்த பெருந்தனக் காரிகையையுங் காண்டீபத்தையுங் கைப்பிடித்துக் கலகலவென்று விசயலட்சுமி நடித்துவரக் கண்ட காளை வருகின்றான்; அவனுடனெதிர்த்துப் போராடுந் திறமுள்ளவர்கள் எவருமில்லையே, மாலைபுனைந்தமணிமுடியணிந்த வண்மையோய்! நீ அச்சுயம் வரகாலத்தில் பாஞ்சாலியைக் குறித்துப்போயிருந்த தில்லையோ! எல்லாவரசராலும் வளைக்கப்படாத வில்லை நீ தாங்கி வளைக்கவில்லையோ? அங்ஙனநடந்த விந்தையான வார்த்தைகளையேனும் வேடிக்கையாய்க் கேள்விப்படவில்லையோ? இதன்றியும் கொடுமையாளராய்த் தொடர்ந்த யதுகுலத்தாரையெல்லாம் அடக்கி வெற்றிகொண்டு சுபத்திரையை மணம்புணர்ந்து கொணர்ந்த காலத்தினும் முப்பத்துமுக்கோடி தேவர்கள் முதுகுகாட்டியோட ஓட்டி அட்டவசுக்களுடன் அட்டதிக்குப்பாலரும் எழுகடலுடன் மேகமுஞ்சலிக்கக்கெலித்துக் காண்டாவனத்தை அக்கினிதேவனுக்கு ஆகாரமாக ஊட்டி வைத்த காலத்தினும் அனுவிர்தகண்டம் அளாவிர்தகண்டமுதலாகிய உத்தர குருகண்டத்தி லுள்ளோர்யாரும் முடிவணங்கித்தொழுது கண்ணீர்விட்டழுது எங்கட்குப் பழுதுவாராமற் காத்தருளும்,கடைக்கண்பாருமென்று உபசாரத்துடன் மிக்கதிரவியங்கள் குவிக்கப்பெற்றகாலத்தினும் மாயாவரத்துடன் தோயமாபுரத்திலிருந்த காலகேயநிவாத கவசர்களையும் இரணியபுரவாசிகளையுமடித்து அவர்களுடைய தோள்வலியுந் தாள்வலியும் உரத்தின்வலியும் வரத்தின்வலியும் உபயோகமாக வொட்டாமலடித்து முடித்தநாளையிலும் அட்டதிக்கும் புகழ்பெற்ற சித்திரசேனனென்னுங் கந்திருவராசனைக் கொட்டமடக்கி நமதரசனாகிய துரியோதன மகாராசனையும் தம்பிமார்களையும் அவரதுபத்தினிகளையும் கட்டவிழ்த்துமீட்டுமானங்கெட்ட பிராணனைக்காப்பாற்றிவிட்ட காலத்திலும் இதோவருகிற கட்டழகனாகிய அருச்சுனனுக்குயார் துணையாயிருந்தவர்கள்? ஒருவருமில்லையே! எக்காலத்திலும் அவன்கைப்பிடித்த விசய காண்டீபமே துணையல்லது வேறுதுணை கண்டதில்லையே! அப்படி யாதாயினுந் துணைநாடிப்போய் வெற்றிகொள்வதுண்டானாற் பேசு கர்ணராசனே! உன்னுடைய குணநிசய மென்னவென்னில் அரசர் முதலியோர் கூடியசபையில் எனக்குமிஞ்சி யெவருமில்லையென்றும்,புயவலிமை எனக்கே பொருந்தியதென்றும்,என்னுடன் போராடும்பகைவர் பூமியிலில்லையென்றும், பலவாறாகப் பேசுகிற வழக்கமுனக்குண்டு. நீசொல்லியவண்ணம் எங்கேயாவது சோர்வற

முடித்து வெற்றிகொண்டிருக்கின்றையா? நீஎப்பகைவர்கள்மேல் போர்க்குச் சென்றாய் எவ்விடத்திநின்று கீர்த்தி கொண்டுவந்தாய்? இந்நர்னுக்கு நேராகப் போய் நிற்கத்தக்க திறமுமுனக்குண்டா? அப்படியிருந்தால் அனுபவங்கொண்டுவா? அப்பா! நான்பேசுவதென்னதப்பா? சிவபெருமானுஞ் செங்கண்மாலும் பிரமனும் தேவேந்திரனும் தேவர்களும் மற்றுமுள்ளவர்களுநங் கோலாகலமாய் வந்தெதிர்த்தும் போர்செய்வதற்குக்கூடாத வல்லவன் வில்லேவனைத்தானுகில் அவனுடைய வீரியத்தைப்பழித்து இங்கிருக்கும் அரசர்முதலிய ஆரியர்களுக் கெதிரில் உன்காரியத்தைக்காட்டிவெற்றிபெறப்போகின்றாயோ? எண்ணமற் பேசிஇழிவடையப்போகின்றையோ? இதுகாறும் உன்திறத்தைநாங்களுமிருந்து பார்த்ததுதானே; அடா அப்பனே! சிறந்தவில்லாளியாகிய வீட்டுமரும் சிலைக்குருவாகிய துரோணரும் சிவசுப்பிரமணியக் கடவுள்போன்ற அஸ்வத்தாமாவும் நானும் நீயும் தேனிறைந்த வலம்புரிமாலையணிந்த துரியோதன மகாராசனும் மற்ற தார்முடிவேந்தர் பலரும் ஒன்றாகச்சேர்ந்து அழகிய தேரைச்செலுத்தி வில்லம்புகள்தாங்கி மேலான யுத்தஞ்செய்தாலும் இவ்வர்ச்சுனனைவெல்வது அரிதரிதென்று கருதிக்கரையும் எங்கட்கெதிரில் நானொருவனும் போர்முனை புகுந்துவெல்லுகிறேன். அவனைக்கொல்லுகிறேனென்று நீசொல்லுவதுகாலிலி காதவழிநடப்பேனென்றுசொல்வதுபோலாம், நீசொன்னசொற்படி முடிப்பையானால்பனி சூரியனை விழுங்கிப்போடுமென்று ஐயமறப்பேசலாமே! கொடைக்கரசனே! நீர்வளமுள்ளகுருநாட்டுக்கதிபனாகிய கௌரவகுலமுதல்வன் உன்னிடத்தில் நேயம்வைத்திருந்தால் அவனுக்குத்திரமான உறுதிவார்த்தைகளைச் சொல்லி நீதிநெறிகுறையாமல் பாராளுமுறையைப் போதித்துப் பக்கத்தில் மந்திரிபோலிருந்து தந்திரத்துடனடத்துவதைவிட்டுப் பயன்படாத வார்த்தைகளைப்படித்து அதிசயத்தைச் சத்தியமென்று துடித்துச்சண்டைமுகத்தி லிழுத்துவிட்டுஇரண்டுபுறத்தும் இடியுண்டிளைத்து மருண்டுநிற்கவைத்து அந்தச்சமயத்தில்நீ அப்பால்நீங்கிப்போவதற்காகவோ?இவ்வளவு தூரநினைத்துச் சொல்லவந்தனை,உத்தமனே!அம்மட்டும் நீயறிந்ததுபோதும், இம் மட்டும் உன்கடையைக் கட்டென்று மூவரையும்வெல்லுங் கிருபர் சொல்லிமுடித்தனர். அவர்மொழியைக்கேட்ட கர்ணராசன் நெருப்பில்விட்ட நெய்போலுருகிப் புகைந்து கண்ணிரண்டுஞ்சிவந்து கடுங்கோபம்பிறந்து குற்றமாகியமொழியைமெத்தமெத்தப் பேசிக் கிருபருடைய முகத்தைப்பாராமல் மற்றவர்கள் பக்கமாய்த்திரும்பி அவர்கள் முகத்தைநோக்கிச் சொல்லத்தொடங்கினான்.

கர்ணன்பேசுவது.

---

முடியரசர்களே! வாசங்குலாவும் மாலைநிலாவும் வணங்காமுடிவேந்தனுடைய வளப்பங்களையும் சகலசுப சந்தோடசவுக்கியங்களையும் தாழ்ச்சியில்லாமல் தத்தம் பந்துவர்க்கங்களுடன் காலங்கருப்புத்தோன்றாமல் அனுபவித்துச் சிறுமையின்றிப் பெருமையாய் அண்டிப் பிழைத்தவர்கள் சண்டைமுகத்தில் வந்துநின்று அன்னமிட்டாரையிகழ்ந்து கன்னமிட்ட சத்துருவைப்புகழ்ந்து சித்தங்களித்துமகிழ்ந்து தோள்வலியைத் துதித்துத் தாள்வலியைமதித்

துக் கொண்டாடா நின்றவர்களால் நமக்கு வெற்றிகிடைக்காமற் போமோ? இவ்வுலகத்தில் "நன்னெறியில்லாமற்போமோ? மழைமாரி குறையுமோ? வள ரறங்குன்றுமோ! ஆ அகாலமே! வருகிறவன் மிகவுந் திறவானென்று புகழ்ந்து பேசுவதினால் பயனென்ன? அவன்மேல் உங்களுக்கு அன்பிருக்குமாகில் அவ் வன்பு விருதாவாய்ப்போகாமல் ஒண்டியாய்வருகின்ற அவனுடன்போய்க் கூடிக்கொள்வதுதகுதியாகும். அப்படிக்கில்லையென்னஅவரவர்களுடைய வீட்டுக்குப்போய்ப் பெண்சாதி பிள்ளைமுகத்தில் விழிக்கலாம்; இதற்கு யாதொரு தடையுமில்லை, நேரேவருகிற பார்த்தனுடைய பஞ்சைக்கு நானேயெதிராகின் றேன். அவனு என்னை வெற்றிகொள்பவன்? அடடா! பாதலமேழும் மேதல மேழும் பரந்த அகண்டசக்கரவாளப்பரப்பும் தப்பாமற் பெருமைபெறுஞ் சுப் பிரதீபக்கணைகளினால் சிவனுக்கெதிரான மதனைப்போலாக்கித் திக்குத்திகாந் தத்திலும் சொக்குப்பொடிபோல் தூற்றிவிடுகின்றேன், உங்களுக்குஞ் சேதி சொல்ல ஓலைவிடுக்கிறேன், நீங்க ளூருக்குப்போய் உறங்குங்களென்று உரத் துக்கொதித்து உரைத்துச்சிரித்தான். இப்படி கொடைக்கரசாகிய கர்ண ராசன்பேசினபோது சேமித்துவைத்த திரவியம் போலுற்ற சிலைநூலும்பெற்ற பலநூலுங்கற்ற வீட்டுமர் உன்மத்தனையொத்த துரியோதனராசனையழைத் துத் தராசினிலைபோல் நடுவுநிலைமையாய்த் தெரிவிக்கத்துணிந்தனர்.

## வீஷ்டுமர் சொல்வது.

திங்கள் மரபிற்றோன்றிய மங்களமுககுந்தர துரியோதனராசனே! சிலை யாசிரியனாகிய துரோணர்சொன்னது மேன்மைமிகுந்த பெரியோர்கள் பேச வேண்டிய விதிதான் சகலகலைஞானமுந் தேர்ந்த அசுவத்தாமா பரிந்தெழுந்து காரியாகாரிய மெடுத்துக்காட்டிக் கண்டிக்கவேண்டியகடமைதான்; மலைபோல் நிலைபெற்ற கிருபர் மடக்கிமடக்கித் தெரியவைத்தது மநுநெறிமுறைதான், இலைபோலொளிரும் வேலேந்திய கர்ணராசன் தராதரமறியாமற்பேசியது தகுதியற்றதுதான். பெரியாரை நிந்தித்துப்பேசப்போகாது,பெரியோர் சிந்தை நொந்தால் வறுமைநிறையும், வாழ்நாள்குறையும், இது எவர்களுக்கும் எப் போதுந்தகாது. மல்லின்வலியும் மலையின்வலியும் தளர்வில்லாமல்வளருந் தடம்புயனே! அரவக்கொடியும் அணிமணிமுடியும் பொறுத்த என் கண் மணியே! திரிதராட்டிரபுத்திரனே! துரியோதனனென்னும் என்பௌத்தி ரனே! நான்சொல்வதைக் கேட்கவேண்டும். மெய்யறிவுள்ள மேலோர் செய்கை யெவ்வகையெனில், தங்களுக்குத் தற்காலநடந்துவருகிற திசாபல னும் காலபலனும் தெய்வபலனும் செய்கையேதுவும் காரணகாரியங்களும் செவ்வையாகநாடித் தீரவாராய்ந்து, வெல்லத்தக்கவல்லமை தங்களுக் குண்டாயிருந்து துணிவுபற்றியபோதிலும், பகைவரை எவ்வாறுவெல்வது, அருமையாயிருக்கிறது, அசாத்தியமென்று அஞ்சாது அலட்சியமாகவெண்ணி அவசரப்படார்கள். தங்களாலாகின்ற காரியமானாலும், என்னவோ போய்ப் பார்ப்போமென்பார்கள் மேம்பாடுடைய விவேகிகள். அதெப்படியென்றால், முன்பின்னெண்ணாமல், வாய்க்குவந்தமட்டும் வல்லமைபேசி, எதிரியின்

பலத்தையெண்ணாமலேயேகிக் காரியங்களிற் பிரவேசித்து, நாலுபேரும் சீசீ யென்றுநகைக்க முகங்கூசி நாணிவந்தால், சொன்னசொல்லின்படி வெல்லாமல், பல்லைக்காட்டிப் பரதவித்து, ஓடிவந்துவிட்டானென்று, உலகமுள்ள வரையிலும் பெரியவசையாகப் பாடுவார்கள். ஆதலால், நல்லோர் அடங்கி யிருந்து காரியபாவங்களிலும் கருத்துமுற்ற நேரிட்டகாலங்களிலும் தங்கள் வல்லமையைக்காட்டித் தளர்ச்சிபெறாமல், புகழுடன் மனக்கிளர்ச்சிபெறுவார்கள். அப்படிப்பட்ட வீரர்களை யாவருங்கொண்டாடவேண்டுமே. இதுதான் பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் புத்திமான்களுக்கும் புத்தியீனர்களுக்கும் இருக்கிறவேறுபாடு. இஃதிப்படியிருக்க, நாம்பூசிக்கப்பட்ட ஆசாரியபுருடர்கள் யுத்தகளத்தில்வரும் சத்துருவைக்கண்டமாத்திரத்தில் வெற்றிபெற விரும்பிப் போர்முனைபுகுந்து வில்வளைத்துக் கூரியகணைகளைச்செலுத்திக், கருக்குலையச் செருக்கலையக், கால்மாடு தலைமாடாக்கி வெற்றிபெறக்கற்ற திடவான்களாவார்கள். இத்தன்மைவாய்ந்த உத்தமர்களை யுத்தகளம்விட்டோடிப்போங்களென்றும் எனக்குப் பின்னிருந்து பாருங்களென்றும் அஞ்ஞான கேவலனைப்போல், பெண்டாட்டிப்பிள்ளைகளைச்சேர்ந்து பிழையுங்களென்றும் இப்படிக்கேவலஞ் சொல்லலாமோ? அல்லாமலும், அவர்கள் முன்பாக நானே வீரமுள்ளவனென்றும் அருச்சுனனுக்கு வைரி நானேயென்றும் சொல்லப்போமோ? மானமுள்ளவர்கள் இவ்வாறு வெளிப்படையாகப் பேசி வெளிப்படுவார்களோ? மானங்கெட்டவர்கள் இன்றைக்கு வீரனென்பார்கள்; நாளைக்கு அடிபட்டோடுவார்கள்; எனக்கவன் பகையென்பார்கள்; நாளைக்கு உறவாடும்வேலையிலிருப்பார்கள்; எப்போதும் மெத்த நல்லவனென்பார்கள், சற்றுப்போனதைக்கெல்லாம் அப்பா! அவனா கெட்டவனென்பார்கள். அவர்களுக்கு ஈனமான மில்லாமையாலும், நாணம் வெட்கம் கவிந்தமையாலும், களிம்புநீங்கிய செம்புபோல்விளங்கி, முன்சொன்ன வார்த்தைக்குப் பின்சொன்னவார்த்தை மாறுபடுமேயென்றும் மதிகெட்டலைவார்கள்; மானமுள்ளவர்கள் சொற்சோர்வுபடாமலிருந்து, மானக்கேடுவராமற் காத்துத் தங்கள்பிராணனைத் துரும்பாய்மதித்து, சத்துருநேரிட்டால், யுத்தமும்பண்ணி வெற்றியும்பெற்று, வாகைமாலையுற்றுத் திரலட்சுமிக்கு இருப்பிடமாவார்கள். ஆதலால், ‘‘பழம்புண்ணாளி பரிகாரி யென்பதுபோல்’’ நாலு துறையுமறிந்த அநுபவசாலியாகிய பெரியோர்கள் இப்படிப்போனால், இப்படிமுடியும் இன்னதுசெய்தால், இன்னதுவருமென்று நம்போல்பவரைத் தடுத்துச்சொல்ல வெண்ணிய சம்பந்தமுண்டாயிருந்தபடியால், சொல்லிமுடித்தனர். வழியே போகிறவர்கள் நமக்கு நற்புத்திசொல்ல வருவார்களா? அப்பா துரியோதனா! முதுமறையாளராகிய இம்மூவரும் மும்மூர்த்திகளுக்கொப்பானவர்கள். சாபாநுக்கிரக சாமர்த்திய முள்ளவர்கள். இத்தன்மையராகிய சீவன்முத்தரை இக்கர்ணனெதிர்த்து இழிவாகப்பேசுதற்குத் தகுதியானவனோ? நல்லது. இப்போதுவருகிற அருச்சுனனுக்குமுன்னின்று, போர்கொடுத்து, வெல்லுந்திடமுள்ள ஆரியருள்ளமும் அவர்களுடைய காதுகளும் வெம்பிவெதும்பி வெந்து போகும்படியாய் விளைத்துவிட்டீர்களே. ஆகா! இப்படியும்பேசலாமா?

ஐயோவென்று தன்கையோடுகையறைந்து, முகம்வாடித் தேர்விட்டிழிந்து, சூரியன்போற் புகழ்படைத்த வீட்டுமர் துரோணர் கிருபர் அசுவத்தாமா இவர்களிடத்திற்குச் சென்றுநின்றனர். பிரதாபம்பெற்ற பாட்டனார் தேர் விட்டிறங்கு முன்னமே துரியோதனன்பயந்து, தானும் தேர்விட்டிறங்கி ஓடி வந்தான்.

அப்போது, துரோணர்முதலிய மூவருக்குஞ் சந்தோடமுண்டாம்படி யாகத் துரியோதனனைப்பார்த்து வீட்டுமர் சொல்லுகின்றனர். அப்பா துரி யோதனா! இம்மூவரும் எப்படிப்பட்டவர்களென்றால், தேவருங் கொண் டாடுகின்ற சிலைத்திறமுடையவர்கள். நம்மைப்போன்றவர்களால் வணங்குவ தற்கும் வழிபடுவதற்கும் வாழ்த்துவதற்கும் பூசிப்பதற்கும் விசுவாசிப்பதற் கும் நேசிப்பதற்கும் தருமநீதிகளை யோசிப்பதற்கும் தானம்பெறுவதற்கும் நன்னெறியாய்ந்து நன்மார்க்கம் போதிப்பதற்கும் நமதுமனத்தைச் சோதிப்ப தற்கும் கருணைக்கண்வைப்பதற்கும் ஆசீர்வசனம் செய்வதற்கும் உன்னதத் தானத்திலிருந்து உயர்ந்த பூஜிதையாய்ப் பெருமைபெறத்தக்க பெரியோர் கள். இவர்களுடையதிருவடி நமது மணிமுடிமேற் பதிக்கத்தக்கதன்றி வேற ன்று. இப்படியிருக்க, இவர்களைக்கோபித்து, அற்பமாகப்பேசி, அவமதிப்பாக மதித்து, அவர்கள் சிந்தைவருந்தத் திடுக்கிடச்செய்து, நாம் வீண்பழிசுமந்து வினைமூட்டை கட்டிக்கொள்ளுவதற்கு உரியோரன்றே. துரியோதனனென்று பாரமார்த்திய தருமங்களைப்படித்து, இவ்வளவுதானா உன்னுடையஇராசாங்க மென்று வெறுத்து, "பெற்றோர் அகடழித்தால் பிறரும் அகடழிப்பர்" என்னும் பழமொழியு மெடுத்துக்காட்டிப் பெரியாரைப்பிழைத்த பேதைமையால், கண்டவர் நின்றவர் கொண்டவர்கொண்டபடி கொழிப்பார்கள்; அண்டையய லுஞ்சிரிப்பார்கள்; சண்டையின்தன்மை உனக்கென்னதெரியும்; சாதுக்கள் சேதியை நீ யெப்படி அறிவாய்; சாதுசங்கப்பழக்கம் எவ்வாறு உணர்வாய்; காரியத்தாழ்வுசெய்து, கலகப்படுத்திக் கலைத்துவிட அறிவாய். போபோ வென்று கடுஞ்சொற்சொல்லி, ஆசிரியருடைய பாதங்களில் வீட்டுமர் வீழ் ந்து கையுமெய்யுங்குவிய நேயமும் அன்பு நிறைய, வெற்றிக்குவீத்தாகிய வேதவேதியரைப்பார்த்து சொல்லலாயினர்.

ஆசாரியசுவாமிகளே! தனுர்வேத சதுர்வேத சம்பன்னர்களே! சரணம் சரணம். புல்லறிவுடையோர் என்னசொன்னாலும், கற்றறிவுள்ள உத்தம ராகிய தங்களைப்போன்றவர்கள் அதைக் குற்றமாய்க்கொள்ளார்கள். மேலும், தங்களை யிகழ்ந்துபேசிய தறுகண்ணாளனை வதிலுக்கு தாங்களிகழாமல், சீவ காருண்யத்தால் பொறுக்கவேண்டும். அதுவுமல்லாமல், ஊழ்வினைப்பயத் தால் இகழ்ந்தவர்கள் மீளாநரகத்திற்கு ஆளாகாமல், இறைவனைக்குறித்து, மந்திரசெபார்ச்சனைசெய்து மன்னிப்புக்கேட்டு வரம்வாங்கி பொறுத்தலும் சான்றோர்க்குரிய, கடனாகையால், பூரணகிருபாநோக்கமுள்ள புண்ணியர் களே! இந்தப்புத்தியில்லாத பேயருக்குக் குற்றநேரிடாமல், சித்தமிரங்கித், திருவருள் பாலிக்கவேண்டும். பகைவர் நேரிட்டசமையத்தில், இப்படிதா பேசிய வீண்வீரப்பேச்சும் விருதாக்கைவீச்சும் பயன்படாது. காற்றுக்குப்

பதர் கலங்காதிருக்குமா? கலங்காமணியாகிய காரணர்களே! அடிமைபுகுந்த எங்கள்பேரில், அன்புவைத்து ஆதரிக்கவேண்டும். இனி நான்சொல்லவேண்டிய உபசாரமென்ன விருக்கின்றது, தனுர்வேதக்கடலும் சதுர்வேதக்கடலும் உள்ள நிறையக்கொண்டிருக்கும் உத்தமர்களே! குற்றமற்ற உங்களுக்கொப்பாக வேறொருவரை நினைக்கத்தக்கதோ? அதுநிற்க, மற்றொருகாரியம் குருகுலநாதனுக்கும் அவன்சேனைக்கும் ஏதாகிலும் ஒருதீங்குவருமாகில், அப்பழியாவது துரியோதனனுக் குரிமையாகிப் பிரியாதிருக்கிற தனுர்வேத சம்பன்னராகிய உங்களைச்சாராமல்விடாது. அப்போது, மதிப்பிலுயர்ந்த உங்களை நாடெங்குந் தூறுவார்கள்; மதிப்பற்றவர்களைக்குறித்து யாரும்பேசமாட்டார்கள். ஆதலால், தம்மனத்திற் பலவாறாகிய குற்றங்குறைகளிருந்தாலும், அவைகளைத் தீர்க்கவபிமானமாகப் பாராட்டாமல், தம்மையடுத்த மன்னவனுக்கு எப்போதுங் கீர்த்தியுண்டாம்படியாகச் சகாயஞ்செய்யவேண்டும். மநுநெறிமுதலிய மற்ற நூல்களிலும் சொல்லியிருக்குமுறையு மிதுதானே. அப்படிப்பட்ட சாத்திரங்கள் முற்றுங் கற்றிருக்குங் கருத்திலையுடைய கடவுளரே! மற்றோர்விண்ணப்பம். இக்கர்ணராசன் கூறியவார்த்தைகள் களங்கமுள்ளனவென்று சிந்திக்கவேண்டாம். அவனுடைய கருத்தை வேறுவகையாகக் கண்டுகொண்டேன். அதென்னவெனில், தானிப்படிப்பேசினால், உங்களுக்கு இன்னுமேலாகிய வீரமுந் தீரமும் உண்டாய் அருச்சுனனை வெற்றிகொள்வீர்களென்றும் துரியோதனன்மேற் கொண்டிருக்கின்ற உங்களன்பு வெளிப்படுமென்றும் புருஷார்த்தியாகச்சொன்னான். ஆதலால், தாங்கள்மனம் பொறுத்துக் காத்தருளவேண்டும். இதோ நமக்கெதிரில், அதாகதஞ்செய்யக் கருதிவருகிற சுவேதவாகனனென்னுங்காளை சூரியபாகவானுக் கொப்பாகக் காணுகின்றான். அவனுக்கு முன்னே நாமும் நமதுசேனையும் பனிபோலாய் விடுவோம். இது பிரத்தியட்சமாகத் தெரிந்திருந்தும், நீங்கள் மனவெறுப்படைவானேன்? அப்பால், தங்களுடைய சித்தமென்று அளவிடுதற்கரிய மிக்க பிரதாபத்தையுடைய வீட்டுமர் வேண்டிக்கொண்டார். உடனே, துரியோதனராசனும் கர்ணராசனும்பணிந்து, துரோணர் கிருபர் அசுவத்தாமா முதலிய மூவரையும் துதித்துச் சுவாமிகளே! விளைபப்போகின்ற தீங்கு இவ்வகையானதென்று தெரியாமல், ஏதோதோ பேசிவிட்டோம். எங்கள்பிழையைப் பொறுத்துக் காக்கவேண்டுமென்று, எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து வேண்டிக்கொண்டு அவர்கள் மனக்குறையை மாற்றினார்கள். இப்படி இவ்விருவரும் வேண்டிக்கொண்டபோது, சான்றோர் சினமாதலால், நீர்கிழிய வெய்த வடுப்போலுமாறி ஆசீர்வதித்துப் பக்கத்திலுள்ள பலரையுநோக்கிச் சிலமொழி பகர்ந்தார்கள். இதழ்விரிந்த வலம்புரிமாலையணிந்த குருகுலவேந்தனும் அங்கதேசத்தரசனும் எங்களைப்பேசியசொல்லானது முடிவில்லாத துன்பத்தை விளைத்துவிட்டது. இத்துன்பம் தேவர்கள் கைகூப்பிச் சிந்தித்துவந்திக்கப்பெற்ற விரதசீல வீட்டுமருடைய சாந்தவசனமென்னும் அமுததாரையால் தணிந்துவிட்டது. இனிச்சிந்தனையில்லை. இப்பால், நம்மேல் கோபங்கொண்டுவருகிற நரனுக்குத் தப்பிப்பிழைக்கத்தக்க வழியையும் மேல்நடக்க

முள்ளவர்கள் வண்மை உண்மை இன்மையுடையவர்கள், நல்லொழுக்கமும் அவ்வொழுக்கத்திற்குத் தக்க நடைப்பழக்கமுமுடையோர், பொறுமையற்றவர்கள் அயலார்சொத்துக்கு ஆசைவைக்காதவர்கள், புறங்கூறாதவர்கள், அக்கிரமத்திற்கு உடன்படாதவர்கள், குலமுறைகுன்றாதவர்கள் ஆசையால் அவர்களொருநாளும் அபகீர்த்திபெறமாட்டார்கள் அபச்சயமடையார்கள். இப்படிப்பட்ட இதயசுத்தியுள்ளவர்கள் இராசசபையில் ஒப்புக்கொண்டபோன தவணை நாள்கழிப்பதற்குமுன்னமே தாராளமாகச் சபைக்குவருவார்களோ? அவர்கள் சாஸ்திரங்கல்லாதவர்களோ? கணிதநூலுணராதவர்களோ? நல்லது அப்படி தப்பிவரும் தன்மை பாண்டவர்களிடத்தி லுண்டாயிருக்குமானால் அத்தினபுரத்தில் நீங்களாடிய தலையுருந்த ஆட்டத்திற்கும் சொக்கட்டானாட்டத்திற்கும் துரோபதையைத் துகிலுரிந்த வாட்டத்திற்கும் இராசசபைகூடிய உங்கள் துன்மார்க்கக்கூட்டத்திற்கும் உட்பட்டுத் தடைக்கஞ்சிய நாகம்போலும் கரையின்றிக் கட்டுப்பட்டிருக்குங் கடல்போலும் பெருமையாயிருப்பார்களா? இதனையாவது நீதெரிந்துகொள்ளவேண்டாமோ? கழனியிற்றழைத்த கரும்பஞ்சோலையின் செழுமையைச் செந்நெற்பயிர்காட்டவும் செந்நெற்பயிரின் தொழுமையைப் படப்பையில்வளர்ந்த கமுகஞ்சோலைகாட்டவும் கமுகஞ்சோலையின்வளமையை முடக்கின்றியுயர்ந்த தென்னஞ்சோலை தெரிவிக்கவும் தென்னஞ்சோலையின் சீர்மையை இன்னுமுள்ள சோலைகள் விளக்கவும் தங்குநிலவளந்தனையுடைய குருநாட்டுக்கதிபதியான குமாரனே! பன்னிரண்டாண்டு வனவாசம்பண்ணிய பாண்டவர்கள் சந்திரனுடைய சாரகதியினால் அஞ்ஞாதவாசவாண்டொன்றையும் நேற்றோடு தொலைத்துவிட்டார்கள்; நீயதைக்குறித்தையப்படவேண்டாம்; பதின்மூன்றுவருடமும் போக்கினதால் உங்கள் நாட்டை விட்டுவிடுகிறேனென்று நீ ஆதியிற் சொல்லியவண்ணம் பாண்டவர்களுக்குரியதாய பாகத்தைக்கொடுத்து அவர்களுடன் கலப்பது இராசதர்மத்திற்கும் உத்தமம் சத்தியவாக்குத்தப்பாது இப்படி நடவென்று மனத்தழுக்ககன்ற வீஷ்டுமர் சொல்லிமுடித்தார்.

இவ்வாறுகச்சொல்லிய குலகுருவாகிய பிதாமகனைத் துரியோதனமகாராசன்நோக்கி முகங்கருகி மனங்குறுகி இதயந்தளர்ந்து எங்களையாளேவ! தேவரீர் சொன்னசொல் எனக்குச்சம்மதமில்லை முன்னே நிச்சயித்தனுப்பிய பதின்மூன்றாண்டுங் கடந்துபோனால் தானென்ன? இன்னமும் ஒருமுறை வனவாசம்பண்ணிவர ஓட்டிவிடுவேனேயன்றி நான் நாடுகொடுக்கப் போகிறதுமில்லை நீங்களந்தத் தவணைநாளைநாடிக் கணக்குப்பார்க்கவேண்டுவதுமில்லை, இதோ மின்னல்போற் பிரகாசிக்கும் வில்வேந்தர்களுக்குமுன்பாக விளம்புகின்றேன். சங்கினமீன்ற முத்துங்களால் அடைபடுமடைநீர் தடைபடாதோடுங் கழனிகள்சூழ்ந்த நாடேனும் நகரேனும் ஐவர்க்களிக்கமாட்டேன், அப்படியேனில் நான் என்னகொடுத்து இணங்கினாலும் என்னிடத்திலாசைவையாமல் எந்நாளுஞ் சத்துருவாயிருப்பர்களன்றி எனக்குமித்துருவாகார்கள். ஆகையால் நான்கொடுத்துப் பொல்லாங்கு பெறுவதைவிடக் கொடாமல் விரோதப்படுவதே நன்மை; அவர்கள் வேண்டுமானால் சன்[redacted]னி. [redacted]

தையும்வென்று தாமே ஆளட்டும், அவர்கள் செல்வஞ்செருக்கி வாழுங்காலத்தில் துரியோதனனால் சுகப்பட்டோமென்று சொல்லிக்கொள்வார்கள். மேலும் எக்காரிய மெப்படியானாலும் எவர்களெவ்வாறு சொன்னாலும் அவைகளுக்கெல்லாம் அசையாமலிருந்து ஒரேநிலையாகப்போர்புரிந்து போர்முனையிலிறந்தானென்று எனக்கொரு கீர்த்தியுமுண்டாம் என்றான்.

இப்படி வணங்காமுடிபெற்ற மன்னன் திரமாகச்சொன்ன கருத்தையும் வீஷ்டுமர் சொல்லிவந்த வகையையும் காலநிதானத்தையும் படைமன்னர்களுடைய எண்ணத்தையும் வெற்றிமாலை பொறுத்த துரோணாறிந்து பெரும் பிரதாபமும் பெருமையும்படைத்த கௌரவகுலச் சிங்கமே! பாண்டவர்களுக்கு நாடுகொடேனென்று நீசொன்னது மெய்யானால் உனக்கு அவர்கள் ஒடுகொடுப்பார்களென்பது உண்மையே இனியொருகணப்பொழுதும் நீயிவ்விடத்தில்நிற்கப்போகாது, எங்களையுந்திரமாகநம்பாதை, நாமிப்போது கைக்கொண்டிருக்கின்ற மாட்டையோட்டிக்கொண்டு ஒட்டமுநடையுமாய் ஊர்போய்ச் சேருகையில் நீயும்வெற்றிபெற்றதுபோலாம். நமது யுத்தியும் நிறைவேறும் இவடத்திலிருந்து போர்புரிந்து வெற்றியடைந்து போகலாமென்றால் நாம் ஒட்டிய மாட்டையுங் குருநாட்டையு மிழந்து அநியாயமாக உயிரிழக்கவேண்டிவரும்; ஆனதால் நம்முடையசேனைகளை இரண்டுபிரிவாக்கி ஒருபிரிவை ஆவினங்களுக்குக்காவலாக அழைத்துக்கொண்டு நீ அத்தினபுரம்போய்ச்சேர்வதே உத்தமம். மற்றசேனைகளுடன் நாங்கள் கும்பலாகநின்று வருகின்ற தனஞ்சயனை உன்மேல் வரவொட்டாமற்றடுத்து எங்களாற்கூடியமட்டுஞ் சண்டைதொடுத்துச் சமயம்பார்த்து நாங்களும் பட்டணம்வந்து சேர்ந்துவிடுகிறோம்; விரதங்கெட்டாலுஞ் சுகந்தக்கவேண்டும் சுகங்கெட்டாலும் விரதந்தக்கவேண்டும்; இரண்டுங்கெட்டால் என்னபலனுண்டாம். இறைவனே! நாங்களெப்படியாகிலும் அடிபட்டு அவதிப்பட்டுத் தட்டுக்கெட்டுத் தடுமாறிவந்தாலும் விராடபுரத்திற்குப் போய் மாட்டுமந்தைகளை மடக்கிவந்தோமென்று பெருமைபாராட்டிப் பேசித்திரியலாம், இழிவென்பது நம்மை யெட்டிப்பாராதென்று தனுவேதசம்பன்னருரைத்தருளினார். அக்காலையில் வில்லாளியாகிய வீட்டுமரும் கிருபரும் மகிழ்ந்து அந்தோ! இந்தயுத்தி மேன்பாட்டை விளக்குமென்று விளம்பிஇரத கச துரக பதாதிகளை இருகூறாக்கி ஒருகூறு துரியோதன மகாராசனுக்குத் தேகசவரட்சணைக்காவலும் மற்றோர்கூறு பசுமந்தைக்குக் காவலுமாக அமைத்து அத்தினபுரத்தைநோக்கிப் போம்படியாக அனுப்புவித்தார்கள்பெரியோருரைத்த பேச்சின்படி உடன்பட்ட பிரதாபமுடிவேந்தன் புறப்பட்டு அரவக்கொடிநாட்டிய தேரிலமர்ந்து ஆனினங்களையும் அநேகவீரப்படைகளையுந் தனக்கு முன்னாகநடத்தித் தானுந்தேரை விரைவிற்செலுத்திக்கொண்டு சந்தடி செய்யாமற்போயினான்.

இப்பால் துரோணர்கிருபர்வீட்டுமர் அசுவத்தாமா கன்னன்முதலியமன்னர்மன்னர்களும் இங்ஙனநின்ற சேனைப்பிரிவைக் கடல்போற் பெருக்கிக்கொண்டு எய்துந்தாமும் எதிர்த்திருந்தார்கள். எவ்வகைப்பட்ட திறமுடையோ

ரும் இவர்களுக்கு முன்சென்று நின்று யுத்தஞ்செய்வது மெத்தவும் அருமையென்று இளைத்துவாடி ஓடிப்போம்படியாகச் சிலசேனைகளைப் பலசேனைகளாகப் பலசேனைகளைச் சிலசேனைகளாகத் தோற்றும்படியமைந்து உத்தரதிசைக்குக் கிருபர் தட்சணதிசைக்கு அஸ்வத்தாமா இந்திரதிசைக்குக் கர்ணன் தூசிப்படைக்குத் துச்சாதனன் கூழைப்படைக்கு விகர்ணன் இவர்களை மெய்க்காவலாக நிறுத்திச் சேனைகளுக்கு மத்தியில் சகுனி சயிந்தவன் சோமதத்தன் பாகுலீகன் முதலாகிய முதன்மையோரை யிருத்திப் புறமிராப் புகழ்பெற்ற புண்ணியசீலனாகிய வீட்டுமரும் மங்களம்பொங்கி மகிழ்ச்சிதங்கிய துரோணரும் சேனைகளின் முனைமுகத்திலும் நடுநிலத்திலும் முயற்சிவிடாமற் பொருந்தினார்கள். வானமளாவிய குடைகளும் வாளொளிமின்னும் படைகளும் வகைவகையானகொடிகளும் வளைதடிமுதலிய தடிகளும் பாலா பல்லயங்களும் மகரதோரணங்களும் நிறைந்து முரசு காகளம் கொம்பு பம்பை தாபூர வீரசின்னம் சங்கம் பேரி மற்றுமுள்ள வாத்தியங்களெல்லாம் பூமி செவிடுபட முழக்கி இத்தன்மையாக ஆர்ப்பரித்திருந்த இவர்கள் துணியும் சேனாசயினியங்களைத் திருத்தியமைத்ததிறமும் துரியோதனன்பசுமந்தையுடனீங்கிப் பட்டணம்போகின்ற ஒழுங்கும் தேவேந்திரன்கண்டு விட்டேற்றியாய் ஒருதேரில்வருகிற அர்ச்சுனனுக்கும் கெட்டிக்காரத்தனமாய்ப் பட்டணம்போகின்ற கௌரவர்களுக்கும் இவ்விடத்தில் நடக்கப்போகின்ற யுத்தத்திறத்தைப் பார்ப்போமென்று அக்கினி எமன் வருணன் குபேரன் பிரமன் விஷ்ணு உருத்திரன் முதலாகிய சகலதேவதைகளுடனே அந்தரநிறைய இந்திரவிமானத்தின்மேல் வந்துநின்றனன்; அவ்வேளையில் பரவாசுதேவ னநுக்கிரகஞ்செய்ய அவனுக்கிணைப்படி சொர்க்கலோகநிவாசம்பெற்ற அஷ்டகன் வசுபத்திரன் வாருகன் கருடன் மாந்தாதா சிபி புரூரவன் கார்த்தவீரியன் பரதன் பகீரதன் சகரன்தசரதன் அரிச்சந்திரன்பாண்டு இவர்கள்முதலாகியமகாராசரும் விருதுடால்மேளங்களுடன் அரிச்சந்தனாதி கற்பகப் பூமாலைவாசங் கமகமவென்று பரிமளிக்கவந்து விளங்கி வேடிக்கை பார்த்திருந்தார்கள்; அவர்களில் தன் மகனைக்கண்ட சந்திரகுலத்தோன்றலான பாண்டுமகாராசன் மகிழ்ச்சி கொண்டு இரண்டுதோளும் பூரித்துத் திரண்ட உடலும்பூரித்து இன்பமதுவுண்டு மகிழ்ச்சியுமேற்கொண்டு களித்தவர்போல் இந்திரனுக்கு அருகாசனத்திற்பொருந்தியிருந்தான்.

இப்படி தேவதைகளுடன் தேவேந்திரனும் வானத்தில் தானமில்லாமல் விமானத்திலிருந்து வேடிக்கை பார்க்கும்போது தேனிறைந்த மாலைபுனைந்த சூரியகுலத்தோன்றல்களும் சந்திரகுலத்தரசரும் சற்றும் ஏமாறாமல் விழித்த கண்விழித்த வண்ணம் பார்த்துக்கொண்டிருக்கும்போது விசயப்பிரதாபவீர காண்டீப விசயன் பானுகோடி சொலிதசோப்பியம்போல் வெளியேவந்தான். இப்படி தேர்செலுத்தி அணிவகுத்திருக்குங் கௌரவசேனைக்கெதிரில்வந்த காண்டீபனது தேரொலியென்னும் பேரொலியால் அட்டகிரிகளும் அட்டநாகங்களும் அட்டதிக்குகளும் உலகபாலர்களும்அட்டவசுக்களும் நடுக்கிட்டுத் திகைத்தார்கள். அத்தேரிற்பூட்டியகுதிரைகளின் அங்குரத்தெழுந்த தூசிப்

படலமானது எண்டிசையுமொய்த்து எழுகடலுந்தூற்றுச் சக்ரவாளச்சுற்றும் அண்டமுகடுமுற்றுங் கப்பிக்கொண்டதுகள் வேடிக்கைபார்க்க நின்ற தேவருமொதுங்கினார்கள். சக்ரவர்த்திகள்முதலிய யாவரும் பதுங்கினார்கள். சேனைமுனையிற்செறிந்திருந்த தீரருநடுங்கினார்கள். சேனையுஞ்சேனாபதிகளானவீரரும் ஒடுங்கினார்கள் தங்கள்தங்கள் சீவன் தப்பாமயங்குகின்ற துரியோதனனுடைய நால்வகைச்சேனைகளின் திறத்தையும் சுற்றுநின்ற படைவீரர்களின் மறத்தையும் எளிதிற்றெரிந்துகொண்ட விசயன் தனக்குச்சாரதியாகிய உத்தரகுமாரனைப்பார்த்து, எதிர்ச்சேனைகளிருக்கின்ற இறுமாப்பைப்பார்த்தாயா? நீரோட்டமுள்ள நெடுங்கடல்போல், நிலைகொள்ளாதிருக்கின்றது, ஆனாலும் நமக்கொரு இலட்சியமன்று. இப்போதவர்கள்செய்திருக்கிற உபாயமான அபாயத்தை உனக்கு நானெவ்வாறுரைப்பேன், என்னுடைய வெட்கம் என்வாயை மூடுகிறது நம்மையவர்கள் மோசம்பண்ணிவிட்டார்கள் அந்தச்சங்கதியை உனக்குச் சொல்லாமல் வெல்லக்கூடாது. அதென்னவென்றால் காட்டுக்குப்போன பாண்டவர்களில் பார்த்தனே நலைமாட்டுக்குத் தீங்குவிளைக்க வந்துவிட்டான்; நீகாட்டுக்கு நல்லதுணையானதால் நாம்கூட்டிய மாட்டுமந்தையை ஓட்டிக்கொண்டு உன் வீட்டுக்குப்போய்விடென்று வணங்காமுடி மன்னனுடைய மனத்தைத்திருத்திப் பாதிச்சேனையை அவனுக்குக்காவலாகப்பொருத்தி யனுப்பிவிட்டு மீதிச்சேனையை நமக்கெதிர்நிறுத்திப் போரணிவகுத்துப் போராட நினைத்துப் பெரியோர்கள் நிற்கின்றார்கள், இவர்களுடன் யுத்தஞ்செய்வோமானால் பசுக்கூட்டங்களோடுதுரியோதனன்பட்டணம்போய்ச்சேர்ந்துவிடுவான். அப்பால் இவர்களைவென்று நாமடையப்போகிற பயனென்ன? ஆகையால் நமக்கு நேர்நிற்கிற பெரியோர்களுமறியாமல் மன்னனுக் குரியோர்களு மறியாமல் நாம்செய்யப்போகிறவேலை இன்னதென்று யாருங்குறியாதிருக்கும்படியாகத் தேரோட்டிக்கொண்டு போகாநின்ற துரியோதனனுக்குக் குறுக்கே போய்நின்று மறித்துவருத்தி நமதுமாட்டைமடக்கிக்கொள்வது மதியூகியாகிய மன்னவர்செய்யும்போர்த்திற உபாயமாவது, மைந்தனே! நாம் மீட்கவந்த பசுமந்தைகள் அத்தினாபுரம்போய்ச் சேர்ந்துவிட்ட பின்பு அவ்விடத்திலுள்ள பல்லோரையொழித்தும் வல்லோரையழித்தும் பிரயோசனமென்ன? ஆரியக்கூத்தாடினாலும் காரியத்திற் கண்ணிருக்கவேண்டும், ஆதலால் முன்னதாகக் பசுமந்தைகளைமடக்கி விராடபுரத்திற் கனுப்பிவிட்டு அப்பால் பெரியோர் முதலிய உரியோர்களுடன் சமராடித் துரியோதனனையுஞ் சுற்றவிட்டு வெற்றி பெறுவதற்குத்துரிதமாயிருக்கின்றோம், ஒருவேளை நாம் துரியோதனனைத்தடுக்க நாடிப்போங்காலையில் இந்தப்பெரியோர்கள் மேல்விழுந்து போர்கொடுப்பார்களானால் நாம் நேர்புகுந்து கடுங்கணைப் பிரயோகங்காட்டிக் கலங்கிக்கண்ணுக்குக்காணாமல் ஓடிப்போம்படியாய் விலக்கிக்காரியானுகூலங் காண்போம்; இதைவிட யோசனையில்லையென் றிசைத்து எக்களிப்போடெழுந்த பற்குனனைப்பணிந்து உத்தரகுமாரன் சித்தமகிழ்ந்து சரிதான், இப்படிப்பட்ட காலத்திலன்றோ ? என் சாமர்த்தியத்தை யறியவேண்டும் அத்தனே ! என்று குதிரைக் கடிவாளத்தை குறுக்கிப்பிடித்துக் குலுக்கி விடுத்துச் சிகரக்குன்றம்

போன்ற தேரைச் செண்டுபோலெழுப்பிப் பெரியவர்களுக்கு வலசாரிவருவது போல் சூழ்ச்சிகாட்டித் துரியோதனன்போன திசையைத்தொடாமல் மேலுக்குமேலாக மேற்றிசையைநோக்கி விரைவில்விட்டுவிட்டான்.

அக்காலையில், அனுமக்கொடியாடுந்தேர்மேல், அமர்ந்துவருகின்ற அருச்சுனனே தென்றிசையணியிலிருந்த சிலைக்குருவாகிய துரோணாசாரியருக்குக் குருபாதவணக்கம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று குறித்துக், காண்டீபம் வளைத்து, நாணேற்றி, நாணோசைகாட்டி, இரண்டுகணையெடுத்துப் போற்றிப் பணிந்துவிடுத்தான். காமதகனனாகிய கண்ணுதல்பால்கடாட்சம்பெற்ற காண்டீபன் அபிமந்திரித்துவிட்ட அத்திரம் இரண்டும் அந்தரம்புகுந்து, ஆகாயகங்கையைகவர்ந்து, அலர்ந்துவிரிந்த மலர்களைப்பறித்துவந்து, துரோணாசாரியருடைய பொன்னடிமேற்பொழிந்து, பூசித்துவரும்போது, பின்னும் இரண்டு பாணங்களைப் பிரயோகஞ்செய்தான். அவ்விரண்டுந் திரண்ட உருண்டைபோன்ற அண்டத்திற்பாய்ந்து, அவற்றுள் ஒன்றுபிரிந்து, ஆரியனைச்சூழ்ந்து வலம்வந்து திருவடியிற்பணிந்தது. மற்றொன்று பதின்மூன்றுவருடம் வனவாசஞ்செய்து, அஞ்ஞாதவாசமும்பண்ணித்துன்பந்தொலைத்துத் தேவரீருடைய அனுக்கிரகத்தால் இன்பம்பெற வெளிப்பட்டோர்; என்னுடன்கூடவே யாவரும் க்ஷேமமாயிருக்கின்றார்களென்று சுபஞ்சொல்ல வந்ததுபோல் ஆசாரியருடை செவியினிடத்திலொதுங்கி நீங்காமனின்றது; இந்தவிந்தையைக் கண்ட துரோணாச்சாரியர் சிந்தைதளர்ந்து திப்பிரமைகொண்டு தியக்கமடைந்து ஒன்றுந்தோன்றாம லிருந்துவிட்டார். அவர்தன்மையி லிருக்கும்போது மேற்குத்திசையிற்படர்ந்த அர்ச்சுனனே அங்கிருந்த தங்கள்குலமுதல்வனாகிய வீஷ்மாசாரியனைக்கண்டு அவனைத் தொழும்படியாய்க் கருதித் துரோணாசாரியனைக் குறித்துந் தொடுத்த பிரகாரம் நான்குபாணம்விடுத்துக் கங்கைநீராட்டிக் கர்ச்சித்துப் புஷ்பங்களினால் அர்ச்சனைபுரிந்து செவிகளுக்கு க்ஷேமசமாசாரந்தெரிவித்து வடதிசையில் மேருவைப்போல்படைக்காவலிருக்கின்ற கிருபாச்சாரியருக்கும் நான்குபாணஞ்செலுத்தி வந்தனைவழிபாடுசெய்து காதுகளிடத்துங் கணைவிடுத்துக்காட்டித் தன்மேல் அவர்கள் நெடுநாளாக வைத்திருந்தகாதலை விருத்திசெய்து அவரவர்கள் தம்மைத்தாம் மறக்கும்படியாகத் தலைமயக்கங்கொள்வித்து இந்தச்சமயத்தில் தன்னையவர்கள் தொடாதிருக்கவும் தேடாதிருக்கவும் மோகனமுண்டாக்கிச் செவ்வானத்திற்கலந்து மறைந்துசெல்கின்ற செங்கதிர்ச் செல்வனுடைய தேர்போல் தன்னுடைய சேனைச் செந்துகளால்மறைத்து அருகுநிறைந்த பெரியோர்களும் பிறமன்னர்முதலாகிய யாவரும் அறியாதிருக்கும்படியாக அவர்கட்குப்பின்பக்கமாக நெறிபற்றிப் போயினான். இவ்வண்ணம் பார்த்தனேறிய தேரை மூர்த்கண்யமாகத்திருப்பி முடுக்கிவேகமாய்விடுத்த உத்தரகுமாரன்திறத்தை வீஷ்மாசாரியர் துரோணாசாரியர் கிருபாசாரியர் அஸ்வத்தாமாமுதலிய யாவரும்பார்த்துப் பார்த்தனுக்குத்தகுந்ததேர்ப்பாகன் அகப்பட்டானென்று பட்சமாய்ப்பேசி மேலும் என்றுங்காணாத அதிசயம் இன்று கண்டவர்களைப்போல் ஆநந்தங்கொண்டு ஆ தெய்வமே! இந்நாள்வரையிலுந் தனுவேதங்கற்றுச் சம்பிரதாயமுற்று மந்தி

ரார்த்தங்களைப்பெற்றுச் சமர்த்தாயிருந்து சப்பிரமமாய்க் காலங்கழித்து வாழ்
ந்த நாம் கதையிலுங்கேட்டில்லாத கற்பனையிலுங் கண்டறியாத அங்கிதியாதி
சயமான அம்புகளையனுப்பிக் கும்பலினின்ற நம்மைக்குறித்து அன்புபாராட்டி
னானே யென்று ஒருவரோடொருவர் கூடிக்கதித்து ஆகா! இந்தவல்லவனுக்
கீடாகிய புருஷர்களுமுண்டோ? அடடா! விசயன்விட்ட கணைகளில் ஒரு
கணையானது ஆகாயகங்கையை அள்ளிக்கொண்டுவந்து சளசளவெனப்பொ
ழிந்து சரணங்களில் அபிஷேகம்பண்ணவும் மற்றொருபாணம் புஷ்பங்கள் பறி
த்துவந்து அர்ச்சனைசெய்யவும் மற்றொரு அஸ்திரம் வஸ்திரம்போல்வளைந்து
வலஞ்சுற்றிவரவும் பின்னுமோரம்பு தன்செய்தியைக்காதிற்போதிக்குந் திறம்
போலிளையவும் இப்படிக்கெல்லாஞ்செய்த பிரதாபம்வாய்ந்த பெருமையெய்
ந்த தனுமறைமுதலிய சாஸ்திரங்களாய்ந்த தனஞ்சயன் சண்டைமுகத்திற்
றொடுக்குஞ்சரத்தைத் தடைசெய்யப்படித்த தாட்டிகர்களுமுண்டோ? இதன்
றியும் பெரும்பாரமேறினுந் தளர்ந்துவளையாத கற்றூணைப்போல் எத்தனை
கோடி கொடிப்படைகள்சுற்றினுஞ் சற்றுமஞ்சாத தனஞ்சயனொருமெத்தவல்
லமைகொண்டு ஒருசாரதிதுணையைக்கண்டு சண்டைபோடத் தலைப்பட்டிருக்
கின்றான், இன்றுஇவனது போர்முகத்திற்கு நேர்முகங்காட்டித் தேர்செலுத்தி
யார்வெல்லப்போகிறார்கள். நாம் பிழைக்குமாறெப்படி? என்னிடத்திற் கற்
காதகணையுங் கற்றிருக்கின்றானே கங்காபுத்திரனேயென்று துரோணாசாரியர்
கண்கலக்கப்பட்டுக் கூற விஷ்டுமாசாரியர் சொல்லத்தொடங்கினர்.

ஐயா துரோணாசாரியரே! அநுமக்கொடிபடைத்த அருச்சுனராசன்
எனக்கு மரியாதை நடாத்திய மந்திராஸ்திரத் திறத்தையும் நம்மேலவனெதிர்
த்து நாணுமல்வருகிற மனோதிடத்தையும் நிதானிக்குமிடத்து அவனோடெதிர்
த்து அவனைத்தொடர்ந்து அமராடிவெல்வதற்கு யாவராலுங்கூடுமோ? அல்
லாமலும் பாஞ்சசன்யப் பரந்தாமனாகிய ஸ்ரீகண்ணபிரானுடைய பாம
தயாள பாத்திரனாயிருப்பவன் தந்தையாகிய இந்திரனுடைய சொந்தக் கரு
ணையையும் மந்திரக்கணையையுந் துணையாகப்பற்றி அன்புகூர்ந் தயைக்கும்
இடமாயிருப்பவன் ஏற்றுவாகன மூர்த்தியாகிய கூற்றுதைத்தோனது கடா
ட்ச வீட்சண்ய முண்டாயிருப்பவன், இப்படிப்பட்ட நல்வினைப்பயனுற்ற
நரன்றன்னைச் சற்றேனும் சயம்பெறுகின்ற தன்யரில்லையே! நாமென்னசெய்ய
லாம்? நமதுசொல்லை உட்கொள்ளாமல் தள்ளிநடக்குந்துரியோதனன்றுள்ளும்
காளைபோற் றுடித்துப் பாண்டவருடன் சொக்கட்டாடி அவர்களுடைய
நாடுநகரத்தைப்பிடுங்கிக்கொண்டானே. அதுவுமல்லாமல், பட்டமகிஷியாகிய
பாஞ்சாலியம்மனைத் தலைமயிரைப்பற்றியிழுத்துச் சபையேற்றுவித்து, துகி
லுரிந்து, மானபங்கம்புரிந்து பன்னிரண்டாண்டு வனவாசம்பண்ணப்போக்கிய
அபாக்கியனானவன் ஒருபோதுஞ் சிலாக்கியனாகவேமாட்டான். சத்தியவாக்கிய
னான தருமராசனுக்கிளைய தம்பியினாற்கெடுவான்; உயிர்விடுவான். இன்றை
க்கு அவமானப்படுவான். இதற்குச் சந்தேகமிராது. அதப்படியிருக்க, அணி
நிறுத்திச் சேனைக்குக்காவலாயிருந்த நம்மை ஆவலாய்ப்பூசைபண்ணிப் போய்
விட்டானே; அவன்செய்த உபசாரத்திற்கு நாம் ஒருஆசீர்வசனமுஞ்சொல்ல

வகையில்லாமற் போனோமே. நமக்கெதிராகிவந்த மலைப்புயன் சிலைக்காரன் வானவர்கோன் மைந்தன் நந்தனையனாகிய நரநாமனுக்குச் சரியாகாமற் போனோமே. நல்லது, நாமடக்கிய மாட்டுமந்தையை விடுவிக்கவந்தவன்படை மேல், விழுந்து அமராடவேண்டுமே. நம்மையுமயக்கி, நமது சேனையையும்விலக்கி, நான்குதிக்குங்கலக்கி, ஊனைநாடிப்போகின்ற துரியோதனனையும்விடாமல் நாடிப்போகுமன்போலிருக்கின்றதே. ஐயா! மற்றமொழிகளை யுத்தமுனையிற்கலந்துபேசித் தெரிந்துகொள்ளுவோம். வெற்றிவீரவிசயன் போனவழியைச்சுற்றிப்பாருங்கள். பிரசித்தனாகிய துரியோதனனை உற்றுக்காத்திருங்கள். யாருஞ்சேர்ந்துவாருங்கள். பித்தப்பிரமைகொண்டு தியக்கப்படாதீர்கள், சிலை விசயன்சேனைத் தெற்கு மேற்கு வடக்கில்விட்டாலும் கிழக்கில் விடாதீர்கள். சேனைமன்னர்களையென்று யானை சேனை பரிவாரங்களுடனின்று ஒன்றுந் தோன்றாமல், யோசித்துக்கொண்டு ஒருவாறு உறக்கம்பிடித்திருந்தார்கள். அத்தருணத்தில், கடுமையாகவீசிய காற்றின்வாட்டத்தால் கருங்கடலைக்கிழித் தோடுகின்ற கப்பலைப்போல், திக்குத்திசைகள் கெங்குவிட்டனைய, மடமட கடகட தடதட டுடுடு படபடவென்று மண்ணுறுங்குலுங்க, விண்ணுறுங்கலங்கப், பார்ப்பதற்குக்கண் ணுமயங்க, மனோவேகத்திலு மிகுந்தவேகங்காட்டிச் செரத்தேரையோட்டிக், துரியோதனனுடன் ஓட்டமுமாய்ச் செல்லுகின்ற சேனைக்குமுன்சென்று, செயஞ்செயமென்று கூவுகின்றான். அப்போது, அந்தப்பசுக்கூட்டங்களுக்குக் காவலாகப்போகின்ற ஆயர்களும் கோபச்சத்தங்கூறும் வாயர்களும் யுத்தஞ்செய்யவிரும்பிய வீரர்களும் ஆயுதபாணிகளாய் அதிர்ந்து, யாருடனும் போர்புரிவதற்கு எதிர்த்து, வாளும் வேலும்பிடித்து, விதிர்த்து ஓடும்படைகள் உரக்கக்கொக்கரித்துக்கர்ச்சிக்கும் பலத்தை அருச்சுனன் அறிந்து ஏ ஏ யென்றிரைந்து, இருதோளும் பூரிக்க விரைந்து, காண்டீபத்தில்நாணிபிணித்து, காய்த்துத் தோய்த்துக் கடைச்சல் பிடித்த கணைகளைத்தொடுத்து, ஆகர்ணபரியந்தமும் இழுத்தான். அச்சமயத்தில், கிரீடியின்தேரோடிவந்து கிட்டிவளைந்த கெடுதியைச் சடுதியிற்கண்ட துரியோதனன் துயரப்பட்டுப் பெரியோர்கள்பேசிய மொழிகளைக்கேளாமற் பெருமோசமாயிற்று. அவர்களாங்கும் நாமிங்குமாகப்பிரிந்து இவனிடத்திலகப்பட்டோமேயென்று பெருமூச்செறிந்து, சற்றுநிதானித்துச் சித்தம்பேதித்து ஓடவுங்கூடாமல் திரும்பிப்போய் வீட்டுமர்முதலியவர்களுடனும் கூடவுங் கூடாமல் வாடிவதங்கி மரத்தினிழலிலொதுங்கி, மறைதலும் வெளிப்படுதலுமின்றிப் பதுங்கிநின்றான். இவ்வாறு, தீரகண்டகனாகிய துரியோதனன் மதின்மேற் பூனைபோற் சமயத்தைநோக்கி, இளைத்துக்காட்டிய செய்கையையும் அவன்சேனைகள் சிலைவிசயனால் வளைக்கப்பட்டவகையையும் வீரகண்டை தரித்த விராடராசகுமாரன்தெரிந்துகொண்டு, விசயலட்சுமியருளால், இன்று நமக்கு செயமென்று முகமலர்ந்து, விந்தகிரிபோலமைந்த தன் சொந்தரதத்தை வாரிதியிற்சுழன்ற மந்தரகிரிபோற்திருப்பிக், கரகர கரகர வென்று கர்க்கரத்தொனிகாட்டி விற்கரத்தனாகிய விசயனைநோக்கினான். அவ்வேளையில், விசயனோ தான் பேரிடிமுழக்கம்போல் காண்டீபம்வளைத்து நாணிதொடுத்து

ஷ்டங்காரஞ்செய்தான். அத்தொனியை வீஷ்டுமர் கிருபர் துரோணர் அஸ்வத்தாமா கர்ணன் சகுனி முதலானோருங்கேட்டுத் திடுக்கிட்டு, ஓகோ! என்னவோ மோசம்வந்தது; சாரோசையுந் தனுவோசையுங் கேட்கின்றது; சமர்புரியவந்த குமரனைக்காணோம். ஆரபார தீரவீர மூர்த்தண்யமாகத் தேரோட்டிவந்த போர்வீரனெங்கே? ஈசானமூலையில் இடிக்கின்றதுபோலிருக்கின்றது. ஆனால், இதுமழையிடியன்று மகரமச்சமுலாவுகின்ற கடலொலியுமன்று. வாடைக்காற்றின் முழக்குமன்று. கேசவிரசிங்கக் கிரீடிகைக்கொண்ட காண்டீவத்தின்னொலி நாமெல்லோரையும் போற்காணுகிறது. கவனமாகக் காதுகொடுத்துக் கேளுங்கள். திக்குநோக்கிப் பாருங்கள் திசைகளைப்பாருங்கள். சிந்தையும் எண்ணமுஞ் சிதறாமலுயர்த்துங்கள். பார்த்திபன் கதியைப் பதறாமற் பாருங்களென்று, வடகிழக்குமூலையிற் கண்வைத்து, ஏதேது இதற்குள் அருச்சுனன் இவ்வளவுதூரங் கடந்துபோவானோ? இப்போதுதானே நாம் பார்த்தோம். மேற்குத்திசையில் வெகுதூரம் போனானேயென்று, ஒருவருக்கொருவர் வாதுகொடுத்து நான்குபக்கமுங் காதுகொடுத்திருந்தார்கள்.

அப்போது, பசுமந்தையையும் பாமரக்கொடியுடைய பார்த்திபனையும் சேனைகளுடன் மடக்கிய செஞ்சிலைவீரச் சேவகன் தனக்குத்தானேயோசிக்கத்தொடங்கினான். அதென்னவென்றால், நாமின்னுஞ் சற்றுநேரந் தாழ்ந்து வருவமாகில், மாட்டுமந்தைகளுடன் மன்னனுஞ்சேனையும் அத்தினபுரத்தின் எல்லைபோயணைவார்கள். அவர்களந்த எல்லையையடைந்துவிட்டால், அப்பால் நாம் அபசெயமடைந்து திரும்பிவருவதுபோலாம். பிராணன் வைத்திருக்கவேண்டிய பெருமையேயிராது. ஏதோ, தெய்வானுகூலத்தினாலும் பெரியவர்களைப் பூசைபண்ணிய பூசாபலத்தினாலும், துரியோதனன் பசுமந்தையுடன் அகப்பட்டுக்கொண்டான். மேற்படையோ சமீபத்திலிருக்கின்றது, நமது வில்லோசைகேட்டவுடனே வீட்டுமர் அசுவத்தாமாமுதலிய பலரும்வந்து கவிந்துகொள்வார்கள். இப்பால், மிகுந்த பிரயாசத்துடன் பசுமந்தைகளை மீட்கவேண்டிவரும். ஆகையால், முன்னே மாட்டைமடக்கி மச்சநாட்டுக்கனுப்பிவிட்டு, அப்புறம் வருகிறவர்களுடன் போராடுவது உத்தமமென்றுன்னிக், காண்டீவத்திற்கணைதொட்டுப் பொருப்புமுதற் பூமியெல்லாம் நெருப்புமழை பொழிவித்துத், திக்குமுக்காடச்செய்து, திசாதிசைகளைத்துஞ் சின்னாபின்னப்படுத்திவிட்டான். அவனுடைய தீரவீரத்தைத்தேவர்கள்கண்டு திக்கென்றொடுங்கிப் பக்கென்றெழுந்து, இனிக்காரியமில்லை, இப்பூமியில் பலிகொடுப்பதற்கெண்ணிச் சேனைகளைக்கூட்டிவந்தான் துரியோதனனென்று அவனை நிந்தித்து, ஐயோ, தெய்வமே! தீவினையேயென்றுரைத்து, எவ்வகையினுஞ் சவ்வியசாசிபக்திக்கு வென்றுவிடுவானென்று சிந்தித்துக் கண்ணிமையாதிருந்தார்கள்.

அக்காலையில் விசயனுடைய வில்லோசையும் நாணோசையும் தேவதத்த முழக்கமும் தேரோடுமொலியும் குதிரைகள் அனுமானிக்கும்பழக்கமும் சாரதியினையும்வழக்கமும் அனுமக்கொடியாடுகின்ற படபடாகாரமும் அத்திரங்களோடுகின்ற படபடாகாரமும் போராடுமிடங்கள்தோறும் புறப்படுமொலியும்,

வீரர்கள்மாளும் வலியும், புவனமூன்றும் பயங்கொள்ள வயம்பெறும் செய சிங்கம் வருகிறவழியில், திரளாகக்கூடிய யானைக்கும்புகள்போல, துரியோதனனைச்சேர்ந்த சேனைகளும் வெற்றிவாளேந்திய வீரர்களும்பொங்கித் தங்களாற்கூடியமட்டும் போராடி, விசயனுக்கெதிர் நிற்கமாட்டாமல், தலைநாணிப் புறங்கொடுத்தோடினார்கள். அச்சமயத்தில், அருச்சுனன்தொடுத்த அனல் முனைக்கணையானது கொதித்தெரிந்து கோபித்துவிழுந்து குதிரையைத்தறித்து யானையைத்தறித்துக் கொடிமுடிமன்னரைக்குறைத்துக் குலாவி யுலாவித்திரியுங் கொடுமையைத் தேவேந்திரனும் தேவர்களும் மூவர்களும் குபேரன்முதலாகிய இயக்கர்களும்பார்த்துக் கிரீடியைக்கொண்டாடி ஒப்புச்சொல்லுவதற்கு உவமைதேடினார்கள். பின்னும், புகழ்ந்துமகிழ்ந்து, ஆனந்தவெள்ளத்திற்குதித்து, ஆசைமேலிடக்களித்து, ஆடினார்கள். அருச்சுனனேவிய அக்கினிபாணத்தின் பிரசண்டவேகக்காற்றினால், பாதலமுமீதலமு நைந்து, பூதலமும் பஞ்சுபஞ்சென்னப்பறந்தது. சுயோதனாதியர் முதலியயாவரும் நெஞ்சுலர்ந்து நாவறண்டு, நாபிவரையிலும் புகைந்து, நாடாதும்நாடி, இதென்ன! அக்கினிநட்சத்திரவுதையமோ? அல்லது, ஆலாலஞ்சேகரித்த புகையோ? வடவைத்தீயின் அம்பாரமோ? வாடைக்காற்றின் வன்மையோவென்று, அவர்களன்று பட்டபாட்டை நானென்னென்று சொல்லுவேன்! நான்குவகை இரதிகரையும் உயிருடன் சுடும்போது, சும்மாவிருப்பாருமுண்டோ, ஐயா, ஜனமேஜய மகாராசனே! இந்தப்பிரகாரம், நரனேவிய அக்கினிபாணத்தால், படைநான்கும் மண்மேலுமண்ணைப்படிந்து, பதறிப்பெதறிச் சிதறிப்பிரிந்து, பலர்மாய்ந்து, சிலர்தேய்ந்து, படையோய்ந்துபோன பக்குவத்தை உத்தரகுமாரனறிந்து, காவற்கட்டுக்குட்பட்டிருந்த தங்களிடரைப்பார்த்து, ஓமோ, கோவலர்களே! உமக்கு யாதொருதடையுமில்லை. உங்களோடெதிர்க்கப்படையுமில்லை. நீங்கள் உற்சாகத்துடன் காலிகளையோட்டிக்கொண்டு ஊர்போய்ச்சேருங்களென்று உரக்கக்கூவி, இருகரங்களையும்வீசி ஏகுங்களென்றும் போங்கள்போங்களென்றுஞ் சொல்லினான். அப்போது, தங்கள் இராசகுமாரன்கூறிய இனியவார்த்தையைத் தனிமையாய்ச் சஞ்சலப்பட்டுக்கொண்டிருந்த சகல யாதவருங்கேட்டுச் சம்பிரமங்கொண்டாடி, நமது இளஞ்சிங்கமே யுத்தஞ்செய்ய ஏற்பட்டுப் புறப்பட்டபடியால், கௌரவகுலச்சேனைகளை எங்குமில்லாமற் சங்கரிப்பார். நாமும் வெற்றிபெறலாமென்று, பொங்காரத்துடன் ஓங்காரமிட்டு, அகமகிழ்ந்து, முகமலர்ந்து, முனைகலந்து, கலகலென்று, மணிமுழங்கு பசுவடார்ந்துநின்ற இடமடைந்து, ஊசென்று வாய்குவித்து ஊதி புள்ளாங்குழலிசையையுஞ் சவுஞ்ஞையையும் வழக்கப்படி காட்டினார்கள். இடையர்களுடைய குறிப்போசையைக்கேட்ட காட்டுப்பசுக்களும் நாட்டுப்பசுக்களும் தலையெடுத்துப்பார்த்து, வாலெடுத்துக் காலசைத்து உடல்குலுக்கிக் கொம்புகளைத்தாழ்த்தித் தங்களைக் கிடைகட்டியிருந்த மச்சநாட்டெல்லையைக்குறித்து இறுமாந்துநெறித்துச் சேனைக்கும்புகளலைய முறித்து அம்பாரமுழுதும் தும்புகளடையக் கம்பளத்தாயர் கலந்துபின்னடையப் பம்பரமென்னச்சுழன்று கும்பாளமிட்டு, மானினந்தாவுதல்போற்

வண்டெனப்பறந்து, செண்டெனவெழுந்து, கண்டவர்கலங்க, மண்டலமயங்கச் செந்நாள் கருந்தாள் வெண்டோள்பறக்கத் திசைதடுமாறிப்பசுக்களுமோடத் திரைகடல்வறள, யானைகள்கதறச், சேனைகள்பதற அரைக்கணப்பொழுதில் திரும்பிய பசுக்களைத் துரியோதனனும் அவனுடன்கலந்துவந்த தேசராசவீர பூபாலர்களும் கோபாலர்களும் நிற்குவேறில்லாமல், வருந்தி மடக்கிவந்தபசுவை விடப்படாதென்று மானப்போர்வைபூண்டுவந்து வல்லமையுள்ளனவெல்லாங்காட்டி, மனநொந்து தங்களாலாகாமல், காய்ந்துருகிக்கொதிப்படங்கிய நெய்போல வாயடங்கிமடங்கினார்கள். மச்சராசனுடைய கோபாலர் இச்சைமேற்கொண்டு உருகி ஓசையடங்கிப்போனநெய்யில் ஒருதுளிப்பால் தெறித்ததைப்போல, சளசளவென்று உரத்துக்கூவி எதிரி கைக்கொண்டுபோன எங்கள்மந்தையை மீட்டோமென்று, எங்கும் பிரகாசிக்கத்தாவி, எந்நாளும் பெறக்கூடாத வெற்றியை இந்நாளடைந்தோமென்று, இறைவனைப் புகழ்ந்து, மந்தையைவிடாமற் றொடர்ந்துவந்தார்கள்.

இவ்வாறு, புள்ளாங்குழற்றொனியாலும், கண்டத்தொனியாலும், கால்வீசியோடும், பசுக்கள் பசும்பொற்குடம்போன்ற மடியையுடைய கபிலைகள், பருவக்கன்றுகளுள்ள கோவினங்கள், சூற்கொண்டசுரபிகள், சூற்படாக்கடாரிகள் இளமையானவிடைகள் முதிர்ந்த இடபங்கள், கட்டுப்படாக் காலிகள், கறுப்பு வெளுப்பு சிவப்பு கலப்பு இவைமுதலான பலவர்ணப்பசுக்களும் துரியோதனன்சென்ற விடந்தொடங்கி வீட்டுமர் துரோணர் முதலியோர்கள் அணிவகுத்துநின்ற இடம்வரைக்கும் காலாற்சிலரையெறிந்துமிதித்து, வாலாற்பலரை யடித்துமடித்து, உடலாற்சிலரை யுராய்ந்திடித்துக் கொம்பாற்பலரைக் குத்திவீழ்த்திக் கோலாகலமாய்க் கும்பலைக்கலைத்து, அம்புபோற்பறந்து நேருக்குநேராய் நிரைநிரையாய்ப் பாய்ந்துபோகின்ற பசுமந்தையைப் பார்த்தன்பார்த்து, வீட்டுமர்முதலியோரும் மாடுகள்போகின்ற மார்க்கத்திற் படைவைத்துக்கொண்டிருக்கின்றபடியால், ஒருவேளை இந்தப்பசுமந்தைகளை மடக்கட்டும். நாம் இந்தப்பசுவுடன் கூடப்போய் மச்சநாட்டில்விட்டு வரலாமென்றுநினைத்தால், வீபற்சுவந்தான்; எங்களை மயங்கவைத்து, மாட்டையோட்டிக்கொண்டு போய்விட்டான். சண்டைசெய்து வெற்றிகொண்டு போனவனல்லவென்று, பல்லோரிடத்திலும் பழிப்பாய்ச்சொல்லிக்கொள்வார்கள். மேலும், நாம்போய்த்திரும்பிவருவதற்கு முன்னே துரியோதனன் தப்பிப்பிழைத்தேனென்று, அத்தினபுரத்திற்குப் போய்விடுவான் போலுந் தோன்றுகின்றது. ஐயோ! அவனைக்காணவும் அவனுடன் ஆசையாய்ப்பேசவும் அவசரப்பட்டுப், பதின்மூன்றுவருடங்கழித்துஓடிவந்தோமே. ஆகையால் நாம் இவனைவிட்டுப்போகலாகாது. வேறுவகையாகிய காவல்செய்ய வேண்டுமென்றெண்ணி, விசயகாண்டீபத்திற் சோனாமேகம்பொழிவதுபோல, பாணப்பிரயோகம்பண்ணிப், பசுமந்தையைக்காக்க அண்டச்சுவருக் கொப்பாகச் சரக்கூடமேயமைத்து, மந்திரமென்னுங் கட்டுகளிட்டு, வைராக்கிய புருடனையு நிறுத்தினான்.' அந்தப்படியே யாதொரு ஆட்சேபனையுமில்லாமல், நிரந்தரமங்கள துரந்தரபுரந்தரனாகிய விராடராசனது மச்சநாட்டில், இதுவரையி

லும் வசித்திருந்த வனங்களிற்போய்ச்சேர்ந்தன. எமன்கைக்கொண்ட உயிர் மீண்டவாறுபோல், பகைவர்மடக்கிய பசுக்கணம்வந்ததை அந்நாட்டிலுள்ள பலரும்பார்த்து, செயசெயமென்று சிந்தைமகிழ்ந்து, பத்திரமாகப் பசுமந்தையைப் பாதுகாத்துக்கொண்டிருந்தார்கள்.

இப்பால் வணங்காமுடிமன்னனும் தாங்கள் வருத்தனுப்பிய சேனைகளும் சாய்த்துக்கொண்டுபோன பசுக்கணங்களுங் கோபாலர்களும் தங்களுக்குமீறிப்போராடி ஊரிலோடியவிதத்தைத் தேரிலேறியிருந்தசிலைக்குருவாகிய துரோணாசாரியர் வீஷ்மாசாரியர் கிருபாசாரியர் அசுவத்தாமா கர்ணன் சகுனி சாலுவன் விகர்ணன் துச்சாதனன் முதலியவரும் பார்த்து, சரிதான் நாம் ஆலோசனைப்பண்ணிப் பசுநிரைகளையும் பார்த்திபனையும் அத்தினாபுரத்திற்கு முன்னாடி அனுப்பிவைத்த உளவை அர்ச்சுனன் எப்படியோ அறிந்துகொண்டு இங்கிருந்த நம்மெல்லோருக்கும் இன்பமுண்டாகும்படியாய் அம்புகளைவிடுத்து அசரப்படுத்திச் சாரதியுந்தானுந் தேரூர்ந்துசென்று சமர்த்தாக வென்று மாட்டையும் சேனையையும் மன்னனையுமடக்கிவிட்டான். நாம் எண்ணிய எண்ணங்கைகூடவில்லையே, "பண்ணியபயிரிற்புண்ணியந்தெரியும்" என்பதுபோல் அவனெண்ணியவண்ணம் இசைவாக்கிக்கொண்டான். இவ்விடத்திற் கூட்டமானநமக்கு இனியென்ன ஆட்டபாட்டமிருக்கின்றது? அவன் நம்முடனெதிர்த்தால் நாமெடுப்பது ஓட்டமேயென்று மூகாட்டமாய் மனநொந்துறங்கினார்கள்.

இங்ஙனம் வில்விசயன் உருத்திராவதாரமுண்டாய் அரைக்கணத்தில் நிரைக்கணத்தைமீட்டுச் சரக்கூடங்கட்டிப் பெருக்கவிடுத்த தன்மைப்படி வடகிழக்கு மூலையிலிருந்து தென்மேற்கு மூலையில் மாடுகள்போய்ச்சேர்ந்த வாறுணர்ந்து மனமகிழ்ந்து நல்லது இராசேந்திரனெங்கே அவனேறிச்சிறக்குந் தேரெங்கே? அந்தேரிற்பறக்கும்பாம்புக்கொடியெங்கே? என்று எட்டுத்திசை மட்டிட்டுப் பார்த்துவரும்போது ஆனினங்களை முன்னாக்கிச் சேனைக்கணங்களைப் பின்னாக்கி முடுக்காய்ச்சென்ற துரியோதனராசன் அர்ச்சுனன்தெறித்த விற்குணத்தாலும் வாய்வைத்தூதிய சங்குநாதத்தாலும் பாணக்குழாத்தாலும் வீரர்படும்பாட்டாலும் சேனைகெடுங்கேட்டாலும் வெருண்டு அலமருண்டு புத்திபுரண்டு கண்கலங்கி ஒருபுறமொதுங்கி நெறிமயங்கி யொடுங்கி நின்றுவிட்டான். இவ்வகையாகிய துரியோதனராசனைச் சவ்வியசாசி கண்டு கண்கள்சிவந்து முகஞ்சுளித்து பற்கடித்து மீசைதுடித்து வியர்வுபொடித்து வெகுளிமேற்கொண்டு எத்திசையிலும்பிரசித்தனாகிய உத்தரகுமாரனைப்பார்த்து ஒரு உத்தரஞ்சொல்லத்தொடங்கினன். வெற்றிபெற்ற வேலாயுதம் பற்றிய விராடகுமாரனே! நம்முடைய இரதத்தைக்கண்டு பயங்கொண்டு தன்படைகளையும் கன்றுந்தாயுந்துன்றிய பசுக்கூட்டங்களையும் விண்டு தானுந்தலையிறக்கங்கொண்டு இந்நிலத்தைவிட்டகன்று அதோ ஒரு மரத்தினீழலில் ஐம்பொறியடக்கிய ஆமைபோலிருப்பவன் கௌரவகுலாதிபனாகிய துரியோதனமகாராசன்; அவனண்டையில் நமதுதேரைக்கொண்டுபோய்நிறுத்துவையானால் அற்பமிருகத்தைச் சொற்பமாயழிக்கும் ஆண்சிங்கம்போல் அவனுதிரத்

தை என்பாணத்திற்கு ஆகுதிகொடுக்கிறேனென்றுபல்லைக்கடித்துஉடம்புதுடித்துக் குறிப்பினாற் றெரியப்படுத்தினான். அர்ச்சுனனுரைத்த வார்த்தையைக் கருங்குவளை மலர்ந்துநிறைந்த வாவிசெறிந்த கழனிகள்சூழ்ந்த மச்சநாட்டிறைவன் மைந்தனாகிய உத்தரகுமாரன்கேட்டு மனோவேகமும்வாயுவேகமும் மட்டென்றுரைக்கத் தக்கதாகத் தன்தேரைவிடுத்துத் துரியோதனனுடைய சேனையைத்தடுத்து அவன்தேரையடுத்து தன்தேர்க்குதிரைகளின் முன்னங்கால் அவன் தேர்க்குதிரைகளின் தலைமேலேற்றுவித்தான்.

அந்தவேளையில் சந்தேகங்கொண்டு சலிப்பாயிருந்த வீஷ்மாசாரியர் துரோணாசாரியர் முதலிய மேன்மையோர் மாடுகள்திரும்பிவிட்டமார்க்கத்தினாலும் சங்கத்தொனி வில்நாணொலித்தொனி சரமாரித்தொனிகேட்ட தன்மையினாலும் செய்கையாய்க் காரியபாவந் தெரிந்துகொண்டு ஓகோ! மிஞ்சிப்போச்சுது அக்கிரகாரத்தைநோக்கி ஆனிரைகளுடன்போன நமதரசனைப்போர் முகப்புலியாகிய புருஷன் பற்றிக்கொண்டான். இவ்விடத்திலிருந்த நம்மையேங்கவைத்துச் சிங்கமானது நரிபடிதேடிச் செல்லுமாறுபோல் மேற்குமுகத்தில் போக்குக்காட்டிக் கிழக்குமுகம்வந்து கிட்டிவிட்டான். இவன் எந்தவழி வந்தானோ, அந்தரவாசிகளாகிய அமரர்கள் இவனுக்கு உளவாயிருப்பார்களோ வணங்காமுடியோன்சென்றமார்க்கம் இவனுக்கெப்படித்தெரியும் என்னமாயறிவான்! இத்தனைபேர்களின் கண்களுக்குத்தெரியாமல் இவனெப்படித்தேருந்திப்போனான்? அவன்மனத்துக்குத்தகுந்ததுபோல் சாரதியுங்குதிரையுஞ் சமைந்ததே, ஆகிறகாலத்தில் எல்லாம் அடுக்காய் அமையச்செய்யும் நல்லவினையை யாவரும் புகழ்ந்தேத்துவார்கள்; ஆதலால் நாம் சும்மாவிருக்கப்போகாது; இந்நேரம் நமது மன்னன் என்னகெதியானானோதெரியாது; இப்படியே நாமெல்லோரும் பிரியாதுசென்று துரியோதனனுக்கு உபபலமாகநின்று அபாயநேரிடாமல் அர்ச்சுனனைவென்று மறுபடியும் விராடபுரத்தைத் திரும்பிப்பாராமல் ஊர்போய்ச் சேரவேண்டுமென்று உள்ளத் துறுதியாய்க்கொண்டு தாங்களிருந்த இடத்தைவிட்டு நீங்கி வச்சிரயூகம் பத்மயூகம் அர்த்தசந்திரயூகம் இவைமுதலிய அணிவகுப்பைக்கலைத்தும்போட்டு அவசரப்பட்டு மந்தமாருதமும் பிற்படும்படியாய் முந்தி நால்வகைச்சேனைகளுடன் ஓடிவந்தார்கள். ஐயா ஜனமேஜயமகாராசனே! இவர்கள் எவ்வளவுவேகமாய்த் தேர்செலுத்திவந்தாலும் நந்தநந்தன் மைத்துனன் இந்திரன் மைந்தன், இவனுந்திய சயுந்தன வேகத்திற் கிணையில்லையென் றியம்பத்தக்கதாம் ஆதலால் அவனோ தன் தேரைத் துரியோதனனிடத்திற் றிருப்பித் தான் பேசவேண்டியவரைக்கும் பேசித் தன்மனம் வெறுத்துத் திரும்பப்போகிற சமயத்தில் இந்த வீட்டுமர் முதலியவர்களின் தேர்வந்துகூடுவதை இனிப் பேசப்போகின்ற கதையால் தெரிந்துகொள்வாயென்று வைசம்பாயனர் சொல்லிமுடித்தனர்.

### அர்ச்சுனன்துரியோதனனுடன்பேசுவது.

---

அர்ச்சுனன் தேரானது அரவக்கொடியோனுடைய தேரை நாடியோடிச் சென்றுகண்டபோது அவனெப்படியிருந்தானென்றால் பெருக்கமானவெள்ளங்

குறுகிச் சுருக்கமாயோடுஞ் சோர்வைப்போல் குதிரைகள் நடையோய்ந்து சாரதியொருபுறஞ்சாய்ந்து தானும்மாய்ந்தான்போலிருந்த மன்னனுக்கு நேரிற் சென்ற அர்ச்சுனனானவன் துரியோதனனுடையமுகத்தைப்பார்த்துப்பேசவேண்டுமென்று ஆசைகொண்டு நோக்கினான், அப்போது சுயோதனனுடையதேர் அர்ச்சுனனுக்குத் தெரியவொட்டாமல் அவன்றேரிலிருந்த சாரதியும் அந்தத்திற்கட்டிய நான்கு அசுவங்களும் தடையாயிருந்தமையால் திடீரென்று வடிக்கணையெடுத்து அபிமந்திரித்து விடுத்து சாரதியையும் குதிரைகளையும்போக்கி வெட்டவெளியாக்கி இந்திரப்பிரத்தத்தில் இராசபோகத்திலிருந்த அவர்கள் ஐவர்களையு மழைப்பித்துப் பொய்ச்சூதுடைய சகுனியைச்சேர்த்து இக்கட்டானசொக்கட்டானாடி வந்தவினோதத்தைக்கொண்டுகுலருந்தப்பேசி அவர்களுடைய ஐஸ்வரியமுதலியவும் ஒன்றொழியாமல் ஒருங்கே கைக்கொண்டு சிறிதேனும் நெஞ்சிரக்கமில்லாமல் வனவாசப்பண்ணவிட்ட பஞ்சபாதகனுடைய பாம்புக்கொடியோனைச்சங்கடப்படாமல் தாராளமாய் எதிரேகப்பார்த்து சற்றே நகைத்தான்; அதுபோது துரியோதனனுடைய சாரதியுங்குதிரைகளுந் தலைசாய்ந்துபோனவுடனே உத்தரகுமாரன் கைப்பிடித்தகடிவாளத்தை உலுக்கிப்பின்னுக்கிழுத்து முன்னுக்கு முடுக்கி குதிரையை ஓடியாடித்தான்; எக்காலத்தும் அடிபடாக்குதிரைகள் உடம்பு சிலிர்த்து ஒன்றனைந்து விழித்து கனைந்து கலினத்தைத் தடாரித்துக் கைக்கடங்காமல் காலிற்பெயர்ந்து துரியோதன மகாராசனுடைய தேர்த்தட்டின்மேற்காலூன்றிநின்றது, தேரும் தேரும் முட்டியபோது சிலைவிசயன் தேரிற்கட்டிய அநுமத்துவசமும் துரியோதனன் தேரில்கட்டிய அரவத்துவசமும் காற்றலைபடி கடுகடுப்பாகி ஒன்றுடனொடொன்று துன்னிப்பின்னிப் படபடாகாரமாய் அடிபட்டுடிபட்டுடைபட்டுடைபட்டுரிபட்டு பொடிபட்டுடைபட்டு உடனேவிடுபட்டுக் கோபமேலிட்டு அண்டமும் அண்டமும் அதிரும்படியாய்விட்டு அனுமக்கொடியானது அரவக்கொடியைப்பார்த்துச் சிலவார்த்தைகள் சொல்லியதுபோலுமென்று புராணிகர் கற்பித்தருளினார்.

அம்மிதன்னைபோலெனின் என் தந்தையான வாயுதேவனுக்கும் உன் தந்தையான ஆதிசேடனுக்கும் பலத்தைக்குறித்து கீர்த்தியவன் நான்பெரியவனென்று பேச்சுவிளைந்து இருவருடைய திடத்தை யெவர்களுங் காணும்படியாய் மகாமேருவின் அடிமுதல்முடிவரைக்கும் ஆயிரஞ்சுற்றாக ஆதிசேடன் வளைந்து தன் வல்லமையைக் காட்டியபோது என்தகப்பனாகிய வாயுதேவன் இளைந்துவிடாந்து தன்னாற் கூடியமட்டுஞ் சாதித்து உங்களவனாகியசேடன் பதறிக் கதறிச் சிதறி பதறிப்போகப்புரட்டி அந்தமேருவின் சிகரத்தில் மூன்று முடியை வாரிக்கொண்டுபோய்ச் சமுத்திரகதியாக்கித் தன்னுடைமையை நிலைகாட்டிச் செயங்கொண்டான். அன்றுமுதலின்றளவும் பாம்பினங்களுக்கும் பகைவிளைந்திருக்கின்றது. அதுபற்றி நானந்தவாயுதேவனுடைய மைந்தனானகையால் முன்னேநடந்தபொல்லாங்கையேபாராட்டி உன்னைவெல்லாமலுங் கொல்லாமலும் விடுவதில்லையென்றுமேல்விழுந்து துரியோதனன்பாம்புக்கொடியைப் படாதபாடுபடுத்தி அருச்சுனன் துவசத்தில் அனுமான்வந்து நடனம்பண்

ணினார். மேலும்காண்டாவனதகனநிமித்தம் அக்கினிதேவன் இவ்வநுமக்கொடியை அருச்சுனனுக்கு அளித்தகாலத்தில், ஆஞ்சனேயர் பிரசன்னமாய் இராவண கும்பகர்ணாதிமுதலிய மூலபலங்களையெல்லாமுடித்து, தாயாகிய சீதாபிராட்டியாருக்குத் திருவாழிகொடுத்து, தந்தையரானஸ்ரீராமலட்சுமணரையும் தன்றோளிலெடுத்து, அவர்களுடைய திருவடியையடுத்துபட்டாபிஷேக சம்பிரம பாக்கியங்களையும்பார்த்த கண்களால் இந்தப்பஞ்சையானபோரையும் பார்க்கும்படிக்கமைத்ததோவென்றுபரதவித்தபோது, அக்கினிதேவன் அருட்கண்ணானோக்கி, அடியேனிமித்தம் அமைந்தருளவேண்டுமென்றுரைய, அவ்வாறே நலமென்றமர்ந்த அநுமான்கொடியாகிய துரியோதனனுடைய சேனைக் கடலைக் கலக்கிக்கடக்கவும் விசயவீரியன் செயம்படைக்கவும் உதயகிரியிலெழுந்த சூரியன்போல், கோபச்சுடர்விரித்துக் கூசாமலெரித்துக் கோரதக்தந்தெறித்துக் குறுகுறுத்ததிர்த்து உண்மையாகி அருச்சுனனுடைய தேர்க்கொடியாடையில் அநுமான்வந்து தோன்றினார்.

இப்பால், வேடன்கையில் அகப்படாமல், விடுபட்டுப்போன மிருகம் மீண்டும் அகப்பட்டவாறுபோல், அருச்சுனன்கையிற்சிக்கிக்கொண்ட அரவக்கொடியோன் இடிமுழக்கங்கேட்ட உரகம்போலேங்கித் தானிருக்குநிலைதெரியாமல், மயங்கியொடுங்கினான். அருச்சுனன் அவனைப்பார்த்துச் சிலவார்த்தை சொல்லத்தொடங்கினான். ஆ, யணைங்காமுடிபெற்ற மன்னனே! நீ எங்கே ஓடுகின்றாய், ஏன்வாடுகின்றாய், ஓடவேண்டிய அவசரமென்ன? ஐயோ! உன்கையிற் பருத்தவில்லும் பக்குவமான அத்திரங்களும், போதுமான பலமுமிருக்கப் புண்ணியவான்களாகிய பெரியோர்கள் பக்கத்துணையாகவிருக்க வேண்டியமட்டுந் தனங்களிருக்கத் தம்பிமார்களும் ஏவலாளிகளும் எழுகடல் சூழ்ந்த பூமியும் மாயச்சூதாடும் மாமனும் மகாபிரபலனாகிய கர்ணனுமிருக்க, போர்முனைகண்டு நீயும் புறமிட்டோடவிளைத்து வாயைத்திறவாமல் மயங்கிப் பேய்போலோடிப்போவது திறமோ? நல்லகாரியம், நீ இப்படியே அத்தினாபுரம்போய்ச்சேர்ந்தாலும், விரபட்டமும் சிந்தூரப்பொட்டுமிட்ட பட்டத்துயானைமேலேறிப் பவனிவரும் இராசவீதியில், உன்னைப்பார்ப்பதற்கு ஓடிவராநின்ற பொற்பாவையைப்போன்ற அநேகமாகின கச்சணிந்த கனதனத்துமாதர்களும்கன்னியர்களுங்கண்டு இச்சகத்தையாண்ட துரியோதனராசன் பித்தன் பித்தனென்று இகழ்ந்துபேசிச்சிரிப்பார்களே. நீபோகலாமோ? இதல்லாமலும், சோடசகலைநிறைந்த மதியம்போலவிளங்கிய சுவேதச்சத்திரமென்னும்வெள்ளைக்குடைபிடிக்க, இருபக்கத்திலும் பால்நுரைபோன்ற சாமரைவீச, வந்தியர்சூழ்ந்து வாழ்த்திப்புகழச் சிந்தைகளிக்கச் சிங்காதனமேறிப் பாராசர்வந்து ஆசீர்வதிக்க, புத்ரமித்ர பந்துவுடன் கூடிவாழ்கின்ற வேந்தர்வேந்தனென்னும் உலோகாதிபதியாகிய நீ சண்டைமுகத்தைக்கண்டு பெண்டுகள்போல்ஓடுவது தீரத்துவமோ? நீ இப்போதென்னிடத்தில் தனித்தகப்பட்டாய். உன்னையும் உன்சகோதரர்களையும் ஒருகணப்போதில், என்கணைகளினாலே சல்லடைக்கண்களாகத்தொளைத்து அவற்றிற்கு இரையாக்கிவிடுவேன். ஆனால், சிங்கக்கொடிக்கதிபனாகிய என்தமையன் வீமசேனன் உங்கள் நூற்றுவரையும்

கொல்வேனென்று, இராசசபையிற்சொல்லிய சபதம்வீணாகிப்போமேயென்று, உன்வாணாளைவிடுத்தேன். பகற்பொழுதைவிளக்கிய சூரியன் அத்தமிக்கிற வரைக்கும் பார்த்திருந்து, முறையிற்பிரகாசிக்கவருஞ் சந்திரன்போல், எங்களைக்காட்டிலோட்டிவிட்டு, நீங்கள் நாட்டிலிருந்து, சகலபாக்கியங்களை அநுபவித்துக் காலந்தப்பாமற்புசித்து, ஆக்கினைசக்கரஞ்செலுத்தி அரசாட்சிசெய்து வந்தீர்கள். மறுபடியும் விடியற்காலத்தில், அந்தச்சந்திரனொளியைத் தவிர்த்துத் தானே பிரபுத்துவஞ்செய்பவந்த சூரியனைப்போல், நாங்கள் வெளிப்பட்டோம். சங்கினங்கள் தவழும் வயல்கள்சூழ்ந்த கங்கைவளநாடனாகிய வீமசேனமகாராசன் கதையினால் தாமசமின்றி, நாளைக்கே உங்களைக்களப்பலியூட்டிவைக்கப்போகின்றான். மேலும், வீமசேனனுடைய சமயந்தப்பினாலுந்தப்பப்படும். பாவியாகிய உன்னைப்பார்த்தும் கொல்லாமல்விடலாகாதென்று, கடுங்கோபம் உண்டாயிருந்தபோதிலும் இரப்பவர்கள்யுத்தத்திலிளைத்தவர்கள் புறங்கொடுத்தோடினவர்கள் குழந்தைப்பருவமுடைய இளையவர்கள் யாவரும்புகழும் கவிராசர்கள் தவராசர்கள் தூதுவர்கள் நோயாளிகள் விருத்தர்கள் பிரமஞானமுள்ள பிராமணர்கள் மாதர்கள் இவர்களைக் கொல்லுவது மகாபாவமென்று பெரியோர்கள் பேசியிருக்கின்றார்கள். அந்தக்கருமம் என்னைப்பிசகவொட்டாமற்றடுக்கின்றது; அதனாலே இப்போது இளைத்து ஓடிப்போன உன்னை நானென்னசெய்வேன்? அவர்கள்கூறிய நீதிவாக்கியத்தைநினைத்து நான் உன்னுயிரைத் தப்பவிட்டேன். அடா வஞ்சகனே! பாவபுண்ணியத்தை எண்ணிப்பாராத பொய்யனே! நீயெண்ணிய எண்ணம் சித்திக்குமென் றிருந்தையோ? வனவாசஞ்சென்ற பாண்டவர்கள் மறுபடியுந் திரும்பி வரமாட்டார்களென்னுமதியோ, இனியெப்படி உன் தலைவிதியோ? ‘வாழ்வாரைப்போலும் வாழ்வார்’ இதைச்சற்றேனும் உன் மனத்தில்வையாமற் போனதென்ன, ஊழோ? ‘சமத்திற்குண்டோபாயமோ’ சதுராயிருக்கின்றோமென்றேயெண்ணப்போகாதே. தருமத்திற்கொருநாளும் பிசகுவராது. தானென்னும்செருக்கு நிலைநில்லாது. ஐயையோ! அதுபொல்லாது. சொல்லாது போகின்ற தூர்த்தனே யென்று இன்னம்பலவாறாக இழியக்குத்தினான். இவ்வாறிகழ்ந்துபேசியபோது, துரியோதனராசன்மறுமொழியொன்றும்பேசாமல், சோபமேற்கொண்டு ஆபத்துவேளையிதுவென மனத்தாபத்துடனிருந்தான், அவன், இவ்விடத்திலிவ்வாறிருக்கும்போது, இந்தமுகநோக்கித்திரும்பிய வேதக்கொடியுடைய துரோணாசாரியர் கிருபாசாரியர் அஸ்வத்தாமா வீஷ்டுமாசாரியர் கற்பகக்காவைப்போல் அற்புதயாகக்கொழிக்குங்கர்ணராசன் சகுனி சயிந்தவன் விகர்ணன் துச்சாதனன் சாலுவன் முதலிய சாமர்த்தியவான்களும் சர்ப்பக்கொடிதரித்த மற்புயமகாராசனுக்குத் துணைவந்துகூடினார்கள். அவ்வாறு வந்தவர்களில் துச்சாதனன் விகர்ணன்முதலிய தம்பியரிற் சிலரும் முடிவேந்தர்களிற்பலரும் வெற்றிமாலையணிந்த சுத்தவீரர்களும் மாமனும் மைத்துனனும் உடல்பதறி யோடிவந்து மதயானைபோற்புகுந்து நந்தியாவட்ட மாலைதரித்த நராதிபனைத்தாங்கி ஆதரித்துத் தேற்றினார்கள். இதற்குள்ளாகக் காரோசை கடலோசை ஊழிப்பேரோசை இடியோசை முதலியவெல்

லாம் ஒன்றுசேர்ந்து ஓரிடத்திற்பிறந்து முழங்கியவாறுபோல் தேரோசை குதிரைகளின் குரலோசை மதயானைகளின்னோசை பதாதிகளின்னோசை வில்லோசை நாணோசை சங்கத்தொனி தாரை பூரி சின்னமுதலிய வாத்தியவோசை சரங்களின்னோசையாகிய விளைவுகளெங்குமுழங்கப் படையாளர்வந்து குவிந்தார்கள். சப்தசமுத்திரம்போலிரைந்து ஆர்ப்பரித்து இருபக்கத்திலுங் கவிந்த படைமன்னர்களைத் துரியோதன மகாராசன்கண்டு சற்றுத் திடங்கொண்டு குனிந்ததலையைநிமிர்த்துப்பார்த்தான். இவன்பார்த்தபோதே படைகளுக் கருகிலிருந்த கர்ணன் நெற்றிவியர்த்து நறநறவென்று பல்லைக்கடித்து வெம்பிக்கிளம்பி வெதும்பிச்சீறிக் கனைத்துச் சினந்துத் திசாதிசைகளுந் திடுக்கிடத்திரும்பிச் சடக்கெனத் தேரைத் தடதடவென்றுமுடுக்கி மின்னலுடன் மின்மினியும் வெய்யோனுடன் மானும் சிங்கத்துடன் யானையும் கன்மலையுடன் மணற்குன்றும் எதிர்ப்பதுபோல் கர்ணராசன் அர்ச்சுனன்தேருக்கு நேர்சென்று நின்று ஓ அர்ச்சுனா! என்முகமாகத்திரும்பு, வணங்காமுடிமன்னனாகிய துரியோதனனைவளைந்துத் தகுதியற்ற சொல்லாலிகழ்ந்து கண்டவாறு பேசுவது நியாயமன்று, நாங்கள் யாவருமிருக்க நராதிபனை யெதிர்த்தது விதியுமன்று. நீ ஏன்வீணுக்கிடந்து மயங்குகின்றாய்? இதோ நான் உனக்கு முன் வந்திருக்கின்றேன், என்னுடன் பகைத்துப் போர்புரிவதற்கு உனக்குத் திடமுண்டாயின் இங்கே திரும்பிப்பாரென்று போர்த்திறக் குறிப்பாற்புகன்று அக்கினியக்கும் பொறியும் புகையுந் திக்கென்றெழுவதுபோல் பொழிந்தான் இவ்வண்ணமாக அங்கதேசாதிபன் சொன்னவார்த்தையை அருச்சுனன்கேட்டுக் குபீலென்று பொங்கியெழுந்த கோபாக்கினியானது கால்முதல் தலைவரையிலும் உதிரத்தை முறித்துவிட்டதனால் முகங்கறுத்துக் கும்பகரடகுஞ்சரத்தை மடக்கியெதிர்ப்ப யாளியானது சீற்றத்தைக்கண்டு செறுத்துப்பாய்கின்ற செயல்போல் துரியோதனனைவிட்டு அறைகூவிவந்த விருந்தினனாகிய அங்கராசனுக்கு நேர் இரதத்தைமுடுக்கி யெதிர்த்தான்.

### காண்டீபவிசயனுக்கும் கர்ணராசனுக்கும் சண்டை.

அர்ச்சுனன்தேரும் கர்ணன்தேரும் கிட்டிநெருங்கி ஒருவரோடொருவரெதிர்த்து யுத்தஞ்செய்யப் புகுந்தபோது கர்ணனைச்சேர்ந்த காவலர்களும் இரதகசதுரகபதாதிகளும் கனன்றுக்கனன்று சிங்கத்தைத்துரத்திவருஞ் செங்கன்றுகள்போல், பங்கப்படாத பற்குனனை வளைத்துப்பற்றினார்கள். இவர்களல்லாமலும், துரியோதனன்தம்பிமாராகிய சித்திராங்கதன் விகர்ணன் சித்திரசேனன் சங்கிராமசித்து சித்திரவிரதன் துன்முகன் துச்சாதனன் முதலாகியவர்களும் கர்ணனுக்கு உபதம்பிமாராகிய ராதைமக்களும் கர்ணனைப்பின்னுக்கித் தாங்கள்முன்னாகிக் கனகனவென்றுவிரிய காலகாலாக்கினி கதித்தெழுந்தவாறுபோற்சேர்ந்து, விசித்திரமான வில்லைவளைத்து, வில்லில்நாணையேற்றிச், சற்குருவைப்போற்றி, உடலூடுருவிப்பாய்கின்ற கொடியவடிக்கணைகளை ஒன்பது ஒருபது ஐம்பது எண்பது நூறுநூறென்று தொடுத்துத், திக்குத்திசையெங்கும் அக்கினிமயமாக்கி, அதிவேகமுங் கோபமுங்கொண்டு, யாருக்கு

மடங்காமனின்று, அமராடுவதைக்கண்டு சுப்பிரமணியக்கடவுளை நிகர்த்த சுவேதவாகனனாகியகிரீடி இவ்வளவுபெருக்கும்இவ்விடத்திலேயே மரணமென்றெண்ணித் திறமிகுத்த செஞ்சிலையைத் திடமொன்று வளைக்கிக் கட்டுப்படாத நாணோசைகாட்டியபோது எதிரிகளுக்குண்டாகிய இறுமாப்பழிந்து, தன்னைத் தனியே சரீரமயர்ந்து சோராகிய சயனத்திற்சாய்ந்து, மறுபடியும் தெளிந்தெழுந்து கண்கள்சிவந்து போரிற்புகுந்து தேரிற்சிறந்து சாலைப்பிடித்து தயில தாபஞ்செய்த சரங்களைமாரிபோற் சொரிந்தார்கள். அப்பாணவருஷத்தைப் பார்த்த பார்த்தனானவன் இவர்களை எளிதில் விடலாகாதென்றெண்ணிச் சோனமழை சொரிவதுபோல் நானாவித அத்திரங்களைவிடுத்துத் துரியோதனன் தம்பியாகிய சித்திராங்கதனுடைய வில்லையும் அவனேறிய தேரையும் அழித்து குடையையுங்குறைத்து உடலையுஞ் சல்லடைக்கண்ணாக்கி, அவன் தம்பியான மதிநுகி விகர்ணனைப்பார்த்துப் பிறைமுகக்கணைகளிற்பிளந்து புறங்காட்டிப்போகக்கிளர்ந்து சித்திரசேனனென்பவனை வளைந்து அவனேறி வந்த தேரையுமழித்து அவன்சேனையையுமொழித்து இடையோசைகேட்டிளைக்கும் படையைப்போற் பூமியிற்புரளவிட்டு உடலெங்கும் புண்ணாக்கி, மேலிட்டுவந்த சங்கிராமசித்து வென்பவனைச் சலிக்கவடித்து அவனுடலைப் பீறி,உதிரம்பெருகவிடுத்துத்,துன்முகன்றேடெதிர்த்துத் துச்சாதனனைநோகவும், நச்சரவக்கொடியோனுடன்பிறந்த காசகாலர்களென்று நலியத்தாக்கி, நால்வகைத்தானைகளும் நானிலவீரர்களும்இரதகசதுரகபதாதிகளும், அதிரதமகாரதசமரதர்களும், சூரியகிரணத்துக்குமுன் பனிநெருக்கம்போற்றாழ்ந்து, நாம் வாழ்ந்தவாழ்வு இம்மட்டோவென்று சோர்ந்து, நிலத்திலாழ்ந்து நிலைநீங்கிப் பலர்பின்வாங்கி பலங்குறைந்து அயர்ந்துபோவதைக்கர்ணராசன்கண்டு, மிக்க கோபங்கொண்டு காண்டீபனெதிர்சென்று பொருதும்போது, அசுவத்தாமா குறுக்கிட்டு, ஓ அங்கராசனே! நீ பெந்த அருச்சுனனை யிகழ்ந்து பேசினையோ அந்தச்சங்கிராமவிசயன் இவன்தான். இவனை எவ்விதத்திலுமோட்டி, இவ்விடம் விட்டோட்டி, எங்கள்முன் நீ வெற்றியடைந்து வாவென்றாய். அபசயத்திற் கிடங்கொடாதே? அப்பனே! செவ்வையான ஆலோசனைசெய், உன் மேல் வெகுநாளாய அடம் வைத்திருக்கின்றான் இந்தக்கிரீடி; நீ சபாசபையிற் பேசியசங்கதிகளைச் சாக்கோவையாய்க் கோத்துவைத்திருப்பான். இவைகளினால், நீ தப்பிவருவது அருமை. சாக்கிரதையென்றுஞ்சொன்னேன். இவ்வாறு அசுவத்தாமா சொன்னதைக்கேட்ட கர்ணராசன் மனந்தளராமல், அசுவத்தாமாவே! நான் பிராமணசாதியிற் பிறந்திருந்தால், யுத்தஞ்செய்வதற்கு அஞ்சுவேன், அப்படிப்பட்ட நைச்சிக இனத்திற்பிறவாமல் க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவனாகையால், க்ஷத்திரியதருமத்தை அநுசரித்துக் கையில விற்பிடித்த நரன் அபருக்கஞ்சுவேனென்று நினையாதே. இப்போதென்னுடன் எவரெதிர்த்தாலும், அவர்களுக்கு இந்தப்பூமியே சமாதியிடமாக அடக்கம்பண்ணித்திரும்புவேன். இதற்கு வேறுபேச்சில்லை, என் பராக்கிரமத்தையும் யுத்தத்தின் அதிசயத்தையும் நீயே கண்ணாரக்கண்டு களிக்கப்போகின்றாய் பாரென்று வெற்றிக்கொடியும் வாகைமாலையுஞ் சுற்றிலுங்கட்டித்தூக்கிய

கொற்றத்தேரைநெருக்கி யுத்தத்திற்குக் குறுகினான். அவ்வகையா யடுத்த சமயத்தில், இந்திரகுமாரனுடைய இரதமுங்கிட்டியது. கர்ணராசனுடைய இரதமும் அருச்சுனன்தேரில் முட்டியது. அவ்விருவர்தேரிலும் பூட்டிய குதிரைகள் கனைக்கவும், சாரதியிருவருஞ் சப்தித்திரையவும், தேர்ச்சக்கரங்கள் கிறிச்சிட்டொலிக்கவும், சிறுமணிச்சதங்கைகள் கணகணவென்னவும், வீரர்களிருவரும் வில்லையெடுத்துப்பிடித்து நிறுத்தி வளைத்து இழுத்து நாணிதொடுத்து, நாணிதெறித்து ஷ்டங்காரஞ்செய்து, பொன்மலைபோற் பிரகாசிக்கின்ற வில்லிலிருந்து விறுவிறென்று விடுத்த வேகக்கணைகளின் வீரத்திறத்தால், சமுத்திரம் சுவறி நிலைதடுமாறி தளதளவென்று கொதித்துக் குறையவும், பூமிப்பரப்புப் புகையால்மறையவும், யுகமுடிவோவென்று உலகத்தோரிரையவும், எண்டிசைக்காதாரமாகிய எட்டுக்கிரியும் எதிரொலிசெய்யவும் திசையானைகள் திடுக்கிட்டோடவும் அட்டமாநாகங்கள் அலறியஞ்சவும், ஆகாயத்தில்வேடிக்கைப்பார்க்குந் தேவர்முதலியோர்களும் பூபாலராகியபோர்வேந்தர் பலரும் எப்புவனங்களிலும் இதைவிட அதிசயமில்லையென்று அற்புதமடைந்தார்கள். அன்றியும், சங்கநாதமுதலிய வாத்தியவொலிகள் செவிடுபடமுழங்கின தீவுகளனைத்துந் திகைக்கும்பொழுது சிங்கலவாடத் தேர்க்கிறையாகிய அங்கர்கோனானவன் ஆலாலவிஷத்திற்கொப்பாகிய அம்புகளைக்கும்பலாய்ப்பொழிந்து, அருச்சுனனுடைய வில் பாணம் தேர் குதிரை சாரதி முதலியவெல்லாஞ் சிர்குலையப்பண்ணினான். அவன்தொடுத்த அத்திரம்வருகின்ற அகோரத்தை அருச்சுனன்கண்டு, வாய்மடித்து, அடையாளம்பொறித்தலும், அக்கினிப்பொறியையுமுடைய அனலாத்திரங்களைவிக் கர்ணன்விட்ட கணைகளத்தனையையும் ஒருநொடியிற் செத்தைபோலாக்கி, வில்லில் மேகாஸ்திரந் தாக்கி, வந்தித்து மந்திரித்து வள்ளலாகிய கர்ணன்மேற் கொள்ளைகொள்ளையாகக் கூசாமலிறைத்தான். வெள்ளையானைமேற் பவனிவரும் வேந்தன்மகனுந்திய பாணங்கள் சாரிடி கடலிடி காலிடி நீரிடி நெருப்பிடிபோல் நெறிப்போடுவருதலைக் கர்ணன்கண்டு, சுடுகணைகள் கோடாகோடிகளைப் படபடெனத்தாக்கி, எதிரியுந்திய மேகாஸ்திரங்களைச் சிந்துசிந்தாக்கினான். இவ்வாறாக இருதிறத்தவர்களும் திரண்டபகழிகளைப் பரபரவென்று செலுத்தித் தேரைக் கரகரவென்றுசுழற்றிச், செஞ்சிலைச்சதங்கைகள் குலுங்க அசைத்துக் கொஞ்சமேனும், ஒருவரையொருவர் மிஞ்சவிடாமல், அடர்ந்துப் போர்கொடுத்து வரும்போது, கனகக்கொடையாளாகிய கர்ணன் கைமிஞ்சிக் காய்த்துத்தோய்த்துக் கடைச்சல்பிடித்த பத்துப்பாணங்களையெடுத்து, உத்தரகுமாரன்பேரிலோச்சி இரதத்தின்மேல் இருபது கணைகளை யெடுத்துச்செலுத்தி அசுவங்கள் மீது குறிபிசகாது நாற்பதுசரங்களைப்போக்கி, அருச்சுனன்மேல் நூறுகணைகளைவிடுத்தான். உடனே அண்டச்சுவரின் அடியைப்பெயர்த்து, எண்டிசை முழுதும் இடியப்பொடித்துச் சரசரசரசரவென விரைந்துவருங் கணைகளைத் தனஞ்சயன்கண்டு ஒருசதுமுகக்கணைகொண்டு அவற்றையெல்லாம் பிளந்து பொடிபடுத்தினான். அந்தவிபரீதத்தைப் பார்த்திருந்த அமரர்கள்யாவரும் போர்த்திறப்பார்த்தனைப் புகழ்ந்துகொண்டாடினார்கள்.

இப்பால் பற்குனன் வெகுண்டு வில்லையெடுத்துக் கணைகள்தொடுத்துக் கர்ணன்மேலும் அவன்தேரின்மேலும் குதிரைகளின்மேலுஞ்சாரதிமேலும் பிரயோகித்தான். அக்கணைகளெல்லாம் ஒருமுகமாய்க்கூடி இந்திரனுடைநாடி சத்தமேகம்போலெழுந்து இரைந்து இரதகஜதுரகபதாதிகளைநாடித் தேடிவருகின்றவேகத்தைக் கர்ணராசன்கண்டு காலாக்கினிபோன்ற பாணங்கள்விடுத்து அவற்றை அணுவினும் பரமாணுவாக்கிவிட்டான்; அவனுண்மையைக்கண்ட யாவருந்துதித்து இவனுக்கெதிருண்டோவென்று மதித்தார்கள். உடனே இருவரும் பிரிந்து பின்னுமெதிர்ந்து வாசாமகோசரமாய் வடிக்கணைசொரிந்து அமர்புரிந்தார்கள்; இருவர்விழிகள் எரியவும் இருவர்மனம் பதறவும் குதிரையினங்கள் கதறவும் சேனைகளெங்குஞ் சிதறவும் கட்கனலும் தேர்ச்சக்கரங்கள் திருவாகியசெங்கனலும் கணைகள்கக்குங் கடுங்கனலும் பொங்கிப்புகையவும் ஒருவரொருவரை வெகுண்டுபுகன்ற உலையினின்றெழுந்த பெருங்கனல்விரிந்து எரிந்துநிறைந்தது. இருவர்தேரும் இடைந்துமிடைந்து இடைவிடாமலுழன்று குயவன்றிகிரிபோற்சுழன்று பாதலபூதல முழுவதும் பள்ளமாகி மறுபடியுஞ் சேனைகளாலெழுந்த புழுதிகளால்நிறைந்தது இவ்வகையாகத்தொடர்ந்து தாறுமாறாய் வேறுவேறுபாணங்களை நூறுநூறாகத் தொடுத்துச் சண்டைகொடுத்து நின்றார்கள். அவ்வேளையில் அர்ச்சுனனோ அங்கராசன்செய்த அமர்த்திறத்தைக்கண்டு, அதிககோபங்கொண்டு ஆ கர்ணா! உனது சாமர்த்தியமும் நீ செய்யுஞ்சண்டையும நீ கற்றகல்வியும் இவ்வளவென்றறிந்துகொள்ளும் பொருட்டாகவே இதுவரையிலும் உன்னைப் பிராணனுடன்விட்டு வைத்திருந்தேன்; இனி நான் தாமதிக்கமாட்டேன், பொறுமைக்கிடங்கொடுத்தால் அது வறுமைக்கிடமாகும், இவ்விடத்திலுள்ள பெரியாரும் சிறியாரும் அறியத் தக்கதாக ஒருகணையால் உன்னைவாட்டி இசையைநாட்டி நானடையப்போகின்ற வெற்றியை நீயேநன்றாயோசித்துப்பாரென்று இரண்டு அர்த்தசந்திர பாணங்களைவிட்டு அதிசீக்கிரத்தில் கர்ணன் கையிற்பிடித்தவில்லைச் சடுக்கென்றொடித்தான். அப்பொழுதுகர்ணன் கலீரென்றுநகைத்து மலைபிளந்ததுபோலொடிந்தவில்லைவிட்டெறிந்து கண்களையுருட்டிவிழித்துக் காரும்பாருங் கருகநோக்கி வேறுவில்கொண்டு பற்குனன்பேரில் சினைவிரிந்த செங்கதிர்வேலெடுத்துச் செலுத்தினான். அங்கதேசாதிபன் எறிந்தவேலாயுதமானது வெளிப்பட்டுப் பொன்னிறமாகச்சொலித்துச்செஞ்சிலைவிசயனை நோக்கிப்பூர்ணசந்திரனைப் பிடிக்கவருகின்ற இராகுக்கிரகம்போல்வந்தது? அந்தவேலாயுதம் கந்தமாதனமுதலியவரைகளும் கடலுங்கலங்கமுப்புவனமுந்நடுக்கிடவந்தவிதத்தைச் சர்ப்பக்கொடிதரித்த கௌரவகுலத்துரியோதனனும் இரதகசதுரகபதாதியுடன் காவலர்களுங்கண்டு ஓகோகோ! அருச்சுனனுடையசௌரியம் இப்போதன்றோ தெரியப்போகிறதென்று இமையுடனிமைகொட்டாமற் கண்விழித்துப்பார்த்துக்கொண்டே யிருந்தார்கள். யாவருநடுங்க எதிரேறிவந்த வேலாயுதத்தை அநுமக்கொடிக்கதிபனாகிய அருச்சுனன்பார்த்து வலிதிருந்தி மணிபொருந்தி மலரணிந்துவிளங்குகின்ற வச்சிரக்கணையொன்றெடுத்துஅசைவற்ற வில்லிலமைத்து அபிமந்திரித்து ஆவேசங்கொண்டிருந்தினன். அந்தக்கணையா

னது பந்துபோலெழுந்துவந்துமேல்விழுந்து அந்தவேலாயுதத்தை அரப்பொடியாக நூறி அந்தப்பொடியை வணங்காமுடி மன்னன்முதலாகிய கௌரவச்சேனைகளின் கண்களிற்றூவியது, விழித்தகண்விழித்தபடி வேடிக்கைபார்த்திருந்த வேந்தர்களியாவரும் இதற்கோ இந்தக்கொள்ளை! அடாபாவியென்று தலையிறங்கிக்கொண்டார்கள், அதைக்கண்ட தேவர்கள் அகங்களித் தாடினார்கள். அங்கதேசராசனாகிய கர்ணன் அருமையாய்ப் பெற்றிருந்த வேலாயுதம் அருச்சுனன்கணையால் அழிபட்டுப்போனதைக்கண்டு சற்றுந்தளராமல் மனோதிடங்கொண்டு வைரவில்லெடுத்துத் தீர்க்கமாய்வாங்கிச் சிறுநாணோசைகாட்டிச் சிலைவிசயனுக்கு எதிரில் அளவுபடாத அஸ்திரங்களை அமோகமாகச்செலுத்திப் போர்விளைவித்தசமயத்தில் இந்திரன்மைந்தனாகிய தனுர்வேதசுந்தரனஞ்சயன் மகாதேவனை வணங்கி அருச்சனைபுரிந்து பரிந்து சிறந்தபொற்கட்டமைந்த அஸ்திரங்களைத்தெரிந்தெடுத்துவிடுத்துச் சங்கமுங்குறித்துச் சொர்ணமயமாய் விளங்குகின்ற கர்ணனுடைய தேரையும் மின்னொளிபோன்ற கச்சைக்கொடியையும் நான்குபுரவியையும் அப்புரவிகளைப்பாய்ந்துவிடுக்குஞ் சாரதியையும் பொடியாக்கி அவனுடற்காப்பாகிய மணிக்கவசத்தையுந் துணித்துவிட்டு விரபட்டத்தையுந் தூளாக்கித் தலையிறக்கமாய்ப் பூமியினிற்கச்செய்து மிகமகிழ்வுற்றுப் புகழ்பெற்ற பார்த்தன் சிற்சிலவார்த்தைகள் சொல்லலாயினான்.

ஐயா கர்ணா! இளமைதங்கிய இடபம்போன்ற உன்னைநான் நெடுநாளாக அறிவேன், உன்யோக்கியம் எப்படிப்பட்டதென்னில் புத்தியில்லாத புரவலர் சேர்ந்த புன்சபையில் என்னை வெற்றிகொள்ளத்தக்க சுத்தவீரர்கள் ஒருவருமில்லையென்றும் யுத்தத்தில் நான் அதிசமர்த்தனென்றும் விஸ்தாரம்பேசுவாய், நான் நிகரற்றவனென்பாய், இப்படி புலம்பிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் உன்போல்லாதவனை யுத்தங்கிட்டால் அற்பபலம்பெற்ற அறிவில்லாதானைப்போல் அபலிப்பதுங்குவாய், ஒருவனை அடுத்துப்போர்கொடுக்கத் துணிந்தானமட்டும்பார்ப்பாய், அபசயப்பட்டு ஓட்டமெடுப்பாய், இக்குணம் உன்னுடன்கூடப் பிறந்திருக்க வேறே வாவென்றால் வருமா? ஐயோ! எவர்களென்னகேட்டாலும் இல்லையென்னாமற் கொடுக்குந்தன்மை உன்னிடத்திலுண்டென்றும் ஓயாமலீயுங் கொடையாளியென்றும் இடைபெறுவள்ளலிலொருவனென்றும் உன்னைப்போற்றிப் புகழ்கின்றார்களே! ஆனால் யுத்தகளத்தில்வந்து ஒரு தெப்பல்பட்டவுடனே அப்பாவென்று புறங்காட்டியோடுகின்ற விடயத்தில் நீமிகவுங்கொடையாளிதான், நானும் உன்னைமதித்திருக்கின்றேன். வாய்மதம் பேசும்வள்ளலே! போர்முகத்திற் றேர்செலுத்திப்போர்புரிந்து புறமிடாதிருந்து பிராணனை விட்டுவிடுவையானால் உலகத்திலுள்ள எல்லோரும் புகழ்வார்கள் பரத்திலுள்ள தேவர்களும் எதிர்கொண்டுசென்று மகிழ்வார்கள் அரம்பாஸ்திரிகள் போகமுமுண்டாம், வீரசுவர்க்கமடைவாய், இல்லாவிட்டாலும் நீயெடுத்திருக்கின்ற அரவக்கொடியோன் கொண்டாடும்படியாகத் தப்புகளைக்குழறி உன்காலத்தைக்கழித்து நமனுக்கும்நாளையொப்பிவிப்பதுஉத்தமம்; அப்படிசெய்யாமல் அமர்செய்யவந்து புகுந்து பிறைமுனைப் பகழிசொரிந்து

நானும் போராடுகின்ற வீரபுருடனென்று தேரேறிவந்து எதிர்த்ததுமதியீனம். திறனற்றவனே! மேலும் பாஞ்சாலராசன் பண்ணிய யாகாக்கினியிற்பிறந்த துரோபதையை நமது அத்தினாபுரியிற்கூடிய கொற்றவர்சபையிலேற்றி வத்திர பங்கஞ்செய்த காலையிற் பொறிபுலன்கலங்கிக் கண்ணீர் தாரைதாரையாய்ச் சொரிய மெய்சோர்ந்து நடுநடுங்கிநின்று மானந்தன்னதென்று மனம்வாடித் துத்தன்னுடைய புடவையைத் தடுத்துக்கொள்ள மாட்டாமல் வத்திரத்தைக் கைவிட்டுத் தேகாபிமானநீங்கி அவள்அரிவாசுதேவா ஸ்ரீகிருஷ்ணா! மானாபி மானமுன்னுடையதென்று, வாழ்த்திவணங்கி மரம்போனின்றனளே! அது போது துட்டராகிய நீங்கள்பார்த்து நகைத்துப் பரிகாசவார்த்தை பகர்ந்தீர் களே. அவ்வேளையில் எங்கள் தமையனாகிய தருமராசன் அப்பா தம்பிமார் களே! இப்போதொன்று முழுகிப்போகவில்லை. இதுவரையிலும், நாம் தருமந் தப்பி நடந்தோமென்னும் பேருமில்லை. பழிச்சொற்பெறுமற் பொறுத்திருங்க ளென்றுஅடிக்கடி எங்கட்கு அறிவுறுத்திச் சாந்தம் பத்தினி தனயன் பொறு மையென்று தருமஞ்சொல்லித்தடைப்படுத்தினர். அவரோதியமூலமந்திரத் தால் மாநாகம்போலடங்கித் தடைப்பட்டுக் கருமாநுபவப்பிரகாரங் காலங் கடத்தினோம். ஆகாகா! வைதீக சாந்தத்தராகிய தருமராசனது அரு ணிறைந்த கடைக்கண் சிறிதசையுமாயினும், எங்களை நோக்காதிருக்கினும் போதுமே. இதுவரைக்கும் கர்ணன் துரியோதனன் என்கின்ற பெயர்கள் இந்தக்காசினியோர் பேசிக்கொள்ளவுமிருக்குமோ? உங்கட்குச் செல்வ முஞ்செருக்குமோ? தீரமும் பெருக்குமோ? ஆ பாவி! அப்படி நாங்கள் ஒடுங்கியிருந்தும், அந்தச்சபையில் நீங்கள்நடந்த அநியாயத்தால், வீமசேனன் வெகுண்டு மனநொந்து துரியோதனன்முதலாகிய நூற்றுவரையும் என்கதை யால்,நானேநொறுக்குகிறேனென்று சபதம்பேசி இவர்களை முடிக்கிறபரியந்தம் தாகத்திற்குச் சலங்குடிக்கமாட்டேனென்று கூறினன். அந்தச்சொல்லைக் கேட்ட ஒவ்வொருவரும் தலைகுலுங்கிச் சாய்ந்தார்கள். அவ்வேளையில் நானுமெழுந்து மின்னியகணையால் உன்னுயிர் போக்குகிறேன் என்று உறுதி மொழி உரைத்திருக்கின்றேனே. அது உனக்கு நன்றாய்த்தெரியவருமே! என்றைக்கிருந்தாலும் என்பாணத்திற்கு உன்தலை யிரவலே. இப்போதும் என்ன! ஒருமுழுக்கில் மண்ணெடுக்க வேண்டுமென்னும் அவசரமில்லை. நீயிப்போதிருக்கிற கதியை யோசித்துப்பார். உனக்கு என்னுடன் போர் செய்யத் தெரியுமானால், தாராளமாய்வந்து போர்புரிந்து என்னைவெல்லலாம். நான் உனக்கு இப்பூமியை இடம்பண்ணியிருக்கின்றேன். ஐயையோ! பாவம், எங்கேபிறந்தாய்; எங்கேவளர்ந்தாய்; எங்கேயிருந்தாய்; இங்கேபுகுந்தாய்; அங்கதேசாதிபனே! அவ்வாறு சாகாமல் இன்னுஞ் சிலநாளைக்கு இருக்க வேண்டுமென்றெண்ணினால், இதோ! நான் தொடுக்கப்போகின்ற இந்துமுகா த்திரங்களினால் தப்பாமல் உன்தலை நத்திவிழப்போகின்றது. ,அப்பா! நான் முன்னே உனக்கறியச்செய்தேன் இப்போதானாலும், உன்னுயிரைத் தப் பிக்கொண் டோடிப்போவென்று உறுக்கிவிழித்தான்.

இந்தப்படி, அர்த்தநாரீஸ்வரம்பெற்ற அம்பிகையுடன் என்கர்த்தனாகிய பரமேசுவரன் மழவிடைமேலெழுந்தருளி வரும்படிக்குத் தவயோகஞ்சாதித்த தனஞ்சயன் சொற்றபோது, அவனிசைத்த கடுமொழிகளெல்லாங்கலந்து பிலம்புகுந்து உறையுமாறுபோல், கர்ணனுடைய காதிற்புகுந்து கலங்கச்செய்தது. அதனாற் கர்ணன் சூரியன்போற் கண்கள் சிவந்து, நெருப்புக்காற்று வீசுவதுபோல் நெட்டுயிர்ப்பெறிந்து, இரத்தினமிழைத்த கடகங்கணந் தோளணிதாங்கிய இருகரத்தையும் பளபளவென்று நீட்டி, இரண்டுகையுங்கூப்பிக்கொட்டி, கக்கட கக்கட சிரித்துக் காதுடன் சிரத்தையசைத்துத் திக்கென்றெரிய விழித்துப் பக்கத்திற்குப்புறப்பாய்ந்தோடிப் போனான். இவ்வாறோடிய கர்ணன் மனந்துணிந்து, மலைபோற்றிணிந்த சேமத்தேரேறி வச்சிரக்கவசம் உச்சிதகவசம் மணிக்கவசம் பொற்கவசம் பூண்டு விசாலமாகியமார்பில் முப்புரிநூலும் முத்தாரமும் கௌத்துவச்சரப்பளியும் மின்னும்படியாகத் தரித்துக், கடலின் அலைபோற்றுலங்கிய நாரிமாட்டி வில்லைப்பிடித்து விசையாயிழுத்துத் தடதடவென்று தேரைச்செலுத்திச் சற்றுநேரத்திற்கு முன்னே சண்டைபோட்டு இளைத்தோடிய தடத்திற்போய் நின்று, மீசைமுனைக்கு மிகுமுறுக்கேற்றிக், கண்டவர்கலங்கக் கனைத்துக் கொண்டல்வாகனன்குமாரனை கிரீடியை அண்மையிற்கண்டு, அடா அர்ச்சுனா! எங்கே ஓட வழிபார்க்கின்றாய்? சண்டைபோட வகையில்லாமற்போகின்றாய். இதோ! நான் வந்திருக்கின்றேன். இளைத்துப்போய்விடாமல், என்னை வளைத்துப் போர்புரியவாடாவென்று அவனைமடக்கி ஏண்டா என்னை யிழிவாய்ப்பேசினையென்று தன்னாக்குக்குத் தழும்பேறும்படியாய்க் கோபங்கொண்டு கொடிதாகியசொற்களைக் கொட்டினான். அடா! பஞ்சவரில் இடைப்பட்ட பஞ்சையே! நீ யென்னடா கொஞ்சமேனும் அஞ்சாமல், மெத்தவுங் கற்ற சுத்தவீரன்போல், கருவங்கொண்டு மிஞ்சிப்பேசுகின்றாய். தலையறுந்த ஆட்டமாய்த் தனக்குத்தானே சுழன்றோடுகின்றாய். ஊரில் உலகத்தில் உள்ள பெரியோர்கள் உரியோர்கள் சிறியோர்கள்முதலாகிய வறியோர்கள் இவர்களியாவரும், உன்னைக்குறித்து இவனும் ஒருவீரன்தானோவென்று, ஏளனஞ்செய்துசிரிக்கும்படி ஏமாந்தசூதாடி நாட்டை நகரத்தை நலத்தைப்பலத்தைத் தாயத்தார்கள்கையில் ஒப்பித்துப்போட்டு, மானம்போனாலும் பிராணனிருந்தாற்போதுமென்று, இருளுக்குப் பிறப்பிடமும் இருப்பிடமுமாகிய வனத்திற்சென்று கதியற்றிருந்து கஞ்சிக்கலைந்து வயிறுகட்டி வாணாளோட்டிக் காலங்கழிக்கக் கற்றாயேயன்றிப் போர்முனைக்கண்ணே புகுந்து, வில்லாளராகிய வல்லாளருடன் விதண்டைவிளைத்து, வெற்றிபெறுகின்றவகை இன்னதென்றறிவாயோ? வீரப்பிரதாபம்பெற்ற விவேகிகளை உணர்வாயோ? நீயும் ஒரு வில்வீரனென்று வீரபட்டங்கட்டிக்கொண்டு வில்லெடுத்துப் போர்கொடுக்கவந்தாயே போதும்போதும். அரசர்கோட்டியுள், வட்டாடித்தோற்று மரியாதைகெட்டதுமன்றி உங்கள் நாட்டைப்பறித்துக்கொண்ட நரேந்திரனாவன் உங்கள் பெண்சாதியையும் மயிரைப்பற்றி யிழுத்துவந்து சபையிலேற்றி மானபங்கஞ்செய்வித்தானே. அக்காலத்தில் இல்லாத முனையும் முடுக்கும்

இந்தக்காலத்தில் எங்கடா இருந்து எழுந்தது. என்னைக்காயமேவ கிளைத்தோடிவந்ததோ? அல்லது, முளைத்தோடிவந்ததோ? மானமும் வல்லமையும் மாறாதவனே! போகட்டும் கீழ்கிடப்பவன் கீழேகிடப்பான் என்பதுபோல், ஒருவேளை சூரத்துவம் இப்போதுதான் வந்தாலும், என்னைசெயித்து இசைபெறப்போகின்றவன் நீதானா? விசயகாண்டீபமெடுத்து வெற்றிவாகை பெறுதற்கு வந்தாயோ? ஆ! பைத்தியக்காரா! இராசராசேசுவரனாகிய துரியோதனமகாராசன் சமுகத்தில் பேச்சுமூச்சுமில்லாமற் சிதறிக்கிடந்த பாண்டவர்களில் பின்னிட்டிருந்த நீ என்னை மிரட்டவந்தாயென்னடா, பேதையே! இதோ இப்போது நான் விடுக்கப்போகின்ற இரவியாத்திரங்களால், உன்னுயிர் வெளிப்பட்டு, உடல்முறிபட்டு, உன்போன்றவர்கள் சிந்திக்கத்தலைப்பட்டு, நீ நெடுநாளாய்த்தேடிச் சேகரித்த கீர்த்தியுங்கெட்டு, கிட்டேமாகிய வசைமேலிட்டுப் பொன்றும்போய்ச்சேரும்படியாய் நாளிட்டுவைத்தகன்றுள் வந்து ஒத்துங்கொண்டது. இனியென்ன இருக்கின்றது. தாய் தமயன் தம்பியர்கள் தாரம் தநயன்முதலியபேர்களை யொழித்துவிட்டுச் சண்டைக்குத் தலையிட்டு, விராடபுரத்தெல்லையிற் செத்துப்போகப்போகிற வுன்னைக் குற்றமாகிய கொடுஞ்சொற் கூறுவானேன்? அப்படிப்பேசுவதினால் எனக்கென்ன பயன்? பார்த்தனே! சற்றுநேரத்திற்குமுன்னே என்னை வென்று ஓட்டிவிட்டதாய் இறுமாந்து முன்னாலோசனை பின்னாலோசனை யெண்ணாமல், குறைகுடந் தளும்புவதுபோலும், நாய்யானை கொழுப்பொறுக்காத் தன்மைபோலும், சின்னப்பேச்சுகளைக் கொட்டிப்போட்டாயே. உன்னுடனெதிர்த்த என்கையிலும் நானெதிர்ப்படேரும் ஒழிந்து, நானும் போர்முனையிலழிந்துபோனதை இன்னவகையென்றறியாமல், வெற்றியடைந்தோமென்னும் உற்சாகங்கொண்டு, உனக்கிச்சையானபட்டும் பேசினைபோலும், அப்பா அர்ச்சுனா! யானையைச் சிங்கம் பங்கப்படுத்துவது இயற்கை, அப்படிப்பட்ட யானைக்குச் சிங்கம் இளைத்துப்போமானால், அவ்யானை களிபெருமகிழ்ச்சியடைந்து சிங்கத்தைப்பழித்துப்பேசுவது நீரமோ? இதுவுமொரு வீரமோ? நீயென்னவோ மிகத் தெரிந்தவனென்று பேசிக்கொள்ளுகிறாய்களே. உனக்கென்னதெரியும்? வில்லானது எவ்வளவு தூரம்பின்வளைகிறதோ அவ்வளவும் வேகத்திற்கிடமென்றுதோன்றவில்லையா? ஆட்டுக்கடா பின்னுக்கிடைவது இன்னொரு ஆட்டின் தலையோட்டுக்குக் கேடென்றுணரா பா? ஏதோ ஒருகாரியத்தினாற்பின்னிட்ட சிங்கமானது மறுபடியும்பாய்ந்து மத்தகத்தைப்பிளந்து, உதிரமூளையை சிரம்பப்புசிக்குமென்று, சற்றேனும் நீ நினைக்காமற்போனதென்ன? நல்லது; இப்போது நானுன்னைச் செய்யப்போகின்ற செய்கையினாலும் காரணகாரியங்களினாலும் என்னை இன்னானென்றறியப் போகின்றாய்! உன்னிடத்தில் விருதாவாய்ப்பேசுவதிற் பயனொன்றுமில்லை. அப்பிரயோசனனென்று உரத்துத் தொனியிட்டதட்டிக் காத்திலிருக்கும் வில்லைநாட்டி நாணிபூட்டி வலியகணைகளை வந்தித்துமாட்டி விரலைக்கணங்காட்டி மிக்கவிசையுடன் தகுந்த சரங்களை விறுவிறுவிறுவிறென்று பொழிந்தான். சூரியகுமாரனாகிய கர்ணன் தொடுத்த சரங்களினாலும் அவன் தூறிப்பேசிய வீரியச்சொல்லினாலும் அருச்

சுனன் மனம்பதைத்து வருணாஸ்திரம்முதலியவைகளை அபிமந்திரித்துப்போக்
கிப்பற்பலதேயமார்தரும்விற்படைவேற்படையையுடைய வேந்தரும் வீரமுள்
சேனைகளும் இருண்டுமருண்டு இளைத்துப்போம்படியாக்கிக் கர்ணன்மேலுங்
கணைக்கமோட்டினான். இவ்வாறுகும்புகும்பாகவந்தஅம்பினங்களைக்கண்டு எதி
ரெதிர்தடுக்கும்படிக்கோடிபாணங்களைவிட்டுப் போராடி மாறுபட்ட தங்கள்சேனை
யுடன்வளைந்து நாறுகிய வேந்தருடன்சேர்ந்து விற்கிரீடியை மொய்த்துக்
கொண்டு ஈட்டி கதை வாள் வேல் சூலம் பிண்டிபாலம் தோமரம் கத்தி
கட்டாரி வாங்கு சாங்கு முசுண்டி முள்முனை சக்கரமுதலாகிய சஸ்திரங்களை
எடுத்தெடுத்தெறிந்து மழைபெய்போற்சாடுங்காலையில் தனிச்சிங்கமென்னநின்ற
தனஞ்சயன் செஞ்சுடர்க்கணையைத்தெரிந்து சித்தையாயெடுத்துப் பரிந்து
பூசைகளநேகம்புரிந்து காண்டீபமாரியில் வரிந்து கால்தலைதெரியாமற்சொரிந்
தான். அக்கணைகளெல்லாஞ்சேர்ந்து கும்பலிற்போய்விழுந்து துன்புறவேசுட்
டெரிக்கும்போதுகாவலர்முதலாகியசேனைகளுங்கடலின்முகட்டெழுந்த கதிர
வனைக்கண்ட பனிபடும்பாடு பட்டழிந்தனர். விண்படரும்மேகம்போலடர்ந்த
நாற்படைகளில் புண்படாமற்போனவர்களில்லை இப்படிவந்த சேனைகளெல்
லாம் கரமுறிந்து கால்தறித்து சிரமெரிந்து சிலைநெரிந்து சிதைந்தன இதனால்
வந்த சேதத்தையும் வதைந்து சாய்ந்ததையும் பிணைச்சேற்றிற் புதைந்து
போனதையும் ஒதுங்கியோடுவதையும்பதுங்கிவாடுவதையும் பானுகுமாரனாகிய
கன்னன் பார்த்துப் படபடத்துச்சினத்துக் குருகுலசேனையிற்கூடிய பலபடை
மன்னரும் அன்புகூர்ந்து இன்புறும்படி ஆசிரியராகிய பரசுராமனைப்பணிந்து
அழல்வாளிகோடி அனல்வாளிகோடி அரிவாளிகோடி யெடுத்துத்தொடுத்
தான். அக்கணைகளியாவும் செந்தீயிறைத்துச் சகமுற்றுநிறைத்து விண்ணைக்
கருக்கி மேகங்களைச்சுருக்கி வேலைநீரைவெதுப்பி வெந்நீராகக்குழப்பி விண்
டலமளாவிப் பிடித்து மேலிட்டுநின்ற மலையையிடித்துப் பெருங்காற்றடித்துச்
சோனாமேகம்பொற்போழிந்து சற்றேனுந் தங்காமற்றிரிகின்ற அத்திரங்களைப்
போர்முகவிசய புருடசிலாக்கியன்கண்டு தனக்குக்கைவந்த இந்துமுகாத்திரம்
ஐந்து ஆய்ந்தெடுத்து அபிமந்திரித்து எதிரிவிட்டபாண முழுதையும் சற்று
நேரத்திற் சிதறவடித்து பொய்யெனப்பிளந்து மெய்யெனத்தழைந்து வெற்றி
வீரப்பிரதாபத்துடன்வரக்கடவதென்றுவிட்டான். அவனுந்திபவண்ணம்வந்து
மூந்திய கணைகளைப்பிளந்து மேவலர்கண்டோடக்களைந்து நிற்கையில் மூவுலக
மும் கொண்டாடக்கொடுக்குங் கொடையாற் பெயர்பெற்றுக் கீர்த்திவிளக்கிய
அரசர்பெருமானாகிய கர்ணனும் தொடுக்கும்படையாற் றுட்டர்களழியக் கொ
ட்டமடக்கிப் பெயர்விளக்கும் பாண்டவனாகிய பார்த்தனும் ஒருவருக்கொருவ
ரெதிர்த்துப் போர்புரிந்தனர். இருவர்கணையும்பறிந்து இருவர் இரதமுஞ்செ
றிந்து இடைப்பட்ட சேனையுமுமிந்து ஆகாயமும்பூமியு நிறைந்து சூரியனொ
ளியுங் குறைந்து வேடிக்கைபார்த்திருந்த மூவரும் தேவருமறைந்து இடம்
பெயர்ந்தார்கள்; வாயுதேவனும் உலகிலுலாவுதலொடுங்கித் தப்பித்துப்போ
னான். இருவரும் பிரயோகஞ்செய்த பாணவேகத்தினால் வெகுபேர்மாண்டார்
கள். அடிக்கடி அவசகுனங்களும் விபரீதங்களும் உண்டாய்த்திகிலும் விளைக்

தது. யுத்தஞ்செல்கின்ற இருவர்கண்களுஞ் சுழன்று இருவரெண்ணங்களு மழன்று சிறப்பாய்வருந் தேருந்தேரும் நெறிப்பாய்வருங் குதிரையுங்குதிரையும் தேர்ப்பாகருந் தேர்ப்பாகரும் ஆர்ப்பாகிய கொடியுங்கொடியும் ஒன்றோடொன்றோடுதாக்கி அநர்த்தமுண்டாக்கியபோது கர்ணன்கனைத்து இடம்வலம் வலம் இடமாகத் தேரைத்திருப்பி பெருநகைநகைத்துப் பெரும்புலியென்னப்புகுந்து அடா அர்ச்சுனா! அஞ்ஞாதவாசஞ்செய்யப்போன ஒருவருடத்தில் இன்னும் ஒருநாள் இருக்கவேண்டியிருக்க அதற்குள் அவசரமாய்வெளிப்பட்ட. உன்னால் நீங்களைந்துபேரும் இனி அநுபவிக்கப்போகின்ற வனவாசத்துன்பமும் உங்கள் தலைமேலேறிக்கொண்டது சபையிற்சொல்லிய சத்தியவசனத்துறுதியன்றோ? அதுதெரியாமல் என்னடா! மெத்தத்தத்திச் சுற்றித் தலைகீழாய்வீழ்கின்றாய், கற்றவித்தையெல்லாங்காட்டுகின்றாய், குற்றமற்றவர்களைப்போற் கொண்டானடிக்கின்றாய், இதோநான்விடப்போகின்ற சிலீமுகங்களினால் இறந்துபோவாயானால் "கூண்டோடுபோயிற்று குளிருங்காய்ச்சலும்" என்றுகூறும் பழமொழிப்படிக்குஉங்களைமன்னித்து விடப்படும், சிலவேளைஎன்கணைக்குத்தப்பிப் பிழைப்பாயானால் இன்னும் பதின்மூன்றாண்டு வனவாசம் செய்யவேண்டும், இவ்வாறேஅந்தந்த அஞ்ஞாதவாசந்தோறும் உங்களை எப்படியாகிலுங் கண்டுபிடித்து நீங்கள் காட்டுக்கு ஆட்சியாய்ப்பொருந்த நாங்கள் நாட்டுக்கு அரசாட்சியாயிருந்து எங்கள்காலத்தை இன்பமாய்க் கழிப்போம், உங்கள்காலத்தை உதவாமலொழிப்போம், இந்தஞாலத்தை இசையுடன் புரப்போம், நீங்கள்பண்ணுகின்ற இந்திரசாலத்தைப்பறையறக் கரைப்போமென்று சிந்தைவெதும்பித் தீப்பொறிபம்பிய கம்பிக்கணைகளை ஒன்றன்பின் ஒன்றாகவுந் திரைதிரையாகச் சிந்திக் கும்பல்கும்பலாகக் கொளுவிக்குட்டைகூளமாகக்குவித்து அர்ச்சுனனையும் தேரிற்பூட்டிய பரிகளையும் சாரதியையும் அலறும்படிசெய்தான். அந்தக் கர்ணன்சிந்திய கணைகளை ஆகாய பாணம்போலிரைந்து இராகுக்கிரகம் போல் விரைந்து பரந்துஎரிந்துவருகின்றகோரத்தைப் பார்த்தன்பார்த்துக்கண்ணும் மனமும் வேகச்செறுத்து விண்ணணியிக்கி ஒன்றுபட்டோடச் சரங்களைத்தாக்கி பட்டப்பகற்போல் வெட்டவெளியாக்கிப் பானுகுமாரன்பாணம் எட்டும் பாதிவழியில் நாணம்பட்டுப் போகப்படுத்தி வேண்டியமட்டும் போர் நடத்தி இந்தக்கர்ணனை எதிரியாகக்கொண்டு நாமிவனுக்கு நேராகநின்று போராடுவதும் இவன் நம்மையடிப்பதும் நாம் இவனையடிப்பதும் பெருமையாயிருக்கவில்லை. பார்க்கின்றவர்கள் இவனுஞ் சுத்தவீரன்தான், இவனால் அர்ச்சுனனும் அடிபட்டான், வெகுநேரம்போர்செய்தானென்று சொல்லுவதற்கு இடம் கொடுக்கின்றது, ஆதலால் இது நமக்குத்தகாது, இவனோடெதிர்த்து வெகுநேரமாகின்றதென்று நெற்றிவியர்த்து புருவமத்தியைநெறித்து சற்றுநகைத்து முற்றப்பகைத்து உசிதமான வச்சிராத்திரந்தொடுத்து அவனுக்கு உடற்காப்பாகியகவசத்தையும் துவசத்தையும்மார்பையும் உடலையும் பீறிக்கிழித்துப்பெருந் தொளைபோக்கி உதிரம் பெருகியோடச்செய்து அந்தமட்டும்' விட்டுவிடாமல் இரண்டு காளமேகக் கணையைத்தாக்கி வீணாய்ப்பிதற்றும் வாய்மேலடித்துக் கச்சக்கொடியைப்பிச்சியெறிந்தொடித்துக் கண்ணிரண்டிலும்புண்படவடித்து

மின்னும்பூச்சி பறக்கவிடுத்து நவரத்தினமுடி தவறக்கெடுத்து வாகுவலயமுதலிய மதாணிப்பதக்கங்களையுமாற்றிப் பெரியவில்லைப் படீரெனமுறித்து பாவியான கர்ணனைப் பார்க்கப்பார்க்கப்பற்றிக்கொண்ட வயிற்றெரிச்சலுடன் வைரம்பற்றிய எரிக்கணைபிறைத்து அவன் இருந்தோளையுந்தொளைத்து பகைத்தெதிர்த்த பரிவாரங்களையும்வளைந்து கொட்டியபஞ்சுபோற் குமுக்கிக்குவித்துக் குலைகுலைத்தோடப் பிடித்து பொருத்து எதிரொருவரில்லாமல் எங்குந்தனித்து ஊடாடிவருந்தாடாளனாகிய தநஞ்சயனை வக்ஷஸ்தலத்தில் மகாலக்ஷ்மியை வைத்தருளிய மாயனும் அவனது திருநாபிக்கமலத்தெழுந்தருளிய சேயனும் பட்சத்துடன்மகிழ்ந்து பார்த்தார்கள். தேவர்களும்புகழ்ந்து கொண்டாடினார். இப்பால் அங்கதேசாதிபன் அர்ச்சுனனாலடிப்பட்டுத்தனக்கு உயிர்த்துணையாகிய வில்லும் ஒடிபட்டு சீவரத்தினத்தையிழந்த செந்தலைநாகம்போற் சிந்தைதளர்ந்துபின்னுந் தைரியம்விடாமற்கிளர்ந்து வேறுவிற்பிடித்து மின்போற் பிரகாசிக்கின்ற நாணிபிறுக்கித் திசாதிசைகளும்பிதிரச் சந்திரசூரியரும் அதிரவானிறைந்த மோனமுனிவரரும் ஞானமுனிவரரும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் முக்குணமுத்தொழில் விளையாட்டுடைய மூவர்களும் பேரானந்தங்கொள்ளும்படியாய்க் கொஞ்சநேரத்திற் குள்ளாகத் துரோண மேகம்பொழியுங் கொள்கைபோற் கொடியவிடநெருப்புள்ள காந்தியகணையைக் கைக்கொண்டமட்டுங் கட்டாகத்தொடுத்தான். இப்படியாகக் கர்ணன்றொடுத்த கணைகளினால் அர்ச்சுனனுடைய தேரும் நான்குகுதிரையும் உத்தரகுமாரனாகிய சாரதியும் அலக்கழிந்து கலக்கங்கொண்டனர். அதுபோது எங்கும்புகழப் பங்குவைத்திருக்கின்ற பற்குனன் அமுதாகரனென்னும் அர்த்தசந்திரபாணத்தை கிமிடீகரிக்கக் காண்டீபத்திற்பூட்டிக் கடுகத்தெறித்துக் கர்ணனால் விடப்பட்ட காலாக்கினிக் கணைகளையெல்லாம் ஒன்றுபோனவழி ஒன்றுபோகவொட்டாமல் உடைத்துக் கிழித்து ஒழித்துப்பழித்து இடியாத்திரங்களை முடியப்பரப்பி வடுவில்லாக் கர்ணன்பிடித்திருந்த வில்வளைவை நிமிர்த்தி மளமளவென்று கடுவறமுறித்தான். அப்போது துட்டரைக் கொட்டமடக்கும் அங்கதேசபட்டாபிஷேகம் துரியோதனனாற் கட்டிக்கொண்ட கர்ணராசன் தன்கையிலிருந்த வட்டவரிவில் அர்ச்சுனனால் வெட்டுப்பட்டுப் போனபோதே அதுகெட்டதென்று விட்டெறிந்துவிட்டு எட்டுத்திக்குங் கெட்ட யரும்படியாய் ஆர்ப்பரித்து வயிரக்கட்டிட்ட மலைபோன்ற கதாயுதமெடுத்து விறுவிறெனச்சுழற்றி விட்டெறிந்தான். அதனாற் குவலயமடுங்கிப் பின்வாங்க அலைகடல் நிலைதவறி முன்னேங்க திசையானையெட்டுந் திடுக்கிட்டு ஒதுங்க சக்கரவாளந் தலைதாழ்த்திப்பதுங்க இப்படியாகக்கலக்கி எங்குமில்லாமலுழக்கிவருகின்ற கதாயுதக்கடுமையை காண்டீவன்கண்டு வயிரக்கணையொன்றுமந்திரித்தெடுத்து மலையுடன்மலை மலையுமாறு கதாயுதம்வருவதைக்காட்டி காதுபரியந்தம் இழுத்து மாட்டினான். அவ்வயிரக்கணை வந்து கர்ணன்வீசியகதையை வழிமறித்துக்கொண்டு அனந்தங்கோடி சக்கைசக்கையாயுடைத்து வென்றிபெறுவதற்கு விரும்பிவந்த அவன்சேனைகளின் மேலிறைந்து அவர்களையுஞ் சின்னபின்னமாக்கியது; அதனாற் சேனைகளுந்தானும் பொறுக்கமாட்டாமற் கவண்கல்லடியுண்

டழிந்தவர்களைப்போல் கை வாய் சிரம் உரம் கால்முதலிய உறுப்புகளும் வருந்தி மடங்கியோடினர். இவ்வாறாகத்தன்படைமன்னர் முதலாகியசேனைகளும் அவ்விடத்திற்பொருந்திப் போர்கொடுக்கமாட்டாமல்மாறுபட்டோடினதையும் தானெடுத்தெறிந்த தண்டாயுதமானது உமியுந்தவிடும்போலமுறிந்து பறந்து சிதறிப்போனதையும் எதிரியாகிய இந்திரகுமாரனும் அவனேறிய தேரும் அத்தேரிற்பூட்டிய குதிரையும் சாரதியும் அணுவத்தனையேனும் பழுதுபடாமலிருந்தஅச்சயத்தையும் தன்னுடையகதாயுதம் அநியாயமாய்ப்போன புதுமையையும் அந்த அர்ச்சுனன்கணைகள் அதிக்கிரமித்துக் கொல்லுகின்ற மந்திரத்திறமையையும் கர்ணன்கண்டு பெருமூச்செறிந்து ஏக்கங்கொண்டு ஏதொன்றுந் தோன்றாமல் இளைத்து நின்றுவிட்டான். அப்படியாகநின்ற அங்கராசனைச் சங்கிராமவிசயன்பார்த்து வெறுஞ்சிரிப்புச் சிரித்து மெத்தப்போர் வீரர்களையடித்து செத்துப்போகமுடித்து வெற்றிபெறப் படித்திருக்கின்ற பத்துக்கணைகளை ஆராய்ந்தெடுத்துப் பற்பல பூசையும்பண்ணி உபசாரத்துடன்வணங்கி அபிமந்திரித்துத் தெறித்தான். அக்கணையானது பந்தபாசம்போற்பற்றி எட்டுத்திக்கிலுஞ்சுற்றிக் கர்ணன் ஊர்ந்துவந்த கனகமயமான இரதமும் அவ்விரதத்திற்பூட்டிய வேகக்குதிரையும் அப்புரவியின்மனமும் எசமானுடைய இட்டத்திற் கேற்கும்படியாய்த் தேர்செலுத்துஞ் சாரதியும் ஒருமனத்திலழிய ஒழித்து அக்கம்பக்கத்தில்நிற்கும் படைகளைக்கழித்து அண்டகடாகம்வரையிலுஞ் செழித்து உலவிக்கொண்டிருக்கின்ற பாணங்களையும் கலைமதிமுகங்கடுத்துக் கறுத்துநிற்கின்ற காண்டீபனையும் கர்ணன்கண்டு கனல்விசக்காய்ந்து சாய்ந்துபோன தேர்விட்டிறங்கிப்பாய்ந்து உடைவாளெடுத்து முகஞ்சுளித்துக் கைவேல கதிர்வேல் வடிவேல் நெடுவேல் முதலிய கொடிய ஆயுதங்களைப்போக்கி பூமியில்நின்று செவ்வையாயுத்தஞ்செய்தான் இதன்றியும் நான்குபுறத்திலுந் திரும்பி யாங்குவரிசைகள்விருப்பி வளைந்து விளையாடிவருகின்ற செங்கதிர்க்குமாரனைச் சிலைவிசயன்பார்த்து இவ்வீரனை இவ்விடத்திலிருக்கச் செய்யலாகாதென்றெண்ணி விருதுகட்டிய அம்பொன்றெடுத்து பிரமாத்திர மந்திரத்தை யுச்சரித்து ஆசாரியவணக்கஞ்செய்து அவ்வாக்கணத்திற்றூண்டினன் அப்பிரமாத்திரம் புறப்பட்டு கர்ணனெறிந்த வேலாயுதங்களையெல்லாம் அநாகதஞ்செய்து அந்தக்கர்ணனுடைய மார்புந்தோளும் புண்பட்டுத் தொளைபட்டு மயிர்க்கால்தோறுங் கண்விட்டு இரத்தப்பிரவாகம் வாய்க்காலாய் வருத்தப்படுத்தியது. அதனால் கர்ணனுடைய தேகமுழுதுஞ் சரங்கள்பாய்ந்து அம்புப்பயிர்கட்ட செம்பொன்மலைபோலாய்ந்து வருந்தக்கலங்கி எதிர்ந்து போராடுவதற்கு வேறுவகையில்லாமல் படுகுழியில்வீழ்ந்த பாதகிக்குயானைபோல் நிலத்தில்நிற்கின்ற கர்ணனை சுவேதவாகனன்கண்டு வெந்துக்கங்கோபங்கொண்டு இரக்கமென்பது எவ்வளவுமில்லாமல் மகிமைபெற்ற சரங்களை வாரிவாரிச் சொரிந்தான். அர்ச்சுனன் அத்தலாகவத்தால் அம்பாகமாகப்பொழிந்த அத்திரங்களியாவும் காடாக்கினிபோலெரிந்து வாடாமல்விசையென்ன வந்து விழுந்து கர்ணன்நெற்றியிற்கட்டியிருந்த விரபட்டத்தைத் துட்டத்தனையாய்ப் பொடித்து அந்தப்பட்டங்கட்டிய நெற்றியிற் பொட்டிட்டதுபோன் முத்திரை

யடித்து ஊசிநுழைதற்கிடமில்லாமலுருவி அவன்தேகத்தில் ஊடாடிமருவிய காலையில் யாதொன்றும் யோசிப்பதற்கிடமில்லாமல் பெருமைபெறக்கருதிய சாமர்த்தியமும் சண்டைமுனையுங்கெட்டுதானும்புறமுதுகிட்டுச்சங்கைமேலிட்டோடினான். அப்போது அர்ச்சுனன்தேரிலிருந்த உத்தரகுமாரன் பளபளவென்று இரண்டுகைகளையுங்கொட்டிக் கலகலவென்று நகைத்து ஓகோவென்றிரைந்து விரைந்து தேர்விட்டான். இங்ஙனம் எப்போதும் வஞ்சகத்தில் கருத்துப்பொருந்திய துரியோதனனும் அவன் தம்பிமார்களும் குற்றத்திற்கு மிக்க திடஞ்சொல்லித்தேற்றுகின்ற சகுனிமுதலியமற்றையோர்களும் வித்துவச்சிரேட்ட மேன்மையோர்களும்அர்ச்சுனன்செய்தயுத்தமுகத்திற் புறங்கொடுத்தோடுகின்ற கர்ணனைக்கண்டு கவலைமேற்கொண்டு ஐயையோ! இனியெக்காலத்திலும் நமக்குவெற்றியில்லை; இப்போதிருக்கின்ற அரசாட்சியும் போய்விடுமென்று ஏங்கித்தளர்ந்தார்கள்; சூரியனுக்கொப்பாகிய ஆரியர்களாகியவீட்டுமர் கிருபர் துரோணர்முதலிய பெரியோர்களும் முகமலர்ந்து அகமகிழ்ந்து புயம்பூரித்துத் தேகம்பாரித்து வெற்றியுஞ்செல்வமும் தனஞ்சயன் பெறுவானென்பதற்குத் தடையாதாயினுமுண்டோவென்று வாழ்த்தினார்கள்.

அவ்வேளையில் அதிரதத்தலைவர்களில் யாரும் எனக்கிணையாகமாட்டார்களென்று ஆவிப்பறியப்பறியப் பலகாலுங் கூறித்தேறிய அங்கதேசாதிபன் சங்கடப்பட்டுநொந்து, பின்காற் பிடரியிலடிபட ஓடுகின்றதைக்கண்டு, அழகியதேர்மேல் அமர்ந்திருந்த அசுவத்தாமாவெகுண்டு, அவசரத்தில் தன் தேரை முடுக்கிச்சென்று, இக்காலத்தில் அந்தக்கொடையாளியைத் தடுத்துப்பேசவேண்டுமென்று போனான். இவன்தேரோடிவருகின்ற பேரோசையைக்கேட்டு முன்னமே கலவரங்கொண்டோடிவருகின்ற கர்ணன் திரும்பிப் பார்க்கச் சாவகாசமும் திடதைரியதீரமுமில்லாதவனாய் அருச்சுனன் துரத்தி அடிக்கவருகின்றானோ வென்பதாய் மேன்மேலும் திகிலடைந்து, பின்னு முடுக்காய்ப்பதறிப் பூமிமேலிடறிவிழுந்தோடினான். இவ்வாறிளைத்துப் பிராணபயங்கொண்டோடுகின்ற கர்ணனைப் போய்வளைத்துப்பேசுகின்றான்; அசுவத்தாமா அமரழிந்தோடுகின்ற அங்கதேசராசனுக்கு நேர்நின்று படையாளியாகியபாரமார்த்தியனே! நான் அசுவத்தாமா, இப்போதுநீர் கண்பொறிகலங்கி, தலைகவிழ்ந்தோடும்போது, என்னை அருச்சுனனென்று மதித்து, ஆத்திரப்பட்டு ஓடவேண்டாம். நில்லும்நில்லும். ஐயையோ பாவம், சற்றே நிதானித்துப்பாரும், இங்கேவாரும், கொஞ்சம் இளைப்பாறும். ஓகோகோ! இதென்ன கோலம், ஐயையோ பொல்லாதகாலம், ஏனிவ்வாறோடுகின்றீர், மண்மகளிற் புரண்டொதுங்கிக் கண்களிற் சலங்கலங்கி மார்புந்தோளுங் காலுங்கையும் நடுக்கிப்போவானேன்? எதிரிகள் வாயெடுக்கவொட்டாமல் வாயாடுகின்ற உமது மொழி ஒடுங்கிப்போவானேன்? காரணஞ்சொல்லும், காரியவானே! நாமெல்லோருங்கூடி மாடுமடக்கிய அவ்விடத்தில் சற்றுநேரத்திற்குமுன்னே இதோ, ஓடிவருவது ஒருதேரொன்றும், அதன்மேல் வருகின்றவன் ஒண்டிக்காரனென்றும், அவன் கைப்பிடித்திருப்பது ஒருவில்லென்றும், அவன் எனக்கெம்மாத்திரமென்றும், ஆணவமாய்ப்பேசி நீங்களியாவரும் எனக்குப்பின்

னின்று வேடிக்கைப்பாருங்களென்றேசி, பந்திப்பாகிய படைகளும்சென்று முந்திப்போய்நின்று, முனைந்து போர்புரியப்போனாயே, அப்பா கர்ணா! நீ கைப்பிடித்திருந்த வில்லெங்கே, வெற்றிகொள்வேனென்ற சொல்லெங்கே, அங்கதேசராச பட்டாபிடேகம்பெற்ற முடியெங்கே, கச்சக்கொடியெங்கே, கூசாமலோடுங் குதிரையெங்கே, தருணத்திற்காக்குஞ் சாரதியெங்கே, நால் வகைச்சேனையெங்கே, மந்திர உச்சரிப்பெங்கே, விரபட்டமெங்கே, மந்தாரமெங்கே, மணிக்கவசமெங்கே, துணிக்கவசமெங்கே, சொல்லப்பா வெல்லப் பாகினு மினிதாய்ச்சொல்லுஞ் சொற்சோர்வில்லாத விற்சாதுரியனே! வேந்தன் தம்பியாகிய துச்சாதனனெங்கே, மச்சானெங்கே, மாமனெங்கே, பச்சாத்தாபம்பார்க்காத பதிதனே! மாறுபட்டுவரும் பகைவர்களைப்பேறுபெற்ற ஆயுதங்களினால் கூறுகூறாக்கி, தாறுமாறாக வேறுலகாளவிட்டு, வலம்புரி மாலையணிந்த துரியோதனமகாராசனை இங்கிலப்புரக்கப் பட்டாபிடேகம் பண்ணிப் பெருஞ்செல்வத் தமைக்கிறேனென்றும், அருச்சுனனுக்குவைரி நானொருவன்தானென்றும், பெருமைபாராட்டி அருமையாகச்சொல்லிய நீ அந்த அருச்சுனனாலடிபட்டுப் பெருகிவழிகின்ற இரத்தவெள்ளத்தில் நீந்தி விசனமாந்தி இருகையேந்தி நிலத்தில்வீழ்ந்து நிணச்சேற்றிலழுந்தி நெடுங்காற் புதைந்து, ஓடவேண்டியதென்ன? உத்தமனே! உங்களைப்போன்றவர்கள் ஒருவனுடைய அன்னத்தையுண்டு யுத்தநேரிட்டகாலத்தில், எசமானனையிகழ்ந்து எதிரியைப்புகழ்ந்து நன்றிகுன்றி மானங்கெட்ட நாணம்விட்டு நடக்கத் தக்கவர்கள்; இதல்லாமலும் தீரத்துடன் வெற்றிகொள்ளப்போகின்ற உம்மைப்போன்ற சுத்தவீரர்களுக்குப்பக்கத்திலிருந்து நச்சுநச்சென்று இலச்சைகெட்டுப்பேசி வெற்றிகொள்பவர்களையுந்தடுத்து அவர்களுக்குள்ள திடதைரியத்தையுங்கெடுத்து நாங்களுங்குப்புறப்படுத்து வெல்லாமலும் வெல்லுகின்றவர்கட்கு உற்சாகஞ்சொல்லாமலும் காரியத்தாழ்வுசெய்கின்ற நாங்களாதலால் எங்களை ஊரைப்பார்க்கப் போகச்சொன்னாய்? அப்படிப்போக மனமில்லாதவர்கள் அருச்சுனனையடித்து வெற்றிபெறப்போகின்ற உன்னுடைய யுத்தவல்லபத்தைப்படித்து எனக்கும்பின்னாலேநின்றுகண்டு சந்தோடப்படுங்களென்று பேசினாய் போகட்டும்; எங்கள் கதிதான் அப்படியானாலும் வாய்ப்பகட்டுரைத்த உன்கதியை யோசிக்குமிடத்திற் போர்முனையைவிடுத்து சாதுவாகிய பாண்டவர்களுக்குச் சந்தோஷங்கொடுத்து உனக்கு அன்னமிட்டுக்காத்த துரியோதனராசனுக்குத்துன்பமூட்டை கட்டிப்போட்டு நீபெற்றிருந்த புகழுங்கெட்டு நன்றிமறவாத வெற்றிவீரனானாயே? வீரசுதந்தரனே இப்போது ஓடுகின்ற நீ ஒருவேளை திரும்பிவருவையானால் உன்னைக்காப்பாற்றிய துரியோதனனுக்கு என்னசொல்லுவாய், பெரியோர்முதலிய பிராமணர்களுக்கு க்ஷாத்திரமில்லை, வைதிக சாந்தஸ்தமுடையவர்கள்க்ஷாத்திரமுள்ள க்ஷத்திரியகுலாதிபன் நான் தானென்று மார்புதட்டிப்பேசிய தராதிபனே! எதுகாரியங்களையும் எண்ணித் துணியாமல் விண்ணாணம்பேசுகின்ற வீணனே! இத்தருணத்தில் நானிசைப்பதைக் கேட்பாயாக உலகத்தில் மௌடீகர்களா யிருக்கின்றவர்கள் இருந்த இடம்விட்டெழுந்திராமல் வாய்கொண்டமட்டும் பேசுவார்கள், சொல்லிய

வண்ணநடத்தமாட்டார்கள். அப்படிநடத்தலாமென்பதுசிருட்டிகர்த்தாவாகிய திசைமுகனாலுங்கூடாது. ஆகையால் கெடித்தலாதிபனைகௌரவகுலமுதல் வனால் தனம் தானியம் சம்பத்து பசு பத்தினி புத்திர மித்திர பாக்கியமும் படைத்து பொக்கிஷப்பொருளைப் பூரியாய்க்கொடுத்து புகழுடம்பெடுத்துப் பூரித்திருக்கும் புயபல வலிமையால் முன்பின் யோசிக்காமல் வம்புப்பேச்சுகளைப் பேசிவிட்டதனால் மகான்களுக்கு மனம் ரோசிப்போயிற்று. உன் பேச்சின்படிமுடிப்பதற்கு உனக்கும் அசாத்தியமாயிற்று இன்னும் ஒருசிங்கத்தைப் பதினாயிரம் யானைகள் வளைத்துக்கொண்டாலும் குப்பைமேடு தங்கத்தை மறைத்துக்கொண்டாலும் சிங்கத்திற்கும் தங்கத்திற்கும் பங்கம்வருமென்று பொங்கிவழிகின்ற நீ உன்சிந்தையிலெண்ணாதை? அங்கர் கோனே! யென்று பலபலவிதமா யெடுத்துப்படித்து தவடையிலு மிடித்ததுபோற் பேசியபோது சூராதிசூரனும் அத்திரசத்திர சாமர்த்தியனுமாகிய கர்ணன் யாதொன்றும்பேசாமல் எதிர்த்துவாயாடாமல் தலையெடுத்துப்பாராமல் சமயத்திற்குத் தக்கபடி சொல்லாமல் அர்ச்சுனனால்மடிந்த பிணமலைகளுக்குப் பின்னாலொதுங்கி ஆமைபோற்பதுங்கி ஆகுதிபோன்றுநின்றான். அவன்கதிப்பப்படியிருக்க; வாசத்தேன் மருவிக்குலவிய வனசத்தார் மாலைகிலவிய விரத்தோள் பூரித்திலகிய தநுவேதியர் குமாரனெனமருவிய அசுவத்தாமாவென்னும் அதிரதமுதல்வன் வீரத்திற்பின்னிட்டோடும் விதவைமுகத்தில் விழிக்கலாகாது, விழித்து வசனிப்பதுமிருபாவமென்று அவ்விடம்விட்டுநீங்கித் தனதுதந்தைமுதலாகிய பெரியோர்களிருக்குஞ் சார்பிற்போய்ச் சார்ந்தான், இப்பால் அர்ச்சுனனிடத்தில் நடந்த அதிசயத்தைச்சொல்லுகிறேன். கேளுஞ் செனமேசெய மகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிவந்தார். பிற்பாடு விசயவீரப்பெருமையாற்சிறந்த விசயன் பொற்சிகரங்கூடிய அனுமக்கொடியாடிய தேர்மீதிருந்து கர்ணன் ஓடும்போது கைகொட்டிநகைத்த உத்தரகுமாரனை அதட்டி ஆ ஆ வென்றான். அந்த அமட்டலைக்கேட்ட உத்தரகுமாரன் கர்ப்பங்கலங்கி சர்ப்பம்போல் வளைந்து ஒருவாறு வாடி தாழுட்டிய செவ்வெண்ணெயுங்கழன்று உறங்கியுழன்று ஒடுங்கியழன்று தேரிற்சாய்ந்தான்; இவ்வாறிளைத்த விராடபுத்திரனைப் பாண்டுபுத்திரன் பார்த்து பச்சாத்தாபங்கொண்டு மெத்தவும் பயந்து விட்டானென்று தன்னுடைய சித்தத்திற்றேர்ந்து மகிழ்ந்தமுகமும் குளிர்ந்த பார்வையும் கனிந்தசொல்லுங் கசிந்த அன்புமுள்ளவனாய்ச் சொல்லுகின்றான். மச்சகுலத்திற் கணியாகிய மணியே! இச்சகத்திற் பிரகாசிக்கின்ற இரவி மைந்தனாகிய கர்ணன் என்னுடனெதிர்ந்து அதிர்ந்து போர்புரிந்து வெறுங்கை வீணன்போற் பின்னிட்டோடிப்போனான். அவனோடிவிட்டானென்று நாம் அலட்சியமாயிருக்கலாகாது; அரசவீரர்கள் யுத்தத்தில் இளைத்து ஓட்டமெடுப்பதுமுண்டு மறுபடியுங் கிளைத்துவந்து போர்கொடுப்பது முண்டு இதன்றி அங்கர்கோனை அடித்துத் துரத்தியவாறுபோற் பெருங்காடென்னக் கலந்து நமக்குநேரில் அடர்ந்து பெருமுழக்கமிட்டிருக்கின்ற சேனைகளுடன் அதிரதர்முதலாகிய வேந்தர்களையும்வென்று வெற்றிபெற வேண்டியிருப்பதனால் இவ்விடத்திற் கூடியவர்கள் இன்னாரின்னாரென்று நீ தெரிந்துகொள்ளும்படி சொல்லுகின்றேன் கேளென்றான்.

மாலையணிந்த தோள்வாட்படை மைந்தனே! இதோ, நமக்கு எதிரில்நிற்கின்றவர். செய்தவிலக்கருப்பொருளாகியபனையைக் கொடியிலெழுதிப்படைத்திருக்கின்றவர். பாரியமேதினியையுடையவதிபர். தெய்வத்தன்மைபெற்ற அட்டவசுக்களில் முதல்வரானவர். இவ்வுலகமுதலாகிய எவ்வுலகுங்கொண்டாட்நின்ற எங்கள்குலத்தலைவர். இவரது தந்தையாகிய சந்தனுமகாராசனுக்குப் பரிமளகந்தியினுடைய போக நலங்கிடைக்கும்படியாய் விவாகம்பண்ணிவைத்தவர். அந்த விவாகமுன்னிலையில் இவர் அனுபவிக்கவேண்டிய சகலவைபவசம்பிரமங்களையுஞ்சிறுவயதிற்கைவிட்டு, இராசபோகமானவிரதவழியில்நின்று வீட்டுமனென்று பேர்கொண்டு மெய்வழிகண்ட மேன்மையோர்களால், மேன்மைபெற்றவர். இவர் எந்தக்காலத்தில் இறக்கவேண்டுமென்று எண்ணுகின்றாரோ? அக்காலத்தில் எமராசன் இவரிடத்திற்கு வரவேண்டுமல்லது, மற்ற ஆன்மகோடிகள்போற் கருதிவரப்படாது. இவருடைய ஆயுள்முடிவில், தண்டபாசசூல கோலகண்டகனாகிய நமன்வந்தாலும், அவனுடைய அதிகாரவேதை அற்றுப்போம்படி சத்தியசீலவுத்தமனாகிய சந்தனுமகாராசன் வரங்கொடுக்க, ஆசீர்வசனமுந் தந்தருளப்பெற்றவர். இவ்வுலகத்தில் இவரெத்தனைநாளைக்கிருந்தாலுமிருக்கலாம். இவர்தான் ஐயா எங்கள்மூதாதையாகியபாட்டன். சத்துவகுண புத்திநுட்பத்தால் கற்றறிவுடைய உத்தரகுமாரனே! இந்த வீட்டுமருக்குஅண்டையில் சண்டைக்குவந்திருக்கின்ற நான்குவேதத்தையும் பொறித்த நான்மறைக்கொடிதரித்த சக்கரத்தேர்மேலமர்ந்திருக்குஞ்சுவாமியவர்கள் தேன்சாறுபாய மாஞ்சோலைவிளும் பாஞ்சாலதேசத்தையாளும் துருபதராசன் கொண்டகர்வத்தைப் பங்கப்படுத்தினவர், அறுபத்துநான்கு கலைஞானங்களும் ஐயந்திரிபில்லாமல் விருத்திப்பொருளுடன் ஆராய்ந்துணர்ந்தவர் தேவதாத்திரங்கள்முற்றும் திறம்பெறத்தேர்ந்தவர் சாம்பிரதாயத் தனுவேதமோர்ந்தவர் திரவியசம்பன்னர்களாகிய பக்குவர்களுக்கு வித்தைத்திறந்தெரிவிக்கும் விற்குருவானவர் முடிதாங்கிய தேவர்களும் படியோங்கிய முற்றத்துறந்த முனிவர்களும் பணியும்படியானபதம்பெற்றவர் உத்தம க்ஷத்திரியகுலத்தி லுற்றவர்போல் வெற்றிவாகைபடைத்த வீரப்பிரதாபர். மதாணிமுதலிய திராணியுடையவர். இவர்தானையா எங்களுக்குக்குருவாகிய துரோணாசாரியர். சங்கிராமவிற்குருவாகிய துரோணாசாரியருக்கும் கங்காபுத்திரரானவீஷ்மாசாரியருக்கும் நடுவில், வெள்ளைக்கொடியும் பொன்னிறமுடியும் வீரபட்டமும் வேகப்புரவியும்பூட்டி, மேகமளாவிய வெண்குடைத்தேரோட்டி, ஊக்கத்துடன் வந்திருக்குந்தீர்க்கமும், அமுதங்குலாவிய மதிமுகமும் குமுதமனைய சிறுநகையும் குறுவியர்வும் பெருமிதமும் அருள்விழியும் குருமணியாற்செய்த ஆபரண அலங்காரமும் பிரமதேயசும் பணைத்ததோளும் வீரகண்டைதரித்த தாளும் சௌந்தரியகாந்தியும், தவமும் சபமும் வரமும் உரமும் பொறுமையும் உடையவர். தனுவேதத்திலும் மநுவேதத்திலும் சமர்வேதத்திலும் சதுர்வேதத்திலும் நிபுணர் இக்குவலயமெல்லாங் கொண்டாடுங் குணநிதியாகிய கிருபர். இக்கிருபாசாரியருக் கண்டையில்நிற்கின்ற அழகியதோளியானவர் பஞ்சபாணந்தரித்த மன்மதனென்று சிலர்பேச, வேலாயுதந்தரித்த

பாலசுப்பிரமணியரென்று பலர்சொல்ல, சோடசகலைநிறைந்த சந்திரனென்று சிலர்துதிக்க, வச்சிராயுதந்தாங்கிய இந்திரனென்னப்பலர்மதிக்க, மூதண்ட நடுங்குங் கோதண்டராமனென்று சிற்சிலர்கொண்டாட, பிதுர்வாக்கிய பரிபாலனஞ்செய்த பரசுராமனென்று பற்பலர்வந்திக்க, இப்படி எப்புவனமுங் கொண்டாட ஒப்புவமையில்லாத தோற்றம்படைத்த புண்ணியர். முப்புரமெரித்த எப்பொருட்கிறைவனாகிய முக்கண்மூர்த்தியின் திருவருட்பரிசுபெற்ற காளை, ஒருக்ஷணத்தில் திரிபுவனத்தையும் அழிக்குங் குழக்கன்றுபோன்ற அசுவத்தாமா, எங்கள்குருவாகிய துரோணருடைய குமாரன், எனக்குரிய மித்திரன், விராடபுத்திரனாகிய உத்தரகுமாரனே! இப்போது நான்சொல்லிவந்த வித்தக வீஷ்மாசாரியரும் துரோணரும் கிருபரும் அசுவத்தாமாவும் என்னிடத்தில் அருமைபாராட்டி, அன்புவைத்திருக்கின்றவர்கள். குற்றமற்ற வில்திறம் பெற்றவர்கள். அப்படியிருந்தபோதிலும் அவர்களுடன் போர்புரிய வேண்டிய அவசியமில்லை, இன்னம், நாம் வெல்லவேண்டிய ஆசாமிகள் வேறிருக்கின்றார்கள். அவர்களை முன்பின் பாராமல் முதலறக்கொன்று வென்றிபெறுவது நமக்கு மேலாகிய கீர்த்தியாம், இன்று பூர்த்தியாகப்போர் புரிந்து புகழுறச்செய்வமானால், நல்லதிடத்தையும் திறத்தையும் அறத்தையும் மகிமையையும் நமக்கு விளைக்காமற்போகாது. ஆகையால் நாம்வெல்லவேண்டிய மேலவரைச் சொல்லுவதேனென்று விளம்பலுற்றான்,

ஐயா, உத்தமனென்னும் உத்தரனே! உனக்குநேராக நீலக்கொடியாடை பறக்குந் தேரிலிருப்பவன் வணங்காமுடிமன்னனை வணக்கி, அவனது மதியை மயக்கி, தன்வசமாயிணக்கி, இந்திரபிரத்தத்திலிருந்த எம்மைவரவழைத்து வஞ்சகச்சூதாடச்செய்த கொடும்பாவி. மகாசபைகூடிய மன்னர்முதலாகிய மாநகரச்சனங்களும் எங்களைக்கண்டு கண்கலங்கும்படியா யியற்றிய காந்தார தேசவீரன் சவுபலராசகுமாரன், எங்கள் சமஸ்தானத்தைக்கெடுக்கப்புகுந்த கறுப்பன் கபடமடைத்த குடிக்கை கொடியவாலகாலவிடங்கொண்ட செந்தேள். ஒருகாலத்தும்நம்பப்படாதஉரகம்,இவன்தான்ஐயா சகுனியென்பவன். அச்சகுனிமாமனுக்குச்சமீபத்தில் குச்சிதமில்லாச் செச்சைக்கொடியோடு, அச்சடித்ததுபோல், உச்சிதவிற்பிடித்து, வச்சிரத்தேரேறி விசித்திரப்பணி பூண்டிருப்பவன் நச்சரவக்கொடியோனுக்குத் தம்பி, இளவரசுபட்டங்கட்டிக் கொண்டதுரம்பி, சர்வதந்திரவுபாயசுதந்தரன் பழிபாவத்திற்கஞ்சாத பஞ்சமா பாதகன். கொஞ்சமேனும், நெஞ்சிரக்கமில்லாத துச்சாதனன். இவன்தான் பாஞ்சாலியிமயினைப் பற்றியிழுத்துக் கண்ணியர்களிருந்த சபைக்கேற்றிவைத்து வஸ்திரபங்கம்பண்ணிய புண்ணியவான். அதோ, ஈசானதிசையில், பன்றிக் கொடிபறக்க சண்டைத்தேரேறி துச்சாதனனுக் கண்டையிலிருப்பவன் துரியோதனன்முதலாகிய நூற்றுவருக்குமைத்துனன். தங்கை, துச்சளையைக் கலியாணஞ்செய்துகொண்ட தோன்றல். சிந்துதேசராச சயத்திரதன், எங்களாற்பெற்ற வெகுமானங்களையுஞ் சன்மானங்களையுமறந்து, நாங்கள் காட்டிலுறைந்து, வேட்டையாடப்போயிருக்கும்போது முறைதுறைபாராமல், துரோபதையை யெடுத்துப்போனான். அச்சங்கதியைக் கேட்டுவந்த நாங்கள் ஓட

மாகச்சென்று, அவனைக்கண்டுபிடித்து வாட்டப்படுத்தி ஐந்துசிகைவைத்திருந்து, முகத்திற் புள்ளியிட்டு பேர்வேறிட்டு தருமராசனுக்கெதிரில்நிறுத்தி, கட்டவிழ்த்து, வெட்டவெளியில் அவமானப்படுத்திவிட்டுத்துரத்தினோம்.

இப்பால், வாயுமூலைமடக்கிலிருக்கின்றவன், காந்தாரிதிரிதராஷ்டிரனென்னுஞ்சேற்றிற்பூத்த பலவகைப் புட்பங்களில் ஒரு செங்கழுநீர் சிறந்ததன்மைபோல் பிறந்திருக்கின்ற விகர்ணன். இந்த நீதிமான் நெறிமுறைதவறுமலுன்னிப் பாவபுண்ணியங்களெண்ணி துரோபதிகேட்டகேள்விக்கு அரசசபையில் ஞாயஞ்சொல்லி, பாஞ்சாலிபட்ட துயரத்தைமாற்றித் தேற்றிவிட்ட தருமவான். இவனை இவ்வுலகத்திற்புகழாதவர்களில்லை, புத்திமானாகிய உத்தரனே! இதோ, நமதுதேருக்கெதிராக நட்சத்திரக்கூட்டம்போல், தேர்மேல் விளங்குகின்ற பசகள் துரியோதனனுக்குத் தம்பிமார்கள். காலாந்தகனொன்று கருதுவதற்குத் தடையில்லை கொடியதுட்டர்கள். அதோ, தக்கித் திமிதிருதாவென நர்த்தனங்காட்டிய குதிரைகள் பூட்டிய ரதத்திலமர்ந்தவன் சோமதத்தன் இதோ சித்திரவில்வளைப்பவன் அச்சுவசேனன் அதோ தென்புற நிற்பவர்களியாவரும் தேசராசபோசர்கள் இப்போது நானுனக்குக்காட்டிய இவர்களையெல்லாம் எதிர்த்துச் சண்டைவிளைத்துக்குலைகுலைந்தோடவடித்து மந்தரகிரியாகிய மத்தாலடிபட்டலைபட்ட பாற்கடல்போலுழக்கிச் சுழலவிட்டுக் கலக்குகின்றேன். விராடவேந்தன்மைந்தனே! நீ சற்றேமனங்கொண்டு காணென்று சொல்லித் தன்னுள்ளக்கருத்தையும் அவனுக்கு விள்ளும்படியாய் மெள்ளத் தெரிவித்தான். அதெவ்வாறென்னில்; யுத்தமுனையிலடிபட்டு ஓடிப்போன கர்ணனைக்கண்டு உத்தரன் கைகொட்டி நகைத்ததைப்பற்றி இனிமேல் வீஷ்மர் துரோணர் கிருபர் அஸ்வத்தாமாமுதலிய நால்வரும் தன்னோடெதிர்த்துச் சண்டைவிளைத்து அடிபட்டுப் புறங்கொடுத்தோடப் போகின்றார்களென்பது தனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கின்றபடியால் ஒருவேளையப்படி ஓடும்போது இந்தச்சாரதி கைகொட்டிச்சிரிப்பானானால் குலமுதல்வனாகிய வீஷ்மர்முதலாகிய பெரியோர்கள் தங்களிடத்தில் அன்புவைத்தவர்கள் அவர்களுக்குவந்த குறைவும் அவமானமும் தனக்குவந்ததுபோலுமென்றெண்ணி பட்சமிச்சமான அர்ச்சுனராசன் மச்சராச குமாரனுக்கு அச்சமுண்டாகப்பேசி மற்ற சத்துருக்களையுந்தெரிவித்து ஒருவேளை அவர்களோடும்போது அவர்களைநோக்கி உத்தரகுமார னகைத்தாலும் அதனால் தாழ்ச்சியொன்றுமில்லையென்று எண்ணிய தன்கருத்தை இவர்கள் சத்துரு இவர்கள் மித்துருவென்று உத்தரனுக்குச்சொல்லிப் பெரியோர்கள் மேலிருக்கின்ற பக்ஷமும் துரியோதனாதியரென்னும் பகைவர்மேலிருக்கும் அபக்ஷமும் அடாஅடங்களும் வெறுவிதமாய் வெளிப்படுத்தினான். அப்பா உத்தரகுமாரனே! பரிசுத்தவான்களாகிய ஆசாரிய புருஷர்கள் மேலெதிர்த்துப் போர்பொரவேண்டிய கருத்தையொழித்து மற்றவர்கள்மேல் யுத்தஞ்செய்ய வேண்டியிருப்பதால் நமது தேரைச்செலுத்திக்கணத்தில்வெற்றிபெறலாமென்று சிந்தைமகிழ்ச்சிகொண்டு செப்பினான். இப்படிக்குச்சொல்லிய சுப்பிரதீபம்போன்ற அருச்சுனனதுகருத்தை உத்தரகுமாரன் மிகுந்தநுட்பமாயறிந்து தானகைத்ததைக்குறித்துமிகப்பயந்திளைத்

துத் தன்னிடத்தில் அர்ச்சுனன் கலந்துபேசினனென்று தன்னைமறந்துபோகாமல் சாக்கிரதைப்பாய் மரியாதையுடன் அடங்கி அர்ச்சுனனுரைத்து வாய்மூடுமுன்னமே மனோவேகத்திலும் வாயுவேகத்திலுமிஞ்சும்படி மண்டலமதிகரவண்டிசைபிதிர அண்டாகள் ஒதுங்க அட்டமாநாகங்கள் கண்பிதுங்க கடலேழுமதிர நட்சத்திரங்களுதிர கதிர்மதிவெருவ கல்மலைகளுருவ கடகடகடகடவென்றோடி தடமகுடவாசர் படையைச்சாய்த்துச் சக்கரங்கள் சுழல உக்கிரமானவிக்கிரம பராக்கிரமத்துடன் விசயசாரதியாகிய உத்தரகுமாரன் பரிகளைமுடுக்கி விரைவுடன் இரதத்தைவிடுத்தான். கேளும் செனமேசெயமஹாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிவந்தார்.

துரோணுசாரியருக்கும் அர்ச்சுனனுக்கும் சண்டை.

---

இந்தப்படி உத்தரகுமாரனுக்குத் தெளிவுண்டாகும்படியாய்த் தெரிவித்து, போர்மேல் வருகின்ற தீரன்கருத்தையும், அவனேறிய செம்பொற்றேரின் வேகத்தையும் சேனைகளின்பேரிற் செல்கின்ற மர்மத்தையும் ஆழ்ந்தகேள்வியாளருயர்ந்த துரோணுசாரியர்கண்டு கண்ணருள்கொண்டு பெற்றதந்தை பிள்ளையைநாடிப் போவதுபோல், தன்னுடையதேரைச் செலுத்திக்கொண்டுபோய் அருச்சுனன் தேருக்குநேர்சென்று நின்று மறித்து அப்பா அர்ச்சுனு நாங்களெல்லோரும் உனக்கு நேராயிருக்க நீ யெங்களைவிட்டுவிட்டு எங்கேபோகின்றாய் நீ யப்படி ஒதுங்கிப்போனாலும் நானுன்னைவிடமாட்டேன், என்னுடன் யுத்தஞ்செய்யவாவென்று வில்வளைத்து நாணிதொடுத்து ஷ்டங்காரங்காட்டினார். இந்தப்படி வார்த்தையாடிச் சண்டைசெய்யவந்த துரோணுசாரியை தர்மராசனுக்கிளைய தனஞ்சயன்கண்டு தேர்விட்டிழிந்து அன்புகூர்ந்து சிந்தைமகிழ்ந்து செந்தாமரைமலர்போன்ற அவர் திருவடியிற்பணிந்து கரங்குவித்துத் துதித்து அந்தணர்க்கரசே! தேவரீரநுக்கிரகத்தால் பன்னிரண்டுவருடமும் அக்கியாதவாசமுங்கழித்து வெளிப்பட்டோம். இனிமேல் தர்மாதர்மந்தெரிவித்து நடத்தவேண்டியகடமை தங்களைப்போன்ற பெரியோர்கள் தன்மை ஆசாரியஸ்வாமிகளே யென்று இணக்கமாகப்பேசி வணக்கமாகத்தொழுது மேலுஞ்சொல்லுகிறான். மாதவமணியே! வரிசிலைக்கணியே! யாதொரு காரியங்களும் இன்னதென்றறியாத வென்னை எல்லாந்தெரிந்தவனென்றாக்கி இவனுக்குமிஞ்சிய செஞ்சிலைவீரர்கள் இவ்வுலகத்தும் எவ்வுலகத்தும் இல்லையென்றுமதித்து, பல்லோருங் கொண்டாடும்படியாய் வில்வேதமும் அஸ்திரசத்தியும் சஸ்திரசத்தியும் குற்றமறக் கற்பித்தருளிய சத்தியவுண்மைச் சம்பன்னதெய்வமே! தேசிகனாகிய தேவரீர் என்னைவெறுத்து ஒருபொருளாக மதித்து யுத்தஞ்செய்யப் பகைத்துவரத் தக்கதோ, அடியேன் பயமில்லாமல் வெளிவந்து, குருசுவாமியோடுஎதிர்த்து, விற்பிடித்து, நாணிதொடுத்து, கணைகள்விடுத்து, பூசல்புரிய விதரணைபெற்றிருக்கின்றேனோ அவ்வளவுவித்தை கற்றிருக்கின்றேனோ விற்குருவாகிய வேந்தனே! வேதியகுலசாந்தனே! அப்படியன்றென்று அறிவீனத்தால் ஆசாரியருடனெதிர்த்து அடித்துப்போர்விளைத்துத் தம்துதிருவடிக்குத் துரோககினைப்பது பஞ்சமாபாதகத்திலொன்றாகிய

பெரும்பாவமல்லவோ, பாபரகித புண்ணியவானே! என்னுடைய எண்ணமென்னவென்றால், தேசராசவீரர்களுடன்சேர்ந்து நால்வகைச்சேனைகளுடன் புகுந்து, விராடராசனது மாட்டுமந்தைகளை மடக்கிய துரியோதனராசனையும் அவன்தம்பிகள்முதலாகிய சகுனியையும் வளைத்துக்கொண்டு, இடியுடனிடி மின்னலுடன்மின்னல் மேகத்துடன்மேகம் எதிர்ந்து எரிந்து, புகைந்தெழுமாறுபோல், போர்த்திறங்காட்டியார்த்து, தேவரீர் உபதேசித்தருளிய மந்திரக் கணைகளைத்தொடுத்து அவர்களுயிரை வதைத்துக்கெடுத்து எமலோகத்திற் குடிபுகவிடுத்து, இணையில்லாமலிருப்பதல்லாமல், தேவரீருடனேயும், கிருபாசாரியருடனேயும் தங்கள்குமாரனுகியும் என்சிநேகனுகியுமிருக்கின்ற அசுவத்தாமாவுடனேயும் பாட்டனராகியவீட்டுமாசாரியருடனேயும் சண்டைபோடப்படாது. அப்படியொருவேளை சண்டைசெய்யநேரிடுமாகில், அதுதர்மமன்று. தகுதியான தன்மையுமன்று. கொடியபாவத்தைக் கூட்டிவைக்குமென்று என்றென்றைக்கும் சத்தியமாய் எண்ணியிருக்கின்றேன். முற்றத்துறந்த முனிவனுகிய மூதறிவோனேயென்று வணங்கிச்சொன்னுன். இப்படியாக அர்ச்சுனன்சொன்ன அம்மொழியைக்கேட்ட துரோணுசாரியர் சற்றுநேரம் வரையிலும் புத்திநிதானித்து, சம்மதியாகிய பேரன்புடன் நிர்மதியாயிருந்து எம்மதியுந்தோன்றுமல், நன்மதியோடாசீர்வதித்து, விண்மதிகுலத்து வேந்தனை விசயராசனே! என்னிஷ்டமெப்படிப்பட்டதென்னில், யுத்தகளத்தில் உனக்காக உழைக்கிறேனென்று, உறுதியாகச்சொல்லி, ஒருவனுடைய உப்புந் தண்ணீருமுண்டு அவனுடைய நன்மை தீமை என்னுடையதென்று நாடியிருந்த நான் சமயம்வந்தபோது, அவனுக்குத் துரோகம்பண்ணுமல் உடன்படவேண்டுமென்பதுதான். இதுகாரியம், உனக்குத்தெரியாமலிராது. ஆதலால் துரியோதனனுக்கு செஞ்சோற்றுக்கடன் கழிக்கும்படியாய், அமர்தொடங்கி, சிஷனென்றும், பிள்ளையென்றும் பங்களநீதில் ஒப்பாரிபாராமல், கலகம்புரியத்தக்க காரணம்வந்தது. இதன்றியும், தேவேந்திரன்முதலிய தேவர்களையும் வருத்தப்படுத்தி, திரிலோகத்தையும்பயமுறுத்தி நடுக்கப்பண்ணிக்கொண்டிருந்த காலகேய நிவாதகவசர்கள் மூன்றுகோடி அறுபதினுயிரம்பேர்களை ஒருகணத்தில் மடித்து, செயக்கொடி பிடித்து, சிவசுப்பிரமணியக் கடவுள் போல் தேவசேனுபதிப் பட்டமும் கிரீடியென்னும் பெயரும்பெற்று சிறப்படைந்தாயென்று சிலநாளைக்கு முன்னேகேட்டுச் சிந்தைமகிழ்ந்திருந்தேன் அந்தத் திறமை யெப்படிப்பட்டதோ அம்முறைமையை எனக்குக் காண்பிக்கவேண்டுமென்று வருந்திக்கேட்கின்றேன், அதற்கு நீ யுடன்படாவிட்டால் உனக்குக் கோபம் பிறக்கும்படியாய் நான்முன்னுல் உன்னையடிக்கிறேன் பாரென்று இந்துமுகாஸ்திரம் இந்திர மோகாஸ்திரம் செந்தீக் கணைகள் கொத்தலர்ப்பகழிகள் கூர்வாயம்புகள் சதாகநிச்சரங்கள் சகஸ்திரபாணங்கள் இவைமுதலியவைகளையெடுத்து வந்தித்து மந்திரித்து அநுசந்தித்து செந்தூள் கருந்தூளெழும்ப மந்தரவரையனையதேரை வலமிடமாக மாறுவிடுத்து வானமும்பூமியும் மழைபோனிறைத்து வாசுாமகோசரமாக வாரியிறைத்துச் சாரதிகுதிரைகளைச் சற்றுந் தெரியவொட்டாமல்மறைத்துத்

வேத சாகசங்காட்டிய உத்தமகுணத் துரோணாசாரியை கொற்றவர்முதலிய பலரும் மெத்தப்புகழ்ந்து இத்தருணம் கொண்டாடி இத்தினம் அர்ச்சுனன் இற்றனன் அற்றனன் செத்தனனென்று சிறந்துகூத்தாடினார்கள் இதல்லாமல் ஆகாயநிறைய வேடிக்கைபார்த்திருந்த தேவேந்திரனும் தேவர்களும் பாண்டு முதலாகிய பார்த்திபர்களும் ஆகாகா! துரோணாசாரியர் இதுவரையிலும் இப்போப்பட்ட வித்திறங்காட்டிய வீரத்திறங்கண்டறியோமே, ஐயோ சிட்டனாகிய விசயனுடன் வேடிக்கையாய்ப்பேசி விளையாட்டுச்சண்டை விளைத்தாரோ வென்று மேன்மேலும் பேசிக்கொண்டார்கள். இவ்வாறு பலம்பெற்ற பாணங்களைப்பொருந்தி யுத்தஞ்செய்கின்ற துரோணாசாரியைச் சுத்தவீரனான பார்த்தன்பார்த்து சுவாமி அடியேன் தேவரீருடைய அடிமைப்புத்திரனென்று முடிதாழ்த்தி வணங்கினேன், தேவரீர் என்னை மன்னிக்காமல் சன்னபின்னலாய் சரவருஷம் வருஷித்துப்போட்டீர். இனிமேல் தன்னைத்தான் தப்பித்துக்கொள்ளவேண்டிய தருமந்தானே தாமறியாத காரியமொன்றில்லை என்பேரில் தப்பிதமுமில்லை நீர் சாக்கிரதையாயிருமென்று தனிப்புலிபோற் குமுறியெரிந்து புகுந்து விரைந்து தேரூர்ந்து புகமெழுநிய பிரதாபவில்லைப்பிடித்து இறுத்திநாணிமாட்டி ஷ்டங்காரங்காட்டி நாலிரண்டுநாராசக்கணைபூட்டி நாராயணமந்திரமேற்றி நான்குதிசையுநடுங்கமுடுக்கி துரோணாசாரியர் தொடுத்தபாணங்களத்தனையும் கொள்ளைப்போற் குனிந்து எள்ளைப்போல் இடிந்துபோகச் செய்தான். அவனது பாணத்திறத்தைப்பார்த்த துரோணாசாரியரும் ஆசாரிய பக்ஷமறவாத அர்ச்சுனராசனும் ஒருவருக்கொருவர் குறுகிநேரிட்டு புயமிரண்டும்பூரித்து மேலிட்டு மலைபோன்றவில்லில் பிறைபோல நாணிபிகிர்ந்து ஆகர்ணபரியந்தமிழுத்து அநேகவித அஸ்திரங்களைவிதைத்து வருஷ ருதுகாலத்து மேகம்போல் கோடாகோடிசரங்களைச்சொரிந்தார்கள். அப்படி கையோயாமற்பொழிந்த அதிரதத்தலைவர்களில் கோபத்தில் முதன்மையான துரோணரும் கோபத்தில் நயமுகனாகிய காண்டீபனும் படபடத்துவிட்ட பகழிகளானவை சீறிப்புகைந்து தீப்பொறிமிகுந்து சினங்கொண்டுபுகுந்து கதிர்முனையும் வாயுவேகமுங்கலந்து ஒன்றினொடொன்றுயர்ந்து நேர்நேர்சென்றுநின்று போர்மூண்டு ஒன்றையொன்றுபற்றி ஒன்றையொன்றுகவ்வி ஒன்றையொன்று கிழித்து ஒன்றையொன்று அழித்து ஒன்றோடொன்றுகலந்து இதுவுமதுவும் அதுவுமிதுவும் பிசறிக்கொண்டு பேதித்துப் பேசக்கூடாம லிருந்ததல்லாமல் அர்ச்சுனன்மேல் துரோணர்பாணமும் துரோணர்பேரில் அர்ச்சுனன்பாணமும் பட்டதினால் அப்பால் வேதக்கொடியாடிய சூரியன் தேருக்கொப்பான தேர்மேலேறிய துரோணாசாரியரும் அனுமக்கொடியுடைய இரதத்திலேறிய அர்ச்சுனராசனும் கரகரவென்று தேரைச்சுழற்றிச் சரசரவென்று சரமாரி பொழிந்தார்கள். துரோணாசாரியர் இந்திராத்திரம் எடுத்து மந்திரித்துவிட்டார். அருச்சுனனும் இந்திராத்திரம்போட்டு அதைக்கெடுத்தான். துரோணர் அக்கினியாத்திரம்போட்டார். அருச்சுனன் அக்கினியாத்திரந்தொடுத்து அதைத்தடுத்தான்: துரோணர் சூரியாத்திரம்வீசினார். அருச்சுனன் சூரியாத்திரஞ்செலுத்தி அதைத்துகளாகப்படுத்தினான். அருச்சுனன் சந்திராத்திரம்

உந்தினான். துரோணருஞ் சந்திராத்திரம்போக்கிச்சிந்தினார். துரோணர்வருணாத்திரந்தாக்கினார். அருச்சுனனும் வருணாத்திரம் பூரித்து மாற்றினான். துரோணர் வாயுக்கணை தூவினார். அருச்சுனன் வாயுக்கணையேவிக் குறைத்தான். இப்படி தேயுக்கணைமுதலிய, கருடாத்திரம் நாகாத்திரம் மேகாத்திரம் பருவதாத்திரம் மோகாத்திரம் விருட்சாத்திரம் கமலாத்திரங்களும் தேவதாத்திரங்களும்வீசி, தெய்வலோகத்தார் மெய்புளகுற்று வாழ்த்தும்படி வெகுநேரந்திரிந்து, ஒருவரையொருவர்பிரிந்து, மறுபடியும் போர்புரியப் பரிந்து, ஆர்ப்பரித்து, பாணந்தொடுத்தார்கள்.

அதேனென்னில், நல்ல புத்திமான்களிடத்தில், கல்விமுதலியவற்றைப்பேசப்பேச ஆசைபிடிக்குமாறுபோல், வீரனுடன்வீரனெதிர்ந்து போர்கொடுக்கக்கொடுக்க வீராவேச மேறுகின்றவகையால், துரோணாசாரியர் பிராணபதமான விசயனைப்புகழ்ந்து சூரியாத்திரந்தொடுத்தார். அருச்சுனன் மேகாத்திரம்விடுத்து, அந்தச் சூரியக்கணையின் வெப்பத்தையொடுக்கி காளகூடம்போற்கறுத்து மின்னல் இடியுடன் வெள்ளம்பொழியப் பண்ணினான். அந்த விசயனுடைய பாணத்தின் வித்தையைக்கண்ட துரோணாசாரியர் வாயுவாத்திரங்களை மந்திரித்து விடுத்து, மேகாத்திரத்தைச் சிதறவடித்தார். ஆசாரியரேவிய வாயுக்கணை அனர்த்தம்பண்ணுவதை அருச்சுனன்கண்டு வாயுபட்சணஞ்செய்கின்ற நாகாத்திரத்தைப் பிரயோகஞ்செய்து நாசமாக்கினான். நரனுந்திய நாகாத்திரத்தை துரோணாசாரியர் பார்த்து நடுங்கி கருடாத்திரமுய்த்துக்கெடுத்தார். கருடாத்திரக்கடுமையைக் காண்டீபன்கண்டு கலகலவென்று நகைத்து, நாராயணாத்திரத்தால் நன்மையுண்டாகச்செய்தான். இவ்வாறு கருடாத்திரத்தைக் காண்டீபனொடுக்கிய வலியைக்கண்ணுற்ற தனுவேதியர் சத்துருமித்துருவாகிய அத்திரங்களையெறிந்து உ[illegible] மந்திர சுதந்தர மார்க்கமுந்தெரிந்து, மனங்களிகூர்ந்து மீண்டுந் தன்றேரூர்ந்து, வலமிடஞ்சுழன்று, கர்க்கரத்தொனியுடன் கலகலவென்று சப்திக்க இருவர் தேரும்நெருங்க இருவர்வில்லுங்குனியஇருவர்நாரியுமொலிக்க இருவர்கண்டையுங்கலிக்கப் பூமியும் பொருப்பும் கிடுகிடுவென்றதிர தாரகணங்கள் பலபலவென்று தரைமேலுதிர உலகமதிக்கக் கலகம்விளைத்தார்கள். இவ்வாறிருவருமேவியபாணங்களால், சக்கரவாளமளைந்தகடமெல்லாநிறைந்து, பேரோசை பிறந்து, அண்டச்சுவரடங்கலுமுட்டி, எட்டுத்திசைமட்டுமெட்டி, மட்டுப்படாமல் வாட்டிநின்றது. இதன்றியும், முப்புரத்தையெரித்தருளிய தர்ப்பரனுதற்கண்ணிற்பிறந்த அக்கினிப்பொறிக் கிணையாகச்சிறந்த அந்தப்பாணக்கினியின்வெப்பத்தினால், மகரமச்சங்குலாவிய மற்றமச்சங்களுக்காதாரமாகிய கடலும், பரந்துவிரிந்தபாதாளத்தினீரும், மேலுலகடைந்த ஆகாயகங்கையும், வறண்டதென்று பேசுவதற்கு வாய்கூசாமற்சொல்லுவார்கள்.

இப்பால், துரோணார்ச்சுனர்களிருவருமுனைந்து, ஓட்டம் கோணம் வட்டம். வளைவு திருகல் மாறல் முன்செல்லுதல் பின்செல்லுதல். முதலாகிய தேரோட்டத்தைச் சாரதிகள்காட்டுந் த[illegible]யங்களினால், பூமிபிளந்து ஆதிசேடனுடைய ஆயிரம்பணாமகுடங்களுமுடைந்து, திசைகளசைந்து திக்கு

முக்கிட்டு மேருவுங்குலுங்க ஈரேழுலகுமலங்கக் காட்டிலுள்ள மிருகங்களுங் கலங்க நாட்டிலுள்ளயாவருநடுங்க வித்தென்னப்பரவிய நக்ஷத்திரங்கள் கொத்துக்கொத்தாய் முத்துப்போலுதிர இத்தன்மையாகிய யுத்தஞ்செய்தார்களென்று யாவருஞ் சொல்லுதற்கிடமில்லாமல் வல்லமையேறிய வில்லாளர்களும் வல்லாளர்களும் சொல்லாமலோடும்படி நேரிட்டது. அவ்வேளையில், துரோணருடைய சேனைகளை, கடல்போலிறைந்து, பூரித்துப்பொங்கிஉருத்திரசன்னதங்கொண்டு, தேவேந்திர குமாரனாகிய சிலைவீரனைவளைத்து அவனது தேர்ச்சக்கரங்களைத்தொளைத்து, ஈட்டி தோட்டி துறட்டி பாலா பல்லயம் தண்டாயுதம் சக்ராயுதம் வேலாயுதம் பாலாயுதம் குந்தாயுதம் வாளாயுதம் சூலாயுதம் மழுவாயுதம் எழுவாயுதம் கொழுவாயுதம் வச்சிராயுதம் பிச்சுவா கட்டாரி முதலிய வளைதடி குறிதடி குண்டாந்தடி பாறைத்தடி முறுக்குத்தடி இருப்புத்தடி கிலுக்குத்தடி, உக்குலக்கை செக்குலக்கை, இன்னம் பற்பலவாகிய அத்திரசத்திரங்களுங்கொண்டுமோதி அமராடியபோது, அந்தரவாசிகளாகிய தேவர்கள் ஆச்சரியங்கொண்டு, யுத்தஞ்செய்கின்ற மாச்சரியங்கண்டு, இது என்னகாரணத்திற்கோ இப்படிப்பட்ட விபரீதச்சண்டையென்றுபார்க்க ஏக்கங்கொண்டிருந்தார்கள். அந்தவேளையில் கலங்காக்கருத்தினனாகிய காண்டீபனும் குந்திதேவிக்குவந்த புத்திரசிகாமணியும் நாராயணனுக்கொப்பாகிய நரனும் நானிலப்புகழுங் கோமானும் வானிலமகிழுஞ் சீமானுமாகிய அருச்சுனன் சற்றுநகைத்து, இதுவுமொருநிமித்தமென்றுபார்த்து, மட்டுப்படாதனவாகியும் எதிரிகளின் வாளியினால் வெட்டுப்படாதனவாகியும் வீரங்காட்டி வெங்கனலைக்கொப்புளிக்கும் அம்பினங்களை வீரகாண்டீபத்தில் அநுசந்தித்து ஒன்றின்மேலொன்றாகச்செலுத்தி, உப்புக்கடலுடெரியும்வடவையை ஒப்பக்குப்பென்றோங்கி வெகுளிமேற்கொண்டு விரைந்துமுன்னின்றான். இவ்விதமாக, சவ்வியசாசிதொட்ட அத்திரமடங்கலும்போய்விழுந்து, எதிரிவிட்ட ஆயுதங்களையும் நால்வகைச்சேனைகளையும் நலியப்படுத்தி,நாசப்படுத்தி,இரத்தவெள்ள மெத்தவோடும்படி அத்தனையை அதாகதஞ்செய்தான். இத்தன்மையாக எள்ளத்தனைபோதுந் தாழாமல் முற்றிவித்த முறைமையை துரோணாசாரியர்கண்டு, அருச்சுனன்தேருக்கு நேர்சென்று நின்று, தன்படைகளுக்குநேரிட்ட இடரை நீக்கும்படியோசித்து, நெறநெறெனை வில்லைவளைத்து, நீண்டபாணங்களை வேண்டியமட்டும் போக்கி, அருச்சுனன்செலுத்திய கணைகளத்தனையையு மண்ணாக்கி, பின்னும் ஈட்டுக்கீடாகப் பெருஞ்சரங்களைவிகணைக்கிடைபுகுந்து இடைக்கிடை நுழைந்து இரண்டிரண்டாகத் துண்டுபண்ண; அதைப் பராக்கிரம விசயனோக்கி, படபடத்து, பகையழிக்கும் நாராசக்கணைகளைப் பார்த்தும்பாராமல் வசவசவென்று மொய்த்துக்கொள்ளும்படிக்கு வாரிச்சொரிந்து, நேரில்வந்த துரோணாசாரியையும், அவராலுந்திய அத்திரங்களையும், மாறிமாறி தாறுமாறாகப்போக நூறுவகையாகக்கண்டான், மண்டலமுழுதும் பொழியுஞ் சோனாமழைபோற் சோர்வில்லாமலடித்த துணிவையும், விசயனது வீரவில் வேகவித்தையையும், சிந்தைசெய்யுமிடத்தில் மான்மழுசூலப்படை தரித்தருளிய மகாதேவனும் இவனுக்கெ

திர்வந்து மலைந்து போராடமாட்டான்போலுமிருக்கின்றது; அப்படியா என்போன்றவன் என்னசெய்யப்போகிறேனென்று, வண்டுதுன்றுந் தாமரைமாலையணிந்த துரோணர் கண்டுங்காணாதவர்போல் சற்றுநின்று, மயங்கி ஆதியில் இவனுக்கு வில்வித்தைகற்றுக்கொடுத்து வீட்டுமர்முதலாகியவேந்தர்கட்கெதிரிற் பரிட்சித்து யாவருமெச்சும்படியாய் லட்சயம்பெற்ற தனுசாத்திரங்களும் மந்திரங்களும் தந்திரங்களும்யந்திரங்களும், அப்போதைக்கப்போது ஒன்றுக்குப்பத்து பத்துக்குநூறு உயர்ந்திருக்கின்றான், இத்தன்மையான வில்திறத்தினால், முத்தலம்புகழுங்கீர்த்திபெற்றுவைத்தவனாய், இறுமாந்து நம்மையெங்குமில்லாமல் லடித்து வென்றான், ஆதலால் செயவிசயனென்னும்பேர் இவர்க்கேதக்கது, இனிவேறு கூறுவதற்கிடமில்லை, ஆனால் நாம் ஒருகாரியஞ்செய்தால் உத்தமமாயிருக்கும். அதென்னவென்றால் இவ்வருச்சுனனுக்கு நாம் தொண்டுசெய்து அவனண்டையிற்காத்திருந்து, அருமையான வில்வித்தையைக் கற்றுக்கொள்வது, நலமென்பதாய நினைத்தேனென்று உரைத்தருளினார். இவ்வாறாக வெண்ணங்கொண்டுரைத்த, துரோணாசாரியருடைய நினைப்பு ஒருமுடிவுபெறுவதற்கு முன்னமே, ஊரீராடுயிர்களை வேரோடுகளைகின்ற உகாந்தகாலப் பேரொலிகாட்டி, உருத்திரத்துப் பயங்கரங்காட்டி, இடியாத்திரமுதலிய பர்வதாத்திரங்களையேவினான். அவ்வத்திரங்களானவை வந்துவிழுந்து ஆசாரியருடைய தேரை மளமளவென்று முறித்து, வேதக்கொடியை வெடுக்கென்றொடித்து, குதிரைநான்கையுங் குறுகக்குறைத்து, சாரதிதலையைச் சரியத்தறித்து, கையிற்பிடித்தவில்லையுமுறித்து, வில்லில் மாட்டிய நரம்பையுமறுத்து, வெற்றையாக நக்கப்பரிந்து, வாளுலகத்து வாய்விட்டிறைந்து, மண்ணுலகத்துத் திண்மையைச் சார்ந்தது, ஆதலால் வேறுவில்லுந் தேருங்கொண்டு பாருகளை தொடுக்கமாட்டாமல் வெட்கப்பட்டு முப்புமவகையொன்றுந்தெரியாமல்மறங்கெடமயங்கிநிதாதம்வேதவேதியரான தநுர்வேதமுனிவர் புறங்கொடுத் தோடினார். இப்படியாகச் சமர்முனைவிட்டோடுகின்ற தன்தந்தையாகிய துரோணாசாரியையும் அர்ச்சுனன்தொடுத்த தனுர்ப்பாணங்களின் கிளர்ச்சியையும் இவர்விடுத்த அஸ்திரங்களின் தளர்ச்சியையும் அஸ்வத்தாமாகண்டு சீற்றங்கொண்டு வெம்பி வெதும்பி கண்ணீர்ததும்பி தனதுசேனைச் சடுதியினுந்தித் தனஞ்செயனுக்கு முந்திச்சண்டைசெய்யத் தொடங்கினான். இவ்வாறு தனுர்வேதசாஸ்திரச்சாலைச் சிநேகரும் ஆரியகுமாரனும் வீரியநரனுமாகிய அஸ்வத்தாமாவானவர் அர்ச்சுனராஜனைத் தடுத்துப் போர்கொடுக்க வந்தது எத்தன்மை போன்றதென்னில் மேன்மேலாக நெருப்புப்பொறிவீசியபெருந்தீக்கடவுளைப் பகைத்து ஆலகாலவிடத்தில் முளைத்த அருங்கனல் வந்தெதிர்ந்தது போலிருந்தது. இப்படியாக முனைந்த அஸ்வத்தாமன், அர்ச்சுனனுடைய தேரின்மேல், ஐம்பது அஸ்திரங்களும் அஸ்வங்களின்மேல்நூறுகணையும் சாரதிமேல் இருநூறுசரமும் அநுமக்கொடிமேல் ஐந்நூறம்பும், பச்சைநிறப் பார்த்தன்மேல் ஓராயிரம்பகழியும் முன்பின்பாராமல் பிரயோகம் பண்ணித் தன்பின்பலத்தைத் தேடாமல் பங்கப்படாத சிங்கக்குட்டிபோற் சீறினான். அப்படி நடக்கையில் அஸ்வத்தாமன்

கோர்த்த அம்புக்கூம்புகளைப் பார்த்த தேவேந்திரன் முதலிய தேவர்களும் ஆரவாரித்து ஆச்சரியமாகக் கொண்டு அதிசயப்பட்டார்கள்.

அப்போது ஜயவிஜய சௌரிய பராக்கிரம கண்டீரவ காண்டீபதனஞ் செயன்கண்டு அண்டமுகடதிரவருகின்ற பிரசண்டக்கணைகளாகிய ஓராயிரத்தெண்ணூறு பாணங்களையும் ஒருநொடியில் நறுக்கென்று குறுக்காகவெட்டி குறுந்தூளாகக்கொட்டிவிட்டுக் கூர்மையான இருபது சூரியாஸ்திரங்களைக் குறித்துக்கைப்பிடித்து ஆரியமந்திரம் உச்சரித்துத்தொடுத்துஅஸ்வத்தாமன் இரதத்திலுட்டிய சுவேதத்துரங்கங்களை அடியோடுமோட்டி தீரப்பார்வைகாட்டி நின்றான், அதைக்கண்ட அஸ்வத்தாமன் கச்சிதமானவச்சிரவாளிதக்ஷணமே கொண்டு பிரயோகம்பண்ணி பெருமைக்கு உச்சிதமாகிய அர்ச்சுனராசனது விரபட்டத்தையறுத்து ஒடியாத காண்டீபத்திற்பூட்டிய அருகு நாணியைக்குறைத நீக்கித் தளர்ப்படுத்தி அநந்தங்கோடி தாம்புகளினால் ஆகாயம் பூமிமுழுவதுந்தெரியாமல் மறைத்து அர்ச்சுனனுடைய தேனையுமூடினான்; இத்தன்மையாகக் குருபுத்திரனடாத்திய யுத்தத்திறத்தைவெற்றிவிரப் பிரதாபவிசயன்கண்டு புன்சிரிப்புக்கொண்டு ஓ! அஸ்வத்தாமா வென்னுஞ் சிரஞ்சீவியே! என்னுடைய வின்னாணியைத் தளர்த்திவிட்டதினால் உனக்குப் போர்ச்சேவகனென்னும் புகழ்கிடைத்ததுண்டோ போ போ இதுவைத்தியமாவென்று வீரதீரகாண்டீப வின்னாணியையிறுக்கி கோரபாரசரங்களைக் குறையாமனிறைத்தான்; அஸ்வத்தாமாவும் அதற்கீடாகிய அஸ்திரங்களை அபரிமிதமில்லாமல் அமோகமாய் நிறைத்தான். இப்படிக்கு இருதிறவருஞ் செப்பிடு வித்தை செய்பவர்போல ஒப்புவமை உரைப்பதற்கின்றி எப்புவனமுநடுநடுங்க அப்புமாரிபொழிவதை செப்புதற்கரிய துரியோதனனுடைய சேனைகள்நோக்கி தங்களுக்குச் சயகாலமென்றுட்கொண்டு சந்திரனைக்கண்ட சமுத்திரம் போல இறைந்து பொங்கி ஆசாரியகுமாரன் செய்த அமர்த்தொழிலைப் புகழ்ந்து, மகிழ்ந்தார்கள் இவர்களிருவருங்விட்ட அஸ்திரங்களானது பரவி எட்டுத்திசையும் எட்டுக்கரியும் எட்டுக்கிரியும் வட்டம்புவியும் அட்டமாநாகமும் மேவிட்ட சுவர்க்கலோகமும் நடுங்கி நாணமடைந்து நலியச்செய்தது. இந்தப்படிக்கு ஒருவருக்கொருவ ரோயாமல் ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் லக்ஷாலக்ஷம் கோடி கோடா கோடி அர்ப்புதம் நிர்ப்புதம் பொற்புதமென்று கங்குகரைகாணாமல் எங்குமிறைந்துறைய ஒருமுகூர்த்தபரியந்தம் நெறநெறநெறநெறவெனப்பொழிந்தகாலையில்; தோள்வல்லமையுடைய துரோணர் மகனது அம்பறாத்தூணினிறைந்த அஸ்திரங்களியாவும் வறண்டுபோய் சொற்பத்தரித்திரன்போற் சோர்வடைந்திருந்தான். அதெப்படியென்னில் கீழ்மக்கள் மேன்மக்களாவார்களென்பது கனவிலுங்கிடையாது? ஒருவேளை தந்தைவிட்டெழுந்து முந்திவந்த தெந்தவினையோ அந்தச்சம்பந்த அருவினையதனால் நடுவது பாதிமுதலிய நாட்களிற் செல்வ நேரிடலாகும்; அவ்வாறுநேரிட்டால் அதைப்பாதுகாத்து தன்னிலுஞ்சிறந்த சாதுக்களுடன் சாவாசஞ் செய்து ஷிற்பனுவிவேகம் விளங்கக் கற்பனையான கல்வியையறிந்து அக்கல்வியிற் கழறிய கருத்தையுணர்ந்து அந்தக்கருத்திற்கிணங்க அடங்கியிருந்து முன்

பின்னுலகமுறைமையுந் தேர்ந்து அடக்கம் வணக்கம் அன்பு பூண்டொழுகி இரக்கந் தயை பெற்றிருப்பவர்தமக்குச் சம்பத்தெந்நாளும் தவறுடையாது; அப்படிக்கில்லாமற் பற்பல அகந்தைகள் விளைத்து தலைகால் தெரியாச் சன்னதமாடியிளைத்து பெரியாரைப்பணியாத பெருமைமுளைத்து விஷமத் தாற்றிளைத்து வெறும்பொய்யாற் களைத்து விசனத்தால உளைத்து வெதும்புண்டு அறிவில்லாதஅற்பர்களுக்குச் செல்வம் பகையென்பதற்கிணங்கக் கிடைத்திருந்த ஐஸ்வரியத்தைப் பிரயோசனப்படவொட்டாமற் போக்கடித்துக் கொண்ட வெறும்வீணரைப் போலிருந்தது; அஸ்வத்தாமன் அருமையாய்ச் சம்பாதித்த அஸ்திரங்க ளடங்கலும் வழிதுறையில்லாமல் வாரியிறைத்துப் போட்டு வருந்தியிருந்த வண்மையானது. இந்திரகுமாரனாகிய அர்ச்சுனனது அம்பறாத்தூணி இறைக்கச்சுரக்கு மணற்கேணிபோல் எடுக்கவெடுக்கக் குறையாமல் அக்ஷயமாய் எப்போதும்போலிருந்தது. அதெப்படியென்னில் தப்பிதமில்லாமற் கற்கவேண்டிய ஆசு மதுரம் சித்திரம் வித்தாரமென்னும் நான்கு கவிகளையும் ஆராய்ந்து தெளிந்த பூரணவித்துவான்களின் விவேக விளைவினால் கற்பனை அலங்காரங்காணச் சுரக்கும் பாவின் விருத்திபோலிருந்தது. இப்படியிருக்க குற்றமற்ற வெற்றிபெற்ற கொற்றவர் தம்மைப்போல் தேரின்பேரிலசையாமலிருந்த சிங்கக்குருளைபோன்ற அஸ்வத்தாமனது செயலையறிந்தீரோ? அல்லது திறமாகிய சிலைவிசயனுடன் போர்புரிந்து சயம்பெற நினைந்தீரோ? அல்லது மைத்துனராகிய துரோணரும் மருமகனாகிய அசுவத்தாமாவும் இளைத்துப்போனார்களே! அப்படியே நாமும் இளைத்துப்போவோமென்னமுனைந்தீரோ? என்னவோதெரியாது. செவந்தநிறமுந் திறமும்படைத்த கிருபர், தம்முடையதேரைக் கடகடவென்றுவிடுத்து, கணைகளைவெகுவாய்த்தொடுத்து, தனஞ்சயனெதிர்த்து, சண்டையிளைத்துத்தடுத்தார். அந்தவேளையில் கடல்நிறங்கொண்ட காண்டீபனானவன் சாரதியாகிய உத்தரகுமாரனைப்பார்த்து புத்திமானே! அசுவத்தாமன் அம்புக்கூட்டிலுள்ள அஸ்திரங்களெல்லாவற்றையும் வாரியிறைத்துப்போர்செய்திளைத்துப்போனான், அவனுக்குநேரிட்ட அவமானத்தை வெளிப்படுத்தலாகாதென்று அவனல்லமானாகிய கிருபர் நம்முடனெதிர்த்துப் போர்புரியவருகின்றார் பாரென்று அருட்பார்வையாற்காட்டினான். அந்தக்குறிப்பையறிந்துகொண்ட உத்தரகுமாரன் சக்கரங்களுள்ள தேரைக் கர்க்கரத்தொனிகாட்டி, முட்கரமாகவோட்டிபூர்வ ஆசாரியருடைய தேருக்கெதிர்வந்துவளைத்தான்; அதுகாலையில் அருச்சுனராசன் காண்டீபத்துள்ள நாணியையிறுக்கி, மின்னலிடி மின்னியமுழுக்கத்துடன்பொழிகின்ற மேகமுநாணி வெட்கப்படும்படி, சரசரவென்னச் சரதாரையாய்ச்சாய்த்தான்; அதைக்கண்ட கிருபருங்கிட்டி இரதத்துடன் இரதமுமுட்டி நாலாவித கோலாகலபாணங்களைக்கொட்டி அவனுந்தியகணைகளை வெட்டி ஒட்டியுத்தம்பண்ணினார்.

இவ்வாறிருவரும் போராடிய வல்லமையை இவ்வகையென்று மதித்துச் சொல்லவல்லவரில்லை ஆனால், வானத்தில் வேடிக்கைப்பார்த்திருந்த வானவரும், மாதவர்முதலாகிய பிதிர்த்தேவதைகளும், வெகுதூரம் ஒதுங்கிச்சென்

ரூர்கள். பிரசண்டவாயுவுங்கலங்கிப்பிரகாசிக்கு மகமேருவுங்குலுங்கி, எட்டுத்திக்குச் செவுபேட்டொடுங்கிப்போயிற்று, அம்பரஞ்சுழன்று பம்பரம்போலாடி அக்கினிமிகுந்து அனற்பொறிமலிந்து வீசியது, அண்டகூடந்தொட்டு அகண்டமு நெக்குவிட்டுச்சாய்ந்தது, அந்தரகதியாய்த்தொக்கி அஞ்சனமேகமும்விக்கி அதனதுவாரின்பெருக்கி நீரிடி நெருப்பிடியைக்கான்று மலைக்குகைகளிலும் பிலத்துவாரங்களிலும் புகுந்து மிகவொடுங்கிப்போகப் பிரமாதம் விளைந்தது. இப்படியாக வில்த்திறங்காட்டி விக்ரமக்கிர்பாச்சாரியரும், பராக்கிரமப்பற்குணனும், தங்களுக்குத்தெரிந்த சிலைத்திறங்களைக் கணைத்திறங்களைச் சீராட்டிப்பாராட்டி முன்னோட்டம் பின்னோட்டமாகத் தேரையுந்தி, வெகுநேரம்வரையிலும் பகழிகளுந்தி, ஒருவருக்கொருவர் உதிரஞ்சிந்தி, உடலெல்லாஞ் சிந்துசிந்தாய்க்கொந்தி, உருத்து முந்திப்போர்புரிந்தார்கள். அதுகாலையில் கிரீடியானவன் கைம்மிஞ்சி நிருடிச்சரங்களைச் சரேலெனப்புகுத்திப் புட்பகவிமானம்போன்றசக்கரத்தேரினையும் வேதவெள்ளக்கொடியையும்சாரதி குதிரையையுந்தம்பிவிழத்தாக்கி,கிருபருடையஉடல்முழுதுந்தொளைபோக்கி, மறுபடியும் பாதமுதற்றலைவரைக்கும் பாணங்கள் ஊடுருவிப்போம்படி நாணிவிக்கி, ஷ்டங்காரஞ்செய்தான், அனையகாலையில் கிருபர் மதிமயங்கித்தியங்கிக் கண்கலங்கிமானந்துலங்கி மனம்மேற்கனைந்தார். அந்தக்கிருபருக்கு இரண்டுபக்கத்திலுந்திரண்டமலைபோலிருந்தசக்கராட்சகர்கள், சந்திரகேது சுஷேஷணன் மணிமந்தன் ஏமவான்முதலிய வெற்றிவில்வீரவேந்தரநேகர் ஆரவாரித்து அருச்சுனனைமடக்கி, வெற்றிபெறுமல் விடமாட்டோமென்று திறப்போர்விளைத்தார்கள்; அவர்களை அருச்சுனன்பார்த்து, அதிகோபமாய்வேர்த்து, மறுகிக்கொதித்து, மாறிமாறி வீரக்கும்புகள்மேல் நூறுநூறுயிரம் அம்புகளேவி, அன்னோருடைய ஆயுதங்களையும் பாணங்களையும் விற்களையும் தேரையும் சிகரத்தையும் நொறுக்கிப்பறக்கவடித்து, மலையொத்த புயத்தைக்குறைத்து, இடையுந்தொடையும் இடையத்தறித்து, கரமுங்காலும் புறம்படமுறித்து, தலையைச்சிதைத்துத் தரணிமேற்குவித்துத் தாவியகாலையில் வீரத்தேறொழிதீரம்விடாத விருத்தராகிய கிருபரும் வெளிப்பட்டார்; அவருடைய வில்லையும் தேரையும் சாரதிகுதிரையையும் அழித்து, அவருக்குப் பின்னுதவிவந்த மன்னர் பலரையுஞ்சிந்தினான். தன்னுதவியான மன்னரையுமடித்து, தன்கையிலிருந்த வில்லையுமொடித்து, தானேறிவந்த தேரையும்பொடித்து, தானைகள் கான்கும் தவிடாயிடித்து,வெற்றிபடைத்திருக்கும் தனஞ்சயனைக்கிருபர்கண்டு போரிடமாட்டாமல் வருந்தி, உடல்படபடத்து பூமியிலுட்கார்ந்துபாய்ந்து எறிவேலெடுத்து பூசைமுடித்து பற்குணன்மேல் விட்டெறிந்தான், அந்த வேலாயுதம் அதிர்ந்துவருகிற ஆர்ப்பாட்டத்தை அருச்சுனன்தெரிந்து நகைமுகமாகச்சிரித்து அக்கினியாஸ்திரந்தொடுத்து வெட்டையாகிய வெண்கலப் பொடிபோலுடைத்துத்தள்ளினான். அப்போது கிருபாசாரியர் தானெறிந்த வேலாயுதம்போனவிதத்தையும், அதைமுறித்த அருச்சுனனது திறத்தையுங்கண்டு ஆக்கிரமித்துவெகுண்டு உடல்மறந்து சிறந்த வாளாயுதமுங் கேடயமுங்கைக்கொண்டு ஓரோவீச்சாகவீசிவிடக்கருதி விசயனுடைய தேரிற்பாய்ந்

தார், இப்படியாக எண்ணிப்பாய்ந்த பூர்வாசாரியனைக் காண்டாவனமழித்த காண்டீபன்கண்டு வெந்திடச்செய்யும் இந்துமுகாஸ்திரச் சுந்தரக்கணைகளுந்தி வாளாயுதமும் பரிசையும் நீறுகப்படுத்தி பூளைப்பூப்போற் போக்கினான், அதனால் யுத்தமுனையில் வெற்றிபெறக்கற்றவீரம்பெற்ற கிருபாசாரியர் வேறு போர்புரிவதற்கு விதியில்லாமல் சற்றுநேரம்வரைக்கும் அசைவற்றிருந்து தன்னறிவைத்தானே நிதானித்து தனக்குமுன்னே சண்டைவிளைந்த காஷ்டகர்களையும் யோசித்து கீழ்க்கண்பார்வையாய்க் கிரீடியைப்பார்த்துச் சிறுக கைவிளைத்துத் திடீரென்றோடி வீரகண்டாமணிகட்டிப் பிரகாசிக்கின்ற துரோணாசாரியர் புத்திரனாகிய அசுவத்தாமனுடைய தேரின்மேலேறிக்கொண்டார். இங்ஙனம், முனைவீரங்காட்டிப் போர்புரிந்த கிருபாசாரியர் பின்னிட்டோடி மருமகனுடன் இரதத்திலிருந்த வண்மையாய அவரைநம்பிப் போனசேனைகள்கண்டுவாடி அருச்சுனன்பாணத்தால் அடிபட்டோடினார்கள்; முன்னிட்டடுத்து யுத்தமுனையேறிய கிருபாசாரியர் இழிவுதேடிக்கொண்டு தன்முதுகுகொடுத்துப் போயினாரென்று பொற்சக்கரம் பூட்டிய தேர்மேலிருந்த போர்ச்சிங்க வீஷ்டுமாசாரியர் புறப்பட்டு மேகங்களை மின்னுடன் பிளந்ததைப்போல் விளங்கிய செந்நிலை தாங்கியோங்கிய சேவகத்திறங்காட்டிப் பேரணிப்படை புடைசூழ்ந்து வரும்படியாய்ப் புகுந்து பிரதாபனாகிய சவ்வியசாசியை வளைத்து நாணொலிசெய்தார். அந்தக் குருகுலக்கோமான் தெறித்த குணத்தொனிகேட்டு கரையுடைத்த ஏரிநீர்போலிருந்த சகுனி துச்சாதனன் முதலாகிய சங்கிராமவேந்தர்கள் கூடி வீஷ்டுமாசாரியர் ஆதரவின்மேல் அர்ச்சுனனைநாடி அளவற்ற அம்புகளைத் தொடுத்தார்கள். அம்புகும்புகளைக்கண்ட நரனானவன் பாம்பியமேகம்போல் நச்சரவப்பாணங்களைநாட்டி அவர்கள் தூற்றிய அத்திரங்களையெல்லாம் நாலிரண்டாயொடித்து நாணோசையடித்து தேவதத்தத்தையுந் தொனியெழும்பப் பிடித்தான். அதனொலியால் மடங்கி யாவருமயங்கி நலியாலடங்கினார்கள்.

இப்பால், சந்திரகுலத் திந்திரனாகத்தோன்றிய தனஞ்சயன் தானேறி வந்த மந்தரமலைபோன்றஇரதத்தைத் தந்திரமாகச் செலுத்தும்படி சாரதியாகிய உத்தரகுமாரனுக்குச் சாற்றினான்; அவனப்படியே முடுக்கி ஒருநொடிப்பொழுதில் குலக்குரவன் கலக்கவருந் தலத்தினிற் சார்ந்தான். இவ்வகையாகச் செவ்விசேர்ந்த மன்மதவடிவம்பெற்ற வாசவன்மதலை உலகமுடிவிலெழுகின்ற ஆலகாலம்போலும் காலகாலன்போலும்போர்முனையிற்கலந்ததைகாங்கேயன் கண்டு களிக்குங்காலையில் வாளாயுதவல்லமை கற்ற இடபசேனன்குறித்து அர்ச்சுனனை மறித்து கேதுராகுக்கிரகங்கள் போற்செறிந்து பகைப்பொருந்திய பாணங்களைத்தெறித்து கிரமமாகப்பிரித்து தானும்நெறித்து நின்றான். அந்த இடபசேனன்செய்த போரைப்பார்த்த நரனானவன் ஆங்காரங்கொண்டு ஸ்திரமானசரங்களைப் பலமாகச்செலுத்தியடித்து அவனுடையதேர் சாரதிகுதிரைகள் முதலிய சொடுங்கையும்போக்கி மடித்து கைப்பிடித்தவில்லையுங் கரனையாயொடித்து செங்கதிர்ச் சிலீமுகந்தெறித்து அவனதுதேகத்தையுந்துளைத்து அந்த அடியினாற்களைத்த இடபசேனன் உடலெரிந்து உயிர்கரிந்து 'வீஷ்டுமா

சாரியருக்காகப்பரிந்து புகுந்தபக்ஷம் போதுமென்று முனைகெட்டழிந்து முது கிட்டயர்ந்து முறைபட்டோடிப்போனன், அவனோடுவதை நோக்கிய சிந்து தேசாதிபனென்னுஞ் சயிந்தவனும் காந்தாரதேசாதிபனாகிய சௌபலச்சகுனி யும் வெம்புமனத்தினராகிய துரியோதனன் தம்பிமார்களும் மற்றுமுள்ள மன்னவான்களும் எதிர்த்து அதிர்ந்து விதிர்விதிர்ந்து வெந்தழற்கணை சிந்திய காலையில் மதத்தகஜகேசரியாகிய மாதவிகொழுநன் நகைத்து மனவேஷ்டை யாய்ப்பகைத்து முப்புரத்தையெரித்த உரத்த அத்திரங்களையுந்தி அவரவர் பிடித்திருக்கின்ற வில்லையும் பாணங்களையுஞ் சிந்திக்கொடியும் நாணியுங்குறை த்து குதிரை சாரதியைத்தறித்து குடையுடைத்தேரையுமுறித்து பின்னும் நூறுபெருங்கணைதாக்கி விறுபட்டசேனைகள் தாறுபட்டயானைகள் கூறுபட்ட குதிரைகள்மாறுபட்ட இரதங்கள் இவ்வாறு பட்டதென்று சொல்வதற்கிடமில் லாமல் வெவ்வேறுபட்டு நீறுபட்டழிய நிமிஷத்திற்பொடித்து சேறுபட்ட உதிரவெள்ளத்தின்மேல் தேர்செலுத்தி எதிரொருவரில்லாமல் வருகின்ற பரா க்ரமனை யடைந்து பறக்கச்சிறந்த தேர்மேலிருந்த பிதாமகன்கண்டுபார்த்தனே யிதோநான் காத்திருக்கின்றேன் வாவென்றெதிர்ந்தான். அப்படிக்கெதிர்த்த வீஷ்டுமாசாரியனை அர்ச்சுனன்வணங்கி ஒடுங்கி ஐயா அவர்கட்கு நானெம் மாத்திரம் என்னை ஒருபொருளாகக்கொண்டு சண்டைபோடச் சம்மதியுண் டோ ஆண்டவனேயென்று நிம்மதியாய் நின்று மேகம்போன்ற காண்டீபங் கொண்டு மின்னற்கிணையாகிய நாணிபிகிந்து கன்னங்கலங்க நாணொலிசெய்து தீரஜெயவாளி வீரவயவாளி மகேந்திரபாண முதலியவற்றை வாரிவாரி வரி சையாய்ச்சொரிந்தான். வீஷ்டுமாசாரியரும் உகாந்தகாலமே காந்தகார மழை போல் வாகார்ந்தவாளிபொழிந்தார் இவ்வாறு மலையுமலையுமெதிர்த்து மாறுடு மாறுபோற் போராடினார்கள். அவர்களிருவரும் புரிந்தகலகத்தினல் ஏழுசமுத் திரமும் எட்டுத்திக்குப்பாலரும் ஒன்பதுகிரகங்களும் பத்துதிசையும் பதி னொரு ருத்திரரும் பன்னிரண்டு சூரியரும் பட்டபாடின்னதென்று பாவாண ரும் பகர்வதற்கிடம் பெறவில்லை, அந்தரவாசிகளாகிய இந்திரன்முதலாகிய தே வர்களும் வேடிக்கைபார்த்துவெருண்டு அநேகயோசனைதூரம் அகன்றுபோய் நின்றார்கள் சந்திர சூரியர்களுங் கதிமாறினார்கள் அவர்களிருவரும் உதயமாகி யொடுக்கமாகின்ற உதயகிரியும் அஸ்தமனகிரியும் ஒதுங்கி நடுங்கியதுகள் கட லுங்கொதித்து கனலும் பொருந்திகளகளவென்றிறைந்தது. எட்டுத்திசையா னையும் தட்டுக்கெட்டயர்ந்தது. இவ்வுலகமும் எவ்வுலகமும்ஏங்கித்தளர்ந்தது, இவ்வாறு பிரமாதமுண்டாகும்படியாய் அவர்களிருவரும் அமராடியகாலை யில் வீஷ்டுமாசாரியர் கைம்மிஞ்சி பஞ்சபூதம்போன்ற அஞ்சுகணைகளை சாரதி யாகிய உத்தரகுமாரன் மேற்றூக்கினார் அந்தக்கணைகள்வருகின்ற நெருடியைக் காண்டீபன்கண்டுகாலாக்கினிக்கணையைப்போக்கி பஞ்சுப்பொதியில்நெருப்புப் பற்றிய பான்மைபோலெரித்து வஞ்சம் அறியாமனத்தோனாகிய வீஷ்டுமாசாரி யருடைய நெஞ்சுதிடுக்கிடும்படி அவர்கையிலிருந்த வில்லையொடித்து விட் டான், தன்பேராகிய அருச்சுனனால் ஒடிபட்டவில்லை அப்பாலெறிந்துஇப்பா லொருவில்லையெடுத்து மலைபோல்வளைத்துப்புற்றிலிருந்துபுறப்படுங் கிருஷ்ண

சர்ப்பம் பேரோசைகொண்டு புகுந்தவாறென்ன அத்திரமாரியைத் துத்தரமா கச்சொரிந்தார், தாஷ்டீகமாக வீஷ்டுமாசாரியர் சூரய்த்தகணைகள் யாவற்றையும் இணையில்லாத அருச்சுனன் நிரணபரிகாரமாய்ப்போக்கி கரணபரியந்தங் காண்டீப நாரியிழுத்து அருணோதயம்போற் செஞ்சரங்கள் விஞ்சத்தாக்கி அஞ்சிப்பயந்தோடச் சேனைகளைப்புடைத்து அசையாக்கீர்த்திபடைத்து அமராடியகாலையில் எழுகடல் நீருஞ்சுண்ட மலைமுதல் யாவுங்குன்ற உலகிலுள்ள யாவரும்இருந்தஇடத்தைவிட் டெழாமற்பதுங்க அட்டகசமும் உதிரங்கான்று முகம்வாட அமரர்கள் முதுகிட்டோடப் பிரமப்பிரளயத்தில் உண்டாகாநின்ற பெருநெருப்பேபோல் சரங்களிறைத்துப் புலிங்கநிறைத்துத் தகுதியான இருவரும் தேரைச்செலுத்தி ஓரிடத்திலுந்தங்காமல் அண்டச்சுவரின் அடிவாரமட்டுந் திரிந்துகொண்டிருந்தார்கள். இவர்களேறிய தேர்கள் வாயுவேகம் மனோவேகம் என்பவற்றைக்கடந்துவட்டமாகச்சுழன்று ஒன்றுக்கொன்று மிகவுநெருங்கியுராய்ந்து ஒன்றையொன்றுவிட்டுப்பிரிந்து பாய்ந்துநெடுந்தூரமோடி. ஓய்ந்து யிடசாரி வலசாரியாய்த்திரிந்து சூரியன்றேரையுஞ் சுழலவிடுத்தன; இதன்றியும் இந்திரன்மைந்தனான விசயனுடைய வில்லும் கங்காபுத்திரனை வீஷ்டுமாசாரியருடைய வில்லும் குலால சக்கரம்போற் கூசாமற்சுழன்று கூரம்புமுதலாகிய பாணங்கள் புரண்டு முடிகளோடு முடிகள் தலைகளோடு தலைகள் இடிபட உடைபடச் சாடியாடியால் தேர்க்கட்டிய குதிரைகள் பிடிபடாமற்கனைத்துங் கதறித்துங் கனைத்துப்பாய்ந்தோடவும் இருவர் சாரதிகளும் எக்களிப்பிட்டு இறைந்து விரைந்து பரிகளைத் திரிக்கவும் அருச்சுனனுடைய அனுமக்கொடியும் வீஷ்டுமருடைய பனைமரக்கொடியும் ஆகாயமளாவி நீடியவாயுதேவனுடன் போராடவும் வாள்வீரர்முதலாகிய மன்னவர்க்கெல்லாம்தோள்கள்பூரிக்கவும் நெற்றிவியர்க்கவும் புருவநெறிக்கவும் உரோமாஞ்சிலிர்க்கவும் வாள்விழி செவந்து மலர்ந்து தீப்பறக்கவும் அத்திரந்தொடுக்கும் விரல்கள் நெளிக்கவும் விற்பிடித்தகரங்கள் மரங்கள்போலாகவும் வீரகண்டை முழங்கவும் வெற்றிப்பட்டாயிலங்கவும் நெற்றிப்பட்டந்துலங்கவும் வேடிக்கை பார்த்தவேந்தர்கள் கலங்கவும் மேலுலகத்தோர் வெதும்பியொதுங்கவும் நாகலோகத்தார் நலிந்துவிலங்கவும் சராசரம் பூமிசலித்துக்குலுங்கவும் இவ்வகையாக இருவருநிலைத்து ஒருவருக்கொருவர் ஈடுதாழ்த்தியில்லாமல் சமராடுகின்ற தன்மையினாலே மதுசூதனன் மைத்துனனாகிய அர்ச்சுனன்யுத்தஞ்செய்து கொற்றமுற்ற பத்துக்கணைகளையெடுத்துக் கொத்துக்கொத்தாகத்தொடுத்து வெற்றிப் பனைக்கொடிவிரிய வீஷ்மாசாரியரேறிய தேரைத்தறிந்து வில்லையுமுறித்தான், அவனால் முறிந்தவில்லையெறிந்து வேறேவில்லெடுக்கு முன்னமே விசயன்முனைந்து அட்டகாசம்பண்ணி அர்த்தசந்திரபாணம் ஆயிரமாயிரமாக எய்து பாட்டனுடைய தேகத்தைக்கொய்துசெல்லெரிப்பதுபோற் சல்லடைக் கண்ணாய்த் தொளைத்துவிட்டான், முன்னமே செவந்திருந்த வீஷ்டுமருடைய திருமேனியானது உதிரத்திறைப்பரந்து பாணந்துளைத்த வருத்தத்தினாற் களைத்துவருந்திவாடி அறிவழிந்து நெடிபுரண்டு நிலைதவறி மெய்ம்மறந்து பெருமூச்சுவிட்டு கரைபுரண்ட கருங்கடல்போல தேர்மேல்வீழ்ந்து அசை

வற்றிருந்தார், அப்போது எசமானிளைத்த சமயத்தையறிந்த தேர்ச்சாரதியான வன் அருச்சுனனுடைய போர்முனைவிட்டு தேரைச்செலுத்தி நேர்முகமான திசையிற்கொண்டு போய்நிறுத்தி சீர்பெறத்தேற்றி அவிழ்தாதிகளாட்டி களை தெளியச்செய்து அன்புபாராட்டினான். அவ்வேளையில் பகல்விளக்காகிய பரிதி யினிரதமானது ஆகாயத்தி னுச்சியையடுத்தது. அதுகாலையில் விஷ்டுமாசாரி யர் மாத்திரமான கருமத்தைமுடிப்பவர்போல யுத்த முனையைமறந்து மறை ந்து போயினர். அவரிடைந்துசென்ற செயலைக்கண்டு துரியோதனன் தம்பி மார்களும் புத்திரர்களும் சயந்தவனும் சகுனியும் சதுரங்கப்படைகளும் பயந்து மயங்கி தங்களுக்குதவியாய்ப் பின்புறநின்று தாங்குவாரில்லாமையால் தனித்தனியேங்கி பற்குணன் பாணத்தாற்பங்கப்பட்டு நிற்பதற்கிடமில்லாம லுழன்றுமனமழன்று போர்முனைகழன்று புறமிட்டோடினார்கள். அந்த வேளை யில் மந்தரப்புயத்தோனாகிய அருச்சுனன் யுத்தமுகத்திற் பிரவேசித்து விசித் திரசரங்களை விதவிதமாய்த்தொடுத்து துன்னியசேனைகளைத்தாக்கி மன்னவர் வேறாகப்போக்கினான், இந்தப்படி மேலுமேலுங் கோடி கோடி கணைகளை வீக்கியகாலையில் நாலுமூலையிலும் கோலாகலமாயிருந்த வணங்காமுடிதிருந் திய துரியோதனமஹாராசன் படைகளானது பின்னிட்டுப்பறிந்து இரதங்கள் முன்னிட்டுமுறிந்து கொடிமரஞ்சாய்ந்து குதிரைகளுங்காலோய்ந்து தேரிற் பூட்டிய சித்திரத் துகிலுங்கிழிந்து சக்கரங்களுமுடைந்து அச்சுகள்பிளந்து மச்சுகள்சரிந்து குற்றுக்காலுங் கொடுங்கையும் வீழ்ந்து போதிகை பீடிகை பொடியாயிடிந்து சிகரமுதிர்ந்து சிதறிக்கழிந்து குடையுஞ்சுருங்கி சாரதி குடலுங்குலுங்கி வரிசைவிட்டு கிரிசைகெட்டு மாரொடிந்து வாறுந்து பேத மாய்ப்போனது மல்லாமல் வஞ்சமனத்தனான துரியோதனனுடைய வெற்றி பெற்ற மத்தகசமூற்றும் மத்தகக்கும்பமும் பிளந்து வித்தகதந்தமும் முறிந்து களவுபோன்ற காதுகளுமறுந்து பனைமரத்திற்கீடாகிய துண்டமுந்துண்டாய் நான்குகாலும் கமுகனையவாலும் போய் வாய் வறண்டு உடலுடலும் ஒன் றாகிப்புறண்டு வட்டக்கட லுலகில் மலையெட்டுந் தலைகட்டுப்பட்ட வாறுபோல் ஒன்றொழியாமல் உயிர்கெட்டொழிந்தன. தெய்வலோகத்தில் இந்திரசிங்கா சனமேறியகிரீடந்தாங்கிய கிரீடியானவன் நிருடியாய்ச்சிந்தியசரோருகக்கணை களால்துரியோதனனுடைய குதிரைக்கூட்டங்களியாவும் படைமுறிந்து பலங் குறைந்து வால்தறிந்து தலையறுந்து கழுத்துமயிருதிர்ந்து கடிவாளங்கழன்று கழிந்து கலந்து அழிந்து டீார்புகிழிந்து கால்மடிந்து மேலொடிந்து சப்பையு முகமுங் குப்புறவீழ்ந்து சடக்கெனவெரிந்தது நாகக்கொடிபடைத்த நராதிப னுடைய பதாதிகளானவைசிரஞ்சிதைந்துடைந்தன; கரந்தறிந்தழிந்தன, எலும் பொடிந்துதிர்ந்தன, குடல்சரிந்துடைந்தன நரம்பறுந்துழன்றன, உதிரம் பொ ழிந்தெழுந்தன, நெற்றியும் புருவமும் நிமிர்ந்து பிளந்தன, புயமும் மார்பும் புண்ணாய்க்கிருந்தன குதமும் பதமுற்குறைந்து சுருங்கின எவ்விடங்களிலும் பிணக்குவியதுயர்ந்தன இனியொருவர் எதிர்த்துப் போர்கொடுப்பார்களே ன்றுகளவிலுகினையேம். இதன்றியும்சவ்வியசாசிவிட்ட சரங்களுக்குத் தப்பிப் பிழைத்தவர்கள் இப்புவியிலில்லை, இப்பால் யுத்தஞ்செய்தவிடத்தில் நெஞ்

சுரம்பொருந்த நஞ்சுபோலிருந்த நரனென்னுங் காலாக்கினியிற்று எதிர்ப்பட்ட பூளைப்பூப்போல் துரியோதனன் சேனைகள்எரிந்துபொடிந்து பொரிந்து புகைந்துபறந்து புறண்டுபோய்விட்டது. இவ்வாறுமுன்னாளில் சிரித்துப்புரமெரித்த சிவபெருமான்போனின்ற செஞ்சிலை விசயனுக்கெதிரில் திரிபுராதிகட்கொப்பாய்துரியோதனன் படைகள் பட்டார்கள். இன்னும் அனுமக்கொடிபடைத்த அர்ச்சுனன் அநுசந்தானஞ்செய்த அத்திரங்களினால் அறுபட்டோடிய உதிரவெள்ளமானது சேறுபட்டுச் சிதைந்து செந்தூளாகியது; பின்னும் அர்ச்சுனனுடன் மாறுகொண்டு மடிந்தவர்களின் வல்லுடலானது நீறுபட்டுநெரிந்து ஊறுபட்டொழிந்தது. அசைவில்லாமலெழுந்த விசயன்கணைகளானவைதங்களிஷ்டப்படி சண்டைபோட்டுத் திசையின் கடைவரைக்கும்போய் முட்டிப்பார்த்துத்திரும்பி அப்பாலுந்தன் விசையடங்காமல் பூமிதுளைத்து போமென்றிராமல் சுழற்காற்றுடன் கலந்து வன்மைகுறையாமற்றிரிந்தன, மேலும்மாதவிகாதலனாகிய பார்த்தனேவியவார்கணைகளானவைதிக்கெட்டுங்கிட்டிதிசைப்பாலர்தலையுயிலுங்குட்டிஅட்டகசங்களைத்தட்டி அண்டச்சுவரையுமுட்டிஇன்னம் ஆராயினும் பகைவருண்டோவென்று ஆராய்ந்துவிட்டன; இதன்றியும் சிற்சில நெருப்புக்கணைகளானவை பற்பலதேர் நிரைகளையும்யானைப்பெருக்கங்களையும் குதிரைநெருக்கங்களையுகால்பிலவருக்கங்களையுமகரியக்கரைத்து கண்ணுக்கிடுமைபோலரைத்து கால்வாய்கொண்டோடுகின்ற உதிரங்களிற்கரைந்து கடலிற் பெருங்காயங் கலத்தல்போற் கலக்கி விட்டிரைந்தன வீபற்சுவினைத்தவினையால் கொற்றவர்களும் மெத்தவருந்திச் செத்ததல்லாமலும் தலைமேற்குவித்த கரத்தினராய்த்தறிந்துவிழ்ந்த சிரத்தினராய் தைரியங்கெட்ட உரத்தினராய் தங்கள் தங்கள் வாய்விட்டாற்றினராய்ப்போய்த்தமக்குரிய பெரியபெரிய சந்திரவட்டக்குடைகளும் வெண்சாமரைகளும் பல்லக்குகளும் பலவாகனங்களும்பேரிகை பூரிதாளமேளம் தவிலடிகாளம் கொம்புகெடிமுரசு முதலிய வாத்தியக்கருவிகளும் வில்லும்பாணமும் வேலும்வாளும்வெவ்வேறுயழிந்து பூமியிற்குப்பையாய் பொருந்திக்குவிந்தன. இந்தப்படியாகச் சண்டைபுரிந்தஇந்திரன்மைந்தன் அண்டச்சுவரையளாவிய சமுத்திரம்போலிரைந்தெழுந்த துரியோதனனுடைய சேனைகளை மகரமச்சம்போற் குடைந்துவாட்டியிட்டான்; மேன்மேலுந்தெரித்த வெங்கனற்கணைகள் மிதமறப்படர்ந்து வெளியெல்லாமடர்ந்து காடெல்லாங்கடந்து கடையுகாக்கினி போலெரிந்து விரோதியைத்தொடர்ந்து மேனியைப்பிளந்து சேனையைச்சிதைத்து ஊனைப்புசித்து உதிரங்குடித்து தாராகணங்களைததவாயிலுநிர்த்துதேவர்கண்டுங்கச் செந்தீயெரிந்து விரித்துக்கலித்துத் திரம்பெற்றுநின்றன,

இவ்வாறு மாடுபிடிசண்டைபோடுவதற்காகப்புகுந்தவணங்காமுடியோன் முதலாகிய மன்னவர்கள்மேல் குறிப்பறிந்து நெறிப்பறிந்து கூசாமலேவிய பாசுபதன் பாணங்கள் எப்படியிருந்ததென்னில் தசரதச்சக்கரவர்த்தி தந்தமைந்தனாகிய தாசரதியாவான் தர்ப்பசயனத்திலிருந்து வருந்தியழைக்கும்போது வாராத சமுத்திரராசன்மேல் வலுக்கொண்டுந்திய வன்னிக்கணை போலிருந்தன. ஆண்சர்ப்பக்கொடிநாட்டிய துரியோதனனுடன் பொருந்திப்

போர்புரிந்த போர்வீரர்கள்மேல் புரந்தரதுரந்தரன்போக்கிய புங்கவங்களா
னது எவ்வாறிருந்ததென்னில் தீரம்பெறுஞ்சூரனையும் அவன்சேனைகளையுங்
களைந்த சிவசுப்பிரமணியக்கடவுளின் வேலாயுதம்போன்றிருந்தது மேலுங்
கருங்கடற்போற்கலந்த கௌரவகுலமுதல்வன் சேனைகளியாவும் கண்
கலங்கப் புண்துலங்கக் கசக்கிவதக்கிக் கருக்குரட்படிக்கு மேகசவற்றிறுழன்
முடுக்கிய கிளைக்கணைகளானவை எத்தன்மையொத்ததென்னின் எமதரு
மராசனுமேனவி விசிய தண்டபாசத்திற் கிணையாயிருந்தன. வேந்தர்கள்
முடிமேற்கவித்த வெள்ளைக்குடைகள் காம்புமுறிந்து பூமியிற்கவிழ்ந்து கா
ற்றினால் திமிர்ந்து கலந்துகிடப்பது எவ்வாறிருந்ததென்னில் சுபத்திரைநாய
கன் துரியோதனனுடைய படையைவென்று அடையச்செய்யும்யாகத்தில்
அவிர்ப்பாகம்பெறவேண்டிச்சந்திரன்வந்துதலைகவிழ்ந்திருப்பதுபோலிருந்தது.
வெற்றிவீரமுள்ள வேந்தர்கள் ஏவிப்பற்றிய வலம்புரிச்சங்குமுதலிய வெல்
லாவற்றையும் அருச்சுனன் அம்பாலடித்துத்தள்ளுதல் எவ்வாறிருந்ததென்
றால் ஏகசக்கராதிபனாகிய துரியோதனனது கீர்த்தியை வேரறக்களைந்தவாறு
போலிருந்தது. தேர்களிலும் யானைகளிலும் பொருந்தியிருந்த பலநிறனுகப்
பட்டுக்கொடிகள் பார்த்தன்விட்ட பாணங்களால் அறுபட்டு முறிபட்டுத் தறி
பட்டு மாலையாய்வீழ்வது எப்படியிருந்ததென்றால் வெருகிறமேகங்கள் விண்
டலம்விட்டுநீங்கி மண்டலத்தில் ஒருமொத்தமாய்விழாமல் தனித்தனிவரிசை
யாய்விழுந்தவாறு போன்றிருந்தது. பாரற்ற தேசுற்ற வளப்பெற்ற பலமுற்ற
தருமராசனுக்கிளவலாகிய தநஞ்சயனானவன் விசயலட்சுமியைக் கலியாணம்
பண்ணிக்கொள்வதற்குதனித்தனியெடுத்துத்தொடுத்தசரக்குவையலானவை
தூசிப்படைச்சூரர்களின் வீரவில்லைவெடுக்கென்று முறியப்படுத்திய வேடி
க்கை எவ்வகையென்னில் சனகராசனுடையவில்லைச்சீதாபிராட்டியாருக்காக
செங்கண்மால்வளைத்தொடித்த செயல்போன்றிருந்தன. இதன்றியும் கரும்
பைப்பரிந்தெடுத்துண்ணும் வாயும்பனைக்கையும் விரிந்தகாதும் பொருந்திய
மெய்யுமுள்ள திடகாத்திர கும்பகரடதடயானைகளின்மேல் முழங்காநின்ற
முரசவாத்தியங்களை நரனுந்திய நாராசப்பகழிகளுடைத்தன எப்படியிருந்த
தென்றால் உயர்ந்தமலைமேலுற்ற பெருங்கருங்கற்களைப்பேரிடிவீழ்ந்து பிளந்த
வாறிருந்தது. மேலும், வெற்றிப்போரிற்புகுந்த மத்தகசங்கள் வீரபட்டங்
கட்டிய கும்பம் பிளப்புண்டு இரண்டுபக்கங்களிலும் உதிரம்புரண்டோடும்
படியாகத்திரிகின்றது, எத்தன்மையொத்ததென்னில், சித்திரைப்புயலடிக்குங்
காலத்தில் மெத்தவெள்ளஞ்செவந்து கறுத்தமலைமேல் கால்கொண்டு, வழிந்த
காட்சியையொத்திருந்தது. இதல்லாமலும் அருச்சுனன் ஒருயாகஞ்செய்து
தேவர்களுக்குப் பூரணாகுதிகொடுத்த செயல்போன்றிருந்தது. அஃதெவ்வா
றென்னில், மாடுபிடிசண்டைவிளைந்த காடுகுடிகொண்டு பரந்த நிலமானது
வேள்விச்சாலைபோலும்வீரர்களெதிர்த்து போர்புரிந்த இடமானது ஓமகுண்ட
மாகவும், அவர்கள்மேற் பிரயோகம்பண்ணிய பாணாக்கினிகள் யாகாக்கினி
யாகவும், போர்க்கோலங்கொண்டவீரர்களுடையதேகமானதுசமித்துக்களாக
வும், அன்னோருடம்பிலிருந்துவழிந்த உதிரங்கள் நெய்யாகவும், பிணங்கள்

வகையாகவும், போர்பொரவழைக்கும் வீரப்பேச்சுகள் வேதமந்திரங்களாக வும், இயாவருடைய உயிரும் அவிர்ப்பாகமாகவும், தேர்ச்சிகரங்கள் பூரணகல சங்களாகவும், அபமேதம் கயமேதம் புருஷமேதம் பசுமேதமென்னும் யாக த்தை ஒருநாள்விரதத்தில் உத்தமன்செய்ததை ஒத்திருந்தது. மேலும், பிரமசிருஷ்டிக்குட்பட்ட ஆன்மகோடிகளின் கண்ணுக்குள் மணிபோனின்ற கண்ணனைப்போல் அந்தயுத்தபூமியைச்சாரிவரும் அருச்சுனனைக்கண்டபாரிய தேர்வீராளெல்லோரும் தங்களைநாடித் தனஞ்சயன் தேடிவருகிறானென்று தளர்ச்சியடைந்தார்கள்.

இப்படியாகப்போர்விளைத்த யுத்தகளம் எப்படியிருந்ததென்றால், பருந் துகளிருந்து விருந்துகளருந்த, கழுகுகள்குழுமிக் கொழுநிணங்கொள்ள, காக் கைகள்வீரர்கள் கண்ணைப்பிடுங்க, ஆக்கையைப்பேய்நாய் அடுத்துக்கடிக்க, பிணந்திண்ணுங் கூளிக்கணங்கள்பறக்க, ஈரலைமூளையைக் குழிநரியிழுக்க மிருந்த ஓசையுள்ள பட்சிகளின் இரைகைநெருக்கத்தினால் வானமும் மலையும் மரங்களும் மறைய, ஆறாகவும், சேறாகவும், மடுவாகவும், ஓடையாகவும், கய மாகவும், காலாகவும்பெருகியோடிய உதிரங்களினால்கடலால்வளைந்த உலகஞ் செவக்க பைசாசங்களும் இணங்கி வராகியைவணங்கி கைகோத்து ஆடியும் பாடியும் ஓடியுமிருக்க; பாம்பாரமும் என்புமாலையும் சூலகபாலமும யாளி வர்கனமும் உடுக்கை பம்பையுங்கொண்டுதிரிகின்ற காளிக்கூட்டமும், ஞாளி யீட்டமும் மணிமுடியணிந்த மயிடனைத்துணித்த கன்னிப்படையும், கண க்குடையும், குத்துவெட்டுச்சண்டையிற்றேறிய குறள் கூளி பாரிடங்களுங் கூடிக்குலாவி போர்க்களமுழுவதும் பொருமித்திரியவும். சண்டையிலுரு ண்ட தரியலர்தலைகளை அண்டையிற்கிடக்கும் யானைத்தலைகளை குப்பை குப்பையாய்க்குவித்த குதிரைத்தலைகளை மலைப்பாம்புகளில்வரிசையாய்க்கோ த்து தாலியுருவுமுதலிய மங்கலசூத்திரமாய்க் கழுத்திற்றரித்து முடித்துத்தெ றிக்க உருவுகள் கோத்துக்கொண்டேனென்று, பிரதாபம்பேசி தன்னைமற ந்துவந்த பேய்ப்பெண்ணானவள் சற்றேதவறி உதிரநதியில் விழுந்து ஆழ்ந்து சுழியிற்றாழ்ந்து செத்தேனென்று முழுகியெழுந்து வருந்திக் கூச்சலிடும் போது ஒருபூதம் ஓடிவந்து, ஏற்றக்கோல்போன்ற நீண்டகையைக்காட்ட (அக் கரத்தைப்பிடித்துக் கரையேறுபவர்போல்) அக்கரத்தைப்பிடித்துக் கரை யேறிவந்து, இன்றைக்கொருதத்தென்று, சந்தோஷிக்குஞ் சந்தடிப்பெருக்க மும் அவ்வாறுபிழைத்த பெண்பேய்களானவை தங்களைக்கரையேற்றிவிட்ட பூதத்தைப்பிடித்துக்கொண்டு எப்போது மதுகைப்பிடித்தேனோ அப்போதே உமக்குநான் பெண்சாதி எனக்குநீர்புருஷன் இனி வேறுபுருஷர்களைவிரும்பே னென்று, பந்துசனங்களுக்குச்சொல்லி அவர்களநுமதியில் கலியாணஞ்செய் துகொள்ளுகின்ற ஆரவாரமும், அருச்சுனராசனுடைய புகழ்ப்பிரதாபத் தைப்பாடி அவருக்கு நன்மையுண்டாகக்கடவதென்று வாழ்த்திக்கூடி காண் டீவத்தை தோத்திரஞ்செய்கின்ற பேரொலியும் கிணமாமிசத்தை நிரம்பத் தின்று மயங்கிவீழ்ந்து புரளுகின்ற வயிறுதாரிப்பேய்களின் வார்த்தையும் சோரிவெள்ளமானது வாரிபோலோடவும்; அவ்வாரியிற்படிந்த திமிங்கிலம்

போலவும்; குதிரைப்பிணங்கள் திமிங்கிலமென்னு மீன்போலவும், வாளாயுத முதலியமற்றவாயுதங்களெல்லாம் பற்பலவிதமச்சமாகவும், பொருமலைக்கருதிய பிணங்கள்குவிந்த மேடானது, எண்காற்பட்சிகளிருக்கும் பெருமலையாகவும் மண்மேலோடுகின்ற தேர்களும் தேர்த்தட்டுகளும் கடல்மேற்செல்லுகின்ற கப்பல் கட்டுமரம் படவு பஃறி பரிசுபோல் உதிரக்கடலூடோடவும், மத யானைகள் கொம்பொடிந்து, கூக்குரலிடும் ஓசையானது தீரவீரபுருடர்கள் ஒருவருக்கொருவர் கூரியகணையால் குத்திக்கொண்டிறையும் பேரோசையா லடங்கிப்போகவும், கடையாணிகழன்றோடுகின்ற சக்கரங்களும் தலையறுந்த முண்டமாடும் ஆட்டங்களும் பரதநாட்டிய மாதர்கள் வெட்கமுறும்படி யாயிருக்கவும், இந்தப்படி கற்பகப்பூமாலையணிந்த பொற்பிரகாசப்பொன் னுலகிற்சிறந்த தேவேந்திரகுமாரனுகிய பார்த்தன் ஆர்ச்துப்பாரிடநின்றாடும் போர்க்களத்தில் யாளிக்கும் சிங்கத்திற்கும் யானைக்கும் புலிக்கும் நிகராகிய வேந்தர்முதலாகிய வீரர்களை, கூளிக்கும் ஞாளிக்கும் காக்கைக்கும் நரிக்கும் குழுவாகிய கழுவுக்கும் பருந்துக்கும் குறைவில்லாத தன்கைவாளிக்கும் விருந்தாக்கி தேவர்கள்கண்களிக்கும்படி விசயலட்சுமியைத் திருமணங் கண்டருளினுன். வீரப்பிரதாபதீரகாண்டீப மோக யோக வைபோக தியாக விசயமகாராசன், செலுத்திய வெந்தழற்கணைகளுக்கு யாவரும் பஞ்சு போற்பறந்து, அஞ்சிப் பல்லைக்காட்டிக்கெஞ்சி எஞ்சிப்போனுர்கள், சிலர் சண் டையைத்துறந்தார்கள், பலர்மண்டைகிழிந்து இறந்தார்கள், சிலர்முகம்விட்ட வாறே ஓடினுர்கள், பலர் மூச்சுத்திணறிவாடினுர்கள். இவ்வாறுனநிலையைச் சவ்வியசாசிகண்டு வெவ்வியசைகயுடன் வெகுண்டு ஆபத்திறுலோடுகின்றவர் களைப் பாவத்திற்குப்பயப்படாமற்புரச்தி விடாதைவிடாதையென்று வெருட் டினுன். இதுவுமல்லாமல், திரிதராட்டிரகுமாரராகிய துரியோதனன், துச்சா தனன், சிந்துராசமைந்தன் சௌபலராசகுமாரன், குந்திதேவி முதற்பிள்ளை யான சூரியதநயன்; இவர்முதலாகிய வெற்றிவீரர்கள்யாவரும், திசைமயங்கி மதிமயங்கி நிலைகலங்கித் தலைகுலுங்கிப்போகும்படியாய்ச் செந்தீக்கணைகளை முன்னும் பின்னுமுடுக்கித் தேரூர்ந்தசாரதியாகிய உத்தரகுமாரனும் நடுங்கிப் போம்படியாய் ஒருவிந்தைவிளைத்தான், (அந்தவிந்தை யெந்தவிதமென்னில்) கைப்பிடித்த காண்டீபத்தை நாணிதளர்த்தித் தோள்புறமாட்டிய அம்பறாத் தூணியைநீக்கி விரச்சாடு கரச்சாடு முன்கைத்தோற்கட்டு பின்கைத்தோற் கட்டுமுதலிய கவசமுங்களைந்து இரதத்தின்மீதுவைத்து அஸ்வசஞ்சீவிமந்தி ரத்தாற் குதிரைகளைத்தேற்றிச் சாரதியின்சலிப்பையுமாற்றி தனதாசிரிய ரைப்போற்றி இன்னமும் பகைவர் ஒன்றுகூடிவருவார்களாகில் மெத்தவுநேத் தியென்று பூர்த்தியான தன்சரீரவருத்தந்தீர்த்து முகம்வேர்த்து நின்றுன். அத்தருணத்தில் உத்தரகுமாரனும் தேர்விட்டிழிந்து, குதிரைக்கடிவாளத் தைக் குற்றுக்காலுடன்சேர்த்துக் குதிரைநடத்துங்கோலையுங் கையிலணியுங் கவசமாந்தோலையும் தேர்மேல்வைத்துக்கட்டி குதிரைகளைத் தடவித்தட்டி அருச்சுனராசனைக்கிட்டி மாடுபிடிசண்டைநடந்த மகத்துவத்தையும் இனி மேல் நடக்கவேண்டிய மார்க்கத்தையும் பேசிக்கொண்டிருந்தான். இப்பால்

பச்சைநிறம்படைத்த பார்த்தனுடன் கொச்சைப்போர்புரிந்துலெச்சைக்கெட்டழிந்து, அடிபட்டோடியவர்களின் செயலைச்சொல்லுகின்றேன் கேளுஞ் செனமேசெயமகாராசனே யென்று வைசம்பாயனர் சொல்லிவந்தார்.

இவ்விதமாக ஒவ்வுதலில்லாச் செவ்வையதான சவ்வியசாசிபௌவமாம் படையில் அவ்வவர்மீதில் கௌவுமம்பேவி எவ்வமாகென்று, வின்னூட்டிவிழுத்து விடுத்தான்; திவ்வியபாணம் தெவ்வர்களுடைய கொவ்வியபிடரியைக் குறைத்தழித்தொழிந்தகௌரவக்குலமகன்கண்டு செவ்வியகண்கள்செவ்வரக்கினும்செவந்துநாப்புரண்டுலர்ந்து தீப்பொறிமலிந்துநாடாதுநாடிவாடாதுவாடி க்ஷாத்திரத்தால்முனைந்துநான் இந்தநரனுடன் சண்டைவிளைத்து நலிந்துமெலிந்துதறிந்துமுறிந்து இறந்துபோனாலும்போவதேயல்லாதுஇவனால் என்படைகெட்டுஇவ்வளவுஅவமானப்பட்டு அத்தினாபுரிமட்டும் போய்ச் சேரமாட்டேனென்றுநடநடவென்று பற்கடித்து மடமடவென்று விற்பிடித்து பளபளவென்று தோளடித்துக் கிடுகிடுவென்னக்கர்ச்சித்து தடதடவென்றோடித் தேரேறிகடகடவென் றுருளைகளோடப்புரவிசெலுத்தி;படபடவென்று அரவக்கொடி நீட ஆண்மைப்பேயாட அஞ்ஞானமேலாட அருவினையூடாட மராடகர்னூடர்முதலிய மன்னவர் சூழப்படாடம்பங்காட்டி வந்தான். அப்படி வராநின்ற துரியோதன மகாராசனைக் கர்ணன்பார்த்துக்கடுங்கோபங்கொண்டார்த்து (தம்பி) நானுயிருடனிருக்கும்போது நீ சண்டைக்குப்போகவேண்டுமோ நில்லு நில்லுமென்று தடுத்து தன்னுடைய தேரை முன்னதாகவிடுத்து மன்னவன் இரதத்தைப் பின்னுறவமைத்தான் அன்னகாலையில் பொன்னணிபூண்ட துரியோதனன் தம்பிமார்களும் பூபாலர்முதலிய பேர்களும் மின்னெனவெழுந்து கன்னனுடன்கலந்து முனைந்தார்கள் வீஷ்டுமாசாரியர் துரோணாசாரியர் கிருபாசாரியர் அசுவத்தாமாமுதலிய நால்வரும் துரியோதனனுடைய மனோபாவமறிந்து தவறு பேசாமற்றவிர்ந்து போனவருடனேர்ந்து புகுந்தார்கள்; மகமேருவுக்கொப்பாகிய அத்தினபுரியென்னும் வெற்பியானை மேற்கொண்டு அருச்சுனன் சண்டையையிப்போது அமராடிப் பொடியாக்குவேன். தப்பாது எப்போதும் எங்கள் பெருமைக்கொப்பேது பாருங்களென்று விண்டலமுதலாகிய மேகங்களும் எண்டிசைதாங்கிய நாகங்களும் மண்டலமுதலாகிய அண்டங்களும் விண்டுதிர்ந்துபோம் என்னத்தக்கதாய் இற்றைப்போரில் வெற்றிபெறுவானென்று கொற்றவர்பலரும் மற்றவரொவருங் குறித்துக் கொண்டாடும்படியாய் விகர்ணனென்னுங்காளை செண்டெனவெழுந்து திரண்டசேனையுடன் வந்துகலந்தான் இதல்லாமலும் பார்த்தன் பாணத்திற்குப்பயந்து போர்க்களம் விட்டுப்பிரிந்து பெண்டுபிள்ளைகள் மேற்பரிந்து பல பக்கங்களிலும் இரிந்து காடியோடித்திரிந்து வயிறெரிந்துபோன மகாரதர்முதலிய பேர்கள் நஞ்சேர்ந்து எமதர்மராசன்மேல் எதிர்க்கின்ற உயிர்வகைக்கூட்டம்போலத் திரும்பினார்கள்,நான்குபடைகளும் அதிரதர் மகாரதர்சமரதர்அர்த்தரதர்முதலிய வீராதிவீரர்களும் பொருந்தி பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயம் இவ்வைம்பெரும்பூதமும் கலங்கும்படியாய் ஆதிசேடனுடைய பணமகுடங்குலுங்கும்படியாய்த்துணிந்து திடதைரியதீரத்துடன் இளைப்பாறிக்கொண்டு தனித்து நின்று

சாரதியுடன் பேசிச்சண்டை வென்றுநின்ற தனஞ்செயச்சிங்கத்தைத் தட்டி
யெழுப்பிவளைத்தார்கள். சற்றுநேரத்திற்கு முன்னே தனஞ்சயனாற் பட்ட
பாடுங் கெட்டகேடும் அத்திரந்துளைத்தநோயும் பச்சையுதிரம் ஓடிவரும் புண்
வாயும் காயுமுன்னமே ஆயும்அறிவினர் ஆயாசம்பாராமல் போர்புரியப்புகுந்து
அத்திர சத்திர ஆயுதங்களை விஸ்தாரமாகவிடுத்து அடுத்தார்கள். அவ்வவர்
தொடுக்கும் அம்புக்கும்புகளைக்கண்டு இரதத்தின் மேற்கொண்டு எதிர்வந்
தபேர்கள் பிதுர்கலங்கிப் போகும்படி விசயகாண்டீபம் வளைத்து நாணை
லிவிளைத்து முளைத்த முழுமதிபோல் மதர்த்துநின்றான் நாயகனாகியநரன்
தேரோறுமுன்னமே வாரோறுதனச் சுதக்கணைமைந்தனாகிய உத்தரகுமார
னென்னுஞ் சாரதி களையாறிய குதிரைகளைத் தேரிற்பூட்டிக் கலகலவென்று
ஒலிக்குஞ்சதங்கைகள் கர்க்கரத்தொனியுடன் கலந்து முழக்க முடுக்கினான்.
அருச்சுனராசன் தேர் அசைந்தாடியோடும்பொழுது மணிமுடிதரித்த மன்ன
வர் பலரும் காரிடி நீரிடி நெருப்பிடி பேரிடியென்ன நெடுநாணோசைகாட்டி
அளவுபடாத அம்புகளைச்சொரிந்தார்கள் அதுவுமல்லாமல் அக்கினிபற்றியெ
ழுகின்ற கொழு மழு தண்டாயுதம் சூலம் அங்குசம் பாசம் உலக்கை சக்கரா
யுதம் தோமரம் ஈட்டிவாங்குமுதலிய ஆயுதங்களை முக்கண்முதல்வனுக்கொப்
பான பற்குணன்மேலும் சாரதிமேலும் தேர்மேலும் குதிரைகளுடம்பிலும்
படும்படியாய் முட்கரமாய்வீசி முடுக்கினார்கள் அதன்றியும்இயானைமேலிருந்த
வர்கள் தேர்மேலமர்ந்தவர்கள் வேகமான குதிரைமேற்கொண்டவர்கள் பூமி
மேல்நின்றவர்கள் தங்கள் தங்களுக்கிஷ்டமானபடிமுனிந்து தனிப்படைகொ
ண்டு சாடினார்கள். அப்போது பூண்டயங்குந் தேரிலிருந்தவர்கள் பாண்டுபுத்
திரனாகிய பார்த்தன் ஏமந்தருதுகாலத்தில் மூடுபனியினால் மறைக்கப்பட்ட
சூரியன் போலிருந்தான். அவ்வகையாகச்சற்றுநேரம் ஒளிமழுங்கி உருத்தெரி
யாமலிருந்து உடனே யோசித்து விரைந்து தனக்கெதிர் நேரிட்ட தரியலர்
களையும் அவர்களாற்றுக்கிய சரக்கணைகளையுஞ் சட்டைபண்ணாதவனாய்ப்
பட்டங்கட்டிய முடித்தலையாட்டி பகபகநகைத்துப் பற்காட்டிய உடலுயிர்
பகைத்து நம்முடன் அடல்விளைத்துவந்த இத்தனைபேர்களும் படவதைத்து
விடவேண்டுமென்று பதறிநினைத்து மறுபடியும்பொறுத்து விசயகாண்டீபத்
தையெடுத்து நிறுத்திவளைத்து நாணேற்றி பூர்வத்தில் தனக்குத்தேவேந்திரன்
கொடுத்திருந்த இந்திராத்திரத்தையேந்தி மந்திரஞ்சொல்லி வணங்கி இந்திர
த்திக்கிலிலுந்தி எமதர்மராசனாற் பெற்ற எமாஸ்திரத்தை யெடுத்துப் பூசித்
து தென்றிசையிலமைத்து; வருணாஸ்திரத்தை வணங்கி வழங்கி மேற்குத்திக்
கிலிருத்தி குபேராஸ்திரத்தைக் கைக்கொண்டு கும்பிட்டுப் பணிந்து வடக்கு
த்திக்கில் விடுத்து இந்திரன் முதலிய ஈசானதேவனையுந் துதித்து நான்குதிக்
கிலும் பாங்குடனிறுத்தி நாணிதளர்த்திய காண்டீபத்தையும் அம்பறாத்தூணி
யையும் இரதத்தின்மேல் வைத்துப்போட்டு இப்பால் நடக்கின்ற விந்தையான
வேடிக்கைகளைப், பார்த்துக்கொண்டிருந்தான்.

இப்படியாகத் தருக்குடன் செருக்கின்ற தனஞ்சயனையும் அவனாலே
விய சாயகங்களையும் அந்தச்சரங்கள் தங்களைத் தடைப்படுத்துகின்ற தந்திர

ங்களையும் தநுர்வேதமந்திரசுதந்தரங்களையும் தெரிந்துகொள்ளமாட்டாதவர்களாய், பண்டாட்டமாவதே கொண்டாட்டமென்னக்குறித்து, சத்தமேகமெழுவதுபோற்கவிந்து, மின்னலிடியும் வில்லிட்டவாறுபோல்முழக்கி விற்பிடித்து; கல்மழைபொழியுங் காட்சிபோல் அத்திரங்களைச்சொரிந்து வேண்டியமட்டும் பரிந்து சலிப்பில்லாமற் பாடுபட்டார்கள். இவ்வாறு தம்மாற்கூடியவளவிலும்தாழ்ச்சியில்லாமல் முடுக்கிப்பிரயோகித்த சரங்களையெல்லாம் அப்பாலிப்பாற் செல்லவொட்டாமலடக்கி அருச்சுனன்மேல் போகவொட்டாமல்மடக்கி அப்பாணத்தின் வேகத்தையும் அடக்கி ஆவெனத்திறந்த வாயால்விழுங்கி முறுக்கி வாரியடித்து நொறுக்கித் தாறு மாறு வேறு கூறு வாறு செய்யுந்தன்மையை, மந்தரமலைபோலுயர்ந்த தோளினையுடைய வீட்டுமர் துரோணர் கிருபர் அசுவத்தாமாமுதலியசார்ந்தரும் துரியோதனன்முதலாகிய வேந்தரும் மகாரதர்முதலிய மாந்தரும்பார்த்துத்தலைகவிழ்ந்து குனிந்து மதிமயங்கி முனிந்து மனந்தியங்கினைந்து, ஐயோ! இவ்வருச்சுனனால் முன்னமே அடிபட்டு இடைந்தோமே அந்தத்தெப்பலுடன்போய்விடாமல் திரும்பியெதிர்த்துஅவன் தெப்பலுக்குள்ளானோமே, ஓகோகோ! வெகுநாளைக்கு நிலைநிற்கும்படியான அபகீர்த்தியையடைந்தோமே! இதுவரையிலும் நாம்பெற்றிருந்தசுபகீர்த்தியுமிழந்தோமே, வீணாகவேசாறிநொந்தோமே பூணாரம்பெற்ற புரந்தரன்மைந்தன் செய்வனவற்றைச்செய்து விட்டு மெய்வருத்தமில்லாமல் விலாசமுற்றிருக்கின்றானே! நாம் இதற்கென்னசெய்வோமென்று வெட்கப்பட்டு வெந்து வெதும்பி யொதுங்கிப்போயினர். இப்பால் வானத்தினின்று வேடிக்கையைக் கண்ட வானவர் மாதவர் மகிழ்ச்சிமேற்கொண்டு, மாதவிகொழுநனைமகிழ்ந்து மனமாரப்புகழ்ந்து மலர்மழைபொழிந்து வாழ்த்தினார்கள். சரசுவதிநாயகனாகிய சதுர்முகப்பிரமனோ சாட்சாத்காரமான சங்காழிமுகுந்தனுடைய தனியருளென்று சந்தோடங்கொண்டாடினான். அமராவதிக்கதிபதியாகிய தேவேந்திரன் காலகேயர்களை வென்று நமராயுளளித்த விசயன் நவநீதசோரநாதன் மைத்துனனென்று நாடிப்புகழ்ந்தாடினான். அளகாபுரிக்கிறைவனாகிய குபேரன் சந்திரசேகரசடாதரனருளால் இந்திராதிபரெவர்க்கும் முந்தியமுதற்காரணமாகிவந்தவதரித்த மரகதநிறத்தன் அருச்சுனநாமனென்றானந்தங் கொண்டாடினான். பாண்டுவும்வேண்டிய பார்த்திபர்பலரும் காண்டீவன் வெகுண்டு காண்டீவந்தன்னால் தூண்டியவேகச் சுடுசரம்பொடிக்கச் செத்தழிந்தொழிந்த சேனையும்யானையும் இத்தனைகோடியென் றியம்பப்படாமையால் புத்திரப்பேறு பெற்றனமென்று மெத்தவுமபேசிமேன்மையடைந்தனர். அமரர் சித்தர் அசுரர் தைத்தியர் கருடர் கின்னரர் கிருதர் கிம்புருடர் காந்தருவர் இயக்கர் விஞ்சையர் பூதர் பைசாசர் அந்தரர் முனிவர் உரகர் ஆகாயவாசிகள்போகபூமியர் ஏகாதசருத்திரர் துவாதசாதித்தர் அட்டவசுக்கள்முதலானவர்களியாவரும் இச்சவ்வியசாசியின் சாதுரியத்தைக் கண்களாற்கண்டு களித்துத் தங்களாலுந்தாங்கமாட்டாமல் ஓங்கியமலைக்கண்ணுவப்புற்றிருந்தனர். இவ்வாறெல்லாரும் கொண்டாடிக்கொண்டிருக்கின்ற அந்தவேளையில் வீபற்சு என்னும்பெயர்பெற்ற விசயன்மறுபடியும் வில்லையெடுத்து நாணி

தொடுத்துத் தானினைத்த காரியசித்தியாம்வண்ணம்கருதி மோகனாத்திரம்பிடித்துபூசாவிதிகள்முடித்துபிரணவமந்திரம்படித்துபிரதாபராமன்போல்விடுத்து பெரும்கும்புகள் தும்புகளெழும்படியாய்ப்பேதுற்றவாடி ஓடி அவர்கள்படும் பாட்டை யோகபுருடன்போல் நாடிப்பார்த்துக்கொண்டிருந்தனன். இங்ஙனமென்றெழுந்த மோகனாத்திரமானது தியாகம்வாங்கச்சென்ற தெரிவைபோற் சென்று பிராணத்தியாகப்பண்ணுவதற்குப் பின்வாங்காமல் முன்னோங்கி மற்போர்விளைக்கும் பற்பலவீரர்களையும் விற்பனவிவேகிகளையும் சொற்பனங் காண்பவர்போற் சோர்வுறச்செய்து மயக்கியபோது சண்டைசெய்யவந்ததிறமும் தாங்கள்புரிந்த வீரமறமும் தேகசிரமுமறத் துறந்துமறந்துமடிந்தவர் தம்மைப்போற் பூமிமேற்படிந்துபோனார்கள். இதல்லாமலும் தேர்மேலிருந்தவர் தேரின்மேலும் யானைமேல்வந்தவர் யானையின்மேலும் குதிரைவீரர்கள் குதிரைகள்மேலும் இருந்தவரிருந்தபடிபெருந்திகிலடைந்து இந்தலோகம்அந்தலோகம் எந்தலோகமோவென்று நிலைதவறித்தலையுதறிப் பொறிசிதறிப்புலன் பதறிச்சாய்ந்துவிட்டார்கள். அவர்கள் படும்பாட்டைப்பார்த்த பார்த்தனோ மனத்துக்கிசைந்த சாரதியான உத்தரகுமாரனது சித்திரமுகத்தைநோக்கிப்பரிந்து பிரயோசனமற்ற நகைபுரிந்தான், பிரயோசனமில்லாத நகை யாதென்னில், இரும்புக்குவிழுகின்ற சம்மட்டியடியானது செருப்புக்கும்விழுவதுபோல் துரியோதனன்முதலானோர்படப்போகின்ற அவமானம் ஆசாரியர் முதலிய வரும் வீஷ்மாசாரியரும் படப்போகின்றார்களேயென்று வெறுப்பினால் நகைத்த வெறுநகையென்பர். ஆதலால் சந்துருஷ்டியில்லா மனநகைத்த தனஞ்சயனானவன்விராடகுமாரனைப்பார்த்து, அப்பா! உத்தரகுமாரனே, உன் சகோதரியான உத்தரை சொல்லியசங்கதி ஞாபகத்திலுண்டோ இல்லையோ மறந்துவிட்டாயோ வெற்றிகொண்ட தன்மையால் மகிழ்ந்துவிட்டாயோ? வென்றுகேட்டான் அவ்வசனங்கேட்ட உத்தரகுமாரன் கண்களிருண்டு, மனமருண்டு, சிந்தைகலங்கித் தீரம்விலங்கித் திடுக்கிட்டலமலந்து தியங்கி ஒன்றுந்தோன்றாமல்மயங்கி உறக்கமுந் துன்பமும் ஒருவாறடைந்து இப்படிப்பட்ட மகாபுருடனுடைய அருமை பெருமைதெரியாமல் நமதுதங்கை என்ன சொன்னாளோ ஏதுகாரணமோவென்று பெருமூச்செறிந்து பற்குனனைப்பணிந்து பயம்விட்டுத்துணிந்து எனக்கிட்டதெய்வமானஏந்தலே அறியாதவளான சிறியாள் குறியாமற்பேசிய கொடுமொழியை என்னைப்பற்றி மன்னிக்கவேண்டும் மகாராசனேயென்று வாய்பொத்திக்கைகட்டி மனநடுங்கிச்சொன்னான். அவனது, அடக்கம் ஒடுக்கம் நடுக்கம் வணக்கம் முதலியவற்றைக் குறிப்பினாலுணர்ந்துக்கொண்ட நரனானவன் உத்தரகுமாரனுடையமுதுகைத்தட்டி மற்றொன்றுமன்று, நீ வாய்வறளாதை மனந்தளராதை மதிபுரளாதை வல்லவனே! இப்போது நான்செலுத்திய மோகனக்கணையால் அயர்ந்துவிழுந்த யாவரும் இன்னமொருநாழிகைக்குள்ளாக மயக்கநீங்கி யெழுந்திருப்பார்கள், இதற்கு முன் நீ அவர்களிடத்துக்குப்போய் அவர்கள் கிரீடத்தில் சாம்பிரதாயமாய்க் கட்டிக்கொண்டிருக்கின்ற துஸ்தரவத்திரங்களையும், விருதுகருதித்தொடுத்த இரதச்சீலைகளையும் பக்குவமாய்ப்பறித்துவருவையானால், உன்தங்கைகேட்டுக்

கொண்டவண்ணம் பொம்மைகட்கணிந்து விளையாடக்கொடுக்கலாமென்று புகன்ற அருச்சுனன்வார்த்தையை உத்தரன் பத்தரைமாற்றுப் பசும்பொன்போல் சித்தமுவந்துதேர்ந்து சிந்தைதெளிந்து செயமென்றெழுந்து சீக்கிரஞ்செல்கின்ற உத்தரகுமாரனை, பராக்கிரமக்கொடிபடைத்த பார்த்தனழைத்து விராடகுமாரனே! அரசருக்கரசனாகிய துரியோதனமகாராசனணிந்திருக்கும் கறுத்தமணிகள் பொறுத்த நிறத்தையுடையன, அசுவத்தாமாமுதலியவரும் துச்சாதனனும்தரித்திருக்கும் வத்திரம் நீலமணிகளழுத்தியகோலத்தையுடையன, கொடையாளனாகிய கர்ணராசனது சிரோவத்திரமானது நாற்புறமும் நவமணிபதித்து மரகதநிறத்தைமாற்றியிருப்பது, மநுவேதமறிந்ததநுர்வேதியரிருவருந்தரித்தகலையானது சுற்றுமுத்து வைத்ததொத்த குற்றமற்ற வெண்பட்டாற்சமைந்தது, இன்னமுள்ளமன்னவர் துணிகள் பலநிறவன்னமாயிருக்கும். அன்னவைகளில் உன்கண்ணுக்கிசைந்தன வெல்லாங்கட்டிக்கொண்டு வந்துவிடு, அப்படிக்குவருகையில்; எங்களையாவாகிய வீஷ்மரிடத்துக்குப் போகாதை, அவரது தலைவெட்டியானது மெத்த சிறந்திருக்கும், அதன்மேலாசைவையாதே அவரிந்த மோகனாத்திரமயக்கத்தில், மூழ்கமாட்டாரோ, நீயொருவேளை அவரைக்கிட்டிப்போவையாகில் ஓரேவெட்டாய் வெட்டியெறிவாரே! ஆகையாலவரை யெட்டிப்பாராதை. மற்றையர்களிடத்தில் தாராளமாகச்சென்று அவரவர்களுடைய தலைத்துணியைக்கைக்கொண்டு, விரைவில் வந்துவிடென்று பின்னுஞ்சொல்லுகின்றான். உத்தரனே, நீ கால்நடையாகச்செல்லாதை, அவர்கள் படும்பாட்டைக்கண்டு, ஒன்றுஞ்சொல்லாதே, கண்மூடிக்கலங்கிக்கசங்கிக்கிடப்பவரைக்கொல்லாதே அவர்களுன்னைக்கண்டுவிட்டால் ஐயோ! அதுபொல்லாதேநீயவ்விடங்களில் தாமசப்பட்டுநில்லாதை நமது தேரைச்செலுத்திக்கொண்டு, போய்ச்சீக்கிரத்தில்வரக்கடவாயென்று காண்டீவன்சொல்ல அவ்வண்ணஞ்செய்வேனென்று இரதமூர்ந்துசென்று அவரவர்கள் கால்மாடு தலைமாடாகவிழுந்து உறங்கிக்கிடக்கின்ற கலக்கத்தைக் கண்டு, அவரவர்களுடைய தலைத்துணியைக் கவர்ந்துகொள்ளும்படியே பாய்ந்து பாய்ந்து பறிக்கும்போது மாய்ந்தவர்தம்மைப்போற் சாய்ந்துகிடக்கின்ற வேந்தர்களெல்லாம் மூடியகண் திறவாமலிருந்தார்கள். சிலரோ விழித்தபார்வையுடன் விறைத்தாப்போலிருந்தார்கள்; ஆவெனத்திறந்தவாயர்கள்சிலர், கூவெனக்குறைந்த பேயர்கள்சிலபேர், ஊவெனவோசையிட்டுளறினோர்பலபேர், நாக்கைக்குழப்பி நவித்தோர்பலபேர், வாக்குக்குளறி வலிப்போர்சிலபேர், நழுவாமற்பிடித்த மழுவாயுதத்துடன் விழுவார்பலர், எழுவார்பலபேர் கால்தவறிமண்ணைக்கவ்வுவோர்சிலபேர், மேல்சுவறியொத்த வெறியாஞ்சிலபேர், இல்லாமலும் கைகாலசைவது குறியாமலும் மெய்சாய்வதில் உயிர்பிரியாமலும் வாயில் ஈப்புகுவதுந்தெரியாமலும் நோயில்நீப்படுவது தரியாமலும் பல்லைப்பல்லைக்காட்டிப் பரதவித்து வில்லைகாட்டிப் பலவகைச்சாலமாய்தலைவிரிகோலமாய்ப்பதைத்திருந்தார்கள், இப்படியாயிருந்தவர்களைப் பார்த்த உத்தரகுமாரன் ஐயமடைந்து பையநடந்து என்செய்வோமென்று அருச்சுனன்சொன்ன சைகையையுமறந்து அவனது ஆதரவையும் போதாவை

யும் பூரணமாகினேத்து கையுங்காலும் மெய்யும்வாயும் கடகடவென்றுகுலுங்கி நடுங்கிப்படபடவென்று அலமந்தே யொடுங்கி பேய்போற்பதறி முடங்கி பேய்மனம்பெதறியடங்கி பின்னுமுன்னும்போகத்தொடங்கி விட்டுமிருந்த நிலையைப்போய்ப்பார்த்தான், அந்தமெய்விரதசீலராகிய வீஷ்மரானவர் கண்ணையுருட்டிக்காட்டி விழித்து வீரப்பார்வை நாட்டியிருந்தார், அவரைக்கண்ட மாத்திரத்தில் ஒருதரம்வேர்த்தும் பயங்கரத்துடனார்த்து நாற்புறமும்பார்த்துச்சித்திரச்சிலைவிசயனைச்சிந்தித்துத் திடதிரத்துடன் கனைத்துவந்தகாரியந்தைநினைத்துவந்திராமல்மிக்கத்தனித்துக்கிரீடியுரைத்த உத்திரத்திற்கு துஸ்தரமாகிய துட்டத்தனஞ்செய்யப்படாதென்று மதித்து வெற்றிவீரர்களின், பட்டுத்துணிகளை விட்டுவிடாமற்பெருட்டுப்பறித்துப்பெருமூட்டைகட்டித்தேர்மேலேற்றிக் கார்போலிரைந்து வாராடுங்குதிரைத்தேரோடவந்தான். இந்தப்படியே அச்சமில்லாமற்சென்று மச்சராசன்மைந்தன் கொண்டுவந்த துணிமூட்டையைப் பச்சைமேனிப்பார்த்தனங்கண்டு, கொண்டாடி மகிழ்ச்சியடைந்து புகழ்ச்சியாய்ப்பார்த்திருக்கும்போது, அருச்சுனன் கணையால் அடிபட்டு நொந்து மேனிமுழுவதும் வெஷ்டையாலம்பலிந்து போகனைக்கணையாலுமுணர்வு கெட்டழிந்து வில்முதலிய பாணமுமபெலந்து வெறுங்கையராய்த்தளர்ந்து முடிசாய்ந்துவிட்ட கெடிவீரவர்க்கமும மறுயாருமன்னரும பார்த்திபன்படைகளும் கொஞ்சங்கொஞ்சமாய்க் கலக்கம்பிறந்து நஞ்சொழிந்த நாகம்போல் நெளிந்து தங்களைத்தாங்களேயறிந்து தலைக்கேறிய மயக்கந்தெளிந்து தத்தித் தடுமாறிச்செறிந்து மெத்தனவெழுந்துபித்தன்போல்விழுந்து செத்தவர்போற்கிடந்து எக்காலுநீங்காத துக்கமுந்துயரமும் வெட்கமும் நாணமும் விசனமும் மேலிட ஏதேது இனிதலையெடுக்கப் போவதில்லையென்று சொல்லும்படி இருந்தார்கள். இப்படிப்பட்ட விசனத்தினுல் பிப்பிரமைகொண்டிருந்தவர்கள் சுப்பிரதீபம்போன்ற அருச்சுனனை யெண்ணிமதித்து அற்புதமடைந்து அவனுக் கெதிர்வரமாட்டாமல் சிவனுக்கெதிர்செல்ல நாணும் திரிபுராதிகளைப்போற் கனமற்றவர்களாய்த் திகிலடைந்த மனமுற்றவர்களாய் வறண்டு போனநெஞ்சும்நாக்கும்சுருண்டுபோன ஈரலுங்குடலும் துன்பப்படாமல்கனையச்செய்து இச்சையுடன் காக்குங்கருணைக்கடலாகிய கங்காபுத்திரனை நோக்கி எங்கோனேஇதற்கென்செய்வோமென்றுஏங்கியகாலையில் அதற்கிடங்கொடாதமாணியாம் விரதன் எப்புவனத்தும் ஒப்பில்லாத மற்புயவல்லவனாகிய சுயோதன பாக்கியவானுக் கெதிர்சென்று நின்று யோக்கியவானே! என்னொரு வாக்கியங்கேளென்று பேசத்தொடங்கினர், அப்பா துரியோதனா! இடபதைத்து பதறிப்போயெதிர்த்து யுத்தஞ்செய்வதற்கு தேவர்களாலும் தெய்வத்தன்மைபெற்ற மூவர்களாலும் ஆகாது, மற்றெவர்கட்கும் வெற்றிபெறும் விதக்காட்சியும் யுத்தஞ்செய்யுந் திடசூழ்ச்சியும் வாராது இதிவ்வாறிருக்கின்றமையால் இனிமேல் யுத்தகளநாடி வெற்றிப் போர்புரிவோமென்று என்றென்றைக்கும் எண்ணவேண்டாம், ஒருவேளை கிரகசாரசாமானியத்தால் சண்டைபோடக் கருதுவீராகில் மெய்பாகவே பிராணன் பெறமாட்டீர்கள். அதென்னவெனில், அவனுந்திய மோகனாத்திரத்தால் நாமெல்லாரும் உயிர்பிழைத்திபவாறு

போலயர்ந்து தலைசாய்ந்துகிடந்த சமயத்தில் ஏதோ ஒருநினைவுகொண்டு தன் சாரதியையனுப்பி அவர்தலையை விரைவிற்கொண்டுவாவென்றுவிட்டால் அச்சொல்லுக் கிரண்டில்லாமல் இதுவரையில் நமதுபிராணன் போயிருக்கலாம், இதற்குச் சாட்சியாதென்னில்;சற்றுநேரத்திற்குமுன்னே செத்தவர்போ லொடுங்கிக்கிடந்தநம்மைச்சுற்றிப்பார்த்து வரும்படியாகஉத்தரகுமாரனையனுப்பித் தனக்குவேண்டியவற்றைச் சுற்றிக்கொண்டுபோனான்; அதற்குத்திருட்டாந்தம் உங்களுங்கள் தலைகளையெல்லாம் தடவிப்பாருங்களென்றார், அப்போது தங்கள் தங்கள் தலையைத்தடவிப் பார்த்ததுமல்லாமல் ஒருவர்தலையை யொருவர்பார்த்து உன்தலைத்துணியெங்கே என்தலைத்துணி யெங்கேயென்று பெருங்கூச்சலிட்டு ஐயையோ! தலைத்துணியைக் கொண்டுபோன சாதுரியனுக்கு நமது தலையைத்தறித்துக்கொண்டு போவது தாட்சியா? ஓகோகோ! சுளுவில் முடித்துக்கொள்ளலாமே! அம்மட்டும் நம்மைச்சும்மா விட்டுப்போனது நமது பெண்சாதிமார்களின் மாங்கல்யபலமேயென்று மகிழ்ந்து வீஷ்மரைப்புகழ்ந்து தேவரீர் சொன்னவார்த்தைக்கு மாறுபாடில்லையென்றார்கள். அப்போது வீஷ்மர் இப்படியே யென்சொல்வழிநிற்பீர்களாகில் நாமெல்லோருஞ்சௌக்கியம்பெறலாம். அதெப்படியென்னில், கடல்நிறம்பெற்ற காண்டீவனே பிராணபிட்சை கொடுத்தானென்று உரக்கக்கூவி அவனுக்கு மங்களாகரமுண்டாகும்படியேவாழ்த்தி நம்முடைய படைமுழக்கத்தைத்தாழ்த்தி அத்தினபுரத்தை நோக்கிப்போவமே நெத்தியென்று சொன்னார். ✗ இவ்வகையாக மாதவத்திலுயர்ந்த வரதன் கூறக்கேட்ட மன்னன்முதலிய தம்பியர் பலரும் கன்னன்முதலிய சகுனியும் மன்னரும் சத்தியஞ்சத்தியமென்று திரும்பி பாகீரதி புத்திரனுரைத்த புத்தியை விரும்பிப்போனார்கள். அத்தருணத்தில்அரவக்கொடிக்கதிபனாகிய துரியோதனனுடைய சகோதரர்களில் விகர்ணராசனென்பவன் பட்டத்துயானைமேலேறி தன்தமயனைமுன்னடத்தி அவனை மறைத்துக்கொண்டு தான்பின்னாகப்போனான்;இரதகசதுரகபதாதியர்முதலிய மன்னமண்டலீகர் யாவரும் பெருங்காற்றிற்பறக்கின்ற இலவம்பஞ்சேபோல் திசாதிசைகளிலும் பறந்து முறிந்து கரத்தைச் சிரத்திற்குவித்துச் செறிந்து துரியோதனனுடன் படைகளுமுறிந்து மெய்விரதன் தம்பியான விசயனைப் புகழ்ந்து உயிர்ப்பிச்சையளித்தான் உத்தமனென்று மகிழ்ந்து ஊர்முகமா யோடினார்கள். இப்பால் அருச்சுனன்தொடுத்த பாணங்களினால் அழிந்தவரொழிய ஓடியொளித்த சேனைசயினியங்களும் துரியோதனனும் திரும்பிப்போவதை ஆண்மையாலுயர்ந்த அருச்சுனன்பார்த்து அடிவயிறெரிய ஆர்ப்பரித்து வேர்த்துக் கௌரவகுலமுதல்வனே! கீர்த்திபடைத்த சூர்த்தண்ணியனே! கெடித்தலாதிபனே! வணங்காமுடிமன்னனே! அரவக்கொடியானே நந்தியாவட்டமாலைதரித்த நரேந்திரனே! துரியோதனராசனேயென்று பற்பல முறையாகக் கூவியழைத்து தேவர்கள்முதலிய பேருந்திடுக்கிடும்படியாய்ப் பேரிடிபோலிரைந்து சிற்சிலவார்த்தைகள் பேசத்தொடங்கினான். அவனியையாளும் நேயனே பொய்பேசும்வாயனே மாயச்சூதாடக்கற்ற வஞ்சகச்சகுனிமாமனிருக்க மகாபதிவிரதைகளை ஆடையுரியக்கற்ற துச்சா

தனத்தம்பியிருக்க வாயாடக்கற்ற தேர்ப்பாகன் வளர்ப்புப்பிள்ளையாகிய கன்னனிருக்க ஊகைக்குப்போதுமான புத்தியிருக்க சத்துருக்களைவெல்லுஞ் சமர்த்திருக்க சத்தியந்தவறி வாயடிப்படிக்குஞ் சாதுரியமிருக்க இத்தனைபலமும் அபலமாம்படியாய் ஏன் ஓடுகிறாய் பூர்வம் அரசர்கள்கூடிய அத்தினாபுரத்து இராசசபையில் இரத்தினமுடிபொறுத்த உன்தலையாட உன்காதிலணிந்தகுழையாட உன்வாயிலடங்கிய நாவாரக் கட்டுரைபேசி நீவாதாடசொக்கட்டாடினட்டத்தில் எங்களைவென்று காட்டிலோட்டிவிடக்கற்ற நீ இப்போது சண்டைநேர்ந்த விடத்தில் வில்திறங்காட்டி வெற்றிபெறமாட்டாமல் தலைகவிழ்ந்து தலைத்துணியிழந்து உயிர்கொண்டுபோவது பொல்லாது இதைப்பார்க்கிலும் சாவதுமேன்மை காவலனே! யுத்தத்திற்செத்துப்போவது மெத்தவும் புகழ்ச்சியல்லவோ மானங்கெட்டபிற்பாடு பிராணனிருக்கவேண்டுமோ ஆமன்னனே! அரவக்கொடியும் அணிமணிமுடியும் வெள்ளைக்குடையும் வேண்டிய படையும் அசாத்தியமும் முரசவாத்தியமும் சங்கத்தொனியும் எங்குமுழங்கி நெருங்கும் இந்த விராடபுரத்திற்குவந்து சுத்தவீரக்கர்த்தனைப்போல் பசுமந்தைகளை மடக்கினையல்லவோ! நீடியோட்டிய மாட்டுமந்தையை எதிர்கவிடத்தில் விட்டுப்போட்டு நீ கூட்டிவந்த சேனைகளிலும் ப்டுபாதிமடியக்கொடுத்து உயிரிழந்த பிணம்போல ஊரைநோக்கிப் போகின்றனையே ஐயோ அப்பா! உன்னைக்கலந்த மங்கைமார்கள் என்னசெய்தியென்று 'எதிர்நின்று கேட்டால் அந்த உரியவர்களுக்கு என்னசொல்லப்போகிறாய், பெரியதனம் படைத்த பேயனே! அப்போர்க்கொத்த பெண்களுக்கெதிரில் நாணாமல் தலைகோணாமல் மானம்விட்டு நடப்பாயோ? அடாபாவி இப்போது நீயாளும்பூமியையும் உன்னுயிரையும் தீங்கில்லாமல் வாங்குவதற்கு என்தமயன் வீமசேனன் காத்திருக்கின்றானென்றெண்ணிஇன்றைக்குன்றனைக் கொன்றுவிடாமல் வென்றிமாத்திரங்கொண்டேன், இதன்றியும் பொதுமையாக உன்பிராணனையும்விட்டேன், இல்லாவிட்டால் நீயும் உன்னைச்சார்ந்த படையன்னைரும் எனக்கு இலட்சியமென்றும் அலட்சியமென்றும் உனக்கு விலட்சணமாகத்தெரியுமே! குலட்சயம்பண்ணப்பிறந்த கோமானேயென்று வெகுண்டு நிந்தையாகிய வார்த்தைபுகன்று கிட்டுரம்பேசிய காலையில்இராசாதிராசன் அருச்சுனன்சொன்ன மொழியைக்கேட்டுங் கேளாதசெவிடனைப்போல் இருதோளும்வாடிப் பூரிப்படங்கித்துன்ப இருளால் மூடப்பட்டுஆமைபோலடங்கிஊமைபோற்போனான். அச்சமயத்தில் பச்சைநிறம்பெற்ற பற்குனனே வச்சிரக்கண்டவாளியொன்றேவிவிகர்ணனேறிச்சென்ற வீரபட்டயானையை வெட்டிமுடக்கித்துரியோதனன் வெட்டவெளியாய்த்தெரியமடக்கிப் பரியவில்லிற்கூரியமுனைப்பகழியடுக்கி அரவக்கொடிதரித்த துரியோதனனுடைய வணங்காமுடியிற்பொறுத்த கிரீடத்தையுடைத்து முடிக்கி மொட்டைத்தலையுடனிருந்த துட்டனைப் பார்த்துபொட்டென நகைத்தான்; அதுகாலையில்தாமரைக்கமலம்போலலர்ந்த துரியோதனனுடைய முகங்குவிந்து கரிந்து பொரிந்து செறிந்த கண்கலக்க முள்ளவனாய் ஓட்டத்தின்மேல் நாட்டம்வைத்துப்போனான். இவ்வண்ணம் பொல்லாங்குக் கிருப்பிடமான வஞ்சநெஞ்சனைச்சேர்ந்த பூபாலர்களும் கோ

பாலர்களும் யுத்தமுனைகெட்டுப் புறமுதுகிட்டுப்போராசைவிட்டுப் பேராசை கெட்டுப்போகுங்காலையில் கற்பகக்காவைப்போக்கபணியும் பிராணதானவார்க்கும் ஈகையும் பிரக்யாதிபெற்ற வாகையுமுடைத்தால் தேர்மீதிருந்த செஞ்சிலைவிசயன்மச்சகுலாதிபன் முகத்தைப்பார்த்துச்சித்தசனுக்கொப்பாகிய உத்தரகுமாரனே! நமது மச்சதேசத்திலுள்ள மாட்டைமடக்கி யோட்டிக்கொண்டுபோகவந்த வேந்தன்முதலாகிய வீரர்களியாவரும் யுத்தம்பண்ணி நம்மை வெல்லத் துவசமற்றவர்களாய்ச் செத்தவர்போக மற்றவர்கள் மெத்தநொந்து சித்தநைந்து உயிர்மாத் திரங்கொண்டுபோகின்றார்கள் நமதுகாரியஞ் செயமாய்விட்டது,இம்மட்டும் இவர்களை விட்டுவிடாமல் இன்னமும் மேல்விழுந்து தொடர்ந்து துரத்தியடிப்போமா; அவர்கள் கெட்டார்கள் பஞ்சைகளென்றுவிட்டு பெரியமனசுபண்ணி விராடபுரத்திற்குப்போவோமா இன்னுஞ் சற்றுநேரம் இவ்விடத்திற்றானே யிருப்போமா உன்கருத்தென்ன சீக்கிரந் திருத்தமாகச்சொல்லுமென்று கேட்க விராடகுமாரன் பேசத்தொடங்கினன்.

வீரியவிசயவெவ்வேலவனே! சீரியமதிகுலச் செஞ்சேவகனே! நின்திருவடிக்கடைக்கலம் காரியங்குறியாக் கடையேன்சிறியேன்! பெரியயுத்தம் பண்ணியானறியேன்! ஆயினுமையா அவர்களெல்லோரும் செத்தபிணத்தோடொத்தபிணம்போல் தத்துவங்கெட்டுத் தளர்ந்தோடினர். இளைத்தோடுகின்றவர்கள்பேரில் கணைதொடுப்பீராகில் தேவரீர் இதுவரையில் பெற்றிருந்த புகழ்ச்சி யிகழ்ச்சியாய்விடும். மேலும், இன்னம் ஆகவேண்டியகாரியம் பின்னிட்டிருப்பதால் அப்போதுபார்த்துக்கொள்ளலாம்;நாமிப்போது விராடபுரம் போய்ச்சேர்வோம். பலஞ்சுரந்து பொங்குந்தோளிணையுடைய பார்த்திபனே யென்று சாரதிசொன்னன். இவ்வாறு உத்தரகுமாரனுரைத்த விடையைப் பார்த்தனுற்றுக்கேட்டு, உத்தரதிசையைவிட்டு மீண்டு களித்து, வின்னாணி தளர்த்தி அம்பறாத்தூணியுமவிழ்த்துத் தேர்மேலிருத்தி அப்பா! உத்தரகுமாரனே இளைத்தவர்களைத் தொடரப்படாதென்னும் என்னெண்ணப்படியே நீயுஞ்சொற்றனை நம்மிருவர்மனமும் ஒருமையானதே பெருமை! இன்னும் யுத்தகோலங்கொண்டு, புறப்படும்போது, உன்னைப்பெற்றதாயாகிய சுதட்சணாதேவியானவள் மிகுந்த விசன மடைந்திருந்தாள்; இன்னமும் எப்படியோவென்று எதிர்பார்த்துக்கொண்டிருப்பாள். ஆகையால்; நாம் இவ்விடத்தில் வந்தபகைவர்களைவென்று ஒன்பதுகோடி பசுக்கூட்டங்களை மீட்டு வனத்திலனுப்பிவைத்த சங்கதிகளை நாமே நேரிற்போய்ச்சொல்லி அவள் மனக்கவலையை ஆற்றவேண்டுமென்று தேவர்கள் மதித்துக்கொடுத்திருந்த தேவதத்தத்தையெடுத்து, உலகமயங்கும்படியாக முழக்கினன். அந்தச்சங்கத்தொனியைக்கேட்டு வீஷ்மாசாரியர் துரோணாசாரியர் கிருபாசாரியர் அசுவத்தாமாமுதலானோர்களும் பார்த்தன் பின்தொடர்ந்து, ஆர்த்துவருகின்றானோ என்னவோவென்னும் பயத்தால் திரும்பித்திரும்பிப்பார்த்தார்கள். அவ்வாறு பயந்து பார்க்கின்றவர்களை அருச்சுனனும் பார்த்து, தேர்விட்டிறங்கித் தகுதியுடைய பெரியோர்களைத் தலைவணங்கிப் பணிந்து, மீண்டுந்தேரேறி யிருந்த சந்தோடத்துடன் உத்தரகுமாரன் விடுத்த இரதத்தின்மேற்சென்றான்.

இப்பால் கடல்சூழ்ந்த உலகைப்பரித்தஅரவக்கொடிதரித்த துரியோதனமகாராசன் அணிந்திருந்த அழகிய நவமணிமுடியும் ஒளிவிடுமிரத்தினாபரணங்களும் அதுலசங்கிராமசயவிசயனது அத்திரங்களினால் அறுப்புண்டு, பிளப்புண்டு, தள்ளுண்டு, கீழ்த்திசையிற்றோன்றிய சூரியகிரணங்களால் மேற்றிசையிற்றோன்றிய சந்திரன்போல் ஒளிமழுங்கி இன்னமும் வரவரக்கண்டறிவோமென்று ஏக்கங்கொண்டு, எட்டுத் திக்கும்பரவிய சேனைகளுடன் பட்டப்பகலிற் பட்டணம்போகமாட்டாமல் வெட்கப்பட்டு, அத்தினபுரத்திலுள்ள யாவரும் நித்திரைபோனபிற்பாடு, ஆட்டபாட்டங்களடங்கி, கோட்டைமதிலைவளைந்த இராசபாட்டையிற்புகுந்து, ஓட்டமுநடையுமாய் ஊர்போய்ச்சேர்ந்தான். பெரியோர்முதலிய உரியோர்களும் அர்த்தராத்திரியிற்பேய்போற்போனார்கள்; இவர்களிப்படியிருக்க, மாடுபிடிசண்டையைவென்று ஆடுகொடியுடன்றிரும்பிய அருச்சுனராசன் பேடுபடுபாலைநிலத்தில் காடுபடவடர்ந்துநீடியவன்னிமரத்தைச்சார்ந்து, அம்மரப்பொந்தில் முன்னிருந்த வண்ணம்ஆபரணவலங்காரமுடியும் அனுமக்கொடியும் தேவதத்தமும் வில்லும் அம்பறாத்தூணியும்வைத்துப் பழயபடியேமான்றோலிட்டிறுக்கிஉத்தரகுமாரனையுமிறக்கிமுச்சகங்கொண்டாடாநின்ற முன்னழகையும் பின்னழகையுமாற்றி இனிமேல்நடக்கவேண்டியமுறைமைகளையுந்திறமைகளையும் ஆராய்ந்து பழையபடிபேடியுருவைவிளைத்து, வாழ்வில்லாதவடிவமுமமைந்து, பொன்மயமானதேரில்உத்தரகுமாரனது, சிங்கக்கொடியைநாட்டிக் குதிரைக்கயிறுங்கோலுந்தாங்கிச்சாரதியாகிச் சயிந்தவமுந்தினான். முந்தியதேகமுகத்திற் குந்தியபேடியுருவைக்கண்ட உத்தரகுமாரன் கோவென்றழுது, ஓவென்றிரைந்து, ஐயா! நான் மெய்யாகச்சொல்லுகின்றேன். பொய்யாமொழிப்பொறையன் சோதரா நான் செத்தாலுந்தேறமாட்டேன், இனிச்சற்றேனும் நாயகனாயிருக்கமாட்டேன், தேவரீருடையகாலடிப்புறத்திலிருக்கத்தக்காரிற் கடைப்பட்டநாயேன்கடுநாயகத்தட்டிற்பொருந்துநலம்பெறுவேனோ! ஆ! தெய்வமேயென்று சிந்தைசிந்தநொந்து நைந்து தேம்பினான். அத்தன்மையாய்க்கலங்கிய உத்தரகுமாரனைத்தேற்றி அவனது விசனத்தைமாற்றி பிரியவசனங்களினாற் பேடிபேசத்தொடங்கினான். விராடன்றவத்தால்விளைந்த நற்சுதனே! எனக்கு மூத்தவர்களும் இளையவர்களும் தங்களுடைய சுயரூபமெடுத்து வெளிப்பட்டார்களோ இன்னம் வெளிப்படவில்லையோ என்னையெதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றார்களோ அது இன்னதென்றுஎனக்குத்தெரியவில்லை; அஃதப்படியிருக்கநான்மாத்திரம் சுயரூபங்கொண்டு நடக்கலாமோ, தமையன் கருத்தைத்தள்ளிநடக்கப்போமோ அப்படியேதப்பிநடந்தால் பின்னுக்குப்பாவம் பிடிக்காமல்விட்டுவிடுமோ! தருமவிருத்தனென்னுந் தாழ்ந்தபேர் பெறுவேனன்றோ; அப்பனே உனக்குமெனக்கும் ஒருபேதமில்லை உள்ளன்பென்பது; ஒன்றுமேபோதும். என்வார்த்தைதள்ளாமல் இந்தத்தேரிலேறென்றேற்றி விற்பாணங்களும்வீரகண்டையும்பூட்டிக்குதிரைக்கயிறுகோலுந்தாங்கி தேரைச்செலுத்திச்சற்றேனுங்குந்த மனம்பொருத உத்தரகுமாரனோடு மெத்தவார்த்தையாடிக்கொண்டு, விராடநகரத்துக்கோட்டைமதிலுக்கு வடமேற்குத்திசையிற்சூழ்ந்த

குளிர்ச்சியும் பசுமையுங் கூடிக்குலாவிய செழுமையாகிய சிங்காரத்தோப்பில் வந்திறங்கித் தேகவெப்பந்தீர்த்துக்கொள்ளவேண்டிய நிலைகொண்டிருந்து, ஒருவர்க்கொருவர்பரிந்து, பாண்டவர்கள் பன்னிரண்டாண்டு வனவாசம்பண்ணிய துன்பங்களையும் ஓராண்டு அஞ்ஞாதவாசஞ்செய்வதற்காக உருவமாறிய துயரங்களையும் விராடராசனிடத்தில்தாங்கள்செய்துவந்த தொழில்வகைகளையும் வெவ்வேறாகிய மாறுபெயர்வைத்துக்கொண்ட மார்க்கங்களையும் அமுதரசம்பொழிவதேபோலஉத்தரகுமாரனுடன்சொல்லிக்கொண்டிருக்கும்வேளையில் விராடபுரத்திலிருந்து, சிலதூதர்களோடிவந்து, சேமவிசாரணைசெய்தார்கள். அந்தத்தூதர்களிடத்தில் அருச்சுனன்சொன்னதாவது; அப்பாசாரணர்களே! பேடிதேர்செலுத்தச்சென்ற உன்புத்திரனாகிய உத்தரகுமாரன் எதிர்த்துவந்த மன்னருடன் அதிர்த்துப்போர்புரிந்து, கோடிதேராளிகளையும் வென்று குப்புற்றுப்புறமிடக்கண்டு, நமது பசுநிரையைமீட்டு விட்டானென்று நீங்கள் விரைவிற்சென்று சொல்லுங்களென்று அவர்களையனுப்பிவிட்டு, கங்கைநதிபாயுங் குருநாட்டுக்கதிபதியாகிய காண்டீவன் விராடகுமாரனுடன் இன்னம்பலவாறாகப் பேசிக்கொண்டிருந்தான். இங்கே இவ்வாறிருக்க; இதற்குமுன்னைநாள் தென்றிசைக்குச்சென்ற விராடராசன் திரிகர்த்தனை வென்று, அன்றிரவுமுழுதும் தூக்கமில்லாமற் சேனைகளுடன் காவலிருந்து, மேற்படைவீரராமையால் மறுநாட்சூரியோதயமானபின்பு பந்துவர்க்கங்களும் மன்னரினங்களும் மைந்தரனைவரும் தாம்தாமென்று சங்கீதமுழங்க விராடபுரம்வந்துசேர்ந்தார்கள். வெற்றிப்பிரதாபத்தோடுஅத்துடன் மச்சநாடுவந்துசேர்ந்த விராடராசனை விடங்கலந்த வேற்கண்ணாளாகிய சுதேட்சணாதேவி இச்சைகொண்டு எதிர்சென்று கண்டு, மச்சகுலாதிபனைவணங்கி தேவரீர் தென்பால் நிரைமீட்சிக்குப் போயிருந்தகாலத்தில் வீட்டுமாசாரியர் கிருபாசாரியர் துரோணாசாரியர் அசுவத்தாமா கர்ணன் முதலாகிய துரியோதனாதியர்கள் நமது விராடபுரத்தின் வடதிசை புகுந்து வளைந்து யாட்டுமந்தையை மடக்கினார்கள், அந்தச்செய்திகேட்டு சித்திரபதுமைபோன்ற உத்தரகுமாரத்திக்கு காட்டியங்காட்டி ஆட்டிவைத்திருந்த பேடியானவள் தேர்செலுத்தவென்று தங்கள் திருமகனாகிய உத்தரகுமாரன் யுத்தகோலங்கொண்டு வெற்றிபெறப் போயிருக்கின்றானென்று விளம்பினாள்; தனது மனைவிகூறிய சங்கதியைக்கேட்ட விராடராசன் உயிரொழிந்த உடம்புபோலொடுங்கி உயிர்ப்போங்கி உருகி வீழ்ந்தான், உடனேபக்கத்திலிருந்தவர்கள் வாரியெடுத்துமார்போடணைத்துச் சீதளசந்திரகாந்தக் கிண்ணங்களிற்பொருந்திய சுண்ணங்களையும் சந்தனபாளித குங்குமக்குழம்புகளையும் பூசி பனிநீர்தெளித்து சயித்தியோபசாரஞ்செய்து சிற்றாலவட்டம்பேராலவட்டமுதலியவிசிறிகளசைத்துவிராடராசனைத்தேற்றினார்கள் எவ்விதவுபசாரங்களினாலுந் தேறாதவனாய்ச்சொன்னத்தைச்சொல்லிச் சோர்வடைகின்ற தோன்றலைப்பார்த்து என்னத்திற்கிவ்வண்ணம் வருத்தப்படுகின்றீர்; மன்னர்மன்னனே! வாரோறுந்தனைப் பேடியானவள் தேரூரும்படியாய்ச் சென்றிருப்பளாகில் இன்னஞ் சற்றுநேரத்திற் பொன்னந்தேரேறி வெற்றிபெற்று உன்மகன்வரப்போகின்றான்; அவனைக்குறித்துநீர்சித்தங்கலங்க

வேண்டாமென்று நித்தியவிதிசொல்லுகின்ற உத்தமராகிய கங்கபட்டர்சொன்னார். இப்படியாகச்சொல்லிய தருமதேவதையின் வாக்கியத்தினால் நிறைந்த பாக்கியம் பெற்றவனைப்போல் தேறித்தெளிந்து சிறப்புற்றிருந்தான்; பின்னுஞ் சற்றுநேரத்திலுன்னிக் கங்கபட்டரே, என்பாக்கியமெப்படியாமோ உமது வாக்கியமெப்படிப்போமோ நானறியேன் ஆயினும் நால்வகைப்படையுங்கொண்டு நாமே யெதிர்நோக்கிச்சென்று நம்மாலான உதவியுஞ்செய்வோமென்று நாடுகின்றேனென்று விராடராசன் விளம்பினன். அம்மொழிகேட்ட கங்கபட்டரானவர் ஐயோ! நீரப்படி துணைப்படுவீராகில் கனம்பெற்றுவருகிற உன்மகனுக்கு அவமானத்தை விளைக்குமல்லது வெகுமானத்தை விளைக்க மாட்டாதே; ஆகையால் இன்னங்கொஞ்சநேரம் நீ செவ்வையாக நிதானித்து சிலகாரியத்தரையனுப்பி எதிர்கொண் டழைத்துவரச் சொல்லுமென்று கங்கபட்டர்சொல்ல அதற்குடன் பட்டிருக்கையில் திரம்படைத்த துரியோதனன் வீட்டுமர்முதலாயினோரும் புறங்கொடுத்தோடிப் போயினரென்றும் அவர்களால் மடக்கப்பட்ட மாட்டுமந்தையனைத்தும் மச்சநாட்டைச்சார்ந்த காட்டுப்புறத்தில் வந்ததென்றும் ஒருதேரும் வில்லுங்கொண்டு முனைந்து யுத்தம்புரிந்து வெற்றிபெற்று வருகின்றார் உம்புத்திரசிகாமணியாகிய உத்தரகுமாரனென்றுந் தூதரோடிவந்து தொழுதுரைத்தார்கள் அவர்களுரைத்த அமுதரசத்தைச் செவிவழியாகத்தெவிட்டி வருந்திக்கொதிப்பாறக்குளிர்ந்த குளத்து நீர்போலும் குமுதநாதன் அமுதகிரணத்தையுண்ட சகோரம்போலும் சோபதாப துயரமுமாறி சிந்தைகளித்து பந்துசனங்களுடன் வந்தவெகுசனங்கட்கு சுகந்தபரிமளம் சந்தனபோசனமுதலான வெகுமதியுங்கொடுத்து மந்திரிமார்களையும் மன்னர்களையுநோக்கி நமதுரிமையுற்றுள்ள இரதகசதுரகபதாதியர் மந்திரிதந்திரி சாமந்திமுதலாகிய பேர்களுடனும் விருது நால்வகை வரிசைகளுடனும்எதிர்கொண்டுசெயசேகரமுடையஎன்சிறியகுமாரனைச்சீக்கிரமழைத்துவாருங்கள், வீதிகளெல்லாம் அலங்காரஞ்செய்யப் பறைசாற்றிச் செய்யுங்கள் பந்தலமைத்து,மகரதோரணங்கள் கட்டுங்களென்று ஆஞ்ஞைசெய்தான்; இந்தவிராடராசன்கொண்ட சந்தோடமெவ்வாறென்னில்;ஒருவன்மனைவியானவள்அயலாரிடத்திற்சோரத்துவஞ்செய்து பெற்றுக்கொண்ட பிள்ளையையெனக்குப்பிறந்தபிள்ளையென்று உள்ளங்களித்து, முத்தமிட்டு, மடிமேலுந்தோண்மேலும் வைத்துத்தாலாட்டி கொஞ்சிக்குலாவி ஆசைவைத்துருவுகின்ற அறிவில்லார் தம்மைப்போல விசயபராக்கிரமவிக்கிரமன் வெற்றிபெற்றிருக்க அதனைவிராடன்தெரிந்துகொள்ளாமல் உத்தரகுமாரன்வெற்றிகொண்டானென்று உண்மையாய்நம்பி உடல்பூரித்திருந்தான்; இவனாணையால் ஏவலைக்கொண்ட காரியஸ்தர்கள் வீதிகள் திருத்தி புழுதிகளடக்கி செம்பொற்கலசங்கள் பொருத்தி வாழை தாழை,கரும்பு கமுகு பலா மரமுதலிய தென்னங்குலைகளுங்கட்டி மாணிக்கத்தீபங்களும் வரிசையாய்வைத்து கொடி குடை ஆலவட்டங்களுநாட்டிமகரதோரணங்களும்பூட்டி எழுப்பரிகைகளுயர்ந்தமாடமாளிகைகூடகோபுரமுள்ளவீடுகளலங்கரித்துவிதவிதமாகச்சிங்காரித்தார்கள்.இஃதிப்படியிருக்க இவ்விடத்தில் விராடராசன் தர்மராசனைப்பார்த்து உம்முடைய ஆசிர்வசன

வாக்கின்படியே எனது உசிதகுமாரன்வெற்றிப்பிரதாபத்துடன்வருகிறவளவி
லும்நாமிருவரும் சொக்கட்டாடுவோமென்று அந்த ஆட்டத்திற்குவேண்டிய
கருவிகளமைத்து ஆடினார்கள், இவர்களிரண்டுபேரும் ஆடியகாலையில் சொக்
கட்டாட்டத்தில் மெத்தவுசிர்வாகமுள்ள கங்கபட்டர்வென்றார் மச்சராசன்
தோற்றுதர்மநந்தனன்முகத்தைப்பார்த்து இன்றோராட்டமாடுவோம்வாருமெ
ன்று பவளம் கருமணி மரகதம் புட்பராகங்களினாலேற்பட்டிருக்கின்ற காய்
களைவைத்து வயிரப்பாச்சிகைகொண்டுவீசி இந்த ஆட்டத்தில் என்மகனாகிய
உத்தரகுமாரன்வெல்ல அவனுக்கிடிடமாட்டாமல் யுத்தமுனைகெட்டோடிய
வெற்றிவீரர்களைப்போல உம்மைநான் ஓடவிட்டடிக்கின்றேன்பாரும்; என்னை
யினையென்று பிரதாபமாய்ப்பேசினான் அவ்வாறுரைத்த விராடராசனை கங்க
பட்டர் தடுத்துப்பேடியாகிய இரதசாரதியானவள் வெற்றிகொண்டுவருகின்ற
பெருமையைப்போல வெற்றிகொள்வேனென்று பேசுவீராகில் அதுஎனக்குச்
சம்மதியாகும் நீரப்படி சொல்லாமல் உத்தரன் வென்றதைப்போலென்று தப்
படிசெப்புவதினால் அதற்குநான் ஒருக்காலும் ஒப்பமாட்டேன், இப்புவியிலிறை
வனாகிய எந்தமேல அதிகமான வில்லாளிகளை வென்றும் பேடியைப்பேடியென்
றெண்ணாதே அவள் பூருவங்காண்டாவனமெரித்த காலைக்குத்தெதிரர்ந்து தே
வர்களுக்குப் பகையாகிய அரக்கர்களைவென்றுதேவசகாய விசயனென்று பேர்
பூண்டு திக்குத்திகாந்தம் வரைக்கும் அறுமசாம்பத்தில் வெற்றிகொண்டு
திரண்டகீர்த்தி பெற்றிருக்கின்றவள் ஆதலால் இலேசாக மதிக்கலாகாதேயென்று
கங்கபட்டர் சொல்லவும் மச்சராசனுக்கு மிச்சமாகிய கோபம்பிறந்து மனங்
கறுத்து மதியுஞ்சிறுத்து கண்சிவந்து கனற்பொறிபறந்து கலைத்துப்பார்த்து
ஓ! பெரியவரே கோடாகோடி குருசேனைகளை யோதடித்து மிரக்கவெடுத்து
பேடி தேர்விடச்சென்று என் பிள்ளையொருவனும்போய்ச்சென்று பசுமந்தைகளை
யுங் கைக்கொண்டு திரும்பிவருகின்றானென்று தூதர்வந்துசொல்லப் பிரத்தி
யட்சத்திற்கேட்டிருந்த தேவரீர் கொல்லமாட்டாத சொற்பமான ஒருபேடி
யைக்கொண்டாடி தாபித்துப்பேசுகின்றீர் ஈதென்னபிடிவாதம் ஈதேவர்கள்
சொல்லுகின்ற பட்சபாரம் பிரமக்கியானமுடைய பெரியவரே பேசாதிரவாய்
மூடுமென்றான், அந்த மொழியைக்கேட்ட தருமராசன் சிறுநகைநகைத்து,
நான் சொன்னவார்த்தைபழுதல்ல இன்னுஞ்சற்றுநேரத்தில் நீரறியப்போகின்
றீரென்றார். அந்தவசனம் பொறுக்கமாட்டாமல் விராடராசன் முகஞ்சுளித்து,
இனியென்னத்தையறிகிறது கைப்புண்ணுக்குக்கண்ணாடிவேண்டுமோ வித்
தாரங்கற்றிருக்கும் வைதிகமுனியே பேடிக்கும் கிரீடிக்கும் பேதமறியாதவர்
நீர் வீண்வாதுபேசுகிறீர் போதும் போதும் நீதியில்லாமன்னரானவர் ஏதேனுங்
குன்னமான புன்மைபுகன்றாரென்றாலும் அச்சபையிலுள்ளவர்கள் நன்மை
நன்மையென்றுநாளுஞ்சொல்லி இராசனுக்கிதம்படப்பேசவேண்டுவதல்லாமல்
அவன்தயவுக்குக்காத்திருந்து, சேவனஞ்செய்பவர்கள் மன்னன் கருத்துக்கு
மறுத்துப்பேசுவதுமுண்டோ. காலஞ்சமயமறிந்துகலந்து கொள்ளவேண்டா
மோ? நான்குவேதமும் நன்றாயோதிய ஞானவானேயென்றான்: இங்ஙன
மமதைகொண்டுபேசிய மச்சராசன் பேச்சுக்கு இடங்கொடாமற்றடுத்து,

விராடராசனே, நீர் கொஞ்சகிதானியும் கொடையாளியான கர்ணராசன்
படையாளியான வீஷ்மாசாரியர் தனுர்வேதசம்பன்னரான துரோணாசாரியர்
நீதிவழியோர்ந்த கிருபாசாரியர் வித்வமகத்துவமுடைய அசுவத்தாமா இவர்
கள்முதலிய சுத்தவீரர்களை உண்டைவிற்பிடித்துக்கொண்டிருந்த உன்பிள்ளை
வெல்லவல்லவனென்று நீ சொல்லமாட்டுவையா? கில்லு கில்லு கிருபனே
இதோவந்துரைக்கப்போகிறார்கள். அப்பாலுன்மனத்தப்பென்று உன்மதிஉன
க்கே ஒப்புச்சொல்லும்; இப்போது நானுனக்கென்னசொன்னாலும் அது தப்
பாகவேதோன்றும், மெய்ப்படும்போது பெருமையடைந்தவன் துப்பார்திரு
மேனிப்பேடியென்று தருமராசன் பேசினான். இச்சொல்லைக்கேட்ட விராட
ராசன் இருகண்ணுஞ்சேயந்து, கோபச்சிரிப்பாகச்சிரித்து, ஓகோகோ! மெத்த
மெத்தக்கற்ற வேதியனே வில்லாண்மையிலுயர்ந்த என்குமாரன் சொல்லாண்
மையிற்சிறந்த பகைவரைப்போட்டி பசுக்களைமீட்டி,பாரமார்த்தியமாய்வருகிற
வீரப்பிரதாபத்தைப்பார்த்த தூதர்வந்து சொல்லக்கேட்டறிந்திருந்தும் எவ்வ
ளவுமெண்ணிப்பாராமல்எதிரியையுமறியாமல்என்னையடுத்துச்சிவனஞ்செய்து
வருகிற இயற்கையையுமோராமல் பலதரமுமென்னைவருத்தி வாதுசெய்கின்
றீர், சொற்பமான பேடியைப்புகழ்ந்துபேசுகின்ற நீர் என்பிள்ளையைக்கொண்
டாடிப் பேசப்படாதோ? இவ்வளவுபொறுமையும் அக்கறையும் உமக்குவந்த
காரணமென்னவென்று கொல்லும்விடங்கொண்டெழுந்த நல்பாம்புபோற்
சீறி தன்கைமேலிருந்த பாச்சிகையை நிலத்தில்விட்டெடுத்து, கலகலவென்று
நகைத்தான், அவ்வாறு அதிககோபத்தால் வீசிய பாச்சிகையானது, பூமிமேற்
பட்டுத்தெறித்தெதிரிலிருந்தகங்கபட்டர்நெற்றியிலடித்து, குங்குமக்குழம்பாற்
படிந்ததிலகம்போல் குன்றிமணிபத்தனையிரத்தங்குபீரென்றுகொப்பளித்தது,
அப்போதுஉத்தரகுமாரனது க்ஷேமத்தை இராசசபையில்என்னபேசிக்கொண்
டார்கள் அதையறிந்துவாபோவென்று சுதேஷ்ணாதேவியினால் அனுப்பப்பட்ட
பணிப்பெண்ணானவள் சபைகூடிய அவ்விடத்திற்குவந்து சங்கதிவிசாரிக்குஞ்
சமயத்தில்தர்மராசன்நெற்றியிலுண்டானதுளியிரத்தத்தைக்கண்டு நீர்வற்றிய
தடாகத்தாமரைமலர்போல் நிறங்குன்றி வெருண்டு மருண்டு கூசிக்குலைந்து
கைகால்நடுங்கக் கடுகெனவோடி தன்வஸ்திரத்தின்முன்றானையால் வந்து உதி
ரத்தை யொத்தினாளென்று வைசம்பாயனர்புகல அது யாதுகாரணமென்று
செனமேசயன்கேட்க அந்தத்தருமனுடையஉதிரம்ஒருதுளிபூமியில்விழுமானால்
விராடராசனுக்குத் தழைந்திருக்கின்ற கிளைகளும் புத்ரபௌத்ரவருக்கங்களும்
மித்திரர்முதலாகிய மென்காய்கனிகளும் புகழ்ப்பிரதாபப் பெருமணச்சிறப்பும்
அழகும் வாழ்வும் அமைந்தமூலமும் தாங்களறுவரும் அஞ்ஞாதவாசஞ் செ
ய்யவந்தடுத்து ஒதுங்கியிருந்தநிழலும் அன்றேகெடுமென்று தானே? அல்லது
தனக்குரிய நாயகனென்னு நேயந்தானோ? அல்லது யாவனோனும் இடையூ
றுண்டானால் உபசாரஞ்செய்வது எல்லோருக்கும் பொதுவென்பது பற்றியோ?
அல்லது அர்ச்சுனன்முதலிய பேர்க்கு உத்தரஞ்சொல்ல வேண்டுமென்பது
கத்தியோ? அல்லது பெரியவனென்னும் பத்தியோ? அந்தப்புண்ணியவதியின்
சுபாவபுத்தியோ? அவள்கருத்து இன்னவிதமென் றெனக்குத்தெரியாது;

கண்ணீர் துளித்தழுது கடகடவென்று உடல்நடுங்கத்தொழுது ஐயோ பழுது நேரிட்டதேயென்று வெகுநேரம் வரையினும் ஒத்திவகையெடுக்காமல் தரும பத்தினிபோலிருந்தாள். அப்படியிருந்த வண்ணப்பெண்ணின் மரியாதையையும்அவளுடல்துடிப்பையும் படபடப்பையும் பரிதாபத்தையும் விராடன்பார்த்துச்சந்தேகப்பட்டு இதென்னவாச்சரியம் இதுவரையுமில்லாமல்இப்போதுநேரிட்டதென்னமாச்சரியமென்று எண்ணமுஞ்செயலும்வேறாய் என்செய்வோம், என்செய்வோமென்று தன்னைத்தானே நொந்து பின்னாலறியப்போகிற பெருமைதெரியாதவனாய்ஐயோ கோபம் பாவம்சண்டாளமென்றுகுறைந்துவீழ்ந்தான்; இந்தவிராடராசனுடையமனோதுக்கத்தைக்கண்டு மறைந்துபோனவன்போல ஆயிரக்கிரணக் கதிரோனாகிய சூரியன் அத்தமனகிரியையடைந்தான். இஃதிவ்வாறிருக்க உத்தரகுமாரனையெதிர் கொண்டழைக்கப்போனயானைசேனைகள்முதலிய மன்னவர்நெருங்க வீரவாத்தியமேளமுழங்க விருதுமால்கொடிகுடைவிதவிதமாய்ச் சூழ்ந்துவர பாலாபல்லயம் சவளக்கோல்கத்தி கட்டாரி ஈட்டிகேடயங்கள்மின்னசங்கத்தொனி பொங்கித்தழங்க பட்டத்துயானைகளும் ஆட்டக்குதிரைகளும் உன்னதத்தேர்களும் துன்னியகாலாளும் இருபக்கமுநெருங்கிவரத்தேவேந்திரலோகத்திலிருந்தசெயமுள்ளகாளமேகம்தேர்மேலேறிப் பூலோகத்தில் வருமாறுபோல் பொடிதேர்செலுத்த நீடியகீர்த்திபொருந்த உத்தரகுமாரன் வண்டுமொய்க்கு மலர்க்காவைவிட்டு நீங்கிவாகுமாலைதாங்கி மணிப்புயமோங்கி விராடபுரவீதியில் மேவினான். இந்தப்படி சத்துருஜெயம் செய்து வருகின்ற உத்திரகுமாரனைவேசியர்முதலாகிய மாதர்களும் கண்டு, அன்புகொண்டு ஆலஞ்சுற்றி திருஷ்டிகழித்து மங்களம் லாலிவாழ்த்தி கொப்பிகள்முதலிய பாடலைப்பாடி ஆசீர்வதிக்க பரதநாட்டியஸ்திரீகள் அபிநயங்காட்டி யாடித்துதிக்க கட்டியர்புகழ செட்டியர்மகிழ பட்டுவான்கள் போற்ற சந்திரவட்டக்குடைநிழற்ற வெண்சாமரைபோட அட்டதிக்குங்கொண்டாட இராசசின்னங்களுடன் மகன்வருகிற மகிமையைக் கேள்விப்பட்டு வரைபகவெறிந்த வள்ளிமணாளனைச் சிலைமதனைச்செற்றசிவபெருமான்போல் ஆநந்தங்கொண்டு எதிர்சென்றுகண்டு தேர்மேலிருந்தசிறுவனைச்சீக்கிரந்தழுவி பற்றியெடுத்து சித்தங்குவித்து அணைத்தெடுத்து முத்தங்கொடுத்து, தந்தையைப்பணிந்து தடதடென்றோடி கொலுமுகத்திற்கவரியா மெய்யுருக்கருளியிருக்கின்ற வேதவித்தாகிய கங்கபட்டரைவணங்கித்துதித்து அவருடைய திருவடிகளைச்சிரத்திலும் கண்களிலும்பொருத்தி பற்பலராசகூட்டங்களும் பார்க்கப்பொற்புயத்தைப்புகழ்ந்து அற்புதக்கருணைமுகத்தைநோக்கினான். அந்த விற்பனவிவேகியானவர் கடாட்சத்துடன் சொற்பலவாய் ஆசிர்வதித்தருளினார். அப்போதவர் நெற்றியிலிருந்த வடிவைப்பார்த்து உடனே முகம்வியர்த்து அண்டரண்ட சராசரங்களுமதிரும்படியாய்க் கூவி ஓ! என்றாண்டவனே விபூதிரேகை பிரகாசிக்கின்ற தமது நெற்றியினிடத்தில் அபூர்வமானகாயம் பட்டதற்குக் காரணம்யாது? யாவர் வடுச்செய்தவரென்று 'கார்முகங்கைக்கொண்டான்; நேர்முகமாகநின்ற விராடராசன் நடுங்கி முன்னடந்த காரியங்களைப் பக்குவமாய்ப்பேசினான். அவ்வார்த்தைகூறிய தந்தையை சிந்தை

நைந்து வருந்தி நொந்து, கைக்கொண்ட வில்லையொடித்து, பல்லைக்கடித்து, நல்லகாரியஞ்செய்தீர் போம்போமென்று நகைத்து, நீ இந்த மஹானுபாவருடையசொல்லை யிகழ்ச்சிசெய்தேனென்றபோது ,என்னுடலாடுதே அதை நினைக்குந்தோறும் என்னுடலைவிட்டு உயிர்வெளியோடுதே;இதனாலுண்டாகிய பயமானது, என்னூரத்தைச்சாடுதே ஐயையோபிரமசிருட்டியினாலுண்டாகிய பெரும்பொறைக்கடலை ஆடையாயுடுத்த அவனியினிடத்தில் பெரியமணிமகுடப்பட்டந்தரித்த வீரியவேந்தர்க்கு வேந்தாம்வேந்தே இவருக்கொப்பாகிய பேர் எப்பாரினுமில்லை இவரையாரென்றுணர்ந்தாய்! என்னைநினைத்து இப்படிசெய்தாய், குன்னமேற்கொண்ட மன்னனே அப்பாற்போமென்றதட்டி, பூசுரனாகிய புண்ணியனைப்பணிந்து, அத்தனே அன்புநீங்காப்பரிசுத்தனே எங்களையாண்டுகொள்ளுங்கர்த்தனே, சிறியேனறியாமற்செய்த தீமையைப்பெரியோர் பொறுப்பது, பெருங்கடனென்று தாங்களே சொல்லுகொடுத்திருப்பதினால் விவேகமற்ற என்தந்தையின்பேரில் தேவரீர் கோபங்கொள்வது ஞாயமன்று, ஆறுவதுசினமென்று கங்கபட்டருடைய அடியிற்குழ்ந்து பெரியோருள்ளமபேதிக்கச்செய்து,கேட்டைமூட்டைகட்டிக்கொண்ட விராடராசனையும் வீழ்ந்திறைஞ்சச்செய்து, பின்னும்பின்னும் தானிறைஞ்சி தடுத்துப்பேசவறியாததாக்ஷண்யபராகிய தருமபுத்திரனென்னும் மௌனவானுடையமனோதுக்கத்தை மாற்றிவிட்டான். அப்போது நீர்கிழியவெய்தவடுப்போறகடுப்பாறி சாத்திரங்கற்று மாட்சிமைபெற்று பொறுமையுங்கருணையும் பொருளெனக்கொண்டாட கங்கபட்டர் தருந்தவாழ்த்துதல்வாழ்த்தி உத்தரநிரைமீட்சிக்கும் புகுந்த யுத்தத்தின்பெருமைபேசிவந்தார், மச்சராசனுங்கூசி யிச்சையுடன்தொடர்ந்து வந்தான் மனங்கலந்த உரியோர் பலரும் சினங்குலைந்த பெரியோர் சிலரும் புடைநெருங்கினார்கள். இவர்களெல்லோருஞ்சூழ்ந்து வருவதை உத்தரகுமாரன் கண்டு ஒன்றுஞ்சொல்லாமல் வெட்கி அந்தப்புரம்போனான். செயங்கொண்டு வந்தமைந்தனைச்சுதக்ஷணைகண்டு தவமிருந்து பெற்றபிள்ளையை ஈன்றபோதிருந்த பேராசையைவிட எண்மடங்கதிகமான இன்பமடைந்து எடுத்தாள் முத்தங்கொடுத்தாள் கரஞ்சுற்றி நெரித்தாள் நமது கருப்பஞ்செய்த புண்ணியமென்று சிரித்தாள், இவ்வகையாக சோடசகலைகணிறைந்த சந்திரனெழுச்சிகண்ட சமுத்திரமபோல் தாய்தந்தைமுதலியரும் புகழ்ச்சியாய்ப்பூரித்து, மகிட்சியடைந்து, செகிட்சியாய் கங்குகரைகாணுமற்பொங்கிய பேரானந்தவெள்ளத்தில் மூழ்கிப்பெருமையாகிய பள்ளத்திற்படிந்து செயமென்னுஞ்செய்தியாற்றேறியிருந்தார்கள். அச்சமயத்தில் உத்தரநிரைமீட்சிக்குச்சென்ற உத்தரகுமாரன் கௌரவசேனைகளைக்கண்டு பயங்கொண்டு, புறங்கொடுத்தோடியபோது, அந்த ராஜகுமாரனைத்தேற்றி அவன்திகிலைமாற்றி சாரதித்தொழில்செய்யும்படியாகத்தேர்மேலேற்றித் தனக்கெதிர்நின்றுஉத்தரிக்கமாட்டாமலோடிய துரியோதனாதியரைவென்ற அர்ச்சுனனனவன் இரதத்தின்மீதுவைத்திருந்தஎதிரிகளின்சிரோவேஷ்டிமூட்டையைப் பேடிரூபங்கொண்டதன்தலைமேற்சுமந்து வந்து உத்தரகுமாரத்தி கையிற்கொடுத்து, உத்தரகுமாரனைப்பெற்ற உத்தமியாகியசுதக்ஷணைக்குப் பின்பக்கத்திலொதுங்கி ஒடுங்கித்

தலைவணங்கிநின்றான். அவனின்றகோலத்தைக்கண்ட உத்தரகுமாரன்கைநெ
ரித்து, கலீரெனச்சிரித்துத்தேம்பிவிம்மித்திகைத்துதிகிலடைந்து,துக்கத்தினால்
விக்கித்துயருழந்திருந்தான். அவன் குறிப்பையறிந்த அன்னையுந் தந்தையும்
ஆசையுடன்தழுவி அப்பனே ஐயனே அதிசயமென்னடாவென்று ஆயிரந்தர
மாகக்கேட்டார்கள். அப்போது உத்தரகுமாரன் ஆயாசந்தீர்ந்து அடிவயிற்றி
லிருந்து எரிந்தெழுந்த அக்கினித்தழல் நீங்கும்வழியைத்தேடி அவள்முகத்
தைநாடிபேசாமல் வாய்மூடிப்பெருமூச்சுவிட்டு, நானென்னத்தைச்சொல்வே
னென்று தந்தைதாய்இருவரையுந்தனித்தழைத்துச்சென்று இனி நாம் பிழைக்
கும்விதமெப்படி? எந்தகாலத்திற்குப் புனிதனாகப்போகிறோம்; இப்போது நீர்
விளைத்துவிட்ட பகையானது, எப்போது நீங்கும் விராடபூபதியே சமுத்திரம்
போற்புரண்டு, சாதுரங்கமுந்திரண்டு நமதுமந்தைமாடுகளுமிரண்டுபோகவந்து
மடக்கிய கௌரவகுலாதிபர்கள்நொந்துபோகச்செய்த அடமும்முந்திப்போர்
புரிந்த மூர்த்தண்யதிடமும் மந்தைப்பசுக்களைமீட்டமார்க்கமும்விண்சண்டை
க்குவந்தவர்கள்சோர்ந்துவிழும்படி மோகனாத்திரப்பிரயோகஞ்செய்து அவர்க
ளணிந்திருந்த தலைத்துணிகளைப்பிடுங்கி மூட்டைகட்டிக்கொண்வந்த மொய்ம்
பும் இவைகளியாவும்என்னாலானவல்லமையன்று,என்னாலாகுமென்பதுமன்று,
முன்னாலொருவர்வென்றதுமன்று, சொன்னாலுங்கட்கு நன்றாய்த்தோன்றும்.
நன்றாய் செவிகொடுத்துகேளுங்கள்; தேவரீர் தட்சணமினைமீட்சிக்குச்சென்ற
வேளைகண்டு, சத்துருக்கள்மொய்த்து, உத்தரதிசையி லொருமிக்கவந்து,
மெத்தவருத்தப்படுத்திபத்தினைமந்தைகளைமடக்கினார்களென்றுபித்தநொந்து,
ஒற்றரோடிவந்துரைத்தார்கள். நான் அவ்வார்த்தையைக்கேட்டு, என்தா
யைத்தொழுது அம்மா எனக்கொருசாரதிகிடைப்பானாற் பழுதுவாராமற்
செயிப்பேன் எனக்காரெதிரென்றுஇயம்பிய அன்றுநமது உத்தரைக்கு நாட்டி
யம்பழக்கி வருகின்றபேடிமெத்தவும் உத்தமமான சாரதியென்று பணிப்பெண்
சொல்லக்கொண்டு தேரோட்டிச்சென்று கடல்போற்கவிந்த சேனையைக்கண்டு
கண்கலங்கி மனம்விட்டு தேர்விட்டிழிந்துஊர்முகமாகஓடிவந்த என்னைதேற்றி
ஊர்வசிசாபத்தால் பேடியுருக்கொண்டிருந்த தனஞ்செயனென்னும்புருஷோத்
தமன் என்னைவிடாமற் றடுத்துப்பிடித்து தனக்குச்சாரதியாக்கிஎன்பயத்தை
மாற்றி தேர்மேலேற்றி வன்னிமரத்தில் மறைத்துவைத்திருந்த விசயகாண்டீப
வெம்படைதாங்கி அனுமக்கொடிநாட்டி யாவருமெச்சும்படியாகிய அர்ச்சுன
னுருவமுங்காட்டி தேவதத்தமுழக்கஞ்செய்து அரவக்கொடிக்கதிபனுடைய
சேனைகளிற்புகுந்தபோது அவ்விடத்தில் நடந்தவிந்தையை நான்சொல்லத்
தரமோ, நராதிபனே சூரியனுக்கெதிர்ப்பட்ட பனிபோலவும் சுடருக்கெதிரா
கிய இருள்போலவும் சிங்கத்திற்கெதிர்ப்பட்ட யானைகள்போலவும் நெருப்புக்
கெதிராகிய விட்டிற்பூச்சிபோலவும் இடிக்குநேரிட்ட பாம்புகள்போலவும் எம
னுக்கெதிர்ப்பட்ட உயிர்கள்போலவும் சிவனுக்கெதிர்ப்பட்ட சிலைமதன்போல
வும் தீச்சலுக்கெதிர்ப்பட்ட பயிர்காச்சல் போலவும் கௌரவசேனாசமுத்திரம்
அடங்கலும் அழிந்து ஒழிந்தார்கள், ஐயா அப்போது நான்பயந்து இந்த
அர்ச்சுனராசனை விசாரிக்குமிடத்து தேவரீரிடத்தில் உண்மைநண்பாக உயிர்

க்குயிராகிதர்மாதர்மமுதலிய நீதிகளைத்தெரிவித்துக்கொண்டு கங்கபட்டனென்றிருக்குந் தயாளுவானவர் சந்திரகுலத்தோன்றலாகிய தருமராசனென்றும் வாசமலரும் பூசுதல்முதலாகிய புநுகுஞ்சாந்துஞ் சம்பங்கித்தயிலமுந்தரித்துக் கூந்தல்விரித்தவண்ணமகள் பாஞ்சாலராசகன்னிகையாகிய திரௌபதாதேவியென்றும் மல்லர்களைவாட்டி கீசகாதிபரைமாட்டி மடைப்பள்ளியிற் சமையல்கூட்டி நமக்கூட்டிவராநின்ற வல்லமையாளன் வீமசேனராசனென்றும் குதிரைச்சேவகத்திலமைந்த கோமான் நகுலராசனென்றும் பசுமந்தைகட்கேசமானுயிருந்த பாக்கியவான் சகாதேவராசனென்றும் வேலாயுதம்பிடித்த வீரர்களைமடித்தபட்டத்துயானை படைத்த பாண்டவரைவரும் பாஞ்சாலியும் அஞ்ஞாதவாசந் தொலைப்பதற்காக இந்த மச்சநாட்டில் மறைந்திருந்து காலங்கழித்தனரென்றும் நேற்றைவரையிலும் அவர்களுக்குண்டாகிய தவணைநாளைப் போக்கிவிட்டு இன்றுமுதல் வெளிப்படவேண்டிய காரணமென்றுங் கேள்விப்பட்டேன், இனிஇதைக்குறித்துநாம்யோசிக்கவேண்டியிருக்கின்றது. இதுவரையிலும் நம்மால் என்ன குற்றங்குறைகள் நேரிட்டிருக்கின்றதோ தெரியவில்லை; இப்போது பிரத்தியக்ஷமாய் வடுவில்லாத தர்மராசனுக்கு நெற்றியில்வடுவுண்டாக்கிவைத்திருக்கின்றனை; ஐவருக்கும் அன்பாகிய பாஞ்சாலியை ஆசைப்பட்டணைத்து நேசமுறத்தொடர்ந்த கீசகன்முதலாகிய தம்பிமார்களும் நாசப்பட்டும்போனார்கள்; இதனாற்பெரியமோசம் வந்திருக்கின்ற இவைகளையெல்லாம் யோசியுங்களென்று உத்தரகுமாரன் சொன்னான். இம்மொழிகேட்ட விராடராசனும் சுதக்கணையும் புதைத்திருந்தபொருள் குதித்துவெளிப்பட்டது போற்கண்டு, ஆ! ஆ! ஆ! பாண்டவர்களா இவர்கள்? பாஞ்சாலியா பணிப்பெண்? ஓ! ஆண்டவனேயென்று அங்ஙனமயர்ந்து, நிலத்திற்சாய்ந்து உயிருடன்மாய்ந்து, மூர்ச்சையானார்கள். அப்போது உத்தரகுமாரன் அவர்களையணைத்துச்சோபத்தையும் மனஸ்தாபத்தையுந்தணித்து இனிதுக்கப்படுவதிற் காரணமில்லை சீக்கிரம் இதற்குவேண்டிய பரிகாரந்தேடுங்கள் எனக்கொன்று தோன்றுகின்றது; அஃதென்னவென்னில், மன்மதனுக்கொப்பாகியவடிவமும், மயில்வாகனனுக்கொப்பாகிய வெற்றியும் மகாமந்திரசித்தியும் உமாமகேசுவரரைப்பூசிக்கும் புத்தியும் விர்ஷபகுஞ்சரசிங்க விராட்டின் சத்தியும் பார்த்தனாகிய பரந்தாமன்மைத்துனனுக்கு எனக்கிளைய உத்தரகுமாரத்தியைகொடுத்து நம்முடன்கலந்து வாழச்செய்யுங்கருத்துடையோமானால்தெரிந்துந்தெரியாமற் செய்த தீமைகள் யாவுஞ் சிதறிப்போமென்று என்சிந்தையினினைத்தேனென்றான்; அவ்வாறியம்பியமைந்தன் வார்த்தையை மகிழ்ந்துகேட்டு, தந்தையுந் தாயுஞ்சிந்தைகளிகூர்ந்து என்றன்மைந்தனே உன்மனத்தின்படியே எங்கட்கு மிச்சைமிச்சந்தானென்று அன்றிரவுவிடிவளவும் அச்சத்துடனொடுங்கி அசைவற்றிருந்தார்கள்.

உத்தரகிரைமீட்சிக்காகப் பார்த்தன் பண்ணிய சண்டையிற் செந்தூள் கருந்தூள்பறந்து படிந்துமறைந்த தன்னொளியைச் சுத்தப்படக்கழுவிக்கொள்வதற்குப்போனவன்போல் மேற்குச்சமுத்திரத்திற் சூரியன்போய்க்குளித்தான். இப்பால் பெருமையிலுயர்ந்த பாண்டவர்களும் பாஞ்சாலியும் விராட

னுடைய அரண்மனைவிட்டு நீங்கி மச்சநாட்டின் புறம்போய்ச்சேர்ந்து கூடு விட்டுக்கூடுபோய்கிறவர்களைப்போல் தாங்கள்கொண்டிருந்த வடிவத்தைமாற்றி பழயவடிவங்கொண்டு,எமதருமராசனைத் தோத்திரம்பண்ணி வணங்கிமேற்றி சையடைந்த சூரியபகவான் கீழ்த்திசைக்குவருங்காலத்தை நோக்கிக்கொண் டிருந்தார்கள். அந்தவேளையில் கோழிமுதலிய பறவைகளெல்லாம் பாழியம் புயம்படைத்த பாண்டவர்களே நீங்கள் நீடூழிவாழிவாழி ஆழியினலையுடன்மா நிலநடுங்குவதால்சூரியன்வரப்போகின்றானென்று சொல்லுவதுபோற்கூவின. அதுகாலையில் மேற்றிசையில்மறைந்த வெய்யோன் பாண்டவர்கள் சங்கதி யெல்லாந்தெரிந்துகொண்டோமே,இனித் துரியோதனுதியர்களின் கருத்தையு மறிவோமென்று மகாமேருவைச்சூழ்ந்து வந்தவனைப்போல் உதயகிரியில் கிர ணக்கதிர்நீட்டிதாமரைமலர்க்கரங்காட்டித்தண்மதிமுதலிய துட்டரையோட்டி சத்தியநிலைபெற்ற தருமராசனதுஆஞ்ஞாசக்கரத்தைநிலைக்குநாட்டியதுபோல் உதயகிரியினுச்சிமேலெழுந்தான். அப்போது பொழுதுவிடிந்தது, கேளும் ஜெனமேஜயமகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

உத்தரகிரைமீட்சிச்சருக்கம்
முற்றிற்று.

## பாண்டவர்வெளிப்படு சருக்கம்.

மந்திரமூர்த்தியின் மகிமைப்பலனை சிந்தையுறும் ஜெனமேஜயனே! பாண்டவர்களும் பாஞ்சாலியும் விராடபுரநீங்கி மாஞ்சோலைசூழ்ந்த வனத்து டைமந்த பூஞ்சோலைசேர்ந்த பொய்கையில்மூழ்கி அருணோதயமானவுடனே ஜப தப விதிகண்முடித்துச் சூரியநமஸ்காரஞ்செய்து ஸ்ரீவேதவியாசனையும், எமதர்மராசனையுந் திக்குநோக்கிப்பணிந்து பாண்டவர்சகாயனது பாதபதும நினைந்து பருதியினொளியினும் பழயவடிவஞ்சிறந்து மகாலட்சுமிபோன்ற பாஞ் சாலியுடன் பாண்டவமுதல்வன் வீற்றிருக்கும்பொழுது வாயுகுமாரனுகிய வீமசேனனும் தேவேந்திரகுமாரனுகிய செஞ்சிலைவிசயனும் ஆயுள்வேதியரா ளித்த நகுலசகாதேவரும், தங்கள் குலத்திற்குங்குணத்திற்கும் நலத்திற் கும் நன்மைக்கும் தகுதியாக முரசக்கொடிபடைத்த முன்னோனைத்தொழுது அன்னோனருளிய ஆசிமேற்கொண்டு பெரும்புகழ்ப் பிரதாபத்துடன் தமய னிடஞ்சார்ந்திருந்தார்கள். இவ்வாறிருக்குஞ்சமயத்தில் நிகரிலா விற்றுங்கிய தனஞ்சயன் தர்மராசன் முகத்தைச்சந்துர்ஷ்டியாய்ப்பார்த்துசெந்தூரத்தில தம்போற் செவந்தபுண்கண்டு, அண்ணு தேவரீருடைய நெற்றியில் வடுக் கிடமானவாறுயாதென்று திடுக்கிடக்கேட்டான், தர்மராஜன் குறுநகைபுரிந்து யாதொன்றுஞ் சொல்லாமலிருந்தனன், அப்போதுமின்னலைப் பழித்தமேனி படைத்த பாஞ்சாலி விராடராஜனுக்குந்தர்மராஜனுக்கும் வாக்குவாதத்தினுல் வந்ததீது ஈதென்றுரைத்தாள், இன்னதென்று சொன்ன அந்நேரமேயெழுந்து இன்னமுந்தாமசமாவென்று நெருப்புப்போலெரிந்து, நெடுமூச்செறிந்து, அண் ணன்மேற்பரிந்து ஐயோ நான் பிரிந்துவந்த துன்பமிதுவோஇப்போதேவிராட புரம் வேகக்கொளுத்தி மச்சநாடன் றலையை வாங்கிவைக்கின்றேனென்று

நச்சரவம்போற்சீறி வெட்சிமாலையணிந்த ஆகமுந் தேகமும் அலறநடுங்கிப் பற்கடித்து விற்பிடித்து அவனுக்கிச்சையான குலத்தைப்பச்சடிபண்ணுகின்றே னென்று புறப்பட்டான். நெருப்புடன் காற்று நேயமானதுபோல் வீமனும் வெகுண்டு வீரிட்டெழுந்தான், நகுலசகாதேவரிருவரும் வியாகுலத்தோடு நடுங்கி விராடராஜனுக்கின்று விநாசகாலமாவென்றுமெய்ம்மறந்துவிட்டார்கள். இத்தன்மைவாய்ந்த தம்பிமார்களின் கடுங்கோபத்தைக்கண்ட தருமராசன் ஓகோ கோ மோசமாயிற்றென்று பூசிதவார்த்தைகள்புகன்று நேசவிசுவாசிகளே அரசகுலச்சிரேஷ்டர்களே நிஷ்டூரம்வேண்டாம், கொஞ்சந்தாமதமாகயோசனை செய்யுங்கள். ஒருவருடைய ஆபத்காலத்தில் இன்னொருவர் உதவிசெய்தால் அவ்வுதவியை ஆயுளுள்ளவரைக்குமறவாமல் நன்றிகுன்றாமை யென்னும் நீதியையும் தருமத்தையும் நிறைந்துநாடி முன்னுதவிசெய்தவர்களால் என்ன பிழைவந்தபோதிலும் அதைச்சகித்து மனம்பொறுத்து நன்றிபிழையாமல் நன்மைசெய்பவர்கள் நாளும் பெரியவரென்று நானிலம்புகழ்வதுண்டு. சாதுக்களும் சாத்திரங்களிற்பேசியிருக்கின்றார்கள். பற்பலநாளும் நன்மைபுரிந்து சொற்பமாக ஒருநாளிற்குற்றம்நேரிட்டால் ஒரு அற்பக்குற்றத்திற்காக நன்றிகுன்றிமனங்கன்றிப்பொல்லாங்குசெய்யநினைப்பதுபுகழன்று, பூணன்று, பொருளன்று, புலமைகெட்ட கீழ்மக்கள் செய்கையாம், புண்ணியகுலத்திற் பிறந்த மேன்மக்களே ஒரு நன்றிசெய்தபேர்களை உள்ளத்தில்வைத்துப் பிழைநூறுறாலும் சான்றோராகிய பெரியோர்பொறுப்பார்கள், கயவராகிய மூடர்களுக்கு எழுநூறுநன்றிசெய்து ஒன்றுதீதாமானால் முன்செய்நன்றி எழுநூறுந்தீதாய்க்கெட்டுப்போம், ஆகையால் காடாக்கினிமூண்ட காட்டில் பன்னிரண்டு வருஷங்கஷ்டப்பட்டு பதின்மூன்றாவது வருஷத்தை இவ்விராடராசனுடைய நீழலிலிருந்து இவனது உப்புந்தண்ணீருமுண்டு நாம் எண்ணிய வெண்ணம் பின்னமில்லாமல் அஞ்ஞாதவாசங்கழித்தோமே, எத்தேசத்தரசர்களிலும் இத்தேசத்தரசன் மெத்தவும் சரசன், நாம் எங்கிருந்து அஞ்ஞாதவாசம் பண்ணலாமென்று முன்னம்வினவியபோது விராடபுரத்திற்குமிஞ்சியபுரமில்லை, விராடராசனுக்கு மிஞ்சியஇராசனுமில்லையென்று சொன்னீர்கள், உங்கள் சொல்லை நம்பி இங்குவந்தடுத்தபோது நமக்கிவன் ஊழியன்போலும் இவனரசாட்சி நமதரசாட்சிபோலும் காலங்கழித்தோமேயல்லது நாமிவனுக்குத்தாழ்ந்து நடுங்கிநடந்ததில்லையே, நம்மையிவன் அதிகாரஞ்செய்ததுமில்லையே, ஏதோகோபபாபமென்னும் கொள்கையாலும் நமது தீவினைவசத்தாலும் குற்றநேரிட்டது, அதற்காக நாம் கடவுளைநோக்கி மன்னித்தல்கேட்டு இவனுக்கொரு பொல்லாங்கு நேரிடாமல் காக்கவேண்டியகடமை நம்முடையதாயிருக்க நீயவனைக் கோபித்தெழுவது குணமன்று, நம்மைத்தொழுது காத்ததோன்றலின்மேல் பழுதுநினைப்பது யாவம் பாவம் பார்த்தனே பதராதீர்களென்று தர்மராசன் தடுக்கவே அதன்மேல் வீமார்ச்சுனர்களிருவரும் நகுலசகாதேவரும்மூத்தவர் மொழிந்த முறைபிறழாமல் மச்சராசன் மேல்வைத்த கோபமாறி தருமராசனுத்தரவின்படி வன்னிமரத்திலேறி அவரவராயுதங்கைக்கொண்டுஅந்தப்பாலை நிலத்தில்மர்ந்த கோலாகலி நீலிசடாதரி லீலாவதிசூலிகலாதரிகுண்டலி குமரி

சாமுண்டியைப்பணிந்து வன்னிமரத்தை வலம்வந்துவணங்கி எங்கள் தாயின் கருப்பம்போல் ஆயுதங்களைக்காத்தளித்த தமனியமான தருவேயென்று சந்தோஷப்பேரிட்டுச் சம்பிரமங்கொண்டாடி விராடராசனுடைய கொலு முகச்சாவடியிற்கூசாமற்புகுந்து ஐந்து தேவேந்திரர்கள் ஒரு இந்திராணியுடன் வந்திருந்தவாறுபோல்தந்தத்தவிசேறியிருந்தார்கள். அந்தவேளையில் செந்தழல் வளர்க்கும் அந்தணர்முனிவர் மந்திரி சாமந்தர் தந்திரி பிரதானிகள் பந்து மித்திரர் வந்தவிருந்தின் மாந்தர் வேந்தர் யாவருஞ் சேர்ந்து வந்து குந்திதேவியார் தந்தமைந்தனைவரும் குருகுலம்விளங்கப்பிரகாசித்து தயமாகிய குமுத நண்பன்போற் சிங்காசனத்திலிருக்கக்கண்டு, தங்களாற்றாங்கப்படாத சந்தோஷங்கொண்டு, விராடராசனுக்கு விரைவிற்றெரிவித்தார்கள். அச்செய்தியைக் கேட்ட மச்சராசன் இச்சைமேற்கொண்டு ஐயோ? நாமென்செய்தோம்! இனியென்செய்வோமென்று மனவருத்தங்கொண்டு சந்தனம் தாம்பூலம் புட்பம் பனிநீர் மஞ்சட்குங்குமவாசனை திரவியம் தேங்காய் வாழை திரள்மாங்கனி பலா பலபல பலகாரங்கள் பருப்புவர்க்கங்கள் தட்டுத்தட்டா யெடுப்பித்துக்கொண்டு; பட்டுப்பட்டாவளிகள் கட்டுக்கட்டாகிய கட்டுவர்க்கங்கள் தாப்தாக்ள் முட்டுப்படாத முத்துமுதலாகிய நவரத்தினங்கள்ஆணிப்பொன்னொடு மாணிக்கங்களும் காணிக்கைவைத்து தானும் புத்திரனுந் தருமபத்தினியும் பாண்டவர்களின் பொன்னடியில் வீழ்ந்து புரண்டுமெய்புரண்டு, பிழைபொறுத்தருளும் பூரணநிதியே பொறுமைக்கரசேயென்று துதித்துப் பூமியைவிட்டெழுந்திராமலிருந்தார்கள். அம்மூவரையும் தருமராசன் வாரியெடுத்து மார்போடணைத்துப் பக்கத்தில்வைத்து ஆதிசேடன்முடிமேற்றாங்கிய பூமியில் உம்மைப்போல் யாரிருக்கிறார்கள். நீர் மெத்தவும் உத்தமர் புண்ணியசாலி பொறுமைக்கு வேலியென்று புகழ்ந்து மகிழ்ந்தார். இவ்வாறு கொண்டாடிய குருகுலக்கோமானது குளிர்ந்த வாசகத்தால் மச்சகுலாதிபனெழுந்து மறுபடியும்பணிந்துவேந்தாகியசாந்தமூர்த்தியே! தோத்திரமென்பது தம்மைப்போல பலர்க்குத்தகுமல்லது, எங்கட்குத்தகாது, நாங்களா அவ்வளவுபாத்திரம், க்ஷேத்திரமுங்கோத்திரமும் பெற்றவர்களன்று, ஆதலால்; அடியேன் மிகவும் பேயன் விவேகமற்ற சேயன் முன்கோபத்தாற் பதறிப்பேசுகின்ற வாயன் அப்படியிருந்த போதிலும் தங்கட்கு நான் தகுந்தநேயனெனப்பாராட்டி என்னால் நேரிட்ட குற்றங்குறைகள் யாதிருந்தாலும் அவைகளை மன்னித்து ஒட்டி தீர்க்கவைரநாட்டாமல் சிலகாலத்திற் சொல்லிக்காட்டாமல் தீனனாகிய என்னை ஆண்டருள் செய்யவேண்டும் பாண்டவர்களேயென்று வேண்டிக் கொண்டான். இவ்வண்ணம் புகன்று அடைக்கலம் புகுந்த விராடராசனை வேந்தர் வேந்தாகிய தருமராசன் பார்த்து; இரக்கமுள்ளவனாய் இஷ்டபூர்த்தியாய் சொல்லத்தொடங்கினான். ஐயா விராடபூபதியே உமது விராடபுரத்தில் நாங்கள் வந்துசேர்ந்த பிற்பாடு துன்பமென்பதில்லாமலும் எங்கட்குரிய சுதேசம்போலும் எங்கும் பெரும்புகழுண்டாகும்படியாய் வேற்றுமையின்றி வீற்றிருந்து வாழ்ந்தோம். இதல்லாமலும் நாற்றிசைடவால் விளையுங்கழனியின் மடையாய் நீரோட்டத்திற் சேற்கண்டைகள் நேரோதிப்பாய்ந்து விளை

யாடுங் தேரேறிய மச்சநாட்டரசே நீயறியச்சொல்லுகின்றேன். எனக்கு உன்னிலுமுயர்ந்த உற்றாருமில்லை பெற்றாருமில்லை மற்றாருமில்லை மாசற்ற மரபோய்! உன்னைவிட எனக்கு வேறொரு உதவியுமில்லை, நான் இதுவரையிலும் அநுபவித்து வந்த உன் பட்டினத்தின் பதவியினும், வேறொருபதவியுமில்லை, நீயும் உன் சகோதரர்களும் உன் புத்திர மித்திர பௌத்திராதியரும் நால்வகைச்சேனைகளும் எனக்குப்படைத் துணைவந்து, என் பக்கத்தில் நிற்பீர்களானால் துராங்காரமாய் எங்களை வஞ்சித்த சத்துருக்களையும் அவர்கட்குடன்பட்டு வந்த சேனைவேந்தர்களையும் ஒரு நிமிஷத்தில் எமலோகமேற்றி வைக்கிறேன் இதுமெய்யென்று பறைசாற்றிவைக்கிறேன் ஐயமற உட்கொள்ளுமென்று வையகம்வாழ்த்து மரபினான்சொல்ல அதனால் மச்சராசன் தேறி மகிழ்ந்து, புகழ்ந்து, மனத்துயர்மாறி மாதொடுமகளூர் தீதகன்றெய்தினார்கள். இப்பால் உத்தரகுமாரன் நமக்கு உறுதிதேடிக்கொள்ளுந் தருணமிதுதானென்று தந்தைதாயிருவரையு முன்னிட்டுக்கொண்டு தருமராசனைப்பணிந்துவாய் பொத்தி நின்றுசமுத்திரத்தை ஆடையாகத்தரித்தருளிய அகிலவுகத்தையும் வெள்ளைக்குடை நீழலிலடக்கியாளும் விதரணவேந்தே! தமக்குத்தக்கபக்குவமாகப் பேசவறியன் மிகவும் சிறியன் ஆனபோதிலும் இந்த விராடபுரமும் இதனது பூவளம் பொருள்வள முள்ளனயாவும் தேவரீருடையதே யாங்களியாவரும் உங்களுடைய ஏவற்பணிவிடைக்கேற்றவர்களே, ஏங்கட்கு சுதந்தரமான அறுவிதப்படைகளும் தங்களுடையனவே இதல்லாமல் என்தங்கையாகிய உத்தரகுமாரத்தியும் அர்ச்சுனராசற்குரியவளே இவ்வளவுதயவுசெய்து எங்களையாண்டுகொள்ளவேண்டும் ஆண்டவமாராகியபாண்டுநந்தனரேயென்று. வேண்டி விரும்பினான். இவ்விதமாக உத்தரகுமாரன் சொல்லக்கேட்ட விசயகாண்டீபதரன் ஆகா கா வென்று கையமைத்துக் கல்வியின்சாரமும் செல்வியின் அபாரமும் கைப்படைவீரமும் விற்பன விவேகமும் கற்பனை கடந்த கருணையுதாரமும் காமன்மயமும் சேமன்ஜெயமும் காரியசித்தியும் கூரிய புத்தியுமுடையகாவலன்மகனே உன்தங்கையாகியஉத்தரகுமாரத்திக்கு நான் சிலகாலம் நாட்டியம் பழக்கிவைத்தபடியால் எனக்குப்பெண்மரியாதையாம், நீ இப்போது கொண்டநினைப்பைநீக்கிவிடு, அல்லதுஉன்னிஷ்டப்படியேகுற்றம்பாராமல் உறவுகலக்கவேண்டுமானால்நன்னலம்நற்குணம் முதலிய வாய்ந்தஉனக்கிளையவள் பொன்னிலமுதலிய மன்னவர் புகழும் பேர்படைத்த என்மைந்தன்வாளபிமன்னனுக்கே உரியவளாகுமென்றான். இப்படியே அற்புதமாய் விளம்பிய பற்குனன் மொழியைக்கேட்டு அவ்விடத்திருந்தசாத்திரசம்பன்னரும் தருமராசன் விராடராசன் முதலியபேரும் இதுதக்கதென்று, சம்பிரமங்கொண்டாடினார்கள். உடனே விராடபூபதியானவன் கலியாணமுரசவாத்திய முழக்கிவைத்து பந்து மித்திர பார்த்திபர் தமக்கெல்லாம் பாண்டவர்கள் விராடபுரத்திலிருக்கின்றார்களென்று ஓலைகளெழுதி தூதர்வசத்திலனுப்பியறிக்கைவிட்டான். இதிப்படியிருக்க; விராடராசனுடைய மூதற்குமாரன் சுவேதனென்பவன் கைலாசபதியைக் குறித்துத்தவஞ் செய்யப்போனானென்று முன்னமேசொல்லியிருக்கின்றேனன்றோ, ஓ ஜெனமேஜெயமஹாராசனே

அந்தச்சுவேதனனவன் மனோபக்திமாறாமல் வைராக்கியநிலைகற்று மஹாதேவனைக்குறித்துத் தவமிழைத்து தாழ்ச்சியில்லாத காட்சியும்பெற்று எந்தஆயுதம் பிடித்துப்போர்புரிந்தாலும் திரிபுவனத்தையுஞ் சேதிக்கும் படியாய் அருள்பெற்று மற்றெவரும் எதிரில்லாமலுற்று வெற்றிபெறும்படியாயிருக்கின்ற சித்தியை முத்திக்கு வித்தாகிய ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியறிந்துஇனிமேல்நாம் குருக்ஷேத்திரத்திற் கூட்டிவைக்கப்போகிறயுத்தத்தில் இவனொருவனைவிட்டு விடுவது யுக்தமல்லவே,எவ்விதத்திலுமிவனைக்கொண்டுபோகவேண்டுமென்று அவனிருந்த இடத்திற்குப்போய் பிரிந்துபோன உம்மைப்பார்க்க இத்தனைநாள்சென்றதென்றுஉபசரித்துப்பரிந்து,அழைத்துவந்துதனக்குண்டாயிருந்தபகைவர்களையெல்லாம் அவனாற்போக்கிக்கொண்டு, துவாரகாபுரிக்குப்போய் அந்தச்சுவேதனுக்குவிருந்து செய்வித்துவெகுமதியளித்து கேளிக்கை முதலாகியசம்பிரமங்களில் காலதாமசம்பண்ணிக்கொண்டு பாண்டவர்கள் வெளிப்பட்டசமாச்சாரம் இன்றைக்குவருமோ நாளைக்கு வருமோவென்று எம்பிரானிதயத்தில் எண்ணமுற்றிருக்குஞ்சமயத்தில்தூதர்கள்ஓலைகொண்டுவந்துகொடுத்து, வணங்கினார்கள். அந்தச்சுருளையவிழ்த்து பலபத்திராருக்கெதிரில் படித்துக்காட்டி அண்ணா; நமது பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் அகற்றிவெளிப்பட்டார்களாம் இதல்லாமலும் உமது மருமகன் அபிமன்னனுக்கு திருக்கலியாணம்நடக்கப்போகின்றதாமென்றுசொல்லி நீருண்ட கருங்கடல்போல் நிறங்கொண்ட கோபாலன் பலராமன் சாத்தகிகிருதவன்மன் கிருதவிரியன் முதலாகிய குடும்பங்களும் வண்டுசெறிந்த மலர்மாலையணிந்த சுருள்கருங்கொண்டைசிறந்ததங்கை சுபத்திராதேவியும் அபிமன்னனும்கூரியவேற்படைகொண்ட சுவேதனும் குடிபடைகளும் சூழ்ந்துகொண்டு வரும்படிக்குக் கூட்டிக்கொண்டு விராடபுரம் வந்துசேர்ந்தார்கள். இப்படியே மேகவண்ணனாகிய கண்ணனும் அவரண்ணையனும் வருகின்றார்களென்று தூதுவரால்கேள்விப்பட்டு சோகநீங்கி சுகம்பெற்றிருந்தபாண்டவர்களும் விராடராசனுடன் வேதநாயகனைக்காணவேண்டுமென்று எதிர்கொண்டு சென்றுகண்டு இருவர்தேகமும் ஒன்றென்று சொல்லும்படியாய் இறுகத்தழுவியணைத்து ஆகாயமளாவிய சிகரகோபுரஞ்செறிந்த பேரவையிலழைத்துவந்த பலராமன் சாத்தகி யாதவகுமாரர்முதலிய பேர்களுக்கும் அரவணைப்பள்ளி நீங்கிய ஆதிமத்தியாந்தரகிதனோடு வந்த பெரியோர்முதலிய உரியோர் யாவர்களுக்கும் தகுதியாகிய சன்மானமும் ஆசனமும் வெகுமானமுங்கொடுத்து பிரியவசனங்கள் பேசிக்கொண்டார்கள். மந்திரி பிரதானிகள்சிலரும்வந்தவர்யாதவர்முந்தினவர்பலரும் மரியாதைகுறையாமல் வணங்கினின்றார்கள், சுபத்திராதேவியும் யாதவஸ்திரீகளும் ஸ்ரீகிருஷ்ணபிரானுடைய அஷ்டபாரியர்களும் தேவகிதேவியார் உரோகணிதேவியார் மற்றுமுள்ள தாய்மாரும் திரௌபதாதேவியிருந்த அந்தப்புரம்போய்ச்சேர்ந்து சகலவித மரியாதையுடன் உபசாரமும்பெற்றுஅன்புபாராட்டி சுபங்கொண்டாடியிருந்தார்கள்.

இப்பால் அபிமன்னனெருங்கி தந்தையர்களை வணங்கி பாஞ்சாலியைப் பணிந்து மாஞ்சோலைக்குயில்கூவும் உன்னுடைய மச்சநாடனுக்கும் வந்தனந் தந்தான், அவர்களியாவரும் ஆலிங்கனம்பண்ணி ஆசீர்வதித்து அதிசயமடைய

ஆண்மையுடைய பாண்டவர் பக்கத்தில் இளஞ்சிங்கம் வீற்றிருக்குந் தன்மை
போல் இருக்கச்செய்தார்கள். அப்போது அந்தப் பிள்ளையைப்பெற்றவர்கள்
கண்டு மிகவுமகிழ்ந்து வியப்புடன்புகழ்ந்து நயந்து வியந்து பூர்வஞ்செய்த புண்
ணியபலமே பிள்ளையாகப்பிறந்ததென்று கொள்ளைகொள்ளையாய் கொண்
டாடிக்கொண்டிருக்கும்பொழுது தருமசொரூபமுள்ள தருமராசன்விடாத
கடாக்ஷவீக்ஷண்யப் பார்வையால் வீரப்பிரதாபத் தோள்பூரித்த அபிமன்னனை
நோக்கி ஸ்திரமானவார்த்தைகளைப்பேசி சொல்லுக்குச்சொல் சாஸ்திரயுக்த
மாய்ச்சொல்லுந் துணிவைத்தேர்ந்து ஆசைமேலிடச்சிறந்து அகமகிழ்ந்திருந்
தார். இவ்வகையாகப்பெரிய தந்தையினிடத்திற்பேசிய அபிமன்னனும் மரு
மகன்றிறத்தால் மாமனாகப்போகிற விராடராசனும் மைத்துனனாகிய உத்தர
குமாரனும் சுவேதன்முதல் மற்றுள்ளோரும் சுதக்ஷணாதேவியும் கண்களிகூர்
ந்து செவிகுளிர்ந்து முகமலர்ந்து அகமகிழ்ந்து ஆநந்தங்கொண்டாடினார்கள்.
இப்படியாக விருக்கின்ற சமயத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவருட்பய
னால் விராடபுரம் வந்துசேர்ந்த சுவேதனென்பவன் தன்தந்தையான விராட
னையும் சிறியதந்தைமார்களையும் தருமராசன்முதலிய பேர்களையும் தாயாகிய
சுதக்கணையையும் பணிந்தான்; இவர்களெல்லோரும் ஏந்திமுத்தமிட்டார்கள்,
மச்சராசனொருவனும் இச்சைமேலிட்டெழுந்து மைந்தன்மேல் விழுந்து
விலைகக்கொழுந்தேயென்று மார்போடணைத்து புயத்துடன் புயமொத்
திமுகத்துடன் முகஞ்சேர்த்து இருகரத்தையும் எடுத்துப்பிடித்து உச்சி
மோந்து கருத்திறைக்களித்து கண்ணருள்தழைத்துச் சிலமொழிபுகன்
றான். அப்பா! ஐயா! என்கண்மணியே நீ எந்த இடத்திலிருந்தாய் நந்த
வண்ணனுயக்கிளைய நந்தகுமாரன் உன்னையெங்கே கண்டார், இவருடன்கூடி
நீயெப்படிவந்தாய் எவ்விடத்தில், நீங்களிருவருஞ்சந்தித்தீர்கள் இது எனக்கு
நல்லகாலம் என் மனங்குளிரச்சொல்லையா என்சுதனாகிய சுவேதனையென்று
விராடராசன்கேட்க கடல்நிறவண்ணைக் கண்ணன் சொல்லத்தொடங்கினான்.
ஓ! விராடபூபதியே உமதுகுமாரன் தவவேடம்பூண்டு அருந்தவமிருந்து சிவ
னருள்பொருந்திப் பெருந்திறற்படைகளும் பெருமையும்பெற்றான் இத்தன்மை
யாகச் சித்திபெற்றிருக்கிற திடத்தையானறிந்து இந்த உத்தமனை யானழைத்
துக்கொண்டு துவாரகைக்குவந்து எனக்கு அசாத்தியமாயிருந்த சத்துருக்களை
யெல்லாம் இவனாலொழித்துவிட்டு இவனுக்கு விருந்துமுதலிய வுபசாரஞ்செ
ய்து என்னிடத்தில் வைத்துக்கொண்டிருக்கும்போது நீங்களெழுதியனுப்பிய
ஓலையைக்கண்டு மச்சநாடடைந்தோம் பூபாலவென்றுகோபாலன்சொல்ல, அச்
சொற்கேட்ட விராடராசன்பக்ஷமேலிட்டு மகன்வனத்திற்சென்று தவம்புரியப்
போனதுமுதல்வந்ததுவரையிலும் சாங்கோபாங்கமாக க்ஷேமலாபங்களைவிசா
ரித்து பலகவொன்றும் யானைகளைக்கொல்லுகின்ற சிங்கம்போன்ற பாண்டவ
ருடன் யாவரையும்பணிந்து சபாமண்டபத்திற்பொருந்தியிருந்தார்கள். விராட
ராசனுடைய மற்றப்பிள்ளைகள் யாவரும் தமயனாகிய சுவேதனை சாஷ்டாங்க
மாகத்தொழுது அவனாலுபசரிக்கப்பட்டுத்தருக்கியிருந்தார்கள். அன்னையாகிய
சுதக்ஷணாதேவியும் தன்னைப்பணிந்த சுவேதனைவாழ்த்தி பொன்னுக்கிணை

யாகிய புத்திரியின் கண்ணுக்கினிமையான கணவனைப்பார்த்துக் களிப்போடிருந்தாள். அதுவேளையில் பாஞ்சாலதேசராசனும் சோமகர்களும் அவர்கட்குரிய நால்வகைச்சேனைகளும் இளம்பஞ்சபாண்டவர்களும் திருஷ்டத்துய்மன் முதலாகியபேரும் வந்தார்கள், அவர்களை விராடராசனும் பாண்டவர்களும் எதிர்சென்று கண்டு ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு தகுந்தமரியாதைகளுடன் புகழ்ந்து சபாமண்டபஞ் சேர்ந்திருந்தார்கள். இப்பால் குந்திபோஜகுலராசர்களும்மந்திரதேசாதிபர்களும்புத்திவர்க்கங்களும்மித்திரவேந்தர்களும் பாண்டிநாட்டரசரும்சோழராசனும் சேரபூபதியும் மற்றதேசாதிபர்களும்இன்னம்பலபலதேசத்திறைவரும்வன்னவன்னவாகனமேறிவந்தார்கள், அன்னவர்க்கெல்லாம்மன்னவர்வரிசையிற்சொன்ன வண்ணங்குன்னமில்லாமலுபசரித்து ஆசனத்திலமர்த்தினார்கள்வந்தவேந்தர்கள்.சிந்தைநொந்துபாண்டவர்களைப்பார்த்து அந்தோ நீங்கள்பன்னிரண்டாண்டுங்காட்டில்வாசம்பண்ணும்படியாயும்நாங்களுங்களைப்பிரிந்திருக்கும்படியாயுநேரிட்டதல்லவா! ஆகா! வினையேயென்று மனநொந்தார்கள்.தம்மைக்குறித்துவெம்மையடைகின்ற தராதிபர்களைத்தருமராசன்நோக்கி சகலசாத்திரங்களுங்கற்றசம்பன்னர்களே மேல்வினையெவனாயுமிருந்திடாதேமேதினியிற்பிறந்த வேதனாலும்வினைக்குப்புறம்பாய்மீளப்போகாதே ஆகையால் நடந்துபோன காரியத்தைப்பற்றி விசனப்படுவதினால் லாபமொன்றில்லை இனிநடக்கவேண்டிய காரியங்களை நன்காராயவேண்டியதென்று சாந்தமாகப்பேசி ஓ! தரணிபர்களே; தாமரைச்சேக்கையிற்படுத்த அன்னங்கள் அம்மலர்த்தேன்களானனைந்த இறகுகளைவானத்தில் விரித்துலாவச்செய்கின்ற வண்மையும் தானத்தைப்பொழியுந் தந்தாவளத்திண்மையும் நீர்வளநிலவள நன்மையுமுடைய இந்தமச்சராசன்வசந்தகால மன்மதன்போன்ற மகாராசன் இவருடையநாட்டிற்கு நாங்களெப்போதுவந்தோமோ அப்போதே காட்டிற்றிரிந்த வருத்தமும் எங்களைபாட்டிவருத்திய தீவினைப்பொருத்தமுங் கேட்டையடைந்து போய்விட்டது. இந்த அன்பருடைய பேருதவியால் துன்பகன்றிருந்தோம். முன்பு நான் மாட்டிக்கொண்ட தெவ்வாறென்னில் சுரலயை பேதமில்லாத சரிகமபதநியென்னும் சப்தசுரதாதுடன் சேர்ந்த குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் இவைமுதலிய ஏழிசைப்பாடலுக்குவிரும்பிவந்துருவாகிய அசுணப்பக்ஷிகளானவைபறையடியோசைகேட்டு சிறையாடியயர்ந்து கைப்படுமாறுபோல் விண்ணுக்கிறைவனென்பதுபோன்ற மண்ணுக்கொருவனெனவாண்ட திரிதராட்டிர • மஹாராசனென்னும் எமது பெரியதந்தையின் வார்த்தையால்மயங்கி துரியோதனன் சகுனி துச்சாதனன் கன்னன் இவர்கள் கூடியெண்ணிய வஞ்சனையிலகப்பட்டு மாய்ந்தவாறுபோற்றேய்ந்து வருந்தினேன். இனி நான்செய்யவேண்டிய காரியமென்னை, நீங்களிருவரும் என்னைக்காக்கும்படி கண்ணுக்கிமைபோற் கலந்திருக்கின்றீர்கள் உங்கள் சித்தம் என்பாக்கியமென்று மெத்தவருந்தியுரைத்த உத்தமன் சொல்லைக்கேட்ட கொற்றவர்பலரும் பதைபதைத்துஇப்போதிவ்விடத்திற் சேர்ந்திருக்கின்ற நாமெல்லோரும் இதுவேபயணமாகப்புறப்பட்டு இன்றைக்கே சண்டைவிளைத்துத் துரியோதனன் மண்டையோலையைக்கிழித்து அவனுக்குத் துணை

வந்தவர்களைக்கொன்றுகழித்துசெயஞ்செயமென்னவென்றுவருவோம்வாருமென்றுதருமநந்தனன்க்ருத்திற்குப் பொருத்தமாகவற்புறுத்திச்சொன்னார்கள். இன்னவாறு மன்னர்மன்னர்கள்பின்னிடையாமல்முன்னிட்டுரைத்த மூர்த்தண்யமொழியை விராடர்கோன்கேட்டு சபையைவிட்டெழுந்துசாஷ்டாங்கமாகவிழுந்து கோபாலகிருஷ்ணனைச்சிந்தித்து பூபாலவேந்தனைச்சந்தித்து இருகரங்குவித்து வந்தித்து தான் சிந்தித்திருந்ததைத் தெரிவித்துக்கொண்டான் அதாவது இங்கிலங்காக்கு மிறைவர்காள் கேண்மின்மலைகள் மதித்துத்துதித்து வணங்கப்பூரித்த புயமும் நீதிசாஸ்திர நெறிமுறைப்பயனும் சொற்பொருணயமும் விற்பன விசயனும் சௌந்தரியமும் கூர்வேல்தாங்குந்தைரியமுமுடையபாண்டவசுபுத்ரனென்னும் அபிமன்னராசனுக்கும் என்தவக்கொழுந்தாகிய உத்தரைக்கும் கலியாணவைபவம் கண்டருளியபிற்பாடுவாளைகள்பாய கமுகம்பாளைகள்சாயவனிதையரூடிமகிழ்நருங்கூடி விளையாடும்வளமாகிய குருநாட்டைச்சண்டையிட்டுவாங்கப்புறப்படுவோம். அதுவரையில் நீ விரியாவருமன்னிக்கவேண்டும் மேலும் மாயனுக்கு மருமகனாகவாய்த்த வாளபிமன்னன் எனக்கு மருமகனாகவாய்க்கின்றமையால் பற்பலதேசாதிபர்கள் இராசாதிபர்கள் வரும்படியே முன்னைப்பிறப்பிற்செய்தமுதுதவம்இப்பிறப்பிற் கைவல்லியமாச்சென்று சிறப்புற்றேன்மாலைதாங்கிய வண்புயமோங்கிய மன்னவர்களே! சீக்கிரத்தில் முகூர்த்த நடக்கும்படியாகச் செலவுகொடுத்தருள வேண்டுமென்று சந்தன பாளித புஷ்ப தாம்பூல பலாதிகளுந் தட்டுத்தட்டாய்வைத்து முட்டுப்பாடில்லாமல் கைகட்டிக்கொண்டு விராடராசன் கேட்டான். அதன்மேல் சகலருஞ்சம்மதித்து தருமராசனது தயாநோக்கத்தைநோக்கி அவ்வாறு நடாத்துவதே அதிகஸ்ய அதிகபலமென்றார்கள். அப்போது அன்புக்கொருவித்தாகிய தருமராசன் சொல்லியதும் அவர்மொழியைக்கேட்ட ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி முதலாகியபேரும் புயங்கள் குவிந்து சுபங்கள்மலிந்து அகமுகமலர்ந்து ஆசைமேவிட்டார்கள். பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம்பணணப்புகுந்த காலையிற்பிரிந்த தௌமியரும் பன்னீராயிரம் பிரமஞானிகளும்வந்தார்கள். அவர்களைக்கண்டு அன்புமேற்கொண்டு சுவாமிகளே எங்கள்தொண்டு அகன்றதென்று புகன்று சரண்மேற்பணிந்தார்கள். அவ்வாறு உபசரித்துத்தொழுத ஐவர்கட்கும் ஆசீர்வதித்து திரௌபதாதேவி வேதிகைசுபத்திரை ரேணுமதி விசயை முதலியபேரும்பணிந்தார்கள்; அவர்களுக்கும் மங்களாசாசனஞ்சொல்லி இளம்பஞ்சபாண்டவர்கள் வமிசாதேயன் அபிமன்னன் நிர்மித்திரன் செயக்ஷேத்திரன் முதலியபுத்திரர்களும் பத்தியாய்ப்பணிந்தார்கள். முத்திக்குமூலமாகியமுனிவரர் வாழ்த்தி முத்திக்கும்புகழும்படி கீர்த்திபெறுங்க ளென்றிசைத்து தருமநந்தனைப்பார்த்து ஓ! தனிகமே எம்மைவிட்டு நீங்கி அஞ்ஞாதவாசமிழைத்த ஒருவருடம்வரையிலும் நடந்த சங்கதி யாவும் உரைத்தருளவேண்டுமென்று கேட்டார்கள். இப்படியாகக்கேட்ட தௌமியர்முதலிய மகான்களும் மன்னவர்களு மகிழ்வுறும்படியாய் நிறைவுறுஞ்செய்திகளைக் குறைவறக்கூறினார். இவ்வண்ணந் தருமராசன் சொல்லக்கேட்டுச் சந்தோஷித்து முனிவரர்களையும் தௌமியாசாரியரையும் பார்த்துக் கைகுவித்து வேதவேதியர்களே நமது

வாளபிமன்னனுக்கும் உத்தரகுமாரத்தியாருக்கும் பாணிக்கிரகணமுகூர்த்தம் நடக்கவேண்டியபடியால்இதற்குத்தகுந்த நாள்வைக்கவேண்டுமென்று தருமராசனும் விராடராசனும் விளம்பினார்கள். அவ்வாறே நன்கென்று நக்ஷத்திரம் இலக்கினம் திதி ஒரை யோகம்கரணம் பொருத்தம்திருத்தமாகிய விவாகசக்கர முதலியவுஞ்சோதித்து, தாங்கள்கற்றுணர்ந்ததருமசாத்திரத்திறங்களெல்லாங் காட்டித் தகுதியான பலங்களுரைட்டி முகூர்த்தநாள் வைத்தார்கள். அந்தக்கலியாண நாள்வரையிலும் பந்தர்ப்பாடிகள்முதலிய அலங்காரங்கள் பண்ணவேண்டியிருப்பதால் பாண்டவர்களையும் அவர்கட்கு வேண்டியவர்களையும் உபலாவியத்திற்கனுப்பிவைத்து அவ்விடத்திற் சவுக்கியமாயிருக்கும்படிசெய்து சகலசாமக்கிரியைகளும்உடுப்பனமுதலியஉசிதங்களுங்கொடுத்து ஒருநாளைப்போல பலநாளுஞ்சலிப்பில்லாமல் விசாரணைசெய்துவந்தான். இவ்வாறு தடையற நிறைவேற்றிய விராடராசன் தனது நகரலங்காரஞ்செய்யும்படியாய்ப்பேரிகை முழக்கிவைத்து, கருங்கடற்கலையுடுத்த காசினியையாளுங் காவலர்க்கெல்லாம் கலியாணவோலையுந் தூதும் ஒருமிக்கவிடுத்துவிராடபுரமுழுதும் பவளக்கால் நாட்டி தவளவிட்டம்பூட்டி மரகதவோலைகணிட்டிவச்சிரப்பிரதிமைமாட்டி மாணிக்கமலர்மாலைதூக்கி முத்துக்கொத்துவடங்கள்வீக்கி ஆணிப்பொன்இரேகைய்மைத்து, தொங்கொளிவட்டம் சுவரொளிவட்டம் நிலவொளிவட்டம் நிழலொளிவட்டமுதலிய தூங்காவிளக்குப்பாங்குறவமைத்து, வாழை கமுகு மாங்கனி பலாக்கனி தாழையிளநீர் சரக்கொன்றையீந்து பாளைகரும்பு பற்பலமலர்களும் இரசிதக்குண்டு சாலர்கள் சடைமாலைகள் தமனியப்படங்கள் , நிலக்கண்ணாடி நிலைக்குங்கண்ணாடிகள் முத்தின்பூண்கள் இரத்தினப்பூண்கள் வேடிக்கைமான்கள் விநோத ஆனைகள் வாரணங்குதிரைகள் வத்திரசித்திரங்கள் தோரணசிலைகள் சோடித்தவரைகள் மேல்விதானங்கள் விதவிதக்கொடிகள் பலவிதக்குடைகள் பைம்பொன்மேடைகள் வேதிகைச்சாலைகள் மென்மலர்ச்சோலைகள் கும்பக்குடங்கள் கூடமாடங்கள் விம்பவேடங்கள் வெயில்மணிச்சிகரங்கள் எண்டிசையண்டருங்கொண்டாடச்சமைத்து, சாந்து சந்தனத்தினல் தரையெலாமெழுகி முத்துச்சுண்ணத்தினல் மொக்கிட்டு கலியாணமண்டபக் கவசந்திருத்தி மணவறைமாலைபொருத்தி மதுகரநிறைந்த பூமாலை மகிழ்ச்சி சிறந்தபொன்மாலை வாடாப்பவளமலர்மாலை தேடாப்படிகத்திரண்மாலை ஆணிமுத்துமாலை அழகியரத்னமாலை அரிமரகதப்பசுமாலை அரவின்மாணிக்கமாலை வச்சிரமாலை முதலிய பலவகைமாலைகளும் புகழ்மாலை கண்டு பூமியோர்கொண்டாடச் சோடித்தார்கள். இப்பால் கலியாணவாசலில் சாலுடன்கரகம் முளைப்பாலிகை தழல்வளர்க்குமேடை குடவிக்கு வாடை அரசு ஆல் முருக்கு இம்மூன்றிலொன்ருவது அல்லது இம்மூன்றுஞ் சேர்ந்தாவது நாட்டுவதற்கு அரசாணிக்காலெனப்பெயர்பெற்றதுவும் மாவிலை தருப்பை அறுகு மஞ்சள் குங்குமம் சந்தனம் தாம்பூலம் வாழைப்பழம் தேங்காய் புட்பம் வெல்லம் அக்ஷதை சாம்பிராணி குடம் சமித்து நெய் இன்னமுள்ள பாலொடுதயிரும் பயறொடு பொரியுமமைத்து நாளையுதயத்தில் பத்து நாழிகைக்கு முகூர்த்தமென்று பாண்டவர்களுக்குத் தெரிவித்துந் தன்னுடு

முதலிய பன்னாட்டுக்கும் பறைசாற்றுவித்தான். இச்சங்கதியைக்கேட்ட தருமராசன் முதலிய தந்தையர்களும் பந்துவருக்கத்துடன் செயமென்றெ ழுந்து சிந்தைமகிழ்ந்து தேவாலயம் விஷ்ணுவாலயங்களுக்குப் பூசைகளெல் லாஞ்செய்து திங்கள்மரபிற்றேன்றிய சிறுவனை மணக்கோலமாகக்கொண்டு போகவேண்டுமென்று பொங்குந்தடத்துப் புதிதநன்னீரைத் தங்கக்குடத் திற்றனெடுத்து வந்து சங்கையில்லாத சாத்திரம் பாராட்டி ஓங்கியபுதல்வ னையுவந்து, நீராட்டி வெண்டுகிலால் நீர்துவட்டிச்சிங்காசனத்திலேற்றிச் சிகை சிவிவகுந்து சிலம்பணிபுனைந்து தேமலரணிந்து திரிபுண்டரந்தீட்டித்திலகமுங் காட்டிக்குண்டலமாட்டிப்பச்சைக்கன்முருகிட்டுமுத்தாரமுதலியபொன்னாரம் வித்தாரப் பதக்கங்களுந் திருமுடிபொருத்தி தங்கச்சஞ்சந்தரித்துப் பாஜி பந்துதோளணியுடன் நாககங்கணங் கடகங்களையாழிபூட்டி அரைப்பட்டிகை அரைஞாண் வீரகண்டை முதலியவைகளும் வீக்கி திவ்வியவேஷ்டிகளால் அலங்கரித்து உயரமுஞ்சுற்றும் உன்னதமாக்கி ஏழுறுப்பும் பூமியிற்படிந்து கிம்புரிப்பூண் கொம்புகட்கிட்டு முகபடாஞ்செறித்து கவுட்குழிக்கன்னமகரி ரிகை பொறித்துக் கும்பக்கலசஞ் சொம்புடனமைத்து வெண்கவரி செங்கவரி தூக்கி ஒன்பதுவகை இரத்தின அவுதாவமைத்து அரசக்களிறுகிய பட்டத்து யானைமேல் அபிமன்னனையேற்றிமுத்துக்குச்சுடன்பவளமமைந்தசந்திரவட்ட க்குடைகவிக்கவெள்ளைக்கொடிகனெருங்க ஆலவட்டஞ்சுருட்டிப்பீலிக்குஞ்சம் மேற்கட்டி தோரணமுதலியவைநெருங்க இளம்பஞ்சபாண்டவரைஞ்சுபேரும் பஞ்சவர்ணக்குதிரையேறிப் பக்கத்தில்விடுக்க மத்தகஜத்திலமர்ந்த மற்றப் பிள்ளைகள் சுற்றுநடக்க பல்லக்கிலேறிய பார்த்திபர்முடுக்க மல்லர்கள் சிலம்ப, வரிசைமுன்கொடுக்க மாதவர் வேதியர் வானோர்களடுக்கக் கீதநாதக்கிளரொலி தொடுக்கமதகஜபேரிகடன முன்னடிக்கத் தூரகஜதுரகமி சுராஜதியடுக்க ஐந்து கருவியும் முந்திமுன்னேங்க பந்திபந்தியாய்பந்துஜனம்வேந்தர் அந்தணர் ஆதுல ர்க்குத் தானங்கொடுத்துக்கொண்டுபோக மத்தளதாளமேளத்துடன் நாட்டிய மாதர்கள் நடிக்கச் சங்கு சிங்கநாதக்கொம்புபிடிக்கக் கட்டியக்காரர் மன்னர் களைச் சுட்டிக்காட்டிக் கொண்டாடப்பட்டுவாரன்கள் வேந்தர்களின் பிரதாப விருதுகளை யெடுத்துப்பேசக் குலமுறைவந்திப்போர் தலமுறையடுக்கக் கூறப் புகழ்வோர்தொடர்ந்து அடர்ந்துவந்தொதுங்க இந்திரவாத்தியந் தும்தும்தும் மென எண்டிசையுஞ்செவிடுபட்டொலிக்க நந்தகோபாலரும்தந்தவண்ணனும் கொந்தலர்க்கூந்தலார்வந்தவர்பலரும் தேரின்மேலும்வண்டிகள்மேலுஞ்சென் றார்கள் திரௌபதாதேவியும் சுபத்திராதேவியும் அஷ்டலக்ஷ்மியான பாரியர்க ளும் ஆயமாதரும் முத்துப்பவளம் மாணிக்கத்தாலமைந்த சித்திரப்பல்லக்கி லேறிச்செல்ல ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுஞ்சென்றனர். இப்படியாக இவர்கள்வரப் பார்த்த ஆரியர்களும் சீரியர்களும் பூமாரி பொன்மாரி மணிமாரி நவதானிய மாரி அக்ஷதையுடன் வாரிச்சொரிந்து வாழ்த்தினார்கள். மங்கிலியப்பெண்டு கள் மகிழ்ந்து, மஞ்சள் குங்குமம் தாம்பூலம் தேங்காய் வாழைப்பழமுத லிய மாங்கனி தேங்கனி இவைகளை வருவார்போவாராகிய மங்கையரைப் பூசித்து, விசுவாசித்துக்கொடுத்துப்போற்றினார்கள்; தண்ணீர்வெந்நீர் தயி

பெருக்கியநீர் உண்ணீருண்ணீரென்று, உபசரித்து வழியிளைப்புமாற்றினார்கள், இவ்வாறாகிய எக்களிப்புடன் விவாகமுரசங்களும் தியாகமுரசங்களும் பூரணக்கலசங்களும் தோரணமாடங்களும் வாரணகூடங்களும் ஆரணபாடங்களும் கோபுரவிசேடங்களும் பவளப்பட்டை முத்துப்பட்டை பத்தியாய்ப் பித்தியாய் அடித்திராநின்றசுவர்களும் திண்ணைகளும் தெருவாசல்களும் பனிநீர்தெளித்துக்கோலமிட்டுத் தீபமேற்றிவைத்து, முத்தாலாத்திபவளாலாத்தி நீராலாத்தியெடுத்து, கண்ணெச்சில்கழித்தலும் மங்கல லாலி சுபசோபன வாழிப்பாடல் படித்தலும் கையைச்சுழற்றிமடக்கி கன்னத்தில் நெட்டையொடித்தலும் இப்படிப்பட்ட மணமகன் நமக்கிசையாமற் போனானென்று கன்னியர்கலங்கிக் கவலைகொண்டு, துடித்தலும் கட்டிளமாதர் நடித்தலும் இவ்வாறாக இன்னம்பலவிதச் சிங்காரவலங்காரங்களையுடைய விராடபுரவீதியைக்கடந்து, பவனிவருகின்ற பரந்தாமன் மருகனைக்கண்டு மாதர்மயங்கி வழிமேற்பணிந்து, மயல்கொள்ளும்படியாய் விவாகமண்டபத்தின் முன்முகப்பிற்கு வந்தார்கள். இவ்வண்ணமாக கோலங்கொண்டுவந்தவர்களபிமன்னனைச் செவ்வண்ணமேனிச் திரஷ்டத்துய்மனும் திருமாலும் பெருமன்னர்குழுவுங்கைகொடுக்க மேகம்விட்டிழியு மின்னொளிபோல் பட்டத்துயானை விட்டிழிந்து பிராம்மணர் முனிவர் பாவலர் பூவலர் கோவலர்முதலிய வெவரையும் பணிந்து, குருசாமியார் பெண்கொடுக்கவருமாமியார் இவரிருவரையும்போற்றி அவர்களன்புறவளித்த அருண்மொழியும்பெற்றுச் சம்பிரமமாகச் சதிர்ச்சாலையிலிருந்து, உம்பர்கொண்டாடச் சுவர்ணதானமளித்து, ஓங்கிய தருமதானம்புரிந்து, உற்றார் பெற்றார் கற்றார் பரிந்து உடனிருந்து விருந்து அருந்தச்செறிந்து, வருந்தி உபசாரவரிசையளித்துவரும்வண்மையைக்கண்டு, மகிழ்வுற்ற வாளபிமன்னனை முகூர்த்தசமயமென்று தௌமியர்முதலிய முனீஸ்வரர்கள்வந்தழைத்தார்கள். உடனே கலியாணமாப்பிள்ளையானவர் இராஜவைபவத்துடன் கைலாகுகொடுக்குங் காரியஸ்தர் பக்கத்தினெருங்க மணப்பந்தலில்வந்தார். அப்போதங்கிருந்த வேதவேதியரியாவருமெழுந்து, வேதநான்குமொழிந்து, மன்மதனுந்தலைசாய்க்கும் வடிவமைந்த மால்மருகனை வாளபிமன்னனை அறுகாற்பீடத்திலேற்றி மங்கிராட்சதையுடன்வாழ்த்தி மான்போலும்விழியுடைய உத்தரகுமாரத்தியை தேன்போலுஞ்சொல்லமைந்த சேடியர் இரதிதேவியைப்போற் சிங்காரித்து சகலவிதமேளசம்பிரமங்காட்டித் தலைவணங்காநாணத்துடன்கூட்டிவந்து, நாயகனுக்குவலப்பாகம்வைத்து, திரையான்மறைத்து, நலங்குமுதலிய சடங்குகளும்புரிந்து, நாகரீகமாதர் வாழ்த்தொலிசெய்ய சிலம்பொலிக்காலால் பிரதட்சணம்வந்து அந்தணர்வேதமந்திரமோதச் சந்திரகுலத்திந்திரர்சேரச் சுந்தரக்கனல் சோதியாய்வளர நந்தகுலாதிபர் வந்தனைசொல்லக் கந்தனை கணேசனைக் கமலனைப் பூசித்து, இந்திராதியரையேத்தி வணங்கி மாசுதீர்ப்போனால் மறைநெறிமுடித்துப் பிரமசரிய விரதங்களைந்து ஸ்நானஞ்செய்வித்து முந்நூல்தரித்து வைதிகச்சடங்குமரர்க்கங்காட்டிக்கங்கணங்கட்டி சூலாழிமாட்டி கரத்தில் வாள்கொடுத்துக் கருணையாளர்க்குக் கனகமே கொடுத்து மேற்பட்டுடையைவிரித்து, மேன்மூடி விதிமுறைசெவி

யில் விதம்படவுரைத்து தேங்காய் வாழைப்பழம் சிற்சிலபுட்பம் அட்சதை மஞ்சள் அடைகாய் கண்ணாடி சந்தனம் திருமங்கிலியம் இவைகளையெல்லாம் பொற்றாம்பாளத்திலிட்டு, நற்றவர்முதலிய சுற்றவர்பலரும் உற்றார் பெற்றார் உறவினரெவரும் இருகரத்தாலும் பரிசித்து, இஷ்டதெய்வப் பிரார்த்தனையுடன் வாழ்த்தவும் தாய்தந்தையிருவரும் தத்தம்பண்ணவும் மாப்பிள்ளை மைந்தன் குருவைத் தந்தையை வாழ்த்தவும் செந்தீயினெய்யைச்சிதறுமற்கொட்டத் திரைச்சீலையைத்தாழ்த்திச் சற்றேபிடிக்கவும் செயஞ்செயமென்னவும் தேவவுலகத்தினோர்தேமாரிபொழியவும்பங்கஜமுகமாதர்வாழ்த்தவும் அங்குஜவயமள்ளர்போற்றவும் எங்கணும் பருணிதர்களேத்தவும் மதகஜதுந்துமியொலிக்கவும் சுரசதிதாளங்கலிக்கவும் சங்குமுழக்கந் தழைக்கவும் திங்கட்குலத்தார் செழிக்கவும் நன்னயவீணை யிசைக்கவும் கீதநாதங்கதிக்கவும் புள்ளாங்குழல்பூரிக்கவும் யாழ்வகைகள் மற்றகருவிகளெல்லாமிரையவும் தாரை பூரி வீரசின்னம் தடாரி பம்பை காளம் முரசம் கலியாணமுழவம் சர்வவாத்தியம் இவைகளியாவுங்கோஷிக்கவும் மறைவாணர் இறையவர்கலைவாணர்முதலானவரும் சோமசூரியாக்கினியுஞ்சாட்சியாக தாழ்ச்சியில்லாக்காட்சியுடன் கலியாணங்கண்டருளினார்கள். இப்பால் பெண்ணும் பிள்ளையும் வலமிடமாக மாறியிருந்து ஓமவிதிநடாத்தி அக்கினியிற் பொரியிறைத்து, பூரணகுந்திகொடுத்து, பிரதட்சணம்வந்து, பணிந்து, மாலைமாற்றி மறைவாணரைப்போற்றி மாமுனிவரையேத்தி மங்களாசனங்கொண்டு, பெண்ணும் பிள்ளையும் சுண்டுவிரல் மாட்டி நின்று, நிறைகுடம் வெண்சாமரம் கண்ணாடி யானைக்குடாரி மணிமுரசு விளக்கு விருதுக்கொடி இணைக்கயல் இவைகளாகிய" அஷ்டமங்கலமெடுப்பித்து, அம்மிமிதித்து, அருந்ததியைத்தரிசித்துப்பூசித்து, அரசாணிக்காலையும் ஆயிரச்சோதி விளக்கையும் நைவேத்தியத்துடன்தொழுது, மற்றப்பேர்களையும்பணிந்து திருவனையமாதரொடுத்துவராநின்ற திருவிளக்குத்துணையுடன் சிற்றறைக்குட்போந்து, வாழ்த்துதல் ஏசல்நடத்தி பெண்பட்சத்திலும் பிள்ளைபட்சத்திலும் நிந்தாஸ்துதியாகப் பிரதாபம்பேசி பிரபந்தம்படித்து, பாலும்பழமுங்கொடுத்து, மாப்பிள்ளையும் பெண்ணும் மருவியிருக்குஞ்சமயத்தில் அத்தை மாமி அம்மான் முதலியபேர்களும் மச்சான் மச்சினிமார்களும் இச்சையுடன் கொச்சைமொழிபேசி நொடித்து, வெள்ளிலைச்சுருள்மடித்து, குணப்பெண்பிடிக்க மணப்பிள்ளைகடிக்கக் கூசாமற்கொடுத் துக்கோதிவந்தெடுக்க இவ்வாறு இராசவிவாகச்சடங்கின் வண்ணமுடித்து, மஞ்சணீர் வசந்தமாடி மஹோற்சவங்கொண்டாடிச் சந்தன புட்ப தாம்பூல சுகந்த நிறைந்த பந்திச்செண்டுடன் ஆரமுமணிந்து, குந்தாதேவியார்நந்தனராகிய பாண்டவர்கட்கும் நறவேந்தர் தமக்கும் பிராமணமாதர்கள்முதலிய இராஜமாதர்கள் யாவருக்கும் சம்பந்தத்தட்டுடன் மரியாதைத்தாம்பூலமும்வைத்து, எம்மன்னருங்கண்டு, சந்தோஷப்படும்படியாய்ச் சீதனமுங்கொடுத்தார்கள்.

நவரத்னக்கசிதப்பண்கள் கூடாம் வீரதண்டை தீரண்டை அவுதாக்களுடன்சேர்ந்த யானைகள் துராமுதலிய முத்துக்குச்சுகள் கழுத்துக்குட்டிகள் துமிச்சிப்பில்லைகள் பாதசரவண்டையங்கள் பின்கவரி முன்கவரி கல்லணைகளுடன்கூடிய குதிரைகள் பொன் வெள்ளி பட்டுகள் முதலியவற்றாலாகிய பெரிய இரதங்கள் கால்பலங்கள் தாதிகள்சேடிகள் தோழிகள் நல்லஆளடிமைகள் பால்பொழிமாடுகள் மேலுயர்ந்த வீடுகள் வளப்பமுள்ளமாடுகள் இளப்பமில்லாத காடுகள் ஜோதிப்பிரகாசம்பெற்ற ஆபரணத்திணுசுகள் பலவித வஸ்திரப்பட்டுப்பட்டாவளிகள் இந்திரநாட்டிலும் பூவேந்தர்நாட்டிலும் அசப்

படாத அருமையான வஸ்துக்கள் சித்திரப்பொம்மைகள் விசித்திரப்பஞ்சணை கள் பெட்டிபேழைகள் தங்கக்கட்டிமாடைகள் பஞ்சலோகப்பாத்திரங்கள் அவள்படித்த சாஸ்திரங்கள் இவைகள்முதலிய யாவும் விராட்டராசன் தன்மக ளுக்குச் சீதனமாகக்கொடுத்ததைக்கண்டு, இராசராசர்களெல்லாருஞ் சிரக் கம்பஞ்செய்தார்கள். இதன்றியும் இந்தக்கலியாணத்துக்கு வந்த காசாம்பூ வண்ணன்முதலாகிய காவலர்களுக்கும் குந்திதேவியின்புத்திரர்களாகிய பாண் டவர்களுக்கும் விராடபுரத்திலுற்ற சகலருக்கும் வேறுவேருய் அவரவர்களு டைய ஆசார பூசாவிதிகுலமுறைக்கடுத்ததாய்திருந்திய, போசனமும் வெகு மதிகளும் சந்தன தாம்பூலங்களும் தாழ்ச்சியில்லாமற்கொடுத்து, மரியாதை செய்து, பூசித்தான் நேசித்தான்விசுவாசித்தான் விராடராசனுனவன்; பின்பு க்ஷத்திரிய விதிப்படி ஐந்துநாளும் ஓமஞ்செய்து கங்கணவர்ச்சிதங்கட்டி மங்கள நீரும் ஆட்டி நல்லசுபமுகூர்த்தத்திற்கூட்டி காப்புதான முஞ் செய்து, நற்பயன்சேர்ந்த நலம்போற்செறிந்த விற்பனவிவேகிகளாகிய பெண்ணும் பிள்ளையும் சொற்பழுதுருமல் அற்பமேனும் ஒருவரைவிட்டொரு வர்பிரியாமல் கற்பனையலங்காரம்போற்கலந்து வாழ்வுற்றூர்கள்.

மந்திராலோபங் கிரியாலோமில்லாமல் வளர்த்த ஓமாக்கினியாகத்தால் முப்பத்துமுக்கோடி தேவர்கள் அஷ்டவசுக்கள் திக்குப்பாலர்கள் துவாத சாதித்தர்கள் முதலியபேர்களுந் திர்ப்தியடைந்து, களித்தார்கள். பூசித்தன் புடனளித்த பெரும்பொருட்குவையால் வேதவேதியராகியசாதியரியாவரு மிக்ககளிப்படைந்தார்கள், கனிந்துநற்கவிசொலுங் கவிவாணர்களெல்லாருங் கனகக்கொடையாற் கலிநீங்கிக்களித்தார்கள்காசினிக்குரிய காவல்வேந்தர்கள் கலியாணச்சம்பவங்கண்டு களித்தார்கள், பூமியிலுள்ள பேர்களெல்லோரும் போசனசௌக்கியத்தாற் புகழ்ந்துகளித்தார்கள். தரித்திரர் யாசகர்முதலிய சகலரும் தனத்தாற்கனத்துக்களித்தார்கள். நெறிநிலையற்றவர்கள் நீதியாற் களித்தார்கள், ஸ்ரீகிருஷ்ணதேவராகிய என்னுண்டவனும் பாண்டவர்முத லிய மற்றியாவரும் உத்தரகுமாரத்தியின்சற்குணத்தாற்களித்தார்கள். வூ பகவெறிந்த வள்ளிமணாளனையொத்த அபிமன்னன் உத்தரையின் சரசசல் லாபவுல்லாச இங்கிதக்கலவியமளியாற்கலந்துகளித்துவாழ்ந்திருந்தான், மற்ற அரசர்கள் யாவரும் இஷ்டப்படியிருந்து செலவுபெற்றுக்கொண்டு, தங்கள் தங்கள்பட்டணம் போய்ச்சேர்ந்தார்கள், பிள்ளையும் பெண்ணும் பாண்டவர்க ளும் திரௌபதையும் சுபத்திரையும் உபலாவியஞ்சேர்ந்து, வீற்றிருந்தார் கள். கேளும் ஜெனமேஜெயமகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

பாண்டவர்வெளிப்படுசருக்கம்
முற்றிற்று.

---

விராடபர்வம் முற்றுப்பெற்றது.

---

உ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஐந்தாவது,

# உத்தியோகபர்வம்.

கண்ணன்துதி.

*மீனமாகியுங்கமடமதாகியுமேருவையெடுக்குந்தாள்*
*ஏனமாகியுமாளரியாகியுமெண்ணருங்குறளாயும்*
*கூனல்வாண்மழுதரித்தகோவாகியுமரக்கரைக்கொலேசெய்த*
*வானநாயகனாகியுநின்றமால்மலரடிமறவேனே.*

தடையிலாமல்விடுத்து அடையலரைக்கெடுத்து முடிக்கும் படையினைக் கைப்பழகிப்பிடித்த, முடிபொறுத்த பாண்டவர்களும் திரௌபதாதேவியும் தங்களுடைய சுந்தரஉருவமறைந்து, ஒருவருடம் விராடபுரத்திலுறைந்து மல்லர்முதலிய கீசகனுதிடரைமாய்த்து மாடுமடக்கவந்த தென்திசையிற் சேனைகளைச்சாய்த்து திரிகர்த்தனைச்செல்லவொட்டாமற்றடுத்துதேரிற்கட்டுப்பட்ட விராடனைவிடுத்து திரிகர்த்தனையும் சேனைகளையும் விரட்டி ஓட்டிதென்திசையில் ஜயஸ்தம்பமும் நிலைநாட்டி உத்தரகுமாரனும்பேடியும் உத்தரதிசைக்குச்சென்று உவரிபோல் நிறைந்து ஒலிக்குஞ்சேனைகளைக்கண்டு கலங்கி உத்தரன்காலோட்டங்கொள்ள காண்டீபனுந் தடுத்து இராசநீதிகள் விள்ள இருவரும் இசைந்து ஆயுதங்களைக்கொண்டு எதிர்த்து, யாவரும்பயந்து முறிந்தோட அடித்து காலேயமாகிய மாடுகளையுங்கைக்கொண்டுவந்து மன்னர் ஐவரெனக்கொலுவிலிருந்து மச்சதேசாதிபனும் சுதக்கணையும் மனமகிழ்ந்து வையகத்தார்முதல்மன்னர் மன்னவர்களும் புகழ்ந்து வாளபிமன்னுவுக்கு வைபவத்துடன் உத்தரையைமணப்பித்து வரிசையாகக்கொடுத்த உபலாவியத்திலிருந்து மங்கையர் தங்குலச் சுற்றங்களியாவரும் கலந்து வாழ்விற்சிறந்தனர். 'தாழ்விலாப்பாண்டவரென்று இதுவரையிலும் இயம்பியது நான்காவது விராடபர்வமென்றுவைசம்பாயனர்சொல்ல முகமலர்ந்து குடங்கையில்அடங்கையில் அடங்கும் விடங்கலந்த தடங்கண்ணுளாகியவபுஷ்டாதேவியின் மகிழ்நனுகும் ஜெனமேஜெய மஹாராஜன் உடல்புளகமுற்று எழுந்துவலம்வந்து விழுந்துபணிந்து இருகரங்குவித்து மேல்நடந்த ஐந்தாவது' உத்தியோகபர்வத்தையும் திருவாய்மலர்ந்தருளவேண்டும், தெய்வமேயென்று போற்றப்பரிசுத்தமுள்ள வைசம்பாயனர்சொல்லத்தொடங்கினார்.

எங்கும்விரித்த கங்குல் அகற்றி, மங்குதலில்லாப் பொங்கிய கிரணத்திங்கள்குலத்தில் தங்கமாயுதித்த சிங்கமேகேளும். பாண்டவர்கள் பதின்

மூன்றுவருடமும் நீங்கிவன்னிமரத்தில் மறைத்துவைத்த ஆயுங்களுந்தாங்கி அவரவர்கள் புயாசலங்களும், வீங்கிச்செல்வம் மேலோங்கியபலராமர் ஸ்ரீகிருஷ்ணர் சாத்தகிமுதலாகிய பாஞ்சாலன் இளம்பஞ்சபாண்டவர்பற்பல தேசபந்துஜனங்கள் தௌமியாச்சாரியர் முதலியவேதவிப்ராள்சமஸ்தமானபேர்களும் பொருந்த அஞ்ஞானம் விட்டு நீங்கியமெய்ஞ்ஞான சூரியர்களைப்போல் உபலாவியத்திலிருந்த ஐவர்களைநோக்கிவனவாசத்தில் நடந்த மகத்துவங்களையுங்கேட்டு மகிழ்ந்து இனிமேல் நடக்கவேண்டியகாரியங்களுக்கு என்னயோசனை செய்து இருக்கின்றீர்கள் எங்களுக்கு உத்தரவுகொடுத்தால் இப்போதே அஸ்தினபுரத்திலிருக்கும் துரியோதனன் முதலாகிய புத்திரமித்திர வருக்கத்தாரைமுடித்துப்போட்டு தங்களுக்கே சகல சுபசந்தோஷங்களும் உண்டாகும்படியாய்ச்செய்து விடுகிறோமென்று சகல அரசர்களுஞ் சொல்லக்கேட்டு தருமராஜன் புன்னகைநகைத்து இதுஞாயமே தாங்களெல்லோரும் என்மேல் இருக்கும் பக்ஷத்தினால் சொல்லுகின்றீர்கள் ஆகிலும் (பொறுத்தார் அரசாள்வர், பொங்கினர்காடுகொண்டுபோவர்) என்னும் பழமொழியிருப்பதனால் நாம்சற்றுயோசித்து ஒருதூதுபோக்கி அறியவேண்டியிருக்கும் மேலும்இஷ்டதெய்வம்போலிருக்கும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய இஷ்டப்படிநடப்பதே நமக்குகஷ்டமில்லாத ஜயமென்றுசொல்லி தருமபுத்திரமஹாராஜன் ஸ்ரீகிருஷ்ணபகவானைநோக்கி இனி நடக்கவேண்டியதற்குத்தாமே யோசிக்கத்தக்கதென்றுசொல்லவும் கோவர்த்தனமென்னுங்குடையினால் கல்மழையைத் தடைசெய்தருளிய ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்லுகின்றார்.

கேளுங்கள் நமது முக்கியபாக்கியங்களுக்குரிய மன்னர் மண்டலீகர்களேவணங்காமுடிபொறுத்த துரியோதனமஹாராஜனனவர் ஆதியிற்சூதாடி பாண்டவர்களுக்கு உரித்தாகிய மண்மனைமுதலிய பாக்கியங்களைப் பறித்துக்கொண்டதும் அல்லாமல் தருமபத்தினியாகிய பாஞ்சாலியையும் சபையில் மானபங்கஞ்செய்து பாண்டவர்களைப் பன்னிரண்டுவருடம் காட்டகதியாகத் திரியச்செய்தும் நாடேபதியாக நீதிநடாத்திவந்த அரவகேதனனுடன் மறுபடியுஞ் சூதாடி அவன்கைக்கொண்ட இராச்சியத்தை ஐவர்கைக்கொள்ளுவதுவேஞாயம், அல்லாமல் சேனைசயினியங்களுடன் எதிர்த்து வில்முதலிய அஸ்திர ஆயுதங்களினால் யுத்தம்புரிந்துவெற்றி அடைந்து பட்டாபிஷேகபாக்கிய இராச்சியத்தைக்கைக்கொள்ளுவோம் என்று நினைப்பது இராச நீதியிற்கிடையாது, ஆனால்பூர்வம்சூதாடியசபாமண்டபத்தில் வீஷ்மர் துரோணாதிபெரியோர்களுத்தரவின்படிநேராகப்பன்னிரண்டுவருடம் வனவாசமும்ஒருவருடம் அஞ்ஞாதவாசமுஞ்செய்துபாண்டவர்கள் வெளிப்படுவார்களேயாகில் அவர்களுடைய இராச்சியங்களை அவர்களுக்கேகொடுத்து விடுகின்றேன் என்று துரியோதனன்சொல்லிய வாக்கியம் ஒன்றுண்டு; அதனால் ஒருதூது அனுப்பி ஆதியிற்சொல்லிய உறுதியின்படியே அவன்கருத்தை அறியத்தக்கதே கடமையென்று கண்ணபிரான்சொல்லியகட்டளையைக்கேட்டு அண்ணனாகியவெள்ளை வண்ணனப்பலராமர் சொல்லுகின்றார்.

மண்ணினை ஆளும் அண்ணலே கேளும், அழகியசமுத்திரத்தை உரித்தாகிய ஆடையாகத்தரித்த பூலோகத்தில் துரியோதன மஹாராசனுடைய சாமர்த்தியங்களையும் தருமபுத்திரமஹாராசன் முதலிய தம்பிமார்களின்வல்லமைகளையும் பற்பலதேசத் தரசர்களும் மற்புயவீரத்தலைவர்களும் அறியும்படியாக விருப்பமுள்ள பெருஞ்சூதாடிச்செயித்து சகல பாக்கியங்களையும் கைக்கொண்டு வனவாசஞ்செய்யும்படி காட்டிற்றுரத்திய வாழ்விற்சிறந்த துரியோதனனிடத்திற்குத் தூது அனுப்பி மண்ணினைப்பெறுவிட்டால், யுத்தஞ்செய்து சூதினால்தோற்ற பூமியை லச்சையில்லாமல் மறுபடியும்வாங்கயோசிக்கும் யுத்தி கொடிய தீப்புத்தியென்று பலராமன் சொல்லினான். சமீபத்தில் இருந்ததம்பியாகிய சாத்தகி தமயனை யுறுக்கிக் கண்கறுக்க நோக்கி பளா? பளா? வெகு நேர்த்தி இப்படியா? நீர் எண்ணங்கொண்டீர், உமது திருநாவினிடத்திலிருந்துபிறந்த வார்த்தையானது தேவரீருடைய திருமேனியின் வெளுப்பைப்பார்க்கிலும் மிகவும் வெளுத்தது என்றுபலபத்திரருடைய மனம் வருந்தும் படியாகச்சொல்லகேட்டு, புயல்வண்ணனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் கரம் அமைத்து யான்கூறிய வசனயுத்தியிலும் அண்ணா அவர்கள் பலராமர் சொல்லிய மொழியிலும் பிரயோசனமில்லை. இனி எவர்களாகிலும் கட்டுரையாகிய யுத்திகளைச்சொல்லுங்க ளென்னவும், வளப்பங்கொண்ட பாஞ்சால தேசத்திற் கிறைவனாகிய துருபதமஹாராஜன் சொல்லுகின்றான்.

ஓ மன்னவர்களே! தருமநீதிதவறாமல் செங்கோல்செலுத்தும் இந்தப் பலராமர், நான்குவேதம் ஆறுசாஸ்திரம் அறுபத்துநான்கு கலைக்கியானமுதலிய நன்னூல்களெல்லாந்தெரிந்த பரிசுத்தஉள்ளமுடையவர் ஆகையால்அவர்மீது குரூரத்துடன்கொடியவசனங்கள்சொல்லிக் கோபிக்கவேண்டாம். சபைகளில் ஒருவர்சொல்லியவசனம்சம்மதியில்லாவிட்டால் உடனே அதைமறுத்து மறந்துவிடவேண்டியதே முறைமையென்றான் பாஞ்சாலராஜன்; அப்போது மச்சதேசாதிபதியெழுந்து மாயோன் முதலாகிய மன்னவர்களைநோக்கி ஐயா பாபத்தையும் கோபத்தையும் லோபத்தையும் ஆபத்தையும் பொருளாகக்கொண்ட அரவக்கொடியோன் மோசமாய்ச் சூதினால் கவர்ந்துகொண்ட பூமியை அபேக்ஷிக்காமல், பாஞ்சாலியைவஸ்திரபங்கஞ்செய்தகாலையில் அந்தச்சபையிலிருந்த பெரியோர்களுக்கு முன்பாகத் தாங்கள்கூறிய சபதம் முடிக்கவேண்டிய விதத்தை யோசிக்கின்றோமென்று ஐவர்மொழிந்தாலதைத் தீயபுத்தியென்று இந்தப்பலபத்திரர்சொல்லலாமோ என்றும்; யாவரும் பிழைக்கும்படியாகிய நீதியைச்சொல்லும் துளபமாலையணிந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் துரியோதனனிடத்தில் ஒருதூதுபோக்கி அறியலாம் என்றுசொல்லியதே இராஜமுறைமை, அதுவே வேதவாக்கியத்திறமை, அந்தப்பிரகாரம் தூது அனுப்பி அவன் இசையாத கருத்தை அறிந்துகொண்டு இப்போதேசென்று யுத்தஞ்செய்வதே தகுதியென்றும் சொல்லினான். மீண்டும் துருபத மஹாராஜன் எழுந்து காயாம்பூவண்ணனைநோக்கி சுவாமி இதோ இருக்கின்ற வேத விப்பிரசிலாக்கிய கண்மணிபோன்ற உலூகமாமுனியாகிய பௌரோகிதர் சதுர்வித

உபாயங்களுந்தெரிந்த பரிசுத்தர் இவரை இன்று தூது அனுப்ப நினைப்பீராகில் மிகவும் நன்றென்று உரைத்தான். அந்தச்சபையிலுள்ள பற்பல மன்னவர்களின் மனப்பொருத்தத்தையும், யுதிஷ்டிரன்முதலிய உயர்ந்த தோளினையுடைய தம்பிமார்களின் சிந்தையுறுதியையும், நடக்கவேண்டிய காரியங்களையும், தன்மனதில் நிதானித்து, சபையைநோக்கிக் களிக்குந் தருமநந்தனனைப் பார்த்து வஞ்சகத்தையே பூஷணமாகக்கொண்ட சுயோதனன் தனக்குப் படைத்துணைவரும்படியாக அரசர்களுக்குத் தூது அனுப்புமுன்னே, முன் சாக்ரதையுடன் தூது அனுப்பிவிட்டு அப்பால் உமது கருத்தைச்சொல்லி மறுமொழிகேட்டு வரும்படியாகத் திருதராட்டிரனிடத்துக்கு உலூகமாமுனியைத் தூது அனுப்பும் என்றுசொல்லி, முடிமகீபர் அடிபணியச்செலவுபெற்றுக்கொண்டு அசோதைப்பிராட்டியார்கட்டிய உரலுடன் ஊர்ந்த கிருஷ்ணன் பலபத்திரர் சாத்தகிமுதலியபேர்களுடன் துவாரகை போய்ச்சேர்ந்தார். இப்பால், தருமராஜனுடைய சபையிலிருந்த அரசர்களெல்லாருமெழுந்து பாண்டவர்களைவணங்கி ஐயா! இந்த உலூகமாமுனியை அஸ்தினபுரத்திற்குத் தூது அனுப்பி, தங்களுக்கு ராச்சியம் வரும்படியாகிய விதங்களெல்லாம் பேசச் சொல்லி, அதற்குத்திரிதராஷ்டிரனும், துரியோதனனுஞ் சொல்லியனுப்பும் வார்த்தைகள் உங்களுக்குப் பிரதிகூலமாயிருக்குமாகில் உடனே ஓலையும் தூதும்அனுப்பினால், யாங்கள் யாவரும் சதுரங்கசேனைகளுடன் ஆயுதபாணிகளாகப் படைத்துணைவருகிறோம். தேவரீருக்கு மாமனாராகிய பாஞ்சாலராசனும் விராடபூபதியும் உங்களைவிட்டு நீங்காது இங்குஇருக்கின்றார்கள். நாங்கள் அவ்வளவு பாக்கியஞ்செய்யாமற்போனாலும் உங்களுடைய சுகதுக்கம் எங்களுடையதாக எண்ணியிருக்கிறோம்; எங்களுக்கு விடைதாரும் என்றுகேட்கவுந் தருமராசன் எழுந்து, அவர்களைத்தழுவிக்கொண்டு சந்தோஷத்துடன் உத்தரவுகொடுக்கப்பெற்று தங்கள் தங்கள் நகரம்போய்ச்சேர்ந்தார்கள். பின்பு, தம்பியர் பாஞ்சாலன், விராடன் முதலியபேர்களையும் வைத்துக்கொண்டு, சபையில் முன் ஸ்ரீகோபாலகிருஷ்ணனுடைய உத்தரவின்படிக்கு அவ்விடத்தில்வந்திருந்துபோன மன்னவர்கள்தவிர, அங்குவராதிருந்த இறைவர்களுக்கெல்லாம் தங்களுடைய யோகக்ஷேமங்களையும் படைத்துணைவந்து காக்கவேண்டுமென்று எழுதிய திருமுகங்களையும் தூதர்கள்மூலமாய் அனுப்பி, உலூகமாமுனிவரென்னும்பெரியோனை அழைத்து,ஆசனத்திலிருக்கச்செய்து ஐயனே நீர், அஸ்தினபுரம்போய் பீஷ்மாசாரியர் துரோணாசாரியர் கிருபாசாரியர். அசுவத்தாமர் எந்தையாகிய திருதராஷ்டிர மஹாராஜன் விதுரமஹாராஜன் இவர்களுக்கெல்லாம் முன்னே எங்களுடைய வந்தனத்தைச்சொல்லிப் பின்பு நீர்போகும் தூதுக்குரியவார்த்தைகளைப்பேசிவரக்கடவீர் மெய்மையையுடைய வேதியனேயென்று தருமநந்தனன்மொழிந்தார். அதுகாலத்தில் போதுமாகிய தவங்களைச்செய்து பவங்களகற்றி சுபங்களுடன் மனவுறுதிபெற்றிருக்கும் தரணீசனாகிய துருபதமஹாராஜன் எதிரில் இளஞ்சூரியனைப்போல்பிரகாசித்திருக்கும் வேதபண்டிதனுடைய மலர்ந்த முகத்தைப்பார்த்து, நீலகண்டனுக்கொப்பாகிய உலூகமாமுனியே! நீர், தூதுசென்று பாண்டவர்கள் சிறப்புப்பெறும்

படியாக அஸ்தினபுரிக்கு அரசனாகிய திருதராஷ்டிரமஹாராஜன் வீஷ்மர் துரோணர்கிருபர் அசுவத்தாமர் விதுரர்முதலானவருடைய அரண்மனைக்குச்சென்று, தனித்தனியாகக்கண்டு பாண்டவர்சாஷ்டாங்க நமஸ்காரம் புகன்றார்களென்று சொல்லி, வணங்காமுடியோனைக்கண்டு உங்களிஷ்டப்படிக்குப் பதின்மூன்றாண்டு காட்டிலும்நாட்டிலும் காலங்கழித்துவந்த காவலர்களுக்குநீ முன் ராசசபையில் சொன்னவண்ணம் நாடுகொடுப்பாயா, இல்லையாவென்று கேட்டு அவன்கருத்தையுமிதானித்துணர்ந்து, தாமும்தகுந்த தருமம்புகன்று, "பக்கத்துச்சொல்பதினாயிரமென்பர்" ஆகையால் பெரியோர்களாலும் பேசச்செய்து, கலங்கா மனத்தினராகிய தேவரீர்காரியபாகங்களைக் கண்டறிந்துகொண்டு சீக்கிரமிவ்விடம்வந்து சேரவேண்டியதென்று கரங்குவிக்கவும், யாவரும்காலிற் பணிபவும், அவர்களுக்கெல்லாம் ஆசீர்வதித்து, வாயுவேகமனோவேகமுடைய வண்பரிபூட்டிய விண்தொடு மிரதத்தில் ஆரோகணித்து உபலாவியத்தை விட்டுப் புறப்பட்டார்.

பெண்களுடைய கண்களென்னும் வண்டுகள் மொய்க்காத மலர்மாலை அணிந்த உலூகமாமுனிவர் அத்தினபுரிக்குச் செல்லுமுன்னமே அஸ்தினபுரியில் துரியோதனனும் அவன் தம்பிமார்களும் வீஷ்மர் துரோணர் முதலிய பெரியோர்களும் அசுவத்தாமன் கர்ணன் இவர்கள்முதலிய படைமன்னவர்களும், விராடபுரத்தில் அருச்சுனன்கையில் அடிபட்டு; மடக்கிய மாடுகளையும், உடுத்தியவிருதுவஸ்திரங்களையும், பகைவர்களுக்கு ஒப்பிவைத்துவிட்டு பகலில் வரவெட்கப்பட்டுஎல்லோரும் நித்திரைசெய்யும் அர்த்தராத்திரிவேளையில் பச்சையுதிரம்பாயும்படியாகிய புண்கள்நோகவும், தேகஞ்சாகவும் தங்கள்தலையைத் தாங்களே தடவிக்கொண்டுதனித்தனியேஅத்தினபுரத்தைச்சார்ந்து, நித்திரையிற்சோர்ந்து, அன்று இரவுவிடிந்தபின்பு சபைக்குவந்தார்கள். அவர்கள் முகங்களைப்பார்த்து வந்தனைபுரிந்து, முகம்வியர்த்து கள்ளமிருந்தஉள்ளத்தினனாகிய துரியோதனன் பெரியோருள்ளம் வருந்தும் கடுஞ்சொற்கூறி, பின்பு பெரிய வெள்ளம் நிறைந்த கடலென இரைந்த எள்விழுந்தால் எடுக்கொணாதிசைந்த வெள்ளஞ்சேனையும்வீரரும்சூழ விராடபுரம்போனதும், வேதனைவரும் பாஞ்சாலியுடனேபதுங்கியிருந்ததும், பேடியாயிருந்த அருச்சுனன் சாரதியாய்வந்ததும், உருவந்தெரிந்ததும், யுத்தஞ்செய்ததும், பசுக்களைத்திருப்பிக்கொண்டு போனதும் இவைகளையெல்லாம் திரிதராட்டிரனுக்குங் காந்தாரிக்கும் நமஸ்கரித்துச்சொன்னான். அவ்விருவருங்கேட்டு பெருமூச்சுவிட்டு, வெட்கப்பட்டு, மீளாத துக்கசாகரத்தில் அழுந்தினர். பின்பு துரியோதனன் பாண்டவர்களுடைய தினச்செய்கைகளை அக்கம்பக்கத்தில் விசாரித்துவரும்படியாகத் தூதனை அனுப்பிச் சங்கதிதெரிந்துவரச்சொன்னபோது பாண்டவர்கள்வெளிப்பட்டதும் அபிமன்னுவுக்கு உத்தரையைசகலவித சம்பிரமங்களுடன் விவாகம் நடத்தியதும் அவ்விடத்தில்வந்திருந்த அரசர்கள் இன்னாரின்னாரென்பதும் அவர்கள்அஸ்தினபுரத்தின்மீது படையெடுக்கக் கருதியவிதமும், தருமராஜன் முதலியபேர்கள்செய்யும் யோசனையும், துரியோதனமகாராஜன் படைத்துணை

அழைக்கத் தூது அனுப்புமுன்னமே நாம் தூது அனுப்பவேண்டுமென்ற யோசனையும் உலூகமாமுனியை அத்தினபுரத்தினுக்குத் தூது அனுப்பச்சொல்லி கிருஷ்ணமூர்த்தி துவாரகைக்குப் போனதும், படைத்துணை வருவதற்கு தேசங்கள்தோறும் தூதர்களும் ஓலைகளும்போக்கி, உலூகமகா முனியைப் பயணப்படுத்தினர் என்பதும் தூதர்வந்து திரிதராட்டிரனுக்கும் துரியோதனனுக்குஞ் சொன்னார்கள். அதைக்கேட்டு இராஜன் கொலுவுக்கு வந்து துச்சாதனன் கர்ணன் சகுனி வீஷ்மர் துரோணர் கிருபர்முதலானபெரியவர்களுக்குத் தெரியப்படச்சொல்ல யாவருங்கேட்டு ஆலோசனைசெய்து, பாண்டவர்கள் படைத்துணை சேர்க்கும்போது நாம்ஆலசியமாயிருக்கலாகாது என்றுதிரிதராட்டிரனுக்குச்சொல்லி, வணங்காமுடிமன்னவன் துவாரகைக்குப் போய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய உதவியைப் பெறும் முயற்சியைச் செய்ய வேண்டு மென்றனர். பின்பு துரியோதனன் தேசதேசமெங்கும் செங்கோல்செலுத்தும் அரசர்களுக்குத் தூது அனுப்பிவிட்டு உடலுமுயிரும்போலும் பாலும்நீரும்போலும் ஆத்மகோடிகள்தோறும் அமைந்த பகவானிடத்திற்கு இரதகசதுரக பதாதிகளுடன் சென்றனன். அப்படி துரியோதன மஹாராசனும் துவாரகாபுரியில் பிரவேசித்தபோது அநேகங்கோடி அகண்ட வீதிகளும் அவ்வீதிகளில் நிறைந்த மாடமாளிகை வீடுகளும் வீடுகளைச்சூழ்ந்த பவளக்கால்களும் பூங்காவனங்களும்; முல்லைக்காடுகளும்; அக்காடுகளில் நிறைந்த மயில்பேடுகளும் குயிற்பேடுகளும் குளங்களில்நிறைந்த அன்னப்பேடுகளும் மலையிலமைந்த யானைக்கோடுகளும் சவுக்கடிமேடைகளும் சகல வளமும் உற்பவிக்குங் கடைகளும் சங்கினங்கள் தவழுமடைகளும் சரஞ்சரமாகத் தொங்கும்பூந்தொடைகளும் விளங்கக்கண்டனன். ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீகிருஷ்ணனாக இவ்விடத்தில் அவதரித்திருக்குந் தன்மையைக்கேட்டு ஆதிசேடன் தனது ஆயிரம் பணமகுடங்களையும் விரித்து சிரோரத்தினங்கள் பிரகாசிக்கும்படியாக மண்டலாகிர்தியாய் வளைந்துகொண்டதைப்போலும் வான மளாவியிராநின்ற மதிலும், அதின்மேற்பொருந்திய சிகரகோபுரங்களும் மதிலுறுப்புகளும் தோன்றின. க்ஷீராப்திநாதன் நம்மைவிட்டு நீங்கி இங்ஙனம் அவதரித்திருக்கின்றானென்று உட்கொண்டு பாற்கடலானது வந்து பாதலம் வரையில் ஆழ்ந்துவட்டமாகியமதிலைச்சூழ்ந்து கருநிறங்கொண்டு இருப்பதையொத்திருந்தது பலவிதபுட்பங்கள் நிறைந்த அகழும், அவைகளில் ஏறுந்துறைக்கும் இறங்குந்துறைக்கும் அமைந்திருக்கும் பளிங்குப் படிகளும். அதின்மேல் அமைத்த சிகரமுடிகளும், அரவணைதுயின்ற எங்கள்பெருமான் ஐவர்க்குச்சகாயன் அவர்களுக்கே படைத்துணையாகுவான் அல்லாமல் உனக்குத் துணையாகமாட்டான் நீயேன் வீணில்வருகின்றாய் திரும்பிப்போய் விடு வென்றுநகரமாகிய பெண் கைகளைநீட்டி ஆட்டிக்காட்டுந்தன்மைபோல் அசைந்தாடுங்கொடிகளும்தோன்றின. கிருபைஉற்பத்திக்குஸ்தானமாகிய தாமரைக் கண்ணனாகிய எங்கள் மஹாவிஷ்ணுவந்து அவதரித்திருக்கின்ற வடமதுராபுரியானது ஸ்ரீவைகுந்த மாநகரம்போலிருந்தது. மெய்ஞ்ஞானச்சுடர் விரிந்து, அஞ்ஞானவிருள்அவிந்து அழகியமாணிக்கத்தீபங்கள்மிகுந்து சோதிப்பிரகாசங்

கலந்து விளங்கியவளங்களையுடைய அந்தத்துவாரகாபுரிவீதியில்சித்து அசித்து தெரியாத துரியோதனன் வருகிறகாரியங்களைத்தெரிந்துகொண்ட பரந்தாமன் அருச்சுனனை அழைத்துவரும்படியாகத் தூது அனுப்பிவிட்டு, வாசற்காவலோரைநோக்கி புவனபூபதியாகிய துரியோதனராஜன்வந்தால் எனக்கு அறிவிக்கவேண்டுமென்று எண்ணாமலும்தடைபண்ணாமலும் விட்டுவிடக்கடவீர்களென்றுஉத்தரவுசெய்து அரண்மனைக்குச்சென்று பவளத்தினாலும் பளிங்கினாலும் கட்டப்பட்ட மண்டபத்தில் மரகத ஊசலில் வயிரக்கொலுசுகள் அசைந்தாட பிரளயகாலத்தில் மிதந்தசைந்தாடும் வடபத்திரசாயிபோலும் பாற்கடலில் பருமணிச்சிகர ஆதிசேடன்மேல் அறிதுயில்கொள்ளும் பதுமநாபன்போலும் அன்பருள்ளத் தமர்ந்த அருளாழிவேந்தன்போலும் சயனித்துக்கொண்டு சந்திரகலையொடுங்கிச்சூரியகலையோடும்படியாகக்காட்டி அதிகநித்திரைஎன்பது தோன்ற அன்பெல்லாம் அருச்சுனனிடத்திலூன்ற அழகிய பிரதமைகள் கொலுசைக்கைக்கொண்டசைக்க கண்ணன்பொய்யுறக்கம்கொண்டனர். அக்காலத்தில் அரவக்கொடியோன்தன்னுடன்கூடவந்த தளங்களை வெளியில்நிறுத்தித் தான் ஒண்டியாகவந்துஒருவரையுங் கேளாமல் எதிரில்தோன்றும் பவளக்கால் மண்டபத்திற்குள் பிரவேசித்து, மிகுந்த நித்திரைகொள்வது போலிருந்த மாயனை நாம் எழுப்பலாகாது அவனாக எழுந்த பிற்பாடு பேசிப்போகலாமென்று திருவடிப்பக்கத்தில் ஒரு உயர்ந்த ஆசனம் இருக்கக்கண்டு இவன் எம்மாத்திரம்பஞ்சை இவன்காலடிப் புறத்திலேயா நாமிருப்பதென்று கோபங்கொண்டு இவ்விடத்தில் இவனுக்காக நாம் காத்திருக்கத்தகாது என்று வருந்தி, அந்தப்பீடத்தை இழுத்துக்கொண்டுவந்து சுவாமியின் திருமுடிபக்கம் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான். இவனுடைய உள்ளத்திலிருக்கும் கள்ளம் அறிந்த கடவுள் இன்னம்வரவில்லையே பற்குனன் என்று எண்ணம் கொண்டு இருக்கையில் திண்ணியனாகிய கிரீடி துவாரகைக்கு நண்ணி இரதம் விட்டு இறங்கிப்பள்ளியறைக்குட்சென்று பகவானைக்கண்டு திருவடிப்புறத்தில் மண்டியிட்டு இருந்து இருகரங்களினாலும் இதழ்விரிந்த செந்தாமரைக் கமலம் போன்ற ஸ்ரீபாதங்களை வருடிக்கொண்டிருந்தனன். அதைஉணர்ந்த கண்ணன் நித்திரைதெளிந்தவன்போல் மேற்போர்வையாகிய நவரத்தின பீதாம்பரத்தை நீக்கித் திருக்கண்மலர்ந்து காற்புறத்தில், நோக்கும்போது அருச்சுனனிருக்கக்கண்டு எப்போதுவந்தாய் அருச்சுனா என்று கேட்க, இதுதான்வந்தபயணமென்று சொல்லிச் சாஷ்டாங்கமாகச் சேவிக்க, சத்துருகண்டனமும் மனோபீஷ்டமும் உண்டாகக்கடவனவென்று மங்கள ஆசீர்வசனஞ்சொல்லி மறுபடியும் மாயன் நித்திரைமயக்கம் நீங்காதவன்போல் கண்களைமூடிக்கொண்டு, உடனே அருட்பார்வை நிறைந்த அரவிந்தக்கண்கள்மலர்ந்து பற்குனனைப் பார்த்து பக்கத்தில் உட்காருமென்றுபகர்ந்தான். உடனே காண்டீபனெழுந்து இருகரங்களையும்குவித்து தேவ தேவ சார்வபௌம சர்வலோகநாயக சுவாமி எங்கள் அண்ணாவாகிய அரவத்துவஜ மஹாராஜன் வந்திருக்கின்றானென்று சொல்லினன். அதைக்கேட்ட மாயன் திடுக்கிட்டவன்போல் எழுந்து எதோ நான்பார்க்கவில்லையே அடடா இது ஆச்சரியம். என்னை இந்தத் தூக்கம்

மோசஞ்செய்தது, நானெம்மாத்திரம் பஞ்சை, பஞ்சாசத்கோடி பூமண்டலாதி பதி இவ்விடத்திலிருந்து காத்துக்கொண்டிருக்கும்படியாக நேரிட்டதே, இது என்னபாவம்; இந்தவாசற்காவலாட்களும் தெரிவிக்காமற்போனார்கள் என்று மிகச்சீறிக் கோபங்கொண்டு நந்தியாவர்த்த மாலையனைப்பார்த்து ஓ! சந்திர குலத்திந்திரனே நமக்கும் உமக்கும் பேதமில்லாதிருக்க வந்தநீர் என்னை எழுப்பிவிடலாகாதா? உம்மைவிடவா யெனக்குகித்திரை? நீர்வந்ததே என்பாக்கியம், இந்த மாநகரஞ்செய்ததவமே தவம். ஆகிலும் நான் அறியாமல்நடந்தது அபசாரம் இதைப்பொறுத்தருள வேண்டுமென்று இறுகக்கட்டி ஆலிங்கனஞ் செய்துகொண்டு, ஏது அபூர்வமாயிருக்கின்றது நீங்கள் இருவருஞ்சேர்ந்து வந்தது ஆச்சரியம்! ஆச்சரியம்! சேனைசைனியம் வாத்தியம் சத்திர சாமரமுதலிய சின்னங்களெங்கே என்று அவன்மனதில் தன்னைலேசாக நினைத்ததை தானே எடுத்து மனதில்படும்படி குறிப்பித்துச் சொல்லி, காத்திருந்தோமென்று கோபங்கொள்ளாமல் தெளிவில்லாத யான்தெரிந்துகொள்ளும்படியாகவந்தகாரியத்தை சொல்லுங்களென்று கேட்க, அப்போது துரியோதனன் அகமகிழ்ந்து முகமலர்ந்து இந்தக்கிருஷ்ணன் நம்மிடத்தில் வெகுவித உபசாரத்தைச் செய்ததுமன்றி பயத்தையுங்கொண் டிருக்கின்றானென்று மிகுந்த இறுமாப்புடனே சொல்லுகின்றான். நாளை நடக்கபபோகின்ற பாரத யுத்தத்திற்கு உம்மைப்படைத் துணையாகக்கொண்டு போகவந்தேன் என்ன, உடனே அர்ச்சுனன்வணங்கி தீனதயாளுவாகிய தெய்வமே அடியேனும் ஏழைமையாகிய எங்களுக்குப் படைத்துணை கேட்கவந்தேனென்னவும் இருவர் மொழிகளையும் ஒருமொழியாகக்கேட்ட என்னையன் சுயோதனனை நோக்கி மெய்யன்புள்ளவன்போல் விளம்புகிறார்; வையகங்காக்கும் ஐயனே கேளும் தூய்யனாகிய தருமராஜனுந் தம்பிமார்களும் வெளிப்பட்டு விராடபுரத்திலிருக்கக்கேட்டு யான் சென்றபோது என்னை எதிர்கொண்டு கண்டு வார்த்தைகளாடி யிருக்குங்காலையில், இனிமேல் எங்கள் சபதநடக்கப் போகின்ற பாரதயுத்தத்திற்குத் தேவரீர் படைத்துணையாக வேண்டுமென்று வினவினர். அப்போது நான் துரியோதனமஹாராஜனும் படைத்துணை கேட்பாரல்லவா எனக்கு நீங்களிருவரும் இரண்டுபுஜமும் இரண்டுகண்களும்போன்றவர்கள் ஆகையால் இருவரும் சமமே, ஒருவனை நீக்கி ஒருவருக்குப் படைத்துணைவர மாட்டேன், என்னை நீக்கிவிடவேண்டுமென்றுமறுத்துச்சொல்லியும் பிடிவாதமாகவாதித்தபோது யுத்தியாகவார்த்தைசொல்லிவந்தேன், அதென்னவென்றால், நான் துவாரகைக்குப் போனபின் யார் என்னை முன்னேகண்டு தங்கள் கருத்தைக் குறிப்பிக்கின்றார்களோ அவர்களுக்கு நான் படைத்துணையாவேனென்று உண்மையாகச் சொல்லியதேயாம். அந்தப்படியே இன்று அருச்சுனன்வந்து முந்தி என்னைக்கண்டு தன்எண்ணத்தைமுகத்தால்குறிப்பித்தான். ஆகையால் அவர்களுக்கே படைத்துணையன்றி உமக்குப் படைத்துணையாகக் கூடாது, இது என்தப்பிதமல்ல. உம்முடைய அஜாக்கிரதையே; முன்வந்த நீர் என்னை எழுப்பிவிடாமலும் சேவகரைக்கொண்டு தெரிவிக்கச்செய்யாமலும் கைதட்டிக்கனைத்து ஜாக்கிரதைசெய்யாமலும் கேவலனாகிய எனக்குப் பிரபுத்

தனங்காட்டி வீண்பொழுதுபோக்கிவிட்டீர் ; ஐயோ இனியான் என்னசெய்வேன்? ஆனால் என்னைப்படைத்துணை விரும்புவதும்வீண், 'நானோ யுத்தகளத்தில் ஆயுதம் ஒன்றும் தொடேன், நிராயுதனாகநிற்பேன்? நானொருபுறமும் என் தமையன்முதற் சகலரும் இன்னொருபக்ஷமுமாக இருப்போம். இதுசத்தியவசனம். உங்களிருவருக்கும் இந்த இரண்டுபக்ஷத்தாரில் யாவர்வேண்டியது? அர்ச்சுனா? உன்னெண்ணத்தைச்சொல்லென்றுகேட்க விஜயன்பணிந்து தேவரீரையேவேண்டுகிறேனென்றுவிளம்ப,கல்லென்றுநகைத்து"விளையும்பயிர் முளையிற்றெரியுமென்றுகேட்டதிந்ததில்லையா" கிரீடி, ஆயுதமெடாதயென்னைப் படைத்துணையாக அபேக்ஷித்தையே என்னாலுனக்கு என்னகாரியம்நடக்கும் இந்திரன்மதலாய் என்றுகேட்க, அவன்வணங்கி சுவாமி! அடியேனுடைய ரதத்திலிருந்து சாரத்தியஞ்செய்வீராகில் மண்ணுலகிலுள்ள மஹாராஜனங்களும் விண்ணுலகிலுள்ள வித்தியாதரரும் கருட கின்னர காந்தருவர் ஆகிய யாவரையும் வென்று ஒருமுகூர்த்தத்தில் சத்துருக்களேவோர்களைந்து வஞ்சினமுடித்துவாழ்விற்சிறப்போம் என்றனன். அப்பால் அமலன் வஞ்சனையுள்ள வணங்காமுடியோனைநோக்கி, தனஞ்சயன் என்னைச்சாரதியாகக்கொண்டபடியால் குதிரைகளைநடாத்தி இருப்பதேயன்றி எவர்கள்பேரிலும் ஆயுதமெடுத்துப்போர்செய்வதில்லை, நான் சொல்லுமொழியை நம்பு நம்பு; இதல்லாமல் எங்கள் அண்ணன் தாலகேதனமுடைய பலராமர் உமக்குச் சாக்ஷாத் மாமனாராகையால் அவரையும்; எங்கள்பந்துவம்சத்தார்பலரையும்; உமக்குத் துணைவராயிருக்கும் எமது பங்காளிகளாகிய கிருதவீரியனையும்; கிருதவன்மனையும்;ஒருஅக்ரோணிசேனையையும் படைத்துணையாகக்கொண்டுபோம்என்றுகாலத்திரயம் உணர்ந்த கண்ணன் இன்சொற்கூறி விடைகொடுத்தனுப்பினான். அரவத்துவசனும் செலவுபெற்றுக்கொண்டு பலபத்திரராகிய மாமனைக்கண்டுவணங்கித் தான் படைத்துணைவிரும்பிவந்ததும், பார்த்தன் நேரிட்டதும், ஆயுதம் எடுப்பதில்லை என்று உறுதிசொன்னதும், அவனுக்குக்கிருஷ்ணன் சாரதியாக இசைந்ததும், தாமே கிருதவன்மன்முதலிய வீரரையும் சேனைகளையும் தனக்குத்துணையாக இசைந்துஅளித்ததும்ஆகிய இவைகளைவிளம்பித், தாங்களும் கிருதவன்மனும் கிருதவீரியனும் அளவிறந்த சேனைகளும் யாதவகுமாரரும் படைத்துணைவாருங்களென்று பகர்ந்து செலவுபெற்றுக்கொண்டு அஸ்தினாபுரமவந்துசேர்ந்து அரசர்சபையிற்புகுந்து வீஷ்மர்முதலானோர்க்கு படைத்துணைபெற்றவிதத்தைவிளம்பினன். அவர்கள் அதைக்கேட்டு மனம்வருந்தி சேனைப்பெருக்கத்திலப்பிரயோசனமில்லை; கண்ணனொருவன்கைவசப்படுவானாகில் அவனாலே உன்னையாவர் வெல்லுவார்என்றனர். அப்பொழுது நகுலசகாதேவர்களுக்கு நல்லம்மானாகிய மத்திரதேசாதிபதிபாண்டவர்களுக்குப் படைத்துணைவருகின்றார்என்று தேசதேசங்களுக்குச்சென்ற துரியோதனனுடைய தூதுவர்கள் ஓடிவந்துஉரைக்க, அதைக்கேட்டு வீஷ்மர் முதலிய மேலோர்கள் துரியோதனனை நோக்கி, இந்தச் சல்லியராசனையாவது வழிமடக்கிப் படைத்துணைகொண்டால் பெரியசகாயமாகும் என்றார்கள். அதற்கு இறைவனும் இசைந்து, நன்றுநன்றென்று நலம்பெறநடந்து, அஸ்தினபுரிக்கு அடுத்தமேற்புறத்தில், சல்லியனியாக்கசடர்மன

மென, கற்றும் அறிவில்லாக்கயவர் இனமென, சத்தியநன்னெறி தவறினோர் வாழ்வென, தானம் தவம் விரதம் தரியார் மனமென, ஞானமில்லார் நவிலு மொழியென, தெய்வநிந்தனை செய்வோர் கதியென, முள்ளுமுரடுங்கல்லுங்கர டும் புலனும்மூடும்நிறைந்து, நிழலிலாவெளியும் நெருப்புறும் பாலையும், மழைத் துளிபடியா மாநிலப்புழுதியும், இருக்கு மவ்வழியில் இறைவனும் சேனையும், வெந்துவெதும்பிவிடாய்ப்படவருவார் என்றுஅறிந்து, இந்திரனுலகெனப்பந்தர் அமைத்து, பன்னீர்தெளித்துத், தென்றலுக்கெதிராய்ச் சிங்காசனம்வகுத்து, மேற்கட்டுவிட்டு, விதவிதமாகச் சாளரம் அமைத்து, வாழைகமுகுகள் வான் கரும்புடனே தாழைதெங்குநாட்டி, பற்பலபழங்களும் வகைக்கொருகிழங்கும் வாசனைமலர்களும்,பன்னீர்வகையும், வாசனைப்பண்டமும்அமைத்து, வரிசை யாயூசலுமமைத்து, பாடகர்சங்கீதம்பாட, திண்டுதிமாசுஇட்டசித்திரமேடை, பூசாவிதிகள் புரியுஞ்சாலை, போசனச்சாலை புகழ்பெற அமைத்து, சுக்குநீர் வெந்நீர், சுத்தநீர், கச்சாயவர்க்கமும் காசாலட்டும், விதவிதமாகிய விசிறிக ளநேகமும், ஆலவட்டமும் அரிவையர் பிடித்த நிலைக்கண்ணாடியும் நிமிர் சாய்மரமும், படுக்கைமெத்தையும், பலவிதமலரும், ஒழுங்குபெற அமைத்து, அறுசுவை அன்னமும் அமுதெனச்சமைத்து, சந்தனபுட்பம் தாம்பூலங்கள், வந்தவரெவர்க்கும் வழங்க அமைத்து, மாமனார்வருகிறவழியிற் பாண்டவா், பெயரால் உபசாரஞ்செய்யும் உயர்தண்ணீர்ப்பந்தல், என்று எழுதிவைத்து, அரவக்கொடியோன் மறைந்திருந்தனன். இருக்கும்வேளையில் யானையுஞ் சேனையும், நெருங்கிய சல்லியராஜனும், வெய்யிலில்மிகுந்த விடாய்ப்பட்டு வந்து, தண்ணீரொன்றேதாகமிகுந்து, காலும்மேலுங்கனலாலெரிந்து, நாபிவற ண்டு நாவுமுலர்ந்து, விடாய்ப்பட்டுவந்தவேளையில் அங்கிருந்தகாரியகாரரும், கணிகை மாதரும், எதிர்கொண்டோடி இறைஞ்சியழைத்து, ஆலவட்டத்தால் ஆயாசமாற்றி, தண்ணியபரிமள ஸ்நானமுஞ்செய்வித்து, சந்தனம் அக்ஷதை, மந்திரசெபங்களுக்குவரிசையாய்அமைத்து, பொன்வாழையிலையிற் போசனஞ் செய்வித்து, சந்தனபுட்பக் தையலாரைக்கொண்டு கொடுப்பித்து, தாம்பூலம் அளித்து ஊசலிலிருத்தி, ஊசலும்பாடி, உபசரித்து இளைப்பாற்றினர். பின் நானாவிதமான சங்கீதவாத்தியங்களைஇறைவனுங்கேட்டு? அகமும்முகமும்அன் புமலர்ந்து ; இவ்வளவு சம்பிரமம்இன்று யான்கண்டேன்; தீயமாபாவிகள் சிந் தைபோலவறண்டு பேய்குடியிருக்கும் இப்பெரும்வெளியில் இவ்விதமாக; சம் பிரமம் அமைத்த தருமனெவர்கொலோ; பொருளெல்லாம்நிறைந்த புண்ணிய ரெவரகொலோ; அவர் என்முன்வந்து அரசுகேட்டாலும், உயிரினைவிரும்பி னும், உவந்து யான்கொடுப்பேன் என்று சந்தோஷித்து இறுமாந்துரைத்தான். அப்போது வணங்காமுடியோன் இதுவேசமயம் என்றுமகிழ்ந்து வெளிப்பட்டு வர, எதிர்கண்டு சல்லியனோடித்தழுவிக்கொளலும்; இருவருந்த[illegible]பமா யிருந்து ; இப்பெருவெளியில் இதம்பெறவமைத்த ஒப்பிலாத்தண்ணீர்ப்பந் லால் நானும்சேனையும் யாவரும் பிழைத்தோம் உமக்குவேண்டிய[illegible]து சொல்லும், யான் தருவேன் சொன்னசொல் மறுக்கேன், மன்னனே என்று மகிழ்ந்த சல்லியனைக் கரத்தொடுகரமும் கண்ணொடுகண்ணும், சிரத்தொடு

சிரமும் சேரவணைத்துப் பாண்டவர்க்குப் படைத்துணையாகத் தாங்கள்செல்வதை யான்அறிந்து இங்கு பந்தல் அமைத்துவழிபார்த்திருந்தேன், என்னையே படைத்துணை எனக்காகவேண்டும், என்றுதுரியோதனன் இயம்பச்சல்லியன் மகிழ்ந்து நன்றுநன்று நானும் உமது உப்புநீரும் உண்டமைபற்றி இப்போதே படைத்துணைக்கு இசைந்தேனுகிலும் பாண்டவரிருக்கும் பதிக்கு யானேகி மீண்டுவருவேன்; இதுமெய்யெனச்சொல்லிவிடைபெற்றுக்கொண்டுவேந்தனை விடுத்து சேனையுந்தானுஞ்சென்றனன். இப்பால் தருமராஜனுந்தம் பியரியாரும் எதிர்கொண்டுவந்து இறைஞ்சி, சகலவுபசாரமுஞ்செய்ய ஆசனத்தில் இருந்துக்ஷேமங்கள்வினவ யாவுமுரைத்து இருக்குங்காலையில், சல்லியன் அறன் மகன்முதலிய அரசரைநோக்கி படைத்துணைவந்த பாட்டையில் துரியோதனன், உன்பேரால் தண்ணீர்ப்பந்தல் சமைத்துச்சகலர்க்கும் உபசாரம்உதவி என்னைப்படைத்துணை இரந்துகேட்டான், படைத்துணைசெய்வதாக மன்னனே வாக்குத்தத்தஞ்செய்துவந்தேன் என்மேல் மனமகிழ்ந்துடனே விடைதாரும் என்று விளம்பினுன். சந்திரவமிசகுலோத்துங்கனுகிய தருமராஜன் சல்லியனைப்பார்த்து ஓ! ஓ! மாமா, அஷ்டலட்சுமிகள் அடுப்பதானுலும்அடுத்தபாக்கியங்கள் விடுப்பதானுலும் ஆவியை யொருகாற் கொடுப்பதானுலும் சத்தியவசனந்தப்பலாகாது; சொன்னசொற் சோர்வுபடலாகாது, அன்னமும்பாலும் அவன்தரப்புசித்துப்பின்னும் ஒருவர்க்கிசையலாகாது, உண்டவீட்டுக்கிரண்டகஞ்செய்தல் உத்தமர்க்கு ஒருக்காலுந்தகாது, நீர்சொல்லிவந்த நீதிதப்பாமல் போவதே,உமக்குப்பெரும்புகழாகும். எங்கட்குச்சத்தியம்என்றைக்குந்துணையாம், அவர்க்கு நீர் படைத்துணை ஆனீரென்று எமக்கொரு நாளும் விசாரம் இல்லை, வார்த்தைகொடுத்த வலிமைதப்பாமல் துரியோதனனுக்குப் படைத்துணைபோம்போம், ஆனுல் எங்கட்கோர்வரமீயத்திடவேண்டும் அஃதியாதெனில், அருச்சுனன்மேல், கொடுங்கோபங்கொண்டு கொலைசெய்வேனென்று கர்னன் சபதம்புரிந்தனன்அன்றோ, சாரதித்தொழிலில் சல்லியனும் கிருஷ்ணனும் வல்லவரென்று மாநிலத்தார்சொல்வார். பார்த்தனுக்குச்சாரதியாய்ப் பகவான்அமைந்தார், வள்ளலாங்கர்ணனுக்கு வலவனுக ஒருவேனை துரியோதனன் உம்மை அழைப்பான், அப்படிநேர்ந்தால் அருச்சுனன்மீது கண்ணருள் வைத்துக் காப்பதுன்கடனும் என்று தருமன் இயம்பினுன். அதைக்கேட்ட சல்லியன் நகைத்துச் சந்தோஷங்கொண்டு முரசத்துவஜனேகேளும் சாரதி வளப்புத் தனயனுகிய கர்ணனுக்கு நான்தேர்விடமாட்டேன் தெய்வச்செயலால் நேரிடுமாகில் நீர் சொல்லும்வண்ணம், நடப்பதுசத்தியம். என்சொல்லை நம்பும் உத்தமராகும் உங்களைச்சூதில்ஜெயித்து வஞ்சித்தசுயோதனன்வாழ்வு இரவிமுன்பனிபோல் எரிந்துபோகும். கேடுசெய்தோர்கள் கெட்டுப்போவார் பாடுபட்டோர்கள் பதத்திலிருப்பார். ஆடவர்திலகனே அரசுஞ்செல்வமும் பீடும்புகழும் பெறுவாய்சொன்னேன்; ஆதியிலிந்திரன் ஐராணியுடனே தீமையால்வருந்திச் செல்வமும்பெற்றுன், அத்தன்மையைப்போல் அடவியில் நொந்தநீர் யுத்தத்தில்வெற்றிபெறுவீர்,என்று சல்லியன் இதம்பெற உரைக்கத் தருமனும் சல்லியன் முகம்நோக்கித் தேவேந்திரனும் தேவியும்பிரிந்து வருந்திய கதையை வழங்கெனக்கேட்க மத்திரதேசாதிபதி சொல்லுகின்றுர்.

கேளும் பாண்டுபுத்திரசிகாமணியே! முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் அஷ்டவசுக்களும் கின்னர கிம்புருட கருட காந்தருவரும் சப்தரிஷிகளும் கூடிநிறைந்த சபையில் தேவேந்திரன் அணி முடிப்பணியுடன் கற்பகமாலை யிலங்க, கடவுள்மணி பிரகாசிக்கக் காந்தருவர் குடைகவிக்க; அரம்பை யூர்வசி திலோத்தமை மேனகைமுதலிய அறுபத்து நாலுகோடி மாதரும் கட்டியங்கூற, அடைக்காய்கொடுக்க, படிக்கம்பிடிக்க, ஆலவட்டம்வீச, சாமரைபோட,பீலிக்குஞ்சந்தாங்க, ஆலாத்திசுற்ற, மங்கள வாலி சங்கீதம்பாட, இங்கிதபரதநாட்டியம் ஆடக் கொலு வீற்றிருந்தான். அக்காலையில் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் கொலுவுக்குவர "மையலார்மையலிற் பட்டோர்தமக்கொருசெயலுமுண்டோ" என்பதுபோல் ஸ்திரீக ளுடைய மையலால் மயங்கி நாட்டியம் பார்த்திருந்த வச்சிராயுதன் வந்தகுரு வைப்பார்த்து மரியாதைசெய்யாமல் பராமுகமாயிருக்கவும் சற்றுநேரம் நின்று கோபங்கொண்டு திரும்பிச்சென்ற தேவகுருவானவர் தேவலோகத்தைவிட்டு மறைந்துபோகவும் "பெரியோர்கள் திருவுள்ளம் பேதித்தா லெப்பொருளும் பேதிக்கும்ஆகையால்" தேவேந்திரனுக்குச் செல்வமும் கல்வியும் சீரும் சிறப் பும் முககாந்தியும் நாளுக்குநாள் குறைந்துபோக விசனமடைந்து ஏதால் விளைந்தது இதுவென்றுநொந்து, குருவை மரியாதைசெய்யாத குறையென்று உணர்ந்து, அவரை யக்ஷருலகும், அளகாபுரியும், பூமண்டலமும், நாகமண்டல மும் தேடிக்காணாமல் தியங்கிமயங்கி, சத்தியலோகத்தைச்சார்ந்துபார்த்து, பிரமனைநோக்கிப்பெருமூச்சுவிட்டு, என்குருநாதர் கோபித்துச்சென்றார்என்று, தான்செய்தகுற்றத்தையும்சொல்லி, நித்தியசெபம் ஓமம் யாகம் இவைகளெல் லாம் நின்றுபோய் விட்டன, எங்குந்தேடிப்பார்த்தேன் குருவைக்காணேன் இதற்கொருவழிசொல்லும், எந்தையேயென்று வணங்கிப்பணிந்த வச்சிரா யுதனைப் பிரமன்நோக்கி, ஆசானை இப்படி அவமதிக்கலாகாது உனது செல்வச் செருக்கினால் உன்னை மறந்திருந்தாயென்று முனிந்து, பின்தன்மனத்தில் ஒரு சூக்ஷியைநினைத்து இந்திரனைப்பார்த்து உனக்குபிரகஸ்பதிபகவான்கிடைக்கிற வரைக்கும் துவஷ்டாவென்னும்ஒருபெரியவர் வெகுளியினால் பெற்றபிள்ளையா கிய விசுவரூபனென்பவரைக்குருவாக்கிக்கொள்ளும். அவர் சேற்றில் செந்தா மரை பிறந்ததுபோல் அரக்கர்குலத்தில்பிறந்துதோஷமே அல்லதுவேதம்சாஸ் திரம் கலைக்கியான உபநிடதம் சித்தாந்தம் செபம்தவம் ஓமம் யோகம் இவை யெல்லாந்தெரிந்தஉத்தமர். அவரை ஆசாரியராகக்கொண்டு சகலகாரியங்களை யும் நடத்திக்கொள்ளுமென்று நான்முகன்சொல்லினான். அந்தவார்த்தையை இந்திரன்நம்பிப்பணிந்து விடைபெற்றுவந்து மூன்றுதலையினையுடைய விசுவரூ பனைக்கண்டு உபசாரமாகத்தொழுது எனக்குக் குருவாக இருக்கவேண்டும் என்றுவருந்தஇராக்ஷசன் தேவகுருவாகிறதற்கு எத்தனைகாலம் தவம்பண்ணி னாலுங்கிட்டாதே அப்படி இருக்க என்னை இந்திரன்வந்து அழைப்பதுதேடிய பொருள் நாடிவந்ததைப்போல் இருக்கிறது என்று சந்தோஷித்து இதோவந் தேன் என்று தெய்வலோகத்திற்குப்போய்ச் சிலநாள் குருபீடத்திலிருந்தனன். இருக்கையில் தேவேந்திரன் ஒருயாகஞ்செய்ய எத்தனித்தபோது குருவாகிய

விசுவரூபன் தேவர்கள்பேரினால் கூச்சலிட்டு மந்திரஞ்சொல்லி அக்கினியில் அவிர்ப்பாகம்விடுக்கும்போது தங்கள் இனமாகிய இராக்ஷதருக்கு இந்த அவிர்ப்பாகபலன்சேர்ந்து திடவீரகாத்திரதைரிய பலன்களுண்டாகவும் தேவதைகள் நசித்துப்போகவும் மனதில்நினைத்து வாய்முணமுணப்புடன் மந்திரஞ்சொல்லினன். அந்தக்கள்ளக்குறிப்பை சதமகன் அறிந்து கோபங்கொண்டு "தன்னினந் தன்னைக்காக்கும் வேலிபயிரைக்காக்கும்" என்னும் பழமொழிதப்பாதுசெய்தானல்லவா இந்தச்சண்டாளக்குருக்களென்று தன்கையிலிருக்கும் வச்சிராயுதத்தினால் அவன்தலையைவெட்டவும் அவன்பெற்றிருந்தவரத்தின்பலத்தினால் ஒரு தலை ஊர்க்குருவியாகியும், மற்றொருதலை சிச்சிலிப்பக்ஷியாகியும், இன்னொரு தலை காடையாகியும், பறந்தோடிப்போக விசுவரூபனாகிய குருவைக்கொன்றனன். கொல்லவும் அந்த பிர்மஹத்தி வந்து இந்திரனைப் பிடித்துவருத்தவும் தேவர்களெல்லாங்கலங்கிவாடி பூமியிலிராநின்ற மண் சலம் மரங்கள் ஸ்திரீகள் இவைகளைப்பார்த்து இந்திரன்சுமந்த தோஷத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று இரங்கிக் கேட்டுக்கொண்டார்கள். அதற்கு இந்த நான்கும் தேவராஜனால் சுமக்கக்கூடாத அத்தியை நாங்கள் எவ்விதந்தாங்குவோமென்றுகேட்டன. சவர்மண்ணாகவும் நுரையாகவும் பிசினாகவும் மாதவிடாயாகவும், அமையும் அத்தோஷங்களை முறையே பூமியும், சலமும், மரமும், ஸ்திரீகளும் ஆகிய நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டியதென்று தேவர்கள்வேண்ட, நல்லது அப்படியே அழியாப்பெரும்பழியாகிய பிர்மஹத்திதோஷத்தை நாங்கள் வாங்கிக்கொண்டால் அதனால் எங்களுக்கு என்னலாபம் எப்படி அந்தப்பழியைத் தீர்த்துக்கொள்ளுவோம் என்றுகேட்க அமரர்கள் சொல்லுகின்றார்கள். பூமியில்வெட்டியபள்ளம் தானாகத்தூர்ந்துபோகவும், சலங்கள்இறைக்கஇறைக்கச் சுரக்கவும் மரங்கள் வெட்டினால் துளிர்க்கவும் ஸ்திரீகள் கருப்பமாகிப்பத்துமாதம்வரைக்கும் கணவனைக் கூடிவாழவும் அநுக்கிரகஞ்செய்தனர். அப்படியே அந்தப்பிர்ஹமத்தி தோஷத்தை நாலுபங்காகப்போக்கி தேவேந்திரன் இந்திரலோகத்தில் அமரர்களுடன் அரசுபுரிந்துவாழ்ந்திருந்தான். வாழ்ந்திருக்கு நாளையில் விசுவரூபன் இறந்தசெய்தியைத் துவஷ்டாவாகிய தூயோன் கேள்வியுற்று "சுடர்முனிவோர்களும் கடப்பரோ மக்கண்மேற்காதல்" என்னும் வாய்மைக்கு இசைய மனம்வருந்திப்புத்திரசோகத்திலாழ்ந்து துன்பம் அடைந்து நமதுகுமாரனைக்கொன்ற ஆகண்டலனைவென்று பழிதீர்த்துக்கொள்ள வேண்டுமென்று ஒருபுத்திரகாமேஷ்டியாகஞ்செய்து மந்திரலோபம் கிரியாலோபம் இல்லாமல் பூர்ணாகுதி கொடுக்குங்காலையில் சிவந்தநெருப்புக்கப்பிகள் போன்ற தலைமயிரும், வடவாமுகாக்கினிவந்து குடியிருக்கும் கண்களும், எழுகடலின் ஆழமும் இதுவென்று அளவுகாட்டவந்த வாயும், எட்டுக்கிரியின் உயரத்தையும் பருமனையும் தெரிவிக்கவந்த தோள்களும், இருண்டகறுப்பு இதுதான் என்னும் மேனியும், திண்ணிய யானைத்துதிக்கைகள்போல் திரண்டகால்களும், சூலம் வாள்முதலிய ஆயுதங்களும் சுமந்து, ஒரு மஹாபுருஷன் அந்த யாகாக்கினியிலிருந்து அண்டகடாகம்வரைக்கும் உயர்ந்துவளர்ந்து எழுந்துதன்தந்தைக்குச் சாஷ்டாங்க தண்டஞ்செய்து என்னை ஆக்கியகாரியம் யாதென்று கேட்டது

அப்படிகேட்டமைந்தனைநோக்கி விருத்திராசுரனென்று பேரிட்டழைத்து உன் தமையனைக்கொன்ற இந்திரன்முதலியதேவர்களையும்விழுங்கி அந்தத்தேவேந் திரப் பட்டத்தையும் மூவுலகத்தையும் நீயே ஆளுவை என்று ஆசிர்வசனஞ் செய்து அனுப்பினான். விருத்திராசுரன் உடனே தேவராஜனுக்குச் சத்துரு வாகிக்கோபங்கொண்டு இரதமேறி வந்தான். இதை அறிந்து தேவப்படைகளு டன் வெள்ளையானையின்மேல் வந்த ஆகண்டலனும் விருத்திரனும் எதிர்த்து சிற்சில அஸ்திரசஸ்திரங்களைத் தொடுத்துப்போர்புரியும்போது தேவப்படை களைத் திரணமாக எண்ணி இரதம் விட்டிறங்கி இந்திரனையும் அவன் ஏறிவந்த வெள்ளையானையையும்மற்றச்சேனையையும் வாரிவிழுங்கித்திரும்பிவரும்போது சோம்பலும் ஏப்பமும் தூம்பலும் இருமலும் கொட்டாவியும் வந்துவாயைத் திறக்கவும் வெள்ளையானை தேவேந்திரன் தேவர்கள் முதலிய யாவரும் பூமி யிலே குப்புற்று விழுந்தார்கள். கக்கின வஸ்துவைக்காறியுமிழ்ந்து விருத்திரா சுரன் போய்விட்டான். இவர்களெல்லோருஞ் சாகாமல் சற்றுநேரத்தில் ஆயா சந்தீர்ந்து எழுந்துபார்த்தார்கள். இது எப்படி இருந்தது என்றால் குமாரசுவாமி யும் தாருகாசுரனும் யுத்தஞ் செய்கையில் கைலாயத்திலிருந்து வந்த இரண் டாயிரம் தேவகணங்களையும் பூதகணங்களையும் தாருகாசுரன் வாரிவிழுங்க அதைச் சண்முகர்கண்டு நகைத்து வயிரக்கணையை விடுத்து அவன் வயிற் றைக்கிழிக்க அந்தவயிற்றிலிருந்து சாகாமல்தேவகணங்கள் குதித்து வந்தது போல் இருந்தது. அப்பால் இந்திரன்முதலிய யாவரும் களைதெளிந்து எழுந்து அசுரனைவெல்ல நம்மால் ஆகாது என்று மேருமலைச்சாரலில் போய்ச்சேர்ந்து ஏக்கமுற்று இனிமேல் நமது தேவதத்துவமும் இந்திரத்துவமும் நடவாது என்று ஒடுங்கியிருக்குங்காலத்தில் விருத்திராசுரன் தனதுபுஜபலபராக்கிரமத் தினால் மூன்றுலோகமும்தானே அரசுபுரிந்துவந்தான். அதைக்கண்டு மஹாரி ஷீஸ்வரர்களெல்லாம் விருத்திரா சுரனிடத்திற்குப்போய் அவனை ஆசிர்வதிக் கவும் அவன் எழுந்துசாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து ஆசனங்கொடுக்கவும் அதன்மேலிருந்து ஓ! துவஷ்டாவுடைய புத்திர காமேஷ்டியாகத்தி லுதித்த புத்திரதீரனே; விருத்திராசுரனே இன்றுமுதல் இந்திரன் முதலியதேவர்கள் பேரில்யுத்தஞ்செய்யாது இருப்பையாகில் உனக்குமிகுந்தபலமும் சகலநலமும் கைகூடும்,யுத்தஞ்செய்ய நினைந்தால் அபலமும் சபலமும் உண்டாய் மற்ற யாவுங் குறைந்துபோவதும் அன்றி நீயும் அழிந்துபோகும் காலமும் நேரிடும், அந்த உளவறிந்து சொல்லவந்தோமென்று உணர்த்தினர். அதை அவனு கேட்டுப்பயந்து உடனே ரிஷிகளைவணங்கி இனி இந்திரன்பேரில் சண்டை க்குவருவதில்லை. அவனுடைய இராச்சியத்தை அவன் ஆளும்படியாகச் செலவு கொடுத்தேன் நான் சொன்னசொல தப்புவதில்லை. தேவதைகளின் திவ்வியாஸ்திரமுதலிய ஆயுதங்களினால் நான்சாகாமலிருக்கும்படியாகியவரம் தாங்கள் தயவுசெய்ய வேண்டும் என்று கேட்க; அப்படியேவரங் கொடுத்து மஹா ரிஷிகள் விடை பெற்றுக்கொண்டுபோய், இந்திரனை அழைத்துவந்து எப்போதும்போல இந்திரபோகத்தில் இருத்தி சுகம்பெற வாழ்த்தினார்கள். இப்படி சிலநாள்சென்றபிற்பாடு நாளுக்குநாள் விருத்திரன் பலப்பட்டுச் சகல

புவனமும் தானேகைக்கொண்டு ஆண்டு எவரையும் மதிக்காமல் எல்லோரையும் வருத்தி இந்திரன்மேலும் பகைத்து வருவதைக்கண்டு, இந்திரன் மனம் பொறுமல் பிர்மாவினிடத்திற்சென்று விசுவரூபனைக்குருவாக்கிக் கொண்டது முதல் இதுவரையிலும் நடந்த சங்கதிகளையும் இப்போது தான்படும் சங்கடங்களையும் விளம்பி வணங்கினன். அப்போதுசதுமுகனானவர் இந்திரனை அழைத்துக்கொண்டு பாற்கடற்சயனராகிய பரந்தாமன் உலகிற்போய்இருவரும்பணிந்துதமதுகுறைகளைச்சொல்லக்கேட்டுமகாவிஷ்ணுதிருவாய்மலர்ந்தருளுகிறார். சகலபலங்களையும் சகலவரங்களையும் உடைய விருத்திரனைக்கொல்லுவதற்கு உன்கையிலிருக்கும் வச்சிராயுதம் மெத்த பழசானபடியால் சத்துருக்களின் பிராணனை வாங்கமாட்டாது, மற்ற எந்த ஆயுதத்தாலும் அவன்மாளான். வேறொருவச்சிராயுதம்வேண்டும் அதற்குஒருயுக்தி சொல்லுகின்றோம்கேளும்இந்திரனே! அதாவது; பாற்கடல் கடையும்போது அமரர் அசுரர் யாவருங்கொண்டுவந்த ஆயுதக்கூட்டங்களைக்கண்டு, கலகம் விளையும் என்று ததீசிமகாமுனிவசத்தில் ஒப்புவித்து வரும்படியாய்ச்சொன்னோம். அப்படியேவைத்து வந்து அமுதங்கடைந்தார்கள். அசுரர்கள் அமுதம் அகப்படாமையால் கொண்டகோபத்தாலும், தேவர்கள் அமுதம்புசித்த சந்தோஷத்தாலும் அவ்வாயுதங்களைக் கொண்டுபோக மறந்துவிட்டார்கள். அந்த ஆயுதங்களை வெகுகாலம்வைத்துக்காப்பாற்றிய ததீசிமகாமுனிவரானவர் பின்தாமே அவைகளை எடுத்து விழுங்கிவிட்டார். அவைகளெல்லாம் அவருடைய முதுகெலும்பைப் பற்றித் திரண்டிருக்கின்றன. அந்தமுனிவரானவர் "அன்பிலாரெல்லாந் தமக்குரியர், அன்புடையர்என்பும் உரியர்பிறர்க்கு" என்பதுபோல் லோகோபகாரி ஆகையால்அவரிடத்தில்நீர்போய்க்கேட்டால் கொடுப்பார். அந்தஎலும்பைவாங்கி வச்சிராயுதம் பண்ணிக்கொண்டு விருத்திராசுரன் சமுத்திரக்கரையோரத்தில்வரும் இரணியவேளையில்எதிர்த்து என்னைநினைத்துவிடுப்பாயாகில்அவன் இறப்பான்என்று மால்சொல்லக்கேட்டுஅடிவணங்கிப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு ததீசிமகாமுனிவரைக்கண்டு வணங்கி, உமதுமுதுகெலும்பைத்தந்து எங்களையாண்டு இரட்சிக்கவேண்டும் மகாமுனியேஎன்று இருகரத்தையும்நீட்டிக்கொண்டுஇரக்க, அந்தமகாமுனிவர் நிலையில்லாத இந்தயாக்கைபலருக்கும் உபயோகப்படும்பொருட்டு அழிவதே உத்தமம்என்று யோகத்திலிருந்துஆன்மாவைப் பிரிக்கவும், உடனே தேவதுந்துமிமுழக்கத்துடன் சுயம்பிரகாசச்சோதி வானுலகத்திற் கலந்தது. அந்த மகாமுனியினுடைய முதுகெலும்பையெடுத்துவிசுவப்பிரமனிடத்திற்கொடுக்க அதைஅவர்வச்சிராயுதமாகச்செய்து ஆசீர்வதித்துத்தேவேந்திரனுக்குக்கொடுத்தனர். அவன்அதைவாங்கிவைகுந்தநாதன் சொல்லியகாலம் வருகிறவரையில் காத்திருந்து ஒருநாள் விருத்திராசுரன் சமுத்திரக்கரையோரத்தில் வரக்கண்டு, அமரர்களுடன் வெள்ளைவாரணன் எதிர்த்து யுத்தஞ்செய்து புதிதாகிய வச்சிராயுதத்தைப் பிரயோகஞ்செய்ய அசுரன் அதற்கு எதிர்நிற்கமாட்டாமல் இளைத்து ஓடி மிகவும் வாடி ஆழியில்மூழ்கி மறைந்தான். வச்சிராயுதமுங் கூடவேதொடர்ந்து தேடிக்காணாமல் நாணித்தியங்கக் கண்டு தேவர்கோன் வாடி, மண்பொதுத் தந்தையிடத்திற்

சென்றுவாரிதியில் அரக்கன் மறைந்துபோனதைச்சொல்ல, மலரோன்கேட்டு வாசவனை நோக்கி ஸ்ரீமந்நாராயணமந்திரத்தைச்சொல்லி என்பிரயோகிக்க இல்லையென்றுகோபித்து நல்லது, முக்குணமும் முத்தொழிலுமுடையமூலகாரணனென்னும்முதற்பொருளுக்கு அடியாகிய அகஸ்தியனைக்கண்டுவணங்கினால் உமதுகாரியங்களெல்லாம் அநுகூலமாகுமென்றுவிளம்பக்கேட்டு, அக்கணமே அகஸ்தியரிடத்திற்குவந்து வணங்கி அடிபணிந்து நிற்க, அவர் ஆசீர்வதித்துத் தேவேந்திரமஹாராஜனே இவ்வளவுதூரம் வந்தகாரணம் யாது என்றுகேட்க, கடலில் விருத்திராசுரன் மறைந்துபோனான், தேவர்கள்முதலிய யாவரும் யானும் மெத்தவருத்த முறுகின்றோம், அந்த அசுரனைக் காண்பிக்கவேண்டும் கருணைக்கடலே என்று தொழுதனன். அவரும் நன்றென்று இசைந்து கயிலையங்கிரியில்எழுந்தருளிய கடவுளையும் அவராலவிளைந்த திரிபுராக்கினி மன்மத தகனாக்கினி வடவாமுகாக்கினி இவைகளைமனதில் நிறுத்திக் கண்ணுதல் அருளினால் கடலைக் கடுகளவாகக் கரத்தினில் ஏந்தி உட்கொண்டருளினார். அதுகாலத்தில் சமுத்திரம் நீர்வற்றிமகாமச்சமுதலிய மீன்களெல்லாம் குன்றுகள் மலைகளுடன் குவிந்துமயங்க ஓர் மலைச்சிகரத்தில் விருத்திராசுரனிருந்து கண்களைமூடிக்கொண்டுயோகத்திலிருக்கக்கண்டு வச்சிராயுதம் அவனைமாய்த்தது. தேவர்கள் பாரிஜாதமலர்மாரி தூற்றி, மாயவனை வாழ்த்தி, தேவேந்திரனை ஏத்தித்துதித்தனர். விருத்திராசுரனைக்கொன்றமையால் இந்திரனை பிர்மஹத்திதோஷம்பிடித்து அழகுமுதலிய செலவமும்இழந்துகீர்த்தியும்பதியையும்நீங்கித்தம்போபலங்களும வரப்பிரசாதங்களும் குறைந்துமனத்தில்பயங்கரமும்அச்சமும் உண்டாய், உருக்கொண்டுவரும்பிர்மஹத்தியைநோக்கமாட்டாமல் ஓட்டமெடுத்து ஈசானிய திசையிலிருக்கும் நிர்மானிடதமென்னும் மலையிற்சேர்ந்து மிகுந்த துக்கத்துடன் இருந்தான். தெய்வலோகத்திற்கு அரசன் இல்லாமல் ரிஷிகள் தேவர்கள் முதலிய யாவரும் வருந்தி இந்திரனைக்கண்டு எங்களைவிட்டுப் பிரிந்திருக்க எப்படிமனங்கொண்டீர் அரசில்லா நாடு காடென்பது அறிந்ததில்லையா ஐயனேவாரும் அரசுபுரியும் அடியேங்களைக்காப்பாற்றுமென்று அழைத்தனர். அந்தவார்த்தைக்கு உத்தரஞ்சொல்லாமல் ஊமைபோலிருந்து பிர்மஹத்தியைக்கண்டு மிகவும் நடுக்கமுற்றிருக்க இந்திரனை அழைக்கவந்த ரிஷிகள்முதல் தேவர்களெல்லாரும் ஏகோது இனி நமக்கு இவர் உதவமாட்டார் என்று ஆலோசித்து ஆவைப்பிரிந்த கன்றுபோலும், தாயைப்பிரிந்த சேய்போலும், மழையைப்பிரிந்த பயிரைப்போலும், உயிரைப்பிரிந்த உடலைப்போலும், துக்கமடைந்து பட்டமில்லாத அரசு பாழென்றுணர்ந்து கேளுந்தருமபூபதியே உங்கள் பாட்டனாராகிய ஆயு மஹாராஜாவின் புத்திரன் நகுஷமஹாராஜன் நூறு அசுவமேதயாகஞ்செய்துஇந்திரபட்டத்துக்கு எதிர்பார்த்திருக்கின்றவரிடத்திற்குத் தேவர்கள்முதலியபேர்களெல்லாரும் வந்து உபசரித்து தேவராஜனாகி இருக்கவேண்டுமென்றும் எங்களுடை[illegible] தபோபலன்களை எல்லாம் உமக்குக்கொடுத்தோமென்றும் வாக்குதத்தஞ்செய்து பிரார்த்தித்து அழைத்துவந்து சகலநலமும் செல்வமும் அழகும் உண்டாகச் சிங்காதனத்தில் ஏற்றித்தேவகிரீட பட்டாபிஷேகமும்

செய்வித்து முப்பத்துமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகளும்; அமரர்; சித்தர்; தைத்தியர்; அசுரர்; கருடர்; கின்னரர்; கிருதர்; கிம்புருடர்; காந்தருவர்; இயக்கர்; வித்யாதரர்; பூதர்; பைசாசர்! அந்தரர்; உரகர்; முனிவர் ஆகாயவாசிகள் போகபூமியோர் இவர்களெல்லோரும் வணங்க அரம்பாஸ்திரீகள் யாவரும் பரதநாட்டியஞ்செய்யக் கற்பகப்பூங்காவனத்திலுறைந்து அரசுசெலுத்திவந்தான். அப்போது பழையதேவேந்திரனைப் பிரிந்திருக்கும் இந்திராணி தன்னாயகன் செல்வமிழந்த தன்மையைநோக்கி மனஸ்தாபம் அடைந்து அநேகம் ஸ்திரீக்கூட்டங்களுடன் வனங்களில் உலவி மயிலபோல வருஞ் சாயலைக்கண்டு "இராவணன் அழியுங்காலத்தில் சீதையை நாடினனென்பதுபோல" நகுஷன் ஆசைகொண்டு சந்திரனைக்கண்டபேர்கள் தாரகைகளை நோக்காத தன்மைபோல மற்றஸ்திரீகளின்பேருவிருக்கும் ஆசையைவிடுத்து, தேவதூதனை நோக்கி இந்திராணியை அழைத்துவாருங்களென்று அனுப்பினான். இவர்கள்போய்ப் புலோமசையைப்பார்த்துவணங்கி இந்திரன்அழைத்துவரச் சொன்னானென்றுசொல்லக்கேட்டு, இந்திராணிதேவகுருவினிடத்திற்சென்று திருவடிமலரைப்பணிந்து ஐயா? என்னாயகன் உயிருடனிருக்கஇப்போது வந்த இந்திரன் என்னைவிரும்பி அழைக்கின்றதாக இவர்கள்சொல்லுகின்றார்களே;இதற்கெப்படியென்றுகண்ணீருதிர்க்கக்,கண்டுகுருவானவர்உன்பதிவிரதாதனத்திற்குப்பழுதுவாராமல்காக்கிறேன்;நீகண்கலக்கப்படவேண்டாம் அம்மா என்றுதைரியஞ்சொல்லித்தூதனைக்நோக்கி அப்பா? நகுஷமஹாராஜன்மிகவும் புத்திசாலி ஆகையால் இந்திராணியை அழைப்பது ராஜநீதி அல்லவென்று நான் சொன்னதாகச்சொல்லுங்களென்று அனுப்பினார். அதைக்கேட்டு நகுஷன் மெத்தக்கோபங்கொண்டு கூடாது கைப்பிடியாகக் கொண்டுவரவேண்டியதுஎன்று தூதனைமீண்டும்அனுப்ப இந்திராணிபார்த்து முரடனோடு எதிர்க்கலாகாது இதமாகிய வசனத்தினால் ஜயிப்பதேயுத்தி ஐயா எனக்குவிடைகொடும்நான்போய் க்கண்டுபேசி நகுஷனைமகிழச்செய்து வருகின்றேன் என்று செலவுபெற்றுக்கொண்டு அரம்பாஸ்திரீகளுடன் கூடி அரண்மனையைநாடி வேங்கைப்புலிக்கு எதிரிற்செல்லும் பெண்யானைப்போல வெருண்டுமருண்டு நகுஷன்சபைக்குப்போனாள். போனபோது ஆயுவின்குமாரன் இந்திராணியை எப்பொழுதுகாண்பேனென்றுஇரவும்பகலும்ஏக்கங்கொண்டிருந்தவனாகையால் ஆசைவிஞ்சி,குறுநகைகொண்டு தேவர்கள் முகத்தைப்பார்க்க அமரர்களெல்லாம்சுவாமி பராக்கிரமங்களிஷ்டப்படிக்குச் சசிதேவிவந்துவிட்டாளென்றுசாற்றினார்கள். அச்சசிதேவியும் சமீபத்தில்வந்துநின்றுபுதிய இந்திரனைக்கண்டுஎன்னாயகன் உயிருடனிருக்கஎன்னை அழைப்பதுதருமமா,நீர்பெருமையானதேவப்பட்டம்பெற்றும்சிறுமையிற்சிந்தை செலுத்தப்போகுமா இன்னமும் நன்னீதியுடன்நடப்பீராகில் அளவிறந்த கீர்த்தியைப்பெறுவீர், தகாதபோகத்தை விரும்பிச்சுகாதியோகத்தைஅநேகர் இழந்துதாழ்ந்து அழிந்துபோன தன்மையை நீர்கேட்டறியீரா, நற்குலத்தில் பிறந்தும் நற்றவங்களிழைத்தும் அற்பத்திற்கு ஆசைப்பட்டு ஆயுள்மாயலாமா ஆயுவின்தவத்திலுதித்த அரசேகேளும், மலைகளின்சிறகையரிந்த வச்சிரபாணி விருத்திராசுரனென்னும் விறலோனைக்கொ

ன்றுபிர்மஹத்திதோஷம்பிடித்து அதைத்தவிர்த்துக்கொள்ளத் தவம்பண்ணப்
போயிருக்கின்றார். அந்தஇந்திரன்பழிதீர்த்துக்கொண்டு இவ்விடத்திற்குவாரா
திருப்பாராகில்எங்களைஎல்லாங்காத்து இரக்ஷிக்குங்கடமைஉமக்கேயல்லதுமற்
றியாருக்கு உண்டாயிருக்கும், அப்படியிருக்க உமக்கு நான்புறம்பல்லவே என்
னை இப்போது இந்திரசபையில்அழைத்ததுவிவகாரமாமா? தருமமாமாஎன்று
சொல்லிய இனியவசனங்களைக்கேட்டு நகுஷன் உடம்பு அடங்காமகிழ்கொ
ண்டு ஓஓ பொன்னுலகிற்சிறந்த இந்திராணிதேவியே பழய இந்திரன்பிழைத்து
வருவதும் வாராமற்போவதுந் தெரிந்துகொள்ளவேண்டுமென்று உம்முடைய
உள்ளம் விரும்பியிருப்பதினால் அதை விசாரித்துக்கொண்டபின், என்றைக்கு
வரும்படியாக உத்தரவுசெய்கின்றீரோ அன்றைக்கு வருகிறேன் என்று
சகல உபசாரமுஞ் சொல்லி மரியாதைசெய்து செலவுகொடுக்கப் பெற்றுக்
கொண்டு இராகுவினால் விடுபட்ட சந்திரனைப்போல் சபையைவிட்டுத்திரும்பி
அரம்பாஸ்திரீகளின் கூட்டத்துடன் பிரகஸ்பதிபகவானிடத்தில் வந்து வண
ங்கித் தான்போனதும் வசனித்ததும் அவன்சந்தோஷப் பட்டதுஞ்சொல்லிக்
குருவினுடைய ஆசிர்வசனமும்பெற்று, தன்புருடனைநீங்கியிருக்கும் ஆற்றாத்து
யரத்தினால் நிடதகிரிக்குப்போய்த் தேவேந்திரனைக்கண்டு தீர்க்கதண்டஞ்
செய்துதேவர் கைக்கொண்ட பாக்கிய மெல்லாம் நகுஷன் கைக்கொண்டு
ஆளுகின்றான் என்றும் அவனால் தனக்குஇந்தவிபத்துவந்ததென்றும் தெரியப்
படுத்தி விசனப்படும்போது இந்திரன் இந்திராணியைநோக்கி, செல்வத்தையும்
சிறப்பையும் உன்னையும் என்னையும் பிரித்துவிட்டது பிர்மஹத்திதோஷமே
அன்றி வேறல்ல. அந்தத்தோஷ மாத்திரம் என்னைப்பிரியாதிருக்கின்றது. இன்
னம்கொஞ்சநாள் மனம் பொறுப்பையாகில் நான்தெய்வலோகம் வந்துசேரு
கின்றேன் நீபோவென்று சசிதேவியை அனுப்பிவிட்டுத் திருத்துழாய் தரித்தி
ருக்குந் தீனதயாளுவே என்குறை யகற்றுங் கோவே! என் தீவினையகற்றுந்
தெய்வமே கோவிந்தா! கோவிந்தா!! என்று கூவிக்கொண்டு வைகுந்தமா
நகரஞ்சேர்ந்து அனந்த சயனனாகிய ஆதிபகவானுடைய அடியிணைமலரைத்
தொழுது உலக அபகாரியாகிய விருத்திரனைக்கொன்று பூலோகத்திற்கும்
பொன்னுலகிற்கும் உபகாரஞ்செய்த உமது அடிமையாகிய எனக்கு இந்தப்
பிர்மஹத்தி நீங்காதிருக்கவும் என்செல்வம் என் பத்தினிமுதலிய அரசாட்சி
யாவும் இன்னொருவன்கைகொள்ளவும் நான் ஒண்டியாய் தரித்திரம்அடைந்து
திரியவும் தேவரீர் கடாக்ஷம். இப்படியிருந்தால் நான் என்னசெய்வேனென்று
சிந்தித்து வந்தனைபுரியுங்காலையில் மேகவாகனா கேளும் உன்னைவருத்தும்
பிர்மஹத்திதோஷம் நீங்குவதற்கு இந்திராணி சமேதமாகயிருந்து அயமேத
மென்னும் ஒருயாகஞ்செய்வையாகில் தோஷமும் நீங்கி வாழ்வும பெறலாம்
என்று மஹாவிஷ்ணு அருள்செய்தனர். அப்படியே சிலதேவர்களுக்கும்ரிஷிக
ளுக்குந் தெரிவித்து இமயபர்வதச்சாரலில் இந்திராணியுடனிருந்து அந்தயாகத்
தைமுடிக்க அதினாலே பாபரகிதனாகி பயந்தீர்ந்து சகலதேவர்களுடனேயும்
தெய்வலோகம்போய்ச்சேர்ந்தபின்னும் சம்பத்தும் அழகும் பலமும் இந்திர
பதமும் பெறாமல் பிர்மஹத்திபிடித்த முகமென்று சொல்லும்படியா யிருப்

பதினால் நகுஷனுடைய சுந்தரத்தன்மைக்கு இவன் ஈடுபடாமல் மனோவிசாரம் பிடித்து வெகுதுக்கத்துடன் ஒருவருக்குந் தெரியாமல் ஈசானதிசையிலிருக்கும் ஒருதடாகத்தில் நிறைந்த தாமரை நாளத்தினுட்புகுந்து தவஞ்செய்து கொண்டிருந்தான். அப்படியிருக்குநாளில் தேவேந்திரன் இறந்துபோனானென்றும் இந்திராணிமுதலிய போகங்களையும் துறந்து போனானென்றும் வெகுநாளாய்ச்சுமந்த தூலதேகத்தை மறந்துபோனானென்றும் கண்களிற்காணாமல் பறந்துபோனானென்றும் இப்படி பற்பலவிதங்களாகப் பேசிக்கொள்ளும் வகையை வாசவன் தேவிகேட்டு மனந்திடுக்கிட்டு வாய்புலர்ந்து விசனமென்னும் வாரிதியிலாழ்ந்து ஞானச்செல்வியாகிய கலைவாணியின் இணையடிபோற்றி விரதம் இழைக்க, அந்தத்தேவி ஒருஸ்திரீரூபமாய் எதிரில்நின்று சுரேந்திரன் மனைவியே! கேளும் உன்னாயகன் பிரமகத்தியின் பீடிதத்தினால் பெருமையும் புகழும் பிரகாசமுங் குறைந்து எவர்களுக்குந் தெரியாத ஈசானமூலையில் இருக்கும் ஒருபொய்கையுள் நிறைந்த தாமரைநாளமத்தியில் அணுரூபமாகத் தவஞ்செய்கின்றான்; நீபடும்விசனத்தினால் இரக்கமுற்றுவந்துசொன்னேன்; என்பின் வருவையாகில் இப்போதே காண்பிப்பேன் என்றுரைத்த வாக்கியங் கேட்டு மனங்குளிர்ந்து வருகிறேனென்று தொடரவும் அழைத்துக் கொண்டுபோய் அந்தப்பொய்கையில் மலர்ந்திருக்கும் தாமரைத்தண்டின் மத்தியில் உண்டாகிய சிறிய துவாரத்தில் புகைரூபமாகப் புகுந்துபோய்த் தேவேந்திரனைக்காட்டி அந்தத்தேவிமறைந்து போகவும் இந்திராணி இந்திரனுடைய கால்மேல் விழுந்து கதறியழுது விசாரப்படவும் ஆச்சரியமுற்று நானிருந்த இந்தத் தானத்தை நீயெப்படியறிந்துவந்தாய்; உனக்கு எவர்கள் தெரிவித்தவர்கள் என்று வினவும்போது, தேவரீர் இறந்துபோனதாகவும் துறந்துபோனதாகவும் வெகுசனங்கள் பற்பலவாறாகப் பேசிக்கொண்டார்கள்; அதைக்கேட்டு மனந்தாளாமல் கலைவாணியைக் கருதி விரதம் இழைக்க, அந்த அம்மை அழைத்து வந்து காட்டி எனது துன்பத்தை நீக்கிச்சென்றாள்; நான் இன்புற்று இவ்விடம் வந்தேனென்னவும் கேட்டு மகிழ்ந்தான். அவனைப்பார்த்து இந்திர பட்டாபிஷேகத்தைவிட்டு நீர் ஏன் வந்துவிட்டீர் என்று சசிதேவிகேட்க, சசிநாயகன் சொல்லுகின்றான்.

என்பெண்ணமுதே ? நாமிருவருங் கூடிச்செய்த அயமேதயாகத்தினால் விருத்திராசுரனைக்கொன்ற பிரமகத்திதோஷம் நீங்கியதென்று பேர் மாத்திரமேயொழிய மயக்கமும் தியக்கமும் மனத்துநடுக்கமும் என்னைவிட்டு நீங்கவேயில்லை. அரசும் வாழ்வும் அழகும்பலமும் ரிஷிகளும் தேவர்களும்கொடுத்த தபோபலமும் நகுஷனைச்சேர்ந்து அரசுபுரிகின்றான். அவைகள் யாவும் என்னிடத்திற்கு வருமாகில் அப்போது நான் போகதேவேந்திரனாவேன், இல்லாவிட்டால் என்கதி இவ்வளவுதான் என்று சொல்ல அவைகள் தேவரீருக்குக் கிடைக்கும்படியாகிய உபாயஞ் சொல்லும், நான் அப்படியே முடிக்கிறேனென்று இந்திராணி விளம்பக்கேட்டு, நல்லது பெண்கணாயகமே உன்மேல் இச்சைகொண்டு தூது அனுப்பினானென்று முன்சொல்லி யிருக்கின்றாயே, அதை அனுசரித்துச் சப்தரிஷிகள் தாங்கும் இந்திர

விமானப் பல்லக்கில் நகுஷன் ஏறிவரப்பண்ணினால் அவனுடைய தபோபல மெல்லாங் குறையும், அவை என்னிடத்திலவந்து நிறையும்; இது உன்னால்வர வேண்டியசெல்வமென்றுஉரைத்துவிடைகொடுத்து எப்போதும்போற்றவுஞ் செய்திருந்தான். இப்பால் இந்திராணி செலவுபெற்றுக்கொண்டு தெய்வலோகம்போய்ச் சேர்ந்துதானே வலுவில் தாதிகளையனுப்பி இந்திராணி உமக்கு ஞாபகஞ் சொன்னாளென்று சொல்லவே, நான்பிழைத்தேன் நான்பிழைத்தேன், மறவாமல் இவ்வளவு தயை வைத்திருந்தது எனது பாக்கியமே? எனது நற்காலமே என்று மகிழ்ந்த செய்தியைத் தெரிந்துகொண்டு நூலிடை புகாத தனத்தையுடைய இந்திராணி நகுஷனைதிரிற்போய் நின்று இன்ப மொழியும் நல்லொழுக்கமும் நன்னீதியும் நற்கீர்த்தியும் பரிசுத்தவாய்மையும் அழகும் தங்களைப்போல எங்குமில்லை; என்னை நீரன்றழைத்தபோதே எனக்கும் இச்சையுண்டு, ஆனால் ஸ்திரீசனங்களாகப் பிறந்தபேர்களுக்கு இலச்சையுண்டு; கொள்ளாமோக மிருந்தாலும் புருஷரிடத்தில் வாய்விட்டுவிள்ளார்கள். இவ்வுலகத்தில் எனக்குப் பணிப்பெண்ணாகிய பேர்களெல்லாரும் இன்பசுகத்தை அனுபவிக்கும்போது நானொருத்திதானே துன்பத்தை அனுபவிப்பது; உம்மைவெறுக்க வேண்டியதில்லை, 'ஆரால்கெட்டாயென்றால் நோரால் கெட்டேன்' என்பதுபோன்ற தானேவருந் சீதேவியை நானேகாலாலுதைத்துத் தள்ளிவிட்டுவந்தேன், இந்திரன்வந்துவிடுவானோன்றுஎண்ணிப்பார்த்தேன், இதுவரையிலும் வரக்காணேன். ஆகிலும் இன்னங்கொஞ்சநாள் பார்க்கவேண்டும்; அதுவரையிலும் என்னுபகன் சப்தரிஷிகள் சுமக்கும் பல்லக்கிலேறிப் பவனி வரப்பார்ப்பேன், அப்படியே நீரும் அந்தத்தேவயானத்திலேறிப் பவனிவரும் படியாகவும் என் கண்களால் நோக்கவும் விருப்பமுற்றிருக்கின்றேன் என்று கபடமாகச்சொல்ல, அம்மொழியானது நகுஷனுடைய காதுகளில் தேவாமிர்தம்வாரிப்பொழிந்ததன்மையைப்போல் இருக்கக்கண்டு,இன்னஞ்சிலநாளில் அப்படியே வருவேன், உமது அரண்மனைக்கு இப்போது நீர்போமென்று அனுப்பிவிட்டு மிகுந்தசந்தோஷத்துடன் புன்னகைகொண்டு சப்தரிஷிகளையும் வரவழைத்து யான் இந்திரலோகச்சிறப்பையும் அரண்மனை வீதிகளையும் பார்க்க வேண்டியிருப்பதால் நீங்கள் தாங்கப்பட்ட பல்லக்குகொண்டு வாருங்கள் என்று உத்தரவுசெய்ய, அப்படியே கொண்டுவந்து வைத்தார்கள். அந்தத் தேவயானத்தில் ஏறிக்கொண்டு சிங்காரவீதி, தேவர்கள்வீதி, மண்டபவீதி, மலர்வாவி, தேவஸ்தலவீதி,சித்திரவீதி, கோபுரவீதி, அரம்பையர்வீதி, ஆவண வீதி, தேரோடும்வீதி, திரவியவீதி, போகமாநகரம், புண்ணியநகரம், மடாலய நகரம், மாதவநகரம், விரமாநகரம், வெற்றிநகரம், காமதேனுச்சாலை, கற்பகச்சோலை, வெள்ளையானைச்சாலை, வெண்பரிச்சாலை, ஆயுதச்சாலை; அறஞ்செயுஞ்சாலை, இந்திராணி அரண்மனை இவைகள்முதலிய எவ்விடமும் சப்தரிஷிகளும் தாங்க உலாவிவருகையில் நகுஷனுக்கு தபோபலம் ஊக்கம் தைரியம் அழகு இவைகளெல்லாம் நாளுக்குநாள்நசிந்துபோகவும்,பழையஇந்திரன்செய்யும் தவத்தினால் சகலபலமும் நலமும் அவனுக்கு விர்த்தியாகிவரவும் இப்படி நடந்துவருங்காலையில் ஒருநாள் முற்றத்துறந்த பெரியோர்கள்மதிக்கும் பிரபல

அதிசயங்களை எல்லாங்கேள்வியுற்று பொன்னுலகத்திற்பொருந்திய நகுஷனைச் செந்தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் நோக்கவரவும் உடனே எழுந்து சாஷ்டாங்க தண்டஞ்செய்து அர்க்யபாத்திய ஆசமனீய சந்தனாக்ஷதை தாம்பூல தீபதூப உபசாரங்களும்புரிந்து உயர்ந்த ஆசனத்தில் எழுந்தருளச்செய்து அவருடைய ஆசீர்வசனமும்பெற்று அரியாசனத்திலிருந்து க்ஷத்திரியர் அறியக்கூடாத வேதரகசிய மந்திரங்கள் சிலவற்றைப் பொருளுதவியினால் பிராமணரிடத்தில் கற்றுக்கொண்டு கர்வம் அடைந்திருந்த நகுஷன் அம்முனிவரை இன்னுமொன்று அறிந்தும்மறந்து எவர்களும் கேட்கும்படி அந்தமந்திரத்தைச் சொல்லி இதற்குப்பொருளையும் என்று இறுமாப்புடன் வினவ, அவருக்குக் கோபம்வந்து குலுங்கநகைத்து உணரக்கூடாத பரமரகசியமந்திரத்தை நீ தெரிந்துகொண்ட தல்லாமலும் என்னைப் பயன்சொல்லச் சொல்லிப்பயமில்லாமலும் கேட்கத்தகுமா? பஞ்சையாகிய நீயென்று உறுக்கிப்பார்க்கும்போது நகுஷன்சீறி ஆத்மார்த்தமாக யாவர்களும் மோக்ஷம் அடைவதற்கே விதித்திருக்கும் மந்திரத்தை நான்கேட்கவுங் கற்கவுங்கூடாதென்று கற்றுணர்ந்த நீர் ஞானமில்லாமற் கழறிய மொழிக்குக் கலகலவென்று நகைப்பதேயன்றி வேறொன்றையுங்காணேனென்று நிந்தித்து (சர்ப்பசர்ப்ப) சீக்கிரம் இவ்விடம் விட்டுப்போம்போமென்று நாகப்பாம்பைப்போற்சீறிக் கூறக்கேட்டு, தடங்கடல் அடங்கலுங்குடங்கையிலொடுங்க அருந்திய அகத்தியர் வடவைக்கனல்போன்ற விஷங்களைக்கக்கும் அஷ்டமாநாகத்தினும் மேற்படச்சீறி அடாபிரஷ்டா! முதியோரொன்று மதியாமல் முழுமையும் அவமானம்பேசினாய், சத்தமுனிவர்களையுந்தாங்கும் தேவயானத்தைச் சப்தமுனிவர்களுந்தாங்க ஏறிநடத்தினாய்! அன்னத்தின் நடைபோல் நடந்த காக்கை தன்னடையுங்கெட்டு வருந்திய தன்மையை அறியாயா? சின்னத்தனமுடைய உனக்குப் பெரியதனம் பொறுக்குமா? குரங்கின்கைப் பூமாலையைப்போல் பெரியோர்கள் மனங்குறையச் செய்தனையே? நிறையாத்தவஞ்செய்த நிஷ்டூரா என்று எழுந்து இடக்காலினால் நெற்றியிலுதைத்து ஆறாக்கோபத்துடன் மறுபடியுஞ் சொல்லுகின்றார். அறிவில்லாத அற்பர்க்குச் செல்வமல்லது பகைவேறுண்டோ என்பதைப்போல் அடர்ந்த ஆரணியமலைச்சாரலில் உன்வாக்கில்வந்த சர்ப்பவென்னுமொழிதப்பாமல் ஒப்பில்லாத மலைப்பாம்பாய்விழக்கடவையென்று சபிக்கவும் உடனே தேவர்கள்முதலிய யாவரும்பயந்து நடுங்குங்காலையில் புதியதேவேந்திரன் நிலத்திற்புரண்டெழுந்து உரமும் கரமும் சிரமும் காலும் பதறி நடுங்க உதறி யொடுங்கவிரைந்து ஓடிவந்து பொன்னிறஞ்செய்த வீரகண்டை பொறுத்த புதியமலர்போன்ற பெரியமுனிவன் திருவடியைத்தனது பூமுடியிற்சூட்டிக்கொண்டு அடியேன் தெரியாமல் அஞ்ஞானத்தினாலும் வினையாலும்வருந்தி, வந்தசெல்வங்களையும்விடுத்து மலைப்பாம்பாகச் சாபம்பெற்றேன், எனக்கு நேரிட்ட அரிதாகிய தவக்குறைச்சாபம் விமோசனமாகுங்காலம் அருள்செய்யவேண்டும்; விந்தகிரியின் கர்வம் அடக்கிய விமலனே என்று இருகரங்களையும் நீட்டி இரக்கவும், 'எள்ளார் அறிவுடையார்' என்பதுபோலும் 'சிறுமைகண்டவர் பெருமைகண்டல்லதுதேறார்' என்பதற்கிணங்க, கும்ப சம்ப

வன் நினைத்து இரங்கி ஜீவகாருணியமுடைய தேவன்கொதித்துக் காய்ந்தநீர் போல் மனங்குளிர்ந்து தனது தாளின் முடிசூட்டிய நகுஷனைநோக்கிக் கானகத்திலிருக்கும் கரடி புலி யாளி சிங்கம் யானைமுதலாகிய மிருகபலத்தினையுடைய செந்துக்களும் உனக்குண்டாகும் அரிதாகிய பசிக்கு எளிதாகிய உணவாகக்கடவன என்று இயம்பி இப்படி நீ மலைப்பாம்பாக வாழ்ந்திருக்குங் காலத்தில் திங்கள்குலமாகிய உங்கள்குலத்திலுதிக்கும் தங்கம்போன்ற தருமராசன் ஒருகாரணத்தினால் வனத்தில்வந்து உன்னைப்பார்த்து வசனிப்பன், அப்போது நெருங்கிய சாபம் நீங்கி சுவர்க்கம் அடையக்கடவை என்று அனுக்கிரகமாக அருள்செய்யவும் உடனே முனிகூறியசாபத்தின் வண்ணம் மலைப்பாம்பாகி உடனே விழுந்தான், அகத்தியரும் பொதியமலையிற்சேர்ந்தார்.

இப்பால், முனிவர்களுந் தேவர்களும் இந்திரனீங்கிய எண்டிசைப்பாலரும் பழய இந்திரனிருக்கும் இடந்தெரியாமல் வியாழபகவானிடத்தில் வந்து பணிந்து மயங்குகையில் தகுந்த கற்பினையுடைய இந்திராணி தேவேந்திரன் தவஞ்செய்யும் இடத்தைக்காண்பிக்க, யாவரும் வேதவசனங்களினாற் போற்றிப்புகழ்ந்து தேவேந்திரனுடைய பொன்னடியில் வணங்கினார்கள், வணங்கி நகுஷன்சாபம் அடைந்ததும் நவின்று இனிமேலாயினும் தேவரீர் தேவபட்டத்திற்கு வரலாமென்று திசைப்பாலரும், இந்திராணியும், தேவகுருவும், உவப்புமுடன் அழைக்க, தேவகுருவின் திருவடியைப்பணிந்து கண்ணீர்சொரிந்து தேவரீரைத்தெரியாமல் அவமதித்த என் தீவினையானது செய்யவேண்டிய வேலைகளையெல்லாஞ் சீக்கிரமே முடித்தது; இனிமேற்பொறுக்கமாட்டேன், 'பொறுப்பது சான்றோர்கடன்' ஆதலால் என்னை ஆண்டருளும் என்று போற்றவும், இந்திராணிமுதலிய யாவரும் வாழ்த்தவும் இரக்கங்கொண்டு இந்திரனுடைய இருகரத்தையும்பற்றி எடுத்துவாழ்த்தி அமராபுரிக்குச்சென்று மங்களஸ்நானம் ஆட்டி தேவசிங்காதனத்தில்வைத்து திவ்வியகிரீடந்தரித்து அரசு புரிந்து வரும்போது ஒவ்வொருவேளை மதிமயக்கம் தோன்ற வியாழபகவானுடைய பூவடிபணிந்து சுவாமி! தேவரீர் கிருபைசெய்யாமல் என்மயக்கந்தீரமாட்டாது, "ஈசனுக்கிழைத்தகுற்றந் தேசிகனெண்ணித்தீர்க்கும், தேசிகற்கிழைத்தகுற்றம் குரவனேதீர்ப்பதன்றிப், பேசுவதெவரேதன்னைப் பிழைத்தகாரணத்தாலேயன், வாசவன் பழியைத்தீர்ப்பான் குரவனேவழியுங்கூற" சர்வலோக நாயகராகிய சாம்பசிவனுக்கு ஒருகுற்றஞ்செய்தால் ஆசாரியரிடத்தில் விண்ணப்பம் பண்ணிக்கொண்டு தீர்த்துக்கொள்ளலாம், ஆசாரியருக்கு ஒரு குற்றஞ்செய்தால் ஈசன்முதல் மற்றியாவர்களாலுந் தீர்க்கக்கூடாது "அவனருளாலே அவன்றாள்வணங்கி" என்பதுபோல் ஆசாரியராலேயே தீர்த்துக்கொள்ளவேண்டும் ஆகையால் என்னைக்காப்பாற்றுமென்று வணங்கிய இந்திரன் தன்னை இகழ்ந்தமையால் வந்தபழியைத்தீர்க்கும்பொருட்டு குரவனே ஒரு வழிதேடிச் சிலதேவதூதருடன் பூலோகத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் சகலபுண்ணியதீர்த்தம், திவ்வியஸ்தலங்கள் யாவுங்கண்டு வணங்கிப்பணிந்து தென்றிசைக்கு வரும்போது கடம்பவனத்தில்வந்து நிற்கவும்; கலக்கம் மயக்கம் யாவும் அகன்று நல்ல ஞானந்தோன்றிய இந்திரன் குருவினிடத்திற்

சொல்லவும் அவர் தூதனைவிடுத்துத் தேடிப்பார்க்கவும் ஒருசிவலிங்கப்பெருமானும், பொய்கையும் இருக்கக்கண்டு அவ்விடத்தில் நெருங்கிப்புல்பூடு கல்காடுகளைந்து திருக்குடைசாத்தி தேவலோகத்திற்குத் தூதனை அனுப்பி அபிஷேகத்திரவியம் பால் தயிர் கோசலம் கோமயம் தூபதீப நைவேத்தியம் பொன்னுடை இரத்தினுபரணம் இவைகளெல்லாங்கொண்டு வரச்சொல்லி விசுவகருமனைப்பார்த்து அஷ்டகஜம் தாங்கும் இந்திரமணி விமானம் அமைக்க விடுத்து அர்ச்சனைசெய்யப் புஷ்பம் வேண்டுமே என்று இருக்கும்போது அந்தப்பொய்கை நிரம்பப்பொற்றாமரை மலராக நிறைந்திருக்கப் பறித்து, அந்தப்பொய்கைக்குப் பொற்றாமரைப் பொய்கையென்று பேரிட்டுப் புகழ்ந்து கொண்டிருக்கும்போது தெய்வத்தச்சன் ஆகாயத்திலிருந்து இறக்கிய விமானம் சாத்திப் பொய்கையில் மூழ்கி தூதர்கொண்டுவந்த திருமஞ்சனத் திரவியங்களால் அபிஷேகஞ்செய்து ஆடையாபரணந்தரித்து நிவேதனஞ்செய்து பொற்றாமரைமலரால் அருச்சனைபுரிந்து தூபதீபமங்கள ஆலத்திகுடை கவரி சுருட்டி ஆலவட்டம் பூர்ணகும்ப உபசாரமுஞ்செய்து கண்ணுங் கருத்தும் மனமுங்களிக்க அடியேன்வினையை யவிப்பதற்கு அருவாயுருவாயமைந்தெழுந்த விடையாய் போற்றி, வேதத்தின் வித்தேபோற்றி, கடம்பநீழலுடையாய்போற்றி; உயிருக்குயிராயுறைந்தாய்போற்றி, உடுபதியார்சடையுடையாய்போற்றி, ஐந்தெழுத்தாய்ச்சமைந்தாய்போற்றி, தனிமுதலே என்றுதுதித்து ஏத்திப்பணிந்து ஆகமவிதிமுறைதப்பாது பூசித்து மதிமயக்க நீங்கியபின், வானவர்குருவும் வானவர்கணமும் வானவர்கோவும் விருத்திராசுரனைக்கொன்ற சமுத்திரமருங்கில்வந்து விஷ்ணுவையும் பூசித்துத் தீனதயாளுவாகியதெய்வமே! ஆபத்பாந்தவா அனுதரக்ஷகா அஷ்டாக்ஷரப்பொருளே அடியேன்உன்னடைக்கலம் என்று தொழுது இந்திரலோகம்புகுந்து சிங்காசனத்தில் இருந்து இமையவர்களும் எண்டிசைப்பாலரும் வசுக்களெண்மரும் ஏகாதசருத்திரரும் பதினெண் கணங்களும் நெருங்க, தேவதுந்துபிமுழங்க, பாரிசாதமலர்தூவ, அரசபட்டந்தரித்துக்கொண்டு ஆயிரங்கண்ணன் அயிராணிசமேதனாக இமையவர் வேந்தனாகியிருந்து அயன் அரிஅரன்முதல் யாவரும் ஆசீர்வதிக்க, கட்டியங்கூற, கணிகையர் ஆட, பதியும்நிதியும் பலமும்பெற்று மதிதவறாமல் வாழ்விற்சிறந்தனன் கேளும்மருகனே அகஸ்தியர் சாபத்தால் மலைப்பாம்பாகி வனத்திலுழன்ற நகுஷமகாராஜனும் உம்மைக்கண்டகலத்தினால் சாபந்தொலைந்து திவ்யரூபம்பெற்றுச்சுவர்க்கலோகஞ்சேர்ந்தசங்கதிஉமக்குத்தெரியுமே, சந்திரகுலோத்துங்காகிய தருமநந்தனு! மலைப்பாம்பாகிய நகுஷனைப்போன்றவன் துரியோதனன், தேவேந்திரனே நீர்தான், இந்திராணியே இந்தத் திரௌபதி, சாக்ஷாத்காரமாகிய கடம்பவனக்கடவுளும் வைகுந்தநாதரும் மண்பொதுத் தந்தையும், பிருகஸ்பதியும் இவர்கள்தான் உமக்குத்துணையாகஇருக்கும் துவாரகாபுரிவாசன்; இந்திரன்இந்திராணி அனுபவித்த வருத்தங்களெல்லாம் நீங்கள் அனுபவித்தீர்கள், அவர்கள் எப்படி பழிபாவங்களையும் சத்துருவையும் வென்று அமராவதியை ஆண்டார்களோ அப்படிபோல இன்னங் கொஞ்சம்நாளையில் நீங்களும் சத்துருவைவென்று உலகமெல்லாம் ஒருகுடைநீழலில் அரசுசெலுத்தப் போகின்றீர்கள், எனது

வார்த்தைக்குத் தவறுவாராதுளென்று மங்களாசாசனஞ்சொல்லிச் சகல அரசர்களும் பாண்டவர்களும் பாஞ்சாலிமுதலிய யாவர்களும் அடங்கா மகிழ்ச்சி அடையும்படியாகவிடைபெற்றுக்கொண்டு சதுரங்கசேனைகளுஞ்சூழச் சல்லிய மகாராஜன் இரதம் ஏறும்போது ஐவர்களும் பின்தொடர்ந்து வழிவிடுத்துத் திரும்புங்காலத்தில் முரசக்கொடியோன் மாமா! நான்கேட்டுக்கொண்ட வாக்கியம் மறந்துவிடப் போகிறீரென்று உறுத்தியபோது ஒருக்காலும் மறவேன்; உள்ளத்திற்பதித்தேன், உமது இஷ்டப்படி முடிப்பேனென்று மரியாதைசெய்து நிறுத்திவிட்டு அஸ்தினபுரம்போய்ச்சேர்ந்து அரவக்கொடியோன் முதலாகிய யாவர்களையுங்கண்டு வந்தனை வழிபாடுகள்பெற்று பதிலுபசாரமுஞ் சொல்லி வணங்காமுடியோனிடத்தில் படைத்துணையாக உற்றுவாழ்ந்திருந்தான். ஐவர் முதல்வனும் அரசர்களும் உபலாவியத்தில் இருந்தார்கள்; அவ்வேளையில் ஸ்ரீகிருஷ்ணபகவானும் அருச்சுனனும் துவாரகையிலிருந்து இரதம் ஊர்ந்து இன்பமுற்று பாரதயுத்தத்திற்குத் தகுந்த யோசனைசெய்ய வந்தார்கள், எல்லோரும் எழுந்து உபசரிக்கவும் தருமநந்தனனைத் தாங்களும்பணிந்து ஆசனத்தில் அமர்ந்து ஸ்ரீகிருஷ்ணபகவானைப் படைத்துணை கேட்கப்போனதும், துரியோதனன் படைத்துணைவிரும்பி அவ்விடம்வந்ததும், நடந்தசெய்திகளும் சுவாமி மொழிந்ததும் துணையாயமைந்ததும் யாவையுமறக்காமல் பற்குனன் தருமராஜனுக்குச் சொல்லக்கேட்டு உடல் பூரித்து மகிழ்ந்து இவ்விடத்தில் சல்லியராஜன்படைத்துணைவர வழியில்தன்பேரால் தண்ணீர்ப்பந்தல் அமைத்து வஞ்சனையாக வழிமடக்கிச் சுயோதனன் படைத்துணைக்கொண்டதும் மத்திரராசன்வந்து சொல்லிப்போன வசனங்களியாவையும் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் தருமர்சொல்லக்கேட்டு ஒருவருக்கொருவர்மகிழ்ந்து பேசிக்கொண்டு மேல்நடக்கவேண்டியகாரியங்களையும்முறைமைகளையும் யுத்திசெய்துகொண்டு இருந்தார்கள்.

இப்பால், உபலாவியம்விட்டுப்புறப்பட்ட உலூகமாமுனிவர் மலைகள், கெவிகள், வனங்கள், வனந்திரங்கள், மேடுகள், காடுகள், பாலைகள், சோலைகள், சாலைகள், நாடுகள், நகரங்கள், யாவுங்கடந்து அஸ்தினபுரத்திற்குவந்து வீஷ்மர், துரோணர், கிருபர், அசுவத்தாமா, விதுரர் முதலாகிய பெரியோர்கள் அரண்மனைக்குச்சென்று சத்தியவாய்மைதப்பாத பாண்டவர்கள் சாஷ்டாங்க நமஸ்காரஞ்சொன்னார்கள் என்று சொல்லி, தானுமபிவந்தித்து அவர்கள் தந்த வந்தனமுங்கொண்டு மரியாதையும்பெற்று தான்கற்ற வேதசாத்திரம், நீதிசாத்திரம், தருமசாத்திரம், ஞானசாத்திரம் இவைமுதலாகியநூல்களெல்லாம் எடுத்துக்காட்ட அந்தப் புத்திமான்கள்கேட்டு செவிநிரம்பிய தேவாமிர்தத்திலும் இனியசொற்களைக்கேட்க இதுவே புண்ணியதினமென்றும் தேவரீருடையதிருவடியைத்தாங்க இந்நகரம் இன்றுசெய்ததே பாக்கியமென்றும் தம்மைத் தரிசிக்கப்பெற்றதே நாங்கள் கண்படைத்ததற்கு இலாபமென்றும் சொல்லி உடல்புளகமுற்று உபசாரஞ்செய்து உதிட்டிரன்முதல் மற்றெல்லோர் க்ஷேமங்களை விசாரித்து சிந்தைமகிழ்ந்துவந்த புரோகிதருக்குத்திடஞ்சொல்லியிருந்து மறுநாள்காலையில் மதுநிறைந்த மலர்மாலையும் முப்புரிநூலும் தழைத்

திலங்கிய மார்பினனாகிய உலூகமாமுனி திருதராட்டிர மகாராசாவின்பெரிய சபைக்குச்சென்றார். அவரைக்கண்ட யாவருந் தண்டஞ்சமர்ப்பித்து தேவ குருவாகிய பிரகஸ்பதிபகவானைக்கண்ட தேவேந்திரன்முதலாகிய சபையார் செய்யும்உபசாரம்போல் எல்லோரும் வணங்கிப்பணிந்துமங்களாசாசனம்பெற வும் வணங்காமுடிபொறுத்த துரியோதனமகாராசனும் எதிர்கொண்டுகண்டு இருபதங்களிலும் தீர்க்கதண்டனிட்டு நயமாகியவசனத்துடன் நவரத்னகசித மான ஆசனத்தில் எழுந்தருளச்செய்து கண்ணில்லாத காவலனுக்குச்சொ ல்ல, அவரும் இவருக்கு இருகரத்தையுங்குவித்துவணங்க உலூகமாமுனிவர் அரசன்முதல் யாவர்களுக்கும் ஆசீர்வசனஞ்செய்து அக்ஷதைகொடுக்கப்பெ ற்று, விந்தைகிரிக்கு ஒப்பாகி மேல்நிமிர்ந்த தோள்களையுடைய விரதவீரிய வீஷ்டுமர்முதலிய மேலோர்களும் உள்ளக்களிப்புடன் உவந்துநோக்கி தேவரீர் வந்தகாரியம் தெரிவிக்கவேண்டுமென்று செப்பவும், எட்டுக்கிரியுமயங்க விழி த்து வட்டக்கிரியுங்கலங்க மிதித்து மதர்த்துக் கட்டுத்தறியை முறிக்கும்மதங் கொண்ட பட்டத்து யானையை உடைய திட்டியற்ற திருதராட்டிரனும் அவன் குமாரர்களும் கன்னனும் சகுனியும் கொதிக்கு மனத்தாற்குன்றவும் தூதுவந்த உலூகமாமுனிவர் தான்வந்தவரலாற்றை ஒழுங்காக விரித்துச் சொல்லுகின்றார்.

பன்னீரண்டுவருடம் வனவாசமும் ஒருவருடம் ஆரும் அறியாமல் அஞ் ஞாதவாசமும்போக்கியபாண்டுமைந்தர் ஐவரும்வெளிப்பட்டு உபலாவியத்தில வந்திருக்கின்றார்கள். ஆதியில் அநேகம் அரசர்களுங்காண மாயச்சூதாடி மயக்கிவென்ற இராச்சியத்தை மறுபடியும் அவர்களுக்குக்கொடுத்துவிடாமல், நீங்கள் கைக்கொண்டு ஆண்டு அனுபவித்துவந்த வளம்நிறைந்த பூமியைப் பதின்மூன்றுவருடங்கழிந்து வந்தால்கொடுத்துவிடுகிறோமென்றுமுன்ன மொ ழிந்திருக்கின்றீர்களாம்; அச்சத்தியவாக்கின்படி இப்போதுபாண்டவர்களுக்கு நாடுகொடுக்கின்றீர்களா? கொடுக்கமாட்டீர்களா? நாங்கள் இராச்சியங்கொடுக்க மாட்டோம், யுத்தமே சம்மதிதானென்றுசொல்லுவீராகில் இந்திரப்பிரஸ்தத் திலிருந்துவாழ்ந்த ஐவரையும் விசுவாசவார்த்தைகள்சொல்லி அழைத்துவந்து வாய்ப்பேச்சுப்பேசவொட்டாமல் மோசச்சூதாடித் தேசத்தைக்கைக்கொண்ட நாசத்தைப்போல் மோசயுத்தஞ்செய்ய எண்ணாமல்எதிரில்இளைக்காமல்நின்று மோதி யுத்தஞ்செய்ய நினைப்பீராகில் வெளிப்படுங்கள்; அப்படியே ஞாயமாக யுத்தஞ்செய்தபோதிலும் நீங்கள் ஒருக்காலும் ஜயம்பெறுவதில்லை வீணாகிய எண்ணம்வேண்டாம், ஏரிகளிலும் குளங்களிலும் அழகினையுடைய செங்கா லன்னமும் கருங்கால் மயில்களும் கலந்துவிளையாட கிளிநாடுங் குயில்பாடும் வளநாட்டையுடையமன்னவர்களே! தமையன்தம்பிமார்கள்வேற்றுமையில்லா மல் ஆதியிலிருந்த அன்புரிமையைப்பாராட்டிக்கலந்துவாழ்வீர்களாகில் பெரு வாழ்வும் பெருந்தனமும் பெருநிதியும் பெரும்புகழும் பெருமையும்வரும்; இவ் விதமாகப்பொருந்தி வாழ்வுபெறாமலும் விருதாவாய்ப் பாண்டவர்களுடன் எதிர்த்து யுத்தம்பண்ணினால் நாம் அழிந்துபோவோமென்று சற்றுநினையாமல் எவ்விதத்திலும் வெற்றியடைவோமென்று நினைப்பதுசரியன்று, எவ்விதத்தி

லும் வெற்றியடைவோமென்றுகருதி எதிர்ப்பீர்களாகில் உங்களால் அவர்களை வெல்லுவதென்பது அரிது அரிது, ஏனெனில் கண்கறுத்து மனங்கறுத்துக் கதையைத்தாங்கிய பலமுடைய வீமசேனனும் காண்டீபதாரனாகிய அருச்சுனனும் நகுலனும் சகதேவனும் யுத்தகளத்திற்புகுந்துவிட்டால் சத்துருவாகிய நீங்கள் புத்திரமித்திர களத்திராதிகளுடன் அழிந்து அவிந்துபோவீர்கள், முனிவர்கள் சொல்லும் வாக்கியமும் மெய்யாகாமற்போமோ; ஐயா! ஒருக்காலும் பொய்யாகமாட்டாதே என்று உலூகமாமுனி சொல்லவும் சந்தனமரங்கள் தங்கும் செம்பொன்மேருவைத்திரட்டி இணையற்றுயர்ந்து துணையெனவகுத்த பிரகாசம்பொருந்திய புயத்தையுடையகுருகுலத்தில் அருந்தவத்தில்வந்த சுயோதனராசன் உலூகமாமுனிவரைப்பார்த்து இவ்விடத்தில் இதுவரையிலும் பூனைபோலிருந்து பெரும்புலிபோற்சொல்லிய உன்வாக்கியம் நாங்கள் செய்யப்போகின்ற யுத்தத்தைப்பார்க்கிலும் மிகக்கொடியதாக விருக்கின்றது; நல்லது ஐயரே உமது வாக்கியத்தையும் எங்களிருதிறத்தாருடைய ஆண்மையின் இலாக்கியத்தையும் தருமவான்களின் யோக்கியத்தையும் நாளை நடத்தப்போகிற யுத்தகளத்தில்பார்த்து அறியலாமென்றும் கல்விமுதலாகிய சகல வித்தையுங்கற்று அறிவுடைய உண்மையறிந்து நடக்குங் கருத்தில்லாத துரியோதனன்சொல்லியமொழிகளையெல்லாங்கேட்டுத் தத்துவஞானியாகிய விசயவில் விதுராமகாராஜன் சொல்லுகின்றார். அப்பா? சூதினாற் கைக்கொண்ட நாட்டைமறுபடியுங் கொடுத்து விடுகிறேனென்று சொல்லியபடி பாண்டவர்களுக்குக் கொடுக்காமல் புன்மைமேவிட்டு அறிவிலாமலிருக்கும் மூடர்களுடைய துர்ப்போதனையைக் கேட்பாயாகில் ஸ்ரீமகாலட்சுமி உன்னைவிட்டு நீங்கிப்போய்விடுவாளே, நால்வகைச்சேனைகளும் பந்துக்களும் நாசமடைந்துபோம்; நல்ல தல்ல, அல்லல்வருமென்றான். துரோணாசாரியர் அந்தச்சமயத்தில்நந்தியாவர்த்தத் தாமனைநோக்கி அரசே! பன்னிரண்டுவருடங் காட்டிலும் ஒருவருடநாட்டிலுமிருந்து மீண்டுவருவீராகில் உங்கள்செல்வத்தை உங்களுக்குக்கொடுத்து விடுகிறேனென்று இராஜசபையில் நியாயகச்சொல்லிய உமது சத்தியவசனம் தவறிப்போம் சேனாசயினியங்களைக்கொண்டு விரப்பிரதாபத்துடன் யுத்தஞ்செய்ய நினைப்பது நியாயமல்ல, உலகம்பழிக்கும் •பெரும்பிழையாகும்; பாண்டவர்கள்மேல் அந்தப்பழிகளையும் ஒருவழியாகத் தள்ளிப் போர் புரிவீர்களாகில் தன் காண்டீபத்தில் இருந்து விடும் சரங்களினுடைய முனைவாய்கள்தோறும் இரத்த மாமிசச்சேறும் உயிரும் கக்கும்படியாகப் போக்கிவிடுவான், பெரிய அவமானமுஞ் செய்வான், பிறர்பலம்வேண்டாமல் தன் பலம் வேண்டிய காண்டீபனாகிய தனஞ்சயன் என்று இதமாகவே சொல்லவும் துரியோதனன்கேட்டு உத்தமராகிய இத்தனைபேரும் எத்தனை விதமாகச் சொன்னாலும் என்சித்தமிரங்கி எள்ளத்தனைநாடும் கொடுப்பதென்பதே இல்லை; மண்டைகள்கிழியச் சண்டைகள்செய்து வென்றவர்களுக்குச் சொந்தமே இந்தராச்சியம் என்று இயம்பிய பேரனை ஏறநோக்கிக் கொன்று கசகசவென்றீமென்று நின்றுவிடலாமென்று பல்லைக்கடித்து சிறந்த புத்திரனாகிய திருதராட்டிரனைப்பார்த்து உன் குமாரனாகிய துரியோதனன் ஒருவர் சொல்

னும் புத்திவழியிலும்வாரான், தன்சுயபுத்தியையும் உன்னிப்பாரான், சின்னஞ்சிறியார்வார்த்தையைக்கேட்டு, நமது திங்கள்மரபின் நீதிமுறைமையைக் கைவிட்டுப்போட்டுப் பதின்மூன்றாண்டு வனவாசஞ்செய்து வாருங்களென்றுசொல்லிய உறுதிவாக்கியத்தின் வண்ணம் உன்புதல்வராகிய பாண்டவர்கள் காட்டைக்கழித்து நாட்டில்வந்து ஒரு உத்தமனைத் தூதாக அனுப்பி நாட்டைக் கேட்டவிடத்திலும் ஐவருக்கும் நாடுங்கொடாமல், வெவ்விய வினைக்கு மேலாகும் போர்புரிய விரும்புவானேயாகில் மகாமேருவுக்கொப்பாகிய காண்டீபங் கரத்திலேந்தி வந்து எதிர்க்கும் விசயனுக்கு எதிரில் வில்வளைத்துப்போர்செய்யும் வீரன் எவன் இருக்கின்றான்; அவன் திருஷ்டிக்கு எதிர்நிற்பவர்கள் யாவருமில்லையே, எவர்கள் வல்லமையைக்கண்டு இவன் இப்படித் துள்ளுகின்றான், ஊமை கண்டகனவுபோல் பேசுவதில் உபயோகமில்லையே, வாக்கினால் அளப்பதில் வருவதொன்றில்லை, வெளிப்பட்டபாண்டவர்விடப்போகின்றதுமில்லை. ஆகையால் காதுகேளாதாரைப்போற் கேட்டுக்கொண்டு இருப்பதிற் காரியமில்லை. முன்னுக்கு இன்பம் பின்னுக்குத் துன்பம்வாய்க்கும், இனிப்புவயிற்றுக்குக்கேடு, வருத்தமாக உனக்குவரும் புன்மை கலகஞ்செய்வோர்க்கெல்லாம் நன்மை, உன்புத்திரனுக்குத்தெரியப்படுத்தி ஆதியிற்சொல்லியசொல்தப்பாமல் ஐவருக்கும் நாடு கொடுப்பதே நலமென்று விஷ்டுமர் மிகுந்த கோபங்கொண்டு திருதராட்டிரனுக்குச்சொல்லிவரும்போது பக்கத்திலிருந்த அங்கதேசாதிபதி பதைபதைத்து வெகுளிமேற்கொண்டு ஈரேழுலகினும் எனக்கு எதிர் இல்லையென்று இறுமாந்திருக்கும் வீரன் யாரொருவனிருக்க முன்பின் எண்ணிப்பாராமல் அருச்சுனனுக்கு எதிர் யாருமில்லையென்று அவனையே அதிகசிலாக்கியமாகப் பேசிவருகின்றீர். பொக்கைவாயன் பொரிமாவைமெச்சிய விதம்போல் மகிழ்ந்து புகழுகின்றீர். உமது வல்லமைக்கும் நீர் கற்ற தனுர்வேதத்திற்கும் விசயன் மேற்பட்டவனென்று சொல்லவேண்டியதே யன்றி, உலகத்தில் ஒருவரும் அவனுக்கு ஈடுபடமாட்டார்கள் என்று நீர் எப்படிசொல்லுவீர் ? ஓ வீஷ்டுமரே ! ஒரு ஏழைக்குடித்தனக்காரன் காடடர்ந்த ஏரிகரையோரத்தில் ஏரைப்பூட்டி உழுதான், அந்தக்காட்டில் இருந்து வேங்கையொன்றெழுந்து உழுகின்ற மாட்டைப்பாய்ந்து பிடித்துக்கொண்டது, அந்தக்குடியானவன் விசனம் அடைந்து கண்ணீர்சொரிய, அந்த வேங்கைநோக்கி ஏன் அழுகின்றாய்? உழுகின்றவனே என்னலும், ஐயா! எனக்கொருபெண்ணுண்டு, அந்தப்பெண் தனக்கு திடவிரதைரியசாலியாக ஒருநாயகன்வேண்டும் என்று சொல்லியிருந்தாள், நானும் எங்கள்பந்துக்களிலும் மற்றஉலகங்களிலுந் தேடிக் காணாமல்வருந்தி யிருந்தேன், உம்மைகண்டுமகிழ்ந்தேன், ஆனால் நீர் மிருகமாயிருப்பதினால் என்குலத்துக்கும் இவ்வுலகத்துக்கும் விரோதமாக இருக்குமேயென்று விசனப்படுகின்றேன் என்றான். அவ்வார்த்தையைக்கேட்டு வேங்கையானது உள்ளமகிழ்ந்து 'பெண்ணென்றாற் பேயும் இரங்கும்' என்னும் வசனப்படி மயங்கி யான் எப்படியிருந்தாலும் குறைவில்லை, மேலும் வீரரென்னுந் தைரியசாலிகள் எந்தக் குலத்திற்பிறந்தாலும் தோஷமில்லை, என்னிடத்திற் கொலைத்தொழில் இல்லை, உம்முடைய குமாரத்தியைக்கொடுத்

தால் வேண்டிய செல்வங்கொடுப்பேன் என்று வேங்கைசொல்லக்கேட்டு, நான் வீட்டுக்குப்போய் மாட்டை விட்டுவிட்டு வருகின்றேன், இவ்விடத்தில் தானே இருமென்றுசொல்லி சற்றுத்தூரம் குடியானவன்சென்று ஒருநாழிகை மறைந்து இருந்துமறுபடியும்வந்து, வீரதீர மருமகனே! வீட்டுக்குப்போய் என் குமாரத்தி இடத்திலும் உன் மாமியாரிடத்திலும் இவ்வார்த்தையைச்சொன்னேன், அவர்களும் எங்கள் பந்துக்களிற் சிலரும் சந்தோஷம் அடைந்து இப்போதே விவாகமுடிக்கவேண்டும் என்றார்கள். என்பெண்ணானவள் தேம்பித் தேம்பி அழுதாள், ஏன் அம்மா அழுகிறாய் என்று கேட்டேன், உலகத்தில் வாழும் உத்தமிகளைப்போல், காட்டில்வாழும் மிருகராசபுருஷனைத் தழுவி முத்தமிட்டுக்கொஞ்சிக்குலாவி விளையாடி வாழ்வதற்குப் பாக்கியம்செய்யாத பாவியானேன் என்றாள்,என்னகாரணத்தால்என்றேன்; இருகரங்களில் நகங்களும், வாயிற்கோரதந்தங்களும் இருப்பதினால், எப்படித்தழுவுவேன்,இவைகள் மாத்திரம் இல்லாவிட்டால் எனக்குக்கிடைத்த புருஷருடைய சுந்தரத்திற்கு என்னைப்போன்ற பெண்கள் ஏக்கங்கொள்ள வேண்டும், அல்லது கைகால்கள் வீக்கங்கொள்ளவேண்டும், என்னசிலாக்கியம் என்னுடையபாக்கியம் என்றாள் என்று குடியானவன் சொல்லவும், வேங்கைவருந்தி நகங்களையும் பற்களையும் அடக்கிக்கொண்டுதேகத்திற்படவொட்டாமல் உமதுகுமாரத்தியுடன்கொஞ்சி விளையாடுகிறேன் மாமாஎன்றுசொல்லிற்று; அதைக்கேட்டு இதோயாரும் எங்கள் நகங்களை க்ஷவரகன்வாங்கிப்போடுவதுபோல நீரும் வாங்கிப்போடும், அப்போது குடித்தனமுறைமைக்குத் தரித்திரமில்லாத சவுக்கியமாம் என்றான். அதைக்கேட்டு அப்படியே செய்யுமென்று வேங்கைசொல்லவும் க்ஷவரகனை அழைத்து வருவேனென்றுபோய் ஒருதச்சனை அழைத்துவந்து இருகரங்களிலும் இருக்கும் கூர்மையாகிய நகங்களை அடியோடு நறுக்கிவிட்டு வாயைக் காட்டச்சொல்லிக் கோரதந்தங்களைக் குறடுகொண்டு பிடுங்கிவிட்டுப்போபோவென்று முகத்தில்ஒருஅறைகொடுத்தான். அந்த அறையைத்தாங்கிய வேங்கையானது கோபித்து பெருவியாதிகொண்ட ஈயாத லோபியின் விரல் குறைந்திருக்கும் அங்கைபோன்ற கூழைக்கரத்தால் ஓங்கி ஓங்கி மோதும்போது தாற்றுக்கோல்வாங்கி வீசினான். அப்போதே உகிர்இழந்தவேங்கை நனிவருந்தி ஓட்டம்பிடித்து வலிப்பெடுத்து மாய்ந்துவிட்டது. ஐயா வீஷ்டுமரோ! வீரமும் வில்லும் தவமும் ஸ்ரீராமனிடத்தில் பறிகொடுத்து நகமிழந்த வேங்கைப்புலிபோல் நலிவுற்ற பரசுராமனைத் தீட்டியமரத்திற் கூர்பார்ப்பதுபோல் அவனிடத்தில் கற்ற அஸ்திரவித்தையைக்கொண்டு அம்பையென்னும் பெண்ணுக்காக முதுகிட்டோடச்செய்த சேவகத்தை மேற்கொண்டாய். அது அல்லாமல்எந்தவிடத்தில் எந்த வீரர்களைவென்று வெற்றிபெற்றிருக்கின்றாய்; உன் பண்டவாளம் இப்படி இருக்க, யாரையும் அலட்சியமாகத் தூஷித்சொல்லுவது அநியாயம், அநியாயம் காங்கேயனே உமக்கு இது ஞாயமல்லவென்று கண்கள்சிவந்து கடுகடுத்து கன்னன்சொன்ன மொழியைக் காங்கேயன் கேட்டு கடுங்கோபங்கொண்டு அடா கச்சைக்கொடியோனே! நானென்ன யுத்தஞ் செய்தேன், எங்கே விரப்பிரதாபம்பெற்றேன், ஆளில்லாக்காலத்தில் வீண்

வார்த்தைகளைப்பேசி அகப்பட்டுக்கொண்டு ஆரிடத்தில் விழித்தேன், நான் எவ்வளவு அப்பா, கன்று, நீயோ சுத்தசாமர்த்தியன், ஒருவர்துணைவேண்டாவிரன், சொல்லிய விரக்தப்பாதவன், வல்லமைசாலி, மெத்தவும் நல்லவன், வெவ்விய புகையெழும்பும் புத்திரகாமேஷ்டி அக்கினியில் துருபதேய மகாராசனுக்குப் புத்திரியாகப்பிறந்த மயிலைப்போன்ற திரௌபதையின்சுயம்வரகாலத்தில் வில்லைவளைத்து மச்சயந்திரத்தை அடித்து மாலைசூட்டுவதற்கு வந்திருந்த மன்னவர்களெல்லாரும் மதிமயங்கப் பயத்தைத்தரும்படியாகிய வில்லை எடுத்து நிறுத்தி இழுத்து வளைத்து நாண்பூட்டி நாணுமலிருந்தவன் நீதானே, அடா கவசகுண்டலா? சகல அரசர்களுந் தலைகுனியும்படியாகப் பிராமண வடிவத்துடன்வந்து வில்லைவளைத்து வன்மை, சிறுநுண்மை, சலம், நிச்சலம் என்னும் நான்கு குறியாகவைத்த மச்சயந்திரம் அறுந்துவிழும்படியாக அம்பினால் எய்து, பாஞ்சாலி மாலைசூட்டக்கைப்பற்றிக்கொண்டுபோகும் கைவன்மையையுடைய விசயனைப்பார்த்து ஐயோபெண்ணைக்கொண்டு போகின்றானே பிராமணன், நமதுகுலத்தாராகிய அரசர்களுக்கெல்லாம் மானமும் ஈனமும் வீரமும் வெட்கமும் இல்லையா என்று இந்தத்துரியோதனன் மனவருத்தப்படுகையில், தனுர்ப்பாணங்களுடன்சென்று கிரீடியைத் தகைந்து யுத்தஞ்செய்து திரௌபதையை மீட்டுக்கொண்டுவந்த வீராதிவீரன் நீதானே, வனவாசஞ்செய்யும் பாண்டவர்களை அவமானஞ் செய்யநினைத்து, மன்னர் மண்டலிகரும் நால்வகைச்சேனையும் இராசஸ்திரிகளும் சூழ்வத க்ஷத்திரமுடைய வணங்காமுடியோனும் நீயும் வனஞ்சுற்றிப்பார்த்து சலக்கிரீடை பண்ணிவருவோம் என்றுபோன நாளையில் கந்திருவனுக்கும் உங்களுக்குங்கலகம் நடந்து எல்லோரையும் பிடித்துப் பின்கட்டாகக்கட்டிப் பிணையலாடிக்கொண்டு போம்பொழுது தருமராசனுடைய சரணங்களில் விழுந்து அழுது சிறை நீக்கிவிடவேண்டும் தேவரீரென்று தூதுவர் சொல்லக்கேட்டு, வீமனையும் அருச்சுனனையும் விடுத்து மீட்டுவிட்டபோது அந்த இடத்தில் நீயல்லவோமுன்னின்று வெற்றிபொருந்திய யுத்தஞ்செய்து மீட்டாய், அடா தாஷ்டிகா! போனதெல்லாம்போகட்டும், நேற்று விராடபுரத்தில் ஒருஅக்ஷௌஹிணி சேனைகளுங் கோடிதேர்களுநாமுஞ்சென்று பசுக்களை ஓட்டிக்கொண்டுவரும்போது உண்டைவிற்பிடித்துக்கொண்டுதிரியும் உத்தரகுமாரன் தேர்செலுத்த உத்தரதிசையில்வந்த அக்ஷௌஹிணிசேனைகளையும் கொடிரதங்களையும்பாணங்களினால் மூடி அரசனையுங்கேடி பழிப்பாகப்படி என்னையுந் துரோணர்முதலாகிய பேர்களையும் நாடியடித்து நீயும் ஓடி ஒளிக்கக்கடுந்து நாணுவிதபங்கஞ்செய்து தலைத்துணியையும் பிடுங்கிக்கொள்ளக்கொடுத்து, மடக்கிய பசுக்களையும் விடுத்துவரும்படிமாட்டியவிசயன் ஒருவனே அன்றி இரண்டுபேரல்லவே, அப்போது அருச்சுனனைவென்று பசுக்களையுங்கொண்டு துரியோதனனையும் வெற்றிபெறச்செய்து சகல செல்வமுங்கொடுத்து அஸ்தினாபுரத்திற்சேர்த்த உத்தமவீரன் பதினான்குலோகமும் ஒருவனென்றிருக்கும் தீரன் நீதானே, இப்போது பசுமைநிறமும் வாசனையும்தேனுமருவிய துளபமாலை அணிந்த சீதரன் சாரத்தியஞ்செய்யக் காண்டீபமும் கணையுங்கரத்திலேந்தி யுத்தஞ்செய்ய

வரும் சவ்வியசாசியை வெல்வதற்கு வேறொரு வீரர்கள் எக்காலும் இல்லை,
முக்காலுஞ்சொன்னேன், நீயொரு பிராணிதான் மருந்தைப்போல் வெற்றி
பெறுவதற்குப்பொருந்திஇருக்கின்றாய், நல்லகுலத்தை நாசஞ்செய்யத்தோன்
றியகன்றோ? இவ்விடத்திலிருக்கும் யாவரும்உயிருடனிருந்து உள்ளங்கைப்புண்
போல்பார்க்க இருக்கின்றோம் உனதுவல்லமையையென்று கங்காபுத்திரன்சொ
ல்லகன்னன்மறுமொழிகூறாமலும் மனத்திலொன்றுந்தோன்றாமலும் இருக்குஞ்
சமயத்தில்துரியோதனன் கையொடுகைதட்டிக்கொட்டிக் கலகலவென்றுகுலு
ங்கநகைத்துக் கெட்டிகெட்டி அண்ணாவாகிய கர்னராசனே! விஷ்டுமர் பாண்
டவர்கள் மேலிருக்கும் இஷ்டத்தினால் சொல்லும் வார்த்தை என்று பட்டப்
பகற்போல் தெரியவருகின்றது, துஷ்டப்பகையைப் போக்கவும் இஷ்டனாகிய
என்னைக்காக்கவும்அஷ்டதிசையிலும் பேர்பெற்றவள்ளலே! அதைரியம்வேண்
டாம் என்று தட்டிக்கொடுத்து, தூதாகவந்து எதிரிலிருந்த பிராமணனை நோ
க்கி வேலையில்லாமல் இவ் வீண்வார்த்தையைப் பேசவந்தீர் என்று அவமதி
த்து இங்கிருக்கும் நாடுகளெல்லாம் எங்களுடையது, அங்கிருக்குங் காடுகளெ
ல்லாம் அவர்களுடையது, அரசர்முதலியகுடிப்படைகளெல்லாம் எங்களுடை
யது, ஆரணியவாசமாகிய மிருகங்களெல்லாம் அவர்களுடையது, தனதானிய
போசன அனுபவம் எங்களுடையது,சருகு கந்தமூல அனுபவம் அவர்களுடை
யது, முன்னமே இவ்வாறுதெய்வம்முடித்தே இருக்கின்றது; அதுதோன்றாமல்
உம்மைத் தூது அனுப்பியது வறுமையின்காரியமென்றே தோன்றுகின்றது;
ஆகையால் நீர் சீக்கிரம்போய் ஐவருக்குந்தெரிவித்து ஆசையை விட்டுவிடும்
படியாகப் போதியும் என்று சர்ப்பக்கொடியோன் சொல்லவும், சந்திர குலத்
திற்கு உரித்தாகிய திரிதராட்டிர மஹாராஜன் துரியோதனனைக்கடிந்து, சிறந்த
பெரியோர்களும் அரசர்களும் பொருந்திய பெரிய சபையில் அழகுந் தகுதியும்
இல்லாதசொற்களை நீசொல்லியது நன்மையோஎன்று அதட்டி அடக்கிப்பாண்
டவர்கள்மேல் பக்ஷம்வைத்துப் பேசுகிறவனைப்போல் அன்பு நிறைந்த உருவ
மாக எதிரில் இருக்கும் உலூகமாமுனிவனைப்பார்த்து ஐயா! நீர்வந்துசொல்லிய
வார்த்தைகளெல்லாம் சத்தியமே; இருதிறத்தவர்களும் மனம் ஒத்து
வாழ்வைப் பெறாமல் அமர்செய்வார்களாகில் அழிவதுநித்தியமே, பிழை
ப்பார் ஒருவரும் இல்லை, அப்படியுத்தம் விளையாமற் செய்யவேண்டும், எங்கள்
பிள்ளைகள் இருதிறத்தாரும் நிறைந்த செல்வத்துடன் சுகப்படும்படியாகிய
காரியங்களை யாங்கள்யாவரும் ஆலோசித்துக்கொண்டு,விவேகமே தேகமாகப்
படைத்த உண்மையாளராகிய ஐவர்களிடத்திற்கு சஞ்சயமுனிவரை அனுப்பி
வைக்கின்றேன். தேவரீர் உபப்பிலாவியத்திற்கு எழுந்தருளிக்குலமும்பலமும்
நலமும் தவமும்வரமும் பெற்றிருக்கும் பாண்டவர்கள் துரியோதனாதிகள் மேல்
கொண்டிருக்குங் கோபங்களும் மனத்தாபங்களும் சபையிற்கூறிய சபதங்
களும் நீங்கும்படியாக அநேகம் தருமஞாயம் குலமுறைமை முதலிய நீதிகளி
னாற் றெரிவித்துப் புகழாகிய சகாயஞ்செய்யவேண்டும், பெரியோராகிய தேவ
ரீரொன்று நமஸ்கரித்து வெகுவித உபசாரமுஞ்செய்து தேவர்களும் தாவிவந்து
ஆசைகொண்டு மகிழும்படியாகச் சந்தனபுட்ப கந்த கதம்பமும் பீதாம்பரங்

களும் நவரத்தினகசிதமான ஆபரணங்களுங் கொடுத்துந் தீர்க்கதண்டஞ் செய்து விடைகொடுக்க, வீஷ்டுமர் துரோணர் விதுரர்முதலிய பேர்களும் வணங்கிப் பெரிய அரசன்சொல்லிய வண்ணமே நடக்கவேண்டும் உலூகமா முனியே போய்வாரும் என்று செலவுகொடுக்க ஆசீர்வதித்து, அத்தினபுரத் தை விடுத்துக் காடுமலையெல்லாங்கடந்து உபப்பலாவியம் கிட்டித் தன்னைத் தூதனுப்பிய அரசர்களும் ஸ்ரீகிருஷ்ணபகவானும்பொருந்தி இருக்கும் இராச சபைக்கு நேராக வரும்போது யாவரும் வணங்கி உபசரிக்க அவர் அவர்களுக் கெல்லாம் மங்களாசாசனஞ்சொல்லி உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து இப்போது சொல்லிக்கொண்டுவந்த தூதுபோன வசனங்களை யாவற்றையுஞ் சொன்னார். அதைக்கேட்டு, பாண்டவர் சகாயன் முதலிய பேர்களும் இனிமேல் நடக்கவே ண்டியகாரியங்களுக்கு இப்போது யோசிக்க வேண்டியதென்ன ஒன்றுமில்லை, இனிஅவர்கள் அனுப்பும்தூதினால்நேரிடுஞ்சங்கதிகளையும் உள்ளக்குறிப்பையும் வரவரத் தெரிந்து கொள்ளுவோம் என்று அத்தினபுரத்தின் திசையை நோ க்கி இருந்தார்கள். கேளும் ஜெனமேஜயமஹாராஜனே என்று வைசம்பாயனர் சொல்லிவந்தபடி நான்சொல்லுகிறேனென்று நைமிசாரணிய வாசிகளுக்குச் சூதபௌராணிகர் சொல்லிமுடித்தார்.

உலூகமாமுனிதூதுச்சருக்கம்

முற்றிற்று.

---

## சஞ்சயன் தூதுச்சருக்கம்.

தனியன்

ஒருதலத்திடையவதரித்தணிபொதுவர்சிற்குடிலுறைவதோர்
மரகதப்புயறனையெடுத்தொருமகவெனத்தனதிறுதியால்
அரிதுபற்றியவலகைசெற்றிடவணிமுலைப்பயநுகர்வுறு
மருதிடைத்தவழ்பொருவில்வித்தகன்மலரடிக்கண்வழுத்துவாம்.

கேளும் ஜெனமேஜெயமகாராஜனே! உலூகமாமுனி அஸ்தினபுரத்தை விட்டுவந்தவுடனே நஞ்சினையுடைய நாகத்தைக் கொடியாயுயர்த்த நராதிப னும்பயத்தைத்தரும் வேலாயுதந்தாங்கிய பற்பலமன்னர்களும் வீஷ்டுமாசாரி யர், வில்திறமைகொண்ட துரோணாசாரியர், தவத்திற்சிறந்த விதுரமகாராஜன், இரவிபுத்திரனாகிய கர்ணன், கிருபாசாரியர், அசுவத்தாமா முதலாகிய பேர் களும் திரிதராட்டிரனும் எதிரில் இருகரங்களையுங்குவித்து வணங்கி வாழ்த்தி நிற்கும் சேனாசயினிய மத்தியில் இந்திரசபைக்கு மேலாகிய இராசமண்டபத் தில் பொருந்தியிருந்து யுத்தியிலும் புத்தியிலும் கல்வியிலும் ஞானத்திலும் இணையில்லாமல் உயர்ந்த சத்தியவசன உத்தமனாகிய சஞ்சயனை வரவழைத் துச் சபையினிடத்தில் இருத்தி என்றென்றைக்கும் சண்டையில்லாமல் இரு க்கவேண்டும் என்று எண்ணங்கொண்ட திருதராட்டிரன், சொல்லுகின்றான். சஞ்சயனே குருகுலத் தரசர்களுக்கு நேரிடும் காரியாகாரியங்களை அறிந்து

சொல்லும்படியாகிய சுதந்தரமும் மாட்சிமையும் உடையவன் நீயாகையால் இருகுலத்தவராகிய கவுரவர்களும் பாண்டவர்களும் உன் சொல்லாகிய நீதி வசனத்தை ஒருக்காலுந் தள்ளமாட்டார்கள், ஆதலால் கருமான் உலைக்கனலுக்கு ஒப்பாகிய கோபங்கொண்ட என்தம்பி பிள்ளைகள் மாறுபட்டுப்பேசுகின்ற வஞ்சினத்தைநீக்கிஇருதிறத்தார்களில்ஒருவர்சமுத்திரஞ்சூழ்ந்தஇவ்வுலகத்தை ஆளும்படியாக உன் உள்ளத்தில் நினைக்கவேண்டும். அளவு சொல்லக்கூடாத கோபக்கருத்தினராகிய என்பிள்ளைகளுக்கு எத்தனைவிதத்திற் சொன்னாலும் அவர்கள் பாண்டவர்களுக்கு நாடுகொடுக்கச் சம்மதியாமல் யுத்தஞ்செய்வதற்கே இசைந்து இருக்கின்றார்கள். என் தம்பி புத்திரர்களோ அப்படி அல்ல, நற்குணங்களிலும் விற்றிறங்களிலும் சத்தியத்திலும் ஆண்மையிலும் குளிர்ச்சியாகிய மிர்து வசனங்களினாலும் நீதியிலும் தருமதானங்களிலும் தவத்திலும் பொய்யில்லாதசத்திய விரதங்களிலும் புகழிலும் அருளிலும் பொறுமையிலும் நிறைந்தபூரண புத்திமான்கள். இப்படிப்பட்டவர்களுடன் என்புத்திரர்கள் இடம அகன்றபோர்க்களத்தில யுத்தஞ்செய்யும்படியாகக் கருத்துக்கொண்டு இருப்பது நன்மையோ; சஞ்சயனே கேளும் பிறவிப்பிணியையும் பெருந்துக்கத்தையும்அநித்திய வாழ்வையும்பாபமாகிய பொருளையும்விளையச்செய்யும் இக்கர்மபூமியின் ஆசையைவிடுத்து சுத்தஞானமபிறப்பும் மோக்ஷமாகிய சிறப்பும்உண்டாகும்படி விசாலம்பொருந்திய கானகத்திற் பாண்டவர்கள் இன்புற்றிருந்து நித்தியமாகுந்தவத்தைச் செய்யும்படியாக அன்புகொண்டிருக்கும் என் கருத்தையுஞ்சொல்லி நீயுந் தெரியப்படுத்தக்கடவையென்று, அவனருள் அடர்ந்த தன் புத்திக்கு ஒப்பாகச்சொன்னான். இப்படி சொல்லிய வசனம் பாரபக்ஷம் என்று தெரிந்தும் தடைசொல்லாமல் அரசனுடைய கட்டளையைச் சிரசாகக்கொண்டு யாவரும் புகழ மகிழ்ந்து விடை கொடுக்கப் பெற்று அஸ்தினாபுரத்தை விடுத்துக் காடு மேடு மலைகளெல்லாங்கடந்து ஐவர்வாழும் உபப்பிலாவியத்திற்குவந்து அன்றைத்தினமே ஸ்ரீகிருஷ்ணபகவான் எழுந்தருளி இருக்கும் திருமாளிகையிற்சென்று திரௌபதியும் பார்த்தனும் வார்த்தையாட மலரணையில் வீற்றிருக்கும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாகிய அமலனைக்கண்டு தீர்க்கதண்டமாகப்பணிந்து வணங்கித்துதித்துத் தான்வந்தசங்கதிகளிற் சிற்சில காரியங்களைப்பேசி தருமபுத்திரமகாராஜன் முதலிய நராதிபர்கள் கூடியிருக்கும் சபைக்கு, நாளைத்தினம்வந்து சகல காரியங்களையும் சொல்லுகிறேனென்று தொழுது விடைபெற்றுக்கொண்டு தன் விடுதியிற்போயிருந்து சூரியன் உதயமாகுமுன்னம் எழுந்து நித்தியகருமம் ஸ்நானம் செபம் தவம் முடித்துக்கொண்டு தருமராஜனுடையபெரிய சபைக்குச்சொல்லும்போது ஸ்ரீகிருஷ்ணபகவானும் சாத்தகியும் துருபதேய மகாராஜனும் விராடபூபதியும் இன்னம் பற்பல பாசைமன்னரும் சூழ்ந்துகொண்டிருக்க நடுநாயகமாயிருந்து தஞ்சமென்போரை அஞ்சலென்றளிக்கும் வஞ்சகம் இல்லாதநெஞ்சினனாகும் மெய்விரதனாகிய உதிட்டிரனைச்சஞ்சயன் விரைந்துசென்று கண்களும் மனமும் களிக்கக்கண்டு அறிவும் நிறமும் புகழும்மிகுந்து தகுந்த தம்பிமார்களாகவிளங்கிய வீமார்ச்சுன நகுலசகாதேவர்நால்வரும்; அக்கினியில் தோன்றிக்கற்புக்கு அணியென

நந்த பாஞ்சாலியும் பின்பக்கத்தில் சிறப்புடன்பொருந்த பெருமையோடு இருந்த அறத்தின் மைந்தன் அங்குவந்த சஞ்சயனை நோக்கிக்கருணைகூர்ந்து எழுந்திரும் என்று சொல்லிஇரத்தினகசிதமாகிய ஆசனங்கொடுப்பித்து அந்த ஆசனத்தின்மேல் உட்காருமென்று அறன்மகன்சொல்ல மகிழ்ந்து ஆசனத்தில் அமர்ந்துசஞ்சயன்சொல்லுகின்றான். பொய்யைச்சினந்து மெய்யைப்புனைந்து வையகங்காக்கும் ஐயனே கேளும்; பாதலத்திற் பொருந்தும் ஆதிசேடன் முதலிய பாம்புகளின் விஷச்சுவாலைகளை அடக்கி இவ்வுலகத்தில யாவர்க்கும் இன்பம் விளையும்படியாக அமுதகிரணங்களைப் பொழியும் சந்திரன் பிரகாசித்த போதிலும் தாமரைப்புட்பங்கள் சூரியகிரணங்களைக்கண்டு மலரும் இது உண்மையே; அதுபோல உலகமெல்லாம் ஒருகுடையில் ஆளும் திரிதராட்டிர மகாராசனுடைய அருளுக்கும் அன்பிற்கும் உரியவனாகி நான் இருந்த போதிலும் ஒளியும் சிறப்பும் உடைய உமதுமுகத்தைப்பார்த்து உயிர்வாழும் படியாக என்சிந்தையானதுந்த நான்வந்தேன் என்றான். அதைக்கேட்டு சேறு காறும் வயல்களெல்லாம் செங்கழுநீர் மணம்நாறும் குருநாட்டுக்கு அதிபதியாகிய குந்திபுதல்வன் அச்சஞ்சயன் கூறிய உபசாரவார்த்தைக்குப் புன்னகை கொண்டு அவனுடைய மனம் மகிழும்படியாக உள்ளன்புடன் இனியவார்த்தைகள் சொல்லி சஞ்சயனே! பெருமைபெற்றிருக்கும் என் பெரிய தந்தையாகிய திருதராட்டிர மகாராஜனும்; ஐயா அவர்கள் வீஷ்மாசாரியரும், குருசுவாமியாராகிய துரோணாசாரியரும்; கிருபாசாரியரும், கயிலாசபதியின் அருள்நிறைந்து பலஞ்சிறந்த அசுவத்தாமாவும், பெரியஞானம் வரம்புபெறும் சதுரனாகிய சிறியதந்தை விதுரமகாராஜனும் இன்னும் உள்ளபெரியோர்கள் யாவரும் சுகமாக இருக்கின்றார்களா? என்று கேட்க, தூதுவந்த சஞ்சயன் கரத்தைச் சிரத்திற்குவித்து ஐயா அவர்களெல்லோரும் க்ஷேமமாயிருக்கின்றார்கள்; உங்களுக்கு க்ஷேமம் உண்டாக வாழ்த்தி ஆசிர்வதித்தார்கள் என்று சஞ்சயன் சொல்ல; தருமராசன் மனமும்தேகமும்மறந்து புளகமுற்றுச் சொல்லுகின்றார்.

அப்பா!, பூர்வம், இராசசபையிற் பொருந்திய மஹாராஜனங்களெல்லாரும் உடல்பதறி ஆச்சரியப்படும்படியாகத் தம்பியைநோக்கி திரௌபதையைக் கைப்பிடியாக இழுத்துவந்து என்மடிமேல் வையென்று தனது கொந்தொடையை ஆசனமாகக்காட்டிய துரியோதனமகாராசனும் சுகமா? நேசமாக இருந்து மோசச்சூதாடக் கற்றுணர்ந்த சகுனிமாமாவும் சுகமா? பரிசுத்தமுள்ள பாஞ்சாலியிடையிலுடுத்திய வஸ்திரத்தைத் தடையில்லாமற்பிடித்து உரிந்து சபையில் மானபங்கஞ்செய்த தம்பி துச்சாதனனும் சுகமா? சுத்த வீரர்களை யுத்தஞ்செய்து வெல்வதற்குச் சத்தியில்லாமற் சிங்காரப்பேச்சினால் செயிப்பேன் என்று காலங்கழிக்கும் கன்னனும் சுகமா? மற்றபுத்திரமித்திரர்களுஞ்சுகமா? பற்பலதேசத்துமன்னர்களுஞ்சுகமா? யானைத்தலைவர், சேனைத்தலைவர், படைத்தலைவர், குடைத்தலைவர், கொடித்தலைவர், சேவகர்முதலியயாவர்களுஞ்சுகமாயிருக்கின்றார்களா? என்றுகேட்கும்தருமராசனைநோக்கிச் சஞ்

சயன்சொல்லுகின்றான். பொல்லாங்கென்பவைஎல்லாம்நீங்கிய உள்ளமுடைய வள்ளலே! அவர்கள் இதுவரையிலும் சுகம் இல்லாதிருந்தாலும்தேவரீருடைய திருநாவினால் க்ஷேமம்விசாரித்தபடியால் இன்றுமுதல்நாளுக்குநாள்அபிவிர்த்தி ஆவார்கள் என்றுகூற,முரசகேதனன்மகிழ்ந்து சொல்லுகின்றார். சஞ்சயனே காட்டைவிடுத்துக் காட்டையடுத்து நெடுநாளாகப்பிரிந்த எங்களைப்பார்க்க எண்ணங்கொண்டுவந்ததோ அல்லது திங்கள் மரபில் உதித்த எங்கள் குலத்திற்கு இறைவனாகும் திரிதராட்டிர மகாராசன் சொற்படிவந்ததோ? இவ்விடம் நீர் வந்ததற்கு யாதுகாரணம் விளம்புமென்று கேட்க, சஞ்சயன் சொல்லுகின்றான். சங்கினங்கள் வயிறுளைந்துபெறும் ஆணிமுத்துகள் நீரின் மடைகளை அடைக்கும் வயல்களால் வளப்பங்கொண்ட திருநாடென்னுங் குருநாட்டுக்கு அதிபதியாகிய கோவே! உங்கள்பெரியதந்தையாகிய திரிதராட்டிர மகாராசன் சொல்லி அனுப்பியசெய்தியைத் தெரிவிப்பதற்கு இவ்விடம்வந்தேன், ஆகையால் திருநாபிக்கமலமுடைய ஸ்ரீகிருஷ்ணபகவானும் நீங்கள் ஐவரும் இந்த இராசசபையை நீங்கித் தனிமையாயிருந்து சங்கதிமுழுமையுங்கேட்டு யோசிப்பீர்களாகில் மிகவும் நன்றென்று சஞ்சயன் விளம்பக்கேட்டு, தருமராசன் நகைத்து வாளாயுதம் வேலாயுதம்பிடித்து இவ்விடத்தில்வந்து நிறைந்திருக்கும மன்னவர்கள் யாவரும் எங்கள் பிராணனும் ஊக்கமும் உற்சாகமும் ஊற்றமும் புகழுமாக இருக்கின்றவர்கள். இவர்கள் அறியக்கூடாத இரகசியமில்லை, இவர்களை அன்றி யாதொரு எண்ணமுமில்லை, தாய்க்கு ஒளிக்கும் சூலுமில்லை, சத்தியத்தை நித்தியமாக நம்பும் சாமர்த்தியமுடைய சஞ்சயனே! இந்தச்சபையினிடத்தில் தடையில்லாமற் சொல்லுமென்று தருமராசன்கூற; பாண்டவர்களின் எண்ணத்தைத் தெரிந்துகொண்ட சஞ்சயன் துளபமாலை யணிந்த மேகமபோன்றதிருமேனியையுடைய பகவானைப்புகழ்ந்து சபைநிறைந்த மன்னவர்களை நோக்கித் தங்களுக்குத்தெரியாதகாரியம் ஒன்றுமில்லை இராசதந்திரத்தை அநுசரித்து தனிமையிற் சொல்லவேண்டுமென்று புகன்றதே அன்றி வேறல்ல, அடியேன்மேல் கோபஞ்செய்யாதிருக்க வேண்டுமென்றுசிறுத்தஇடையினையுடையபுனக்கிளிபோன்றதிரௌபதாதேவியையும் பாண்டவரையும் நோக்கிச் சஞ்சயன் சொல்லுகின்றான். மநுநீதிதவறாத மன்னரே கேளும்!நீங்கள் இந்தப்பூமியை ஆளவேண்டுமென்னும்ஆசையைவிடுத்து ஈஷணாத்ரயங்களைக் கடந்த மகாரிஷிகளைப்போல்நல்லகதி கிடைக்கும்படியாகத்தவஞ்செய்யவேண்டும், பதின்மூன்றாண்டும் வனத்திற்கைபழகிவந்த நீங்கள் ‘பழம்புண்ணாளி பாதிபரிகாரி’ என்பதைப்போல் மறுபடியும் காட்டுக்குப் போகப் பயப்படமாட்டீர்கள்; சகலமந்திரதந்திரங்களுந்தெரிந்த சுந்தரராகிய புண்ணியசீலரே இப்போது பவத்தையொழிக்குந்தவத்தைக்கருதிச்சென்றால் அதிசீக்கிரத்திற் ஏகக்கூடும், கதியும்பெறலாம், ஜன்மாந்திரத்திற் றவஞ்செய்யாப்பாவிகள் இம்மையிற் றவஞ்செய்யவிரும்பினால் தவங்கெட்டு அவமேவிட்டு நரகத்தில் விழுவார்கள். இதன்றியும்எல்லாப்பிறவியிலும் உத்தமமாகிய மானிடப் பிறப்பு அரிதுஅரிது, ஊமை செவிடு கூன் குருடு மூடம் இவை

நீக்கிப்பிறப்பது மிகவும் அரிது, கல்வியும் ஞானமும் செல்வமும் நற்குணமும் உண்டாவது அதனிலும் அரிது, தானம் தருமம் தவம் இவைகள்கிட்டுவது எதிலும் அரிது, இவைகளெல்லாம் உண்டாகிய காலத்திலும்மோக்ஷம் அடைவது ஐயா அரியதென்றுலகதர்மஞ் சொல்லுகின்றது, இந்தக்காரியங்களெல்லாம் ஒருருவாகத்திரண்டு மாயாமயக்கம் அகன்று தூஷணபூஷண திரஸ்காரங்களெல்லாம் சுத்த பிரமத்திற்கென்று போறிவுவிளங்கிய பெருமான் தேவரீரல்லதுவேறில்லை, அகந்தையும் ஆசையும் அகப்பற்றும் புறப்பற்றும் உள்ளசுயோதனன் உங்களுடன் உடன்பட்டுவாழ்வது வேண்டுவதில்லை, நாடுகொடுப்பதுமில்லை, பெறுவோமென்னும் இச்சையும் உங்களுக்குஇல்லை, அநித்தியமாகிய ஆசாபாசத்தை விடுத்து நித்தியமாகிய பிரமத்தில்விசுவாசத்தைத்தொடுத்து உண்மையாகிய கதியை அடைவது உத்தமம், மேலும் பராசரமகாமுனிவருடைய சந்ததியிற்றோன்றிய தனக்குப் பிறந்தபிள்ளைகள் துரியோதனாதியர் நூற்றுவர், என்தம்பிபுத்திரர் ஐவர், இந்தநூற்றைந்து பிள்ளைகளில் பொய்யும் சூதும் பொறாமையும் மிகுந்துமண்ணாசை, பெண்ணாசை பொன்னாசைகொண்டு ஞானசூனியராய்ப்பிறந்து குலத்தின்பேரையும் புகழையும் கெடுத்து இனிப்பிறக்கும்பற்பலபிறவிக்கும் இடங்கொடுத்து, தந்தைதாய் குருமொழி மந்திரம்இவையெல்லாந்தள்ளிப் பாவமென்னும் மூட்டையைத்தேடிப் பரதவித்து என்சொல்லைக்கேளாமல் அலையும் துரியோதனாதிகள்மேல் வைத்திருந்த பக்ஷத்தை விடுத்தேன், என்மூத்தபிள்ளையாகிய தருமராசனை நம்பி அடுத்தேன். எவ்விடத்தும் வியாபித்திருக்கும் சுகப்பிரமத்திற்கு ஒப்பானவன் இவன் ஒருவன்தான், இம்மண்ணும் பெண்ணும் பொன்னும் வாழ்வும் நிலையில்லாததென்று நிச்சயித்திருப்பவன், இவனே நீதிமான் சீமான் புத்திமான் என்பதற்குஐயமுண்டோ சத்தியமே நித்தியமென்றிருக்கும் தருமனாகிய புத்திரசிகாமணிஎன் உத்தரந்தள்ளமாட்டான், 'சிறியோர்செய்ந்தீங்கைப்பொறுத்தவனே பெரியோன்' என்னும்பழமொழியையும் "தம்மையிகழ்ந்தமைதாம் பொறுப்பதன்றிமற், றெம்மையிகழ்ந்த வினைப்பயத்தால் உம்மை, எரிவாய் நிரயத்துவீழ்வர்கொலென்று, பரிவதூஉஞ்சான்றோர்கடன்" என்னும்நீதிநெறியையும்புகன்று, கோபம் சண்டாளம் என்ற கொள்கையுஞ்சொல்லி, நடந்த நன்மை தீமைகளையெல்லாம் ஈஸ்வராற்பிதஞ்செய்து முன்கூறிய சபதங்களையும் இப்போதுசெய்ய எத்தனிக்கும் சண்டையையும் பழியும்பாவமும் நுழைக்கப் பாராளும் எண்ணத்தையும், அறுசுவை அன்னமும் விரும்பி அனுபவிக்கும் போகத்தையும், ஆருகப்பெருகும் ரோகத்தையும் விடுத்து இந்தத்தருமராசனாகிய புத்திரனால் இருபத்தொருதலைமுறையுங்கதிசேரப்பெற்றோன் திரிதராட்டிரன் என்னும் பெரும்புகழ் எனக்கும் என்கால்வழிவந்தவர்க்கும் நீங்காதிருப்பதற்கும் நன்னெறி ஓங்கியதவத்தை உறுதியாய்ச்செய்வதே உத்தமம் என்றும் உமதுதந்தைஉரைத்தனர் என்று சஞ்சயன் சொல்லிமுடித்தான். பெருமை என்பது சிறுமைப்படாமல் சத்தியத்தை அனுசரிக்கும் மெய்ஞ்ஞான சிந்தையனாகும் தருமநந்தனன் பூதபௌஷிய வர்த்தமானமும் தெரிந்துணர்ந்த சஞ்சயன்பன்னிச்சொல்லிய வார்த்தையையன்றி, அழகுறநகை

த்துத்தெளிந்தசஞ்சயனே இவ்வுலகத்து இராசராசர்களும்நகைக்கும்படியாகத் துரியோதனாதிகளால் நாங்கள்பட்ட அவமான நிந்தைகள் சக்ரவாள கிரிபோல் வளைந்து வளர்ந்து நிலைத்திருக்க, அதனால்விளைந்த சபதங்கள் பெரும்புறக் கடல்போல் சூழ்ந்திருக்க, இவைகளைச் சிந்தியாமல் முத்தி அடையமுயற்சி செய்யவேண்டுமென்று என்பெரியதந்தை சொல்லியதைப்பார்க்கிலும் தமப்பிரபை இமப்பிரபை தூமப்பிரபை வாலுகப்பிரபை சாகரப்பிரபை இரத்தப்பிரபை அழற்பிரபை என்னும் வெப்பமாகிய நரகத்திலும் தனித்தனிவீழ்ந்து அனுபவிப்பது மிகவும் நன்மையாம். சத்தியவசனந்தப்பினால் நித்திய நோன்பு பலிக்குமா? தாயைக்கொன்றபழியிருக்கக்கோடிகோதானம்பண்ணினாலும் மோக்ஷம்உண்டாகுமா? ஆசாரஈனமாகிய சண்டாளத்துவத்தைச்செய்துகொண்டு விரதம்அனுஷ்டித்தால் தவங்கைக்கூடுமா, அதுபோல் பழியையும் நிந்தையையும்சுமந்த நாங்கள்எத்தனை விதமாய்த்தவஞ்செய்தாலும்நரகமே அன்றிச்சுவர்க்கங்கிட்டாதே. சஞ்சயனே ஒருசிறிய கதையைக்கேளும். ஆற்றின்கரைமேல் ஐந்துபேர் நின்றார்கள், நிரம்பியவெள்ளத்தில் கரடியானது தலையைக்காலின் சந்தில் வைத்துக்கொண்டு மிதந்துவருவதைக்கண்டு கம்பளிமூட்டையென்று கருதினார்கள், அவருள் ஒருவன் நீந்திப்போய் அதைப்பற்றவும் நிராதரவாக வந்த கரடி அந்தமனிதனுடைய கழுத்தைக்கட்டிக்கொள்ள இவனும் அதுவும் மூழ்கியெழுந்து வருத்தப்படும்போது கரையில்நின்ற நால்வரும் கம்பளிமூட்டையைக் கைவிடுத்து வந்துவிடென்றுசொல்ல; கம்பளிமூட்டையை நான் கைவிட்டுவிட்டேன் கம்பளிமூட்டை என்னைக் கைவிடவில்லையென்று ஓங்கிக்கூவி உயிரினை இழந்தான்; அதுபோல சபதத்தையும் யுத்தத்தையும் கைவிட்டு நாங்கள் தவஞ்செய்தாலும் அவைகள் எங்களைக்கைவிடாது மேலும் எக்குலத்தாருக்கும் இணையற்றமேலாகிய நற்குணம் நற்றவம் எங்களுக்கு விளங்கச்சொல்லவேண்டியது தந்தையின் கடமையே; அந்தத்தந்தையின் தருமகுணத்தை தள்ளாமற்செய்வது எங்கள்முறைமையே, ஆயினும் தருமசாம்பிரதாயமாகிய நற்குலத்திற்பிறந்த மன்னர்கள் இராசமுறைமை தவறி வேறொரு காரியங்களைக்குறிப்பார்களா? சஞ்சயனே வீரப்பிரதாபத்தில் சிறந்ததீரர்கள் கூறியசபதம் நிறைவேறும்படியாய்ச் சத்துருக்களுடன் எதிர்த்து முதுகு காட்டி ஓடாமல் நின்றுசயங்கொண்டு வெற்றிமாலைசூடினால் இப்பூமியில் கல்லெழுதி நாட்டுவதும் அன்றி வீரசொர்க்கமும் பெறுவார்கள். இப்பூமியாகிய தலமும் சீலமும் உள்ளவனாக்கும் அவர்கள் குலமும் குணமும் கீர்த்தியும்நிலைக்கும், இதைவிட அறமாகியதவம் எவ்வுலகத்திலும் இல்லை; கூறியசபதம் முடியாது இருக்கத்தவஞ்செய்ய மனம்வாராது; சொன்னசொல் தவறுமையாகிய சுளுவாகிய தவமிருக்கக் காட்டிலிருந்து கந்தமூல பலாதிகளைப்புசித்துண்டு காற்றிலும் வெய்யிலிலும் பனியிலும் குளிரிலும் வருந்தி மோக்ஷம்பெறும்படியாகப் பெரியதந்தை முதிர்ந்தவயதினால் தெரியாமற்சொன்னதுபோலுமிருக்கின்றதென்று கண்கள்சிவந்து கடுங்கோபத்துடன் தருமநந்தனன் சொல்லிய வார்த்தையைச் சஞ்சயன்கேட்டு, ஐயா பழையபகையை மனத்தில் குடிவைத்துக்கொண்டு யுத்தம்புரிந்து சபதம்நிறைவேற்ற நினைப்பது கற்றுணர்ந்த காவல

ராகும் புண்ணியம் நண்ணிய விவேகிகளுக்கு முறைமையோ, அப்படியே யுத்தம் செய்தாலும் என்னபலன்? அண்ணன் தம்பிமார்கள் மாமன்மார் மைத்துனர்புத்திரமித்திரர் சுற்றத்தார் மற்றதேசத்தார் யாவர்களேயுங் கொன்று யமன் கையில் ஒப்பிவைப்பதிலும் வனங்களிலிருந்து தவங்களிழைத்துப்பவங்களொழிப்பதுவசையோ; என்றும்அழியாத இசையோ; நினைத்துப்பாரும்.தெரியாதபேர்களைத் தெளியச்செய்யலாம் தெளிந்தோர்களைத்தெருட்டுவது அருமை: மேலும் திங்கள்மரபுக்கு வித்தாகி உங்களுக்கெல்லாம் பாட்டனுகிய கர்த்தா வீஷ்மாசாரியர், உயர்ந்த சிலைக்குருவாகிய துரோணுசாரியர், கிருபாசாரியர், ஒருசாலை மாணுக்கரில் பால்யசிநேகரும்குருபுத்திரருமாகிய அசுவத்தாமா, தந்தைக்குப்பின்னேவந்த தத்துவஞானியாகிய விதுரமகாராசன் முதலியவர்கள் இந்தக்குலந் தழைக்கவேண்டு மென்னும் உத்தமநினைப்பினையுடைய பெரியோர்கள் ; இவர்களெல்லாரும் புவனபூபதியாகிய திரிதராட்டிர மஹாராஜனுடைய செல்வ நலத்தைக்குறித்துக் காவலாகக் கைவசப்பட்டிருக்கின்றவர். இப்படிப்பட்ட முதியோரெல்லாரும் அழியும்படியாகப்பழிபூண்டு உலகம்அதிர வெற்றிகொண்ட அன்றைக்கு அல்லவோ நீங்கள் ஒருகுடைநீழலில் அடக்கி உலகம் ஆளப்போவது. அவர்கள் அழியப்போவதும் இல்லை, உலகம் நீங்கள் ஆளப்போவதும் இல்லை, ஜயிப்பதற்கு அருமையாகிய காரியங்களில் நீங்கள் துணிவது நன்மையன்று, இத்தன்மையாகிய உத்தமர்களுடன்எதிர்த்து யுத்தஞ்செய்து கொல்லுவதற்கு உங்களுக்கு ஒருக்காலுமனந்துணியாது, இரக்கமும் சீவகாருண்யமும்உள்ள ஏந்தலே! தன்பலமும் மாற்றான்பலமும்யோசிக்க வேண்டிய தருமத்தை இங்குநினைக்கவேண்டும். நெருங்கிய கோபாக்கினி மிகுந்த கண்களையுடைய வலிமையோரென்றும் சாமர்த்தியம் இல்லாத தூர்ப்பலரென்றும் அப்போது நினைப்பதிலும் சொல்லுவதிலும் என்னலாபம்? அவரவர்சேவகங்களை எதிர்த்து யுத்தஞ்செய்யும் அமர்க்களத்தில் தெரிந்துகொள்வீர். அன்றியும் சந்திரகுலத்தில்பிறந்த இருதிறத்தவரும் சிறியோர்கள் யுத்திகேட்டு நிதானிக்காமல் போர்செய்ய நினைப்பீர்களாகில் மெலிவாகிய துன்பக்கடலில் மூழ்கிப்போய்விடுவீர்கள். நடுவுநிலைமையும் நன்மனமும் உடைய பெரியோர்களுடைய புத்தியைக்கேட்கில்இன்பக்கடலுள்மூழ்குவீர்கள், எனக்குத்தோன்றியதைச் சொன்னேன், அப்பால் உங்கள் சித்தமென்று கோபமில்லாத சஞ்சயன்கூறினன். அதைக்கேட்டு நமது தமையனுகும் முரசத்துவஜ மஹாராஜனுக்குபதிலாக நேரில்பேசவேண்டிய கடமை நம்முடையது இனிச் சும்மா யிருக்கலாகாதென்று இருவிழிகளும் செவ்வரக்கினும் சிறக்கச்சிவந்து ஒப்பற்ற உகாந்தகாலத்தில் மேகம் இடிக்குந்தன்மைபோல் முழங்கி கொடிய கோபம் மேற்கொண்டு சொன்னுன். அவனுரெனில் சூரியனைக்கனிந்த கனியெனத்தாவிச்சென்ற நவவியாகரணபாண்டித்யமுடைய ஆஞ்சநேயருக்குத் தம்பியாகிய வீமசேனமகாராசன். சஞ்சயனே எங்களுக்கும் எங்களைப்பகைவராக்கிய எதிரிகளுக்கும் பொதுவாயிருக்கும் நீர் ஒருதலைப்பக்ஷமாக அன்பு கொண்டுபேசுவது தகுதியோ? இதுநாயமன்று, ஆனல் அரசனெவ்வழியோ அவ்வழிகுடிகள் என்னுந்தன்மையாய்ச் சொல்லுகின்றனை ; அதுநிற்க, பெரி

யோர்களுடன் யோசித்து என்பிள்ளைகள் கூடிவாழும் விதத்தைச்சொல்லி அனுப்புகிறேனென்று அஸ்தினாபுரத்திற்கு தூதுவந்த உலூகமாமுனிவரிடத்தில் எங்கள் பெரியதந்தைசொல்லி அனுப்பியிருக்க, அதைமறந்து நாட்டைத் துறந்து காட்டிலிருந்து தவத்தைச்செய்து முத்திபெறும்படியாக எங்களுக்குப் புத்திசொல்லி அனுப்புவைத்தார். ஆதிசேஷனாற் சுமக்கும் அவனியை ஆளும் அரசர்கள் ஒன்றைச்சொல்லி மற்றொன்றைவிரும்பி வேறுபடப் பின்னை ஒன்றைச் சொல்லுவார்களோ, ஆகிலும் பாண்டவர்களும் கௌரவர்களும் இடதுகண், வலதுகண்ணென்று எண்ணாமல் பிடரியிற்புத்தியுடைய கண்ணில்லாத அரசன் தகுதியும் பெருமையும் அல்லாத காரியங்களைச்சொல்லி அனுப்பினான்; காவலரும் சேனைகளும் கடல்போற்கலந்து வெப்பமாகிய யுத்தகளத்தில் என் கையில்தாங்கியகதையினால் செய்யப்போகிற அதிசயமாகியதவங்களைச் சொல்லுகின்றேன் கேளும் ஐயனே! எங்கள்தந்தை சொல்லியவண்ணம் நீவந்து சந்தோஷித்துச் செல்லியது அரியதவம் அல்ல; நான்செய்யப்போகின்றது பெரியதவம். அதென்னவென்றால் சத்துருக்கள் தேகத்திலிருந்து மாரிபோல் பொழியும் உதிரவாரியில் மூழ்கித்தலை அறுந்து ஆடும் கவந்தமாகியகாட்டில் தம்பித்திருந்து உள்ளத்தில் கொதித்துக்கொண்டிருக்கும் கொடியதீவினைகளைக் களைந்துவிட்டால் அதுதான் தவங்களுக்கெல்லாம் தலையாகிய மோக்ஷத்தைத்தரும்படியாகியதவம்; இதுஎனக்குப்போதும். இந்தத்தவமும், அல்லாமல் பிரபலயாகமும் நடத்துகிறேன் கேளும்; கடல்சூழ்ந்த உலகத்தில் போர்க்களம் என்னும் யாகசாலையில் துரியோதனாதியென்னும் நூறு பசுக்களை என் கதையாகியயூபஸ்தம்பத்தில்அணைத்து அவர்களுடைய வினைக்காற்றுவீச என்கோபாக்கினி மூட்டி திரௌபதையின் சபதமென்னும் நெய்யைச்சொரிந்து, பகையென்னும் சமித்தைச்சேர்த்து, வீரம் என்னும் முனியினால் வேதமந்திரமொழிந்து, பாஞ்சாலிவிரித்த கூந்தல்முடிக்கும் அவிர்ப்பாகங்கொடுத்து எங்கள் பெரியதந்தைக்கும் சந்திரகுலத்திற்கும் குறைவில்லாப் புகழ்நிறையும்படியாக இராசசூயமும் செய்து, கதையினால் சலத்தில் அடித்து மேல் எழும்பும் துளியை வாயினால் அருந்தித்தாகவிடாய் தீருவதன்றிக் கரத்தினாற் சலம் வாரிப்பருகேன் என்றுகூறிய கங்கணத்தையும் அவிழ்த்துவிடுவேன்; அக்கிரகண்யமரியாதையையும் முடியையும் அறக்கடவுளாகிய எங்கள் அண்ணாவுக்குத் தரிப்பேன் என்று ஆங்காரங்கொண்டு சொல்லிய மற்புயவீமனைத் தருமராசன் கையமைத்து, வாசனைதங்கியமாலையும் மணிமகுடமுந்தரித்த மன்னர்மன்னன் தூது அனுப்பவந்த சஞ்சயனே எனக்குத்தோன்றியது ஒன்று சொல்லுகின்றேன் நீர் மனங்கொள்ளக்கடவீர். அதாவது துரியோதனன் மோசமாகப் பறித்துக்கொண்ட இராச்சியத்தை வாங்கவேண்டும் என்றும்; யுத்தஞ்செய்து வெற்றிகொள்ளுவோமென்றும், எவ்விதத்திலும் ஜயங்கொள்ளும் வீரமுடையவர்களென்றும், வரங்கள்முதலியவைபெற்றோமென்றும், மிகுந்தசிறப்புதாங்கினோமென்றும் மகிழ்ச்சியடைந்து சொல்லவில்லை. வினைவசத்தால் ஈஸ்வரச் செயல் எப்படி நடக்குமோ யாம் அறியோம்; மாமாவாகிய சகுனியைக்கொண்டு எங்களை எதிரியாக்கி மாயச்சூதினால் வையகமுழுமையும் கைக்கொண்ட

தல்லாமல் சபையோர் நகைக்கத் தம்பிமார் உடல்பதைக்க எங்களை மதிக்காமல், தையல் திரௌபதையை அவமானப்படுத்திய தாழ்ச்சியை யோசிக்குமிடத்தில் இந்தத்தேகமும் வைத்திருக்கவேண்டுமோ, சஞ்சயனே என்று தன்மார்பிற் பனிபோன அறைந்துகொண்டு நாங்கள் குலமும் நலமும் மாறுபிமானமும் தீரமும் வீரமும் செல்வமும் கல்வியும் இல்லாமல் சித்திரம்போலிருக்க இல்லை. உத்தமனே சத்தியமும் தருமமும் குன்றலாகாதென்றே அன்று மனம்பொறுத்திருந்தோம். மன்னர்முன் கூறிய வாக்கியப்படியே பதின்மூன்றுவருடமுங் கழித்தோம், நீதியின்படி நூதும்விடுத்தோம், பெரிய தந்தை சொல்லியனுப்பிய வார்த்தையுங் கேட்டோம், இனிமேல் இராசவீர முறைமை தப்பாமல் எங்கள் சபதங்களையும் மனத்திலுற்ற குறைகளையும் நீக்கிக்கொள்ளச் சித்தமாயிருக்கின்றோம், மானங்கெட்டபிற்பாடு பிராணனிருந்து பிரயோசனம் என்ன அப்பா! "குணமென்னுங்குன்றேறிநின்றார்வெகுளி கணமேயுங்காத்தலரிது" என்று இருக்கும் நீதிக்குச்சரியாக நாங்கள் நடந்து வந்ததும் இனிநடக்கப்போகிறதும் நன்மையோ தீமையோ! அழகியமேனியிற் குணபூஷண மணிந்த சஞ்சயனே; எந்தையாகிய பாண்டு இறந்த சிந்தைத்துயர்தீர விந்தையாகிய வித்தைகளைக் கற்பித்துச் சொந்தமாகக் காத்த பெரிய தந்தைக்குச் சொல்லும், வாளாயுதத்திற் கைபழகிய மஹாராஜாவின் மைந்தர்களுடனும் அவர்களுடன் சிநேகமாயிருந்து தருமங்களையும் சத்தியங்களையுங்கெடுத்துப் பாபத்தைச்சேர்க்கும் ஆபத்தைப்போன்ற சிலபாவிகளுடனேயும் யுத்தஞ்செய்து வெற்றியடைந்து எங்கள் சபதம் செலுத்துவதே அன்றி, வேதவேதியர்இருவர், மூதாதை, பிறியதந்தை, அசுவத்தாமாமுதலியவர்களிடத்தில் போர்புரிய நினைக்கமாட்டோம் கல்வியின் அழகார்ந்த சஞ்சயனே, அரசர்களுக்கு இயற்கையாவது சொன்ன சொற்றப்பாமல் நீதிசெலுத்தித் தருமபரிபாலனஞ் செய்வதே ஆகும்; ஆகையால் எங்கள் சபதங்களை நிறைவேற்றிக் கொள்ளும் வேலைகளில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கின்றோம், கவளக்சோற்றையும் கன்னமதத்தையுங்கொண்ட யானையையுடைய எங்கள் பெரியதந்தை உம்மிடத்திற் சொல்லி யனுப்பிய வார்த்தையைத் தள்ளிவிட்டோம் என்று கோபங்கொண்டு எங்கள் மேல் இதுவரையிலும் வைத்திருந்த கிருபையும் கடாக்ஷமும் போய்த்துப் போனாலும் நாங்கள் நம்பியிருக்கும் வழிபடு கடவுள் எங்களிடத்தில்வைத்த தயையும் அன்பும் ஒருக்காலும் தப்பாது, இதனைநிச்சயமாக நீயுணர்ந்து கொள்ளென்று தருமசொரூபி சொல்லவும்,ஒப்பிலலாத பைந்துளவமாலையணிந்த திருமறுமார்பனாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அந்தச்சபையிலிருந்த அரசர்களெல்லாரும் வெவ்வேறுகக்கொண்டிருந்த எண்ணங்களை விடுத்து சந்தோஷத்தில் மூழ்கும்படியாக ஒருவாக்கியஞ் சொல்லத்தொடங்கினர்.

ஓ சஞ்சயனே! வஞ்சகச்சூதாடி ஆசைகொண்டு பாண்டவர்களிடத்திற் பறித்த பூமியைத்துரியோதனன் கைப்பற்றிக்கொள்ளவேண்டியதே யொழிய இந்தப்பேதையாகிய பாஞ்சாலியை மயிரைப்பற்றி இழுத்துவரச்சொலலியும்

மாமி மாமி என்று நூறுபிள்ளைகளைப்பெற்றும் மலடியாகிய கொடும்பாவிபோன்ற காந்தாரியிடத்திற்சென்று கண்கலங்கினபோதுபயப்படாதை என்று ஆதரிக்காமல் மச்சினமார் சபைக்குப்போக இலச்சை என்னடி அடிபோடி கள்ளி, காக்கை கர் என்றால் முகத்தைமூடிக்கொள்ளும் மாயக்காரி என்று தாட்சணிய மில்லாமல் கைப்பிடித்து இழுத்துக்கொண்டு போவென்று சொன்னதும் பெருமைதானா அந்தப்படுபாவி சபையில் இழுத்துவந்ததும் துன் மந்திரிகளெல்லாரும் சரிபோனபடிபேசியதும் ஞாயமா? என்புருஷராகிய ஐவரெங்கே என்றுகேட்டால் சின்னமனிதரெல்லாரும் கலகலவென்று நகைக்கவும்மன்னனுக்குத் துணைவனாகியகன்னன் இந்தச்சபையில் கண்ணுக்கு இரம்மியமாகிய புருஷனைக்கூடிக்கலந்துவாழடியென்றுசொன்னதைக்குலமைந்தன் கேட்டிருக்கத்தகுமா? வஸ்திரத்தையுரிந்து மானபங்கஞ் செய்யச்சொன்னதும் உத்தமி புத்திரனாக உலகாளும் இராசராசன் தன்தொடைமேற்கொண்டுவைவையடாதம்பி யென்றதும் வம்சபாரனுடைய மதி தானா? கடவுள் சகாயத்தினாலும் பதிவிரதா தர்மத்தினாலும் வளர்ந்த மாளாத வஸ்திரத்தைக்கண்டு திருதராட்டிரன் வணங்கி என்மருமகளே இவர்களெல்லாரும் உன்பிள்ளைகள் நீ யென்குலதெய்வம் கோபிக்கவேண்டாமென்று வேண்டிக்கொண்டு சூதினால்தோற்ற நாடுநகரங்களெல்லாங்கொடுக்கவும் அதை இந்தத் துரியோதனன் கூடாதென்று தடுத்ததும் முறைமைதானா? மறுபடியும் பாஞ்சாலிநாணத்தோடிருந்து சூதாடி தெய்வ அனுக்கிரகத்தினால் பாண்டவர்களை அடிமையினின்று நீக்கியபின், மற்றவர்களிடத்தில் ஆலோசித்துப்பன்னிரண்டாண்டு வனவாசமும் ஓராண்டுஅஞ்ஞாதவாசமுமென்று அனுப்பிவிட்டதும் நீதிதானா? இந்தப்பதின்மூன்றாண்டுங் கழித்துவந்தால் நாடுகொடுத்துவிடுகிறேன் என்றுசத்தியவசனஞ்சொல்லிஇப்போதுதூதுவிடுத்துக்கேட்டால்யுத்தத்திற்கு சித்தமாயிருக்கின்றேன் என்று சொல்வதும் நன்மைதானா? அதற்குத் தந்தையாகிய பெரியவர் காட்டுக்குப்போய்த் தவஞ்செய்வதே எனக்குக் கண்காட்சி என்றுசொல்லியனுப்பலாமோ?இவைகளெலலாம் உத்தமகுலத்திற்பிறந்தயோக்கியர்களாகியஅரசர்செய்யும் முறைமைகளும்தருமமும்மாட்சிமையும் ஆமோ? சஞ்சயனேமுளையிற்றானே கிள்ளியெறிந்தால் பிற்பாடு விளையாது கிளைகிளையாது அந்தக்காலத்தில் வயிரமாகும்படி விட்டுவிட்டு இந்தக்காலத்தில் வாய் புளித்ததோமாங்காய்ப்புளித்ததோ என்பதுபோலும்கொக்கின்தலையில் வெண்ணெயைவைத்தால் அதுஉருகிக்கண்ணில்விழும், அப்போதுபிடித்துக்கொள்ளலாம்என்னும்தன்மையர்கவும் இருக்கின்றது பெரிய அரசன் சொல்லிவரவிட்ட வார்த்தை. மேலும்இந்திரப்பிரஸ்தத்திலிருந்தபரிசுத்தவான்களாகியபாண்டவர்களைமரியாதையுடன் வரவழைத்து பசுவைப் புலிவாயில் தள்ளிக்கொடுக்குந்தன்மைபோலத்துரியோதனன் சகுனியினிடத்தில்காட்டிக்கொடுக்க தூய்மையும் விதரணையும் உடைய பெரியோர்களும் உரிய பெரியதந்தையாகிய அரசனும் இப்பேர்ப்பட்ட இகட்சியெல்லாம்சபையில் நடக்கப்பார்த்து சீவனில்லாத தேகம்போலும், சிங்குவையில்லாத ஊமைபோலும் இருந்தார்களேயொழிய துரியோதனா! உனக்கு இது புத்தியல்ல, மரியாதையல்ல, தருமம் அல்ல

என்று ஒருவார்த்தை சொன்னதும் உண்டோ சஞ்சயனே! இருதிறத்தவர்களும் பொறுமைஎன்று எண்ணும் நீதியுள்ளவல்லவர்களானல் இந்த அநியாயமும் அக்கிரமமும் சந்திரகுலத்தில் நடக்கக்கூடாது என்று ஒருவார்த்தையினல் நிறுத்திவிடக்கூடுமே, அப்படி விலக்காமையால், இந்தத் தீங்கு விளைந்ததற்குக்காரணம் திரிதராட்டிர மகாராசனையே அன்றி வேறொருவனை நோகக்கூடாது. இதற்கு மூலஞ்சொல்லுகின்றேன் கேளும் சஞ்சயனே, காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் ஆகிய உட்பகை ஆறுங்கூடிய துரியோதனனே கொடிய பெரியவிருட்சம், அதற்குப் பிராணனும் வாசனையும் சூரியகுமாரனுகிய கன்னன், சப்திக்கும்படியாகிய கிளைகள் "கல்லின்மேல் வழுதலைகாய்க்குமா என்றால் கொத்தாலாயிரம் கொடியாலாயிரம் காய்க்கும்" என்னும் சகுனி, அக்கிளைகளுக்கு இலைகள், தம்பிமார்கள் பூ பிஞ்சு காய்கள். எவர்களுக்கும் உபயோகமில்லாத கனி துச்சாதனன், திரிதராட்டிர மகாராசனே இந்தவிருட்சத்திற்கு மூலமாகிய ஆணிவேர். இதல்லாமல் சத்தியம் பொறுமை, ஜீவகாருண்யம், தருமமாகிய திவ்ய விருட்சம் தருமராசன், அதற்குப் பிராணனும் குணமுள்ளமணமும் வீமசேனனும் விஜயனுமாம். நகுலன் சகாதேவன் இருவரும் கிளைகள், ஒப்பில்லாத பூவும் பிஞ்சும் காயும் உலோகோபகாரமாகிய கனியும் யான், நெருங்கிய பிராமணர்களும் வேதங்களும்-இந்த விருட்சத்திற்கு மூலமாகிய ஆணிவேர். ஐயா; சஞ்சயனே! இத்தன்மையவாகிய இரண்டுவிருட்சத்தில் அழிவில்லாதது எது? அழிவது எது? உன்சிந்தையிற்றேர்ந்து செப்பக்கடவை என்றுசொல்லி மேலும்விளம்புகிறார். சஞ்சயனே! சத்துருக்களைத்தொலைத்து சபதமுடிக்கக் கோபங்கொண்டிருக்கும் வீமசேனனும் அருச்சுனனும் யுத்தத்திற்கு எதிர்த்தகாலையில் மண்ணைப்பிடித்து வாழ்வைப்பெற மனங்கொண்டிருக்கும் வஞ்சகராகிய துரியோதனுதியரின் வல்லபங்களையும் நாம் காண்போம் என்பதுவும் உண்டோ ஏதேது, புத்திமானே "அரசமரத்தை பிடித்தசனி ஆனைமுகனையும் பிடித்தது" என்பதுபோல துரியோதனுதிகள் நூறுபேரும் இவர்களுக்குச் சகாயமாகிய மன்னர்களும் மாண்டுபோவது நிச்சயம். வையகமுழுமையும் பாண்டவர்கள் ஆண்டு அனுபவிப்பது சத்தியமாகக்கொள்ளும். சஞ்சயனே விவேகம் நீங்கிய திரிதராட்டிரன் சொல்லிவிடுத்த கொடியமொழியை நீர்கேட்டுச் சம்மதித்து இவ்விடம்வந்துகூறியதை எங்கள் உயிருள்ளவரையிலும்மறக்கமாட்டோம் என்று சர்வஜீவதயாபரனுகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லவும் இந்த வாக்கியங்களையெல்லாங்கேட்டு மனங்கலங்கிய சஞ்சயன் வேறு தருமங்களையும் யுத்திகளையும் சொல்லுதற்குப் புத்திதோன்றுமல் உடல் அயர்ந்து ஊர்த்தசுவாசங்கொண்டு சற்றுநேரம்நின்று இத்தன்மையவாகிய எண்ணங்கொண்டிருக்கும் இறையவர்களே நான் இவ்வளவுதூரம்வந்தும் பெரிய அரசன்மொழிந்த வார்த்தைகளைச் சொல்லியும் யாதொரு பிரயோசனமும் பெருதவனுக இருக்கின்றேன்; தாங்கள் ஆதியோடந்த மாகச்சொல்லிய வசனங்கள் யாவற்றையும் பூமண்டலாதி பதியாகிய பெரிய அரசனுக்குப் போதிக்கின்றேன். நீங்கள் கொண்டிருக்குங் கோபங்களும் மனத்தாபங்களும் நீக்கவேண்டியது

அங்குசந்தங்கிய கும்பமத்தகக்குஞ்சரமுடைய ஐவர்கள்முதலிய அரசர்களை தங்கள் சமுகத்தில் இன்றுயான் இயம்பியமொழிகள்இகழ்ச்சி உடையதாயினும், இணங்கா வசனமாயினும், சொற்சோர்வு பொருட்சோர்வு இருப்பதாயினும், கோபமில்லாமல் க்ஷமிக்கவேண்டும் என்று உபசாரஞ்சொல்லி, விடைகொடுங்கள் என்று எழுந்த சஞ்சயனைநோக்கி மன்னர்கள் சிற்சிலவார்த்தைகள் சொல்லத் துணியுங்காலையில், மேருச்சாரல்வரைக்குச்சென்றுபோர்புரிந்த தீரனாகிய அர்ச்சுனன் அரசர்களைச் சற்று இருங்களென்று கையமர்த்தி சஞ்சயனைப் பார்த்து ஐய! எங்கள் தந்தையாகிய பாண்டு பூபதிமாண்டுபோன ஏழாண்டினில் ஆதரித்து, தனுர்வேதமுதலிய கல்விகளும் வருவித்து இளஅரசு முடிதரிப்பித்து, சகலசுபசந்தோஷவாழ்வையுந்தந்து செவிப்புலனும்மதிக்கண்ணும் மகிழ்ந்துகண்ட என்பெரியதந்தை அவற்றையெல்லாம் விடுத்து எங்களுக்குத்தாழ்வைக்கொடுத்துக் கொடுமையாகிய பயிர்தழையச்செய்தார், ஆகிலும் "தந்தைசொல்மிக்கமந்திரமில்லை" என்றபடிபிதாவின்வார்த்தைக்குமேலாகிய மந்திரம் ஒன்று மில்லாமையால் அந்தமொழியைத்தப்பி நடக்கலாகாது என்று முதன்மையாகிய பெரியோர்கள் மொழிந்திருக்கின்றார்கள். இருந்தாலும்; சில பிள்ளைகள் நாடாண்டு வாழ்விற்சிறக்கவும், சிலபிள்ளைகள் காடாண்டு தாழ்விற்சிறக்கவும் தந்தைசெய்யலாமென்று நுண்மைநூலுணர்ந்த உத்தமர்கள்சொல்லியிருக்கின்றார்களோ, சஞ்சயனே, இந்திரப்பிரத்தமென்னும் நகரையும் குருநாட்டையும் தகுதியாகிய செல்வங்களையும்நால்வகைத்தானைகளையும் நாங்கள் விரும்ப இல்லை, பதின்மூன்றாண்டும் துக்கத்தையே சுகமாகக்கொண்டு காடுதிரிந்து கலங்கி கசங்கிவந்த எங்களை ஆசையையுடைய பெரியதந்தையாகும் அத்தன்கண்டு நமதுபுத்திரர் மிகவும் வருந்திவந்தார்களேயென்று உட்கொண்டு தன்மனத்தில் தோன்றியதைக்கொடுத்து அப்பா நீங்கள் இதைவைத்துக்கொண்டு வாழ்வைப் பெறுங்களென்று சொன்னால் குலமும் நலமும் தழைக்கும் பெருமையும் உண்டாம்எங்கள்மனத்தில் விளைந்தகுறையும் நீங்கும். இப்போது ஏங்கி உம்மை அனுப்பிய பிழையும் எப்போதும் இல்லாமல் நீங்கிவிடுமே. இப்போதும் சிறப்பினையுடைய பெரியதந்தையின் வார்த்தையைத்தள்ளாமல் சிரசாக வகித்துக்கொண்டு அவருக்கே கீர்த்தியுண்டாகும்படியாக இராசதருமமும் தப்பாமல் முயற்சிசெய்துகொண்டு நடந்துபோன காரியங்களை எல்லாம் நாடாமல் நாள் கழிந்துக்கொண்டு வருகின்றோம் என்றுநிறைந்த அன்பினையுடைய என்தந்தையினிடத்தில் சொல்லக்கடவை நீதியைப்பிரக்யாதியாயுடைய சஞ்சயனே, "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பது தோன்ற இருக்கும தகுதியையுடைய பெரியதந்தைக்கும் தாயாகிய காந்தாரியம்மைக்கும் தவவிரதத்தில் உயர்ந்த பாட்டனாராகும் வீஷ்மாசாரியருக்கும் க்ஷாமம் வெகுளி மயக்கம்அகற்றிய துரோணாசாரியர் கிருபாசாரியர் விதுரமகாராசன்முதலிய பெரியோர்களுக்கும் திக்குநோக்கிப்பணிந்தோம் என்று சொல்லும் ஐயா சஞ்சயனே! என்றுரைத்துநரை திரையை அகற்றும்தேவாமிர்தத்தையும் தெவிட்டச்செய்யும் திவ்வியபோசனம்அளித்துசுகந்தபரிமள சந்தனங்களுங்கொடுத்து மலர்மாலைகளும் அளித்து அருமையாகப் பெருமையிற்

சிறந்த பொற்கலையும் பூஷணங்களும் புனைந்துகொள்ளும்படி ஈந்து; போய்வாருஞ் சஞ்சயனேயென்று செலவுகொடுக்க, மற்றையர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு வேகப்பரிபூட்டிய இரதம் ஏறி விரைவிற்சென்று திரைவாயிற் சூரியன் சென்றகாலத்தில் நோக்குவதற்குக்கண்கள் பாக்கியஞ்செய்ய வேண்டிய சிலாக்கியமும் யோக்கியமும் உடைய அஸ்தினபுரத்திற்குவந்து திரிதராட்டிரமகாராசன் அரண்மனையுட்சென்று கண்டுவணங்கித் தூதுபோய் வந்த சங்கதிகளை இறைவனே கேளும்; மூவர்களுந் தேவர்களும் யாவர்களும் தேவேந்திரனுங்கொண்டாடிப் புகழும்படியாகத் தருமபூபதிவாழும் துன்பம் நீங்கி இன்பம் ஓங்கிய உபப்பிலாவியம்சேர்ந்து தம்பிமார்கள்முதலிய தரணிபாலர்கள் சூழ்ந்திருக்கும் சபையிற்போய் அவர்களுடைய கருத்தெல்லாந் தெரிந்துகொண்டேன். ஆசைகொண்டு தேவரீர் சொல்லியனுப்பியபடி யாவற்றையும் இகபரத்துக்கேதுவாகிய இயற்கைகளையும் பலபலவகை உறுதியாகப் புகன்றேன். அருள்நிறைந்துசுரக்கும்முகத்தையுடைய ஐயா திரும்பிவந்தேன். யான் தமது சமுகத்தில் என்னவென்று சொல்லப்போகின்றேன் ஏந்தலே; சிறப்பினையுடைய மாமன் துரியோதனன் துச்சாதனன் அங்கர்கோமான் இவர்கள்மேல் பாண்டவர்களுக்குள்ள கடுங்கோபத்தைச் சொல்லிமுடியாது. பலபலவார்த்தையேன், இராசமுறைமைநடுவுநிலைமையின்படி இராச்சியங்கொடுக்காமற்போனால் அகண்டசாம்பிராச்சியமும் உன்னுடைய சுற்றமும் செல்வமும் சீரும் இன்னஞ்சிலபகலில் வாயுகுமாரனாகிய வீமசேனனுடைய கதையால் மாண்டுபோம். ஐயா அவ்விடத்தில் நடந்தகாரியங்கள் அநேகமுண்டு. அவைகளையெல்லாம் தேவரீருக்குமாத்திரம்உரைத்தால் என்னபயன், பூரித்த தோள்களையுடைய புண்ணியர்களும், திண்ணியகண்ணியர்களும், உன்புத்திரர்களும், மற்ற மித்திரர்களும் கேட்பதற்கு இப்போது இவ்விடத்தில் இல்லாமையால் பொழுதுவிடிந்தவுடனே நித்தியவிதி முடித்துக்கொண்டு தீங்கில்லாத திருச்சபைக்குவந்து யாவருங்கேட்கச் சொல்லுகின்றேன் என்றுதிரிதராட்டிரனிடத்தில் சஞ்சயன் செலவுபெற்றுக்கொண்டு விடுதிபோய்ச்சேர்ந்தான்.

இப்பால் உலகத்தை இருள் மூடுந்தன்மைபோல் தரணீசனாகிய திரிதராட்டிரனுக்கு மனச்சஞ்சலம்வந்துதோன்ற பெருமூச்சும் நெடுமூச்சும் உண்டாய் ஆலகாலவிஷத்தைப் புசித்தவர்கள்போல் நடுங்கி ஆறாத்துயரத்தில்வீழ்ந்து இரங்கி மயங்கித்தியங்கித்தாழ்ந்து ஒன்றுந்தோன்றாமல் நித்திரை இன்றித் துன்பம் அதிகரிக்கக்கண்ணீர்சோர அழுவான். கையையூன்றியெழுவான். கால் நடுங்கி விழுவான். கடவுளே என்றுதொழுவான். இப்படிக்குப் பலபலதுன்பம் அடைந்து சகிக்கமாட்டாமல் மந்திரயுத்தியிலும் தந்திரயுத்தியிலும் உயர்ந்த தம்பியாகிய விதுரமகாராசனை அழைத்தோடிவாருங்களென்று உயிர்ச்சேவகளை அனுப்ப, அவர்கள் விரைந்துவணங்கிப்பெரிய அரசன்செய்திசொல்லவும், அம்மொழிகேட்டுச் செம்மலாகிய விதுரன் அர்த்தராத்திரியில் அண்ணனிடத்திற்குவந்து அழகியமலர் அடியில்வீழ்ந்து ஆசிர்வசனம்பெற்று, அருகிலிருக்கும் ஆசனத்தில் இருந்து மார்பையும் தோளையும் தடவிக்கொடுத்து வீறண்ட

நாவுக்குப் பசையுண்டாகக் கச்சாயவர்க்கங்கொடுத்துத் திடப்படுத்தி ஆலவட்டங்களால் உபசரித்து ஆறுதல்சொல்லி என்னை அழைத்தகாரணம்யாது! அண்ணு! என்று வினவிய தம்பியைத் திருதராட்டிரன் நோக்கி மாட்சிமையுடையகல்வியிலும்கேள்வியிலும் சாஸ்திரக்கருத்திலுநதப்பாமல்தெரிந்துநடக்கும் ஒழுக்கதிலும் சிறந்த அப்பனே! ஐவரிருக்கும் உபப்பிலாவியம் புகுந்து யான் சொல்லிய வசனங்களெல்லாம் உரைத்து மறுமொழிகொண்டு இவ்விடம்வந்து அவர்கள்கூறியசங்கதி அநேகங்களில் சிற்சிலவற்றைத்தெரிவித்து நாளை உதயத்தில்வந்து மற்றவைகளையுஞ் சொல்லுகிறேன் என்று சஞ்சயன் விடைபெற்றுக்கொண்டு விடுதிக்குச்சென்றான். அதுமுதல்கண்ணுறக்கங்கொள்ளாமல்கலங்கிய எனக்கு "எரியுங்கொள்ளியை ஏறத்தள்ளுவதுபோல்"இந்த இராக்காலம்நான்குயுகம்போல்நிலைபெற்று என்னைநலியச்செய்கின்றதே,ஆகையால் ஏதாகிலும்தருமங்களைச்சொல்லி இந்தஇராப்பொழுதைப் போக்கடிப்பாயென்று உன்னை யான்இங்குஅழைப்பித்தேனென்று இறையவன் இயம்பக்கேட்டு இளையதம்பியாகிய விதுரன் சொல்லுகின்றான். என் அண்ணலே சதுரங்கத்துடன் சாமர்த்தியமுள்ள அரசன் யுத்தஞ்செய்யத் துணிந்து வளைந்துகொண்டால் அவனை வெல்லுவதற்குவல்லமை இல்லாத அரசர்களும், தந்தைமுதலியபேர்கள் எச்சிற்கையாலுங் காக்கையை ஓட்டாமல்சேகரித்துக்ஷேமித்துவைத்த திரண்டதிரவியங்களை, பந்துஜனபோஷகம்,தானதருமம், பரோபகாரம் செய்யாமலும், தாங்களே பிரபுக்களென்று இறுமாந்து பொன்காத்த பூதம்போற்காத்திருந்தும் அந்தப்பொருள் இழந்தபிற்பாடு தலைகவிழ்ந்து பூரியராகித்திரியும் பேதையராகிய லோபிகளும், களவுசெய்ய வேண்டுமென்னும் கியாபகமுடைய திருடர்களும், கலகமும் வஞ்சனையுஞ்செய்து சீவனஞ்செய்யக் கங்கணங்கட்டிக்கொண்டு திரிகின்ற கர்மிகளும், பற்பல பாஷைகளையும் சாஸ்திரங்களையும் படித்துணரவேண்டிய ஆசைகொண்டவர்களும், நித்தியதரித்திரத்தில் ஆழ்ந்தவருந்தி நிலையாகிய வாழ்வைப்பெறவேண்டுமென்னும் இச்சையை யுடையவர்களும், எந்தவேளையும் போகத்தைவிரும்பிக் காமாந்தகராய்த்திரிபவர்களும், வியாதிக்காரர்களும், தாங்களெண்ணியகவலையினல் நித்திரை அற்றிருப்பார்கள், இவர்களுக்குக் கண்ணுறக்கம் வாராதிருப்பது ஞாயமே, பஞ்சாசத்கோடி பூமண்டலாதிபதியாகிய தேவரீர் கண்ணுறக்கங் கொள்ளாதிருப்பதற்குக் காரணமென்னவென்று வினவிய விதுரனை இராசன்நோக்கி, நிறைந்த உயிருக்குயிராகிய தம்பியும், மந்திரியும், தோழனுமாகிய தோன்றலே கேளும், பலமும் நலமுமுடைய பாண்டவர்களால் நடக்கப்போகின்ற யுத்தத்தில் அபலமும்சபலமுமுடைய அரவகேதனன்முதலாகிய புத்ரமித்ர வருக்கங்கள் என்னபாடுபடுவார்களோவென்று என்சிந்தை நினைத்து பெருமூச்செறிந்து தியங்கி மயங்கித் திடுக்கிட்டெழுன்று நித்திரைவாராமல் நெடுந்துயரிலாழ்ந்தேன். ஆகையால் என்னையுந்தேற்றி யுத்தம்நேரிடாமலிருப்பதற்குத் தகுதியாகிய உபாயங்களையும் புகன்று அபாயம் நீக்கி ஆளவேண்டும் ஐயனேயென்று அரசன்கூற அவ்வார்த்தையைக்கேட்ட விதுரனவன் என்னண்ணலேகேளும்! நாசினி ஆளும் நர்வலர்கள் தாயாதிமுதலிய பந்துக்க

ளுடன் வித்தியாசமற்ற மனத்தினராய் உடன்பொருந்தி வாழ்வதேவாழ்வு. அப்படியில்லாமல் விரோதங்கொண்டு பகைத்து வாழநினைப்பீராகில் மாறாத துயரம் ஆறாகப்பெருகும். இதுசத்தியவசனமேயாம். உன்புத்திரர் ஐவரைப் பகைத்துக்கொண்டபடியால் விளையப்போகின்ற சண்டையை விலக்கவல்லவர்களொருவருமில்லை. ஐயா! சிருஷ்டிகர்த்தாவாகிய திசைமுகன் வரன்முறைப்படி விதித்த விதியை மதி அனுசரிக்கும் என்றியம்பி, குற்றமில்லாத தவத்தினையுடைய விதுரமகாராசன் மேலும் சொல்லுகின்றார்.

கேளும் பூபதியே! பாண்டுமகாராசாவின் புத்திரர் தங்களுக்கு நிரியாண நேரிடும் ஆபத்காலங்களிலும் தேவரீர்மேல்வைத்திருந்த அன்பும், பத்தியும், விசுவாசமும், ஆசையும், தினையத்தனையேனு மறந்து மாறுபட்டு வேறாக நினைக்கமாட்டார்கள். ஆனால் இந்திரப்பிரஸ்தத்திலிருந்தவர்களை சபாமண்டபம் பார்த்துப் போகலாமென்று பெரியதந்தையாகிய நீர் திருமுகமெழுதிக் கையொப்பமிட்டு வரவழைக்க, உமது புத்திரன் மாயச்சூதாடி அவர்களுடைய உரிமையைக் கைக்கொண்டபோதும், உமதுபிள்ளைகளும் அவர்களைச் சார்ந்தவர்களும் இழிவாகிய சொற்களைச் சொல்லியபோதும, தாமரைமலர் போன்ற முகத்தையும் சரமாகிய கமுகின்பாளைபோன்ற குழலையுமுடைய திருவுக்கொப்பாகும் திரௌபதையை மயிரைப்பற்றி இழுத்துவந்த காலத்திலும்; வஸ்திரத்தையுரிந்து மானபங்கஞ் செய்தகாலத்திலும், கரத்தைநீட்டி தொடையைக்காட்டி இந்தத்தொடையின்மீது கொண்டுவந்துவையடா தம்பி யென்று துரியோதனன் கூறியகாலத்திலும், நொந்து மனம்வருந்தி உன்மேல் வைத்திருந்த அன்பும் ஆசாபாசமுங் கொஞ்சங்கொஞ்சமாக நீங்கிப்போய் விட்டது. அதைக்குறித்து நீர் ஆயாசப்படவேண்டாம், இவ்வுலகத்தில், உத்தமர் மத்திமர் அதமரென்று மூவருண்டு, அண்ணா? அதமராகும் கயவர்களுடைய கோபம் பிளந்த கல்லைப்போலாகும், மறுபடியும் பொருந்தாது, மத்திமராகும் புத்தியீனர்களுடைய கோபம் வெட்டுப்பட்ட பொன் துண்டு போலாகி மூசையில்வைத்து படிக்காரமிட்டுருக்கப் பொருந்தும் அதுபோல இன்னொருபுத்திமான் இடையிலிருந்து சமாதானஞ்செய்தால் கலந்திருப்பார்கள், மேம்பாட்டினையுஞ் சிறப்பினையும் கல்வித்திறத்தினையும் குலசாம்பிரதாயத்தையு முடைய உத்தமர்களுக்குக் கோபம்வாராது, வந்தாலும் தண்ணீரின்மேல் பாணத்தைத்தொடுத்தால் வடுவாகிய காயமும் வேறுபாடாகிய பிரிவுமில்லாமல் ஒன்றாயிருக்குந் தன்மையைப் போலாகும், ஐவர்கள் மேம்பாடுடைய சீரியர் ஆதலால் எப்படிப்பட்ட குற்றங்களையும் உடனே மறக்கத்தக்கவர்கள் வீரவழகுநிறைந்த தோள்களையுடைய வேந்தே! ஆண்மையிலும் விவேகத்திலும் கீர்த்தியிலும் நீதி ஞாயங்களிலும் சத்தியத்திலும் இளையாமையிலுமுயர்ந்த பாண்டவராகிய நல்லபுத்திரர்களை இப்போது வரவழைத்துஅவர்களுக்குரியபூமியைக்கொடுக்கமனமுண்டோசொல்லும்,அப்படி செய்வீராகில்வீரகண்டையைத்தரித்த அரசர்களாகியஐவர்பெரியதந்தையான உமது வார்த்தையைத் தள்ளமாட்டார்கள், சபையிற்சொல்லிய சபதங்களெல்லாவற்றையும்பாராசர்கள்பழித்த நிந்தையாகியசொல்லையும்மறந்து உமதுபுத்தி

ரர்களுடன் வித்தியாசமில்லாமல் பொருந்தி வாழ்வார்கள். அதனுலிந்தச் சந்திரமரபு மேன்மைபெற்றுத்தழைக்கும் இப்படிசெய்யாமற் கொடிதாகிய யுத்தம் விளையும்படியாக எண்ணுவையாகில் கடல்வளைந்த காசினியெல்லாம் காவலராக ஐவரே ஒருகுடையில் ஆள்வார்கள். இரணகளத்தில் பலியாகப் படுவோரெல்லாம் நினது புத்திரரும் பவுத்திரரும் மித்திரர்களுந்தான், உறுதியாகச் சொல்லுவதற்கு ஒருக்காலுஞ் சந்தேகமில்லை சிரேஷ்டனே, உயர்ந்த பதமும் பெருமையும் அரசர்முதற்சேனைகளின் கூட்டமும் உரியபெரியவர்களின் நண்பும் செல்வப்பெருக்கமும் சூதினுல் தாயத்தாரைவென்ற மமதையும் ஏகபோகமாக இராச்சியத்தை ஆளுவதும் நூறுபிள்ளைகளென்னுந் தொகை மகிழ்ச்சியும் இவைகளெல்லாம் நிச்சயமாகிய பொருளென்று நினைவுகொள்ளாதை, ஐயோ! அதித்திடமே, அவை தூண்டில்முள்ளில்மாட்டிய சொற்ப இரையைக்கருதிவிழுங்கிய மீன்களுக்கு நேரிடுந்துன்பந்தான், பாண்டவர்களை வஞ்சித்து பறித்துக்கொண்ட பூமியை வெகுநாளிருந்து ஆண்டுஅநுபவிக்கலாமென்னும் ஆசைமேலிட்டிருக்கின்றீர். ஆனுல் நாளைநடக்கும்யுத்தத்தில் உன் புத்திரரைவீமார்ச்சுனர்கள் கதையினுலும் விற்கணையினுலும் தாக்கிப் பாக்கியில்லாமல் மாட்டியிழுத்து வாட்டிவிடப்போகுர்கள், மேன்மையையுடைய அண்ணலே!நீரேயோசிக்கக்கடவீர்.மெய்யாகவும்ஸ்திரமாகவும்நடக்கப்போகிற இரகசியத்தை இன்று சொல்லிவிட்டேன், மேலும் வீஷ்டுமாசாரியர் முதலிய என்போலொத்தவர்களெல்லாம் உன்புத்திரனுக் கெத்தனைவிதத்தில் வருந்திச்சொன்னுலும் கிழவன்பாடல் கின்னரிக்குச்சரிப்படாதென்று தோன்ற; காதுக்கு நாராசமாகவும் நாவுக்குக் காஞ்சிரங் காயாகவும் இருக்கின்றது; லாபலோபத்திற் குடன்பட்ட நண்பர்களைப்போலும் விரும்பியிருக்கும் கன்னன், சகுனி, துச்சாதனன் இவர்கள் சொல்லும்வார்த்தைகள் தேன்பாகு கற்கண்டுப்பாகு சீனிச்சருக்கரை இவைகளுக்கு மேலாகிய மாதுரியமாயிருக்கின்றன. இது நன்மை இது தீமை என்றுணராத சிறுபிள்ளையினிடத்தில் ஏகச்சக்கராதி பத்தியத்தைஒப்புவித்து ஏதொரு பற்றுமில்லாத யோகீஸ்வரனைப்போ விருக்கின்றுய். அவர்களோ அழகிய ஆயுதங்களையும் அரம்பா ஸ்திரீகளையும்வைத்துப்பாடைக்கும் வகையுணராத நபுஞ்சகர்களைப்போல் வழிதுறை இல்லாமல் தங்கள்மனம்போனபடிக்குநடந்து செய்தற்கரியனவற்றைச் செய்யும் பெரியோர்களையும் எடுத்தெறிந்தும்பசி இளங்கன்று பயமறியாதென்பதுதோன்ற உமது உரியவார்த்தைக்கும் உடன்படாமலிருக்கும் புத்திரர்களைக்குறித்து நான் என்னசொல்லுவேன். அவர்களுக்காக நீர் விசனப்படுவானேன், பெருமூச்சுவிடுவானேன், நித்திரையற்றிருப்பானேன், கமுகப்பாளை விரிந்து அதிற்பெருகியதேன் சொரிந்துபாயுங் குருநாட்டுக்கு நாயகமாகிய எங்கோவே? இன்னமுங்கேளும் நீர்கொடுத்த காண்டவப் பிரஸ்தமென்னுங் காட்டை தெய்வானுகூலத்தால் நாடுநகரங்களேற்படுத்தி அரசுபுரிந்து பெருமைபாராட்டிக் கொண்டிருந்த பாண்டவர்களை முன்பின்னெண்ணும லழைப்பித்து சகுனியை எதிராக்கி சொக்கட்டானுடச்செய்ததே தகாது, அதிலும் பந்தயம் வைக்கச்சொன்னது பழுது; மேலும் ஐவரையும் திரௌபதையை

யும் பந்தயப்பொருளாகக்கொண்டு கெலித்தது ஐயையோ அநியாயமநியாயம். இப்படியாகச் சூதினாற் ஜயங்கொண்ட பூமியைக்கைப்பற்றினாலும் ஒருவிதநன்மையே. இதன்றி தேவர்கள்முதலிய யாவர்களும் துதிக்கும்படியாகிய பெருமையிற்சிறந்த பாண்டவர்களாகிய பிரபலரை அற்பமாகிய துரும்பிலுந்துரும்பாக அவமதித்து அந்தச்சபையிற்பேசிய புன்மொழிகளைப் புருஷரேறுவாகிய அத்தீரர்கள் பிராணபரியந்தம்மறப்பார்களோ சொல்லும்; அன்றி "தீயினாற் சுட்டபுண்ணுள்ளாறுமாறாதே-நாவினாற்சுட்டவடு" என்று இயம்பிய நீதிக்கிணங்கநெருப்பினாற் சுட்டபுண்ணும் பாணமுதலிய ஆயுதங்களினால் தாக்கப்பட்டபுண்ணும் சல்லிய கரணிமுதலாகிய மருந்துகளினால் உடனே ஆறிப்போம். சொல்லினாற்பட்ட புண் என்றென்றைக்கும் ஆறாது, அவை சர்வசங்கப் பரித்தியாகஞ்செய்த மஹாறுக்களையும் தாக்கும், அவர்களும் சகிக்கமாட்டார்கள்; பாண்டவர்கள் மேன்மையாகிய அறிஞராகையினால் அன்று அந்தச்சபையில் மனம்பொறுத்திருந்தார்கள். அவர்களல்லாமல் தேவர்கள்முதலியமற்றெவர்களானாலும் இப்பாவிகள் செய்தபொல்லாங்கினால் தயைதருமம் சாந்தமென்னும் அறங்களைவிடுத்து அந்நேரமே நாசப்படுத்திக் கோபந்தீருவார்களல்லவா; தேவரீரும் உரிமை அறிவு ஒழுக்கம் கிருபைக்குணம் தெளிவு இவைகளில்லாத தீயர்களைப்போல் கண்ணைமூடிக் கொண்டிருந்த படியால் இவ்வளவு அலங்கோலத்திற் கிடமாயிற்று போனது போகட்டும். இப்போதாவது பக்ஷபாதமில்லாமல் சமமாக நடத்த வேண்டுமென்னும் நடுவுநிலைமையாகிய புத்தி உம்மிடத்திலிருக்குமாகில் நமது குலத்திற்பிறந்த பிள்ளைகள் பிரவேசிக்கத்தகாத பகைவழியிற் புகவொட்டாமல் பாண்டவர்களை அழைத்து உனது புத்திக்கிசைந்த இராச்சியத்தையும் சேனைகளையுஞ் செல்வங்களையுங் கொடுத்து, சமாதானஞ் செய்தாலொழிய கௌரவர்பிழைக்க மாட்டார்களென்றுபரிசுத்தவான்களிலுயர்ந்த விதுரமகாராசன்விளம்பியமொழிகளையெல்லாங்காதின்வழியாக அருந்தி, எனது அருமைத் தம்பியே! நீ சொன்னதெல்லாம் உண்மைதானென்று விசனந்தீர்ந்து சந்தோஷித்து மனங்குளிர்ந்து மறைந்த சூரியன் உதயமானவுடனே என்தம்பிபிள்ளைகளுக்கு நாடுநகரமுதலிய பாக்கிய மியாவுங்கொடுத்துவிடுகிறேன், இதற்குயாதொருதடையுமில்லை;இவ்வுலகிலிருக்கு மனிதர்களும் பற்பலதேசத் தரசர்களும் அவ்வுலகத்திலிருக்குந் தேவர்களும் முத்தொழில் நடாத்தும் மூவர்களும் துரியோதனாதிமுதலிய யாவர்களுங்கூடிவந்து அவர்களுக்கு நாடுகொடுக்கக்கூடாதென்று தடைசெய்தாலும்அவர்கள்வார்த்தையைத்தடைசெய்துகொடுக்கிறேன். ஒருக்காலும் நான் சொன்ன சொற்றவறேன், நீ போய்வாவென்று விடைதரவுங் குணநிதியாகிய விதுரன் தன்கிருகத்திற்குப் போயினன். இப்பால் தருமஞ்சொல்லிய தம்பி அரண்மனைக்குப் போனபிற்பாடு; கற்காத அற்பபுத்தியை யுடையபேர்களுக்குக் கற்றுணர்ந்த மேலோர்கள் சொல்லிய ஞானப்பொருள் ஒருகாதினுழைந்து மற்றொரு காதின்வழியாய்ப் போய் விடுந்தன்மையைப்போல் கண்ணையற்ற குருடனுடைய கவலை மனமும் இருண்டிருந்தது. அவன் மனத்தைப்போல் இராத்திரியு மிருண்டுவளைந்து எமனைப்போல் நிறைந்தது. அதெப்படி

என்றால் மேகங்களெல்லாந்தலையும், பிரகாசிக்கு மின்னலெல்லாம் சுருண்ட செம்பட்டமயிரும், மூன்றாம்பிறையே கோர தந்தமும், சிற்சில மலைகளே பற்பலபுயங்களும் நக்ஷத்திரங்களே வக்ஷஸ்தல ஆபரணங்களும் கறுத்த இருளே தேககாந்திமுமாக உடைய இராக்காலமென்னும் யமன் வாடைக் காற்றாகிய பாசந்தாங்கித் துரியோதனாதியர்கள் இறப்பதற்கு முகூர்த்தநாள் ஏற்படுத்திக்கொள்ளத்திரிதராட்டிரனைச்செலவுகேட்கவந்ததுபோலுமிருந்தது திரிதராட்டிரனுக்கு அளவற்ற ஊழிகாலமென நெருங்கிய இருட்கூட்டமானது நனவிற்றோன்றிக் கனவிற்கண்ட பொருள்போல் உடனே யகன்றது, விவேகசூனியர் மனம்போலிருண்ட முன்னைநாள் நடுராத்திரியில் இளவலாகிய விதுரமகாராசன் திரிதராட்டிரனுக்கு உபதேசித்த மந்தரவார்த்தைகளெல்லாம் ஏதாகமுடிகிறதோ அதை அறியவேண்டுமென்று நினைத்து, சப்தமாவென்னும் பரிபூட்டிய இரதமேறி உதயகிரியின் உச்சியில்வந்து விளங்கி, வண்மையும் தன்மையும் உண்மையும் நிறைந்த மகான்களின் மனத்திற்கொப்பாக அரண்மனைச் சாளரங்களிலும், சாலை சோலை இடங்களிலும் பிரகாசமுள்ள சூரியன் தன்கிரணங்களைப்பரப்பினான். அந்தக்கிரணங்கள் விரிந்து நுழைந்து காய்ந்தது எப்படி இருந்ததென்றால் விதுரமகாராசனுடைய விவேகத்தைக் கேட்டுத் திரிதராட்டிரமகாராஜன் ஐவருக்கு நாடுகொடுக்கிறதாகச் சொல்லியிருக்கின்றான். அந்த அதிசயத்தை யாவரும் எழுந்துபாருங்களென்று கிரணமாகியகரங்களினால் கிட்டித்தட்டி யெழுப்பியதைபபோலுமிருந்தது. உடனே நகரியில்வாழும் ஜனங்களெல்லோரும் முகமும் அகமும் மலர்ந்து மகிழ்ந்து எழுந்து விழுந்து சூரியனைத்தொழுதார்கள். வீஷ்மாசாரியர், துரோணாசாரியர், கிருபாச்சாரியர், அசுவத்தாமா, அங்கதேசாதிபதி, சகுனி, துரியோதனன், துச்சாதனன்முதலிய சகோதரரும் வேதபண்டித விப்பிரர்களும் சோதிட நூல்வல்லவர்களும் சகுன சாஸ்திரிகளும் மாசறக்கற்ற கவிவாணரும் மற்ற தேசதேசத்தலைவரும் தங்கள் தங்களுக்குரிய இராஜ சிங்காசனங்களிலும் அணியாசனங்களிலும் மணியாசனங்களிலும் வீற்றிருந்தார்கள். அந்தச் சமயத்தில் இராத்திரிமுழுமையும் நித்திரையற்றிருந்த திரிதராட்டிர மகிபதி சுத்தியாய்ப் பத்தியாய் நித்தியகடனை வெற்றிபெற முடித்துக்கொண்டு குருகுலம் விளங்கக்கூடியிருக்கும் மந்திரிமார்களும் தந்திரிமார்களும் பட்டவர்த்தனரும் மகுடவர்த்தனரும் மண்டலீகரும் உரியபல நாட்டரசரும்கூடிய சபையில்வந்து அவ்விடத்திலிருப்பவர்களி யாவரையும்விசாரித்து விதிமுறைப்படி வந்தனம் மரியாதை உபசாரம் யாவுஞ்செய்து அக்ஷதை ஆசிர்வசனங்களும்பெற்று அரியாசனத்திலமர்ந்தான் பெரிய அரசன்; அந்தவேளையில் சஞ்சயனானவன் உதயத்திலெழுந்து மூழ்கித் திவ்யமலராலருச்சித்துச் சூரியநமஸ்காரஞ்செய்து அணிமணிக்கலை அணிந்து அழகிய சபைக்கு நேராகவந்துநின்று காவலோரைக்கண்டு கடைத்தலையில் தான் வந்திருப்பதைக் காவலனுக்கு அறிவியுமென்றான், அதைக்கேட்டுத் தூதர்போய் வணங்கிச் சொல்ல, வரும்படியாக அரசன் உத்தரவு செய்யச் சபைக்குட்சென்று துரோணாசாரியர் முதலிய பிராமணர்களுக்கும் வீஷ்மாசாரியர் முதலிய பெரியவேந்தருக்கும்

தக்க மரியாதைசெய்து தருமநீதி சாஸ்திரமுணர்ந்து வெறுப்பும் விருப்பும் வெப்பமும் தட்பமுமில்லாத சஞ்சயனுக்கு முத்தமகுணத்தோன் இராசனுக்குச் சமீபத்திலிருந்த ஆசனத்திலிருக்கவும் கட்புலனற்ற காவலன் சிந்தித்து ஆசையுடன் சஞ்சயனை அழைத்துப் பாண்டவர்களிடத்தில் தூதுபோய்வந்த கருத்து முழுவதும் சபையில்நிறைந்த யாவருங் கேட்கப் பெரியோர்களுக்கு முன்பாகச்சொல்லும்? என்றவுடனே சஞ்சயனானவன் எல்லாரும் சந்தேகப்படும்படியாகச் சொன்முடிபு பொருண்முடிபு காரியகாரணம் தோன்றாமல் மனவெறுப்பினால் பொழிப்பாகச்சொல்லவும், அதைக்கேட்டு திரிதராட்டிரன் சஞ்சயனைப்பார்த்து ஐயா நீர் போனதுமுதல்வந்ததுவரையில் அவர்கள்கூறிய வசனத்தில் ஒருசொல்லாகிலும் சோர்வுபடாமல் பதம்பதமாக விரித்துச்சொல்லவேண்டுமென்னவும் சஞ்சயன்சொல்லலுற்றான். அம்புவிஆளும் அரசே கேண்மின், அஸ்தினாபுரத்தைவிடுத்து அழகிய உபப்பிலாவியத்தையடுத்து ஸ்ரீகிருஷ்ணபகவானிருந்ததிருமாளிகைசென்று சஞ்சயன்வந்திருக்கின்றானென்று தெரிவிக்கும்படி வாசலிலிருந்த தூதனைச்செலுத்தினேன். வரச்சொல்லென்று கூறிய மறுமொழிகொண்டு அந்தப்புரத்திற்சென்று அழகுகுலவிய அரதன மணிகளாற்செய்த அம்சதூளிகாமஞ்சத்தில் ஆதிசேஷனுக்கு ஒப்பாகப் பட்டுமெத்தை மலர்மெத்தைபரப்பிய சயனத்தின் அருகில் அருச்சுனனிருந்து அடியிணை சுமந்துவருட, உருக்குமணிப்[illegible]யார் இருகரத்தினாலும் மயில்விசிறிகொண்டு உபசரிக்க, நப்பின்னைமுதலியோர் கவரிவீச, இவர்கள் மூவருமன்றி மற்றொருவருமின்றிச் சயனித்துக்கொண்டிருந்த அஞ்சனமேனியானாகிய இணையில்லாத ஏந்தலை, உட்புலன்களைந்துந்தேறிய உத்தமர்களின் உள்ளத்திலூறும்உணர்வானவனை, உந்திபூத்தோனை, உவணகேதனனை, உததிவிட்டிவண்வந்துதித்தமாமாயனைக்கண்டு இதுவே நாம் பெறவேண்டிய முத்திவீடென்று தேவதேவனுடைய திருவடியில் சாஷ்டாங்கமாகப்பணிந்த வென்னை, மனமகிழ்ச்சியுடன் பக்கத்திலழைத்துஅணைத்தனர். நானுங்கைகட்டிக்கொண்டுநின்றேன். அப்போது இளமையும் அழகும் இயல்பாகக்கொண்ட என் தாய்மார்களின் முகத்தை தமது தாமரைக்கண்ணினால் நோக்கினார். உடனே அவர்களிருவரும் அரக்காம்பலுக்கு ஒப்பாகிய கரங்களினால் நவரத்தினங்களிழைத்து மாற்றுயர்ந்த தங்கத்தினாற்செய்து எங்கும் பொங்கும் ஒளியினாலுயர்ந்த சிங்காசனங்கொண்டுவந்து போட்டார்கள். அதன்மேல் உட்காராமல் கையைமாத்திரம் அந்தஆசனத்தின்மேல் வைத்துக்கொண்டு சுவாமியின் பக்கத்தில் அன்பினாலடைந்துசூல்கொண்ட மேகம்போலும் காசாம்பூவைப் போலும் மரகத மணியைப்போலும் வண்ணந்தழைந்த கண்ணன்திருமேனியினழகையும்அருச்சுனனுருவத்தையும்கண்களிகூரநோக்கி! ஆக்கலும், அழித்தலும், தோற்றமும், மறைப்புமுடைய சுதந்தரராகிய இவர்கள் திருஷ்டிக்கு லோகாலோகங்களும் நிலையில்லாமலழியும். இந்தப்புண்ணியவான்களைச் சிநேகித்தால் மூவுலகமும் ஆளலாம். மாறுபட்டுப் பகைத்தால் எதிர்த்தவர்களும் ஈரேழுலகமும் இறந்துபோம். இப்படிப்பட்ட மைத்துனனும்தம்பியும் கைகாட்டிய வேலைகளைச்செய்யும் ஏவலாளாகவிருக்க தருமராஜனுக்கு வேறேபடைத்

துணையும் வேண்டுமோ; ஆண்மையற்றவனென்றுஞ் சொல்லப்போமோ; புவனபுவனமுழுமையும் தனக்குவேண்டுமென்று நினைப்பாராகில் இப்போதே கிடைக்கும்படி செய்வார்கள். இப்பேர்ப்பட்ட பலசாலிகளிருந்தும் நாட்டை விட்டுக் காட்டிலுறைவானேனென்றால், பரிசுத்தமுள்ள நினைப்பும் ஒப்புவமையில்லாதவருமாகையால் எதையும் விரும்பாமல் வெறுத்திருந்தாரென்று என்னெண்ணத்தில் பல பல வண்ணம் எண்ணிக்கொண்டிருந்தேன். அப்போது கோவர்த்தன கிரியைக் குடையாக எடுத்துக் கல்வருஷத்தைத் தடுத்து, கோபாலரைக்காத்தருளிய, தேவாதி தேவனாகிய கண்ணன் என்னைப்பார்த்து இப்போது இவ்விடத்திற்கு நீர் வந்தகாரியமென்னவென்றுகேட்க, அடியேன் சிற்சிலவார்த்தைகளைச்சொன்னேன், அப்போது கேசவனாகிய ஸ்ரீகிருஷ்ணன் ஒருவாக்கியம் திருவாய்மலர்ந்தருளினார். அப்பா சஞ்சயனே! துரியோதனாதியர்க்கும் பாண்டவர்களுக்கும்நடக்கப்போகின்ற யுத்தத்தைக்குறித்துத் திருதராட்டிர மகாராஜன் விசனத்துடன் பயப்படுவாராகில் ஐவர்களுக்கும் இனிமையாகிய வசனங்களைச்சொல்லி, விரித்ததலைமயிரை முடிக்காமல் விசனமும் உலகப்பழிப்புங் கொண்டிருக்கும் பாஞ்சாலியின் மனத்துயரத்தையும் போக்கி, சூதாடிப்பறித்துக்கொண்ட நாடுநகரம் திரவியமுதலிய யாவையும் பெறும்படியாகக் கொடுத்து, அவர்களுக்கு இப்போது படைத்துணை வந்திருக்கும் பார்த்திபர்களையும் நன்மையுடன் சிநேகித்து கிரீடபதியாகிய பாண்டவர்களுக்குரியதாய பாகத்தைக் கொடுக்கக்கடவர். அதன் பின்னும் கௌரவர்கள் வஞ்சகமில்லாமல் உரிமைப்பாடாக, மரியாதையுடன் கீழ்ப்படிந்து நடப்பார்களாகில் நன்றும் இல்லாவிட்டால் எப்போதுங் கலந்து வாழப்போவதில்லை. இது ஒருபக்ஷம் இப்படி நடத்துவதற்கு மனமொப்பாவிட்டால் யுத்தகளத்திலெதிர்த்து அவரவர்கள் புசவலிமைக்குத் தகுந்தபடி சண்டைபண்ணிச் சத்துருநாசஞ்செய்து துன்பநீக்கி, இன்பத்துடன் உலகாள்வது ஞாயம். இது ஒருபக்ஷம். இவ்விரண்டிலொன்றைத்தெரிந்து துணிந்துநடத்த அறியுங் குணமில்லாதவர்களைப் பெரியோரென்று சொல்லுவதிற் பிரயோசனமில்லை. தெரிந்தோர்களும் தெரியவுணராதிருப்பது என்ன காரணமோ, சஞ்சயனே! நீர்வந்தகாரியத்தை நானறிந்துக்கொண்டேன். நாடுநகரம் விரும்பிப் பெருமைபெறும் அரசராகிய பாண்டவர்கள் தேடியசெல்வத்தையும் கூறிய சபதத்தையும் நாடிய யுத்தத்தையும்விட்டு வீடுபெறுந் தவத்தைச் செய்யக் காடடையும்படியாகப் பெரியதந்தைவிளம்பினாரென்று சொல்வதற்கு நீர் ஓடிவந்தது எத்தன்மையையொத்ததென்றால் அடர்ந்த காடுமுழுமையும் தொடர்ந்து புகையும்பொறியும்படர்ந்து முன்னமெரியும் காடாக்கினியை வாடைக்காற்றும் துணைப்பட்டு வந்துகலந்து அதை அவிக்கத்துணிந்ததுபோலாகும். பாண்டவர்கள், மனம்வருந்தி எரிந்துகொண்டிருக்கும்வேளையில் உங்களைத் தவஞ்செய்யப்போகச்சொன்னானென்று நீர் சொல்லப்போகிற சொல்லாகிய வாடைக்காற்றுங்கலந்துகொண்டால் உலகமுழுகிப்போமே, பெரியதந்தை வார்த்தையென்னும் பெருமைத்தருமமும், ஓடிப்போமே! இந்தமொழிகளையும் மநுநெறிமுறைமைகளையும் யோசிக்குமிடத்தில் தங்கள் தங்களிச்சையின்

படிக்கும் வணங்காமுடியோனுக்கு மறுத்துச்சொல்லக்கூடாத முகமனாக
வும் பாரபக்ஷமாகவும் நினைத்துச்சொல்லியதாக இருக்கின்றதே தவிர காரியா
காரியந்தெரிந்து இப்படிபோனா லிப்படிநடக்கும்; இப்படிவிதைத்தா லிப்படி
விளையும், இதுதகும் தகாதென்ப துணர்ந்துசொல்லி யனுப்பியதாகத் தோன்ற
வில்லையே, இஃது பெரிய அரசன்புத்தியல்ல, அற்பமதியையுடைய அறிவினர்
உரைத்த புத்தியைக்கேட்டுச் சொல்லியனுப்பிவைத்ததாக இருக்கின்றது. மதி
மிகுந்த பரிசுத்தமாகிய சாஸ்திரங்கள் முழுமையுங் கற்றுணர்ந்த புண்ணியரா
கும் பெரியோர்களின் யுத்தியைக்கேட்டுமொழிந்த வார்த்தையாயிருக்கவில்லை,
தம்பிபிள்ளைகள் காட்டில் தவஞ்செய்யவும் தன்பிள்ளைகள் நாட்டில்அரசுபுரிய
வும் எந்தமதியைக்கொண்டு திரிதராட்டிரன் சொல்லியனுப்பிவைத்ததோ,
இது அவர்மனத்துக்கே தெரியவேண்டும். எனக்குத்தகுந்த யோசனையா
யிருக்கவில்லை. சஞ்சயனே! நாளைத்தினம் உத்தமனாகிய தருமநந்தனனுடைய
சபையிற்சொல்லி அறிந்துகொள்ளென்று முத்திக்குவித்தாகு முதல்வனாகிய
ஸ்ரீகிருஷ்ணபகவான் திருவாய்மலர்ந்தருளினானென்று சஞ்சயன் சொல்லினான்.
உடனே அரசர்பெருமானாகிய திரிதராட்டிரன் சஞ்சயனைப்பார்த்து புயவலி
யாற்கஜமெனவுயர்ந்த விருஷபவிராட்டாகிய விசயன், ஒன்றுஞ்சொல்லவில்லை
யோவென்று கேட்டான். அப்போது சஞ்சயன் அரசனைப்பார்த்து, ஐயா!
தூயவனாகிய மாயவன் சொல்லியதைக்கேட்டிருந்த இந்திரகுமாரனாகிய விஜ
யன், அவியாதஅக்கினியைப்போல்வாள்விழிசிவந்து மார்புந்தோளும்வலக்கண்
ணுந்துடித்து என்முகத்தை ஏறநோக்கி, ஆ! ஆ! சஞ்சயனே! பெரியோராகிய
உத்தமர்களும், சிறியோராகிய மற்றையர்களும், நெருங்கிய இராஜசபையில்
இந்தவார்த்தையை விசயன் விளம்பினானென்று கலங்காமலும் பயப்படாம
லும் ஒளிக்காமலும் சொல்லக்கடவையென்று சொல்லினன்.

அதென்னவெனில், பாவங்களென்னும் பயிர்விளையச்செய்யும் தன்புத்திர
ராகிய துரியோதனாதியர்மேல் வைத்தபக்ஷமும் கிருபையும் பிரயோசனப்
படவொட்டாமல் குடும்பங் குலைக்கும் அற்பர்களுடைய புத்தியைவிரும்பிக்
கேட்டுத் தருமத்தினுக்கு அடாதகருமத்தை மேற்கொண்டு ஐவர்களையும் அனா
தையாக்கி அழகியவளஞ்செறிந்தநாட்டில் ஒன்றாகிலுங் கொடுக்கமாட்டேன்,
பாண்டவர்கள் இராச்சியாபேக்ஷையைவிடுத்துத்தவம்புரிந்து மோக்ஷவீட்டை
யடுத்துக் கரையேறவேண்டுமென்றே, எங்கள் பெரியதந்தை பக்ஷமாகப்புத்தி
கள்சொல்லி அனுப்பிவைத்தது, ஓ! ஓ! சஞ்சயனே! குலகோத்திரத்துக்கும்
தனக்கும் நன்மையுண்டாகத் தவஞ்செய்யச்சொல்லி அனுப்பிய வார்த்தை
யைச் சிரசாகக்கொண்டு நாங்கள் முன்பு சபையிற்கூறிய சபதத்தைவிடுத்துத
தவஞ்செய்வோமாகில் திரிதராட்டிரன் தம்பிபிள்ளைகள் சொன்ன சபதஞ்
சோர்ந்து போனார்களென்னும் பழியும்பாவமும் இவையும் நமதுமரபையுஞ்
சேருமே. பெரியவயதினால் அதைமறந்தாரோ சஞ்சயனே! நாங்கள் வீரப்பிர
தாபத்துடன் ஆபத்துவேளையிற் கோபத்தினால் சபையில் விளம்பிய சத்திய
வாக்கியத்தை உலகப்பிரசித்தமாகமுடித்து உதிரவெள்ளத்தில் மூழ்கி அரசர்
கள் பழிக்கும் பழுதுகள்போக்கி அழகினையுடையவர்களாய் எங்கள்குலமாகிய

திங்கள்குலமோங்க அழகியமணவாளனுடைய அடிமலரைப்பணிந்து குற்றமகற்றிக்கொள்ளுவோம். அன்றியும் எங்களுக்குக் கெடுதிசெய்து எக்காலத்திலும் அசையாத வசையை இசையாகக்கொண்ட துரோகிகள் அழகார்ந்தமேனியை தெய்விகமாகிய விசயகாண்டீபத்தில் தொடுத்துவிடுங்கணையினால்சின்னபின்னமாகப்பிளந்து இரத்தவெள்ளமொழுகவும் வெப்பமாகிய மூளைகள் அற்பவாயிற் பெருகவும்செய்த அப்பொழுது எங்கள்பெரியதகப்பனார் சொன்னசொற்படி தவஞ்செய்யுக்கானகம் புகுவதன்றி இதற்குமுன் ஒருகாலும் வனம்போகமாட்டோமென்று சொல்லும். சஞ்சயனே! நினைக்குந்தோறும் சத்துருக்களுடைய மார்பும் பெரியதோளும் காத்திரவுடலும் அவர்கள்செய்த கபடவஞ்சமும் என்கண்ணெதிர் தோன்றிக்கொண்டிருப்பதினால் அவர்களுடைய தேகத்தை ஒருநொடிப்போதில் அளவிறந்த கணைகளினாற் சல்லடைக் கண்களாக்கி சூரியகிரணங்கள் சாளரங்கள்தோறும் பிரகாசிக்குந் தன்மைபோல் உதிரக் கம்பிகள்வீறிட்டடிக்கவும் வாய், செவி, மூக்கு, கண்கள் இவைகளின் வழியில் இந்திரியங்கள் மனம் நைந்தழியவும் உயிர்கள் சிந்தவும் காக்கை கழுகுகள், கொத்தவும் செய்வேனல்லாமல் உயிருடன் விடமாட்டேன் ஆ! ஆ! சஞ்சயனே, பஞ்சபூதசிரேஷ்டனாகிய வாயுகுமாரன் கரங்கொண்ட கதாயுதத்தினால் துரியோதனாதியர் நூற்றுவருடைய மண்டைகள் சிதைந்து இம்மண்மேல் விழுந்து அழிந்து பூதப்பிரேத பைசாசகணங்கள், நாய், நரி, காக்கை கழுகு பருந்து இவற்றிற்கு விருந்திட்டாலொழிய எங்களுள்ளத்தில் கோபமென்று குடிகொண்டெழுந்த சிவந்த யுகாந்தகாலாக்கினி தணியமாட்டாது. தெளிந்து சிறந்த சஞ்சயனே ஆ! ஆ! தேவாமிர்தத்திலும் சிறந்தபோசனமுண்டு அமிசதூளிகாசயனத்திற்சயனங்கொண்டு வாயுவேகமனோவேகமுடைய குதிரையின் மேற்கொண்டு கன்னமத கபோலமத கரடமதகும்பமும் வீரகண்டையுமுடைய இராசகுஞ்சரத்தின் மேற்சென்று நவரத்தினப் பணியார்ந்த மணிஇரதத்தி லாரோகணித்து உலாவிவரும் தருமசொரூபியாகிய தருமராசன்பாதசாரியாய் நடக்கவும் சூதாடிப்பாக்கியங்களையெல்லாங் கைக்கொண்டு, வனவாசம் பன்னிரண்டுவருடமென்று அனுப்பியும் பனியிலும் வெய்யிலிலும் காற்றிலும் மழையிலும் வருந்திமேடுபள்ளம் கற்பாறையிற் படுத்து நித்திரைசெய்யப்பொருந்தியுங் கந்தமூலசருகாதிகளருந்தி வாழ்நாளை வீணாளாகக் கழிக்கவுந் தாங்கள் சுகத்தை அனுபவித்திருக்கவுஞ் செய்த கீழ்மக்களுடைய உடல்கள் என்வில்லிலிருந்து வல்லியம்போல்வரும் காலாக்கினி ருத்திராஸ்திரத்தின் நெருப்பினால் வெந்து "புகைந்து வருந்தி கரிந்து பொரிந்து சரிந்து மண்மேற்பொடியாகப் போம்படிசெய்து தமயனென்னும் வாஞ்சை தரித்தேனென்று சகலருமுணரக்காட்டுவது மன்றி நாளை நடத்துகின்ற யுத்தத்தில் சிகைகூடிய சிரம் கரம், கால், களம், உரம், இடை, குடல், செவி, நாக்கு, மூக்கு, நகமிலாக்கண்கள் மாமிசம் உதிரம், மயிர், தோல், என்பு, நரம்பு, நிணம், சீநாற்றமாம் வெப்புநீர், இப்படியாகக்கூடிய பகைவருடலத்தை கண்டங்கண்டமாகக் கோடிதுண்டங்கண்டு சிரமெல்லாமுருட்டி நிலமெல்லாம்பரப்பி பொடிபொடியாக்கி நாசஞ்செய்து எங்களைப்போல் அவர்கள் மோசம்போய் அலைய

மல் எல்லாமிழந்து வனத்திலுழலாமல் எங்களுக்கும் இகழ்ச்சியில்லாமல் புகழ்ச்சிவரும்படியாய் அரம்பாஸ்திரீகளெதிர்ந்து ஆசைவிசுவாசத்துடன் வாசந்தங்கு முலைமேலணைத்து இராசபோக வீரசொர்க்கத்தில் வாசமாகவைத்து உபசரிக்கும் அந்த சுகத்தை இவர்களனுபவிக்கும்படியாகக் கூசாமல் அனுப்பிவிட்டு ஓசையுடையகடல்சூழ்ந்த உலகமுழுமையும் வாசத்தார்புனைந்த சத்தியவாக்கியன் தருமபூபதிக்குச் சம்பிரமமாக இஷ்டமுடனே யாவரும் தேவரும் போற்ற பட்டமுங்கட்டிப் பார்ப்பேனையா, எங்கள் தந்தைவார்த்தைக்கு யாங்கள் அடங்கி சபதமறந்து உலக ஆசையுந்துறந்து இருந்தாலும் இராசசபையிற் பயந்து வருந்திவயிறு எரிந்து மனங்குழைந்து திக்கற்றவளைப்போல் மயங்கிய மீன்போன்ற கண்களுடைய பாஞ்சாலி அன்றுவிளம்பிய சாபம் இவர்கள் கோத்திரத்தையும் குலத்தையும் புத்திரவருக்கத்தையும் விட்டு நீங்காதென்று அழகியதோளிணையுடைய ஐயனே! எங்கள் ஐயாவுக்குச்சொல்லும். இப்படிப் பட்ட மனவைரமுடைய நீங்கள்போர்புரிந்து வெற்றிகொண்டு இராச்சியங் கைக்கொள்ளாமல் பழமையாகிய நாடுநகரங்களை எங்களுக்குக் கொடுவென்று யாசிப்பவர்களைப்போல உலூகமாமுனியைத் தூதனுப்பி கேட்கச் சொல்லுவானேன் என்றால்; யாங்கள் புத்தியில்லாமையாலும் யுத்தஞ்செய்யச் சத்தியில்லாமையாலும் பயத்தினாலும்கேட்டனுப்பவில்லை. அவர்கள் நாடுகொடுக்கமாட்டார்கள், வீரசொர்க்க வீடுபெறுவார்களென்று எங்களுக்கு நன்றாய்த்தெரியும் நாங்கள் எத்தனை நாளைக்குச் சும்மாவிருந்தாலும் அவர்களும் அத்தனை நாளைக்கு விசனமற்றிருப்பார்களென்று கருதி எங்களுடைய நாட்டைக்கொடுவென்று நாமே தூண்டினால் அவர்கள் தரமாட்டோமென்று தாண்டிவிழுந்தெழுந்து சண்டைக்குவருவார்கள்; நாம் பூண்டுகொண்ட சபதங்களெல்லாம் தீர்த்துக்கொண்டு புகழ்பெறலாமென்று மேலாகிய யுத்திசெய்து தூதுவிடுத்தோம். அதற்கு எங்கள் பெரியதந்தை உம்மிடத்திற்சொல்லி அனுப்பிய வாக்கியங்களைக் கேட்டவுடனே நூதனமாகிய பூமியும் பொன்னாபரணமும் பொருள்முதலிய பொன்னுடையுஞ் சகலவித நன்மையும் கோடாகோடிபங்கு குறைவில்லாமல் மேலாகப் பெற்றவர்களைப்போலானோம். அந்தோ எங்கள் கோரிக்கை நிறைவேறுங்காலம் கைகூடியபடியால் பெரியதந்தைக்கு இந்தப் புத்திபிறந்து வனத்திற் றவஞ்செய்யச்சொன்னார். இந்த விவகாரமுதலிய வார்த்தைகளைக்கேட்டு மனஞ்சகித்து வழிதெரிந்து எங்களிடத்தில் நேராக வசனிக்கும்படி நாணாமல் வீணாகத்தூதுவந்த சஞ்சயனே! கேளும், நாங்கள் சபையில்மொழிந்த சபதங்கள் முடியுங்காலம் எதுவென்றிருந்த சந்தோஷத்திற்கு இடையூறுவிளையும்போ லிருக்கின்றதனால் என் மனம் வருந்தும்படியாக நினைத்திருந்தேன், அதை நீதெரிந்துகொள்ளும்படியாக இப்போதுசொல்லுகின்றேன் கேளுஞ் சஞ்சயனே! எங்கள் பாட்டனாராகிய வீஷ்மோசாரியர் குருவாகிய துரோணாசாரியர் கிருபாசாரியர் சிறியதந்தை விதுரமகாராசன் இவர்கள் யாவரும் அந்தப்பட்சத்திலிருக்கின்றார்களே அவர்கள் ஒருகாலத்தில் இருதிறத்தவர்களையும் சமாதானப்படுத்தி நாடுநகரங்களைக்கொடுத்து நீங்கள் இவ்விதமாக இருங்களென்று இயம்பினால் "மூத்தோர்சொல் வார்த்தையமிர்

தம்" என்னும் பழமொழிக்கு இணங்கும்படியாக பெரியோர்கள் சொல்லும் வார்த்தையைத் தள்ளாமல் கேட்கவேண்டுமே. அவர்களுடையவாக்கியத்தைக் கேட்டு யுத்தத்தை நிறுத்திவிட்டால் நாங்கள் சபையிற்கூறிய சபதங்களெல்லாம் பிறழ்ந்துபோய்விடுமே, சபதவசனம்பிறழ்ந்தால் பழியும்பாவமும்வந்து விளையுமேயென்று சஞ்சலங்கொண்டிருந்தேன். அச்சஞ்சலவியாகூலம் இன்றளவில் நீங்கிவிட்டது. அதென்னவென்றால்; வீஷ்மர் முதலிய பெரியோர்கள் சமாதானஞ்செய்ய விரும்பியிருந்தால் எங்கள் பெரியதந்தை இந்தவார்த்தையைச்சொல்லி உம்மை அனுப்பிவைக்கமாட்டார். அவர் கருத்துக்குப் பெரியோர்கள் உடன்படாமையால் காட்டுக்குப்போகச்சொல்லிக் கைகாட்டினு ரென்றும் நாடுகொடுப்பதில்லைச் சண்டைசெய்ய சித்தமாயிருக்கின்றார்களென்றும் திரமாகத்தெரியவருகின்றது. எங்களுக்குச் சந்தேக நிவிர்த்தியும் ஆயிற்று. சஞ்சயனே! துரியோதனன்முதலிய நூறுபிள்ளைகளின் உயிர்களும் தேறித்தெளிந்த பெரியோர்களுடைய உள்ளங்கையில் அடங்கியிருந்தன, அந்தப்பெரியோர்களின் வார்த்தையைக்கேட்டு வணங்கிநடந்தால் இன்னஞ் சிலநாளைக்குக் கூட்டங்கலையாமலிருப்பார்கள். உரியோராகிய பெரியோர்களின் வாக்கியத்தை எப்போதிகழ்ந்தார்களோ அப்போதிவர்கள் இவ்வுலகத்தாரல்லர், யமலோகத்தில் ஒருவர்முகத்தை ஒருவர்பார்க்காமல்வருந்தி வாழ்கின்றவர்கள். இதற்கு யாதொருதடையுமில்லை, எங்கள் பெரியதந்தையின் எண்ணம் கவைக்குவாராது, "நாமொன்றுநினைத்தால் தெய்வந்தானொன்று நினைக்கும்" என்பதைமறந்த திரிதராட்டிரனும் மற்றயாவருங்கேட்க இதைச்சொல்லக் கடவையென்று பராக்கிரமசாலியாகிய விசயன் ஆத்திரத்துடன் சொன்னான் ஐயா வென்று நெருங்கியிருக்கும் இராசசபையினிடத்தில் சஞ்சயன் அஞ்சாமல் விளம்பினான்.

இந்தவசனங்களைக்கேட்டு யாவரும் திகிலடைந்திருக்குஞ் சமையத்தில் விவேகத்திலுயர்ந்த விஷ்டுமாசாரியர் இராஜாதிராஜனாகிய திரிதராட்டிரமகா ராஜாவின் அழகிய முகத்தைப்பார்த்து பக்கங்களிற்பொருந்திய துரோணர் முதலிய பெரியோர்கள் யாவரும் சந்தோஷங்கொண்டு சஞ்சலம்விண்டு ஏக்கம் நீங்கவும் ஊக்கமோங்கும்படியாகவும் தேவரகசிய வாக்கியம் ஒன்று சொல்லத்துணிந்தார். இந்த உலகத்தை நிந்தையில்லாமல் விந்தையாய் அரசு செலுத்திவந்து, மைந்தர்நூற்றுவரால் சிந்தைநொந்த அந்தகனாகிய என்மைந்தனே! கேள், சத்தியலோகத்தில் நித்தியராரும் மாதுரியவசனமுனிவர்கள் முதலிய மகாரிஷிகள் சுற்றியிருக்கப் பொற்றுமணாத்தவிசில் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமதேவன் தருமபத்தினியுடன் பொருந்தியிருக்குஞ்சமயத்தில் வேதபுங்கவராகிய தேவகுருவும் தேவேந்திரனும் தேவர்களும்வந்து நான்முகனைக் கண்டு சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அருகாசனத்தில் அமர்ந்திருக்கையில் இரண்டுபேர் திவ்ய தேசோமயபுருஷர்கள் அந்தச்சபைக்கு நேராகவந்து சிருஷ்டிகர்த்தாவுக்கு வணங்காமல் இறுமாந்து அப்பால்நடந்துபோகும் பெருமையைக்கண்டு பிருகஸ்பதியினுடைய மனத்தில் ஆச்சரியந்தோன்ற பிரமனை நோக்கி பரிசுத்தனே நல்லவனென்பவரெல்லாம் உருவாகத்தோன்றியதையொ

த்த இந்தவல்லவர்கள் இவ்விடம்வந்து தேவரீரை மதியாமற்போகின்ற காரணம் யாதோ! இவர்களியாவரோ? அடியேனுக்குத் தெரியச்சொல்லவேண்டுமென்னவும் பிரம தேவன் நகைத்து தேவகுருவை நோக்கி இந்த மகானுபாவர்களை இதுவரையிலும் நீங்களறிந்ததில்லையோ? பிருகஸ்பதியே! கேள், புராதனமாகிய சராசரங்களாலேயுந்துதிக்கும் பெரும்புகழினையுடைய நரநாராயணரென்பவரிவர்கள்தான். தேவர்களுக்கும் சத்தியவசன ஆசாரபரர்களாகிய தேவபத்தியுடைய புண்ணியவான்களுக்கும் இடையூறாகிய துன்பம்வருமாகில் அக்கணத்தில்வந்து அவர்கள் பட்சத்திலிருந்து துன்பநீக்கி இன்பம் விளையச் செய்து புண்ணியவெண்ணமுள்ள புண்ணியவான்களுக்குப் போதுமான துணையாயிருந்து பாவசிந்தையையுடைய பாவிகள், எண்ணிய எண்ணங்கள் கைகூடவொட்டாமல் அவர்களுடைய புத்திரமித்திரர்களைப்பாழாக்கி உலோகோபகாரஞ்செய்து இரட்சிக்கும்பழமையாகிய மூலகாரணர்கள். மேலும், நாமிருக்குஞ் சத்தியலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம், இந்தமூன்று லோகங்களுக்குந் தடையறப்போய்த் திரும்புவார்கள். தகுதியாகிய காரியங்கள் ஏதாகிலுமொன்று விளையுமாகில் அதைநீக்கும்பொருட்டுப் பொன்னுலகத்தினும் புகுந்துவருவார்கள். பூமியிலும் சத்தியவசன நித்தியவிரத பத்திமான்களாகிய புத்திமான்களிடத்திலும் அவர்களுடைய விசுவாசநேச உத்தமபத்தினிமார்கள் வயிற்றிலும் இராசபுத்திரராகப்பிறந்து வேதமுதலிய மநுநீதிதருமங்களை நிலைநிறுத்தி சிஷ்டாசாரத் தன்மையும் பழக்கித்திரும்பி வருவார்கள். ஆதிமூலமாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் நினைப்பினால் உற்பத்தியானவர்கள். இவர்களுடைய பெருமையும் பிரதாபமும் இவ்வளவென்று எடுத்துச் சொல்லுவதற்கு என்தரமல்லவென்று பிரமதேவன் சொல்லக்கேட்டுமகிழ்ந்து நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு தேவகுருவும் இந்திரனுந் தேவர்களுந் தெய்வலோகம்போய்ச் சேர்ந்திருக்கும் நாளையில் பூமியில் சிறிது இராக்கதர் பிறந்து தவங்களிற் சிறந்தமுனிகள் ரிஷிகள் தேவர்கள் யாவர்களும் வருந்தும்படியாக உபத்திரவஞ்செய்து வருங்காலத்தில் தேவர்களுந் தேவேந்திரனுஞ் சேர்ந்து ஆதியில் பிரமன் சொல்லிய வாக்கியத்தை நினைந்து ஆபத்பாந்தவாய் அனாதரக்ஷகராய் விளங்கிய நரநாராயணமூர்த்திகளை அரக்கரால்விளைந்த துன்பஞ்சகிக்கப்படவில்லை என்று திக்குநோக்கித்தொழுது அடைக்கலமென்று கூவியழுதபோது அந்த நரநாராயணமூர்த்திகளிருவரும் ஸ்ரீகிருஷ்ணபகவானாகவும் அழகியவிசயபராக்கிரம அருச்சுனனாகவும் இந்தப்பூமியிலவதரித்தார்கள். அப்பனே! அந்தக் காரணத்தினாலல்லவா வேதமுந்தேடிக்காணக்கூடாத செஞ்சடைக் கடவுளென்னுஞ் சிவபெருமானைச் சீக்கிரத்திற் றரிசிக்கத் தவஞ்செய்ததும் அவர் பிரசன்னமானதுங் கட்டிப்புரண்டுவிளையாடிக் கங்கையுந் திங்களும்மங்கையும் பொங்கரவும் அங்கமுங்கலங்கக் காண்டீபத்தினடியுண்டதுங்கருணைசுரந்ததும் பாசுபதாஸ்திரம்பெற்றதுங் காலகேயநிவாதகவசராகிய இராக்கதரைவென்றதும் இரணியபுரவாசிகளைக்கொன்றதும் இந்திரனுக்குப்பட்டாபிஷேகம்நின்றதும் சகலசுபசந்தோஷவைபவங்களுந் தேவர்களுக்கு வரும்படியாகக் கண்டதும் அமுதபோசனமுண்டதுந் தெய்வலோக

வரசுபுரிந்ததும் இவனே யவன் அவனே யிவனுகையாலல்லவோ இவ்வளவு மகத்துவங்களுங்கூடித்தது, குழந்தாய் தொழுந்தகைமையினையுடைய பலமும் குணநலமும் அழகும் பழகிய வில்திறமையின் விற்பனமும் ஆண்மிக்கையும் பெருமையும் பிரகாசமுங்கீர்த்தியும் நீதியும் இராசமுறைமையும் உண்மையுமுடைய காண்டீபனுக்கு ஒப்பாகப் பெரும்புகழையும் வெற்றியையும் பெற்றவர்களெவர்களிருக்கின்றார்கள், திரிபுரதகனனுகிய திரிநேத்திரதாரியை இணையாகச்சொன்னூற்சொல்லலாம். மற்றொருவரையுஞ்சமமாகச்சொல்லக்கூடாத விற்குணமேற்றும் வீராதிவீரனுகிய பற்குனனைச் சாதாரணமாகியசத்துருவாக நினைத்து ஜயங்கொள்ளுவோ மென்றெண்ணி யிருப்பது அவிவேகமேயன்றி விவேகத்துடன் சேரத்தக்கதன்று, இத்தன்மையதாகியவீரதீரசூரனுகிய காண்டீபமுடைய விஜயனுக்குநானே யெதிரியென்று சூரியன்பெற்ற சவுரியன் நாள் தோறும் அஞ்சாமற் சொல்லிவரும் வஞ்சகவார்த்தையைக் கொஞ்சமேனும் நிசமென்று நம்பாதை, சுயோதனு! அருச்சுனனே அஸ்திரசஸ்திரவலிமையில் மேலாகச்சிறந்தவன், கன்னனேகுத்திரட்சுத்திரவார்த்தையில் காலாகப்பாந்தவன், இதைநானுணர்ந்துசொன்னதாகக்கொள்ளாதை, திரிலோகத்தாரும் அறிந்ததேயன்றி வேறல்ல, அப்பா! எனது பேரனே! இந்தமொழியை நீ உட்கொண்டு யோசிப்பையாகில் இவ்வுலகத்திற்கு முதன்மையாகும் பெருமையை, நீயே பெறுவாய், இராஜசெல்வமே! விவேக சூனியனுகிய மாமன்சகுனியும் கட்டிக்கொண்டுவாவென்றால் வேரறவெட்டிக்கொண்டுவருந்தம்பி துச்சாதனனும் "என்னடா ஆண்டிதா தனுவென்றால் இதுவுமொரு கந்தாய" மென்பனதையொத்த அங்கதேசராஜனுகிய கன்னனும் இந்த மூவருஞ்சொல்லிய உறுதிமொழியைத் தேனும் பாலும்போலக்கேட்டு அதற்கிணங்க நடக்கின்றாயல்லது என்போலொத்தவர்கள் பொன்போல் நயமாகச்சொல்லிய ஞாயவசனங்களைத்தள்ளிப்புகைந்து எரிந்து அழியச்செய்யுங்கோபாக்கினியைத் தாபாக்கினியாகக்கொண்டுசகலராச்சியசம்பத்துமுதலிய பந்துமித்திரரைப்போக்கடித்துக் கொள்ளஏதுவாயிருக்கின்றாய், ஒருவர்கட்டிக்கொடுத்தசோறுங் கற்றுக்கொடுத்தசொல்லும் நிலைநிற்காதென்னு முலகமொழியைமறந்து சிறந்த உன்னால் இக்குருகுலத்துக்கு நேரிடும் பொல்லாங்கைக் குறித்து கடைசிமுடிவில் உரியோராகிய பெரியோர்களிருந்தும் தகும் தகாதெனச்சொல்லி அரசை நிறுத்தாமற்போனூர்களென்று யாவரும் எங்களை நொந்து ஒறுத்துக்கொள்ளுவார்களே அல்லது இந்த அற்பனை யாவரும் நினைத்து நோவமாட்டார்கள். பெருங்காற்றடிக்கும்போது உயர்ந்தமரத்தை அலைத்துவருத்தி முறிப்பதன்றி, தாழ்ந்தமரத்தைச்சாராது. அதுபோல் உலகத்திற்பிறக்கும்பழிச்சொல்லானது உயர்ந்த பெரியோர்களை அடுப்பதன்றி சிறியோர்களைத் தொடாமாட்டாது. ஆகையால் இன்று முதற்கொண்டு எங்களுடைய விவேகத்தினுல் விளையும் அரிய தருமவசனங்களைக்கேட்டு உயிர்வாழும்படியாக உறுதிகொண்டு நம்புவையாகில் இந்தப்பஞ்சாசத்கோடி பூமண்டலமுழுதும் சுவேதகூத்திர நீழலில் ஏகசக்ராதிபதியாகத் தம்பிமார்களுடன் நீயே அரசுசெலுத்தும்படியாய்க் கொடுக்கமாட்டுவோம். பரிசுத்தவான்களாகிய பாண்டவர்கள், பூர்வத்தில்

இராசசபையிற்கூறிய சபதங்களேயும் திருப்பிவிடுவோம், இதற்கு யாதொரு தடையுமில்லே. பால்யராசனே! தங்கள் குலத்திலும் 'உங்களிடத்திலும் எனக்கு மிகுந்த ஆசையிருப்பதினுல் சொல்லுேனன். இந்த வாக்கியங்களே உன்னுள்ளத்திற் சிந்திக்கக்கடவையென்று வீஷ்டுமாசாரியர் சொல்லினுர்.

அந்தவார்த்தைகளேக் கருணன்கேட்டுத் தலேசாய்த்து பக்கத்திலிருக்கும் பெரியோர்களுடைய சந்திரபிம்பமுகத்தை நோக்கி; ஐயா அறிஞரே! கேளுங் கள். இந்த உத்தமராகிய காங்கேயரென்னும் புத்திமான் எந்தவேளேயிலும் என்னேச் சுட்டிச்சுட்டித் திட்டித்திட்டிக் கோபிக்கின்ருர். ஐயோ நானென்ன செய்வேன், இராசனுள்ளம், இராசதந்திரம், காலம், சமயம், நோக்கம், வீரம், பெரும்புகழ், கீர்த்தி, திடதீரம், இவைகளெல்லாந்தெரிந்த உத்தமராகும் இவருக்குத் தெரியாததொன்றுமில்லே. இதழ்விரிந்த மலர்மாலேயணிந்த மார் பினராகிய மன்னவர்களின் மனோபீஷ்ட மெப்படியோ அப்படியே அநுசரித் துக்குழைந்து நடக்கும் என்னேப்போலொத்தவர்களுக்கு இராஜகாரியத்தைத் தடுக்கவும் நடப்பிக்கவும் என்னசுதந்தரமுண்டாயிருக்கும், இராஜசபையில் சமாசனமாக எங்களேயிருத்தி வீரபட்டமுள்ள தீரரென்று தன்னேப்போல் பாவித்து சவரட்சணேசெய்து ஆண்டுவரும் பட்சமுடைய பட்டாபிஷேகப் பிரபுக்களின் தாமரைமலர்போன்ற பாதங்களிற் பஞ்சுபட்டாலும், சேவகத் தொழில்செய்யுந் தீரர்களுடைய இருகண்களிலும் முள்பட்டதாகக் காலிற் பட்டது கண்ணிற்பட்டதென்னும் பழமொழியை அநுசரித்து நடவாமற் போவோமாகில் அவர்களேயடுத்து நெடுநாளாகச்சாப்பிட்ட அரிய செஞ்சோற் றுக்கடன் எவ்விதத்திற்றீரும்.நாங்கள் எந்தக்காலத்தில்நற்கதியையடைவோம். வணங்காமுடியோனுடைய மனத்தையறிந்து நாங்கள் கோபமாகப்பேசினுல் இராச்சியமும் செல்வமும் எங்களாலழிந்துபோகிறதாகச் சொல்லுகின்றீர். ஐயா வீஷ்டுமாசாரியரே! "சிந்திைலறுந்துபோகிறமூக்கு சேனோநாளேக்கிருக் கும்மோ சீமானே" ஆகிறதும் அழிகிறதும் எங்களாலிருக்கின்றதோ அத்தனே; இராசமுறைமைகளில் இது த்குந்தகாரியம் இது தகாதகாரியமென்று சொ ல்லி நடத்தவேண்டிய கடமை உம்மைப்போலொத்த நாதர்களுடையதா யிருக்க, இராஜர்களுடைய அன்பையுந் தயவையுஞ் சம்பாதிக்கும் எங்களேப் போன்ற சேவகவீரர்கள் எப்படிப்பட்ட தீரர்களேயுந் திரணமாகமதித்து எங் கள் திருஷ்டிக்கு திரிமூர்த்தியும் ஈடல்ல, அட்டகிரிகளேயுந் துட்டகஜங்களே யும் விட்டெறிந்து விளேயாடி வானத்தை வில்லாகவளேத்து மணலேக்கயிறு கத்திரித்து சமுத்திரத்தைச்சாப்பிட்டு ஏப்பமிடவும் வல்லாளரென்று சொல் லாலுணர்க்குங்கடமை எங்களுடையதாயிருக்க, பரியாரி தலேமாட்டிலழுவது போல் தனிவழிக்குப்பிடித்தகொள்ளி தலேமாட்டுக்கொள்ளியாய்ச் சமைத்த தற்கீடாய்த் தங்களேப்போல் நாங்களும் இளேத்துச்சொல்லுவது தருமமா! ஐயா! இராஜவிபகாரங்களுஞ் சேவகர்செய்கைகளுந்தெரிந்த பெரியோராகிய தேவரீர் எங்களேவெறுத்துச் சொல்லவும் ஞாயமுண்டோ?• சாதுத்துணிந்த வர்க்கு சமுத்திரத்தில் மூழ்கிப்போய்விடுவோமென்னுந் 'துன்பமுந்தோன்று மோ? தாஷ்டீகராகிய வீஷ்டுமாசாரியரே! புண்ணிற்கோலிடுந் தன்மைபோல்

எங்களை விடவிடப்பேசவேண்டாமென்று உண்மையாகிய கட்டுரைகளை வெளிவிட்டுக் கன்னன் சொல்லிநின்றான்.

உடனே பரிசுத்த மனத்திணையுடைய வீஷ்மாசாரியர் பிரகாசமற்ற கண்களைப்பெற்ற திரிதராட்டிரனுடைய முகத்தைநோக்கி அப்பா! திரிதராட்டிரனே கேட்டையா, எப்படிப்பட்ட சத்துருக்களென்றாலும் ஒரே கணையினால், உடல்வேறு தலைவேறாகத்துண்டித்து விடுவேனென்று இந்தக்கன்னன் தன்னைத்தானே மெச்சிக்கொண்டு தானேபுகழ்ந்து வாய்வளஞ் சொல்லுகின்றதைக் கேட்டிருக்கின்றோமல்லாமல் கைவளத்தினால் யுத்தஞ்செய்து வெற்றியைப் பெறக்கண்டறிந்த தில்லையே. அதற்குச் சாக்ஷியாக இப்போது சொல்லிய வார்த்தையை யாவருங் கேட்டீர்களா, சபைநிறைந்த தன்னியர்களே! துருபதேயமஹாராஜன் சுயவரம் நாட்டிவைத்த பாஞ்சாலதேசத்தில் திரௌபதாதேவியின் விவாகத்திற்குப் பற்பலதேசத் தரசர்களுஞ்சென்று நெருங்கியிருந்தகாலையில் திருஷ்டத்துய்மனால் நேமித்த வில்லைவளைத்து மச்சேந்திரத்தை யறுத்து பிரகாசம்பெற்ற துரியோதனமஹாராஜனுக்கு வெற்றியும் பெருமையுங் கொடுத்தான். அன்றியும் சித்திரசேனனென்னுங்கந்தருவன் துரியோதனன்முதலிய யாவரையுங் கட்டிக்கொண்டு போம்போது தான்போ யெதிர்த்து அனேக யுத்தங்களைச்செய்து அரவக்கொடியோனாகிய அரசனைமீட்டு வந்தான். பின்னையும் புயவலிமையுடைய அருச்சுனன்பேடிரூபத்துடன் இணையில்லாமல்வளைந்த விஜயகாண்டீபத்தைத் தாங்கி வேகங்கொண்ட குதிரைபூட்டிய் இரதத்தைக்கைபழகாத சிறுபிள்ளை உத்தரகுமாரன்செலுத்த ஆரோகணித்து ஒருதேர் ஒரு வில் தானொருவனெனவந்த விசயன் அநேகங்கோடி இரதமுதலிய அதிரதர் மகாரதர் சமரதர்களைவீழ்த்தி இரதகஜதுரகபதாதியர் பின்னிட்டோட முன்னிட்டோடியொளித்த இந்தக்கன்னனையும் பின்னமுறத்துளைத்துப் பசுக்கூட்டங்களைத் திருப்பிக்கொண்டு ஸ்திரமாகவிடுத்த மோகனாஸ்திரத்தால் மயங்கச்செய்து சிரவஸ்திரங்களையுங் கைக்கொண்டு அஸ்தினாபுரம்வரைக்கும் புறமுதுகிட்டோட அடித்துச் சயங்கொண்டகாலத்தில் அந்த அருச்சுனனை வெற்றிகொண்டு அவன் கைக்கொண்ட ஆவினங்களையு மீட்டுக்கொடுத்து வணங்காமுடியையுடைய மன்னவனுக்கு வலிமையும் புகழும்வரச்செய்தான். இந்தவள்ளலாகிய கன்னன் ஓ! ஓ! மன்னவனே! அடக்கமுடையவனாகவிருந்து யுத்தகாலம் நேரிடுகிறவரையிலும் காத்திருக்கின்ற தீரசூரசேவகத்திறமுடைய வீராதிவீரரரிகியபேர்கள் சத்துருக்கள்மேல் படையெடுத்துச் செல்வதும் அவர்களை வெல்வதும் உலகமெல்லாங்கொண்டாடப் புகழ்பெற்று வருவதும் இயற்கையே இத்தன்மையவாகிய திடவீரத்தில் வல்லவரானவர்கள் தங்கள் திறத்தைவாக்கினால் சொல்லமாட்டார்கள். அப்படி சொல்லுவார்களாகில் உடனே அவர்கள் வில் திறமைமுதலிய சாமர்த்தியங்களும் அழிந்துபோம் 'அடக்க மமரருளுய்க்குமடங்காமை யாரிருளுய்த்துவிடும்' என்னும் நீதிக்கிணங்க, இதன்றியும் தான்பிறந்த வருஷமும், தனக்குக்கிடைத்திருக்குஞ் சம்பத்தும், குற்றமுமில்லாத யோககாலமும், புசிக்கும் ஔஷதமும், குருவினுபதேசமும், நேரிட்ட அவமானமும், தான்செய்ததருமமும், ஸ்ரீபோகமும்,

கற்றகல்வியும், திடவீரசாமார்த்தியமும், மானமும் வயதின்றொகையும் இவைகளையெல்லாம் ஒருவரறியும்படியாகச் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னார்களானால் அப்போதேஅவைகளெல்லாம் அழிந்துபோம். மேலும் வெல்லத்திறமில்லாத மூடர்கள் படைமுகத்தில் வெல்வேனென்று வாக்கில்வந்தவண்ணம் பிதற்றுவார்கள் "குரைக்குநாய் கடிக்கவறியாது" "என்னும் பழமொழி போலும்" "வற்றியவோலை கலகலக்குமெஞ்ஞான்றும் பச்சோலைக் கில்லை யொலி" "வெங்கலத்தினோசைமிகுமே விரிபசும் பொன்னெண்கலத்தி னுண்டோவொலி" என்பதனால் காய்ந்த ஓலை கலகலவென்று சப்திக்கும், பச்சையோலைசப்திக்காது வெண்கலத்திலடித்தால் ஓசையுண்டாம், பொன்கலத்திலடித்தால் ஓசையுண்டாகாது, நிறைகுடம்நீர் ததும்பாது குறைகுடந்ததும்பும் என்பதுபோலும்ஜயம்பெறுவதற்கு முன்னமே சயிப்பேனென்று சொல்லும் பிரதாபங்கள் மாசடையுமென்று மானமேற்கொண்ட மேலோர் சொல்லமாட்டார்கள். இப்படியாக வாசாகயிங்கிரியஞ்சொல்லிக்கொண்டு காலங்கழிக்குங் கன்னனுடைய ஆதரவினால், சுவேதவாம்புரவிபூட்டியதேரேறிவரும் ஆலகால விஷத்தையொத்த அழகிய அருச்சுனனைமதியாமல் அதிகசொற்பத்தில்வென்று விடலாமென்று சொப்பனம்போலெண்ணி இந்தக்குற்றமாகிய துன்பங்களியாவற்றையும் விளைவித்துக்கொண்டான் துரியோதனன். அவனப்படிக்கு எண்ணங்கொண்டாலும் பொய்யில்லாத உள்ளமும் பொறுமையும் நற்குணமும் பரிசுத்தமும் நயவசனமுமுடையஜனவர்களைக்கோபமும்தூர்க்குணமும்அசுத்தமும் அசத்தியமும் கடூரவசனமும் குற்றமும்பொருந்திய அயோக்கியராகுந் துரியோதனாதியர்களை ஜயிப்பவர்கள். யாவருங் கற்றுணர்ந்த சாஸ்திரமுதலிய நீதிநெறியை யுத்தியினால் தெரிந்துகொண்ட புத்திமானாகிய திரிதராட்டிரனென்னும் என்புத்திரனே உனக்குச் சம்மதமாகத்தோன்றிய நாட்டைப் பாண்டவர்களுக்குக் கொடுத்து அவர்கள் மனமகிழ்ந்து அரசுபுரியும் படியாகச்செய்து, மற்ற இராச்சியமுழுமையும் அழகிய வெள்ளைக்குடை நிழற்படுத்தி உனது புத்திரர்களுடன் வாழ்வைப்பெறுதல் எனது மனத்தினுக்குமிகுந்த துணிவாயிருக்கின்றது. இதற்கு யாதொருகுறைவுமில்லை, நிறைந்த மனதாகச்சொன்னேனென்று சத்தியவிரதபிரதிக்ஞையை நித்தியமாக உடைய வீஷ்மாசாரியர் சொல்லினர். அதை பக்கத்திலிருந்த யாவரும் தருந்த தருமமும் இராஜமுறைமையும் சாற்றினார் வீஷ்மரென்று மகிழ்ந்து தனுர்வேதபண்டிதராகிய துரோணாசாரியர் திரிதராட்டிரனைநோக்கி, அரசனே! பரதமகாராசனுடைய மரபென்னும் பிரயோசனத்தை இன்று நிலைநிறுத்தினான் விரதபூஷணனாகிய காங்கேயன். ஆகையால் இந்தவசனம் மேன்மைக்கு மேன்மையானது, இதைவிட வேறுநன்மையென்பதில்லை, குலாவியிருக்குங்கூட்டமாகிய பந்துக்களுடன் வேற்றுமையில்லாமற்பொருந்தி பிறர்பழிக்க இடங்கொடாமல்வாழ்கின்ற வாழ்வைப்போல் இதுவரையிலும் நான் கண்ணாற்கண்டதுமில்லை கேட்டதுமில்லை. இனி காணப்போவதுமில்லை. வீஷ்மாசாரியர் தகுதியாகிய காரியங்களை யோசித்துச்சொன்னார். இன்றுமுதலாக உன்னுடைய குலமுந்தழைக்கும், புத்ரமித்ரர்முதலிய உலகத்துயிரும் பிழைக்கும், உனதுசெல்வ

முஞ்செழிக்கும் ஐயா! உன்னுடைய வழிபடுகடவுள்சொன்ன வாக்கியத்தைப் போல் இந்த மஹாநுபாவர்சொல்லிய தருமவசனத்தை வழித்துணையாகக் கைபற்றுவையாகில் நன்மையென்பவைகள் யாவையும் பெறுவாய்; இதன்றியும் அரசராகப்பிறந்தவர்கள் சத்துருக்களிடத்தில் தங்களுக்குள்ள வீரியங்களையுஞ்சொல்லி இல்லாத சௌரியங்களையும் இரவலாகக்கொண்டு எடுத்துப் பேசவேண்டும். சகோதரர்கள்முதலிய உள்ளிட்டாரிடத்தில் காரியங்களாகிய தொழில்களைக் குறித்துக் கலந்துபேசவேண்டும். குடும்பத்திற்பிறந்த பெரியோர்களாவது ஆசானாவது மந்திரியாவது அன்புநிறைந்த தோழனாவது நடுவுநிலைமையாகப் பகுத்துச்சொல்லும் நீதிவாக்கியங்களைத் தருமதேவதை சொல்லியதைச் சத்தியவாக்கியமென்று தனது விவேகத்தினால் ஆராய்ச்சிசெய்து அவ்வழி நடக்கவேண்டும். இவைகளைச் செவ்வையாகவுன்னி உன்புத்திரரை நல்லவழியில் நடத்துவையாகில் நுட்பவறிவினையுடைய அறிஞர்கள் கொண்டாடும்படியாக வாழ்விற்சிறந்து உன்னுடைய குலநலமானது தாழ்விலாதோங்கும் அரசனே என்று துரோணாசாரியர் இனிய வசனங்களினால் பற்பலவாகச்சொல்லவும், இவ்விதமாகச்சொல்லிய பெரியோர்களை வணங்கிப் பணிந்து அவர்களுடன்கலந்து ஆலோசிக்காமல் மேலோருரைத்தவாக்கியங்களெல்லாம் ஆலகாலவிஷம்போல் கருதினவனாய் மனம்வருந்தி அவர்கள்பக்ஷத்தில் வைத்திருந்த குவிந்த தாமரைமலர்போன்ற பிரகாசம்பொருந்திய முகத்தைச் சஞ்சயனுக்கு நேராகத்திருப்பிக்கொண்டு ஓ! ஓ! சஞ்சயனே, சொல்லுதற்கரிதாகிய குருகுலத்திற்பிறந்த துரியோதனன் முதலாகிய மன்னவர் யாவரும் பகைமேற்கொண்டு எதிர்த்து போர்செய்யப்புகும் யுத்தகளத்தில், கானகந்திரிந்து கால்கைகளோய்ந்து அன்னபானாதிகளுக்கு அவதிப்பட்டுவந்த பாண்டவர்கள் உச்சாகத்துடன் எதிர்த்து யுத்தஞ்செய்வதற்கு வல்லமையுண்டோ? இளைத்த இவர்களுக்குச்சகாயம் எவர்வருவார்கள், ஆருடைய துணையைநம்பி அமர்செய்யவருவார்கள். இவர்களுக்கு நேரிட்டிருக்கும் பலாபலங்களைச்சொல்லும் சஞ்சயனே என்று திரிதராட்டிரன் கேட்கவும்; அந்த வார்த்தைகளைக்கேட்டு சபையில் நிறைந்திருந்த சத்தியமுனிவர்களும், தேசதேசத்தரசர்களும், விசனமடைந்து இராசனுடைய ஊழ்வினைப்பயனுக்குத் தகுந்த புத்தியிதுவென்று தங்கள் பிராணன்மேல் வைத்திருந்த ஆசையை அறவிடுத்து, இனிமடியுங்காலம் நேரிட்டதென்று மனம் வருந்தியிருந்தார்கள். அந்தச்சமயத்தில் திரிகாலமுந்தெரிந்த சஞ்சயன்மெலிந்துவருந்தி ஐயையோ! சந்திரகுலத்திற்பிறந்த, நமது அரசனுடைய தெளிவாகிய விவேகத்திற்கு என்னதாழ்ச்சி. வீஷ்மாசாரியர் துரோணாசாரியர் முதலிய பெரியோர்களும் சொல்லிய தருமநீதிகளை உன்னி உணராமற்போயினான். இதென்னகாலம்? ஏதேது? யாவரும் பிழைப்பதற்கு ஏதுவே யில்லையென்று பெருமூச்சுவிட்டு "விதையொன்றுபோட செடியொன்று முளைக்குமா? வீடுபோபோவெனக் காடுவாவாவென" இருக்கும் முதிர்ந்த வயதினையுடைய தகப்பன் இவ்வளவு அறிவினையுடையவனானால் இவன் பெற்றபிள்ளைகளைப்பழித்து மனம்வருந்தி நோவது நமக்குப்பெருமையன்று. 'தந்தை யெவ்வழியோ அவ்வழி புதல்வர்'

"தவத்தினளவாகும் தான்பெற்றசெல்வம்" என்னும் பழமொழிபோல் இவனுடைய கெடுநினைப்பும் பாவங்களுஞ்சேர்ந்து மைந்தரென்னு முருவாகிவந்திருக்கின்றார்கள். இவைகளுக்கெல்லாம் மூலமானவன் இந்தக்குருடனே என்று ஸ்திரமாகச் சிந்தையிற்கொண்டு சபையிலுள்ள யாவரும் ஆச்சரியப்படும்படித் திரிதராட்டிரனைநோக்கி, சஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

குடும்பந் துலங்கச்செய்யுங்கோவே! தெய்வசகாயம்பெற்ற பாண்டவர்களுக்கு வேறுபலமும்வேண்டுமோ? அவர்களும் ஒருவரைப் படைத்துணை விரும்புவார்களோ? அதேனென்றால்; புயவலிமைக்கு இணையில்லாமல் தென்றிசை யமனையும், குலகிரியையும், பந்துபோலெடுத்தெறிந்து விளையாடி மடிக்கும் இடும்பாசுரனை, பகாசுரனை, கிம்மீராசுரனை, சடாசுரனை, சராசந்தனை, இயக்கர்நடுங்கும் மணிமானை, கீசகனை, இமைப்போதினுக்குள் இடித்துமடித்துத் தேய்த்துக்கிழித்து மாய்த்து அழித்து ஜயங்கொண்ட வீரகண்டையொலிக்குங் காலினையுடைய கதாயுதனாகும் வீமசேனனிருக்க, வெற்றியையுடைய பாண்டவர்களுக்கு வேறு துணையும் வேண்டுமோசொல்லும் ஐயனே! இஃதன்றியும்; உலகமெல்லாம்வருந்த காண்டாவனமெரிக்கும் மாட்சிமையுடைய இராசவருக்கங்களைவேரறுத்தும் உத்தரகுருகண்டத்தோர் யாவரையும்வென்று உம்பர்மகிழச் செம்பொன்முதலிய திறைகொண்டும் பின் பலம்வேண்டாத வீரப்பிரதாபத்தையும் அனுமக்கொடியையும் அம்பொன்மக மேருவில்நாட்டி, நின்மல நிஷ்கள நிராமயமாகிய சங்கரசுயம்புவின் தரிசனங் கண்டு பாசுபதாஸ்திரம்பெற்று, காலகேயநிவாதகவசர்கள் மாய்ந்திடக்காய்ந்து வீரவாகைவேய்ந்து இந்திரன்முதலிய தேவர்களுக்குச் சுகமீய்ந்து தேவாமிர்தம் புசித்துக்களித்து இணையிலாக்கணைகள்பெற்ற அசகாயசூரனாகிய விசயனிருக்கப் பாண்டவர்களுக்குப் பலமுண்டோவென்று நீர் நினைத்துக்கேட்டது எனக்கும்வெறுப்பாகவிருக்கின்றது. பார்த்திபனே! இன்னமுங்கேளும்; பூதகியின் உயிரை முலைப்பாலுடன் பருகியும் தேவேந்திரன் வஞ்சகத்தினால் வருஷிக்கச்செய்த கல்மாரியைக் கோவர்த்தனகிரியென்னுங் குடையினாற் றடுத்தும் ஆயர்முதலிய ஆவினங்களைக்காத்தும், மாமனாகிய கம்சனைக்கொன்றும் இந்திரப்பிரஸ்தத்தில் நடந்த இராசசூயயாகத்தில் சிசுபாலனைச் சிரச்சேதஞ்செய்தும் பஞ்சவர் சகாயனென்று அஞ்சனமேனியையுடைய கண்ணனிருப்பது திண்ணமாய்த்தெரிந்திருந்தும் ஐவருடைய வல்லபங்களையும் விசாரிக்கும் புத்திமான்களுமுண்டோ?' மேலும், "குணமென்னுங் குன்றேறி நின்றார்வெகுளி கணமேயுங்காத்தலரிது" குணக்குன்றேறி யிருக்குங் கோபமில்லாத சாந்தனானவனுக்கு ஒருவேளை கோபம்வருமாகில் ஒரு மாத்திரைப்போதுஞ் சகிப்பதரிது என்பதுபோல், சத்தியமும் சாந்தமும் பொறுமையும் தருமமும் வழுவாத விரதசீல மெய்ஞ்ஞான நீதிபரனாகிய தருமநந்தனன்கோபித்து வில்வளைத்துப் பகைவர்மேலெதிர்க்குங்காலத்தில், திரிபுராந்தகனையும் வடவாமுகாக்கினியையும் ஒப்பாகிற்பான். நவரத்தினமழுத்திய மணிமுடிதரித்த அரசே! மற்றதம்பிமார்களுக்கு ஈடாயெதிர்த்து நேர் நின்றுபோர்செய்பவர்கள் யாரிருக்கின்றார்கள். இவர்களெல்லா மிருக்கட்டும்.

இந்தச் சந்திரவமிசத்திற் பரம்பரையாகப்பிறந்து அந்நாண்முதலின்னாள்வரையில் நீதிசெலுத்திவந்த வேந்தர்களின் தீரவீரங்களிலும் தன்தந்தையாகிய விசயபராக்கிரமனுடைய சேவகத்திரங்களிலும் நூறுபங்கு உயர்ந்த திடகாத்திர ஜயசிங்கக்குருளையாகிய அபிமன்னுவென்னும் அருச்சுனகுமாரன் உன்னுடைய புத்ரமித்ரகளத்திரமுதலிய பதினொரு அக்குரோணிசேனைகளாகிய துரும்புக்கு சூறவளியேபோற்றோன்றிச் சுழற்றிமடக்கியடித்து முடிக்கத்தக்கவனென்று சத்தியமாக உன்சித்தத்திலுணர்வாய். இதன்றியும், நாகாதிபன்மைந்தனாகிய அருச்சுனனுக்கும், நாககன்னிகையாகிய உலூபிக்கும்பிறந்து சிறந்த திறவானாகிய அரவானென்பவன் போர்முகத்தில் நேர்புகுவானாகில் அவனுடனெதிர்த்து அமர்செய மதிக்கும் அடல்வீரர்கள், சுவர்க்கமத்திய பாதலத்திலுமில்லை. மேலும், எல்லாத்திறங்களிலும் எதிரில்லாத வீமசேனன் இடிம்பியையமணந்து பெற்ற திணிந்ததோள்களையுடைய காளை, பாற்கடல் கலங்கக்கடைந்த மத்தாகிய மந்தரகிரியையொத்த கடோற்கஜன் கீழ்த்திசையிலுதித்தசிவந்த சூரியனைக் கனியெனத்தாவிக்கவ்விய அனுமனை ஒப்பாகச்சொன்னால் ஒருவேளையொக்கும், மாயாவித்திரமுடைய வல்லபன் வாய்த்திருக்கின்றான். அல்லாமலும், அக்கினியிற்பிறந்த பாஞ்சாலிபெற்ற இளம்பஞ்சபாண்டவர், பிரிதிவிந்தன், சுருதிசன்மன், சுதசேனன், சதானீகன், சுதகீர்த்திஎன்னும்பிள்ளைகள் தங்கள்தகப்பன்மார்களுடையபலாபலங்களிலும் பதின்மடங்குமேலாகிய கோலாகலப்பிரசுத்தராயிருக்கின்றனர், இன்னமுஞ்சொல்லுகின்றேன் இறைமையே கேளும், ஸ்ரீகண்ணபிரானுடைய தம்பி சாத்தகியென்னும் சாமர்த்தியன் விஜயனிடத்தில் வில்வித்தை கற்றுக்கொண்ட வீராதிவீரனும் போஜகுலத்தலைவரும் மத்ஸ்யதேச மித்திருந்துணையாவார்கள். அவரோடெதிர்த்து அமர்செய்ய நினைப்பவர்கள் யாவரோ அறியேன். அரசே யாகத்திற்பிறந்த திருஷ்டத்யும்மன், துரோணாசாரியருக்கு வைரி, எதிர்த்துப்போர்செய்யும் சத்துருக்களுக்கு யமன், பாண்டவர்களுக்குத் தோள்வலித்துணையாகிய மைத்துனன், விற்றிறமையைக் கற்றுணர்ந்த வேந்தர்களிலும் தேர்ந்த விவேகமுள்ள சத்தியகுணமுடையவனென்னும் துருபதேயனும், மித்திரர்களுடன் புத்திரர்களாகிய சிகண்டியும், உத்தமமோஜாவும், உதாரமனும், மற்றுமுள்ளோர்களும் தருமனுக்குப்படைத் துணையானார்கள். விராடராஜனும், சதானிகன், சங்கன், சுவேதன், வராககேது, உத்தரன் முதலிய மித்திரவருக்கத்துடன் புயபல பராக்கிரமத்திற்குத் தானொருவனன்றி வேறில்லையென் றெதிர்த்து யுத்தஞ்செய்து பாண்டவர்களுக்கு வெற்றியைக்கொடுக்கச் சம்பந்தஞ்செய்து துணையானார்கள். பின்னும், பற்பல மகுடவேந்தரும் சிற்சிலகுறுநிலமன்னரும், சேதிபதேசாதிபதி சிசுபாலனுடைய குமாரன் திருஷ்டகேதுவும், சராசந்தனுடைய குலபுத்திரனாகிய சகாதேவனும், சேர்மராஜனும், பாண்டியனும், சோரராஜனும், இன்னுமநேக மன்னர்மன்னரும் படைத்துணைநெருங்கி யிருக்கின்றார்கள். சுவேதக்குடையினையுடைய தோன்றலே! இத்தன்மையவாகப் படைத்துணைநெருங்கியிருக்கும் அரசர்களும், யானைகளும், குதிரைகளும், தேர்களும், பதாதிகளும்,

ஏழக்குரோணியென்றும்; கணக்கர், காரியஸ்தர், படைவீரர், சேனைத் தலைவர் முதலிய இவர்கள் கோடாகோடி பேர்களென்றுந் தொகைசொல்லக்கேட்டு மகிழ்ந்து சத்தியத்தை நித்தியமென்று நம்பிய பாண்டுபுத்திரர்கள் உபலாவியத்தில் வீற்றிருக்கின்றார்கள். மேல் நடக்கவேண்டிய காரியங்களைக் கட்டளையிடுங்காவலனேயென்று அஞ்சலியஸ்தனாகச் சஞ்சிதவினையற்ற சஞ்சயன் சொல்ல, அதைக்கேட்ட கட்புலனில்லாத காந்தாரி கொழுநன் நெடுமூச்செறிந்து வியர்த்துவெளிப்பட்டுப்போகின்ற பிராணனைவிடாமலிருத்தி இராஜசபையிலிருக்கும் எல்லோரையும்பார்த்து கூவிச்சொல்லுகின்றான். ஓ! ஓ! அரசர்களே! கல்வியில் தேர்ந்த வல்லவனாகிய சஞ்சயன் இப்போது சொல்லிக்கொண்டுவந்த பற்பல படைத்துணைவர்களின் பலாபலங்களெல்லாம் ஒருகாலத்தில் இளைத்துப்போமென்று நினைத்தாலும் நினைக்கலாம், அப்பப்பா? கோபாக்கினிவிளைந்து தகிக்குங் கண்களையுடைய வீமசேனனென்பவன் இருப்புக்கட்டுகளார்ந்த நீண்ட கதையைக்கைக்கொண்டு போர்க்களம்புகுவானாகில் மண்ணைக்கவ்வி மடிவார்களன்றி மா... திரும்பிவருவாருமுண்டோ? வாகைமாலையணிந்த மன்னவர்களே அந்தவீ...ப்பார்க்கக்கண்ணில்லாதவெனக்கு அவனைப்பார்த்தவர்கள் பயந்துபயந்துசொன்னார்கள். அம்மம்மா? ஆகாயபரியந்தமுயர்ந்துதிணிந்த வச்சிரப்பொருப்புக்கிணையாகிய உச்சிதப்புயமென்றும், திகுதிகுவென்றெரிந்து புகையும் நெருப்புக்கண்களென்றும் போர்மன்னரைப் பொடிப்பொடியாகப்போக்கி நமனுக்குச் சமானமாக நாசஞ்செய்யத் தக்கவனென்றும் அவனுடனெதிர்த்துப் போர்புரிபவர்கள் எவருமொன்றுஞ் சொல்லக் கேட்டிருக்கும் என்மனந்துடிக்கின்றதே, நுட்பமாக வளர்த்த புட்பம் போன்ற தோள்களையுடைய என்மக்கள் வீமனுடனெதிர்த்துப் போர்விளைக்கமாட்டார்களே! மேலும் நாகப்பாம்பின் விஷம்போல வேகந்தாங்கி வெகுநாளாகவைரங்கொண்டிருக்கும் வீமசேனன் வெகுண்டு போர்செய்யச் சீறியெழுந்து வருவானாகில் கொழுந்துபோன்ற என்குழந்தைகள்நூற்றையும் நீறாக்கிவிடுவானே, அவனை நினைத்துப்பேசினால் எனக்கு வயிறுகலக்குதே; அப்பா மைந்தர்களே! அவனுடன் பகைத்து யுத்தஞ்செய்ய ஆர்நினைப்பார்கள் விளக்கைப்பிடித்துக் கிணற்றில்விழும் விவேகிகளாயிருக்கின்றீர்களே அவனையென்னுள்ளத்தில் உன்னும்போது என்னுடல்நடுங்குதே, என்னீரல் கருகுதே, என்னிதயம்வேகின்றதே, என்னுவுப்புலருகின்றதே, ஐயையோ பிள்ளைகளே! பகையென்பதைமறந்து பிழைக்கும்விதத்தைத் தேறித்தெளிந்து சொல்லுங்களப்பா! தழைக்கும் புத்திமான்கள் சொல்லியநீதியை உட்கொள்ளுங்களப்பா! தருமத்தைக்கெடுக்கும் பாபத்தைத் தொடுக்காதீர்கள். அருமையாகிய ஆசாரியர், பெரியோர், அன்னை, தந்தையர் புத்தியை விடுக்காதீர்கள். மைந்தர்களேயென்று புத்திரவாஞ்சையினால் எத்தனையோவிதத்திற் சொன்னான். வெற்றியையுடைய திரிதராட்டிரன் இத்தன்மையவாக உரைத்த புத்திமதிகளைச் சற்றுநேரமாகிலும் வைத்திராமல் சுபுத்திரனாகிய துரியோதனன் தந்தையைநோக்கி சிந்தைவருந்தி மெத்தவுங்கனன்று மனமடியாமலிறுமாந்து இராஜசபையில் நிறைந்திருக்கும் எல்லோரும் திடுக்கிடும்படியாகச் சொல்லுகின்றான்.

ஓ! ஓ! மன்னவர்களே அண்டனையொத்த பாண்டவர்களின் வல்லபங்களையும் அவர்களுக்குப் படைத்துணைவந்த கீர்த்தியையுடைய மன்னவர்கள் பலத்தையும் இந்தச்சஞ்சயன் சொல்லக்கேட்டு தருமன்முதலியவர்களைச் சத்தியமுள்ளபிரபலரென்று தங்களுக்குத் தாங்களே கொண்டாடிச் சந்தோஷங் கொண்டீர்களல்லாமல், எங்களுடைய சாமர்த்தியமும் எந்திர மந்திர தந்திர தபோபலசித்தியையும் எள்ளத்தனையு மெண்ணாமற்போனீர்கள். கள்ளத்தன மனமுடையவரானீர்கள் திடவீரசிங்கம்போன்றுபடைவீரராகஎனக்குத்துணை வந்திருக்குந் தீரர்களுடைய திடத்தையுஞ் சிந்திக்காதவ ரானீர்கள். ஆயினும் நான்சொல்லுகிறேன்கேளுங்கள். சுவர்க்கமர்த்தியபாதலங்கொண்டாடாநின்ற பிரதாபசாலியாகிய பரசுராமனைப்போலொத்தவர் புறமுதுகிட்டோடும்படியாகப் போர்புரிந்து திண்ணிய சீர்த்தியாகிய வெற்றியைக்கொண்ட புண்ணியனும் எங்கள் பாட்டனார் வீஷ்மாசாரியர் புராந்தகனையும் நராந்தகனையு மொத்துப் போர்முகத்தில் வில்வளைத்து நேர்புகுந்தாராகில் அவருக்கெதிரில் ஈடாக எதிர்த்து நிற்பவர்கள் ஈரேழுலகத்தினுமில்லை. அப்படிப்பட்ட வீரகேசரிக் கெதிராகக் காடுமலையுங் கலங்கித்திரிந்து இளைத்து வருந்தியபாண்டவர்களோ எதிர்த்து நிற்கத்தக்கவர்கள் "சோற்றிலிருக்குங் கல்லெடுக்கமாட்டாதவன், மேகவண்ணக் கல்லெடுப்பானென்பதெவ்வண்ணம்" அன்றியும் அழகிய தநுர்வேதத்தினுக்கும் புயவலிமைக்கும் ஒருவரு நிகரில்லாத சதுர்வேத சம்பன்னனாகிய துரோணாசாரியர் யுத்தஞ்செய்யத்தொடங்கும் போர்முனையினிடத்தில் சர்வசங்காரகத்தனாகிய வுருத்திரனும் யமனும் எட்டிப்பார்ப்ப தருமையென்றால் ஒருதிரௌபதையின் காமத்திலகப்பட்டுழலுகின்ற ஐவர்களோ என்னைவென்று வெற்றியடைகின்றவர்கள். வேந்தர்களே! இயக்கர்முதலிய விண்டலத்தேவரும் இராசர்கள்முதலிய மண்டலத்தியாவரும் எல்லாவிதங்களிலும் வல்லாரிவரென்று புகழும்படியாகத் திகழும் கிருபாசாரியர் பகலிற் பிரகாசிக்குஞ் சூரியனைப்போலும் இரவிற் பிரகாசிக்குஞ் சந்திரனைப்போலும் விளங்கி உயர்ந்த தோள்கள் பாரிக்கவும் ஒப்பில்லாச் சங்கம்பூரிக்கவும் விற்றொடுத்து யுத்தகளத்திலடுத்து சத்துருக்களைப்படுத்து என்பகையைக்கெடுத்து வெற்றிக்கொடி பிடிக்கவரும் வல்லமைத்திறத்தையும் நீங்கள் மதிக்கவில்லையே, மேலும் பிறையணியுஞ் சடைமுடியுங் கொண்டபிறப்பிலியாகும் பெம்மானுடைய தாநுவித்தாகியும் சிலைத்திறமும் கலைத்திறமும் சிரஞ்சீவியும்பெற்ற அசுவத்தாமாவானவர் கைக்கொண்டிருக்கும் வில்லுக்கொப்பாகிய வில்லையுடைய காவலர்கள் மூவுலகத்தினுமில்லையே. சொல்லுங்கள், அரசர்களே, அறிவு வளர்ந்தோங்கி ஞானம்விளையுமுள்ளமும் வேறொருவ ரிணையில்லாவீரமும் விரதவைராக்கியமுங்கொண்ட பரசுராமரிடத்தில் வில்வித்தைகளைப் பூரணமாகக்கற்றுயர்ந்த வள்ளலானவனும் அருச்சுனனை விற்பரிக்ஷைகாலத்தில் அவமானப்படுத்தி அப்போது நேரிட்ட பகையினால்தாமரைமலர்போன்றமுகநிறைந்ததலையை அறுத்து அரங்கு பூசைசெய்வேனென்று சகல வரசர்களும் நடுங்கச் சப்தங்கூறினவனும், காண்டாவனத்திலிருந்து அருச்சுனனுடைய கணையினாற் கலங்கிக்கரிந்து எரிந்துவருந்தி அபயமெனவந்த நாகாஸ்திரத்தை

ஆதரித்தவனும் தோளாண்மையிலோங்கிப்பதினொன்கு உலகத்திலும் பாண வருஷங்களைப் பொழியவல்லவனுமாகிய என் அண்ணன் கன்னமஹாராஜன் என்னிடத்திலிருக்கப் பகைவரால் நேரிடும் பயமென்பதும் எட்டிப்பார்க்குமோ, கிட்டிவிழிதிறந்து நோக்குமோ சொல்லுங்கள். ஆ! ஆ! அரசர்களே சத்துருக்களின் தேகமாகிய வயலை தன்கரத்திற் பிடித்த சிலையிற்றொடுக்குங் கணைகளாகிய கொழுவினாலுழுது மாமிசச்சேறுபடுத்த இரத்தநீர்பாய்ச்சி யுத்தவிதைவிதைத்து பூர்வம் தன்மனத்தில் விளைந்திருக்கும் களைகளையகற்றி கீர்த்திப்பயிர்தழையச்செய்து அவர்களுடையபிராணனை மேல்வாரமாக யமனுக்குக்கொடுத்து வெற்றியைக் குடிவாரமாகக் கைக்கொண்டு என்கைக்குக் கொடுக்கும் என்மைத்துனன் சிந்துதேசாதிபதியும் சப்ததீவிலும் ஒப்பற்ற வெப்பமாகிய சுப்ரதீபத்துக்கொப்பாகிய பகதத்தனும், ஐவருக்கு மிருத்தெனும்படி சுகமுற்று என்னிடத்திலிருக்கின்றார்கள். இவர்களிருவரும் போர்புரிய முனைந்தால் இந்த அண்டமும் அயன்சொந்த அண்டமும் பகிரண்டபேரண்டமும் நமக்குஇது ஒருகண்டமென்று பாழாகிப்புழுதியாய்ப் போய்விடுமே, மேலும் போர்புரிவதற்கும தேர்விடுவதற்குங்கலைவலிமைக்கும் சிலைவலிமைக்கும் கண்மணியனையான் விண்மணிக்கிணையாம்மத்திரதேசாதிபதியாகிய என்மித்திரன் கூளிபோற்கூடியபகைவரை யாளிபோற்சீறியடித்துக் கண்ணை இமைகாக்குந் தன்மைபோல் என்னைக்காக்க வந்திருக்கின்றான். இந்திரனுக் கொப்பாகிய சோமதத்தனும் பூரிசிரவனும் காந்தாரராஜனுங்கிருதவன்மன் கிருதவீரியன்முதலிய யாதவகுலத்தலைவரும் எனக்குப்படைத்துணையாகிச் சூழ்ந்துகொண்டிருக்கின்றார்கள். அதன்றியும் வீமார்ச்சுனர் முதலியபேர்களை வில்யுத்தத்தினாலும் மல்யுத்தத்தினாலும் வெல்லுகிறோமென்றுங் கொல்லுகிறோமென்றும் விற்பிடித்து வெற்றிமாலைதரித்து சங்காரருத்திரனைப் போல் ஓங்காரமிட்டு அறுபதினாயிரம் வெண்கலரதக்காரர்கள் பாதலத்திலிருந்துபடைத்துணைவரவிருக்கின்றார்கள். ஓ! ஓ! அளவுசொல்வதற்கருமையாகிய தவத்தையும் பலத்தையுமுடைய அநேகங்கோடி இராக்ஷசர்கள் என்னிடத்திலுண்டாகிய இஷ்டத்தினால் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யப் படைத்துணைவரப்போகின்றார்கள். இப்போது என்னுயிருக்குத் தங்களுயிரைக் கொடுக்கும்படியாகச் சிநேகித்திருக்குந் தீவுகளிலுள்ள பேர்களும் பூமியிலுள்ள பேர்களும் பாரதயுத்தந்தொடங்குங் காலங்கேட்டு ஒருநாளைக்கு முன்னாக இவ்விடம்வந்து சேருவார்கள். இத்தன்மையவாக அவரவர்கள் சேனைசயினியங்களுடன் எனக்குத்துணையாகி வருபவர்களெல்லாரும் என்னுயிருக்குயிராகியவர்கள். அவர்களிறந்தால் நானிறப்பேன், நானிறந்தால் அவர்களிறப்பார்கள். இந்தவுலகமழிந்தால் நாங்களெல்லோரும் அழிவோம், உலகம் அழியப்போகிறதுமில்லை; நாங்க ளியாவரும் ஒழியப்போகிறதுமில்லை, இது உண்மையே. இனி நான் பற்பலவாறாகச் சொல்லவேண்டியதுமில்லை, என்தந்தையாகிய பராசபயங்கரனே இதுவரையிலும் படைத்துணைகூடிய தேர் யானை குதிரை காலாள்வீரர்கள் முதலாகிய வெல்லாஞ்சேர்ந்து பதினொரு அக்குரோணியென்று கணிதநூல்தெரிந்த பெரியோர்கள் தொகை

செய்தார்கள். இவ்வளவு சேனைகளும் வீராதிவீரர்களும் எனக்காகச்சேர்ந் திருப்பவர்கள். இவர்களுடனெதிர்த்துப் போர்புரியுந் தன்மையுடையவர்கள் ஒருவருமில்லை. அப்படிக்கு நேர்நின்று சண்டைசெய்பவர்கள் யாரேனும் இருப்பார்களாகில் சொல்லுங்கள். நீங்கா த விவேகநிறைந்த நீதிமான்களே! சூல்கொண்ட மேகம்போன்ற திருமேனியையுடைய ஸ்ரீகிருஷ்ணபகவான் பாண்டவர்களுக்குப் படைத்துணையானுனே அவனுக்கு ஈடாரொன்று சொல் வீர்கள். அப்படியேபடைத்துணையானுலும்சிராயுதனுகித்தேர்செலுத்தவமைச் தானன்றி வேறல்லன், அவனண்ணன் பலபத்திரர் கலப்பையாயுதத்துடன் எனக்குப்படைத்துணையானுர். இவைகளெல்லாம் அந்தக்கிருஷ்ணனுக்கு முன் நிலையில்லாம லழிந்துபோகுமே என்று பயந்திருக்கின்றீர்களல்லவா? அப்ப டியே மடிந்துபோகுமாகில் நாமெல்லாரும் வீரரென்றும் வேந்தரென்றும் ஏனிருக்கின்றோம். கால்கரங்குறைந்த சப்பாணிமுடம்போலெண்ணிக்கொண் டோ மனஞ்சலித்துவாடுகின்றீர்கள். தைரியமுடைய மன்னவர்களே! இன்ன முங்கேளுங்கள், கதாயுதத்தைக்கொண்டு யுத்தமுனையிற்கலந்து நின்றேனுகில் இவ்வுலகத்திலுள்ள மனிதர்களும் அவ்வுலகத்திலுள்ள தேவர்களும் மூவர் களும்சேர்ந்துவந்தெதிர்த்தாலும் ஒருகணப்பொழுதில் அவர்களியாவரையும் வதைத்து வீரசொர்க்கம் அனுப்பிவிடுவேன். இவ்வளவு வலிமையையுடைய என்னை வீமசேனனே வெற்றியடைபவன். இதை நீங்கள் யோசிக்கவில்லையே, அந்தோ! அந்தோ! நானென்னசொல்லப்போகின்றேன், மேலும், திடவீர காத்திரமுள்ள தின்னியர்களாகிய துச்சாதனன், துன்முகன், விகர்ணன், சுமதி, சித்திரசேனன், சித்திரபானு முதலான என் தம்பிமார்கள், மல்லைப்புரியுந் தோள்வல்லமையும் சொல்லற்கரிய தோள்வல்லமையுமுடையவர்கள். வட பத்திரசாயியாகிய மாயோன் பார்த்தசாரதியாகவந்தாலும் அதைக்குறித்து மெச்சிச் சந்தோஷப்படாமல் அருச்சுனனையும்மற்றபேர்களையும் பிச்சிப்பிடுங்கி இலவம்பஞ்சுபோலே காற்றிற்றூற்றிவிடுவார்கள். வீமசேனனுடைய விதியை மாற்றுதற்கு நானொருவ னிருக்கின்றேன். இதல்லாமலும், என்மேலெதிர்த்து வரப்பட்டவரெவரையும் இனிஇவ்வுலகில் இல்லாமல் செய்வதுமன்றி, ஈட்டி, எறி வல்லையம் முதலியவற்றைத் தடுக்கவும், இடித்து மின்னிவரும் ஏழு மேகங்களின் முழக்கத்தை விலக்கவும், மேதினி கிழியப்பொழியுங் கல்வரு ஷங்களைக் கலக்கவும், ஓங்கிவீசிய யுகாந்தகாலச் சண்டமாருதத்தை யொடுக் கவும், பேரிருளைப் பிரகாசிக்கச்செய்யவும், பிரகாசத்தைப் பேரிருளாக்கவும், ஆகாயகங்கையைப் பூமியில் அழைப்பிக்கவும், அதன்மேல் யானை சேனை பரிவாரங்களெல்லாம் நடக்கவும், எதிராளிகளின் சேனைப்படைகள் முழு கிப்போகும்படியாக முடுக்கவும், வெப்பமாகிய பாலைநிலத்தில் மேகம்பொழி ந்த சலமானது சுவறிப்போகாமல் தங்கும்படியாய் மடக்கவும், என்னுடைய சேனைகள் தாகவிடாய்தீர்ந்து குளித்து முழுகி யிளைப்பாறிநடக்கவுஞ் செய்ய வல்லேன். மேலும் மண்டலமேலாகவும் விண்டலங்கீழாகவும்மாற்றுவேன் சரபம் சார்த்தூலம் கண்டபேரண்டம் சிங்கம் யானை மலைப்பாம்புகள் முதலா கிய மிருகங்களெல்லாம் நான் கைகாட்டிய தொழில்களைச் செய்துகொண்டு

இன்னமும் வேலைசெய்யக் கட்டளையிடவேண்டும், இறைவனே என்று இறைஞ்சி நிற்கவும், குறுங்காற்பூதம் குடங்கைப்பூதம் குடவயிற்றுப்பூதம் குழிக்கண்பூதம் முதலிய பாரிடங்கள் சிரத்திற் கரத்தைக்குவித்து என்ன உத்தரம் எந்தவேளையில் வருமோவென்று எதிர்பார்த்திருக்கும்படியாகிய ஸ்தம்பனம் மோகனம் உச்சாடனம் ஆகர்ஷணம் தொட்டியம் சல்லியம் இந்திரஜாலம் மயேந்திரஜாலம் கண்கட்டு திசைகட்டு தேகக்கட்டு விண்கட்டு மண்கட்டு மறைவுமை மாயாவித்தை முதலிய மந்திர எந்திர தந்திரசாதகங்களும் முனிவர் சித்தர் முதலியோர்கள் அநுக்கிரகஞ்செய்யக் கற்றிருக்கிறேன். சலஸ்தம்பனமும் வாயுஸ்தம்பனமும் அக்கினிஸ்தம்பனமும் மாய்ந்துபோன உயிரை மறுபடியும் வரவழைக்கும் மிருதசஞ்சீவி மந்திரங்களும் பெற்றிருக்கிறேன், இத்தன்மையவாகிய உபாயங்களெல்லாவற்றிலும் வல்லவனாகியநான் படைத்துணைவந்தோர்களை நம்பிக்கொண்டிருக்கத் தக்கதுமுண்டோ, தேவர்கள் அடைக்கலமென்பார்களாகில் அசுரர்களைவென்று ஒருவாக்கியத்தினால் அமரர்களைக்காக்குந் திறத்தையுடைய என்னைத்துதித்துக் கொண்டாடிப்புகழாமல் அற்பபலத்தையுடைய ஐவரைக்கொண்டாடி விம்மிவிம்மி வாடுவது வேந்தர்களுக்குப் புகழல்லவே? இப்போது நான் சொல்லிவந்த காரியங்களித்தனையும் உறுதியுடைய தல்லவென்று உங்கள் மனத்தில் நினைப்பீர்களானால் உண்மையாகிய வார்த்தைகளைச் சொல்லுகின்றேன் கேளுங்க ளுத்தமர்களே, பேழைமையின்பம் பிணிமூப்புச்சாக்காடாகியவாறுங் கருவிலமைப்பு, தாய்தந்தையர் சுக்கில சுரோணிதஞ் சம்பந்தப்படுங்காலத்தில் ஐந்துகோசமாக வாய்வுந்திய போது தரித்த கருவுருவாகிய உடல்பெறும்படியாகிய பேறு இளமை இன்பம் வியாதி கிழத்தனம் சாவு இவைமுதலிய ஆறுவகைகளுங் கருவிற்றானே அமைத்திருக்கின்றான் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமனென்று பெரியோர்களாற்றெரிந்துகொண்டிருக்கிறேன். 'அன்றெழுதியதை யழித்தெழுதப் போவதில்லை' யென்றுசொல்லும் பழமொழியுங்கேட்டிருக்கின்றேன். இதைவென்று வாழ்ந்தவர்களுமில்லை யென்றுணர்ந்திருக்கின்றேன். அப்படி எவர்களாகிலும் இவ்வினையைத் தவிர்ந்திருப்பவர்களுண்டானால் எனக்கு நீதிதருமங்களைச் சொல்லும். ஆகையால் அரசர்களுக்கு விதித்திருக்கு முறைநெறிப்படி யுத்தஞ்செய்வதே ஞாயம். வெற்றிகொண்டு பஞ்சாசத்கோடி பூமண்டமுழுதுந் தருமராசன் ஆண்டாலும் அல்லது மாண்டாலும் நாங்கள் மிகுஜெயம் பெற்றாலும் அல்லது அபசெயமுற்றாலும் ஆருக்கென்ன? பள்ளமிறைத்தவன் பங்கு கொண்டுபோவானென்பதுபோல் சாகிறவரையிலும் யுத்தஞ்செய்து ஜெயித்தவர்களுடையது இராச்சியமென்று இராச்சியமுறைமையிருப்பதனால் ஒருவரை பார்த்து விடுவேனல்லாமல் பாண்டுமைந்தரைப்பணிந்து இனியவசனங்கூறித் தாழ்ந்து அவர்கள் பாதத்தைப் பிடித்துக்கொண்டு நித்தியதரிசனஞ்செய்து அற்பத்திற்கு அருமைகுலைந்து அரியபண்டத்திற்காசைகொண்டு வாழ்ந்திருக்க மாட்டேன். இதனால் என்னுயிர்மாத்திரம் அழியுமேயன்றி என்புகழொழியவே மாட்டாது. ஆகையால் என்ன துன்பங்கள்வந்தாலும் எவைகளிழிந்தாலும் எவர்களொழிந்தாலும் யுத்தமென்னும் விரத்தை என்னிதயம் ஒருக்காலும்

விட்டு நீங்காது என்று அரசர்கோமானாகிய திரிதராட்டிரமஹாராஜனைநோக்கித் துரியோதனன் பலபலவார்த்தைகளைச் சலசலவென்றுமொழியவே மனத்திற்றுயரும் முகத்தில் வியர்வும் பெருமூச்சுங்கொண்டு தந்தையாகிய அரசன் மைந்தனை நோக்கி, ஐயா! குழந்தாய், அப்பா! கண்மணியே, நான்சொல்லுகின்ற கடைசிவார்த்தையாகிய கட்டுரையை உன்காதுகொடுத்துக் கேட்கக்கடவை, காதலனே! இப்போது நீ சொல்லிவந்த சகலவித பலாபலங்களையுங் கேட்டேன். ஆனாலும் இவைகளெல்லாவற்றிலுஞ் சிறந்தவர்களாயுஞ் சொல்லுதற்கரிய பெரியவல்லமையையுந் தவங்களையும் உடையவர்களாகிய பாண்டவர்களுடன் யுத்தஞ்செய்யக்கருதி புடன்படுவது நம்மாற் சாதனைசெய்யக்கூடாதகாரியமென்று நீதியாய் நினைக்கக்கடவாய். ஏனெனில் தெய்வபலமும் யாகபலன்களும் திணிந்ததோள்வலிமையும் திவ்யாஸ்திரத்திறமையும் சேனைப் பெருக்கமும், உறுதிமுதலிய யாவும் ஐவர்களுக்கே அமைந்திருக்கின்றன. உனக்கென்னிலோ இவ்விடத்திலிருக்கும் அரசர்களுடைய துணைவலிமையல்லாமல் மற்றொருதுணையுமில்லையே, மகனே! அருச்சுனன் தவஞ்செய்து பரம்பரனருள்பெற்று தேவலோகம்போய் தேவர்கட்குப்பகைவராகிய காலகேயநிவாதகவசரைக் கருவறுத்து தேவாமிர்தபோசனங்கொண்டு தேவசிங்காதனத்திலிருந்து, தேவர்சகாயனென்று பேரும்புகழும் கிரீடமும்பெற்றுப் பூலோகத்திற்குவந்த தேவேந்திரன் பிள்ளையாகிய விசயவீரனை இவ்வரசர்களைக்கொண்டு வெல்ல உன்னாற்கூடுமோ? பதினாயிரங்கோடி நக்ஷத்திரங்கள் கூடிப்பிரகாசித்தாலும் ஒருசூரியகிரணத்தினால் ஒளிமழுங்கி உலகத்தாருக்குத்தோன்றாமற் பிரகாசமறைந்துபோவதுபோல் விஜயனாகிய சூரியனுக்கெதிரில் அரசர்களென்னும் நக்ஷத்திரங்கள் ஒளிமாறி நிலைமாறி தடுமாறி பலபலவென்று உதிர்ந்துபோமேயல்லது நிலைத்துநின்று நிலவெறிக்கமாட்டாதே, அப்படியிருக்க, 'மருதமரத்தைக் காலினாலுந்திக் குபேரன் பிள்ளைகள் குறையகற்றிய ஸ்ரீகிருஷ்ணபகவானே சாரதியாக இரதஞ்செலுத்தும்படி இசைந்தமையால் மகிழ்ச்சிபொருந்திய அருச்சுனன் யுத்தகளம்புகுவானாகில் இரத்த மாமிசந்தோய்ந்த வேலாயுதத்தைத்தாங்கிய பற்பல மன்னர்கூட்டங்களும் வெலவெலவென் றுதைத்துக்கொண்டு குலைகுலைந்து அழிந்துபோவார்களேயன்றிவேறன்று. அவரவருடைய வல்லமைகள் அவரவர்களுக்குத்துணையல்லது ஒருவருடையவல்லபம் ஒருவருக்குத்துணையென்று நம்பும்வம்பர்களுக்கு இகழ்ச்சியும்வசையும் வருவதல்லாமல் புகழும் இசையும்வரமாட்டாது, ஆனகயால் உன்னுடைய பெரியவல்லமைகளெல்லாம் பாண்டவர்களுக்கு ஒரு இலக்காகாது. இப்போது கூடியிருக்கும் வீஷ்டுமாசாரியர் துரோணாசாரியர் முதலிய பெரியோர்களுடைய உயிரிருக்கிறவரைக்கும் நீபலசாலிதான், உனக்குப்பயமில்லை. அவர்களுக்குப்பின் நீ துன்பப்படுவாயென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால், நீங்களிருதிறத்தவரும் பகைநீங்கி யிருப்பதற்காக ஒரு யுத்தி சொல்லுகிறேன். அதென்னவென்றால், அவிர்ப்பாகங்களைப் புசிக்கும் அமரர்களும், அன்புடன் வாழும் அரசர்களும், நமது நகரமாந்தர்களும் சந்தோஷமடையும்படியாக இந்த இராச்சியத்தை யிருகூறாகப் பங்கிட்டுத்

தருகிறேன் உன்னுடைய பாகத்தை யாவரும்புகழ்ந்து துதித்துமகிழும் படியாகவும் உன்னையடுத்தவர்கள் இருகரத்தையுங்குவித்துவாழ்த்திவணங்கிவாழ்ந்து கொண்டிருக்கும் படியாகவும் சுவேதக்குடை நீழலில் துரைத்தனஞ் செய்து சிறந்த சுகத்தைப் பெறக்கடவையென்று திரிதராட்டிரன்சொல்லினன்.

அவ்வார்த்தை செவிக்குள்புகுமுன்னமே சிந்தைவருந்தி மிகவுங் கோபங்கொண்டு துரியோதனன் சொல்லுகின்றான். ஐயா ? பூர்வத்தில் சூதாடித்தோற்று இனிமேல் இராச்சியம் நமக்குவரப்போகிறதில்லையென்று; கைவிட்டு காடேகதியாய்க் கலந்திருந்த பாண்டவர்களை மறுபடியும் வரவழைத்து நாட்டை நான் வாங்கித்தருகிறேனென்று உறுதிவார்த்தைகள்சொல்லி பந்துக்களாகிய சில படைத்துணைகளைச் சேர்த்துவிடுத்து நான்கொண்டபூமியை மீட்டுக்கொடுக்கக்கருதி கலகம்செய்து இதுவேவேலையாக வேலையற்று திரிகின்றான் நீலமேகத்தையொத்த திருமேனிவாய்ந்த கண்ணன். அவன்செய்கின்ற தந்திரமருட்சியினால் நீர்மயங்கிப் பயப்படுகின்றீர் நான்பயப்படேன். அவனெண்ணிய வெண்ணத்தின்படி நான் பூமியைக்கொடுத்து விடுவேனானால் எனக்கீடாகிய மன்னர்களும் என்சத்துருக்களும் குலுங்க நகைப்பார்கள். தந்தை வாக்கியத்தைக்கேட்டு தருமமாய்க்கொடுத்ததல்ல ஐவருடைய பலத்தினுக்குப் பயந்து கொடுத்துவிட்டான் துரியோதனனென்று அவமதிப்பாக நிந்திப்பார்கள். ஆதலால் என்னுயிருள்ளவரைக்கும் அல்பத்துரும்பளவு பூமியும் அவர்களுக்குக் கொடுக்க மாட்டேன். பாண்டவர்களுக்குப்பயந்து இளைத்தான் துரியோதனனென்று ஏழைமையாகிய சொற்கேட்டு உயிர் விரும்பி வாழமாட்டேன். முக்கண்பெற்றவன்வந்து எதிர்த்துச் செயித்தால் செயிக்கலாமேயன்றி மற்றபேர்கள்போர்முகத்திலென்னை வெல்லமாட்டார்கள். இத்தன்மையவாகிய புயவலிமையையுடைய யென்னை உச்சாகப் படுத்தாமலும் உமது யுத்தியில் நிதானிக்காமலும் புத்தியில்லாதபேதையர்மருட்டிய வார்த்தைமயக்கத்தாற்கலங்கிச் சொல்லவந்தீரையா, அப்படி நீரொன்றுக்குங் கலங்கவேண்டாம், எந்தையே! திடகாத்திரவீர அமோகவரங்கொண்டு உரங்கொண்டிருக்குஞ் சத்துருக்களானாலும் அவர்களை ஒருநொடிப்போதில் வெல்லவல்ல வல்லமையிற் கைபழகியிருக்கின்றேன். ஆனால் நீர்கொண்டிருக்கும் நடுக்கத்தை மாற்றுகிறதற்குக் கல்லாமற்போனேன். ஆனாலும் அதுவுந்தெரியும். அதெப்படியென்னில், உம்பிள்ளைகளின் புயவலிமையினால் எதிர்த்த சத்துருக்களெல்லாம் இறந்து யமலோக மடைந்தார்களென்று எப்போது நீர் கேட்கின்றீரோ ? அப்போது இச்சந்தேகமும் பயமும் உம்மைவிட்டு நீங்கிப்போம். அதுவரையிலும் உமதுமனந்தாளமாட்டாது. ஆகிலும், கொஞ்சம் மனம்பொறுத்துஇந்தக்காலத்தைத்தள்ளும் இப்போது கேட்டபோரைப்புரிவது தருமமேயன்றி இராச்சியம்பகுந்துகொடுப்பதில் எனக்குங்கீர்த்தியில்லை, என்னிடத்தில் வாங்கிக்கொள்ளும் பாண்டவர்களுக்கும் பெருமையில்லை. ஆதலால், பூமியைப்பிரித்துக் கொடுக்கிறேனென்னும் வார்த்தையை இன்னொருமுறை என்செவியிற்போடாதிருக்கக்கோருகிறேன், இதைமறந்துவிடும், என்னையனே என்று துரியோதனன்படபடப்புடன் சொல்லினன். அவ்விடத்திலிருந்தவர்

களியாவரும் நடுநடுங்க அந்தவேளையில் அரசன் வார்த்தைக்குக் குறுக்காகப் பாய்ந்து பக்கத்தில் இருந்த கன்னன் சொல்லத்தொடங்கினான்.

கேளும் அரசே! மண்ணாசைகொண்டலையும் பாண்டவர்களுடையபடை வலிமையைப்புகழ்ந்து எங்களுடைய புயபலபராக்கிரமவிற்றிறமையையோசிக் காமலிகழ்ந்து இழிவாகப்பேசுகின்றீர், அப்படி பேசவேண்டாம், போர்புரியும் படியாகநினைப்பேனானால் ஒரேகணையால் உவரிவளைந்த உலகமுழுமையும்வேர் களைந்து வெந்நீர்வார்த்து விடுவேன். என்னிலுமுயர்ந்த வில்லாளிகளுண்டென்னும் எண்ணமுமக்குண்டோ, மன்னவனே? வெப்பமாகிய வடவாமுகக்கனலும் மேதினியெல்லாம் நிறைந்தவெங்கனலும் வேழவின்மதனை யெரித்த விழிக்கனலும் வேறுபடாத திரிபுரமெரித்த நகைக்கனலும் உருகிக்கலந்து மொய்த்த கூரம்பாகிய கணைகளைச்செலுத்தி ஒருகணத்திற்குள் சத்துருக்களைச் சாம்பராக்கும் வல்லபமுடைய என்முன்னே தேறியபடை வல்லவர்களென்று போர்புரியவந்தால் மறுமன்னவர்களையும் அவர்கள் துணையையும் இரதகஜமுதலிய படைகளையும் பின்பலம்வேண்டாமல் தன்னந்தனியனாகவிற் கொண்டுசாடி யுதிரவெள்ளங்கண்டு, காளிகள்கூடி கொண்டாடிப் புசித்துக் களிக்கக் கண்டங்கண்டமாய்க் கூறுபடுத்தி மாமிசாத்தங்களினாற் சேறுபடுத்திக் கரமுஞ்சிரமுங்கலந்து விதைத்து கடல்சூழ்ந்த காசினிமுழுவதும் உன் புத்திரருடைய வெள்ளைக்குடை நிழலில் விளங்கவைத்து உன்னுடைய மனநடுக்கத்தையும் மற்றவர்களுடைய மனவூக்கத்தையும் பகைவரால் விளையும் போரையும் நொடிப்போதிலடக்கி அகற்றிவைக்கின்றேன். ஐயா! இப்போதெனக்குச் செலவுகொடுமென்று பற்பலவிதமாகிய சாமர்த்தியங்களைப்பகர், ந்த அங்க தேசாதிபதியினுடைய வல்லமையானவார்த்தை முழுமையுங்கேட்டுத் திரிதராட்டிரன் சந்தோஷமுஞ் சந்தேகமுங்கொண்டு சொல்லுகின்றான். அப்பா, கன்னா! முறியாதகாண்டீபமும் அறாதநாணியும் அக்ஷய தூணியும் இளையாத சுவேதவாம்புரவியும் அழியாதஇரதமும் அருமைத்துவஜமும் அக்கினிதேவனாற் கொடுக்கப் பெற்றவனென்றும் கங்கையுந்திங்களும் பொங்கரவும் மங்கையும் அங்கத்திற்றரித்தருளிய சங்கரசுயம்புவானவனளித்த பாசுபதாஸ்திரமுடையவனென்றும் தேவேந்திரனுடன் சமமாயிருந்து புத்தமுத போசனமுண்டவனென்றும் காலகேயநிவாத கவசமுதலிய பேர்களைக் குலத்தோடறிக்குங் கொடுங்கணைகொண்டவனென்றும், சகலதந்திர சுதந்தரமாயனாகிய கண்ணன் சாரதியாகித் தேர்செலுத்தக்காண்டவவனத்திற் போர்செலுத்தினவனென்றும் மூன்றுலோகமும் புகழ்கொண்ட அருச்சுனனுடைய போர்முனையில் நானெதிர்த்து யுத்தஞ்செய்கிறேனென்று சொல்லத் தக்கவர்களுமுண்டோ? எப்பிறப்பிலுஞ்சொப்பனத்திலுங்காணேன்; இப்பிறப்பில்நீயொருவன்சொல்லுகின்றதை கேட்க வெனக்குப்பெரிய ஆச்சரியமாயிருக்கின்றது. நல்லதப்பா விராடபுரத்தில் நேற்றுநடந்த மாடுபிடிசண்டையில் நீயில்லையோ? இதுசேதி அறியமாட்டையோ? அற்புதமற்புதம் தம்பி அருச்சுனனை வெல்லுவேனென்று ஆர்சொல்ல வேண்டுமென்றால், அநேக கற்பகோடிகாலம் தவஞ்செய்து சர்வசங்காரகாலருத்திரனுக்கொப்பாக ஏற்படப்போகின்றவனொருவ

னிருப்பானாகில் அவனை மொருவேளை ஆலோசித்துச் சொல்லவேண்டியதுதான். அதைவிட வேறொருவரையுங்காணோம், நாமிருக்கின்றோமென்றாலோ மரமிருக்கு காட்டில் வந்திறங்கும் காக்கை ஊ என்றாலும் பறக்கும் ஆ என்றாலும் பறக்கும், என்று சொல்லும் பழமொழியைப்போல், அருச்சுனன் போர்செய்ய வந்தானென்று கேட்ட உடனே யுத்தத்தையும் உடலையுமறந்து ஓடிப்போகும் அக்காக்கையைப் போன்றநாம வாக்கினால் வெல்லுவோமென்பது எப்படியிருக்கிறதென்றால் "உள்ளான்பதுங்கலும் ஓணன்றன்கர்வமும் ஓங்குபுகழ் வெள்ளான்பிரசங்கமும் பார்ப்பான் தமிழும்விழல்விழலே" உள்ளான்குருவியானது பூமியசைகின்றதோவென்று ஆட்டிப்பார்ப்பதும் ஆகாயமிடியப்போவதென்று இருகாலையுமேலேநாட்டி மல்லாந்துபடுப்பதும் ஓணான் தலையாட்டலும் வெள்ளான், கிரந்தங்கற்றுப் பேசுவதும் பார்ப்பான் தமிழ்கற்றுப் பிரசங்கஞ்செய்வதும் விழல் விழலே என்பது போலாம். தம்பிமார்களே! விஜயன் வெம்பிப்பதைத்து ஒருகணைவிடுவானாகில் அம்புவியெல்லாமழியும் என்சொல்லைப் பழுதாக்காமல் புத்தியுட்கொண்டு பெருமையுடன் வாழக்கட வீர்கள் புத்திரர்களே, மைந்தர்களும் பந்துஜன நண்பர்களும் பரிவாரச்சேனைகளும் நூறுநூறாய்க் கூறுகூறாய்ச்சிதைந்து அழிந்துவிழப்படியாகப் பாண்டவருடனெதிர்த்து அமர்செய்யவேண்டியதென்ன? அவர்கள் கையைக்கொண்டு அவர்கள் கண்ணைக்குத்துவதுபோல் முன்னே உங்களிடத்தில் சூதாடித்தோற்ற புவிமுழுதும் முறையாகக்கொடுத்து எல்லாவுயிருந் தொழும்படியாக மித்திரருடனிருந்து அரசாட்சி செய்யுங்களப்பாவென்று கட்புலனிழந்த காவலன்மொழிந்த சொல்லை மகமேருவைப்போல் கேட்டிருந்த வீஷ்டுமாசாரியார் சொல்லத்தொடங்கினர்.

ஆதிமுதல் இதுவரையிலும் ஐவர்களையிகழ்ந்து வெற்றியடைந்துவந்த இந்த வீரனுடையதிறத்தை எல்லோரும் அறிந்திருக்கின்றீர்களல்லவாவென்று கர்ணனைநோக்கிக் கைதேர்ந்தவனே! போனதெல்லாம் போகட்டும், இப்பொழுது விஜயனுக்கு எதிரில்முனைந்து யுத்தஞ்செய்யத்துணிந்து நிலைத்துநின்று உன்னுயிரைத் தப்பித்துக்கொண்டுவரமாட்டுவையோ என்றுறுக்கிக்கேட்டு கலகலவென்று நகைத்துப் போபோபைத்தியக்காரனே "குறைவானவர்கள் கூவிக்கதறுவர் நிறைவானவர்கள் ளிதானித்திருப்பர்" என்னுமொழிக்கொப்பாக யுத்தஞ்செய்யக் கையிலாகாதவர்கள் வாக்கினாற்பிதற்றிக்கொண்டிருப்பார்கள். பூர்ணமாகச் சயிக்கத்தெரிந்த புண்ணியவான்கள் சமயம்வந்தபோது தங்கள் சாமர்த்தியத்தைக் காட்டுவார்களன்றி நாவினால் ஒருக்காலும் நவிலமாட்டார்கள். அதுதான் வீரதருமமென்பது, சொல்லுவது அதர்மம்; ஆகையால் பிறந்த பெருமையை உடன்பிறந்த மூத்தோனிடத்தில் புகழ்ந்து சொல்வதைப்போல் உன்பண்டவாளந்தெரிந்த எங்கள்சபையிற்சொல்லாதே; சந்தைகூடியவிடத்தில் உன்சாமர்த்தியத்தைப்பேசினால் சகலருங்கேட்டு சந்தோஷப்படுவார்கள், இந்தவார்த்தையைப்பேசலாம், இந்தவார்த்தையைப் பேசக்கூடாதென்றுணராத நீ காலமிடமறிந்து சற்றே யோசித்துச் சொல்லக்கடவையென்று உலகமதிக்கும் புகழினையுடைய வீஷ்டுமாசாரியர் சொல்லினர். அது

கேட்ட அங்கதேசாதிபதி வடவாமுகாக்கினிபோற் பொங்கிக்கொதித்துமனோ வியாதிகொண்டிருக்கின்ற திரிதிராட்டிரனுக்குச் சொல்லத்தொடங்கினன்.

அரசனே! கேளும்? பாண்டவர்களுக்குந் துரியோதனாதியர்களுக்கும் யுத்தம் விளையப் போவதென்று முன்னமே தேவதைகளெல்லாருங்கூடி வஞ்சனையாகயோசித்து நான்கற்ற மந்திரங்களையும் தேவாஸ்திரங்களையும் தருணத்திற் குதவாமற்போகும்படியாக என்னைச் சபித்திருக்கின்றார்கள், ஆகையினாலே இதுவரையிலும் அருச்சுனன் பிராணனுடன் பிழைத்திருக்கின்றான் இல்லாவிட்டால் அன்றேயிறந்து நாமெல்லாருமறந்து அவன்செத்த விடம் புல்முளைத்துப்போய்விடும். ஆகிலும் என்னசாபம்நேரிட்டாலும் யானை படுத்தால் குதிரையத்தனை உயரமிருக்கமாட்டாதா ஆகட்டும் ஒரேபாணத்தினால் காண்டீபனுடைய பிராணனை வாங்குகின்றது நிச்சயம் அபத்தமல்ல! இவனென்ன போர்செய்வான் என்று உமது மனத்தில் சந்தேகமிருந்தால் பாண்டவர்களுக்கு இந்தராச்சிய முழுமையுங் கொடுத்துவிட்டு நூறுபிள்ளைகளையும் அவர்களை யடுத்தபேர்களையும் எப்படிவிடவேண்டுமோ அப்படியே உமது மனத்துக்கு ராசியானபடி செய்யுமென்று கண்சிவந்து மிகுந்த கோபத்துடன் சபாமண்டபத்தை விட்டெழுந்து துரியோதனனை நோக்கி இவர்கள் ஒன்றுகூடி உன்மனத்தைக் கரைத்திருக்கின்றார்கள். நீர் அவருடைய இஷ்டப்படி நடக்காமல்நடப்பதுவேநியாயம், அப்பால் தெய்வசகாயமெப்படியிருக்கின்றதோ பார்த்துக்கொள்ளுவோமென்று இரப்போர்களுக்கு இல்லையென்றுமற்கொடுக்கும் ஈகையாளன் தன்னுடையஅரமனைக்குப்போகவும்; துரியோதனன், சகுனி, துச்சாதனன் தவிர மற்றவர்களும்திரிதராட்டிரனும் கர்ணன் நீங்கிப்போனதற்கு விசனப்படாமல் தீங்காகிய தடைநீங்கியதைப்போல் சந்தோஷங்கொண்டு சஞ்சயனை நோக்கி என்தம்பி புத்திரராகிய பாண்டவர்கள் எவர்களை எவர்கள் கொல்லுகிறதென்று சபதங்கொண்டிருக்கின்றார்கள். நீர் அறிந்தமாத்திரஞ் சொல்லுமென்று திரிதராட்டிரன்கேட்க! சஞ்சயன் சொல்லத்தொடங்கினன்.

ஐயனே? வீஷ்டுமரை சிகண்டியும் துரோணரைத் திர்ஷ்டத்தூய்மனும் சல்லியராசனைத் தருமராஜனும் துரியோதனன் முதலாகிய நூற்றுபிள்ளைகளை வீமசேனனும் கர்ணன் சிந்துபதிமுதலிய இவர்களை அருச்சுனனும் மாமாவாகியசகுனியை நகுலனும் சகுனி தந்தையாகிய சௌபலன்முதலியகுலத்துளோரைச் சகாதேவனும்ஆயிரம்பேர்களாகிய உமது பேரப்பிள்ளைகளையும் பதினாயிரம்பேர்களாகிய இராசகுமாரர்களையும் அருச்சுனகுமாரனாகியவாளபிமன்னுவும்,கிருதவன்மனைச் சாத்தகியும்,ஆத்திமாலையைத்தரித்த அரன்வக்துதடுத்தாலும் கொல்லுவோமென்று சபதங்கூறிக்கொண்டிருக்கின்றார்கள். விராடனும் அவனுடைய புத்திரவருக்கமுதலியசேனைகளும் திர்ஷ்டத்தூய்மனுக்குத் துணையானார்கள் திரௌபதியினுடையபிள்ளைகள் இளம்பஞ்சபாண்டவரைவரும் சிகண்டிக்குத் துணையானார்கள். தேசதேசத்து இராசர்களெல்லாரும் தங்கள் தங்களுக்குப் பகையாகிப் போர்புரியத்துணிந்திருக்கின்றார்கள். இளம்பஞ்சபாண்டவர் தவிர மற்ற உபபத்தினிமார்களுடைய புத்திரர்கள் ஏழுபே

ரிருக்கின்றார்கள், ஏழுசமுத்திரத்தையும் எளிதில் நீந்தவல்லர்கள் அல்லாம லும் செல்லுஞ் செல்லாததற்குச் செட்டியாரிருக்கின்றா ரென்னும் கதை யைப்போல அரவானொருவனிருக்கின்றான். மகாமாயா வல்லபத்திற்சிறந்த கடோற்கசனென்பவன் கடலைப்போல் வருகின்ற இராக்ஷசப்படைகளுக்குத் தடையாகத் தானொருவனே யென்றிருக்கின்றான். உத்தமோசா உதாமனு என்பவர்கள் அருச்சுனனுக்கு சக்கரரக்ஷகரானார்கள். இந்தப்படி ஏற்படுத் திப் பிரித்துக்கொண்டிருக்கிறார்கள் பாண்டவர்களென்றுசொல்லி ஓ மன்னர் மன்னனே ? இனிமேலுமது யுத்தியிற்றோன்றிய தன்மையைச் சொல்லு மென்று சஞ்சயன்கேட்க ; அச்சபையில் நிறைந்திருப்போர்களிற் சிலர் ; சஞ்சயனைப்பார்த்து நீர்சொல்லிவந்த பலவான்கள் நிச்சயித்துக்கொண்ட எதி ரிகளெல்லாருஞ் சரிதான், ஆனால் தருமராஜன் சல்லியனைக்கொல்லவிருக்கின் றானென்றது சல்லியபூபதிக்குத் தருமராஜ னெம்மாத்திரமென்று சொல்லவே, இதைக்கேட்டிருந்த விவேகமுடைய சல்லியராசன் ஐயா ! சகலவெப்பங் களைத் தணிப்பதும்; சீவாதாரமாயிருப்பதும் பாபவிநாச பரிசுத்தமுடைய தும் கங்காசலம். அந்தக் கங்காசலத்தினிடத்தில் நெருப்புப்பிறக்குமாகில் மற் றெதைக் கொண்டவிக்கலாம், அந்தச் சலத்தைப்போன்ற தருமராஜனாகிய கருணைவள்ளல் வெல்ல நினைந்து என்னைக்கொல்ல வெகுண்டு வருவராகில் அவருடனெதிர்ந்துப் போர்செய்யத்தக்கவர்கள் இந்தத்திரிபுவனங்களிலுமுண் டோ? அவருடையதந்தையாகிய எமதருமராசனைப்போற் சாமர்த்தியங்கொண் டிருக்குந் தவத்தினராகையால தருமராஜன் என்னையெதிர்ந்து வெல்வேனெ ன்று தாராளமாகச் சொல்லத்தகுமென்றான். அதைக்கேட்டுத் தேசதேசத் தரசர்களெல்லாரும் வாயைமூடிக்கொண்டார்கள். பின்பு திரிதராட்டிரன் சஞ்சயனைநோக்கி அப்பா! சஞ்சயனே! உனக்குப் பிரயாசைகொடுத்து இவ் வளவுதூரம் பன்னிப்பன்னிக் கேட்டதெல்லாம் என் பிள்ளைகள் தெரிந்து கொண்டு ஏதாகிலும் ஒருவழியாக வருவார்களென்னு மிச்சையை உடைய வனாய்க் கேட்டதேயல்லாமல் வேறன்று, நான் எவ்விதயோசனைகள் செய்த போதிலும் என்புத்திரர் வழிக்குவருகிறதாகவில்லை ; யோசிக்குமிடத்தில் பாண்டவர்களுக்குச்சயமும் துரியோதனாதியருக்கு அபசயமும் உண்டாமெ ன்றுதோற்றுகின்றது மேலும் என்குமாரர்களுக்கு இறக்குங்காலம்நேரிட்டபடி யால் இப்படிப்பட்ட துர்ப்புத்தியுந் துர்யோசனையுஞ்சேர்ந்திருக்கின்றன. பிழைக் கும்பிள்ளைகளானால் பெரியோர்களுடைய நீதிவாக்கியங்களையும் தந்தையாகிய என் வசனத்தையுந் தள்ளுவார்களோ? இறந்துபோவதற்கு இதுவே திருஷ்டா ந்தமாக விருப்பதென்று மனவெறுப்புடன் சொல்லி நொந்த பெரியமன்னனு டைய மனக்கருத்தை யறிந்துகொண்டு இரக்கமனத்தினையுடைய விதுரராஜ னெழுந்து அண்ணாவே கேளும்? உமக்குப்பக்ஷபாரமில்லாமல் இருதிறப் புத்தி ரர்களையுஞ் சமமாய்நடத்தவேண்டுமென்னும் இச்சையிருக்குமாகில் அடிக்கடி சபலிக்குஞ்சிந்தையை நீக்கி உறுதிப்படுத்திக்கொண்டு மறுபடியும் மாசற்ற இதயமுள்ள சஞ்சயனை உபலாவியத்திற் கனுப்பிப் பாண்டவர்களைக் கண்டு பெரியதகப்பனார் உங்களைப்பார்க்க அழைத்துவரச் சொன்னாரென்று இனிய

மொழிகள் சொல்லச் செய்வீராகில், இந்தவார்த்தையைக் கேட்டவுடனே
அஞ்சலி அஸ்தராகவந்து உன்பாதங்களில் வணங்குவார்கள். அப்படி பிள்ளை
களை ஆதரித்து பிரியவசனங்களைப்பேசினல் மனமகிழ்ந்து உடல்புளகமுற்று
வருத்தம்நீங்கி இராசசபையிற் பூர்வத்தில் கூறிக்கொண்ட சபதமென்னும்
அக்கினிக்கோபங்களெல்லாம் ஆறிப்போய் உமக்குரிய அன்பராவார்கள்.
இவ்வளவு பக்குவம் பண்ணிக்கொள்ளும்படியாக உமதுமனந் துணியுமாகில்
இப்போதே செய்யலாம் இதைவிடவேறுவிதமாகிய நலங்களொன்றுங் காணே
மென்று விதுரராஜனுகிய தம்பி சொல்லக்கேட்ட வேந்தன் விவேகமுள்ள
சஞ்சயனுடைய முகத்தைநோக்கி, வாசனையார்ந்த மாலைகள்புனைந்த மார்ப
னே! நான் சொல்லியனுப்பிவைத்தால் என் தம்பிபிள்ளைகள் என்வார்த்தை
யைத் தள்ளாமல் இவ்விடத்திற்கு வருவார்களாவென்று ஆச்சரியத்துடன்
கேட்ட அரசனைப்பார்த்து சஞ்சயன் சொல்லுகின்றான். ஐயா? குபேரசம்
பத்து கூடிவருவதானாலும் குவலயமெல்லாம் ஒருகுடையிலாள வமைந்தா
லும், குன்றச்செய்யும் வறுமைநோய்கள் கூடினாலும், வாராத ஆபத்துக்கள்
வந்தாலும், மடியுங்காலம் நேரிட்டாலும் இவ்விடத்திற்கவர்கள் ஒருக்காலும்
வரமாட்டார்கள் ஆனால் சத்திய விரதந்தப்பாத உத்தமர்களாகையால் தந்தை
வார்த்தையைத் தப்பலாகாதென்னுந் தருமத்தை அனுசரித்து ஒருவேளை வந்
தாலும்வருவார்கள். இத்தன்மைவாய்ந்த புத்திசாலிகளாகிய புத்திரரையும்
அழைத்துவரும்படிஉத்தரவானல் சித்தங்களிக்க இதோ அழைத்துக்கொண்டு
வருகிறேன் விடைகொடுமென்று சஞ்சயன்கேட்க, இந்த வசனமானது துரி
யோதனனுடைய காதுகளில் நாராசம் போலேறவும் வடவாமுகாக்கினி பொ
ங்கி எழுந்த தன்மைபோற்கோபங்கொண்டு கண்களினற்றீப்பொறியிறைத்துச்
சஞ்சயனுனவன் முகமாறிப்போகும்படியாய்ப் பற்பல வார்த்தைகளைச் சொ
ல்லி அடா சஞ்சயனே! என்னிடத்திற் சூதாடித்தோற்றுக் காடேகதியாகப்
போய்க் காலங்கழித்திருந்த பாண்டவரென்னும் பஞ்சைகளை பால், வெண்
ணெய், தயிர் முதலியவைகளைத் திருடி அன்றுதின்ற கண்ணனுனவன் ஏதே
தோ ஆசைகளைச்சொல்லி இன்று அழைத்துவந்து பிலதந்திரஞ்செய்துகொண்
டிருக்கின்றான். நன்றுநன்று அவனுடையதிறத்தையும் பாண்டவர்களுடைய
திறத்தைப்பாழாக்கவேண்டுமென்கிற யெண்ணியிருக்கு மெனக்கு விரோத
மாக நீபோய் ஐவரை அழைத்துக்கொண்டு வந்துவிடுவதும் இந்தத் திரிதராட்
டிரமகாராசன் அவர்களுக்கு இராச்சியங்கொடுத்து விடுவதும் திரிலோக
மும் புகழும் தீரராகிய பாண்டவர்கள் பெற்றுக்கொள்ளுவதுஞ் சிறியதந்
தையாகிய விதுரன் சந்தோஷப்படுவதும் பார்ப்போம் பார்ப்போம், என்னைப்
பயித்தியக்காரனைப்போல் மதித்தோ இந்த யோசனைசெய்தீர்கள். அட
டா! இதுவென்னவநியாயம் உனக்கும் விதுரமஹாராஜனுக்கும் எவ்வளவு
ஏழ்மையாய்ப்போய்விட்டேன், பார்த்தையா நல்லது; தூரத்தாலோசனை
செய்யாமல் அவசரப்பட்டீர்கள். இப்போதும் என்சோறும் என்வஸ்திரமும்
பொன்னுபரணமாகிய என்னுபரணமுந்தரித்தும் அனுபவித்து அந்தப்பட்சத்
திலிருக்கின்றீர்களல்லவா, ஐயோ! உங்களை ஒருக்காலும் நம்பலாகாதே.

இப்படிப்பட்ட பக்ஷபாதிகளாகிய நீங்கள் என்சபையை விட்டெழுந்து இக்நேரமே பாண்டவர்களைச் சேரவேண்டியது, இனியென் முகத்தெதிர் வரவேண்டியதில்லை; போம்போமென்று புக்ன்று இன்னமும் இந்தச்சபையில் பக்ஷபாதிகளா யிராநின்றவர்கள் எப்படிப்பட்ட தகுதியையுடைய சுதந்தரராகியிருந்தாலும் அவர்களுக்கெல்லாம் இதுவே உத்தரமென்று சொல்லி; வெண்கலமென்று சொல்லுமிடத்தில்ஓட்டை, யோட்டையென்று சொல்லத்தக்க பேர்களைப் போலுந் தலைமாட்டுக் கொள்ளியைப்போலும்; இவ்விடத்தி லிருந்து கொண்டு எந்நேரமும் தைரியமில்லாத வார்த்தைகளைப் பேசிச் சஞ்சலத்தையுண்டாக்கிக் கொண்டிருக்கும் பேதையர்முகத்தில் மூத்தவள் வாசமாயிருப்பாள், அப்படிப்பட்டவர்களுடைய முகத்தில் விழிக்கலாகாது, அவர்கள் நிழலும் நம்மேற் படலாகாது, அவர்கள் வார்த்தைகளையும் நமதுகாது கேட்கலாகாது, அப்படி மருவிக்கேட்டுக் கொண்டிருப்போமாகில் நமக்குண்டாகிய செல்வமும்வீரமுங் குறைந்துபோகும், ஆகையால் இப்படிப்பட்டவர்களெல்லாரும் பலசாலிகளாகிய பாண்டவர்க ளிடத்திற்போய்ச் சேருவதே மிகுந்த நன்மையாயிருக்கும். நீங்கள் என்னைவிட்டுப்போவதினுலெனக்கொரு குறைவுமில்லை, என்னுயிர்த் துணைவனாகிய கன்னமஹாராஜ னொருவனிருந்தாற்போதும். அவனுடன்கூட மாமன் தம்பியர்கள் தேசத்தலைவர்கள் முதலாகிய பற்பலபேர்கள் என்னிடத்தில் இஷ்டங் கொண்டிருக்கிறார்கள். இவர்களைக் கொண்டு எதிர்த்துயுத்தஞ்செய்து வெற்றிபெறுவனே யன்றிநான் சாகிறவரையிலுஞ் சமர்செய்யாமல் நிறுத்திப்பொறுத்துத் தரித்திருக்கமாட்டேன். ஒருவருக்கும் வணங்கிப்பயந்து இணங்கி அடங்கி உத்தரஞ்சொல்லேன். 'தலைக்குமேலோடியவெள்ளஞ் சாணோடியுமென்னும் முழமோடியுமென்னும்' என்னும் பழமொழிபோல் நான்பயப்படேன், அவரவர்களுக்கு எந்தெந்தப்படி இஷ்டமிருக்கின்றதோ அந்தந்தப்படியே நடந்துகொள்ளலாம். அதற்கு யாதொரு தடையுமில்லை, "கெட்டமாடு தேடுவாருமில்லை மேய்த்தகூலி கொடுப்பாருமில்லை, சம்பளமில்லாச்சேவகமும் கோபமில்லாத் துரையும் எப்பட்டிருந்தால் வேலைகள் சாயுமா, மண்குதிரையை நம்பியாற்றி லிறங்குவார்போல் நான் உங்களை நம்பியிருக்கவில்லை, மண்பூனையானாலும் எலிபிடிப்பது இலாபமென்பதுபோல் உருக்கியசெம்பிலும் ஒளிமிகுந்த கோபக்கண்களையுடைய உத்தமன் அங்கதேசாதிபதியாகிய எங்களண்ணன் கன்னமஹாராஜனுடைய கரத்திற் பிடித்திருக்கும் வில்லானது, சத்துருக்கள் வந்துவளைந்துகொண்ட காலத்தில் அவர்களைக்கொன்று நாசப்படுத்தி யெனக்குவெற்றியைக் கொடுக்குந் துணையா யுற்றிருக்கின்றது. அதைநான் விவரித்துச்சொல்லவேண்டியதில்லை. என்மேல் அன்புடையவர்களேபோதும்போதும் அகலுமினென்றான் தீவினையையே துணையாக்கக்கருதிய துரியோதனன். இப்படியாகச்சொல்லிய மைந்தனுடைய வார்த்தையைக்கேட்டு, திரிதராட்டிரன் மனம் புகைந்தெரிய வெம்பி விசனமடைந்து வெவ்விய கோபங்களையும் அடக்கிக்கொண்டு விதுரனையும் சஞ்சயனையும் நோக்கி! மறுமொழி சொல்லாதிருக்கும்படியாகத் தனது கரத்தினற் றடவியணைத்து காமமைத்து கண்ணீர்சொரிந்து, என்னபாவம்!

இந்தப்பாவிமுன்பின் எண்ணுமல் வார்த்தை சொல்லுகின்ருனென்றேங்கித் ஏதுந்தோற்ருமற் சற்றுநேரமிருந்து பெருமூச்சுவிட்டு, ஆ! ஆ! சிருஷ்டி கர்த்தாவாகிய தெய்வமே! இவன் மாண்டுவிழுவோ பூமியை ஆண்டு வாழுவோ இவன்றலையி லெவ்விதமா யெழுதியிருக்கின்றீரோ, விதியையநுசரிக்கு மதி யென்பதற்குச் சரியாக அறிவும் பிறந்திருக்கின்றதே, அதைவிலக்கி நடத்தி வைப்பதற்கு என்றாத்திலில்லையே. "கண்ணைக்கெடுத்த தெய்வங்கோலைக் கொடுத்ததுபோல்" புத்திரபாக்கியங் கிடைத்ததைப் பறிகொடுத்து, உள்ள சரக்கைக் கப்பலிலேற்றி நடுக்கடலில் கவிழ்த்துவருந்திய ஒருவன்போல் துன் புறலாச்சேன்று வாடிப் பிள்ளையைநாடித் துரியோதனு! பாண்டவர்கள்பேற் பக்ஷமாய்ப் பேசுகிறதாய்ச் சொன்னையே! அவர்களா லிவர்களுக்காக வேண் டியதென்னவிருக்கின்றது. அப்பா! இப்படிக்கெல்லாம் நல்லோராகியநமக்கினி யவர்களின் மனம்நோவப்பேசாதை, "ஊருடன்பகைக்கின்வேருடன்கெடும்" என்னும் நீதிவாக்கியத்தை மறந்தையோ, "சிறியோருடன் சேராதை செம் புக்குப்புளிவாராதை" என்னும்பழமொழியை யோசிக்கவில்லையோ, "பெரியா ரைத் துணைக்கொள்" என்பதைப்போக்கி விட்டையோ, அப்பா! பெரியோர் கள் வருந்தப்பேசுவது புகழன்றென்று சொல்லி, மறுபடியும் இது யார்செய்த பாவமோ! யாரிட்டசாபமோ! வென்று தன்னைத்தானொந்து கொண்ட சமை யத்தில், வீஷ்மாசாரியரெழுந்து தன்வீட்டிக்குப் போனர். அவருடனே துரோணசாரியர் கிருபாசாரியர் அசுவத்தாமா விதுரர் முதலாகிய பெரியோர் களும், சிந்துதேசாதிபதி மத்திரதேசாதிபதி சகுனியாகிய மாமன் தொண் ணூற்றென்பது தம்பியார்கள் தேசராஜர்முதலானவர்களும், சபையைவிட்டு நீங்கி எமதூதர் கைக்குள்ளடங்குங் காலஞ்சமீபித்த தென்றேங்கித் தங்கள் தங்களுடைய விடுதிகளிற் சேர்ந்தார்கள். ஆலகாலத்தை யொத்த துரியோ தனன், அருமருந்தனைய சஞ்சயன் மூலவோராகிய திரிதராட்டிரமகாராசன் இவர்கள் மூவருஞ் சபையிலிருந்தார்கள். அதன்பின் வினைப்பயனின்சூட்சியி னல் விளைந்தகாரியங்களைச் சொல்லுகின்றோம். இப்பால்; குளிர்ச்சி தங்கிய ஓர்வெள்ளைக்குடை நிழலில் உலகத்தையாளும் திரிதராட்டிர மஹாராஜன் ஒப்பில்லாத பிள்ளையையும் சிறந்த சஞ்சயனையும்; அழைத்துக்கொண்டு பரிசுத்தமும் பதிவிரதாதன்மமுங்கொண்டு பிரகாசமுற்ற பொற்பிரதமையை யொத்த காந்தாரியிருக்கும் உயர்ந்த வரண்மனைக்குட்சென்ருன். அந்தக் காலத்தில் காந்தாரிதேவியானவள் எதிர்கண்டோடிபாதபூசைசெய்து பத்திரா க்ஷதைசாத்திவணங்கிச் சிங்காசனத்திற் சேர்ப்பிறவமைத்துத் தீர்க்கதண்டஞ் செய்து இருக்கும்போது துரியோதனன் தன் தாயைப்பணிந்து கொள்ள வும், வாழ்த்தியெடுத்து; மார்புறவணைத்து விடவும், சஞ்சயனுந் துரியோதன னும் அரசனுக்குச் சமீபத்திலிருந்தார்கள். அப்போது திரிதராட்டிரன் காந் தாரியை நோக்கி பெண்ணே! இன்றையதினம் இராஜசபையிலிருந்த எல் லோர்களுங்கூடிப் பற்பல நீதிநெறி தருமங்களை யற்புதமாக எத்தனை விதத்தி லெடுத்துச்சொல்லியும் உன் புத்திரனுகிய சர்ப்பக்கொடியோன் விற்பிடித்துப் போர்செய்வதே பொருளெனக்கொண்டு பூரிப்படைந்திருக்கின்ருன், விசாரிக்

ருங்காலத்தில் மேலாகிய தவத்தினாற்கொண்ட அஸ்திரசஸ்திரங்களின் தையும் மறத்தையும் அறத்தையும்பூரணமாகப்பெற்றிருக்கும் புகழினையுடைய பாண்டுவின்புத்திரர்களுடன் யுத்தஞ்செய்யத்துணிவது தகுதியல்லவென்றும் பொருந்திவாழ்வதுவே உத்தமமென்றும் பத்தியையுடைய மன்னர் பலருஞ் சொன்னார்கள். நான் ஜேஷ்டபுத்திரனைநோக்கி அப்பா! பகைதேடிக்கொள்ள வேண்டாம், வகையில்லாமல் வயிரமென விளையும் யுத்தத்தை நிறுத்திவிடு என்றுசொல்லியும் நமதுதந்தைநமக்கு விரோதஞ்சொல்லுவாரா என்றெண்ணா மல் கன்னனுடைய வார்த்தையைக் கனகமலையாகநம்பி என்வாக்கியத்தை இகழ்ந்துவிட்டான், ஆகையால், நங்கையே! உன்னைக்கொண்டாகிலும் உன் புத்திரனுக்குத் தெரியச் சொல்லச்செய்து சீர்படுத்தலா மென்றெண்ணங்கொ ண்டு உன்னிடத்திற்கு அழைத்துவந்தேன், இப்போதும் பாண்டவர்களுக்கு விசேஷித்ததொன்றுங் கொடுக்கவேண்டியதில்லை, முன்னேயவர்கள் சூதா டித் தோற்றுப்போன பூமியை இப்போது கொடுத்துவிட்டால் அவர்கள்கூறிய சபதமும் மனஸ்தாபமும் மேற்கொண்ட கோபமும் மாறிப்போய்விடுவார்கள். நமது பெரியோர்களின் எண்ணமும் இப்படியேயிருக்கின்றது. இதைவிட்டு தீயபுத்தியையுடைய தீங்கினர் வாய்மையைத் திரமென்றுநினைத்து செருச் செய்யப்போகிறானும், அப்படி சமர்செய்யத்தொடங்குவானாகில் ஜயாபஜயம் எப்படி முடியுமோ தெரியவில்லை ; பெண்மணி! ஜெயம் சேற்றில்நட்டகம்பம் ஆதலால் ; உன்னுடைய புத்தியிற் றெளிவாகச் சிந்தித்து அஸ்தினபுரி தேச ராஜனாகிய துரியோதனனுக்குத் தெரியப்படுத்தக்கடவையென்று திருதராட் டிரனாகிய நாயகன்கூறினன். தேவியானவள் அந்தவார்த்தையை மந்திரம் போற்கேட்டு வணங்கி எதிரிலிருந்த மைந்தனைநோக்கி, குழந்தாய்! 'பெரியா ரைப்பேண்' என்னும்வாக்கியத்தைக் கொண்டு சிறியோர்சிநேகத்தைவிடுத்துப் புகழைப்பெறாமல், பெரியோர்சொல்லும் வார்த்தையைப் பிரயோசனமல்ல வென்று இகழ்ந்துவிடுவது சிறுமையே அல்லது பெருமையோ ,இவ்வுலகத்தி லன்றி மற்றெவ்வுலகத்தினும் இணையில்லாமற் சிறந்த என்மைந்தனே! உன் தந்தையானவர் களித்து மிகுந்த ஆசையுடன் சொல்லுவதுபோல் நடப்பை யாயின் பெருவாழ்வைப் பெறக்கடவையென்றுரைத்து வாழ்த்திய அன்பினை யுடைய தாயைப்பணிந்து அரவக்கொடியோன் அம்மா! ஐவர் சம்மதித்துச் சூதாடியிழந்த அவனியை இப்போது நான்கொடுத்துவிடுவேனாகில் அவர்க ளுடைய ஆண்மைத்திறத்தினுக் கஞ்சிக்கொடுத்துவிட்டதாய் வீராகியவேந் தர்கள் அவமதிப்பாய் நினைத்து நிந்திப்பார்கள். அதனாலெனக்குக் குறைவுண் டாகும், இதுவரையிலும் பத்துத்திசையிலும் வெற்றிசெலுத்திச் சுற்றத்தா ருடன் வாழ்வைப்பெற்ற வணங்காமுடியோனாகிய யான் பசபசவென்று விழி த்து வசையைக்கொண்டு இசைபெற்றபாண்டவர்களுடைய பாதங்களில்வண ங்கி இச்சகஞ் சொல்லி எண்சாணுடம்பு மொருசாணாகக்குன்றி வயிறுவள ர்த்துக்கொண் டுயிருடனிருந்து வாழேன் ; ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு ; அம்மணி "அழியும் பிராணனை அவத்தில்பாய்க்காமல்" அமர்புரிந்திறப்பேன், அப்படியல்லவென்றால், என்னுடைய வெற்றியையும் பாண்டவர்களுடைய

சத்திய சகாய சாமர்த்திய சக்தியையும் ஈரேழுலகமும் நன்றுகொண்டாடும் படியாகச் செயும்பெற்று புவனசக்கரேஸ்வரனென்னும் புகழ்கொண்டு இப் பூமியையாள்வேன். அற்பபலங்கொண்ட ஐவர்கள் என்னுடனெதிர்த்துநின்று போர்புரிய மாட்டார்கள். எதிர்நின்றுவென்று செயங்கொள்ளும்படியாகிய முறைமை இதுவரையிலும் என்னிடத்திலிருப்பதேயன்றி இன்னமுமுயற்சி செய்துகொண்டிருக்கின்றேன். இதன்றியும், சொக்கட்டானையுருட்டி தங் கள் செல்வமுழுமையுந் திரட்டிக்கொடுக்கப் பெற்றுக்கொண்ட நான் காட்டில் ஓட்டிவிட்டிருக்க மாண்டார்போல் வனமடைந்த பாண்டவர்கள் மீண்டும் வந்து என்னை மருட்டிப் பூமியைப்பெறக்கருதினால், பேரிகைசப்தங்கேட்டு ற ந்த நரியைப்போல்பயந்து பூமியைக்கொடுக்கமாட்டுவேனோ! ஒருக்காலும் ஏமாறமாட்டேன். ஐவர்கள் பூச்சிகாட்டவந்ததும் அவர்கள் பட்சத்தில் நம்மிடத்திலிருக்கும் பலபேர்கள் பரிந்துபேசுவதும் இவைகளையெல்லாம் யோசிக்காமல் என்தந்தை சபையினிடத்தில் என்னுடைய வல்லமையை யிகழ்ந்து பேசியதுங்கேட்டுக்கேட்டுச்சகிக்காத கோபத்தினாற்றந்தைவார்த்தை யைத்தடுத்தேன், தாயே! வச்சிராயுதன்முதலாகியபேர்கள் வந்தாலும் லக்ஷ யமில்லாமல்வெல்லுந்திறத்தினையுடைய என்சேனைகளை யுத்தகளத்திற்கண்ட வுடனே பாண்டவர் மெத்தவருந்தி யிறப்பார்கள் அன்னையே என்று யற்பல வித பராக்கிரமங்களை பவளம்போன்ற விதழினையுடைய காந்தாரியினிடத்திற் சொல்லிக்கொண்டு வராநின்ற மகனுடைய மதிப்பில்லாதசொற்களைப் பெரிய மன்னவன்கேட்டு மயக்கமுற்று வாடிவருந்தி பெருமூச்சுவிடுத்து ஏதேது இனிகாரியமில்லையென்று இளைத்து தெளிவினையுடைய சஞ்சயனைநோக்கி புத்தியிற்சிறந்த உத்தமனே! பாண்டவர்களுடைய பலங்களையும் நமது பிள்ளை களினுடைய தோளாண்மைகளையும் ஆதியோடந்தமாகத்தெரிந்தவனீயாகை யால் இந்த இருதிறத்தவர்களுமெதிர்த்து யுத்தஞ்செய்தால் எவர்கள் வெல்லு வார்கள் எவர்கள் எவர்கள் தோற்று இறப்பார்கள். இதை யான் தெளிந்து கொள்ளும்படியாக உள்ளபடிசொல்லென்று திரிதராட்டிரன் கேட்கச் சஞ்ச யன் சொல்லுகின்றான்.

அரசனே! கேளும், கலைஞானந்தெரியாத மானிடனாகையால் இதையறிந்து சொல்லுந்திறம் எனக்கில்லை, தேவரீர் தெரிந்துகொள்ளவேண்டு மாகில் அளவற்ற புகழ்பெற்ற மூலகாரணனாகியும் முக்காலமுமுணர்ந்த தவச் சிரேஷ்டனாகியும், இறப்பும் பிறப்புமற்ற இறையாகியும், வேதங்களைப்பெற்ற விமலனாகியும் விளங்காநின்ற ஸ்ரீவேதவியாசபகவானைத் தாமசமில்லாமல் வந் தித்துச் சிந்திப்பாயாகில் அவர் சிறந்துவந்து உனக்குத் தெரிவிப்பாரென்று சஞ்சயன்சொல்ல சரிதானென்றுட்கொண்டு திருதராட்டிரன் சஞ்சலமற்று அசைவற்றிருந்துவருந்தி நினைத்தபோது, மின்னார்ந்த பொன்போலும் புரி யோய்ந்தசடையும், புலித்தோலுடையும், அசைந்த நடையும், மிதியவயும், அழகியகுடையும், கரத்திற்றடியும், முப்புரிநூலிலங்குமார்பும், விபூதி தூளித மேனியும்பிரகாசிக்க விண்ணைவிட்டிறங்கிய சூரியனைப்போல்வந்து வேந்தனுக் கெதிரில்நிற்க, அவ்வியாசபகவானைத் திரிதராட்டிரன், காந்தாரி, துரியோத

னன், சஞ்சயன், இவர்கள் நால்வருங்கண்டு எதிர்கொண்டோடி சாஷ்டாங்க தண்டனிட்டு அருக்கியபாத்திய ஆசமனீய அக்ஷதை சந்தனாதி தூபதீபங் களுங்கொடுத்து ஆசனத்திலெழுந்தருளச்செய்து கலக்கமுற்ற மனத்தினை யுடைய காந்தாரிநாயகன்கண்ணீர்சோரவிட்டுத் தானெண்ணியகாரியங்களைக் குறித்துக்கேட்கவும், பெருமையிலுயர்ந்த வியாசபகவான் கேட்டுக் கலீரென நகைத்து திரிதராட்டிரனைப்பார்த்து நாளைநடக்கப்போகிற சமரிலெதிர்க்கும் பிள்ளைகள் நூற்றைவரில், இறப்பவர்களியார், இருப்பவர்களியார் என்றுகேட் டனன்? இந்தக்கேள்விக்கு, விவேகத்திற்சிறந்த மேலானவர்கள் விளம்பிய மொழியொன்றுண்டு. அதென்னவென்றால், 'சத்தியமுள்ளவிடத்தில் ஜெய முண்டாம், அசத்திய முள்ளவிடத்தில் அபஜெயமுண்டாம்' என்று பழமொழி யிருப்பதினால் நல்வினையைத் துணையாகக்கொண்டும்; நல்வினைக்குத்தக்க நல்லொழுக்கங்களுக்குத் துணையாயிருந்தும், நடத்திய நல்லோரெவர்களோ அவர்களுக்கு நலமும் பலமும் ஜயமும் புகழ்ச்சியுமுண்டாம். இதைவிடுத்துத் தீவினையைத் துணையாகப்பெற்றும் தீவினைக்குத்தக்க தீயகுணங்களுக்குத் தானே துணைப்பட்டிருக்குந் தீயராகிய பெயர்களுக்குத் தீமையும் துயரும் இகழ்ச்சியும் அபஜயமும் நரகவேதனை முதலிய துன்பங்களு முண்டாகும், மேலும், உன்பிள்ளைகள் ஏழுசமுத்திரத்திற்கொப்பாகியசேனைசயினியங்களைக் கொண்டு யுத்தஞ்செய்து வெற்றிப்பெறக்கருதி யுத்தபூமியில் வந்தாலும் இவர்கள் படையினிடத்தில் தானவ வைரியென்னும் திருமாலுக்கொப்பாகிய தீரர்களிருந்தாலும் யமதூதர் உயிருடன் விட்டுவிடுவார்களோ? ஒருக்காலும் விடார்கள். அரசனே! ஆனால், எமது கர்த்தனாகிய கடவுளின் கருணைக்கண் எவர்களிடத்திற் றங்கியிருக்கின்றதோ அவர்களுடைய புயத்தில், சேற்கணை யையொத்த கண்களையுடைய ஜயலட்சுமி சேர்ந்துவாழ்வாள், கிளைகள் தழைந்த சோலைக்கொப்பாகிய பந்துமித்ரபுத்ரசம்பத்துக்களுடன் செல்வ மோங்கிய திரிதராட்டிரமகாராசனே! இவைகளைச் செவ்வையாயோசிக்கக் கடவையென்று வியாசபகவான் மேலுஞ்சொல்லுகின்றார்.

என்னரசே கேளும்? அஷ்டாக்ஷரப்பொருளாகிய மாதவன், ஸ்ரீநாதன், ஹரி, வாசுதேவன், முகில்வண்ணன், முரஹரி, ஜநார்த்தனன், பக்தபராதீனன் பக்தவற்சலன், பரமதயாளு, பரமபுருஷோத்தமன், என்னுந் திருநாமங்களிற் பலநாமங்களைக்கொண்ட பகவானுடைய பாதபங்கயங்களை யுள்ளத்திற்கொள் ளூம் பரமபாகவதர்கள் பெறுதற்கருமையாகியபேறு பிரமாண்ட பேரண்டங் களிலு மேலாகியது. ஆதலால் இத்தன்மை வாய்ந்த பரமரகசியத்தைநீங்கள் கைப்பற்றாமலிருக்கின்றீர்கள். பாண்டவர்கள்தங்களுடைய நாதனென்றுந்தங் கள் மைத்துனனென்றும் சகாயனென்றும் ஆபத்திலருள்புரியுமையனென்றும் திரிகாணசுத்தியாய்ச்சிந்தித்து நன்னெறியில் நடந்துவருகின்றார்கள். அதனால் உன் புத்திரர் வெற்றிபெறுவார்களென்று எவர்கள்சொல்லுவார்கள், அரசே! புள்ளாங்குழலைப்பூரிக்குஞ்செம்பவளவாயன் கோபாலனுஞ்செய்தமாமாயன் சிந் திப்பவர்களுக்குச் சேயினிடத்திற்பொருந்திய தாயைப்பார்க்கிலும் பரிவுள்ள நேயனானவனென்று துணிவுகொண்டு நீங்களும் நேசவிசுவாசத்துடன் அந்தக்

கடவுளைநெஞ்சில் நினைப்பீர்களாகில் நினைந்தகாரியங்களெல்லாம் இனிமேற் கைகூடுமென்று வெகுளாகிய வசனங்களைப் பரிசுத்தமுள்ள வியாசபகவான் சொல்லக்கேட்டிருந்த திரிதராட்டிரன், முனிசிரேஷ்டருடையகருத்தைத்தெரிந்துகொண்டுவணங்கி என்னிஷ்டதெய்வமே! இவ்வுலகவாழ்வென்னும் மாயைவலைக்குட்சிக்கியுழன்றுவருந்திமாய்ந்தவியும்பெருமோசத்தைக் கண்டிருந்தும் படுகுழியில்வந்து விழுமென்னைப்பாதுகாத்து யானுய்யும்பொருட்டு வேதவிதியாகிய தத்துவத்தை யெனக்கு விளம்பி யருளும் மெய்யனே! இப்போதறிந்துகொண்டேன், போனநாள்போக இந்நாண்முதற்கொண்டு மன்னுயிர் யாவையும் பெற்றளிக்கு மாதவனுடைய மலரடியை மனத்திநிறுத்தி அவனுக்கடிமையாகிய அரசுபுரிந்து வாழ்வேன், இதுவரையிலும் அறிவழிந்தேனென்று திரிதராட்டிரன் சொல்லித்துதிக்க இதைக்கேட்டிருந்த மாசுணக்கொடியோனாகிய மைந்தனென்னுந் துரியோதனன் சொல்லுகின்றான்.

கவி.

உலகையோரடியளந்தமாலெனினு முண்டுமிழ்ந்தவரியென்னினும்
அலகையாருயிர்பறித்துளானெனினு மதனைநல்கினவனென்னினுந்
திலகமானவனையெட்டுணைப்பொழுது சிந்தைசெய்துமதிகொள்கிலேன்
பலகலன்புனைதனஞ்செயற்குறவு பற்றியுள்ளமுறுபான்மையால்.

இவ்வுலகங்களையெல்லாம் ஓரடியிலளந்த திருமாலானாலும், மற்றெவ்வுலகங்களையும் விழுங்கிக்கக்கின அரியானாலும், பூதகியின் பெரும்பாலுடன் பிராணனையு முறிஞ்சிவிட்டவனானாலும், ஆத்மகோடிகளைச் சிருஷ்டித்த அயனைப்பெற்றவனானாலும், பலவித ஆபரணங்களினாற் பிரகாசிக்கும் அருச்சுனனுக்கு உறவாகி ஐவருள்ளத்திற் பொருந்தியிருக்குந் தன்மையினால் அவனுக்குத் திலகம்போன்ற யான், அந்தக்கண்ணபிரானை எள்ளத்தனைபோதும் என் சிந்தையால் வந்திக்கமாட்டேனென்று வரையறுத்துக்கூறிய மைந்தன் வார்த்தையைக்கேட்ட மன்னவன் எதிரிலிருந்த மாமுனியைநோக்கி சுவாமீ! இவனென்னகாரணத்திற்கு உற்பத்தியானானோ? எல்லாருயிரையும் போக்கவந்த யமனோ? அல்லது; அவன் பிள்ளையோ? பெரும்பூதமோ? என்குலகோத்திரத்தைக்கெடுக்கவந்த குறளியோ? துதிக்குப்புகழை அழிக்கவந்த துடைகாலனோ யானறியேன்; இன்று; நான் சொல்லிய வார்த்தைக்கெல்லாம் எதிர்த்து மாறுபாடாக மறுத்துச் சொல்லுவதேயன்றி இணங்கிவரவில்லையே! இவனுக்குச் சாங்காலஞ் சமீபித்ததோ கடவுளே ஆங்காலம் பொய்யுமெய்யாகும்; போங்காலமெய்யும் பொய்யாமென்று; புவியில்வழங்கும் பழமொழியும் என்னளவிலுண்மையாச்சே; ஆகிலும், அநித்தியமாகிய வுடலென்னும் பொய்யை மெய்யெனப் பேர்கூறியிருக்கும் விதம்மிகவும் நன்காயிருக்கின்றது; ஐயோ மாயாமயக்கப் பிரபஞ்ச வலையிலகப்பட்டு மனம்வருந்தி மடியவேண்டிய தென்னையென்று திடங்கொண்டு மைந்தனைநோக்கி! குற்றமில்லாதஎன்குலந் தழைக்கப்பிறந்த உத்தமனே உன்சிந்தையில் நினைத்த வண்ணம் நடக்கக் கடவையென்று பற்பலவிதமாகிய வெறுப்புவார்த்தைகளை விளம்பி புத்திரபாசப் பெரும்பிணிப்பதனால் மறுபடியுஞ் சிரேஷ்டபுத்திரனுடைய மனத்தை எவ்வித

த்திலாகிலும் திடம்பெறத் திருத்திப் பெரும் புகழ்மாண்பில் நிலைநிறுத்தவேண்டும்; என்னையனே என்றுஇறைவன் சொல்லக்கேட்ட; வியாசபகவான் சொல்லுகின்றார். அரசனே; ஏதுக்கு வருந்துகிறாய்; காம்பு பற்றிப்போன மனம் இனித்திரும்பாது ; இவன்சத்துருக்களுக் கெதிரில்யுத்தஞ்செய்து இவனுக் கேற்படுத்தி யிருக்குந் தலைவிதிப்படியே இறக்குங் கொள்கையை உடையவனாகவே யிருக்கின்றான், இதுஉண்மைதான் 'என்றுசொல்லி இன்றுமுதல், உலகரக்ஷகனாகிய உவணவூர்தியின் உபயதிருவடிகளை உள்ளத்திற் சிந்தித்துக் கொண்டு நீர்க்குமிழி போன்ற உடலிருந்தாலும் இறக்குங்கால மெதிர்ந்தாலும் வீணாகிய பலசிந்தைகளையும் பற்பலஎண்ணங்களையும் விடுத்துநன்னெறி நிலையில்நிற்கக் கடவையென்று வேதமுனிவன் விளம்பிய தண்ணமுதினுக் கொப்பாகிய மொழிகளைத் தன்செவியாரக்கேட்டு இதுவே கடைப்பிடியென்று மனங்கொண்டு சூரியனையொத்த வியாசபகவானுடையபாதங்களில் விழுந்து சுவாமீ! பாசபந்தநெறியைத்தொடர்ந்து எவர்கள்கெட்டழிந்தாலும்தேவரீருபதேசித்த திருமந்திரத்தைச் சிந்தனைசெய்து என்காலத்துக்குத்தகுந்த விச்சையைப்பெறுகின்றேன். இறைவனேஎன்று கரங்குவித்திறைஞ்சிய திரிதராட்டிரனுக்கு ஆசீர்வதித்துத் தக்ஷணம் வானத்திற்றோன்றிய மின்னலைப்போல்மறைமுனிவன் மறைந்துபோயினான். வேதங்களை விரித்துவிளம்பியருளிய வியாசபகவான் போனபின்பு; திக்குநோக்கித் தெண்டனிட்டுக்கொண்டு தனக்குச் சமீபத்தில் நிற்காநின்றபரிசுத்தமாகியபுத்திரனை நோக்கி உன்மனத்துக்கு இஷ்டமானசெய்யென்றுவிடைகொடுத்துவிட்டுவந்த சூரியனைப்போன்றதேகத்தையும் விவேகத்தையுமுடைய சஞ்சயனை விடுதிக்குட்போகும்படி அனுப்பிவிட்டு, பலமணிகளினாலும் நலம்பெறச்செய்த மாளிகையினிடத்திற் காந்தாரியுடன் ஆகுங் காரியங்களை யோசித்துக்கொண்டிருந்தான் திரிதராட்டிர மஹாராஜன். இதுவரையில் இருளில்லா மனத்தினையுடைய சஞ்சயன் பாண்டவர்களிடத்தில் தூதுபோய்வந்து உரைத்த பலவாக்கியங்களையும் தெளிவில்லாத திரிதராட்டிரன், துரியோதனன், முதலாகிய பேர்கள் தெரிந்துகொண்டதைக் குறித்து திருத்தமாகப் பேசிக்கொண்ட விதங்களியாவையும் விளம்பினோம். மயக்கமற்ற பாண்டவர்களிடத்தில் வார்த்தையாடி விடைபெற்றுக்கொண்டு சஞ்சயன் வந்தபின்பு, அந்நிவண்ணனுடைய அருளைக் கவசமாகக்கொண்டு அடல்புரியத்துணிந்து ஹரிபரந்தாமனுடைய அடியிணையைப் பணிந்துவாழும் ஐவர்கள் உபப்பிலாவியத்திலிருந்து உத்தமர்களுடன்கலந்து, இனிநடத்தநினைத்த செய்கைகளைச் சொல்லுகின்றோம், கேளும் ஜெனமேஜெயமஹாராஜனே என்று வைசம்பாயனர் சொல்லினார்.

சஞ்சயன் தூதுச்சருக்கம்

முற்றிற்று.

---

## ஸ்ரீகிருஷ்ணசுவாமிதூதுச்சருக்கம்.

பேர்படைத்தவிசயனுடன்மும்மைநெடும்பிறவியினும்பிரியானாகிச்
சீர்படைத்தகேண்மையினாற்றேரூர்தற்கிசைந்தருளுஞ்செங்கண்மாலைப்
பார்படைத்தசுயோதனற்குப்படையெடேனமரிலெனப்பணித்தகோவைக்
கார்படைத்தநிறத்தானைக்கைதொழுவார்பிறவாழிக்கரைகண்டாரே.

சுவர்க்கமர்த்திய பாதலமாகிய மூவுலகத்திலும், விஜயபராக்கிரம சௌரி யத்தினாற் புகழ்ப்பேர்படைத்த பற்குணனுடனே, இரணியசங்காரஞ்செய்ய அழகியநரசிங்கரா யெழுந்தருளியபோது பிரகலாதனாகியும், இராவணவதை செய்ய ஸ்ரீராமபிரானாயவதரித்தபோது விபீஷணனாகியும், பூபாரந்தீர்க்க ஸ்ரீகண்ணபிரானாவவதாரஞ்செய்தபோது அருச்சுனனாகியும், இப்படிமூன்றவதாரத்தினும் பிரியாமற்பிறந்து சீர்படைத்தசிநேகிதத்தினால்அந்தப்பார்த்தனுக்குச்சாரதியாகஇசைந்தருளிய, செந்தாமரைக்கண்களையுடையதிருமாலை,கெடிஸ்தலாதிபதியாகிய துரியோதனன் வந்து படைத்துணை வேண்டியபோது இனி நடக்கப்போகிற பாரதயுத்தத்திலே ஆயுதங்கையி லெடுப்பதில்லையென்று உறுதியாகச்சொல்லி நம்பி மூத்தபிரான்முதலிய பேர்களைப் படைத்துணை கூட்டி விடுத்த இறைவனை நீலமேகநிறத்தினையுடைய ஸ்ரீகண்ணபிரானை கனவிலுமறவாதுகைவிற்றொழுதபேர்கள், பிறவிப்பெருங்கடலைநீந்திமுத்தியின் கரையைச்சார்ந்து சித்தியாகிய வரம்பெறுகின்று, நித்திய தத்துவமடைந்தவர் களென் நினைக்கும் உத்தமர்களையும், ஸ்ரீவேதவியாசபகவானையுந் துதித்து துரியோதனனிடத்திருந்து, ஸ்ரீகண்ணபிரான் திருவடிபெயர்த்துத்தூதுசென்ற வரலாற்றை ஒருவாற்றாற் சொல்லுகின்றேனென்று வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

திருநாட்டிற்சிறந்த குருநாட்டிற்பிறந்த ஜெனமேஜெய மஹாராஜனே! கேளும், தம்பிமார் நால்வருடன் தருமபுத்திரமஹாராசன் பன்னிரண்டாண்டு வனவாசமும், ஓராண்டு அஞ்ஞாதவாசமுந்தொலைத்துஉபப்பிலாவியமென்னும் பட்டணத்தில் வந்திருந்து தன்னுடைய ஸ்ரீதனபுரோகிதனாகிய உலூகமுனியைத்துரியோதனனிடத்திற்குத் தூதனுப்ப அந்தத்துரியோதனன் முதலானவர் திரிதராட்டிரனுடன் கலந்து பேசிக்கொண்டு,தங்களுடைய புரோகிதனாகிய சஞ்சயமுனிவனையழைத்து சஞ்சயனே! நீ உபப்பிலாவியத்துக்குச்சென்று; பாண்டவர்களைக்கண்டு ஞானப் பிரசங்கம்பேசி தருமபுத்திராதியரை இன்னமும் வநவாசம்போகத்தக்கதாக இசைத்துவாருமென்றனுப்ப, அந்தப்படியே சஞ்சயன் பாண்டவர்களிடத்தில்வந்து ஞானப்பிரசங்கஞ்செய்து ஆக்கை இளமை செல்வம் இவைமுதலியனவும் அநித்தியமாகையால் நித்தியமாகிய தவமிழைத்து முத்திபெறுவதே உறுதியாகிய உத்தமமென்றுரைக்க, அதைக்கேட்ட வீமசேனன்; மெத்தவுங்கோதித்து சத்துருசங்காரஞ்செய்து நாங்கள் கூறிய பிரதிஞ்ஞையை முடிப்பதே தவமென்று பேசியனுப்ப, இவ்வார்த்தையைக்கேட்டு சஞ்சயமுனிதிரும்பி அஸ்தினபுரம் போனபிற்பாடு; சாமதான பேததண்டமென்னுஞ் சதுர்விதவுபாயமும் இவைகளின்விவரமாகிய சாமதா

ணத்தாற் காரியங்கைக்கொள்வது சாமம் பொருள் முதலியவற்றைக்கொடுத்து காரியானுகூலம் பண்ணிக்கொள்வது தானம்; வேறொருவராற் பகையை விளைத்துத் தான் சிநேகமாயிருந்து காரியசித்தி செய்துகொள்வது பேதம்; நால்வகைச் சேனைகொண்டெதிர்த்து யுத்தஞ்செய்து வெற்றியுடன் வேண்டியவைகளைப் பெறுவது தண்டம்; இந்நான்கும் அரசர்களுக்குரிய உபாயமாகையால்! இவ்விதமாகிய சதுர்விதவுபாயங்களில் வழுவாமற்பேசிச் சத்துருக்களை வசப்படுத்தி ஆகவேண்டிய காரியங்களை காலத்துக்கேதுவாயமைத்து வரத்தக்கவர் கோபாலகிருஷ்ணனேயன்றி வேறொருவரில்லை யென்றுணர்ந்து பரிமளம்பொருந்திய பரிசுத்தமாகியகுளிர்ந்த துளபமாலையணிந்த மாயவனைத் துரியோதனனிடத்திற்குத் தூதுவிடுதற்கெண்ணித் தருமநந்தனன் சொல்லத் தொடங்கினன்.

ஸ்ரீகண்ணபிரானே! செவ்வையாகிய காரியங்களைச் சொல்லவந்தவரைப் போலவந்து தீங்காகிய வார்த்தையைச்சொல்லிய சஞ்சயமுனிக்கு நாம்செப்பியவசனமும் உலூகமுனியை முன்னதாகத் தூதுவிடுத்த நமக்கு துரியோதனன்அப்போதுபேசியனுப்பிய வசனமும் தேவரீருடையதிருவுளம்அறியுமே, சுவாமி அப்படியிருக்க? கொடியவிஷத்தை வெகுவாகக்குடித்து அந்தவிஷந் தலைக்கேறி உடம்புமறந்து உறங்கிக்கிடக்கும் ஒருவனுக்குச் சவுக்கியஞ்செய்ய நினைத்து நல்லமருந்தும் மந்திரமும் கடுகவிசாரித்துக்கொடுத்து நன்மைசெய்ய நினைக்காமல் சுற்றிலுமிருந்து வருந்தி வாட்டமுற்று மயங்கித் துன்பப் பட்டுக்கொண்டிருக்கின்ற எங்களுக்கு வேண்டிய பக்குவங்களைச்செய்து இரட்சிக்காமல் ஏனோதானோவென்று சும்மாவிருப்பது நியாயமோ? ஐயனே! ஏதாகிலும் ஒரு யுத்தி புத்தியை எங்களுக்குப்போதித்தருளவேண்டும், ஸர்வ சீவராசிகளின் மனத்திலுமிருந்து விளையாடுஞ்சோதியே குருக்ஷேத்திர பூமியில் அரிதாகிய யுத்தஞ்செய்ய துரியோதனாதியர் சம்மதிப்படுவார்களாகில் அது நமக்கு மிகவுநல்லது. அதைவிட்டு நாம் யுத்தஞ்செய்வதற்குத் தயாராயிருக்கின்றோமென்று முந்திச்சொல்லி யனுப்பிவைப்பது முறைமையல்லவே, ஆகையால் தேவரீர் பிரயாசை யெடுந்துக்கொண்டு திருவடிவருந்த அஸ்தினாபுரத்திற்குப்போய்த் திரிதராட்டிரன் துரியோதனன்முதலியபேர்களைக்கண்டு வார்த்தையாடி அவர்களுடைய கருத்தையறிந்து சமப்படுத்திவரவேண்டிய கடமை உம்முடையதென்று கிருபாவெள்ளம்பெருகும்படியாகத் தருமராசன் சொல்லிய வார்த்தையைக்கேட்டு வாணாசூரனுடைய வாணனையும் புஜகிரி இரண்டாயிரத்தையும் அழித்தஅரிபாந்தாமனுனவன் வீமசேனன் அர்ச்சுனன் நகுல சகாதேவனென்னும் நால்வரையு மருகில் வைத்துக்கொண்டு சாத்தகி முதலியபேர்களுஞ் சுற்றிலுமிருக்க யுத்தகளத்தில் வெற்றிபெற நாடும் முரசக்கொடியினையுடைய தருமராஜனே! நாளையொருகாலத்தில் நீங்களென்னை வீணாக நிந்திக்கவேண்டாம், அவரவர்களுடைய மனோநிச்சயத்தை வெளியிட்டுச்சொல்லுங்கள், நான் சொல்லுவதையுங் கேளுங்கள்; அதென்னவெனில், வயல்களினிடத்தில் தாமரை மலர்களுடன் வராலினங்கள் மருவிவிளையாடும் வளப்பங்கொண்ட குருநாட்டில் பாகப்பிரகாரம் பாதிவாங்கிக்கொண்டு அரசு

செலுத்தி வாழ்ந்திருக்கநினைவோ அல்லது பழையபடியே துன்பமுடையவர்க ளாய்த் தனமுங்களமும் விடுத்து வனமேகந்தியாக அநித்து இன்னமும்வாடித் திரியநினைவோ அல்தென்றி பகைமேற்கொண்டு பிழைப்பாரியாரோ சாவாரியா ரோவென்று சந்தேகப்படும் போர்முகத்திற்கோபித்தெழுந்து யுத்தஞ்செய்து சபையிற்சொல்லிய பிரதிக்கினையின்படியே துரியோதனனையக்கொன்று ஜயம் பெற நினைவோ; ஐவராகிய உங்களொவ்வொருவருக்கு மிருக்கின்ற எண்ண மென்னவென்று திருமால்கேட்க, அப்போது தருமசொரூபியாகிய தரும ராஜன் சொல்லுகின்றான்; நந்தகோபாலன் களிக்கும் நந்தனனாகிய நாதனே கேளும்; வைராக்கியமென்னுங்கொடுமையாகிய நெருப்பை வாசாமகோசரமாக வளர்த்து விடுவோமாகில் தனக்குத்தானே இழைந்து பற்றிக்கொண்டெரிந்து சுற்றிக்கொண்டிருக்கும் மூங்கிற்காடெல்லாம் அழிந்துபோகுந் தன்மையைப் போன்ற நாங்களிருதிறத்தவரும் குற்றம்பொருந்திய யுத்தகளத்தில் ஓமாதர மாய் மாண்டுபோவோம், ஆண்டவனே! எங்களிருதிறத்தவருக்கும் கேடு வாராமல் செவ்வல்லியுந் தாமரையும் பரிமளிக்கின்ற வயல்கள்சூழ்ந்த குரு நாட்டிலே நாங்கள் நூற்றைந்துபேரும் அந்தமலர்களைப்போல் ஒருமித்துக் கலந்துவாழும்படியாக எங்களுயிர்க்குயிராகிய தேவரீர்தூதுபோய் சமாதானம் செய்யவேண்டிய கடமை உம்முடைதென்று தருமராஜன் சொல்ல? தாயென்று வந்த பூதகியுயிரைக்கொன்ற ஜனார்த்தனன் சொல்லுகின்றான். உததிசூழுலகா ளும் தைத்துனரே கேளும்? பூர்வம் சபாமண்டபத்தில் சூதாடித்தோற்ற பிற் பாடு புண்ணியத்தைப் பொருளாகவைத்து மறுபடியுஞ் சொக்கட்டானாடி திரௌபதையும் நீங்களைவரும் அடிமையினின்று மீண்டபோது அச்சபையி லிருந்த அரசர்களுக்கும் பெரியோர்களுக்கும் எதிராக உங்களைப்பார்த்து கலீரென நகைத்து பன்னிரண்டுவருடம் வனவாசமும் ஒருவருடம் அஞ்ஞாத வாசமும் செய்து வருவீர்களாகில் உங்களுடைய பாகத்தைக் கொடுத்து விடுகிறேனென்று விதுரனையும் துரோணாசாரியனையுங்கொண்டு அப்போது சொல்லிவித்த துரியோதனன் இப்போது? சொன்ன சொற்றவறிப்போவா னாகில் அவனைப் போர்முகத்தில் மாய்த்து உங்கள் சொந்தமாகிய பூமியை நீங் கள் பட்டங்கட்டிக்கொண்டாள்வதற்கு யாதொரு தடையுமில்லையே என்று கேட்க, அதற்கு தருமராஜன் சொல்லுகின்றான். காயாம்பூவண்ணமுள்ள கண்ணபிரானே? ஆசாரியனையும் சுற்றத்தாரையும் குருகுலத்திற் குரிய அண்ணன் தம்பிகளையும் பாட்டன் மாமன் மித்திரர்முதலாகிய புத்திரர்களை யும் நேரில்நின்று போர்புரிந்து கொன்று வென்று கடலாடையையணிந்த இந்தப்பூமியை தனியாகவிருந்து அரசாட்சி செய்வதைப்பார்க்கிலும் கபட வஞ்சகங்கலந்த மனமுடைய என்பெரியதந்தையார் சஞ்சயனிடத்திற்சொல் லிய சொற்படியே வனவாசஞ்சென்று காய் கனிகிழங்கு சருகுகளைப்புசித்துக் காலங்கழிப்பது மிகவும் நன்றென்று தருமபூபதி சொல்ல இந்தவார்த்தையைக் கேட்ட வேதகீதத்தாகிய விமலன் சொல்லுகின்றான். சத்தியசந்தனாகிய தருமபுத்திரனே! கேளும், பலமாகிய யுத்தமென்று விடுத்து பலம்பொருந்திய தம்பிமார்களுடன் வனத்தையடுத்து வாசஞ்செய்யப் போவீராகில் தந்தை

யுரைத்தவார்த்தையைப்பரிபாலனஞ்செய்யப்போனார்களென்றுசொல்லார்கள். தாயாதிகளுடன் யுத்தஞ்செய்து சபதமுடித்துக் கொள்ளுக் கையிலாகாமல் பயந்தோடிப் போனார்களென்று பூமியிலுள்ளோரெல்லாரும் பழிப்பார்களே அதுவுமன்றிநீங்கள்சொல்லிய சபதமும் பொய்த்துப்போமே பாபமும்வருமே; இதுவோ நீதி, நிறைமதிகொண்ட இறையே! உன்யோசனை மிகவும் நன்றாயிருக்கின்றதென்று நெடியோனுரைக்க அதற்குத் தருமராஜன் மறுமொழி சொல்லுகின்றான். சேனுலகோர் துதிக்கும் வேணுகோபாலதெய்வமே! தேவரீர் எங்கள் நிமித்தமாக துரியோதனனிடத்திற் றூதுசென்று அவனிடத்தில் எங்கள் கருத்தையுங் காட்டிப்பேசினால் மகரந்தங்களை யூதிவண்டுகள் பாடும் சோலைகள்சூழ்ந்த நாடும் எங்கள் பாகமுங்கொடுப்பான் அப்படியே அவன்தேவரீர்போய்ப்பேசியுங் கொடாமற்போவானாகில்அதற்குமேல்வெற்றிச் சங்கும் வலம்புரிச்சங்கும் தவளைச்சங்கும் எங்குமுழங்கவீரகாளமும் வெற்றி முரசும் மொய்க்கும்படியாக நெடிய கொடிய எமதூதர் மனங்களிக்க யுத்தஞ் செய்தாலும் தாயாதி பக்ஷத்திலுள்ள பூமியைப் பெற்றுக்கொள்ளலாம் அப்போது நமக்கு அபகீர்த்தியும் பழிப்புமில்லையென்றுரைத்து மேலும் தருமராஜன்சொல்லுகின்றான். துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனாகிய ஸ்ரீகண்ணபிரானே கேட்டருளும், துரியோதனனை எங்களுக்குரிய நாட்டைக்கேளும், அதைக்கொடுப்பதில்லையென்று மறுப்பான்; எங்களைந்துபேருக்கும் இந்திரப்பிரஸ்தம் எமப்பிரஸ்தம் அவந்தி வாரணாபுரி அஸ்தினாபுரி என்னும் ஐந்தூருங் கேளும், அதுவுங்கொடேனென்றால் ஐந்துமனையாகிலுங்கொடுவென்றுகேளும் அவையும் இல்லையென்றால் யுத்தத்துக்காவது வருகிறாயாவென்று கேட்டு அவன் சம்மதிபெற்றுவாரும் சிந்தூரத்திலதமெழுதிய குவலயாபீடமென்னும் யானையின்கொம்பைப்பிடுங்கி கஞ்சனைக்கொன்ற வீரம்பொருந்திய செந்தாமரைக்கண்ணனே யென்று மூத்தவராகிய தருமராஜன் சொல்லிமுடித்தான். இப்படியாகச்சொல்ல, வீமசேனன்கேட்டு, மனங்கொதித்து குற்றமில்லாத சொற்கள்பதற சீக்கிரத்திலெழுந்து ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பணிந்து பூலோக முழுதுந் திருநாபிக்கமலத்தில் பிறக்கச்செய்தவனே! பொற்றாமரையிலுதித்த மகாலட்சுமியையுங் கௌஸ்துவாபரணத்தையும் பொருந்த வணிந்த வக்ஷஸ்தலனே! நம்பினவர்களுக்கு நேரிடுந் துன்பத்தை நீக்கும் இன்பவாரிதியே! பழிபாவமில்லாத பரிசுத்தகுணமுள்ள எங்களண்ணனாகிய தருமநந்தனன் தனுமானம் பிறர்மான மென்றுணராமற் சொல்லுவதற்கு நானென்னசெய்வேனென்று நடுநடுங்கி மறுபடியுஞ் சொல்லுகின்றான். ஊதிமரபிலுதித்த அதிபதியாகிய அண்ணா! மூன்றுலக்ஷத்தறுபத்தாறாயிரம் பட்டவர்த்தனரும் ஆறுலக்ஷத்தறுபத்தாறாயிரம் மகுடவர்த்தனரும் பதினெண்பூமி மன்னர்மண்டலீகரும் ஐம்பத்தாறுதேசத்து அரசவர்க்கமும் வீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமா கர்ணன் சகுனி சல்லியன் அதிரதர் மகாரதர்சமரதர் அர்த்தரதர் முதலியசமஸ்தமானபேரும்நிறைந்திருந்த இராசசபையில் விரித்தகூந்தலையுடைய திரௌபதியை மானபங்கம் பண்ணுவித்தகாலில் அந்தப் பெண்ணே மெத்த நாணமடைந்து திக்கில்லாப் பாவியானேனே தெய்வமேயென்று தஞ்ச

மில்லாதவனைப்போல முறையிட்டபோது சரீரந் துடித்தெழுந்த எங்களைப் பதறுதீர்கள் கோபியாதீர்கள் ஆக்கப்பொறுத்தபசி ஆறுமட்டும் பொறுதோ என்றுசொல்லியடக்கி குருகுலத்துக்கும் நமக்கும்பூலோகமுள்ளமட்டுந் தீராப் பெரும்பழியை உண்டாக்கிவைத்தீர். அதுவுமல்லாமல் கள்ளக்கவறுகொண்டு சூதாடிக்கெலித்து தீப்படுகின்றகாட்டில் நம்மையோட்டிவிட அதற்குஞ் சம்ம தித்துப் போவோமென்றீர். அப்படியே போய்த்திரிந்து பதின்மூன்று வருடங் கழித்துப் பிழைத்துவந்து இன்னமும் பகையைமுடிக்க மனமில்லாதவராய்த் தூதனுப்பிப்பார்க்கவேண்டுமென்று நினைக்கின்றீர், ஆதலாலே துரியோதனன் செய்த கொடுமையைப்பார்க்கிலும் உம்முடையகிருபைக்குமிகவும் பயந்தேன் தருமபுத்திரரே யென்று பின்னுஞ் சொல்லுவான் வீமசேனன். வைதீக சாந்தஸ்தமே உருவாகவளர்ந்த அண்ணா! உம்மைப்போன்ற உண்மைப்பொருளை வனவாசம் போகச்சொன்ன கண்ணற்ற திரிதராட்டிரனுடைய காதலனாகும் துரியோதனன் ஆண்டுவருகின்ற பூலோகமுழுமையும் இன்றைக்கே ஒருகுடைக்கீழ் நீராளும்படியாகத் தருவேன், அதுவுமல்லாமல் முன்னே நம்முடைய ஆட்சியான நாட்டைக்கைக்கொண்டு நாம் வெறுத்துக்கொள்ளும்படியாக வனத்தில்செலுத்திவிட்ட அந்தத் துரியோதனனானவன்! ஐயோ? அநியாயமே! என்னரசாட்சியைத் தருமராஜன் அடித்துப் பிடுங்கிக்கொண்டானென்று தேவரீரை வெறுத்துக்கொள்ளாதபடி வீரசொர்க்கத்தை அவனாளும்படியாக இதோ கொடுக்கின்றேன், அண்ணா என்றுசொல்லிப்பின் ஸ்ரீகிருஷ்ணபகவானை நோக்கிச் சொல்லுகின்றான்.

ஓ! ஓ! சுவாமி, எங்களண்ணா துரியோதனனுடனே யுத்தஞ்செய்து பகையைமுடித்தார், மேகம்போனற கூந்தலையும் புலம்புகின்ற சொல்லையுமுடைய திரௌபதி முடித்துக்கொள்ளும்படியாகச் சாதித்துவிட்டார். தம்பிமாராகிய நாங்கள் சபையிற்பேசிய சபதங்களைத் தடையில்லாமல் முடிப்பித்தார். தெய்வத்தன்மைபொருந்திய கங்கையடங்குஞ் சடாமகுடத்தையுடைய உருத்திரமூர்த்தி கயிலையிலே பிரமகபாலங்கொண்டு இரப்பதைத் தவிர்த்தருளிய ஈசனே? உம்முடைய மனமறியப் பூலோகத்திலே! நிலைநின்றுயர்ந்த கீர்த்திமானென்னும் பேரைப்பிரசித்தமாகநிலைநாட்டிமுடித்தார். இப்படி! யாவர்முடிக்கப்போகின்றார்கள். இவருடனேபிறந்த நாங்கள் கீர்த்திபெற்றது போதும் போதும், இன்னம் எங்களையுமுடிக்கக் காத்துக்கொண்டிருக்கிறார் தருமநந்தனரென்று 'பின்னுஞ்சொல்லுகின்றான், சுவாமி! போர்க்கோலங்கொண்டுவருகிற பெரியயுத்தகளத்திலேபுகுந்து துரியோதனனுடனே கூடியெதிர்க்கும் அரசர்களுடைய சரீரங்களெல்லாம் இரண்டு துண்டாகும்படி போர்செய்து, பழைய உலகமுழுவதும் அரசாட்சிசெய்யத் துணியாமல், பெருமைமேற்கொண்டு தருமத்தையுங் கிளையுறவையும் பாராட்டி இன்னமுந் தூதுவிடுத்து துரியோதனனை வணங்கிப் பூமியையாசித்து; அவன்கொடுக்கப் பெற்றுக்கொண்டு சவுக்கியமாகக் காலபோசனந்தப்பாமல் சாப்பிட்டுக்கொண்டிருக்கவே யெண்ணுகின்றார். தருமநந்தனன் ஐயையோ! குருகுலம்பட்ட பாட்டையுங் கெட்டகேட்டையும் நானென்ன சொல்லுவேனென்று விசனப்

படும் வீமசேனனுடையவார்த்தைகளைக்கேட்டு பொறுமைநிறைந்த புண்ணியவானாகிய தருமராசன் இம்மொழிகளைச்சொல்லிய தம்பியைச்சற்றிருவென்று மலர்போன்ற கையினாலமைத்துச் சொல்லுகிறார். குருகுலசிகாமணியாகிய தம்பி! குற்றம்பார்க்குமிடத்திலே சுற்றமுமுண்டோ? ஒருகுலத்திலேபிறந்த அண்ணன் தம்பிமாருடனே கூடிவாழும் வாழ்வினைப்போல் வேறோருறுதியுண்டோ? பெரிதாகிய இப்பூமியைப்பெறுவது காரணமாகக்கருதி பகைத்தெதிர்ப்பது நம்மிருதிறத்தவருக்கும் நஷ்டமல்லவோ? கோபம் நமக்கே துன்பத்தைவிளைக்கும் ஆதலால், ஒருகுலத்திற்பிறந்த உரிமையுள்ள நமது பெரியதந்தையின்பிள்ளைகளாகிய தம்பிமார்கள் அறியாமையினாற் சபையிற்சொன்ன வார்த்தைகள் நமக்கு இழிவையுண்டாக்குமோ? நமக்குச் சம்பந்தமில்லாத அன்னியராற்சொல்லப்பட்டாலல்லவோ பேரிழிவாகும்; தம்பி! அதையோசிக்குமிடத்தில் கண்களிற்கைவிரல்பட்டால் அந்தக்கையைத் துணித்துவிடலாமோ! எப்போதும் 'பொறுமை கடலினும்பெரிது' என்னும் வாக்கியத்தை அனுசரித்து சண்டையை நிறுத்தி, சமாதானமாய்ப்போவதேதன்மை, ஆகையால் நம்மாற்கூடிய முயற்சிசெய்து சந்தி சமாதானமுதலாகிய வழிகளெல்லாம்பார்த்து எதிலும் ஒத்துவாராமற்போனால் பின்னை யுத்தத்தைக்குறித்து யோசிக்கவேண்டியது, அதைவிடுத்து, ஆரம்பசூரத்துவமாய் யுத்தமென்று பேசுவது யுத்தமல்ல அப்பாவென்று கீர்த்தியைப் பூஷணமாகத் தரித்தருளிய தருமபூபதிசொல்ல, அந்தமொழியினாலும் வீமசேனனுக்குக்கோபந்தணியாமல் மனத்தாபமேற்கொண்டு தருமராசனைப்பார்த்து எங்கோவே! துரியோதனனிடத்துக்குத் தூதுவிடுத்து, அறியவேண்டுமென்று சித்தியமுள்ள தேவரீர் சித்தத்திற்கு இஷ்டமுண்டாகில் தேவர்களும் முனிவர்களும் நான்குவேதங்களும் இன்னமுந்தேடுகின்ற துளபமாலையணிந்த ஸ்ரீகண்ணபிரான்திருவடிசிவப்ப நடந்து நமது திருநாடு பெறுவதற்காகத் தூதுசெல்லவேண்டாம், வாடுகின்ற திரௌபதியினுடைய பிரதிக்கினையும் என்னுடைய பிரதிக்கினையும் வழுவிப் போகாமல் நிறைவேறும்படியாகத் துரியோதனனிடத்தில் நான் போய்வருகிறேன், என்னைத் தூதாக அனுப்பிவியும் அண்ணாவென்று கோபச்சிரிப்பாக நகைத்து ஐயோ! மலையைக்கண்டதன்மையைப்போல் என்கரத்தில்வலுவேறியிருக்குந் தண்டாயுதத்தினுடைய வலியைக்கண்டு காண்டீபத்தின் வலிமை கண்டும், நகுலசகாதேவருடைய வல்லமைகண்டும், நமக்குச் சகாயமாக ஸ்ரீகிருஷ்ணமூர்த்திதுணைப்பட்டிருக்கும் நிலைகண்டும், இந்தப்பாஞ்சாலிவிரித்த அளகபாரங்கண்டும், ஒருமாத்திரைப்பொழுதில் துரியோதனாதியாகியசத்துருசங்காரம்பண்ணிமகிழ்ச்சியடையாமல் பகையாளியின் குடையின்கீழொதுங்கி வாழும்படியாகவோ எண்ணியிருக்கின்றீர். ஆ! ஆ! அண்ணாவேயென்று தோள்களும் மீசையுந்துடிக்க நுட்பமாகிய மனமுங்கண்ணுங்கறுக்க மேலோங்கியெழுந்து பூமியிற்றாழ்ந்து விறுவிறெனச்சுழன்று நறநறெனப்பற்கடித்து மேகநடுங்கிப் பதுங்கக்கூறிய வார்த்தையைக் கமலக்கண்ணன் கிருபையுடன்பரிவுகூர்ந்துபார்த்து, அப்பா வீமா! பூமியிலே முன்பிறந்த தமையன்மார் அரசநீதிமுறைமைசொன்னால் அதைக்கேளாமல் பின்பிறந்த தம்பியானோர் பிழை

சொல்லி மறுப்பார்களா? அடடா கடியகோபத்தைப்பொறுக்கக்கடவனென்று சொலல, இதைக்கேட்ட விமன் படமடங்கிய நாகம்போல் ஒன்றும் பேசாதிருந்தனன். அவ்வேளையில் இந்திரகுமாரனாகிய அருச்சுனனெழுந்து வணங்கிநின்று இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலமென்னும் முக்காலங்களையுமுணர்ந்த ஸ்ரீகண்ண பிரானுக்கும் தருமபுத்திரனுக்குஞ் சொல்லினன். ஐயா! அந்தக்காலத்தில் துரியோதனன்செய்த அக்கிரமங்களையும் அவமதிப்பையும் பொறுத்தபொறு மைகளெல்லாம் போதாமல் இன்னமும் பொறுக்கச்சொல்லி பொழுதுவிடியு மட்டும் தருமத்தையே சொல்லிக்கொண்டிருந்தால் இனி எந்தக்காலத்தில் பகையைமுடித்து நாம் தலையெடுப்பது, திரௌபதையும் எப்போதுகூந்தலை முடித்துக்கொள்ளவிருக்கின்றாள். தேவர்களானாலும் பழையவிராக்கதரானா லும் இன்னமும்வலிமைபெற்ற எவர்களானாலும் எதிர்த்தவர்களுடைய ஈரலிற் றியபிராணனை தனக்கு இரையென்று நினைத்திருப்பது என்கையிலிருக்கும் பாணமானது மும்மூர்த்திக்கு முதல்வனாகிய முகுந்தனே! இத்தன்மையாகிய என்னுடைய திறத்தையுந் திடத்தையுந்தெரிந்திருக்கும் தருமராசனானவன் மேகந்தவழும் கமுகமரத்தில் வராலினம்பாயுங் கழனிகள்சூழ்ந்த குருநாட்டை என்ன நிமித்தியமாய்த் துரியோதனனிடத்தில் வேண்டிப்பெறுவது ஐயோ! பதிவிரதாமகத்துவமுடைய திரௌபதியை இராசசபையில்துகிலுரியடா தம்பி துச்சாதனா வென்று துரியோதனன் சொன்னபோது அவள் திக்கில்லாதவ ளைப்போல ஏங்கி கண்கலங்கி சகத்ரட்சகா, தீனபந்தோ, சனார்த்தனா, தீன தயாளுவே, நெடியவனே, நீலமேனியனே, நிரந்தரனே, நின்மலனே, நித்தியா நந்தனே, நேசமுற்ற தாசருக்கு விசுவாசமந்தகாசனே, நிர்மலசொரூபனே, நிராதாரமாகிய வென்னை இரட்சிக்கக்கடவையென்றுநின்று தளர்ச்சியுற்ற போது நாம் ஐவருஞ் சீவனில்லாத உடலைப்போல இராசசபையிற் பார்த்துக் கொண்டிருந்த குற்றந்தீரவேண்டாவோ? இன்னமும் இரந்து நாடுவேண்டுவது மன்னறமாமோ! மண்ணுலகெல்லாம் வாழ்வுறவாழும் தண்ணளிசுரந்து தரும நிறைந்த புண்ணியதேகப்புகழினையுடைய அண்ணா! பொற்பிரகாசம்பொருந் திய சக்கராயுதத்தையுடைய நமது ஸ்ரீகிருஷ்ணபகவான் தூதுபோய்ச்சொல் லிய வாக்கியங்களையெல்லாம் தேவாமிர்தத்தைப்போல் கலக்கித் துரியோ தனனுடைய காதில்வார்த்தாலும் அவன்கேளான் அதேனெனில், களர்நிலத் தில் விதைகளைவிதைத்தாலும் முளையாது, ஒருவேளை தப்புவிதை முளைத்தா லும் விளையாது, படத்தையுடைய பாம்புக்குப் பால்வார்த்து வளர்த்தாலும் கொடும்விஷத்தைத்தருமேயல்லாமல் குணமாகிய அமிழ்தத்தைக்கொடாது, அதுபோல் துரியோதனனுடைய ஊழ்வினைவலியினால் கெடுமதிகண்ணுக்குத் தோற்றாது, கிருபாநிதியாகிய ஸ்ரீகிருஷ்ணசுவாமியையும், அவமதிப்பாய் பேசு வானேயல்லது ஞாயமாகிய வுத்தரவுசொல்லமாட்டான், ஆதலால்தூதனுப்ப அநியாயமென்றுசொல்லிய அருச்சுனனை சற்றுபொறுவென்று கையமைத்து நிற்கப்பது ஸ்ரீகிருஷ்ணபகவான் நகுலனைப்பார்த்து நீ யென்னசொல்லுகின்றா யென்று வினவ, அன்புடன் நகுலனெழுந்து ஸ்ரீவாசுதேவமூர்த்தியின் பாதங் களில்வணங்கி தருமபுத்திரருக்குச்சாஷ்டாங்கதண்டஞ்செய்து கூறினனிழுந்த

சமுத்திரம்வளைந்தபூமியைப் பெருமைபொருந்திய பாண்டவர்கள் பெறுவார்களென்று சொல்லுவது பொய்யோ ஐயா! இதுமெய்யே, தருமபுத்திரருடைய ஒப்பற்ற சௌரியபராக்கிரம சாமர்த்தியமே சொல்லிவெல்லாதோ, கண்ணபிரானே! தேவரீர்க்கொன்றுந்தெரியாதோ? திருவாய்மலர்ந்தருளும் இறைவனேயென்று ஆவலாய்ப் பின்னுஞ்சொல்லுகின்றான்.

தீர்ப்பதற்கரிய பகையானது மேலிட்டிருக்கையால், கோவினங்களைக் காத்தருளிய கோபாலன் தூதுபோயுரைத்தாலும் குருநாட்டையும் அரசாட்சியையும் அந்த துரியோதனன் கொடுக்கமாட்டான், சிறியேன்சொல்லுங்காரியத்தைச் செவ்வையா யோசிக்கவேண்டும். தருமபூபதியே! காற்றிலும் பனியிலும் வெய்யிலிலும் மழையிலும் மலையிலும் அலைந்துதிரிந்துவருந்திவர்ந்த பாண்டவர்கள் துரியோதனனிடத்தில் நாட்டையிரந்தார்களென்று சப்தத்தீவாகிய இந்தப்பூமியை ஆளும் அரசர்களெல்லாரும் ஒன்றுகூடி நம்மை நகைத்துக்கேலிசெய்யாதபடி துரியோதனனுடைய சேனைவலியையும் என்னுடைய புயவலியையும் தேவரீர் பார்க்கலாம் அண்ணா! முன்னம் அன்னம்போலு நடையையுடைய அரம்பாஸ்திரீயை அசுரர்கள் அபகரித்துக்கொண்டுபோக அப்போது அவள்பயந்து அலறி அபயமிட்டு அடைக்கலம்வேண்ட அதையறிந்து அந்தரவாசியாகிய இந்திரனுக்காக அந்த அசுரருடன் அமர்புரிந்து அரம்பையைமீட்டு அபயமளித்தான், நமது குலத்திலுதித்த முப்பத்தெட்டாவது பாட்டனாகிய புரூரவசக்கரவர்த்தி. ஆ! ஆ! அண்ணா, அந்நிய ஸ்திரீகளுக்குவந்த அபிமானங்காத்தளித்த அரசகுலத்திற்பிறந்த நாம் துச்சாதனன் திரௌபதியை எட்டி மயிர்பிடித்திழுத்துவந்து சபையில்விட்டு அபிமானபங்கஞ்செய்ய ஆஞ்ஞாபித்த அருளற்றபாவியாகிய அரவக்கொடியோனிடத்தில்யாசித்து அவன்கொடுக்குங்குடைகீழலிலிருந்து அங்கம்வளர்த்தால் நம்மையுலகம் பழிசொல்லாதோ திங்கள்குலத்திற்பிறந்த இறையே தேவரீர் தருமமும் பொறுமையும் தழைக்கும்படிக்கு யோசிக்கின்றீர். அவர்களிடத்திலும் இந்ததருமநினைப்பிருக்குமாகில் இது தருமந்தான், அப்படியில்லாதிருக்க நீர் நினைப்பதில் பயனென்னை? அண்ணாவே! கேட்டருளும் வனவாசம் பன்னிரண்டாண்டும் அஞ்ஞாதவாசம் ஓராண்டும் சத்தியமொழிதப்பாமல்கழித்துவந்தார்களே நமது சிற்றப்பாபிள்ளைகளாகிய பாண்டவர்களென்று கொஞ்சமேனுமிரக்கம்வையாமலும், நம்மைக்கூட்டிப்போய் தன்சொல்லின்படியே தாயதிபாகத்தை தயைசெய்யாமலும் உலூகமாமுனிபோன தூதினால் மனம் நையாமலும் போவானாகில் தானேயறிந்துகொள்ளாத ஒருவனுக்கு மற்றொருவர் போய்ச்சொன்னாலறிவனோ 'தன்க்குத்தானே கனியாதபழந் தடிகொண்டடித்தாற்கனியுமோ' என்னும் பழமொழிகளைப்புகன்ற நகுலராசனை அற்புதனாகிய அரிவாசுதேவன் கையமைத்தருளி, சகாதேவனைப்பார்த்து சௌரியத்தையுடைய வீமசேனன்சொன்னதும், வலிமையுடைய அருச்சுனன்சொன்னதும், மனோதிடங்கொண்ட நகுலன்சொன்னதுங் கேள்விப்பட்டோம், சொல்லுதற்கரிய அறிவையுங் கீர்த்தியையும் பராக்கிரமத்தையுமுடைய தோன்றலே!

உன்கருத்தையுஞ்சொல்லென்று கேட்க, கரிய திருமேனியையுடைய கண்ண பிரானைப்பார்த்து மனமுருகும்படி சகாதேவன் சொல்லுகின்றான். '

ஆதிநாராயணனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே! நீர் நினைத்தபடியே தூது போனாலென்ன? போகாமல்நின்றுவிட்டாலென்ன? துரியோதனன் பாண்டவர் களுக்குப் பூமிகொடுத்தாலென்ன, கொடாவிட்டாலென்ன பூங்கொத்தை யுடைய அளகபாரத்தை இந்தத்திரௌபதி முடித்தாலென்ன முடியாமல் விரி த்தாலென்ன? நீரெண்ணியிருக்குங்காரியங் கடைசியில் முடியப்போகிறவிதம் அடியேனுக்குத்தெரியுமோ வாசனையை வீசுகின்ற பசியதுளபமாலையையணி ந்த கிரீடத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணா? அன்று பூதகியினுடைய விஷப்பாலாகிய முலைப்பாலையுண்டு சாபம்பெற்ற மருதமரத்தையுதைத்து உயர்ந்த சடாசூரன் விழும்படியாகவுந்தி வித்தையாகிய கன்றால் விளாங்கனியெறிந்து விளையாடி நந்தகோபன் அசோதைப்பிராட்டியார் மகிழ யாதவர் மனைகடோறும் புகு ந்து வளர்ந்தருளிய புருஷோத்தமனாகிய ஸ்ரீகபடநாடகா! இங்கேநீர் செய்கின்ற மாயம் உன்னாயம் ஒருவருக்குந்தெரியாது எனக்குத்தெரியும் ஆகையால் சத்தியமாக உம்முடைய திருவுளத்துக்கு நினைப்பு எதுவோ அதுவே எனக் குக்கருத்தென்றான் தெய்வத்தையொத்த சகாதேவன் அந்தமொழியைக் கேட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் புன்சிரிப்புகொண்டு வலிமையையும் வைரத்தை யுங்கொண்டிருக்கும் தருமராசன் முதலானவர்கள் சொன்ன அவ்விதஞ் சொல்லாமல் கொஞ்சம் உபாயமாகவும் பக்குவமாகவும் சொல்லழுத்தமாக வும் பேசினான் இந்தச்சகாதேவன்; இன்னமும் இவ்விடத்தில் இவனுடன் பேசினால் என்னென்ன ரகசியங்களை வெளிப்படையாக இழுத்துச்சொல்லு வானோ தெரியாது சாஸ்திரவிசாரணையுள்ள புத்திமானாகையால் கலந்து பேசு வதற்குத் தனிமையிற்கொண்டுபோய் இவனது உள்ளக்கருத்தை அறியவேண்டு மென்றெண்ணி தருமன்முதல் நால்வரையும்நோக்கி தம்பியாகிய சகாதேவன் உண்டு உடுத்து விளையாடும் வயதுள்ள பாலனாகையால் மனவெறுப்பாகச் சொல்லுகின்றான். அவனைத் தனிமையிற்கொண்டுபோய்த் தெரியப்படுத்தி அழைத்துக்கொண்டு வருகிறேன் தருமநந்தனா! சும்மாவிருந்த வெனக்குச் சுமைகொண்டுவந்து வைத்தீர்கள். அப்பா 'கொஞ்சத்திலிருக்கிறதா குரங்கு மிளகுநீர் குடிப்பது' என்றுசொல்லி யெழுந்து சகாதேவன் கையைப்பிடித்து அழைத்துக்கொண்டுபோய் நாகரத்தினத்தா லிழைக்கப்பட்டிருக்கிற ஒரு ஏகாந்தஸ்தானத்திலேபோய்' இருவருமிருந்து சகாதேவனைப்பார்த்து, ஓய் மைத்துனா! நாலுபேரைக் கேட்டதன்மைபோல் உன்னையுங்கேட்டால் அவர் களுடன் கலந்துகொண்டு சொல்லாமல் என்னை யிழுத்து வெளியிற்போட எத்தனைநாளாக எண்ணிக்கொண்டிருந்தீர். விவேகநிறைந்த புத்திமானே! இப்போது உம்முடைய இஷ்டப்படிக்குப் பாரதயுத்தம் நடக்காமலிருப்பதற் கும் யாவரும் பிழைப்பதற்கும் ஏதாகிலும் உபாயமுண்டானாற்சொல்லும் நாமிருவருங்கலந்து யோசித்துக்கொண்டு அந்தப்படி நிறைவேற்றிவிடலா மென்று சூத்திரதாரிகேட்க, சகாதேவனெழுந்து அவருடைய பாதகமலங் களிற்பணிந்து ஸ்ரீகிருஷ்ணபகவானே! குள்ளநரியின் வாலைக்கொண்டோ

சமுத்திரத்திலுள்ள ஆழம்பார்க்கப்போகிறீர். சுவாமி நீர்வேறு நான்வேறென்றெண்ணியென்னைப்புறம்பாக விட்டுப்பேசாதீர். தேவரீர் எல்லாத்தேசத்துராஜவர்க்கத்தையும் இராக்கதரையும் குருக்ஷேத்திரத்திலே கூட்டிச் சாம்பலாக்கிக் காற்றிற்றூற்றிவிட்டுப் பூமிபாரம் தீர்க்கும்படியாய்க் கருதி க்ஷீராப்தியை விட்டு நீங்கித் தேவகிதேவியார் கர்ப்பத்திலவதரித்திருக்கின்றீர். மேகமேனியையுடைய வேதவித்தகரே! பசுக்களைப் பரிபாலனஞ் செய்தருளிய பாக்கியரே! ஸ்ரீ ஹரிகோவிந்தா பூபாரம் தீர்க்கவே திருவவதாரஞ் செய்தருளிய உம்மையல்லாமல் இந்த மகாபாரதயுத்தத்தை நீக்கவல்லவர் வேறே யாரிருக்கின்றார்களென்று சகாதேவன்சொல்ல; பாண்டவர் சகாயன்கேட்டு நகைத்து நாமிருவருங்கலந்து பேசுவதென்று நியமித்துக்கொண்ட பிற்பாடு நீர் இன்னமுங் கபடமாய்ப் பேசுவதுஞாயமன்று, உமதுகருத்தை வெளிப்படுத்தும் அப்பால் நான் சொல்லுகிறேனென்று காரியவாதியாகிய கண்ணனருள் கொண்டுரைக்க; சகாதேவன் கண்ணீர்த்ததும்ப நின்று எம்பெருமான் குறிப்பறிந்து ஓ காயாம்புவண்ணா! என்வாக்கினாலேயேவெளிப்படுத்தவேண்டுமென்னும் எண்ணம் தேவரீருக்குஇருக்குமாகில் சொல்லுகிறேன் கேளும், சுவாமீ! இப்போது இந்தப்பூமியைப் பட்டங்கட்டிக் கொண்டாளவேண்டுமென்று எண்ணங்கொண்ட துரியோதனராஜன் தருமராஜனாகிய இவர்களிருவரையும் நாட்டைவிட்டுக் காட்டிற்போக ஓட்டி பஞ்சாசத்கோடி பூமண்டலத்தையும் கர்ணனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து, 'கர்ணனைக் கொல்லுகிறேனென்று சபதங்கூறிப் பகைத்திருக்கின்ற அர்ச்சுனனை முன்னே கொன்றுவிட்டு, பிற்பாடு பந்துமித்திரர் பெரியோர்முதலிய வெகுபேர்களுடைய தலையைவாங்கத் தலையை விரித்துக்கொண்டிருக்கும் துரோபதியினுடைய கறுத்த கூந்தலைக் களைந்துமொட்டையாக்கிக் காலிலேவிலங்குபூட்டிவைத்து எனக்கு நேரிலிருக்கும் உம்மையும் என்கையாற்பிடித்து புயத்தோடு புயம்நெருங்கக் கட்டுவேனேயானால் இந்தமகாபாரத யுத்தம் விளையாமலிருக்கும்படி செய்யலாமென்றான்! சகாதேவன்.

அந்தவார்த்தையை அரி வாசுதேவன் கேட்டுப் புன்னகையுடையவராய் 'பாம்பறியும் பாம்பின் கால்' என்பதுபோல் அறிந்துகொண்டு ஓ சகாதேவராஜனே? நல்லபுத்தி சொன்னீர் சந்தோஷமானேன், ஆகிலும் தருமராஜனையும், துரியோதனனையும் காட்டிலோட்டிக் கர்ணனுக்கு நாட்டைப்பட்டங்கட்டி அர்ச்சுனனை வெட்டித் துரோபதியை மொட்டையடித்து விலங்குபூட்டிவைத்தால் பாரதயுத்தம் வராதென்று நீர்முக்கியமாகச்சொல்லிய இவைகளெல்லாம் ஒருவேளை முடிந்தாலுமுடியும்; அவைநிற்க. என்னைக்கைப்பிடியாகப்பிடித்துக் கட்டிவிட வேண்டுமென்று சொன்னீரே, அது எவ்விதம் கூடும்? என்னை எப்படிகட்டுவீரென்று கமலக்கண்ணன்கேட்கச் சகாதேவன் சொல்லுகின்றான்.

சுவாமீ? 'மலையினுயரத்தைமலையறியாது' ஆயினும்மற்றவரறிவர், அதுபோல் உம்முடைய பெருமை உமக்குத் தெரியாது, உத்தமராகிய புத்திமான்களேயறிவார்கள். உந்திபூத்தோனே! உம்முடையஉருவத்தைஉண்மையா

கக்காட்டினால் உன்னடியார்க்கு ளொருவனாகிய நான் கட்டுவேனென்று சகாதேவன் உறுத்திச் சொன்னான். அந்தமொழியை ஸ்ரீகிருஷ்ணபகவான் கேட்டருளி அன்பறுடைய பக்திமனத்தை அறியும்படி நம்மைக்கட்டும்பிள்ளாயென்று தமதிச்சையினாலாகிய பதினாறாயிரம் வடிவுகொண்டு அந்தஅண்டபமுழுமையு நிறைந்து இருந்தான்; அந்தக்காலத்தில் பரிசுத்த சித்தமுடைய சகாதேவனும் அந்தரூபங்களுக்குள் ஆதியாகிய உருவத்தை உண்மைஞானத்தாலுணர்ந்து உலகமுழுமையுந் தாவியளந்த உபயதிருவடிகளையுந் தன்கருத்தென்னுங் கயிற்றினாலே இறுகக் கட்டினான்! அப்போது பதினாறாயிரம் வடிவிலே, ஆதிமூலமாகிய வடிவை ஞானத்தா லுணர்ந்து நீதான் தேவனென்று நிச்சயித்தபடி எல்லாவுருவும் ஒருருவாகப்பிரத்தியக்ஷமாய்நின்றான்; பூலோகத்தில் யாவரும் போற்றித் தவம்புரிந்து தேடியுங் காணாததாமரை மலர்போன்ற பாதங்களையுடைய சக்கரபாணியாகிய வெண்ணெயன் சகாதேவனைப்பார்த்து பத்தியினாலும் புத்தியினாலும், என்னை இன்றுனென்றறிந்து கட்டியமைந்தனே என்னுடைய பாதத்தை இனி நீ கட்டவிழ்த்து விட்டுவிடக் கடவை. இது உறுதியாகிய பாசக்கட்டென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் சொல்ல, சகாதேவன் சகஸ்திர நாமங்களினாலும் ஸ்தவுத்தியஞ்செய்து சுவாமீ வன்மை பொருந்திய பாரத யுத்தத்திலே தேவரீர் திருவடிக்கு அடைக்கலமாக வந்து சேர்ந்த எங்களைவரையும் உம்முடைய கடாக்ஷத்தினாலே இரக்ஷிக்கவேண்டும்; நெடியமஹாவிஷ்ணுவேயென்று சொல்லி வணங்கி இரண்டு செந்தாமரை மலர்போன்ற திருவடிகளில் நமஸ்கரித்த சகாதேவனுக்கு ஐவரையுங் காக்கிறேனென்று உறுதிசொல்லிக்கட்டுவிடுவித்துக்கொண்டு, இன்று நாமிரண்டுபேரும் இவ்விடத்திற்பேசி நடத்திய சங்கதிகளொன்றும் அயலாரறியச் சொல்லாதையென்று மேல் நடக்கவேண்டிய காரியங்களையெல்லாங் கலந்து பேசிக்கொண்டு, அந்தச்சபையைவிட்டு நீங்கி அறிவுடையோராகிய அவ்விரண்டுபேரும் தருமபுத்திரர் முதலானோரிருக்கிற சபைக்கு வரும்போது குற்றமற்ற குணத்தினையுடைய துரோபதியானவள் மற்றவரைப்போலச் சகாதேவராஜன் ஒப்புக்கொள்ளமாட்டார். நமக்காகவேபாடுபட்டுப்பேசி அளகமுடிக்கும்விதத்தை யோசித்து வருவாரென்று மிகவு மனமகிழ்ந்து நெடிய அளகபாரஞ்சோரஎதிரில்நின்ற பூஞ்சாலியினது கருத்தையுணர்ந்தகண்ணபிரான் அவள்முகத்தைப் பார்த்து ஓ துரோபதியே? பாண்டவர்களில் இளையோனாகிய இந்தச் சகாதேவன் வேறுவிதமாகச் சொல்லுவானென் றெண்ணித் தனித்துப்போய் யோசித்தகாலத்தில் துரியோதனன்பால் தூதுபோகச் செய்வதே உத்தமமென்று இவர்கள்கருத்தை யனுசரித்தேசொன்னனென்றுஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லவே, இந்தமொழியைக்கேட்ட பாஞ்சாலி இடியோசைகேட்ட நாகம் போலேங்கி பெருமூச்சுவிட்டுத் தெய்வமே, தாயாதிகளுடன் சண்டையிட்டுச் சபதத்தை முடிக்குமனமில்லாமல் தூதுபோக்கிப்பெருமைபொருந்திய பூமியைப் பெற்றுக்கொண்டு அவர்களுடன் குலாவி வாழ்வதற்குத் தருமபுத்திரர் முதலிய ஐவருக்கும் இஷ்டமிருக்கிறதென்று தேவரீர் சொல்லுவீராகில் பூவைமறந்து புழுதியிற் புரளும் அளகபாரத்தை வாரிமுடித்து என்வஞ்சினந் தீர்க்கும்

காலமேதுவோவென்ற மின்னலையொத்த துரோபதியானவள் மாயவனுடைய மலரடிமேல் வீழ்ந்து மண்ணிற் புரண்டு கண்ணீர் சோரவிட்டழுதுகொண்டு சொல்வாள், இரணியகசிபனானவன் மிகவுங்கோபங்கொண்டு என்குலத்தை நாசம்பண்ணவந்த மோசக்காரனாகிய அடா பாலா பிரகலாதா! இப்போது நீ சொல்லுகின்ற பேரையுடையவன் எங்கேயிருப்பானடாவென்று கேட்ட தந்தையைநோக்கி ஐயா, சங்காழியிற் றுயின்ற சங்காழியையேந்திய எங்கோன் எங்குமிருப்பரென்றுசொன்னவுடனே அனலினும் கொடியகனல்போற் சீறி அடாபாவி! இந்தத்தூணிலிருப்பானோவென்றுகேட்க; பிரகலாதனன்நகைத்துஇத் தூணிலும் துரும்பிலுமிருப்பானென்று சொல்லவிரைந்து ஆங்காரங்கொண்டு ஓங்காரமிட்டு அறையும்படியாகிய அந்தத்தூணிலிருந்து உக்கிர நரசிங்கமூர்த்தியாயுதித்து இரணியகசிபனைச் சங்காரம்பண்ணிப் பிரகலாதனனைக் காத்தருளிய இறைவனே? இதன்றியும் பதினாயிரம் வருடம் முதலையினிடத்திலகப்பட்டுவருந்தி ஆதிமூலமேயென்று பெயரிட்டழைத்த மும்மதம்பொழியுங் கஜேந்திரன் கண்களிக்க நீலமலைபோல்கேரினின்று முதலையை அழித்துயானையைக் காத்தருளிய கஜேந்திரவரதா? கற்றையாகிய என் அளகபாரத்தைப் பிடித்திழுத்துவந்து சபையில் நிறுத்திக் கண்ணில்லான்பெற்ற துச்சாதனன் நஞ்சைபம்போன்ற பலவார்த்தைகளைக் கொஞ்சமேனு மஞ்சாமற்பேசி மானபங்கஞ்செய்ய வஸ்திரத்தை யுரியும்போது, பஞ்சபாண்டவரும் நெஞ்சுபொருந்திப் பார்த்திருந்தார்களே. நான் தானுகலங்கித்தஞ்சமென்றழுதபோதும்வெற்றி பொருந்திய சக்கராயுதத்தை யுடைய கோவிந்தா! என்மானத்தை நீர் காப்பாற்றினீரல்லாமல் வேறே யார்வந்துகாத்தவர்கள்? ஐயனே இன்றைக்கும் நீயே துணை என்று புலம்பிப் பின்னுஞ் சொல்லுகின்றாள்.

இறையே? இராசசபையில்என்னையழைத்து நிறுத்தி என்குலகோத்திரத்துக்கும் பழுதுண்டாகும்படியாகிய குற்றத்தைச்செய்த சர்ப்பக்கொடியோனிடத்தில் தூதுவிடுத்து ஐந்தூர்பெற்று சுத்த வீரர்களென்று பேர்வைத்துக் கொண்டு உயிர்வாழ்ந்திருக்க நினைப்பார்களேயானால் பாவியாகிய நான் அன்றுவிரித்த கூந்தலை இனியென்று முடிக்கப்போகிறேன்; இனர்களுடைய எண்ணத்தை முடிக்கும்எமதுதெய்வமே யென்றழுதாள். அவ்வாறுஅழுத அத் துரோபதையின்முகத்தைக்கண்டு அந்தச்சபையிலிருந்த யாவருங்கண்கலக்கப் பட்டகாலையில் சாத்தகியாழ்வானெழுந்து மிகுந்தகோபமுடையவராய் தருமராஜன்முதலிய பேர்களைநோக்கி ஐயையோ! இதென்ன அநியாயம்; மூவுலகுமதிக்கும் வீமசேனன் கையில் தண்டாயுதமிருந்தும், திசைபத்தும் இசைபெற்ற விஜயன்கையில் காண்டீபமென்னும் வில்லிருந்தும், பூவும் வண்டும் பொருந்திய அளகம் புழுதியிற் புரளும்படியாய்த் துரோபதி புலம்புவதை இன்னமும் நீங்களெல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கின்றீர்களல்லவா? சத்துருவைத் தாழ்ந்து வணங்கி அவன் கொடுக்கும் நாட்டைப் பெற்றுக் கொண்டு குறைவில்லாமல் புசித்து உயிர்வளப்பதற்கு யோசிக்கின்ற உத்தமர்களே? க்ஷத்திரிய தருமநெறியிதுதானோ சொல்லுங்களையா! இதன்றியும் பிரசண்ட வேகமுடைய மேகத்தின் பிரளயகாலத்து இடியைப்போன்ற

சர்வலோக ஜயசிங்கமாகிய ஜராசந்தனுக்குப் பயந்து தன்னைக் காத்துக் கொள்வதற்குக் காவலாகத் துவாரகையைக் கைக்கொண்டு ' வளப்பமுடைய வடமதுராபுரியை விட்டோடிய திணிந்த சாமர்த்தியமுடைய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியின் சொற்புத்தியைக்கொண்டோ! அல்லது பிரகாசம் பொருந்திய தருமபுத்திருடைய சுயபுத்தியைக் கொண்டோ? துரியோதனனாதியருடைய துர்க்குணங்களெல்லாம் முன்னமே தெரிந்திருந்தும் இன்னமும் அவனிடத்திற் றூதுபோக்கி நாடுகேட்கச்செய்வதாகிய இதென்ன மதியோ இரணிய கருப்பனெழுதிய விதியோ அறியேன் சிவியேனென்று; சாத்தகியாழ்வான் தன்னைமறந்து சொல்லவே; சடைபட்டிருக்குங் தலைமயிரினையுடைய பாஞ்சாலி சபையில்விழுந்து சஞ்சலத்திலாழ்ந்து பிரலாபித்துப் புலம்பினாள். அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் கற்புக்கு வித்தாகிய துரோபதியை நோக்கி! என்தங்கையாகிய மங்கையே? நீ கண்கலக்கப்படாதை, காரியமொன்றும்முழுகிப்போகவில்லை, தருமராஜன்முதலிய பேர்களின் எண்ணத்தின்படி நான் தூதுபோய்வருகிறேன். நீ இதைக்குறித்து விசனப்படவேண்டுவதில்லை. ஓ துரோபதையே; பாண்டவர்க்காகத் தூதுபோய்வந்தவுடனே உன்னுடைய சடைபற்றிய கூந்தலையும் உன்னைப்பேரவையில் அவமானஞ்செய்த பேர்களுயிரையும் நானே முடிக்கிறேன், இதல்லாமல் உன்கூந்தல் விரியும்போது அஸ்தினாபுரியும், அந்தச் சபையும் அறிந்ததேயன்றி மற்றியாவரும் அறியார்கள், இனிமேல் சத்துருக்களின் அந்தப்புரத்திலிருக்கும் ஸ்திரீகளுடைய கூந்தல் விரியப்போகிறதையும் அவர்கள்படும் அலங்கோலத்தையும் உலகமுள்ளளவாயிலும் யாவரும் சொல்லி நகைக்கப்போகின்றதையும், நாளையே நீகாணப், போகிறாய் கரியகூந்தலையுடைய காரிகையே இன்னமுங்கேள். சத்துருக்களுடைய தேகங்களென்னும் வயலின்மேல உழுதற்குரிய கருவியாகியகொழுவாயுதம் போன்றவாளாயுதத்தினாலுழுது விரவாம்புபுதுக்கி, நிணச்சேறுதிருத்தி,இரத்தநீர்பாய்ச்சி, பிராணவிதைவிதைத்து,வளர்ந்த அரசர்களுடையகுலமுதல் அறுத்து கழுகு பருந்து காக்கைகளுக்குக் களப்பிச்சையீந்து நமனுக்குக் கீர்த்தியென்னும்'மேல்வாரங்கொடுத்து குடிவாரங்குவித்து ஐவருடைய துக்கசாகரத்தையும், உன்னளகபாரத்தையும், துரியோதனாதியராகிய பூமிபாரத்தையும் முடித்து விடுவதற்கு, உன் குமாரனாகிய அபிமன்னு வொருவனிருக்கின்றான்! " அம்மா சும்மாயிருவென் றுரைத்து பெண்டன்மையிற் சிறந்த துரோபதியினுடையகண்களிலிருந்து, மாரிபோற்பொழியுங்கண்ணீர்வாரியைத் தம்முடைய கரங்களினால் துடைத்து, துரோபதியைத்தேற்றி அந்தப்புரத்துக் கனுப்பினார். பின்னர் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் பஞ்சபூத வடிவமாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் தருமபூபதியைப் பார்த்து ஓ! அரசனே கேளும், நோயாளர், துறவிகள், ஒருவருக்கும் அடங்காத துஷ்டர்கள், கோபமுடையவர்கள், கற்றுணரா மூடர்கள், சிறுபிள்ளைகள், நீதியுணராதவர்கள், பேதமையுடைய மாதர்கள் இவர்களைச் சபையிற்கூட்டி வைத்துக்கொண்டு ஒரு ஆலோசனையுஞ் செய்யக்கூடாது, அப்படிக்குத் தருமவிதியிருக்க இந்தத் துரோபதையை சபையில்வைத்துக்கொண்டு இரகசியம் பேசினத்தினால்நாமே

தோ சவுக்கியத்தைக் குறித்துப் பேசுகின்றோமென்று பெண்புத்தியினால் இவ்வளவு தூரம் விபரீதமானதுயரத்தை விளைத்துவிட்டாள்; தருமநந்தனா! நான் அந்தவேளையில் அவ்வளவு சமாதான வார்த்தை சொல்லாவிட்டால் அவள்மனத்துக்குமெத்தவருத்தமுண்டாகும், ஆகையால், இத்தன்மையாகிய சமாதானம் சொன்னேனென்ற பகவானை நோக்கித் தேவரீர் காலதாமசஞ் செய்யாமல் தூதுபோகவேண்டுமென்று பாண்டவர்கள் வேண்ட, வணங்காமுடிபொறுத்த மன்னவனிடத்தில் தூதுபோகும் படியாய்ச்சர்வாபரண வலங்கார சந்தனாக்ஷதை தரித்துக்கொண்டு தன்னுடைய ஜன்மமாகிய ரோகணி நக்ஷத்திரத்திற்குத்தாராபலஞ் சந்திரபலமுள்ள இரேவதி நக்ஷத்திரத்தில் பிரயாணமுகூர்த்தங்கொண்டு தானதருமங்கள்செய்து விராடர்பாஞ்சாலர்முதலானோருடன்பாண்டவர்கள் பின்றொடர்ந்துவழிகூட்டிவிட மனோவேகத்திலும், வாயுவேகத்திலு மிஞ்சிய வேகப்புரவிபூட்டிய மகாமேருவுக்கொப்பாகிய தேரின் மேலேறிக்கொண்டு கொம்பு, முரசு, மத்தளம், பேரி, சல்லரிமுதலிய வாத்திய முழங்க,வெள்ளைக்குடைமுதலிய பற்பல குடைகளுங்கவிந்து நிழல் செய்து நெருங்க,இருபக்கங்களிலுஞ் சாமரைவிச,கணக்கிறந்த இரதகஜதுரக பதாதிகளும் பூமியையாளும் அரசர்களும்; பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் மன்னர் மண்டலீகர், சாமந்தருஞ்சூழ, கட்டியக்காரர் வந்தியர்முதலியபேர்கள் முந்திக் கூடிக்கொண்டோட, பரதநாட்டிய ஸ்திரீகள் பின்னேபாடிக் கொண்டாடிவர ஸ்ரீகிருஷ்ணபகவான்புறப்பட்டார். தேவேந்திரன்முதலிய தேவர்கள் மாதவர்கள்பார்த்து மனங்களிக்கவும், ஆதிசேடன்படஞ்சுளிக்கவும், பூமிதேவி மகிழ்விற் குளித்து உடல்பூரித்து நமதுபொருட்டால் அஸ்தினபுரிக்குச்சுவாமி தூதுபோகின்றார், இனிமேல் நமதுபாரநீங்குமென்று பரிந்து உபசரிக்கவும், சகலவளமுங்கொண்ட உபலாவியத்தை விட்டு அஸ்தினபுரத்தை நோக்கி நாட்டைக்கடந்து காட்டில்வரும்போது நாரதர் கண்ணுவர் சமதக்கினிபகவான் இந்த மூவரும் அநேக ரிஷிக் கூட்டங்கள் நெருங்கும்படியாகவந்து, ஜகநாதன்தூதுபோவதைப்பார்த்தார்கள், அவர்களைக்கண்டவுடனே ஸ்ரீகிருஷ்ணபகவான் தேரைவிட்டிறங்கி அவர்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, வந்தகாரியமென்னவென்று கேட்டருளினான்.

அந்தரிஷிகள் மூவரும் மனத்தினால்வணங்கி தேவரீருடைய விஸ்வசொரூப தரிசனஞ்செய்யவேண்டிய இச்சையுடையவர்களாயுந் தேவ ரகசியப்பிரகாரம் அஸ்தினபுரத்துக்குத் தூதுபோய் அரவக்கொடியோனைக்கண்டு அவனிடத்தில் பேசப்போகிற அதிசயங்களையும் கூடவிருந்து பார்க்கவேண்டுமென்னும் அவாக்கொண்டு வந்தோமென்று சொல்லிய அப்பெரியோர்களைப் பார்த்து அஸ்தினபுரத்துக்கு வருவீர்களாகில் உங்களிச்சைக ளியாவும் நிறைவேறுமென்று பரிபூரணமாக அருள்வாக்கியம் பகர்ந்த பரமபதநாதனைப் பணிந்து வாழ்த்தி, தேவரீர் முன்னதாகச்செல்லும், நாங்கள் பின்னாலே வருகின்றோமென்று விடைபெற்றுக்கொண்டு முனிவர்கள் மறைந்து போனார்கள். அவர்கள் சென்றபிற்பாடு ஸ்ரீகிருஷ்ணபகவான் தேரேறிக்கொண்டு கல்லு மலையுங் காடுமேடும் பாலை நிலமும் பனிவரைச்சாரலும் ஆகாயமளாவிய மரங்

களும் மலையருவிகளும் வடியாத கான்யாறும் நீர்வளம் நெல்வளம் நிறைந்த மருதநிலமும் கடந்து இரண்டுநாள்வழியில் இருந்திளைப்பாறிமூன்றாநாள் குருநாட்டெல்லையில்வந்து அண்டகடாகத்தை அளக்கப்புகுந்த தன்மை போன்ற உயரத்தையுடைய கோபுரங்களும், நாகலோகம் வரையிலும் ஆழ்ந்து மேகமண்டலம்வரையிலுமுயர்ந்து வளர்ந்திருக்கும் மதில்களும் அகழ்களுமு டைய பெரியசெல்வமோங்கிய அத்தினபுரியை ஸ்ரீகிருஷ்ணபகவான்கண்டு நடக்கும்போது அந்த மார்க்கத்திலே வரிசையாயிரா நின்ற பசுமைபொருந் திய பாக்குமரங்களும், அடிப்பழுத்திருக்குங் குலைகளும், பச்சைக் குலைகளும், விரிந்த பாளைகளும், தழைந்து விளங்கியது எப்படியிருந்த தென்றால் தாவிச் செல்லும் வேகத்தையுடையகுதிரைகட்டிய தேரின்மேல் ஸ்ரீகிருஷ்ணபகவான் அஸ்திநபுரத்துக்குத் தூது வருகின்றாரென்று பவளச்சரங்களும், மரகத மணி களின் பந்தியும், வெண்மையாகிய முத்துக்கோர்வைகளும் வரிசை வரிசை யாகத்தூக்கி அலங்காரமண்டபம் அமைத்ததைப்போலு மிருந்தன. மே லும் பரிமளம் வீசும் அகில்விருக்ஷமும், சந்தனமரமும், பலாமரமும், மாமர மும், சண்பக மரமும், பச்சிலைமரமும் நெருங்கி விளங்கிக் கொண்டிருக்குஞ் சோலையில் தேவநாயகன் வந்திறங்கத் திருவடிபெயர்த்தருளியபோது எதிர் கொண்டு உபசரிக்கவந்திருந்த பரதநாட்டிய மாதர்களைப்போன்ற மயில்கள் கண்ணபிரானுடைய திருமேனியைக்கார்காலமேகமென்றுகண்டு, தோகையை விரித்துக், களிப்புடன் ஆடுவதுபோலு மிருந்தன. இன்னமும், சுவாமி வரும்வழியில் இருபக்கங்களிலும், நிறைந்த நீர்களுடைய அலர்ந்த செந் தாமரைப் பொய்கைகள் பொருந்திய தன்மை எப்படியிருந்தனவென்றால், அழகுக்கிடமாகிய அஸ்திநபுரி யென்னும் கன்னிகையானவள் மகாலட்சு மிக்கு நாயகராகிய மகாவிஷ்ணுவருகின்றாரென்று பற்பல நிறமுள்ள சாதமும் மலர்ந்ததீபமும் உடையதாய் சுண்ணங்கலந்த மஞ்சள்நீருடன் ஆரத்தி யெடுத்து அசைந்து நின்றதைப்போலுமிருந்தது. அப்பால் தூதுவரும்படி யாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் ஆதிவராகரூபியாய்ச் சமுத்திரஞ் சூழ்ந்தபூமியைப் பெயர்த்த நாளில், அந்தவழியாக வந்தெழுந்த பாதாளகங்கை அஸ்திநபுரத் தின் பெரியமதிலை வளைந்துகொண்டதென்று சொல்லச்சிறந்து ஆழ்ந்திருக் கும் அகழியும், அடியானது பாதலத்திலும் முடியானது மீதலத்தினும் பொருந்தி அளவிடக்கூடாததாகியும் ஒப்பு, உவமையில்லாம லுயர்ந்து வளர் ந்து வளைந்து நெடிய கடல்சூழ்ந்த சக்கரவாளகிரியை இந்த மதிலுக்குப்படியா யமைத்திருக்கின்ற தென்றுசொல்லும்படியாய் பற்பலபொறிகளையுங்கொண்டு சூழ்ந்த மதிலும் பகற்காலத்தில் சூரியவெப்பம் பூமியிற் படவொட்டாமல் நிழலைச்செய்தும் ஒற்றைச்சக்கரமுடைய சூரியன் தேரைநடத்தும் அருண னுக்குச் சகாயமாகச் சப்தமாவென்னும் குதிரைகளை வேகமாயோட்டி வெற்றிவீரப் பிரதாபத்தைத்திசைகளி னிடத்திற்காட்டி வேகம்கொண்ட காற்றின்விசையினால் ஆகாயகங்கையில் நனைந்து அதினுடைய அலையைப் போலசைந்து மேகமண்டலத்திற் புகுந்துமின்னலைப்போல் பிரகாசித்து அழகிய மதில்முதலிய இடங்களெங்கும் நெருங்கி ஆடிக்கொண்டிருக்கும்

கொடியாடைகளும் ஆதிசேடன் முதலாகியபேர்களுக்கு போகமாகிய நாகலோகமோ? ஐந்தருவளர்ந்து இந்திரற்கமைந்த தெய்வலோகமோ? வளமெலாஞ்சுரந்த அளகாபுரியோ? நித்தியமகிஷியையுடைய சத்தியலோகமோ! இந்தஅஸ்தினபுரியென் றெண்ணும்படியாகிய அப்பட்டணத்து மலைகளின்சிகரத்திலிருந்தெழுகின்ற கரியமேகங்களைப்போல் மாடமாளிகையிலிருந்தெழுகின்ற அகிற்புகை, சந்தனப்புகையின் வாசனைகளும், அரசர்களுடையயானைகளும் சேனைகளும் எதிரொதிர்மயங்கி பின்னுமுன்னும் பக்கங்களிலுங் காலெடுத்துவைப்பதற் கிடமில்லாமல் நெருங்கி யிடியுண்டு போங்கோள் போங்கோளென்னுஞ் சொல்லினுடைய சத்தங்களேமிகுந்து புறம்போக மாட்டாமல் மயங்கிக்கொண்டிருக்கும் வீதிகளும், மலைபடுதிரவியமும் காடுபடுதிரவியமும் நாடுபடுதிரவியமும் விதம் விதமாகக் குவித்து வரிசையாக வமைத்திருக்கின்ற கடைவீதிகளும், படைவீடுகளும், காட்டிவிருக்கும் பற்பலவித மலைப்பார்க்கிலும் சிறந்து மிகுந்து கூட்டங்கொண்ட சுத்த வீரர்களும், கடற்கரையின் வெள்ளைமணற் பரப்பைப் பார்க்கிலுங் குவிந்து நிறைந்த சிறந்த குதிரைப் பந்திகளும், இராக்காலத்தில் தோன்றும் நக்ஷத்திரங்களிலும் அதிகமாகிய யானையினங்களும், மேகத்தின் றனியினுமேற்பட்ட தேர்களும், குற்றமில்லாத நான்குவேதமு முணர்ந்த பிரமஞானமுடைய வேதியர்களிருக்கும் அக்ராரவீதிகளும், மாசற்றமணிகளாற்செய்த கிரீடம்பொழுத்த மன்னவரிருக்கும் இராஜவீதிகளும், பழுதில்லாத புத்தி யுத்திகளுடைய மந்திரிமார்களிருக்குஞ் சுந்தர வீதிகளும், நித்திய தவமாகிய சத்தியங்களும், தருமமுஞ் சிறந்த வைசியர் வாழும் மாணிக்க வீதிகளும், மங்களசங்க முழங்கக் கலியாணஞ் செய்கின்ற கடிமணவாசலும், சிலம்போசைமுழங்க நடனஞ் செய்கின்ற தேவமாதர்களின் தெருக்களும், வெற்றிமுரசு, வீரமுரசு, தியாகமுரசு, கல்யாணமுரசு, முழங்கக் கொண்டிருக்கும் கெடிஸ்தலாதிபதியின் ஆசாரவாசலும், மத்தளம், மேடால் முதலாகிய வாத்திய முழங்கிக்கொண்டிருக்கும் பிர்மாலய தேவாலய வீதியும், தெருவாசலில் நிற்க இடம் பெறுமல் அரசர்களுடைய கிரீடங்கள் ஒன்றோடொன்று தாக்கி உராய்ந்து உதிர்ந்த அபரஞ்சிப் பொடிகளும், இரத்தின ராசிகணிறைந்த ஆசாரவாசலின் படிகளும் மகாமேருவைப் போலிருக்கும் கொலுக்கூடமும், சூரியன் வந்து இளைப்பாறுதலுக்கும் ஏற்றனவென்று சொல்லும்படியாக வுயர்ந்த நான்கு கோபுரவாயில்களும், சிங்காரத்தோப்புகளும், பளிங்கு மேடைகளும் நீராழிமண்டபங்களும் வேதிகைகளும் பூரண கும்பங்களும், மேற்கட்டிகளும், பூப்பந்தல்களும், மணிப்பந்தல்களும் நிறைந்து எப்போதும்மாறாத வைபவத்தைப்பெற்ற அவ்வஸ்தினபுரத்தின் அலங்காரத்தைக்கண்டு கண்களித்து ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலிய யாவர்களுந் தெற்குக் கோபுரவாசலில் திவ்ய மணம்குடிகொண்டு குளிர்ச்சி பொருந்தி இருக்கும் சண்பகச் சோலையினிடத்தி லெழுந்தருளி யிருந்தார்கள். அந்தச்சோலையிலும், அஸ்தினபுரத்தின் சாலையிலும், காவலாக இருந்த தூதுவர்கண்டு; வணங்கி நந்தியாவட்ட மாலையணிந்த துரியோதனன் சபையிற்சென்று பணிந்து, சுந்தரா சுதந்தரா, புரந்தரா நிரந்தரா, பராக்கு,

மகிதலம் புரக்குந் திரிதராட்டிரன் மனைவிபாலுதித்த கண்மணியே பராக்கு அகில லோகத்தும் ஆணைசெலுத்தி அணிமுடி வணக்கா விண்மணியே பராக்கு, திங்களங்குலத்தி லோங்கிய மணியே பராக்கு, பராக்கு ஐயா, அன்று அனுமானைத்தூதாகவிடுத்து இலங்காபுரியை யெரியூட்டியவித்தவர் இன்று பஞ்ச பாண்டவர்க்குத் தூதாகயிசைந்து நமது செண்பகச் சோலையில் வந்திறங்கி யிருக்கிறாரென்று சொன்னவுடனே; பகைகொண்ட பாவிகளாகிய பேர்களுக்கு இடதுகண் இடதுதோள் துடிக்கவும்; புண்ணியராகிய பேர்களுக்கு வலதுகண் வலதுதோள் துடிக்கவுமாகவிருந்தன. அந்தவேளையில் துரியோதனனெழுந்து திரிதராட்டிர மகாராஜனுடைய அரண்மனைக்குட் சென்று,அவனைக்கண்டுவணங்கிஇராஜராஜேஸ் வரனே! கேளும்பாண்டவர்கள் பக்ஷமாய் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி தெற்குக் கோபுரவாசற் செண்பகவனத்தில்வந்து இறங்கியிருப்பதாகத் தூதுவர் சொன்னார்களென்று விண்ணப்பம் பண்ணிக்கொள்ள, அந்த வார்த்தையைக்கேட்ட திரிதராட்டிரன்மனமகிழ்ந்துவீஷ்மர்துரோணர் விதுரன் முதலியபேர்களுடன் ஆலோசித்துத் துதிப்பதற்குந் தொழுவதற்குந் தரிசிப்பதற்கும் அரிதாகிய வேதநாராயணனென்னுந் தேவதேவன் நாமிருக்கும் பூமியை மிதிக்கப்பெற்றது அற்புதம்; அற்புதம்; இஃது, நாம்செய்த தவமென்றும் நமது தலஞ்செய்த தவமென்றும் நமது குலஞ்செய்த தவமென்றுங்கொண்டாடித் திரிதராட்டிரன் தன்னைமறந்து அக்கண்ணனுக்கு நல்ல வெகுமதிகளைக்கொடுக்க வேண்டுமென்று சந்தோஷங்கொண்டு சொல்லும் வார்த்தையை விதுரமகாராஜன் கேட்டு; அண்ணா, கல்மழையைத்தடுத்து கோவினங்களையும், கோபாலரையுங் காத்தருளிய கர்த்தனுக்கு இப்போது வெகுமதிகொடுத்துப் பாண்டவர்களுக்குஐந்தூராகிலுங் கொடுவென்றுகேட்க, வந்திருக்குங் காரியத்தைத் தடுத்துவிட நினைத்திருக்கின்றீ ரல்லவா; ஐயா பதின்மூன்றுவருடம் காட்டிலும், நாட்டிலும் உழன்று வருந்தி வந்தமைந்தர்களை ஆதரித்து இருக்க இடங்கொடுக்க இளகாத மனத்தினையுடைய நீர், உலகமெல்லாமுண்ட ஒருவனுக்குச்சகலவெகுமதியுங்கொடுக்கத்துணிந்து சொல்வது ஆச்சரியந்தான் அன்றோ? வென்று சஞ்சலத்துடன் தம்பியாகிய விதுரன் சொல்ல, வீஷ்மி ... ...த்து விசித்திரயாகிய மைந்தனே! அஷ்டலட்சுமி வாசனாகிய ஆதிமூலன் உபலாவியத்திலிருந்து அஸ்தினாபுரிக்கு அவசரமாக வந்தது உமது வெகுமதியைப் பெறவா? அப்பா பொன்னையும், பூமியையும், நவரத்தினக் குவியல்களையும், புகழையும் புத்திரமித்திராதிகளையுமுடைய உன்னையும், ஒருதவியுமில்லாத என்னையும் படைத்தருளிய பிரமனைஉந்திக்கமலத்திற்புத்திரனாகப்பெற்றஒப்பில்லாதஒருவருக்கு நீயென்ன கொடுக்கப்போகிறாய், அவர் உன்னிடத்தில் கைநீட்டியென்னவாங்கப் போகிறார். ஏந்தலேஇவைகளெல்லாம் உபயோகமில்லாத வார்த்தை; இந்தமட்டும் இதைநிறுத்திவிட்டு வந்திருக்குங் கண்ணபிரானுடைய மனக்குறிப்பையறிந்து அவருக்கு மரியாதைசெய்து அனுப்பிவைக்கும் விதத்தை யோசிக்கக்கடவையென்று வீஷ்மர்சொல்லினர். துரோணாசாரியர் திரிதராட்டிரனைபார்த்து அரசனே? ஸ்ரீகிருஷ்ணபகவானேதூதாகவந்திருக்கின்றா ரென்றபோதுபாண்

டவர்களுடைய நன்னடக்கையையும் அவர்களது மனோதிடத்தையும் யோசிக்கவேண்டிய தல்லாமலும் கிருஷ்ணபகவான் சொல்லப்போகிற இராஜ நீதி முறைமைமுதலிய திறமைகளையும் உன்னுடைய தீர்க்கபுத்தியினால் நிதானித்து உன்புத்திரராகிய நூறுபேர்களுக்கும் யுக்திவிளைவித்து உன்மனத்துக்கிசைந்த நாட்டைப் பாண்டவராகிய மைந்தர்களுக்குக் கொடுத்தால் வாசுதேவனேமிகவு மனமகிழ்ந்துகிருபைவந்துசகலசம்பத்துடன் நீடூழிவாழும் படியாகிய காலமுங் கொடுப்பார். அவருடைய கடாக்ஷவீக்ஷணியத்தால் நீங்களுஞ்சுகப்படுவீர்கள், தேவர்கள்முதலிய யாவரும் சந்தோஷமடைவார்கள், இதற்குமிஞ்சிய யுத்தியும் புத்தியும் உறுதியும் வேறொன்றுமில்லையென்று துரோணாசாரியர் சொல்ல, பக்கத்திலிருந்து கேட்டிருந்த துரியோதனனுக்கு மிகுந்த கோபம்பிறந்து கண்கள்சிவந்து கலீரெனநகைத்து சபையினிறைந்த காவலரெல்லாங் கலங்கும்படியாகச் சொல்லுகின்றான்.

துளவணிமாயனாகிய தூதன்! பாண்டவர் பக்ஷத்திலிருந்து என் நகரத்துக்குள்ளே வருவானாகில், ஆ ஆ அவனுக்குநான் செய்யப்போகிறமரியாதைகள் வேணதுண்டு. அதாவது, கோட்டைவாசலிற் புகுந்தவுடனே கிங்கரர்முதலிய மல்லர்களைவிடுத்து புஜத்தோடுபுஜநெரியப் பின்கட்டாய்க்கட்டிக் காராகிருகத்திற்சேர்த்து பிராணன்போகவொட்டாமல் கஞ்சியும் உப்புமாகக்கலக்கி வார்த்து அவன் காலமுடிந்தபிற்பாடும் அவன்றேகத்தைச் சிறைச்சாலையில் வைப்பேன். அதேனெனில்; சூக்தையுங்கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டிவிட்டிருக்குந் துஷ்டர்களைப்போன்ற கலகக்காரனைத் தண்டிக்கச்சொல்லித் தருமநீதியிற்சொல்லியிருப்பதினால் அவனை நான்விடமாட்டேன், விட்டால்குடிகெட்டுப்போம்; ஐயையோ காட்டிலே காய்கனிகிழங்குகளைத் தின்றுகொண்டிருந்த பாண்டவர்களை நாட்டிலிழுத்து அவர்களுக்கு இதோபதேசம்பண்ணி நானே தூதுபோய் நாடுவாங்கித் தருகிறேனென்று சொல்லிவந்திருக்கின்றான். அந்தப்பேச்சைப் பாண்டவர்களாகிய பைத்தியக்காரர்கள் நம்பி! இவன் நாடு வாங்கிவருவதையுணராமல், நாடுவாங்கிவருவானென்றும் ஐந்துவீடுவாங்கிவருவானென்றும் வழிபார்த்துக்கொண்டிருப்பார்கள். ஆகையால் இவனை இங்கே தானேமாட்டிவிட்டால் இந்தச்சேதியைப் பாண்டவர்கள்கேட்டுப்பயந்து, பறந்தோடிப்போய்க் காடுசேர்வார்கள். அவர்களுக்குப் படைத்துணையாக, அடைந்தோரெல்லாரும் நடுநடுங்கி எனக்குப்பிரியவசனஞ் சொல்லி என்காலில்வந்து விழுந்து தங்கள் நாடுசேர்வார்கள், என்றென்றைக்குங் கலகமென்பதில்லை, என்னுடைய நல்லகாலமானது இவனை எங்கேயோ இருந்திழுத்துக்கொண்டு வந்துவிட்டது, இதுவேதகுதியாகியயோசனை; ஓகோமாமா, அண்ணா, என்று துரியோதனன் சொல்லிய சொல்லானதுபெரியோர்கள்செவியிற்புகுதவே நாராசம் எறிகிறதுபோல் நடுங்கிஇருசெவியையுங்கரத்தால் மூடிக்கொண்டு ஹரிகரி, இதென்ன விபரீதகாலம் கட்டுப்படாத ஒருவனைக்கட்டவும், சிறைப்படாத ஒருவனைச் சிறைப்படுத்தவும், நீ நினைத்திருப்பதினால், நாங்கள் இனிபேசத்தக்கதொன்றுமில்லை. புத்திமானே உன்விதியெப்படியோ அப்படியே அனுசரித்து நடக்கும்மதியானது, அப்பா துரியோதனா எங்களுக்குக் கொஞ்ச நஞ்சமிருந்த

சந்தேகந்திரப் பேசிவிட்டாயென்று சொல்லி யாவரும் தலைகுனிந்துகொண்டார்கள். அந்தவேளையில் திரிதராட்டிரன் தன்பிள்ளையை நோக்கிப் பதைபதைத்துச் சொல்லுகின்றான்.

அடாபுத்திரனே! வேதவிதிகளையும், தருமசாஸ்திரங்களையும், இராசமுறைமையையும் அழிக்கவோ எனக்கும்பிள்ளையாய்ப்பிறந்தாய், அடடா! ஒருவன் சொல்லியவார்த்தை சொல்லுவதற்காகத் தூதுவந்தபேர்களைத் துன்பப்படுத்தலாகாது; கொல்லப்போகாதென்று எல்லாநூல்களிலுங் கூறியிருக்க அவைகளைவாசித்துங் கேள்வியுற்றுந் தேறியிருக்கு நீ தூதுவந்தவர்களைக்கொல்லவும் கொடுமைசெய்யவும் நினைப்பையாகில் எதிரியின்கருத்தை நீயெப்படியறிந்துகொள்வாய்; உன்னிடத்தில் எவர்கள் தூதுசொல்லவருவார்கள், குழந்தாய் காரியவாதியாகிய நீ தூதுவரத்தக்கவர்களை யெதிர்கொண்டழைத்துவந்து உபசாரஞ்செய்து நன்னயமாகப் பேசுவையாகில் இருவருக்குங் குறைவில்லாமல் வந்தகாரியங்களைப்பேசி இன்பமுறச்செய்வார்கள். ஆகையால் இப்போது தூதுவருகின்றவன் கபடநாடக சூத்திராவதாரி, அவனை நீ எதிர்கொண்டு சென்று வணங்கி உன்தீவினையைப் போக்கடித்துக்கொள்ளச் சிந்திக்காமல் வாயில்வந்தவண்ணம் பிதற்றுகின்றாயே, என்னடாபாவி! நான்குவேதங்களினாலேயுங்காணக்கூடாத நாராயணனைமடலுடன்மடல்விரியக்கட்டிச் சிறையிற்போடவும்உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் படியளக்கும் ஒருவனுக்கும்உப்புந்தண்ணீரும்வார்த்து உபசரிக்க உன்னாற்கூடுமோ, மதிகேடா! உன்துர்ப்புத்தியினாலேஇப்படிக்கெல்லாம் பேசினையே யல்லாமல்நற்புத்தியினால் உணர்ந்து பேசினவனல்லை,இப்போதும், அந்ததுராங்கார யோசனையைவிட்டு பெரியோர் சொல்லும் புத்தியைக்கேட்டு,நடந்து,நன்மைபெற விரும்பத்தக்கதேயல்லாமல் உனக்கிஷ்டமாகிய துஷ்டை நினைவின்படி நடப்பையாகில் குஷ்டமும் கஷ்டமும் அஷ்டதரித்திரமும் நேரிட்டு வருத்தஞ்செய்யப் பட்டும்போய் நஷ்டப்பட்டுக் கெட்டலைந்துபோவாய் துஷ்டமகனேஎன்றுவெறுத்துக்கொண்டுமந்திரி பிரதானிகளைப்பார்த்து பட்டணமெங்குந் திட்டவட்டமாய் சிங்காரிக்கச்சொல்லிக் கண்ணாடிப்பட்டமுதலிய மேற்கட்டிகளுடன் சட்டமாயமைத்து மாணிக்கத்தீபம்பிரகாசிக்கச்செய்து மகரதோரணம், வாழை, கமுகு, மாவிலை, ! ழை, மலர், தாமரைமலர், பவளவடம், முத்துவடம்; ரசகுண்டுகள் தொங்கொளிவட்டம் நிலையொளிபட்டம் நிலைக்கண்ணாடிகள் இவைகளெல்லாங்கட்டி அலங்காரஞ்செய்து மாவிலை, தருப்பை, தேங்காய், வாழைப்பழம், சந்தனம் புஷ்பம்தாம்பூலம், அக்ஷதையுடன், பூரணகும்பவேதிகையமைத்துநமதுபுரத்திலிருக்குஞ் சனங்களெல்லாரும் ஸ்நானஞ்செய்து ஆடையாபரண அலங்காரங்களணிந்து சுசியாகவந்து தொழும்படியாகச்செய்து மத்தளதாள வித்துடனெத்துத் தத்திமிதாவென நர்த்தனமிட்டுவரும்பரதநாட்டிய மங்கையர்களாடமிகுஞ்சுரத வீதியெங்கெங்கு நிறுத்திப்பாட வாத்தியமுதலிய ஜெயமங்கள பேரி முழக்கிவைத்து பரவஸ்துவாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் வந்திறங்குவதற்கு தகுதியாகிய விடுதியேற்படுத்தி அவருடன்கூடவந்த யாவர்களுக்குங் குறைவில்லாமல் குபேரசம்பத்தைப்போலச் சகல சாமான்முதலிய வஸ்துக்களும்,

அமைத்து சுயம்பாகிகளைவைத்துச் சமைத்து சந்தனபாளிதம் ஏர்ப்படுத்தி வைத்து மந்திரிபிரதானிகள் முதலாகிய மன்னவர்களும் பயணப்பட்டுப் பிரயாணபேரிமுழக்கி எனக்கு அறிக்கைபண்ணுவீர்களாகில்இரண்டுகேண்ணுந்தெரியாத நான் எதிர்சென்று மேகவண்ணனாகிய கண்ணபிரானை உபசரித் தழைத்துக்கொண்டு வருகிறேனென்று பெரிய அரசன்சொல்லக்கேட்டுச்சமஸ்தமான பேருஞ் சம்மதிப்படாமல் தடுத்து ஓ ராஜராஜேஸ்வரா? பெருமானைவைத்துக் கொண்டு திருநாள்செய்வதுபோல் தேவரீரை தகத்தினிடத்தில் பெருமையாக வைத்து நாங்களெதிர்கொண்டு போய்க்கண்டு வணங்கி அழைத்துவருகின்றோமென்று சொல்ல, இந்தவார்த்தைகளை யெல்லாங் கேட்டிருந்த துரியோதனன் தந்தையின் பாதத்திற் சாஷ்டாங்கமாகப்பணிந்து சொல்லுகின்றான்.

கேளும் என்னையாவே? தேவரீருடைய சிந்தையின்படிக்கு நானே எதிர்கொண்டுபோய் சகலவைபவங்களுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானை அழைத்துவருகிறேன் என்மேல் கோபம்பண்ணவேண்டாம் எங்கோவே என்று தந்தையை வணங்கி பட்டண வலங்காரஞ்செய்யும்படி திட்டஞ்செய்தான் துரியோதன மகாராஜன் அப்போதே ஒட்டகத்தின்மேற் பிரசித்த பேரிகைகட்டி வீதிவீதியாய்க்கொட்டினார்கள். இப்படிதிட்டஞ்செய்வதற்கு முன்னேதானே பட்டணத்திலுள்ள ஜனங்களெல்லாம் ஸ்ரீகிருஷ்ணபகவானாகிய கர்த்தன் வந்தாரென்று தானந்தவழுந்தவிய சம்பிரமங்களுடன் ஆநந்தங்கொண்டு அலங்காரஞ்செய்து பனிநீர்தெளித்துச்சாந்தால்தரைமெழுகிசந்தனத்தூல்கோலமிட்டு கதம்ப கஸ்தூரிகருப்பூர சுன்னங்கலந்திறைத்து மகாலட்சுமியை அலங்கரித்துவைத்தது போல் அஸ்தினாபுரவீதியை அலங்கரித்து வைத்தார்கள்! அதைத்துரியோதன மகாராஜன் கேட்டு மனமகிழ்ந்து இரத கஜ துரக பதாதிகளுடன் பற்பலமன்னவர்களும் அரசனது அற்புதப்பட்டத்துக்குரிய யானைகளுங் குதிரைகளும், இரதங்களும், அலங்காரத்துடன் அழகியதெருக்களில் இருபக்கங்களும் நெருங்கியிருக்க,பேரி யாழ் சகோடயாழ் செங்கோட்டியாழ் முகவீணைசுரமண்டலி முதலிய வாத்தியங்களெல்லாமுழங்கப் பட்டுவான்கள் கட்டியம்புகழ்ந்து துதிவழங்க அரவக்கொடியோனாகிய துரியோதனன் அரவணைதுயின்ற அமலனை எதிர்கொண்டழைக்க எழுந்துவருங்காலையில் பொய்யுஞ் சூதும் பொறாமையுங் கொடுமையும் செய்யும் பாலும்போல் நிறைந்தநெஞ்சினனாகிய வஞ்சகச் சகுனி மாமன்வயிற்றைப் பிசைந்துகொண்டோடிவந்து வழியில்நேரிடுந் துர்ச்சகுனம்போல் மருமகனைமறுத்துத் தடுத்து என்னருமை மருமகனாகிய அரசர்க் கரசனே! இதென்ன அநியாயம்! இதென்ன ஞாயம்! இதென்ன முறைமை! இதென்ன மரியாதை, இறைவனே! இன்னமுஞ் சின்னஞ்சிறு பிள்ளைத்தனமாகச் செய்கின்றீரே! யோக; போக, தேவேந்திரா? மூவுலகமும் மதித்துத் துதிக்க வணங்காமுடிபொறுத்த மன்னர் மண்டலேஸ்வரா? ராஜாதிராஜ ராஜப்பிரபுடீகா ராஜ உத்தண்ட ராஜமார்த்தாண்ட ராஜதிலக ராஜபூபால ராஜதார்த்தண்ய ராஜமூர்த்தண்ணிய ஜயவிஜய சங்கிராம சார்வபூமா சூர்திரன்முதற்கொண்டு இன்னான்மகனின்னாரென்று சிங்காசனத்திலிருந்து செங்கோல்பிடித்து நீதிசெலுத்திய மகுடாபிஷேக துரந்தரா புரந்தரா சாம்பிரதாய பூமண்டலாதி

பதியாகிய கோமானே?ஒருகுறுநிலமன்னனுக்குக்கிராமத்திலிருந்துபட்டாபிஷேகமில்லாமலொட்டுக்குடித்தனக் காரனாகியும்பஞ்சையாகிய பாண்டவர்கள், கெஞ்சிக்கொண்டு தூதனுப்பவந்தகொஞ்சமனிதனாகிய கிருஷ்ணனை; தேவரீர்எதிர்கொண்டுபோய் அழைத்துவரக்கூடுமோ, உமதுசிந்தையுமிப்படித்தளருமா? சிங்கமானது நரிக்குஎதிர்கொண்டு செல்லுமா?தீங்காகியசிறியகாரியத்தைச்சிந்தித்தீரே!பெரிய அரசர்களுக்கு மரியாதையல்லவென்று அன்பினாற்சொல்லிநில்லுமென்று நிறுத்தவே, துரியோதனனுடைய எண்ணத்துக்குச் சரிப்பட்டிருந்த மாமனுடைய வார்த்தையான மணிமந்திர அவுஷதத்தை உட்கொண்டு சபாமண்டபத்துக்குத்திரும்பிவந்து தம்பிமார்முதலிய பெரியோர்களை நோக்கி நீங்கள்போய் அழைத்துவாருங்களென்று அனுப்பிவிட்டுசெக்கிரதரனாகிய ஸ்ரீகிஷ்ணபகவானுக்கு விடுதி அரண்மனையும், வேண்டிய வஸ்துக்களுந் திட்டஞ்செய்து யுத்தவலிமைபெற்ற ராஜவர்க்கங்களும் பந்துஜனங்களும் வணங்கிச் சூழ்ந்திருக்க நந்தியாவர்த்த மாலையணிந்த புயாசலத்தையுடைய துரியோதனன் சிங்காதனத்திலிருந்தான்! ஜனங்கள் யாவரும் இதென்ன விபரீதகாலமென்று மெய்ம்மறந்து வருந்தினார்கள். அந்தவேளையில் வீஷ்மாசாரியரும் துரோணாசாரியரும் அசுவத்தாமாவும் விதுரமகாராஜனும் கிருபாசாரியரும்வேதபண்டிதராகிய பெரியோர்களும், அறுபதுநூறாயிரம் மன்னர்மண்டலீகரும், நால்வகைச்சேனையும் பேரிமுதலிய பாஞ்சவாத்தியத் தொனிகளும் கணிகைமாதர்களாட்டமும் குடைகொடி ஆலவட்டமுதலிய கூட்டமும், நீங்காமலோங்கிய அஸ்தினாபுரத்தின் வீதியைவிட்டு, ஸ்ரீ கிருஷ்ணபகவானை இரண்டியோசனைதூரம் எதிர்கொண்டு - கண்டு இருகண்களுங்களித்து - இறைஞ்சிப் பணிந்து- இரண்டுபக்கத்திலுமொதுங்கி நிறைந்துநெருங்கி நின்றனர். அவ்வாறு நின்றவர்களைத் துளபமாலையணிந்த கிருஷ்ணபகவான் கிருபாநோக்க மாகப்பார்த்து சிலரைத்தழுவியும் பலரை ஆசீர்வதித்தும் சந்தோஷ முடையவராய் தன்னுடன் கூடவந்த சேனைகளும் அஸ்தினாபுரத்திலிருந்து வந்தசேனைகளும் அரசர் முதலிய யாவரும் புடைசூழ்ந்துவர சண்பகச் சோலையைவிட்டுப் பாதசாரியாய்ப் புறப்பட்டு வீஷ்மர், துரோணர், விதுரர் முதலியோர் கைலாகு கொடுக்க அஸ்தினாபுரத்தின் அரண்மனைவீதியில் வரும்போது அவ்வீதியின் இருபக்கங்களிலுமிருக்கிற வீடுகளைப் பார்த்து இதுயாருடையவீடு இதுயாருடையமாளிகை இதுயாருடையமாடம் இதுயாருடையஅரண்மனை இதுயாருடையமந்திரம்இதுயாருடையசுபக்கிருகமென்றுகோபாலகிருஷ்ணன் கேழ்க்கும்போதுபக்கங்களிலிருப்பவர்கள், விரைந்தோடிவந்துபகவானைப்பணிந்துஇதுஎன்னுடைய வீடு இது என்னுடையமாளிகை இதுஎன்னுடையஅரண்மனை இதுஎன்னுடையமந்திரம்இதுஎன்னுடையசுபக்கிருகம்என்று இவ்விதமாகச்சொல்லியயாவரையும் பார்த்து புன்னகைகொண்டுஅப்படியாவெகுநேர்த்தி வெகு சந்தோஷமென்று வார்த்தையாடிக்கொண்டே விதுரராஜனுடையமனைக்கு நேராகவரும்போது இதுயாருடையஇருக்கையென்றுபகவான்கேட்க;பக்கத்திலிருந்தவிதுரன்;பாதங்களிற்பணிந்துஓதேவதேவா?தேவதாசார்வபூமா?சுவாமீதேவரீருடைய இருக்

கையென்று சொல்லவும், அதைக்கேட்டு கண்ணபிரான் உள்ளமகிழ்ந்து இவ்வளவுபெரியநகரத்தில் எனக்கு மொருவீடிருக்கின்றதல்லவா, என்றிராஜாதிராஜனாகிய துரியோதனன் ஏற்படுத்திய விடுதிக்குப்போகாமல் வீஷ்டுமர் துரோணர் முதலியபேருக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு விதுரனுடைய வளவிற்புகுந்தார்.

## விதுரர் துதிக்கும் கவி.

முன்னமே துயின்றருளிய முதுபயோத்தியோ
பன்னகா சனப்பாயலோ பச்சையாலிலையோ
சொன்னநான் மறைச்சுருதியோ கருதிநீயெய்தற்
கென்னமா தவஞ் செய் ததிச்சிறுகுடி லென்ருன்.

அக்காலத்தில் விதுரமகாராஜன், பகவானுடைய இரண்டுதிருவடிகளையும் தன் முடிமேற்பொருத்திக்கொண்டு சுவாமி? தேவரீர் திருவடிபெயர்த்தருளும் படியாய் இந்தக்குடிசையானது, என்ன தவஞ்செய்ததோ ! எந்தவிதமிழைத்ததோ!தேவரீர்!பூர்வத்தில்திருக்கண்வளர்ந்தருளியபழயபாற்கடலோ; சிரோரத்நம் பிரகாசிக்கும்ஆயிரம்பணமகுடப்பாயலாகிய ஆதிசேஷசயனமோ! ஆலிலையோ! நான்குவேதமோ ? ஐயனே! என்னநினைந்து எழுந்தருளியதோ, இந்தச் சிறியகுடிசை என்ன தவத்தைச் செய்ததோ என்று கண்களில் நீர்சொரிய வணங்கித் துதிக்கும் விதுரனை மார்போடெடுத்தணைத்து ஓவீரராஜனே உமதுவீட்டுக்குவிருந்து வந்தேனென்று பரமாத்மாவாகிய திருமால் திருவாய் மலர்ந்தருளக்கேட்டு மூன்றுவிதமாகிய புவனங்களை யெல்லாம் உண்டருளியமுதல்வர் மும்மையிலும் எம்மை அடிமையாகவுடைய ஸ்ரீகிருஷ்ணபகவான் விருந்துக்குச்சம்மதித்தாரென்று, ஆச்சரியப்பட்டுஆறுநூறுயிரஞ் சமையற்காரரைநோக்கி, பாகவான் முதலிய எல்லாச்சேனைகளுக்கும் அறுசுவை பதார்த்தத்துடன் ஒருநொடிப்போதில் அன்னமாகவேண்டுமென்று ஆக்ஞாபித்தான். அப்போது, மாயவனாகிய கண்ணபிரான் வீரஞான விதுரனுடைய உள்ளன்பு வெளிப்படச்செய்து சதுர்ப்புஜதரிசனங்கொடுக்க வேண்டுமென்று சந்தோஷங்கொண்டு சமீபத்திலிருந்த விதுரமகாராஜனைப்பார்த்துச் சமையலாகிற வரைக்கும் நான்பசித்திருக்கமாட்டேன்; உனக்குச்செய்திருக்கும் போசனத்தை எனக்குப்போடுமென்றுகேட்க, உடனே தனக்குச்செய்திருந்த நொய்க்கஞ்சியைக் கொண்டுவந்து வைக்க, பகவான் திருமஞ்சனமாடி நித்திய விதிமுடித்துக்கொண்டு போசனத்துக்கு வந்தகாலையில் பொன் போன்ற வாழையிலையில் கஞ்சியை விடுத்தார்கள், அதைக்கண்ணபிரான் கரத்தால் வாரிப்புசிக்கப் போங்காலையில் விதுரமகாராஜன் நிலத்தில் வீழ்ந்து சுவாமி ! அறுசுவையுண்டி சித்தமாய்க் கொண்டிருக்க தேவரீர் இந்தநொய்க்கஞ்சிக்கு எத்தனைநாள் ஏக்கமுற்றிருந்தீரோ ஐயனே? என்னை யாவரும் பழிப்பார்களே, இதுநன்மையல்லவே நாதனேயென்று அஞ்சலியஸ்தனாக விதுரன்உபசாரஞ் சொல்லிக்கொண்டிருக்கும்போது, இலையில்விடுத்த கஞ்சியானது ஒருபக்கம்வழிய அதுவழியவொட்டாமல் ஒருகரத்தினால் இலை

யைத்தூக்கிப் பிடித்தார் இன்னொரு பக்கத்திலோடும்போது பின்னொருகரத்தால் அந்தப் பக்கத்தையுந் தூக்கிப் பிடித்துக்கொண்டார். பின்னொருபக்கம் ஓடும்போது இன்னொருகர மேற்படுத்திக்கொண்டு பிடித்தார், இன்னொரு பக்கம் நழுவும்போது அந்தபக்கத்துக்கும் ஒருகர முண்டாக்கிக்கொண்டு தலை குனிந்துவாயினாலுறுஞ்சி நாவினாற்சுவையறிந்து புசிக்குங்கண்ணபிரான் விதுரனைப்பார்த்துஓகோ அரசனே, இதைத்தானோ அற்பமானகஞ்சியென்றுஇழிவாகச்சொல்ல வந்தாய் அப்பனே! இன்றைக்குப்பருகும்படியாய்நேரிட்ட இந்தக் கஞ்சிமிகவும் போக்கியமாயிருக்கிறது. ஓ விதுரராஜனே; கேளும்பூர்வத்தில் இரணியகசிபன், இராவண கும்பகர்ணர், தந்தவக்கிர சிசுபாலர், இவர்கள்முதலியபலவான்களை யெல்லாம் வலியவடக்கிக்கொன்றபோது நான்தலை வணங்காமல் என்னிரு கரத்தினாலுங்கொன்றுபோட்டேன்; உன்னுடைய அன்பினால்வார்த்த நொய்க்கஞ்சியை அடக்கி உட்கொள்ளுவதற்கு நான்கு கரத்தையுங்கொண்டு என்சிரம்வணங்கியும், ஓடாமறறடுக்க இன்னும்பலகரங்கள் வேண்டியிருக்கின்றனவே விதுரமகா ராஜனேயென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் பூரித்துப்புகழ்ந்துமகிழ்ந்த காலத்தில்,புளகாங்கிதமுற்று பூதசம்பந்தமாகிய ஜனனமரணவஸ்தையைவிட்டுநீங்கினவனைப்போலவிதுரமகாராஜன்சுயம்பாகிகள் மெய்மறந்து பரவசத்தனானான். உடனே, போஜனமாயிற்றென்றுசுயம்பாகிகள் சொல்லவேபரிமளசுகந்த மிகுந்த, குளிர்ந்த ஜலங்கொண்டுஸ்நானஞ்செய்து கஸ்தூரி, அக்ஷதை யணிந்துகொண்டு, வழிபடுகடவுளைவணங்கி, தம்பியாகிய சாத்தகியுடனிருந்து அநேகவிதமாகிய கறியமுதுகளையும் அன்னங்களையும் விருப்பத்துடன் புசித்து சம்பிரமமாக இளைப்பாறினர். இத்தன்மையாக மார்க்காயாசந்தீர்ந்துமகிழ்ச்சிகொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணதேவரைச்சாஷ்டாங்கமாகவணங்கி, திருப்பாற்கடலைக்கடந்துதேவர்களுக்கு அமுதமளித்தவனாகிய ஆதிபகவானேநமதுவீட்டுக்கு விருந்தாகவந்தாரென்றுமனமுருகி,சுவாமியின் திருவடிகள் திருமுகமண்டலம் திருக்கரமென்னுஞ்செந்தாமரைமலர்களில்தனது கண்களென்னுங்கரும்வண்டை நாட்டிக்களிப்படைந்து இப்பிறப்பைநீக்கி, இனிவரும்பிறப்பையுநீக்கி, நித்திய இன்பமாகிய மோட்சவீட்டைப்பெற வழி தேடிக்கொண்ட விதுரன்; மேகவண்ணனைத்தரிசிக்குந்தோறும் கண்ணீர்ப்பெருக மண்ணில் விழுந்து பணிந்து திண்ணென வெழுந்து துள்ளிக்குதித்து? துணைப்பதத்தைச் சிரத்திற்தரித்துக்கொண்டு துன்பநீங்கி இன்பமோங்கித்தத்துவாமிர்தத்தை அள்ளிச்சாப்பிட்டவனாகையால் இருகண்களும் இமையோடிமை மூடாமலசைவற்றுக் கண்ணபிரானுடைய திருவடித் தாமரைகளில் மனம் லயித்திருந்தனன். இப்பால் கண்ணபிரானுடன் கூடவந்த வேல், வில், வாள், முதலிய ஆயுதங்களையும் வீரர்களும் ; மன்னமண்டலீகர் மந்திரிமார்முதலிய பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர், ஐம்பதுலக்ஷம் - அரசர்களும், மற்றுமுள்ள பேர்களும்கிடைத்தற்கரிய தேவாமிர்தம்போன்ற அறுசுவையுண்டிகளையுணராமல் ஆநந்தித்தனர். அந்தச்சமயத்தில், உபய சாமரங்கள்வீச சந்திரவட்டக் குடைநிழற்றவாத்தியமுழங்க, மாணிக்கச்சிங்காசனத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்க மெய்ஞ்ஞானச்சட்டையணிந்த விதுரமகாராஜனுடைய

வீட்டில்பரவாசுதேவன், அறுசுவை யுண்டியை அன்புடன்புசித்தானென்று அகமலர்ந்து மேரு மலைக்கப் புறத்திலிருக்கும் அமுதத்தைத்தானும்புசிக்கப் போனவனைப்போல் சூரியன் மேற்றிசைக்கடலில் மூழ்கினன். அப்போது மகாரிஷிகள்முதலிய வேதப்பிராமணர்களெல்லாரும் வேதமந்திரமென்னும் வில்லினிடத்தில், அனுஷ்டிப்பதற்குக்கரத்தில் வாரிய அருக்கியசலமென்னும் பாணத்தைத்தொடுத்து விட்டபடியால் சூரியனைச்செல்ல வொட்டாமற்றடுக்கும் அரக்கரழிந்து அவர்களுடைய உதிரம்பெருகிவழிந்ததைப்போற் செவ்வானமும் அந்த அரக்கருடையகால் கரங்கள் துண்டமாய்வீழ்ந்து கிடப்பதையொத்த பவளக்காடுகளும் விளங்கின.

அப்போது யாவருமாளிகைகளிலும் சாலைகளிலும் அநேகம் தீபங்கள் பிரகாசித்தன. அஸ்தினபுரியென்னும் அணங்கு அநேகந்தாமரைக் கண்களைத்திறந்து பார்ப்பதையொத்த இரத்ந சிங்காசனத்தி லெழுந்தருளியிருந்த ஸ்ரீகிருஷ்ணபகவானைப் புண்ணியதேகத்தையுடைய விதுரமகாராஜன் வணங்கிப்போற்றிப் பூர்ணாநந்தப்பெருவாழ்வுடைய புண்டரீகாக்ஷனே? திருப்பாற்கடலையுஞ் சேஷசயனத்தையும் விட்டு நீங்கிவசுதேவர்மனைவியாராகிய தேவகிதேவியார் கர்ப்பத்திலுதித்து ஆயர்பாடியில் வளர்ந்து உரலுடன் தவழ்ந்து மருதமரத்தையிடைந்து காளிங்கநர்த்தனம் புரிந்து காலிக்கன்றுகளுடன் திரிந்து கங்காநதியானது பொருந்தப்பெற்ற திருவடிகள் வருந்தும் படியாய் இவ்விடத்துக்குத்தேவரீர் எழுந்தருளிய காரணத்தை திருவாய் மலர்ந்தருளவேண்டும் கருணையுங்கடலாகிய தேவதேவனே, யென்று கேட்ட விதுரனை ஸ்ரீகிருஷ்ணபகவான்நோக்கி பூவிதழிற் பொருந்திய சிவந்ததேனை அருந்தும் வண்டுகள் இசைகொண்டுபாடும் பூமாலையணிந்த புயங்களையுடைய விதுரனே? பூர்வத்தில் இராஜசபையிலேற் படுத்திக்கொண்டவனை நாளைக்கழிக்க, சந்தோஷத்துடன் பன்னிரண்டுவருடங்காட்டிலேதிரிந்து, ஒருவருடம் அஞ்ஞாதவாசஞ்செய்து இப்போது நாட்டிலேவந்திருக்கின்ற பாண்டவர்களுக்குக்குருநாட்டைக்கேட்கத் தூதுவந்தோமென்று பகவான்சொல்ல, அந்தமொழியை விதுரராசன்கேட்டு, வெறுப்பும்விருப்பும் இல்லாதவனாகச் சொல்லுகின்றான். மையினு நிறத்த மெய்யனே கேளும், முன்னோர்வழக்கத்தையும், முறைமைகளையும் அனுசரித்து ஆதியிற்சொல்லியிருந்தவாக்குந்தப்பாமல்வலியமனத்தினையுடைய துரியோதனன் தன்பிராணனுள்ளமட்டும் தருமராஜனுக்கு நாடுமுதலியபாபத்தைக்கொடுக்கப் போகிறதேயில்லை ஆனால்; அப்பாண்டவர்களுக்குரிய பாகத்தை அவனிடத்திற் பெறுவதற்கு ஒரு உபாயமுண்டு. அதென்னவென்றால் எட்டுத்திக்கும் இடிந்துசரிந்து போகும்படியாய் பேரிகைமுதலிய வாத்தியங்கள் சப்திக்க எதிர்ந்து யுத்தகளத்திற் புகுந்து அஸ்திரங்களைச் சொரிந்து வெதிங்வெதும்பி விழுந்தழியும் காலத்தில் தேகந்துளைப்பட்டு மனம்நொந்து, புத்திவந்து ஒருவேளை நாடுகொடுப்பானோ அப்போதும், கொடானோ! நானறியேன் நாதனே? தேவரீருக்குத்தெரியாத மர்மம்என்னவிருக்கின்றது. அடியேன் சொல்லுந்தரமோ வென்று விதுரமகாராஜன் மகிழ்ந்து, ஸ்ரீகிருஷ்ணபகவான் விதுரனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

ஓ விதுரமகாராஜனே? துரியோதனன்செய்த அக்கிரமங்களினால் வருந்தி யிளைத்து வந்த பாண்டவர்கள் மனத்திற்குற்றங் குறைவைக்காமல், இதமான வார்த்தைகள் சொல்லித்தூதனுப்பி நாடுகேட்டால நல்லகாலமென்று சந்தோ ஷங்கொண்டு நாடுகொடுப்பதே ராஜதருமம், அதைமறுத்து நடந்தால்நாச கரு மம் ஆதலால், நாளைத் தினம் துரியோதனனுடைய சபையிற்போயிருந்து, வா ளைகள் பாய இளங்கமுகின் பாளைவிரிந்து தேன்பொழிந்து பெருகும்,வயல்சூழ் ந்த குருநாட்டை பாண்டவர்களுக்குக்கொடுவென்றுகேட்கிறேன். அப்போது கொடுக்கச்சம்மதியானேயாகில், சமர்பூமியிலெதிர்த்து மூளையானது வாய்வ ழியில் வழியும்படியுத்தஞ்செய்து முடிப்போம் மயிலே, மயிலே 'ஒரு இறகு கொடுவென்றால் கொடுக்குமா' இறுத்திமிதித்துப் பிடுங்கினால் அன்றோகொடு க்கும் அதுபோல எத்தனைவிதத்தில் இதமாகப்பேசிப்பதமாகவேண்டிக்கொண் டாலும்உலோபிகளாகிய மூர்க்கர்கள்ஒருகாசும்அதிலொட்டிய தூசுங் கொடுக்க மாட்டார்கள்,அடித்துச்சிதைத்துவதைத்து இம்சைசெய்தால்அப்போது,கேட் டவைகளையெல்லாந் தடையில்லாமல் கொடுப்பார்கள் இது உலக இயற்கை யென்றுவிதுரராஜனுக்குச்சொல்லிநல்லது எல்லாம்போதுவிடிந்தால்பார்த்துக் கொள்ளுவோம் வெகுநேரமாயிற்று, விதுரராஜனே? நீர் சயனித்துக் கொள் ளப்போமென்று செலவுகொடுத்தனுப்பிவிட்டு மாகதத்தாற்செய்த, சயனவீட் டில், இரத்தின மிழைத்த கொளுசுகளினாலமைத்த வூசலில் வாசனையுடைய அன்றலர்ந்த புட்பங்களினால் நிறைந்த அம்ச தூளிகாமஞ்சத்தில் திருக்கண்வ ளர்ந்தருளினார். விதுரராஜனவர் இராத்திரியெல்லாம் நித்திரையில்லாமல் கஸ்துசுற்றிக்கொண்டு காவற்காரர்கள் - பறைமுழக்கிவரவும்; உருவியகத்திக ளுடன் மெய்காப்பாளர் காத்திருக்கவும் - அடிக்கடிஜாக்கிரதைசெய்து கொ ண்டிருந்தார். அந்தக்காலத்தில் அந்தகாரமாகிய இராத்திரியானது வேசியை, யொத்திருந்தது. அதெப்படியென்றால் சந்திரனே முகமாகவும் மலர்ந்த செவ்வல்லிமலரோ வாயாகவும் முல்லையரும்பே பற்களாகவும் - சூரியன் மறை ந்தபிற்பாடு முகிழ்த்ததாமரைமொக்குகளே-குவிந்த கைகளாகவும் வண்டினங் களே கிருபையாகவும் துரியோதனன், மனமென்னும், இருளாகிய கன்னிகை யானவள், சர்வவல்லமையுமுடையலக்ஷுமிநாயகன் பாண்டவர்தூதாகவெழு ந்தருளி யிருக்கிறபடியால் பொழுதுவிடிவதற்குமுன்னமே இவனைவசப்படுத்தி விடவேண்டுமென்று வந்து வளைந்ததைப் போன்றதாகையால் என்க. அத்த ன்மையாகியஇராத்திரியைச்சூரியன்பார்த்துஓகோமோசம்வந்ததுதுரியோதன னுடைய மனமென்னும் இருட்டாகிய பெண்ணானவள் சுவாமியைமயக்கிவசப் படுத்திக்கொள்ளுவாளாகில்தருமமுதலியதவமுங்கெட்டு பூமிபாரமுமதிகப்பட் டுப்போமென்று கருதிக்கடுங்கோபத்துடன்கறுத்த இருளாகிய திரையைக் கிழி த்துக்கொண்டு அண்டம் ஒருபக்கத்தில் விண்டதென்றுசொல்லவும் ஏழுசமுத் திரமும் வறண்டு அதிலிருக்கும் வடவாமுகாக்கினியானது பிரகாசித்ததென் றுசொல்லவும், முகஞ்சிவந்து அநேககிரணங்களென்னுங் கரங்களை நீட்டி இரு ளென்னும் பொதும்களை வெருளச்செய்து - உதயகிரியி னுச்சியினின்று விளங் கியதைப் போன்றனன். மேலும் பாண்டவரிடத்தில் பகைகொண்டிருக்குஞ்

சர்ப்பக்கொடியோனாகிய துரியோதனனிருந்தபுராதனநகரமாகிய அஸ்தினாபுரத்திலே அகிலபுவனத்திற்குங்காரணனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் நிராயுதபாணியாய்த் தூதுவந்திருப்பது தெரிந்து மகரமச்சங்கள்முதலிய ஜந்துக்களையுடைய சமுத்திரத்தைவிட்டுப்புறப்பட்டு சுவாமியினுடைய சக்கரம் பிரகாசிக்குந் தன்மையைப்போலும் கீழ்த்திசையிற் சூரியனுதயமானான். அக்காலத்தில் கங்காபுத்திரராகிய வீஷ்மாசாரியர், துரோணாசாரியர் முதலிய பெரியோரும் மந்திரிகளும், வேதியரும், படைத்தலைவரும், சகுனியும், கன்னனும், தம்பிமார் தொண்ணூற்றென்பது பேரும்வந்து நிறைந்து வளைந்து சூழ்ந்திருக்கக் கிரணக் கூட்டங்களையுடைய பொன்னினாற்சுவர்செய்து நாலுலக்ஷம் மரகதத்தூணிறுத்திக் கோமேதகத்தினாற் போதிகையமைத்துப் பவளத்தினால் உத்தரம்போட்டு மாணிக்க வச்சிரங்களினாற் றிராவியமைத்து வைடூரியத்தால் பலகைதைத்து முத்துவர்க்கங்களைப்பரப்பிச் சுதைதீற்றி; சிகரங்கள் வைத்து வெற்றிக்கொடிநாட்டி, மேகமண்டல பரியந்தம் அளாவிய கொலுமண்டபத்தில் பவளக்கால் நிறுத்தி ஆணிமுத்துக்களினால்பந்தலிட்டு எங்குஞ்சிங்கமுகமாய்த் தங்கத்தினாற் செய்தசிங்காசனத்தில் போகதேவேந்திரனைப்போல் துரியோதனமகாராஜன் கொலுவீற்றிருந்தான்.

அப்போது, பட்டவர்த்தனர்களும் மகுடவர்த்தனர்களும், மன்னர் மண்டலீகரும் எண்டிசைவேந்தரும் தன்பாதங்களில்வணங்கியகாலையில் வணங்காமுடிபொறுத்த மன்னர் மன்னனாகிய துரியோதனராஜன் பொன்னினாற்செய்த ஆசனங்களிலிருக்கும்படி கடைக்கண் காட்டினான். அக்காலத்தில் அரசர்முதலியயாவரும் அவரவர்களுக்குரிய ஆசனத்திற்பொருந்தி இருந்தார்கள். அந்தச் சமயத்தில் அந்தச்சபைநிறைந்த எல்லாருடையமுகங்களையும்பார்த்து தன்னுடைய அகங்களிக்கவேர்த்து ஓ கோ மீன்போலும் வேலேந்திய வேந்தர்களே! நம்முடன்பகைத்து யுத்தஞ்செய்ய நினைத்துக் கறுவிக் கனைத்துப் படைகள் சேர்த்துக்கொண்டிருக்கிற பஞ்சபாண்டவர்களுடைய ஏவலாளாய்த் தூது வருகின்ற கன்றுமேய்க்கும் இடையனானவன் இன்று நம்முடைய கொலுக்கூடத்துக்கு வருகின்றானாம், அவன்அப்படியே ஒருவேளைவருவானாகில் அவனுக்கு நீங்களெதிர்சென்றுவணங்கி வந்தனை வழிபாடுகள்செய்து பந்துமித்திரரென்னும் முறைமையை அநுசரித்து, கலந்து உறவுகொண்டாடுவீராகில் உடனே உங்களுடைய நாடுநகரமுதலியவற்றை நெருப்பிட்டுக் கொளுத்துவதல்லாமலும், உங்களையும்பிடித்து விலங்கிட்டுச் சிறையில்வைத்து வருத்துவேனென்று முறைமைமாறிய வஞ்சகனாகிய துரியோதனன் மிகவுஞ்சீறிக் கூறினான்; அவனுடைய கோப மொழியைக்கேட்டு கோவேந்தர் யாவரும் இதென்ன கொடுமையாகிய காலமென்று தலைகுனிந்திருந்தனர்; இத்தன்மையாகிய வார்த்தைகளைச்சொல்லி அரசர்க்கரசனாகிய துரியோதனன் அவை நிறைந்த அரசர்களுடனிருக்கையில் வெள்ளைமேனியனாகிய பலபத்திரனுக்குப் பின்பிறந்த கரியமேனியையுடைய கண்ணபிரான் இரவிற்குவிந்த செந்தாமரைமலர் இரவியைக்கண்டு மலர்ந்ததைப்போல் நித்திரைநீங்கிப் பிரகாசம் பொருந்திய கண்கள்மலர்ந்து உதயத்திலெழுந்து பனிநீர்கலந்த தண்ணீரில்

ஸ்நானஞ்செய்து, நித்தியகருமங்களை முடித்து மணங்கொண்ட மலர்களைக் கொண்டு தேவதாராதனை முடித்து சூரியநமஸ்காரஞ்செய்து அலங்காரச்சாலையில்வந்து ஆடை ஆபரணம் அணிமணிப்பூண்முதலிய ஆர கேயூரமணிகுண்டல கிரீடமுந்தரித்து நெற்றியிற் கஸ்தூரித்திலகந்தீட்டி சாத்தகிமுதலியம்பர்களுந் தன்னைச்சூழ்ந்துவரத் தாவிநடக்கும் பரிபூட்டிய தேரேறிக்கொண்டு கட்டுப்பாடு செய்துகொண்டிருக்குந் துரியோதனனுடைய சபைக்கு இசையையுனட்ட புள்ளாங்குழலைக்கைக்கொண்ட எல்லாவல்லமையுங்கண்ட ஸ்ரீ கண்ணபிரான், அடிமேலடிவைத்து எழுந்தருளியகாலத்தில் வீஷ்மாசாரியரும் துரோணாசாரியரும், அசுவத்தாமாவும் நீதியைப் பிரக்கியாதியாய்த்தரித்த விதுரமகாராஜனும் மற்ற அரசர்களும் எதிர்கொண்டெழுந்துவந்து சிவந்த திருவடியில் தொழுந்தன்மையுடன் விழுந்துவணங்கினர். அப்போது கன்னமகாராஜனுந் தலையைக் கவிழ்ந்துகொண்டிருந்தான்; சகுனி துரியோதனனுடைய கட்டளையினால் உள்ளமழன்று சுவாமியின் பாதங்களைக் கருத்திற் கருதிக்கொண்டிருந்தான்; இவைகளையெல்லாந் தமதுள்ளத்திற் றெரிந்து கொண்டுவருகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு எதிரிலிருந்தவர்கள் பாதபூசை முதலியன பண்ணி உபசரித்திட்ட சிங்காசனத்தின்மேல் துளபமாலையணிந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுஞ்; சாத்தகியும் எழுந்தருளியிருந்தார்கள், அந்தவேளையில்முன்னேவழியிற்கண்டுபேசிப்பின்னால்சபைக்குவருகின்றோமென்றுசென்ற நாரதர் கண்ணுவர் ஜமதக்கினி என்னுமூன்று ரிஷிகளும் சுவாமியினுடைய திருஷ்டிக்கு நேராகவந்து அவருடைய அநுக்கிரகத்தினால் இராஜசபைக்கு வந்தார்கள். அவர்களைக்கண்டு வேதப்பிராமணர்களெழுந்திருந்து அர்க்ய பாத்திய ஆசமன்ய வஸ்திராபரண சந்தனாக்ஷதை புஷ்ப தாம்பூல தூபதீப நைவேத்திய மந்திரங்களினால்பூசித்துப்பூச்சியமுள்ள ஆசனங்களிற்பொருந்தச் செய்தார்கள். அவர்கள் மூவரும் இருந்தபின் கோவர்த்தனகிரியைக்குடையாக வெடுத்துக் கன்மாரியைத்தடுத்தருளிய காயாம்பூவண்ணன் எழுந்தருளியிருக்கும் இடத்தைநோக்காமல் வேறொருதிசையில் முகந்திருப்பிக்கொண்டு நேற்றைப்பொழுது இம்மாநகரத்தில் வந்திருந்தும் எனக்கெதிரிலே வராமல் நானமைத்துவைத்த விடுதியில் வந்திறங்காமல் என்னையிகழ்ந்து இவ்விதுரன் வீட்டிலே போயிறங்கிய காரணமென்ன? முன்னே இதனைச்சொல்லிப் பின்னே பேசவேண்டியதைப்பேசலாமென்று சர்ப்பக்கொடிதரித்த துரியோதன மகாராஜன் கேட்க, அந்தவார்த்தைகளைக்கேட்டு புன்னகையுடையவராம் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அதற்கெதிர்மொழி சொல்லுகின்றார்! ஓ நந்தியாவட்டமாலையணிந்த நராதிபனே கேள்! நீவேறென்றும் நாம்வேறென்றும் நம்மிருவரிலொரு பேதமுமில்லை, இது உன்வீடு அது அவன்வீடு என்கிறபேதம் எள்ளத்தனையாகிலும் நானினைத்தாலல்லவோ சொல்லலாம்; அப்படி நானொன்றும் பேத நினைத்ததேயில்லை, எமது மனமகிழ்ச்சியாய் உமது அரண்மனைக்கு வரும்போது மின்னலைப்போலும்பிரகாசிக்கும் வில்லையுடைய விதுராஜன் எதிரில் வந்து வணங்கி எமக்குவிருந்து சொன்னான், அதைத்தள்ளக்கூடாமையாலும் பஞ்சவர் சொல்லியனுப்பிய சொல்லைச்சொல்லவந்த ஒரு தூதனாதலாலும்

யான் உன்னுடையவீட்டில் வந்திறங்கி நீயுபசரித்திடும் இனிமையுள்ள ஷட்ருசிகூடிய அன்னத்தைப்புசித்து உன்னோடே வெதிரேகமாய் விவரங்களைப்பேசி வெறுக்க நினைப்பது தருமநீதியல்லவே, சர்ப்பக்கொடியைத்தரித்த துரியோதனனே! விவேகத்தையுடைய மந்திரிகளாயிருந்து அரசாட்சியை அழித்தாலும், பெரியோர்கள்சொல்லும் புத்திவிசேஷங்களை மறுத்தாலும், ஒருவர்செய்த உபகாரத்தை மறந்தாலும், ஒருவருடைய வாழ்மனையிலுண்டபின்னே அவருடன் பகைத்து யுத்தஞ்செய்யநினைத்தாலும், ஆசந்திரார்க்கபரியந்தம் இவர்கள் தாம் கொடிய நாகவட்டத்தில் வருந்திக்கொண்டிருப்பவர்களென்று குளிர்ச்சிபொருந்திய பொற்றாமரைமலரிற் பிறந்தருளிய மகாலட்சுமிக்கு மணவாளனாகிய மாயோன் இப்படியாகிய தருமங்களையெடுத்துச் சொல்ல நாதனாகிய நாயகன் முகத்துக்கு நேராகத்திரும்பி இரண்டுகண்ணுங்களிக்க திருமுகமண்டலத்தை நோக்கி மிகவுங்குலுங்கநகைத்து ஐயோ பாவம்! ஐவருக்குத்தூதாகிவந்த அவசரத்தைச் சொல்லுமென்று இராசாதிராசனாகிய அரவக்கொடியோன் கேட்க, வேதங்கள் மணக்குந்தாமரைமலராகிய திருநாபியையும் கீதங்களுடன் வண்டுகள் பாடுந் துளபமாலையையுமுடைய ஸ்ரீகிருஷ்ண பகவான் வேணுநாதஞ் செய்யுந் திருவாய்மலர்ந்தருளி ஓ திரிதராட்டிர மகாராஜனுடைய செல்வக்குமாரனே! கேள், உன் சகோதரராகிய பாண்டவர்கள் சூதாடியதினாலே ஐஸ்வரியமுதலாகிய அரசாட்சியை யிழந்து சொல்லிய வார்த்தைகள் வழுவாமற் காட்டிற்சென்று யாதொரு ஆதரவுமற்ற அன்னியர்களென்று சொல்லும்படி வருந்திநொந்து வெய்யிலும் வெப்பமுமிருந்து வாசஞ்செய்யுங் கானகத்திற் றிரிந்து குறித்தனுப்பிய தவணைநாளைத் திங்கில்லாமல் கழித்து தெய்வச்செயலால் திரும்பிவந்தனர். அவர்களுக்கு சொற்றவறாத குற்றமற்ற குருகுலத்திற் பிறந்த கோவே! ஆதியிற்சொன்னபடி அவர்களுக்குரியபூமியை நன்மையாகிய சிநேகத்துடன் கொடுக்கவேண்டும். நீங்கள் இருவரும் ஒருகுலத்திற்பிறந்த உரிமையையுடையவர்களாதலினால் உனக்குள்ளசொந்தம் அவர்களுக்குமுண்டு அவர்களுக்குள்ள சொந்தம் உனக்குமுண்டு; ஆகையால் ஒருவருக்கொருவர் மனநோக்காடில்லாமல் சிநேகித்து அவர்களுக்குரிமையுடைய நாட்டில் உனக்கிஷ்டமுள்ள இலநாடுகொடுத்து அவர்களுடன் கூடிவாழ்வையேயானால் நல்ல சத்தியகுணநெறியுள்ள சற்பாத்திரனென்று சகல மன்னவருஞ் சிநேகித்து நாள்தோறும் புகழ்ந்து கொண்டிருப்பார்கள். அப்படிசெய்யாமல் மறுத்தியேயானால் பழியும்பாவமும் ஒழியாமல் வளரும்படியாகப் பலரும்பழிப்பதற்கிடங்கொள்ளுமல்லாமல் தருமமும் கீர்த்தியும் சௌரியமும் சந்திரக்குலத்தின்றன்மையும் தழைத்து விளங்கமாட்டாது. அதுவுமக்கு நன்மையுமல்லவென்றான். இவ்வாறு பகவான் சொல்லவே எதிரிலிருந்த துரியோதனமகாராசன் படபடத்துக் கடுகடுத்து மிகவுஞ்சீறிச் சொல்லுகின்றான். கலகத்திற்கு மூலையாகிய கண்ணனே! கேள், ஆதிநாளையிற் சொக்கட்டானாடித் தங்களுரிமைகளையெல்லா மிழந்து எங்களைப்புகழ்ந்து காட்டிற்போய்விட்ட புனிதராகிய ஐவர்களுக்கு நாட்டையும் நகரத்தையும்வாங்கிக்கொடுத்து ஒருமைப்பாட்டைச்செய்து வைக்கவேண்டுமென்று சாட்டையில்லாப்பம்பரமாட்டத்தகுந்த

நீ சொல்லியதந்திரவார்த்தைகளை நம்பிவந்திருக்கும் அந்தவம்பர்களைப்போலே என்னையும் இலேசாக நினைத்துக்கொண்டு உபாயப்பேச்சினால் ஏமாற்றலாமென்று எண்ணிவந்திருக்கின்றாய். உன்பேச்சை நம்பும் ஐவர்களைப்போல நம்புவதற்கு நானும் பயித்தியக்காரனல்லன், உமது தந்திரம் என்னிடத்திற்சாயமாட்டாது, அவர்கள் இன்னமுங் காடேகதியாய்த்திரிந்து காலங்கழிப்பதுவே நல்ல காரியம், அதைவிட்டுப் பேராசைகொள்ளுவது அகாரியம், இதன்றியும் சகல மன்னர்களும் பழிப்பார்களென்று எனக்கொரு பூச்சிகாட்டவந்தாய், அடடா இந்தப்பூச்சிக்கு நான் பயப்படுவேனாகில் இன்னமெத்தனை பூச்சிகள் புறப்படும், பேய்ச்சிமுலையுண்ட பெரும்பூச்சியே! குள்ளநரிமிரட்டாக மிரட்டவந்த கோபாலா! என்னை நீ வெறுத்துக்கொண்டால் தானென்ன? இவ்வுலகிலுள்ள அரசர்களெல்லாரும் திகைத்தால்தானென்ன? பலவாறாக நினைத்தால்தானென்ன? எனக்குப் பின்னாற்போய்ச் சிரித்தால்தானென்ன? சத்தியவசனந் தப்பினானென்று சாற்றினால்தானென்ன? தேவர்கள் நிந்தித்தால் தானென்ன? மாலையணிந்த மார்பினராகிய வஞ்சகநெஞ்சுடைய பஞ்சபாண்டவர்கள் ஆயுதபாணிகளாய் என்னுடனெதிர்த்து வெவ்விய யுத்தஞ்செய்தால் தானென்ன? இன்றும் எப்படிப்பட்ட காரியங்களை எவர்கள்செய்தாலும் எவர்கள்வைதாலும் என்னென்ன வுபாயம்பண்ணினாலும் உன்னுடைய எண்ணமும் பாண்டவர்களின் இச்சையும் இன்றுமுதலென்றென்றைக்கும் இல்லாதழியும்படி இக்குருபூமியிலே ஒரு ஈயிருக்கும் அவ்வளவு இடமானாலும் இனிகொடுக்கமாட்டேன், இவைகளுக்கெல்லாம் நானொருக்காலுங் கலங்கமாட்டேனென்று சப்தமேகத்தின் முழக்கத்தைப்போலிரைந்து கடுங்கோபத்துடன் சொல்லிமுடித்தான்.

இவ்வாறு அவன்சொல்ல, அப்போது ஸ்ரீகண்ணபிரான் நகைத்து கீழ்க்கண்ணினால் சபையிலிருக்கப்பட்ட சகலரையும்பார்த்து ஒன்றுஞ்சொல்லாமல் ஊமைபோலிருக்கும் வீஷ்மர் முதலிய மேலோர்களையு நோக்கி உங்களெல்லோருக்கும் இந்தத் துரியோதனமகாராஜன் சொல்லியவார்த்தை சம்மதந்தானா சொல்லுங்கள்; குலமுறை தலைமுறையறிந்த புத்திமான்களே! யென்று வினவி பெரிய அரசனாகிய திரிதராட்டிரனைப்பார்த்து மகாராஜாவே! கேளும், இப்பூமிக்குச் சுதந்தரமாகிய பெரிய அரசன், நீராகையால் உமது பிள்ளையின் வார்த்தையையும் என்வார்த்தையையும் கேட்டீரே, இதற்கு மறுமொழிநீர்தான் சொல்லவேண்டும், இன்னொருவர் சொல்லக்கூடாது, நல்லதென்று சொன்னாலும் அது நடவாது; இதனால் கீர்த்திவந்தாலும் அபகீர்த்திவந்தாலும் உம்மைச்சாருமேயல்லாமல்மற்றொருவரையுஞ் சாராதுமேலும்உமதுதம்பியாகியபாண்டுமகாராஜன் இந்தஐந்துபிள்ளைகளையுங் குந்திதேவியையுங் காட்டிலேவிட்டு இறந்துபோனான், உடனே அவர்களையழைப்பித்துத் தனுர்வேதமுதலிய யாவுங் கற்பித்து இளவரசுபட்டமுங்கொடுத்த பெரியதந்தையாகிய நீரே மறுபடியுங் காட்டுக்குப்போகும்படி சஞ்சயனிடத்தில்மனமொப்பிச்சொல்லியனுப்பியதே ஆச்சரியம், ஐயோ! உமது மனம் இப்படி கறுக்குமென்றெவர்களுக்குந்தெரியாதே, இதன்றியும் உமது மூத்தகுமாரனாகிய துரியோதனன் பாண்டவர்களைப் படுத்தியபாடுகளையெல்லாம் மறந்துவிட்டீர்போலும், ஐயோபாவம்பெரிய

வயதாகையால் உமக்குஞாபகம் வரும்படியாய்ச் சிலசங்கதிகளைச்சொல்லுகிறேன், கேளும் நூற்றைந்துபிள்ளைகளுஞ் சிறுபிள்ளைகளாய்மருவிவிளையாடிக்கொண்டு வளர்ந்துவந்தனர். அக்காலத்தில் மித்திரபேத நினைப்பினால் துரியோதனன் வீமசேனனுக்கு அன்னத்தில் விஷமிட்டான்; பாம்புகளைக்கொண்டு கடிப்பிக்கச்செய்தான்; கங்கையில் வசிநாட்டிவைத்தான்; இன்னும் பற்பலதீங்குகளைச்செய்தும் அவன் மடியாததனால் ஐவரென்னுஞ்செடியைஅடியோடழித்துவிட வேண்டுமென்றுகருதிக் கண்ணில்லாத உன்னைக்கொண்டே பாண்டவரைக் காசிநகரம்போகும்படிசெய்து அரக்கு மெழுக்கு அழிஞ்சிலினால் அரண்மனை கட்டிவைத்து அதில் தாயையும் பிள்ளைகளையுங் குடியேற்றி நெருப்பிட நினைத்தான்; 'நாமொன்று நினைக்கத் தெய்வந்தானொன்று நினைத்தது' என்பதைப்போல் அந்தவீடுமெரிந்து இடிந்து அதிலிருந்த புரோசனனுங்கரிந்துமடிந்துபோக இவர்கள் தப்பிப்பிழைத்து இடும்பாசுரனையும் பகாசுரனையுங்கொன்று வேத்திரகீயத்தில் பிராமணரூபத்துடனின்று பாஞ்சாலதேயஞ்சென்று மச்சேந்திரத்தை யறுத்து வேந்தரை வென்று பாஞ்சாலியை மணம்புரிந்துக்கொண்டு உன்னுதவியினால் இந்திரப்பிரஸ்தத்திலிருந்து அரசுபுரிந்து இராசசூயயாகமுடித்து உலகினிற்றோன்றி மற்றோருங்கீர்த்திபடித்து வெற்றிக்கொடிபிடித்து ஐயபேரிகை யடித்துப்புகழ வாழ்ந்துகொண்டிருந்தனர். அவரை அஸ்தினபுரத்துக்கு வரவழைத்து மாயச்சூதினால் மாநிலத்தைப் பிடுங்கிக்கொண்டு துரோபதையைத் துகிலுரிந்து; பன்னிரண்டுவருடம் பாண்டவர்களைக் காட்டுக்கனுப்பிவிட்டு பந்து மித்திரர்களுடன் குடைகவியப் பாராண்டு வந்தான். துரியோதனன் அந்த மட்டிலும் விட்டுவிடாமல் அவர்களைக் கொல்லவேண்டுமென்றே நினைத்து துருவாசருக்கு விருந்திட்டு மகிழச்செய்து வனத்திலிருக்கும் பாண்டவர்களிடத்தில் இப்படிவிருந்து புசிக்கவேண்டுமென்று வரம்பெற்றுக்கொண்டும் அனுப்பிவைத்தான். காளமாமுநியைக்கொண்டு மாரணயாகஞ்செய்வித்து அதிலெழுந்த மகாபிரசண்டபூதத்தையனுப்பி ஐவர்களைக்கொன்றுவாவென்றனுப்ப, அந்தப்பூதம் பிரேதமாகிய பாண்டவர்களைப்பார்த்து விட்டுத்திரும்பிவந்து தன்னையனுப்பிய தவமுனிவனை வாயிற்போட்டுக்கொள்ள அப்பிரமத்திதோஷந் தன்னைச் சாரும்படியும் பண்ணிக்கொண்டான்; இனி ஆயிரம்வார்த்தை யென்னத்துக்கு? உலகிலுள்ள வஞ்சனையாகிய துரோகத்தைக்கொண்டு தன்னாலானமட்டும் பாண்டவர்களிறப்பார்களென்று பார்த்துவிட்டான்; பாண்டவர்கள் எதினாலேயும் இறக்காமல் உம்முடைய கருணையினாலும் தெய்வவல்லமையினாலும் அவர்களுடைய சத்திய சவுச ஆசாரங்களினாலும் யாவர்களுக்கும் நன்னெறிமிகுதியாகவுடைய விகிதராகையினாலும் இத்தனைப் பொல்லாங்குக்கும் இடமாகாமற் றப்பிப்பிழைத்தார்கள்; இவர்கள்கூறிவிட்ட தவணைப்பிரகாரம் பன்னிரண்டாண்டுங் காட்டிற்கழித்து ஓராண்டு அஞ்ஞாதவாசமுந்தொலைத்து நாட்டிலும்வந்து நம்மையடுத்துத் தூதுவிடுத்து நாடுகேட்டனுப்பினர். அவர்களுக்குப் பாதிநாடாவது பாதிக்குப்பாதியாவது உங்கள் மனத்துக்குச் சம்மதியாய் ஏதாவது ஒரு ஊராவதுகொடுத்து அவர்களை யாதரித்து சந்துருஷ்டிப்படுத்தினால் உங்களுடைய வமிசமும் புத்திர

மித்திர களத்திராதிகளும் சுகப்பட்டு வாழ்வீர்கள். அல்லவென்றுவலிமை பேசினால் சத்துருக்களின் ஆயுதக்காயத்தை ஆபரணமாகவணிந்த மார்பினையுடைய வீமசேனன் விஜயன்முதலியவர்களால் கண்ணீர்ததும்பி கால்சாய்ந்தோடி வெந்துவெதும்பிவிரிந்து போவீர்கள். அவர்களுக்கீடாகியபேர்யாருமில்லை, துரியோதனாதியர் சொற்சேர்ந்தார்கள்; அதனால் ஐவர் வந்துவிழுந்து அடித்து நாசப்படுத்தி அகண்டசாம்பிராச்சியமுங் கைக்கொண்டார்களென்று அவர்களுக்குப் பிரதிஷ்டையும்உங்களுக்கு அப்பிரதிட்டையுமுண்டாகும், மேலும்நான் அவர்களுக்கும் உங்களுக்கும் சமயாகிய பாத்தியஸ்தனாகையாலும், பாண்டவர்களின் வீரப்பிரதாபமெய்மை முதலிய தருமங்களை அறிந்திருக்கின்றவனாகையாலும், உங்களைச்செவ்வைப்படுத்தும் பொருட்டு இவ்வளவுதூரம்வந்து உங்களுக்குச்சொல்லவேண்டிய உறுதிமொழிகளையுஞ் சொன்னேன்; அநேகமௌனில் இருந்திறந்தவர்களுடைய காரியங்கள்யாவுந் தெரிந்திருந்தும்நடக்கப்போகிற செய்கைகளும்எண்ணங்களும்உணர்ந்திருந்தும் ஒருவார்த்தை முன்னாடிச் சொல்லலாகாதா? இருவரையும் நாசிபண்ணிவைக்கலாகாதா? கிருஷ்ணனென்று வெறுத்துக் கொள்வீர்கள். அன்றியும் தெரிந்தும் தெரியாமலிருப்பவர்களுக்கு அச்சங்கதிதெரிய உரியவர்கள்முன்னே தெரிவிக்கவேண்டும். அப்படித் தானறிந்துமாத்திரந் தெரிவிக்காவிட்டால் அவர்கள் கோத்திரசத்துருவென்றும் கொடியபாவிகளென்றும் தருமசாஸ்திரங்களிற் கூறியிருக்கின்றமையால் பாவத்திற்கும்நரகத்திற்கும்பயந்து அக்கரையாகச்சொன்னேன். பின்னுஞ்செவிகொடுமென்று ஸ்ரீகண்ணபிரான்சொல்லுகின்றான். உமது தம்பிபிள்ளைகள் உன்சொல்லைக்கடக்கவறியார்கள், இப்படிப்பட்டதுன்பத்திலேயும பெரியதந்தை மொழியென்று பேசினால் சத்தியமொழியாகத் தலைமேற்கொள்ளுகிறார்கள், உலகையெல்லாம் வெற்றிக்கொண்டு இராஜசூயயாகமுஞ்செய்து சந்திரகுலத்துக்குப் பெருமையும் புகழும் இந்திரன்போலொத்த உனக்கு அழகும் அருமையும் சம்பாதித்தனர். அந்தப்பிள்ளைகள்மேல் சந்தோஷப்படாமல், பெருமையும்புகழையும்போக்கடிக்கும் இப்பிள்ளைகளின்மேல் இச்சைவைத்து அவர்களுக்குக்கொச்சைகளைச்செய்ய உமதுமனம் ஒப்பியிருந்ததல்லவா, இப்போது இந்த இருதிறப் பிள்ளைகளையும் இரண்டு கண்களாகப்பார்த்து இஷ்டமுடன் நடப்பிப்பது உமதுகடன் உம்முடைய குலநட்டமில்லாமல் தாயபாகத்தை தம் பிள்ளைகளுக்குக்கொடுத்து தமதுடைய பாகத்தை நூறு பிள்ளைகளுக்குங்கொடுத்து சந்துருஷ்டியாய்ப்பொருந்தி வாழச்செய்வதைவிட வேறொருபொருளுமில்லை, பூமியிற் புகழுமில்லை, இதைவிடுத்து இந்த மன்னனைக்கொண்டு யுத்தம் பண்ணினால் யார்சாவார்களோ! யார்பிழைப்பார்களோ! தெரியாது; யார்செத்தாலும் யார்பிழைத்தாலும் துக்கமுஞ் சுகமும் பெற்றதந்தையாகிய உம்மைச் சாருமல்லாமல் மற்றொருவரைச்சாராது; உம்மிடத்தில் இருக்கும் வீராதிவீர வீரப்பிரபல அரசர்கள்யாவரும் நாளைவிளையும் விநயமறியாமல் ஓச்சன் கைவாளுக்குள் அகப்பட்ட ஆட்டுக்குட்டி தன்றலைபோவதையுணராமல் தழையைக்கண்டு சந்தோஷப்படுந் தன்மையைப்போல் மகிழ்ந்து எமன்வந்தாலும் மறமெவன் வந்தாலும் போய்வீழ்ந்து பொருகின்றோம்;

வென்று ஜயங்கொண்டு வருகின்றோமென்று இருந்த இடத்திலிருந்துகொண்டு வாய்ச்சுளுவாய் வீரமாகப்பேசுவார்கள், அதெப்போதுதெரியுமென்றால் 'மூன்றுங்கட்டு அவிழ்க்கும்போதுதெரியும்' என்பதுபோல சத்துருவைச் சமீபத்திற் காணும்போது தங்களைத்தாங்கள் மறந்தும் தொண்டைமண்டை நிறந்தும் இறந்தும்போங்காலத்தில் உங்களுக்குத்தெரியும் இப்போது எங்களுக்குந்தெரியாது, அப்படிப்பட்ட வீரபராக்கிரமங்களையுடைய வீரர்கள் பேச்சை நம்பிப் பாண்டவர்களைப் பகைகொண்டு மேதினியையும் செல்வத்தையும் விருதாவிவிழக்கப் போகிறீர்கள். வாய்ப்புஷ்டியின்வார்த்தை கைப்புஷ்டிக்குநிற்குமோ! ஐயா நான் சொல்லுமொழி நாராசம்போலிருந்தாலும் இனிக்கொஞ்சநாளையில் பாண்டவர்களின் மிஞ்சிய சங்கதியை தஞ்சக்தஞ்சமென்று நீங்களே அஞ்சியறியப்போகிறீர்கள். வஞ்சனையில்லாத வார்த்தையாடும் மன்னனே! நான் உபலாவியத்தை விட்டுப்புறப்பட்டு அஸ்தினபுரத்தை நோக்கி உம்மிடத்துக்கு தூதுவரும்போது அப்பாண்டவர்கள்பணிந்து சொல்லிய பக்ஷத்தைக்கேளும், ஐயா எங்கள் பாட்டனார் வீஷ்மாசாரியருக்கும் தனுர்வேத் ஆசாரியர்களுக்கும்நேசமுள்ள பெரியதந்தைக்கும் விதுரர்முதலிய பெரியோர்களுக்கும் சாஷ்டாங்க நமஸ்காரஞ்சொல்லி சகோதரர்முதலிய உரிமையோர்களுக்கும் தகுந்த வந்தனைவழிபாடுகளையுஞ்சாற்றி மிகுந்த வருத்தமடைந்த எங்களுக்கு ஆதியிற் பிரித்துக்கொண்ட ஆசாக்ஷியைக் கொடுத்தாலுஞ்சரி, அல்லது அவர்களுக்குச்சம்மதமாகிய நாடுகொடுத்தாலுஞ் சரி, அவர்கள் கொடுக்கப் பெற்றுக்கொண்டு வாரும், எப்போதும் நாங்கள் எங்கள் தந்தையினுடைய பக்ஷவார்த்தையைக் கடந்து நடவோம், ஒருவேளை இதுதான் சமயமென்று காட்டுக்குப் போகச்சொன்னால் அதுமாத்திரம் ஒப்பமாட்டோம், ஆனால் எதுவுங்கொடுப்பதில்லை, யுத்தத்திற்கு வருகிறோமென்று இசைவார்களாகில் எங்களுக்கும் ஆபிரத்தெட்டண்டமும் ஆளும்படியாகிய சந்தோஷம் நீர் உடனே அந்த யுத்தவார்த்தைகளை ஸ்திரப்படுத்திக்கொண்டு வீரகண்டாமணிதரித்திருக்கும் வேந்தர்கள் முன்னும் சாந்தர்களாகிய, மேலோர்கள் முன்னும் திரிதராட்டிரமகாராஜனுக்குத்தெரிவித்து அவர்சொல்லும் வாக்கியங்களைக் கேட்டுக்கொண்டு சகலருமறியச் சாக்ஷிமுன்பாகத் துரியோதனனிடத்தில் உறுதிபெற்றுக்கொண்டு காலதாமிசமில்லாமல் கதுமெனவரவேண்டும் என்றே விடைகொடுத்தனுப்பவந்தேன், நான் என்னுள்ளேயிருந்த ஏவற்றையும் எடுத்துச் சொன்னேன், இனிமேல் இவைகளையெல்லாம் யோசித்து மேல்நடக்கவேண்டிய காரியங்களையும் நிதானித்துத்தாயபாகங்கொடுப்பதும்கொடுக்கக்கூடாதென்று மறுப்பதும் சண்டைக்கு வருவதும் அந்தச்சண்டை இன்னதினத்திற்றொடங்குவதென்பதுந் தெரியப்படுத்துவீராகில் 'பார்ப்பாத்தியம்மா மாடுவந்தது பார்த்துக்கொள்' என்னும் பழமொழிபோலே சீக்கிரஞ்சென்று செய்தியிதுவென்று பாண்டவர்களுக்குத் தெரியச்செய்துவிடுவேன், வீணாகவாழ்நாளைப் போக்கடித்துக் கொண்டிருப்பதில் இலாபமென்னை? சொல்லுங்களென்று பகவான்கேட்க, இந்தவார்த்தைகளையெல்லாங்கேட்டிருந்த திரிதராட்டிரமகாராசன் பெருமூச்சுவிட்டுப் பிரலாபித்துத் தாமரையுந்தியையுடைய சர்வலோக

சரண்யனைநோக்கி என்னருமைமருமகனே! நீயுரைத்த மொழிகளெல்லாம் நிசமே; நிசமே? நானென்னசெய்வேன்; 'எறிவார் கையிற்கொடுத்த' கல்லைப்போல் என்னரசாக்ஷியை பசகளிடத்திற் கொடுத்துவிட்டு நான் பரதவித்துப் பல்லைக்காட்டிக் கொண்டிருக்கின்றேன், என்னிடத்தில் நாடுநகரமிருக்குமாகில் என்றம்பி பிள்ளைகளுக்குக் கொஞ்சமேனும் வஞ்சனைசெய்வேனோ; இனியாயினும் நீ நன்றாய்யோசிக்கக்கடவை 'காசில்லாத வெறுங்கையையுடையவன் முழம்போடுமாப்போல்' ஐவருடன் விசுவாசநேசமாயிருக்க வேண்டுமென்று எனக்கு ஆசையிருக்கின்றது; அப்படியிருந்தாலும் என் வார்த்தையை என் பிள்ளைகள் எடுத்தெறிந்து விடுகிறார்களே, என்னசெய்வேன். இந்திரனுலகுக்கொப்பாகிய இந்தச் சந்திர வமிசந் தழைக்கும் படியாகயோசித்து நீயே சந்தி செய்து வைக்கவேண்டும். நீ தயைசெய்து எனக்குச் சொன்ன சங்கதி யாவற்றையுந் துரியோதனனிடத்திலே தெரிவித்தால் உனது வார்த்தையை ஒருக்காலுந் தள்ளான், உன்னிடத்தில் மிகுந்த அன்புள்ளான், நீயே சொல்லவுந் தண்டிக்கவுங் கண்டிக்கவும் திட்டவும் வெட்டவும் பொருத்திவைக்கவுந் திருத்திவைக்கவும் சகல சுதந்தரமும் உனக்குண்டு, நீயே இவ்விடத்துக்கு வந்தமட்டும் என்துன்பத்தை நீக்கி என்னைக்கடைத்தேறச்செய்வாய் என்று சொல்ல, அதைக்கேட்டுத் தேவாதிதேவனாகிய சக்கரதரன் துரியோதனனைப் பார்த்து நீதிவசனங்கள் சொல்லத்தொடங்கினான்.

ஓ! பேரும் பிரக்கியாதியுமுடைய பூமண்டலாதிபதியே! உத்தமராகிய பெரியோர்முதலிய உன்றந்தையும்பேசிய வாக்கியங்களையெல்லாங் கேட்டாயல்லவா? இப்போது நான் சொல்லுவதையுங் கேள்! பிரதாபசாலியாகிய விசயன் கயிலாசபதியைக்குறித்துத் தவஞ்செய்து பாசுபதாஸ்திரமுதலிய வரங்களையும்பெற்று தேவேந்திரன் எதிர்கொண்டழைக்கத் தெய்வலோகத்திற்போய் இந்திராணி யுபசரிக்கத் தெவிட்டாவமிர்தம்புசித்து காலகேயர்முதலிய வரக்கரைப் பாசுபதாஸ்திரத்தாற் காய்ந்து இந்திரலோகத்தில் கிரீடம் பெற்று கீர்த்திகொண்டிருக்கிறான், அவனுடைய கெடிவீர கர்மங்களையும் வீமசேனனுடைய திடகாத்திர பராக்கிரமத்தையும் மற்றவர்களின் மனோதிடத்தையும் அறிந்திருக்கின்றாயல்லவா? அப்படிப்பட்ட சாமர்த்தியவான்கள் இப்படிப்பட்ட குலத்திற்பிறந்து உனக்குச்சகோதரர்களாகிக் காட்டிலிருந்து கண்கலக்கப்படவும் நீ நாட்டிலிருந்து சவுக்கியநலத்தைப்பெறுவதும் ஞாயமன்றே. பார்ப்பவர் கேட்பவர்களுக்கும் அழகன்றே. மேலும் உங்களிருதிறத்தாரில் நிறைவுங்குறைவு நேரிட்டால் ஒருவருக்கொருவர் சகித்துக்கொண்டு தருமவிரோத மில்லாமல் பெரியோர்கள் சொல்லும் வாக்கியங்களைச் சிரமேற்கொண்டு பழுதுவாராமல் இருவரும் ஒருமைப்பட்டு வாழ்வீர்களாகில் உமது சகோதரர்கள்முதலிய சுற்றத்தார் புத்திர மித்திரர் முதலாகிய வெகு ஜனங்களும் சுகமாகவிருந்து பிழைக்கலாம், பராஜரும் பயந்து மதிப்பினையுடையவர்களாய்ப் புகழ்ந்து வாழ்வார்கள். இம்மைப்பயன், மறுமைப்பயன், இரண்டுக்கும் இலாபமாயிருக்கும். ஆசந்திரார்க்க பரியந்தம் இகழ்ச்சியில்லாப் புகழ்ச்சி யுண்டாமென்றான். இப்படி பகவான் சொல்ல அதைக்கேட்டிருந்த

திரிதராட்டிரன் சிந்தைகளித்து மைந்தனைப்பார்த்து, அப்பா! நந்தநந்தனனுரைத்த இந்தவார்த்தை உன்னைவிந்தையாகச்சிக்கப்படுத்தும், அதற்காகவே இந்த அஸ்தினபுரத்தில் அரசர்சபைக்குவந்தது, அப்படிவந்தபோதினும்தான் வந்தகாரியத்தை ஆம் அல்லவென்று பார்த்துக்கொண்டு போகாமல் உன்னுடைய கோபதாபத்திற்கு முடன்பட்டு இவ்வளவு புத்தி கூறினார், இவரைப்போல் யார்சொல்லப்போகிறார்கள்; தம்பி ஆகையால் இவருடைய மொழியே வேதம் இவரே தரும ஸ்வரூபி; இவரால் உன் குலமும்வாழ்வுந் தழைக்கும், குறைவில்லாப் பாக்கியமுஞ்செழிக்கும், இந்தக் கிருஷ்ணபகவானுடைய இஷ்டப்படி உனக்குத் தோன்றிய நாட்டை ஐவர்களுக்குக் கொடுத்து அவர்களும் நீங்களும் தாழ்வில்லாமல் வாழ்வதேவாழ்வு, அப்படிச் செய்யாவிட்டால் இனி வருவதெல்லாந்தாழ்வு; மேலும் தருமராஜன் உன்னிடத்தில் வைத்திருக்கும் பிரீதிவாத்சல்யங்களைப்போல் என்னிடத்திலில்லையே, அடா சுதனே! அப்படிப்பட்ட அண்ணனை யிழந்து அன்னியர்களைப் புகழ்ந்து ஆபத்தாளாயெண்ணிக் கலந்துகொண்டிருப்பது காரியமல்லவே, 'தன்னைப்பெற்றதாய் தவிட்டுக்கலைய பொன்னைச் செலவழித்துப் பூரிகொடுத்தான் பிள்ளை' என்பது போல் பெருமை பெறும்படி பிறனைத்தழுவி அவர்களை யுபசரிப்பதினால் ஆவதென்ன? இப்பொழுதும் ஸ்ரீகிருஷ்ணபகவானும் பெரியவர்களும் தந்தையாகிய நானும் சொல்லும் வார்த்தைகளைச் சோர்வுபடவொட்டாமல் பாண்டவர்களுடன் பக்ஷமாய்க்கலந்து வாழ்வை யாகில் எங்களுக்கெல்லாம பெருமையுஞ் சிறப்புமுண்டாம்; நமது சொல்லைக்கடவாமல் நடந்தான் துரியோதனனென்று நாங்களெல்லாரும் புகழ்ந்து பூரிப்பையடைவோம். இதன்றியும் இரண்டு கண்ணுந் தெரியாத வென்னை இவ்வுலகுக்கு இறையாக்கிவைத்து என் சொல்வழிநின்று என்னேவலைச்செய்து எதிர்த்த சத்துருக்களைக் கொய்து சகல பெருமையும் நானடையச்செய்து ஊழியனைப் போலடங்கி நடந்துவந்த என்தம்பியாகிய பாண்டுராஜனால் நிலைத்தராச்சியமிது, அவனுடைய செல்வமிது, அவனுடைய அரசாட்சி இது, அவனுடைய பிள்ளைகள் இவர்கள் ஆதலினால் எனக்கென்ன சொந்தமுண்டு, மகனே அந்தப்பாக்கியவானுடைய பிள்ளைகளைப் பரதேசிகளைப்போல் வேறுபடுத்தி அவர்கட்குரிய பாக்கியங்கொடுக்காமல் பகைமேற்கொண்டுபேசினால் ஐயையோ பாவம்விளைந்துவிடுமே, மன்னவர் நீதியுமாயுமே, நமது குலமுறைகுன்றுமே, நானிலமெல்லாநகைக்குமே, கலகமுமிகுமே, அரசிற்பங்கமீங்குமே, அதனால் நமது உரிமையும் பெருமையுமே நீங்குமே. வறுமையுஞ் சிறுமையு மோங்குமே, வையகமுறுது மேங்குமே, மதலாய்! பின்னும் இந்தக் கிருஷ்ணபகவான் நமது அருச்சுனனுக்கு இஷ்டனென்றும் உனக்கு அநிஷ்டனென்றும் நீ யெண்ணியிருக்கின்றாயல்லவா? இவர் உங்களிருதிறத்தவருக்கும் இரண்டுநேத்திரங்களேயன்றிவேறல்ல, நமது உரியசம்பந்தத்திற்குப்புறம்பல்ல, இவருடைய உறுதியும் உதவியும் உங்களுக்குத் துணையேயல்லது வேறுதுணையில்லையே, இந்தப்பகவானுடைய வசனத்தின் வண்ணம் ஐவருக்குரிய அரசைக்கொடுத்துசண்டைமுதலிய சபதங்களையும் விடுத்து சமத்துவமாகத் துரைத்தனஞ்செய்து ஜகமெல்லாம் வாழ்த்த சுகம் பெறக்கடவாயென்று திரிதராட்

டிர பூபதி துரியோதனனுக்குச் சொல்லினன், இவைகளைக் கேட்டிருந்த வீஷ்மர் பக்ஷபாதமில்லாமல் நடுவு நிலைமையாகச் சொல்லிவந்த திரிதராட்டிரனைப்புகழ்ந்து உள்ளமகிழ்ந்து பேரனாகிய துரியோதனனென்னுங் குபேரனைத் தமது திருவருட்கண்ணார நோக்கி உன்னுடைய மனக்களங்க நீங்கும்படியாக நானுரைக்கும் வசனத்தையுங்கேட்கக்கடவை, அடா குழந்தாய்! பரதகுலத்திற்பிறந்த ராஜாதிராஜனாகிய நீ பெரியோர்முதலிய பந்துமித்திரர்கள் சொல்லும் வார்த்தைகளைத் தள்ளலாகாது, பாபத்தை மூட்டை கட்டலாகாது, பிராணனை அலக்ஷ்யமாகவெண்ணி யுத்தஞ்செய்ய நினைப்பது க்ஷத்திரிய தருமமான போதிலும் சத்துருக்கள் மேலல்லாமல் சுற்றத்தார் மேல் விரோத நினைக்கக் கூடாதே, தன்னுயிரைப்போல மன்னுயிரைக்காத்து தருமத்தை நிலைநிறுத்த வேண்டும், பெருமையும்புகழும்பெறவேண்டிய பதார்த்தமல்லாமல், சிறுமையும் இழிவும் சேர்க்கலாகாது, தாழ்ந்தவர்களுடன் சிநேகமாகாது, தையலார்மோகங் தாங்கலாகாது, நல்லவரை நடுங்கச்செய்யலாகாது, நாவினாற்பதறிப் பேசலாகாது. இரக்கம் தயை சாந்தம் பொறுமை இவைகளிருக்கவேண்டும், இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் எண்ணி நடக்கவேண்டும், இத்தன்மையாகிய பற்பல நீதிகளும் தருமங்களும உன்னிடத்திற் குடிகொண்டிருக்க வேண்டும், ஐயனே நமது குலபுத்திரராகிய பாண்டவர்கள் அன்னியரல்லவே, அவர்களுக்கு உன்னிஷ்டத்திற்றோன்றிய ராச்சியங்கொடுத்து கீர்த்தியையுங் கௌரவத்தையும் பெறவேண்டும்; இந்தப்படி நாட்டைக் கொடுத்தால் பாண்டவருக்குப்பயந்து கொடுத்தான் துரியோதனனென்பதாய் உலகத்தார் பழிப்பார்களென்று நீ நினைக்கவேண்டாம், அந்த அபிமானம் உனக்குவேண்டாம், அதேனென்றால் அன்னியரிடத்தில் அபகரித்துக்கொண்ட அரசாட்சியை மறுபடியுங் கொடுக்க நினைப்பையாகில் மன்னவரெல்லாரும் உன்னைச் சின்னத்தனமாகச் சொல்லுவார்களே அது மூலமாயுனக்குக் குறைவுண்டாம், இப்போது நாங்கள் சொல்லுவதினால் உனக்கு யாதொரு தாழ்ச்சியுமில்லை அண்ணன் தம்பிமார் ஒருவருக் கொருவர் ஏதோ கொஞ்சம் முகத்திருப்பாயிருந்து 'நீரடித்துநீர்விலகுமா' வென்பதுபோல் மறுபடியுங் கூடிக்கொண்டாற் புத்திமான்களென்று சகலருஞ் சந்தோஷப் படுவார்கள், ஐவராகிய சகோதரர்களுடைய அரசைச் சூதாடி அபாயமாய்ப் பறித்துக் கொண்டான் துஷ்டனாகிய துரியோதன மகாராஜனென்று நிஷ்டூர வசனங்களினால் பலருந் தூற்றுவதிலும் நாங்கள் சொல்லும் நன்னெறியின்படி நீ நடப்பது குறைவோ? இந்தப்படி நீ நடவாவிட்டால் இப்பாருள்ள வரையிலும், கடல் நீருள்ளவரையிலுங், கருங்காருள்ள வரையிலும், மகாமேருள்ள வரையிலும் பழிச்சொல்லும் பாவமும் கிளைகிளையாய் விளையுமேயல்லது மற்றொருலாபமுமில்லையே, இந்தக்கிருஷ்ண பகவான் நமது பட்டணத்துக்குவரவும், இராஜசபையேறி யுன்னிடத்திலிருந்து பேசவும், நாமெல்லோரும் எத்தனைக்காலம் தவஞ்செய்தாலுங்கிட்டாதே? அப்படிப்பட்டவர் நம்மிடத்திற்கலந்து யாவருடைய புண்ணியவசனத்தினாலேயோ வந்து உனக்கு மிகுந்த தரும நீதிகளைச்சொன்னார், அவருடைய வாக்கியத்தை வேதமந்திரமாகக்கொண்டு மேன்மைபெறக்கடவை, இவர் கிடைத்த

தற் கருமையாகிய பொருள், இந்த மகானுபாவனை இலேசாக நினைக்கவேண் டாம்! இவரே புராணபுருஷர், நம்மிடவர்களில் மகாபுத்தியும் யுத்தியும் ராஜ தந்திர வெற்றியுமுடைய வுத்தமராகையால் இவருடைய வாக்கியத்தைச் சிர மேற்கொண்டு நடப்பையானல் ஊழிமலையுங் காலம்வரைக்கும் உன்கீர்த்தி தொலையாது தீர்க்காயுசுடன்படிமீது கெடித்தலாதிபதியெனக் கொண்டாடப் படுவாய், இந்த பகவானுடைய மொழிகளைக் கேளென்று காங்கேயன் சொல்லி ஞன், பக்கத்திலிருந்த துரோணாசாரியர் வணங்கா மகுடமன்னனைநோக்கி ஓ மன்னரேறே! பாண்டவர் தூதனுகவந்து இவ்விடத்திலிருந்து பேசுகின்ற இவரை யாரென்றெண்ணியிருக்கின்றாய், இவர்தான் பரமபதநாதன், சங்குசக் கரகதாகட்கமேகோதண்டதாரி, கோவர்த்தனகிரியைக்குடையாகத்தூக்கி ஆயர் களுடைய ஆபத்தைக்காத்த அரிபராக்ரமன், உங்கள்குலமாகிய திங்கள்குலஞ் செய்த தவத்தால் இங்குவந்து எங்களுக்குத்தரிசனமாக உமது சபைக்கெழுந் தருளினன். இந்தக்குலத்தின் முதியோரெல்லாம் ஜந்மாந்திரத்திற்செய்த தபோபலத்திஞல் உன்னுடைய கோபமொழிகளை யெல்லாங்கேட்டு சகித்துக் கொண்டு குணமாகிய தருமமுறைகளையுங்கூறினன். உன்னொருவனல் உலகஞ் சுகப்படவும் நாங்கள் காண்பதற்கும் இவ்விடத்திற்றிருவடி பெயர்த்தருளின னல்லது பாண்டவர்களுக்கு நாடுபெறவேண்டி முக்கியமாய்வந்தவனல்லன். இதை நீ நன்றாக யோசிக்கத்தக்கது, ஆதியில் காண்டவபிரஸ்தமென்னுங் காட்டை ஒருநொடிப்போதில் இந்திரப்பிரஸ்தமாக வேற்படுத்தி யெல்லாப்பாக் கியங்களும் பாண்டவர்களுக்கீந்த இறைவன், அகண்டசாம்பிராச்சியமும், இப் போது அளிக்கவேண்டுமென்று நினைத்தால் அதற்கு யாமொரு அட்டியுமுண் டோ, அப்பனே! அப்படி நினைத்துவந்தவனல்ல, நீங்களொருகுலத்திற் பிறந்த வர்கள் உரிமையாக விருப்பதழகென்று உரைக்கவும் நமது புத்ரமித்ரகளத்தி ராதிகள்முதலிய நாமுஞ்சுகப்படவும் எண்ணியெழுந்தருளினனேயன்றி வேற ல்ல, இவைகளையெல்லாம் உன்சிந்தையுட்கொண்டு பகவான் சொல்லிய வார் த்தையின்படியும் உன் தந்தையுரைத்த தருமத்தின்படியும் காடுதிரிந்துவந்த பாண்டவர்களுக்கு நாடுகொடுத்து நாரணன்முதலாகிய நால்வரும்புகழ ஐவர்க ளுடனிருந்த தருமராஜனும் வீமனுந்தழுவ வணங்கியும் மற்றவருன்னைப்பணி ந்துவாழ்த்த இணங்கியும் நாங்கள் யாவருங்கண்டு கண்களிக்கவும் சாம்பிராச் சிய சம்பன்னனுக தாழ்வில்லாமல் வாழக்கடவையென்று மிக்க பரிவோடுஞ் சொல்லினர். இம்மொழிகளைக் கேட்டிருந்த துரியோதனன் இடியைப்போ லிரைந்து நீங்களளக்கவேண்டிய கல்விகளெல்லாம் இவ்வளவு தானே இன்ன மேதாகிலும் கொஞ்சங் குறையிருக்கின்றதோவென்று குலுங்கநகைத்து குற்ற முங்கோபமும் குடிகொண்டெழும்பக் கொதித்துப்பகைத்து மணிவண்ண ஞகிய மாயவனைப்பார்த்துச் சொல்லுகின்றன்.

ஓகோ கபடநாடகா! உன்னுடைய கற்பனையினலும் உன்தேககாந்தியி ஞலும் நஞ்சனைய வஞ்சனைநிறைந்த உன் நெஞ்சத்தினலும் நீ கொஞ்சமே னும் யோசிக்காமற் சொல்லிய நீதிசாஸ்திரங்களினலும் இவ்விடத்தி விருப் போருடைய பக்கச்சொல்லின் பலத்தினலும் என்னை மயக்கிமருட்டி நாடு

பெற்றுக்கொண்டு போகவல்லவோ நாடிவந்தாய், அடடா நாரணனே; நீ ஓடி வந்ததற்கு நான் நாடுகொடுத்தவன்றான், நீ வாங்கினவன்றான், ஐயோபாவம் பாண்டவர் நீவரும்வழியைப் பார்த்துக்கொண்டிருப்பார்களல்லவா; "சமுத்திரத்தின் அலை ஓயப்போவதுமில்லை, தர்ப்பணஞ்செய்து தம்பி தலைமுழுகப் போவதுமில்லை, தமயனுக்குப் பெண்வாய்க்கப் போவதுமில்லை, தங்கை கலியாணம் முடியப்போவதுமில்லை" என்னும் வாக்கியத்தை நீர்கேட்டதில்லையோ இம்மட்டும் போதும் போதும் எங்களவர்களெல்லாரும் மெத்தத்தெரிந்த பெரியோரென்னும் பேர்மாத்திரமேயொழிய பின்னையொன்றுமில்லை, உன்னுடைய வஞ்சனையும் சூதும்மாயவித்தையும் எனக்குத்தெரியும், இவர்களறியமாட்டார்கள். நீயெல்லோரையுமயக்குவாய், நான் உன்னை மயக்கும்படியாகிய உலகுக்கொருவன் வணங்காமுடியோன் நந்தியாவட்ட மாலையான் அரவகேதனன் இராஜாதி ராஜப்பிரதாப வீரன் கெடித்தலாதிபதி, என்னை நீநன்குமதித்துப் பார், புன்க மரத்தின்கீழ் கன்றுகள் மேய்க்கும் புன்றொழிலோன்; நான் ஆளப்போகிறது அந்நாடானாலும் ஐவர் வாழப்போகிறது இந்நாடாகிய மண்ணுடானாலும் அவர்களை வணங்கிப்பணிந்து கைகுவித்துவாழேன், அவர்களுக்கு நான் தாழேன், அணுவத்தனைநாடும் அவர்களுக்குக் கொடேன், என் பிராணனிருக்கிற வரையிலும் அவர்களை உயிருடன்விடேன், உங்களுடைய யுத்தி புத்திகளைக்கேட்டு நடவேன், ஒன்றுங்கொடேன், இதுதான் கடைசி வார்த்தை, நாளை நடக்கப்போகிற அமர்க்களத்தில் அவரவர்களுடைய பெருமையும் பிரதாபங்களும் வீரமும் தீரமும் வெளிப்படவேயிருக்கின்றன. ஆகாயத்திலிருக்குந் தேவர்கள் வேடிக்கைப்பார்க்கவே போகிறார்கள், இதற்குள்ளாக நீங்களெல்லாரும் ஏன் மனமயர்ந்துபோகிறீர்கள், திங்களைத்தரித்த சங்கரன் வந்துரைத்தபோதிலும், பஞ்சவருடைய பங்கைக் கொடுக்கவே மாட்டேன். இப்பெரியோர்களைப்போல் உன்னை மதித்து உனது வார்த்தையையும் நம்பிக்கேட்கமாட்டேன் என்றந்தைமுதலாகிய பெரியோரெல்லாரும் என்னை வெறுத்தாலும் இப்பிரபஞ்சமெல்லாம் என்னைப்பழித்தாலும் என்னைச்சார்ந்தவர்களெல்லாரும் மாண்டழிந்துபோனாலும் பாண்டவர்கள் மறுபடியும் நாடு பெற்றதாய்ப் படத்திலுமெழுதவொட்டேன், இல்லையென்று நான் முக்கினுற் சொல்லிய வாக்கியத்தை மறுத்து நாடுகொடுக்கிறதாய்ச் சொல்லமாட்டேன், திடங்கொண்ட என்மனத்துறுதியிதுவாகும், உன்னெண்ணத்தை இப்போதே மறந்துவிடென்று துரியோதனன் சொல்லினன். ஸ்ரீகண்ணபிரானும், திருமுக மண்டலத்தில் திவ்விய காந்தியுடையவராய் புன்னகைகொண்டு மன்னனை நோக்க அந்நேரத்தில் சபையில் வந்திருந்த முனிவர் மூவர்களில் ஜமதக்கினி முனிவர் துரியோதனனைப்பார்த்து ஓ ராஜாதிராஜனே? இவ்வுலகத்தில் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசையென்னும் ஈஷணத்திரையங்களில் வீழ்ந்து மயங்கி நிலையில்லாத தோற்பையாகிய பொய்யைமெய்யெனவிரும்பி விறுதாவிலழிகின்ற விவேக சூனியனைப்போலலையாமல் உண்மைப்பொருளை நாடிய உத்தமரொன்றுரைக்கும்படியாய் வேடம்பூண்டு உலகுக்குச் சிஷ்டாசாரத் தன்மையைப்பழக்கிப் பாபத்தை யொறுத்து புண்ணியத்தை நிலைநிறுத்தவேண்டி

நர நாராயணரிஷியாகவந்து கந்தசுவாமி விளையாடிக்கொண்டிருந்த கந்தமாதனச்சாரலில் யாகங்கள்செய்து சகல சித்தியும் பெறும்படியாக மௌனவிரதம் அனுஷ்டித்துக்கொண்டு வருநாளையிலொருநாள் இடிகளை யிடிக்குமுடிகளும் மொழிகளும் சக்கரவாளத்தைச் சாய்க்கும்பலமும் தேவதைகள் நிராயுதபாணியாக ஓடச்செய்யும் பிரதாபமும் வடவாமுகாக்கினியைப் புண்கள்செய்யும் பெரிய கண்களும் இந்தப் பூமியைச்சுற்றிலுங் கெல்லும்படியாகிய வில்லும் அஸ்திரங்களும் தலையில்முடியும் ஜயவீரக்கொடியும் தானேறியதேரும் பாபியென்னும்பேருந் தாங்கிய ஆண்மையையுடைய அரக்கனொருவன்வந்து தவஞ்செய்வோர்களைக்கண்டு ஆரடா இங்கு தவம்புரியாநின்றவர் உங்களுக்கு வில்லேன் பாணமேன் வீராதிவீரரைப்போ லிருக்கின்றீர்களே, வெளியே வாருங்களடாவென்று மேகம்போல் மொழிந்து சரங்களைப் பொழிந்தான். அவனைக் கண்ட புண்ணிய சீலர்களிருவரும் இவனுடன் பொருதால் நமது தவங்கெடுமென்றெண்ணி அந்தராக்ஷதனுக்கு அநேகவுபசாரச்சொற்களைச்சொல்லி அப்பா "நாங்கள் தபசிகள்" மிருகபயங்கரத்திற்காக வில்பாணம்வைத்திருக்கின்றோம், வேறொன்றுக்குமில்லை, மேலும் எங்களை நீஜெயித்ததாக விஜயஸ்தம்பம் நாட்டிக்கொள்ளு, அப்பாலேநீங்கிப்போவென்று அடங்கிச்சொல்லினர். அந்தவார்த்தைக்கு அவனொப்பாமல் குப்பல்குப்பலாகக் கணைகளைச் சொரிந்தபோது நரனுக்குக் கோபம்வந்து வில்லைவளைத்து ஆகர்ண பரியந்தமிழுத்து அமோகமாகிய அஸ்திரங்களைப் பிரயோகித்து அவனுடைய வீரபட்டத்தையும் கவசத்தையும் அறுத்து வில்லை இரண்டு துண்டாய்முறித்து மார்புந்தோளும் வயிறுந் தாளும்மூழ்கித்துளைக்க முனையம்புகளையேவி சின்னபின்னப்படுத்தித் தேரையும் அவன்பேரையு மழித்துச்சிதைத்து உதிரவெள்ளம் பெருகச்செய்து உலகுக் குபகாரஞ்செய்தருளினன் அந்த நரநாராயணரென்னும் இருவரும் இந்த யுகத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானாகவும் அர்ச்சுனனாகவும் ராஜகுலத்திலவதரித்து உங்களிலொருவரா யிருக்கின்றார்கள், அவர்களோ ஒன்றைக்காட்டி ஒன்றை முடிப்பார்கள், அசாத்தியர்கள், அவர்களால் முடியாததொன்றுமில்லை, அவர்களை யாரொருத்தர் சிந்தித்து வந்தித்து தாசத்துவம்புகுகின்றார்களோ அவர்களிடத்திலிருந்த நேசமாயிருப்பார்கள், நிந்திப்பவர்களை நாசஞ்செய்வார்கள், யுகந்தோறும்யுகந்தோறும் இவர்கள் பிறக்காவிட்டால் பாவம்இறக்கமாட்டாது. ஆகையாலிவர்கள் பிறந்தேதீரவேண்டும்; இத்துவாபரயுகத்தில்தருமத்தைநிலைநிறுத்த இவர்கள் பிறந்திருக்கின்றார்கள்; இனிபிறக்கின்ற கலியுகத்தில் தெய்வமில்லையென் றிகழ்ந்துந் தெய்வநிந்தனை செய்தும் தத்தம் சுய சமயத்தையும் சுயபூசையையும்விட்டுப் பரமதத்தையும் அன்னிய தேவதையையும் பூசித்து அனுஷ்டிப்பார்கள், ஆசார பூஜாரவிதியாவுந் தவிர்த்துச் சித்தசுத்தியில்லாமல் வருணசங்கிரமமாகும், கடைப்பட்டோரெல்லாரும் கல்விச்சாஸ்திரங்களையும் ஜோதிட நூல்களையும் சாமுத்திரிகசாஸ்திரங்களையும் வைத்தியநூல்களையும் வேதங்களையும்வேதாந்தங்களையுங் கற்றுக்கொண்டு உயர்ந்தகுலத்தோர்போல ஸ்நானம் பூசை ஆசாரம் சித்தசுத்தி வைதிகம் மாண்புபெற்று கௌரவமுடையவர்களாய் மற்றவர்களுடைய வீடுகள்தோறுஞ் சென்று மரியாதையும் உயர்ந்த

ஆசனமும்பெறுவார்கள், முதற்குலத்தோராகிய பிராமணர்முதலானவர்களும் கடைப்பட்டோரிடத்தில் கைகட்டிக்கொண்டு காத்திருந்து வேதநூல்முதலிய கல்விஞானமுங் குறைந்து இழிவானவன் உபதேசஞ் சொல்லக்கேட்டு இன்ப மடைந்து இச்சகம்பேசி இன்னவன் இன்னவனென்றில்லாமல் முறைமைமாறி யிரந்துண்பார்கள். 'நற்குலமெல்லாம் நடுங்கியொடுங்கும், துர்க்குலமெல்லாந் துளிர்த்துத்துலங்கும், குப்பையுயருங்கோபுரந்தாழும்' என்பதைப்போலாகும் அப்படியொருவரை யொருவர் மதியாமல் கெட்டழிந்து போகையில் இந்தப் பகவானே திரு அவதாரஞ்செய்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து உலகத்தை வரிசைப்படுத்தி வர்ணாச்சிரமதருமம் வகுப்பான். ஆகையால் அரசனே? உன் பாட்டனும் ஆசாரியரிருவரும் பெரியதந்தை சிறியதந்தை யிருவரும் எம்போலியருஞ் சொல்லும்படியாகிய வசனங்களைக்கேட்டு ஆயர் பாடியில் நேயராகிய கோபாலர்கள் வீடுகள்தோறும் தயிர்வெண்ணெய்களைத் தாவியுண்டு தையலார் சம்பிரமங்களை யனுபவித்த கண்ணபிரானைப் பணிந்து அவருக்குச் சந்தோஷம்வரும்படியாய் தருமத்தை அனுசரித்துநாட்டைக்கொடுத்து பாண்டவர்களுடன் பொருந்தியிருந்து திருந்திவாழ்வையாகில் பேரும் பிரதிஷ்டையுமுண்டாய்ச் சுகம்பெறலாம், சுவாமி அருளும்பெறலாம் என்று ஜமதக்கினி முனிவர்சொல்லினார். அந்த வார்த்தையைக்கேட்டு நகைத்து இவர்களெல்லாரும் இதுவரையிலும்சமஸ்கிருதமாய்ச் சொன்னார்கள், தேவரீர் தாராளமாய் விளங்கச்சொன்னீர் சுவாமியென்று உபசரித்தான், அந்தவேளை யில் பக்கத்திலிருந்த கண்ணுவமஹாரிஷி மன்னவனைப்பார்த்துச் சொல்லுகின்றான்.

ஓ! துரியோதனராஜனே? பெரியோர்கள்சொல்லைக்கேளாமல் அவமான மடைந்தவர்கள் சரித்திரத்தைச் சொல்லுகிறேனென்றுசொல்லுகின்றார். தேவேந்திரனுடைய சாரதியாகியமாதலியானவன் திவ்யசுந்தரமோகன வடிவினையுடைய ஒருபெண்ணைப் பெற்றுவளர்த்து இந்தப் பெண்ணுக்குத்தகுந்த புருஷன்வேண்டுமென்று சூரியகிரணந்தாங்கும் இடங்களெல்லாம் தேடிப்பார்த்துவருகையில் ஒருநாள் பாதலத்திலிருந்த நாககுமாரனைக்கண்டு அவன் சுந்தரவடிவைத் தன்சிந்தையிற்கொண்டு அப்பா! மிகுந்த அழகினையுடைய என்பெண்ணை யுனக்குக் கலியாணம்பண்ணிக் கொடுக்கிறேன் நீ பெற்றுக் கொள்ளென்றுசொன்னான்; அந்தவார்த்தையை நாககுமாரன்கேட்டு,ஐயாஎங்களுக்கு குலப்பகையாகியிருப்பவன் கருடன், என் தகப்பனையுந் தாயையுங் கொன்று தின்று விட்டு என்னையுங்கொல்வேனென்று கறுவிக்கொண்டிருக்கின்றான்; அவன்கண்ணிற்படாத காலமெல்லாம் பிழைத்திருக்கின்றேன், எப்போது அவன் கண்ணிற் படுகின்றேனோ அப்போதே நானிறந்தவன்றான். ஐயா! இப்படிப்பலமாகிய பகைகொண்டிருக்க 'நித்தியகண்டம்பூரணாயுசு' என்னும்பழமொழிபோல் வருந்தி ஏக்கங்கொண்டிருக்கின்ற நான் என்றைக் கிருந்தாலுங் கருடனால் இறந்துபோவேனென்று தெரிந்திருந்தும் உமது பெண்ணை விவாகஞ்செய்துகொண்டு நெடுநாள்கூடி வாழ்வதற்கில்லாமல் விட்டுவிடுவது பிரயோசனமில்லை; மேலும் நல்லபெண் அகப்பட்டாற்போது மென்னும் ஆசையு

டன் எனக்கிருக்கும் விபத்தைச்சொல்லாமல் கலியாணமுடித்துக்கொண்டால் எனக்குப்பழியும் பாவமும்வந்து நேரிடும் ஆகையாலுற்றது சொன்னேனென்றுரைக்க, அந்தவார்த்தையைக்கேட்ட மாதலிக்கு, மிகுந்த சந்தோஷம்வந்து, தன்னைமறந்தவனாக உடல்பூரித்து மன்மதாகிர்தியாகிய வடிவிலும்; கலைஞானத்திலுஞ் சிறந்ததல்லாமலும் உண்மைமொழியிலும் உயர்ந்திருக்கின்றான், இவனைச்சுகப்படுத்தி நமது பெண்ணை இவனுக்கே கொடுக்கவேண்டுமென்று மனமகிழ்ந்து சொல்லுகின்றான்.

ஓ நாகபாலனே! எங்கள் தேவராஜனுக்குச்சொல்லி உனக்கிருக்கும் கருடனுடைய பகைப்பயத்தை நீக்கித்தீர்க்காயுளா யிருக்கும்படி செய்விக்கிறேன், வாவென்று கூட அழைத்துக்கொண்டு இந்திரனுடைய சபைக்குவருகையில் இவர்களுடைய பாக்கியவசனத்தினால் ஸ்ரீவைகுண்டவாசனாகிய சகத்ரக்ஷகன் இந்திரனுடைய சபையிலெழுந்தருளியிருந்த திவ்யகோலத்தை இந்த மாதலியும், நாககுமாரனுங்கண்டு வணங்கிக்கரத்தைக்குவித்து நாவினாற்றுதித்து இந்திரன் முதலியவர்களையும் பணிந்துகொண்டு தான்வந்த வரலாறுகளை இந்திரனிடத்திற்சொல்ல, அதைக்கேட்ட இந்திரனெழுந்து மாயோன் மலரடியில் வீழ்ந்து சுவாமி பக்தவற்சலனாகிய பரமதயாளுவே என்சாரதியாகிய மாதலி கருத்தைக் கேளுமென்று மனுப்பண்ணிகொள்ள அதைகேட்டு விஷ்ணுமூர்த்தி சந்தோஷித்துக் குமாரனைப்பார்த்து இனிமேல் நீ தீர்க்காயுசாக விருக்கக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருளி ஸ்ரீவைகுந்தத்திற் கெழுந்தருளினார். உடனே மாதலி தேவராஜனிடத்தில்விடைபெற்றுக்கொண்டுபோய் தன் குமாரத்தியை நாககுமாரனுக்குத் தத்தஞ்செய்து சகலவித அலங்காரசம்பிரமங்களுடன்விவாக முடித்து சீதனமுதலாகியவைகொடுக்கப்பெற்றுக்கொண்டு ஸ்திரீயும் புருஷனும் நாகலோகம் போய்ச்சேர்ந்து குங்குமந்தங்கிய கொங்கை குலுங்கி நெருங்க மங்கள இங்கித கிரீடையில் சிறந்து வாழ்ந்திருந்தார்கள். இவைகளையெல்லாங் கருடன் கேள்விப்பட்டு கடுங்கோபங்கொண்டு கண்கள் சிவந்து நெருப்புப்பொறிகள் சிதறும்படி வந்து தேவேந்திரனைக்கண்டு சினந்து சொல்லுகிறான்.

ஓ இந்திரனே! அதிதியினுடைய புத்திரன் நீ வினதையினுடைய புத்திரன் நான், நம்மிருவருக்குந் தந்தை கசியப்பிர்மா நாமிருவரும் அண்ணனுந் தம்பியுமா யிருகின்றோம். உனக்குவந்த நன்மை தீமையென்னுடையன, எனக்குவந்த நன்மைதீமை உன்னுடையன என்றுபாராட்டி அநேகங்கோடி இராக்ஷதனைக்கொன்று உன்பகையெல்லாம் போக்கினேன், உனக்குச்சவுக்கியமுண்டாக்கினேன், அண்டாண்டபகிரண்டங்களைக் கர்ப்பத்தில் வைத்திருக்கும் சர்வலோகநாயகராகிய தேவநாயகனை என்தோளிற் சுமக்கும் பராக்கிரமத்தை உடையவனாகவிருக்கின்றேன், இப்படிப்பட்டஎன்னுறவைவிரும்பாமல்என்னையும் என்தாயையும் அடிமையாக்கிக்கொண்டுவருத்திய என்பகைவராகிய பாம்புக்குமிகுந்த உதவியைச் செய்து தீர்க்காயுசுவாங்கிக் கொடுத்தாயென்று கேள்விப்பட்டுவந்தேன் ஆதலால் உன்னை என்சிறகினாலடித்துப் பிடித்துப் பிலத்துவாரத்திற் கொண்டு போய்ப் போட்டு விடுகிறேனென்று சீறி யெழும்பும்படி கின்றான். அவனைப்பார்த்துஐயா! நானொன்றுஞ்சகாயம்பண்ணவில்லை, தேவாதி

தேவனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யிவ்விடம் வந்திருந்தார்; அவனைக்கண்டு வணங்கிக் கேட்டுக்கொள்ள நாகத்திற்குத் தாமே இரங்கி அருள்புரிந்தா ரென்று இந்திரன் சொல்லக்கேட்டு, அப்படியா நல்லதாகட்டு மென்று வைகுண்டத்திற்குப் போய் இலட்சுமிநாயகனைக்கண்டு வணங்காமனின்று இன்று தேவரீர் நாககுமாரனுக்கு தீர்க்காயுசுகொடுத்ததாய்க் கேள்விப்பட்டேன், அவன் எனக்கு நெடுநாள்பகையாயிருக்க உமக்கு நான் அடிமையாயிருந்தும் என்சத்துருவுக்கு அருள்செய்தகாரணமென்னவென்று முடுக்காகக் கேட்க விஷ்ணுநகைத்து சொல்லுகின்றார். ஓகருடனே? நம்மை அவனிரந்து வேண்டினான், அவன்மீது கடாக்ஷம்வைத்து அனுக்கிரகஞ் செய்தோமென்று சாந்தமாகச்சொல்லினர். கருடன் அதைக்கேளாமல் கோபித்துக்கொள்ளு வதைநோக்கி இக்கருடன் கர்வங்கொண்டிருக்கின்றான். அதையடக்கவேண்டு மென்று திருவுளங்கொண்டு ஓ கருடனே நீசொல்லுகின்றது ஞாயமே, ஆனால் அந்தநாககுமாரன் என்னைவணங்கிப்பணிந்து வருந்தியதால் நான் மனமிரக்கம் வைத்தேன், இப்போதும் எனக்குரியபக்தனாகிய உனக்கு உதவிசெய்யாமல் உன்பகையாளிக்கு வரமளித்தது தப்பிதமே, ஆனால் அவனிருக்கும் நாகலோகத்திற்குப் போய் அவனுக்குக் கொடுத்தவரங்களைத் திருப்பிவிடுகிறேன் வருகிறையாவென்று திருமால் அழைக்க வருகிறேனென்று வந்துபணிந்த கருடன் மீது கருணையுடையவர் போற்காட்டி என்னுடைய இரதத்தைக்கொண்டு வரச்சொல்லும் என்றார். அதைக்கேட்டு பதைபதைத்து சுவாமீ! அடிமையிருக்க வேறுவாகனமும் வேண்டுமோ, என்தோளின்மே லெழுந்தருளுமென்று மண்டியிட்டுப் புயங்கொடுக்க மஹாவிஷ்ணு தமது திருவடியை ஒருதோளினிடத்தில் நாட்டவே என்புகளெல்லாம் நெக்குவிட்டொடிந்து களைத்துப் பூமியில் மூர்ச்சையாய்விழுந்துசோர்ந்தான். அவனைநோக்கி ஏனப்பாவென்று இருகரத்தாலுந் தழுவியெடுத்து நிறுத்தியபோது கண்ணீர்சோரவிட்டுப் புண்ணியனே! தேவரீருடைய எண்ணந்தெரியாம விளைத்தேன், தேவரீரைத் துதிக்கத்தக்க எறும்பு கடையானைமுதலிய எல்லோரும் பரமபாகவதரென்று இன்று தான்கண்டுகொண்டேன், விவேகசூனியத்தால் வெகுளியுற்றவென்னையும் நாகராஜனைப்போல் இரக்ஷித்தருள வேண்டுமென்று திருவடியைச் சிரத்திலுறுத்தவும் பக்தவற்சலனாகிய பரந்தாமன் கருடன்மீது கடாக்ஷம்வைத்து எப்போதும்போல் சகலபலங்களுமுண்டாக்கிப் பெரியதிருவடியென்று திவ்யநாமஞ் சூட்டிவாகனமுங்கொடியுமாகவைத்து இரக்ஷித்தார். அந்தவிஷ்ணுவே இந்தக் கிருஷ்ணபகவானாக வந்தவதரித்தவர். கேளுந்துரியோதனா! ஆணவத்தால் மானமழியத்தக்கவர்கள் அநேகம்பேருண்டு, அதுபோலநண்பராகிய தேவரும் அன்பராகிய யாவரும் நாங்களாகிய மூவரும் சொல்லும் வார்த்தையைக் கேட்டு நடந்தையானால், புகழ்ச்சியும் மகிழ்ச்சியுமுண்டு; இல்லாவிட்டால், இகழ்ச்சியுண்டு, கடைசியில் உயிருமிழந்து போம்படிவரும். 'சிரிக்கச்சொல்பவர் தீயர்' 'அழச்சொல்பவர்கள் அன்பர்' என்னும் பழமொழி அறியாயா? வென்று கண்ணுவர்சொல்லினர். நாரதமகாமுனிவர் துரியோதனனைப்பார்த்து ஏதுமில்லாதவர்கள் இறைவராவார்கள், சகல பலமுடையவீரர்கள் அபல

ரிடத்தில் அகப்பட்டழிவார்கள், 'கீழுமேலாம் நாடுகாடாம் ஓடம் வண்டியாம்
வண்டி ஓடமாம்' ஒருவருக்கும் ஒன்றுஞ்சொந்தமேயில்லை, ஆகையால் நமக்கே
பலமிருக்கின்றது; நாமேவெல்வோமென்று நினைத்து அகந்தைகொண்டு பெரி
யோருரைத்த மொழியை அலக்ஷியஞ் செய்வையானால்; ஒருநாளைக்கும் உருப்
படப்போவதில்லை, பதினாலுலகுந் துதிக்கும் பாட்டனாகிய வீஷ்மர்துரோணர்
விதுரர் முதலியவர்களும் உன்னிடத்தில் வைத்த விசுவாசத்தால் இவ்வளவு
தூரம் தழுவிச் சொல்லுகின்றார்கள். அவர்களைப்பற்றி நாங்களும் ஆசையா
கச் சொல்லுகின்றோம், இவைகளையெல்லாந்தள்ளி உன்னிஷ்டப்படி நடப்
பையாகில் உனக்குச் சுகம்வரப்போவதேயில்லை, அல்லலில் மூழ்கி அவஸ்
தைப்படுவாய், அதற்கொருகதை சொல்லுகிறேன் கேள். சூரியகுல திலக
னாகிய காதிமகாராஜா குமாரராகிய விசுவாமித்திரரிடத்தில் காலவனென்னும்
பிரமசாரி வேதபாடமுதலிய வித்தைகளையெல்லாங் கற்று அவித்தையவித்து
மகாரிஷியென்று யாவரும்வணங்க வாழ்ந்தனர். ஒருநாள் தம்ஆசிரியனை வண
ங்கி விடைபெற்றுக்கொள்ள விசுவாமித்திரர்மனமகிழ்ந்து குழந்தாய்! ஐயந்திரி
பில்லாமல் அறிந்து கொண்டையாவென்று கேட்டனர். தேவரீருடைய அடி
யிணை யருளால்யாவு முணர்ந்தேனென்று காலவர்சொல்ல! கௌசிகர்கேட்டு
கண்களிகூர்ந்து போய்வாவென்று விடைகொடுத்தனர் ? அவர், குருவைப்
பணிந்து குருதக்ஷிணைகொடுத்துப்போவது உத்தமம் இல்லாவிட்டால் என்னு
டைய மனம் மெத்தவருந்தும், சுவாமிகள் தடைசொல்லாமல் தங்களுககுச்
சம்மதமானதை அடியேனுக்குக் கட்டளை யிடவேண்டுமென்று கேட்க
அதைக்கேட்டு விஸ்வாமித்திரர் சொல்லுகின்றார்.

ஓ காலவரே! உமதுவணக்கமும் ஒழுக்கமும் அடக்கமும் ஒடுக்கமும் சாந்த
மும்அன்பும்எனக்குப் போதுமான தக்ஷிணையாயிருக்கின்றன, வேறே தக்ஷிணை
யென்பதுமுண்டோ, நீரும் நாமும் இரண்டோ? ஒன்றேயன்றிவேறன்று; நீர்
தவஞ்செய்யப்போமென்றனர், அதைக்கேட்டு காலவர்கோபங்கொண்டு நானெ
ன்ன எளியவனா! கையிலாகாதவனா! குருதக்ஷிணைகொடாத பாவி அடையும்
நரகத்திற் கேதுவாகச் செய்கின்றீர்கள், அப்படிவேண்டாம், நீர்குருதக்ஷிணை
வாங்கிக்கொள்ளும்படியாய்க்கேளும், நான்கொடுத்துவிட்டுப்போகிறேனென்ற
னர் இந்தவார்த்தையால் விசுவாமித்திரருக்குக் கோபம்வந்து நான் சொல்லு
கின்ற வர்ணமும் நல்லசாதியுமுள்ளதாய் எண்ணூறு குதிரையைக் குருதக்ஷி
ணையாகக் கொடுமென்றுசொல்ல நல்லதாகட்டும். அதினுடைய நிறம் எப்படிப்
பட்டது, அதையுஞ்சொல்லுமென்று காலவர்கேட்க விசுவாமித்திரர் சொல்லு
கின்றார். பாலினுஞ் சிறந்த வெள்ளையும் நீலநிறமுடைய காதும் அசுவசாஸ்
திரத்தின்படி சுழிசுத்த சுபலக்ஷணமும் வாயுவேகமனோவேகத்திலும் மேலா
கிய கதியுமுடைத்தாயிருக்க வேண்டுமென்றனர். அப்படியேகொண்டுவருகிறே
னென்று மண்டலமெங்கும் விண்டலமெங்கும் எண்டிசையெங்குந் தேடிவரு
கையில் எவ்விடத்திலுங் காணப்படாமையால் வாடி விசாரமடைந்து போசன
மில்லாமல் பிரயாசமுற்றுவருந்தி 'ஐங்காதம்போனாலும் அறிமுகம்வேண்டும்'
என்பார்களே, அதுபோல இவ்விடத்தில் யாரையுங்காணேமே ஆ! தெய்வமே

யென்றுகூவினர். அப்போது ஒருமலையினிடத்திலிருந்த பூர்வசிநேகனுகிய கருடபகவான்வந்து நீர் ஆனையா? இவ்விடத்தில் வருந்தியிருக்கின்றீரென்று கேட்டனன், அவர்நான்காலவனென்று சொல்லவே அதைக்கேட்டோடிவந்து இளைப்பாற்றித் தழுவிக்கொண்டு என்னகாரியம் என்னுடைய அன்பனேயென்றனன். அப்போது ஒருவருக்கொருவர் தழுவிக்கொண்டு பழமைபாராட்டித் தான்வந்த குருதக்ஷிணையின் சங்கதியையும் விளம்பினன், அதை அந்தக்கருடன்கேட்டு தலைநடுக்குற்றுநானும் ஒருநாள்பகவானுடையவார்த்தையை இரட்டித்தபோது அவரது பெருமையைக்காட்டப் பயந்து வணங்கிப் புத்திபெற்றுக்கொண்டேன். அப்படியே நீயும் வருத்தம் வைத்துக்கொண்டாய் எப்போதும், பெரியோர்கள் வார்த்தையைக்கேளாமல் தடுத்துவந்த பாவம் நீ அனுபவிக்கின்றாயென்று இடருற்று சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் அவ்விதக் குதிரைகளில்லை, நாம் தெய்வலோகம் போய்ப்பார்த்து வருவோமென்று சிறகின்மேலேற்றிக்கொண்டு கேசரிமார்க்கமாகப் போகையில் காற்றின்வலுவினலும், சூரியகிரணவெப்பத்தினலும், மூர்ச்சையடைந்து சோர்ந்து சமுத்திரத்தில் வீழவும் அதைக்கண்ட கருடன் தான் கந்தமாதன பர்வதத்தில்விட்டு திகிலையும் பயத்தையுந்தெளிவிக்க மூர்ச்சைதெளிந்தெழுந்த காலவனைநோக்கி போவோம் வாருமென்று புள்ளிறை அழைக்க நான் குருவுக்குப்பொய்த்தாலும் குறைந்திளைத்தாலும் ஆகாயவழி எவ்விதத்திலும் வரமாட்டேனென்றான். அப்பால் இருவரும் பூமியிலிறங்கிவந்து குதிரையைக்குறித்து சகலதீவுகளிலுந் தேடித்திரிகையில் உங்கள் பிதாமகனுகிய யயாதிமஹாராஜன் இந்த அஸ்தினபுரத்தைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு வருகையில் காலவரிஷியும் கருடபகவானும் அவரிடத்திற்குவந்து கண்டார்கள். உடனே அவர்களுக்கு வந்தனை வழிபாடுகள்செய்து இவ்விடத்திற்கு நீங்கள் வந்தகாரிய மென்னவென்று கேட்க, குருதக்ஷிணைக்காக சுபலக்ஷணமுள்ள எண்ணூறுகுதிரைகள் சம்பாதிக்கும்படி வந்தோம், எங்குந்தேடியிளைத்தோம், எங்கள் களையைத்தீர்க்கும் உத்தமகுணமுள்ள உம்மிடத்தில் வந்தோமென்றுசொல்லினர். அவ்வாக்கியத்தைக்கேட்டு யயாதி துடிதுடித்துப்பதைபதைத்து, என்னிடத்தில் இலக்ஷங்குதிரைகளிருக்கின்றன, ஆனல் அவைநீங்கள் தேடிவந்த லக்ஷணமுடையனவல்ல, நானென்னசெய்வேன், ஒருவருடைய காரியங்களை நிறைவேற்றுஞ் சக்தியையுடையவனெவனே அவன் வந்தவர்கள் சங்கதியை விசாரிக்கவேண்டும், அதை நிறைவேற்றமாட்டாதவன் சங்கதிகேட்காமல் உபசரித்தனுப்பிவிடவேண்டுமென்று நீதிநூல்களிற்கூறியிருந்தும் பாவத்திற்குள்ளானேன், போகட்டும் ஐயா, மகமேருவைக்கேட்டவர்களுக்கு அதற்கு இனமாக அணுவாகிலும் கொடுத்தனுப்ப வேண்டுமென்றிருப்பதால் குதிரையுங் குணமுள்ள ஸ்திரீயுஞ் சரியென்று தருமசாஸ்திரத்திற் சொல்லியிருக்கின்றது, ஆகையால் என்னிடத்தில்வந்து உங்கள் குறையைச்சொல்லி மனக்குறைவுடன்போகாமல் நிறைவாகிய சந்தோஷமனத்துடன் என்பெண்ணுகிய மாதவியென்னுங் கன்னிகையைத் தத்தம்பண்ணித்தருகிறேன் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று வணங்கினன். அப்போது காலவர் சொல்லுகின்றார். குதிரைகளுக்காக நாடுகாடு

மேடெல்லாம் தேடிவாடி வரும்படியாகிய நான் இந்தப்பெண்ணை யெங்கே யிழுத்துக்கொண்டு திரிவேன் எனக்கு வேண்டாமென்று பிணங்கக் கருடபக வான் இணங்கும்படியாகப்பேசி யயாதி மனத்திற்குசந்தோஷம்வரும்படியாகச் செய்து அந்தமாதவியென்னும் பெண்ணைக் காலவருக்குக் கன்னிகாதான மாகச்செய்து போசனங்கொடுத்து நமஸ்கரித்து அனுப்பிவிட்டான். உடனே காலவரும் கருடனும் அந்தப்பெண்ணை அழைத்துக்கொண்டு மூவரும் வையக மெல்லாம் ஐயமறத்திரிந்து தேடிவரும்போது அயோத்திமாநகரத்தையாளும் இட்சுவாகுமஹாராஜாவி னிடத்தில் இருநூறு குதிரைகளிருக்கக் கண்டு நா மெப்படி போய்க்கேட்பது, அந்தராஜன் பிராணபதமாய் வைத்திருக்கிறானே, அது நமக்கு எப்படி கிடைக்குமென்று ஆலோசித்து ஏங்கும்போது காலவ ருடைய மனைவியாகிய மாதவி சொல்லுகின்றாள், மகாரிஷியாகிய என்கண வனே! என்னுடைய பால்யதிசையில் ஒருபெரியவருக்குப் பணிவிடைசெய்து ஒரு மந்திரம்பெற்றிருக்கின்றேன், அதனுடைய பலனென்னவென்றால் நாயக னனுமதியில் பிறரைப்புணர்ந்து பிள்ளைகளைப்பெற்று மறுபடியும் கன்னிகை யாய் நிர்த்தோஷமுள்ள கற்புடைமனைவியாய்க் கணவனைச்சேரும்படி ஆசீர் வதித்திருக்கின்றார்.

ஆகையால் இந்த அயோத்தியையாளும் இட்சுவாகுமஹாராஜனுக்குப் பிள்ளையில்லாமல் வருந்துகின்றானும், அவனைக்கண்டு பேசி ஒருபிள்ளைபிறந் தால் லக்ஷணமுள்ள இருநூறு குதிரைகொடுக்கவேண்டுமென்று சொல்லுறுதி பெற்றுக்கொண்டு என்னை அனுப்பிவைத்து குதிரைகளை வாங்கிக்கொள்ளு மென்றாள். அச்சொல்லைக்கேட்டுச்சிந்தைமகிழ்ந்துஇருவருஞ்சம்மதித்து இட்சு வாகுவினிடத்திற் போய்ப் பேசிக்கொண்டு யயாதிமகளாகிய மாதவியை அனு ப்பிவைத்தார்கள். அவளிடத்தில் பட்டத்துக்கு ஒருபிள்ளை வசுமஹாராஜ னென்பவனைப் பெற்றுக்கொண்டு இருநூறு குதிரைகளையும் மாதவியையும் கொடுத்து வணங்கிக்கொண்டான். அப்பால் இந்த மாதவியானவள் முன் போற் கன்னிகையாய்க் காலவரைச்சேர்ந்து கலந்திருந்தாள். இதைக்கண்ட கருடன் குதிரையைத் தேடிக்கொடுக்கும் குளிகை யுனக்குக் கிடைத்த படியால் இந்த உபாயப்படி மற்றை அறுநூறு குதிரைகளையுந் தேடிக்கொள் ளென்று செலவுபெற்றுக்கொண்டு தன்னிடத்திற்குப் போய்விட்டான். இவ் விடத்தில் காலவரும் மாதவியும் குதிரைகளைச் சம்பாதிக்கும்படி இராச்சியங் களிற் றிரியும்போது கங்கைசூழ்ந்த காசிமாநகரத்தில் அரசாட்சிசெய்யும் தியோதரனென்னும் அரசனிடத்தில் இதேவண்ணம் இருநூறுகுதிரைகளிருக் கிறதென்று கேள்விப்பட்டு அவனிடத்திற் பேசியபோது எனக்கொரு பிள்ளை வேண்டும். தேவரீர் அருள்செய்தால் இருநூறு குதிரைகளையுங்கொடுத்து விடு கிறேன் என்னுடையபாக்கியமெல்லாந் தருகிறேனென்று சொல்லக்கேட்டு மகிழ்ந்து மனைவியாகிய மாதவியைவிட்டு ஒருபுத்திரன் பிறந்த பிற்பாடு மேற் கூறிய இருநூறு குதிரைகளையும் பெற்றுக்கொண்டான். மறுபடியும் மாதவி மஹாபதிவிரதையாகிய கன்னிகைப் பருவம்பெற்று நாயகனுந்தானும் இன்னும் நானூறு குதிரைகள் வேண்டுமே இனியெங்கே அகப்படுமென்று அப்பால்

நாடிப்போகையில் போஜராஜனுடைய சமுகத்திற்குப் போனார்கள். அவரிடத்திலும் இருநூறு குதிரைகளிருக்கக்கண்டு பிள்ளையில்லாமல் மனவருந்தப்படுந் தன்மையையுணர்ந்து மாதவியை அவரிடத்தில் விடுத்து சிபிகீர்த்திவந்தனென்னும் ஒருபிள்ளையைப் பெற்றளித்து பழையபடி கன்னிகையாய் இருநூறு குதிரைகளையும் பெற்றுக்கொண்டு ஆகஅறுநூறு அசுவங்களுடன் வரும்போது இன்னும் இருநூறு அசுவம்வேண்டுமே! மாதவி இனி நானென்னசெய்வேன், என்காலமெல்லாம் குதிரை தேடுவதிலேயே போய்விட்டதே, நான் பார்க்காத உலகமுமில்லை, எவ்விடத்திலும் இனிமேல் இத்தன்மைவாய்ந்த குதிரைகளில்லை மேல்நடக்கவேண்டிய தென்னவென்று நாயகன் நாயகியுடன் யோசிக்கும்போது பழைய சிநேகனாகிய கருடபகவான்வந்து கலந்துகொண்டார். அவரைக்கண்டு சங்கதியெல்லாம் சொல்லி இன்னும் இருநூறு குதிரைகள் வேண்டுமென்றார். அதைக்கருடன்கேட்டு ஓய்காலவரே! நீர் பூலோகமெல்லாந்தேடித்திரிந்தீர், நான் மேலுலகமெல்லாம் ஆராய்ந்துவிட்டேன், நாம் தேடிவந்த குதிரைகள் நாகலோகத்திலுமில்லை, ஆகையால் இப்போது அகப்பட்ட அறுநூறு குதிரைகளையும் ஓட்டிக்கொண்டுபோய் விசுவாமித்திரரிடத்தில் விட்டு நமஸ்கரித்துக்கொண்டால் இன்னும் இருநூறு குதிரை யெங்கேயென்று கேட்பார், அப்போது வணங்கி சுவாமி ஒவ்வொரு பிள்ளைக்கு இருநூறு குதிரை வாங்கினேனென்று உண்மையைப்பேசி அந்தத்தன்மையின்படி தேவரீருக்கும் பிள்ளையில்லாமையினால் இந்த மாதவியுடன்கூடி ஒருபுத்திரனைப்பெற்றுக்கொள்ளும், உமக்கும் ஒருபுத்திரனுண்டாகிறான், எனக்கும் எண்ணூறு குதிரை கணக்குச்சரிப்படும் என்றுசொல்லி குருதக்ஷிணையைச் சரிப்படுத்திவிட்டு உமது மனையாளுடன் தவத்தைச்செய்து வாழுமென்று கட்டியணைத்துக்கொண்டு சிநேகனைவிட்டு நீங்கி கருடபகவான் போய்விட்டார். அப்படியே காலவரும் மாதவியும் அறுநூறு குதிரைகளையும் ஓட்டிக்கொண்டு விசுவாமித்திரரிடத்திற்சென்று சாஷ்டாங்கதண்டனிட்டு நடந்தவர்த்தமானங்களையெல்லாஞ் சொல்லி அறுநூறு குதிரைகளையும் ஒப்புவித்து மற்ற இருநூறு குதிரைகளுக்கும் வகையையுஞ்சொல்ல அந்தப்படியே விசுவாமித்திரர் ஒப்புக்கொண்டு மாதவியுடன்கலந்து ஒருபிள்ளையைப் பெற்றுக்கொண்டு அந்தப் பிள்ளைக்கு அசுவஷ்டகனென்று பேருமிட்டு மாதவியையும் காலவனையும் வாழ்த்தி ஆசீர்வதித்து அப்பா காலவனே! குருதக்ஷிணை வேண்டாமென்று சொன்ன எனக்குக் கோபம்வரும்படியாய்ப்பேசி இவ்வளவு வருத்தம் அடைந்தாயே, ஆதலால் இனிமேல் பெரியோர்கள் வார்த்தைக்கு மீறிப்பேசவேண்டாம், இன்றுமுதல் சிவத்தைபேணித்தவத்திலிருந்துபவத்தையொழித்து நலத்தைப்பெறுவாயென்று விடைகொடுக்க, ஆசிரியரிடத்தில் ஆசீர்வசனம்பெற்றுத் தானும் தன் பத்தினியாகிய மாதவியும் அருமையாகியதவத்தில் அமர்ந்தனர். ஆகையால் துரியோதனா! பெரியோர்கள் பேச்சைக்கேளாத பேதையர்கள் பேய்போல்விழித்து நாய்போற்பாடுபட்ட அனுபோகத்தையும் சொன்னோம், இதனால் 'மூத்தோர்சொல்வார்த்தையமிர்தம்' எனப் பெரியோருங் கூறியிருக்கின்றனர். இவைகளையாகிலுந் தெளிந்துயோசித்துச் சுகப்படலாமே மேலும்.

சந்திரவம்சதிலகனாகிய உங்கள் பிதாமகன் யயாதி இவர்களைநோக்கி எங்குவந்
தீர்களென்றுகேட்ட தோஷம் இல்லையென்று சொல்லமாட்டாமல் தன்பெண்
ணையுங்கொடுத்தானே. அப்பெண்ணினால் குதிரைகளுங்கிடைத்து குமாரர்களு
முண்டாய்க் குருதக்ஷணையுங்கைகூடியதே, காலவனென்னும் மகாமுனியையும்
உங்கள் பாட்டனையும் ஜகமெல்லாங்கொண்டாடினார்களே, இன்னமும் புகழ்
கின்றார்களே, பெரியோரைப பூசிக்கும் யயாதிமகாராஜனுக்குப் பேரனாகிய நீ
இத்தனைப்பெரியோர் சொல்லியும் நாடுகொடுப்பதில்லையென்றால் உனக்குப்
பேரும்புகழும் பெருமையும் எப்படிவரும், பலவந்தருடன்பகைத்தால் பவுஷ்ய
மும்போம், ஜபமும்வாராது, பெரியோர் வார்த்தையைப் பூசித்துக் கேட்டை
யாகில் சுகப்படுவாய் சுகப்படுவாயென்று சொல்லினர். இப்படி சொல்லிவந்த
ரிஷிகள் மூவரையும் துரியோதனன்நோக்கி கண்பொறிபறக்கக் கடுகடுத்து
வெகுளிமேற்கொண்டு பெரியவர்களே இந்தக்கிருஷ்ணன்கட்டிக்கொண்டுவந்த
கட்டுகளெல்லாம் என்சமுகத்தில் சப்பைக்கட்டாகமுடிந்தனவேயல்லது வேற
ன்று; அப்படியிருக்க நேர்ந்த ஊழ்வினையைத்தன்னறிவுகொண்டு தள்ளிக்கொ
ண்டவர்களுமுண்டோ, நீங்கள்கண்டிருக்கின்றீர்களோ, அப்படி யுண்டானால்
ஒருவரைக்காட்டுங்கள், இப்போது இருக்கிறபுத்தியைவிட வேறுபுத்தி யேறப்
போவதுமில்லை, இதுமாறப்போவதுமில்லை, வீணாக இந்தக்கண்ணன்பேச்சைக்
கேட்டுவந்தீர்கள், பெருமைகெட்டீர்கள், ஆனால் எங்களுக்குப்புத்தியில்லை.
புத்திமான்களே புத்திசொல்லுமென உங்கள்மூவரையும் வாருங்களென்று நாங்
கள்வரிசைசெய்துவரவழைக்கவில்லையே, போங்களென்று சொல்லவுமில்லையே
'அன்றெழுதிய அயன் அழித்தெழுதப்போவதில்லை' யென்று பெண்டுகளும்
சொல்லும் பழமொழியை நீங்கள் அறியாமல் வழுவி அறியாதவர்களானீர்
களே. ஐயையோ ஏன் இவ்வளவுபிரயாசை யெடுத்துக்கொண்டீர்கள், வீண்
வீண். 'வெள்ளைவாய்க்கு வெற்றிலையுமில்லையே' சுவாமிகளே எங்களையே
ஏமாற்றி நாட்டைப்பறிகொடுத்துக்காட்டிலுழன்ற பாண்டவருக்குக்கொடுக்க
ஸ்ரீகண்ணபிரான் வந்திருக்கின்றான், உலகத்தை ஆளுவதற்குப் பாண்டவர்
கள் இருக்கின்றார்கள், உயிருடன் கொடுப்பதற்கு நானிருக்கிறேன், உங்களுக்
கென்னவந்தது; "எள்ளுதான் எண்ணெய்க்குலர்கின்றது எலிப்புழுக்கை ஏன்
உலருகின்றது' என்னும் பழமொழிபோல் தாங்கள்நித்தியகருமம் சத்திய சவு
சம்ஆசாரம்பூசைசெபம் தபம் இவைகளைவிட்டு இவனுடன் ஏன் இப்படித்திரி
ந்துவருந்திக்காலத்தை வீணிற்கழிக்கின்றீர்கள், வேண்டாம் நீங்கள் தவஞ்செய்
யும் இடத்திற்கு இப்பொழுதே தயவுசெய்து எழுந்தருளுங்கள், நீங்கள் இருக்
கும் இடத்திற்குவேறு ஆள்சம்பாதிக்கிறேனென்று தூறிச்சொன்னான், இதைக்
கேட்ட மூன்றுரிஷிகளுந்திடுக்கென்று சிங்காசனத்தைவிட்டெழுந்து மிகுந்த
கோபங்கொண்டு முகஞ்சுளித்துக்கண்கள்சிவக்கப்பார்க்குஞ்சமயத்தில் வீஷ்மா
சாரியர் திடுக்கென்றெழுந்து தீர்க்கதண்டஞ்சமர்ப்பித்து இவனோ சிறுபிள்ளை,
தங்களுடைய சுரூபசுபாவங்கள் இப்படிப்பட்டனவென்று இருவரையிலும் அறி
யாதவன், ஏதோ எங்கள்தலையிலெழுத்து நாங்களனுபவிக்கின்றோம், தங்களுக்
கென்ன வந்தது, இவ்வளவுதூரம் புத்திமதிசொல்லியும் வசத்திற்குவராத இவ

ஞல் இந்தக்குடும்பமெல்லாம் குன்றிப் போகக்காலம் வந்திருக்கின்றது, அப்படியிருக்கத்தாங்கள் கோபங்கொண்டதை விடுத்து சாந்தமூர்த்திகளாய் இதையொரு விஷயமாய்ச்சித்தத்தில்வையாமல் எங்கள் நிமித்தத்தில் க்ஷமிக்கவேண்டுமென்று நயமதுரவசன உபசாரங்களால் சொல்லிப்பணிய 'சான்றோர் சினமூ' ஆகையால் உடனே மாறிப்போய் ஆசனத்தில் அமர்ந்தார்கள், அப்போது ஸ்ரீகண்ணபிரான் மறுபடியும் வணங்காமுடிபெற்ற மன்னனைநோக்கி துரியோதன மகாராசனே! பூமியிலே நற்குணங்களும் நற்செய்கைகளும் நன்னடக்கைகளும் சத்தியவசனமும் தர்மசிந்தையும் தன்னுயிரைப்போல் மன்னுயிர்காக்கும் ராஜனும், துர்க்குணமும் அதர்மமும் அசத்தியமுமுடையஅரசனும் ஒருவருக்கொருவர்சண்டைகள் நேரிட்டுப்போர்க்களத்திலவந்து யுத்தஞ்செய்வார்களாகில் தர்மகுணமும் சத்தியவசனமுமுடைய அரசனுக்கு மஹாவிஷ்ணுவின்சகாயமும்வீரலக்ஷ்மிகடாக்ஷமும் உண்டாய் ஜயத்தைப்பெற்று தரணியை ஆள்வான், மாளுங்காலத்தில் வீரசொர்க்கமும்பெறுவான், அதர்மகுணமும் அசத்தியவசனமுமுடைய அரசன் அரிவாசுதேவனுடைய அருளில்லாமல் வீர்லக்ஷ்மியின் விஜயமுங் கெட்டு அவமானப்பட்டு அபஜயமுற்று அரசாட்சியை யிழந்துமாள்வான். மீளாநரகத்திலுறுவானென்று முன்னோர்மொழிந்த நீதி சாஸ்திரம் தர்மசாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றன. நீயும் அறிந்திருக்கின்றாய். ஆகையினால் எத்தனைவிதபலமும் கலமும் உனக்கிருந்தாலும் பாண்டவர்களுக்கு நீ சமமாகப்போகிறதே இல்லை. உன்னைச்சார்ந்த நால்வகைச்சேனைகளும் இராக்கதரும் படைத்துணையாக வந்திருக்கும் பார்த்திபர்களும் போர்க்களத்தில் மாளச்செய்து பூமியைப் பெறுவோமென்னும் பூரிப்பு பாண்டவர்களிடத்திலில்லை ஒருவேளை சபையிற் சபதங்கூறியிருக்கின்றார்களென்று நினைப்பாராகில் உடனே சமாதானப்படுத்துவதற்கு நாங்களெல்லாருமிருக்கின்றோம், சூதாடிப்பறித்துக்கொண்ட நாட்டை ருக்ஷத்திற் கொடுத்து விடுவதேயன்றி அதிகங்கொடுக்கவேண்டுவதில்லை, அப்படியல்லவென்றால் பெரியோர்கள் சொல்லும் தருமநீதியின்படி கொடுப்பது உத்தமம், அதுவுங்கூடாதென்றால் உம்முடைய இஷ்டத்திற்குத்தோன்றிய தெவ்வளவோ அவ்வளவு கொடுத்தாலும் அதுவும் நமக்குச்சம்மதமே! நான் தூதுவந்து வீணாகவிளைந்த தென்றும் பிரயோசனமில்லையென்றும் எனக்கொரு பேச்சுவராமலும் பெரியோர்கள்சொல்லியபேச்சைத்தள்ளினான் துரியோதனனென்று உனக்கொரு ஏச்சுவராமலும் உன் மனத்துக்கிசைந்ததைத் தயைசெய்யென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் இருகரத்தையும் நீட்டி இப்போதைப்போல் கேட்க, அதற்கிசையாத துரியோதனன் சொல்லுகின்றான். கேட்டீர்களோ சபையிலிருப்பவர்களே! இவ்வுலகவழக்கம் எவர்களுக்கு எவர்களிடத்தில் இஷ்டம் பிறக்கிறதோ அவர்களைச் சாமர்த்தியரென்று தனக்குத்தானே புகழ்ந்து மகிழ்ந்துகொள்வதுண்டு, அது இப்போது தெரியவந்தது, தர்மமுள்ளவன் ஜயம்பெறுவானென்றும் அதர்மமுள்ளவன் அபஜயப்படுவானென்றும் அன்பினாற்சொல்பவர்களுடைய வாக்கியம் போர்முகத்தில் பார்க்கவேண்டும், புண்ணியர்களே போகட்டும், தர்மகுணமுள்ளபாண்டவர் ஜயித்தால் அவர்

களே அரசாளட்டும், அதர்மகுணமுள்ள நான் ஜயித்தால் நானே ஆளுகிறேன், இதைவிட் மறுமொழி வேறொன்றுமில்லையென்று இறைவன்சொல்ல, அதைக் கேட்டு தம்பிவீணுகச்சண்டைசெய்து விறுதாவிற்சாவானேனென்று மஹா பலியினிடத்தில் மூன்றுலகத்தையும் தாரைவாங்கும்போது ஒருகரத்தை நீட்டிய ஸ்ரீகிருஷ்ணபகவான் பாண்டவர்களுக்காக பஞ்சைப்பூமியைப் பெறு வதற்கு இரண்டு கரத்தையும்நீட்டி இரந்துபெரியமனசுசெய்து நாஸ்தியென்று உரையாமல் ஜாஸ்தியாய்க்கொடாமல் முன்பாத்தியமாகிய நாட்டைமாத்திரம் பாலித்தருளுமென்ன, அதைத் துரியோதனன்கேட்டு கொடுக்கமாட்டேனெ ன்ன, ஐந்தூராகிலும் தயவுசெய்யுமென்று எழுந்து இருகரத்தினுலும் இரக்க, அதைத் துரியோதனன்கண்டு அம்மணமானவனுக்கு அரைச்சீரை அகப்பட்டாற் போதாதா! ஐயா நிலைகெட்டுக்காடேகதியாய்த்திரிந்த ஐவர்களுக்கு இவ்விடத் திலொரு வீடுகொடுத்தாலும் போதுமே, கண்டோங்கண்டோமென்று கண் களிலொத்திக் கொள்ளுவார்களே, அவர்களும் வேண்டாமென்று சொல்லப் போகிறதில்லையே, வேண்டுமென்ற உன் எண்ணத்தின்படி நான் கொடுக்கப் போவதுமில்லையே; நீரோன் கையைநீட்டிக்கொண்டு காத்திருக்கிறீர், அதற் கென்ன? காரியவாதி கையையு நீட்டுவான் காலிலும்வீழ்வான் போம்போ மென்று கடிந்துரையாடினுன்.

அதை ஸ்ரீகிருஷ்ணபகவான்கேட்டு நகைத்து குழந்தாய் உன்வமிசத்தில் தந்தையாகிய சந்தனுமஹாராஜனுக்குப் பரிமளகெந்தியை மனேவியாக்கி அவ ளுடைய பிள்ளைகளிருவருக்கும் இராச்சியத்தைக்கொடுத்து தான்வீஷ்மம் பெற்றுக்கொண்ட மேலோனுகிய உன்பாட்டன் வீஷ்டுமாசாரியர் இதோ உயிருடனிருக்கிறார், இப்படிப்பட்டதர்மகுணமுள்ள குலத்திலுதித்த சிரேஷ்ட னேசகலசொந்தமுள்ள சிறியதந்தையாகிய பாண்டுவின் பிள்ளைகளுக்குப் பாதி ராச்சியமும் கொடுப்பதில்லை யென்றும் ஐந்தூருங் கொடுப்பதில்லையென்றும் ஓரே உறுதியாகப்பேசினுல் உனக்கிந்தநாடும்அரசுநடக்கமாட்டாதே,ஒருகுலத் திற்பிறந்த பிள்ளைகளிரண்டுபேர் ஒத்துவாழ்வதே உத்தமம், ஒவ்வாமல்பேதப் படுத்திக்கொண்டு அனுபவிப்பது மத்திமம், ஒருவர்பங்கைதான் பறித்துக் கொண்டு துன்மார்க்கவழியில் வார்த்தைநழுவிப் பேசுவது அதர்மம், ஒரு பங்காளி சவுக்கியமடைய ஒருபங்காளி துன்பப்படுவது அதர்மாதர்மம், இப் படிப்பட்ட அதிசயங்களை யெல்லாங் கண்ணினுற் காணும்படி இறைவன் ஏற் படுத்தி யிருக்கின்றுனம்மையென்று விசனப்பட்டு இதுதருமத்திற் கொவ்வாத காரியமென்று, ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்லிச் சலித்துக்கொள்ள, அதற்குத் துரியோதனன் சொல்லுகின்றுன்.

ஓ! கிருஷ்ணபகவான்? எத்தனைச்சொன்னுலும் அரசனுடைய மெலுக்கு வை அறிந்துகொள்ளுவதற்கு உமக்கு அறிவுபோதாது,நீரென்னசெய்வீர்பாவம், மாட்டுடன்பழகிய புத்திமான் மனிதருடன் பழகுவதுவருத்தம், இன்னும்பழ கிக்கொண்டு வாரும்போமென்று துரியோதனன் சொல்ல; இந்தவார்த்தை யைக்கேட்ட வீஷ்மெர், துரோணர், கிருபர், திரிதராட்டிரர் முதலாகியபெரி யோர்க ளெல்லாரும் கடகடவென்று நடுங்கச்சொல்லுகின்றுர்கள்.

ஓ! துரியோதனு? திருவுந்தியையுடைய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே ஸ்ரீகிருஷ்ணபகவானுய்வந்து நமக்குத்தரிசனந்தந்து இருகரத்தாலிரந்து நாடு கேட்க; நீ கூடாதென்று கூறுவது ஞாயமன்று, முன்பின்யோசித்து விளையப் போகிற வினையையும் ஓராமல் எம்போலியர் சொல்லிய வார்த்தையுங்கேளா மல் ஒரேபிடிவாதமாய் என்னண்டையிலிருக்கும் வீரர்களைக்கொண்டு சண் டைபண்ணிப்பாண்டவரை அண்டவொட்டாமல்வென்று நாடாள்வேனென்று சொன்னத்தையே சொல்லுகின்றாய், அப்பா! உன்னிஷ்டப்படி நடவென்று எல்லோருமிகுந்தவிசாரங்களுடன் ஓவென்றுகூவியிரைந்தார்கள். இவைகளை யெல்லாம் அண்டையிலிருந்தும் பார்த்துக்கொண்டிருந்த துச்சாதனனானவன் துரியோதனனை வணங்கி அண்ணு! இந்தக்கிருஷ்ணன் இவ்விடம்வந்திருக்குந் தந்திரமும் வீணுய்நகைத்துத் திகைத்திருக்கும் நமது பெரியோர்கள் அவனைக் கண்டு மயங்கி யெண்ணிக்கொண்டிருக்கிற மந்திரமும் பார்த்தால் துராகர்த மாய் உமதுகையைப்பிடித்து கிருஷ்ணன் கைமேல்வைத்து நாடுகொடுத்தான் நாடுகொடுத்தானென்றுகூவிகையறைந்துபாண்டவர்களையும் அழைத்துஉமது காலில்வீழச்செய்துஎல்லோரும் ஒரேமுகமாயிருந்துஐவராகியஇவர்களைக்காப் பாற்றுமென்று சொல்லுவதற்காக எண்ணங்கொண்டிருக்கிறார்களென்று நான் நினைக்கின்றேன், அப்பால் 'இத்தனைப்பெரியவன்கைப்பிடித்திழுத்தால் எப்படி மாட்டேனென்பேன்' என்பதுபோல்முடியும்ஆகையால். இந்தவம்பாகிய சபை யைவிட்டெழுந்து அரண்மனைக்குப்போவது மார்க்கமென் றெண்ணுகிறேன், அண்ணா! தேவரீர் சித்தம் என்பாக்கியமென்று விரைந்து சொல்லவே, தக்ஷணத்தில் துரியோதனன் கர்ணன் சகுனி துச்சாதனன் மற்றுமுள்ள அர சர்களெல்லாரும் சிங்காசனத்தைவிட்டிறங்கி சபையைவிட்டு நீங்கி அவரவர் கள்விடுதிக்குப்போனார்கள். இப்பால்கன்றாற்கனியுதிர்த்த காயாம்பூவண்ணன் திரிதராட்டிரனை நோக்கிச் சொல்லுகின்றார். ஜெகபதியாகிய தீரனேகேளும் இந்தத்துரியோதனனால் உலகமழிந்துதானுமழிந்து போவதல்லாமலும் பந்து புத்திரமித்திரர்களையும் குடும்பத்தையுந்தொடைக்குந் தொடைக்காலனைச் சிரேஷ்டபுத்திரனென்று பக்ஷம்விடாமல் எண்ணியிருப்பதுபாவம், பூர்வத்தில் கம்சனென்னப்பட்ட எங்கள் நல்லம்மான், எவர்கள் சொன்னாலுங்கேளாமல் தன்னறிவுகொண்டும்நடவாமல்தங்கள்தாய்தகப்பன்மாரை ஒடுக்கிஎங்கள் தாய் தகப்பன்மாரையும்விலங்கிட்டுச்சிறையில்வைத்துவெகுவாகியஅக்கிரமங்களைச் செய்துகொண்டுவந்தான். அதை அவனுடைய தகப்பன்சம்மதிக்கமாட்டாமல் என்னையழைத்துமனோபீஷ்டத்தைஉண்மையாகச்சொன்னான், அதற்குவேண் டிய யுத்திகளைச்செய்து முடித்துவிட்டு குலத்தைப் பெருமைப்படுத்தி நலத் தைவிளைவித்தோம்; இந்தக்காரியம் உலகமெல்லாந்தெரியும். அப்படிபோற் சொல்லுக்கடங்காத பிள்ளையைத் தக்கபடிசெய்துபோட்டு பாசகர்மங்களைப் பரிகரிக்கவேண்டியதே, மேலும் தனதுசரீரத்தில் ஒருகட்டியாகியுருண்டெழு ந்தபோது அதைத் திரணமாயெண்ணி அறுத்தெறிந்தால் அது ஒருநாளுபத் திரவங்கொடுக்கும். பலநாளுஞ் சந்தோஷத்தைக்கொடுக்கும். அப்படிச்செய் யாவிட்டால் பலநாளுந் துன்பப்படுத்தும், அதுபோல் நூறுபிள்ளைகளில்

னொருவன் குறைந்தால் உமக்குப்பெரிதல்ல, நீர்மோக்ஷவீடு பெறுவதற்குங் குறைவில்லை. 'பலதீட்டுக் கொருமுழுக்கென்பது போலும்' 'பலநாள்துக்கம் ஒருநாளையில்விலக்கென்பது' போலும்செய்துவிடுவதே உறுதியென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லி ஐயோ? குலத்தினலமும் குணமுங்கெட்டதேயென்று விசனப்படுவதைப் பிறவியந்தகன்கேட்டு மிகுந்த துக்கமும் பொம்மலும் விம்மலும் பொருமலும் பெருமூச்சுமுடையவனாய் துரியோதனனை அழைத்துவாவென்று ஒருதூதனையனுப்ப; அப்படியே தூதுவன்போய்ச்சொல்லக்கேட்டு அதிசீக்கிரத்தில் அரசர்கூடியிருக்குஞ் சபைக்கு அரவக்கொடியோன் வந்து சிங்காசனத்திலமர்ந்தான். உடனே திரிதராட்டிரன் தெரிந்துகொண்டு துரியோதனனை நோக்கிச் சொல்லுகின்றான்.

அப்பா; துரியோதனா? பெரியோரெல்லாரும் பேசிக்கொண்டிருக்கையில் நீ பேசாமலெழுந்துபோய் விட்டாயே இதுவோ பெரியதனம். காரியமில்லாத கடையனுஞ் செய்யமாட்டானே, என் கண்ணே? வந்தவருக்குப் பூரணமாகிய உத்தரஞ்சொல்லி எல்லோருக்குஞ் சம்மதியாகும்படி நடத்திப்போவது நாயகன்செய்யும் நலமாம், அதனால் நமது குலமும், வாழ்நாளுந் தழைக்கும்; ஆகையால் இன்னம் உனக்கு நன்மையாகியபுத்தி யென்றைக்குவருமோ வென்று கண்ணீர் விடுத்த தந்தையை நோக்கி துரியோதனன் சொல்லுகின்றான்; தூதுவந்தவர்கள் சங்கதி தெரிந்துகொண்டு தகுதியாகிய உத்தரஞ்சொன்னால் அதைக்கேளாமல் தடுத்துத் தடுத்துப்பேசினால் அதனாலெனக்குக் கோபம் வந்து எழுந்துபோய்விட்டேன், இனிமேலும்நான்சொல்லவேண்டிய வார்த்தை ஒன்று மில்லையென்றான். அப்போது துரியோதனமன்னனை நோக்கிப்பின்னைப் பிராட்டியின் நாயகனாகிய மணிவண்ணன் வணங்காமுடியனைவணங்கி அண்ணலே பெரியமனசு பண்ணும் சகலஜனங்களும், ஒருவனாற் சுகப்படுவது அருமை, ஒருவனால் வெகுஜனங்கள் கெட்டுப்போவது அருமையன்று. ஆகையால் நிதானித்து யோசித்து கவனித்து வருங்காரியம் போங்காரியம் தெரிந்துசொல்லுமென்று மாயவன்சொல்ல, மகுடாதிபதியாகிய துரியோதனன் கேட்டு; மிகுந்த கோபங்கொண்டு கண்கள் சிவந்து கனன்று இந்தக்கர்மபூமியை நான் கொடுக்கவும்; பாண்டவர் பெறவும் நீர் நடுவே தூதுபேசவும் பெரியவர்களெல்லாரும் எனக்குப்புத்திசொல்லவும்இத்தனை விபரீதமென்னத்திற்கு? ஒரேவார்த்தை உரைக்கின்றேன், சுத்தவீரனானவன் யுத்தம்பண்ணி வெற்றிபெற்று இராச்சியமுற்றாலும்; கட்டிக்கொள்ளுவதேகாரியம்ஒருவன்கொடுக்க; ஒருவன்பெறுவது அகாரியம், ஆகையால் நீர்பாண்டவரிடத்திற்போய் இந்தச்செய்தியை நான் சொன்னதாகச்சொல்லும், அவர்கள்வெகு சந்தோஷிப்படுவார்கள். வீரமென்பதும் ஜெயமென்பதும்புகழென்பதும் உமக்குத்தெரியாது, அவர்கள்சந்தோஷப்படும்போது நீருங்கூடச்சந்தோஷப்படும். ஓகிருஷ்ணா? இப்போது எழுந்துபோமென்று துரியோதனன்சொல்ல, அந்தமொழியைக்கேட்ட ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்லுகின்றார். துரியோதனா? நீசொன்ன காரியமெல்லாம் சரிதான்; ஆதியில் இந்தச்சபையில் நீசொல்லியிருந்த வார்த்தையை மறந்துபதின்மூன்று வருடகாலங் கழித்துவந்த பாண்டவர்களுக்கு மனப்பூர்வமாக இராச்சியங்கொ

டுக்கமனமில்லாமல் எப்படி சொற்சோர்வுபட்டையோ அப்போதேஉன் பேச்சு அசைவுகொண்டிருக்கின்றது; ஆதலால்; அரசேயுத்தமே சரியென்று சொல்லு, கின்றவார்த்தையின் வண்ணம் நீகிலேயாகநிற்பையென்று நானெப்படிநம்புவது, அதற்காகிலும் சகலமானபேரும் அறியும்படியாய்க் குருக்ஷேத்திரத்தில்படை கூட்டிக்கொண்டு வந்துபாண்டவர்களுடன் யுத்தஞ்செய்வது நிச்சயமென்று கைபோட்டுக் கொடுமென்று தமதுகரத்தை நீட்டினார். அப்படிகருணைக்கட லாகியகண்ணன் அந்தவார்த்தைசொல்ல துரியோதனன் கேட்டு செவ்வரக்கி லும் செம்புருக்கியதிலும் செம்முருக்கைமலரிலும் செம்பவளத்திலும்மேலா கச்சிவந்து பொறிபறக்கும் கண்களையுடையானாய்ச் சிங்காசனத்திலோங்கி அறைந்து யாவரும் திடுக்கிடக் கூவியிரைந்து படபடப்புடன் விரைந்து மனங் குலைந்துதூஷணவார்த்தைகள் சொல்லத்தொடங்கினான்.

தூதுவந்தமனிதனே? சுயகுலத்தைவிட்டு இடையருக்குப் பிள்ளை புகுந்து தாழ்ந்ததொழிலாகிய மாடுகள் கன்றுகளை மேய்த்து கோபால ஸ்திரீ களையேய்த்து அவர்கள் வீடுகளில்கட்டிய உறிகள்தோறும் வெண்ணெயுந்தயி ரும்வேண்டியமட்டுந்திருடியுண்டு அந்தஇடைச்சிகள்கண்டுபிடித்து கயிற்றினாற் கட்டிஉரலுடன்சேர்த்தால் ஊர்ந்து உளுக்கார்ந்தழுது மானமீனமில்லாமல்மதி கெட்ட நீ எல்லாக் குலங்களிலுமுயர்ந்த மதிமரபினனாகிய என்னை உன்னைப் போல நினைத்துக் கைபோடச் சொல்லிக்கேட்டாய், உன்தயிரியமே தயிரியம், ஆ ஆ! மாடுமேய்க்கும் கோல்கொண்ட கையின்மீது செங்கோல்தாங்கிய மலர்போன்ற என்கையோ அடிப்பது; திருட்டிற்பழகிய உன்கையில் திருட்டு நீக்கித்தண்டிக்கும் செங்கோலையுடைய என்கையோ அறைவது; முல்லைக்காட் டில் பல்லைக்காட்டி புல்லைப்பிடுங்கும் உன்கையின்மீது ஐவரைக்காட்டிற் செ ல்லவோட்டிச் சொல்லை நாட்டுமென்கையோ போடுவது. ஓ கோ! உமது குல மும் உமது நலமும் யோக்கியமுதலிய சிலாக்கியமெல்லாந் தெரிந்துகொண் டேன், அந்தமட்டும் நீர்மெத்த புத்திசாலி, நல்லகாரியஞ்செய்தீர், சீக்கிரம்நட வும்; பாண்டவர்களைக் குருக்ஷேத்திரம் வந்துசேரச்சொல்லும், நீருங்கூடவிரு ந்து சகலபலமுஞ்செய்யும், நான் பேச்சுத்தப்பிப் போவேனென்றல்லவோ கை யடிக்கச்சொன்னீர். நீர்மாத்திரம்சொல்தப்பாமல்வந்து சேரும்; சுயோதனனாகிய பொன்னுஞ் சிங்கங்கள் கர்ச்சித்துக்கொண்டிருக்கின்றனவென்று ஐவரொன்றும் யானைகளை அழைத்தோடிவாரும், அபலமதியினையுடையவரோ? நீர் சாம்பிர தாய அரசனுமல்ல, உமக்குப் பட்டாபிஷேகப் பெருமையுமில்லை, ஆகையால், இராஜமுறைமைமுதலிய மேலுக்குவை உமக்குத் தெரியாமற்பேசினீர், நல்ல ஞாயம். கிருஷ்ணா? வெகுபேர் கூடியசபையில் யாவரும் நகைக்கத் துரோ பதையைத் துகிலுரிக்கப்போது பார்த்திருந்த மானமில்லாத வீரர்களுக்குஎன்ன சூரத்தனம் யேற்படுத்தினீர், எவ்விதச் சேவகராக்கிவிட்டீர், திருடர் சேவக ராகுவதுசுபாவம்சேவகர்திருடராவதுஞாயமல்லவே, சொற்சோர்வுபடாதவரோ என்னமதியைக்கொண்டு விவகாரம்பேசவந்தீர். ஓ மாயவரோ? குந்திதேவியான வள் ஐந்து புருஷரைச்சேர்ந்து இந்த ஐந்து பிள்ளைகளையும்பெற்றாள், இவ்வை ந்துபிள்ளைகளும் தாய்நடந்த முறைமைதப்பாமல் பாஞ்சாலியாகிய ஒருத்தி

யைப்பெண்டாகவைத்துக்கொண்டு பிழைக்கமாட்டாமல்உழலுகின்றனர். அப்பாபிகளே எனக்கு அண்ணன் தம்பிகளென்றும், சிறியதகப்பன் புத்திரனென்றும் பங்குக்குரிய பங்காளிகளென்றும், அவர்களுக்குப் பாதிராச்சியங்கொடுத்து அவர்களுடன் கலந்துவாழச்சொல்லியும் புத்திசாலிகளும் புத்திகெட்டுப் போய்ச் சொல்லுவார்களாகில் இதுஎவர்க்குமேலாகிய ஆச்சரியமாயிருக்கிறது, விந்தையாயுமிருக்கிறது என்றுசொல்ல! அந்தக்கர்ண கடோமானமொழியைக் கேட்டுப் புன்சிரிப்புகொண்டு புயங்ககேதனு, உமக்கெப்படி சம்மதமோ அப்படியே செய்யுமென்று இராஜசபையைவிட்டுப் போட்டுத்திடுக்கென்றெழுந்து தத்துவஞானியாகிய விதூரன் வீட்டிற்கெழுந்தருளினர்; ஸ்ரீகிருஷ்ணபகவான் போனஉடனேசபையிலிருந்தபெரியோர்களெல்லாரும் முகம்வெதும்பி மனங்கனன்று ஐயோ இதென்னவிபரீதகாலம்,போகட்டும், இவனறியாதவனுகையால் கோபித்துக்கொண்டான்;தெரிந்த பெரியோர்களுங் கோபிப்பார்களா? எதுவந்தாலுஞ்சந்தோஷமா யெண்ணவேண்டியதே யன்றிவெகுளிமேற்கொள்ளக்கூடாதேயென்றுயாவரும்விசனப்படஅந்தக்காலத்தில்துரியோதனமஹாராஜனுக்குக்கோபம்வந்துஅணிந்திருந்த நந்தியாவட்டமாலைகளெல்லாங் கறுகறுத்துலர்ந்துகருகவும்தேகமுழுமையும் வியர்வைபெருகவும், செம்பையுருக்கிய தன்மைபோலும் செவ்வரக்குருகிய குடம்போலும்கண்கள்சிவந்து நெருப்புப்பொறிசிதறவும்பக்கத்திலிருப்பவர்கள் பதறவும்வாய்மடித்துப்பற்கடித்துப்மீசைதுடிக்கப்பெருமூச்சுவிட்டு சபையிலிருக்கும் வெகுபேர்களையும்நோக்கிகேட்டீர்களா, இவனுடைய அயோக்கிதை அறிந்துதான் நான்,எழுந்துபோய்விட்டேன், நீங்களெல்லாரும் என்னை மறுபடியும் வரவழைத்தது இந்த அவமரியாதைப் பெறுவதற்கென்று தோன்றுகிறது; ஆகிலும்பெரிதல்ல; கோடாலிக்காம்பு குலத்துக்கீனமென்னுமாறுபோல் ஒருவனுக்குத் தூதாகவந்தவனை வழிமடக்கி விருந்து செய்விக்கவும் உறவாடவும் இவனுக்கென்ன காரியம்; இவனாரவன்? இவனெப்படிச் செய்வானென்று சிறியதந்தையாகிய விதுரனைப்பார்த்துச் சொல்லுகின்றான்.

நன்றியற்ற விதுரனே! தன்னுண்மையினாலேயும்; சவுந்தரியத்தினாலேயும் வசனசாதுரியத்தினாலேயும் மயக்கி என்செல்வத்தைப் பிடுங்கிப் பாண்டவர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று வந்த வேஷதாரி என்வீட்டில் சாப்பிடாமல் உன்வீட்டிற்குவந்தால் அவ்விடத்தில் சாப்பிடாமல் இவ்விடத்திற்கேன்வந்தீர்;அதுமுறைமையல்லவேஎன்றுதிருப்பிவிடாமல்அவனுக்கும்அவன் சேனைகளுக்கும் திவ்விய போஜனஞ்செய்துவைத்தகாரியமென்ன? என்றந்தையுடன்கூடப்பிறந்தோனென்றிருந்தும் இவனுக்கும் இவனைச்சார்ந்தவர்களுக்கும்அன்னவஸ்திர பூஷணாலங்கிர்த வாகனமெல்லாம்இவ்விடத்தில்நடந்துகொண்டுவர என்னிடத்திற் பக்ஷம்வைத்து என்பகையாளி ,தன்பகையாளியென்றெண்ணமல் 'மாமிமேற்கையும்வேலியோரத்திற்கண்ணும்' என்னும்பழமொழிபோல் என்னிடத்தில் சுகமனுபவித்துப் பாண்டவர்களிடத்தில் புலனைக்கொடுக்கும் பக்ஷமுடையவராய் முடத்தெங்கைப் போலிருக்கின்ற நன்றி குன்றிய இந்தப்பாவியை யோசிக்குமிடத்தில் ஒருதாசியானவள் பத்துப்பணங்கொடுத்து

வருந் தலைவனிடத்தி லிருக்கும்போது இன்னொரு நாயகன்வந்து பதினைந்து
மணம் தருகிறேனென்று [illegible] பழையவனைவிடுத்துப் புதியவனைக் கூடிவாழ்வது
மாகிய நாரிகளின் குல[illegible]ருமம் போல அந்தன்மையாகிய நமது அரண
மனைத்தாசியின்வயிற்றிற்பிறந்த இந்தவிதுரனுக்கு 'குலத்தளவே யாகுங் குண
மென்பதுபோல்' சொந்தக்குணம்வருமல்லாமல்வேறுகுணம்வருமா; நாம்வெறு
த்துப்பேசுவதில் தன்னவனபிறனவனென்னுந் தாக்ஷண்யமும்வருமா?மானமீன
மில்லாத பேர்க்கு வம்சமென்ன சதமா இனிக்காரியமில்லையென்று துரியோ
தனன்சொல்ல,சபையிலிருந்தயாவர்களும்வாயைவாயைமெல்லகொல்லத்தக்க
கோபங்கொண்டு வில்லையுடைய விதுரனெழுந்து குபீரென வியர்த்து வழிய
விழுந்து கண்களெரிந்து ஜொலிக்க அக்கினிக்கொழுந்து கபகபவென்றெரிந்து
பறக்கத் தன்னைமறந்து விதுரமஹாராஜன் வாய்திறந்து அடா துரியா? இந்த
ராஜசபையிலே விசுவாச நேசர்களுக்கெதிரிலே இடக்கர் மொழியாக இகழ்ந்து
பேசிய இடும்பா! இதோ உன் நாக்கையும், அந்நாக்கைவெளிப்படுத்திய வுன்
வாக்கையுமிழுத்து என்கைவாளால் போக்குகிறேன், உதிரம்புரளும்படியாக்கு
கிறேன், உன்தலையையுமுருட்டுகிறேன், துன்மார்க்கப்பயலே!இன்ன முயிருட
னிருக்கின்றையோ, ஓ! கோ வென்று எதிர்நோக்கி எழுந்து உருக்கிவருகை
யில் உடனேசாந்தத்திலுற் றயைபிறந்து அந்தோ அடபாவி!இந்த வசனத்தைச்
சிந்தைவருந்த எப்படி சொன்னயடா, துரோகி இந்நேரங் காக்கைகழுகு
களுக் கிரையாக்கிவிடுவேன், அடாகர்மி சிறிய தந்தையாயிருந்தும் தெரியாத
பிள்ளை சொன்னவார்த்தையைப்பொறுக்காமல்துரியோதனனுடைய தலையை
யறுத்தான்,விதுரனென்றுதேவர்கள்பழிப்பார்கள்,மற்றயாவரும்நகைப்பார்கள்,
அதனலென்னுடைய நன்னெறி நன்னடை நன்னலமெல்லாம் கலியுமென்
றெண்ணி மனம்பொறுத்தேனே யல்லது என்னை யிகழ்ந்துபேசிய உன்னை
ஒருபொருட்டாக நினைத்து நின்றவனல்லன்; இதுவரையிலும் உயிருடன் வை
யேன், உன்காலம் நல்லது அடாபயலே! மன்னர்க்குரிய சுற்றங்களைத் தழுவி
வாழ்பவன் வேந்தன் ஆகையால் தூதாக யெவர்வந்தாலும், அவர்களை வர
வழைத்து அந்தராஜ ரகசியமெல்லாந்தெரிந்துகொள்ளவேண்டிய அக்கரைக்கா
ரன்நானுகையால் முறைமையின்படிக்கு நானெதிர்கொண்டுபோய் பிரார்த்தித்
தழைத்துவந்து விருந்துசெய்தேன், உறவாடினேன், அவருடன் கலந்துகொ
ண்டு பாண்டவர்களுடைய எண்ணங்களெல்லாம் அறிந்துகொண்டேன், தூது
வந்தவருடைய மனேபிஷ்டமுந் தெரிந்துகொண்டேன்,இப்போதுதானென்ன?
எப்படியும்என் தமையன்பிள்ளைகளாகிய பாண்டவர்களிடம் போய்ச்சேர்ந்
தால் என்னை சம்ரக்ஷணை செய்யமாட்டார்களா? அல்லது அவர்களுக்குப்
படைத்துணையாய்ப் போவேனாகில் உலகத்து அரசர்களும், நீயும் வேண்டா
மென்று என்னைத் தடுக்கக்கூடுமோ இல்லையே, உன்தடைக்குப்பயப்படத்தக்க
வனு? இவ்வுலகமுழுமையும் பாண்டவர்கள் வசம் ஒப்பிவைக்கச் சக்தியில்லாத
வனு? அடா புத்தியில்லாதவனே! நாம் அப்படிச்செய்யலாகாது; நாமிருந்தும்
தாயாதிகள்கலகப்படக்கூடாது, ஒருவிதசமரசமாய்ப் போகட்டுமென்று எண்
ணினதேயன்றி வேறல்ல, அப்படியிருக்க; இப்படிப்பேசினயல்லவோ? நல்ல

தாகட்டும்; உங்களிருவருக்கும் நாளைநடக்கப்போகிற யுத்தகளத்தில் தாசிப் பிள்ளையாகிய நான் உனக்குதவியாயிருந்து வெற்றிபெற யுத்தம்பண்ணப்போ கிறதில்லையோ? இந்தச் சபையறியச்சொல்லுகிறேன், இதுசத்தியம் சத்தியமெ ன்று சொல்லி சண்டைசெய்யாத என்னண்டையில் இந்தவில்லிருக்கலாகாது, இருந்தாலோ "பெற்ற மனம்பித்து பிள்ளைமனங்கல்" என்னும் பழமொழி போல் சமுசாரிபிள்ளையாகிய உனக்குபகாரஞ் செய்யச்செய்யும், ஆகையால் இதோ மகாபாவிக்குத் துணையாகாமல் நான் வைத்திருந்த வில்லை வெட்டு கிறேன்.பாருங்கள் சபையாரேயென்றுகூவி தன்னுடைய வில்லை உடைவாளி னால் இரண்டுதுண்டாகவெட்டி யெறிந்துபோட்டு ,விதுரன்தனது அரண்மனை நோக்கிச்சென்றான். இப்பால்சபையிறைந்திருந்த அரசர்களெல்லாருஞ்சஞ்சலப் பட்டு தளர்ந்து ஐயோ தேவதைகளிலும் சிறந்தவில்லானது பரமசிவனு டைய பினாகம், விஷ்ணுவினுடைய சாரங்கம் இவ்விரண்டும் நமது ராஜவம்சத் திற் பிரபலித்திராநின்ற அருச்சுனனிடத்தி லொன்றும் விதுரனிடத்திலொன் றும் வந்திருக்கின்றதென்று எண்ணி மகிழ்ந்திருந்தோமே, அவ்விரண்டில் இன் றைத்தினத்திலொன்றொழிந்தது, மற்றொருவில்லைக் கைக்கொண்டிருக்கும் அரு ச்சுனன் தேர்மீதேறிப் போர்புரிய வருவானாகில் அவன் வில்லுக்கெதிர்வில் யாரிடத்தினுமில்லையே? நமக்கு யாதொரு திக்குமில்லையே? இனியெப்படி யென்று அங்ஙனேசிலரேங்கித்தியங்கினார்கள்,அந்தவேளையில்வீஷ்மர்துரியோ தனனைநோக்கிச் சொல்லுகின்றார்.

அப்பா இதென்ன விபரீதகாலம் விளைத்துக்கொண்டாய், தருமசாஸ்திரம் நீதிசாஸ்திரம் இராஜதருமம் இவையெல்லாம் பழுதுபடும்படி சிறியதந்தை சிந்தைவருந்தத் தீங்காகிய மொழிகளைச்சொல்லித் திரிலோகமும் புகழும்படி யாயிருந்த வில்லையும், வெட்டியெறிந்து தன்பிராணனிருக்கிற வரையில் உனக் குச்சகாயஞ் செய்கிறதில்லையென்று பகிருஷஞ்செய்து பகைமேற்கொண்டு போம்படிசெய்துகொண்டாயே! நமக்கிருக்குஞ் சத்துருக்களை நீசாதிக்கப்போ வது தெரிந்தேயிருக்கிறது .நாங்களோவென்றால் என்னபாடுபட்டு யுத்தஞ்செய் தாலும் பள்ளமுள்ள இடத்தில் தண்ணீர்சேருமாறுபோல் பாபரகிதர்களாகிய பாண்டவர்களிடத்தில் ஜயஞ்சேருமன்றிவேறல்ல,ஆகையால்எங்களைத்தள்ளி, மற்றை யாவரைக்கொண்டு ஜெயம்பெற விருக்கின்றாய், என்ன திட தயிரியத் தைக்கண்டு இப்படிதலைகுலுங்கப்பேசினாய், பெரியோர் சிறியோரென்றெண்ணா மற் பேசினையே அந்தப்பாவம் சத்துருக்களுக்கு முன்னே தலைகவிழ்ந்து சகல வளமுடைய பூமியையுமிழந்து போர்முகத்தில் விழுந்துபோங்கால நேரிட்ட தாய்த்தோன்றுகின்றது. 'ஆராலே கெட்டாயென்றால் நோராலே கெட்டே னென்னும் பழமொழிஇங்கு உன்னிடத்திற்கண்டேன்' 'காலஸ்யகுடிலாகதி' என்பதுபோல் வினைவசத்தால் விபரீதம்பிறந்தது, என்று பலவாறாகச்சொ ல்லி வெறுத்துக்கொண்ட பிதாமகனைப்பார்த்துப் பேராகிய துரியோதனன் சொல்லுகின்றான்.

ஐயா! இந்தவிதுரனை யல்லதுவேறுவில்லாளிகள் இவ்விடத்திலில்லையோ 'பஞ்சாங்கம் போனால் அமாவாசியுங் கூடப்போய்விடுமோ' 'வாழ்க்கைப்படும்

பெண்ணுக்குச்சீப்பொடிந்து விட்டால் தாலிகட்டார்களோ'பாட்டனோ இந்த விதுரன்முறித்துவிட்ட வில்லைப்போல் இந்துவில்லுக்கு அப்பனாகிய வில்லையுடையவீரர்கள் என்னிடத்தில் வெகுபேரிருக்கின்றார்கள். அவர்களைச்சொல்லுகிறேன்கேளும்.மிகுந்ததாதாவாகியஎன்சகோதரன்கர்ணமஹாராசன்விருதுபெற்ற விற்பிடித்துவெளிவருவாராகில் பாண்டவரென்னுஞ் சாருகள்பறந்தோட வடித்து என்பக்கத்திலிருந்து விசயங்கள்! பாமும்படிச்செய்வார்.தேவரீரிருக்கின்றீர், துரோணர் கிருபர் அசுவத்தாமா முதலாகிய அநேகங்கோடி அரசர்களிருக்கவே யிருக்கின்றார்கள். உங்கள்தயவினால் இத்தனைசுத்தவீரரெல்லாமிருக்க வழியேபோகின்ற இடையனை யழைத்துவந்து உறவாடி விருந்துசெய்து மேன்மை சம்பாதித்துக்கொண்ட வேசைமகன் வில்லையிறுத்தாலென்ன?என்னைவெறுத்தாலென்ன,அவன்போனாலென்ன? யிருந்தாலென்ன? பாண்டவர்கள் பக்ஷத்திற்சேர்ந்து நம்மேல் சண்டைக்கு வந்தால்தானென்ன; இவைகளுக் கெல்லாம் நான் பயப்படேன் என்று கிளம்பிய துரியோதனனுக்கு அண்டையில் நின்றிருந்த அங்கதேசாதிபதியாகிய கர்ணன் சொல்லுகின்றான்!

கேளும்சபையிலுள்ளவர்களே! அர்ச்சுனன்தலைக்கு லக்ஷ்யம் வைத்திருக்கும் நானிருக்க விதுரன் வில்பெற்றா லென்ன? அற்றாலென்ன அவனால் அர்ச்சுனனை ஜெயிக்கக்கூடுமோ, ஒருக்காலுமில்லை. இதோ யாவருமறியச் சொல்லுகிறேன், இளங்கன்றால் விளாங்கனியெறிந்த ஸ்ரீகிருஷ்ணபகவானேவந்து தேர்விட்டாலும் இந்திரன்முதலாகிய எண்டிசைப்பாலர், சந்திரசூரியர் சகலரும், படைத்துணைவர் ஆயுதம்தொட்டாலும் விஜயனைநானேவெல்லுவேன், என்னிடத்தில்வளர்ந்துவரும்நாகாஸ்திரத்தால் கொல்லுவேன், இவ்விருதிறப்படைகளிலே யெனக்குமிஞ்சிய வீரர்களியாவரு மில்லையென்று துரியோதனனுடைய பாட்டனுக்கெதிரில் கற்பகமு நாணக்கொடுக்குங்கர்ணன்சொல்ல, வீஷ்மர்கேட்டு மிகுந்தகோபங்கொண்டு அடா! கர்ணா? தேவர்களாலுஞ் ஜயிக்கப்படாதகாலகேயநிவாதக வசத்தனை ஒருகொடியில் பனிபோலாக்கிஇந்திரலோகப் பட்டாபிஷேகத்தாற் சூரியனையப்போற் பிரகாசித்துமேன்மையுற்ற கிரீடிக்கு நீயோ யெதிராகிறவன் சந்திரனுக்கு முன் சுக்கிரனீடுபெடுமோ; அப்படிப்போல் ஒளிமழுங்கிப்போவாயல்லது அவன் திருஷ்டிக்கெதிர்ப்பட மாட்டாய். ஆனால் நீ வாய்வண்மைப்போரில் வல்லவனேயன்றி வில்வண்மைப்போரில் வல்லவனோ? உன் காலமெல்லா மிப்படியே கழித்துவிட்டாய். போதும்;போதும், வாயைமூடென்று வீஷ்மர்சொல்லக்கர்ணன் சொல்லுகின்றான்!

ஓவீஷ்மாச்சாரியரே! இதுவரையிலும் இந்த மஹாராஜனுடைய அன்னத்தையும்; சொர்ணத்தையும்; ஆபரணத்தையும்; வஸ்திரத்தையும் அனுபவித்து சமயம் வந்தபோது சத்துருக்களின் தோளாண்மையைப்புகழ்ந்து பேசுகிறவீரம் தங்களைப்போல் நான்கற்கவேயில்லை, நீராகையாலிப்படி வியந்துபேசுகிறீர், நானப்படி வேளைக்கொருபேச்சு; விதம்விதமாய்ப்பேசமாட்டேன் தண்டிற்போனா லிரண்டிலொன்றென்று சாதிப்பேன், என்னைநம்பியபேரை என்பிராணனிருக்குமளவும் எருமையின்வாலைப்பற்றிஆற்றிலிறங்கிப்பிராணனிழப்

பவனைப்போற் கைவிடமாட்டேன், ஈரேழுபதினன்கு லோகவீரரும் என் மேலெதிர்த்தாலும் வெல்லுவேன், மூவரும்வந்தாலும், என்பாணத்திற்கு இடைந்து போகும்படியாய்க் கொல்லுவேன்; உமதுசிறிய கண்ணாலேபார்க்கவே போகிறீர்பாரும் என்று கர்ணன் சொல்ல, அதற்கு காங்கேயா நகைத்து கெட்டிக்காரன்புளுவு எட்டுகோணக்குள் தெரியுமென்பதுபொய்யோ; ஐயோ? நாங்களே பார்க்கப்போகிறோம், அப்பா அங்கதேசாதிபதி! அவசரப்படாதை யென்று அதட்டிக்கூறி இப்போதாகவேண்டியதென்னவென்று நாரதர்முதலிய ரிஷிகள் மூவருக்கும் நமஸ்கரித்து எதாஸ்தானத்திற் கெழுந்தருளுங்களென்று விடைகொடுத் தனுப்பிவிட்டு,தாமுந்தம்முடைய அரண்மனைக்குச் சென்றார். துரியோதனனும் தன்னைச்சார்ந்தசகலருக்குஞ் செலவுகொடுத்துத் தானுஞ் சபையைவிட்டெழுந்து அந்தப்புரத்திற்குப்போக திருத்துழாய்மாலைதரித்த தேவாதிதேவனுகியஸ்ரீகிருஷ்ணபகவானும்சாத்தகியாழ்வானும்சேனசயினியங் களுடன்விதுரன் வீட்டுக்குச்சென்றார்களென்று முன்னமேசொல்லியிருக்கின்றோமே, அவ்விடத்தில்நடந்தஅதிசயங்களைக்கேளும், ஜனமேஜயமஹாராஜனே! விதுரன்வீட்டுக்குச்சென்ற வேதநாராயணன் மாணிக்கசிங்காசனத்தில் கொலுக்கொண்டிருக்க, நாரதர் கண்ணுவர் சமதக்கினிமுதலாகிய பெரியோர்கள்வந்து ஸ்ரீகிருஷ்ணபகவானைக்கண்டுதேவரீர்சபையைவிட்டெழுந்துவந்தபிற் பாடுமிகுகோபியும்,வெகுபாபியும்மிடியாதக்காரலோபியுமாகிய துரியோதனன் விதுரனைஇழிகுறைவாகப்பேசினன்.அதற்குவிதுரன் கோபித்து தன்கையிலிருந்தவில்லைவெட்டிப்போட்டுவந்துவிட்டான்,அப்பால் வீஷ்மருக்குங்கர்ணனுக்கும்இப்படியாகவார்த்தைதவளர்ந்தது,அவருமெழுந்துஅரண்மனைக்குப்போனர். மற்றியாவருஞ் சபைகலைந்துபோனர்களென்று சொல்லி விடைபெற்றுக்கொண்டுமுனிவர் மூவரும்போயினர்கள், இப்பால் வில்லைவெட்டி முறித்தெறிந்த விதுரராஜன் தமது வீட்டுக்குவந்து திரிலோகநாயகனுடைய சீபாதங்களில் வீழ்ந்து தெண்டனிட்டுக்கொண்டு கைகட்டி வாய் புதைத்துநிற்க உட்காருமென்று உபசரித்துரைத்து ஓ! விதுரராசனே? நானொரு அதிசயங் கேள்விப்பட்டேன். அதாவது, பூமண்டலாதிபர் புகழும்படியாகிய வில் உமதுகையிலொன்றும், அருச்சுனன் கையிலொன்றும் இருந்தது. அதில் இன்று உமதுவில் குன்றிப்போனதாய் தெரியவந்தது; அதென்னகாரணம்? சொல்லுமென்று சுவாமியாகிய சதுரன்கேட்க, பூமியையாளும் விதுரன்சொல்லுகின்றான்.

நேமியையுடைய சுவாமியே! கேளும், பூமியை ஆளுகிறவன்காமியாயும், கோபியாயும், லோபியாயுமிருப்பானகில் சுவாமி அவனைக் கெடுத்துவிடுவார், காரியாகாரியந் தெரியாத கயவனுக்கு ஆகிறகாரியமிது அழிகிறகாரியமிதுவென்று அருகிலிருக்கும் பெரியோர் உரியோர் மந்திரிமார்முதலாகிய பேர்களும் புத்திமதிசொன்னல் கேளாதவனயிருப்பானகில் மீளாநகரத்திற்கிரையாவான். ஆகையால் இந்த துரியோதனனேசாத்தியா சாத்தியந்தெரியா வயித்தியனைப் போல்சாகிறதும் பிழைக்கிறதும் அறியான், சாஸ்திரம்படிக்கும் நடக்கான். சத்தியசவுசமுந்தேருன், பெரியோர் சிறியோரென்றறிந்து பேசான், இத்தன்மை வாய்ந்த பேதையாகிய துராத்மாவுக்குப்பிணைப்பட்டுத்துணைப்பட்டுப் போர்க்

களத்திற்போய்விழுந்து போர்புரிந்து புரவலர்முதலிய சேனைகளைக் கொல்லுவதைப்பார்க்கிலும், யுத்தகளத்திற்குப்போகாமல் யாத்திரைபோவது உத்தமமென்றெண்ணி வில்லைவெட்டியெறிந்தேன், தீங்கினருக்குபகாரஞ்செய்யுஞ் செல்வருக்குத்தீங்குவரும்; அதைவிடசெத்துப்போவதுமேலென்றுபெரியோர் சொல்லும் உரியமொழியொன்றிருப்பதனால் மனம்வெறுத்துவந்தேன்.

கவி.

செல்வம்வந்துற்றகாலைதெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வனஅறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேகருமமல்லால்வெம்பகைவலிதென்றோரார்
வல்வினைவிளைவும்பாரார்மண்ணின்மேல்வாழுமாந்தர்.

ஓ கிருஷ்ணமூர்த்தியே! கேளும் ஐஸ்வரியம்வந்தால் தெய்வத்தைக்கொஞ்சமேனுந் தொழார்கள். பேசத்தக்க முறைமையறிந்தும் பேசார்கள், பந்துஜனங்களையும் தோழ்மையாகிய பேர்களையும் கண்ணெடுத்துப் பாரார்கள். தாங்கள் வெல்லவேண்டுமென்று கருதுவதேயல்லாமல் எதிரியின் பலத்தை யெண்ணார்கள், இதனால் விளையப்போகிற வினைமூட்டையையும் யோசிக்கார்கள் இவ்வுலகிலுள்ள சாம்பிரதாயமற்ற மனிதர்கள். இப்படிப்பட்ட மதாந்தகாரத்தை மகமேருவா யெண்ணியிருக்கு மனிதர்களில் தலையானவன் இந்தத் துரியோதனன் அதேனெனில் நமதுகுலபந்துவினிற்சிறந்த நாயகனாகிய நீர் இவ்விடத்திற் கெழுந்தருளப் பாக்கியம்பெற்றும் மனங்கலந்து பேசிவணங்கி வாடியபயிருக்கு மழைபொழிவதுபோற் பாண்டவர்களுக்கு நாட்டைக்கொடுத்து ஒத்துவாழ்வோமென்றெண்ணாமல் என்னையுஞ் சின்னச்சொல்லாலே கோபமுங் கடினமுங்காட்டி முகங்கூசிப்பேசுந் துரியோதனனென்னுங் கர்மிமுகத்தில் விழிக்கலாகாதென்று மனங்கசந்து அவனுடைய தலையைவெட்டுவதற்குப்பதிலாக என்கைவில்லை வெட்டியெறிந்து போட்டேனென்று விதுரன்சொல்ல, அதைக்கேட்ட அரிவாசுதேவன் துடிதுடித்துப்பதைபதைத்துத் துரியோதனனுஞ் சேனைகளும் நாளைகுருக்ஷேத்திரத்தில் யுத்தத்திற்குவரும்போது நீர் வரமாட்டீர்போலு மிருக்கின்றதே; அப்படிசெய்யலாகாது, அவன் மூன் அறியாதவன், தெரியாமற்சொன்னாலும் அருமையாகிய வில்லைமுறிக்கலாமா? யுத்தத்திற்கு வாராமலிருக்கலாமா? இதுதருமமல்லவே யென்று சுவாமி சொல்ல, நான்செத்தாலும்வரப்போகிறதில்லையென்றுவிதுரராஜன்ஸ்திரமாகச் சொன்னான். அதைக்கண்ணன்கேட்டுஅப்படியா?நீருஞ்சபதசத்தியந்தப்பாதவராமென்னசெய்யலாம், துரியோதனனுடைய காலகதிஇப்படியாச்சுதென்று விசனப்பட்டு, விதுரனுடைய உள்ளத்துணிபையறிந்து ஐயோ எவ்வளவுவிறகுகள் போட்டுக்கொளுத்தினாலும் நெய்யைச்சொரிந்தாலும் குங்கிலியங் கற்பூரங்களைக் கட்டிகட்டியாய்க்கொட்டினாலும் காற்றுச்சகாயமில்லாதபோது நெருப்பெரியாது அதுபோல் எத்தனைப்பலாபலங்கள் துரியோதனனுக்கிருந்தாலும் உமதுசகாயமற்றபடியால்அவைகளொன்றும், உபயோகப்படாது உமதுபுத்திரராகியபாண்டவர்களுக்குநல்லகாலமும்நாடுங்கிடைத்ததென்று யின்றுநம்பினேன்

உமது வில்செய்த சகாயமென்று பின்னரும் பெரியோர்சொல்லிய தருமங்களில் மாதாபிதாகுரு தெய்வமென்றிருக்க உம்மை அவமதித்துப் பேசினனன்றோ, அவனுக்கேகேடுவரும்; நீர் சிறிதும் விசனப்படவேண்டா, ஆனால் நான் தூதுவரவும் நீர் என்னையழைத்து உபசரிக்கவும் அவனந்த இராஜசபையிலே உம்மை யிழிவாகப்பேசவும், நீர் - வெகுளிமேற்கொண்டு வில்லைவெட்டவும், இவைகளெல்லாம் என்னால்வந்தனவன்றோ? நான் வராதிருந்தால் இவ்வளவு துன்பம் நேரமாட்டாதே; நான் - பாவியானேன்; இனி என்னைப்பற்றி மனம பொறுமென்று உபசரித்தனன். அவ்வார்த்தையைக் கேட்டவுடனே விதுரராழ்வாரெழுந்து விழுந்துதொழுது சுவாமி? தேவரீரப்படி சிந்தையில் நினைக்க வேண்டியதின்று, அவன்கெட்டான் துஷ்டன், தமது எண்ணம்நிறைவேற வேண்டியதே என்னிஷ்டமென்றுஇருவரும் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். அப்பால் கண்ணபிரானும் குந்திதேவியாகிய தன்னத்தையிருக்கும் இடத்திற் சென்றுகண்டு பாண்டவர்கள் பக்ஷமாகச் சொல்லவேண்டிய மொழிகளைத்துஞ்சொல்லி விடைபெற்று மீண்டுவருகிறேன் விடையருளுமென்று அங்குநின்றும் புறப்பட்டுச் செந்தாமரைமலர்போன்ற பாதங்கள்நோக நடந்து சென்றான். அவ்வாறு சென்ற கண்ணபிரான் அந்தவேளையில் பெரிய வர்ண்மனையிலிருக்கும் பாண்டுராசனுடைய தருமபத்தினியாகிய குந்திதேவியென்னும் தன் அத்தையிருக்கும் அந்தப்புரவாயிலுக்கு நேராகவருவதைக் குளிர்ச்சிபெற்ற பூரணசந்திர விம்பமுகத்தையுடைய குந்திதேவியுங்கண்டு எதிரோடிவந்துவாரும், வாரும், மருமகனேயென்று வார்த்தையாடிமுகம்மலர்ந்து மருகன் முகத்தை நாடிநின்றனள். அப்படிநின்றஅத்தையினது அடியிணையில்விழுந்து தெண்டஞ்சமர்ப்பிக்க, உடனே வாரியெடுத்து மார்போடணைத்து உச்சிமோந்து உபசரித்துவாழ்த்திநீருண்டுசூல்கொண்டமேகத்தைக்கண்டுநீலக்கலாபம்விரித்தாடு மயிலேபோல மயிர்க்குச்செறிய மகிழ்ந்து தம்பிரானொருத்தி இவ்விடமிருக்கின்றேனென்று என்னையுமொரு பொருட்படுத்தி இவ்வளவு தூரம் எழுந்தருளவும் வழிதெரிந்ததோ; மனம் வந்ததோ, மகிழிருந்ததோ; மறவாமலிருந்ததே என்பாக்கியமாமென்று அழைத்துப்போய் அணிமணியாசனத்திருத்தியாவரும் க்ஷேமமா யிருக்கின்றார்களா! நீரிப்போது இந்த அஸ்தினபுரத்திற்கு வந்தகாரிய மென்னவென்றாள்! அதற்குசாடுசொடிய கள்ளமாமாயனு நகைமுகமுடையவராய்ச் சொல்லலாயினர்.

கேளாய்மாமி! நாட்டைவிட்டுநீங்கி காட்டிற் பன்னிரண்டு ஆண்டும் கழித்து உருத்தெரியாமல் நாட்டிலோர் ஆண்டும் போக்கியபாண்டவர்கள் உமக்குச்சாஷ்டாங்க நமஸ்காரந் திக்குநோக்கிச் செய்தார்கள், இன்னஞ்சிலநாளையில் உன்மலரடியைக்கண்டு தரிசிக்க வருகின்றோமென்றுஞ் சொன்னார்கள், திரிதராட்டிரன் காந்தாரிமுதலாகிய பெரியோர்களுக்கெல்லாஞ் சரணஞ்சொல்லி இராசசபைக்குப்போய் விவகாரப்படி நாடுகொடுப்பீர்களா என்றதையுங் கேட்டுவர என்னைத் தூதனுப்பினர். அவைகள் எல்லாவற்றையுங்கேட்டு காலனுக்கு ஆப்தசிநேகனாகிய கண்ணில்லாதவனுடைய பாலனோவேவின் முட்குத்துமிட மேனுங்கொடுக்கேன், நால்வகைச்சேனையுடன் சண்டைக்கு

வருவேனென்று உறுதிமொழிகூறி யிருக்கின்றனன். இருதிறத்தவரும், இப்படி வருத்தப்படுவதைத் திருத்தமாக்கி பொருத்தவேண்டுமென்று யோசித்தால் சரிப்படவில்லை, ஆயினும் இன்னமொருகாற் சொல்லிப்பார்ப்போம்; அதற்கு மிணங்காமற் போவானாகில் நாமென்னசெய்யலாம், மாமி? அப்பாலிருப்ப திவன் தலைவிதியேயாம், இனிதெய்வச்செயலெப்படி முடியுமோ தெரியாது; இதன்றியும் இன்னொருகாரியம் உன்பாற்பேசவேண்டியிருக்கின்றது வாவென்றுஉள்ளறையி லழைத்துச்சென்று வெண்ணெயுண்டகள்வன் எள்ளத்தனையு மிரக்கமில்லாமல் மெள்ளத்தன்னெண்ணம்வெளிப்படுத்துகின்றவனாய் நானொருசங்கதி கேள்விப்பட்டுவந்தேன். அதைச்சொல்லச் சொன்னாற் சொல்லுகிறேனெனச் செவ்வையாய் சொல்லப்பாவென்று குந்திதேவிசொல்லக் கோபாலகிருஷ்ணன் கூறத்தொடங்கினன்.

அத்தாய்! நான் கேள்விப்பட்டுச் சொல்வதை ஞாபகமாகவும் உறுதியாகவுங்கேள் நீர் - உங்கள்தாய்வீட்டில் கன்னிமாடத்திலிருந்த சிறுவயதில் தூருவாசமுனிவன்வந்து விரதமிழைக்க, அவருக்கு நீ பணிவிடைசெய்ய அந்தமுனிவர் சந்தோஷித்து ஐந்து தேவதாமந்திரம் உபதேசம் பண்ணிப் போயினர். அந்த ஐந்துமந்திரத்தில் ஒருமந்திரத்தை நீர் பரிக்ஷிக்கக் சூரிய பகவான்-பிரசன்னமாயினன். அப்போது நீ கலங்கிக் கண்ணீர்விட உனக்குத் தகச்சொல்லி உன்னிடத்திலொரு சற்புத்திரன் பிறக்கும்படி கர்ப்பாதானஞ் செய்தனன். அக்கணமே குழந்தை பிறந்தது; நீ பயந்து - உலகப்பழிப்புக்கஞ்சி பெட்டியில்வைத்துச் சிந்துநதியில் விட்டனை; அந்நதி யடித்துக்கொண்டேபோய்கங்காநதியில் விட்டது; திரிதராட்டிரனுடையதேர்ப்பாகனும் அவன் பத்தினிராதையு மதைக்கண்டெடுத்துவந்து வளர்த்தனர், அசரீரியோ அப்பிள்ளைக்குக் கன்னனென்று பேரிடென்றது. அதைக்கேட்டு அப்படியே பேரிட்டழைத்தனர். அவனே சகலசாஸ்திரமு முணர்ந்து பரசுராமரிடத்தில் வில்வித்தையுங் கற்று மேன்மையுற் றிருந்தனன்! அதைத் துரியோதனன் கண்டு நட்புக்கொண்டு அங்கதேசாதிபதியாக்கி சுயம்வரத்திற் கலியாணமுஞ் செய்து சகல சாம்பிராச்சியமும் அவன் வசத்திலொப்பித்து ஏகசக்ராதிபத்திய சேனாபதியென்றும் ஏற்படுத்தி இருக்கின்றனன். அந்தக்கன்னனை வெல்லத்தக்கவர் மண்ணினுமில்லை, விண்ணினுமில்லை. அவனுக்கும் நமது அருச்சுனனுக்கும் பூர்வத்திலேயே சன்மப்பகையாகிய வகைமேற்பட்டிருக்கின்றது, போர்செய்யவும் எத்தனித்திருக்கின்றனர். ஆகையால் விரைவிற்கன்னனிடத்திற் சென்று அவனுடைய ஐயந்தீரவே நீ தாயென்றுதெரிவித்துபாண்டவர்கள் சகோதரரென்றுணர்த்தி நீங்களாறுமக்களிருக்க நானிப்படி அவதிப்படுவானேன், அப்பா இப்போதே பாண்டவர்களிடத்தில் வந்துவிடு, அவர்களுனக்குக் குற்றேவல்செய்ய, நீ அரசாட்சிசெய்யலாம். நானுங் கண்களிக்கப் பார்க்கலாமென்று இதமாகிய வார்த்தைகளைச்சொல்லி அழைத்துவா, உனது சொல்லைத் தடுப்பானாயின் அர்ச்சுனன்மேல்விட அச்சுவசேனனென்னும் நாகக்கணையை அருமையாய்ப் பூசித்துவருகின்றான். அதுவோ காண்டவவனதகனத்தில், தன் தாயைக்கொன்றபழியையும் தன் வாலறுப்புண்ட பகை

யையும் தப்பாமல் முடிப்பேனென் றிருக்கின்றது. அந்நாகக்கணையை விஜயன்மேலொருமுறைதொடுப்பதன்றி மறுகணைதொடுக்காதிருக்க வரம்பெற்றுக்கொண்டு வாவென்றான். இவ்வசனங்களையெல்லாங் குந்திதேவிகேட்டு மனங்குன்றி ஐயோ; உலகமறியும்படி வந்ததே, நமக்கும் ஞாபகமில்லாமல் மறந்ததே, நமது மருமகனுக்கெப்படியோ தெரிந்ததே? என்று மனத்திலெண்ணி யினைத்து ஓ? கோபாலா; இந்தவார்த்தை முன்னமே யறிந்திருந்தால் உன்னிஷ்டப்படியே பாண்டவரிடத்திற் சேரப்பண்ணுவேன், இப்போது உனக்கோ எனக்கோ என்றிருக்கும்போது நான் போய்ச்சொல்வதும் யுக்தமன்றே! இது உன்னுடையமாயமோ? அல்லது என்னஅபாயமோ! "விடியற்காலையிற் கலியாணம் முடியப்போகின்றது; பயணமாகப்பிடியடா தாம்பூலம் பெண்வீட்டுக்காரனே" என்பது போலுமிருக்கின்றது நீ நினைத்துக் கொண்டோடிவந்து சொல்லுங்காரியம். நல்லது அப்படியே கன்னனிடத்திற்சென்று தாயென்று அவனுமனமகிழச் செய்து நாகக்கணையை ஒருதரம் விடுவையேயொழிய இரண்டாமுறை விடாதையென்று வரம்கேட்டால் என்வார்த்தையைத் தள்ளாமற்கொடுப்பான்; அப்போதுங் கன்னனுடைய பிராணனுக்கானி வருமன்றோ; அதல்லாமல் அவ்வரத்தையுங் கேளாமற்போவேனாயின் அர்ச்சுனனிறப்பானன்றோ! இவ்விரண்டுவகையிலும் எனக்கு கஷ்டமேயன்றி வேறில்லையே! "பிச்சைக்குப்பிச்சையும்போய்இலச்சையுங் கெட்டுவிட்டது" என்னும் பழமொழிக்கிணங்கிய தாய்விட்டதே "உழக்கு நெல்லுக்கு உழைக்கப்போய்ப் பதக்குநெல்லைப் பன்றிதின்றது" என்னும் பழமொழிவாய்த்ததே என்றுசந்தனமரங்களையுந்திவரும் சிந்துநதிசூழ்ந்தநாட்டின்வேந்தனாகியசூரபோஜன்பெண்ணாகியகுந்திதேவிகுலைகுலைந்துவருந்தியிருந்தனள். அக்கருத்தை மருமகனாகிய கள்ளமாமாயனுணர்ந்து மாமி! நீயோசித்ததுசரியேயானால் உன்மக்களாகிய பாண்டவர்கள் ஐம்பூதம்போலும் ஐந்தலைப்பாம்புபோலும் பொருந்தியிருப்பவர்கள், ஐந்துபூதத்திலொருபூதங்குறைந்தால்உலகங்குறைந்துபோம், ஐந்தலையரவு ஒரு தலையிழந்தால் உடலுமிழக்குமன்றோ! அதுபோல்! ஐவர்களிலொருவரிறந்தால் மற்றநால்வரும் உடனே மடிவர் நீ அருமையாய்ப் பெற்று எடுத்து வளர்த்து ஈயெறும்பு கடிக்கவொட்டாமற் பாதுகாத்து அன்புடன் வளர்த்த பாண்டவரைவரும் இறந்துவிடுவதேபெரிதா! இன்றுவரையென்றறியாமலும் எடுத்துவளர்க்காமலுமிருந்து இப்போது பிள்ளையென்றுணர்ந்த இக்கன்னனொருவனிறப்பதேபெரிதாசெவ்வையாயோசிக்கவேண்டும்? நானேதோ அவசரப்படுத்தினேனென்றுநாளையொருகாலத்திற்பழிசொல்லப்போகின்றனை, பத்தும் பதினைந்துக்குஞ் சம்மதியாயிருக்குமாயின் மறுமொழிகொண்டு போய்வா, அப்பாலுன்னிட்டமென்றுசொல்லிவிடைபெற்றுக்கொண்டு விதுராழ்வானரண்மனைக்கெழுந்தருளி நித்தியகரும முடித்துக்கொண்டு அறுசுவை யடிசிலருந்தி திருக்கண்வளர்ந்தருளினார்.

இப்பால்சகன்மோகனனாகியகண்ணபிரான்மாயவசனவலைக்குளகப்பட்ட குந்திதேவி குலைகுலைந்து கொடியதுயரினாலுழன்றுமனங்கலங்கிக்கண்ணுறக்கங்கொள்ளாதிருந்தனள். பகற்போதையளக்குஞ் சூரியபகவான் மேற்றிசைப்

பெண்ணின் நெற்றியிலிடப்பட்ட சிந்தூரத்திலகம்போல் விளங்கிஅஸ்தமன மாகவும், வேதபண்டிதர் முதலியோர் காலைக்கடன்முடித்துத்தொழவும், வருணன்சூரியனுக்கிட்ட மாற்றுயர்ந்தபொற்சிங்காதனமேபோல் செவ்வானம்வரவும், தாமரை மலரென்னுங் கன்னியர்கள் வண்டுகளாகிய புருடருடன் ஊடி முகங்குவியுந் தன்மைபோற் குவியவும் அவ்வண்டென்னும் நாயகனைக்கண்டு கடைக்கண்காட்டி யழைத்து இதழ்த்தேனருந்த இன்பங் கொடுக்கும் விலைமகளிரைப்போல நீலோற்பல முதலிய மலர்கள்மலரவும், தாமரைமலரில் தங்கிய வண்டுகள் குமுத மலரிடத்தும் ஆம்பலினிடத்துந் தங்கி தேனைப்பருகுந் தன்மையெப்படி யிருந்ததெனிற் குலமாதரைவிடுத்து விலைமாதரையடுத்த காமுகர்போலும் உள்ளுடைந்து கூவித்திரியவும் முல்லையரும்பும் விரிந்ததைப்போல் எல்லையில்லாத விண்மீன்கள் விளங்காநிற்கவும், இரவென்னும் யானையேறிப் புறப்படும் மன்மதனுக்கு வெள்ளைக்குடைவிரித்ததைப்போல் சந்திரனுதயமானான். அவ்வமயத்தில் தலைவனுந்தலைவியும் அமளிகளிற்கலந்து சரசசல்லாபத்தில் நித்திரைசெய்யவும், சந்தடியடங்கிய நள்ளிரவில் இந்திரனுக்கொப்பாகிய சந்திரகுலத்தோன்றலாகிய துரியோதனன் அந்தரங்கமண்டபத்திற்கு வந்து தம்பிமார் தொண்ணூற்றொன்பதின்மரும் மாமன்சகுனியும் கன்னனும் சூழ்ந்திருக்கத் தானுமிருந்து பாண்டவர்களை நோக்கி ஆராய்வானாயினன். காட்டேகதியெனப் போய்விட்டவரை நம்வாங்கித் தருவனென்று அழைத்து உபலாவியத்திலிருத்தித் தானே தூதாகவந்து தூர்ந்தகிணற்றைத்தூறுவாருவார்போற்கலகம் விளைத்து நமக்கெதிரியாகவும் விருப்பாகவும் விதுரன்வீட்டில் வந்திறங்கிய இக்கண்ணனை முடித்துவிட்டால் பலநாள் சகி ஒருநாளையிற்போய்விட்டதென்று பாலைவார்த்துத் தலைமுழுகிவிடலாம், இவனிருக்குமட்டும் ஆகவொட்டான் அழியவுங்கிட்டான்; ஆதலால், நீங்களென்ன சொல்லுகிறீர்கள் சொல்லுங்களென்றான். அதுகேட்டுத் துச்சாதனனெழுந்து காலில்விழுந்து தேவரீருக்கு இஞ்ஞாபகந் தெய்வங் கொடுக்குமென்றே பிரார்த்தித்திருந்தேன், என்னெண்ணப்படியே பலித்துவிட்டது? நீர்சிந்தித்தது நன்றாயிருக்கின்றது, நானுஞ்சொல்லுகின்றேன், பலநாளுஞ் சிக்காமற் கலகஞ்செய்துகொல்லும் பெரும்புலி வலையிலகப்பட்டால் கொலையஞ்சிப் பார்க்கலாமோ! இவ்விரவு முடியுமுன்னமே நால்வகைச் சேனைகளுடன்சென்றுவளைந்துகொண்டு நாகத்தின்தலையை நசுக்குவதுபோல் நசுக்கிப்போடுவதேகாரியம், அதுவேநமதுவீரியமென்றான். அதைக்கேட்ட நந்தியாவட்டமலர்மாலையையணிந்த துரியோதனன் அதுவேசரியென்ன, மற்றத்தம்பியரும் ஒத்துக் கொண்டனர். இந்நூற்றுவரில் தருமதேவதைபோன்ற விகர்ணன் தன் மூத்த தமயனைநோக்கி அண்ணா! இதுவரையிலும் வாழ்ந்தவர் முக்குலமன்னவரிலும் பற்பலரிலும்இதுகாறும் தூதுவந்தாரைக் கொன்றாருமில்லை. கொல்லென்று விண்டாருமில்லை, நாம் சொல்லுவோமாயின் எவ்வுலகுக்குமொவ்வாது, பழிபாவங்களுக் காளாவோம். அன்றியும் விருத்தர்கள் பாலர்கள் நோயாளிகள் வித்துவான்கள் மாதர்கள் தூதர்கள் ஆகிய இன்னோர்கள் எவ்வளவுபிழையே செய்தாராயினும் கொல்லலாகாதென்றே தருமநூலுமுறை.

யிடுகின்றன; மீறிச்செய்தோமாயிற் குடும்பசமேதமாய்நரகமனுபவிக்கவரும் மேலும் பகைவராயினும் நமதுவீட்டுக்குவந்தால் அவருக்கும் நமக்குமிருக்கும் விரோதங்களைமறந்து புதியவுறவினர்போல் மரியாதைசெய்து வந்திப்பதே குலமுறைதவறாக் குலோத்துங்கர் குணமாம், அப்படிசெய்வதின்றிநெஞ்சில் வஞ்சகம்நினைக்கில் அதற்குமிஞ்சியபாவம் வேறொன்றில்லை, அப்படியன்றென்று பழிபாவங்களுக்குப்பயப்படாமல் தூதனைக்கொல்ல நினைத்தால் காயாம்பூவண்ணனாகிய கண்ணபிரானோ ஒருவராலேயுங் கட்டுப்படவுமாட்டான், வெட்டுப்படவுமாட்டான், உங்கள் குட்டுங்கெட்டுப்போகும் இப்படிப்பட்ட துஷ்டகாரியங்களை ஆராய்கின்றீர்கள் வேண்டாம். நீங்கள் நினைக்குங்காரியமு முடியாது, யோசனை செய்யுங்களென்றான். அதற்குத் துச்சாதனனெழுந்து நல்லபாம்பே போற்சீறி நின்று? அடா! விகர்ணா உனக்கென்னடாதெரியும், பெரியோர்பேசுஞ் சங்கதிகளில் நாமேன் பிரவேசிக்கவேண்டுமென்றிராமே குறுக்கே தடுத்துப் பேசக்கற்றுக் கொண்டனையோ? அம்மட்டும் வாயைமூடென்று அந்தத்துரியோதன மகாராசனைப் பார்த்து வெறுத்துக்கொண்டு அண்ணா! யாதொருகாரியமும் ஆலோசிக்கவேண்டியிருந்தால் அறியாச்சிறுவனை நீக்கிப் பெரியோருடன் பேசவேண்டுமென்பதை யாராய்ந்தறியவேண்டும். அதாவது, அதிரதர்முதலாகிய சேனைகளைவிதுரன் வீட்டைச்சுற்றிக் காவலாகவைத்து வைக்கோல்முதலிய செத்தைகளைச் சேர்த்துக் கொளுத்திவிட்டால் நமது பகைவர்களுக்குத்தூதாகவந்த கோபாலனும் அவனுக்கு விருந்துசெய்த விதுரனும்வெந்து கரிந்துஎரிந்துபோவார்கள், பார்ப்பவர் கேட்பவர் ஐயோ தீப்பற்றிக்கொண்டதென்றே சிந்திப்பார்கள், நமக்கொருநிந்தையுமில்லை, பாண்டவர்க ளிந்தவழியும்வாரார்கள், இது அழியா யோசனையாய்விடும், நாமிதைப் பொழுதுவிடிவதற்கு முன்னே முடித்துவிட வேண்டுமென்றான். இந்த யுத்தியைக்கேட்ட கன்னன் இருளைக்கெடுக்குஞ்சூரியனேபோல் அக்கினிச் சுவாலையையுடைய ஒருபாணத்தினால் அவ்விருவரையும் எரிப்பதற்கு நானொருவனிருக்கும்போது நெருப்பினாலேயோ அவர்களைக் கொல்லுவது! வெல்லமாட்டாத திறத்தையுடையவர் செய்யவேண்டியவெண்ணமேயன்றிநாம்நினைக்கத்தக்கதல்லவேயென்றான். அதைக்கேட்டு விகர்ணன் தவிர மற்றத் தம்பிமாரெல்லாரும் துரியோதனனை நோக்கி! அண்ணா அக்கண்ணன் இப்போது நமதுபட்டணத்துக்குள் வந்தகப்பட்டுக்கொண்டான், அவன் தந்திரவாதியாகையால்பொழுதுவிடிந்தாற்பாண்டவர்களிடத்திற்போய்க்கூடிக் கொள்வான், எந்தக்காரியங்களும் ஆகவொட்டாமல் நமது எண்ணத்தைக் கெடுத்துவிடுவான், ஆகையால் எவ்விதத்தினாலேனும் பொழுதுவிடிவதற்கு முன்கொன்றுவிடுவதே காரியசாதகமென்று கூவிச்சொல்லினர். அவற்றையெல்லாங்கேட்டிருந்த மாமனாகிய சகுனி நகைத்து இவைகளெல்லாஞ் சிறுபிள்ளைகள்ஆலோசனையாக இருப்பதே யொழியக் காரியத்தைமுடிக்கும் சாதகமான யோசனையாகவிருப்பதில்லை, அப்படி யாதாயினுஞ் செய்யவேண்டுமானால்நான் சொல்லும் யுத்தியைக்கேட்டு வெல்லுங்களென்றான், அந்தயுத்தியாதென்று துரியோதனன்கேட்கச் சகுனி சொல்லத்தொடங்கினான்.

என்னருமைமருகனே? நான்சொல்வதைக்கேள், விகர்ணன்சொன்னவாசகத்தின்படி தூதனைக்கொல்லலாகாது; துச்சாதனன் சொன்னபுத்திநல்லபுத்தியினும், பரம்பரையாய்ப்பெரியோர்கள் வாழ்ந்தவீட்டில் நெருப்பிடலாகாது இட்டாலும் அந்நெருப்பினால் கண்ணனுக்கு ஒருகேடும்வராது, கன்னராஜன் சொன்னபடி கணைவிடுத்துக் கொல்லநினைத்தால் நாளைவரப்போகின்ற கலகம் இப்போதே விளைந்துவிடும், நமது நாடு சுடுகாடாய்ப்போம் ஆதலால் இவைகளெல்லாங்காரியமன்று, ஒருகாரியஞ்செய்வோம். நமது கொலுக்கூடத்தில் ஒருபடுகுழிவெட்டி அதில்அரக்கரையும் மல்லர்களையுங்கிங்கரரையும் வைத்து மூங்கிற்பற்றைகளினால் மூடிமேலே ஒருசிங்காதனம் அமைத்து அதில் இக்கண்ணனை அழைத்து உட்காரச்செய்தால் பற்றைமுறிந்து படுகுழியில்விழுவான், உடனே பிடித்து விலங்குபோட்டுச்சிறைச்சாலையில்வைத்து பிராணன்போகவொட்டாமல் தண்ணீர்வார்த்துக்கொண்டுவந்தால் பாண்டவர்களுக்கும் நமக்கும் பகைநேரிடவேமாட்டாது, கலகமற்றுப்போய்விடும்,உலகமும் பழிக்காது; இது தூதனைச்செய்யவேண்டிய முறைமையென்றான். அதைத்துரியோதனன் கேட்டு மனமகிழ்ந்து மாமா! உங்கள்புத்தி எவருக்காயினும் வருமா? நீங்கள் யோசித்தால் அதுவீண்போமா என்று மகிழ்ந்து புகழ்ந்து அந்நேரமே அநேக மல்லரை அழைப்பித்து மிகுந்தஆழமும் அகலமுமுள்ளதாகியநிலவறைவெட்டச்செய்து அதிலே கிங்கரர் அரக்கர் மல்லர்கள் முதலானோரை வாளாயுதம் வேலாயுதம் சூலாயுதம் குந்தாயுதங்களுடன் வைத்து அநேகங்கயிறுகளுடன் பப்பரர்களையும் இருத்திமூங்கிலைப்பிளந்து மேலாகமூடி நவரத்தினகசிதசிங்காதனமமைத்து முத்துமாலை மாணிக்கமாலை பூமாலை,பொன்மாலை தூக்கி கன்னனுடன்தம்பிமார்முதலிய யாவரும் மகிழ்ச்சியடைந்து பிறவிப்பெருங்குழியில் வீழ்ந்து பந்தபாசப்பிணிப்புறும் பத்தசனர்களைக் கரையேற்றிக்காக்குங் கருணைக்கடலாகிய கண்ணனுக்குப்படுகுழி அமைத்தான். அதைக்கண்டு கொஞ்சமேனுமெண்ணாமல் நஞ்சதருந்திக் கஞ்சனைக்கொன்ற அஞ்சனவண்ணனுக்கு வஞ்சனையைச் செய்தானே பஞ்சமாபாதகனென்று பானைக்கவிந்த விருளோடிப்போகவும் இரவில்நடந்த அதிசயங்களை யாவரும் பாருங்களென்று கிரணமாகியகரத்தால் காய்ந்தெழுப்பிக்கொண்டு கீழ்த்திசையின்கண்சூரியனுதயமாயினன். சகல ராஜாராஜர்களும் வைகறையிலெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு வழக்கப்படி அத்தாணிமண்டபத்துக்கு வந்தனர்; இரவெல்லாந்துயினீத்திருந்த துரியோதனராஜனும் தம்பிமாரும் சகுனி கன்னன் மந்திரிசாமந்தர் முதலானோரும் சபையில்வந்துநிறைந்தனர். விதுராழ்வான்வீட்டில் திருக்கண்வளர்ந்தெழுந்த பகவான் சாத்தகியாழ்வானுடனெழுந்துநித்தியக்கடனை முடித்துக்கொண்டுசிங்காதனத்தில்வீற்றிருக்கையில் துரியோதனனுடையகட்டளையினால் தூதவரோடிவந்து தீர்க்கதெண்டனிட்டு சுவாமீ! தூதுவந்தவுங்களைஎங்கள் வணங்காமுடியோனாகிய துரியோதனமகாராஜன் அத்தாணிமண்டபத்திற்கேஅழைத்துவரச்சொல்லினர்,அதிசீக்கிரத்தில் வரவேண்டுமென்றனர். கண்ணபிரானும் அங்ஙனமேஇதோ வருகின்றேனென்றெழுந்துசேனைகளையெல்லாம் நிறுத்திவிட்டுச் சாத்தகியாழ்வான் மணியிரதமூர்ந்துவரத் தானும் இர

தமேறிக்கொண்டு திரிதராட்டிரன் வீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமா முதலாகிய பெரியோர் நிறைந்திருக்கும் சபைக்குவந்தனன். வரவே, ஊதோகபடநாடகசூத்திராவதாரியாகிய கண்ணபிரானுஞ்சாத்தகியாழ்வானும் வந்தனரென்று பூலோகதேவேந்திரனேபோற் கொலுவீற்றிருக்கும் சுயோதனனிடத்தில் தூதர் சொல்லினர். சுயோதனனும்கேட்டுகண்ணபிரானைமாத்திரம்விடுங்கோளென்று ஆக்ஞாபித்தனன். அந்தப்படியே ஸ்ரீகண்ணபிரான் தூதர்வார்த்தையைக்கேட்டுச்சாத்தகியாழ்வானை வெளியேநிறுத்தித் தன்னை அழைப்பித்த வஞ்சகமான சங்கதியையறிந்துகொண்டுமனமகிழ்ச்சியோடும், தம்பி நான்வந்தகாரியம் இன்றைக்கே நிறைவேறுகின்றதென்று கூறி கொலுக்கூடத்தில்வந்தனர். அரவக்கொடியோன் மிக்க உபசாரத்துடன்பகவானைப்பார்த்துஆசனத்திலிருமென்று கைகாட்டினன். வீஷ்மர்முதலிய பெரியோரெல்லாரும் ஏதடா அப்பா பகவானுக்குஇவ்வளவுமரியாதையுநடந்தது, நமக்குநல்லகாலமும்பிறந்தது, இனியொன்றுங்குறைவில்லை, பாண்டவர்களுஞ் செவ்வைப்படுவார்கள். துரியோதனன்புத்தியைஆண்டவனுமயக்கி வழிக்குக்கொண்டுவந்தான்போலுமென்றுமகிழ்ந்து, காயாம்பூவண்ணனுடையமுகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர். ஸ்ரீகண்ணபிரானேதுரியோதனனென்னும் நாசகாலன் அமைத்தஆசனத்தின்மேலேறிஉட்கார ஒருகாலையூன்றினர்; உடனே மளமளவென்று முறிந்து சிங்காசனத்துடன் நிலவறைக்குட்போகும்போது ஸ்ரீபாதபங்கயமிரண்டும் ஆதிசேடனுடைய முடியிலும் பொருந்தும்படிநிற்க விச்சுவரூபங்கொண்டனர். சந்திரசூரியர் இந்திரன்முதலியோர் சப்தரிஷிகள் யாவருஞ் சிரத்திற் கரங்குவித்துத்தெண்டனிட்டுச்சிந்தித்து நாகலோகத்தாருநடுநடுங்கி நாங்களெப்படி பிழைப்போமென்றேங்கி எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து வணங்கினர். அப்போது ஆகாயத்துக்கும் பூமிக்கும் ஒன்றாக வளர்ந்த பகவான் அநேகந்தலைகளும் பலகரங்களும் மிகுதியாகிய கால்களுமுடையாராய்ப் படுகுழியிலிருக்கு மல்லரையும் கிங்கரரையும், அரக்கரையும், பப்பரரையும் தப்பில்லாமற் கொல்ல நெட்டைக்கால்களினால் நீட்டியுதைத்தும் குட்டைத்தாள்களினால் குமுங்கமிதித்தும் மட்டப்பதத்தினால் மாளவுதைத்தும் கட்டைக்காலினாற் கரைத்துக்குழப்பியும், சிலரைத் துவைத்தும் சிலரைமிதித்தும் சிலரையெடுத்துச் சிதறவீசியும், நாகலோகத்தில் நசுங்கி விழவுதைத்தும் உதிரவெள்ளம் சபையிலோடிவரும்படிப் படுகுழிநிரம்பக் கால்களைவளர்த்திப் பருக்கச்செய்து குடையும்போது சிரமிழந்து நெரிந்தோர் சிலர், செவியழிந்து விரிந்தோர் சிலர், கரமறுந்துரிந்தோர் சிலர், கால்கள்முறிந்து சரிந்தோர்சிலர், உடல்நொறுங்கி உடைந்தோர்சிலர், ஊனழிந்து சிதைந்தோர்சிலர், படைநெரிந்து விரிந்தோர்சிலர், பசியெழுந்து பறந்தோர்சிலர், சுவாமியைக்கட்டவைத்திருந்த பாசக்கயிறுகளறுபட்டுத்தங்களைக் கட்டிக்கொண்ட மனைவிமக்களென்னும்பாசம் தங்களைக்கட்டக்கலங்கிக்கட்டுண்டோர் சிலர், வாளாயுதமுடையவீரர் வாளாவிறக்கவும் வாயுவினால் மாமேருமலையின்சிகரம் போனதுபோல் வானத்திற் சிற்சிலவீரர் பறக்கவும் அரக்கரெல்லாம் நைந்துபோகவும் வச்சிராயுதத்தினால் சிறகறுபட்டமலைகள்போல் இறைவன் காலுதையால் முறிபட்டுப் பறிபட்டுவிழவும், இவ்வாறாகப் படுகுழியில்

நடனஞ் செய்து பப்பருடல்களை வாரியெறிந்தும், சிலகாலால் கிங்கரர் குடல்களைக் கீறியணிந்தும், சிற்சிலகாலால் அரக்கர் சிரத்தைவாரியெறிந்தும், பற்பலதாளால் மல்லர்கள் கரத்தைவாரிவீசியும், எலும்புகளைவாரி விண்ணுலக முதல் எங்குமிறைத்துநின்றனர். அஃது எப்படியிருந்ததெனின் சுக்கிரீவமகாராசனுக்காகத் துந்துமி என்பவனுடைய எலுமபைஸ்ரீரகுநாயகன்காலாலுந்தியதன்மைபோலிருந்தது. அரசர்களிருந்தசவையெல்லாம் உதிரப்பெருக்கமும் மூளைநெருக்கமும் நிணவருக்கமும், மாமிசச்சுருக்கமும்; பிணவருக்கமுமாய்க் குவிந்தனர் பகவானே அகத்தியமுனிவரால் பாதலத்தழுந்தும் விந்தகிரியைப் போல மேலோங்கவொட்டாமல் அழுத்தி, பாற்கடலிற்சுழன்ற மத்தாகிய மந்தரகிரியைப்போல் படுகுழியினின்று சுழன்றுகூத்தாடினர். ஆகாயத்தில் விரிந்த பலகரங்களும் வேலாயுதம் சூலாயுதம்முதலிய ஆயுதங்களைப்பிடித்துச்சுழற்றவும், உடுக்கைதரித்த கரங்களனந்தம், உறும்பிபிடித்தகரங்களனந்தம், பேரியடிக்குங் கரங்களனந்தம், தாளமத்தளந் தரித்தபுயங்களனந்தம், குடமுழாவறையுங் கரங்களனந்தம், சின்னம்பிடிக்குங் கரங்களனந்தம், காகளந்தாங்குங் கரங்களனந்தம், கொத்துமணிகளாட்டுங் கரங்களனந்தம், சிட்டிகைபோடுங் கரங்களனந்தம், கொம்புகள்முழக்குங் கரங்களனந்தம், பம்பைசங்குமுழக்குங் கரங்களனந்தம், நறியசந்தனபாளித குங்குமகளபகஸ்தூரிக தம்பப்பொடியணியுங் கரங்களனந்தம், முத்துமாலை மோகனமாலை இரத்தினமாலை வெற்றிமாலை பதக்கமுதலிய பற்பல ஆபரணங்களைத் திருத்திக்கொள்ளும் கரங்களனந்தம், சித்திரவத்திரம் பீதாம்பரமுதலிய பட்டுப்பட்டாவளிகளைத் தரித்துக்கொள்ளுங் கரங்களனந்தம், கைகளைச்சேர்த்துக்கொட்டுங் கரங்களனந்தம், கறுவிக்கரிட்டுங் கரங்களனந்தம், எட்டுத்திக்குநிறைந்து அரசவையிலிருக்கும் துரியோதனன் முதலியோரைச் சுட்டிக்காட்டுங் கரங்களனந்தம், திலகந்தீட்டுங் கரங்களனந்தம், சமுத்திரத்தை அள்ளியிறைக்குங் கரங்களனந்தம், மண்ணைத்தூற்றுஞ் சிற்சிலகரங்கள், மரங்களைப்பிடுங்கித் திசைகளிலெறியும் பற்பலகரங்கள், மலைகளைவாரி ஒன்றோடொன்றுமோதி பூக்களையுருவியிறைக்கும் பற்பலகரங்கள், சூரியசந்திரருடன் நக்ஷத்திரங்களை உள்ளங்கையிற் காட்டுஞ் சிற்சிலகரங்கள், மேகங்களைப்பிடித்துப்பிழியுஞ் சிற்சிலகரங்கள், திக்கியானைகளைச்சேர்த்து வாரியெடுக்கும் பற்பலகரங்கள், அமரர்களுக்கு அமுதம் பகிருஞ் சிலகரங்கள், சிலகரங்கள் அஷ்டகுலாசலங்களைப்பறித்து நுனிவிரலில் வைத்துசுழற்ற, பலகரங்கள் மேருவைவளைத்துப்பிடிக்க, பாஞ்சசன்னியமுதலியகோடி சங்கங்களைப்பவளம்போன்றசெவ்வாயில்வைத்துநாதம்பிடிக்க, வில்லைவளைத்துநாணிதொடுத்து குணத்தொனிவிளைக்குஞ் சிலகரங்கள், வீரகண்டாமணியை விருதாகக் கட்டிற்றொடுக்குஞ் சிலகரங்கள், கடகங்கணந் தோரணமாலைகழற்றி யெறியும் பலகரங்கள், வீணை புள்ளாங்குழல் பேரியாழ் சகோரயாழ் செங்கோட்டியாழ்முதலிய நாதசுரங்களை வாசிக்குஞ் சிலகரங்கள், உலகமெல்லாம்நிறையும்சிலகரங்கள், இவ்வாறாக விபரீதம்விளைத்துக்கொண்டிருக்க; மேலண்டத்திற்கு மேலாகப்போன சிரங்கள்பல பேரண்டத்திற்குமுட்டுக்கொடுத்ததைப்போல முட்டிக்கொண்டோலண்டையுங்குனிந்துபார்க்குஞ்சில

சிரங்கள், சிரக்கம்பஞ் செய்யும்பலசிரங்கள், கலகலவென்றுநகைக்குஞ் சிலசிரங்கள்,ஆகட்டுமென்று சொல்லிஅதட்டுங் சிலசிரங்கள்,கோஷடையிடிபோற் குமுறுஞ்சிலவாய்கள், தேவலோகம் குபேரலோகம் பிரமலோகம் முதலிய லோகங்களையெல்லா மெட்டிப்பார்க்கும் பலசிரங்கள்,சவுரியங்களைக்கூறுஞ்சிலவாய்கள். சத்துருகளைத்தூறுஞ் சிலவாய்கள், அக்கினிப்பொறிகளைக் கக்குஞ் சிலகண்கள், சிவக்கவிழித்து உறுக்குஞ் சிலகண்கள், மின்னலுடன்புகையும் பலகண்கள், துரியோதனன் சகுனி துச்சாதனன் கன்னன் என்பாரை தேடிப் பார்க்குஞ் சிலகண்கள், உபலாவியத்தை நாடிப்பார்க்கும் பலகண்கள், பத்தர்கள்மேல் அருட்பார்வை வைக்குஞ் சிலகண்கள், இப்படி பற்பலவாகிய கண்கள் கரங்கள் சிரங்கள் உரங்கள் கால்கள் வாய்கள் தோள்கள் இவற்றால் பிரளயகால நடுக்கம்போற் செய்யும் பிரமாதத்தை இந்திரன்முதலாகிய அண்டர்களெல்லாங்கண்டு, பயங்கொண்டு கண்ணீர்சோரவிட்டு மூர்ச்சையெய்தித் தெளிந்தெழுந்து நான்மறைகளினாலும்குடந்தம்பட்டுக்கூத்தாடி துதித்து நின்றனர். ஆரணனே! அரனே!புவனங்களனைத்தையும் பெற்ற காரணனே! கருணாகரனே!கமலாசனி காதலனே! பூரணனே! புண்ணியனே!கஜேந்திரவரதனே! கருணைக்கண்ணனே !நாராயணனே! லோகநாயகனே! கோபம்வேண்டாம்கோபம் வேண்டாமென்று நாகலோகத்தார்எல்லாருநடுங்கினர்; மாதவனே, மதுசூதனனே,மன்னுயிரைப்பெற்றுவளர்க்கு மங்களகுணனே ஆதவனே, யாதவனே;ஆபத்பாந்தவனே;அனுதரக்ஷகனே,ஐம்பூதமானவனே ; ஆதிமூலமே,அனாதியே, ஆதாரனே,அரவணைச் செல்வனே, உந்திபூத்தோனே, உவணகேதனனே ; உலகளந்தானே, கமலக்கண்ணனே; காயாம்பூவண்ணனே,காளமேகத்தையுங் கடலையுங் கறுக்கச்செய்யும் வண்ணனே, சங்குசக்கராயுதனே,சார்ங்கனே,திருநாதனே, சீதரனே ; பீதாம்பரனே ; பெருமானே. முகுந்தனே, முரகரீ ; வாசுதேவனே, வைகுந்தநாதனே யென்றுவானவர் வாழ்த்திப்பணிந்தனர். அந்த அரசவையிலிருந்த வீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமா கன்னன் திரிதராட்டிரன் துரியோதனன் ஒழிய மற்றையோர் சகுனி, சிந்துபதிமுதலாகிய தேசத்தரசர்கள், பதினெண் பாஷைத்தலைவர்கள் எழுந்து நடுநடுங்கி உடல் வியர்த்துக் குடல்கலங்கிக் கோவென்றலறிக்கூவி அடாபாவியென்று துரியோதனனைத்தூற்றி ; ஸ்ரீ கண்ணபிரானைப் புகழ்ந்துநின்று, தத்துவஞானசித்தத்துடனே இறையவனுடைய விச்சுவரூபத்தைநோக்கப்பயந்து, இருகரத்தையுஞ் சிரமேற்குவித்து,சுவாமி! அடியேங்கள் அஞ்ஞானத்தாற் றெரியாமற்செய்த அபராதங்களத்தனையும்பொறுத்துக்காக்கவேண்டுமென்று துதித்து,அருட்கண்ணா, மணிவண்ணா மன்னியும், வெண்ணெய் திருடியுண்டுதிருக்கூத்தாடியகள்வனே மன்னியும்,மேகநிறமுற்ற காமனைப்பெற்றவாயனுமன்னியும், பரம்பொருளாகிய வரதனேமன்னியும், மிகப்பாமரராகிய அடியோங்கள்செய்த பாவத்தைமன்னியும்,கெடுவதுதெரியாமல்விளைத்தகெடுதியை மன்னியும்,கேடிலாப்பிரமமே,எங்களைக் கேடிலாதுகாத்தருளுமென்று பலவாறாகப் புகழ்ந்துபேசியும் பாடியும் ஆடியும் பாதங்களையுஞ் சிரங்களையும்பார்க்க ஏக்கமுற்றவராய்ப்புலம்பிக்கொண்டிருந்தனர். இந்திரன் பிரமன் முதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும்

நாற்பத்தெண்ணாயிரம் பிரமரிஷிகளும் பாரிசாத புஷ்பங்களைக்கொண்டு சகஸ்திர நாமார்ச்சனைசெய்து தோத்திரஞ்செய்தனர். இதுநிற்க எழுவகைத்தோற்றம் நால்வகை யோனியென்று கூறப்பட்டஉயிர்த் தொகையாவும் கண்ணீர்ததும்பிக் கலங்கிமதிமயங்கி யேங்குகையில் பராற்பரனாகிய சர்வசுவாமி கொதியாறிய சலம்போல் கோபமாறிக்குளிர்ந்து சுகுணசாந்த மூர்த்தியாய் விச்சுவசொரூபத்தை யடக்கிப் பழயவடிவினை யுடையாராய்ப்பள்ளத்தினின்றுங் கரையேறி யாபலியினிடத்தில் தானம்வாங்கி மண்டலத்தையும் விண்டலத்தையும் அளந்து அடங்கிய திரிவிக்கிரமனைப்போல் நிற்கக்கண்டு யாவரும் வணங்கிவாழ்த்தினர். அப்படிப்பட்ட காலத்திலேயும் வணங்கா முடியோனாகிய துரியோதனன் மனங்கலங்காமல் மிகவும் இறுமாந்து எனக்குப் பட்டமானநாள்முதல் இந்நாள் வரையிலும் அனேக இந்திரசாலம் மகேந்திர சாலங்களெல்லாம் பார்த்தேன், எனக்கிது எம்மாத்திரம் போபோ, இன்னஞ் செவ்வையாகக் கற்றுக்கொண்டுவா போவென்றுசொல்லி சிங்காதனம் விட்டிறங்காமல் திடதயிரியத்துடனிறுமாந்திருந்தனன். அப்படிப்பட்டவனை ஸ்ரீ கண்ணபிரான் உறுத்துப்பார்த்துச் சொல்லத்தொடங்கினார்.

ஓ! துரியோதன மகாராஜனே? நல்லகாரியஞ்செய்தாய், நம்மைப் படுகுழியிற்றள்ளிக் கொல்லவன்றோ நினைத்தனை; உன்னெண்ணத்துக்குத் தெய்வமுஞ்சகாயம் பண்ணாமற்போய்விட்டது. என் மனைவிமார்கள் மாங்கலியபலமே என்னைக்காத்தது, இப்போதுந்நமக்கு வெகுமகிழ்ச்சி யுண்டாக்கியது. அரசர்க்கரசனாகிய நீயே அக்கிரமத்துக்குடன்பட்டால் உன்புத்திரமித்திர களத்திராதிகளையும் இன்றேகொன்று தென்றிசைக் கோமானிடத்தில் அனுப்பிவைப்பேன்; அப்படிச்செய்யாமல் மனம் பொறுத்தேன். அதேனென்னில் சிலநாள் முன்னர் நீயும் அருச்சுனனும் துவாரகைக்கு வந்து நம்மைப் படைத்துணைகேட்டபோது ஆயுதமெடுப்பதில்லையென்று வாக்குத்தத்தஞ் செய்திருந்தபடியினாலேயும், சூதாடிவென்றுதுரோபதையைத்துகிலுரிந்தராசசபையில், உங்கள் நூற்றுவரையும் நானே கொல்லுகிறேனென்று வீமராசன் சபதம்பண்ணியவீரவசனமாகியவஞ்சினமும்தப்பிப்போகாமையும் தூதுவந்தநான் சகலபகையு முடித்துக்கொண்டால் உன்பகைவராகிய பாண்டவர்களுக்குப் பெருமையில்லையென்பதுமாகிய இவற்றையெல்லாம் எண்ணிப்பார்த்ததேயின்றுஉன்னை மன்னித்துப் பிராணனுடன் விட்டுவைத்தேனன்றி வேறன்று, நல்லது துரியோதன மகாரர்ஜனே? நீ எனக்குப் பூமியிற் பள்ளம்வெட்டியபடியால் நான்உனக்கும் உன்னைச்சார்ந்த யாவருக்கும் ஆகாயத்திற் பள்ளம்வெட்டியேயிருக்கின்றேன். உனக்கு அனுகூலமானவர்களுடனே அந்தப் பள்ளத்தில் விழப்போகின்றனை! இதற்குயாதொரு ஐயமுமின்று. "முன்னளந்த நாழி பின்னளக்கும்", என்னும் பழமொழியேனும் கேட்டதில்லையா! ஒருவருக்கொருவர் உதவிசெய்தல் வேண்டுமென்றுஞ் சொல்லுவார்கள். இந்தமொழிக்குப் பொருள்சொல்லுகிறேன் கேளும்! முன்னைப்பிறவியில் யார் தீவினைகள் அளந்து தொகைசெய்துவைத்தார்களோ அவ்வளவின் படியேபின்னுக்கு அனுபவிக்கும்படியாய் அவ்வினைகள் அளந்திருப்பதை நடத்துமென்று

பொருள் கொள்ளவேண்டும்? நடந்ததெல்லாம் சன்மாந்திரமென்றும், பூர்வ
மென்றும், கதாப்தமென்றும் சொல்லப்படும். "கேடும் பெருக்கமுமில்லல்ல
நெஞ்சத்துக் கோடாமைசான்றோர்க்கணி" என்று தெய்வப்புலமைத்திருவள்
ளுவனாரும் கூறியிருக்கின்றனரோ. அப்படியன்று? ஆகையால்? இப்போது என்
னைக் குழியிற்றள்ளப் பள்ளம்வெட்டியபடியால் தெய்வம், உனக்கிதோ பின்
னாலே பள்ளம்வெட்டி யிருக்கின்றதைத் தடையின்றி யோசிக்கலாமென்று
யாவருங் கேட்கும்படியாகச்சொல்லி, பாண்டவர்சகாயன் அத்தாணிமண்ட
பம் மைய விட்டெழுந்தருளினார். அப்போது வீஷ்மர் துரோணர்முதலிய வெகு
பெரியோரும் வந்தனஞ்செய்து முகநாடிப்பின்றொடர்ந்துவர அவர்கள்யாவரை
யும்பார்த்துநகைத்துக்கேட்டீர்களா;எந்தத்தலத்தில் எந்தக்குலத்தில் இந்தமோ
சம்நடக்கும் . இவன் ஆகத்தக்கவனாயின் அன்றோ இப்படிப்பட்ட அநியாயத்திற்
குடன்பட்டான், இவன் அழிந்துபோகின்றவனாகையால் இந்தத் துன்மார்க்க
புத்தியைநினைத்தான், நீங்கள்யாவரும் அறிந்திருங்கள். என்மேற்குற்றமின்று,
நான்போய்வருகின்றேன்,நீங்களிவ்விடத்திற்றானே நில்லுங்களென்றுசொல்லிக்
கன்னனுடைய கையைப்பிடித்துக்கொண்டே சிலதூரம்போய் கேட்டாயோ
அங்கதேசாதிபதியே!நானென்னவிரோதியா இல்லையே!உனக்கும் அவர்களுக்
கும் கலகமூட்டிவிட்டவனா, நீ வேறு அவர்கள் வேறென்று பார்க்கும்படியான
வனா ; ஒன்றுமில்லையே ! பாண்டவர்கள் சொல்லிய சங்கதியைக்கேட்டு உற்
றது சொல்லவந்ததூதன்யான் ? என்னைப் படுகுழியிற்றள்ளவு நினைக்கலாமா ?
இந்தபாவமும் விண்போமா, தூதனைக்கொல்ல நினைத்தகுற்றம் ஆசந்திரார்
க்கபரியந்த நீங்காதிருப்பது மன்றி அவன்செல்வமு மோங்கமாட்டாதே,
அவனுடைய புத்தியை நீயேயாராயும் ; அவனுக்கு இன்னந்தகுந்தயுத்தி
களைச் சொல்லவேண்டும்? நீர் நில்லுமென்றுசொல்லி நாலடிபெயர்த்துவைத்
துப்போய், மறுபடியும் நினைப்பு வந்தாரைப்போல் கன்னனை யழை
த்து கன்னராஜனே நீர் சாஸ்திர விசாரணையையுடையவர் நல்லயுக்திசாலி,
சாமர்த்தியர், விவகார முடையவர், மிகுகொடையாளி, அங்கதேசாதிபதி
எல்லாப்பாக்கியமும் உனக்கிருக்கின்றது ஆயினும் ஒருகுறை கண்டு கவல்
கின்றேன். அதாவது நீரின்னாரென்றும் ; தாய்தந்தையர் இன்னாரென்றும்! தெரி
ந்து கொள்ளாமலிருக்கின்றீர் ; உலகத்தாரெல்லாரும் சூதபுத்திரனென்றே பச்
சையாய்ச் சொல்லுகின்றனர். நீர்இராச சபையிலிடத்தில் யாரேனும்இவ்விழி
வாகிய சொல்லைப் பேசினால் அப்போது குன்றிப்போகின்றீர். அதுஞாயந்
தான், எவ்வளவுஅழகும் செல்வமுந் தவமுமிருந்தாலும் குலமோசம்வரலா
காதே,வந்தாலோ குணமோசம்போகுமே, நானுமப்படியேதா னெண்ணியிருந்
தேன், அப்பால் விசாரிக்குமிடத்தில் உமது உத்தமப்பிறப்புமுதலிய நன்மைக
ளெல்லாங்கேட்டு மேலாகியபெருங்களிப்புமடைந்தேன். இச்சந்தோஷ சமா
சாரத்தை உமக்குச் சொல்லவேண்டுமென்றே இவ்வளவுதூரம் வந்தேன்.
மேலும் நானறிந்தும் உமக்குச் சொல்லாவிட்டால் என்னளவு சிநேகத்து
ரோகி இவ்வுலகத்திலிரான்; ஆதலால் கொஞ்சம்ஞாபகமாய்க் கேளும், குந்தி
போஜ மகாராசா குமாரத்தியாகியும், பாண்டுமகாராசா பத்தினியாகியு

யிருக்கின்ற குந்திதேவி தன் றந்தையிடத்தில் கன்னிகையா யிருக்கும்போது, துருவாசர் அருள்செய்தமந்திரம் ஐந்தில்ஒருமந்திரத்தைப் பரிக்ஷிக்க நினைத்து ஜெபித்தனள் ; அம்மந்திரத்துக்கு அதிதேவதையாகிய சூரியபகவானறிந்து குந்திதேவிக்கு அனுக்கிரகிக்க உடனே உம்மைப்பெற்றாள். அச்சூரியனுடைய வரத்தினால், கன்னியாகவேயிருந்து பின்பு பாண்டுராஜனைக் கலியாணம் பண்ணிக்கொண்டு மூன்றுமந்திரங்களால் தருமராசன் வீமசேனன் அருச்சுனன் என்னுமூன்று பிள்ளைகளையும்பெற்றுக்கொண்டனள்:மற்ற ஒருமந்திரத்தையும் தன்சக்களத்தியாயும் பாண்டுராஜனுக்குஇரண்டாவது மனைவியுமாகிய மத்திரைக்கு அநுக்கிரகஞ்செய்து திவ்யமான பிள்ளைகள் ஒருகர்ப்பம் ஒருபிறப்பாய் நகுலசகாதேவரைப் பெற்றுக்கொள்ளச்செய்தனள். கன்னராஜனே? கன்னிகைப்பருவத்தில்முதலிற்பெற்ற பிள்ளையாகிய உம்மைவளர்க்கப் பாக்கியம் பண்ணாமல் உலகம்பழிக்கும் என்றும்,அரசன் பெண்ணாகியபிரதை கலியாணமில்லாமல் கணவனைச்சேர்ந்து பிள்ளையைப்பெற்றாளென்றும்,“தேரைமோந்த இளநீர்”என்னும்பழிபோல்வருமே,தன்தகப்பனுடைய நீதிக்குக்குறைவுண்டாமேயென்றுமேங்கி உடனே,ஒரு பெட்டியில்வைத்து ஆற்றில்விட்டுவிட்டனள், மற்றக்காரியமெல்லாம் உமக்குத்தெரிந்தே யிருக்கின்றது; நானினி விரித்தொன்றுஞ் சொல்லவேண்டியதின்று. ஆயினும்! பாண்டவர்களுக்கு மூத்த தமையன் நீரேயாகையால் இவ்வரசாட்சியைவெற்றி கொண்டாலுஞ்சரியே! அல்லது விட்டாலுஞ்சரியே; இன்றுமுதல் உனது தம்பிமார்கள் ஐவரும் வணங்க நீருமிணங்கிசகோதர வாற்சல்லியமே விடும்படிபொருந்தி வாழ்வைப் பெற நான்கண்ணாற்கண்டு களிக்கவேண்டுமென்று ஆசைகொண்டு இந்தமொழியை விண்டேன். ‘இரண்டாம்பேருக்குத் தெரியவேண்டாம். மனமுண்டானால் இரண்டாநாளேவந்து சேருவது உத்தமம் ; அப்பாலுமதிட்டம் என்மேற் கோபம்வேண்டாம் என்றுசொல்லினர். அதைக்கேட்டுக் கன்னராசன் சொல்லத்தொடங்கினான்.

ஓ! கண்ணபிரானே இன்றெனக்கு நல்லகாலம், என்குலகோத்திர முதலியனயாவுந் தேவரீர்வாக்கியத்தால் தெரிந்துகொண்டு தன்னியனானேன், சுகமடைந்தேன், கிருதார்த்தனானேன், கீர்த்திமானானேன், ஆனால் ஒருவார்த்தை சொல்லுகிறேன். பாண்டவர்கள் என் தம்பிமார்களென்று இப்போதறிந்துகொண்டயான் அவர்க ளிடத்தில்வந்து சேர்ந்துவிட்டால் அடாபாவி ; ‘எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை செய்ந்நன்றிகொன்றமகற்கு’ என்று தேவர்கூறியதை யுணராமையால் நன்றிகுன்றினவனேயென்று நாலுபேரும்நகைக்கஉடம்பெடுப்பேனேயல்லதுதெரிந்தயோக்கியனென்றுமென்னை நினைக்கப்போவதில்லையே; உலகமுநிந்திக்குமே,என் தம்பிமார்களுந் தேவரீரும் என்னை எவ்வளவாகமதிப்பீர்கள் ; அதுமரியாதையன்று? மேலும் ஆற்றில் மிதந்துவந்த என்னை எடுத்து சூதநாயகன்வளர்த்து வந்தகாலத்தில் இன்ன ஊர் இன்னசாதி இன்னகுடி இன்னகோத்திரம் இன்னானென்று எதுவுமறியாமல் மனங்கூசாமல் என்னையாதரித்து அங்கதேசாதிபதியாக்கி அஸ்தினபுரத்தின் செல்வங்களையெல்லாம் என்வசத்திலொப்பித்துத் தன்னுடன் சரி

யாசனத்திலுமேற்றி சகலராசரும் பணியும்படிசெய்து தம்முனேப் பார்க்கிலும் விசேடமரியாதை யுடையவனுய்ப் பேதமில்லாமல் உடலிரண்டு உயிரொன் றென்றுரைக்கும்படி மலரும் மணமும்போல் வைத்திருந்த மகாராசனுகிய துரியோதனராசனுக்கும் பாண்டவருக்கும் பகைமேலிட்டு உனக்கெனக் கென் றிருக்கையிற் செய்தநன்றிகுன்றிய தீயரேபோல் நான் என் தம்பிமாரிடத் திற் கூடிக்கொள்வது ஞாயமாமா! நீரேசொல்லுமென்று மிக்கவன்புடனே டுத்துச்சொல்ல, பச்சைத்திருமேனியையுடைய பராற்பரனுகிய கண்ணபிரான் சொல்லலாயினன்.

ஐயா, கன்னனே! நானறிந்துகேட்டதையும்நான்சொல்லவேண்டிய கட மையையுஞ் சொல்லிவிட்டேன். அப்பால் உன்னிஷ்டத்திற்குச் சரிவர நடக் கலாமென்று விடைபெற்றுக்கொண்டு அசுவத்தாமா அவ்விடத்தில் நிற்கக் கண்டு வாருமையா! அசுவத்தாமாவே யென்று கையைப்பிடித் தழைத்துக் கொண்டே நடந்துபோய் குருபுத்திரனே! நான் கேட்டகாரியமும் துரியோ தனன்சொல்லிய விடையும் எனக்குப் பள்ளம்பறித்ததும் இவையெல்லாம் உமக்குச் சம்மதமாயிருக்கின்றனவா? ஐயோஅநியாயமாய் பதின்மூன்றுஆண் டு நாட்டைவிட்டுக் காட்டில்வருந்திவந்த பாண்டவருக்கு அவருடைய நாட் டையுங்கொடாமலஐந்துவீடாயினுங்கொடுப்பதில்லையென்றுஞ்சொன்னுல்அவ ர்களென்ன விடப்போகிறவர்களா, உமக்கென்னதெரியாதா? நாளைநடக்குங் கதியைநாமெல்லோரும்அறியவேபோகின்ரும் பதருதகாரியஞ்சிதருது என் னும்பழமொழிபொய்யோ அதுபோகட்டும், இத்துரியோதனனுக்கு இவ்வளவு கர்வமென்ன உங்களையாவாகிய துரோணரையும் ஆசாரியரென்றும் பாராமல் ஒவ்வொருசமயத்திலெடுத்தெறிந்துபேசுவதாயுநான்கேள்விப்பட்டிருக்கிறேன்; உம்மிடத்தில் மெத்த பயங்கரமாயிருக்கின்ருனும் இப்படிப்பட்டவர் இத் திரிலோகத்திலும் உமக்கு மிஞ்சியவர்க ளொருவருமில்லே, ஐயாவுமக்குஅருச் சுனன்மேல் பக்ஷமுண்டு, நீங்களே பள்ளிக்கூடத்துக் கூட்டாளியாயிற்றே, நீங்களொருவருக்கொருவர் வைத்திருக்கும் பக்ஷத்தை நான் சொல்லவேண் டியதின்று, அதற்குஉங்கள்மனமேசாக்ஷி, இன்னொருகாரியம்உண்டு,துரியோத னன்உம்மைவணங்கி வழிபட்டு நாளை நடக்கப்போம் போரில்சேனுபதியாயிரு க்கச் செய்வானென்றுநானினைக்கிறேன், ஒருவேளை அவ்வண்ணம்நேரிடுமானுல் உங்கள்தகப்பனுருக்குச் சீடராகியபாண்டவர்கள்உமக்குஞ்சீடர்களேயன்ருே! அவுஷியம் பிதுராசாரமென்னுந் தன்மைபோல் உங்கள் தந்தையார்வைத்திருக் கும்பட்சம்போல்பாண்டவர்களிடத்தில் உமக்குமிருக்கவேண்டுமென்ருே! ஒரு தவியுஞ்செய்யவேண்டாம்,சேனுதிபதிபட்டமொன்றையும் ஒப்புக்கொள்ளவே ண்டாம்,எவ்வாருயினும் விலக்கிவிடும்,பாண்டவர்களுக்குஉம்மாலாகியஉபகா ரமிது வென்றுவாயினுல் பேசிக்கொண்டு பின்புதமதுவலக்கரத்தின் விரலிலிரு க்குமுத்திரைமோதிரத்தைப் பெருவிரலினுத்தளர்த்திநிலத்தில்விழச்செய்தன ர்.அப்போதேநிலத்தில்விழுந்தஅம்மோதிரத்தை அசுவத்தாமாகண்டுஇறங்கியெ டுத்து ஐயனே? இதோமோதிரங் கீழேவிழுந்ததென்று கொடுத்தனர்; அதை வாங்கக் கைநீட்டினவரேபோல் கையைக்காட்டி ஆகாயத்தைப் பார்த்துஅசுவ

த்தாமாவே, சூரியனைப் பரிவேடஞ் சூழ்ந்திருப்பதைப் பார்த்தீரா! மழைக் கொப்பாயிருக்கின்றதே, நானுஞ் சேனைகளும் பாண்டவரிருவருக்கும் உபலாவியம்போய்ச் சேருகிறவரையிலும் மழையில்லாமலிருக்குமாவென்று கேட்டனர்; அசுவத்தாமாவும் அம்மோதிர மெடுத்தகையைநீட்டி ஆகாயத்தைகாட்டி. ஆய்! சூரியபரிவேடமேயென்றான்; கண்ணனும் அப்பால்நிலத்தைப்பார்த்துக்கையைக்காட்டினான், அசுவத்தாமாவும்அவர்கையில் மோதிரத்தைவைக்க அதை வாங்கிக்கொண்டு நல்லது போய்வாருமென்றனர். கண்ணபிரானும் விடைபெற்றுக்கொண்டு தம் எண்ணங்கள் நிறைவேறியனபோகு இன்னமென்னவிருக்கின்றனவென்று எண்ணிமகிழ்வடைந்து தேவர்களெல்லாம் பூமாரிபொழிந்து போற்ற சாத்தகியாழ்வான் முதலிய சகலசனங்களுடனேயும் விதுராழ்வான் அரண்மனைவந்து உணவுண்டு இளைப்பாறியிருந்தனர்.

இப்பால் அசுவத்தாமா கண்ணபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அரசவைக்குப் போகும்போது அவ்விடத்திலிருந்தசகுனி முதலானோரும்அசுவசுவததாமாசெய்த குறிப்பைக்குற்றமாகப் போதனைசெய்து துரியோதனனுடைய மனத்தைக் கலைத்துவிட்டனர். அப்போது வணங்காமுடியோன் மனம் பதைத்துச் சபையிலுள்ளார் யாவரையும்பார்த்து பார்த்தீர்களா;கேட்டீர்களா பகையாளி தூதனென்றுவந்த அப்பஞ்சையைப் பொருட்படுத்தி அவன்பின்னே சென்றதும்; யாவருக்கும் போதிக்கும் ஆசிரிய புத்திரனாகிய இவ்வசுவத்தாமாவுக்கு அவன் போதித்ததும்; அப்படியே இவன் உடன்பட்டு துரியோதனன் எனக்குச் சேனாபதிபட்டங்கட்டினால் பாண்டவர்கள் பக்ஷத்திலிருந்து துரியோதனனைக்கெடுத்து விடுவேனென்றுசொன்னதும், அக்கண்ணன் இவன்சொல்லைநம்பாமல் வாக்குறுதி பண்ணிக்கொடுவென்றுகேட்டதும், அப்படியே ஆகாயம்பூமியுமறியபாண்டவர்களைக் காக்கின்றேனென்று பரவசஞ்செய்து கொடுத்ததுமறியீரா? இந்த மித்துருத் துரோகிகளை எப்படிநம்புவதென்றுஉரக்கக்கூவிஐயோ! என்னுடையசோத்தைத்தின்னத்தக்கவரெல்லாமிப்படியாயிருக்கவேண்டுமோ, தெய்வமே என்றுசிந்தித்தனன். அப்போது அவ்வசனத்தைக்கேட்டுக்கொண்டு சபைக்குவந்த அசுவத்தாமாவைத்துரோணர்முதலானோருஞ்சிந்தித்தனர். அசுவத்தாமாசிந்தித்துநானொரு பிரமாணமும் பண்ணிக்கொடுத்தேனில்லை, அவரும்பிரமாணங் கேட்கவுமில்லையே. இவ்வாறிருக்க இப்படிப்பட்ட அபவாதம் எப்படியாக விளைந்ததென்று யோசித்து; சூரியபரிவேடங் காட்டியது ஆகாயத்தைக் காட்டியும்; பூமியில்விழுந்த மோதிரத்தையெடுத்தது பூமியைத்தொட்டு சத்தியஞ்செய்ததென்றும்தாபித்து விட்டனர். இதுசரியாய்விட்டது; இனிநாமெத் தனைவிதமாய்க்கற்ற உண்மைகளைச்சொன்னாலும் சிறிதேனும் நம்புகின்றிலர். ஆ ஆ கிருஷ்ணா? உன்னெண்ணத்தில்வைத்துக்கொண்டுபண்ணியசூதாவிது, நன்று நன்று,உன்னெண்ணநிறைவேறிற்று? இவ்வையமெல்லாம என்னை வஞ்சகனென் றுரைக்கும் படியாக ஒருபேர் மாட்டிவிட்டையே! சபையிலிருந்த எல்லார்மனத்தையும்பம்பரம்போலாட்டிவிட்டையே! செந்தாமரைநாட்ட முடையானே! நீயேயிப்படி மித்திர பேதஞ்செய்யக்கங்கணங் கட்டிக்கொண்டால் பாண்டவர்களுக்குப்பகைவருமுண்டோ! ஆண்டவனேயென்று எண்ணிக்கொண்டிருந்தனன்.

அப்பால் விதுராழ்வான் வீட்டிற்சென்ற சதுரனாகிய கண்ணபிரான்பகற்
காலமெல்லாம் இளைப்பாறிக்கொண்டேயிருந்து சாயங்காலம் தங்களத்தையா
கிய குந்திதேவி அரண்மனைக்குச் சென்றனன். இந்திரன்முதலிய வமரரும்
துதித்துப்போற்றி; நமது இறைவன் நமக்காகப் பொன்னடி பெயர்த்தருளி
யின்னபாடுபடுகின்றானென்றுதோத்திரஞ்செய்து வாழ்த்தினர். அதுபோது, வசு
தேவருடனே பிறந்த நல்லத்தையாகிய குந்திதேவி எதிர்கொண்டுவந்துகண்டு
மருமகனைத்தழுவி வாழ்த்தவும், கோபாலகிருஷ்ணன் குந்திதேவியைத்துதி
த்து மாமி, கொடையாளியாகிய கன்னனிடத்திற்குப்போய்வந்தையாவென்று
மகிழ்ச்சியுடன் கேட்க, இன்னமும் போகவில்லையென்று இதுதருணம்
போய் வாவென்று பயணங்கூட்டி யனுப்பிவிட்டான், உடனே பிரதையும்
தன் மூத்தமகனைப்பார்த்துப் பேசவேண்டுமென்னும் ஆசைமேலிட்டு நேச
முள்ள அக்கன்னனுடைய கொலுவாசலுக்குப் போயபோது வாசற்காவ
லாளர், விரைந்தோடிச்சென்றுஅங்கதேசத்தரசே! நிங்கள்குலத்துப் பாண்டவ
ராசன் பட்டத்தரசி குந்திதேவி நமது கொலுக்கூடவாயலில் எழுந்தருளினா
ரென்று இறைஞ்சிக்கூறினர். அவ்வார்த்தையை அங்கதேசாதிபன்கேட்டு
எதிராகச்சென்று பிரதக்ஷணஞ்செய்து சாஷ்டாங்கதெண்டனிட்டுப்பாதபூசை
செய்து மிகுந்தவன்புடனழைத்துக் கொண்டுபோய் ஆசனமமைத்து அத
ன்மேலிருத்தி பிரமானந்தம் அடைந்தான். தாயாகிய குந்திதேவியும் குமா
ரனைப்பார்த்து சந்திரனைக்கண்ட கடலேபோற் சரீரம்பொங்கிச் சந்தோஷ
மடைந்தனள். இவ்வாறாக இருவருமகிழ்ந்து ஒருவரையொருவர் உற்று நோக்
கினர்; கர்ணமகாராசன் கண்ணீர்சொரிந்து, அம்மா? ஜன்மாந்திரங்களிலே
நான் நல்லதவம் செய்திருந்தமையால்எனக்குத் தரிசனங்கொடுக்க இவ்விடத்
திற் கெழுந்தருளினீர், என்பாக்கியமே பாக்கியம் தாயே தேவரீர் இவ்வளவு
தூரந் திருவடிவருந்த வரவிருந்தகாரியமென்ன? திருவாய்மலர்ந்தருளவேண்டு
மென்று கேட்க, அதற்குக்குந்திதேவி சொல்லலாயினாள், குழந்தாய்! நீ என்
னுடைய பிள்ளை, நானுன்னைப்பெற்றதாய்; அதெப்படியென்றால்? தன்னந்தனி
யாய் கன்னிகைப்பருவமாய் என்வீட்டிலிருக்கும்போது துருவாசமுனிவர் என்
னுடைய தந்தையாகிய குந்திபோசனிடத்திற்குவந்து வந்தனம் மரியாதை
களைப்பெற்று ஆசீர்வதித்து, சாதுர்மாதவிரதஞ்செய்ய வேண்டுமென்று சொ
ல்ல, அதற்குடன்பட்டு என்தந்தை அம்முனிவருக்கு பலப் பணிவகைப்விடை
களுஞ் செய்யும்படி எனக்குக் கட்டளையிட்டனர். அப்படியே முதல்நாளைப்
போல் பலநாளுஞ் சகலவுபசாரங்களுஞ்செய்துகொண்டு வந்தேன், அப்போது
அம்முனிவருக் கென்மேற்கிருபைவந்து மகிழ்ந்து ஐந்துதேவதைகள் பேரால்
ஐந்துமந்திரம் உபதேசஞ்செய்து ஆசீர்வதித்துச் சென்றனர்.

அப்பால்? பாலையாகிய யான் எதுவுந்தோன்றாது, அம்மந்திரத்திலொன்
றைப் பரிக்ஷிக்கும்படி யெண்ணியுச்சரித்தேன்? அக்கணத்திற்றானே அம்மந்
திரத்திரத்துக் கதிதேவதையாகிய சூரியபகவான்தன்கிரணங்களைச்சுருக்கிக்கட்
புலனாகவந்து தருணியாகிய எனக்கு கன்னிகைப்பருவங் குறைவில்லாம லிரு
க்கும்படி வரங்களைப்பெருக்கி அநுக்கிரஞ்செய்தனர்; உடனே என் கர்ப்பத்

தில் நீ வந்துதயமாயினை, மகனே? அந்தவேளையில் உன்னுடைய திருவுருவத்
தையும் கவசகுண்டலத்தையுங் கண்டு களிகூர்ந்தயான், கன்னிகையாதலால்
கண்கலக்கமுற்று ஆளனில்லாமல் ஆண்பிள்ளைபெற்றாள் அரசனுடைய மக
ளென்று யாவருஞ் சொல்லிப் பழிப்பரோ! தந்தைமுதலிய பந்துக்களும் நிந்திப்
பரோ, குடிகேடியென் றென்னைக் குறித்துக்கோபிப்பரோ, குணவதியிப்படி
யாயினளெனக் கூறுவரோ, எனக் குலைகுலைந்து பலவாறாக நினைந்து பழிக்கஞ்
சின பாவியாகியயான் ஒருபெட்டகத்தி லுன்னைவைத்து ஆற்றில்விட்டுவிட்
டேன் அன்றுமுதலாகவெனக்கொன்றுந்தெரிந்திலது; அப்பனே! இன்றறிந்துன்
னைப் பார்க்கவந்தேன்; என் கண்மணியே? உன்னையெடுக்கவும்; மார்போ
டணைத்துப் பால்கொடுக்கவும்; நீராட்டவும்; தாலாட்டவும்; சந்திரனைக்கா
ட்டவும்; சப்பாணிகொட்டவும்; ஆபரணம்பூட்டவும்; தத்தடியிட்டு நடக்க
வும் சிறுதேருருட்டவும் சக்கரையுங்கைக்கும் குதலைமொழிபகர்ந்து; அம்மா
வென்று நீ அழைக்கவும்; சீராந்தழைக்கவும்; பாக்கியஞ்செய்யாத பாவியா
னேனே. அடாபாலனே! நானுக்குத்தாயென்றும்; நீயெனக்குமூத்தமகனென்
றும் பாண்டவர்களுனக்குத் தம்பியரென்றும் ஐயமில்லாமலுனக்குத் தெரி
விக்கவந்தேனென்று சொல்லி சிந்தைவருந்தினின்றனள். இம்மொழிகளெல்
லாம் குந்திமுதற்புத்திரனாகிய கன்னன்கேட்டு அம்மே! சினங்கொள்ளவேண்
டாம்; அடியேனொருமொழி சொல்லுகிறேன்; இதுகாறும் இல்லாததாய் இப்
போது எங்கேயிருந்து வந்தீர்; இவைகளெல்லாம் தேவரீரை ஆளாக்கிஅனுப்பி
வைத்த ஆளையறிவேன். மேலும் உமதுவாக்கியம் உண்மைதான், அதற்கை
யமொன்றுமில்லை; அப்படியாயினும் நானிப்போதுநம்பேன்! அதேனெனில்,
எவராயினுந் திரவியசம்பன்னரா யிருப்பாராயின் அவரை,என்பிள்ளை, என்
தமையன்,என்தம்பி,என்மாமன், என்தந்தை, என்உறவு, என்உரிமை,என்று
சொல்லுவது இவ்வுலகவியற்கை, ஆகையால்? துரியோதன மகாராஜனுடைய
சம்பத்தெல்லாம் என்பற்றா யிருக்கின்றமையால் எனக்குத்தாயென்று பலர்
வந்து நான்பெற்றேன் நான்வளர்த்தே; னென்றனர் அப்போதுநான் மிக
மனத்துயர்கொண்டின்று 'அன்னையெத்தனை யெத்தனையன்னையோ அப்ப
னெத்தனை யெத்தனையப்பனோ' எனமொழிந்தபெரியோர்களுடையசொல்லுக்
கிணங்கி யிருக்கின்றதே நமது பிறப்பென்னநாணமுற்று சூதநாயகரையும் அவ
ரது மனைவியாகிய இராதையம்மனையும் வணங்கிநோக்கி! என்வரலாறென்ன
வென்றுகேட்டேன். அவர்கள் சொல்லியதாவது; குழந்தாய்! பிள்ளையில்லா
மல் வருந்தியிருந்த எங்களுக்குப் பிள்ளைகலிதீர்க்கும்பெருமானே!நீபெருகியஆ
ற்றில்பெட்டியில்மிதந்துவந்த பெருமானே! உன்னைக்கண்டெடுத்துவந்து வளர்த்
துப்பேரிடவேண்டுமென்று யோசிக்கும்போதுகன்னனென்று பெயரிடும்படி அ
சரீரி வாக்கியம்பிறந்தது; அப்படியேபெயரிட்டு எங்களாற்கூடியசீரிட்டுவளர்த்
தோம்? அப்பனே! இது நீவந்த வரலாறென்றனர். அதைக்கேட்டுப்பின்னரு
அவர்களைப்பார்த்துநல்லது, நான் வந்தபெட்டியில் ஏதாகிலும்எழுதியிருந்ததா,
அல்லது வேறு பொருளாயினுமிருந்ததா, அந்தப்பெட்டியெங்கேயென்றுகேட்
டேன்; வேறொரு பொருளுமில்லை; அந்தப்பெட்டியிதோ யிருக்கின்றதென்று

கொண்டுவந்து வைத்து அப்பாமகனே? இந்தப் பெட்டியைக் காப்பாற்றிய தன்மையைப்போல் உன்னைக்காப்பாற்ற வில்லையேயென்று சொல்லினர்; அப்போதோஎனக்குப் பதினொன்றும்வயதாகையினாலும் தனுர்வேதங்கற்றுத்துரியோதனமகாராசனுடைய சம்பத்தை அனுபவிக்குங்காலமாகையாலும்அந்தப் பெட்டியைஎடுத்துவந்துஎன் அரண்மனையில்பூசைவீட்டில் வைத்துக்கொண்டு நித்திய பூசைதூபதீபமுங்கொடுத்துவந்தேன். அக்காலத்தில் ஒருநாள்என்னை யாதரித்த மாதா கர்ப்பம்போன்ற அந்தப் பெட்டியைத் திறந்துபார்த்தேன்; அதனிடத்தி லொருநாக வுரிப்பட்டை நாலாகமடித்து விரித்திருந்தது; அது என்கண்ணுக்குத் தோன்றினமையால் நானெடுத்துப் பூசித்துவைத்திருக்கின்றேன். அம்மா? அக்காலத்தில் எனக்குத் தாயென்றுவந்த மாதர்களிடத்தில் இந்தப் பட்டுவஸ்திரத்தைக்கொடுத்து உடுத்திக்கொள்ளச் சொன்னேன்; அவர்களும் உடுத்திக்கொள்ளத் தங்கள் கரத்தில்வாங்கி விரித்தவுடனே சிரத்தைத்திருப்பி உள்ளுடைந்து உதிரம்வறண்டு அக்கினிக்கொழுந்தின் அனல் வந்துவீச வெருண்டு அடித்துயோதிவிழுந்து ஓடிப்போய் விட்டனர். அம்மா! பலர் என்னிடத்தில் தாயென்றுவந்தே பேய்போற்கதறிப்போவர். அதனால் அன்றுமுதல் இன்றுவரையிலும் தாயென்று வருவாரொருவருமில்லை என்றனன். அதைக்கேட்ட குந்திதேவி குலுங்க நகைத்து, அடா என் புத்திரசிகாமணியே? உன்னைப்பெற்ற நாளையில் உடுத்திக்கொண்டிருந்த பட்டு வஸ்திரத்தை உன்னுடம்பு வருந்தாமல் பெட்டியில்வைத்து விட்டேன், பின்னரும் அந்தப்பட்டோ சுசி ஆசாரம் பத்தி இவைகளெல்லாம் உள்ளவர்க்கே தோன்றுமல்லது மற்றையோருக்குத் தோன்றமாட்டாது, எதோ அந்தவஸ்திரத்தை யெடுபார்ப்போமென்றுஇயம்பி நின்றனள். அப்படியே பரிக்ஷிக்கவேண்டுமென்றுள்ளங்கொண்டகன்னன் பரிவுடன் அக்கணமே எடுத்து வந்துகொடுத்தான். அதைவாங்கிச் சற்றுநேரம் சூரியபகவானைச் சிந்தித்து நாகவுரிப்பட்டை போன்ற ஆடையைப்பிரித்து அரையி லுடுத்திக்கொள்ளவேவருந்தாமல் தாமரைமலர்போல்விளங்கிய முகமுடையளாயிருந்தனள். அதைக்கண்டுபிரமானந்தங்கொண்டு அமுதமுண்ட அமரனைப்போல் அன்புநிறைந்து அன்னைதிருவடியில் நெடுமரமேபோல விழுந்து என்னை இன்னானென்று தெரியச்செய்த இறைவியேசரணமென்றுஇறைஞ்சிநின்றான். அதுபோதுகன்னன்செய்தஉபசாரமும் தோத்திரமும் இன்னவகையென்று எம்போல்பவரா லியம்பப்படமாட்டா. அந்தக்காலையில் கன்னனாகியபிள்ளையைக்கட்டித் தழுவிக்கொண்டு உச்சிமோந்து உடலுடனுட லணைத்துடம்பெல்லாந் தடவிக்கொடுத்து உன்னைவளர்த்தெடுக்கப்பாக்கியம்பண்ணுமற் போனேனேயென்றுமனம்வருந்தினாள். அப்போதுமகனாகியகன்னன்சொல்லுகின்றான். தாயே நீர் நல்லபூசை விரதம் நோன்புதவம் பெரியோர்நேசம்முதலிய பாக்கியமெல்லாம் பெற்றவராகையால் ஆறுபிள்ளைகளைப்பெற்றுஐந்துபிள்ளைகளை எடுத்துவளர்த்துப் புத்திரவாஞ்சையை நீக்கிவிட்டீர். அடியேனோதேவரீருடைய கையிலிருந்துவளரவும், பாண்டவரைவரும் எனக்குத் தம்பியென்று பார்மதிக்கவும்பாக்கியஞ்செய்யாதபாவியானேனே, தாய்தந்தை தம்பிசாதிகுலமுதலிய தன்மைஇன்னதென்று சம்பிரதாயத்தைத்

தாரணியோர் சொல்லிக்கொள்ளும்படி தவஞ்செய்யாத தரித்திரனானேன், இன்றெனக்கு நல்லகாலமாகையால் உம்மைக்கண்டு தரிசிக்கப்பெற்றேன், என்மனக் குறைகளெல்லா மற்றேன், மேன்மையுற்றே னென்றான்; பின்பு தாயும்பிள்ளையுஞ் சந்தோடத்துடன் வார்த்தையாடி மகிழ்வுற்றனர். குந்திதேவி கன்னனைப்பார்த்து அப்பனே! இதுவரையிலும் உன்பிறப்பைநீயறியாமையால் சுயோதனனிடத்தி லிருந்தாய், இனிநீஇன்னானென்றறிந்து கொண்டமையால் பாண்டவராகிய தம்பிமார்குற்றேவல்செய்யச் சிங்காதனத்தில் வீற்றிருந்து தேசதேசராசரும் வந்து விசுவாசமாகப் பணியவும் புவனசக்கரேஸ்வரன், புண்ணியசாலி தருமபூபதிக்கு அண்ணன், கன்னமகாராசனென்று விண்ணவர்முதலிய யாவரும் சயங்கூறிக் கொண்டாடவும் அத்தினபுரத்திலிருந்து அரசாள்வதிலும் வேறாகியவைபவம் ஒன்றுமில்லையே, அப்படிசெய்வதே கடனென்று சொல்ல : அதைக்கேட்டுக் கன்னன் சொல்லத்தொடங்கினான்.

தாயே ? சூரியபகவானுடைய அநுக்கிரகத்தினால் என்னைப்பிள்ளையாய்ப் பெற்றுப் பிறர்பழிப்பார்க ளென்றஞ்சிப் பெட்டியிலிட்டுப் பேராற்றில்விட்டுப்புத்திரப்பேராசையை நிராசைசெய்துகொண்டு பெற்றாளுமல்லள் பெறாதாளுமல்லளென்றுஎன்னை மறந்துவிட்டையே, உன்கர்ப்பத் தினலத்தினாலேயோ அல்லதுஎன்னைப்பெற்றசூரியபகவானுடைய அருணலத்தினாலேயோ, சன்மாந்திரத்தில் நான் தேடிக்கொண்ட தபோபலத்தினாலேயோ, உயிர்பிழைத்து ஆற்றில் மிதந்துவரச் சூதநாயகனும் இராதையும் என்னையெடுத்து வளர்த்தனர். திரிதராட்டிர மகாராசன்கேட்டுத் தன்குலத்திற்குரிய பிள்ளையாகச் சகலசெல்வத்துடன் காத்துவந்தான். 'இத்தனைபெரியவன்கை தொட்டிழுத்தால் எப்படிமாட்டேன்' என்னும்பழமொழியேபோற் சூதநாயகனும் இராதையுந்தடைசொல்லா திருந்தனர். நானுங் குழந்தையாதலால் செல்வத்தில் வளர்ந்துவந்தேன், அப்பால் துரியோதனாதியரும் பிறந்தனர்; நான்பரசுராமரிடத்தில் தனுர்வேதமுங்கற்றேன், துரியோதனன்முதலியோரும் பாண்டவர்களும் உரியவராக விருந்து துரோணாசாரியரிடத்தில் வில்வித்தை கற்றுக்கொண்டு பரிசைபார்க்கும்போது அருச்சுனனுக்கும் எனக்கும்பகைநேர்ந்து சபதங்கள் கூற; துரியோதனமகாராசன் என்னை உயிர்த்தோழனாகக்கொண்டு அங்கதேச பட்டாபிடேகந்தரித்துப் பொன்மாலையென்னும்பெண்ணைச்சுயம்வரத்தில் கலியாண முடித்து வைத்துத் தன்னுடன் கூடச் சரியாசனத்தி லேற்றித் தம்பியரும் சகலராசரும் போற்றிசெய்யச் சுற்றத்தவர்முதலிய யாவருந்தொழும்படிசெய்து சகலசெல்வமும் என்னிடத்தி லொப்பித்துப் பொற்பள்ளயத்தில் கூடவிருந் துண்ணும்படிச்செய்து பேரும் பிரபலமும் புகழும்பெருமையும் உண்டாக்கிப் பேதமில்லாமல் பாதுகாத்துவந்தனன். இதல்லாமலும் இன்னமொரு விந்தையுண்டு! கெடிஸ்தலாதிபதிபதியாகிய சுயோதன மகாராஜா தர்மபத்தினியாகியபானுமதியும்நானும்தன்னந்தனியாய்ஏகாந்தத்தானத்தில் சொக்கட்டானாடிக் கொண்டிருந்தோம்; அந்தவேளையில் துரியோதனராசன் வந்தான்! அவன்வருவதை நோக்கப்பார்த்த பானுமதியோ ஆட்டத்தை விட்டெழுந்தனள். அரசன்வந்ததை நானறிந்துகொள்ளாமல் தோல்வி

வெற்றி இரண்டும் பார்த்துவிட் டெழுந்திருமென்று அரையிற் கட்டியிருந்த மேகலாபரணத்தைப் பற்றினேன், அப்பட்டத்தரசி அவசரப்பட்டுப் போம் போது மேகலையறுந்து பலபலவென்றுதிர்ந்தது. அவ்வன்னை அரைவத்திரமுந் தளர்ந்தது, இவ்வலங்கோலத்தைப் பார்த்துக்கொண்டுவந்த அரசன் அண்ணு! மேகலாபரணத்தைப்பெறுக்கியெடுக்கவா அல்லதுகோக்கவா என்றுகேட்டான். அப்படிப்பட்ட சாந்தமூர்த்திக்கு வஞ்சகஞ்செய்து உம்முடைய அஞ்சுபிள்ளைக ளிடத்தில்வந்து சேரச்சொல்லி நீரழைப்பதும் உமதுவார்த்தையைக் கேட்டு நான்வந்துவிடுவதும் தருமமாமா! நீரேசொல்லும். இதன்றி க்ஷாத்திரமேவிட்டுப் பாண்டவர் சண்டைசெய்யக் காத்திருக்கும் சமயமாகிய இன்று என்வரலாறு ஸ்ரீகண்ணபிரான்சொல்லக்கேட்டேவந்து அழைக்கின்றீர், அன்றுமுதல் இன்று வரையிலும் தாய்தந்தை குருதெய்வம்போலிருந்து சாதிகுலகோத்திரம்க்ஷாத் திரம் இவைகளெல்லாம் உண்டாக்கி எனக்கும் ஒருபெண்ணைப் பெண்டாக்கி அன்னமுதலியவும் ஆபரணங்களுங்கொடுத்து ஆதரித்தமன்னனைச்சமயத்தில் விட்டு எப்படிவரலாம் 'தந்தை சொன்மிக்க மந்திரமில்லை' 'தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லை' என்னும் நீதிக்கிணங்க உமதுசொல்லைத் தள்ளாமல் வருவே னாயின் சந்திரசூரியருள்ளவரையும் உலகம்பழிக்குமே நரகங்கிடைக்குமே நன்றிகுன்றியபஞ்சமாபாதகரில் நான்முந்தியிருப்பேனே; 'எந்நன்றிகொன்றார்க் குமுய்வுண்டாமுய்வில்லை செய்ந்நன்றி கொன்றமகற்கு' என்றமேலோர்சொல் லின்படிநடந்தானுவேனே; என்னைச்சுமந்துபெற்ற உமது கர்ப்பத்திற்கு நிந்திப் பாகிய இழிவுவந்துநேரிடுமே, தெய்வமும் சகியாதே, இதற்குமேலாகிய பாவ மும்பழியுமில்லை, என்னைமுன்னமே நம்பியிருக்கும் மன்னனுக்குஅவனிடத்தி லுண்ட செஞ்சோற்றுக்கடன் கழிக்கும்படி மன்னவருடனெதிர்த்து சின்ன பின்னப்படுத்தி எங்கிலமுந்துதிக்கப்பொன்னுலகத்திற்புகுவேனாகில் கன்னிகை யாகிய உமதுகர்ப்பத்திற்பிறந்த கன்னன் என்கின்றவனுவேன், மின்னலுக்கிணை யாகியஇடையும், கன்னலுக்கிணையாகிய மொழியும்சொன்னத்திற்கொப்பாகிய வடிவும்அன்னத்திற்கொப்பாகிய நடையுமுடையஅன்னையே! இப்போது சொ ல்லவந்த சங்கதியைச் சிலநாட்களுக்கு முன்னே சொல்லுவையாகில் உமதும னத்துக்கு ஒப்பாக வந்துவிடுவேன், அப்போதில்லாமல் இப்போது வந்தபடி யால் என்மனம் ஒப்பாது, ஒருவேளைதப்பாகவந்தாலும் பாண்டவர்களுக்குத் தமையன் உண்டவீட்டிற்கிரண்டகஞ் செய்பவனென்று என்னையாருந்தூற்று வார்கள், வானோரும் வசைகூறுவார்கள்எனவாய்குளிர்ந்து உபசாரவார்த்தை களைக்கூறினான். அம்மொழிகேட்டு மனம்பதறிவாடிவருந்திமயங்கிக் கண்கல ங்கிகோவென்றழலுங்குந்திதேவி பார்த்துத்தானுமனந்தளர்ந்து தாயினதுபாத தாமரையைப்பணிந்துதயிரியஞ்சொல்லிக் கண்ணீர்துடைத்துக்கவலையகற்றிக் கருணைசுரந்ததாயே! இதுவெல்லாம் நமதுசெயலன்று, இறைவன் கட்டளையல் லதுவேறின்று, போனதுபோகக் கிணற்றைத்தூறுவாருவாரைப்போல் துரிதப் படுத்தித் தேவரீருக்குள்ள சிங்காரஞ்செய்து தேவரீரை யென்னிடத்திற்கு அனுப்பிவைத்த இறைவன் கருத்தென்னமோ அதைத் தெரியச்செய்யுமென்று கேட்கத் தாயாகியகுந்திதேவிசொல்லலாயினள்.

என்கண்ணின்மணியே ? என்னிஷ்டப்படியே உன்தம்பிமார்களுடன் கூடிவாழக்கண்டுளன்கண்களிக்கவேண்டுமென்றுகருதிவந்தேன், அதற்குத்தரும விவகாரமும் நீதியுஞ்சொல்லிவிலக்கிவிட்டமையால் காண்டவவனத்தில் பகைத்துவந்த அச்சுவசேனனென்னும் நாகாஸ்திரத்தை வளர்க்கின்றாயென்று கேள்விப்பட்டேன்; அந்தக்கணையை அருச்சுனன்மேல் எப்படியுந்தொடுக்கவேபோகின்றனை, அப்படியே அருச்சுனன்மேற்பிரயோகஞ்செய்தபோது தெய்வபலத்தினால் தப்பிப்பிழைப்பானாகில்இரண்டாந்தரமும் நாகாஸ்திரம்விடுவதில்லையென்று ஒருவரமும், இதன்றியும் அருச்சுனன் ஒழிய மற்ற நால்வரும் போர்முகத்தில் நேரிடுவாராகில் அவர்களிடத்தில் நீபரிவு வைத்து வீரப்பிரதாபங்காட்டாமல் இலகுவாகியயுத்தஞ்செய்து அவர்களுயிரைக்காக்க ஒருவரமுமாகிய இந்த இரண்டுவரமு மெமக்கேகொடுவென்றாள், அதைக்கேட்ட கன்னராசன் முகமலர்ந்து சொல்லுகின்றான்.

கேளாய் அம்மா! நாளை நடக்கப்போம் போர்க்களத்தில் அருச்சுனனும் நானுமெதிர்ந்து பலயுத்தங்களும் பண்ணிப்பார்த்து கடைசியில் நாகாஸ்திரத்தை விடப்போகிறேன், அதெப்படியும்அவன்தலையைவாங்கிவிடும், நீப்போது மனங்கூசவேண்டாம், ஒருவேளை தலைபோகாமல் உயிர்பெறுவானாகில் திரும்பவும்நாகாஸ்திரந் தொடுக்கேன், அதேனெனில் நல்லசுத்தவீரன் கையிலிருந்து புறப்படுங்கணை சத்துருவைக் கொல்லாமல்விடாது, ஒருவேளை இலக்ஷயந் தப்பிப்போனால் மறுபடியுந்தொடுப்பது இராசதர்மமும் தனுர்வேத தர்மமும் மேலாகிய ஆண்மையுமன்று, மேலும் மற்றநான்கு தம்பிமாரையும் என்கையாற் கொல்லுவதில்லை, இதற்கு ஐயமேவேண்டாம் அம்மாவென்றான். னகன்ன இந்த இரண்டுவரமுங்கொடுத்து நிலமகள்போன்ற குந்திதேவியைப் பார்த்துயாண்டுராசன் மாதேவியாகிய நீர்வேண்டும்வரமிதுதானோ ஆயினன்று, எனக்கிரண்டு வரமீந்தருளுமென்று தொழுதான். அவ்வாறு தன் அடிவணங்கிய குழந்தையை ஆதரித்தெடுத்து அப்பா மகனே? அணியே கனியே கரும்பே கண்மணியே உனக்கு வேண்டியவரம் இன்னதென் றுரைக்கவேண்டுமென்றாள். அதைக்கேட்டுப் புந்திமகிழ்ந்து கன்னன் கேட்கின்றான். என்னுயிரையும் மன்னுயிரையு மீன்றுவளர்க்கும் இறைவியே? போர்க்களத்தில் அர்ச்சுனனும் நானும் எதிர்த்துப் போர்புரியும்போது அருச்சுனன்கணையினால் நானிறந்து விழுவேனானால் உடனே தேவரீரோடிவந்து என்மேல்விழுந்து என் மகனே என்மகனே என்றலறி அழுது உமதுமகனென்றுஉலகமறியச்செய்வது ஒருவரம்? அப்படிப்பட்ட இறுதிக்காலம் எனக்கு நேரிடுகிறவரையிலும்நானும்மக்கு மூத்தபிள்ளையென்றும் தேவரீர்தாயென்றும் பாண்டவரெனக்குத் தம்பியரென்றும் நிகழும் இரகசியம் மண்ணுலகிலொருவருக்குந்தெரிவிக்காமல்மனத்தில் வைக்கவேண்டியது ஒருவரம்? ஒருவேளை வெளிப்படுமானால் பாண்டவர்கள் சண்டையைநிறுத்திவிட்டுச் சபதங்களையும்விட்டு நாட்டையெனக்குக் கொடுத்துவிட்டுத்தாங்களுங்காட்டை யனுபவிக்கும்படியே போய்விடுவர்கள். அப்படி யெனக்குநாட்டைக் கொடுத்தாலும் நான் அந்நாட்டை என்தோழனாகிய துரியோதனனுக்கே கொடுத்து விடுவேன், என்தம்பியராகிய பாண்ட

வர்கள் சபதமொழி தவறிநாட்டைவிட்டுப்போவானேன், இப்போது நாமிருவரும்பேசியமர்மம் வெளிப்படாமலுமிருக்கவேண்டும், இவ்விரண்டுவரமுமெனக்கு அருளுமென்றுஇருகரத்தையும்நீட்டியிரந்துகேட்கும்தன்மகனைநோக்கிகண்ணனுமனமுங்களைந்துவிரைந்து உன்னெண்ணப்படியே வரந்தந்தேனென்றுரைத்ததாயைப்பணிந்தனன். தாயுஞ்சேயைத் தழுவிச்சிந்தைகளித்துத்தேகந்தணியஎன் காதலனே இது வரையிலும் பிரிந்திருந்த நம்மை இன்னமொன்று தெரிவித்துக்கூட்டிய தெய்வம் மறுபடியும் பிரிக்க நினைத்தால் என்மனமெப்படி சகிப்பேன், பிரிந்தெப்படி மீள்வேன் என்று அலறினாள்; அதைக்கண்ட மன்னன் அன்னையை ஆதரித்துபசரித்து அடிமலரிணையில்முடியுறவணங்கி விடைகொடுத்தனுப்பித் துடிதுடித்துத் தன் அரண்மனைக்குப்போயினான்.

இப்பால் குந்திதேவி படபடவென்று வருந்திவந்து மன்னர்பெருமான் மனையில்வரவேமருமகனாகிய கண்ணபிரான் எதிரேயோடிவந்துவணங்கினான். அவனைச்சிந்தைமகிழ்ந்து வாரியெடுத்துஉபசரித்து உள்ளறையிற்போயிருந்து கன்னனிடத்திற் சென்றதும் அவனைக்கண்டதும் சங்கதிவிண்டதும் அவன்புகன்றதும் நடந்ததும்முதலியன எல்லாம்சொல்லக்கேட்டுத்தமதெண்ணமெல்லாமீடேறியதென்று இறுமாந்தெழுந்து, மாமி நான்வந்து பலநாளாய்விட்டன; அன்னையேஉன்பிள்ளைகளாகிய பாண்டவர்கள், ஏதோவென்று என்னையெதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள், அவர்களிடத்திற்குப் போக உத்தரவுகொடும் என்று கண்ணபிரான் கேட்கக் குந்திதேவி சொல்லுகின்றாள்.

மருமகனே! நீஇருந்தும் என்பிள்ளைகள் நிருவாகசாலிகளாயிருந்து நாட்டையும், நகரத்தையும்; நலத்தையும், மானத்தையும் பங்காளிகள் கையிலொப்பித்துப் போட்டுக்காட்டையும், கலகத்தையும், அவமானத்தையும், கைக்கொண்டு காலம்போக்குவது காரியமேஅன்றென்று நான் சொன்னதாகச்சொல்லும். மேலும்'மின்னினிலையிலமன்னுயிராக்கைகள்' என்னும் அருளிச்செயலின்படி இந்தப்புல்லிய உடலைக்கல்லெனநினைத்துச்சபையிற்கூறிய சபதத்தை நிறைவேற்றுமலிருப்பதும் இராசதருமமல்லவென்றும் சொல்லும்,இதன்றியும் இந்தப்பாண்டவர்களைப் பெற்றுவளர்க்கத்தவம்செய்தேனேயல்லன், பாரதயுத்தத்தில்பிராணனுக்கானியில்லாமற்காக்குங் கடமையென்னுடையதன்று,எல்லாந்தேவரீருடைய கடமையே; திருவுந்திறனும் உம்முடைய உடைமையே, என்மக்களை உமது அடைக்கலமாகவொப்பித்திருக்கின்றேன்; எனக்கு வேறொருதுணையுமில்லை, நீயேதுணைஉன்னைநம்பினேன்; •என்மருகனாகிய கண்ணனேயென்று கோவென்றலறிக் கூறினாள். அதைக்கேட்டுத் தீனதயாளுவாகியசெந்திருநாயகன் மாமியைப்பார்த்து நீர்ஒன்றுக்குஞ்சிந்தனைப்படவேண்டாம். மாமி எல்லாமென் பொறுப்பேயல்லதுவேறில்லை, நீர்நல்லசேதி கேட்கப்போகின்றீர், இவ்விடத்திற்றானேநில்லுமென்று சொல்லிப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு விதுராழ்வான்வீட்டுக்கெழுந்தருளி,விதுரராஜனே! உபலாவியத்திற்குப்போய் வருகிறேன் விடையருளுமென்றார். அதைக்கேட்ட விதுராழ்வான் எட்டுறுப்புநிலமுறப்பணிந்து இருகரத்தையுங் கூப்பித்தொழுது அஞ்சலியத்தராய் நின்றுசுவாமீ! பாண்டவர்களையும் என்னையுங்காக்கவேண்டியகடன் தேவரீ

ருடைய திருவடித்துணையல்லது வேறில்லை. ஆயினும்; இராசசபையில் மோசஞ்செய்துசூதாடி நாட்டைப்பறித்துக்கொண்டு அவர்க்குக் காட்டைக்கொடுத்த துஷ்டனாகிய துரியன் இஷ்டஜன புத்திரருடன் போர்க்களத்திற்பட்டழியும்படி வெற்றியைப்பெறவேண்டுமென்று என்மக்களாகிய ஐவருக்குந் தெரியப்படச்சொல்லித் தேவரீருமிருந்து ஜபத்தம்பநாட்டித் திருமுடிசூட்டிவைக்க வேண்டிய உபகாரமும் உம்முடையதென்றான். அப்படி விதுராழ்வான் விண்ணப்பஞ்செய்துகொள்ள அதைக்கேட்டு ஸ்ரீகண்ணபிரான் சொல்லுகின்றனர்.

உலகின்கண் செப்பிடுவித்தைபோல் உமதுசொற்படியே நடக்கும்படியே பார்ப்பீர், இப்படியே நில்லும் துயரப்படவேண்டாம், துரிதமாகச் செலவுகொடுமென்று விடைபெற்றுப் பயணபேரிகை முழக்கினார்கள். சாத்தகியாழ்வான்முதலியசேனைகளும் சமுத்திரகோஷம்போலச்சத்திக்கச் சகலவிருதுகளும் குடைகொடிமுதலியவாத்தியங்களும் இராசவீதிநெருங்கும்படி ஸ்ரீகண்ணபிரான் இரதமேறிவரும்போது துஷ்ட சதுஷ்டர் ஒழிய மற்றையாவரும் வாகனமேறிப்புறப்பட்டுக் கண்ணபிரானுடன் தெற்றுவாசற்படி வரையிலும் வந்து வழிவிடுத்துவணங்கினர். அவ்விடத்தில் தன்னிரதத்தைநிறுத்தி யாவரையும் நோக்கி வெகுதூரம் வந்துவிட்டீர்கள், நில்லுங்கள் நில்லுங்களென்று எவரெவர்களுக்கு எந்தெந்தமரியாதை செய்யவேண்டுமோ அவ்வம்மரியாதையுபசாரங்களைச்செய்து விடைபெற்றுக்கொண்டு சிறிதுதூரம் போகும்போது சிற்சிலர் தனித்துவந்துபேசினர். அவரவர்களுக்குத் தக்கவார்த்தைகளைச் சொல்லி அத்தினபுரத்திற்குப்போக உபசாரத்துடனிறுத்திவிட்டு, அப்பாற்செல்கையில் விதுராழ்வான் ஓடிவந்துபணிந்து ஒருமொழிசொல்லுகின்றனர்.

இந்தச்சபையில் துஷ்டனாகிய துரியோதனன் அவமரியாதையாய் என்னை இகழ்ந்துபேசிய வசனத்தை என்பிள்ளைகளாகிய ஐவரிடத்திற்சொல்லவேண்டாம், அதேனென்றால் இச்சொல்லைக் கேட்டவுடனே என்பிள்ளைகளிப்போதே வந்து இவனைச்சேதித்து வாளுக்கித்தனை சதையாகக்கழித்துவிடுவர். அப்போது உலகமென்ன சொல்லுமெனின், ஏதோ தெரிந்துந்தெரியாமல் தன்பிள்ளையானவன் ஒருவசனத்தைச் சொன்னாலும் ஒருபொல்லாங்கைச்செய்தானாயினும் தந்தையே தண்டித்துக்கண்டித்துவிட்டு அப்பால்மறந்துபோவர், அப்படியிருக்க இவ்விதுரன் ஒருகுடல் வேற்றுமையாகையால் இந்தப்பிள்ளை சொல்லியபேச்சைவிஷம்போல்வைத்திருந்துபாண்டவர்களுக்குத்தெரிவித்துத் துரியோதனனுடைய பிராணனை வாங்கிவிடச்செய்தனன், கண்ணில் விரலிட்டால் நாலுபேருக்குச் சொல்லிக் கலகஞ்செய்து கையைத்தறித்து விடுவாருமுண்டோவென்று பலவகைப் பழிப்புச் சொற்களைப்பேசுவார்கள்; என்னை யேசுவார்கள்; அப்பழி எனக்குவருவானேன், எப்படியும் நடக்கவேண்டிய காரியம் நடக்கவேபோகின்றது, ஆதலால் நீரொன்றுஞ்சொல்லவேண்டாம் என்றுசொன்னார். அதைகேட்டு மிகவுமனமுருகி வேய்ங்குழலூதிய செவ்வாயன்வெண்ணெயைக்களவிலயின்றவித்தகன் விதுராழ்வானைப்பார்த்துச்சொல்லுகின்றார்.

'நரைத்தகிழவன் வந்தால் உலர்ந்தவிறகும்சேதயாம்' என்பதுபோல நானிவ்விடத்திற்குவரவும்; உள்ளன்பினையுடைய உன்வீட்டிலிறங்கவும்; இப்படிப்பட்ட சொல்லிழிவும் வில்லழிவும்வர இருந்தவன்றோ, நல்லது, கடவுளிருக்கின்றனர். நீரொன்றுக்கும்விசனப்படவேண்டாம். இச்செய்கையைப் பாண்டவர்களுக்கு நானேன் சொல்லுகின்றேன் சொல்லமாட்டேன் நீர் நில்லும் விதுராழ்வானே! யென்றுசொல்லி நிறுத்திவிட்டு முல்லைமாலையையுடைய முகுந்தன் இரதகஜதுரகபதாதிகளுடன் மேளவாத்தியமும் முழக்கிக்கொண்டுவர, சாத்தகியாழ்வானும் தமதிரு பக்கத்தில் வரும்படியாய்ச்சென்று வழியில் போஜனமுதலிய சகல சவுக்கியங்களையுங் கொண்டு, பண்டுபலாதிகளுமுண்டு, உபலாவியம் வந்துநின்று, பாண்டவர்களைக் கண்டுபேசஎத்தனித்து வந்தனர். அவர்வரவைப் பாண்டவர்களும் எதிர்கொண்டு பார்க்கும்படியாக, பற்பல இராசரும் விசுவாசரும் மிகுநேசரும் கவிராசரும்குலபோசரும் நகரவாசரும் சூழ்ந்துவர எதிர்கொண்டு மயில்போலுஞ் சாயலையுடைய மாதர் நடனம்புரிந்து தத்திமி தாவென திமி திமி திமியென மத்தளபேரிகை யோசை குமுகுமுகுமுவென தாரை பூரியூத, சின்னபேரியோசை காளங்களோசை சமுத்திரவோசையென்ன அதிர்ந்திட மகத்துவத்துடன் முன்னமெதிர்ந்திடகந்திருவரிசைபாடகற்பகப்பூமாரிபொழிய அற்புதப்பாமாலைபொழியக்கலந்திருவர்சேனைகளுங் கொண்டாடக்கண்ணபிரானைக் கண்களாரக்கண்டு வாகனம்விட்டிறங்கி மகிழ்ந்தனர். வேய்ங்குழலூதிய வித்தகனும் இரதம்விட்டிழிந்து எதிர் நோக்கிவர யாவரும்வணங்கி பல்லோருடன் நீராஞ்சனமுதலிய கற்பூர தீபங்களினுலுபசரித்து உபாலாவியத்தின் வீதிப்பிரதட்சணஞ்செய்துவைத்து இராசமண்டபத்திற் கழைத்துக்கொண்டுபோய் நவமாகிய நவரத்னகசிதமான சிங்காசனத்திலெழுந்தருளச்செய்து அர்க்கியபாத்தியஆசமனீய சந்தனகுந்தள புஷ்ப தூபதீபநைமித்ய உபசாரங்கள்செய்து வணங்கி நின்றனர். சர்வலோக சரண்யன் சந்தோஷித்து சகலருமிருக்கும்படி உபசாரஞ்சொல்ல அப்படியே யாவருமிருந்தபின்பு உபலாவியமவிட்டுத்தாம் அத்தினபுரத்திற்குத் தூதுபோனதும் அவ்விடத்தில் துரியோதனன் கன்னன் துச்சாதனன் சகுனியென்னும் கொடியோர் நால்வரொழிய மற்றையோரெல்லாம் எழுந்து எதிர்வந்து கண்டு களித்துமகிழ்ந்ததும் தாம் விதுரன் மனையிலிறங்கியதும மறுநாள் இராசசபைக்குச் சென்றதும் நாரதர் கண்ணுவர் சமதக்கினி முதலியமுப்பற்றிகந்த முனிவர்கள்வந்ததும் எல்லோருக்கும் வந்தனைவழியாடுகள் சொன்னதாய்ச்சொல்லித்துரியோதனனுடைய கொலுக்கூடத்திற்சென்றிருந்து தாம்போனசெய்தியைப்பேசியதும் அந்தவார்த்தைக்கு உடன்படாமற்போனதும் தம்மோடு முற்றத்துறந்த அம்மூவரும் உறுதிநீதிதருமம் இவைகளெல்லாம் அவனுக்குரைத்ததும் அதைக்கேளாமல் சண்டைசெய்து வென்றவர்கள். நாடாள்வதென்றுசொன்னதும் தனக்கு விருந்துசெய்தவிதுராழ்வானையிகழ்ந்ததும் வாய்க்கடங்காத வார்த்தை பேசியேசியதும் அவன் உடம்புகூசி வில்லைவெட்டியெறிந்து, சிச்சியென்றிகழ்ந்து எழுந்துபோனதும், அன்றிராத்திரி நிலத்தைப்பறித்துப் படுகுழி

ரபகச்செய்து உதயத்தில் தன்னையழைப்பித்து அப்படுகுழியில் விழச்செய்த தும் அசுவத்தாமனுக்குச் சேனைபதிப்பட்டம் ஆகவொட்டாமல் தடுத்துவிட் டதுமாகிய செய்திகளனைத்தும் மைத்துனராகிய பாண்டவர்களுக்கும் மற்றை யோருக்கும் மனமகிழ்ச்சியோடு திருவாய்மலர்ந்தருளினர். அதனையாவரும ஆதியோடந்தமாகக்கேட்டு ஆநந்தங் கொண்டிருந்தார்களென்று சொல்லவே, ஆனலகன்னன் இன்னானென்று பாண்டவர்களுக்குத் தெரியும்படியாகச்சொ லவி விட்டனரோவென்று ஜெனமேஜய மகாராஜன்கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

அரசனேகேளும்? கன்னனின்னானென்பதும் குந்திதேவியைவிட்டு வரம் வாங்கி வரச்செய்ததும், குந்திதேவி வரங்கொடுத்ததும், இச்செய்திகளை மாத் திரம் பாண்டவர்களுக்குத் தெரிவிக்காமல் மற்றச்செய்திகளையெல்லாந் தெரி வித்தனர், என்று வைசம்பாயனர் சொல்லவே வபுஷ்டாதேவி கொழுநனகிய ஜெனமேஜெய மகாராஜன்கேட்டு மனமகிழ்ந்து புராணசாரஞ் சொலலும் பெரியோர்களைப் பிரமமாக நினைத்துப்பூசித்து வந்தனைவழிபாடுகள் செய்யும் வகையாக வணங்கிஎன்னைப் புனிதனுக்கிய புண்ணியனே! மேல்நடந்த விருத்தாந்தத்தையுஞ் சொல்லவேண்டுமென்று இருகரத்தையுங் கைகுவித்துக் கேட்க வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

ஸ்ரீகிருஷ்ண சுவாமி தூதுச்சருக்கம

முற்றிற்று.

---

உத்தியோகபர்வத்தில்

# படையெழுச்சிச்சருக்கம்.

தனியன்-விருத்தம்.

படர்ந்துகானகந் திரிந்துமீண்டன்புடன் பணிந்தபஞ்சவர்க்காகக்
கடந்தஞானியர் கடவுளர்காண்கிலாக் கழலிணைசிவப்பேறத்
தொடர்ந்துநான்மறைபின் செலப்பன்னகத் துவசன்மாநகர்த்தூது
நடந்தநாயகன் கருமுகில்வண்ணமென் னபனம்விட்டகலாதே.

அப்பால்! ஸ்ரீகிண்ணபிரான் பாண்டவர்களுடன் அத்தாணிமண் டபத்திலிருந்து சொல்லுகின்றனன்.

தருமராஜனே ஈமிவ்விடம்விட்டுப் புறப்பட்டு அத்தினபுரம் சென்று விதுராழ்வான் வீட்டிலிறங்கிஉண்டு சுயோதனன்சபைக்குப் போனேன்; அவ் விடத்திலிருந்த யாவரும் வந்தனைசெய்ய ஆதனத்திலிருந்தேன். அதுகாலை யில் நான் விதுராழ்வான் வீட்டிலிறங்கினேனென்று துரியோதனன் சற்று நேரங் கோபமாயிருந்து மீண்டும் என்னைப்பார்த்து நீவந்த காரியமென்ன?

வென்றான். அதற்குநான் சொன்னதாவது; பாண்டவர்கள் சூதாடித்தோ ற்றபோது பன்னிரண்டு ஆண்டு வனவாசமும் ஓராண்டு அஞ்ஞாதவாசமுங் கழித்தபின் அவர்கள் பூமிமுதலிய வற்றையுங்கொடுத்து விடுவோமென்று அனுப்பியவண்ணம் பதின்மூன்றாண்டுங்கழித்து உபலாவியத்தில்வந்து செழித் திருக்கின்றனர். அவர்கள் தங்களுடைய யோகக்ஷேமாதி சயங்களை உங்களுக் குத்தெரிவித்து அவர்களுக்குநீங்கள்சொல்லியிருந்த உறுதிமொழிப்படிதாயபா கங்கொடுங்களென்று கேட்க என்னைத் தூதனுப்பினர்! நானும் உங்களைப்பார்க் கவேண்டுமென்னும் ஆசையையுடையவனாய்இவ்விடத்திற்குவந்தேன். உங்களை எல்லாங்கண்டேன், சந்தோஷங்கொண்டேன், அந்நாளிற்சொல்லிய மொழிப் படி ஐவர்களுக்கும் அரசுகொடுத்துவாழ்வதே உத்தமமாதலால் நீங்களென்ன சொல்லுகிறீர்களென்றுகேட்டேன், அப்போது என்னுடன் கூடவந்தமுற்றத் துறந்தமுனிவர்மூவரும்வீஷ்மரும்துரோணரும்கிருபரும்விதுராழ்வான்முதலா கியபெரியோரும், ஸ்ரீகண்ணபிரான்சொல்லுவதைக்கேட்டியாய்நம்பிபாண்ட வர்களைசேர்த்துப் பக்ஷமுடன் வாழ்வதேநன்மையென்றனர்: பாவியாகிய துரி யோதனனோகூடாதென்றுமடுத்துப்பேசினன்; மறித்தும்அவனுக்குத்தணியச் சொல்லி அப்பா துரியோதனா? வீணாகியவம்புகள் விளைவித்துக்கொள்ள வேண் டாம்,இனிவிளையப்போம் விபரீதமெத்தவுண்டு. பாண்டவர்களோமிகுந்த பல வான்கள்,எல்லாந்தெரிந்த நீ ஒரேபிடிவாதமாய்ப்பேசவேண்டாம். அப்படியே நாடுநகரங்கொடுக்க மனமில்லாவிட்டால் ஐந்தூராயினும் ஐந்துவீடாயினும் கொடும்; விவகாரப்படி கொடுக்க மனம் வராவிட்டாலும் அவர்களுக்குப் பிச்சையாகக் கொடுமென்று என்னுடைய இரண்டுகரங்களையும் ஏந்தியிரந்து கேட்டேன்; அதற்கு மனமிரங்கிக் கொடுக்காமற்றடுக்கின்றமையால் நாளைநட க்குங்கதி இன்னதென்றுஞ் சொன்னேன்! அதையும் மனத்தினெண்ணாமல் எத்தனைபேர்எத்தனைசொன்னாலும் அதையும்கேளாமல்அடிக்கடிப்பந்துவிசை கொள்ளுமென்னுந் தன்மைபோல் கோபமும் உலோபமும் பிடிவாதமும் மிகு ந்துபோம்போம்உமக்கும்அவர்களுக்கும்வேலையேயில்லை, ஒருமொத்தைவெண் ணெய்க்கு ஆயர்பாடியில் ஆயர்மாதர்காலில்விழுந்து கூத்தாடிய நீ இப்பாண் டவர்களுக்கு நாடுவேண்டியிரப்பதும்பெரிதோ! இதென்ன அரிதோ!இத்தந்திர மெல்லாம் நானறிவேன், இத்தனைப்பஞ்சைப்பாட்டென்னத்திற்கு? பாண்டவர் கள்பலவான்கள் தெய்வபலமுடையவர், சனக்கட்டுடைய ரசிகளென்றுஞ் சொல்லியநீபிச்சை கொடுமென்று கேட்கின்றையே. இப்படிகேட்பது என்ன வீரியம்,என்னநாணமில்லாதகாரியம், வல்லமையாளர்மானமழியப்பிராணனுட னே ஒருவரையாசிப்பரோயாசியாரோ; இதெல்லாம் உன்னுடையகபடமே யல் லதுவேறில்லை, இன்னும்நான் சொல்லுவதைநன்றாய்க்கேளும். சண்டைமுகத் தில் யுத்தஞ்செய்து வெற்றிபெறுகின்ற வீரரெவரோ அவரே இவ்வத்தினபுரத் தையாள்வதன்றி என்னுயிருள்ளவரையும் ஒருகடுகத்தனை மண்ணும் பாண்ட வர் கண்ணுக்குக்காட்டேனென்றுஒரே தீர்ப்பாகச்சொல்லிவிட்டனன்; 'வாழ் வார்க்குச் சீதேவிவாக்கில்' என்பதுபோல் இம்மண்ணுக்குந் தன்னுயிருக்கும் சரிப்படுத்திக் கொண்டிருக் கின்றனன், ஆகலால் இவன் மாளவேண்டும்

அப்பாற் பாண்டவர் பாராளவேண்டும்: இன்றேல் அரசாட்சிபெறுவது அருமையென்று முன்னமே விதுராழ்வான் சொல்லியிருக்கின்றனன். மேலும் அநேகம் பெரியோருஞ்சிறியோருமிறப்பரோ, உலகம்பழிக்குமே யென்று யோசித்து யுத்தஞ்செய்யாம லிறுத்துவீரானால் உங்கள்சபதத்தை எப்படிநிறைவேற்றிக் கொள்வீர்கள். இதுவரையிலும் பட்டிருக்கும் அவமானத்தினும் இனிமேல் வரப்போம் பழிப்பு மவமானமும் பெரிதன்று; இத்தருணத்தில்யுத்தம் பண்ணி வெல்லாமல் விட்டுவிடுவீராயின் இதனினும் பெரியதோர் அவமானமும் உலகநிந்தையும் இராசநீதிக்குப் பழுதுமாகியகாரியமின்றென்று உங்களுக்குத் தெரியப்படுத்தச் சொல்லினர், உங்கள்தாயும் சொல்லச்சொன்னது பகைவரால் விளைந்திருக்கும் பொல்லாங்கெல்லாமிருக்க இராசசபையில்விளம்பிய உங்கள் சபதத்தை முடிக்காமல் இப்பதினன் குலகத்தையும் நீங்கள் ஏகசக்கராதிபதியாய் ஆண்டாலும் அதினாலொருபயனுமில்லை புகழுமில்லை; ஆதலால் விரைவிற் சபதமுடித்து மூன்றுலகமுங் கொண்டாடும்படி முடிபுனைந்துகொண்டு வாழக் கடவீர்களென்று ஆசீர்வதித்து வெகு உறுதிமொழிகளைச் சொல்லச் சொல்லினளெனப் பின்னும் சொல்லத்தொடங்கினார்.

பாண்டவர்களே! என் கருத்தையுங் கேளுங்கள்! அவர்கள் உங்களைச் செய்திருக்கும் அநியாயம் யோசிக்கும்போதெல்லாம் மண்ணுங்கல்லும் மரமும் அழுமே, அம்மட்டும் நீங்கள்பொறுமையை யுடையவர்களேனும் எத்தனையென்று பொறுப்பது, பொறுக்குமிடத்திற் கல்லுமூச்சுவிடுமே, 'ஒருகாசுக்குப்போனமானம் பலகோடிபொற்காசு கொடுத்தாலும் வராது' என்று பழமொழி கூறுவர்; அதுபோல் எப்படியும் அவமானம் வந்துவிட்டது உரலிற்றலை நுழைத்துக்கொண்டவன் உலக்கைக்குப் பயந்தால்விடுமோ; ஆதலால் 'துணிந்தவர்களுக்குத் துக்கமில்லை' என்பதுபோல் போர்புரிந்து அவர்களைப்பொருதுவென்று அவர் தேசத்தைக்கைக்கொள்வது இராசதீரம், பலதேசத்தரசரும்மகிழ்வார்கள். அல்லதுதம்பிதமயன் பாட்டன்பூட்டனென்றுபாராமல் படைமுகத் தொப்பாரியாவென்று சாடிப்பாக்கியம்பெற மனமில்லாவிட்டால் வனத்திற்சென்று தவத்தைச்செய்துகொண்டு சுகத்தைப்பெறுவது எல்லாவற்றினும் மகத்துவ முடையது, இவ்விரண்டில் எதைச்செய்ய வெண்ணுகின்றீர்கள். உங்கள்கருத்தைச் சொல்லுங்களென்றுகேட்க; அதற்குத் தக்கபடி தருமராசன் நகைத்துச் சொல்லலாயினன்.

நாங்கள் போர்செய்வதற்குச் சர்வசித்தமா யிருக்கிறோம்; இதோ நீர் பாருமென்றுசொல்லி விராடராசனுடைய இராயசம் சித்திரகதனென்பவனையழைத்துத் திருமுகமெழுதச் சொல்லினன்.

அப்பால் நாங்கள்சூதாடி நொந்து நாடுநகரம் விடுத்துக்காடுகரம்பை அடுத்துப்பன்னிரண்டு ஆண்டு வனவாசம ஓராண்டு அஞ்ஞாதவாசம் ஆகப்பதின்மூன்று ஆண்டும்போக்கி மேன்மைபெற்ற அரசனாகிய மச்சதேசாதிபதி நட்பினால் எங்கள்பிள்ளையாகிய அபிமன்னனுக்கு உத்தரையையுமணஞ்செய்வித்து, மிகுசம்பிரமத்துடன் உபலாவியஞ்சேர்ந்து சங்கு சக்கராயுதமுடைய ஸ்ரீகண்

ணபிரானைத் தூதுவிடுக்க அவர் போர்செயற் குடன்பட்ட துரியோதனன் மனமறிந்துகொண்டு உங்களுக்குத் தெரிவிக்கும்படி ஓலையுந் தூதுமனுப்பி னோம். ஆகையால் மேல்நடக்கும் போரில் எங்கட்குப் படைத்துணைவந்து வெற்றி பெறச்செய்து உங்கள் நகரத்திற்காகக் கட்டவேண்டிய பகுதிப்பணங்க ளும்இலவசமாக்கிக்கொண்டு நீடூழிவாழவேணடுமென்று திருமுகமனுப்பினன்.

இப்படி கஷ்டதிசையினால் விடுத்த திருமுகங்களைப்பார்த்து முகம்வியர்த்து எட்டுத் திசையிலுமிருந்த துஷ்ட கண்டர்களாகிய இராசராசரெல்லோரும் அவரவர்களுடைய நால்வகைப்படைகளுடனும்போர்க்கோலங்கொண்டு வந்த னர். அவர்களாரெனின்,பாஞ்சாலராசனும் அவன்பிள்ளைகள் திஷ்டத்தூய்மன்; சிகண்டி, சுமித்திரன், பிரியதரிசினன், சித்திரகேது, சுகேது, துவசேனன், உத்தமோசா, உதார்மநு முதலிய நாற்படைகள்கூடிய ஓரக்குரோணிசேனை யும், விராடராசனும் அவன்பிள்ளைகள், சுவேதன், சதாநீகன் சங்கன், வராக கேது, உத்தரன் முதலிய நாற்படையுடன் மச்சதேசத்தின் ஓரக்குரோணி சேனையும்; சேரன், சோழன் பாண்டியன் என்னுந் தமிழ்வேந்தர் மூவரும் தந்தநாற்படையும், கேகயதேசாதிபரும், குந்திபோஜரும், தருமராஜனுடைய பிள்ளை தேவகனும், வீமனுடைய பிள்ளை கடோற்கசனும் அவன்பிள்ளை அஞ் சனுவர்மனும், அர்ச்சுனனுடைய பிள்ளை அரவானும் அபிமன்னுவும், நகுல னுடைய பிள்ளை விஜயனும் நிர்மித்திரனும், சகாதேவனுடைய பிள்ளை விசு வகோத்திரனும், இவரெல்லாம் பாண்டவர்கள் தனித்தனி மணஞ்செய்து கொண்டமாதரிடத்திற்பிறந்த பிள்ளைகள்; இதன்றியும் பாஞ்சாலியிடத்தில் ஐவரும் பெற்றுக்கொண்ட பிரதிவிந்தன், சுரதசோமன், சதானீகன், சுரதகீர்த்தி, சுருதிசன்மன் என்னும் இளம்பஞ்ச பாண்டவரும், போஜர், பாஞ்சாலர், சோமகர், சிரஸ்மேயர், மச்சர், மாகதர், திரிகாலவாசுதேவர், பவுண்டரவாசுதேவர், அரிவாசுதேவர், இவர் போசசம்பந்தமுள்ளவர் இவர் களும் இவர்கள்படைகளும், குந்திபோசனுடைய பிள்ளைகள் மந்தனும் சுமந் தனும் அவர்கள்சேனையும்; கேசகன்பிள்ளை பிரிதீபனும்; காசி ராசனும்அவன் பிள்ளை தூமகீர்த்தியும் மலயத்துவச பாண்டியனும்,இவன்பிள்ளை பிரிதிவுபாண் டியனும், சராசந்தன்பிள்ளை சகதேவனும், சிசுபாலன்பிள்ளை துஷ்டகேதுவும், செயசேனர், கிராதர், அவுணர், ஆந்தரர், புண்டரீகர், சோமராபுத்திரர், இவர்களுடைய சேனைகளும், வெள்ளைக்குடைவாத்தியமுதலிய விருதுக்கொ டிகளுடனும், சீனகர், சாவகர், மத்திரர், மாளவர், தெலுங்கர், சோனகர், கன் னடர், மாதகர், துருக்கர், குச்சரர், ஒட்டர் முதலாகிய பதினெண்பாஷைமன் னரும், மகுடவர்த்தனர், பட்டவர்த்தனர், இளவரசர், மன்னர், மண்டலீகர், மந்திரிமார், தந்திரிமார்; சாமந்தரும்; இவர்களுடைய சதுரங்க பலத்து டன் ஏழக்குரோணி சேனைகளென்று கணக்கிட்டு, பாண்டவரைவரும் சாத் தகியாழ்வானும் ஸ்ரீகண்ணபிரானு மகிழ்ச்சியடையும்படி சமுத்திரப்பெருக்கம் போலவும்,தாராகணநெருக்கம்போலவும்,சப்தமேகமுழக்கம் போலவும் சங்கத் தொனி முழக்கம்போலவும் பெருங்கூச்சலும் பெற்றுதாரணியிடம் பெருமல் தத்தளித்ததென்று சொல்லும்படி உபலாவியம் வந்து சேர்ந்திருந்தனர்.

அதுகாலையில்; பாண்டவரைவரும் கண்ணபிரானும் எதிர்கொண்டுபோய் கண்டு எந்தெந்த அரசர்க்குளத்தன்மையாகிய மரியாதைகளைச் செய்யவேண்டுமோ அப்படிக்குத் தலைவர்களுக்கெல்லாம் மரியாதைசெய்து அவர்களிடத்தில்தாம்பெற்றுக்கொள்ளும் உபசாரம்பெற்றுக்கொண்டு ஒருவருக்கொருவர் தழுவிக்கொண்டு பலவாறாக உபசரித்து இராசசபையி லழைத்துவந்து சிங்காதனத்தி லிருக்கச்செய்து இராசோபசாரமுதலியவும் நடத்தி அவ்வரசர்களை நோக்கித் தருமராசன் சொல்லுகின்றனன்.

எல்லாவுலகு மாண்டுவரு மன்னரே! பன்னிரண்டுவருடம் நாட்டைவிட்டுக் காட்டிற்றிரிந்துகாட்டைவிட்டு நாட்டிற்பொருந்தி விராடராசனுடைய வீட்டிலோராண்டிருந்து வெளிப்பட்டு சுயோதனனிடத்திற்கு உலூகமுனியைத் தூதுவிட்டதற்காக எங்களைக் காட்டுக்கும்போம்படி சொல்லச்சொல்லி எங்கள் பெரியதந்தை சஞ்சயனை அனுப்பிவைத்தனர், அச்சஞ்சயன் சொல்லிய வஞ்சனைமொழிகளை அஞ்சனவண்ணனும் யாங்களுங்கேட்டு, அதன்பின்பு எங்கள் பிராணனுயிருக்கும் அயர்வருமமரர்களதிபதியை வேண்டிக்கொண்டு தூதனுப்பிவைத்தோம், இம்மகானுபாவன்போய் எத்தனைவிதத்திற் சொல்லியுங் கேளாமல் சுத்தவீரனைப்போல் போர்செய்ய எத்தனித்திருக்கிறேன், பாண்டவருக்கு எள்ளத்தனையாயினும் நாடு கொடுக்கேனென்று அந்தகன் புத்திரனாகிய வித்தகன் சொன்னானும், நீங்களித்தனைபேரும் எனக்குற்றவர்களாயிருக்கநானினிமேலெண்ணிப்பார்க்க வேண்டியதென்ன? மேலும் தம்பிமார் கூறிய சபதங்களும் பாஞ்சாலி தலைவிரித்துக்கொண்டிருப்பதும் பாராட்டாமல் தருமத்தை யெண்ணி ஒருகுலத்திற் பிறந்த இருதிறத்தவரும் பெருநலம்பெற்றுக்கலந்து வாழ்வோமென்றுநான்சொல்லச்சொல்லியும் அதற்கு அவனொப்பாமற் போர்செய்வதே உத்தமமென்று சொல்லியனுப்பினன். உங்களுடைய உதவியெல்லாம்பெற்ற நான் செத்தவனைப்போலிருப்பானேனென்று போர்செய்யப் படைத்துணைவரும்படி உங்களுக்கித்தனை வருத்தமுங்கொடுத்தேன், இப்போர் பதினெட்டுநாளையில் செய்துமுடிப்பதென்று ஒருநிண்ணயமுஞ்செய்துகொண்டோம், இவ்வளவுதயிரியமெங்களுக்குண்டாம்படி ஏற்பட்ட நீங்களெல்லாம் இச்சமயத்தினைச் சித்தத்தில்வைத்து பகையை வென்று சபதமென்னுங் குற்றத்தையகற்றி, வெற்றிமுடி தரித்துவைக்க வேண்டிய உரிமை உங்களுடையதென்றான். அதற்குச் சந்திரனைச்சூழ்ந்த தாராகணம்போலும், சபையில் நிறைந்திருந்த நாஸ்டிகரெல்லாம் தருமராசனை நோக்கி, எங்கள்பிராணனும் எங்கள்நாற்படையும் உமதாகையால் எங்களைக்கொண்டு என்னென்ன பெற்றுக்கொள்ளவேண்டுமோ அவைகளெல்லாம் தாராளமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்; அதற்குயாதொரு தடையேயில்லை. வீரப்பிரதாபம் உமக்கேவருமென்று மன்னவரெல்லாம் உபசாரவார்த்தைகள் சொல்லினர். அதற்குத் தருமராசன் பகைவரைவென்று சபதம் நிறைவேற்றிக்கொண்டவர்களைப்போல மகிழ்ச்சியடைந்துநமது ஏழக்குரோணிகளுக்கும் சேனாபதியாய் எவரை நியமிக்கலா மென்று ஸ்ரீகண்ணபிரானைக் கேட்டனன், அம்மொழியைக்கேட்டுக் கண்ணபிரானும் நகைத்துத் தனுர்வேதத்

திறந் தெரிந்த நீங்களே யேற்படுத்துங்க ளென்று சொல்லிப் பின்னுஞ் சொல்லலாயினர்.

நானணிவகுப்பேனுனல் அவரவர் என்னை நியமிக்கவில்லை என்னை யேற்படுத்தவில்லையென்று கோபஞ்செய்து கொள்ளுவார்கள், ஆகையால் நீ எனக்கிந்த வேலைவைக்கவேண்டாமென்று சொல்லிய சுவாமியை நோக்கி!தேவரீர் எவரை நிச்சயிக்கினும் அவரைத் தலைவனாகக்கொண்டு வழிபடுகின்றோமென்றனர். அதற்குக் கண்ணபிரான் மனமகிழ்ந்து விராடகுமாரனாகிய சுவேதனை யழைத்து இவருடைய சனனவிர்த்தாந்தத்தைக் கேளுங்கள்; மச்சதேசாதிபதியாகிய விராடராசன் தன்னையணைய விரதமிழைத்துக்கொண்டிருந்த வேடப்பெண்ணை ஓர்நாள் வனவேட்டைக்குப் போய்க்கண்டான்! அவள் மிகுந்த குணவதியும் பதிவிரதையும் நற்றவத்தையுடையவளாயும் பிரார்த்தவினையால் விராடராசனைச் சேரவேண்டுமென்றுவிரதமிழைத்துக்கொண்டிருந்தனள். அக்கன்னிகைஇப்புத்திரனைப்பெற்றுமச்சதேசம்வந்துஇந்தப்பசுமைக்குழந்தையை இச்சையுடன் வளர்த்துவந்து அக்ஷராப்யாசமுதலிய தனுர்வேதமும் கற்பித்து மகிழ்ந்து வாழ்ந்துவருநாளையில் ஓர்நாள்! இந்தச் சுவேதன் தன்னந்தனியே வேட்டைக்குச்சென்று தவஞ்செய்யும் முனிவரைக்கண்டு தானுந் தவம்புரிய மனங்கொண்டு பெரியோர்களைவணங்கி அரியதவத்திலிருந்து கைலாசபதியை நினைந்து கண்ணீர் சொரிந்தகாலத்தில் இடபாரூடராய் எழுந்தருளினர். அவரைப்பணிந்து கையிற்பிடித்த வில்லினாலே மும்மை யுலகத்தையும் சாதிக்கும் அருளைப் பூரணமாகப்பெற்றனன்; இவனுக்கே சேனாபதி பட்டங்கட்டவேண்டுமென்று ஸ்ரீகண்ணபிரான்சொல்ல யாவருஞ்சம்மதித்து சகலவித உபசார அபிஷேக ஓமாக்கினியுடனேசேனாதிபதிப்பட்டங்கட்டினர். ஸ்ரீசந்திருவினையகனாகிய திருமால் சுவேதனைப் பெரியயானையின் பிடரிமேலேற்றி ஸ்ரீசவாத்தியமுழங்கச் சகல வைபவங்களுடனே பட்டணப் பிரதக்ஷணஞ் செய்வித்து வீரர்முதலிய எல்லாச்சேனைகளுக்கும் இவனே சேனாதிபதியென்று தெரிவித்து இங்கிருந்த அரசர்களுடன் விருந்து போஜனமுதலியன அருந்திச் சந்தன தாம்பூலம்வாங்கிக்கொண்டு விந்தையாகிய வீரலக்ஷ்மியைச் சிந்தித்துவணங்கிக் குருக்ஷேத்திரத்திற்குப் பயணமாயினர்; அச்சமயத்தில் அருச்சுனன் குமாரர்களில் நாக கன்னிகையின் பிள்ளையாகிய அரவான்; அவ்விடத்திற் பேசிக்கொண்டிருந்த சங்கதிகளை யெல்லாந்தெரிந்துகொண்டு சேனாதிபதியும் சேனைகளும் தேசத்தரசர்களும் குருக்ஷேத்திர பூமிக்குப் புறப்படப்போகிற காலத்தில்; இராசசபையிற் போய்நின்று தந்தைமார்முதலிய சகலரையும்நோக்கி விந்தகிரியைப் போன்ற தோளைக்குலுக்கி மந்திரவாடிவாளைக் கையிற்பிடித்து, ஐயா? இந்துரியோதனுதியர்முதலிய சேனைகளைக் கொல்லப்பதினெட்டு நாளெதற்கு? அவரவர்கள் பட்டணத்தைவிடுத்துப் பெண்சாதிபிள்ளைகளை விடுத்துவந்திருக்கின்றவர்கள் பதினெட்டு நாள்வரையிலும் வருத்தப்படுவானேன்! நீங்களெல்லாம் இவ்விடத்திலிருக்க மனமிருந்தா லிருங்கள், இல்லாவிட்டால் அவரவர்களுடைய நகரத்திற்குப் போகச்செலவு பெற்றுக் கொள்ளுங்கள். எனக்கு உத்தரவுகொடுங்கள்; இன்றைக்குள் துரியோதனதிய ரெல்லாரையு முடி

த்து இப்பூமியைத் தருமராசனாகிய என்பெரியதந்தைக்கேசொந்தமாக்குகிறேனென்று சிந்தைகொண் டுரைத்தான். அதைக்கேட்டு, பந்தமுற்றும் பந்தமுறுதவனைப்போன்ற பாவாசுதேவன் நகைத்துநல்லது அப்படியேயாகட்டும், நாமெல்லோருங் குருக்ஷேத்திரம்போய்ச் சேர்ந்தபின் உன்னிஷ்டப்படியாகிலும் யோசிப்போமென்று அரவானைத் தட்டிக்கொடுத்து ! முத்தமிட்டுச் சந்தோஷித்துப் புகழ்ந்து மகிழ்ந்தனர் ; மற்றையரும் எழுந்து நமஸ்கரித்துக் கொண்டு சேனாசயினியங்களுடன் குருக்ஷேத்திரம்போகத் தொடங்கினர். இக்கதை இப்படியிருக்க ; தூதுபோன சுவாமி அஸ்தினபுரத்தைவிட்டு உபலாவியத்திற்கு வந்தபின் துரியோதனனிடத்தில் நடந்த சங்கதியைச் சொல்லுகின்றோம்.

இப்பால் ? துரியோதனராசன் தனக்குப் படைத்துணை வரும்படி சகலதேசத் தரசர்களுக்கும் திருமுகமெழுதி ; இப்போதெனக்குப் படைத்துணை வருகின்றயாவரும் சந்திரசூரிய ருள்ளவரையிலும் தங்கள் தங்களுடைய இராச்சியத்தில் வரியிறை யில்லாமல் அநுபவிக்கும்படி கட்டளையிட்டிருக்கின்றோம் ; ஆகையால் முத்திரையிட்டிருக்கும் இத்திருமுகத்தை தஸ்தாவேஜாகக்கட்டிக்கொண்டு மனப்பூர்வமாய் சதுர்விதசேனைகள்சூழப் புத்ரமித்ராதியருடனே சீக்கிரம்வந்து சேரவேண்டுமென்று தூதுபோக்கினான்.

அத்திருமுகங் கண்டதக்ஷணம் சமஸ்த ராஜர்களும் வந்தார்கள். அவர்கள் விவரமென்னவென்றால் ; மத்திரதேசாதிபதியாகிய சல்லியனும் ; அவனுடைய பங்காளி கோத்திரப்பங்காளி தாயாதிமுதலிய பேரும் ; இரத கஜ துரகபதாதியுடனும் வந்தனர். காந்தார தேசாதிபதியாகிய சௌபலனும் அவனுடைய தாயாதி வருக்கத்தவ ரெல்லாரும் சகல படைகளுடனும் வந்தனர். மகத தேசாதிபதியாகிய சாதேவனும், விந்தானும் விந்தனும், தங்கள் சொந்தச்சேனையுடனும் வந்தனர். அலம்புதனும் ; அவன்தம்பி யாரசி ; கிமிதி, சூதன் என்னுமூவரும் அனேகங்கோடி இராக்ஷதப் படைகளும் வந்தனர். நரகாசுரன் பிள்ளையாகிய பகதத்தனும் யானைக் கூட்டமு நெருங்கி வந்தன.

கௌசிதனும் காம்பிலீசனும் தெலுங்க தேசாதிபதியும் போஜனும் கேகயராஜனும் திரிகர்த்தனும் கவுடசித்தனும் மாளவதேசாதிபதியும் மராடராசனும் சூதநாயகன்பிள்ளைகளாகிய கன்னன் பங்காளிகள் சுசேஷணன்முதலிய நூறு பிள்ளைகளும், சோமதத்தனும் அவன்பிள்ளை பூரிசிராவும்பூரி என்பவனும்; குலிங்கதேசாதிபதி விந்தன் அநுவிந்தன் என்பவரும், கலிங்கதேசாதிபதி கேதுமாலன் அவன்தம்பி அசுவத்தாமா; சக்கிரதேவன் என்பவனும், மாளவராஜன் புளிந்தன் என்பவனும் சவுராஷ்டக தேசாதிபதி சவுபதி சுதர்மா சுவர்மா உக்கிரசேனன் யாதவர்கள் கிருஷ்ணர் அந்தகர் போஜர் பலராமர் கிருதவன்மா கிருதவீரியன் சாம்பன் சாரணன் பிரத்துய்மன் சாருக்ஷணன் விடூரன் பானுவுசின் விருபுது பிருது அக்குரூரன் உக்கிரசேனன் நாராயணர்பவுலவமர் யாதவ

போஜ விருஷ்ணி அந்தக சாத்துவ மாதவ குகுர பப்பாதேசாதிபதியுதாசித்து நீலன் அங்க வங்க ஆரிய சிங்கள கொங்கணகுடார கொங்க மாட ஒட்டதேச முதலிய ஐம்பத்தாறு தேசத்தலைவர்களும், நால்வகைப்படைகளும் மந்திரி தந்திரிமாரும் சூழும்படிவந்துநிறைந்தனர் பாதலத்திலிருந்த யாதவிவருக்கத்தார் சம்சத்தகரென்னும் அறுபதினாயிரம் வெண்கல ரதக்காரர்களும் வந்தனர்கள். யாதவகுமாரர் இருநூறாயிரம் வெண்கல ரதக்காரர்களும்வந்தனர். அநேகம் இராசகுமாரர் வெகுசேனைகளுடனே வந்து குவிந்தனர்கள். இப்படி இந்தச் சேனைகளைக் கணக்கிடும்படி நேமித்தபோது துரியோதனன் அவன்பிள்ளை இலக்கணகுமாரன் விசத்தன்முதலியபேர்கள் அவன்தம்பிமார் துச்சாதனன் முதலிய தொண்ணூற்றொன்பதின்மரும்; துச்சாதனன்பிள்ளை துச்சனி முதலியவரும் பெரும்புறக் கடல்போன்ற சேனையும் வீஷ்மாசாரியரும் துரோணாசாரியரும் கிருபாசாரியரும் அசுவத்தாமனும் கர்ணனும் அவன்பிள்ளைகள் சித்திரசேனன் சித்திரகீர்த்தி சூரியவர்மன் முதலியவரும் சிந்துதேசாதி சயிந்தவன் முதலியவரும்சகுனி சகுனியின்பிள்ளை உலூகன் சயிந்தவன் முதலியவரும் அஷ்டகுலாசலம்போன்ற தேரேறி ஆயுதபாணிகளாய் அமைந்திருந்தனர். இத்தன்மையாகத் திரண்டசேனைகளின் பெருக்கெல்லா மூலகம் புரண்டுவந்த கடலைப்போலப் பெருகின. அந்தச்சேனைகளைச் சம்பத்திற்சிறந்த துரியோதனன் கணக்கிடும்போது பதினொரு அக்குரோணியென்று தொகைப்படவும், இவ்வளவு அதிகமாகிய சேனைகளைக்கண்டு அம்மகாராஜாவோ மிகப்பேரானந்தங்கொண்டு பந்துக்களின் மிகுந்தவர்படை சத்துருக்களாவிளைத்தவர்படை சவுக்கியமாய்வாழ்ந்து உபசாரஞ் செய்தவர்களுடையபடை தீவுகளில் பெருக்காமல் விசனமற்றிருக்கத் தற்காலத்திற் பொருள் கொடுத்து வைக்கும் படைதன்னுடைய சொந்தப்படை என்னுமறுவகைப் படைகளுநெருங்கி மண்ணும்விண்ணும் ஒன்றாகக் கலந்து ஆரவாரிக்குந் தன்மையைக்கண்டு கண்களிகொண்டு இச்சேனைகளுக்குச்சேனாதிபதியாக யாரைநேமிக்கலாமென்று யோசனைசெய்து தங்கள்வமிசநாயகனாகவும், பரசுராமரிடத்திற் றனுர்வேதங்கற்று அவனையே வெற்றி கொண்டிருக்கும் பெரியோராகிய வீஷ்மாசாரியரை யல்லது வேறில்லையென்று நிதானித்து தன் பாட்டனுருடைய பாதங்களில் வணங்கி, சேனைகளோ இவ்வாறுதிரண்டுவந்திருக்கின்றன. அச்சேனைகளுக்குத் தேவரீரே சேனாதிபதி யாகவேண்டுமென்று வருந்திக்கேட்டுக்கொண்டு நல்ல முகூர்த்தத்திற் சேனாதிபதி பட்டமுங்கட்டிவைத்து பதினொரு அக்குரோணி சேனைகளையும் அவர்வசத்தி லொப்பித்து அச்சேனைகளைத் தரம்பிரித்து அதற்குவேண்டிய சட்டதிட்டமுஞ் செய்தபோது அதிரதர் மகாரதர்சமரதர் அர்த்தரதர் முதலியவர்களெல்லாம் தங்கள் சேனாதிபதியாகிய வீஷ்மரைக் கண்டு வணங்கிக்கொண்டுமகரகுண்டலம்கேயூரம் மணிக்கிரீடம் வாகுவலயம் வச்சிராங்கி முதலியன கொண்டுவந்து உபசரித்து காணிக்கையாகக் கொடுக்க அவைகளைவாங்கித் தரித்துக்கொண்டு பிரளயகால ருத்திரனைப்போலச் சேனாசயினியங்கள் மத்தியில் மகாமேருவையொத்த தேரின் மீதேறினின்றனர்.

மற்றச் சேனைகளெல்லாம் ஏழு சமுத்திரமும் வளைந்து நிறைந்தாற் போலும், சுத்தவீரனுடைய இரதங்களெல்லாம் அஷ்ட குலாசலம்போலும் சூழ்ந்திருக்கும் யானைகளெல்லாம் அஷ்ட கஜங்களைப்போலும் வளைந்துலாவுங் குதிரைகளெல்லாஞ் சுழன்றடிக்குங் காற்றைப்போலும் பிரகாசிக்கும்படி பனைக்கொடி நாட்டிய தேரேறி வீரத்துவஜநாட்டிய வீஷ்மர் தம் பாரியவில்லை யும் பக்குவமாகிய வீரக்கோலத்தையும் உடையவராய் நிற்கக்கண்டு எமரா ஜனும் நடுநடுங்கி நாணமுற்றிருந்தனன். சூரியபகவானும் ஆகாயத்திற்செல்ல நமக்கு வேறு கதியில்லையேயென்று அஞ்சியிருந்தனன். அரிகரபிரமாதிதே வரும் நடுக்கங்கொள்ளும்படி துரோணாசாரியரும், கிருபாசாரியரும், அசுவத் தாமாவும், கன்னராசனும் மற்றுமுள்ள அரசர்கள் யாவரும் திடதயிரியமாய்ச் சேர்ந்து மனமோர்ந்து வார்த்தையாடிக் கொண்டிருந்தனர்.

அதுகாலையில்? தேவர்கள் முதலியவரும் சேனைகளின் பெருக்கத்தை நோக்கிச் சொல்லுகின்றனர். இவ்வுலகிலுள்ளமலைகளெல்லாம்யானைகளாகவும், செடிகொடி மரங்கள்முதலிய தோப்புகளெல்லாந்தேர்களாகவும், பூமியினிறை ந்த மணல்களெல்லாங் குதிரைகளாகவும் பிரமசிருஷ்டியில்வந்த உயிர்களெல் லாம் பதாதிகளாகவும் சப்தமேகம் சப்தசமுத்திரம் சப்ததீவுகள்முழக்கங்களெ ல்லாம் வாத்தியமுழக்கமாகவும், யானைசேனைகளின்முழக்கமாகவும்; அமைந்து வந்ததோ அல்லது ஆதிபகவானுற்சமைந்துவந்ததோ என்று ஆச்சரியங்கொள்ளும் படி தாராகணக்கூட்டம்போலும்சலசராசிபோலும்பதினொருஅக்குரோணிசே னைகளுந் தங்கியிருந்தன. அப்போது; வீஷ்மாசாரியர் துரியோதனனைப்பார்த்து சேனைகளோபதினொருஅக்குரோணிசேர்ந்திருக்கின்றனஆகையால் அஸ்தினபுர நீங்கிஇச்சேனைகளை குருக்ஷேத்திரத்திற்கு அனுப்பிவிடும்படி முயற்சி செய்யவே டும், அதாவது 'நாட்செய்வதுநல்லுற்றார்செய்யார்' என்று பழமொழியுமிருக் கின்றது, சேனைகள் குருக்ஷேத்திரம்போய்ச்சேர நல்லநாளும் ஆயுதங்கைக்கொ ண்டுயுத்தம் ஆரம்பஞ்செய்வதற்குத்தகுந்த முகூர்த்தநாளும் பார்த்துக்கொண் டால்தான் உத்தமமென்றுசொன்னார். அந்தமொழிகேட்டு துரியோதனன் உட னேதனது புரோகிதனை அழைக்கும்படி உத்தரவுசெய்தானன். அந்தவார்த்தை யை வீஷ்மர் தடுத்து இப்புரோகிதருக்கெல்லாம் நாம்கேட்கிற நாள்வைக்கத் தெரியாது, இவர்கள் வைத்தாலுஞ் சரிப்படாது, என்றனர்; அதைத்துரியோத னன்கேட்டுபின்னையெவர்நாள்வைக்குந் திறத்தினையுடையவர்களென்றுகேட்க வீஷ்மர் சொல்லுகின்றனர். தம்பி பாண்டவர்களில் கடைக்குட்டித் தம்பியா கிய சகாதேவன்நாள்வைத்துக்கொடுப்பானாயின்சொன்னகுறி தப்பாமல்முடிக் கலாமென்றனர். அதைத் துரியோதனன்கேட்டு ஆச்சரியமடைந்து இப்போது அவனையெப்படிகேட்பது, அவனெப்படிநமக்கு அகப்படுவான், அப்படியல்ல வென்று கண்டுகேட்டாலும் தப்பில்லாமல் உண்மையாகச் சொல்லுவான் அதற்கெப்படி செல்வதென்று வணங்காமுடியோன்சொல்ல? வீஷ்மர்சொல்

லுகிறார். அப்பா துரியோதனா! நீங்கள் பேதாபேதங்களைப்பீர்கள். அவர்கள் அப்படி ஒருக்காலு நினைக்கவேமாட்டார்கள். நீமாத்திரம்நேரிற்சென்றுகேட்டையானால்சந்திரசூரியர்நிலைமாறிநடந்தாலும் சத்தியவாக்கியம்தப்பாத உத்தமர்களிற் சின்னஞ்சிறியனாகிய ஒருவன் உனக்கு உண்மையைச்சொல்லுவான். அப்படியே அரவானைக் கடைப்பலிக்கு உறுதிப்படுத்திக்கொண்டு வந்துவிட்டால்நமக்கெல்லாக்காரியங்களும்ஜெயமாமென்று சொல்ல; அதற்குடன்பட்டு ஒருநாளிரவில் பிரம்பினாற்செய்திருக்கும் சூத்திர அன்னப்பட்சியிலேறிக்கொண்டு உபலாவியத்திற்குச்சென்று சகாதேவனுடைய அரண்மனையிற்போயிறங்கினான். அவனைச்சகாதேவன்கண்டு சந்தோஷங்கொண்டு ஏன் அண்ணா! இருமென்றுவணங்கி உபசரித்து ஏது இவ்வளவுதூரம்வந்ததென்று கேட்டான், அப்போது அவனைப்பார்த்து தம்பி சகாதேவனே! எங்களுக்கும்பாண்டவர்களுக்கும் பகைநேரிட்டிருப்பதால் யுத்தஞ்செய்வதற்குப் படைகூட்டிவிட்டோமே! அப்படைகள் குருக்ஷேத்திரம்போய்ச்சேரவும், தருமராசன் தலையற்றுவிழ ஆயுதமெடுக்கவும் நாள்வைத்துக் கொடுக்கும்படி உன்னைநாடிவந்தேனென்றான். அதைக்கேட்டு நகைத்து அப்படியே நாள்வைத்துத் தருகிறேன் அண்ணாவென்று சொல்லிதுரியோதனனுடைய காலபலமுதலியவும் திசாநாதன்புத்திரநாதன் அந்தரநாதன்இவர்களுடைய பலாபலத்தையும் ஜயாபஜயத்தையும்யோசித்து சாத்திரங்களைவிசாரித்துநிதானித்து துரியோதனனைப்பார்த்து அண்ணாதேவரீருடையஇஷ்டப்படி வெற்றிபெறவேண்டுமானால் நாளையன்றைக்குப் பூரண அமாவாசையாகையால் அன்றிரவில்ஒன்பதுநாழிகைக்குமேல்குருக்ஷேத்திரத்திற் சேனைகள்போகும்படிமுகூர்த்தங்கொண்டு அப்போதே கடைப்பலி கொடுத்துபராசத்தியைப் பூசித்து ஆயுதமெடுப்பீர்களாகில்தருமராஜன் தலை தப்பாமல் அற்றுவிழும், இதற்கு யாதொருசந்தேகமுமில்லை, அப்பால்தெய்வசித்தம் எப்படியோ நானறியேனென்று உபசரித்துவணங்கி அண்ணா! போசனஞ்செய்துபோமென்றுபிரியவசனஞ் சொல்லினன். அதைத் துரியோதனராசன் கேட்டு மதிமயங்காமல் மனமாழ்ந்து தம்பிநல்லது நான்போய் வருகிறேன் சாயங்காலந்தான்சாப்பிட்டு வந்தேனென்றுசொல்லி விடைபெற்றுக்கொண்டு அரவானுடைய விடுதிக்குப்போனான். அங்கிருந்தஅரவான்கண்டு எதிர்கொண்டுவந்து பெரியதந்தையைப் பணிந்து ஐயா! ஏதுஇவ்வளவுதூரம்தயைசெய்ததேதென்றுகேட்க! அப்பனேஐவர்களுக்கும் எங்களுக்கும் பகைநேர்ந்து படைகள்சேர்ந்து யுத்தத்திற்கு ஆரம்பஞ்செய்யப்போகிறபடியால் எதிருரோமக்காரராகவும் பலசாலிகளாகவும்இருக்கிற வரைப்பலிகொடுத்து ஆயுதமெடுத்தால் சயமென்றுபெரியோர் சொல்லுகின்றனர். அதற்காக உன்னைக்குறித்துவந்தேனென்றுசொல்லவே, அம்மொழியைக்கேட்ட அரவான் கலகலவென்று நகைத்து ஐயா! நீங்கள்பிறந்தநாள் முதல் இதுவரையிலும் சகலசம்பத்தையும் அனுபவித்தது போதுமென்று கொடாமலும் இனியிருப்பவர்கள் குழந்தைகளன்றோ அவர்களனுபவிக்கட்டுமென்று உன்னாமலும், மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை மாறாமலும், பிள்ளைகளைக் கொன்றாலும் இன்னம் அனுபவிக்கவேண்டுமென்று எண்ணி மனங்கூசாமல் ஆசைமேலிட்டு வாய்பேசாமல் வரும்படி என்னைப்பலிக்கிரந்தீ

ரன்றோ, ஐயோ ? 'மின்னினிலையில மன்னுயிராக்கைகள்' என்றபடி என்றை க்கிருந்தாலும் இறந்துவிடுந்தேகம் இதற்கு இவ்வளவு அவாமேலிட்டிருக்க லாமா, நல்லகாரியம்! அப்படியேஎன்னைக்கொன்று நீரே இந்தமண்ணைக் கட்டிக்கொண்டாளும். அதற்குயாதொரு தடையுமில்லை, ஆனால்இத்தேகம் அநித்திய மாகையால் நீரெப்போது நாள்வைத்துக்கொண்டீர் சொல்லுமென்று அரவான் கேட்க, அமாவாசைக்கு நாள்வைத்துக் கொண்டேனென்று துரியோதனன் சொல்ல ; அதைக்கேட்டு அரவான் சொல்லுகின்றான்.

ஐயா ! அதுவரையிலும் இத்தேகமிருக்குமானால் உண்மையாகஉமக்குக் களப்பலிக்குவருகிறேன், இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, இப்படிப் பட்ட தனகன சாம்பிராச்சியத்தை யநுபவித்த நீரேவந்து இரண்டுகையையும் நீட்டி இரந்தால் நானில்லையென்று சொல்லக்கூடுமோ; ஐயனே! ஆசையடங்கச் சுகமாகப் பெற்றுக்கொள்ளுமென்று அரவான்சொன்னான். அச்சொல்லுறுதியைத் திரமாகப்பெற்றுக்கொண்டு மனமகிழ்ந்து நான்போய் வருகிறேனென்று, விடைபெற்று அத்தினபுரத்திற்குப் போய், வீடுமர்முதலிய பெரியோருக்குரைத்தான் ; அவர்கள்கேட்டு மனங்களித்து, ஆ ஆ ! அவர்களுடைய மனமும் குணமும் சத்தியமும் பரிசுத்தமும் பச்சாத்தாபமும் உண்மையும் என்னநன்மையா யிருக்கின்றன, சத்தியநெறிதப்பாதிருப்பவர்க ளாகையால் வெற்றியை அவர்களே பெறுவார்க ளென்பதற்குச் சந்தேக மில்லையென்று அகமகிழ்ந்திருந்தனர்.

இப்பால் ? துரியோதனன்வந்து சகாதேவனிடத்தில் நாள்வைத்துக்கொண்டதும் ; அரவானிடத்தில் களப்பலியிரந்து பெற்றுக்கொண்டு போனதும் ஒருவருக்குந் தெரியாமலிருந்தன.

இப்படியிருக்க, உபலாவியத்தி லிருக்கும் பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானும் அநேகமிக்கோடி அரசர்களும் ஊழித்தீயும் வடவாலமும் காலகோடி விஷமும் நேரிடுமானால் கலங்கிக் கரிந்துபோகும்படி யுத்தஞ்செய்து வெற்றி கொள்கின்ற உத்தமவீரர்களெல்லாரும் அன்றுபோய் மறுநாறுநாள்குருக்ஷேத்திரத்திற்குப் போம்படி நிச்சயித்து அக்காலையில் வீரர்களைத் தரமேற்படுத்தினார்கள். அதெப்படிஎன்னில் சேனாபதியாகிய சுவேதனன், வீமசேனன், அருச்சுனன், அபிமன்னு, சாத்தகி, துஷ்டத்தூய்மன் என்னும் இவ்வறுவரும் அதிரதத்தலைவராகவும்; சிகண்டி, விராடன், தருமராஜன், பாஞ்சாலன் என்னுநால்வரும் மகாரதத்தலைவராகவும் ; உத்தமோசா, உதார்மனு, நகுலன் கடோர்க்கசன் என்னுநால்வரும் சமரதத்தலைவராகவும்; சகாதேவன் அஞ்சனவர்மன் இளம்பஞ்சபாண்டவர்கள், முதலிய இராசகுமாரர்களியாவரும் அர்த்தரதத்தலைவராகவும், இப்படிதேவர்சேனாபதியாகிய குமாரசுவாமியார் அணிவகுத்தது போற் சேனைகளை அணிவகுத்துக் கண்ணபிரானிடத்தில்சுவேதன்வந்துசொன்னான். அதைக்கேட்டுப் பாண்டவர்க ளிடத்திற்சொல்லப்பா என்னிடத்திலேன் சொல்லுகிறா யென்றுசொல்லி ஸ்ரீகிருஷ்ணபகவான் சும்மாவிருந்தனன். அந்த வேளையில் பாண்டவர்கள் சேனைகளின் பிரிவைப்பார்த்து மிகச் சந்தோஷமுடையவர்களாய் சுவேதனைப்புகழ்ந்து மங்களவசனஞ்சொல்லி உபலாவி

யத்திலிருந்து நல்ல சுபகாலத்தில் குருக்ஷேத்திரத்துக்கு சேனைகள் புறப்பட யோசிக்கையில் சகலஜனங்களும் தத்த மிடத்திற்றானே சம்பிர மங்கள் கொண்டாடி வாழ்த்தி நீராஞ்சனம் ஆலத்தியெடுத்து அன்னதானமுதலிய சோடச மகாதானங்களும் செய்து சுபகரங்களும் மிகுஜயங்களும் ஐம்பூதமும் போன்ற பாண்டவர்களுக்கு வரக்கடவதென்று இஷ்டதெய்வங்களைப் பூசித்து வாழ்த்தினர், நவரத்னாதிகளை வாரித்தூற்றினர்; மங்கள சோபனங்களைப் பாடினர், பரதநாட்டியமாடினர், கட்டியர் செட்டியாய்ப் புகழ்ந்து வாழ்த்தினர், பட்டுவான்கள் துதிகூறிப்போற்றினர், அனேகம் பேரிகை குடமுழா முரசு காகளம் சின்னம் கொம்பு சங்கு தப்பட்டை தவுண்டை மல்லரி தாரை பூரி முதலிய வாத்தியங்கள் முழக்கினர், செம்பொற்பூ வெண்பொற்பூ முதலாகிய பலவகைமலர்களையும்வாரி மாரிபோல் தேவர்களிறைத்தனர், நன்னிமித்தங்களுண்டாக்கும்படியாகிய நல்லவேளையும், நல்ல இலக்கினமுங்கைகூடியவேளையில்தேவர்கள் முதலாகிய யாவருஞ்ஜெயஞ்ஜெயமென்று தீர்க்கமாய் வாழ்த்தினர், இத்தன்மைவாய்ந்த சகல சுபசந்தோஷத்துடன் குருக்ஷேத்திரபூமிக்குப் போம்படி யெத்தனித்து துவாரகாபுரி வாசனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பார்த்து சுவாமீ! என்ன சும்மாயிருக்கின்றீர் எழுந்தருளுமென்று தருமராசன் சொல்ல முகமலர்ச்சியில்லாதவராய் நான் பின்னேவருகிறேன்; நீங்களெல்லாரு முன்செல்லுங்களென்றுசொல்ல, அதைக்கேட்ட தருமராசன் பெருமூச்சுவிடுத்துச்சொல்லுகின்றான்.

பாருநீரும் பசித்துண்ட பார்த்தமனே? இதென்னமோசமோ என்மனத்தைச்சோதிக்கும் விசுவாசமோ அம்மட்டும் வெகுநேத்தி எழுந்திரு மெழுந்திருமென்று இரண்டுகரத்தையும்பற்றித் தூக்கினர். கண்ணில் முகத்தில் நயத்தைக் காட்டாமல் கண்ணன்முகத்தைச்சுளித்துக்காட்டி ஏன்காணுமென்னைத்தொந்தரவுசெய்கின்றீர், வீணாகாரியத்திற்கு வாணாலழிவனோ யென்னுந்தன்மை போல், விறுதாவாகிய காரியங்களைத் தலைமேற்போட்டுக்கொண்டு படாதபாடும்பட்டு நோய்க்குத்தக்குந்த சிட்டிகைபோட்டு உலகத்தில் பாண்டவர் சகாயனென்றும், பார்த்தசாரதியென்றும், நரநாராயணனென்றும் ஐவருக்கும் ஒன்றுந்தெரியாது, எல்லாக்கலகமும் இவனேசெய்கிறானென்றும் குவலயமெல்லாம் என்னைக்குலைய, தகுந்தகாதவர்களையெல்லாஞ் சிநேகித்து எதுகாரியமெப்படிமுடங்குமோ இதுவேலை யெப்படிமடங்குமோ ஏதாவினையுமோவென்று இரவும்பகலும் வயிற்றில் வாள்கட்டிக்கொண்டு ஆகாரம் நித்திரையில்லாமல் அவதிப்பட்டு ஐவர்பிழைத்தாற்போதும் அவர்கள் சபதம் நிறைவேறினாற்போதும் அணங்குவிரித்த கூந்தல் முடித்தாற்போதுமென்று காரியத்தாழ்ச்சி வாராமல் என் முழுமனத்துடனே சீர்படுத்திக்கொண்டுவந்தால் என்னை உங்கள் குலதெய்வமாக நினைத்து என்சொற்படிநின்று செவ்வைப்படாமல் என்னைச்சத்துருவாக்கி அவரவர்கள் மித்துருவாயிருந்து இலாபம்பெறப்போகிறீர்களல்லவா; போகட்டும். என்றாலே 'நீங்கள் விரோதிக்கவேண்டாம்நீங்களும் அவர்களுஞ் சுகமாயிருங்கள், ஆயிரம்பட்டும் அவலம் கோயில்கட்டியுங் குறை' என்பதுபோலாயிற்றே, நான்உங்களுக்குப்பயந்தவனல்லன்,உங்கள்வேலைக்கார

னல்லன்; உங்கள் சேவகனல்லன் உங்களால்கிராமம்பூமிநாடுநகரம்ஆடுமாடுவீடுயானைதேர் பரி ஆபரணமும் அலங்காரவஸ்திரம் இவைகள்பெறக் காத்திருப்பவனல்லன், என்னைநீங்கள் தடைபடுத்தவும், போவென்னவும், வாவென்னவுங்கூடாது, 'புண்ணியத்திற் குழவந்தமாட்டைப் பல்லைப்பிடித்துப் பருவம்பார்த்தான்' என்பதுபோல என்னைப் பரிக்ஷிக்கின்றீர்கள், அடபோங்காணும் நன்றியற்றவர்களே ? இன்னும் குருக்ஷேத்திரந்திரத்துக்கு வாவென்று கூப்பிடுகிறீர்கள், அவ்விடத்திற்கொண்டு போய்க்கழுவுக்கேற்ற கோமுட்டியகப்பட்டானென்றுவிட்டு 'கொண்டானுங் கொடுத்தானுங் ஒண்ணு இந்தகலியாணத்தை கூட்டிவைத்தவன் வாயிற் பிடிமண்ணு' என்னும் பழமொழிபோல் நீங்களும் துரியோதனாதியரும் ஒன்றாய்க்கூடிக்கொண்டு தானடாவென்று நம்மிருவரையுங் கூடவொட்டாமல் கலகஞ்செய்து கொண்டேவந்தவன். இவனைப்பிடியடா இவனையடியடா? சிறையில்வையடா ? இவனைக்கொல்லடாவென்றால் எனக்கார் துணை அப்போதுங்களுக்கு எதிருமில்லை எனக்குத்திக்குமில்லை தெய்வமேஎன்று உங்களாணையினால் நானிறந்துவிட்டாலும் ஒருவேளை யுத்தமுகத்திலிறந்துவிட்டாலும் என்னைநம்பி என்காலைச்சுற்றிக்கொண்டிருக்கிற பெண்சாதிபிள்ளை குடும்பமெல்லாவற்றையும், ஆர்காப்பாற்றுவார்கள், ஒருவேளை அன்னம்போட்டுக் காக்கின்றவர்கள் யாரிருக்கின்றனர்! இதெல்லாம் வீண்காரியம், பள்ளிக்கூடத்திற்குப்போனால் வாத்தியாரடிப்பார் போகாவிட்டாலேனடிப்பார்அதுபோல் உங்களுடன் கூடவருவானேன் 'கரிப்புக்கிருந்து பிழைகலகத்திற் கோடிப்பிழை' என்பதுபோல் நான் எங்களூருக்குப்போய்விடுவது நன்மையாயிருக்கின்றது பகைவன் ஊரிற் பகையாயிருந்துண்பதிலும்வாழூரிற்றாழ்ந்துகூழ்குடிப்பதுநன்று அதுபோகட்டும் ஒருதரம்பழகிவிட்டோம்எதுவந்தாலும்அனுபவிப்போமென் றெண்ணினாலோ எரிமூட்டிய அடுப்பும் இல்லிப்பானை வெந்நீருமாக முடிகின்றது ? நீங்களெப்படியும் பலவான்கள் ? உங்களுக்கொரு குறைவுமில்லை, எனக்கென்ன அண்ணன், தம்பியா பங்கும் பங்காளிகளா ஆரிருக்கின்றனர், போனாலும் இருந்தாலும் நானொருவன்றான் ஆகையால் 'காலம்போம் வார்த்தைநிற்கும்' என்றதுபோல் நீங்களிருதிறத்தவர்களுங் கலந்துவாழ்ந்தால் நானுங்கண்குளிரப்பார்ப்பேனென்று, பற்பல நிஷ்டூரங்களாகப் பேசிவரும் புண்ணியமுடையமொழியைக்கண்ணியமுடையபாண்டவர்கள்புத்திரமித்திரர்கள் யாவருங்கேட்டுமனங்கலங்கி மதிமயங்கியிருக்க, தருமராஜன் நெடுநேரம்யோசித்து! சுவாமீ தேவரீர் போகிறேனென்று சொல்லவும் மனந்துணிந்ததல்லவா என்னுடைய வினைப்பயனென்று கண்ணீர்சோரவிட்டு நான் உம்மைப்பிரிந்தும் மண்ணில்வாழ்க்கை பெறுவதா உம்மைவிலக்கி, ஒருகாரியஞ்செய்வதா, எமது மனையில் நாமிடுந் தூபதீபம் உம்மைவிட்டு அப்பாலொருவருக்கிடுவதா ஓ கோபாலா? என்னசொன்னீர் என்னசொன்னீர் என் மனத்தைப்பேதித்துவிட்டீர் 'பெருமாளில்லாமற் றிருநாள்நடக்குமா' "சுவரை வைத்துக்கொண்டல்லவோ சித்திரமெழுதவேண்டும்" என்பதுபோல் சுவாமி என்ன எங்களுடையநன்றியற்றதன்மையும் தாங்கள் உள்ளுக்குள்ளே உறவாடுமுறையும் எங்களால்நேர்ந்தகுறையும் பொல்லாங்கும் தேவரீருக் கிவ்வளவு

மனத்தாபம்வந்தவிதமும் இப்படிப்பட்டதென்று அடியேனுக்கு ஒன்றுந்தெரிய வில்லையே! அவைகளையெல்லாந் தெரிவிக்கவேண்டுமென்று தீர்க்கதெண்டமாய்விழுந்து திடுக்கென்றெழுந்து ஆ ஆ என்னகாரியஞ்செய்தீர் எழுந்திருமெழுந்திருமென்று வாரியெடுத்து மார்போடணைத்து உட்காரவைத்து உபசாரஞ்செய்து இப்படியுஞ்செய்யலாமா தருமாராசனே! இதென்ன அநியாயமென்று மாமாயன்சொல்ல, அப்போது தருமாராசன் இதெல்லா மிருக்கட்டும், என்தம்பிமார்களேதாகிலுந் தவறிநடந்தார்களா நானேதாகிலுந் தப்பிப்போனேனு, அப்படி நாங்கள் தெரிந்துந்தெரியாமற்செய்திருந்தாலும் சீர்திருத்த வேண்டிய கடமை உமக்குடையதன்றி பின்னையாருக்கிருக்கின்றது. அப்படி வேறொன்றுங்காரணமேம ஏதாகிலும் உண்டானால்அந்தச்சங்கதியைவெளியிடுமென்று தருமாராசன்சொல்ல நானென்னசொல்லுவது கோளா குண்டுணியா 'அம்மையார்மெழுகிமொக்கிட்ட இடத்தை அறியாதவள் முன்றானையால்அழித்தாள்' என்பதுபோல் பெரியோர்கள் செய்யும் பெரிதாகிய காரியங்களை சிறியோர்களெல்லாஞ் சிதைத்து வருகின்றனர். அதைநான் சொல்லுவேனாகில் என்மேல் எல்லாருக்குங்கொல்லத்தக்கபகைவருமென்றுசொல்லினர். அதைத் தருமராஜன்கேட்டு அவ்வளவு இரகசியமான காரியத்தை நானறியப் போகாதா! அதுதானின்னதென்று தெரியட்டுமே,யாவரும்அறியட்டுமே, யானையை முறத்தால்மூடுவதுபோல மறைக்கவேண்டியதில்லை, நீர் திருவாய்மலர்ந்தருளுமென்று கேட்க செய்யாளுறையுந்திருமறுமார்பன் பொய்யாமொழியாற் புகல்கின்றான்.

தருமநந்தனு; துரியோதனன் முதலிய சத்துருக்களெல்லாம் அடியோடழியும்படி முகூர்த்தம்வைத்து ஆயுதபூசைசெய்யவேண்டுமென்று நாமெண்ணியிருக்க, நமது பகையாளியாகிய துரியோதனனே இவ்விடம்வந்து தருமராஜன் தலை அற்றுவிழும்படியாகிய நாள் எனக்கு வைத்துக்கொடு நான் அந்த நாளையில் ஆயுதபூசைசெய்கிறேனென்றுகேட்க அப்படியே உன்தலைபோம்படி ஸ்திரநாள் வைத்துக்கொடுத்தான் இச்சகாதேவன். ஒருவரையொருவரறியாமல் உள்ளுக்குள்ளே இப்படி நடக்குமானால் நாம் 'ஊரைவளைத்துமென்ன உறவுபிடித்தும் மென்ன, இன்னம் அவ்வேலைகளை எப்படிமுடித்துமென்ன பிரயோசனம்! 'நிழலிலிருக்கும் பொருத்தம் வெய்யலிற் போனாற் றெரியும்' நான்பட்டபாடு எனக்குத்தெரியும் இதனாலெனக்கு மெத்த மனமும் புண்பட்டதென்று சொல்லிமுடித்தான். அதைத் தருமராஜன்கேட்டு தம்பியாகிய சகாதேவனையழைத்து என்னதம்பி கண்ணபிரான் சொல்லுவது சத்தியமா அசத்தியமாவென்றுகேட்க, சத்தியந்தான் அண்ணாவேகேளும், நாமே பகையாளிகளாயிருக்க அதனை நினைக்காமல் என்னையே நாள்வைத்துக்கொடுமென்று கேட்டபடியால் சத்தியந்தப்பலாகாதென்று நாள்வைத்துக்கொடுத்தேனென்றான். அதைத் தருமநந்தனன்கேட்டு ஆ ஆ வென்று நகைத்து ஆநந்தங்கொண்டு இதுவரையிலும் நீ எனக்குத்தம்பியல்ல, இன்றுமுதல் எனக்கு நீ நல்லதம்பியாகினையே அப்பனே? சத்தியநெறிதப்பாத நித்தியனே, உன்சத்தியமே உன்னைக்காக்கக்கடவது, இனி எனக்கு இவ்வுலகம் வராவிட்டாலும்

வந்தாலும் யார்போனாலும் யார்வந்தாலும் நாம்கூறியசபதம் சரிப்பட்டாலும் தப்பிப்போனாலும் எனக்குப் பெரிதன்று என்தம்பியினுடைய உண்மையொன்றுமே போதுமென்று பூரித்துப் புளகாங்கிதமுற்று சிறியவனாயிருந்து பெரிய பொருளைக் கைக்கொண்ட சகாதேவனைக் கட்டித்தழுவி முத்தமிட்டுக்கொண்டு கண்ணனைக் கண்ணினால் ஊற்றுப்பார்த்து காயாம்பூவண்ணனே உலகமுள்ளவரைக்கும் அழியாப்புகழ்கொண்டான் என்தம்பியென்று சொன்னதன்றி தம்பி சகாதேவன் எனக்குச் செய்தசகாயம் என்தந்தை முதலியயாருஞ் செய்ய மாட்டார்களென்றுஞ் சொல்லி ஐயா! என்தம்பியினுடையசத்தியத்தைக் குறித்து நீர்மெத்தவுஞ் சந்தோஷப் படவேண்டுமேயென்று தருமராஜன்சொல்லி முடித்தான். அதைக்கேட்டகள்ளமாமாயப்பிரான்இரண்டுகையையுங்கொட்டிக் கலகலவென்று நகைத்துக் கேட்டீர்களாசபையிலுள்ளவர்களே 'உளவில்லாமல் ஊரழியாது' என்பதுபோல் இவரநுமதியில்லாம லிருந்த சகாதேவன் இப்படிசெய்வானா சரிதான் சரிதான் இனிப் பேசவேண்டியதில்லை. 'குழந்தையினுடைய தொடையையுங்கிள்ளி தொட்டிலையும் ஆட்டினால் தூங்குவதெப்படி, சொல்லுங்கள், இவர் பெரியவரொன்று நான்சொன்னால் ஏனடா இப்படிசெய்தாய் புத்தியில்லாதவனே யென்று கண்டிக்காமல் அவனைக் கட்டித்தழுவி முத்தமிட்டுக்கொண்டு மிகவும்புகழலாமா, இனி இந்த அநியாயத்தை நானாருடன் சொல்லியாறுவேன், அரசர்களே இப்போதுவீணாய் நானொருவன் பழிக்காளானேனே இதுவரையிலும் பகை களையவேண்டும் விதைவித்தாகவேண்டுமென்று நான்பட்டபாடு விழலுக்கிறைத்த நீராயிற்றே, வெய்யலின் மஞ்சட் பூச்சாயிற்றே விவகாரங்கெட்டுப் போயிற்றே என்று விசனப்பட்டு, அதிகாரிவீட்டில்திருடி தலையாரிவீட்டில் அடுக்கிவைத்ததுபோல் உன்னிடத்தில் சொல்லிக்கொண்டேன், இனி எதுநடந்தாலும் வாய்பேசாம லிருக்கும்படி செய்துவிட்டீர், எனக்கென்னகெட்டுப்போனது, ஆண்சிறையும் பெண்சிறையும் தலைவிரிகோலமாக அவதிப்படுவது ஒன்றுமில்லை அக்கரைக்காரருக் கல்லவோஇருக்கவேண்டும் உமது கருத்தைநானறிந்து கொண்டேன் இதுபோகட்டும் மேல்நடக்கவேண்டியகாரியங்களுக் கென்னசொல்லுகின்றீரென்றுகேட்க, அந்தவார்த்தையை முரசக்கொடி யினையுடையமுதல்வன்கேட்டு இனிமேல் நடக்கவேண்டியகாரியங்கள் இன்னதென்று கட்டளையிட்டால் அடியேன் அப்படியேசெய்ய காத்திருக்கின்றே னென்றுசொல்ல, பின்னைவேறொன்றுமில்லை, நமது சேனைகள்முதலியயாவுங் குருக்ஷேத்திரம் போய்ச்சேர்ந்து வீரமாகாளியைக் கொலுவிருத்தி அபிஷேக அலங்கார தீப தூபத்துடன் பலிகொடுத்து ஆயுதபூசைசெய்து ஆயுதமெடுப்போமாகில் சத்துருக்களைஜெயித்து மித்துருக்களால் நாமும்வெற்றிபெறலாம், இதற்கு நாளையத்தினம் நாள்நியமித்திருக்கின்றேன் அப்படி நடத்திப்பூசியுங்க ளென்று நாரணன்சொல்ல, யாவருஞ் சந்தோஷித்து முக்கியமாகச் செய்யவேண்டிய இராசதர்மம் வீரதர்மமிவையே யென்றுசொல்ல உடனே முரசகேதனன்கேட்டு கண்ணனைநோக்கி உமதிஷ்டப்படியே காட்டெருமை யானை, குதிரை, ஒட்டை, பன்றி, கோழி,

ஆடு, மான் இவைகளெல்லாம் பலியிடுங்களென்று சொல்ல அதைக்கேட்டு ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுகின்றனர்.

ஓ! தருமநந்தனு? இதெல்லாம் உலகத்திற் சுளுவாகிய பிரார்த்தனைமுதலிய காரியங்களுக்குச் சாதாரணமாய்ப் பலியிடுவதுண்டு நாம் தொடங்கியிருக்கும்வேலையோ பிரமாண்டமானவேலை ; இதன்றியும், துரியோதனனோ வெகுபேர் பெரியோர்களைச்சிநேகித்து திவ்வியமாகிய பலிகொடுத்துப் பராசத்தியை பூசைசெய்து ஆயுதமெடுக்கும்படி ஸ்திரநாள் நியமித்துக்கொண்டிருக்கின்றான். நாம் பூசைசெய்து ஆயுத மெடுக்கப்போகின்ற ஸ்திரவேளையினால் அவனுக்குச் ஜெயங்குறைந்து நமக்குஜெயம் வரவேண்டும் ஆகையினால்உனக்குத் தோன்றியதையோசித்துச்சொல்லும் ஐவர்முதல்வனேயென்றனர். அதைக்கேட்டு தருமராஜன் நகைத்து 'நரிவாலைக்கொண்டு கடலாழம் பார்ப்பதுபோலிருக்கின்றதே தேவரீரென்னைக் கேட்கிறயுக்தி வெகுநன்றாயிருக்கின்றது. இப்படி அடிக்கடி யென்னைச் சோதிக்கவேண்டாம்? தேவரீருடைய சிந்தையின் விளைவெப்படியோ அப்படியே முடித்து விடுமென்ன ; அதற்குப் பாண்டவர் சகாயன்சொல்லுகின்றான். தருமநந்தனு? நானென்னநினைக்கின்றேனென்றால் சத்தியசவுச ஆசார விபகாரமுள்ளவனாய் வீரப்பிரதாப அதிரதத் தலைவனாய் எதிருரோமக்காரனாய் இருக்கும் ஒருவனைப்பிடித்து வீரமாகாளிக்கு நரபலியூட்டிவைத்து விட்டால் எத்தனைபேர் எத்தனைசாஸ்திரம் பார்த்து நாள்வைத்துக்கொடுத்தாலும் எவ்வளவு பலியிட்டுப் பூசைசெய்து ஆயுதமெடுத்தாலும் அத்துரியோதனன் அவனுடைய புத்ரமித்ராதியரை மீறவிடாமல் நாமேமுடித்துவெற்றிபெறலாம், இதற்குநானேமுன்னிற்பேன், நீர்வெறுகயோசிக்கவேண்டாமென்றுசொல்ல தருமராசன் அந்தவார்த்தையைக் கேட்டுச் சற்றுநேரம் யோசித்துச் சொல்லுகின்றனர்.

ஓ! சுவாமீ? தேவரீரிஷ்டப்படி நடத்திவையுமென்றுசொல்ல ; ஆளைக்கொண்டு நடத்துவது கடையில்விற்கிற பண்டமா காசுகொடுத்துக் கொண்டமடமா வேலைமுடித்து வென்றோமா வீரமாகாளியைப் பூசித்தோமா வென்று போவதற்கு இதுவோ மானிட உயிரைச்சார்ந்தவேலை, அதிலேயுஞ் சாஸ்திரப்படி இலக்ஷணம் அமைந்திருக்கின்றவர்க ளருமை, அப்படியுந் தேடிப்பார்த்தால் நாலத்திரண்டுபே ரிருக்கின்றனர்; அவர்களுக்கு மொவ்வொரு காரியநேரிட்டிருக்கும் ; அதென்ன வென்றால் சல்லியனொருவ னிருக்கின்றான். அவனோ துரியோதனனுக்குப் படைத்துணையாய்ப் போய்விட்டான் ! அருச்சுனனொருவ னிருக்கின்றான் ? அவனைப் பலியூட்டினால் பஞ்சபூதம்போன்ற ஐவரொன்னும் பூண்டு அப்பொழுதே யற்றுப்போம் ; அரவானொருவ னிருக்கிறான். அவனோ துரியோதனனுக்குக் களப்பலிவரும்படி யுடன்பட்டான், இனிவேறொருவருமில்லை, செல்லுஞ் செல்லாத்திற்குச் செட்டியாரிருக்கிறா ரென்பதுபோல் நானொருவ னிருக்கிறேன் தருமநந்தனு? என்னைக் களப்பலியூட்டி உங்கள் சபதத்தையும் ; சத்துருக்களையுமுடித்து வெற்றிபெற்று அரசாளுங்களென்று அமலன் சொல்லவே ஹரிகரீயென்று இரண்டுசெவியும் பொத்திக்கொண்டு ஏக்கமுற்றவர்போல் நின்று பெருமூச்சுவிட்டு இப்படிப்பட்ட பெரும்

பழியாகிய சொற்கேட்பதற்கோ என்காதுக ளிருந்தனவென்றுமனம் வருந்திச் சபையைநோக்கிச்சொல்லுகின்றார்.

ஓ! அரசர்களே? இவ்விந்தையாகிய வார்த்தையைக் கேட்டீர்களா நந் தாகந் தன்னைக் களப்பலிகொடுத்து நான் பழிமுடித்துக் கொண்டு அரசாள வேண்டியதென்று நமது கண்ணபிரான்சொல்லுகின்றார். அப்படிசெய்துபகை வரைமுடித்து வெற்றிபெற்று நானெத்தனைநாளிருந்து வாழப்போகிறேன்,இத னிலும் துரியோதனனையே உலகத்தையாள விட்டுவிட்டு நாங்களேவருங்காட் டுக்குப் போய்விடுவது மிக உத்தமமா யிருக்கின்றது; நீங்களெல்லாருந் தங் கள் தங்கள் நாட்டுக்குப் போங்களென்று இதையங்குவித்து; வந்தனைசெய்து மரியாதையுடன்சொல்லி தம்பிமார்களே; எழுந்திருங்களென்று சொல்லித் தானுமெழுந்தனர். அந்தவேளையில் அரவானெழுந்து அறத்தின்மகன் காலில் விழுந்து ஐயா? உட்காருமென்று சொல்லி சபையிலிருந்த யாவரையும் பணி ந்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைப்பார்த்து ஜெகத்ரக்ஷகனாகிய நீமாய வலைவீச வந்தனைபோலும்? உன்சிந்தையி னெண்ணியவண்ணம் நடக்கும்படி யாகிய காலம்நேர்ந்திருப்பதால் நீ இந்தத்தந்திரமாத்திரமோ செய்வாய்; இன்ன மென்னென்னமோ செய்பக்காத்திருக்கின்றனை, இறைவனே என்னைமுடிக்க இவ்வளவு யுத்திசெய்ய வேண்டுமா; உன்னிஷ்டத்தி னின்றா விருந்தவிட த்தி லிறக்கமாட்டேனோ! ஈசனே? சும்மாவிருந்தஐவர்மனத்துக்குத்துயரமுங் கொண்டுவந்து வைத்துவிட்டாயே? உன்மாயமாரறிவார்கள்; என்னை நீயறி வாய் பன்னகசயனா வென்றுபணிந்து பாண்டவர்களைப் பார்த்து ஐயா? நேற் றிராத்திரி துரியோதனமகாராசா என்னிடத்திற்கு வந்தனர்; அவரைக்கண்டு வணங்கி ஆசனத்திலிருத்தி ஏது இவ்வளவுதூரம் வந்ததென்று கேட்டேன், அதற்கு அவர்சொன்னது பாண்டவர்களுக்கும் எங்களுக்கும் பகைமேலிட் டிருப்பதனால் களப்பலிக்கு நீயே வரவேண்டுமென்று இருகரத்தையும் நீட்டி யிரந்தனர், போகதேவேந்திரனை யொத்த கவுரவகுலமுதல்வன் இச்சைமேற் கொண்டு பிச்சைதாவென்று இலச்சையின்றிச் சொல்லக்கூடுமோ! ஆகையி னால் இப்படியாகவிரந்த என்பெரிய தந்தையைநோக்கி எப்போது களப்பலி யூட்டநினைத்திருக்கின்றீரோ அப்போதுவரையிலும் இந்தஅநித்தியதேகம் நிலை த்திருக்குமானால் நீரோ ஒப்புக்கொண்டதுண்டு, இப்போதும் நான் ஒப்புக்கொ ண்டதுண்டு, இப்போதும் நான்தப்பிதமாய்ச் சொல்லமாட்டேன், குவலயா பீடமென்னுந் தந்தியைக்கொன்றவனே, நீ முந்திக் கொள்ளுவதானால் இதோ உமக்குச்சொந்தமாயிருக்கின்றேன், இப்போதுமக்குச் சிந்தைகவி திடுக்கென்று விழுந்ததா இனியுமக்கு நித்திரைபிடிக்குமா நந்தகோபாலனே என்றுசொ ல்லிநின்றான். அந்த வார்த்தையைக் கேட்டு; இதென்ன அநியாயம் நானா னென்று சொல்லப்போய்த் தானானென்றாய்விளைந்தது; அப்படியா அரவானே துரியோதனன்வந்துஉன்னைக் களப்பலிக்குக் கேட்டானோ? அடடா தரும நந்தனரே கேட்டீரா சங்கதி 'கிணறுவெட்டப்போய்பூதம்பிறந்தகதையாயிற்று' இப்படியிருக்கின்றது உலகம் பிழைக்க அவனவன்தேடிக்கொள்ளும்விதம். நாமாத்திரம் வீண்காலம் போக்கிக்கொண் டிருக்கிறோ மென்று சொல்லி

யருளினர்; இவ்வசனத்தைத் தருமராசன் கேட்டு அரவானை யழைத்து அணைத்திறுகப்புல்லி அப்பனே; என்னையனே, சாந்தமூர்த்தி, துரியோதனன் களப்பலிக்குக் கேட்க அதற்கு ஒத்துக்கொண்ட என்னிருகண்ணே, சந்திர குலத்தை விளக்கவந்த மணித்தீபமே, பிராணனைக் கேட்டவர்க்குக் கொடுக்க விசைந்ததாருவே யென்றுபற்பலவகையாய்ப்புகழ்ந்தனர். அருச்சுனன்முதலானோரும் அகங்களித்திருந்தனர்.

அதுகாலையில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லுகின்றனர். ஏனையா இவர்களெல்லாருமிப்படி ஒன்றுபட்டிருப்பார்களானால் நான்மாத்திரம் வேலையற்றவனு 'ஆற்றிற்போகிறசலத்தை அப்பாகுடி, ஐயாகுடி' என்பதுபோலிருக்கின்றதே, இதென்ன அபிப்பிராயமென்று ஸ்ரீ கிருஷ்ணபிரான் தருமராசனைத் தனியே அழைத்துப்போய் நடக்கவேண்டிய காரியங்களைக்கலந்து பேசி அரவானைக் களப்பலிவைத்து விடும்படியாகச்சொல்ல, ஐயையோ என்பிள்ளையைக் கொன்று முதற்பலியூட்டி வைப்பது பெருமையோ, யுத்தத்திற்காரம்பஞ் செய்யும் போதே புத்திரசோபத்துடனே யுத்தஞ்செய்யலாமோ சொல்லும் என்தம்பிமுதலானவர்கள் மனமெப்படி ஆனாலும், நானுடன்படமாட்டேனென்று தருமராசன்சொல்ல, அதற்கு ஸ்ரீ கிருஷ்ணபிரான் சொல்லுகின்றனர்.

தருமராஜனே கேளும்! களப்பலி யூட்டுவதென்றால் தலையறுத்து வைப்பதாக யோசித்துவந்திருக்கின்றீரோ; அப்படியன்று, அரவானைமங்கலஸ்நானஞ் செய்வித்து அலங்காரப்படுத்தி அவன் கையிற்றானே வாள்கொடுத்து முப்பத்திரண்டு உறுப்புகளிலேயும் கொஞ்சங் கொஞ்சம் அறுத்து வீரமாகாளிக்கு நைவேத்தியம் வைக்கச்செய்வது களப்பலியேயல்லது வேறன்று; இந்த அரவானுஞ் சுத்தவீரனுப்பின்பு யுத்தமுஞ் செய்வானென்று ஸ்ரீ கிருஷ்ணபிரான் சொல்ல; தருமராஜன் சித்தமகிழ்ந்து ஸ்வாமி எதிருரோமக்காரன் வேண்டுமென்னுஞ் சித்தாந்தமென்னவென்றுகேட்க ஸ்ரீகிருஷ்ணபிரான் சொல்லுகின்றனர்.

தருமனந்தனே கேளும்; மாமிசம் அறுக்கும்போது அவ்விடத்தி லுதிரம் வராமலும் கண்ணீரில்லாமலு மிருக்கவேண்டிய மந்திரத்தைப்பற்றியெதிருரோமக்காரனைத் தேடவேண்டுமென்று சொல்ல; அப்படியாவென்று அகமகிழ்ந்து அருச்சுனன் முதலாகிய தம்பிமார்களுக்குந் தெரிவிக்க, அவர்கள்கேட்டுத்திருமாலுடைய மனத்திற்கும் தேவரீருடைய சித்தத்திற்கு மெப்படி சம்மதமோ அப்படியே எங்களுக்குஞ் சம்மதமென்று அருச்சுனன் முதலானோரும் புத்திரவாஞ்சையை அகற்றி லடக்கிச்சொல்லினர். அந்தக்குறிப்பை அரவானறிந்துகொண்டு ஐயா? நீங்க ளொன்றுக்கும் யோசிக்கவேண்டாம் 'காத்திருந்தவர் கால்வாங்க நேற்றிருந்தவ ரின்றில்லை பார்த்திருந்தவர் பாழானார்' என்னும் பழமொழிபோலும் ஆகாயத்திலெழுந்தகல்லைப்போலும்; காற்றை அடைத்துவந்த தோல் துருத்திபோலும்; நெருப்பிற்காட்டிய மெழுகைப்போலும்; பெருங்காற்றிற் றோன்றியசருகுபோலும்,சூத்திரக்கயிறுடையபொம்மைபோலும்,வேகாப்பாண்டத்தி னிறைந்த ஜலம்போலும்; ஒருபோதும் நிலையென்று சொல்லக்கூடாத பொய்யாகியதேகத்தை மெய்யென்று நிச்சயித்து வெகுபேர்இறந்து

மடிந்தனர்; 'நீர்மேலெழுத்தாகும் யாக்கை' என்று பெரியோரும் சொல்லியிருக்கின்றனர், ஆகையால் அநித்தியத்தை நித்தியமென்றுநினைத்துப்பாம்பின்வாயிலகப்பட்டதேரை பாம்பினுடையபல்நுனியிற் றொங்கும் விடத்துளியைப்பார்த்து ஈயென்றுகருதி இதைப்பிடித்துநாம்புசித்துப்பசியாறியிருப்போமென்று எண்ணித்தேரை அந்தவிடத்துளியைத் தாவப்பாம்புவாழைப்பழம்போல்தேரையைப்பின்புறமாகவேபிடித்து விழுங்கித்தன்பசிதணிந்ததுபோற் சாந்துணையும் நீங்காமையும்பிராணபயமும் யாருக்குமிருக்கும்; அப்படியிருந்தாலும் சமுத்திரத்தினலைபோலும்வண்டிச்சக்கரம்போலும் ஊசலின்வடம்போலும் கீழதுமேலதாய்ப்போய்வந்து கொண்டிருக்கும் தொழிலையுடையபிற்றற்சடத்தைப்பெருமையாக நினைத்து மூடர்மயங்குவர், நுண்ணறிவுடையோர் கொடிப்போதுமகிழார், உலூகியின்வயிற்றில்உங்களுக்குநான் பிள்ளையாகப்பிறந்தும் என்னபயன், தந்தையைப்போக்கித்தர்ப்பணக்கிரியைமுதலியகடனைத்தீர்ப்பவன் எவனானாலும்அவனுக்கே பிள்ளையென்னும்பெருஞ்செல்வப்பேர்தகும், இல்லாவிட்டால் இருந்தும்இல்லாமையாகியஇழிவைப்பெறத்தக்கநாயிருக்கும். இதோநமதுகுலத்தில்வீஷ்மர் தந்தையாகிய சந்தனுமஹாராஜன் நிமித்தத்தில்விரதசீலனாகி மேன்மைபெற்றனர், ஆதலால்நானும் என்சரீரம் வருந்தி என்னாலியன்ற உபகாரங்களைத்தந்தைமார்பொருட்டுப்பராசத்திக்குத்திருத்திசெய்யநினைக்கிறேன், நீங்கள்தயைசெய்து இச்சிறியேனுலாகிய உதவியை அங்கீகரிக்கவேண்டும், மேலும் எல்லாரும் உயிருடனிருந்து வாழவும் நான்மாத்திரம்இறந்துபோகவும் நேரிட்டதேயென்னும் பயம் எனக்கில்லை. அதேனெனில் இவ்வுலகத்திலுள்ள ஆன்மகோடிகளில் வெகுபேரைக் குருக்ஷேத்திர பூமியிற்கூட்டி வேலைமுடிப்பதற்கு வேலைவிட்டெடுத்து இதுவேவேலையாக வந்திருக்கின்ற விமலன் என் கண்காண எல்லாரையு முடிப்பானென்பது என்னுள்ளே தோன்றுகின்றமையால் முன்னேயிறப்பது பின்னே யிறப்பதென்னும் பேதமும் அதனால் நேரிடும் பிராணபயமும் என்மனத்தைவருத்தப்படுத்தவேயில்லை. பழுத்தவோலை முன் விழுந்தால் குருத்தோலை பின்விழுமென்னும் தன்மைபோல கடைசியிற் கணக்குப் பார்க்கும்போது சகடுமுழுங்காலென்னுந் தன்மையாய்ச் சரிப்பட்டேபோம்? 'குதிரையுங்காதங் கிழவியுங்காதங்குலமன்னனே' என்னுந்தன்மையாமென்று வணங்கிச்சொல்லினன். அதை அருச்சுனன் முதலானோருங்கேட்டு மகிழ்ந்திருந்தனர். அந்தச்சமயத்தில் அரவான் பெரியதந்தை முதலானோரையும் பணிந்து தாய்மார்களுக்குந் தீர்க்கதண்டஞ் செய்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை வணங்கி ஸ்வாமி! தேவரீருடைய எண்ணப்படி யுடன்பட்ட எனக்கு ஒருவரங் கொடுக்கவேண்டும். அதாவது ஜயவீரப்பிரதாப விஜயனுடைய பிள்ளையாகிய அரவான் களப்பலியாலிறந்தா னென்னும் பெயரில்லாமல் யுத்தகளத்திற் சுத்தவீரனாலிறந்தானென்னுங் கீர்த்தியும்; அப்படிப் பட்ட வீரனிடத்திற் போர்புரிந்து இறக்கும்படியாகிய வன்மையும் எனக்குக் கொடுக்க வேண்டுமென்றுகேட்க, அப்படியே இறைவன் அநுக்கிரகஞ் செய்வாரென்று அருள்புரிந்து யாவருமகிழும் படியாய்ப் பேசி பின்பு தாந் தாம் இறங்கியிருக்கும் பாடிஇடமே போய்ச்சேர்ந்து போசனமுதலியனபுசித்திருந்து அன்று

போய் மறுநாட் காலமே எழுந்து சபைக்குவந்து யாவருஞ் சேர்ந்தபின்னர்
நெடுநேரம் வரைக்கும் வார்த்தையாடிக் கொண்டிருந்து அப்பால் அன்றைஅமா
வாசியாதலினால் யாவருந்திலதர்ப்பணாதிகளுமுடித்துப் போசனஞ்செய்துஇரு
பதுநாழிகைக் குருக்ஷேத்திரம்போய்ச் சேரவேணுமென்று சேனாதிபதியாகிய
சுவேதனனை யழைத்துக் கட்டளைபிறப்பித்தான், அதைக்கேட்ட அரசர்களெல்
லாரும், ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பார்த்துஇன்றைக்குச் சதுர்த்தசி நாளைக்கன்
றோ, சேனைகள் குருக்ஷேத்திரம் போகவேண்டிய நாளென்று சொல்லினான்;
அதைக்கேட்ட கண்ணபிரான்நகைத்துஐயோ! இன்றைக்குத்தான் அமாவாசி
யென்றுதாபித்தனன், அப்போது அரசர்கள் முதலிய பாண்டவர்களும்பஞ்சா
ங்கமெடுத்து வரச்சொல்லிப்பார்த்தபோது அதிலுமின்றைக்கென்றே யிருக்கப்
பார்த்து பௌரோகிதரையுங் கேட்கும்போது ஐயா? இன்றைக்கே அமாவாசி
யென்று அவர்களுஞ்சொல்ல, மற்றயாவரும் அந்நகரத்தி லுள்ளவர்க ளெல்
லாரும் ஸ்நானசங்கற்பங்களைச் செய்துகொண்டு திலதர்ப்பணாதிகளை விடுத்
துப் பிதிர்த்தேவதைகளைப் பூசித்துநைவேத்தியம் வைத்தபோது அந்தப் பிதுர்
த்தேவதைக ளெல்லாரும் வந்து சாப்பிட்டனர். அந்தவேளையில் தேவதை
களுக்கும் சூரியசந்திராதிகளுக்கும்பிதுர்ப்பாகம் அகப்படாமையால்இதென்ன
மாயம், பிதுர்க்களெல்லாரும் உண்டுகளித்திருக்க நமக்குப் பாகமகப்படாமற்
போனவா றென்னவென்று தேவதைகளெல்லாருங் கூட்டங்கூடிச் சூரிய
சந்திரனை அழைத்து இன்றைக்குப் பிதுர்த்தினமென்று உலக மெல்லாங்
கொண்டாடிப் பூசிக்கின்றதே, உங்களுக்குக்கிடைக்கவேண்டிய பிதுர்ப்பாகங்
கிடைத்ததா வென்று கேட்க, அச்சொற்கேட்டு சந்திரசூரியரிருவருந் திடுக்
கிட்டு நாளைக்கன்றோ நாம் கூடவேண்டியகாலம், சந்திர சூரியர் சம்பந்தப்
பட்டகாலமன்றோ அமாவாசியான பிதுர்த்தினமென்றுபெயர், நமதுகதிஇன்று
முழுமையுஞ் சென்றபிற்பாடன்றோ நாளைத்தினத்திற் கூடிப்போகிறோம், அப்
போதன்றோ பிதுர்ப்பாகம் நமக்குக்கிடைக்கும், அப்படியிருக்க இன்றுகூடிய
தாய்க் கொண்டாடியவிதம் எங்களுக்குத்தெரியவேயில்லையென்று கிரகங்களை
க்கேட்க, அதென்னமோ எங்களைத் தானம்விட்டுத் தானம்புரட்டி யிருக்கின்
றது. எங்களுக்குந்தெரியவில்லையென்றுசொல்லினர், இப்படி எல்லாருஞ்சந்தே
கப்பட்டு நல்லது! நமக்காகப்பூமியி லவதரித்திருக்கும் புண்ணியனாகியகண்ண
பிரான்உபலாவியத்தி லிருக்கின்றனன். அவன்தான் இதற்குக்காரணம்போலு
மிருக்கின்றது; அங்கே போய்க்கேட்போமென்று அந்தரம்விடுத்து இந்திரன்
முதலிய சந்திரசூரியர் யாவருஞ் சேர்ந்துவந்து அபர்வருமமரர்களதிபதியைத்
தனித்துக்கண்டுவணங்கி! நாளை நாங்கள்கூடுஞ் சங்கமமாயிருக்க இன்றென்று
தாங்கள்கட்டளை செய்ததாய்ப்பேசிக்கொள்ளுகின்றனர், ஆகையால்சந்தேகப்
பட்டு உங்களைக் கேட்கும்படிவந்தோம் என்றுசந்திரசூரியர் ஒருவர் பின்னொ
ருவராக நின்று சொல்லினர். ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவர்களுடைய வசனத்
தைக்கேட்டு நல்லது அமாவாசி யென்பதென்ன வென்றுகேட்க, நாங்களிருவ
ருங்கூடியகாலம் அமாவாசியான பிதுர்த்தினமென்றுசொல்ல, அதைக்கேட்ட
பகவான் நகைத்து அவர்களைநோக்கி இப்போதுநீங்கள் கூடியிருக்கின்றீர்களா

வென்றுகேட்க, தேவரீரைக்கண்டு சந்தேகநிவர்த்திசெய்து கொள்ளும்படி யாகஇருவருங்கூடிவந்தோமென்றுசொல்ல; நீங்கள்கூடியதினமே அமாவாசியா கையால் இப்போது கூடியிருக்கின்றீர்களே! இஷமேவ அப்பிஷூர்க்ஷினந்தா னென்றுசொல்ல, காலத்தினத்தை இன்றாக ஒப்புக்கொண்டால் எங்கள்கதி யெப்படி சரிப்படுமென்றுகேட்க, இன்றுமுதல் பலநாட்களிலுஞ் சேர்ந்து ஒவ்வொரு தினத்திற்கு மாத்திரைப்போது கழியாகச்சென்று சம்பவித்திக் கொள்ளுங்களென்று சொல்ல, அப்படியே மகாபாக்கியமென்று ஒப்புக்கொண் டுபோய்விட்டனர். அந்தக்குறையுதான் இன்றைவரையில் அமாவாசியாக வராமலின்னமும் இரவும்பகலுமாகப் புரண்டுகொண்டேவருகின்றதுஎன்று ஜெனமேஜய மஹாராஜனுக்கு வைசம்பாயனர் சொல்ல, அதைக்கேட்டு மஹாசந்தோஷமடைந்து, காலையுங்கோளையும்புரட்டும் நாயகனாகியநாராயணனே பாண்டவர்களுக்கு மைத்துனனாக அமைந்திருக்கும்போது வேறாக நடக் குங் காரியங்களு முண்டோ, வேதவேதாந்த முதல்வனாகிய ஸ்வாமி யென்று சிந்தனைசெய்து கண்ணீருகுத்து மேற்செயல்களைத் திருவாய் மலர்ந்தருளவே ண்டுமென்றுஜெனமேஜயமஹாராசன்கேட்க வைசம்பாயனர்சொல்லுகின்றார்.

இப்பால் ஸ்ரீகிருஷ்ணபிரான் சேனாதிபதியாகியசுவேதனையழைத்து நமது சேனைகளெல்லாம் இன்றே குருக்ஷேத்திரம் போய்ச்சேர்ந்து இராத்திரிக்கு வீரமாகாளி பூசைசெய்து ஆயுதமெடுத்து காலைக்குறுதனுள் யுத்தம் ஆரம்பிக் கும்படி நாள் நியமித்திருப்பதனால் அதிசீக்கிரத்திற் பிரயாணப்படுமென்று சொல்லவே, அப்போதே பிரயாணபேரிமுழங்கி அளவிறந்த முரசுபேரிகுடமு ழாகொம்புமுதலிய வாத்தியமுழக்கமும், சேனைப்பெருக்கமும் இரதகஜதுரக பதாதிகளின் நெருக்கமும் அண்டமுகடுமுதல் எண்டிசையும் அதிரும்படி பூமண்டலமும் புண்டரீகனுலகமும் பெரிதும் அஞ்சும்படியாய்ப்புறப்பட்டன. ஒருமையென்பது சிறுமைப்பாற்குறையவும் இருமையென்றும் அஸ்திர சஸ்திர ஆயுதங்களிரண்டுமிழையவும் மூன்றுலோகமுழங்கி விழிக்கவும் நான்குநில முந்நடுநடுங்கவும் ஐந்துபூதங்களலறவும் ஆறுசமயமடங்கவும் ஏழுகடலுமிறைய வும் எட்டுக்கயங்களும் நடுங்கித்துடிக்கவும் ஒன்பதுகிரகங்களுலையவும் பத்துத் திசைகளும்பதறவும் பதினொரு உருத்திரர்பறக்கவும் பன்னிரண்டு சூரியர்யாற வும் பதின்மூன்று தமிழ்நாட்டரசருடன் சோமராஜா பாண்டவர்களின் ஏழக் குரோணிசேனைகளுக்கும் படிபோட்டுக்கொண்டுவரவும்பதினாலுலகமும்பதை க்கவும், பதினைந்து திதியுமொடுங்கவும்,பதினாறும்பேறும் பாண்டவர் பெறவேண் டுமென்னும் பத்தியினால், பாதலத்திலிருக்கும் நாகங்களினுடைய தலைகளுங் அவற்றின்சிரத்திலிருக்கின்றநாகரத்தினம்பிரகாசிக்கும்படி தொகையிறந்தயானை களும் மகமேருவேமுதலிய பர்வதங்களுக்கு அச்சுமச்சுசக்கரம் அமைத்துக் குதிரைகள் கட்டிவருவனபோலொத்த கோடாகோடிதேர்களும், குரகதத்தாற் றாளிப்படலங்களை யெழுப்பி மேகக்கூட்டங்களுமொடுங்கிப்போம்படி யாய துமானித்துத்தாவி வருங்குதிரைகளும், அத்தன்மையவாக எழும்பியதும்பு களை யானைமதங்கள் உளைச்சேருக்க, அந்த உளைச்சேற்றை இரதங்களி னுருளைகளூர்ந்து வாள்கருக்கைப் போலும் மண்வெட்டி யிலையைப்போலும்

காய்ந்துலரச்செய்ப அப்படியுலர்ந்துகாய்ந்த களிமண்கட்டியைப் பரமாணு
வாக்கி ஆகாயத்தில் மறுபடியும் பறக்கச்செய்து தேவர்கள், கண்ணிமைத்துத்
தியங்கும்படியாக்கி இமையாநாட்டத்தவரை இமைக்கு நாட்டத்தவரென்று
பேரிட்டழைக்கும் பெருங்கூச்சலிட்டுச் செல்லும் பதாதிகளும், அப்படி
தேவர்களுடைய கண்களில் விழுந்த தூம்மைத்துடைத்து விசனப்படாதீர்கள்
நீங்கள்இமையாநாட்டத் தவர்தாமென்னும்பெயர்விளக்கித் தேவோபகாரஞ்செய்
யும்படியாக்கிய பற்பல வண்ணக்கொடியாடைகளும், தேவர்களுக் குபகாரஞ்
செய்யுங் கொடிகளாகிய வஸ்திரங்களைத் தாங்கியிருக்குந் தவளக்கொடியும்
கொம்புகளையும் பலவிதக்குடைகளையும் பிடித்துவருகின்ற படியாள்களும்
அந்நிழலில் வரும்படியாகிய முடிமன்னரும் விரப்பிரதாப கெடிமன்னரும்
முடியுடன்முடிகளெருங்கப் புயத்தொடு புயங்களெருங்க அடியுடனடிகண்
மிதிக்க ஆயுதங்களுடனாயுதமிடைமுப ஆக்கிரமித்துபராக்கிரமத்துடன்வியாக்கிரம்
போற் சீக்கிரம்வந்து பற்கடித்துச் சொற்படித்து வாய்மடித்து வாள்பிடித்து
படபடவென்ன மீசைதுடித்து விற்பிடித்து மற்கொடுத்து வீரங்களைப்பேசு
மோசையும் யானையின் முழக்கமும் தேர்களின் கர்க்கரத்தொனியும் குதிரை
களின் அநுமாலிப்பும் சேனைகளின் பெருங்கூச்சலும் இவைகளெல்லாம் உல
கம் செவிடுபடும்படி முழங்கும்படி குருக்ஷேத்திரம்வந்துசேர்ந்தன செங்கண்
மாலே சிரமுஞ் சீவனுமாகவும் செனாதிபதி சுவேதனை அணிமுடியும் ஆபரண
அலங்காரமாகவும் மற்றையவரசர்களை பலவிதஉறுப்புகளாகவும் பாண்டவர்
களைப்படைத்தேகமாகவுமிருந்து அந்தக்குருபூமியில் இந்தஏழுக்குரோணிசேனை
களுந்தாங்களுமிருப்பதற்காப்பாசறைஅமைக்கும்படி யோசித்துக்காண்டவன
த்தில்அருச்சுனனால் உயிருதவிபெற்ற மயனென்பவனை அமரர்வருமமரர்கட்கதி
பதியாகியகெடியோனழைத்தான், நினைக்கவே அவன்வந்து ஆதிநாராயணனை
வணங்கிஅடியேனை நினைத்தகாரியமென்னவென்றுகேட்க இவ்விடத்தில் யா
வரும்அவரவர்களந்தஸ்தின்படியிருப்பதற்காகிய படைவீடு வெகுதிட்டமாய்
அழகியசட்டமாய் ஏற்படுத்தவேண்டுமென்றுசொல்லியருளினான்,மகாபாக்கிய
மகாபாக்கியமென்றுதன்மனத்திலெண்ணித்து கரத்திலிருக்கும் மாத்திரக்கோலி
னாலும் தன்கண்களினாலும்கோடுகளைப்பற்றுநாற்புறமதிலும்கோட்டைவாயி
லும் ஆயுதசாலையும் போசனசாலையும்பூந்தருச்சோலையும் புனிதமகாஸ்நானஞ்
செய்யும் இடமும்பூசாவிதி முடித்துக்கொள்ளுமிடமும் தேவதார்ச்சனைக்கூட
மும்அலங்காரம்செய்துகொள்ளும் அறையும்அரசர்களிருக்குந்துறையும்ஆலோ
சனை மண்டபமுறையும் ஆனைகட்டுங்கொட்டாரமும் குதிரைகள் பந்திக்குஞ்
சோலையும்,தேர்நிறையுஞ்சாலையும்பதாதிகளடங்கும் இடமும் ராஜஸ்திரீகளிரு
க்கும்அந்தப்புரமும், சவுக்கடிமேடையும், சந்தனவாடையும், சித்திரகூடமும்
அஸ்திரமாடமும், சாதுசங்கசாலையும் வேதவேள்விச் சாலையும் ஓமச்சாலையும்
கலியாணசாலையும்கனதனசாலையுமுதலியஇவைகளெல்லாத்தும்ஏற்படுத்தினான்.
அந்த அலங்காரத்தைக்கோபாலனும்; பூபாலரும்பார்த்து நாவினாற் சொல்லத்
தக்கதன்றென்று நலமுடன் மயனைப்புகழ்ந்து நல்லவேளையில், கிருகப்பிரவே
சஞ்செய்து இந்திரனைப்போற் கொலுக்கொண்டிருந்தனர். அன்றிரவின்கண்

ஒன்பதுநாழிகைக்குமேல் ஸ்ரீகண்ணபிரான் தன்னெண்ண நிறைவேறும்படி ஆயுதசாலையில் ஆவாகனஞ்செய்திருக்கும் வீரமாகாளிக்குப் பூசைபோட வேண்டுமென்று சகலவகை அலங்காரத்துடன் அபிஷேகதிரவியம் சந்தனம் கரும்பு இளநீர் பச்சைக்கருப்பூரம் குங்குமக்கதம்பம் புநுகு சவ்வாது பனிநீர் பால்தேன்தயிர்முதலிய யாவுங்கொண்டு திருமஞ்சனமாட்டி திவ்ய வஸ்திராபரணமுதலிய திலகமுஞ்சூட்டி மலர்ந்தமணநிறைந்த பராகமுந் தேனுநிறைந்த புட்பமாலையுஞ்சாத்தி கன்னல்பயறு காய் கனி கிழங்கு வாழை வருக்கை மாம்பழந்தேங்காய் தாம்பூலம் கர்ப்பூரம் சாம்பிராணி அரிசி துவரை அவரை எள்மொச்சை கடலை அன்னம் மாமிசவகை மரக்கறிவகை இடைக்கிடையிளநீர் எலுமிச்சம்பழம் பேரீச்சம்பழம் வேர்ப்பலா விளாம்பழம் கிச்சிலி முதலியனவமைத்து சர்க்கரை வெல்லத்தால் தறையைமெழுகி பக்குவஞ்செய்யாற் பள்ளயமமைத்து ஓமம்வளர்த்து உயிர்ப்பலியெல்லாம் யாமளசாஸ்திர விதிப்படிகொடுத்து சுடர்மணிவிளக்குத் தூண்டாவிளக்குச்சோதியிற் கர்ப்பூரஜோதிகாட்டி அரவானையழைத்து அபிஷேகஞ்செய்து சிவப்புநிறங்கொண்ட செம்பட்டணிவித்து செஞ்சந்தனமும் சிவப்புமாலையுந் திவ்யாபரணங்களினால் தேகமெல்லாமறைத்து வீரகண்டாமணிகட்டிவிருதுதுவஜநாட்டி, வாளாயுதத்தை மகாதேவி சந்நிதியில்வைத்துப் பூசிக்கும்படியாய்விட்டனர். அப்படியே அரவானும் தீர்க்கதண்டமாகப்பணிந்து தீபதூபங்கொடுத்து நீர்மாற்றி வாளாயுதத்தை வலதுகரத்தி லெடுத்து மண்டியிட்டு ஓங்காரங்கொண்டு தன் முப்பத்திரண்டு உறுப்புகளிலும் அறுத்துப்பராசத்தியின் முன்வைத்து மனங்கோணாமல் உடல்வாடாமல் பிராணபயபடாமல் வாய்பேசாமல் தேகந்துடியாமல் உதிரம்வடியாமல் கண்ணீர்சோராமல் தண்ணீர்பாராமல் வாழுநாள் தேடாமல் மண்ணாசைநாடாமல் எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து விழுந்துவிட்டான். உடனே பாண்டவர்களும் ஸ்ரீகண்ணபிரானும்ஜலங்கொண்டுதெளித்து உபசாரஞ்செய்து தாகவிடாய்தீர்த்து நீறும்பத்திரியும் நிறையப்பூசி அப்பராசத்தியின் சாலையிற்றானே வளர்த்திவைத்தனர். அப்பால் மூர்ச்சை நீங்கியெழுந்த அரவான் முன்பலத்திற்கு மூன்றுபங்கு பலங்குன்றிப்போய்ச் சுவாமி அருளினாற்கொஞ்சம் பலமுடையவனாக விருந்தனன். பாண்டவர்களும் நல்லவேளையில் ஆயுதமெடுத்துக்கொண்டு மிகுந்த சந்தோஷமுடையவர்களாய்ப் பொழுதெப்போதுவிடியும், பொழுதெப்போது விடியுமென்று சகல சேனைகளுடன் இராமுழுதும் நித்திரையில்லாமல் மிகுந்த ஆத்திரத்துடன் சூரியோதயம் பார்த்திருந்தனர்.

இப்பால், துரியோதனமகாராஜன் உபலாவியத்தில் நடந்தசங்கதியும், அமாவாசியைப்புரட்டியதும் அரவானைக் களப்பலியூட்டியதுந் தெரிந்துகொண்டு மிக்கவிசனமுடையானாய் தான்போய் நாள்வைத்துக் களப்பலிக்கு அரவானை உடன்படுத்தி வந்ததையும் அதைக் கண்ணன் புரட்டி விட்டதையும் வீஷ்மர்முதலிய உரியவர்களுக்குத் தெரியப்படுத்தித் தங்களுடைய பட்டத்து யானையைப் பலிகொடுக்கும்படி அன்றைத்தினமே சித்தஞ்செய்துகொண்டு பாட்டனாகிய வீஷ்மருக்குச் சாஷ்டாங்கதண்டஞ்செய்து நமது சேனாசயினிய

ங்களுடன் குருபூமிக்குப் போம்படிப் பிரயாணப்பட வேண்டுமென்று மிகுந்த தைரியத்துடன் சொல்லிப்போன துரியோதனனுடைய பேச்சைக்கேட்டு வீஷ்மர் அணிவகுத்துத்தரமேற்படுத்தினர். அந்தத்தரத்தின் விவரம் யாதெனின் துரோணுசாரியர் அசுவத்தாமா வீஷ்மர் மூவரும், அதிரதத்தலைவரென்றும், பூரிசிரா சோமதத்தன் துன்மருடன் பகதத்தன் இந்நால்வரும்மகாரதத் தலைவர்களென்றும், கிருதவன்மா துரியோதனன் சகுனி சல்லியன் சவித்திரதன் திரிகர்த்தன் இவர்கள்சமரதத்தலைவர்களென்றும்; அங்கதேசாதிபதியாகிய கர்ணன்விஷசேனன் துச்சாதனன் முதலாகிய தொண்ணூற்றொன்பது தம்பிமாரும் அர்த்தரதரென்றும் ஏற்படுத்தி வணங்காமுடியையுடையமன்னவனிடத்திற் சொல்ல, அதைக்கேட்ட அரசன் அதிரதரிற்சிறந்த அங்கதேசாதிபதியை அர்த்தரதரிலேன்போட்டனர்? நமது ஐயாவென்றுயோசிப்பதற்குமுன்னமேகன்னன் இச்சங்கதியைக் கேட்டுக்காய்ச்சியசெம்பைப்போல் கண்சிவந்து கோபங் கொண்டு முகங்கறுத்து மீசைதுடிக்க வியர்வுபொடிக்கத் தோள்துடிக்க வாளையுருவிக்கொண்டு மண்ணுவிண்ணும் நடுங்கும்படித் துரியோதனன்முதலிய சகலராஜர்களுக்கெதிரில்வந்து வீஷ்மரைப்பார்த்து விற்பிடிக்கத்தெரியாத நீ அதிரதத்தலைவனுகிய என்னை அர்தரதரிலேற்படுத்தினையன்றே! வெகுநேத்தி ஐயா? பெரியவனென்றும் உரியவனென்றும், துரியோதனமகாராஜன் உனக்குச் சேனுபதிபட்டங்கட்ட அப்பெரியதனத்தைச் சீர்ப்படுத்திச்சிரசாகவகித்துக்கொள்ள வகைதெரியாமற்சிறியதனமாத் கொண்டனையே, நீ தனுர்வேதத்தில் என்னென்ன சாத்திரங்கற்றிருக்கிறாய்! எந்தெந்த வீரத்திறந்தெரிந்திருக்கின்றனை! என்ன சாகசமறிவாய்! என்ன தன்மை! என்னிடத்திலென்னகுறைவுகண்டு அர்த்தரதரிற்போட்டனை! நீயென்ன அறிவாய்! கெடுசினைப்பினையுடைய வீஷ்மனே! இதோ உன்தலையைவாளினுல் மாட்டிக் களப்பலியூட்டித்துரியோதனனுக்குமுடிசூட்டி வைக்கின்றேனென்றான். அதுகேட்டுவாளையுருவிக்கொண்டு தேவர்கள்நடுங்கும்படி கடுங்கோபத்துடன் சிறிதுப்பற்ற தங்களுக்குஇரட்டைப்பங்கென்னுந் தன்மையைப்போல் உன்சுத்தவீரத்திற்கு அதிரதத்தலைவனென்னும் ஆண்மையும் வேண்டுமோ அடாகன்னு!இப்போதே உன்தலையை வெட்டித்தொலைப்பேனுனல் புகழினையுடையஇக்குருகுலம்விளங்கி இருதரப்பிள்ளைகளுஞ்சுகப்பட்டுப்போவர். அடா பாவி!இதோவெட்டினேனென்று பலவாறுகத் திட்டிக்கிட்டிவரவும்இதைக்கண்டஅரசர்களெல்லாரும் நடுங்கியோட்டெடுக்கவும் வீரர்களெல்லாரும் வெருண்டொடுங்கவும் இவ்விருவருமெதிர்த்துக்கொண்டனர். இவ்விருவருங்கொண்ட பெருங்குரோதத்தைத் துரியோதனன் கண்டு திகில்கொண்டு இருவருக்கும் நடுவில் வந்துநின்று பகைவர் நகைக்கும்படி நீங்களிருவரு மெதிர்க்கலாமோ ஐயா! அண்ணுஎங்களை இவ்வவமானம் பண்ணுவதினும் எங்களைக்கொன்று போட்டு உங்களெண்ணத்தைச் சரிப்படுத்திக் கொள்ளுவதே உத்தமமென்று இருவருக்கு மத்தியினின்று விலக்கினுன். அப்பொழுது காற்றினுற்கலங்க அடிபட்டு விலங்கிய கார்மேகம்போல் கண்கறுத்து விலங்கிநின்றனர். அப்போதச்சேனைகளிலிருந்த மன்னவரியாவரும் மனத்தாபமடைந்து வீஷ்மாசாரி

யர் கன்னனை அர்த்தரதத் தலைவரிற் போட்டதற்குக் காரணங்கேளாமலும், அதைத்தெரிந்து கொள்ளாமலும் அவமரியாதையாகப் பேசி வாளையுருவி வெட்டுகின்றேனென்று வந்தகன்னனையும் விசாரியாமல்சமாதானம் பண்ணிய துரியோதனனைக் குறித்துப் பேசவேண்டியகாரியமில்லை ஓம் பிரதானமென்று ஆயுதமெடுத்தபோதே என்னைவெட்டு உன்னைவெட்டென்று விளைந்தபடியால் இதுவே போதுவிடியும் வரையிலுங் கலகமே விளைகிறதென்று பேசிக்கொண்டிருந்தனர். இப்பால் கன்னன் நெடுநேரம் வரையிலும் விசனத்துடனின்று பார்த்தையா? இத்துரியோதனன் நம்மேல் வைத்திருந்த பக்ஷமெல்லாம் பாழாய்ப் போய்விட்டது, ஐயையோ இவ்வீஷ்மனை நோக்கி ஏனையா! இப்படிச்செய்தீரென்று ஒருவார்த்தையுங் கேளாமல் பாட்டனென்னும் பக்ஷமறவாமலிருந்தானே அல்லது தன்னிஷ்டமாகிய என்னைமறந்தானன்று, அடடா துஷ்டசாவகாசமாய் விட்டதென்று வாடி துடிப்புடனிருந்தனன். அதுகாலையில் துரோணாசாரியர்முதலிய வரசர்களும் வீஷ்மரை அடுத்து ஐயா? சேனாதிபதியே; அதிரதத் தலைவனாகிய இக்கன்னமகாராசனை அர்த்தரதத் தலைவரிற்போட்டதற்குக் காரணமென்ன சொல்லுமையா வென்றுகேட்க, வீஷ்மர் சொல்லுகின்றனர். அரசர்களே கேளுங்கள் இவ்விடத்திலிருக்கிற மகாவீரர்களில் நானுங்கன்னனும் அடங்கலுக்கும் புறம்பாகி யிருக்கின்றோம். அப்படியிருக்க நான்முதற்படையிலிருந்தால்கடைப்படையிற் காக்கக்கன்னனைப்போட்டேன், இதுவன்றி மற்றொன்று மில்லையாயென்றுசொல்ல, அதைக்கேட்டு துரியோதனன் முதலானோருங் கன்னனைக் கட்டித்தழுவிக் கொண்டு அங்கதேசாதிபதியே! கேளும் வீஷ்மர் செய்தகாரியம் வஞ்சகமன்று, சேனைகளைக் காத்துத் துரியோதனனைக் காக்கும்படி இப்படி செய்ததாய்ச் சொல்லுகின்றனர். ஆகையால் நீங்களிருவருங்கலந்து வார்த்தையாடி யோசித்து ஒருகாரியத்தைச் செய்தால் மாத்திரம் மிகப்பெருமையா யிருக்கும்; இல்லாவிட்டால் காரியமல்லவென்று துரியோதனன் முதலானோர்களுஞ்சொல்ல அவ்வசனத்தைக் கன்னன் கேட்டு கலீரென நகைத்து இவருடையபொய் உங்களுக்குத் தெரியாது, 'பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும்' என்பதுபோல் இவருடையவஞ்சகத்தையும் சத்துருவைப் புகழ்ந்துபேசுந்தன்மையையும் என்னிடத்திலிவர் வைத்திருக்கும் இஷ்டத்தையும் நானறிவேனே; இவரோ கல்லாற்செய்த பாவையிலுங் கொடியதுவேஷமுடையவர்; எப்போதும் மனத்திற் சந்தேகந் தோன்றாமற் சகல காரியங்களுந் நடக்கவேண்டும், சந்தேகந் தோன்றினொருகாரியமும் நடவாது, 'மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம்பேய்' என்பதுபோல், அவருக்குமெனக்கும் அனுமானம் பிறந்துகொண்டிருக்கும், ஆகையால்இந்த வீஷ்மன் என்றைக்குச் சாகின்றானோ அன்றைக்கு நானபிமானப்பூர்வமாய் ஆயுதமெடுத்து யுத்தம் பண்ணுவதேயன்றி இதற்கிடையில் யுத்தகளத்திற்கு வரமாட்டேன், வந்தாலு மனங்களிப்பாய் போர்புரிய வேண்டுமென்று ஆயுதமெடுக்கமாட்டேன், இப்பக்ஷபாதி சாகவேண்டும், நான் பாண்டவர்களைக் கொல்லவேண்டும், துரியோதனனிந்தப் பாராள வேண்டுமேயல்லது வேறொன்றில்லையென்றுசொல்லி அப்பாற்போய் விட்டனன். இப்பால் வீஷ்மரோ சேனை

களைக்கூட்டிப் பிரயாணபேரிவீரபேரி சயபேரி முதலிய வாத்தியங்கள் முழங்கும்படிசெய்து பயணப்படுத்தினர். அவ்வேளையில் துரியோதனன் சகுனி துச்சாதனன் இவர்கள்மூவரும் கன்னனுக்குவேண்டியதேறுதலைச்சொல்லி மனோதிடம் விட்டுவிடாதீர், இவ்வீஷ்மருடைய மனமெங்களுக்குத் தெரிந்தேயிருக்கின்றது! நாங்களறிந்துகொள்ளாமலிருக்கவில்லை,பாண்டவர்களிடத்தில் பக்ஷம் வைத்து அவர்கள் வெல்லவேண்டுமென்றேபாடுபடுகின்றனர். நீயொருபிராணி எங்களுக்காக உண்மையாய்ப் பாடுபடுவதனால் உன்னை அர்த்தரதரிற்போட்டு அவமானஞ் செய்யவேண்டுமென்றே செய்தனர். ஆகையால்'கைப்புண்ணுக்குக்கண்ணாடி வேண்டியதில்லை' 'பட்டப்பகற்போலெங்களுக்குந்தெரியும்' ஆயினும 'பந்திக்குமுந்தவேண்டும் படைக்குப்பிந்தவேண்டும்' என்னும் பழமொழிப்படி எங்களுடைய அதிர்ஷ்டமும் உம்முடைய நல்லகாலமும் வீஷ்மருடைய பொல்லாதகாலமும் அர்த்தாதரிற்போடும்படிசெய்தது, பெத்த நல்லகாரியம் முந்திமடியத் தக்கவரெல்லாரும் மடிந்துபோகட்டும், வீரசூரர்முதலியவர்களெல்லாருங் கைகாலயரட்டும், பிற்பாடு நாமிருக்கின்றோம், பாண்டவர்களிருக்கின்றனர்கள், பார்த்துக்கொள்ளுவோம், பயப்படவேண்டியதில்லையென்று கன்னனைத்தேற்றி அழைத்துக்கொண்டுபோய் திருதராஷ்டிர மகாராஜனுடைய காலில்விழுந்து குருக்ஷேத்திரத்திற்குப் படைகளைக்கூட்டிக்கொண்டுபோம்படி விடைகேட்டனர், அதற்கு திருதராஷ்டிரன் சந்தோஷமடைந்து நமஸ்காரஞ்செய்த பிள்ளைகளையெல்லாம் வாரி மார்போடணைத்து ஆசீர்வதித்து • அப்பாமைந்தர்களே இதுவரையிலும் நமதுசந்திரவம்சத்திலில்லாத பங்கையை நீங்களேதேடிக்கொண்டீர்கள்.பாண்டவர்களோ மெத்தபயிச்சியர் அதற்குத்தக்கபடி வரங்கள்முதலிய பலமுந்தவமுந் தெய்வ கடாக்ஷமும் பெற்றிருக்கின்றனர் ; ஆகையால் காலம் இடம் சமயம் பலம் படைத்துணை வீரம் இவைமுதலிய யாவும் அறிந்துகொண்டு சந்தர்ப்பமெப்படியிருக்கின்றதோ அப்படி வழிவிட்டு பெரியோர் சொல்லும் வார்த்தையைக் கேட்டு உரியோர்களைக் கைவிடாமல் தயிரியமும்விடாமல் காரியத்தாழ்ச்சி வராமல் வெற்றிபெறக்கடவீர்களென்றுசொல்லி கன்னன் சகுனிமுதலியவர்களைப்பார்த்து குழந்தைகளோ மிகஅறியாதவர்கள் இதுவரையிலும் யுத்தஞ்செய்ததுமில்லைபெரும்போர் நடந்ததைப்பார்த்ததுமில்லை ஏதோ ஆத்திரத்தால் க்ஷாத்திரங்கொண்டு போர்க்குத்துணிபாகிஉங்களைநம்பி யுத்தத்திற்குவருகின்றனர். இவர்களைக் காப்பாற்றிக் கொண்டுவந்து என்னிடத்திலொப்பிக்க வேண்டிய கடமை உங்களுடையதென்று கையைப்பிடித்துக்கொண்டு வெகுவாகச்சொல்லி இளையபிள்ளைகளையும் பேரப்பிள்ளைகளையும்பார்த்து 'இளங்கன்றுபயமறியாது' என்னுந் தன்மையாய்ப் போர்முகத்திற்போய் விழாதீர்கள், அணிவரிசையினின்று பகைவர்களைவென்று அண்ணன் தம்பிமார்கள் பெரியோர்கள் பந்துக்கள் இவர்கள் சொல்லும் மொழியைக்கேட்டு அடங்கியிருந்து காரியசாதனம் பண்ணிக்கொண்டு வரக்கடவீர்களென்று ஆசீர்வதித்து அப்பா துரியோதனா தம்பிமார்முதலியவர்களையும் பத்திரமாய்ப் பார்த்துக்கொண்டு படைமுகத்தில் வெற்றிகொண்டு வரும்படி சுகமாகப் போய்வாவென்று விடை

கொடுத்தனன். அப்பால்காந்தாரியாகிய தாயிடஞ்சென்றுகாலில்விழுந்து போய்வருகிறோமென்று விடைகேட்க, உடனே அவ்வன்னைபிள்ளைகளையும் மற்றவரையும் உபசரித்துமைந்தரோ உங்களுக்குநான் விசேஷித்துச் சொல்லவேண்டியதில்லை எல்லாக்காரியங்களு முங்களுக்குத்தெரியும் ஆகையால் பகைவரை நாசப்படுத்தி வாருங்களென்று விடைகொடுத்தனுப்ப அவரவர் யுத்தகோலங்கொண்டுஆயுதபாணிகளாய்அரசமாதர்கள் முதலியவர்களுடன்புறப்பட்டு அத்தினபுரத்தின்சாலைவீதியில்வரும்போது சொன்னசொற்பிசகிய துண்டைகளும் அறுதலி முண்டைகளும் தனமிலாதமார்களும் மானமில்லாதவரும் உயிர்கலைத்தவரும் புகையு நெருப்பினைக் கைக்கொண்டுவரும் பெண்களும் விறகு மின்னலும் இடியும் பிண்டித்தூறலும் பெருங்காக்கைக் கூட்டமும் நாய்கள் குரைப்பும் பேய்கள்திரிப்பும் பருந்துங் கழுகும் பறந்துவிழவும் யானையழவும் ஆயுதம் புகையவும்! மாலைகருகவும்; மனந்தடுமாறவும், சூறைக் கொள்ளி விழவும் பெண்கள் கூடிவாழவும் சந்நியாசி தட்டான் தயிலமெதிராகவும், இத்தன்மையவாகிய பற்பலதுச்சகுனங்களை முன்னோடிச் சகுனம்பார்ப்போர் கண்டு மன்னவருடன் சொல்ல நல்லதென்று திரும்பி கொலுவிற் போயிருந்து தெருவீதியில் ஒருவர்வராமற் கதவுமூடும்படி திட்டப்படுத்திச்சதுர்வேத சம்பன்னர்க்குதனியாகவிருந்து சாஸ்திரப்படிகோடிபசுக்கள் கோடாகோடிபெண்கள்அளவற்ற வஸ்திரங்கள் அன்னதானங்கள் இவைகள்முதலிய சோடசமகாதானங்களுங்கொடுத்து சந்தோஷத்துடன் தாகம்புசித்து தாம்பூலமணிந்து சம்பிரமத்துடன் யுத்தபூமிக்கு நடக்கையில் மீண்டுந் துச்சகுனங்கண்டு நால்வகைச் சேனையும் வாட்படை விற்படை கதைப்படை வேற்படை சக்கரப்படை சூலப்படை இந்த ஆறுவித ஆயுதங்களையுடைய படைகளும் பேரிபாங்காமுதலிய தோற் கருவி துளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சக்கருவி மிடற்றுக்கருவிகளாகிய வாத்தியங்களும்; தேரோசையும் பதாதிகளுடைய பேரோசையும், மனுஷர் மக்களைப்பிரியும் ஊரோசையும் யானைமுழக்கமுங் குதிரைமுழக்கமும், சமுத்திரகோஷமும் அடங்கிப்போம்படி முழங்கிக்கொண்டு வரவும் துரியோதனன் தன்னுடைய தம்பிமார்கள், சகுனி, சல்லியன் முதலாகிய ராசர்களும் சேனைகளும் புத்திரரும்மித்திரரும் சுற்றிக்கொண்டு வரவும் அரண்மனைப்பெண்களாடும் பரதநாட்டியத்துடன் பட்டணம்விட்டுப் புறப்பட்டு குருக்ஷேத்திரம் போய்ச்சேர்ந்து பாசறை முதலியயாவு மேற்படுத்திய இடத்தில் சேனைசயினியங்களை நிறுத்தி பற்பலவாகிய கொடிகள் வகைவகையாகிய குடைகள், ஆலவட்டங்கள், தாலவட்டங்கள், பீலிக்குஞ்சங்கள், மயிற்பீலிகள்; வெண்சாமரைகள், மேற்கட்டிகள் முதலிய விதானை யலங்காரத்துடன் அமைத்திருக்கும் சாலையில் துரியோதனனுதியரிறங்கவும், சேனாநாயகர் சேனைகளை அணியணியாய் நிறுத்திப்பிரித்து அமைக்கவும், உலகம்பொறுமல் தத்தளிக்கவும் உரகருடையபலமும் உடலும் தலையும் ஒடுங்கிவளைந்து உதறவும்அதனால் அவர்கள் பதறவும் ஓசையிட்டுக் கதறவும் இப்படி வருந்தும்படியாகக் குருபூமியில் இரண்டு திறச்சேனைகளும் வரம்பாகக் கலந்திருந்தன, அப்போது துரியோதனன் வீஷ்மாசாரியைநோக்கி இனிமேல் தேவரீருடைய வேலையிற்சாக்கிரதையாகப்

பார்த்துக்கொள்ளுமென்று சொல்லினான் ; அவரும் எந்தெந்தச் சேனைகளை
எங்கெங்கமைக்கவேண்டுமோ அங்கங்கே அமைத்து கோட்டை மதில்போற்
சூழ நிறுத்தி பாசறைக்குக்குக் காவல்வைத்து கொடிகளை நாட்டி எதிரிகளுக்
குப் பயங்காட்டி பக்குவப்படுத்தியபோது நாகசுரம், புள்ளாங்குழல், முக
வீணை, சங்குநாதம், சிங்கநாதமுதலிய காராசைகளும் ; நால்வகைச் சேனை
கள் முழக்கும் பேரோசைகளும், விற்குணத் தொனியும், வேலாயுதம், சூலா
யுதம், சக்கராயுதம், குந்தாயுதம், வாளாயுதம், ஈட்டிமுதலிய ஆயுதங்களி
ழையு மோசையும், அதிலிருந்து புறப்படும் நெருப்புப் பொறிகளும் புகையும்
அண்டமுகடும் பொடிபடும்படியா யிருந்தன ; இதன்றியும் கருந்தூள் செந்தூ
ளெழும்பிய தன்மை யெப்படியிருந்த தென்றால் இதுவரையிலும் பாவியாகிய
துரியோதனன்பால் இருந்தோமே அப்பாவந்தீர ஆகாயகங்கையில் ஸ்நானஞ்
செய்து தருமராஜனுடைய கீர்த்திப் பிரதாபக்குடை நிழலிற்போய்ச் சேரு
வோமென்று பூமிதேவியார் பூமியிலிருந்து எழுந்து பறந்துபோனதுபோ லிருந்
தது ; இதல்லாமலும் துரியோதனனுடைய அரவக்கொடியும் வீஷ்மருடைய
பனைமரக்கொடியும் இன்னும் பலபேர்கள் கொடியும் தருமராசனுடைய முர
சக்கொடியும் தம்பிமார்கள் சிங்கக்கொடி முதலிய மற்றவர்கள் கொடியும்
ஆகாயத்தில் நிறைந்திருப்பது எப்படியிருந்த தென்றால் காலபுருடன் ஜயம்
ஆருடையதென்று நுனிக்காலையூன்றி எட்டிப்பார்க்குந் தன்மைபோலிருந்
தது, மேலும் துரியோதனனுடைய அரவக்கொடிபறக்காநின்றது எப்படியிரு
ந்ததென்றால்ஸ்ரீ கண்ணபிரானுடைய கருடக்கொடியையும் அர்ச்சுனனுடைய
அநுமக்கொடியையும் இந்திரனுடைய இடிக்கொடியையும் பார்த்து யோசித்து
அசைந்தாடுகிற எல்லாக்கொடிகளும் நமக்குப் பகையா யிருக்கின்றபடியால்
நாமெப்படி தலைக்காட்டுவ தென்றுவாடிப்போனது போலும் அப்புறமும்மூது
கிட்டோடிப்போனது போலுமிருந்தது. இப்படிப்பதினெட்டக் குரோணியென்
னும் இருதிறப்படைகளு நெருங்கிநிற்க, இருதிறத்து அரசர்களும், பாசறையிற்
கொலுக்கொண் டிருந்தனர். பட்ட வர்த்தநர், மகுடவர்த்தநர், மன்னர் ;
மண்டலீகர் முதலிய மந்திரி சாமந்தர்களுடைய மத்தியில் கனககசித நவ
ரத்தினச் சிங்காதனத்தின் மீது திடவீரகாத்திரத் தம்பிமார்களும் ஸ்ரீ கண்
ணபிரானுஞ் சூழ்ந்திருக்க முரசகேதனனாகிய தருமராசன் கொலுக்கொண்
டிருந்தனன். அதிரதர்முதலிய சகல அரசர்களும் அடிவணங்க கட்டியர்பட்டு
வான்கள்புகழ வந்திப்போர் துதித்துமகிழத் தம்பிமார்கள்சூழ் இந்திர வோல
க்கம்போ லெழுந்தருளி யிருந்தனன். துரியோதன மகாராஜன் அச்சமயத்தில்
இரேவதி தேவிக்கு நாயகனாகிய நம்பிமூத்தபிரான் தனித்துவரக்கண்டு தரும
பூபதியுந்தம்பிமார்களும் கோபாலகிருஷ்ணனும் கொலுக்கொண்டு கூடியிருந்த
அரசர்களும்எழுந்து எதிர்கொண்டுசென்று வந்தனை மரியாதைகள்செய்ய அவ
ரவர்களுக்குத் தக்கபடி பதில் மரியாதைசெய்து தருமராசனைத்தழுவி ஆலிங்க
னஞ்செய்துகொண்டு ஓதருமநந்தனா! நீங்களுந் துரியோதனனுமியரும் பகைத்துப்
போர்புரியப்போகின்றீர்களே அப்போரில் சகலஜயமும்பெற்று அவனியையாள
ப்போகிறது நீங்களே சகலசேனைகளுஞ்செத்து புத்ர மித்ராதியரையுந் துறந்து

பூமியையுமிழந்து நாளை மாளப்போவது துரியோதனனே; இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை; ஆனால் வெற்றி பெறப்போவதே உங்களுடையதா யிருந்தாலும் அநேகம்விந்தைகள் நடக்கும்; அந்த விந்தைகளையும் துரியோதனன் மாளு விந்தைகளையும் என்கண்ணால் பார்த்துச் சகிக்கமாட்டேன், ஆகையால் துரியோதன னிறக்கிற வரைக்கும்நான் தீர்த்தயாத்திரை பண்ணிக்கொண்டே இதற்குப் பதினெட்டாநாளிவ்விடம் வந்து சேருகிறேன், நீரெனக்குச் செலவு கொடுமென்று கேட்க, அதற்குத் தருமராஜன் சற்றுநேரம்யோசித்து உங்களை யொத்தவர்க ளிருந்தால் இவ்விடத்தில் நடக்கும் ஞாயம் அநியாயம் அறிந்து சொல்லுவீர்களென்று நான்மெத்த ஆசையாயிருந்தேன், தேவரீர் இப்படி சொல்லுகிறபடியால் நான்செய்யலாவ தென்னவென்று சொல்ல அதைக்கேட்டு பலராமர் சொல்லுகின்றனர். தருமநந்தனரே கேளும்? எல்லா வற்றிற்கும் நமது கண்ணனிருக்கின்றான்! நியாயம் அநியாயம் அறிந்து சொல்லுவான், அவனறியாத காரியம் அவனியிலில்லை, இவனைக்கொண்டு எல்லாவேலைகளும் நடத்திக்கொள்ளு மென்றுசொல்லி விடைபெற்றுக்கொண்டு தம்பியைநோக்கி நான் போய்வருகிறே னென்று புறப்பட்டபோது விதுராழ்வானும் வந்து பலபத்திரனைக்கண்டு ஒருவருக்கொருவர் முறைமை பாராட்டிக் கொண்டார்கள். அவ்வேளையில் விதுராசனைப் பலராமர்நோக்கி ஏதுநீர் யுத்தகோலங் கொள்ளாமல் என்னைப்போல் யாத்திரை வேடங்கொண் டிருக்கிறீரென்றுகேட்க, அவ்வார்த்தையைக் கேட்டு விதுராசன்சொல்லுகின்றனர். ஆர்கெட்டாலென்ன, ஆர்செத்தாலென்ன, நீர்வாரும் யாத்திரைபோவோ மென்று விதுராழ்வான் சொல்ல, அரிகரி, இதென்ன ஆச்சரியம் உமக்கே யிவ்வளவுமன வெறுப்பென்று நம்பிமூர்த்தபிரான் கேட்க, ஸ்ரீகண்ணபிரான் சொல்லுகின்றார். அண்ணா? பாண்டவர்க்காக அத்தினபுரத்திற்குத் தூதுபோய் விதுராழ்வான் வீட்டிலிறங்கினேன், அதற்குத் துரியோதனன் கோபித்துக்கொண்டு விருந்துசெய்வான் வீட்டிலழைத்தாய் வேசைமகனேயென்று பேசினன்; அதற்கு இவ்விதுராழ்வான் தன்கையிலிருந்தவில்லையும்வெட்டி யெறிந்துவிட்டுஎன்னுயிருள்ள வரையும் யான் போரின்கண் உனக்குத் துணைப்படுவதில்லையென்று சபதம் பண்ணிக்கொண்டனர், அக்கோபம்போலிருக்கின்றது இன்று இவர்சொல்லுங்கருத்தென்றுசொல்லினர். அதைக்கேட்டு பலராமர்நகைத்து அடா தம்பி நல்லதற்கா விதுராழ்வான் வீட்டிற்போ யிறங்கினை அப்பாவென்று சொல்லிமனத்தில் மகிழ்ச்சி யில்லாமல்வைதுக்கொண்டுஅழைத்துச்சென்றனர். நம்பி மூத்தபிரானும் விதுராழ்வானோடு கூடி குரு பூமியைச்சூழ்ந்த தீர்த்தங்க ளாடும்படிபோய் விட்ட சேதி துரியோதனனறிந்து நமக்குப் படைத்துணைவந்த பலராமனையுங்கலைத்து அழைத்துக்கொண்டு போய்விட்டனன் இவ்விதுரன்பார்த்தீர்களாவென்று வீஷ்மர் முதலியவர்களிடத்திற் சொல்லி நல்லதாகட்டு மென்று கறுவிக்கொண்டு கவலையில்லா திருந்தனன், அப்பால் அளவிறந்ததூரம் சேனைகளை நிலைபெறச்செய்த வீஷ்மரும் துரியோதனனும் பாசறைவிட்டு வெளியே புறப்பட்டு ஏழுகடலும், ஏழுமேகமும், ஏழுதீவும், ஈரேழுலகும், ஏககாலத்திற் கூடினாற்போல் இரைந்துகொண்டு கண்ணுக்கெட்டிய தூரந்தெரியாமல் நெரு

ங்கின்ற இருதிறப்படைகளையும் பார்த்துக்கொண்டு துரியோதனன் மயங்கிச் சேனாதிபதியாகிய வீஷ்மரைநோக்கி ஐயா ; இத்தனைசேனைகளை ஒருசுத்தவீரன் எத்தனைநாளையிற் கொல்லுவான் சற்றுயோசித்துச் சொல்லுமென்று வணங்கா முடிமன்னன் கேட்க, வீஷ்மாசாரியர் சொல்லுகின்றனர்.

இந்தச் சேனைகளை யெல்லாம் ஒரேபகலில் நான்வெல்லுவேன் ! வேத புராண உபநிடதந்தெரிந்த தனுர்வேதபண்டிதராகிய துரோணாசாரியர் மூன்று பகலில் வெல்வர் சூரியகுமாரனாகிய கன்னன் ஐந்துபகலில் முடிப்பன், அசுவத்தாமா ஒருநாழிகையிற் போக்குவா னென்றுசொல்லினர். இவ்வார்த்தையைக்கேட்ட துரியோதனன் சந்திரனைக்கண்ட சமுத்திரப்போற் பொங்கிப் பூரித்து இனி எனக்கென்னதாழ்ச்சி இதைவிட வேறென்னசாட்சி எவர்க்குண்டிந்தக் கண்காட்சி இப்படிப்பட்ட பலவான்களைகூட்டிவைத்த என்பாக்கியமேபாக்கியமென்று புகழ்ந்து பாண்டவர்கள் தலையெடுக்க மாட்டார்களென்று மகிழ்ந்து எதிரிகளையிகழ்ந்த தன்மையை வீஷ்மர் அறிந்து துரியோதனனைப் பார்த்து அப்பா ; துரியோதனா நமதுபலத்தை நாமேசந்தோஷிப்பது காரியமன்று ; அது வீரியம்பெறாது எதிரிகள் பலத்தை நிதானித்துக்கொண்டு அப்பால் நமது பலங்களைப்பார்த்து சந்தோஷப்படவேண்டும், ஆகையால் நமது சேனைகளிலிருக்குந் தலைவர்களாகிய பலவான்களுடைய பலபராக்கிரமத்தை கேட்டையே, அவர்களுடைய பலபராக்கிரமத்தையுங் கொஞ்சங்கேட்டறிந்து கொள்ளக்கடவை அப்பனே அர்ச்சுனனின் இப்படைகள்முழுமையும் இவ்வுலகமுழுமையும் ஈரேழுலக முழுமையும் திக்குகளெட்டுந் திடுக்கிட்டுப்பயந்து போம்படி விசய காண்டீபங்கொண்டு முனைந்து ஒரு கணத்துக்குள்ளே நீறும்படி போர்புரிந்து போக்கிவிடுவான் திசைகள்மகிழும் இசையும் புகழுங்கொண்ட விசயபராக்கிரம னென்றனர்.

அவ்வாசகத்தைக்கேட்டு துரியோதனன், கன்னன், சகுனி, துச்சாதனன் முதலாகியவரும் ஆலோசித்துக்கொண்டு உலூகனென்னுமொருதூதனையழைத்து அவனுடன் சொல்லத்தக்க பேச்சுகளெல்லாஞ்சொல்லி பாண்டவர்களிடத்திற் சென்று இவ்வசனங்களைத் தெரியப்படுத்தி இதற்குபதிலுத்தரம் அவர்களென்ன சொல்லுகின்றனரோ அதையறிந்துகொண்டு ஒன்றுஞ்சொல்லாமல் அதிசீக்கிரத்தில்வாவென்று அனுப்பிவைத்தான், அப்படியே உலூகன் தருமராசனுடைய சபைக்குப்போய்ஐயா! துரியோதனராசன் அனுப்பி வைத்தனனென்று சொல்ல ; அதென்னசெய்தியென்று தருமராசன் கேட்க; உலூகன் சொல்லுகின்றான் தருமபூபதியேகேளும் இராச்சபையில் சொக்கட்டாடித் தோற்றபோதும் பாஞ்சாலியைத்துகிலுரிந்த காலத்திலும் பன்னிரண்டுவருடம் வனவாசஞ் செய்தபோதும் அஞ்ஞாதவாசஞ் செய்தநாளையினும் இல்லாத வீரமும்திறமும் இப்போதெங்கிருந்துவந்தது அல்லது அந்தராஜசபையில் துரியோதனுதியர் நூற்றுவரையும் நானே கொல்லுகிறேனென்று வீமசேனன் சொல்லியிருந்த சபதமும்; கன்னமகாராசனைக் கொல்லுகின்றேனென்று சொன்னதும் நகுலன் சவுபலனைக்கொல்லுகிறே னென்றதும் சகாதேவன் சகுனியைக்கொல்லுகிறே னென்றதும் நினைந்துநலிந்துபோனதுபோலிருப்பானேன்,

பதின்மூன்று வருடமுங் காடுதிரிந்துவந்த நீங்கள் முன்பேசியசபதப்படிகாரியநிறை வேற்றிக்கொள்ளாமல் கண்கலங்கி அப்பா நீபோய்ச்சொல்லு ஐயா நீ போய்ச் சொல்லென்று அவ்ரவரைக்கும்பிட்டு உலூகமாமுனியையும் கண்ணபிரானையுந் தூதனுப்பி நாடிரக்கவேண்டிய காரியமென்ன அதற்குநாங்கள் உடனே சஞ்சயனை யனுப்பி நாடுங்கொடுப்பதில்லை ஒருவீடுங் கொடுப்பதில்லை போர்முகத்தில் யுத்தஞ்செய்து புகழுடன் வெற்றிபெற்றவர்களுக்குப் பூமியுண்டென்று சொல்லியிருக்க அம்மொழி நாடாது சண்டைக்குவரப் பயந்திருப்பானேன் இப்போதுஞ் சரிதான் தயிரியமிருக்குமாகில் தாமதமில்லாமல் சண்டைக்கு வரச்சொல்லும், இது நல்லகாலம் வமிசநாயகனாகிய வீஷ்மரும் துரோணாசாரியரும் அசுவத்தாமாவும் கன்னராசனும் ஒருகைபார்த்து விடுவோமென்று முகம்வியர்த்துக் கரத்தில் வில்லேந்திக்கொண்டு உங்களைவரையும் உங்களுக்குத் துணைவந்திருக்கும் அரசர்களையும் மண்ணுலகத்தைவிட்டு நீக்கி விண்ணுலகத்திற் கனுப்பி விடுவோமென்று வந்திருக்கின்றனர். உங்களுடைய வாயுருட்டும் கைபுரட்டும் அவர்களறிந்தே யிருக்கின்றனர். இனி யுங்களுடைய பேச்சு இவ்விடத்திற் செல்லாது உங்களைக் கொல்லாது விடப்போவதில்லை எதாகிலுங் கொஞ்சம் வீரங்களுண்டானால் இப்போதே வாலாமென்றும் அப்படி யுத்தத்திற்குவரச் சம்மதமில்லாவிட்டால் பூர்வத்தில் மச்சநாடனாகிய விராடன் வீட்டில் புரோதனாகியும் சோறுசமைக்குஞ் சுயம்பாக மடையனாகியும் பரதநாட்டியங் கற்பிக்கும் பேடியாயும் குதிரைச் சேவகஞ் செய்யும் தாமக்கிரந்தியாயும் மாடுமேய்க்கும் தந்திரபாலனாயும் சொற்ப சேவனஞ் செய்து காலங் கழிக்கும்படியா யோசிப்பீர்களானால் இப்போதே திரும்பிப்போய் விடலாமென்றும் இராசதரும மிருப்பதனால் தடைசொல்லாமற் சந்திபேசாமற் சண்டைக்கு வாலாமென்றும், அருச்சுனனைக் கொல்லுகிறேனென்று வெகுநாளா யுருச் செபிப்பதுபோற் சபதங் கூறிக்கொண்டிருந்த ஜயவீர கன்ன மகாராஜனே வில்லைக் கையிலேந்தி சபதச்சொல்லை நிறைவேற்றும்படியாய்க் குருக்ஷேத்திரவெல்லையில் எப்போது விஜயன் வருவானென்று வழிபார்த்துக் கொண்டிருக்கின்றானென்றும் சொல்விச்செய்வது பெரியோர்கடமையாதலாற்சொன்னேனென்றும் இப்போதும்கிரீடிக்குத்தயிரிய மிருக்குமானால் சடுதியில் புறப்படச்சொல்லும் மேலும்என்னைப்பகைத்த சத்துருக்களை யெல்லாம் எரியுந்தழல்முன் சருகாய்க்கருக்கி 'எமலோகஞ்சேர்ப்பிப்பேனென்று இறுமாந்து சிங்கம்போலிருக்கும் எங்கள்தம்பியாகிய துச்சாதனன் உங்கள்குலத்திற்குக் கோடாலியும் உங்கள்கூட்டத்திற்குச் சூறுவளியும் போலிருந்து உங்களுக்குச் சொல்லச்சொல்லினன் அதென்னவென்றால் முன்னாலே மன்னவர் கூடி யிருந்தசபையில் உங்களுக்குரிய கன்னிகையாகிய துரோபதியை மயிரைப்பிடித்திழுத்து வந்து மானபங்கஞ்செய்த நாளையில் என்னைக்கொன்று உதிரபானம் பண்ணுகிறவரையிலுங் கையினால் தீர்த்தபானம் பண்ணுவ தில்லையென்று சபதம்பண்ணிக் காட்டுக்குப்போய் நாட்டுக்குவந்த கேட்டையுடைய வீமசேனன் ஓட்டமெடுப்பானா அல்லது யுத்தத்திற்கு வருவானா வென்றும் நாட்டிலோரிடத்தில் ஒருதாய் தந்தை

க்கும் பிறந்து முல்லைக்காட்டில் மற்றோரிடத்தில் இடையர் வீட்டில் வளர்ந்து திருட்டுப் பிழைப்பினால் அடியும் மத்தடியும்பட்டு சாரத்துவ சோரத்துவத் திற் றன்னாலானமட்டும் வயிறுவளர்க்கப் பார்த்துப் பிழைக்க மாட்டாமல் சும் மாயிருப்பவர்களைத் தூண்டிவிட்டு தூதவேஷம்போட்டுக் கொண்டு உங்களை யானையாக்குகிறேன் எதிரிகளைப் பூனையாக்குகிறேனென்று பொய்யும்புளுவும் பேசி கபடம்வஞ்சனையுங்கலந்து கலகப்படுத்தி அரசனுக்குக்குதிரையைப்பிடித் துச் சாரதியாகியும் சிசுஅத்தி ஸ்த்ரீஅத்தி கோகத்தி செய்தும் காலிக்கன்று களை மேய்த்தும் கபடில்லாத ஆயர்களையேய்த்தும் சாண்வயிற்றை வளர்த்துக் கொண்டு தகல்பாசியாய் திரியும் கிருஷ்ணனைப் பாண்டவர்கள் சேரப்பிடித்து வைத்துக்கொண்டு பயங்காட்டுகிறார்கள், நானவனுக்குபயந்து உங்களுக்குநாடு கொடுப்பனோ அவனுக்கும் அவனுடையவஞ்சனை மாயமருட்டுக்கும் உங்களு க்கும் ஓடு கொடுப்பேனேயல்லது ஒருவீடுங் கொடுக்கமாட்டேன் மேலும் 'சப்பாணிக்கு நொண்டி சண்டப் பிரசண்டன்' 'ஊமைக்கு ளறுவாயன் உற்பாதபிண்டம்' என்னும் பழமொழிபோல் இந்தக்கிருஷ்ணனுக்குச் சரியாய் கண்டனுக்கு மிண்டனான எங்களம்மான் சகுனிராசனையேற்படுத்திவைத்திரு க்கிறேன், இதன்றியும் நகுலசகாதேவ ரென்னும் பசகள் எங்களம்மானாகிய சகுனியையும் சௌபலனையுங் கொல்லுவதாய்ச் சபதஞ் செய்தருவர்களைக் கொல்லக் காத்திருக்கிறார் மாமாவானவர் ஆகையால் அவர்களையுஞ் சீக்கிரம் ஓடிவரச்சொல்லும் மேலும் நகரத்திலும் காட்டிலும் கொலுக் கூடத்திலும் நல்லரத்தங்களுஷி ; ஸ்திரம் பெற்றிருந்த அரசர்களாகிய பாண்டவர்கள் தங் களையுந் தோற்கச்செய்து தங்கள்பெண்சாதிகளையும் அவமானப்படுத்தி காட் டிற்பன்னிரண்டு வருடம் வனவாசஞ் செய்யுங்களென்று ஓட்டவிட்டு காலத்தி லில்லாத வீரம் காட்டிற்சென்று காய்கனி கிழங்குகளைத்தின்று கற்பாறையிற் படுத்து கண்ணுறக்கம் விடுத்து நல்ல ரத்தங்களினுடைய சத்துப்போயிருக் கும் இந்தக்காலத்தில் பவுரிஷங்களும் கோபமுங்கொண்டு பசித்தவன் பழங் கணக்கைப் பார்ப்பதுபோல பழையபகையை நினைத்து அதற்காகக்கூறிய சப தங்களையு முடிக்கவேண்டு மென்று ஓடிவந்தீர்களோ இல்லை நான் நாடுகொடுப் பேன் அதைபெற்றுக் கொண்டு வாழலாமென்று நாடிவந்தீர்களோ நாணமற்ற வர்களேயென்று இப்படிக்யெல்லாஞ் சொல்லி அவர்க ளெப்போது சண்டை செய்ய வெண்ணங் கொண்டிருக்கிறார்கள் அந்தக் காலத்தையும் அவர்கள் சொல்லுகின்ற இந்திரசாலத்தையும் அறிந்து கொண்டு சீக்கிரம் வரக்கடவை யென்று துரியோதன மகாராஜன் அனுப்பிவைத்தானையா வென்று உலூக னென்பவன் சொல்ல ; இவைகளை யெல்லாங் கேட்டிருந்த பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்து இந்தக்கேள் விக் கெல்லாம் உத்தரம்தேவரீரே திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று தர் மராசன்சொல்ல மகா சந்தோஷத்துடன் நானென்ன சொல்லப் போகிறேன் என்னசொல்லியும் என் வயிறுவளர்க்கிறதா யில்லையே யென்றுநகைத்துஉலூ கனைப்பார்த்து நான்சொல்லுகிற வண்ணம் உங்கள் ராசனுக்குநீ பயப்படாமற் சொல்லக் கடவையென்று ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சொல்லுகின்றனர். பாண்டவர்

கள் வனத்தி லிருக்கும்போது அவர்களை அவமானப்படுத்த வேண்டுமென்று நினைத்து உன்னுடைய தம்பிமார்களோடு கன்னனுஞ் சகுனியும் உங்களுடைய பத்தினிமார்களும் கூடவரும்படி அழைத்துக் கொண்டுவந்து ஜலக்கிரீடைபண்ண வெத்தனித்தபோது காந்திருவ ராசனாகிய சித்திரசேனன்கையிலகப்பட்டுத் தாமணிப் பிணையலாய்ச்சேர்த்து தம்பிமாரெல்லாரும் ஒருவரிசை பெண்டுகளெல்லாருந் தலையிருடன் கலைகுலையும்படியா யொருவரிசை மாமா முதலியபேரும் துரியோதன மகாராசனும் மடலிறுகும் படியா யொருவரிசை இப்படியாகக் கட்டுப்பட்டு இட்டுக்கொண்டு போம்போது உன்னுடையசேனைகள் முதலிய வீரர்களெல்லாருந் தருமராஜனிடத்தில் வந்துமுறையிட்டழுத காலத்தில ஜீவகாருண்ய முடைய தருமராசன் இரக்கங்கொண்டு 'தொடைப்புண்ணை வெளிக்காட்ட லாகாது' என்னும் பழமொழிப்படியே தங்களுக்குள்ளென்னவிரோதமிருந்தாலும்புறத்தியாருக்கிடங் கொடுக்கலாகாதென்று தன் தம்பிமாராகிய வீமார்ச்சுனனை யழைத்து நமது மரபிற்குக் குறைவு வாராமலிருக்கும்படியாய் துரியோதனனையும் அவனுடைய புத்திரர் மித்திரர் பெண்டுகள்முதலிய வர்களையும் மீட்டுக்கொண்டு வரக்கடவீர்களென்று தம்பிமார்களுக்குக் கோபந் தணியவும் உம்மன்பு தழைக்கும்படியாகவுஞ்சொல்லி அனுப்பிவைத்ததின் மேல் சித்திரசேனன் கட்டியசிறைநீக்கி தருமராசனுக் கெதிரில் கொண்டுவந்துவிடவே புத்திமதிகளைச் சொல்லி உங்களை உயிருடன்மீட்டு அனுப்பியதெல்லாம் என்னத்திற் கென்றால் சித்திரசேனனிடத்திற் சிறைபுகுந் துயிர் விடுவீர்களானால் இராசசபையில்தாங்கள் கூறிய சபதந் தப்பிப் போகுமென்று யோசித்து அந்தச் சபதந்தப்பாமல் தாங்களே கொல்லும்படியாக உங்களைச் சிறைநீக்கி விட்டிருக்கின்றார்கள். இதனால் பாண்டவரும் சபதம் முடிப்பாரென்று உங்களுக்குத் தெரியவில்லையா, அந்தச் சித்திரசேனனை வென்றபாணமும்உங்கள் சிறையைமீட்ட வீமார்ச்சுனர்களிருவரு மிருக்கிறார்க ளென்றும் நேற்று விராடபுரத்தில் தட்சணதிசையில் திரிகர்த்தன்பட்டபாடும் துரியோதனன் முதலாகிய பேரும்வந்து கெட்டகேடும் தெரியாத உனக்கு உருமாறியிருந்தபாண்டவர்களை அறியும்படியாக வந்து உத்தர கோகொண்ட காலத்தில் பேடியாகிய விசயன் அறியாதபிள்ளையாகியஉத்தரனைச்சாரதியாக வைத்துக்கொண்டு தானொருவனுகவே ஒரேவில் ஒரேதேர் ஒரு அம்பறாத்தூணி இவைகளைக்கொண்டு வீஷ்மர்முதலிய ஆசாரியரைப் பாணங்களினால் வணங்கிக்கொண்டு ஒரு அக்குரோணி சேனைகளையும கொன்று இளைத்தோடவென்று கன்னனைப் புறமுது கிட்டோடக் கண்டு கொடியதேராளிகளு மழிந்தபோகப் போர்புரிந்து வீஷ்மர்துரோணாசாரியர்முதலியவரையும் புறமுதுகிட்டோடச்செய்து ஊரைநோக்கி ஓடிக்கொண்டிருந்த வணங்கா முடிபோனாகிய உன்னைத்துதித்து வணங்கச்செய்து உன்னுடைய குதிரைமுதலிய சாரதியைமாட்டி அங்க மழியும்படியாகவும் எல்லாரு நகைக்கும்படியாகவும் பேசி சிச்சீயென்றேசி பாணங்களைவீசி என்தமயன் வீமசேனராசன் கூறிய சபதத்திற்காக உன் தலையைவிட்டு வைத்தே னென்று சொல்லி உன் தலையிலிருந்த கிரீடத்தையும் அத்தினகிரியென்னும் பட்டத்

தியானையையும் வீழ்த்தி மோகனாஸ்திரத்தை விடுத்து யாவருநிலத்தில் மயங்கி விழச்செய்து தன்சாரதியை விட்டு வந்தவருடைய தலைத்துணிகளையெல்லாம் பிடுங்கிக்கொண்டுவரச்செய்து பசுக்கூட்டங்களையும் வென்று கொண்டுபோன விசயனிருக்கும்போது சபத நிறைவேறுமற்போகுமா! இது தெரியாதா! அறியாத சிறுபிள்ளைகளும் நேற்று அடித்தவனை இன்றைக்குமறப்பரோ; நமது அரசனாகிய கண்ணில்லாதான் குழந்தைக்கேன் தெரியவில்லை. தங்கள் பாட்டனாராகிய விஷ்மர் அர்ச்சுனன் கொடுத்த பிராணப் பிரதிஷ்டை யென்றெல்லோரும் வாழ்த்துங்களென்று சொல்ல யாவரும் அப்படியே சொல்லி வாழ்த்திக்கொண்டு அத்தினபுரத்திற்கு பகலிற்போகவெட்கப்பட்டு இராத்திரியிற்போய் நுழைந்த அரசன் முதலானவர்களுக்கு இன்றும் அடிப்பட்ட அந்தப்புண்களிருக்குமே, காயமறப்பச்சையுதிரம்வடியுமே, உடம்பில் இலச்சையுமில்லையே, ஐயோ சொப்பனத்தில் வீமார்ச்சுனரைக்கண்டாலும் துரியோதனனிறந்துபோவானே, சுத்தப்பேதை இவனெங்கே யுத்தம்பண்ணியிருக்கிறான், எந்த யுத்தங்களைப்பார்த்திருக்கின்றான். அப்படியே சுத்தவீரனானால் பூசாரித்தனஞ் செய்யப்போன இடத்தில் விபசாரித் தனம் வந்ததைப்போல் தனுர்வேதங் கற்பிக்கவந்த துரோணாசாரியாகிய பிராமணனையும், வைதீகசாந்தமுடைய கிருபாசாரியர் முதலியவர்களையும் சுகபோகங்களை நீக்கிய பிரமசாரியாகிய விஷ்மனையும் திரிதண்ட சந்நியாசியாகிய அசுவத்தாமாவையும் வணங்கித் தழுவிக்கொண்டு பாண்டவர்களைவென்று எனக்குப் பட்டங்கட்டிவையுங்களென்று காலில்விழுந்துகிடக்கிற துரியோதனனுக்கு யுத்தத்திற்கு வரச்சொல்லென்னுந்துணி வெங்கிருந்துவந்தது. நாளையுதயத்திற்கே யுத்தஞ் செய்யச் சித்தங்கொண்டிருக்கிறார்கள், சொல்லிய சபதங்களிலொன்றானுங் குறையாது கன்னன் சகுனிமுதலிய துரியோதனாதியர் கால்சாய்ந்துபோகும்படியாய் கைக்கணையாற்செயிக்கும் விக்கிரமபராக்கிரமவிசயனையும் வீமனையும் சித்திரசேனனிடத்திற் கட்டுப்பட்ட துரியோதனன் வெல்வானோவென்று நீரே யோசித்துப்பாரும் உலூகரே, உங்கள் அரசனுக்கு நீரேபோய்ச்சொல்லும். மேலும், திரிலோகமும் திரிமூர்த்தியும் துரியோதனனுக்குத் துணையானாலும் வீமார்ச்சுனர்கையினால் முடிந்துபோவது நிசம் நிசம் நிசமென்று நாய்சொல்லியதாய்ச் சொல்லுமென்று ஸ்ரீகண்ணபிரான் செலவுகொடுக்க, தருமநந்தனன் அந்தத்தூதுவந்த உலூகனுக்குவேண்டிய ஆடையாபரணங்களெல்லாம் கொடுத்து துரியோதனனிடத்தில் பயப்படாமற்சொல்லுமென விடைகொடுத்தனுப்பிய பின்பு ஸ்ரீகண்ணபிரானும் பாண்டவர்களும் சபையிற்பேசிக்கொண்டிருக்கும்போது உருக்குமணிதேவிக்குத் தமையனாகிய உருக்குமியென்னும் அரசன் இரதத்திலேறி அதிவேகத்துடனோடிவந்து அர்ச்சுனனை நோக்கி துரியோதனாதியர்முதலாகியவர்களை வெற்றிகொள்ளத்திறமுந்தைரியமும் உனக்கில்லாவிட்டால் என்னை வேண்டிக்கொண்டு படைத்துணை விரும்புவையானால் ஒருநொடிப்போதில் துரியோதனாதியர் யாவரையும் வென்று உங்களுடைய சபதங்களையும்நிறைவேறச்செய்து தருமராசனுக்குப்பட்டமுங் கட்டிவைத்து என்கண்ணாற்பார்த்துமகிழ்ந்துபோகின்றேன், சீக்கிரஞ்சொல்லு

ம்அருச்சுனுவென்று சபையிலிருக்கும் யாவருந் திடுக்கிடும்படியாய்ப் பேசினுன். அந்த உருக்குமியை அருச்சுனன்பார்த்து கலகலவென்றுநகைத்து,எங்கள் காலில்விழுந்து வேண்டிக்கேட்டாலும் எங்களுக்கு வீரர்களுதவி வேண்டியதில்லை. ஆனல் இப்படிப்பட்டசூரனைதுரியோதனன்வேண்டியழைக்கின்றுன்; அவனிடத்திற்போய்ச் சேருவாயாகில் மெத்தவும் முக்கியமாய் வைத்துக்கொள்ளுவன்; இதுநல்லசமயம்; கோடைக்காலத்தில் விடாய்ப்பட்டுவருபவனுக்குக்குளிர்ந்த தீர்த்தமகப்பட்டதுபோலிருக்கு நீ கிடைத்ததென்று குலுங்க நகைத்து உமது பலுக்குக்கும் அவருடையபிலுக்குக்கும்சரிபட்டிருக்கும் இப்போதே போமென்று அருச்சுனன்சொல்ல, மறுபேச்சுப்பேசாமல் உருக்குமி தனதுபட்டணமேபோய்ச்சேர்ந்தான். பாண்டவர்கள் தமதுசேனுதிபதியாகிய சுவேதனையழைத்து திட்டப்படுத்தி நாளையுதயத்தில் முதனுள் யுத்தமென்ன யாவரும் சர்வசாக்கிரதையுடனே சந்தோஷங்கொண்டிருந்தனர். அப்பால் உலூகனுனவன் துரியோதனனிடத்திற்சென்று இவ்விடத்தில் நடந்த சங்கதி யாவற்றையுஞ் சகலமானபேருங்கேட்கச் சொன்னுன். அதைக்கேட்டுத் துரியோதனன் உடப்புவருந்தாமல் உற்றுருடன்மகிழ்ந்து நாளையுதயத்தில் யுத்தமென்று சேனுதிபதிக்குச் சொல்லி தாங்களும் யுத்தகோலங் கொண்டிருந்தனர். இருதிறப்படைகளிலும் பேரிமுதலிய வாத்தியங்களெல்லாஞ் சத்திக்கும் பெருங்கூச்சல் கடலினைச்சலொடுங்கும்படி முழங்கச் சூரியன் எப்போது உதிப்பான் எப்போது உதிப்பான் எப்போது உதிப்பானென்று இருதிறப்படைகளும் நித்திரையற்று வெற்றிபெற நினைத்து சுத்தவீரதளத்தை நிறுத்திச் சப்த சமுத்திரம்போல நிறைந்திருந்தனர். சூரியபகவானும் இந்த இருதிறப் படைவீரர்கள் பேசிக்கொள்ளும் பிரபலங்களைக்கேட்டு நாமுதயமாகவில்லையேயென்று எல்லாரும் நம்மேல் தோஷஞ்சொல்லுகின்றுர்களே, நாம் சீக்கிரமாய் உதயமாவோமென்று தன்தேரிலேறி கிழக்குத்திசையிலுதித்தனன். கேளுஞ் செனமேசெய மகாராசனே இதுவரையிலும்உத்தியோகபர்வம் இனிமேல்வரா நிற்பது வீஷ்மபர்வமென்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டுவந்தனர்.

படையெழுச்சிச்சருக்கம்

முற்றிற்று.

---

உத்தியோகபர்வம் முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமகாபாரதம்

## ஆறாவது,

## வீஷ்மபர்வம்.

விருத்தம்.

மேவருஞானனந்த வெள்ளமாய் விதித்தோனாகி
மூவருமாகிமீன முதலவுற் பவங்களாகி
யாவருமியாவுமாகி யிறைஞ்சுவா ரிறைஞ்சப்பறபல்
தேவருமாகிநின்ற செங்கண்மா லெங்கள்கோவே.

## அண்டகோசவடுக்குரைத்தசருக்கம்.

குருநாட்டுக்கதிபதியாகிய ஜனமேஜயமஹாராசன் நான்குவேதமுதலியகலைகளையும் நன்றாகத்தேர்ந்த வைசம்பாயனர் சொல்லிக் கொண்டுவந்த யாவும் தன் உள்ளத்திற் பொருந்தக்கேட்டு இருகண்களிலும் சலத்தைப் பெருக்கிக் கொண்டு மறுபடியும் வைசம்பாயனரை நோக்கி மெய்மையாகிய தேவங்களெல்லாம் திருவுருக்கொண்டாற்போன்றவரே! பரிசுத்தமாகியகிருபாநோக்கத்தினால் என் துன்பமுதலியவைகளுந்தொலையத்தரிசனங்கொடுத்த என்னாண்டவனே! துர்ப்புத்திதுர்ப்போதனையாற்சொற்சோர்வுபட்டதுரியோதனனும் சற்சங்கமே பொருளென்னுந் தயாளகுண மேருவாகிய தருமராஜனும் எவ்வகை யுத்தஞ் செய்தனர், அவ்விவரங்களை அடியேற்குச் சாங்கோபாங்கமாய்த் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று ஜனமேஜயமகாராஜன் வணங்கிக்கேட்க வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

சிலைத்திறமுங் கலைத்திறமுமுடைய அரசே! இப்பஞ்சம வேதமென்னும் பாரதத்திற்குப் பதினெட்டுப்பர்வமென்றுசொல்லியிருப்பதல்லாமலும் மூன்று பஞ்சகமும் சுவர்க்கத்திரய மென்றும், ஸ்ரீவேதவியாச பகவான் அருளிச் செய்திருக்கின்றனர், அதன் விவரமென்னவெனின் ஆதிபர்வம் சபாபர்வம் ஆரண்யபர்வம் விராடபர்வம் உத்தியோகபர்வம் இவ்வைஞ்சுபர்வமுங் கூடியது ஆதிபஞ்சகம். இதுவரையிலு மிவற்றைச்சொல்லிவந்தோம், இனிமேற்சொல்லப் போவது வீஷ்மபர்வம் துரோணபர்வம் கர்ணபர்வம் சல்லியபர்வம் சுயோதன பர்வமென்னும் இந்த ஐந்துங்கூடிய யுத்தபஞ்சகத்தில் வீஷ்மாசாரியர் சேனாதிபதியாக விருந்துசெய்த வீரப்பிரதாபங்களை யெல்லாஞ் சொல்லுகின்றேன்.

கலைஞானமுதலியவைகளைக் கற்றும் அதன் நுண்மைப்பொருளைப் பெற்றும் எல்லாருமதிக்கும் நல்லோராகிய வல்லவரும் கல்வியைக்கல்லாத சடரும் கற்றுமுணர்வில்லாத அசடரும், அகப்பற்றும் புறப்பற்றும் அற்றவராகிய சித்த சுத்தியையுடைய நற்றவரும் நித்தியவிதிமுறை தப்பாதுசபஞ்செய்து தொழு ம்படி சூரியபகவான் கிழக்குத்திசையி லுதிப்பதற்கு முன்னமே குருக்ஷேத் திரத்தில் நின்ற இருதிறத்தவர்களுடைய படைகளும் அரசர்கள் முதலாகிய யாவரும் காலைக்கடனைமுடித்துக்கொண்டாயுதங்களைக்கைகொண்டு ஆரவாரி த்து நின்றனர். அவர் அப்படியிருக்க அத்தினபுரத்துக் கதிபதியாகிய திரித ராஷ்டிரன் தன் புத்ர மித்ர பௌத்ரரெல்லாம் போர்புரிய விடைபெற்றுக்கொ ண்டுபோனவுடன் அடங்காததுன்பத்துடன் மடங்கிச்சுருண்டு முடங்கிப்பூரி த்த தோள்கள்வாட கண்ணீராறுகவோட ஐயோதெய்வமே, என்பிள்ளைகள் போர்செய்யப்போயினரோ! என்னவிளையுமோ ஏதுமுடியுமோ இன்பச்சொல் கேட்பனோ துன்பச்சொல்கேட்பனோ என்று எண்ணங்கொண்டுவருந்தித் தன் பிதாவாகிய வியாசபகவானைச்சிந்தையுணினைந்துவந்தனைசெய்தனன். அந்த வேளையில் திரிதராட்டிரமஹாராஜனுக்கெதிரில்நின்றனர். அவரைக்கண்டசஞ் சயனும் உயிச்சனும் திரிதராட்டிர மகாராஜனுக்கு சவுனைநின்றுற் றெரிவித் தனர். உடனே அறிந்துகொண்டு பூமியில்விழுந்து புரண்டெழுந்து அவரடியிற் றாழ்ந்து அர்க்கியபாத்திய ஆசமனிய சந்தனக்ஷதை தாம்பூல புஷ்பதூபதீப நைவேத்தியமுதலாகிய வுபசாரங்களெல்லா நடத்தி முத்துக்களினால் அமைத் திருக்கு மாசனத்தி லெழுந்தருளச்செய்து தாரைதாரையாய்க் கண்ணீர்சோர விட்டுத் தேம்பித்துக்கத்தினாலவிக்கிக்கொண்டுவாய்மொழிகுழறும்படி வியாச பகவானைநோக்கி அருந்தவர்களுக் கரசாகிய ஐயனே! என்பிள்ளைகளாகிய துரியோதனன் முதலோர் யுத்தஞ்செய்யும்படியாய் என்பால் விடைபெற்றுக் கொண்டு குருக்ஷேத்திரத்திற்குப் போயினர். அவர்களைவிட்டு இவ்விடத்தில் நான் தன்னந்தனியாயிருக்கலா மென்றாலோ 'பெற்றமனம்பித்து' என்னும் முறைமையினாலும்புத்திரவாஞ்சையினாலும் பிரிந்திருக்கப்படவில்லை; நல்லது! என்பிள்ளைகள் போயிருக்கும் குருக்ஷேத்திரத்திற்கே போகலாமென்றாலோ இரண்டு கட்புலனும் அற்றவனாகையால் அவ்விடத்திற்போய் நாம் செய்யலாவ தென்னவென்று என்மனமிளைப்பதே யொழியத்துணிவுபெறவில்லை! ஐயனே! என்கதி யிப்படி யிருக்கின்றதென்றான். அதற்கு அவர் திரிதராட்டிரா! சர்வ லோக சரண்யனாகிய சர்வேஸ்வரனுடைய செயலை ஒருவராலும் விலக்கக் கூடாது. ஆகையால் ஊழ்வினையிற்சிறந்த மனத்தினையுடைய உன்பிள்ளைகள் செய்யும் யுத்தத்தைக்கண்டுகளிக்க உனக்கு இரண்டுகண்ணுந்தெரியச்செய் தேன், இருதிறப் பிள்ளைகளும் போராடும் வகையைப் போய்ப்பாருமென்று வியாசரநுக்கிரகஞ்செய்தனர். உடனே இரண்டுகண்களும்பிரகாசித்தன; திசா திசைகளுங்கடந்த கீர்த்தியையுடைய திரிதராட்டிரமகாராஜா மாடமாளிகை கூடகோபுரமுதலிய அரண்மனைகளையும் அத்தினபுரத்தின் அலங்காரங்களையும் சோலைகளையும்மலைகளையும் பலபலஉயிர்ப்பேதங்களாகியஉடல்களையும் மண்ட லத்தையும்விண்டலத்தையும் தாராகணங்கள்முதலிய எல்லாவற்றையுங்கண்டு

கண்களை மூடிக்கொண்டு தந்தையாகிய வியாசபகவானுடைய திருவடியிற்றிரு முடிநாட்டிநின்று எந்தாய், நான் பிறந்த நாண்முதலிதுவரையிலும் களங்கமில்லாத பரிசுத்தஇதயத்துடன் பெருமைபெற்று என்காலமெல்லாங்கழித்துவிட்டேனே! இப்போதிறந்துபோம்படியாயிருக்கின்ற இந்தக்கொஞ்சக்காலத்தில் கண்களைப்பெற்று நானென்னபயனைப்பெறுவேன். என்பிள்ளைகள் செய்யும் போரையுங்கண்டுசகியேன், இவ்வுலகத்தையும்பாரேன், உலகிலுள்ள உயிர்வருக்கத்தையு நோக்கேன், மரமலைமுதலிய மற்றெவையும்பாரேன்; எதைப்பார்த்த போதிலும் எனக்குப்பயங்கரமாயிருக்கின்றது, இன்னுஞ்சற்றுநேரம் என்கண்களிருக்குமானால் நானிறந்துபோவேன், உடலும்குடலும் படபடவென்று நடுங்குகின்றன, ஆகையால் தருமந்தப்பாததவத்தையுடைய தந்தையே, பழய குருடாகச்செய்வதே யென்பாக்கியமாமென்று திரிதராட்டிரன்வணங்கி வருத்தமுற்றுவாழ்த்திக்கேட்கப் பெருமைதங்கியமுனிவன் பழையபடி குருடாகச் செய்து புத்திரனைப்பார்த்து, அப்பா குழந்தாய் இப்போது நடக்கிற போரின் முயற்சிகளையெல்லாம் பூரணமாகத்தெரிந்துகொண்டு உனக்குச்சொல்லும்படி குற்றமற்ற சஞ்சயனுக்கு ஞானக்கண் கொடுக்கின்றேன், நாடோறுநடக்கும் போர்முதலிய காரியங்களையறிந்து அச்சஞ்சயன்சொல்லத் தெரிந்துகொள்ளக்கடவை, மேலும் அந்தச்சஞ்சயன் சொல்லிக்கொண்டுவரும்போது தோற்றவர்களைப்போலிருப்பவர்கள் வென்றவராகவும், வெற்றிபெற்றவர்களைப்போலிருப்பவர்கள் தோற்றவராகவும், நடத்தும் வினைப்பயனைச் சொல்லிக்கொண்டேவருவான், அவ்வார்த்தையைக்கேட்டு நீ மெத்தவிசனப்படாதே, அப்பா கடைநாளையில் பார்க்கும்போது எதுநின்றதோ அதை இன்னதென்று சொலலத்தெரிந்துகொள்ளலாம்; அதுவரையிலுந் துன்புறுதை இன்புறுதை தைரியமாயிருவென்று ஆதரணைசொல்லிவிட்டு, உன்பிள்ளைகளை நம்பாதை, வெற்றியையும் ஆண்மையும் பெறுவோர்கள் நீதிமுறைமைதப்பாமல் சத்தியமாகநடப்பவர்களே, தடையின்றி அவர்களேவெற்றிபெறுவார்கள்; நீயே அறிந்துகொள்ளக்கடவையென்று சில உறுதிவார்த்தைகளைச்சொல்லி சஞ்சயனையழைத்து பல முகத்திலும் போர்செய்யும்படியாகிய போர்முகத்திற்சென்று அவரவர்களுடைய மனக்கருத்தறிந்து சொல்லும்படியாகவும் போர்செய்யுமிடத்திற்செல்லும்போது இருதிறத்தவருடைய ஆயுதங்களொன்றுந்தேகத்திற்படாதிருக்கச் சஞ்சயனுக்கு வரங்கொடுத்தோமென்று வியாசபகவான் விடைபெற்றுக் கொண்டு தவச்சூழலுக் கெழுந்தருளினர். இப்படி அநுக்கிரகஞ்செய்து வியாசபகவான் போனபின் திரிதராட்டிரபூபதி சராசரங்களுந் துதிக்கும்படி தருமகுணசீலனென்னுஞ் சஞ்சயனைப்பார்த்து மதயானையின் வலிமையு மதியூகியின்றிறமையும்பெற்ற சஞ்சயனே அரக்கர்களும் தேவர்களும் யுத்தஞ் செய்வதைப்போல் என்பிள்ளைகளும் பாண்டவர்களும் போர்புரியச்சென்ற குருக்ஷேத்திரமென்னும் இடம் எவ்விடத்திலிருக்கின்றதென்று கண்ணில்லாதவன்கேட்கச் சஞ்சயன் சொல்லுகின்றனன். அத்தினபுரத்துக்கரசனே! இந்நாவலந்தீவில் சகலபாவங்களையும்போக்கி நன்மைகளையும் புண்ணியங்களையுங்கொடுக்கும் புனிததீர்த்தம்என்று பூப்பிரதட்சணம்செய்கின்றவர்கள்போற்றி

வணங்கித்தானங்கொடுத்து, ஸ்நானஞ்செய்கின்றது சிறந்த பஞ்சகமென்பது, அம்மகத்துவமுடைய பொய்கைநிறைந்த குருக்ஷேத்திரத்தில் இருதிறப்புதல்வர்களும் ஆசைகொண்டு போர்புரியச்சென்றனர் என்று சஞ்சயன்சொல்ல, திரிதராட்டிரன்கேட்கின்றனன். ஐயா நாவலந்தீவாகியது எது? அதற்கு நாவலந்தீவென்னும்பெயரெப்படிவந்தது? இந்திரன்முதலிய தேவர்கள் வாழ்கின்ற அமராவதி அளகாபுரியென்பன எங்கிருக்கின்றன, இச்சமுத்திரஞ்சூழ்ந்த அகலிடமாகிய பொழில்களேழென்னும் ஏழுலகமும் பிரமனால் விதிக்கப்பட்ட அண்டமுதலியயாவும் நான்தெரிந்துகொள்ளச்சொல்லக்கடவையென்று ஐயங்கொண்டமனத்தையுடையஅரசன்கேட்கப்புன்னகைகொண்டு பொய்யில்லாத மனத்தோனாகிய புண்ணியன் ஆய்ந்து அநந்த கல்யாணகுணத் தெம்பெருமானுடைய திருநாபிக்கமலத்திலிருந்துவந்த பிரமன் ஆதியிற்படைத்த ஆயிரத்தெட்டண்டத்தில் இவ்வொரு பிரமாண்டத்திற் குட்பட்ட யாவையும் பெரியோர்கள் பேசியிருக்குஞ் சாஸ்திரப்படி சொல்லுகின்றேன் அரசர்க்கரசனேயென்று சஞ்சயன் சொல்லத்தொடங்கினன்.

ஐயா, அண்டமென்பது முட்டையைப்போல்விளங்கி சுவர்க்கமத்தியபாதலமென்னு மூன்று பிரிவாயிருக்கின்றது, இம்மூன்றுபிரிவில் அளவிடப்படாத ஏழுலகமும் ஒருகூறாய்நிற்கும்; அவ்வுலகம்யாதெனில் பூலோகம் புவலோகம் சுவலோகம் சனலோகம் தபோலோகம் மகாலோகம் சத்தியலோகமென்பனவாம். இவற்றில் இப்போது நாமிருக்கும் இவ்வண்டத்தின் மதிற்சுவர்வரையிலும் இப்பூலோகத்தின் விருத்தி அளவு, இதற்குள் எல்லாம்வல்ல இறைவனுடைய வலக்கண்ணாகிய ஸ்ரீயபகவானுதயமாகு முதயகிரியும் சமுத்திரமும் சக்கரவாளகிரியும் பொருந்தியிருக்கின்றன, அப்பால் நிறைந்த பெரும்புறக்கடலளவு மிருட்பூமியென்று அறிந்துகொள், இப்போது சொல்லிவந்த சக்கரவாள கிரிக்குட்பட்ட இப்பூமியைத் தேவபூமிஎன்றுஞ் சுவர்ணபூமியென்றுஞ்சொல்லுவர். இப்பூமியை சத்ததீவென்றுபிரித்திருக்கின்றதன்மையின்படி புட்கரத்தீவைச் சொல்லுகின்றேன். புட்கரத்தீவென்னும் அப்பூமி பத்துக்கோடி யோசனை விஸ்தீரணமா யிருக்கின்றது, அத்தீவில் தாமரைப் புட்பங்களே மிகுந்து மலர்ந்துசிறந்து வளர்ந்திருக்கின்றன, பலம்பொருந்திய குமுதவரையென்னும் ஒருமலை சூழ்ந்திருக்கின்றது, அம்மலைக்குப்புறத்தில் அறுபத்துநான்குலக்ஷம் யோசனையகலமும் ஆழமுமுடைய நன்னீர்க்கடல் வளைந்திருக்கின்றது. சர்வதோபத்திரமிகுந்திருப்பதால் அதுவே புட்கரத்தீவென்று சொல்லப்பட்டது; அதற்கப்பால் அறுபத்துநான்கு லக்ஷம்யோசனை அகலமுடைய சாகத்தீ வென்பதொன்றுண்டு, அத்தீவை மந்திரமலையென்னும் ஒருமலைசூழ்ந்து கொண்டிருக்கின்றது, அம்மலைக்குப் புறத்தில் முப்பத்திரண்டு லக்ஷம் ஆழமும் அகலமுமுடைய பாற்கடல் வளைந்துகொண் டிருக்கின்றது, கீரைத்தண்டுகள் மிகுந்து வளர்ந்திருப்பதனால் அதற்கு சாகத்தீவென்று பெயர். அதற்கப்பால் முப்பத்திரண்டு லக்ஷம்யோசனை அகலமாகிய கிரவுஞ்சத்தீவென்ப தொன்றுண்டு, அத்தீவைக் கிரவுஞ்சகிரி என்னும் ஒருமலைசூழ்ந்து கொண்டிருக்கின்றது, அம்மலைக்குப் புறத்தில் பதினாறுலக்ஷம் யோசனைகலய

மும் ஆழமுமுடைய தயிர்க்கடல் வளைந்து கொண்டிருக்கின்றது. அவ்விடத்தில் அன்றில் முதலிய பட்சிகள் மிகுந்திருப்பதினால் அதற்குக் கிரவுஞ்சத்தீவென்று சொல்லப்படும், அதற்கப்பால் பதினாறுலக்ஷ யோசனையகலமும் நிகளமுமுடைய கோமேதகத்தீ வென்பதொன்றுண்டு, அத்தீவை நீளுகமென்னும் ஒருமலைசூழ்ந்திருக்கின்றது, அந்தமலைக்குப்புறத்தில் எட்டுலக்ஷயோசனை அகலமும்ஆழமுமுடைய நெய்க்கடல்வளைந்துகொண்டிருக்கின்றது. அவ்விடத்திற் கோமேதக மலைகளே மிகுந்திருப்பதினால் கோமேதகத்தீவென்று கூறப்படும். அதற்கப்பால் எட்டுலக்ஷயோசனை யகலமும் நிகளமுமுடைய சான்மலித்தீவென்ப தொன்றுண்டு, அத்தீவை மேரு மந்தரவரையென்னும் ஒருமலை சூழ்ந்திருக்கும், அம்மலைக்குப் புறத்தில் நாலுலக்ஷயோசனை யகலமும ஆழமுமுடைய மதுக்கடல் வளைந்திருக்கும், அவ்விடத்தில் இலவமரமிகுந்திருப்பதினால் சான்மலித் தீவென்று கூறப்பட்டது, அதற்கப்பால் இரண்டுலக்ஷ யோசனை அகலமுடைய குசைத்தீவென்ப தொன்று உண்டு, அத்தீவைப் பாரிசகிரியென்னு மோர்மலை வளைந்துகொண்டிருக்கும், அம்மலைக்குப் புறத்தில் இரண்டுலக்ஷயோசனைவிசாலமும் ஆழமுமுடைய இட்சுசமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்றது. அவ்விடத்தில் தருப்பைகள் மிகுந்திருப்பதினால் குசைத்தீவென்று கூறப்பட்டது, இப்பால் நாமிருக்குமித்தீவம் லக்ஷயோசனை அகலமுடையது. இத்தீவில் அபாவனையென்னு மொருமலை சூழ்ந்திருக்கின்றது. அம்மலைக்குப்புறத்தில் ஜம்புவிருக்ஷ மொன்றிருக்கின்றது; லக்ஷயோசனை யகலமும் ஆழமுடைய உவர்க்கடல்வளைந்து கொண்டிருக்கின்றது. ஜம்புவிருக்ஷமென்னும்நாவல்விருக்ஷமொன்றிருப்பதினால் இத்தீவிற்கு ஜம்புத்தீவென்றும் நாவலந்தீவென்றுஞ்சொல்லப்படும். தெங்குங்கமுகுநிறைந்த இந்நாவலந்தீவின்நடுவில் மகாமேருவென்னும் பொன்மலை யிருக்கின்றது, அதுபூமிக்கொப்பாகிய புத்தியையுடைய புண்ணியனை மகாமேருவென்று சொல்லப்படுவது; இச்சம்புத்தீவிற்குநடுவில் பிரம பீடமாயிருப்பதினால் அம்மகா மேருவினுடைய நான்கு திக்கும் இப்போது நான்சொல்லிவந்த ஏழுதீவும் ஏழுமலையும் ஏழுபொருளும் ஏழுகடலும் ஏழுபறவைகளும் பலவகை அதிசயங்களும் பொருந்தியிருக்கும், அப்படியிருக்கினும் நாவற்கனியின் தேனால் அபப்பொடிகள் பொற்சன்னங்களாய் நதிக்கரைதோறும் வரம்பாகநிரம்பியிருக்கும்; அவ்வளங்களினால் மற்றத்தீவுகளினும் இச்சம்புத்தீவை மிகவு மேன்மையுடையதென்று நூல்கள்தோறும் பெரியோர்கள் பேசுகின்றனர். மேலும் மகாமேருவுக்கும், கவிந்திருக்கும் அண்டச்சுவருக்கும், மத்தியிலிருக்கின்ற பூமியின் விசாலம்கிழக்கே ஐம்பது கோடியோசனையும், வடக்கே ஐம்பதுகோடி யோசனையும், தெற்கே ஐம்பது கோடியோசனையும் பூமியின்கீழாக நாற்பதுகோடி யோசனை தூரமுருவியும் ஆகாயத்தின்மீதாக ஐம்பதுகோடியோசனை தூரமுயர்ந்தும் இருப்பதென்று பெரியோர் சொல்லுவர், இதையுமுமது விவேகத்தாலறிந்து கொள்ளக்கடவீரென்றனன்.

இஃதன்றியும், மேற்சொல்லிய மகமேருவுக்கு வடமேற்கில் வடக்கில் வடகிழக்கில் நீலகிரிசுவேத கிரிசிருங்ககிரியென்று மூன்றுமலைகள் நிற்கின்றன,

கீழ்த்திசையில் மாலியவான் மலையென்றொருமலை நிற்கும், கந்தமாதனமென்னும் ஒருமலையுண்டு, தென்றிசையில் தென்மேற்கில் தென்கிழக்கில் நிடதகிரி ஏமகூடம் இமயமலையென்னு மூன்றுமலையுள்ளன; இவ்வெட்டுமலைகளைத் தான் அஷ்டகுலாசலமென்று யாவருஞ் சாஸ்திரோக்தமாய்ச் சொல்லுவது, முன்சொல்லிய பொன்மலையாகிய மகாமேருவுக்குக்கீழ்த்திசையில் நிலைபெற்ற மந்திரமலையுற் பருத்துத்தழைத்த கிளைகளையுடைய மாமரங்கணிறைந்த ஆம்பிரவனமும்நெருங்கிய தடாகமும நந்தவனமும் பாற்சுனையும் தேவர்கள்முதலிய முனிவருங் களிக்கப்பொருந்தி யிருக்கின்றது, மேருவுக்குத் தென்றிசையில் மேருமந்தரமென்னும் மலையும் இச்சம்புத் தீவென்னும் பெயரைத் தந்த ஜம்புவிருக்ஷமும் சயித்திரதவனமும் பெருமைதங்கிய மதுச்சுனையும் அழகுபெற விளங்கிக் கொண்டிருக்கின்றது. மகாமேருவுக்கு மேற்றிசையில் பாரிசகிரியென்னும் மலையும் மலர்ந்து சிறந்த கடம்புவிருக்ஷமும் நிலத்திற் கலங்காரமாகிய பிரசப்பெயர் வனமும் கருப்பஞ்சாற்றுச் சுனையும் பரிசுத்தம்பொருந்தி மாதுரியத்துட னிருக்கின்றது; மேருவுக்கு வடதிசையில் குமுதகிரியென்னும் மலையும் வானளாவியுயர்ந்த வடவிருக்ஷமென்னும் ஆலமரமும் சர்வதோபத்திரமென்னும் பூந்தோட்டமும் நன்னீர்ச்சுனையும் எல்லாத்திசைகளினு மேம்பாடா யிலங்கிக்கொண்டிருக்கும், மேலும் அம்மகா மேருவானது பதினாயிரம் யோசனை தூரம் நடுமத்தியிலோங்கி முப்பத்திரண்டு யோசனை தூரம்வானிலுயர்ந்து எண்பதினாயிரம்யோசனை அகலம்சுற்றிலும் பருத்துச் சந்திரசூரியர்முதலிய கோள்களுக்கு நடுநிலையாய் இவ்வுலகுக்கு அச்சாணிபோல் விளங்கிக் கொண்டு அநேகங்கோடி சிகரங்கள் பொருந்திமூன்று குவடாகப்பிரிந்து அயன்பீடம் அரிபீடம் அரன்பீடமாக அமைந்திருப்பதென்று அத்தியான்மீகத்திற் சொல்லியவண்ணம் அறிந்துகொள். மேலும் அம்மகமேருவி னெட்டுத்திக்கிலும் இந்திரன் அக்கினி இயமன் நிருதி வண்ணன் வாயு குபேரன் ஈசானன் முதலிய இறைவரும் சித்தர் அசுரர் தயித்தியர் கருடர் கின்னரர் கிருதர் கிம்புருடர் கந்திருவர் முதலியவரும் தத்தமக்கு வாசத்தானமாய் வீற்றிருப்பர், மேலும் முன்சொல்லிய மகாமேருவுக்குக் கீழ்த்திசையில் நிலைபெற்றிருக்கும் மந்திரகிரியென்னும் மலையின்மீது பணைத்துத் தழைத்துத்தளிர்த்துவிளங்கிய மாமரம் ஆயிரம் யோசனைபரப்பு உயரமுமுடைத்தா யிருக்கும்; அம்மாம் பழத்தினின்றும் இருந்துவரும் இரசத்தைப் புசித்தவர்களுக்கு இடகலை பிங்கலையென்னும் சுவாசம் பத்துயோசனைதூரம் பரிமளித்துக்கொண்டிருக்கும், மேற்சொல்லிய மாம்பழச்சாறு வழிந்து போய்ச்சேர்ந்து நிறைந்து நின்றதைச் சோதகநதியென்று சொல்வர். இதன்றி இடகலை பிங்கலையென்னும் சுவாசம் பரிமளிப்பதிலென்ன பயனெனின், சுவாசம் பாழாகிப்போகாமல் நீடித்துப் பாய்வதினால் அவர்க்குத் தீர்க்காயுளென்றும் அவர்களே நித்திய தத்துவம் பெற்றவரென்றும் பெரியோர் சொல்லுவர். இதல்லாமல் கிழக்குச் சமுத்திர முதல் மேற்குச்சமுத்திரம் வரையிலும் இதன்நடுவிலிருக்கும் பூமி குருகண்டம்) குற்றமற்ற சிருங்கமலைக்குத் தெற்கு சுவேதமலைக்கு வடக்குகீழ் கடல் மேல்கடலுக்கு நடுவிலிருக்கின்ற பூமி அரிவருடம் சுவேதகிரிக்கும் நீல

கிரிக்கும் கீழ்கடலுக்கும் இடையிலிருக்கும் பூமி இளாவிரதவருடம், மேரு வரைக்குத்தெற்கு மாலியவான் பர்வதத்திற்கு வடக்கு கீழ்கடல் வரையினும் பத்திரவருடம், கந்தமாதனத்திற்கு மேற்குச் சமுத்திரற்குக் கிழக்கு கேதுமால்வருடம், நிடதகிரிக்குத் தெற்கு ஏமமலைக்கு வடக்குகீழ்கடல் வரையினுமிருக்கும் பூமி அரிவருடம், ஏமமலைக்குத்தெற்கு இயமலைக்கு வடக்குகீழ்க் கடல்மேற்கடலளவுங் தேவபூமியாகியகிம்புருடவருடம், இயமலைக்குத்தெற்கு தென்கடலுக்குவடக்கு மேற்கடல்கீழ்க்கடலுக்கு நடுவாக நாமிருக்கு மிப்பூமியைத்தான் பாரதவருடமென்று சொல்வர். இப்படி நெருப்புப் பொறிபறக்கும் வேலாயுதத்தைத் தாங்கிய கையையுடைய அங்கிதீரவரசன் பெற்ற ஒன்பது பிள்ளைகள்பெயரால் அரசுசெலுத்திவந்த இந்தவொன்பது வருடத்தையும் நவகண்டமென்றுஞ்சொல்வர். இந்நவகண்டத்தின் அளவையுஞ்சொல்லுகின்றேன். மாலியவான்மலைக்கும் கந்தனமாதனகிரிக்கு மத்தியிலுந் தனுக்கோடி முதல் வடகோடி வரையிலும் மூன்றுவருடஞ்சேர்ந்தது இப்பாரதவருடம், அதுமுப்பத்திருலாயிரம்யோசனை தூரம் அகளங்களமுடைத்தாயிருக்கின்றது. அப்பால் நிடதகிரிக்கு வடக்குமுதல் நீலகிரி வரையிலும்மூன்று வருடமிருக்கின்றன. ஒவ்வொரு வருடமும் ஒன்பதினாயிரம்யோசனை யகலங்களமுடையது ; இதல்லாமல் இப்பாரத வருடத்திற்குச் சிறப்பாகிய ஆறுகுலகிரிக ளிருக்கின்றன ; ஒவ்வொருமலைகளின் அகலம் இரண்டாயிரம் யோசனைதூரம், அடிமுதற்சிகரம் வரைக்கும் பதினாயிரம் யோசனைதூர முயர்ந்திருக்கின்றது. இப்போது சொல்லிவந்த ஒன்பது வருடங்களில் எட்டுவருடத்தில் சாரணர் சித்தர் கந்திருவர் வித்தியாதரர் கிம்புருடர் கிஞ்சையர் முதலியோராகிய ஒவ்வொரு வகையார் வாசமாயிருப்பர். அப்படியிருந்தாலும் மேலாகிய தருமம் அர்ச்சனை பூசை அருந்தவம் இவைமுதலியயாவும் இப்பாரதவருடத்தில் வந்திருந்து செய்து தவநிறைவேற்றிக் கொண்டுபோய் தத்தம் பதியிலிருந்து அநுபவித்துக் கொள்ளுவர். அவ்வெட்டு வருடத்திலும் சஞ்சாரஞ் செய்துகொண் டிருப்பவர்களுக்கு ஆயுள் எவ்வளவென்றால் ஒன்றேகால் அயுதமென் றுரைப்பர். ஒன்றேகாலயுதமாவது பன்னீராயிரத் தஞ்ஞூறு வயதென்று தெரிந்துகொள். அப்படியிருக்க இப்பாரதவருடத்தி லிருப்பவர்களுக்கு சரீரம் ஆயுளேற்படுத்தியிருப்பானேனெனின் மகாவருத்தத்துடன் வாயுவைக்கும் பித்து வாறுலை வளர்த்திக்கொள்ளுவதினும் இம்மாய்பழ ரசத்தைப்புசித்து வாழ்நாளை நீடிக்கச் செய்வதே மேன்மையாதலால் அவ்விடத்தி லிருப்பவர்க்கு ஆயுளை விசேஷமாகச்செய்விக்கும். மேற்கூறிய மகாமேருவுக்குத் தென்றிசை மேருமந்திரமென்னு மலையினிடத்துப் பொருந்திய நாவல்மரம் இரண்டாயிரம் யோசனைப் பரப்பும் உயரமுமுடையது. அம்மரத்தின் நாவற்கனியானது அயிராவதத்தின் தலையத்தனை பருமனுடைத்தாயிருக்கும். அப்பழம் நைந்துவிழுந்த தேன்போய் நிறைந்துநின்ற நதியைத்தான் சம்புநதியென்று சொல்லுவர். அச்சம்புநதி மேற்சொல்லிய மகாமேருவின் மேற்புறமாய்ச் சுற்றிக்கொண்டு கீழ்த்திசையிற் புகுந்து சமுத்திரத்தின் மத்தியிற்போய்ச்சாரும்படியாய்ப் பெருவோசை கொண்டோடும்அந்நதிதோய்ந்த இடந்தோறும்ஒருவரா லெடுக்கப்படாத பொற்பாறை

கள் நிறைந்திருக்கும். அப்பாறையாகிய பொன்னால் ஆபரணங்கள்செய்து தரித்துக்கொண்டாலும் அல்லது அத்தீர்த்தைச்சாப்பிட்டாலும் அவர்களும்நரை திரைமூப்பு நோய்முதலிய நாசங்களெய்தார். மகாமேருக்கு மேற்றிசையிலிருக்குங்கந்தமாதனச் சாரலிற்பொருந்திய கடம்புமரம் ஆயிரம்யோசனை அகலந்தழைத்துச் செழித்துமலர்கள் நிறைந்துசொரியும்தேன் யாவரும் வணங்கும்படிக்குக்கடம்பநதியென்னும் பேர்கொண்டிருக்கும். அப்படிப்பட்ட நதியில்ஸ்நானஞ்செய்தாலும் தாகத்திற் கருந்தினாலும், நூறு யோசனைதூரம் சுவாசமணமுந் தேகமணமுஞ் சூழ்ந்துகொண்டிருக்கும். மகமேருவுக்குவடதிசையிலிருக்குஞ் சுவேதகிரிச்சாரலில் நூற்றுப்பத்து யோசனை யுயரமும் பருமனும் பரப்புமுடைய ஆலமரமொன்றிருக்கின்றது, அதன்கிளைகடோறும் நெருங்கிய கனிகளைப் புசித்தால் பால் தயிர் தேன் நெய் இவைகளைக் கொடுப்பதல்லாமலும் அழகிய பொன்னுடை இரத்தினாபரணங்கள் முதலியயாவுங் கொடுத்து ஆற்றைப்போலும் சுரக்கும் ஊற்றைப்போலும் பெருக்கெடுத்தோடிக் கொண்டிருக்கும். பிரமன்முன்னேதந்த சுவாயம்புமனு மேற்சொல்லிய பிலக்கத்தீவு புட்கரத்தீவு சாகத்தீவு சான்மலித்தீவு கிரவுஞ்சத்தீவு குசத்தீவு சம்புத்தீவென்னும ஏழுதீவுகளையும் தனது தோளாற்றலாலும் மிகுந்த தவத்தினாலும் ஆண்டுவந்தனன். அப்படி அரசுபுரிந்து வருகையில் அச்சுவாயம்பு மனுவுக்கு நந்தன் சயித்திரதன் பிரசன் சர்வதோபத்தின் கரதீரன் மனுதாரன் அங்கிதீரனென்ற ஏழுபிள்ளைகள்பிறந்து கல்வியிற்சிறந்து வளர்ந்து கருதலராக் காய்ந்துகடைக்கண்சிவந்து சிறந்தனர், அக்காலத்தில் ஏழுபிள்ளைகளுடைய திறத்தையுங்கண்டு ஏழுதீவையும் ஒவ்வொரு பிள்ளைகளுக் கொன்றாகப்பகிர்ந்து பட்டங்கட்டிவைத்தனன், அத்தீவை அவ்வப்பிள்ளைகள் அரசாண்டுவந்தனர், அவ்வெழுவரில் அங்கிதீரனென்பவன் இச்சம்புத்தீவைச் செங்கோன்முறை குன்றாமல் மலைகளைப்பிளக்கும் வச்சிரமுதலிய படைகளையேந்தி அரசாண்டு வருகையில் குரு இரணியன் கிரமியன் இளாவிரதன் பத்திரன் கேதுமாலன் அரி கிம்புருடன் பரதனென்னும் ஒன்பது பிள்ளைகளைப்பெற்று வளர்த்து இச்சம்புதீவை ஒன்பது பங்காக்கி ஒவ்வொரு பிள்ளைகளுக்கு ஒவ்வொரு பங்காகப் பட்டங்கட்டி அப்பிள்ளைகள் பெயரால் நவகண்டத்திற்குப் பெயருமேற்படுத்திவைத்து ஈஷணைமூன்றையுங்களைந்து ஆன்மார்த்தமாகக்கனங்குலவியவனம்புகுந்து மோட்சவீடடைந்தனன், இப்பாலிந்த ஒன்பதுபிள்ளைகளும் ஒன்பதுகூறாகிய கண்டத்தை ஆண்டுவந்தனர். அவ்வொன்பது கண்டத்தினளவையுஞ் சொல்லுகின்றேன் அரசனேயென்று சஞ்சயன் சொல்லுகின்றனன்.

மலைகள்போலும் அலைகளடிக்கும் வடக்கு சமுத்திரத்திற்குத் தெற்காகவும் அணியணியாய் மணிகள்கொழிக்கும் சுனைப்பெருக்குடைய சிருங்கமலைக்குவடக்காகவுமிருக்கு மிரணியவருடமுதலிய ஏழுவருடத்தி லிருப்பவர்களெல்லாருஞ் சீக்கிரத்தில் மோக்ஷமடையும்படி யாயுள் நீடித்திருக்கச்செய்யாமல் நூற்றிருபதென்று விதித்திருக்கின்றது அரசனேயென்று சஞ்சயன்சொல்ல, திரிதராட்டிர மகாராசன்கேட்டுச் சிந்தைகளித்துச் சஞ்சயனைப்பார்த்து மற்ற

எட்டுவருடத்திலு மிருப்பவர்கள் சீக்கிரத்திற் கதியடைவதற்காக ஆயுட்குறுக் கென்று சொன்னீர். அப்படிப்பட்ட நலத்தைக்கொடுக்கு மகத்துவங்கள் இந்தப் பாரதவருடத்தில் என்னென்ன விருக்கின்றன, எனக்கு அவைகளையுந் தெரிவிக்கவேண்டுமென்று கண்ணில்லாக் காவலன்கேட்கச் சஞ்சயன்சொல் லுகின்றனன். இந்துகுலத்திந்திரனே! அழகிய பொற்றாமரைமலர்களுடனே ஆகாயத்தினின்றிழிந்து மகாமேருவின் சிகரத்திற்பாய்ந்து மூன்று பிரிவாகி அம்மக மேருவுக்குச் சமீபமாயிருக்கின்ற சிகரங்களையுடைய கும்பகிரியில் ஒருபிரிவுவிழுந்து சிகரத்தைப் பிளந்துவரும் நதியானது நான்கு பிரிவாய்ச் சமுத்திரத்திற்போய்க் கலக்குமென்று சான்றோர் கூறுவர். இப்பால் மகா மேருவுக்குத் தென்புறத்தி லிருக்கும் குலகிரியினுடைய சிகரத்தில் வீழ்ந்த ஒருபிரிவு அம்மலையின்நடுவாகிய வயிற்றைக்கிழித்துப் பெருமைதங்கிய நிலத் தைப்பிளந்து தென்முகமாகத்திரும்பி வருகின்றகங்கையாற்றால் இப்பாரதவரு டஞ்சிறந்ததென்று சொல்லுதற்குச் சான்றாயிருக்கின்றது. இதல்லாமல்சரஸ் வதி-யமுனை-கோதாவிரி - நருமதை-கௌசிகை - துங்கபத்திரை - சரயு-பாலி- பெண்ணை-காவிரி - கிருஷ்ணை - தாம்பிரபருணி-கங்கை முதலிய பலதீர்த்தங் களும்பொருந்தியமையான் இப்பரதகண்டத்திற்கு ஒப்பாகிய கண்டமும்உண் டோ உத்தமனே, இன்னும்திருக்கோயில் திருநெல்வாயில் திருக்கழிப்பாலைதிரு ப்பெருமணம் திருமயேந்திரப்பள்ளி திருமுல்லைவாயில் வடமதுரை தென்மது ரை காசி காஞ்சிமாயை துவாரகை அபவந்தி அயோத்தி திருக்கலிக்காமூர்திரு ச்சாய்க்காடு திருப்பல்லவனீச்சுரம் திருவெண்காடு கோகர்னம் இராமேச்சுரம் தென்கயிலை வடவேங்கடம் திருக்காட்டுப்பள்ளி திருக்குருகாவூர் திருக்கரு வூர் திருக்கோலக்கா திருவாரூர் புள்ளிருக்கு வேளூர் திரு ஆவினன்குடி திருக்கேதாரம் திருவரங்கம் திருவானைக்கா திருக்கண்ணார்கோயில் திருநின் றையூர் திருப்புன்கூர் அன்னியூர் திருவேள்விக்குடி சீர்காழி சிதம்பரம் சிற்சபை திருக்குடந்தை ஜகநாதம் திரிசிரபுரம் தருப்பசயனம் குருக்ஷேத் திரம் இவைகள்முதலிய திவ்விய தலங்களுமிருக்கின்றன. இப்பதிக்கு ஒப் பாகிய திருப்பதிகள் எப்பாரினுமில்லை. இப்போது சொல்லிவந்த தலவிசே டங்களினாலும் நதிவிசேடங்களினாலும் கண்காட்சியாகியசிறப்பினாலும் தவங் களினாலும் சோடசமகாதானங்களினாலும், சிவார்ச்சனை விஷ்ணுவார்ச்சனை பூசைகளினாலும் சுசிசுத்தங்களினாலும் சகலவித வனங்கள் முதலிய நலங்களி னாலும் இப்பரதகண்டம் புனிதமாகிய விசேஷம் பெற்றது; இவ்விசேஷம் பெற்ற பரதகண்டத்தில் குருக்ஷேத்திரம் மேலாகிய பவித்திர முடையது. அநேகங்கோடி நற்குலத்தவர் நற்குணத்தவரெல்லாரும் நன்மைபெறச்செய்த யாகசாலைகள் கோடாகோடிகளிருக்கின்றன. உத்தம க்ஷத்திரிய குலபோஜ ராகிய ராஜர்களெல்லாரும் விரோதித்து பகைமேற் கொண்டு வெற்றிபெறும் படி கருதியுத்தஞ்செய்த மேலாகிய ஸ்தலம் இந்தக்குருபூமி பரசுராமன் அரச வமிசத்தைக் கருவறுத்து அவர்கள் தேகத்தினின்று பெருகிய உதிரங்களினால் சிமந்தபஞ்சகமென்னும் தீர்த்தமகத்துவமுண்டாக்கி அந்த இரத்த தீர்த்தத் தில் தன்றந்தைக்குத் திலதர்ப்பணக்கடனைக்கழித்தனர். இன்னமும் அநேகங்

தகுதியையுடையபெரியோர்களெல்லாருந்தங்களுக்குரியகருமமுதலியகாரியங்களை நிறைவேற்றிக் கொண்டனர். இப்படிப்பட்ட மகத்துவமுடைய அக்குருக்ஷேத்திரம் எவ்விடத்திலிருக்கிறதென்றால், கல்விவளமும் செல்வவளமுந்தருஞ் சரஸ்வதிநதிக்குத் தெற்கிலிருக்கின்றது. அவ்விடத்தில் உன்பிள்ளைகள் நூற்றுவரும் பாண்டவர்களும் யுத்தஞ்செய்யப் போயிருக்கின்றனரென்று சஞ்சயன்சொல்ல, திரிதராட்டிரமகாராஜன் மகாசந்தோஷத்துடன்கேட்டு சஞ்சயனைநோக்கி சகலமுந்தெரிந்த சாதுசாங்கத்தியமுடைய சஞ்சயனே! நவகண்டமென்று பிரித்துச்சொல்லி அதனுடைய விசேஷங்களும் இப்பரதகண்டத்தினுடைய மகத்துவங்களும் விசாலமுதலிய தன்மைகளும் எனக்குச்சொல்லிவந்ததையே, நானதைப் பூரணமாகத் தெரிந்துகொண்டேன். மேற்சொல்லிய ஏழுதீவுகளிலே இந்நாவலந்தீவை நீக்கி மற்றஆறு தீவுகளின் விவரங்களையுஞ் சொல்லக்கடவை யென்று திரிதராட்டிரன் கேட்கச் சஞ்சயன் சொல்லத் தொடங்கினான்.

ஐயா, திரிதராட்டிர மகாராசனே! முன்சொல்லிவந்த சப்த தீவுகளில் இச்சம்புத்தீவு நீங்க மற்ற ஆறுதீவுகளையும் ஆறுபிள்ளைகளும் அரசுசெலுத்தி வந்தனர். இத்தீவுகளில் புட்கரமென்னுந்தீவை சர்வதோபத்திரனென்னும் அரசன் ஆண்டுவந்தனன். அவனுக்குப்பிராசீனன், சுவேதன், பிரியக்கு, உத்தரனென்று நாலுபிள்ளைகள் பிறந்தனர். அப்போது தானாண்டுவந்த புட்கரத்தீவைக் கீழ்விதேகம்மேல்விதேகம் வடவிதேகம்தென்விதேகமென்று நான்கு கண்டமாக்கிஅந்தப்பிள்ளைகள்நால்வருக்குங்கொடுத்தனன். அந்நான்குபிள்ளைகளுந் துரைத்தனம் பண்ணிக்கொண்டு வந்தனர். குருகுலசிகாமணியாகிய கோவே! பிள்ளைகளின் குணங்களையறிந்து பூமியைப் பங்கிட்டுக்கொடுத்துவிடுகின்ற தந்தை எல்லாத்தேவனிலும் முதற்றேவன்; அப்படிச்செய்யாமலிருந்து அவத்திலிறந்துபோம்படி தகப்பன்புத்திரர்மித்திரர்முதலிய பூமியைக் கெடுக்கும் பகையாகிய கொடும்பாவியென்று இராஜநீதியிலும் நீதிசாத்திரங்களிலும் சொல்லியிருக்கின்றபடியால் அந்தந்த அரசர்கள் பாவத்திற்குப்பயந்து உடனே பகுந்து கொடுத்துவிட்டனர். அந்நீதிமுதலிய தருமங்கள் அப்படியிருக்க; மேற்சொல்லிய ஆறுதீவுகளில் வசித்து வாழ்கின்ற மனிதர்களுக்கு ஆயிரம்வருடம் ஆயுளென்றும், புட்கரத்தீவோர் பிரமாவைப் பூசிப்பார்களென்றும், கிரவுஞ்சத்தீவோர் வருணனைத் தொழுவோரென்றும், பிலக்கத்தீவோர் சூரியனைவணங்குவோர்களென்றும், சாகத்தீவோர் வாயுவை யாராதிப்பார்களென்றும், சான்மலித்தீவோர் சந்திரனைப் போற்றுவாரென்றும், குசைத்தீவோர் அக்கினியைக் கொண்டாடு வார்களென்றும், நீர்வளம் நிலவளம்பொருந்திய இச்சம்புத்தீவோர் மேலாகிய விதிமுறைகளுடன் கடவுளைத் தொழுதல் பூசை சத்தியம் சவுசம் ஆசாரம் விவகாரம் ஞானம் இரக்கம்யாகம் ஓமம் ஔபாசனம்முதலிய வண்மையான குணங்களுடையவர்களென்றும்இவ்வுலகத்தையேதேவபூமியாகச்சொல்லுவார்களென்றும் சஞ்சயன்சொல்ல,இதனுடைய தன்மைகளைக்கேட்டு சந்தோஷமடைந்து கீழுலகம் ஏழென்றுகூறிய கிரமத்தையுஞ் சொல்லென்று திரிதராட்டிரன்கேட்கச் சஞ்சயன் விவரமாகச்

சொல்லத்தொடங்கினன். இப்பூமியின் சம்பந்தமில்லாமல் அதோமுகத்திற் இழிந்துசென்றால் ஆயிரம்பணாமகுடமுடைய ஆதிசேடனுடன் அட்டகஜங்களுஞ்சூழ்ந்திருக்கும் அப்புவனத்தைநீங்கி அப்பாற்சென்றால் ஒப்பில்லாத பிலங்களாகிய அதலம் விதலம் சுதலம் தராதலம் இரசாதலம் மகாதலம் பாதாளமென்னும்ஏழுலகமுங்காணலாம், ஒவ்வொன்று ஒன்பதுலட்ச யோசனைவிசாலத்தையுடையது. இந்த ஏழுலகத்தின்கடையாகிய பாதாளத்தில வில்வகத்தில்மிருந்த காண்டவனென்னுமமகானுபாவர் பொருந்திஇருப்பர். அவ்விடம் நீங்கிச் சென்றால் அள்ளல் இரௌரவம் கும்பிபாகம் கூடசாலம் செந்துக்கானம் பூதிமாபூதியாம், ஏழுநிரயமாகிய நரகபூமியைநீங்கினால் தேவர்கள்தொழும்உருத்திரராகிய சிவபெருமான் கணேசர்முதலாகியகூட்டமும்ஆதாரமாகிய ஆமையும் அவ்விடத்தி லிருக்கின்றது. அவ்விடம் நீங்கினால் இவ்வண்டத்தின்கீழ் சுவர்தோன்றும் அரசனே, இப்பூலோகமுதல் அண்டச்சுவர் வரையிலும் ஐம்பதுகோடியோசனை தூரமென்று பெரியோர் பேசுவர். குருகுலமணியாகிய கோவே! இப்பூலோகமுதல் மேலாகிய ஏழுலகத்தின் சீருஞ்சொல்லுகிறேன் இறையேயென்று சஞ்சயன் சொல்லுகின்றனன். ஐயா இம்மண்ணுலகத்தில் அளவிறந்த யோனிபேத மாகவாவார்க ளென்று உணர்ந்திருக்கின்றீரன்றோ! அரசே இவ்வுலகின்மேற் பத்து யோசனை தூரம் வாயுமண்டலம், பதினாயிரயோசனை தூரம் மேகமண்டலம், அதுவரையிலும் பூலோகம், அதன் மேலாகிய புவலோகத்தின் அளவைக்கேள் அதுவோ நலமுடைய கிம்புருடர் கருடர் விஞ்சையர் இயக்கர் சித்தர் இவர்கள் முதலியவர்கள் பொருந்திவாழு முலகம்; அதன்மேல் ஆகாயகங்கை செல்லுகின்றது, அப்பால் லட்சயோசனை தூரம் சூரியமண்டலம், அதுவே முப்பத்துமுக்கோடி தேவர்களும் வழிகூட்டிநடக்க மண்டல வீதியாயிருக்கும். அதற்குமேல் லட்சயோசனை தூரத்திற்கப்பால் லட்சயோசனை தூரம் நட்சத்திரமண்டலம், அப்பால் இரண்டுலெட்சயோசனை தூரம் புதனுடையமண்டலம், அப்பால் இரண்டு லட்சயோசனை தூரம் சுக்கிரமண்டலம், அதன்மேல் இரண்டு லட்சயோசனை தூரம் அங்காரகனாகிய செவ்வாய்மண்டலம், அப்பால் இரண்டுலெட்சயோசனை தூரம் குருமண்டலம், அப்பால் இரண்டுலெட்சயோசனை தூரம் சனிமண்டலம், அதன்மேல் லட்சயோசனை தூரந் தவத்தையுடைய சப்தரிஷிகள் மண்டலம், அப்பால் லட்சயோசனை தூரம் துருவமண்டலம், இதுவரையும் பதினைந்து லட்சயோசனை தூரம் தொகையினையுடையது புவலோகம், இதன்மேலாகிய சுவலோக மென்பது எண்பத்தைந்து லட்சயோசனை தூரமுடையது. அதற்கப்பால் மகாலோகம் இருநூறு லட்ச யோசனை தூரமுடையது. அதைத்தான் தேவேந்திரன்வாழும் தேவலோகமென்றும்சொல்லுவர். இவ்விடத்தில் மார்க்கண்டேயர் முதலாகிய மகாமுனிவர்களெல்லாரும் வீற்றிருப்பர். அதற்கு மேல் எட்டுக்கோடியோசனை தூரமுடையது சனலோகம், அவ்விடத்திற் பிதிர்த்தேவதைகள் முதலிய புண்ணியரும் வாழ்வர். அச்சனலோகத்தின் மேல் பன்னிரண்டுகோடி யோசனை தூரமுடையது தவலோகம், அவ்வுலகத்தில் சனகசனந்தர சநற்குமாரசனாதனர் முதலியவரும்வாழ்வர். இத்தவலோக

த்தின் மேல்சிருஷ்டி கர்த்தாவாகியநான்முகக்கடவுள் வாழும் சத்தியலோகம், அது பதினான்குகோடி யோசனை தூரமுடையது; இச்சத்தியலோகம் வரைக்கும் புத்திமான்கள் சொல்லிய ஏழுலகமென்றுணரக் கடவை. இச்சத்தியலோகத்தின்மேல் பரமபதமென்பது மூன்றுகோடி யோசனை தூரமுடையது, பரிமளங்கொண்ட துளவணியும் கள்ளமா மாயப்பிரான் பொருந்திய பதம்மூன்றுகோடியோசனை தூரமுடையது, சிவபெருமான்பொருந்திய சிவலோகம்நான்குகோடியோசனை தூரமுடையது, அதன்மேல் ஒருகோடி யோசனைதூரத்தில் குற்றமற்ற அண்டச்சுவர்வட்டங்கவிந்திருக்கிறது; இப்படி வியாசபகவானுடைவனுக்கிரகத்தால் வேதபுங்கவர்களாகிய முனிவரர்கள் சொல்லியிருக்கின்ற நூன்முறைப்படி இராஜேஸ்வரனாகிய உமக்குச் சொன்னேன்; இதல்லாமல் நூற்றெட்டு உருத்திரர்கள்வாழும் புவனங்களும் சமுத்திரமத்தியிலிருக்கின்ற இலங்கைமுதலிய தீவுகளும், பற்பலவாக இம்மேதினியிலிருக்கின்றன, மேலும் நெருங்கிய மலையருவி பெருகிவரும் ஏமகூடத்திற்குத் தெற்காகவும் இமயமலைக்கு வடக்காகவும் இருக்கின்ற கிம்புருட வருடத்தில் பரமசிவனெழுந்தருளிய கயிலைமலையிருக்கின்றது, அக்கயிலைமலையினிடத்தில் அர்ச்சுனன்சென்றுஅரிய தவத்தினின்று உமாமகேஸ்வரரருளினால் பாசுபதாஸ்திரம் பெற்றனன், இப்போது நான்சொல்லிவந்த இவ்வண்டத்தைவளைந்துகொண்டிருக்கும் சக்கரவாளகிரியின் எட்டுத்திக்கிலும் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்று சொல்லப்படுகின்ற திக்குப் பாலகர்களும், இவர்கள் பட்டணங்களுமுண்டு. ஆகையால் இப்போது நாமிருக்கும் இப்பூலோகமுதற்கொண்டு நான் சொல்லிக்கொண்டுவந்த அண்டகோளகையைப் பஞ்சா சதகோடி யோசனை யளவென்று பெரியோர் பகர்ந்திருக்கின்றனர் என்று சஞ்சயன் சொல்லிக்கொண்டு வந்தபோது இருகண்ணுமில்லாத இறைவன் அகமகிழ்ந்து அதிசயமுற்று ஆலிங்கனமாக அணைத்துக்கொண்டு அருணிறைந்த வியாசபகவான் அநுக்கிரகஞ்செய்த வரத்தினால் இவ்வண்டத்தினியற்கை முழுமையு முணர்ந்து இரண்டுகண்ணும் ஞானக்கண்ணு முடையவர்கள் அறிந்து கொள்வதுபோல் யான்தெரிந்து கொள்ள எனக்குதெரிவித்தனையே, ஐயனே! இனிமேல் குருக்ஷேத்திரத்திற்குச் சென்றுஅவ்விடத்தில் இருதிறத்தவர்களும் யுத்தஞ்செய்யு முறைமைகளும் அவர்களின் நினைப்பும் கலப்பும் யாவுமுணர்ந்து எனக்குச்சொல்ல வேண்டுமென்று விடைகொடுக்க. அப்படியே மகாபாக்கியமென்று செலவுபெற்றுக் கொண்டு யுத்தபூமிக்குப்போய் இரண்டு பிரிவாக வேற்படைததி அணிவகுத்திருந்த சேனைசயினியங்களை ஆகாயவீதியிற் சென்றுசுற்றிப்பார்த்து திடுக்கிட்டுச் சித்தப்பிரமைகொண்டுஇச்சேனைகளைஎவ்வளவென்றுவகுத்துச் சொல்லுவோமென்றேங்கிச் சொல்லுதற்கரிய ஏழுமேகங்களும் யானைகளாக உருவெடுத்துவந்தனவோ உலகிலுள்ள மலைகளெல்லாம்தேர்க்கூட்டங்களாக உதித்து உருண்டுவந்தனவோ சமுத்திரத்தின் அலைகளெல்லாங் குதிரையினங்களாகச்சமைந்தனவோ பிரம சிருஷ்டியிலடங்கியவுயிர்வகைகளெல்லாம் காற்பலங்க ளாயினவோ இவைகளைச் செவ்வையாக அறியத்தக்கதென்று பெருமூச்செறிந்துஇந்நால்வகைச் சேனைகளில் யானைக்கூட்

டங்க ளதிகமோ தேரினங்கள் மிகுதியோ குதிரைக்கொம்புக ளதிகமோ பதாதிகள்மிகுதியோ அப்பதாதிகளில் மிச்சமோ காலாள்களதிகமோ கதையாளிகளதிகமோ இதனுடைய மிகுதியை யெப்படித்தான் வகுத்துச் சொல்லுவோமென்று மனங்கூசி ஐயோ இத்தனைகோடி சேனைகளும் இப்பூமியில் இறந்துபோவதற்கு பகவானுடைய அமைப்பிருந்ததல்லவோவென்று இரங்கி அப்படி யாவரும் ஏககாலத்தில் மடியும்படியா யிருக்குமா, அப்படி அடங்கலுமடிந்து போவதற்குக் காரணம் காரியம்எதுவென்று நமக்குள்ளே நாம்சற்று யோசித்துப் பார்க்கவேண்டுமென்று நிதானித்து இதற்குத் காரணமா யிருக்கின்றவன் கண்ணபிரானே காரியமா யிருக்கின்றவன் துரியோதனராஜனே ஆகையால் இவ்விருவர்களாலே இத்தளங்களெல்லா மடிந்துபோம், இத்தனைகோடி சேனைகளுக்கும் இவர்களே எமனு யேற்பட் டிருக்கின்றனர்க ளென்று சிந்தித்து நீர் திருப்பாற்கடலை விட்டெழுந் தருளியவேலை நிறைவேறும் படியாகிய காலமிதுவோ வென்றேத்தி வந்தித்து வாழ்த்திக் கருணையங் கடலேயென்று போற்றிப் புகழ்ந்து இவ்விருதிறப்படை களிலும் நாட்டியிருக்கும் பெரிய கொடிகளும் கையிற்பிடித்து நீட்டியிருக்குஞ் சிறியகொடிகளும் இடிக்கு மேகங்களைப் படபடவென் றடித்துத்துரத்தி உட்காச்சல்கொண்டு ஆகாயகங்கையில் வீழ்ந்து சலத்தை யுறிஞ்சிக்குடித்துக் காற்றினால் மழைதூற்று வதைப்போலும் அத்தூற்றல்களைப் பூமியில் விழ வொட்டாமற் றடுக்க விரிந்திருப்பது போலிருக்கும் சிறியகுடைகளும் பெரியகுடைகளும் நிறைந்திருக்கவும் நால்வகைச் சேனைகள் முழக்குமோசையும் ஒலிபடும் சர்வவாத்திய முழக்கமும் ஆயுதங்களுடனாயுதங்களுறைபடும் பேரொலியும் அனற்பொறியும் வீஷ்மர்முதலிய வீராதிவீரர்கள் வில்வளைக்கு நாணொலியும் ஆகர்ணபரியந்த மிழுத்துவிடும் டங்காரவோசையும் அதிரதரும் மகாரதரும் ஊதும் சங்குமுழக்கமும் சமரதர்முழக்கும் ஸ்ருங்கநாதவோசையும் அர்த்தரதர் முழக்குஞ் சுரிமுகமுழக்கமும் ஒரே முகூர்த்தத்தில் முழங்கியபோது திக்குகளெட்டுந்திடுக்கிட்டும் திசையானைகளெட்டும் திக்குமுக்கிட்டும் செவிடுகள்பட்டும் திரையோசைகேட்டுத்தியங்கும்படி. சேனைகள் நெருங்கியிருக்கும் குருக்ஷேத்திரத்தைக் கண்டு திரிதராட்டிரனுக்குத் தெரிவித்து இனிமேல்நடக்கும் போர்முதலிய வதிசயங்களையும் அறிந்துகொண்டு வருகின்றேனென்று விடை பெற்றுக்கொண்டு போர்க்களத்தில் வந்திருந்தனன்.

அண்டகோச வடுக்குறைத்தசருக்கம்
முற்றுப்பெற்றது.

---

## பகவற்கீதை.

இப்பால், ஸ்ரீகண்ணபிரானே கால்களுக்குச் சல்லடந்தொடுத்துக்கச்சை கட்டி கபாயணிந்து முடிதரித்து சிந்தைகளித்துப் பார்த்தசாரதியாய் மூர்த் தண்ணியத்துடன் இரதத்தைக்கொண்டு வந்துநிறுத்தி அர்ச்சுனனையேற்றிக் கொண்டு இருதிறச் சேனைகளையும் பார்த்துக்கொண்டு வரும்போது வீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமா துரியோதனன்முதலிய துணைவர் புத்திரர் மித்ரர் படைத்துணை கூடிவந்த பார்த்திவர் நம்மை நம்பிப் பிழைக்கும்படி வந்திருக்கிறவீரர்கள் ஏழைகளாகிய சேவகர்கள் இவர்களெல்லாரையுங் கண்டு ஐயோ இவர்களைக்கொன்று எமலோக மனுப்பிவிட்டு அப்பால் பிணந்தின்ற பெரும்பூச்சியேபோல் இப்பூமியையாண்டு கடைசியில் பாண்டவர்மாண்டுபோனார்களென்னும் வசைமொழி பெறுவதிலும் இச்சைநீங்கி இலச்சைவிடுத்துக் கொச்சையர்போலப் பிச்சையெடுத்துண்பதேபெருவாழ்வு, என்மச்சுனனாகிய அச்சுதனே! நாங்களைவரும்பிழைக்கவேண்டி அளவிறந்தவர்களையுங்கொன்றரசாண்டு அன்னமும் நீருமுண்டு சாண்வயிறுவளர்க்குந்தன்மை எத்தன்மை எனின் பெரியோர் முதலியவருடைய இரத்தத்திற்குழைத்த அன்னமுண்டு வாணாள்வளர்த்தலினும் எத்தனைநாளைக்கிருந்து வாழ்வோம், பனிப்பெருக்கில் கப்பலோடத்தும்பான்மைபோலொத்த தேகத்தைநம்பி நீண்டபுகழினையுடைய துரோணர் வீஷ்மர்முதலிய பெரியோர்களெல்லாருமாண்டுபோகச் செய்தார்கள் பாண்டவர்களென்னும் பழிச்சொல்லைப்பெற்றுப் பாவிகளாவதினும் பழயபடியே காடேநாடாகவும் அவ்விடத்திலிருந்து வாடாமறிரும்பாமற் காலங்கழிக்குமிடமே கிரதிசயவின்ப வீடாகக் கருதிப்போய் விடுவதே யுத்தமம் காரியாகாரியந்தெரியாமல் காலநுட்ப முணராமல்முன்பின் எண்ணிப்பாராமல் புத்தியில்லாமல் யுத்தஞ்செய்ய வந்தோமேயென்று மனநொந்து மெத்தவுளைந்து மனநடுங்க மதிமயங்க மயிர்க்குச்செறிய வியர்வைகழிய கரங்களுங் கால்களுந் தோல்களும்வாடக் கைவில்லுஞ்சோரக் கண்ணீர்தளும்ப சுவேதவாம்புரவி பூட்டியதேர்மீது மூர்ச்சையாகச்சோர்ந்து வீழ்ந்துமயங்கிய விஜயனைத்தேவகிநந்தனனாகிக் கண்ணபிரான் திருக்கண்களாற் பார்த்துநகைத்து எப்படிப்பட்டவர்களாலும் அறியக்கூடாத நமது அதிமோகமாயையை இன்னதென்று இவ்வர்ச்சுனனால் அறியத்தக்கதோ சிறிதேனும் அறியமாட்டானே, ஆகையால் பேச்சில்லாமல் மூச்சொடுங்கி மூர்ச்சைபோயினன், இவனையிப்போதே தேற்றவேண்டுமென்று திருஉளத்திலெண்ணித்து தமதுகரங்களினால் அருச்சுனனை வாரியெடுத்து மார்போடணைத்து ஆலவட்டமுதலிய வுபசாரங்களினால் மூர்ச்சை தெளிவித்து அர்ச்சுனாவென்றழைத்தனர், அப்படியழைக்க பகவானுடைய வாக்கியமாகிய அமுதம்விஜயன்காதிற் புகுந்தவுடனே, விடாய்நீங்கி விழிப்பவனேபோற் கண்விழித்துப்பார்த்து நாவிற்சலமூறி நல்லுணர்வுடனே தேறி நம்பியைத் தொழுதழுது சொல்லத்தொடங்கினன்,

ஓ! ஆபத்பாந்தவாகிய ஐயனே, என்கண்களிருண்டன, கருத்தழிவுற்றது கால் கை நடுங்குகின்றன, கண்ணீர்பெருகின, இரக்கமுந்தயையும் இப்போது

தோன்றுகின்றது, எண்ணாதவெண்ணமெல்லாமெண்ணுகின்றது. என்னை இவ்விடத்தில் நிறுத்திவையாமற் பாசறைக்குக் கொண்டுபோமென்று பரிதபித்து பற்குனன்சொல்லினன். அவ்வார்த்தையை வசுதேவன் மகன்கேட்டு, புன்னகையுடையனாய், அந்தோ அந்தோ உனக்கிப்போது கண்டிருக்குந் திகில் தேகத்தோடொத்த வியாதியோ அல்லது தேசத்தோடொத்த பாசபந்த உபாதியோ, இதென்ன அதிசயம் காண்டீபனே! அல்லது, இன்னமும் வேறொன்றுநினைக்கிறேன். அதென்னவெனின், அங்கதேசாதிபதியாகியகன்னன் உன் தலையை வாங்குகின்றேனென்று அடிநாளையிற் சபதம்பண்ணி யிருப்பதல்லாமலும் உனக்குப்பகையாகிய அச்சுவசேனனென்னும் பெரும்பாம்பைஆதரித்து வளர்த்துக்கொண்டு வந்திருக்கின்றனனே, அக்கன்னனையும் அவ்விடத்திலிருக்கின்ற ஆலகாலவிஷத்தையுடைய நாகாஸ்திரத்தையுங்கண்டு, ஐயோ நம்மைக் கொல்லுமேயென்று பிராணபயங் கொண்டு பயப்பட்டனையோ, இதுநிற்க; அறுபதினாயிரம் வெங்கல ரதக்காரரென்று வந்திருக்கின்ற சம்சப்தகரென்னும் அரக்கர்களாகியமிக்க பலசாலிகளைக்கண்டு மூர்ச்சையடைந்தனையோ; அன்றி சகஸ்திர வாகுவென்று சொல்லப்படும் தானவர் சிரேஷ்டன் சகலகலமும் சர்வபலமும் தனக்கெதிரற்ற வரமும்பெற்ற அடலாயிர பாகுவைக்கண்டு அடங்கி யொடுங்கினையோ, அர்ச்சுனா? சந்திர சடாமண்டல தாரியாகிய சதாசிவத்தியான மோனமந்திரத்தை அநுசரித்துத் தவமிழைத்துச் சிவபெருமானிடத்தில் வாளாயுதமும் வெற்றிபெறவரமும் பெற்றுவந்திருக்கின்ற சிந்துதேசாதிபதியாகிய சயித்திரதனைக்கண்டு சண்டைசெய்யப்பயங்கொண்டு அண்டையிலிருக்கிற நான் உறுதிசொல்லிப் போர்செய்யச் சொல்வேனென்று நடுங்கி நாவரண்டு மூர்ச்சைபோய் விழுந்தனையோ, அல்லது காஷ்டகராகிய வீஷ்மர் சேனாபதியாகவந்து நிற்கின்றனரே இவரை நாம் எக்காலத்தில் வெல்லுவதென்றினைத் தேங்கினையோவென்று ஸ்ரீ கண்ணபிரான் இட்டமுடன்கேட்டனர். அதற்குப்பாராள வெண்ணமில்லாமற் பரிதாபத்துடன் மனநொறுப்புக்கொண்டிருக்குஞ் சவ்யசாசிக்குச் சினம்பிறந்து கண்கள்சிவந்து மாலைகள் கருகிச் சருகாகவும் வியர்வோடாகவும் பெருமூச்செறிந்து சற்று நிதானித்துக் கண்ணபிரானைப்பார்த்து என்குலதெய்வமே! தேவரீ ரென்னசொன்னீர் பளா பளா வெகுநேர்த்தியென்று யாவருந் திடுக்கிடநகைத்து ஐயனே! என்னுடைய அருமைபெருமையெல்லாந்தெரிந்திருந்தும்தேவரீருடையசித்தம் இப்படிபேசுவதற்கு இடங்கொண்டிருக்குமானால் நான் செய்வதென்ன? ஆயினும் இறந்துபோவோமென்னுங்கவலையெனக்கெள்ளளவேனுமில்லை; யானைக்குச்சிங்கமிளைக்குமானால் அரவுக்குக்கருடன் அஞ்சுமானால் ஆட்டைக்கண்டு பெரும்புலி அலறுமானால் ஆய்ந்துநன்னூலுணர்ந்த மேலோர் அசத்தியவாக்கியக் குடியருக்கு அஞ்சுவாரானால் அழியாப் பொருள்பெற்ற ஸ்ரீமந்தர் அழிந்துபோகும் அற்பமாகிய பொருளைக்கண்டு கண்தெரியாமல் அலையுங் கடையருக்கு அஞ்சுவாரானால் நானுமிச்சத்துருக்களைக் கண்டு பயப்படவேண்டும். தேவாதி தேவனாகிய தேவனே உத்தம க்ஷத்திரியர்களுக்கு ஞானம் தவம்வீரம் கருமமுதலியவற்றைச்செய்து காலம்போக்குவதே உத்தமம், அப்படியல்லாமல்வெகுளி

மேற்கொண்டு போர்தொடுத்துப் பகைவரை வென்று பாராளநினைப்பது அஞ்ஞானமென்றறிந்தேன். இதுநிற்க; இக்கடற்புவியிற் றோன்றியதெல்லாம் மாண்டுபோம் பொருளே யல்லது வேறில்லை; மேலும் தோல்துருத்திபோலும் சூத்திரப்பாவைபோலும் விளங்கும்தேகம் இது எத்தனைநாளைக்கிருந்தாலு மிறப்பதேயல்ல திறவாமலிருக்குஞ் சிறப்பில்லையே, இன்றுநான் இப்போர்க்களத்திற்கு வரவும் வெகுஜனங்களைப் பார்க்கவும் இவ்வளவு பேருமடிந்த அன்றைக்கன்றோ நமக்கு வெற்றித்திருவாய்க்குமென்று அவர்களைக் கொல்லாவிட்டால் நமக்கு அவமான மெய்துமென்று நாமேகொல்லுவோ மென்பதற்கு சான்றென்னவென்றும் இவர்களெல்லாரையு மடித்துக்கரத்திற் செங்கோல்பிடித்து மண்ணையாளலாமென்று நம்பிவந்த நாமிறந்துபோனால் என்னபயனென்றும் கானலை நீரென்றுகருதி அலையுங்கலையினத்தைப் போலாமேயென்றும் நாம்வெற்றி பெற்றிருந்தாலும் வீரம் விட்டிறைந்தாலும் பாருள்ள வரையிலும் பழியும்பாவமும் வளருமேயென்றும் இப்படிப்பட்டகருமவினைக்கிடாகாமல் தருமவினையைமேற்கொண்டு பெருமைதங்கிய வனத்திற்சென்று அருமையாகிய தவத்தினின்றுங் காலங்கழிப்பதே நற்காரியமென்றுங் கருதினேன்; உடனே இரக்கமும் அதைரியமும் உறக்கமும் மனமெலிவுமேலிட்டுவருநதச்சோர்ந்து வீழ்ந்துவிட்டேன், தேவரீருடைய சித்தமெப்படியோ நானறியேனென்று அர்ச்சுனன் தேம்பிச்சொல்லினன். அம்மொழிகளையெல்லாம் இறைவன்கேட்டு அகமகிழ்ந்து தமது திருக்கரத்தால் அர்ச்சுனனைச் சேர்த்துத்தழுவியெடுத்து அணைத்து ஆதரித்துத்தேற்றி சிந்தைதெளியச் செய்து நீகொண்ட ஐயம் நீங்கும்படி சொல்லுகிறேன்பயமகற்றி பராமுகமாயிராமல் அன்பாய்க்கேளென்று இறைவன்சொல்லத்தொடங்கினன்.

மித்துருவென்றும் சத்துருவென்றும் சுசனங்களென்றும் வெகுசனங்களென்றும் பாட்டனொன்றும் ஆசாரியனென்றும் சீஷனென்றும் தமயன்தம்பியனென்றும் புத்திரவர்க்கமென்றும் மைத்துனனென்றும் மாமனென்றும் சாகத்தக்கவனென்றும் சொல்லத் தக்கவனென்றும் ஊழ்வினைப்பயனைத் தள்ளிப்போகத் தக்கபேரென்றும் உன்மனத்துட்கொள்ளத்தக்க தொன்றில்லை; வீணாகிய ஆசாபாசங்களினா லிவர்களெல்லாரையும் எப்படி கொல்லத் துணிவோமென்று கொன்றால் பாவமும்பழியும் நமக்குச் சுமையாமேயென்று நீயேன்பயங்கின்றனை, சுமைதாங்கி ஆயாசந்தீர்க்கப் போவதுமில்லை சுவரிலெழுதியசுந்தரச்சித்திரங்கார்க்கப் போகிறதில்லை, அப்படியே உன்னாற் சிலதாவதும் உன்னாற்சிலர் சாவதும் நீசிலரைக் கொல்வதும் நீசிலரைவெல்வதுமா யிருக்குமென்றுமெண்ணுவையானால் மற்றக்காரியங்களெல்லாம்உன்னால்நடத்திக்கொள்ளலாமன்றோ! அர்ச்சுனா அப்படியெல்லாம் நடத்த வல்லவனா யிருப்பையானால் முன்நடந்த காரியங்களை யாய்ந்து பார்க்கவேண்டிய தன்றோ, இப்போதாயினுமுனக்குத் தெரியவில்லையா, இனி, ஒருகாரியத்தை முடிப்பவனார் முடியத்தக்கதுயாது கொல்லுகிறவனார் கொல்லப்படுவதுயாது எது சாகத்தக்கது எது சாகாமற்போகத்தக்கது எவர்கள் உறவினர் எவர்கள் பகைஞர் இஷ்டரெவர் துஷ்டரெவர் சவுக்கியமெது அசவுக்கியமெது நன்மை யெது

தீமையெது அர்ச்சுனா யான் சொல்லுவதைக் குறிப்பாகக்கேள். அதாவது இவ்வுலகத்தில் நாமரூபங்களாகப் பேசப்படும் பொருள்களெவையோ அவைகட்கெல்லாம் பழமையாயிருக்கும்படியான ஆதியையெங்கும் பரிபூரணமாயிருப்பதொன்றை ஒப்பில்லாத் தன்மையுடையதை நித்தியதத்துவத்தை நின்மலத்தை நிர்விஷயத்தை நிலைபெற்றிருக்கு மிறையை ஐம்புலன்களாலும் அறியப்படாத அதிநுட்பமாகிய அறிவைதனக்குத் தானாயிருக்குந்தத்துவசொரூபத்தை இன்தென்றுணராமற் சண்டை செய்கின்றதனால் இறந்துபோமென்று நினைத்துவருந்துகின்றனையே? எது இறக்கத்தக்கதென்று ஸ்ரீகண்ணபிரான் கேட்க, அருச்சுனன் சொல்லுகின்றனன், தேவரீர் சொல்லிவந்த வஸ்துவானது எப்போதொருபெயரைப் பெற்றதோ அப்போதேபலவகையாகியதுன்பங்களினாலும் அதற்குக்கேடுண்டன்றோ என்று கிரீடிகேட்க, கண்ணன் சொல்லுகின்றனன். கீர்த்திகொண்ட பார்த்தனே! நீகேட்டகேள்வி ஞாயமோஆனாலும் நான்சொல்லப்போகிறபொருள் எப்படிப்பட்டதென்ன யுகாந்த காலாக்கினியினாலும் வேகாது, பிரசண்டமாருதத்தாலுங் கலங்காது, எழுகடலும்பொங்கி வழியுஞ்சலப்பிரளயத்தாலு மிறக்காது, ஆதிசேடனுடைய பணாமுடி யிடியவிடிக்கும் பேரிடியினாலும்உடைபடாது, ஒருபொருளையும்விட்டுநீங்காது, உருவென்பதுவும் அருவென்பதுவும் ஒளியென்பதுவும் வெளியென்பதுவும் உளதென்பதுவும் இலதென்பதுவும்அன்று, பேரறிவின்பெயரைத்தாங்கி எங்குமொருபெற்றிமையாய் எவற்றிலுந் தானாயிருக்கும்படியாகிய ஆன்மாவென்னும்அழியாப்பொருளை நீகைக்கொண்ட அற்பஆயுதங்களால் மடியச்செய்யுந்தன்மை உன்னிடத்திலுண்டோவென்று கேசவன்சொல்லினன். அவ்வார்த்தையைக்கேட்டுவிசயன் சொல்லுகின்றனன், கண்ணபிரானே தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய சீவான்மாவென்னும்பொருளானது அழிவில்லாததுஎனின் உயிர்போய் விட்டதென்று உலகத்தார் சொல்லுகின்றனரே! அவ்வுயிர்நீங்கிப்போவானேன்? அழிவில்லாத ஆன்மாவைத்தாங்கிய உடற்கு அழிவுவருவானேன் இத்தூலதேகத்தைவிட்டு உயிர் எவ்விடஞ்சேரும், அதை அடியேனுக்குக்கட்டளையிட வேண்டுமென்று நீங்கியவிசயன்கேட்க கண்ணன்சொல்லுகின்றனன். அர்ச்சுனா இவ்வுலகிலுள்ள மானிடர் தேகாபிமானங்களுக்காக உடுத்திக்கொள்ளும்ஆடை அழுக்கடைந்து கந்தையாய்ப் போமானால் பற்பலவகையாகிய புதுவஸ்திரத்தைத் தரித்துக்கொள்வதுபோல் இத்தூலதேகமானதுவியாதிமுதலியபோகாதிகளால் நொந்து நீங்கிவிட்டால் புதிதாகிய வேறொரு தேகத்திற்புகுந்து விளையாடிக்கொண்டிருந்து அத்தேகத்தினுமிழைந்து கூத்தாடிக் கொண்டிருக்கும்; யாவருஞ் சிந்திக்கின்றஉலகநிறைந்த உண்மைப்பொருட்கு ஒருக்காலும்அழிவில்லை; உடலுக்கு மாத்திரம் அழிவுண்டென்றனன். அதைக்கேட்ட அர்ச்சுனன் மனமகிழ்ந்து அகப்பற்றும் புறப்பற்றும் நல்வினை தீவினையும் ஷட்கர்மமும் உயிர்க்குரித்தா அல்லதுஉடற்குரித்தாவென்றனன். பரந்தாமனே நீயென்பதும் நானென்பதும் உன்னுடையதென்பதும் என்னுடையதென்பதும் உன்னாலென்பதும்என்னாலென்பதும் இரண்டுவினையும் அறுவகைக் கருமமும் உடற்கேயன்றி உயிர்க்கொன்று மில்லையென்றுரைத்து பின்னுஞ்சொல்லுகின்றனன். காண்டீபா இவ்

வுலகத்திற்பிள்ளையை ஆர்பெற்றனர் அப்பிள்ளைக்குத் தனுகரணபுவனபோகம்
முதலியன எவரால்நேரிட்டன ; எவர்பெற்றுக் கொண்டனர் ? எவரொன்றும்
அவர்பிரிந்தால்அவர்எவ்விடத்திற்போய்ப் பொருந்தியிருப்பர். இவற்றினுடைய
காரியங்கள் முன்னுந்தெரியார். ஆதியுமந்தமுந்தெரியாமல்மத்தியில் தாமுயன்ற
முயற்சினால் தானேதகப்பன் தாயென்றும் தனக்கவன் பிள்ளையென்றும் நினை
த்துக் கொண்டேயிருப்பர். அவர் தாமிறந்துபோனால் இப்பூமியில்விழுந்து துக்
கத்தை அனுபவித்து வருந்துவோர் யார் எங்களுக்குச் சொந்தமென்று ஏன்
மயங்கவேண்டும்.ஒருவனுக்கு மொன்றுமில்லை; அர்ச்சுன பிராரத்துவ வினைப்
போகத்துக்கீடாய்ப் பிறப்பது உடல், அவ்வுடலிற்கடாகாசம்போற் றோன்றிக்
கொண்டிருப்பது உயிர், அதாவது ஆகாயத்திலுதித்த ஒருசூரியன் தண்ணீர்க்
குடங்கள் தோறும் பலசூரியனாகக் காணப் படுவதுபோல் சொரூபமாகிய
ஜீவான்மாவொன்றே பலதேகங்கடோறும்பிரதிபலித்துக்கொண்டுலவும் என்று
உத்தமன்சொல்லினன்.வெற்றிபெற்றவிஜயன் அதுகேட்டுஎல்லாவிஷயமும்உட
ற்கேயென்றால் ஆன்மாவுக்குச்சம்பந்தமொன்றுமில்லையாஎன்றனன். அதற்குக்
கண்ணபிரான் ஆத்மாவுக்குச் சம்பந்தமுண்டு, அதெப்படியெனின் தேகவாச
னைவிஷயத்தால் கருமங்களெல்லாந் தன்னுடையதென்று பார்ப்பதனால் விதித்
திருக்கின்ற இருவினையின் பிரயோசனத்தைத்தானும் அனுபவிக்கும், அதற்
காகவே பெரியோர்கள் பேசியிருக்கும் வாசகமென்னவெனின், எதுவுந்தனக்
குச் சம்பந்தமில்லாமல் எல்லாம் அவன்செயலென் றுணாத்தின்னொருவ னிருக்
கின்றனனென்றுதள்ளிவிட்டால்எவையு மென்னைச்சேரும்;வியோகத்திற்சிறந்த
விஜயனே, மகாமாயையைத் தொலைக்க மகான்கள் அறிந்துநடக்குந் தூய்மை
யென்பது இதுதான், நீயும் அப்படிநீக்கிவிடலாம், எல்லாம் உன்னாலாகுமென்
றுன்னி நலிந்துவருந்தினையே, இந்திரன்முதலாய் பெற்றவர்கள்யார் வந்துபிறந்
தவர்கள்யார்? நேசமானவர்யார் நேசமில்லாதவர்யார்? நாசமானவர்யார்? நாச
மில்லாதவர்யார்! உறவார்?பகையார்! உற்றுப் பார்க்குமிடத்தில் ஒன்றுமில்லை
யே!கற்றுணர்ந்த காவலனே எவற்றும் அவன்செயலென்றுட்கொண்டால்குற்ற
மென்பதொன்றும்விளையாதேகொடியவினைக்கீடாகவுமாட்டரேமேலும்மாயை
யென்னும்பெண் மனமென்னும் பிள்ளையைப்பெற்றாள் அம்மனமென்பவன்
அறிவென்னும் சுதனைநல்கினான் இம்மூவருக்குள் தாய்தந்தையென்றும், புத்
திரி புத்திரனென்று மிவர்களிடத்தில் நாட்டும்படியாகிய ஆசாபாசநேசமும்
மாயையென்பவளாலும் மனமென்பவனாலும் விளையாநின்றது, அச்சமயத்
தில் அறிவென்னும்பிள்ளை பிரவேசிப்பானாகில் இவைகளையெல்லாம் நீக்கிவிடு
வன். ஒருவனையுஞ் சேரவொட்டான் அதனால் அம்மாயையும் மனமென்னும்
பிள்ளையும் அறிவனைத்தள்ளி ஒருகக்ஷியா யிருக்கின்றனர். இதல்லாமலும்
மெய், வாய், கண், செவி, மூக்கென்னும், ஐம்பொறிகளும் சத்தம், பரிசம்,
உருவம், இரத, கந்தமென்னும் தன்மாத்திரைகளும், ஞானம், அருள், தவம்,
பொறுமை, சத்தியவாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறி யடக்கல் இவ்
வெட்டுமுடையது சாத்விககுணம். மனஊக்கம் ஞானம், வீரம், தருமம், தா
னம், கல்வி, கேள்வி, இவ்வெட்டுமுடையது இராசதகுணம், பெருந்தீனி,நெடுந்

தூக்கம், கடுஞ்சோம்பல், கெடுநீதி, துஷ்டநடத்தை, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை இப்பதினொன்று முடையது தாமதகுணம், இம்மூக்குணங்களுடனும் அறுவகைப் பயன்களுடனும் பழகி அரசுசெய்யும் இச்சாயலுலகினை வணங்கித்துதித்து நித்திரை கொள்ளும்போது ஒளித்துநின்ற அறிவென்னும் அரசனுந் தோன்றுவன். இத்தன்மையாகிய நன்மைநிறைந்த அறிவென்னும் அரசனை அறிந்தவரெவரோ அவரைத்தான் அறிஞரென்று துதிக்கப்படுவது. பிரமனால் வகுக்கப்பட்ட சராசரப் பொருள்கள்மீதாறும் பாலும் நெய்யும்போல் உயிர்க்குயிராகிப்பொருந்தி வாழ்வைப் பெற்றுக்கொண்டிருக்குமிப்பந்தங்களையுணர்ந்து நாசிமுனையினடுவிலே நாட்டிநேரிற் பார்க்குமிடத்து நமக்கெவருறவினர் எவர் பகைவர் இல்லையே! ஆசையால் நீயும்நானும் நிருபர்களுஞ் சகலவுயிரும்பிறந்து இறப்பதும் இறந்துபிறப்பதும் இல்லையென்றே கற்றுணர்ந்தோர் கனிந்துரைத்தனரென்று மாயவன்கூறினன். அர்ச்சுனன் இவ்வசனத்தைக்கேட்டு சுவாமி ஒருவரும் இறக்கமாட்டாரென்றால் பார்த்தவர்களை மறுபடியும் பாராதிருக்கக்காரணமென்ன ஆர்நீங்கினவர்கள் ஆர்நீங்காதவர்கள் அதனுடைய நிச்சயத்தை அடியேற்குச் சொல்லவேண்டுமென்றனன். அதற்கு, ஸ்ரீகண்ணபிரான் சொல்லுகின்றனன். விஜயனே இவ்வுலகத்திற் பிறந்து இறக்கும்படியானது உடலுக்குற்ற விதியேயல்லது நித்தியமான நின்சொரூபமாகிய ஆன்மா இறந்து பிறக்கத்தக்கதில்லையென்று விளம்பினன் அதற்கு அர்ச்சுனன் கர்த்தனே என்சொரூபமென்பது அங்கம் இந்திரியமுதலாகிய இவைகளாயிருக்குமேயல்லது நானென்பது வேறுபிரிந்திருக்ககாணவில்லையே இவ்விடத்தில் நான்வேறாயில்லையேயென்று கேட்டவனெவனோ அவனும்அவனால் அறியப்படாதவனும் நீயாயிருக்கின்றனை யென்று கோபாலன் சொல்லிமுடித்தனன். அதை அர்ச்சுனன்கேட்டு நல்லது ஐயனே தேகம் பிறந்திறக்குமானால் அதைச்சேர்ந்த அறிவனென்பது எங்கேயென்று விஜயன்கேட்டனன். துக்கமாகிய கருமவினைத்தொடர்ச்சிப்பொருளாவனென்று இறைவன் சொல்லிமுடித்தனன். தேகோற்பத்தியா முன்னமே கருமச்செயல் எப்படிவரும்வகையென்று காவலன்வினவினன். வித்துள்ளொடுக்க மரமென்றும் மரத்துள்ளொடுக்கம் வித்தென்றுச்சொல்லும்வகையாமென்று கண்ணன்பேசினன். நல்லது கண்ணபிரானே தேகமும் ஆன்மாவும் வேறுவென்று விசயன்வினவினன். தேகமே விளைந்தது அத்தேகமே வினைக்கருமத்துக்குரியதன்றி ஆன்மாவுக்கு நிமித்தமேயில்லையென்று ஆண்டவன்சொல்லினன். தேவரீருடையவாக்கியப்படி உடல் கருமத்தைச்செய்வதால் அதனால் வரும்பயனையாரனுபவிப்பதென்று அர்ச்சுனன்கேட்டனன். எவற்றினாகியபயனும் உடற்கல்லது உயிர்க்கில்லையென்று உத்தமனுரைத்தனன். அதைக்கேட்டு சுவாமி உடலே வினைப்போகத்திற்குரியது என்றீர்! அவ்வுடல் எல்லாவற்றையுஞ்செய்து இக்கருமபூமியில்மாய்ந்து வீழ்ந்துபோக சீவான்மா நடுநடுங்கி சுவர்க்க நகரத்தை அனுபவிக்கவேண்டிய காரணமென்ன சொல்லுமென்று காவலன்கேட்டனன். அதற்கு அடியளந்தான் அர்ச்சுனா உலகத்தில் தனுகரண புவனபோகச்செய்திகளைத் தன்தென்று சார்ந்திருந்ததன்மைபோல் நரகசுவர்க்க அநுபவமென்று சொல்லுவது மாத்திரமே

யல்லது ஆன்மாவுக்கு நரக சுவர்க்க அனுபவமில்லை உண்டென்று பேசுவது வீணேரோபிதமென்றுவிளம்பினன், இத்தன்மையாகிய உடற்செயலையெல்லாம் ஆன்மாவின்மேலேறும்படியாகிய மயக்கமென்னவென்று மாதவி கொழுநன் கேட்டனன், முற்றுணரும்படியாகிய நல்லறிவில்லா மோகத்தினாலேறியதென்றே கண்ணபிரான் சொல்லினன். அவ்வறிவானது தேகத்திற்கோ அல்லது ஆன்மாவுக்கோவென்று அர்ச்சுனன்கேட்டனன் நீர் கேட்டகருத்தைப் பிரித்துச்சொல்லுவோமாகில் உடல் அசத்து உயிரானது சத்து இவ்வுயிரானது பிரமப்பொருளென்று உலகளந்தோ னுரைத்தனன். அதை அர்ச்சுனன்கேட்டு ஐயா தேகம் அசத்தாகில் இச்செயலெப்படிவருமென்ன? ஏகமாகியஜோதி உள்ளிருத்தலால் காந்தம் ஊசியையிழுப்பதுபோல் இழுத்ததென் றிறைவன்கூறினன் தேவரீர் சொன்ன செயல் உடலுக்கானால் சுகதுக்கமாருக்கென்றனர், உடம்பினுக்கென்று கோவிந்தன்சொல்லினன், சேதனனாகிய ஆன்மாவைச் சேராத சுகதுக்கம் அசேதனமாகிய தேகத்தைச் சாருமாவென் றருச்சுனன் கூறினன். புலன் பொறி பூதம் உயிர் அந்தக்கரணமென்னும் தூலசூக்குமம் ஈருடலாகிய மனத்துக்கே யின்பதுன்பமென் றிறைவனுரைத்தனன், தூலசூக்குமவிருவகையுடலுக்கு ஏதுவென்னவென்று விசயன்கேட்டனன், ஜன்மாந்திரக்காரணத்தால் தூலசூக்குமகாரணமென்று மூன்றுடலாமென் றிறைவன் சொல்லினன். நல்லது மனமறியுந் துக்கசுகத்தை அவாவென்றுரைத்தீர், இம்மனம சேதனமா அசேதனமாஎன விசயன்வினவினன். இம்மனத்தில் ஆன்மாவானது பேதமறவிருக்குந்தன்மைபோற்றோன்றலால் சுகதுக்கத்தைச் சேதனமாகிய மனமே பெறுமென இறைவன்கூறினன், இம்மனம்பெற்ற சுகதுக்கம் இதனிடத்திலில்லாமல் ஆன்மாவை மருவவேண்டியதென்னவென விசயன் வினவினன். வெப்பமுந்தட்பமும் மேல்வைத்த பாண்டத்திலுள்ளிருக்குஞ் சலத்திற்றாங்குவதைப்போலென்று ஸ்ரீகண்ணபிரானுரைத்தனன். சித்தாகிய பிராணனும் சடமாகிய சித்தமும் எப்படி ஒற்றித்திருப்பதென அருச்சுனன் கேட்டனன், இருப்புநெருப்பும் பொருந்தியதைப்போல் விவேகத்தைக்கண்டு பண்புகொண்டு ஆன்மாவும்மனமும் அனுகூலித்ததெனக் கண்ணன் கூறினன். இப்படிகூடிய ஆன்மாவும் மனமும் எப்போதானாலும்பிரியுமோவென்று அருச்சுனன்கேட்டனன் செம்பானது நிறங்காட்டிக்களிம்பேறுவதுபோலும் அடுத்ததைக்காட்டும் பளிங்குபோலும் கணத்திற்குக்கணம் பிரிந்து மறைந்துகலந்து கொண்டிருக்கத்தக்கது; மேலும் படிகம்போலொத்த சொரூபம் ஆசாமலின் மனோபந்தத்தால் வந்திருக்கின்றமையால் முத்தியில்லையென்று முகுந்தனுரைத்தனன். பந்தமாவதுஎது முத்தியாவதெதுவென்று பார்த்தன்கேட்டனன், தேகாபிமானமென்பது பந்தம், அப்பந்தமறுப்பதே முத்தியென்பதென்று பரமனுரைத்தனன். அபிமானம்வருவதும் அதையொழிப்பதும் எவ்வகையென்று விசயன்விளம்பினன். அஞ்ஞானத்தால் அபிமானம்வரும் மெய்ஞ்ஞானந்தோன்றுமாயின் எப்போது மாநந்தமுண்டாமென்று கண்ணன்சொல்லினன். அப்படி விளங்குவதற்கு வேதாந்த சாஸ்திரங்களினாலும் ஆசாரியராலும் ஞானம் பெற்றகாலத்திலும் பொல்லாங்காகிய துக்கசுகந்தீராமலிருப்பது யாதுகாரண

மென்று அருச்சுனன்கேட்டனன். சாஸ்திரங்களினாலும் குருபதேசத்தினாலும் வந்த பரோக்ஷஞானத்தாற்பற்றறமாட்டாது, அநுபவமாகிய அபரோக்ஷஞானத்தாற்பற்றறவேண்டும், அதெப்படியெனின் விளக்கென்று வாக்கினாற்சொன்னாவிருள் நீங்குமோ விளக்கேற்றிவந்தா லிருள் நீங்குமோ சொல்லு அருச்சுனா கேள்வியினாலும் மனத்தாலும் யோகாப்பியாசத்தினாலும் பிரமாநுபவத்தினாலும் நீங்கவேண்டுமேயொழிய மற்றவகைகளால் நீங்காதென்று திருமாலுரைத்தனன். அஞ்ஞானத்தைத்தாங்கும்வகையெப்படியென்ன இந்திரஜாலம்போற்ற ந்திரமா, இவ்வுலகத்தைக் கிளிஞ்சிலிற்றோன்றும்வெள்ளியின் கிரணம்போலும் கனவுபோலும்என்னிடத்திற் காட்டியிருக்கின்றேன். அது சத்தியமன்றென்று கண்ணபிரான் உரைத்தனன். உலகத்தை கனவுபோலென்றீர், பிரத்தியக்ஷமாய் விளங்குகின்றதேயென்று அருச்சுனன் சொல்லினன். அஞ்ஞானமிருக்கும்வரையிலுமிப்படியேதோன்றும்; மெய்ஞ்ஞானம்பிறந்தால் உலகமென்னுமாயைவிட்டோடிப் போய்விடும்; அல்லாமலும் பிரமனென்றும் ஈசனென்றும் விஷ்ணுவென்றும் பலகோடி சீவனென்றும் சொல்மயக்கமாகச் சொல்லுவதல்லன் ஆன்மாவொருவனே, இதையுன்னிப்பார்க்குமிடத்து உலகம்பொய்யாகும், அவாவினால் உன்னிப் பாராதிருக்குமளவும் உலகம்மெய்யாகும், ஆசையற்றுப் பார்க்கும்போது உலகம்பொய்யாகும். இதுநிற்க, ஆகாயத்திற்றோன்றிய சூரியன் சலத்திலாடுந் தன்மைபோலும் ஓர்கடலில் பல குமிழியுதித்ததுபோலும் ஒன்றாய்நிறைந்து சீவபேதம் பலவாகவிரிந்து விளங்குவது ஆன்மாவாகையால் சுழுத்தியவத்தையை நோக்குவையானாற் றோன்றுமென்றுசொல்லினன். இவ்வுலகம் பிரமமயமென்றறிந்தாலும் ஐம்பூதமயமாய்த்தோற்றிப் போராடுகின்றதே, அறிவும் அறிபவனும் அறிபடுபொருளுமென மூன்றாகிப் பேதமாகுமே! இப்பேதங்களை நான் காணாதிருக்கத் திருவருளுண்டோ கண்ணனேயென்று காண்டீபன்கேட்டனன். துரியயோகத்தால் மனம் இலயப்படுமாகில் மூவகைவிகற்பமும்அழிந்துபோம்; மேலும் சத்துச்சித்தானந்தமென்னு மூன்றும் தனுவாதிகளுடன் பொருந்தி சகமாகி இம்மூன்றும் பிரமமாயிருக்கையிற்றோன்றாது ஸ்மரிக்கில் ஞானத்தால் ஆன்மாவையறிந்துகொள்ளலாமென்று கோபாலன்கூறினன். ஆனால் ஆன்மா எனக்குத்தரிசனமாமோவென்று தனஞ்செயன் கேட்டனன். முதன்மையாகிய விஞ்ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கினால் சிந்தையுள் சுயம்பிரகாசமாய் ஆன்மாவிளங்குமென்று கண்ணன் விளக்கினன். இன்பமாகிய மோக்ஷசுகமென்பதெப்படி என்று விசயன்கேட்டனன். அநுபவத்தால் விஷயாநந்தமறிந்துகொள்ளக்கடவை, மேலும் மனோலயமுடைய சனகாதிமுதலிய சீவன்முத்தர்களிருக்கின்றனர் மைத்துனனேயென்று கண்ணன் சொல்லினன். சீவன்முத்தியடைந்தோர்களின் செயலும் குணம் சொல்லுமையாலாகிய நல்லுரையும்சொல்லுமென்று சுவேதவாகனன் வினவினன். உற்பத்தி, வளர்த்தல், பருத்தல், குறைத்தல் முதலியயாவும் தாமரையிலை நீர்போல் ஒத்திருப்பவர்கள் சீவன்முத்தர்கள், தயிர்கடைந்தெடுத்தவெண்ணெய் மோரிற்கிடந்தாலுங் கலங்காதிருக்குந்தன்மைபோல மயங்காதிருப்பார்களென்றுசொல்லி மேலுஞ்சொல்லுகின்றனன். விசயனே தேவர்க

ளாலும் முனிவர்களாலும் மற்ற யாவர்களாலும் அறியப்படாத ஆன்மாவென்னும்பொருளை இப்போது நீ யறிந்துகொள்ளும்படியாக நான் சொல்லிக்கொண்டுவந்தேன். யாவருக்கும் பஞ்சபூதங்களினால் உண்டாகியதுஇத்தேகம்; அத்தேகத்தினுள்ளே சிவமொன்றுமே ஞானியாகநின்று சகல நன்மை தீமைகளையும் நடத்திவருகின்றது. சூத்திரதாரியாகிய அச்சிவமென்னும் ஒருபொருளாலேயே நடாத்துமுண்மையை நீஉற்றுப்பார்த்தறி, அன்றியும்வருவதை விலக்கவும்வாராததைவருவிக்கவும் எப்படிப்பட்டவர்களாலுமாகாது,ஆகையால்போர்புரியுஞ்செய்கையை நீ மேற்கொண்டுவருந்தி உன்னுடையதென்னும்பற்றினால் வெவ்வியவினைக்குள் அகப்பட்டு வெந்துபோகாதை, நல்வினை தீவினை இரண்டு மற்ற சிவத்தின் திருவிளையாடலென்று அதனுக்கர்ப்பிதம்பண்ணிப்போட்டு நீ பரிசுத்தனாக மகிழ்ந்திரு. மேலும் ஆங்காலம் சாங்காலமென்று சொல்லுங்காலங்களும் இடமும் சொல்லத்தக்க கருவியும் சமயமும் உழக்கருவியாகியநிலமும் எவரெவர்களுக்கு எப்படி அமைந்திருக்கின்றதோ இவ்வகையே நேரிடுவதல்லாமல் வேறுநடவாது.எவ்வளவுஆற்றலுடையர்களா யிருந்தபோதிலும்தாங்களெண்ணியபடி ஒருவனைமுடிக்கும்படியான செயலுமுண்டோ, அரன்வரம் பெற்ற நரனே? நீ வீணாகிய மயக்கத்தில் வீழாதை, கடைப்பிடி கருமமொன்று சொல்லுகிறேன், அதாவது ஆயுள்முடியாமல் அற்பவுடலைத்தாங்கிய கொதுகு முதலாகிய உயிர்களும் மடியமாட்டா. இதனுடைய உண்மை இப்படியிருக்க முன்னே சகலஅரசரும் நெருங்கிய சபையில் நீங்களைவரும் கையெடுத்து நீட்டி அவர்களைக்காட்டி ஆண்மையுடன்சொல்லிய கட்டுரைச்சபதம் தப்பிப் போகும்படிவிட்டு காட்டுக்குப் போவோமென்று திரும்பிவிடுவீரானால் இம்மைப்பயன் மறுமைப்பயனென்னும் மூன்றுபயன்களையுமிழந்து யாரும் பழிக்கும்படி ஏழ்ப்பட்டு கொடிய நரகிற்குளித்து மூழ்கிக் கண்ணீர்சோரவருந்தி வெப்பமாகியபிணியாலுழன்று சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்றுணரக்கப்படும் ஐம்புலனுகர்ச்சியுங்கெட்டுப்போவீரல்லது பயன்பெரும்படியான காரியமொன்றுமில்லையேஆகையால் போர்முகத்தில்வந்து போர்செய்யாமற்போவேனென்பதும் புருஷதீரரென்று கூறியசபதங்களை நிறைவேற்றும்படியாகச் சத்துருக்களைக்கொல்வதும் தருமங்களெல்லாவற்றிலும்சிறந்த தர்மம், அப்படியே முடித்தால் உங்களுக்குப் பழிபாவமுதலிய குற்றங்களில்லை, என்னுடைய மொழியை இருக்குவேதமாக நம்பு; அருச்சுனா! பகையாளியை வென்று நீ வெற்றிபெருவாயாகில் இவ்வுலகமெல்லாவற்றிற்கும் ஏகசக்ராதிபதியா யிருப்பாய்,ஒருவேளையிறந்துபோவையானால் தேவர்கள்முதலியவரும்அரம்பையரும் எதிர்கொண்டழைக்கும்படி போய் சுவர்க்கலோகத்தைத் துரைத்தனஞ்செய்வாய்,சித்திபதவியாகியமோக்ஷமுமுண்டாம், வீபற்சென்னும்பெயரையுடைய வேந்தனேயென்று கேசவன் இத்தன்மையாகிய உறுதிவசனங்களைச்சொல்லினன். இவற்றையெல்லாங்கேட்ட வாசவன்மகனாகிய விசயன் கேசவன்மொழியை விசுவாசநேசத்துடன் மகிழ்ந்து மனத்துட்கொண்டு மயக்கமகன்ற சிந்தைதெளிந்து திருமாலைநோக்கி வண்டுகள்மொய்க்கு மதுநிறைந்தவாசத்துளவமாலையையணிந்த வானவர் கோமானே! மலர்மகள் சீமானே? பூதங்கள்தோ

றும் பொருந்தியிருக்கின்றவன் சிவனென்று சொன்னீர், அச்சிவன் எவ்விடத்திலிருக்கின்றனன் ? அவன்யார் ? அவ்வுண்மையை ஏழையடியேனுக்கினி தெரிவிக்கவேண்டுமென்று விசயன்கேட்கப் பரந்தாமன் சொல்லுகின்றனன். பார்த்தனே சத்தியலோகத்திற் றாமரைமேலிருந்து மன்னுயிர்களைச்சிருட்டிக்கும் பிரமனும் வைகுந்தத்திலிருந்துகாக்குமாயோனும் தேவர்முதலிய யாவரும் வணங்கக் கயிலாயத்தில் உமாமகேஸ்வரியுடனிருந்து சங்காரத்தொழில் செய்யும் வெள்ளைவிடையேறிய விமலனும் வாசநிறைந்த கடப்பமலர்மாலைபுனைந்த சண்முகனும், மதம்பொருந்திய அயிராவதத்தலைவனாகிய தேவேந்திரனும், இவ்வுலகினினிறைந்த சராசரப்பொருள்களைத் தேர்ந்துணர்ந்து அவற்றிற் சஞ்சரித்துக்கொண்டிருப்பவனும், வேதாகமபுராண முதலியவற்றையும் இவ்வுலகில் விரித்துரைத்தருளிய வேதவியாசனும், இரவிற்சந்திரனும், பகலிற் சூரியனும், உலகிற்சிறந்த பூமியும், மாதவரிற்சிறந்த நாரத மகாமுனிவனும், திக்குப்பாலரும், நவக்கிரகமும், கற்பகத்தருவும், மரங்களில் அரசும், மனிதர்களில் அரசனும், பசுக்களிற் காமதேனுவும், நானேஎன்றறிந்துகொள். இதல்லாமலும் எத்தேயங்களில் எத்திறங்களையுடையவர்எச்சாதியர்எக்காலத்தில் எவ்வுருவமாகப் பாவனைசெய்து என்னைத்துதித்து வணங்குவரோ யானும் அத்தேயங்களில் அத்திறங்களையுடைய அச்சாதியாருக்கு அக்காலத்தில் அவ்வுருவத்துடன், அவரவர்க்குக் கட்புலனாகின்று அவர்கட்குவேண்டிய மனோபீஷ்டங்களையெல்லாங்கொடுத்துக்காப்பன். இதுநிற்க, பிரமவிஷ்ணுருத்திரனாகிய மூவரும் சிருஷ்டி திதிசங்காரமென்னும் தொழில்மூன்றும் சாத்துவிகம் இராசதம் தாமதமென்னுங்குணமூன்றுமுடைத்தாயும் அவைகளுக்குள்ளாயும்அவைகளுக்குப்புறப்பாயும் வேதமுடிவென்னும் உபநிடதத்தில் முத்திக்குவித்தாகியு முதன்மைபெறநின்ற பிரமப்பொருளாயிருக்கின்றவன் யான், நீ உண்மையாக உட்கொள் உத்தமனாகிய பார்த்தனே ? என்று கரிய திருமேனியையுடைய கள்ளமாமாயப்பிரான்சொல்லவே காண்டீபன்அற்புதமடைந்து ஐயனே, வசுதேவருக்குந் தேவகிதேவிக்கும் மகவாகப்பிறந்து ஆயர்பாடியில் வளர்ந்து வெண்ணெய் பால் முதலியனவுண்டு எங்களுக்கு மைத்துனராகி எங்களொப்பாயின்பத்துன்பங்களையனுபவித்தும் உலகில்அழுவாருடன் அழுதும்தொழுவாருடன்தொழுதும் நகைப்பாருடன் நகைத்தும் இப்படியெல்லாம் விளையாடிக்கொண்டிருந்துவிட்டநீர் எல்லாம் நான்தான் என்னைவிடப் பிரவஞ்ச மில்லையென்றுசொல்லுவது மிகஅதிசயத்தை விளைக்கின்றது, எனக்காகச் சொல்லிய வார்த்தையோ அல்லது உண்மையாகிய காரியந்தானோ அப்படி உண்மையாயிருக்குமானால் யாவரும் யாவும் தானாகியிருக்குந் தேவரீருடைய திருவுருவத்தை அடியேன்கண்டுதரிசித்துய்யும்படி தெரிவிக்கவேண்டும் தெய்வநாயகனே யென்று கேசவற்சேரழன்கேட்டனன். அப்படியே தெரிசித்துக்கொள்ளென்று ஞானக்கண்கொடுத்து அருச்சுனனுடைய முகத்தைத்தடவி, அப்போதே உலகத்தை ஓரடியாயளந்த உருவம்போலுயர்ந்து பாதலம் வரையிலும்தாழ்ந்து மேலிருக்கும் அகண்டாகண்டப் பேரண்டச் சுவர்வரையிலும் மேலுங்கீழுமாகத்துணிந்துநெருங்கும்படி சுயம்பிரகாச ஒளியாய் கண்ணபிரான்விராட்டுருவ

மாகின்றனன். அத்திருக்கோலத்தைத் தன் திவ்வியஞான விழியினால் விசயன்கண்டு வாய்பேசாமல் மௌனியாய் விற்பனமுடைய அற்புதகுணசீலனாய் மயிர்க்குச்செறிய ஆனந்த சமுத்திரத்தில்மூழ்கி தன்னைத்தானே மறந்து அசைவற்று நின்றுவிட்டனன். அப்பால்தேவர்களும் நான்குவேத பாராயணராகிய முனிவர்களும்அவ்விராட்டினுடைய திருவுருவத்தில் ஒருபக்கமாயிருந்து மறைமாரியும் மலர்மாரியும் வாரிவாரிப் பொழிந்தனர். இவ்விருதிறப் படைகளின் பகுதியோர் முன்னிருந்தவாறே கிருஷ்ணார்ச்சுனரைப் பார்த்துக்கொண்டிருந்தனரேயன்றி, வேறொன்றுங்கண்டதில்லை, இப்பால் தன்னிலையெல்லாம் அர்ச்சுனன் செவ்வையாய் அறிந்துகொண்ட தன்மையைக்கண்டு தான்கொண்ட விராட்டுருவத்தைமாற்றி முன்னின்ற நிலைப்படியே சாரதியாயிருந்து வாசவியினுடைய தெளிவாகிய பிரகாசம்பெற்ற முகத்தைப்பார்த்து, அர்ச்சுனா முற்றத்துறந்த முனிவர்களும் அறியப்படாத என்னிலையை நீபறிந்து கொண்டனையே உன்னைப்போல் எவருணர்ந்தவர்; மலையினுயரம் மலைக்குத்தெரியாதென்பதுபோல் என்னிலையெனக்குத் தெரியவில்லை, ஆகையால் நீ கண்டு களித்த தோற்றமாகிய எல்லாவற்றையும் நானறியும்படி சொல் என்று முகுந்தன் கேட்க, நரன்சொல்லுகின்றனன். சுவாமி! பிரமாண்ட கோளகையைக் கிழித்து மேற்பட்டுப் பேரொளியாகத்தோன்றி, சிரம், கரம், உரம், கால், தோள், இடை, தொடையென்பது ஒன்றுந் தெரியாமல் உலகமெல்லாஞ் சலமயமாயுள்ளது போலிருந்த உருவத்தை நானெப்படி வகுத்துச் சொல்வேனென்று இரண்டு பாதங்களையும் தன்னிருகரத்தாற்றழுவி முடித்தலையைத் திருவடிக்கடியிற்சாய்த்து இருகண்களும் ஆற்றினீரினாற்றே போற்சுரந்து பெருக்கெடுத்தோடத் தேகநடுங்க மொழிகுழறும்படி நாநடுங்கத்தான் கண்டகாட்சியைத் தாழ்ச்சியில்லாமற் சொல்லத்துணிந்து என்னாண்டவனே, முற்றத்துறந்தமுனிவர்கள்சூழ்ந்து வணங்கவிருந்த பிரமனைச் சரஸ்வதி முதலியவர்களுடன் உன் தேகத்திலிருக்கக்கண்டேன். சங்கு, சக்கரம், கதை, கட்கம், கோதண்டமென்னும் பஞ்சாயுதங்களுடன் திருமகளும்பொருந்த கவுஸ்துவாபரணமும் துளவமாலையுடன் பரவாசுதேவனை உன்னுடலில் ஒருபுறத்தில் மருவக்கண்டேன், குளிர்ந்த பிறையணிந்த உருத்திரமூர்த்தியை நாராயணியாகிய நாயகியுடன் தேவகணம் பூதகணங்கள்சூழத் தேவர்திருமேனியிற் பொருந்தி யிருக்கக்கண்டேன், பிரகாசமுடைய வேலேந்திய பெருமானாகிய சண்முகக் கடவுளை வள்ளி தெய்வயானையுடன் தன்னகத்தில் இன்புறமர்ந்திருந்த இஷ்டமாகிய இடமுங்கண்டேன், முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிவரும் இந்திரனும் இந்திராணியுடன் தேவரீருடைய திருவுருவிற் றிகழக் கண்டேன், நான்குவேதம் உபநிடதம் வியாகரணம்முதலிய ஆறுசாஸ்திரம் பதினெண்புராணம் ஆகமமுதலாகிய எல்லாவற்றையுங் கண்ணிற்கண்டேன், பகைவராயிருந்தழிந்து மடியும் அரக்கர்முதலிய அசுரர்களையுங் கண்டேன், முத்தொழிலும் முக்குணமும் மூவுருவும் முக்காலமும் வாரம் திதி மதிவருடமுதலியனவும் "அவைகளின் தொழிற்குணங்களுங் கண்டேன், இதல்லாமலும் இன்னொரு அதிசயமுங்கண்டேன். நான்கண்டதென்னவெனின், நாகக்

கொடியோனுகிய துரியோதனன் முதலியயாவரையும், அனேகம் அக்குரோணி சேனைகளேயும் பாண்டவர்களுக்குச் சகாயமாயும் படைத்துணைவந்த மன்னவர் முதலியோரையுஞ் பெருஞ்சேனைகளேயும் தேவரீருடைய திருவாயால் விழுங்கக்கண்டேன். இவ்வளவு கோடியோசனைகளேயும், எவ்வேழுகடலுடனே பெரும்புறக் கடலேயும் வளைத்துக் கொண்டிருக்கும் அனேகம்கோடி கரங்களும் அனேகம்கோடி சிரங்களும் அனேகம்கோடி கண்களும் அனந்தம்கோடி கால்களும் அனேகம்கோடி செய்கைகளும் அனேகம்கோடி திருமுகமண்டலமும் பிரகாசிக்கக்கண்டேன், தேவரீருடைய பூரணவுருவத்தைப் பார்க்க அநேகங்கோடி கண்களைப்பெறுமற்போனேனே, கைகூப்பிவணங்குதற்குகரங்களனந்தம் பெறுமற்போனேனே தேவரீருடைய திருநாமங்களைத் துதிப்பதற்கு அனேகமாயிரம நாவினைப் படைக்காமற்போனேனே. இனிநான் சொல்லத்தக்க தொன்றில்லேயேயென்றனன். அப்படிசொல்லிய அருச்சுனனை அணைத்துக் கிருபையளித்து நீபிழைக்கும்படி இவ்விடத்திற் கண்ணுறக்கண்ட அதிசயம் எல்லாவற்றையும் எவர்களிடத்திலுஞ் சொல்லவேண்டாம், கடைசியில் தருமராசன்முதலிய நீங்களேவரும் பிழைத்திருக்கப் போபவர்கள்; மற்றவர்களெல்லாரும் அழிந்துபோபவர்கள், இதை உன்மனத்திலுறுதியாக வைத்துக்கொள், அறியாமையாகிய இருளைநீக்கி விட்டு மேலாகிய வல்லமையுடைய விஜயனே, நாமிருவரும் இவ்வுலகிலுள்ள எல்லாரையும் கும்புகூட்டி மடிப்பதற்கே பிறந்திருக்கின்றோம், நீவேறுக எண்ணிக் கலங்குவையானுல் நாம்வந்த காரியந் தாறுமாருகும், ஆகையால் எந்தவேலேயெப்படியிருந்தாலும் நாம்வந்த வேலேயைமுடித்துச் சுகந்தமாலேயைத் தரித்து வெற்றி பெறும்படியான வகையைத் தேடிக்கொள்ளவேண்டும்; பின்னும் உனக்கு மயக்கமிருக்குமானுல் இன்னமும் சொல்லுகின்றேன். எல்லாவிடத்தும் அவ்விடத்திலிருக்கிற எல்லாப் பொருள்களும் யாவும் நாமாகி, வேதமும் வேதாந்தமும் நாமாயிருக்கின்றோம், உன்னைவிட்டு நாம்பிரியமாட்டோம், என்னைவிட்டு நீ பிரியமாட்டாய், அப்படி யல்லவென்று பிரிந்தாலும் வேறுபடோம். அதெப்படியென்னில், முன்னொரு முறையில் நீயும்நானும் நரனும் நாராயணனுமாகப் பூபாரம் போக்கினேம், இன்னொருபிறப்பில் இராம லட்சுமணனென்னும் பெயர்பெற்று சத்தியமுதலிய தவவிரதங்களை நிலேநிறுத்தினேம். இப்பிறப்பில் கிருஷ்ணுர்ச்சுனராயிவ்விடத்தில் நிற்கின்றோம்; ஆகையால உன்னுடைய மயக்கத்தையும் இவர்கள்மேற்கொண்ட நேயத்தையும் ஆசாரியர்முதலியோரென்ற விசுவாசத்தையும் உன்னைமயக்கிய மோகமாகிய மோசத்தையும் விட்டொழியென்று தன்னிலேகளெல்லாவற்றையுஞ்சொல்லித் தத்துவந்தெளிவித்த சாயளவர்ணனுகிய பகவானுடைய திருவாய்மொழிகேட்டுத் தெளிவுற்றுத்தேறி அறம்பொருளின்பத்தை அனுபவித்து அப்பால் தேவரீருடைய திருவடியைச் சேருப்பதத்தின் பயனை அடியேனுக்குபதேசித்த ஆசிரியனேயென்று செந்தாமரைமலர் மணக்குந் திருவடிதொழுது அடியேன் விம்வகசூனியத்தாற் றெரியாமற் சொல்லிய சொற்குற்றம் பொருட்குற்றம் முதலிய தீங்குகளேதானுமுண்டாயிருக்குமானுல் அவைகளையெல்லாம் பொறுக்கவேண்டும் என்று அடிமலர் வணங்கி

போர்செய்வதற்கு வேண்டியகருவிகளெல்லா மேற்படுத்திக்கொண்டு இதோ யாவரையுமுடிப்பேனென்று வீரப்பிரதாபத்துட னின்றனனென்று வைசம்பா னர் சொல்லிக் கொண்டுவந்தனர். இச்செய்தியைக் கேட்ட ஜனமேஜயமகா ராசன் மிகுந்த ஞானமுடைத்தாய் குருமுகூர்த்தங் கொண்டெழுந்தருளிய வைசம்பாயனரென்னு மாதவரே! பகவற்கீதையை யுபதேசித்துக் கடவுள் நிச் சயங்காட்டியசெய்தி காண்டீபனாகிய விஜயராஜனுக்கும் விமலனுக்கும் நடந்த தேவரகசியமென்றுதிருவாய்மலர்ந்திருந்தீர்; இப்போது தேவரீர்தெரிந்து அடி யேனுக்குச் சொல்லும்வகையெப்படியென்றுகேட்க, மிகுந்த புன்னகையுடை யவராய்ப் புத்திசாலியாகிய புரவலனே ஸ்ரீவேதவியாசர் சகலதேவரகசியங்க ளுந்தெரியும்படியாகச் சஞ்சயனுக்கு அநுக்கிரகஞ் செய்தருளியவண்ணம் அச் சஞ்சயன் அறிந்து திரிதராஷ்டிரமகாராஜனுக்குச் சொன்னமையால் உமக்கு யாம் சொன்னோமென்று வைசம்பாயனர்சொல்ல மனக்களிகொண்ட ஜனமே ஜயமகாராசன் வபுஷ்டா தேவியுடன்மகிழ்ந்து வைசம்பாயனரைப் புகழ்ந்து பலமலர்களால் அருச்சனைபுரிந்துவாழ்த்தி மேல்நடந்த விர்த்தாந்தங்களையும் விளம்பவேண்டுமென்று வேண்டினர்; அதற்கு வைசம்பாயனர் அகமிக மகிழ்ந்து வீஷ்மபர்வத்தில் விளைந்த முதற்போர் சொல்லத்தொடங்கினர்.

பகவற்கீதைச்சருக்கம்

முற்றிற்று.

---

## முதல் நாள் யுத்தம்.

---

விருத்தம்.

எந்தவெந்த யோனிபேத மெங்குமெங்கு முள்ளன
அந்தவந்த யோனிதோறு மாவியான தன்மையைச்
சிந்தையின்க ணொருகரத்தி றிகழுமாறு தேவர்கோன்
மைந்தனுய்ந் திடப்புகன்ற வள்ளறாள் வணங்குவாம்.

நதிபதிவளைந்த பூமிக்கதிபதியாகிய நரபதியே, தருமபுத்திரன்முதலியதம்பி மார்களும் துரியோதனராஜன் முதலியதம்பிமார்களும், சேனைகணிறைந்து நிற்கும் யுத்தபூமிநடுவில் வந்துநின்று இருதளங்களையும்பார்த்து ஏக்கமுற்றிருக் கையில் வீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமாமுதலிய கைக்காரர்களெல் லாங் கடுங்கோபங்கொண்டு கையிலாயுதம் பிடித்துக் கண்சிவந்து தளகர்த்த ராகத் தூசிப்படையில் நின்றனர். அவர்களைப்பார்த்து அந்தோ எவ்வகை யில் இவர்கள்மேற் கையெடுப்பது இவர்களை எக்காலத்தில் வெல்லப்போகின் றோம் எப்படிவெல்லுவோமென்று துக்கமுடையவர்களாய்க் கண்ணபிரானிட டத்திற் சொல்லிப்பார்ப்போம்; அவர் இதற்குத்தகுந்த யுத்திசொல்வரென்று தேரைச் செலுத்திக்கொண்டுபோய் ஸ்ரீகிருஷ்ணபகவானும் அருச்சுனனுங்கல ந்து பேசிக்கொண்டிருக்குஞ் சமயத்திற்கண்டுகளிகொண்டு வணங்கிநின்றனர்

அப்போது மிகுந்த உபசாரத்துடனே தானும் வந்தனைசெய்து என்னகாரிய மாய்வந்தீர்கள் சொல்லுங்க ளென்றுகேட்க. நாங்களெண்ணிவந்த காரியம் இன்னதென்று தருமராஜன்சொல்லத் தயாநிதிகேட்டு சந்தோஷித்து நீங்கள் யோசித்துவந்தது நல்லகாரியம் இப்போது நமக்கென்னபயமா னேரே வீஷ்மத் துரோணாதிகளிடத்திற்சென்று ருசிவினிற் கண்டுபேசி அவரவர்களுடைய மனக்கருத்தை அறிந்துக் கொள்ளுவோம்; வாருங்களென்று அனந்தசயனன் சொல்ல நல்லதென்று பாண்டவரியாவரும் கண்ணபிரானும் துரியோதன னுடைய படையிற்புகுந்து சேனைகளுக்குச் சிரமாகிய சேனாதிபதியாகத் திரம் பெற்றுநிற்கின்ற வீஷ்மனைக்கண்டு தண்டனிட்டு ஆசீர்வாதங்கொண்டு சிந்தை வாடி முகம்வாடிநிற்கும் பாண்டவர்களைப்பார்த்துநீங்கள் இப்போது இவ்விடத் திற்கு வந்தகாரியமென்ன சொல்லுங்களென்று கேட்கக் கண்ணபிரான் சொல்லுகின்றனன். திரிதராஷ்டிரமகாராஜனுக்கும் பாண்டுமகாராஜனுக்கும் சொந்தமாகிய பெரியதந்தையாயும் பாண்டவர்களுக்குந் துரியோதனாதியர் களுக்கும் கேட்டைநீக்கும் பாட்டனாராயுமிருக்கும் வீஷ்மராகிய நீர் இருதிறப் புத்திரர்களையும் ஒருதிறப் புத்திரராகப்பார்த்துப் பக்ஷம்வைத்து நடத்து நடுவு நிலைமையைவிடுத்து துரியோதனன் பக்ஷத்திற்சேர்ந்து அவர்களுக்குச்சேனாதி பதியாய் முனைமுகத்தினின்று பாண்டவர்களைக்கொன்று துரியோதனனுக்குப் பட்டங்கட்டிவைக்கக் கங்கணங்கட்டிக்கொண்டுநிற்கின்றீர்; பாண்டவர்களிடத் திலிருக்கும் நியாயம் அநியாயம் பாவம்புண்ணியம் சத்தியம் அசத்தியம் எல் லாம் உமக்குநன்றாய்த் தெரிந்திருக்கப் பதினூன்றுவருடம் வனவாசஞ்செய்து கஷ்டப்பட்டு வந்திருக்கும் பாண்டவர்களிடத்து உண்மைக் குத்தாரயாகப் பக்ஷம்வையாமற்போவீரானால் ஐயா உங்களையெந்தக்காலத்தில் வெல்வது, இருக்கிறசேனைகள் முதலிய துரியோதனாதியர்களை எக்காலத்திற் கொல்வது, எக்காலத்தில் சபத நிறைவேற்றிக்கொள்வது, எக்காலத்தில் உங்களைவிட்டு நாட்டுப்பெண்விரித்த தலைமுடிக்கிறது, இக்காரியங்களை எவ்வளவும் எண்ணிப் பாராமல் எதிர்த்துப்போர்செய்யும்படி நீர் வந்தாலும் உம்முடனே யெதிர்த்துப் போர்செய்வதென்றும் உம்மை யெப்படிக் கொல்வதென்றும் பாண்டவர்கள் மெத்தவும் பயபக்தியாய் பக்ஷத்துடன் தாக்ஷண்யம் எண்ணிப் பார்க்கின்றார் கள்; நானெத்தனை சொன்னாலும் என்மேல் வைத்திருக்கும் அன்பினால் என் சொல்லையுந்தள்ளிதங்கள் வில்லையுந்தள்ளிவிசனப்படுகின்றார்கள்; அறியாதவர்க ளானாலும் சொந்தபந்தநீங்காம லுருகுகின்றனர். எல்லாமறிந்த பெரியோர் கள்முன்வந்து போர்புரியத் துணிவுகொண்டீர்களே ஐயா! இதற்கென்ன யுத்திசொல்லுகிறீர் வீஷ்மரே பாண்டவர்கள் மறுபடியும் வனத்திற்குப் போய் விடுகின்றோமென்றுமனஸ்தாபமடைந்துவருந்தினர். உம்மைக்கண்டுவார்த்தை யாடியபின் உத்தரம் சொல்லுகிறேனென்று அழைத்துவந்தேன், இதோவுமது பேரப்பிள்ளைகள்? அவர்களுக்கென்ன சொல்லவேண்டுமோ அதைச்சொல்லி யனுப்பென்று ஆதிபகவன்சொல்ல, இவ்வசனங்களை யெல்லாருங்கேட்டுப் புன் னகையுடையாராய் ஜகநாதனுகிய கள்ளமாமாயனே வதிஷ்டர்விர்க்கினால்பிரம ரிஷியாக வேண்டுமென்னும் வாக்கியம்போல் என்வாக்கினால் நாள்நியமித்துக்

கொள்வதற்காக இவ்வளவுதூரம் நடந்துவந்தீர்! நல்லபாக்கியம் இப்போது பாண்டவர் சத்தியவான்களென்பதற்குச் சந்தேகமேயில்லை, தருமம் அவர்களிடத்திலிருப்பதனால் எப்படியும்வெற்றிபெறுவார்கள், அதர்மம்அழியுமென்று யாவருஞ்சொல்லுவர்.

அவ்விவகாரம்அப்படியிருக்க எனக்கு இவ்விருதிறத்தவரும் பக்ஷமுடைய பேரப்பிள்ளைகளென்று ஒருதரமன்று பத்துத்தரமாகச் சொல்லமாட்டுவேன், ஆனால் துர்ச்சனர் சற்சனரென்றுயோசிக்கவேண்டாமாவென்று கேட்பீரானால் ஞாயமே, கைவிரல் கண்ணிற்பட்டால் விரலைக்கொய்தறிவாரா கெட்டவரானாலும் நல்லவரானாலும், நமதுபிள்ளைகளென்கிறவாற்சல்லியம்விட்டுப்போகுமா, மேலும் நான் இவ்விருதிறப் படைகளுக்குந் துணையாகாம லிருக்கவேண்டியதே, அப்படி யிராமல் துரியோதனனுக்குச் சேனாதிபதியா யிருப்பானேனென்றுகேட்டால் அதற்குக் காரணஞ்சொல்லுகின்றேன், எங்கள்சிறியதாயாகிய பரமளகந்தியின்பிள்ளை விசித்திரவீரியனுக்குக் கல்யாணஞ் செய்யவேண்டிக் காசிராஜனுடைய மூன்றுபெண்களைச் சுயம்வரத்திற் கவர்ந்துகொண்டு வந்து விவாகநடத்தியபோது மூத்தபெண்ணாகிய அம்பையென்பவள் சாலுவராஜனிடத்தில் இஷ்டம் வைத்ததாய்ச்சொல்லி என்னைவிட்டு நீங்கிப்போய் அவன்விலக்கிவிட்டனனென்று மறுபடியுமென்னிடத்தில்வந்து தம்பிக்குவிவாகம் பண்ணிக்கொள்ளுமென்று வேண்டிக் கொண்டனள். நானவளை மறுத்துவிட்டேன், அப்போது தன்னாலாகாத காரியத்தைப் பேததந்திரத்தாற் சாதிக்க வேண்டுமென்னும் யுத்தியைக்கொண்டு என்னாசிரியனாகிய ப்ரசுராமனிடத்திற்சென்று சரண்புகுந்து அவனையழைத்துக் கொண்டுவந்து பகையாகவிடுத்தனள்; அவரிளைத்துப் போய்விடவே இவளும் இளைத்துப்போய் அம்பிகையைக்குறித்துத் தவமிழைத்துப் பாஞ்சாலனுடைய பத்தினிகருப்பத்தில் என்னைக்கொல்லும் பகையாளியாகிய சிகண்டியாய்ப்பிறந்து பாண்டவர்களுக்குப் படைத்துணை வந்திருக்கின்றமையால், நான் அவள்நிற்கும்படைக்கு எதிர்ப்படையில் நிற்கும்படி நேரிட்டது ஐயனே, ஆகையால், இனிநான் மெத்தநாளிருக்கமாட்டேன், முதனாள்யுத்தமுதல் பத்துநாள்வரைக்கும்நடத்துவேன், அப்பத்தாநாள் எனக்குப் பகையாய்வந்து பிறந்திருக்கும் சிகண்டியென்னுந் தீர பராக்கிரமமுதிர்ந்த அம்பையென்பவளை எனக்கெதிரிற்கொண்டுவந்தால்,இச்சன்மத்தில் ஆணாயிருந்தபோதிலும் முற்சன்மத்தில் பெண்ணானமையால் நான் அவள்மேற் கையெடுக்கமாட்டேன், அக்காலத்தில் என் அன்பாகியபோனாகிய அர்ச்சுனன் பாணத்தால் மூர்ச்சையடைந்து விழுவேன். அப்பால், சரசயனத்திலிருந்து தேவரீருடைய திருவிளையாட்டை யெல்லாம்பார்த்து இராச தருமங்களை நிலைநிறுத்தி கண்ணபிரானே நின்னுடைய செந்தாமரைமலர்போன்ற திருவடியடைவேனென்று சொல்லிய வீஷ்மர்மொழியைக் கண்ணபிரானும் பாண்டவர்களுங்கேட்டு சபதநிறைவேறிப்பட்டாபிஷேகம்பெற்றவரைப்போல் மகிழ்ந்துவணங்கி விடைபெற்றுக்கொண்டு துரோணரிடம்சென்று அவரைக் கண்டு தெண்டனிட்டுத் தொண்டரைப்போல் நிற்கவும் அவர்களை ஆசீர்வதித்து என் பாண்டவர்களே க்ஷேமமாயிருக்கின்றீர்களா! இப்போது இவ்விட

த்தில் என்னைநாடி வந்ததற்குக் காரணமென்ன சொல்லுங்களென்று துரோணர்கேட்க, ஸ்ரீகண்ணபிரான் சொல்லுகின்றனன். ஐயா, துரோணரே, நாடு நகர முதலியவற்றையு மிழந்து நாணமேலிட்டுக் கானகந்திரிந்து நலிந்துவந்த பாண்டவர்களிடத்தில் நல்ல அருளுண்டாமல் துரியோதனராசனிடத்தில், அன்புகொண்டு பாண்டவர்கள்மேல் யுத்தஞ்செய்யும்படி பகைமேற்கொண்டு வந்திருக்கின்றீரே பரமார்த்திகராகிய நீர் உபயவாதிகளுக்கும் ஆசிரியராயிருந்தும் இவ்விடத்தில் நடந்திருக்கும் நியாயம் அநியாயங்களெல்லாந் தெரிந்திருந்தும் பாவபுண்ணிய மெண்ணிப்பாராமல் அப்பட்சத்தினின்றமையால் தனுர்வேதபாண்டித்யமுடைய உம்மைவெல்ல யாவராலுமுடியாதே அப்படியிருந்தால், இப்பாண்டவர்கள் பிழைப்பதெப்படி அவர்கள்கூறிய சபதமெவ்விதத்தில் நிறைவேறும் குணமேருவாகிய குருவே, இதற்கு நடக்கவேண்டிய காரியங்களைத் தேவரீரே கட்டளையிடவேண்டுமென்று கேட்கவந்திருக்கின்றனர். அவர்கட்கு நீர் சொல்லவேண்டியதைச் சொல்லியனுப்புமென்று உலகமுண்டோனுரைத்தனன். அம்மொழியைக்கேட்டுத் துரோணர் அகமகிழ்ந்துசொல்லுகின்றனர். ஐயா, அரிவாசுதேவனே என்போன்றவீரர்கள் எத்தனையோகோடிபேர் சேர்ந்துவந்தாலும் இசையைக்கொண்ட விசயனிடத்தில் பசபசவென்று விழித்து வசையைப்பெறுவார்களல்லது திசைகள்மகிழ வெற்றிபெறவேமாட்டார்கள். ஒருவர்செயலாலொன்றுநடக்கமாட்டாது, உலகளந்தோனாகிய உன் செயலன்றி வேறில்லை உத்தமனே, சத்தியமே வெற்றியைத்தரும் இக்குருகுலகுமாரர்கள் இருதிறத்தவரும் என்கண்மணிபோன்றவர்கள் எனக்கு இவர்களென்றும் அவர்களென்றும் பேதமேயில்லை. இப்படியிருக்க, நான் துரியோதனனிடத்திற் சேர்ந்திருப்பானேனென்று தேவரீர் கேட்டால் அதற்குக் காரணஞ்சொல்லுகின்றேன்; காசாம்புவண்ணனே என்னை வெல்லும்படி துட்டத்துய்மனென்னும் புத்திரனைப்பெற்று வைத்துக்கொண்டிருக்கின்றான் பாஞ்சாலன், அத்துட்டத்துய்மனே பாண்டவர்களுக்கு மைத்துனனும் உபயசேனாபதியாயும் எதிர்கட்சியிலிருக்கின்றமையால் நான் இவ்விடத்தினிற்கும்படி நேரிட்டது, அப்படி நின்றபோதிலும் பதினைந்தாநாள் யுத்தம் நடந்துவருமத்தியானகாலத்தில், இம்மை மறுமைப்பயனிரண்டும்பெறவிருக்கின்ற தருமபுத்திரனுடைய வாக்கினால் அசுவத்தாமா அதமென்றுசொல்லக்கேட்பேனாகில் உடனே புத்திரசோபத்தினால் மெத்தவருந்திச் சமாசயோகத்திலிருந்து தாரணைசெய்து தனியனாவேன், அக்காலத்தில் உங்களுக்குப்பந்துவாய் வந்திருக்கின்ற துட்டத்துய்மன், தான்பிறந்திருக்குஞ் சத்துருத்தனத்தை நிறைவேற்றிக்கொள்ளுவன். சகலசந்தோஷ சாம்பிராச்சியங்களையுந் தாழ்ச்சியில்லாமற் பெற்று வாழ்வரென்று தன்காலநிர்ணயமுஞ்சொல்லி ஆசீர்வதித்தனுப்பினன். துரோணர் அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பாண்டவர்கள் தங்களுடையசேனைக்காட்டில்வந்துகலந்தனர். அப்பால் பாண்டவர்களும் ஸ்ரீகண்ணபிரானும் வந்துபேசிப்போயினரென்று துரியோதனன்கேள்விப்பட்டு வீஷ்மரையும் துரோணரையும்வணங்கி என்னசெய்தியென்றுகேட்டனன், அப்பா துரியோதனா, பின்னைவேறொன்றுமில்லை; பாண்டவர்கள்வந்து பரிதாபப்பட்டு

சகலவிவகாரமுந்தெரிந்த பெரியோர்களாகிய நீங்களே முனைமுகத்தில்வந்து நின்றால் நாங்களெப்படி பிழைப்போமென்று கேட்டனர், உலகத்தில் வாழ்வானைப்போல் சாவார், சாவானைப்போல் வாழ்வார் ஆகையால் எங்கள் பிராணனென்ன கல்லா இரும்பா ஒன்றுமில்லை பத்துப்பதினைந்துநாளையில் செத்துப்போகத்தக்கவர் நாங்கள் வெற்றிபெறுவோமென்பதெப்படி தெய்வசித்தமெப்படியோ அப்படி முடியுமென்று சொல்லியனுப்பினேனென்று சொல்லக்கேட்டு துஷ்டசதுஷ்டாள் நால்வரும் மற்ற யாவரும் பாண்டவர்களுடைய பெருமையுஞ்சிறுமையையுங் குறித்துப் பற்பலவகையாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்களிற் சிலபுத்திமான்கள் என்னயோசித்தனரென்றால், பாண்டுபுத்திரர்களுக்குமிஞ்சிய பலசாலிகளில்லை, அதுவுமன்றி ஆண்டவன்துணையுமிருக்கின்றது. இருந்தபோதிலும் பாட்டனார் ஆசிரியர் இவர்களெல்லாம் வேண்டியமுதியோராகையால்வந்துவணங்கித் தாங்களடங்கி அவர்களுடையஆசீர்வசனமும் யுத்தஞ்செய்வதற்கு உத்தரவும்பெற்றுக்கொண்டுபோகவந்தனரென்று பேசிக்கொண்டனர். இப்படியிருக்க; உபயவாதிகள் தளங்களிலிருந்துசகலவிதபேரோசையும் வீரப்பிரதாபக்கூச்சலும் வெளியுமேற்கொண்டு அட்டகாசஞ்செய்து வில்லைவளைத்து நாணேற்றி குணத்தொனிசெய்தனர் அந்த விற்குணத்தொனி குமுகுமுவென்று அட்டதிக்குகளுஞ் செவிடுபடும்படி முழங்கிய ஓசை யெப்படியிருந்ததெனின் பிரபஞ்சத்தவரே பாண்டவர்களும் துரியோதனனாதியர்களும் பதினெட்டக்குரோணி சேனைகளும் பதினெட்டுநாள் சண்டைசெய்வார்களென்று செய்திதெரிவிப்பதுபோலிருந்தது, மேலும் இக்குருக்ஷேத்திர நிறைந்தடங்கிய சேனைகளெல்லாந் திருமால்வயிற்றிற் பொருந்தியிருந்ததுபோலும் இருந்தது, இவ்வுலகைச்சுமக்கும் பூமிதேவியோ, நான் பாரம்பொறுக்கமாட்டேனென்று முறையிட்டுக்கொண்டதற்காக, இவ்வுதவிசெய்தனன். எப்பொருட்கு முதல்வனாகிய இறைவன் இச்சேனைகளையெல்லாம் ஒருதலைப்பாரமாய் ஓரிடத்திற்சேர்த்து என்கழுத்தையொடிக்கலாமாவென்று வருந்தவும் பாதலத்திலிருக்கும் ஆதிசேடன் ஆயிரம்பணாமகுடமும் விரித்துப்பரிக்கவும் சூரிய சந்திரர்முதலிய கோள்களெல்லாம் போவதற்கு வழியின்றி நாம் நட்சத்திரங்களாகிய நாள் குறையும்படியாயிற்றென்று நடுங்கவும் திக்குப்பாலர்முதலாகிய திசையானைகளொடுங்கவும், தேவர்முதலியயாவரும் ஏங்கவும், எட்டுக்குலவரைகள் எட்டுத்திக்கிலுந் தங்கள்தலையை முட்டுக்கொடுத்துத்தாங்கவும், கடல்பொங்கவும் பகைவர்கள் குடர்குலுங்கவும் புயங்கள்பூரிக்கச் சேனைகளாரவாரிக்க இருதிறப்படைதிரண்டு கடல்புரண்டுவந்ததுபோனின்ற சேனைகளைக்கண்டு, பாண்டவசேனாதிபதியாகிய சுவேதன் தங்களுடையஏழக்ரோணி சேனைகளும்பிரித்து வகைத்தரமேற்படுத்தி ஐந்துதலைநாகம்போல் யூகம்வகுத்துச் சகலவெற்றியும் தங்களுக்குவரும்படியாய் வீரமாகாளிமுதலிய வீரலட்சுமியும்பூசித்து வீரத்துடனெதிர்க்கவும், துரியோதனனுடைய பாட்டனாகிய சேனாதிபதி வீஷ்மர் தங்களுடைய சேனைகளைக் கருடயூகமாகக்கட்டித்தானும் நாசிப்படையில்வந்துநின்றனர். அச்சமயத்தில் துரியோதனனும் தருமபுத்திரனுமாகிய இவ்விருவரும் முனைமுகத்தில்வந்துநின்று ஒருவரையொருவர்

பார்த்து ஊழ்வினையைநினைத்து தங்கள் கரங்களிற்பிடித்திருக்குங்கொடியைத் தூக்கித்தாழ்த்தினர். அப்படித் தாழ்த்தியவுடனே பிராணாபிமானம் தேகாபிமானம்முதலியவிடுத்து இரண்டுகடலும் திரண்டுபுரண்டுவந்து கலந்தவாறுகலந்து தொந்தயுத்தஞ்செய்தனர்கள். இப்படையில் முரசக்கொடியும், அப்படையில் நாகக்கொடியும், படபடாக்காரங்களுடன் ஆகாயவீதி அதிரும்படி பறக்கவும், இருபடைகளிலும் பேரி பாங்கா முரசுமுதலிய வாத்தியங்கள் முழங்கவும், பிரமுகருடைய கரங்களிற்பிடித்திருக்கும் விற்றொனியும் வீரகண்டத்தொனியும் மேலாகி அதிர்க்கவும், பலபலவீரர்கள் சங்கத்தொனிகளொலிக்கவும், ஆயுதங்களிழையவும், எல்லாருடைய உள்ளங்கள் குழையவும், தேராளிகளுடன் தேராளிகள், வில்லாளிகளுடன் வில்லாளிகள், வேலாளுடன் வேலாட்கள், யானையோடு யானை, குதிரையுடன் குதிரை, வீரருடன் வீரர், வாளுடனே வாள், கதையுடனே கதை, அரசரோடு அரசர், பட்டவர்த்தனருடன் பட்டவர்த்தனர், மகுடவர்த்தனருடன் மகுடவர்த்தனர், மந்திரிகளோடு மந்திரிகள், தந்திரிகளுடன் தந்திரிகள், தளகர்த்தருடன் தளகர்த்தர், மண்டலாதிபருடன் மண்டலாதிபர், சாமந்தருடன் சாமந்தர், யானைத்தலைவருடன் யானைத்தலைவர், குதிரைத்தலைவருடன் குதிரைத்தலைவர், பதாதிநாயகருடன் பதாதிநாயகர், கொடித்தலைவருடன் கொடித்தலைவர், அணித்தலைவருடன் அணித்தலைவர் எதிர்த்துப் பற்கடித்துவிற்பிடித்திரண்டு புயமென்னும் வெற்பெடுத்து மற்றெடுத்து மண்டலமுதலிய விண்டலமதிரச் சண்டைபுரிந்தனர். இதுநிற்க அருச்சுனனும் வீஷ்மரும், வீமசேனனும் துரியோதனனும், தருமராசனும் சல்லியனும், நகுலனும் சிந்துபதியும், சகாதேவனும் சகுனியும், துட்டத்தாய்மனும் துரோணரும், சுவேதனும் துச்சாதனன்முதலிய தம்பியர்களும், விராடனும் பூரியென்பவனும், கலிங்கராசனும் யாகசேனனென்னும் பாஞ்சாலனும், அசுவத்தாமாவும் குந்திபோசனும், உத்தரகுமாரனும் கிருபரும், கேகயனும் கிருதவன்மனும், அபிமன்னுவும் இலக்கண குமாரனும், கடோற்கசனும் பகதத்தனும், சாத்தகியும் பூரிசிரவும், சிகண்டியும் கைகனும், சோமதத்தனும் காம்போசராஜனும், சேரனும் சோழனும், மகததேசாதிபதியை யெதிர்த்து வளைத்துக்கொண்டனர். பாண்டியனுஞ் சகத்திரதேவனும், அராவானும் அலம்புதனும், துருபதேயனும் துன்மார்க்கனும், உத்தமோசாவும் விகர்னனும், விசேடனும்உதாரமனும் ஒருவரையொருவர்எதிர்கொண்டுபெறபல வகையாகிய போர்செய்தனர்.

இதுநிற்க, கொங்கர் கோசலர் சிங்களர் ஆரியர் குகுரர் கங்கர் கௌசலர் திராவிடர் குண்டலபோசர் கலிங்கத்தவர் வங்கர் மாளுவர் மகதர் மக்கர்சோனகர் திரிகர்த்தர் மராடர்முதலிய பதினெண்பாஷைமன்னரும் கைகலந்து கண்சிவந்து கடுமைகொண்டு சத்தமேகங்களும் அட்டகசங்களும் செவிடுபடும்படி போர்புரிந்தனர். இப்போரைப் பார்த்திருந்த தேவர்கள்பயந்து ஆச்சரியப்பட்டுக் கைகளைநெரித்துக்கொண்டு இனிமேல் அண்டங்கள் பிளந்துபோமென்றே நடுங்கவும், சிருட்டிகர்த்தாவாகிய பிரமன்முதலானோரும் இவ்வகை இருதிறப் படைகளும் ஒன்றுபட்டுப் போர்செய்யுங்காலையில் குதிரையினங்களும் யானைக்

கூட்டங்களும் தறிபட்டு சிற்சில முறிபட்டு பற்பல நெறிபட்டு கால்களால் மிதிபட்டு மண்ணிற்புதைபட்டுப்போகவும், தேர்களெல்லாம் சக்கரமுதல் சிகரம்வரையில் தூம்புகளாய்ப்போய்க் குவியவும், ஒருவர்மேலொருவர்தத்தியும் பாணங்களினால்மோத்தியும், வேல்களினாற்குத்தியும், வாள்களினால் எற்றியும்,கரங்களினாற்பற்றியும்,கரகரவென்றுசுழற்றியும், யுத்தஞ்செய்யுங்காலத்தில் இறந்துபோன பதாதிவீரர்களை இத்தனைகோடியென்று எவருஞ் சொல்லமாட்டார். இந்திரன்கண்களாலும் பார்க்கமுடியாது, இத்தன்மையாகத் தம்மைத் தாமே மறந்து இறந்தவர் தலைகள்வெட்டுண்டு ஆகாயத்திலெழுந்து பூமியில் கொழுந்துவிட்டெரியுந் தன்மையவாய் உதிரம்பீறிட்டடிக்க அத்தலையிழந்த உடல் தரையில்விழாமல் இடசாரி வலசாரி சுற்றிக்கொண்டிருப்பது எப்படியிருந்ததெனின், ஸ்ரீமந்நாராயணன் மோகினியவதாரமாய்த் தேவர்களுக்கு அமுதம் பகிருங்காலத்தில் இராகு கேதுவென்னுங் கிரகங்கள் மாறுபாடாகிய உருவத்துடன் அமுதத்தைக் கரத்திலேந்தியபோது சந்திரசூரியர் சொல்லத் தெரிந்து, கையிலிருந்த சட்டுவத்தால் அவர்களுடைய தலையைவாங்கிவிட்டதனால் தலையற்று உடல்நின்று சுழன்றாடுந் தன்மைபோலிருந்தது. இரண்டு முழங்காலளவு முறிபட்டுச்சுழன்றோடும் ஒற்றைச்சக்கரத்தையுடைய தேரை நடத்தும் பாகரைப்பார்க்கில் எப்படி இருந்தனரென்னின் சப்தாவென்னும் பரிபூட்டிய சூரியனுடைய தேரையோட்டுகிற அருணனென்னும் சாரதியைப் போலிருந்தனர்.

பட்டவர்த்தனர் முதலியவர்கள்மேல் பாணக்கும்பு நாணற்கும்புகள் போற்பாய்ந்து கேசாதிபாதம்வரையிலும் உதிரம்பெருகிக் கசிந்துபீரிட்டுவருந் தன்மையெப்படி யிருந்ததெனின், உயர்ந்த எழுகுத்தம்பக் கம்பபாணத்தின் ஜம்பங்களைப்போன்றிருந்தது, பின்னும் தத்தம் அம்பறாத்தூணியிலிருந்த பாணங்களை நாணில்வைத்து சேனாறுவோர் மயங்கப்பிரயோகஞ்செய்துபோட்டு, அப்பாற் பாணங்களில்லாமல் தங்களுடைய தேகத்தில்தைத்துக்கொண்டிருக்கும் எதிரிகள்விட்ட பாணங்களைப்பிடுங்கி, எதிரிகளைநோக்கிச்சிரித்து, கரத்திற்பிடித்துத் திரித்துவிட்டு பலவீரர் போர்புரிந்தனர். இதுநிற்க; சிலர் இடக்கையற்றபோது வலக்கையைக்கொண்டும், வலக்கையற்றபோது இடக்கையைக்கொண்டும் யுத்தஞ்செய்தனர். இதன்றியும் ஒருவன்தலையை ஒருவன்வெட்ட வெட்டுண்டவன் தன்தலையைத் தன்கையில் பிடித்துக்கொண்டு தன்னைவெட்டினவன் தலைமுறிபட்டு விழும்படியெறிந்தனன். உடனே அவனுந்தலையறுந்தாடினன், இவனுந்தலையறுந்தாடினன், மேலும், இரண்டுபுயங்களறுபட்டு இவ்வெள்ளம் பெருகும்படியிருந்த வீராதிவீரர்கள், இந்திரனால் இறகுகளறுப்பட்ட மலைபோலிருந்தனர். சிலவீரர்கள் ஓடிவந்து தங்கள்தலைகளால் முட்டியும் புயங்களாலிடித்தும் பலதேர்களை அழித்து, குதிரைப்படையிலும் யானைப்படையிலும் புகுந்து அவற்றின் கால்களும் வால்களும் உடல்களும், சிதைந்திறக்கும்படிசெய்து, ஜயம் நம்முதென்று குதித்தாடவும் ஒருவீரனை யொருவீரன் வெட்ட, தலைபோனவன் ஓயாமல் யாவரையும் வெட்ட வேறொருவனோடிவந்து வெட்டினவனைத்திட்ட, அவனுமிவனுநெருங்

கித் தலையுடன்தலையைமுட்ட மேலெழுந்த தலைவந்துவிழுந்து இவர்கள் மூவ ரும் பட்டனர். உயிர்விட்டனர். வேறொருவீரன் மற்றொருவீரன்மேற் சன்ன பின்னலாய் பாதாதிகேசம்வரையிலும் பாணங்களைப்பொழிந்து வரும்போது அடிப்பட்ட வீரன் பேய்களுடன் கூட்டுறவாகக் கூடிக்கொண்டாடித் தன் பகையை முடித்துக்கொண்டனன். மேலும் ஆயிரம்பாணங்கள் நுழைந்த துவாரங்களினின்று உதிரவெள்ளம் புறப்பட்டுவீசுந் தன்மை அருணன்நடத் துந் தேரில்வரும் ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனைப்போன்றிருந்தது. மே லுஞ் சிலரை நெருக்கி பலர்மின்னும் வாளாயுதங்களைக்கொண்டுவெட்டினர்; அவ்வெட்டைத் தன்கையிலிருக்குங் கேடயத்தாற்றட்டிவிட்டு முனைக்காட்டி ஓட்டிப் பதுங்கியிருந்து சிங்கம்போலெழுந்து மேற்பாய்ந்து கட்டிப்பிடிக்க இரு வருங்காலுடன்கால் கரத்தொடுகரம் சிரத்தொடுசிரம் உரத்தொடு உரம்அணை த்து புயங்களால் இடித்துக்கொண்டு கீழேவிழுந்து மற்போர்புரிந்தனர். இப் படி சிலகாலைகள் விற்போர் மற்போர் வாட்போர்முதலிய யாவும்புரிந்து அழிந் தனர். அவரை எத்தனைகோடியென்றுசொல்லவல்லேன்! இப்படிபோர்செய்து வரும்போது, விசயனும் வீஷ்மருமெதிர்த்துத் தேவதாஸ்திரப் பிரயோகஞ் செய்து போராடினர். யாவரும்நடுங்கும்படி இருதிறப்படைகளும் எட்டுத்திக்கி லும்வளைந்துக்கொண்டன. பூமியிலிருந்து மேலெழுந்ததூசிகளினால்வேடிக்கை பார்க்கவந்த தேவர் மேலுலகத்திலிருந்துகொண்டு தங்கண்களைமூடிக்கொண் டனர், சுமைகளைச் சுமவாமல் ஆதிசேடன்முதலாகிய நாகலோகத்திலுள் ளாரும் கழுத்தொடியச் சுமந்திளைத்துக்களைத்தனர். அவ்வமயத்தில் துரியோ தனன் தன்பாட்டனாகிய வீஷ்மருக் குதவியாகச்சகுனி சல்லியன் தம்பியர் முதலியவர்களை யனுப்பினன். இதைக்கண்ட தருமராஜன் அருச்சுனனுக் குப்பின்பலமாக வீமனையும் அபிமன்னுவையும்அனுப்பினன். அவர்களை அர்ச் சுனன்கண்டு எனக்குப்படைத்துணை யனுப்பவும்வேண்டுமோ, இவ்வீஷ்மரை வெல்வது அருமையோவென்று கடுகடுத்துப் பாட்டன்தேரிற்கட்டிய பனைக் கொடியின்மேல் பன்னிரண்டுபாணமும் கவசத்தின்மேல் ஒன்பதுபாணமும் அவர்தேகத்தின்மேல் ஐம்பதுபாணமும் அகம்புற நடுங்கி யொடுங்கும்படி விடுத்தனன். அதனால் அப்பெருந்தகைநிலைதளர்ந்தனர். அவ்வமையத்தில் சல் லியன் சகுனி துரியோதனனுடைய தம்பியர் தலைநீட்டிக்காட்டினர். அவர் களை வீமன் கும்பாகக்கூட்டிப்பேய் போலாட்டிக் கோடிகணைகளைப் பூட்டி மாட்டி யோட்டிவிட்டனன்.

இப்பால் கன்னனுடைய பிள்ளைகளில் மூத்தவனாகிய சூரியகேது என்ப வன், அரவானுடனெதிர்த்துப் பலவகையாகிய தந்திரயுத்தங்களெல்லாவற்றை யுஞ்செய்து அயர்ந்து அவரிருவரும் ஒருவரை யொருவர்விட்டு நீங்காமல் இரு ந்தபடி யுத்தஞ்செய்தனர். பலம்பெறும் அரக்கனாகிய அலம்புதனும் கடோற் கசனும் எதிர்த்து இருளாகவும் மழையாகவும் மின்னலாகவும் வெளியாகவும் இவைமுதலாகிய மகாமாயைத் தோற்றங்கொண்டு இந்திரசாலங்களுங்காட்டி அமர்புரிந்தனர். அவ்வலம்புதனுடைய தம்பியாகிய அசயசூரனும் கடோற்கஜ

னுடைய குமாரனாகிய அஞ்சனவர்மனும் மராமரமலைமுதலிய ஆயுதங்களைக் கொண்டு போர்புரிந்தனர். அப்போது குற்றமற்ற பலபராக்கிரமசாலியாகிய வாளபிமன்னு வெஞ்சேனைகள்மாளும்படி துணித்துக்கொண்டு வரும்போது தன்னுடைய தந்தையோடு மூதாதையுமாகிய வீஷ்மரும் கைகலந்துபோராடுஞ் சமயத்தில், நாலுபாணங்களைத்தொடுத்து வீஷ்மருடைய தேரிற்பூட்டிய நாலு குதிரைகளையும் நாசப்படுத்தினன். அதைக்கண்டு காங்கேயன் சந்தோஷங்கொண்டு வேறு தேரேறிவிரைந்துவந்து போர்புரிந்தனன். அக்கணத்தில் உத்தரகுமாரன் தேரைச்செலுத்திவந்து மத்திரதேசாதிபதியுடன்எதிர்த்துப்போராடி குதையினையுடைய வில்லிற்சிலபாணந்தொடுத்துத் தேகங்களிற் புதையும்படி மழைபோற்பொழிந்துவிடுத்து மேககர்ச்சனை போலிரைந்து சல்லியனுடைய வில்லற்று விழவும் கவசங்கிழிபடவும் துவசமுறிபடவும் அழகிய தேரிற்கட்டித் தாவிவருங் குதிரைகள் அற்றுவிழவும் சாரதிசெத்துவிழவும், மற்றவர்கள் தலைசுற்றிவிழவும், கொற்றவர்கள் சிலைபற்றிவிழவும் போர்செய்கையில் சல்லியனுடைய சரீரமெல்லாஞ் சல்லடைக்கண்ணாகவும் உதிரவெள்ளத்துடன் உடல்புண்ணாகவும் கண்டு மனந்தளர்ந்து இப்பாவியாகிய உத்தரனுடன் வில்லெடுத்துப் போர்புரியக் கூடாதென்று மனங்கூசி வீரவார்த்தையைப்பேசி, இலைவடிவத்தையுடைய வேலாயுதத்தை எடுத்திதயத்திற் பலவாறாகச் சபந்தொடுத்து வணங்கிவிடுத்தனன். அப்படிவிடுத்த வேல் குவலயத்தைக் குமுறச்செய்துவந்து குபீரென்று மச்சராசகுமாரனுடைய மார்பிற்பாய்ந்தது, அக்கணம் உத்தரகுமாரன் மருள்கொண்ட மான்கன்று போற்றுள்ளி மார்புடைந்து வானுலகடைந்தனன். தன்மகனாகிய உத்தரன் சல்லியனாற் கொல்லப்பட்டனனென்று விராடன்முதலாகியபாண்டவர்யாவரும்ஒன்றாய்க்கூடி உகாந்தகாலத்திற் பொங்கியெழூஉங் கருங்கடலைப்போற் புரண்டுவந்து போர்புரிந்தனர். அத்தனைபேர்களுஞ் சித்தங்கலங்கி வெற்றிபெறமாட்டாமல் சுற்றியிளைக்குந்தருணத்தில் வீரபட்டமணிந்த யானையைப்போன்ற கதாபாணியாகிய வீமன்வந்து விழுந்து வீரசுவர்க்கத்திற்கு வரவு செலவு கணக்குச்சொல்பவனைப்போல் வெற்றிமாலைபுனைந்து வேல்தாங்கிய அதிரதர்முதலாகியஅரசர்களும் நிலைபெறமாட்டாது குலைகுலையும்படியாக அடிபட்டுத் தாங்களுமுடிபட்டு உதிரங்கள் வடிபட்டு உளநொந்து இப்படிகெட்டு ஒழிந்தவர்வாட இருந்தவரோட எதிர்ந்தவராட இவர்களைத் தேவர்கொண்டாடச் சயம்பெறுந் தன்மையைத் துரியோதனன்கண்டு பூமியிற்றரிக்கப் பொருந்தாமற்பொங்கி நெஞ்சு சுழலக்கண்சுழல நெருப்புப்பொறியெழக் கோபங்கொண்டு சிவபிரான்மேல் மன்மதன் மலர்ப்பகழியெடுத்து வருவதுபோல் பாணந்தொடுத்துப் பலவீரர்களையும் ஓட்டிக்கறுகறுத்துப் பற்கடித்துவிற்பிடித்துநாச் சொற்படித்துஇமயமலையின் சிகரம்போன்ற தண்டங்கொண்டு மண்டலமிட்டுத் தேர்நிரைகள், சேனையணிகள், யானைக்கூட்டம், அரசர்களுடைய மணிமகுடமுதலிய படைகள் எல்லாவற்றையும் சாடிக்கொண்டுவரும் அவ்வீமன்மேல்அநேகம்பாணங்களைத் தாக்கினன். அக்கணைகளை யெல்லாம்முனைமழுங்கவடித்துக் கதையுடன்தாவி அநேகமாயிரவகைகளாக விளையாடி மோதிமுனைந்து தாங்களிருவருஞ் சாரிச்

கத்தக்க தனமைகளே யெல்லாங்காட்டிச் சிங்கமும் சிங்கமும் எதிர்த்துப் போர்புரிந்த தன்மையைப்போல் நெடுநேரம் போர்செய்தனர். திடவீரனுகிய வீமசேனன், துரியோதனனுடைய வில்முறியும்படியாய் ஓங்கியடித்துப்பாங் கிற்குதித்து ஒருகரத்தைநீட்டித் துரியோதனன் ஏறிவந்ததேரைத்தூக்கிச் சிதறவெறிந்தனன். அத்தேரானது பூமியிலோடுவதுபோல் ஆகாயத்திலுங் கரகரவென்றோடி நிலத்தில்விழுந்து சக்கரங்களுடைந்து அச்சுமுறிந்து சிகர முதலியகுடைகளுங் கொடிகளும் சாரதிகுதிரைகளும் அழிந்தவன்னமாகிய தேர் சின்னபின்னமாகவே துரியோதனனும் தேரைபோற் சிதைந்துபோனு னென்று அவனுடைய சேனைகளெல்லாம் புறமுதுகிட்டோடின. அச்சமயத் தில் படைத்தலைவர்முதலிய அரசர்களெல்லாரும் ஓடியசேனைகளைத் தடைப் படுத்தி இராசனுக்கென்னமோ அபாயமென்று கூட்டங்கூடிவந்து பார்த் தனர். அவ்வேளையில் வீமசேனன் பாரியதேரிலேறிக்கொண்டு ஒரு சூரிய னைப் பலசூரியர்கள் சூழ்வதைபோல் அனேகம் வேலாளிகள் வாளாளிகள் வில்லாளிகள் நிறைந்துநிற்கவும் சுவேதசத்திரநிழல்விட்டு நீங்காத முடிமன் னர்கள் சிறந்துநிற்கவும் நடுநாயகம்போல் வீமன் நிற்கும்படியான நிலைமை யைக்கண்டு மனந்தளராமல் புகையுமனத்தினராய்ப் பகைமேற்கொண்டு சிந்து தேசத்தலைவராகிய அரசர் முதலியவரும் சகுனி மைந்தராகிய மைத்துன னென்னு மாப்பிள்ளைத்துரைகளும் இவர்களுக்கருகாக முடிமன்னவரும் வந்து நெருங்கி வீமனைவளைத்துக்கொண்டு கூர்ங்கணை பொழிந்தனர். துரியோதன னுக்காகப் பக்ஷமாயெதிர்த்துவந்த மைத்துனர்முதலான மன்னவரைக்கண்டு மரியாதைசெய்வதற்குத் தேரைவிட்டிழிபவனைப்போல் இறங்கி இருகரத்தை யுங் குவித்துப் பிடித்திருக்கும் கதையுடன் பூமியிற்குதித்து நுழைந்து விஷ்ணு சக்கரம்போல விரைந்து சுழன்று மகமேருவின் கொடிமுடி வாயுவாற் பறி பட்டுப்போனதைப்போல் வந்தவர்கள் மணிமுடிவாயுவின் சேயாற்றறிபட்டு மண்ணில் விழுந்துருள விண்ணிலெழுந்து திறமாறிமாறிக் கதைகொண்டடிக்க தேவர்கள்முதலியவரும் திடுக்கிட்டுத் துடிக்கச்சேதித்து வந்தனன் வீமன் துரியோதனனுடைய படைவீரர்கள் பாண்டவர்சேனைகளிற்புகுந்து பற்றறக் களைந்து பாரியோடும்படி சாரிசாரியாய்ச்சாய்த்தனர். இருதிறப்படைகளும் யுத்தஞ்செய்யும்போது தனது தம்பியாகிய உத்தரனிறந்தனனென்று மிக்க விசனங்கொண்டு சிவபெருமானளித்த வில்லையெடுத்துப்பிடித்து வெற்றிமாலை யைத்தரித்து வீராவேசத்துடன், சங்குநாதசிங்கநாதம் தாரை பூரிமுரசுசின் னம் காகளமுதலிய வாத்தியங்கள்முழங்கவும் ஆலவட்டம் குடைகொடி மேற் சூட்டி விதானமுதலிய சுருட்டிமயிற்பீலிகள் பிடிக்கவும் யானை வீரத்தலைவருக் கிறைவர் குதிரைவீரத்தலைவருக்கிறைவர் தேர்வீரத்தலைவருக்கிறைவர் சேனை வீரத்தலைவருக்கிறைவர் திடமாக நாலுபக்கங்களிற் சூழ்ந்துவரவும் பாண்டவர் சேனுதிபதியாகிய சுவேதன்பற்கடித்து விற்பிடித்து சொற்படித்து புறப்பட்டு யுத்தகளத்திற்புகுந்து மத்திரனுகிய சல்லியனெங்கே சல்லியனெங்கே அவனைச் சல்லிவேருடன் கெல்லிவிடுகிறேனென்ற தொடர்ந்து அவ்விடத்திற் படர்ந்து [illegible] நெடுத்தி அவர்க்குக்

கேடுவிளைந்துக்கலக்கி அலமலந்துபோகச்செய்து சல்லியனுக் கெதிரிற்போய் நின்று தகைந்து சிங்கம்போன்ற சுவேதன் பேரொலியாக விரைந்து தனது வீரப்பிரதாபங்களைப்பேசி ஆ! ஆ! மத்திரனே! பத்திரமாயிரு சற்றுநேரத்தில் உன்தலை அற்றுவிழச்செய்கிறேன்பாரென்று கேசரிகர்ச்சிதம்போற் பலவித சபதங்களைப்பேச சல்லியனும் நகைத்து ஈட்டுக்கீடாகவே மிகுந்த ரோஷத்துடன் இருவரும் பகைத்து இமைக்குமுன் நகைத்து பாரியவில்லை வளைத்து ஒருவருக்கொருவர் நிகரில்லையென்று ஊடுருவும் வாளிகளைவிமலைந்தனர். இந்தப்படி இவர்களிருவருந் தங்களுக்கொருவர் நிகரில்லையென்று புருவம்நெரிந்து புகையும்பிறந்து பொறியும்பறந்து ஐம்புலனுங்குறைந்து போம்படியாய்ப் போர்புரியும்போது சல்லியராஜன், இதென்னசல்லியமென்று தளர்ந்துவருந்துந் தன்மையைக்கண்டு துரியோதனன் மலைபோன்ற புயத்தினையுடையதன்தம்பியர்களில் ஆறுபேரையும் அவர்களுடனேஅனேகந் தீரர்களையுஞ் சேர்த்து மத்திரதேசாதிபதிக்கு உற்றதுணையாம்படிஅனுப்பிவைத்தனன். அந்தஅரசனுடைய உத்தரவின்படிவந்த தம்பிமார்கள் மகுடமுடி மன்னவர்களுடன் வந்தெதிர்த்து மாறுமல் வாளிதொடுக்குங்காலையில் சுவேதனுகிய சேனாபதி மனக்கொதிப்புடன் மலைந்து அவர்களுடைய அந்தக்கரணங்களெல்லாங் கெட்டழியும்படி பலகணைபொழிந்து பலங்கொண்டெதிர்த்த மன்னவர்களின் ஒன்றுகிய விற்களை இரண்டிரண்டாக முறித்து திரண்டுவந்த படைவீரர்களெல்லாம் அயர்ந்து புரண்டு முடித்தலையுருண்டு மண்மேல்விழுந்தழிய வாளிமழைகளைமாறுமற்றொடுத்தனன், இதல்லாமல் அவரவர்கள் ஏறிவந்ததேர்களும் அந்தத்தேரிற் பூட்டிய குதிரைகளும் சாரதிகளும் மேகம்போன்ற யானைகளும் வேலாயுதம் சூலாயுதம் வாளாயுதம் சக்கராயுதம் குற்றீட்டி எறியீட்டி முதலியவும் இலவம்பஞ்சுபோற் பறக்கும்படியாகச்செய்து தன்னுடைய தேரும்தானும் பெருங்காற்றைபோ லுலவிக்கொண்டு நின்றனன் சுவேதனெனவன். அந்தச்சுவேதன்றொடுக்கும் அம்புகளினுல் இறந்தவர்கள்போக இருந்தவரியாவரும் தன்தம்பியர்களும் நெறிப்பட்டுநின்ற நிலைகெட்டு நெறிவிட்டு புறமுதுகிட்டுப் பரிபட்டு ஓடிவருந்தன்மையைப்பார்த்து வணங்காமுடிபெற்ற மன்னவன் வீஷ்மரைக்கண்டு இன்றுவெற்றிகொண்டுபிழைத்தால் நமக்குண்டு; இல்லாவிட்டால் நாம்தொண்டு பாண்டவர்க்கென்று பற்பலவார்த்தைசொல்ல, அம்மொழி யாவுங்கேட்டுப் பாரியவில்லைக்கைக்கொண்டுசுழற்காற்றைப்போல் பறக்கவடிக்கிறேனென்றுமுறுக்கிப்பிடித்துக்கொண்டு வீஷ்மர் எதிர்த்தனர். இவரைக்கண்ட சுவேதனே தான் சல்லியனையொருபுறத்திற்றள்ளிவிட்டு ஏழுசமுத்திரம்போ லிரைந்துவந்து நீரொருபெரியதலையிருக்கிறதாகவே துரியோதனன் துள்ளிக்கொண்டிருக்கின்றுன், பாண்டவர்களும் பாட்டனுகிய வீஷ்மரையெப்படி வெல்வோமென்றுமுன்பின்பார்த்துக்கொண்டிருக்கின்றனர், நீரும் மத்திரராசனுக்கு உபபலமாய்வந்தீர் வாரும் வாரும் பெரியவரே, உமாமகேசனைப்போற்றி உம்முடைய ஒருதலையைமாற்றி ஐவர்களுக்கும் ஆறுதலையேற்றிப் பதினேரக்குரோணிசேனைகளையுந் தூற்றிவிடுகிறேன் பாரும்பாருமென்று ஒரு அஸ்திரத்தை விடுத்து வீஷ்மர் கைக்

கொண்ட பலமாகிய வில்லைக்கெடுத்து தேகத்திலும் ஆயிரங்கணைகளை நுழைத்தனன். அப்போது சுவேதன்றொடுக்குங் கணைகளுக்கிளைத்து சித்திரம்போற்றிகைத்து திகில்கொண்ட புலிபோலிளைத்து' சற்றுநேர்ந்தரித்து, வேறுவிற்கொண்டு விராடகுமாரனுடைய சித்திரகிரீடம் அற்றுவிழும்படி தாக்கினர். உடனே விராடகுமாரனாகிய சுவேதன் அழற்கணை தொடுத்துப் பனைக்கொடியறுத்து அச்சுகளுடன் தேரையுமழித்து நச்சுநச்சென வரும்பேரையு மொழித்தனன் மறுபடியும் வீஷ்மர் வேறுதேரேறி விரைந்துவந்து சுவேதனனுடைய வீரபட்டமும் அறுத்துவிழுந்து நெற்றி திறந்துபோகும்படியாக நூறுகணைகளைத்தொடுத்தனர். அந்தநூறுகணைகளையும் தாறுமாறாக்கி வேறுவேறாய்ப் போக்கி அவர்கைப்பற்றியவில்லையுந்தேர் குதிரைசாரதியையும் இடிக்கணையால் முடித்து வடிக்கணைதொடுத்து மார்பிலடித்தனன். மறுபடியும் வீஷ்மர்தாம் வேறுதேரேறிவந்து வில்வளைத்து சரமாரிபொழியும்போது சுவேதன் மனங்கடுகடுத்துக் காலாக்கினிக்கணைகளை விடுத்துக் காங்கேயன் கையுமெய்யுங் கருகும்படி உதிரம்பெருகும்படி உடம்பெல்லாம்பொத்தி உரனிற்குத்தியோடி வில்முதலிய தேர்களை ஒடிக்கும்படியாக உக்ரசாயியென்னும் ஒருகணைவிடுக்க அதைக்கண்டு வீஷ்மர்வெகுண்டு இவனுடனின்று இனியென்னயுத்தஞ்செய்வதென்று மனந்தளர்ந்திருக்கச் சுவேதனோதான் மற்றைப்படைகளை மடக்கியடித்து அக்குரோணிசேனைகளையொருதரஞ் சுற்றிப்பார்த்து அலையச்செயது வருகின்றனன், இதற்குள்ளே துரியோதனன் வீஷ்மரிளைத்த விந்தையைக் கண்டு விச்னமடைந்து சுவேதனுடன் யுத்தஞ்செய்து வீஷ்மரிளைக்கின்றது போலிருக்கின்றது நீங்கள்விரைவிற்சென்று துணைசெய்யக் கடவீர்களென்று முடிமன்னவரையும் கொடிமன்னவரையும் இளைக்காமல் வெற்றி கொள்ளுங்களென்று கூட்டிவிடுத்தனன். அப்படியே அவ்வவ்வரசர்களுந் துடிதுடித்து விரைந்துவந்து எங்கே சுவேதனென்றுவாய்திறந்தனர், இதோவந்தேனென்று படையைச்சுற்றிப்பார்த்துவந்த சுவேதனே தன்னோடெதிர்ந்தவர்கள் அந்த வழியேநொந்து போகும்படியாகவும் அவர்கள் பிடித்தவில்லும் ஆபரணங்களுடன் கவசமும் தேரும் அழியும்படியாய்க் கணைகள்பூட்டி அவர்களைமாட்டி ஓட்டினான். அவர்கள்வருந்திப் பின்னிட்டு வருவதைக்கண்டு துரியோதனன் மனத்துணிவுகொண்டு ஜயவிஜயர்முதலிய பஞ்சசேனாதிபரை விரைவினனுப்பினவத்தனன். அந்த ஐவரும்வந்து ஆரவன் சுவேதனாவனென்று அதட்டிக் கேட்கும்போது அக்குரோணியை ஒருசுற்றிசுற்றுவரும் சுவேதன்இவர்களுக்கு நேரில்வந்துநின்று நான்தான் சுவேதனென்றுசொல்லிச் சிவந்தமலைபோன்ற தேர்களும் அவர்கள் கைக்கொண்டு தெரிந்தவிற்களும் பொற்பிரகாசமுற்றமுடி தாங்கிய தலைகளும்படிமேல் விழுந்துருளும்படி பிறைமுகக்கணைகளை விடுத்து அழித்தனன். அவர் மீண்டுபோய்த் துரியோதனனுக்கு வெற்றிபெற்றோமென்று சேதிசொல்லாமல் அங்ஙனே மாண்டுபோனார்கள். இவைகளைப் பார்த்திருந்த கங்காபுத்திரன்கண்சிவந்து கடுமைகொண்டு கார்முகம்வளைத்து நாணேற்றித்தெறித்து தேரேறிச்சிங்கம்போற்றெழித்து உருக்கி கறுவியெதிர்சென்று நின்று இலைமுகப்பகழியையெடுத்துத்தொடுத்தனன். அதைக்கண்டு சுவேதன்

கவீரொணகைத்து எத்தனைரதம், எத்தனைவில், எத்தனைவீரர்க ளுதவியுடன்
இன்னமெத்தனைதரம் உருவாய்வருவாய் பெரியோனே யென்றுபேசி கமலாஸ்
திரக்கணையெடுத்துத்தொடுத்துவிடுத்து வீஷ்மர்கைப்பிடித்த தாஷ்டீகவில்லைப்
பங்கப்படவொடித்து ஒருசுற்றுச்சுற்றியெதிர்த்துவந்துநின்று, வீஷ்மரேறியிருக்
கும் இரதத்தையும் அழித்தனன். அந்தவேளையிற் சிந்தைநொந்து வீஷ்மர்,
தியங்கி மனோத்தியானய்கொண்டிருந்தனர். அப்போது ஆகாயத்தில் வேடிக்
கை பார்த்திருந்த தேவர்களெல்லாம் விராடகுமாரனை, மிக்கப்புகழ்ந்து வெகு
வாய் மகிழ்ந்து அவனுடைய விஜயங்களைப்பேசிக்கொண்டு நெற்றிக்கண்ணை
யுடைய நிமலனாகிய நாதவிந்து கலாதீதனென்னுஞ் சிவபெருமான் அளித்த
வில்லைத்தாங்கிய வல்லவனைக் கொல்லத்தக்காரெவர்களுமில்லை, ஆகையினால்
வீஷ்மர் அநேகந்தரம் வளைத்தார் ; அந்தவில்லை அவன் கைப்பிடித்திருக்கும்
வரையிலும் யாவரும் வெல்வதரிது ஆனால்வஞ்சனைசெய்து வேறுஆயுதமெடுக்
கப்பண்ணினால் அப்போ தழிந்துபோவானென்று தங்கள் குலத்தானாகிய வீஷ்
மருக்கு நலத்தைச்செய்யும்படி வசுக்கள்முதலிய வானவர் பேசிக்கொண்டார்
கள். அவ்வார்த்தை இவ்வீஷ்மருக்குத்தெரிந்தது, அதெப்படியென்றால், எட்டு
வசுக்களில் பிரபாசனவசுவே வீஷ்மாவதார மாகையாலும் அவர்களை இவர்
நெடுநாள்விட்டுப் பிரிந்திருப்பதினாலும், இவர்சீக்கிரம் அந்த வசுபதத்திற்கு
வரவேண்டுமென்னும் பக்ஷத்தினாலும் இந்தவீஷ்மரும் சற்றுநேரந் தியானத்தி
லிருந்தமையாலும் அவர்கள் பேசிக்கொண்ட தேவரகசியம் இவருக்குத்தெரிந்
தது. உடனே வேறுதேரேறிக்கொண்டு வெறுங்கையுட னெதிர்வந்துநின்று
அடா பாவிபடுவானே உனக்கு இவ் விற்போர் ஒன்றுதான்தெரியும்போ
லிருக்கின்றது அதைவிட்டாற் கதியுமில்லை, அப்பாற்சென்றால் வழியுமில்லை.
யென்பதுபோல் வேல், யாள் கதைமுதலிய யுத்தங்கள் வேறொன்றுந் தெரியா
தல்லவா, அடா வெப்பமுடையவனேயென்று, வீஷ்மர்கேட்கவே மிகுந்த
வெட்கமுற்று, மேருவில்லாகிய ஈசன்கொடுத்தவில்லைப் போட்டுவிட்டு உடை
வாளுருவிக்கொண்டு வீஷ்மரே, எனக்காவேறுவித ஆயுதப்பழக்கமில்லை என்று
சொன்னீர், நல்லது உமதாசிர்வாதத்தை விற்றிறமையிற்கண்டேன் இதோவாட்
டிறமையிலும் பார்க்கும்படியாய்வந்தேனென்று அக்குரோணியைச்சுற்றி அநே
கரையெற்றி ஓடிவந்து வீஷ்மர்தேரிற்றாவி சாரதிகுதிரையைவீசிக், கீழேகுதித்
துச் சக்கரம்போலுஞ் சுழன்று உக்கிரங் கொண்டெழுந்த காலத்தில் வீஷ்மர்
வேறுதேரேறி வில்லெடுத்துவளைத்து அர்த்தசந்திரபாணந்தொடுத்து சுவேத
னுடைய ஒற்றைக்கை யற்றுவிழும்படிகொய்தனர். அதைக்கண்டு மனமகிழ்வு
கொண்டு மற்றொருகையில் வடிவாளைத்தாங்கி வீஷ்மரைப்பார்த்து ஐயா பெரி
யோனே ! இப்படி வஞ்சஞ்செய்து மடிவதற்காக இவ்யோசனையெடுத்தீர்,
ஆகிலும் நீர் நினைக்குங்காரியமன்று, போகட்டும் ; இப்போது பதினொரு
அக்குரோணி சேனைகளில், நாலக்குரோணி சேனைகள் மடிந்திருக்கின்றன.
உமக்குக் கணக்குத்தெரியாது நீர்போய்ப்பாரும், பாண்டவர்களுக்கும் ஏழக்கு
ரோணி துரியோதனனுக்கும் ஏழக்குரோணியென்று சரிப்படுத்திவைத்தேன்.
இன்னம்வேண்டிய வேலைகளையெல்லாமுடிக்கவிருந்தேன், இதற்குள் நீயென்னை

மோசஞ்செய்து முடித்துவிட்டீர்; ஆண்டவனுடைய சித்தமிப்படியிருந்தது, அப்படியிருந்தபோதிலும்உம்மையொத்த அதிரதனிலைக்கீங்காரியம் இதுவன்று என்று வெகுவாய்ப்பேசி, இடக்கரத்திற்கொண்ட வாளையோங்கி, வீஷ்மர்முதலியவற்றையும் அழித்து அவர்விடுகிற கோடாகோடி பாணங்களையுங்குறைத்து யானைகளனேகம் தாள்களனேகம் அரசரனேகம் புரசனரனேகமாகும், வீசி மண்டலமிட்டு வீஷ்மருடையமண்டையைப் பிளக்கும்படியெண்ணி அண்டையிற்பாய்ந்து வந்தனன் அதைக்கண்டவீஷ்மர் சுடர்வாளியென்று சுறுக்கிற்றொடுத்து பகையாளியுயிரைப் பற்றறப்போக்கினர். உடனே சுத்தவீரனாகிய சுவேதன் பூமியசையும்படி பொன்மயமாகிய மேருவிற்புருஷிமோதும்படியாய்ப் பூமியில் விழுந்தனன். ஆகாயத்திலுள்ள தேவர்களெல்லாரும் வாழிகூறி மங்களம் பாடி மகிழ்ந்துபுகழ்ந்து அந்தரதுந்துமி முழக்கினர். இப்பால் துரியோதனன் முதலிய சேனைவீரர்கள்யாவரும் உகாந்த ஊழிக்காலமடங்கி உலகமுதலிய திசைகளும் உண்டாகியகாலத்தில் ஏழுசமுத்திரமும்பார்த்து இரைந்தாலெப்படியோ, அப்படி யிரைந்தனர். அப்பால் அழிந்துபோன இரதகஜதுரங்களின் துவாரங்கள்தோறும் உதிரவெள்ளமானது பீறிட்டோடிவருந் தன்மையெப்படியிருந்த தெனின் போர்க்களத்திலிறந்த சுத்தவீரர் முதலிய சேனைகளுக்குச் சூரியமண்டலத்தின் மத்தியில் நுழைந்துபோகும் வழியின்சாயலைப்போலிருந்தது, மேலும்வெள்ளத்தில் வெள்ளைக்குடைகள் காம்பற்று விழுந்துகிடப்பது எப்படியிருந்த தெனின் வேல்போன்ற கண்களையுடைய மடவார்கள் குளித்த பரிமளச்செங்குங்குமநீரில் எழுந்தகுமிழியையும் வெண்டாமரைமலரையும் ஒத்திருந்தது. யானைகளின் உடலாகிய கலங்கல்வழியில்வழிந்துபோம் குருதி வெள்ளத்திற் கொடியாடைகள் தோய்ந்தசைந்து மிதக்குந்தோற்றம் எப்படியிருந்ததெனின், செம்மண் கலங்கலாகிய புதுவெள்ளப் பெருக்கில் எதிரே துள்ளிப்பாய்ந்து விளையாடித் திரிகின்ற வாளைமீன் மடவைமுதலிய மீன்கண்டைகளை யொத்திருந்தது. இதன்றியும் மாலைகளணிந்த மன்னவர் மகுடத்துடனே மதிமுகம்விழுந் துருண்டுகிடப்பது யெப்படி யிருந்ததெனின், அந்தச்சலத்தில் செந்தாமரைப்புட்பம விரிந்தும்பொற்றாமரைப் புட்பங்குவிந்துமிருப்பதுபோ லிருந்தது, மிகுந்த உதிரமானது ஏரியாகவும் அதற்கு இருபறத்திலுங்கட்டிய கரைகள் யானைப்பிணம் குதிரைப்பிணம் சேனைப்பிணங்களாகவும் தோல்முதலிய வார்கிழிந்தறுந்த பலகைகளும் தப்பட்டைகளும் பாதிபுதைத்து பாதிபுதைந்து பாதிதெரிந்த அதின்வழியே செந்நீரோடுவது எப்படியிருந்ததெனில், அந்தஏரிக்குக் கீழ்க்கலங்கல் விட்டிருக்கும் வாய்க்காலுக்குக் கட்டியமதகின துவாரம்போலு மிருந்தது, மேலும பூமியிலிறந்தொழிந்த அரசர்களுடைய ஆபரணங்கள் விழுந்துகிடக்குந் தோற்றமெப்படி யிருந்ததெனின், ஆகாயமளவும் அளாவியெரிந்த அக்கினிக்குழம்பில் தாரகணங்கள் விழுந்துகிடக்குந் தன்மையை யொத்திருந்தது. இந்தத்தன்மையாகிய யுத்தகளத்தில் நிறைந்துநின்ற பூபாலரும்சேனைகளும் மன்னவர்கள்முதலியவரும் மிகுந்த துன்பமுடையார்களாய்ப் பாண்டவர்களுடைய் சேனாதிபதியாகிய சுவேதராஜன்பட்டான்; இனிமேல் இன்றைக்கு யுத்தநடப்பது கஷ்டமென்று

துன்புற்றவர்களாய் வீரகண்டைகளும் தீரகண்டைகளுந் தரித்த வீரர்களும் பட்டவர்த்தனரும், மகுடவர்த்தனரும், சுடர் வடிவாளேந்திய மன்னவரும் மகிபாலரும் பாசறைபோய்ச் சேர்ந்தனர். சூரியனுங் குடபாற் குன்றிற் சென்று மறைந்தனன். இரத்தங்களினால் மேற்றிசை சிவந்ததுபோற் செவ்வானந்தோன்றப் பாண்டவர்கள் முதலாகியவரும் பாசறையிற்சென்று பரிதாபங் கொண்டு விராடனிருக்கும்பாடி வீட்டுக்குப்போய் அவனைக்கண்டு உபசரித்த போதுவிராடனும் அவன்தம்பி சதாநீகனும் பிள்ளைகள்முதலிய மச்சகுலத்தவரும் மிதமற்ற துன்பத்தி லாழ்ந்துவருந்த, அவர்களையெல்லாம் பச்சைமாலும் பாண்டவர்களும் தேற்றி உன்பிள்ளையாகிய சுவேதனும் உத்தரகுமாரனும் முதனாள்யுத்தத்தில் இறந்துபோயினரென்று துன்புறவேண்டாம் ஐயா உன்குமாரன்இன்று வீஷ்மனைக்கண்டஆட்டமும் அவருக்கெய்திய வாட்டமும் புறமுதுகிட்ட ஓட்டமும் போர்க்களமுழுதுங் கோஷ்டமும் உண்டாகும்படி வெற்றிகொண்டு வீரத்தினைநாட்டி நின்றகாலத்தில் சூதாக வாளெடுக்கச் செய்து தான்மாத்திரம் வில்லெடுத்து வஞ்சனையாகிய நெஞ்சினையுடைய வீஷ்மர்கொன்றனர், இல்லாவிட்டால் இறக்கும்படியானவனு ஏந்தமலே, உன்னிளையகுமாரன் அந்தச்சல்லியனைப் படுத்தியபாடுஇலேசானதன்று, ஆகையால் இவர்களிருவரும் நல்லவீரர் வீரசுவர்க்கம் பெற்றனர், நீர் அந்தப்பிள்ளைகளைக்குறித்து விசனப் படவேண்டாம், நீரெப்படிப்பட்டவ ரெனின், பேய்கள் வாசஞ்செய்யும் வனத்தில் வசித்துவந்த பாண்டவர்க்கு விசுவாசத்துடன் போசனமுதலிய உபசாரங்களும் நடத்திப்பெற்றதாயினும் பெரியதாயேபோற் காத்தபூமானே நீர்செய்த உதவியினும், உமதுபிள்ளைகள் யுத்தகளத்தில்உற்றாருக்கு உயிருதவிசெய்தனர் உத்தமனே சத்தியவானே உன்னுடைய தவமே தவமென்றுபுகழ்ந்து இப்படி உயிருதவிசெய்பவர் உலகிலுண்டோ ஐயாதேவர்கள்முதலிய யாவரும்புகழ நீசெய்த உதவியைப்போல் யார்செய்தனர் விராடபூபதியேயென்றனர். அவராரெனிற் செங்கோலைத்தாங்கிய மங்களகரமுடைய திங்கள்வெண் குடைநிழற்றப்பொங்கு சத்தியவாழ்வின்மிகுந்த முரசக்கொடியுயர்த்த தருமராசன். இம்மொழியைக்கேட்ட விராடன் சொல்லுகின்றனன். மெய்யே மெய்யாகக்கொண்ட ஐயனே தேவரீருடைய பிராணனைப்போற் பாதுகாத்துவந்த உத்தரகுமாரனும் வீரத்திற்சிறந்து நிறைந்த சுவேதனும் உலகமெல்லாங் கொண்டாடும்படி யுத்தஞ்செய்து வெற்றியடைந்தனர், இனியிருக்கும் பிள்ளைகளுயிரும் ஏன்னுயிருமின்னும் என்குலத்தாருயிரும் தேவரீருக்கு உரியதேயல்லது வேறில்லை. இவ்வுலகில் மன்னுயிர்காக்குந் தயாநிதியாகிய தருமராசனேயென்று தாழ்ந்துவணங்கினன், அவ்விராடராசனைத் தருமராசன் வாரியெடுத்தணைத்து உபசரித்துஅவ்விடத்திலிருத்திப் பாண்டவரும் கண்ணனும் பாடிவந்துசேர்ந்து போஜன முதலியனகொண்டு சயனத்திருந்து பொழுதெப்போது விடியுமென்று வீராவேசங் கொண்டிருந்தனர். அச்சமயத்தில்இவ்விருதிறப்படைகளில் முதனாட்போரைப் பார்த்தோமேஇனிஇரண்டாநாட்போரையும் பார்ப்போமென்று வந்தவனைப்போல் கீழ்த்திசையிற்சூரியனுதயமாயினன். அப்போதுதோன்றிய அருணனைக்கண்ட மாத்திரத்தில்யாவ

ருமெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு போசன முதலியனகொண்டு ஆயுதபாணிகளாய் யுத்தசன்னத்தராய் எதிர்கொண் டிருந்தனரென்று திரித ராட்டிர மகாராஜனுக்குச் சஞ்சயன்சொல்லி விடைபெற்றுக்கொண்டு குரு க்ஷேத்திரத்திற்கு வந்தனரென்று வைசம்பாயனர்சொல்ல மிகக்களிப்புடன் வணங்கிஇரண்டாம் போரின்றன்மை யெப்படியோ அதனையு மெனக்குரைக்க வேண்டுமென ஜெனமேஜெய மஹாராஜனுக்கு வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

முதற்போர்ச்சருக்கம்

முற்றிற்று.

---

## இரண்டாம்போர்ச்சருக்கம்.

விருத்தம்.

வானையாதி பூதராதி தோறுலாய மாயனை
ஞானமாதி மறையினுச்சி நண்ணிநின்ற கண்ணனை
மோனமார் முனிக்குழா முணர்ந்த முத்திவித்தினை
யானுழன்ற பிறவிதீர விருபதங்க டுதிசெய்வாம்.

பாண்டவர்கள் முதலியோரும் மறுநாள் காலைக்கடனை முடித்துக்கொண்டு போர்க்களத்துக்கு வரும்படி எத்தனித்து முரசுமுதலியனமுழக்கினர், தம் சேனாபதி யில்லாமையினாற் சேனைகள்மயங்கிக் கொண்டிருக்குஞ் செய்தி கேட்டுத்தருமராசன் திருமாலையடுத்து சுவாமி, முதற்சேனாதிபதியாகிய சுவே தனிறந்துபோயபின் விராடன்முதலிய நாமெல்லோரும் அவ்விசனத்திலிரு ந்துவிட்டோமே, இன்றைக்குச் சேனாபதிப்பட்டம்யாருக்குக் கட்டலாமென்று தருமபுத்திரன்கேட்க, உந்திபூத்தோ னுரைக்கலாயினன். முரசகேதனனே இளவரசாகிய சேனாபதிப்பட்டம் துஷ்டத் தூய்மனுக்குக் கட்டியிருந்தமை யாலும் சோனைப் பெயலைப்போலும் ஊழிக்காற்றைப்போலும் பாணம்பொழி ந்துபகையழிந்து போம்படி வெற்றிபெறத்தக்க வீரனாகையினாலும் துரோண கண்டகனென்று பிறந்திருப்பதினாலும் எல்லா நன்மைதீமைக் குரியவனாயிரு ந்து பாடுபடுந் தன்மையினாலும் உமதுமைத்துனனென்னு முறைமையினாலும் இத்துஷ்டத்தூய்மனுக்கே சேனாபதிபட்டங் கட்டவேண்டுமென பீதாம்பரன் சொல்லினன். அப்படியே துஷ்டத்தூய்மனுக்கு மங்களஸ்நானஞ் செய்வித்து மலர்ந்தமாலைமுதலிய இரத்தினாபரணங்கள்பூட்டி சேனைகளுக்கெல்லாந் தெரி யப்படுத்தி ஜயவிருதுகளுடன் புறப்பட்டனர். இவ்விடத்தினின்று பாண்டவ சேனையெழுந்து பேரோசையுடன் யுத்தகளம் வந்துசேர்வும், அவ்விடத்திலிரு ந்த துரியோதனனுடைய சேனைகள்புறப்பட்டு மிகுந்தகோபத்துடன் இரண்டு கடலொன்று படுமாறுபோல்திரண்டு போர்க்களத்தில்வந்து நெருங்கிநிற்கவும் அக்காலத்தில் ஐவர்சேனைத் தலைவனாகிய துஷ்டத்தூய்மன் தன் சதுரங்க

சேனைகளையும் கோமுகவியூகமாகச்செய்து கேடிவீரஸ்தலாதிபர் முதலாகிய வர்களையும் கொட்டிலாகவளைத்து அவ்வியூகத்தின் முனையில் உலேவிலாத்தூணேபோல் நிலைபெற்றுநின்றனன், கௌரவகுல முதல்வனுடைய சேனாநாயராகியவீஷ்மரும்தம்முடையபடைகளையெல்லாஞ்சேர்த்து வியாக்கிரயூகமாகச் செய்துமற்றைச் சுத்தவீரர்களையெல்லாம் சூசிகாக்குகைபோலு மமைத்து போர்முனையிற்றானும் பெரும்புலிபோனின்றனன். இப்படி தம்பெரும்படிகுருக்ஷேத்திரத்தில் இருவர்படைகளையும் யூகமாகச்செய்து இரண்டுசேனாபதிகளும் எதிரெதிர்நிற்க கருப்புவிற்றாங்கிய மன்மதனைக் கங்கையஞ்சடையா னெரித்துக்காய்ந்தபோதி லெழுந்த கனலேபோற் கண்களிலும் ஆயுதங்களிலுமிருந்து அனற்பொரி யெழும்பவே விமானத்திற்சென்று வானத்தினின்று வேடிக்கைப் பார்க்கும் இந்திரன்முதலிய தேவர்நடுங்கவும், கோடைகாலத் திடியால் முடிபொடியாந் தன்மைபோல பாதலத்திலிருக்கும் நாகரொடுங்கவும், இவ்வுலகத்தவரோங்கவும் முரசு காகளம் பேரி பூரி தாரை கொம்புமுதலிய வாத்தியங்களும் முழங்கி மூவுலகும்நடுங்கும்படி இரண்டு முனைமுகத்திற் சேனாபதிகளின் கட்டளை பெற்றுக்கொண்டு இருபடைகளுங் கைகலந்து தொந்தயுத்தஞ்செய்தனர். அக்காலத்தில் சகதேவன் மகாவீரர்களேறிய பன்னீராயிரம் தேருடனும் பன்னீராயிரம் யானையுடனும் அளவிறந்த குதிரைவீரருடனும் தொகையிறந்த காலாளுடனும் இடதுபக்கத்தில் வந்தெதிர்க்கவும் எழுபத்தீராயிரம் யானைகளும் எழுபத்தீராயிரந்தேர்களும் நாற்பத்தீராயிரம் குதிரைகளும் லக்ஷத்தெழுபத்தாறாயிரம் கால்பலங்களும் சேர்த்துக்கொண்டு நகுலராசன் வலப்பக்கத்தில்வந்து வளைத்துக்கொள்ளவும், இவ்வளவென்று வகுத்துச் சொல்லுதற்கரிதாகிய மிலேச்சர்முதலாகியவீரர்கள் பின்பக்கத்திற்பொருந்தப் போராடவும் வீமசேனன் அருச்சுனன் அபிமன்னு தருமராசன் முதலாகியவர்கள் கண்ணுக்கெட்டிய தூரங் கடல்போனிறைந்த காரியக்காரருடன் ஸ்ரீகண்ணபிரானும் முன்பக்கத்திற் சூழ்ந்துவரவும் இப்படி நாலுபக்கத்திலும நாலுசமுத்திரம்போல் வளைத்துக்கொண்டு முன்கட்டிய கோமுகயூகத்தைக் கலைத்து *கடகாதனென்று சொல்லப்பட்ட யூகங்கட்டி நின்றனர். வீஷ்மர்வியாக்கிரயூகமாக்கிய அளவிறந்தசேனைகளைப் பேரணிவியூகமாக்கி அவ்வியூகத்தின் தூசிமுனையினின்றனர். அப்பால் இருபடையும் கைகலந்து பகைவர்கள் போர்புரிந்தனர். விற்காரருடன் விற்காரரெதிர்த்துப் பாணங்களைச் சொரிந்தனர் வாட்காரர் வாட்காரருடன் வாள்வீசிமடிந்தனர். வேலாளியுடன் வேலாளிகள் வெட்டிமடிந்தனர். இப்பாண்டவ சேனாபதியாகிய துஷ்டத்துய்மனும் தனுர்வேதியராகிய துரோணரும் எதிர்மலைந்து ஒருவர்மேலொருவர் உருவும்படி உந்தும் பாணங்களால் மனநொந்து அட்டதிக்குகளும் அதிர்ந்துபோம்படி அஸ்திரங்களை யிறைத்து நேருக்குநேர் தேரைச்சுழற்றி போர்புரிந்தனர். அச்சமயத்தில் துரோணர் சுடுமுகப்பகழி சுரிமுகப்பகழி யென்னுங் கணைகளைவிடுத்துத் துஷ்டத்துய்மனுடைய வில்லும் அவனேறியதேரும் வீரபட்டமும் கெட்டுவிழும்படி ஓட்டியடித்தனர். அந்த அடியினால் மெத்தவருந்திச் சித்த

*கடகாதனெனின் யானைகளுக்கெல்லா முதன்மையாகிய தலையானையென்றறிக.

முடைய துஷ்டத்துய்மன் பின்னிட்டோட அவனைச்சூழ்ந்து வந்த சேனைக ளெல்லாம் வெங்கிட்டோடி வாடினன். அதைவீமன்கண்டு மிக்கசேனைகளு டனே பெரியதேரைச் செலுத்திக்கொண்டு பார்ப்பாருக்குப் பக்ஷமென்பதிருக் காதல்லவாவென்று துரோணரை வளைத்துக்கொண்டு பாணங்களை யேவி ன்ன், அப்போது துரோணர் தன்னுற்கூடிய வரையிலும் போர்புரிந்துவீமனை வெல்லமாட்டாமல் வெட்கத்தை வெளிவிட்டுச் சொல்லமாட்டாமல் புறமுது கிட்டு ஒருவருமறியாமல் 'ஆற்றிலொருகாலும் சேற்றிலொருகாலும்' என்னும் பழமொழிப்படி ஓடிப்பார்க்கலாமா இன்னமும் போரை நாடிப்பார்க்கலாமா வென்று நினைத்துக்கொண்டிருந்தனன். அக்காலத்தில் வடகலிங்கதேசாதிபதி யாகிய சக்கரதேவன் இரதத்தைச் செலுத்திக்கொண்டுவந்து இந்திரதனுவைப் போன்ற சுந்தரவில்லைவளைத்து இளைத்துக்களைத்துநின்ற துரோணசாரியைப் பின்னிறுத்தி தன்னுடையதேரை முன்னிறுத்தி வீமசேனன்மேற் கண்ணு றுத்திவேண்டிய அஸ்திரமாரிகளை விதைத்தனன். அந்தக்கணைகளெல்லாங் கருங்கொண்டலேபோற் கவிந்துவரக்கொண்ட கதாயுதன்கடுகெனத் தேரை விட்டிழிந்து இரண்டுகைகளையுநீட்டிச் சகாதேவனிறைத்த கணைகளையணைத்து பிடித்துக்கசக்கி அவ்வரசன் கொண்டுவந்த யானைக்கூட்டத்தில் ஆண்சிங்கம் போனுழைந்து கரங்களாலறைந்து கைகளாற்பற்றி கால்களாலெற்றிக் கரத்தில் பிடித்துக்குத்தி துதிக்கையைப் பிடித்துச்சுற்றி ஆகாயவீதியிலெறிந்தனன். அப்படி ஆகாயத்திலெறிந்த யானை திரும்பிவருவதற்குமுன் ஐந்து ஐம்பது ஐஞ்னூறென்று சொல்லும்படி மறுபடியும் யானைகளை வாரி வாரி யெறியவும், பின்னேபோகிற யானைகள் கரகரவென்று சுழன்று கதறிச்சென்று முன்னே போன யானைகள் விழுவதைமோத்தி இதுவுமதுவும் மீளவுமெழும்பி இரு கொம்பும் இருதும்பிக்கையும் இருகாலும் ஒன்றோடொன்று பின்னுத்து இவ் வானைகளைத் திரும்பிக்கீழே விழவந்தயானைகள் விடாமற்பிடித்துகிழித்து மே லதுகீழது கீழதுமேலதென்று சொல்லவந்து பூமிமேல்விழுந்து நொந்துநைந்து நொறுங்கிச்சிந்திப்போயின. மேலுலகத்திலடித்து வீசிக்கொண்டிருக்குஞ்சுழற் காற்றுகள் இவ்வானைகளை ஆகாயவீதியிலுந் திக்கொண்டுசென்று அங்கிருந்து விழும் யானைகளால் இவ்விடத்திலிருந்த யானைகள்சேனைகள் முதலியயாவும் அழிந்து, மூளைவழிந்து, உதிரம்பொழிந்து, உடல்கிழிந்து, உயிர்ஒழிந்துபோ யின, இப்படி நிலத்திலடித்தும் எதிரிகளின் புயத்திலிடித்தும் பாரிலறைந்துஞ் பகைவர் தேரிலெரிந்தும் சிலயானைகளைக் காலால்முடித்தும் சிலயானை களை மேலான்முடித்தும் மண்டலமெல்லாமதிர எண்டிசையெல்லாங் கலங்க அண்டர்களோடுங்க மண்டலநடுங்க துண்டர்களடக்கக் கொன்றுரைத்தனன். அப்படி செய்கையில் யாவரும்பயந்து இதென்ன அதிசயமென்று வியந்து முன்னே சக்கரவர்த்தித்திருமகன் சமுத்திரத்தைத் திருவணை கட்டியகாலத் தில் அனேக மலைகளைப்போட்டு அனுமானடைத்ததேபோல் இவ்வீமசேனன் இவ்விடத்திலோடும் இரத்தக்கடலுக்கு யானைப்பிணங்களால் சேதுவைக்கட் டினுன், ஆகையால் அஞ்சனை மகனிலும்சிறந்தான் இவ்வீமனென்று அகமகி ழ்ந்தனர். இதன்றியும் சிலர் வாயுவினுல்கலங்கி மின்னும் பின்னுமாய்க் கல

ந்தகன்ற மேகங்களைப்போல் இந்தயானைகள்கலந்து தலைவிரிகோலமாய்த் இந்த வீமசேனன் வாயுவின்குமாரனுதலினால் 'மகனறிவுதந்தையறிவு' என்னுநாலடிக்கிலக்கியமாகவிருக்கின்றனனென்றுகளித்தனர், இப்படி இவ்வீமனால் எறியப் பட்டயானைகள்விண்ணுலகமெல்லாஞ் சுழன்றுமண்ணில்வீழ்ந்தன, அப்போது முகமானது பூமியிற்புதைந்து உடலும்பின்காலும் வாலும்மேலாகவுயர்ந்திருப் பது எத்தன்மையா யிருந்ததெனின், இந்நிலத்தைப் பாயாக்கொண்ட இரணியாக்கதனைசங்கரிக்கத் திருவுருக்கொண்டஆதிவராகம் பூமிக்குட்செல்லத்தன் முகத்தாற் பூமியைத்தொளைத்ததுபோன்றது, சிலயானைகளைப்பற்றி வீமனெறியும்போது மேகமண்டலம்வரையிலும் வீரிட்டுக்கொண்டுசென்ற யானைகளெப் படியிருந்ததெனின், நிலவுலகத்திருக்குஞ் சிலமேகங்கள் மேலுலகத்திருக்குஞ் சிலமேகங்களைப்பிடித்துப்பிணைபோட்டுக்கொண்டுவரப் போவதுபோலுமிருந் தது. இவ்வாறு வீமன் கலிங்கராஜனுடைய யானைக்கும்புக்களை யெல்லாங்கால் மாடு தலைமாடாகவிழுந்து அழிந்துகலங்கிப்போகக் கொன்றுகுவித்துச் சேனைகளையெல்லாம்வென்றுமுடித்துக்கலக்கினன். அவை ஒன்றொழியாமலொழிந்ததுமன்றி நின்றசேனைகள் புறமுதுகிட்டோடுவதை வீஷ்மர்கண்டு மிகுந்தகோபங்கொண்டு கண்பொறி கதுவத்திண் சிலைதாங்கி மகாரதவீரர் புடைசூழ்ந்து வரும்படிசொல்லினர் ; அவ்வேளையில் தளகர்த்தரும் சேனைக்காவலரும் கலிங்கராசனுடைய பிள்ளைகள் கேதுபாலன் முதலியவரும் வெகுசேனைகளும் சென்று வீமனை வளைத்துக்கொண்டு போர்புரிந்தனர். அவ்வீமன் இவரை யெல்லாங்கண்டு பூமியில்நின்றபடிஅவரவர்விட்ட கணைகள்முதலியபாணங்கள் அஸ்திரங்கள் ஆயுதவகையாவையு மறைந்து பிடித்து ஒடித்து ஒடித்திரிந்த. தன்றியும் அவர்களேறிவந்த தேர்களணைத்தும் சேரோவாரி நிலத்தின்மோதி பலத்தினாற்கொன்று நிகரொருவருமற்று நின்றனன். அதை, கலிங்கராசன் பிள்ளைகள்கண்டு விஷம்போல் மனஸ்தாபங்கொண்டு தேரைச்செலுத்தி வில்வளைத்து நாணியிழுக்கண்டகலிங்கராசனும் அவன் புத்ர மித்ராதியரும் யானைக்கூட்டங்களுங் கடல்போற் பொங்கிவந்து வீஷ்மனைக்கலந்தன, அச் சமயத்தில் வீமராசன் சீறோறும் படியாய்த் தேரேறிக் கொண்டு வில்லைக் கையிற்பிடித்து குணத்தொனிசெய்து வீஷ்மருக்கெதிரில் வரும்போது அவ் வீமனைப்பார்த்து பற்கடித்துப் புருவநெரித்து கலிங்கராசன் முதலானோரும் யானைக்கூட்டமுஞ் சேனைப்பெருக்கமும் குதிரைப்பந்திகளும் தேர்க்கும்புகளும் வீஷ்மர் துணைவந்தனரென் னுந்தைரியத்தினால் வீமன்மேல்வந்துவிழுந்து கோபித்தெழுந்து விட்டெறியக்கொதித்து அடபாவி? வெகுகாலமாக நான் வைத்திருந்த யானைக்கும்புகளை யெல்லாம் வாயிற்போட்டுக் கொண்டையே! இதோஉன்னை நாங்கள் வாயிற்போட்டுக்கொள்ளுகின்றோமென்று பற்கடித்துப் பாணந்தொடுத்துப் பலவாறாக ஆயுதங்களையும் விடுத்தனர். அவர்கள்விட்ட பாணங்களையும் கெடுத்துக்கலிங்கன்முதலானோர் புத்திரவர்க்கத்தார் யாவருங் கெட்டொழியும்படிக்கெடுத்தான். பின்னும் வீமன்கொடியபாணங்களைவிடுத்து மற்றொருவரும் அடுத்து யுத்தம்பண்ண மாட்டாமலோடும்படி முடுக்கியதை வீஷ்மர்கண்டு இந்திரனாற்சிறகிழந்த மலைபோலேங்கிஐயோ கலிங்கதேசாதிபன்

முதலிய காவலரெல்லாம் இறந்துபோயினரோ வென்று வடவைத் தீப்போற் கடுகி வீமன்மேல்வாளிகள் தொடுத்துவந்தனர். அதைக்கண்டு வீமன் ஒரு வெற்றிவேலைப் பற்றியெடுத்து பக்குவமாய்சுழற்றிப் பாட்டனுடைய தோளுருவிப் போகும்படி யெறிந்தனன், அவ்வேலாயுதம்வரும் கொடுமையைவீஷ்மர் கண்டு ஒருதோமரமெடுத்துச் சுழற்றியெறிந்தனர். உடனே அவ்வேலாயுதம் துண்டமாய்ப் போகக்கண்ட வீமன்கோதித்து ஒரு சூலாயுதந்தொடுத்தனன், அதை வீஷ்மர் உருத்திராஸ்திரத்தாற்றடுத்து இடியாஸ்திரம் நான்கு விடுத்து வீமனுடைய இரதத்திற் கட்டியிருக்குங் குதிரைகள் நான்கையுமறுத்து சிங்கக் கொடியும் பங்கப்படுத்தி தேர்களையும் போக்கடித்தனர். அக்காலத்தில் வீமனுக்குக் கோபம்பிறந்து ஆயிரத்தெட்டண்டமும் அனல்விசிறு லெப்படியோ அப்படிப்பட்ட கோபாக்கினியுடைத்தாய்க் கதையைக் கையிலெடுத்துக் கொண்டு கிட்டியசேனைகள் முட்டியயானைகள் எல்லாங்கெட்டழியச் சுழற்றி கொண்டுஜோடி வீஷ்மருடைய தேருக்குச் சமீபத்தில் அவருக்கு மனமொத்த சாரதிதலையைத் தவிடாய்நுறுக்கினன். இப்படி ஐயம்போகமும் புயவேகமுமுடையவனாக வீஷ்மரை மடக்கிக்கொண்டு அவர்விற்பிடித்து யுத்தஞ்செய்ய இவன் கதையைக்கொண்டுபோர்புரிய, அவர் இரதத்தினின்றும், இவன் நிலத்தினின்றும், பாட்டனுருக்கு ஈட்டுக்கீடா யுத்தஞ்செய்து தன்பாட்டனுருடன்வந்திருக்கும், பார்த்திவருடைய தலைகளும் மூளைகளும் மகுடாதங்களுஞ் சிந்தித் தெறிக்கும்படி யடித்து மலைகளைப்போன்ற தேர்நிரைகளை வாரிச் சாரதி குதிரைகள் சாகும்படிமோதி ஆகாயத்திலெறிந்து ஒரு நாழிகைக்குள்ளே, போர்க்களத்தை யொறுத்து ஆகாயத்திலிடிக்கும் மேகத்தினிரைச்சலைப்போல் போர்க்களமெங்கும் பெருங்கூச்ச லுண்டாகும்படியாக வீமசேனனும் பெருங்குரலிட்டுப் போர்புரிந்து திரியும்போது வீஷ்மர்கண்டு வீமனை வெறுத்துக் கொண்டு மறுபடியும் தேனைச்செலுத்தி வீமனைத்தகைந்து உருத்துஎரியுங் கண்ணிலிருந்து நெருப்புப் பொரியுதிரக் காளமேகமும் கலந்து யுத்தஞ்செய்வதே போற்போராடி யானைகளுஞ் சேனைகளும் நிலத்தில்மடிந்துவிழ வீமன் கதாயுத்தமும் வீஷ்மர் வில்யுத்தமுஞ்செய்துகொண்டிருந்தனர். அப்போது பாண்டவ சேனைகள் பட்டுப்பாழாய் விழுந்திருப்பதை அபிமன்னுபார்த்து ஆ! ஆ! நமது சேனைகள் இப்படி நாசமாகின்ற தல்லவாவென்று வெற்றிவில்லை வளைத்து காதளவுமிழுத்து வடிக்கணைதொடுத்து வில்வட்டமாம்படி நாணியிழுத்து பலவித பாணம்விடுத்து யுத்தஞ்செய்துவரும் அவரவர் நெற்றியிற் குறிப்பதுபோல் ஒவ்வொரு கூர்ங்கணை உருவவிடுத்து மேருவைவளைத்து வாசுகியை நாணியாகமாட்டிச் சூல்கொண்டு மேகம்போற் கணைகளைச்சொரிந்து நிறைந்தநெருப்பினால் திரிபுரம்நீரெழ நகைத்தருளிய பரமசிவனேபோல நகைத்து பகைவர்களின்படையும் சேனாதிபதியாகிய வீஷ்மனுடைய குடைகளையும் அவருடைய வில்நாணிமுதலிய கணைகளும் தேர்களும் வீரபட்டமும் சாரதிகுதிரைகளும் தனித்தனி யழியும்படி வீமனும் ஆற்றலையுடைய அபிமன்னுவும் உலகமுடிவிலெழும் உவர்க்கடலேபோற்பொங்கி தீயுங்காற்றுஞ்சேர்ந்து எரிப்பதுபோலும் ஆழமாகிய கிணற்றினீரும் அனலாற் பொங்கியெழும்பப் போர்புரிகையில் அக்

கிணற்றினின்றவனை காட்டிப்பவளங்கண்டு கோபிக்கும் தன்மையைப்போல் அத்தினபுரிக் கதிபனாகிய அரவுகேதனன் கடுங்கோபங்கொண்டு கையொடு கைபுடைந்து கண்பொறி கதுவக்கூவிக் காவலர்களைநோக்கி அந்தோ வீஷ்மர் முதலிய படைவீரரும் வெந்துபோகின்றனர், உடலயர்ந்து போகின்றனர். ஆகையால்நீங்கள் இந்தவேளை பிந்திப்போகாமல் முந்திப்போய் வீமன் அபிமன்னுவென்றுசொல்லும் அவ்விருவரையு மடக்கிக்கொண்டு கொல்லுங்கள், அவர்களை வெல்லுங்களென்று துரியோதனன்சொல்ல, அம்மொழியைக்கேட்டு பல காவலர்களுங்கூடி. அவ்விருவரையும் வளைத்துக்கொண்டு சலியாமல் போர் புரிந்தனர்.

அச்சமயத்தில் காலகேய நிவாதகவசரையும் இரண்ய புரவாசிகளையும் ஒருவரொழியாமற் கொன்று வெற்றிகொண்டு இந்திரனுக்குப் பட்டங்கொடுத்துத் தேவர்களுக் காதாரமாகித் திசைகள்முழுதும் இசைகளெழுதும் அர்ச்சுனன்மன்மதனுக்குச் சமானமாகிய அபிமன்னுவையும் அண்ணனாகிய வீமனையும் சத்துருக்கள் வளைத்துக் கொண்டனரென்று வரிபொருந்திய கணைகளைக் காண்டீவத்தில் வைத்திறைத்துக் கொண்டு வியாக்கிரமேபோல் ஆக்கிரமித்து விடாதீர்கள் இதோவந்தே னிதோவந்தேனென்று தேரைநடத்திக் கூவிக்கொண்டு அவர்களுக்குப் பகையாய் இவர்களுக்குத் துணையாக வந்துகூடினன். அக்காலத்தில் இவர்கள் மூவருஞ்சேர்ந்து பாணங்களைத்தொடுக்க அப்பாணங்கள் சிவபெருமானைகைத்த திரிபுரமெரித்த தீயேபோலும், இலங்கையழிய அநுமான்கொளுத்திய நெருப்பேபோலும் நிருதிகென்றெரிந்து நால்வகைசேனையோடுகூடிய அரசர்களாகிய பெருங்கடலைச்சுவறச்செய்து, அப்பாற் காளமேகம்போன்ற வில்லினின்றெழுங் கணையாகிய துளிகளைபொழிந்து திரண்ட சேனைகள் வெருண்டோடவும் தலையறுந்தாடவும் கரசரணாதிகள் அற்றுவிழவும் கருந்தூள் செந்தூளெழும்பக் கலக்கிப் படையிற்புகுந்து வருகையில் சூரியனை மறைத்தெழுந்த பனியேபோல் அரசர்கள்முதலாகிய படைக்கடல்களுங் கவிந்து அர்ச்சுனன்முதலிய மூவர்களைமூட இம்மூவரும்விடுக்கும் பாணமாகிய கிரணங்களில் மூடியபனி விட்டோட சேனைவாட உதிரவெள்ளமோட பூதப் பிரேத பிசாசகணமாடப் படைகளைப் பொடியாக்கித் தேரணிகளைச் சிதறிக் குதிரைப் பந்திகளைக்குறைத்து ஒழித்துப்பதாதிப்படைகளைப்பாழாக்கிக் கள்ள மாமாயப்பிரான் சுதரிசனமே போற்றிரிந்து வரும்விஜயனையும் வீமனையும் வாளபிமன்னுவையும் சேனாதிபதியாகிய வீஷ்மர்கண்டு மனத்தாபங்கொண்டுவில்லு மெடுக்காமல் கணையுந்தொடுக்காமல் விசனமேற்கொண் டிருப்பஞ்சத இரதகஜதுரகபதாதி முதலிய படைமன்னர் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் கண்டு இனி இவ்விடத்திலிருந்தால் யாவரும் முடிந்துபோவோ மென்றேங்கிப் பின்வாங்கிப் பாசறையை நோக்கிப்போய்ப் பதுங்கினர். இன்று போர்க்களத்திற்குவந்த வீஷ்மரும் துரியோதனன் முதலாகிய அக்குரோணிசேனைகளும் தேவாமிர்தம் புசிக்கவந்த தேவராயினர், அர்ச்சுனன்முதலிய மூவரும் அப்பாற்கடலிற்பிறந்த ஆலகால விடம்போலாயினர். இவர்கள் கொண்டகோபம் துரியோதனனுடைய படைபோல்நாமும் ஓடிப்பிழைத்தால் அல்லது முடியா

தென்பதுபோற்சப்தாவென்னும்புரவிபூட்டிய இரதத்தைச்செலுத்திக்கொண்டு போய் மேற்றிசையில் மறைந்தனன் விண்மணியாகிய சூரியன். அந்தச்சூரியன் மறையுந்திசையிலெழுந்த செவ்வானமோவென்றுசொல்ல உதிரவெள்ளம் போர்க்களமுழுதுஞ் சிவந்து திசாதிசைகளிலும்பரந்து கருங்கடலைச் செங்கடலாக்கிக்கலந்தது, இதுநிற்க:— திரண்ட இருள் தம்மினத்தைக் கும்பு கூட்டிக்கொண்டு போர்க்களத்திற்கு வந்தவரைப்போல் நிறைய அவ்விருள் கூட்டம்வரவே அதைக்கண்டு யுத்தபூமியில் நிறைந்திருந்த வீரர்கள் முதலிய யாவரும் நாம்வந்தவிடத்தில் இருள்வந்தமையால்இனி நாம் இவ்விடத்திற்றங்குவதற்கு இடமில்லையென்று தத்தம் பாடிவீடேபோய்ச்சேர்ந்தனர். அவர் யாரெனில் போர்முகத்தில் மலைந்து கொலைசெய்யும் வாளாயுதத்தைக் கைக்கொண்ட மன்னவர்கள். அப்பால் கூளிகளுங் காளிகளும் பேய்களும் பூதங்களும் நாய்களும் நரிகளும் கூடிவிளையாடிக் கொண்டிருக்கும் குருக்ஷேத்திர பூமியைவிட்டு பாசறைசென்றபார்த்திபனாகிய துரியோதனமகாராசனும், துர்ச்சாதனன், கன்னன், சகுனி, துரோணர், வீஷ்மர் முதலியவரும் ஒருபேரவையிற் கூடிக்கலந்த காலத்தில் வணங்காமுடியையுடைய மன்னவன் சேனாதிபதிமுதலிய யாவரையும்பார்த்து, ஐயா ? நீங்களெல்லாருமிருந்தும் அறியாச்சிறுவனாகிய அபிமன்னு என்பவனுக்கும் அர்ச்சுனனுக்கும் இளைத்து என்சேனைகள் புறமுதுகிட்டொழியவும் பிராணன்போயழியவும் நேரிட்டதே அந்தோ தெய்வமே இதுவுமென் காலகதியன்றோவென்று நெடுமூச்செறிந்த குருகுலநிருபனை நோக்கி யாவருந் தலையிரங்கிக் கொண்டனர். அச்சமயத்தில் சேனாதிபதியாகிய வீஷ்மர் விசனமுடையாராய்த் துரியோதனனைப் பார்த்து அப்பா குழந்தாய் இன்றை யுத்தம் எனக்குஞ் சம்மதமாயிருக்கவில்லை, ஏதோ இப்படி நடந்துபோய்விட்டது. அதைக்குறித்து நீவிசனப்படாதே, நாளை நடக்கப்போகிற யுத்தத்தில் பாண்டவ சேனைகளைப்பாழாக்கி அருச்சுனனையும் அபிமன்னுவையும் அழச்செய்து ஆயுதமெடுப்பதில்லை யென்றேசொல்லி அர்ச்சுனனுக்குச் சாரதியாக வந்திருக்கும் கண்ணனையும் ஆயுதமெடுக்கச்செய்கின்றேன்பார், என்வல்லமையென்று பேரப்பிள்ளையை நோக்கிப் பெருங்குரலாகக் கூவிச்சபதம் பேசிக்கொண்டு பாசறைக்குப் போயினர். இப்பால் துரியோதனன் முதலியயாவரும் போஜனமுதலியவுண்டு நித்திரைசெய்தனர். இந்தச் செய்திகளையெல்லாம் திரிதராட்டிரனுக்குச் சஞ்சயன்தெரிவித்து வந்தனன். இப்பாற்சூரியன் இருபடைகளையும் சேனாநாயகரையும் மன்னவர்களையும் எழுப்ப வந்தவனேபோல் கீழ்த்திசையில் வந்துதயமாயினனென்று வைசம்பாயனர்சொல்ல ஜெனமேஜய மகாராசன்கேட்டு உபசாரத்துடன் வணங்கி சுவாமி இரண்டாநாள் யுத்தத்தின் தன்மைகளைச்சொல்லக்கேட்டு இருவகைப் பயனடைந்தேன். மேல் நடக்கும் மூன்றாநாள்யுத்தத்தில் ஸ்ரீகண்ணபிரானை ஆயுதமெடுக்கும்படிசெய்கின்றேனென்ற வீஷ்மருடைய வாக்கியப்படிநடத்தும் முறைமையும் போர்த்திறமையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று ஜெனமேஜய மகாராசன்கேட்க வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

இரண்டாம்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

## மூன்றாம்போர்ச்சருக்கம்.

---

### விருத்தம்.

தந்தமூரியின் பால்வைத்த தயிர்பால் வெண்ணெ யெட்டாமல்
குந்தியுரலின் மீதேறி யிளங் கோவியர்முன் கூத்தாடி
நந்தன்மனைமி லசோதையிரு நயனங்களிக்க விளையாடும்
மைந்தனிரு தாளொருநாளு மறவாதாரே பிறவாதார்.

ஜெனமேஜெய மகாராஜனேகேளும். மூன்றாநாள் சூரியனுதித்த வுடனே இருதிறச்சேனைகளும், காலைக்கடனை முடிததுக்கொண்டு ஆயுதபாணிகளாய் போர்க்கோலங்கொண்டு யுத்தகளத்துக்கு வந்தனர், உடனே வீஷ்மர் தங்கள் சேனைகளை யெல்லாஞ்சேர்த்துக் கருடயூகங்கட்டினர். கருடயூகமென்பது கருடப் பக்ஷியைப்போல் மூக்கு, இறக்கை, வால், கால், இப்படி யானைசேனை பரிவார மெல்லாங்கூட்டி அதிலே காரியஸ்தனை நிலைநாட்டிச் சேர்த்துவைப்பது, இவரிந்தயூகங்கட்டவும் பாண்டவச் சேனாதிபதியாகிய துட்டத்துய்மன் பயப்படாமல் திடங்கொண்டிருக்குஞ் சேனைகளைச்சேர்த்து க்ஷத்திரயூகங் கட்டினன். க்ஷத்திரயூகமென்பது குடைபோற்கவிந்து காம்புமுதலிய கம்பிகளைப் போற் சேனைகளையமைத்து விரிக்கச் சுருக்கவிசாலங்கொண்டிருப்பது. இப்படி இருசேனாபதிகளும் யூகம்வகுத்து தாமுந்தூசிப்படைமுகத்தினின்றனர். அந்தவேளையில் ஏழுசமுத்திர முழக்கம் போலும் பதினாலுலகம் பதறவும் அட்டகுலாசலங்களும் சப்தமேகங்களும் தலைசாய்க்கவும் முரசுமுதலிய வாத்தியங்கள் முழங்கின. அப்போது கங்காபுத்திரராகிய வீஷ்மரும் துரோணரும் அசுவத்தாமா முன்னிட்ட அதிரதத் தலைவரும் நால்வகைச் சேனையும் மேகம் கவிந்துவருவபோல் இரண்டாநாட்போரில் சேனைகளையும் எங்களையும் வென்றவீரர், இன்றைக்கும் வெளிப்படுங்களென்று வீரவசனங்கள்பேசி அருச்சுனனையும் சிறுபோதிற் புயபலமல்லர்களை வென்ற ஸ்ரீகண்ணபிரானையும் அபிமன்னுவையும் தேடிவளைத்துக்கொண்டு தென்றலடிக்கத் தியங்கியதேக்கு மரமேபோற் சிந்தைகுலைய அப்புவருஷம்பொழிந்தனர். அச்சமயத்தில் சூரருக்கெல்லாஞ்சிறந்த சூரனாகியசுயோதனனும் அவருடையதம்பியரும் மாமனாகிய சகுனியும் சேனையனைத்தும் படைத்துணைக்குவந்த பார்த்திபரும் ஒருகும்பலாய்ச்சேர்ந்து சிங்கக்கொடியினையுடைய தேர்மேல் வீமனை வந்து வளைத்துக்கொண்டனர். இப்படி இருதிறத்துவீரரும் எதிர்த்துக்கொண்டு வரத்தினாலும் மந்திரத்தினாலும் தாம் பெற்றிருக்கும் வலிமிக்க மணிகள் கட்டிய விற்களைப் பிடிக்குங் கரங்கணிறைந்தும் இறையத்தொடுத்துவிடும் பாணங்களாலும், கடைக்கண்கதுவும் பொறிகளாலும் ஆகாயமறைந்து போகவும் அச்சரங்களால் அறுப்புண்டுவிழுஞ் சிரங்களினால் போர்க்களமறையவும், அச்சிரங்களினின்றுபெருகும் உதிரவெள்ளத்தால் பள்ளம்படுகுழி நிறைந்துசேறாகி நாற்றிசைகளும் மறையவும், துரியோதனனும், வீமனும், பழம்பகையாகிய வயிரம் பற்றிப் போர்செய்கையில் வீமனுடைய குமாரனாகிய கடோற்கசனென்னுங் காளை இவ்விருவருஞ் செய்யும் போரைக்கண்டு பேய்பூட்டிய இரதத்தைவாயு

வேகமாகச் செலுத்திக்கொண்டுவந்து துரியோதனனுக் கெதிரில்நின்று நவசந்திரபாணத்தையெடுத்துப்பூசித்து அபிமந்திரித்துத்தொடுத்தனன். அப்பாணம் பார்த்தவர் கண்களையெல்லாம் வேற்றுருவமாக மயக்கிவந்து துரியோதனனுடைய பாம்புக்கொடியை முறித்துத் தேரிற்பூட்டிய குதிரைகளையு மறுத்துக் கௌரவகுலமுதல்வன் அணிந்த கவசங்களையுங்கிழித்து அவனுடைய மார்பையுந்துளைத்து முதுகின்புறமாய்ப் புறப்பட்டு யுத்தமுனையில் மிகுந்தவெற்றியையுடைய கொற்றவர்களையுங் குறைத்துவந்தனன். அது நந்தியாவட்டமாலையையணிந்த நராதிபன் தம்பியர் முதலியவர்க் கெதிரில் முடிசாய்ந்து பரவசமாக வோய்ந்து விழுந்தனன். ஒருவருக்கு மிளைக்காத பார்த்திவன் இக்கடோற்கஜன்விட்ட கணைபட்டுக் களைத்துத்தேரிற் சாய்வதற்கு முன்னமே, கடவுளர்க்குத் துணையாகச்சென்று காலகேய நிவாதகவசர்களைக் கொன்று கிரீடியென்றுபெயர் புனைந்துகொண்டுவந்த பலவானாகிய அர்ச்சுனனுடைய புத்திரனென்னும் அபிமன்னு மன்னர் மண்டலேஸ்வரர்முதலிய யாவரும் மறுகிக்குழம்பி வாடியோட மாட்டி யோட்டிவருகையில் தன் பெரியதந்தையாகிய வீமனும் துரியோதனனும் அமர்புரிவது கண்டு ஒருசமரவேலைக்கைக்கொண்டு சங்கரனுடைய சூலாயுதம்போல் தேர்ச்சாரதியின் மார்புக்கு இலக்குவைத்து விடுத்தனன். அவ்வேற்படைபோய்ப் பாயவே துரியோதனனுடைய இரதசாரதியின்கையோய்ந்து நிலத்திற்சாய்ந்துமாய்ந்தனன். இப்படி கடோற்கசன்விட்ட பாணத்தால் துரியோதனன்சாய்ந்து அபிமன்னுவிட்ட வேலாற்சாரதிமாய்ந்து விழுந்ததனால் துரியோதனனுடைய தம்பியர்முதலியவருங் கும்புகூடிக்கொண்டு கோவென்றழுது வீமசேனன் கடோற்கசன் அபிமன்னு இவர்கள் மூவரும் பிரயோகம் பண்ணும் பாணத்திற்கிடைந்து கிட்டநெருங்கித் தமயனைப்பார்க்கப்பயந்து வீஷ்மர் நின்று யுத்தம் பண்ணுமிடத்திற்கு வெகுபேரையனுப்பி ஐயா ? அபிமன்னுவிட்ட வேலாற் சாரதியிறந்தனன். கடோர்க்கசன்விட்ட சாயகந்தால் இராஜாதிராஜனாகிய துரியோதனன் உயிர்மறந்தனன். சமீபத்தினெருங்கிப் பார்க்கமாட்டாமல் யாவருந் தத்தளிக்கின்றனர். தேவரீருக்கு செய்தியறிவிக்கச்சொல்லினர், நீர் விரைவாக வரவேண்டுமென்று சொல்லினர். இச்செய்தியைக்கேட்டு மந்தாகினி மைந்தராகிய வீஷ்மர் மனம்வருந்தித்தாம் போர்செய்து கொண்டிருக்கும் விசயனையும் செந்தாமரைக்கண்ணனையும் ஒருபுறமாகவிடுத்துத் துரியோதனன்விழுந்துவிட்டதிசையை நோக்கிப்புறப்பட்டனர். வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையையணிந்த துரியோதனன் விழுந்துகிடக்கும் இடத்தில் அவனுடைய மார்பிற் கணைபட்டுருவியிருக்குந் துவாரத்தைப்பார்த்து இருகாத்தாலு மணைத்தெடுத்து இரதத்தின் மேலேற்றிக்கொண்டு காயம்பட்டவர்களை வைத்துக் காக்குங் காவணத்துட்சென்று அங்கிருக்குங்காரியஸ்தராகிய இரணவயித்தியர்களை யழைத்துக்காட்டி பிரேதம்போலும் அசைவற்றுப் போட்டகாலும் போட்டகையுமாயிருக்கவே யாவரும்புலம்பி, இது வினையின்பயனென்றுகலங்கித்தேறி அரசனுக்குப்பிராணன்வரும்படி சஞ்சீவகரணியென்னும் ஔஷதங்கொடுத்து ஒத்தடமிட்டு மருந்துவைத்துக் கட்டினர். பின்னுஞ் சிறிதுநேரத்

திற்கண்விழித்துப்பார்த்து வீமனிற்கின்றானை ஓடிப்போனானை வென்றெழுந்து தாகத்திற்குப்புசித்து இளைப்பாறி போர்முனைக்குவர முயன்றனன். அச்சமயத்தில் சந்தனுகுமாரனாகிய பாட்டன் அவன் முகத்தைச்சுளித்துநோக்கி அரவகேதனனே போர்புரியுந்தன்மை யெப்படியெனின், நாயகன் பேரணியினிற்கவேண்டும்,மற்றப்படைகளிற்சிலவீரர் தலைவனைக்காத்துக்கொண்டிருக்கவேண்டும், மற்றச்சேனாபதி முதலிய படைமன்னவரெல்லாம் போர்புரியவேண்டும், அப்படி போர்செய்துயாவரும் அழிந்துபோய்விட்டால் முதலாளியாகிய அரசன், அதைரிய முடையவனாகில் ராஜியாய்ப் போகவேண்டும். தைரிய சாலியானால் தானேபுறப்பட்டு எதிரிற்சென்று சலியாமனின்று போர்செய்யவேண்டும். இப்படியெல்லாம் இராசதருமமுதலிய நீதிகளிருக்க, நாங்களெல்லோரும் உயிருடனிருக்க நீபோர்செய்யப்போவது உத்தமமன்று, மெத்தவருந்தி சோர்ந்திருக்கின்றனை! நீயிப்போது இப்பேரணியிலிருப்பையானால் உனக்குபதிலாகத் தான்போய் உன்னை யடித்தவர்களைப் பிடித்துப் போர்செய்துமுடித்து வெற்றிக்கொடி பிடித்து வருகின்றேனென்றுசொல்லி துரியோதனனைப் பேரணியினிறுத்திப் பின்காலுமமைத்து மகமேருவென்று சொல்லும்படி தேரேறி வீரகண்டாமணி விளங்கி யெதிர்த்து மிகுபோர்விளைத்து முன்னிட்டவரெல்லாரும் பின்னிட்டோடக்கூரிய வாளிகளினாற் குறைத்துச்சிதைத்து மார்பிலும் தோளிலும் முகத்திலும் நகத்திலும் கண்காதுகளிலும் சொருகிப்புதையும்படி கணைமாரிசொரிந்து சிரமும் கரமும் உரமும் அறுபட்டுச் சிதறிவிழும்படியடித்து தருமராசனுடைய சேனைக்கடலில் தான் தன்னைநிலையாக நின்று பாற்கடலைக் குழப்பிய மந்தரமலைபோற் கலக்கித்திரிந்து போர்புரிந்து வீமன், அபிமன்னு, கடோற்கசன், தருமராசன்முதலியவேந்தர் பலர்களுங் காந்திபோய் பிராந்தியாகக் கண்ணுக்கெட்டியதூரம் போர்க்களம் புழுதியுண்டாம்படி கறங்கேபோலும் குயவனுடைய திகிரியேபோலும் கரகரவென்று இரதம் சுழன்றுவரவும் கால்மாடு தலைமாடாகப் பிணங்கள் குவியவும் பேய்களாடவும் உதிரவெள்ளம் பெருக்கெடுத்தோடவும் மதமிறைந்த மலைபோன்ற யானைக் கூட்டமும் பந்துபோல் விசைகொண்டு பாயும் குதிரைக்கூட்டமும் காலைக் கிழித்தோடும் சேனைவெள்ளமும் தேசத்தரசரும் பிறருங்குலைகுலைந்து நடுநடுக்கத்தம் எண்ணமறந்து இச்சைதுறந்து திசாதிசைகளில் விழுந்தோடியிறந்து போம்படி சுடுசரமேதொடுத்து அலைகளிறைந்த கடலிலுறைந்த வடவைக்கனல் போல அழித்தெதிர்ந்து யாவரும் எதிரில்லாமல் அவ்விடம் விட்டுவந்து கிருஷ்ணார்ச்சுனனை மடக்கிக்கொண்டு சுவேதவாம்புரவியும்அழியாத இரதமும்முடியாத சாரதியுமுடைய அர்ச்சுனன் இவர்மேல் கணைபொழிந்து கருக்கிக்காய் கையில் ஸ்ரீகண்ணபிரானுடைய கரங்களும் கால்களும் ஓயும்படிவருந்த அப்போது அசைவற்றிருக்கும் அர்ச்சுனனைப்பார்த்து சொல்லுகின்றனர்.

அடாபாவி அருச்சுனா! காட்டுத்தீயேபோற் சேனைகள்முதலியவற்றை யெரித்து என்னையுங் குதிரைகளையும் இப்படி கொளுத்திக்கொல்லும் வீஷ்மன் மேல் வில்லெடுக்காமலும் ஒருசொல்லுரைக்காமலும் பாணம்விட்டுத் தடுக்காமலும் சும்மாயிருக்கின்றனையே, அப்பா அருச்சுனா! உன்னை நம்பிவந்தேனே

நல்லபோரில் என்னைக் காட்டிக்கொடுத்துவிட்டு அறியாதவன்போ லிருக்கின்றனையே, இதென்னமோசம் உன்னுடையநேசம் அதோஇதுமெத்த அதிசயம் என்மேலுனக்கென்ன வருத்தம் என்னைக்காவாமற் போனாலும் தருமராசன் முதலிய மன்னரைக்காக்கவேண்டுமே ! தன்மானம் பிறர்மானம் என்பது இல்லாமலிருக்கின்றனையே ! எனக்கென்ன மானமில்லையா! ஈனமில்லையா! ஊனமில்லையா! வெட்கமில்லையா! அக்காளக்காரனாகிய அர்ச்சுனா, உன்பாட்டனாகிய இந்த வீஷ்மனால் இப்படிப்பட்ட அடிபடும்படியாய் எனக்கேவிருந்ததலைவிதி, அப்பா என்பெண்டு பிள்ளைகளைவிட்டு உன்னை நம்பினன் தேர்விடவந்தது என்னுடைய பொல்லாதமதி விஜயனே நீநடுச்சயயத்திற் கழுத்தறுக்கமாட்டாமற்செய்தது, இதுநல்லசதி; அருச்சுனா இனியென்ஜன்மஜன்மத்திற்கும் உனக்குநான்தேரா விடேனென்று நீசெவ்வையாய் மதியென்று விழிசுழன்று கடுங்கோபங்கொண்டு செவ்வாம்பலையும் செம்முருக்கையும் செவ்வாக்கையும் செம்மையுஞ் சேர்த்துருக்கியதுபோற் கண்ணுமுகமுஞ்சிவந்து கரத்திற்பிடித்த கடிவாளக் கயிற்றினையும் குதிரைதூரத்துங் கோலையும் சுழற்றி எறிந்துவிட்டு தேரைவிட்டுத் திடீரென்று பூமிமேற்குதித்து ஒருவன் மெச்சி யெனக்கு லக்ஷங்கொடுக்க வேண்டியதின்று. ஒருவனுறவு எனக்கென்ன உதவியைச் செய்யும், ஒருவன் பகை என்னையென்ன பண்ணும், எவனெக்கேடுகெடினுமெனக்கென்ன; இராமனாண்டா லென்ன, எவனாயினும் எனக்கென்ன ஆகவேண்டுமென்று மனநொந்து தன்னாயுதமுந் தன்கைப்பொருளுந் தன்னிடத்திருந்தால் தருணத்துதவும், அன்னியரிடத்திற்கொடுத்து அவன்கையைப்பார்த்திருந்தால் அப்பாவி அவசரத்திற் கொடான், கொடுத்தவனுக்கு உடனே குறைவந்து நேருமென்று பெரியோர் பேசியவாசகம் நிசமாயிற்றே, நான்பேசியிருந்த உரிமைகளெல்லாம் வீண்போயிற்றே, இவனுண்டயஆயுதத்தையும் இவனையும்நம்பிவந்து எனக்கிக்கதியாயிற்றே, இவ்வேளையில்சும்மாயிருந்தாற் பழியாச்சேயென்று சுதரிசனப்படையை நினைத்தவுடனே அப்படைக்கலவரசு வந்துசுழன்றுதன் வலக்கரத்திலேறியது. அதுகொண்டு உகாந்தகாலாக்கினிபோற்சீறி வீஷ்மனைக்கொல்லும்படி மீறி திருவடிபெயர்த்தனன். அதுபோது ஆதிசேடனுடைய பணாமகுட நடநடவென்ன அமரர்முதலியோர் அரிகரியெனன் சக்கரக்கையன் காயாம்பூவெய்யனாகிய ஐயன்பைய நடந்தெய்திய பாண்மையைக்கண்டு தேரிற்றிகைத்திருந்த விசயன் திடுக்கென்றெழுந்து பூமியிற்குதித்து தனக்கு பகவற்கீதைசொல்லித் தரிசனங்கொடுத்த பங்கயம்போன்ற திருப்பாதங்களைப் பிடித்துக்கொண்டனன். அவ்வேளையில் விடுவிடுகாலையென்று வீசிநடக்க நானென்றும் அவனென்றும் இவனென்றும் சொல்லத்தகனவற்ற நன்னெறியைநாட்டி அவனருளாற்காட்டி அனற்குறியிட்டுப்பூட்டி இருகரத்தாலும் பற்றிக்கொண்டு துதிசெய்கின்றனன். ஓ ஆபத்பாந்தவா, ஓ அனாதரக்ஷகா, ஓ சர்வலோகசரண்யா, ஓ சார்வபௌமா, ஓ கஜேந்திரவரதா அரிகிருஷ்ணா, அரிவாமனா, ஆதிமத்பாந்தரகிதா, யதுகுலசிரேஷ்டா, சுவாமி என்னைமன்னிக்கக்கடவது, தேவரீருடைய திருவடித்துணைகள்வாழக்கடவது, தேவரீருடைய திருவருட்கண்கள் வாழக்கடவது, தேவரீர் அடியேனுடைய

மனுவொன்று கேட்டருளும் ஆதிமூலமே, இவ்வீஷ்மர் உமக்கொரு இலக்
கென்றுநினைத்தோ, 'இன்றுஅவனைக்கொல்வது அருமையென்பது குறித்தோ,
அன்று இரணியன், இரணியாக்கன், இராவணன், கும்பகருணன், கும்ப
நிகும்பன், முதலியோருடைய உயிரினும் இவருடைய உயிர வல்லுயிரொன்று
தேவரீர் சக்கரைப் படைகொண்டது திருமாலே பீதாம்பரதாரியாகிய உமக்கு
இவரீடோ தேவர்சிருட்டியிலுண்டாகிய உயிர்ப்பேதங்களில்இவரொவ்வணுவோ
அரிகரி இதென்னதந்திரம் கோபிகாலோலவென்று விசயன்துதித்து சுவாமி
உம்மை விட்டாற்றானே வீஷ்மனைக் கொல்லுவீர், உம்மை விடாமற்போயின்
நீரெங்கேகொல்வது பார்ப்போம் என்னுயிருள்ள வரையிலும் உன்னைநான்
விடேன் ஆண்டவனே, நீர் ஆயுத மெடுப்பதில்லையென்று சொல்லிவிட்டு இப்
போது ஆயுதமெடுத்துக்கொன்றால் அதுஎனக்குமிகுந்தகுறையாம், எனக்குப்
பழியுமிழிவுமுண்டாக்கும், ஆகையால் தேவர்கண்காண இவ்வீஷ்மர்முதலிய
படைகளையெல்லாம் முருக்கிமாட்டுகிறேன் என்றனன். அவ்வாறு பார்த்தன்
சொல்ல ஸ்ரீகண்ணபிரானுக்குக் கோபமிகுதியாய் அர்ச்சுனா என்காலை விடு
விடென்றுகூறித் தன்மேல் ஆதிகேசவன்கொண்ட கோபத்தை வீஷ்மரு
ணர்ந்து நமக்குஇன்று நாசகாலஞ் சமீபித்ததென்று நடுநடுங்கி மாற்றுயர்ந்த
பொன்னாலியற்றிய மகமேருவைப்போன்ற தேரைவிட்டிறங்கித் தனுர்ப்பா
ணங்களையும் வைத்துவிட்டு இருகரத்தையுஞ் சிரமேற்குவித்து எட்டுறுப்பு
நிலமுறப்பணிந்து விழுந்தெழுந்து வேதஉற்பத்திக்கு முதற்காரணமாகிய வித்த
கனே பர்தவனே அச்சுதனே பாற்கடலிற் பாம்பணையிற் றுயிலும் பரந்
தாமனே நற்குண நற்சிந்தை நல்லுருவமமைந்த திருமகளுக்கு நாயகனே,
நாராயணனே அற்புதனே, தெய்வநாயகனே, தேவர்கள் தேவர்கள் தொழு
தேற்றுஞ் சீதரனே, கஜேந்திரனென்னுங் காட்டானையை முத்திவீடாகிய கோ
ட்டாரத்தில் திருவடிக்கம்பத்திற்சேர்த்து அருட்கவளமூட்டிக்காத்து வாழ்வு
பெறவைத்த கசேந்திரவரதனே! என்னைகாத்தருளும், மேலும் சகலவரமுங்
கொண்டு சாகாவரமுங்கண்டு, மூவுலகாண்ட இரணியனை நரசிங்கமாய்த்
தூணிலுதித்துக் கைந்நகத்தாற்கொன்றனே, இதன்றியும் அண்டங்களையாண்ட
மாபலியினிடத்தில் வாமனவடிவங்கொண்டு மூவடிமண்கேட்டு பாதத்தாற்
பாதலத்திற் சிறைவைத்தனே, பின்னையும் இராமனாய் அரைக்கோடி ஆயுள்
கொண்ட இராவணன்முதலிய அரக்கரை அம்பினாற் செற்றவனே, ஆண்ட
வனே இப்படி வரங்களிலும் உரங்களிலும் சிரங்களிலும் கரங்களிலும் தனங்
களிலும் இனங்களிலும் தினங்களிலுஞ் சிறந்து அழியாவரம் பெற்றிருந்த
ஆற்றலையுடையாரை எல்லாம் தந்திரமாய் முடித்த சர்வசுதந்திரனாய் சர்வ
சுவாமியான உமக்கு என்னைக் கொல்வ தருமையோ, நாயினுங் கடையே
னாகியவென்னை ஒரு 'இலக்காகப் பாவித்துமிகுந்த கோபங்கொண்டு சக்க
மெடுத்துச் செந்தாமரைக் கமலத்திருவடி பெயர்த்து வரும்படியானதோ,
இப்பிரவஞ்சத்தில் யாவரும் முடியும்படி சரமதசையில் நின்னுடைய திரு
நாமங்களைச் சிந்தைசெய்து வந்திப்பதில்லை. ஆனாலப்படிப் பெறத்தக்க அரிய
தவத்தை யுடையார்போல கரியவண்ணனாகிய கண்ணனே! ஜனனமரண

வேதையிற் ருழாமலும் கொடியநரகத்தி லாழாமலும் தேவரீருடைய திருவடிமணங்குலவு பரமபதமெனக் குதவிசெய்ப நினைத்து, சக்கரமேந்தித் தரிசனந் தந்தமையான்நானிப்பிறப்பிற்செய்த தவப்பயனென்றுமில்லை, சன்மாந்திரத்திற் செய்த தவப்பயனே எனக்குத் தரிசனந்தரும்படி செய்தது. இனிநானிந்தக் கர்மபூமியில் கலவாமலிருக்கக் கருணைசெய்தாண்டருள்என்றுகைநடுங்கத் தோண்டுங் கேணியிற்கண்ணீரோட வுடல்சிலிர்த்து உண்மைஞானமுணர்ந்து அநேகவிதமாக தோத்திரஞ்செய்து, திக்குநோக்கித் தெண்டனிட்டனர். அவ்வேளையில் பக்தவற்சலனாகிய பரந்தாமன் பக்ஷமுடையவனாகக்கோபந்தணிந்து நிற்க, விஜயன் திருமாலைப்பணிந்து திருக்கரம்பற்றித் திரும்பியழைத்துக் கொண்டுவந்து தேவர்கள் யார்தடுத்தாலும் மூவர்கள் போர்தொடுத்தாலும், இப்போதே செய்கிறேன்பாரும், நீர்வாரும்தேர்மேலேறும் உட்காருமென்று தானுமேறிக்கொண்டு விஜயகாண்டீபத்தை யெடுத்துப்பிடித்து நிறுத்தி வளைத்து இழுத்து நாரிமாட்டி சுடர்தலை கொண்டதாகிய கூர்ங்கருணை ஆயிரம் ஐயாயிரம் பதினாயிரம் நூறாயிரம் கோடிகோடியாக வாரி மாரிபோலிறைத்து வானத்தை மறைத்தனன், கண்ணபிரான் மறுபடியுந் தேரேறிக்கொண்டு வாயுவேகமனோவேகமாய்ச் செலுத்தினர். வாசவகுமாரனாகிய சவ்வியசாசிசர்வசங்காரகாலருத்ரமூர்த்திபோல் வீஷ்மர்முதலிய சேனைப்படைகளை யெல்லாம் ஊழிமுடிவிலழிப்பதுபோலழித்து காடாக்கினியா லெரியுங்காட்டைப்போ லெரித்துக்கொண்டு வருவதைக் காண்பதற் கெவராலுங் கூடாதுக்கலங்க, தேவர்கள் கண்களை மூடிக்கொள்ளச் சந்திரசூரியர்முதலியகோள்களும் நிலைதடுமாறியசைந்தோடத் தாராகணங்கள் பலபலவென்றுதிரப் படைகளைத் தாக்கிப் போர்புரிந்து வந்தனன்.

இப்படி. ஆலைக்கரும்புபோலும் வேலைத்துரும்புபோலும், நைந்து நொந்தாடும்படியாய் வென்று வரும்போது வீஷ்மர் வீரபட்டத்தீரர்களை முடுக்கிவிடுக்க அவர்கள் திடுக்கென வந்தெதிர்த்துப் படுக்கெனப் பாணங்களைத் தொடுக்க அவைகளை அர்ச்சுனன்தடுத்து ஐம்முகப்பகழிகள் விடுத்து மகுடவர்த்தனராகியபடைகளைச் சேறுபடுத்தி அவர்கள் தலையுடைபட்டுப் பெருகுமூளைகளாற் றிசைகளிற் கரையேற்படுத்தி அத்திசைகள் வரையும்புரண்டு வழியும் உதிரங்களை ஆறுபடுத்தி நிலைபெற்றிருக்கும் யானைசேனை பரிவாரமாகிய படைமுழுதும் ஆயிரம் அம்பேவி அக்கும்புகளையெல்லாம் இறுகிப்பீடுத்தினன், இனி ஐயா அவ்வீஷ்மர் அனுப்பியவரில் எவர்கள்பிழைத்தனரென்று என்வாய்குளிரச்சொல்லவல்லேன் இறைவனை மீண்டும் சமுத்திரதீரவாசிகளாகிய திடவான்களையும் இராக்கதனையும் வினாவிற் செல்லவிடுத்தனர். பின்னர் அத்துனைகள் வந்தடுத்து தாங்கள்கற்றிருக்கும் பற்பலவற்புத விற்றிறமை வேற்றிறமைகளையும் காட்டினர். அக்கைக்காரனைத் தெரிந்துகொண்டு கீர்ண்டீவனகைத்து கூர்மையாகிய வாயுக்கணைபொரிகள் கக்கும்தேயுக்கணை நீரைச்சொரியும் வருணக்கணை காலமுடிவைச்செய்யும் உருத்திரக்கணை கும்பாகக் கூடிக்கொல்லும் தேவர்கணை இந்திரக்கணைமுதலிய பலவகைக்கணைமுதலியன இணையிணையாக இசைத்து எடுத்துத்தொடுத்து இழுத்து விடுகின்றமையால் முனைகொண்டு

வந்த தேர்வரிசைக ளெல்லாம் நொந்தழிந்துபோயின, வாளணிவரிசைகளெல்லாம் நொந்தழிந்துபோயின, கம்பமத யானைகளெல்லாம் கால்சாய்ந்திறந்தன, அம்புபோலெழும் புரவிகள் அடிதுணிந்திறந்தன. காவலரெல்லாம்பட்டு உயிர் விட்டனர். அச்சமயத்தில் முன்வந்தவர்களுக்குப் பின்துணையாக சல்லியராசன்முதலாகிய மத்திரதேசாதி பதிகளையும் சகலவயப் படைகளையும் சமரதத் தலைவர்களையும் வரவிடுத்தனர், பின்னர் அவர்களைக்கொண்டு அர்ச்சுனன் ஆசைகொண்டு பேசவேண்டுமென்றுவந்தவிடத்தில் அப்படைமன்னரால்அரசகாரியங்குறைவு வருமென்று நாராசக்கணையாகிய அஸ்திரங்களை யெடுத்து வீராவேசங்கொண்டு நடநடவென்று பற்கடித்து நரனைக்காய வந்தவர்கள், தங்களுக்குமுன்னாக வந்தவர்கள் படும்பாடுங் கெடுங்கேடும்பார்த்து இவர்களுக்குப் பின்துணையாகத்தானே வந்தோம் இவர்க்குப் பின்புறத்திற் றுணையாகப் பேசாமற் போய்விடுவது புண்ணியவசமென்று போர்புரியும்போதே பொறிநெறிவிலங்கி அறிவழிந்தனர் நீர்வளமுடைய மத்திரபூபாலனாகிய சல்லியனும் தேர்முறிந்து குவிந்துமலைபோனிறைந்துகிடக்கும் இடங்கண்டு மறைந்துபோவதற்குச் சுற்றிலுமிருக்கிற பேரைச் சேர்த்துக்கொண்டு ஓடிப்போயொளித்து உயிர பிழைத்திருந்தனர். இதல்லாமல் பாண்டவர்கள்காட்டிவிருந்தகாலத்தில் தாங்கள் நாட்டி விருந்துக்கொண்டு நானாவிதமாகத் தங்களுடைய வல்லபங்களைத் தாங்களேபுகழ்ந்து சொல்லிக்கொள்ளு நாவினையுடைய வயப்படைக் கொடிமன்னவ ரெல்லாரும்வாடி,படியைநாடிப்போகாமல் வேறிடநீடிப்போய்ப் பதுங்கினர். போர்முகத்திற் போர்செய்யத்தந்த துரியோதனன் தம்பியர் யாவருங்கூடவே விஜயன்கணை விசையாய்ப்புதைய வெருண்டோடி மறைந்தனர். அப்பால் மாகதர், சாகதர், மாளுவர், சாலுவர், குச்சரர், பப்பரர், வடுகர், குடகர், கன்னடர், மராடர், மரவர், தொட்டியர், ஒட்டியர், முதலாகிய பேர்களெல்லாரும் பற்குணன் பாணத்தால் அங்கம்பழுதாக வருந்திப்புகுந்தார்கள். இப்படி முடிமன்னர்முதலிய மன்னரையும் தாறுமாறாக நீறுநீறாகச்செய்யுந் தனஞ்செயனென்னுந் தனிச்சிங்கத்தின் கைத்திறலைக்கண்டு ஆடும்படியாகிய அரவக்கொடிதரித்த அரசன்வருந்தி அர்ச்சுனன்மேல் போர்செய்யப் போவோமென்று நினைத்து அப்படிநினைத்த மனத்தைமறுத்து அதினாலென்னபயன் நாம் போர்புரியப்போய் அச்சுமச்சு குத்துக்கால் குடை கொடி குதிரை சாரதியெல்லா நொறுங்கி புண்ணா யிருக்கின்ற நம்மார்பிலும் பாணங்களைத்துருவ அதனாற்றுன்பப்படுவதினும் மரியாதையாய்ப் பாசறையை நோக்கிப் போய்விடுவதேநன்று; அதைவிட வேறுநன்மைகள் நாமறிந்து செய்வது ஒன்றுமில்லை என்றுன்னி வேறுமொழிகளொன்றுஞ்சொல்லாமல் வாய்மூடிக் கொண்டு தியங்கித்திரும்பினான். இப்போர்க்களத்திற் பார்த்தனுடைய பகழியினால் பகைவர்களின் படையாகிய சமுத்திரம் உடையபட்டழிந்துபோகவே கோபிகைகளுடன்குலாவி மகிழுங்கோபாலன் இனிமேற்சண்டைக்குஎதிர்த்து வருவா ரொருவருமில்லை யென்றுணர்ந்து அன்புகொண்டு இராக்கதகண்டகனாகிய அருச்சுனனை அரும்பார்வையால்நோக்கி சாயங்காலமாயிற்று, இவ்விடத்திலும் படைகளைத்துப் போயிற்று, உமக்கும் புகழ்வாய்த்தது, இனிநமது

வாகினியினிடத்திற் றேரைக்கொண்டு போகலாமென்று கண்ணபிரான்கேட்க, தேர்திருப்பிவிடுக் தீனதயாளாவென்று சிலைவல்லோனுரைக்க, உடனே இரதத்தைத்திருப்பிப் பொங்கியிருக்குந் தங்கள் படையில்வந்துசேர்ந்தனர். இவ்விடத்திற் பனைக்கொடியோனும், மறைக்கொடியோனும் இன்னுஞ்சிலமன்னரும் பக்கங்களிற்படைநெருங்கதாமும் பாதுகாத்துக்கொண்டு சர்ப்பக்கொடியோனாகிய தராதிபனைப் பாசறையிற்சேர்த்தனர். இத்தன்மைபோரைநடாத்திய போர்க்களத்தில் விசயன்விட்ட வெய்யபாணங்களால் அறுபட்டயானைத்துதிக்கைகளெல்லாம் உதிரவெள்ளத்தி லசைந்தாடுவது எப்படி யிருக்கின்றதெனின், கருநிறங்கொண்ட மலைப்பாம்புகள்கவிழ்ந்தும் நிமிர்ந்தும் வளைந்தாடியதுபோலிருந்தது. கொள்ளை கொள்ளையாகிய உதிரவெள்ளம் பள்ளத்தில் நின்றுபெருகுவது கிரணம்பரப்பிய சூரியவட்டம் போன்றிருந்தது. இன்னும் காக்கைபருந்து கழுகுக்கூட்டம் மொய்த்துச் சுற்றிக்கொண்டு பறக்க இரண்டு காதுகளும்அறுபட்டுச் செந்நீர்வடியும் யானைகள் இந்திரனுடையவச்சிரப்படையாற் சிறகிழந்தசையும் மலைகள்போலிருந்தன, மேலும் இறந்துவீழ்ந்த வெற்றிவீரர்க ளெல்லாரும் தலையிற்றரித்திருந்த பொற்குவளைகள் தாளமாகவும், வில்லொடுநாணிகள் வீணையாகவும் யானைத்தலைகள் குடாமுழ வாத்தியமாககவும் எறிசக்கரவளையம் பிரமதாளமாகவுங் கொண்டு கவசகேயூரகிரீட குண்டலமணிந்துகொண்டு அர்ச்சுனனுடைய பெரும்புகழைப்பாடி ஆடும்படியிருக்கிறவர்களனந்தம். போர்க்களத்திற்கிடைத்த பிணங்களைத்தானுமுண்ணுமல் தங்களினத்தாரையும் உண்ணஒட்டாமற்பொறுமைகொண்டு தனித்தனிகுலைத்துக்கொண்டோடும் நாய்கள்பல, கிடைத்த பிணத்தைத்தாமுண்டு மற்றையருக்குக் கிட்டவொட்டாமற் கீழேமூடிப்புதைத்துவிட்டு அவ்விடத்தைச் சுற்றிக்கொண்டு தம்மினத்தவர் முதலியோர் வரினும்கூவிக் கத்திக்குழிபறித்து மண்ணைத் தூற்றித்திரியும் நரிகள்பல. சாதிபேதம் முதலியவற்றால் இறுமாய்படைந்து ஓரிடத்திற்கூடியாமென்றும் உண்ணுமல் பத்துப்பேரைக்காத்துத்தானுந்தின்னுமல், 'பறந்துபறந்து பாடுபட்டாலும்பகலுக்குச்சோறில்லை' என்னும் பழமொழிபோல் பாரப்பிணங்களைக்குவிக்கும்பூதம்பல, தன்னடக்கையையும் தன்செல்வத்தையும் தன்பிறப்பையும் தானிருந்தகதியையும் தான்செய்தமோசங்களையும் தன்பசிக்கு ஒருதவளை கிடைத்தாற்போதும் என்றிருந்த தற்கால வெண்ணத்தையுந்தாமெண்ணிப்பாராமல் இப்போர்க்களத்திற்குப் பத்துபிணம் அகப்படவே தன்னைத்தான்மறந்து தனக்குமிஞ்சிப் பிரவஞ்சமேயின்றுஎன்று தலைகுலுக்கி யானைப்பிணம் குதிரைப் பிணங்களிமேலேறி இரதத்திற் பாய்ந்து உதிரவெள்ளத்தினைநீந்தி ஆடல்பாடலுடன் அரமகளிர் மேலாசைகொண்டு நால்வர்நகைக்க நாளைவரப்போம் அவமானந்தெரியாமல்அலைந்துதிரிகின்ற குருட்டுக்கண்பேய்கள் பல, தாய்தந்தை மனைமக்கள் பிள்ளை தமயன்தம்பி உறவினர் முதலிய யாவரையுஞ் சேர்த்துப்பிடியாமல்தான் வாழத்தலைமகளறுத்தாற் போதுமென்று நினைக்கும் வழியைப்போற் பேராசைகொண்டு பாவபுண்ணிய மெண்ணிப் பாராமற்றிரியும் முரட்டுப் பேய்கள்பல, சொற்சோர்வினுற் சோம்பித்திரிந்து துன்பப்படுந் துஷ்டகணங்க ளனந்தம், கொலுக்கொ

லுக்கொண்டிருந்து சகலபூதப்பிரேதபைசாச கணங்களால் ஏவல்கொள்ளுங் காளிகளனந்தம், காளிக்கும் பூசையிடவைத்த கறியைத்தொட்டு முகந்துமூக் கறுப்புண்ட மூளிகளனந்தம், இதுவேயுமன்றி வெப்பமாகிய பிணக்குவியல் யானைப்பிணம் குதிரைப்பிணம் தேர்கள் இவைகளையெல்லாம் இராசியிராசி யாய்க் களஞ்சுத்தி செய்வோர்குவிக்க அந்தக்குபவிலிலிருந்து வழியும்படி யாகிய செந்நீர் மூளைமுதலிய ஊறுநீர் நிணநீர் இவைகளெல்லாங்கூடி மலை யருவிபோற் பெருகிவழிந்து வாராநின்ற வாய்க்காலனேகம், மேலும் அருச் சுனன்விட்ட பாணங்களினால் யானைவாயிலிருந்து செந்நீரும் நிணமும் திரண் டோடிவருவது பாலசுப்பிரமணியக் கட்வுளெறிந்த வேலாயுதம் புகுந்தவழி யே சிகரங்களையுடைய மலைகிழிந்து ஓடிவரும் கங்கைப் பெருக்கம்போலு மிருந்தது. இந்திரகுமாரனாகிய கேசவற்றோழன் றொடுத்த பாணங்களினாற் றுண்டித்துவிழுந்த அரசர்களுடைய மண்டைகளை நாய்கள் கவ்விக்கொண் டோடுவது எப்படியிருந்ததெனின், மனிதர்தலையும் நாயினுடலுங்கொண்ட மிருகங்களை யொத்திருந்தது. அன்றியும் பேய்க்கணங்கள் முதலியயாவும் கூடிக்கொண்டு பெண்ணுக்குப் பிள்ளையும் பிள்ளைக்குப் பெண்ணும்பேசிக் கல்யாணகச்சேரி முதலிய சம்பிரமங்களை யெல்லாம் அனுபவித்து விருந் துண்டுவேடிக்கை பார்த்திருந்தன. இப்பால், இந்த மூன்றுநாள் யுத்தத்தில் சரங்களினால் அறுப்புண்டிருந்த சேனைகள் முதலியவீரர்களின் மூளைகள் நிணங்கள் செங்குருதிக ளெல்லாந் தேகத்திற் றெறிந்ததென்று விரைவில் மேற்குக்கடலில் மூழ்கிப்போனவனைப்போல் சூரியன் அஸ்தமான மடைந் தனன். உடனே முடிமன்னர்முதலிய சகலசேனைகளும் பாசறைபுகுந்தனர். அவ்விடத்தில் துரியோதனன் துரோணர் சகுனி துச்சாதனன் இன்னமுள்ள மன்னர்களெல்லாருங் கூடியிருக்கையில் வீஷ்மர் அருச்சுனன்செய்த யுத்தத் திறங்களும் தானடத்தியபோரில் ஸ்ரீகண்ணபிரான் ஆயுதமெடுப்பதில்லையென் றும் சொல்லியிருக்க அவன் சக்கராயுதமெடுத்துத் தன்னைக்கொல்லவந்ததும் இவைகளையெல்லாம் விஸ்தாரமாய்ப் பேசிப்புகழ்ந்து மகிழ்ந்துகொண்டிருந் தனர், துரியோதனனுடைய படைவீரர்கள் முதலியவர்களெல்லாம் இற்றைப் போரிலிறந்துபோன உரியவர்களையும் பெரியவர்களையுங்குறித்து அழுதிரங்கிக் கொண்டிருந்தனர். பாண்டவர்சேனையில் துஷ்டத்துய்மன்முதலிய தளகர்த் தரும் சேனைவீரரும் தனஞ்செயன்செய்த சண்டைகளையும் வீமசேனனும் அபிமன்னும்புரிந்த போர்த்திறத்தையும் புகழ்ந்துக்கொண்டிருந்தனர்.

இவ்வாறு இருதிறப் படைகளும் அன்றிராத்திரி முழுமையும் நித்திரை யில்லாமல் அவர்கள் பட்டுக்கொண்டிருந்தபாட்டை இவ்வாறென்று நானெப் படி சொல்வேன், திருதராஷ்டிர பூபதியாகிய இறைவனே கேளென்று சஞ் சயன்சொல்லி, மறுபடியும் இரணகளத்திற்குவந்தனன். அற்றைநாட்செல்ல, மற்றைநாள் மாற்றுயர்ந்த பொன்மயமாகிய மகாமேருவைப்போல் உதயகிரி யும் பொன்னிறமாக வேண்டுமென்று சூரியபகவான் ஒளிபொருந்திய கிரணங் களை விரித்துக்கொண்டு மிகவிரைவி லோடிவந்து உதயமாயினன். அந்தச்சூரி யன் தளதளவென்று பளீரெனச்சிவந்து பிரகாசமாயோடிவந்து உதயமானது

எப்படி யிருந்ததெனின், சக்கரமேந்தி யாதவகுலத்தில் அவதரித்த நீலமே னியையுடைய நிமலன் நேற்றைத்தினத்தில் நம்மைத்தெய்விகமாய் நினைத்து அகங்கையிற் கொண்டருளினர், இன்றையதினமும் ஒருவேளை நம்மை நினைக் கும்படியாயிருக்கும், ஆகையால் நாம் அவருடைய திருக்கண்களுக்கெதிராகப் போயிருப்போமென்று பரிசுத்தமுடைய சுதரிசனமானது கீழ்த்திசையிலுதித் ததை யொத்திருந்தது ஜெனமேஜெய மகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டு வந்தனர். இச்சரித்திரத்தைக்கேட்ட ஜனமேஜய மகா ராசன் மிகவுங்களிப்படைந்து வபுஷ்டாதேவியுடனெழுந்து பூமியில்விழுந்து போற்றிப்பணிந்து புகழ்ந்துமகிழ்ந்து புண்ணிய சொரூபனே, நான்காம்போர் நடக்குந்திறத்தைநவில வேண்டுமென்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

மூன்றாம்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

---

## நான்காம்போர்ச்சருக்கம்.

விருத்தம்.

தேடியவகலிகைசாபந்தீர்த்ததாள்
நீடியவுலகெலாமளந்துநின்றதாள்
ஓடியசகடிறவுதைத்துப்பாம்பின்மேல்
ஆடியுஞ்சிவந்ததாளென்னையாண்டதாள்.

அரசனே! நளினநாயகனுகிய சூரியன் உதயமானவுடனே, யாவரு மெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு சூரியனைத்தொழுது யுத்தகோலங் கொண்டு,பூரி, கொம்பு, தப்பட்டை,தவுண்டை, மல்லரி, சச்சரி,பேரி, சங்கு, பம்பை முதலிய வாத்தியங்களுமுழங்க யுத்தகளம்வந்து சோர்ந்து ஸ்ரீநாத னுடைய உத்தரவின்வண்ணம் சகலபடைகளையும் சத்திர யூகமாகவகுத்து யுத்தத்திற் கெத்தனமாக நின்றனர். அவ்விடத்தில் துரியோதனன் முதலிய வர்களும் யுத்தபூமிக்குவந்து துஷ்டத்துய்மன் வகுத்த யூகத்தைப்பார்த்துத் தாங்களும் கருடயூகம் வகுத்துக் கண்சிவந்து நின்றனர். அந்தவேளையில் இருதிறச் சேனாதிபதிகளும் போர்புரியும்படியாய்க் கொடிமுடியுஞ்சாய்த்தனர். அப்படி சாய்க்கவே இருதிறச் சேனைகளுங்கடல்போலிரைந்து இருளைக் கூச்ச விட்டோட்டும்படியாகிய போர்முரசம் முழக்கிக் கோபங்கொண்டு பொங்கிப் பேரிரைச்சலிட்டுக்கைகலந்துபோர்செய்தனர். சக்கரதாரனுகியசர்வசுவாமியை யும், அவன் மைத்துனனுகிய அருச்சுனனையும், சாஸ்திர விவேகத்திற் சிறந்த வீஷ்மர் எதிர்த்துக்கொண்டனர். பாண்டவ சேனாதிபதியாகிய துஷ்டத்துய் மன் தனக்குக் காரணப்பகையாகிய துரோணரை வளைத்துக் கொண்டனன், ஈரேழுலகிற்கும் ஆதாரமாயிருக்கிற மகமேருவை அநேகங்கோடி மலைகள் சூழ்ந்துகொண்டா லெப்படியோ அத்தன்மைபோற் பருத்த புயமலைதாங்கிய வீமசேனனை நிர்வாகசாலிகளாகிய அரசர்களும் யானைக்கும்புகளும் தேர்க்

கூட்டங்களும்சேர்ந்து தெழித்துவளைத்தனர். சிற்சிலவிதமாகிய வீரர்களும்
பற்பலவித மன்னரும் பற்பலவிடங்களிலும் அமர்செய்தனர், அந்தவேளையில்
வீமன் வில்லிற்பாணந்தொடுத்து வெகுநேரம் போர்புரிந்து அப்பால் தேரை
விட்டிறங்கி ஆலகாலவிஷம் வெளிப்பட்டுமுழங்கி அவனிமுதலிய அண்டங்
களை அழிக்கப்புகுந்ததுபோல இந்த வீமசேனன் வெறுங்கையுடன் யானைப்
படைக்குட்புகுந்து யானைகளைவாரி ஒன்றோடொன்றை அறைந்து எலும்பு
கழற்றிவிட்டபடியால் தோலினமென்னும் யானைகள் தோலாகவே விழுந்திறந்
தன, இன்னுஞ் சிலதோலினங்களை வீமன்பிடித்துக் கிழிக்குமிடத்து தும்
பிக்கையும் மேல்வாயும் வீமசேனன் கரத்திலிருக்க கீழ்வாய்கீழே தொங்குவதி
னால் நால்வாயென்னும் பெயர் மறையாமல் அசைந்தாடும் வாயுடன் அழிந்
திறந்தன, சந்திரவட்டக்குடைதரித்த வீமசேனன் குதித்துக் குத்திக்கொல்லு
கின்ற நால்வாயென்னும் யானைகள் சிந்துரமென்னும்பெயர் மாறாமற் சிந்துரப்
பொடியாய்ச்சிதைந்து வீழ்ந்திறந்தன. மேலும், வீமசேனன் வெறுங்கையால்
சிந்துரங்களைப்பிடித்து ஒருகைமேல்வைத்து மற்றொருகையாற் குடலற்றுவிழக்
குத்துகின்றகுத்தினால் தோல், மாமிசம் நிணம் தசைமுதலிய யாவும் அழிந்து
வழிந்துபோய் அத்தியென்னும் பெயர் மறையாமல் அத்தியென்னும் வெற்
றெலும்புகளாய் விழுந்திறந்தன. மேலும், வீமசேனன் கந்தடர்க்கும் தோளி
னாற்கலக்குகின்ற அத்திகள் தந்தாவளமென்னும் பெயர் மறையாமல் தாங்கள்
பிறந்துலவும் தந்தாவளமாகிய மலைப்பக்கங்களில் மறைந்தன. சோகந்தீர்க்
கும் வாயுபுத்திரனாகிய வேகமுள்ள வீமசேனன் பலங்கொண்ட புயத்தினால்
இடித்துக்கொல்லும் தந்தாவளங்கள் வாரணமென்னும் பெயர் மறையாமல்
வாரணமாகிய கோழிகளைப்போற் குன்றி யிறந்தன. மேகம்போன்ற நிறத்
தினையுடைய பெரியவடிவத்தையுடைய மலைபோன்ற வாரணங்கள் உடல்
குழுங்கிப்போய் உதிரவெள்ளம் கடகடவென்று கடைவாய்வழியே வழிந்
தோடி வரும்படி வீமசேனன் தாமரைக் கமலம்போன்ற உள்ளங்கையால்
அழுக்கிப்பிடித்தெடுத்து ஆகாயத்தி லெறிந்தபடியால் தும்பிகளென்னும்
பெயர் குன்றாமற் றும்பிகளாகிய வண்டுகளைப்போற் பறந்திறந் துதிர்ந்து
விழுந்தன. மின்னலைக்கொண்ட பொன்மலைபோன்ற கதாயுதத்தைப் பொன்
னாரமணிந்த புயத்திற்கொண்டு முன்னாகவந்த யானைகளையெல்லாம் மோதி
யடித்துக் கொல்லுதினால் மலைக்கொப்பாகிய நாகமென்னும் பெயர்கொண்ட
தும்பிகள் நாகமென்னு மலைகளைப்போற் போர்க்களமெங்குமடிந்து புதைந்து
சிதைந்து மிதந்து குவிந்தன, மேலும் தந்தக்கொம்புகளும் துதிக்கையும் வீம
சேனன் கைகளாற் பிடித்துச்சுழற்றப் பிடுங்குண்ட நாகங்களெல்லாம் உதிர
வெள்ளத்தால் நனைந்து சகல வீரர்களும் உதிரவெள்ளத்தில் முழுகியெழும்
படி உதிரஞ்சுரப்பதனால் கயங்களென்னும் யானைகளெல்லாம் ஸ்நானஞ்
செய்து முழுகும் ஊறுகயங்களை யொத்தழிந்தன, மேலும் கயங்களைவாரி
வீசுகின்ற வீமசேனனுடைய முகங்கரங்கால் உடல் மார்பு இவைகளெல்லாம்
குழம்பாய் மூடிக்கொண்டிருப்பதினால் களபமென்னும் யானைகள் உடலிற்
பூசிக்கொள்ளுங் கலவைச்சாந்தாகிய களபமாகியதுகளை அன்றியும் மலைகளைப்

போலெதிர்த்து நெருங்கிப்போர்புரியவந்த களபங்களெல்லாம், எட்பொரி நெற்பொரிபோல ஆகாயவீதியிற் பறக்கின்றமையால் பங்கமில்லாமற் சண்டைசெய்யும் சிங்கங்கள்போன்ற வீமசேனனுடைய ஆண்டன்மையானது தருமத்தைத் துணையாகக்கொண்டு எவர்களாலு முடிப்பதற்கருமைவாகிய சகல காரியங்களையும் வெற்றிபெறச் செய்துகொள்ளும் பெரியோர்க ளென்பதற்குச் சான்று இதுதானென்பதுபோற் கரியென்னும் யானைகளே கரியாய்க்குவிந்தன. இப்படியாகக் கோபங்கொண்டு வீமசேனன் கடல்போற்புறண்டுவந்த யானைக்கூட்டங்களை யெல்லாங் கலக்கித் தலையும் குலையும் உடலும் குடலும், காலும், வாலும், தோலும், தும்பிக்கையும், உடம்பும் நிணமும் மதமும் ஊனும் உதிரமும், மூளையும், சிதைந்து வழிந்து கூழ்போற் குழம்பிச்சேறு கும்படியாய்க் கொன்று குவித்து அண்டையயலில் யாவரும் இல்லாமற் சண்டைசெய்துகொண்டுவந்த காலத்தில் எதிரிகள் மேலிட்டு எதிர்த்துப் போராடினர். அவ்வேளையில் வீமசேனன் கைபாராமற்புகுந்து சுடசுடக்கையாலறைந்து தேரணிகள் குதிரைப்பந்தி படைவீரர் பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் மன்னர் யாவரும் பின்னிட்டோடமுடித்தும் வெகுசனங்களை முடித்தும் வானத்திலும் வாரியெறிந்தும் மசகமாகிய கொசுப்போல்கையாற் பிசைந்து கொல்லும்போது வந்தவழியெந்த வழியென்றுணராமற் சிந்தைநொந்து வாடிமுகம் வைத்தவாறே ஓடினர். அப்படியோடுவதை அரவக்கொடியோன் கண்டு மனந்தளர்ந்து விசனங்கொண்டு தளர்ந்தோடிவந்த அந்தச்சேனைகளைக் கையமைத்துத் தன் தம்பிமார்களும் தானுஞ்சேர்ந்து கொடிகுடைமுதலிய விருதுகளுடன் முரசு பேரி பூரிமுதலாகிய வாத்தியங்களுமுழங்கப் படைமன்ன ரநேகர் புடைசூழவந்து வீமசேனனை வளைத்துப் போராடினான். தனனுடன் போர்செய்யவந்தது கண்ட வீமசேனன் அன்புகொண்டவனாய்த் தேரிலேறிக்கொண்டு பாரியவில்லைவளைத்து அச்சித்தைவிளக்கும்நச்சுக்கணை தொடுத்து அத்துரியோதனன் கைக்கொண்ட வில்லையுமுறித்து அவன்தரித்திருந்த சேமக்கவசத்தையுஞ் சிதைத்தனன். திங்களங்குடையுஞ் சிங்கக்கொடியுமுடைய வீமசேனன் மறுபடியும் வேறுவில்லெடுத்து நாணிமடுத்து பாணந்தொடுத்து வருவதன்முன்னே ஆறம்பைத்தெரித்து அரவக்கொடியை முறித்து கூரம்புக்கும்புகளாய் நூறம்புசெலுத்தி துரியோதனனுடைய மார்பு முதலியதேகத்தினுழைந்து வேறேஅம்புகள்விடுக்காமலிருந்தனன். அச்சமயத்தில் வணங்காமுடியோனாகிய துரியோதனன் ஆற்றிக்கொண்டு வீமன்விட்ட பாணங்களை யெல்லாம் விலகச்செய்து பதிலுக்குப்பதிலாக ஆறம்பும் உடனே ஒருநூறம்பும் வீமசேனனுடைய சிங்கக்கொடியிலும் தேரிலும் தேகத்திலுந்தெரித்தனன். அப்போது துரியோதனன் கணைகளினால் வீமசேனனுடைய சிங்கக்கொடிமுறிந்து தேருஞ்சிதைந்து தேகத்திலும்புகுந்து துளைக்கும்போது வெற்றிமிகுந்த கடக கங்கணவலயமணிந்த தோளைத்தட்டிக்கொண்டு அண்டமுகடு வெடிபடும்படியாய்முழங்கி அயர்ந்துநின்றனன். அந்தவேளையில் மகிபதிபுத்திரனால் வீமனிளைத்தனனென்று கூர்மைதங்கிய வேலாயுதத்தைத்தாங்கிய அநேகங்கோடி மன்னர்களும் மாலைமுடியுங்கவித்த மகுடவர்த்

தனரநேகரும் நகுலசகதேவரும் மிக்கதிரளையுடையராகிய புத்திரரும் மித்திரரும் மைத்துனர் முதலானவரும் வீமசேனனுக்குத் துணைகூடினர். இப்படி விரித்த வெண்குடைதரித்த மன்னவர்முதலியவர்களெல்லோரும் வீமசேனனுக்குப் படைத்துணைவந்தனரென்று நந்தியாவட்டமாலையணிந்த நராதிபனுக்குத்துணையாக இரதகஜதுரகபதாதிகளுடன் பூபாலரநேகர் நவகோடிகோபாலரநேகர், தம்பிமார்முதலியவர் அம்புவியாளும் அரசர்க்கரசனையடுத்தனர். இவ்விருவருக்குந் துணையாகவந்த முடிமன்னர்முதலியவரும் எதிர்த்து ஒருவர்க்கொருவர் இளையாமல் நிலைபெற்றுநின்று அதிர்ச்சிவிளைத்து சிறுநாண் வலியால் பேரோசைவிளைத்தனர். அவ்வோசையினால் அகிலாண்டமுற்று மதிர்ந்து மண்டலத்துடன் எட்டுத்திக்குங் கலக்கும்படியாய் முதிர்ந்த யுத்தஞ் செய்தனர். இப்படி இருதிறப்படைகளும் போர்புரிம்போது ஒருவர்மேலொருவர் தொடுக்கும் விஷக்கணைகளினால் பலம்பொருந்திய தேர்களழிந்து சிரத்திற்றரித்த மகுடந்துணிந்து, பூமியிற்றேகம் அயரவும் பிராணன்வானிலுயரவும் உடலபிமானமறந்து மடிந்தனர். இப்படி சேனையும் வீரர்களும் யுத்தஞ்செய்யும்போது இரதத்தை இடசாரி வலசாரியாகச்சுழன்று எதிரெதிராகப் பற்கடித்து துரியோதனனும் வீமசேனனும் திவ்வியாஸ்திரப் பிரயோகஞ்செய்து நெடுநேரம்வரையிலும் கடும்போர் விளைத்தனர். அவ்வேளையில் வீமசேனன் அரசனுடைய கணையை அரைகுறையாகக் குறைத்து அவனியைமறைத்து பிறைமுகக் கணைகளைநிறைத்து. நந்தியாவட்டமாலையணிந்த நராதிபன் கைக்கொண்டிருந்த வில்முறிபடவும் வேகங்கொண்டோடுங்குதிரைகள் தறிபடவும், தேர்த்தட்டொழியவும் மேற்றட்டழியவும் சிகரமுங்குடையுந் தேருமழிந்து துரியோதனனுடைய மார்புங்கிழிந்து, திரண்டு புரண்டு உதிரம் வழிந்து தளர்ந்துவிழும்படிதாக்கி எதிரேநின்று நகைத்தனன். அந்தப்பிறைமுகக்கணை மார்பிற்பட்ட மாத்திரத்தில் மரவட்டைபோற் சுருட்டிக்கொண்டு பூமியில்விழ்ந்தான் வணங்காமுடிபெற்றமன்னன், அப்படிவீழ்ந்தவுடனே சகுனி சல்லியன்முதலிய மன்னவர்கள் துரியோதனனுடைய தம்பிமார்கள் இவர்களெல்லாரும் பார்த்து முகம்வியர்த்து இரக்கமுற்று தேகநடுங்கித் திடுக்கிட்டுத் துரியோதனனை யெடுத்தணைத்துச் சிந்தைகலங்கி நேற்றையுத்தத்திற் கடோற்கசனென்பவன் முனைக் கணையுய்த்து மார்பைக்கிழித்து முடங்கும்படிசெய்தனன். இன்றை யுத்தத்தில் அந்தக் கடோற்கஜனைத்தந்த தந்தையாகிய வீமசேனன் பிறைமுகக்கணையாற் பூமியிற்றள்ளினன்; ஐயோ, நமது அரசனுடைய பிராணனை அப்பனும் பிள்ளையும் நாள்மாற்றி நாள், பங்குபோட்டுக் கொள்ளுவதுபோலுமிருக்கின்றதேயென்று கண்ணீர்பெருக்கிச் சோர்ந்து தமயனுக்கு உபசாரஞ்செய்யும்படியாய், தகுந்தவரை அனுப்பிவிட்டு தம்பிமார்களெல்லோருங் கூடி எங்கள் தமயனாகிய துரியோதனராசனுக்குத் தேகம்வருந்தியிருப்பதால், இப்போது யுத்தஞ்செய்வதற்கு வரமாட்டார் ஆகையால் நீங்களெல்லோரும் ஒரே உறுதியாய்ப்புறப்பட்டு நிலைத்துநிற்பீர்களாகில் அந்த வீமனைவளைத்து என்றமயன் பட்டபாடு அவன்படும்படியாய்ப் பாடுபடுத்தி சந்தோஷங்கொண்டுவரலாமென்று அநேகம் வீரர்கள்

முதலிய யுத்தவித்தகரையும் அழைத்துக்கொண்டு கடகடவென்று தேரைச் செலுத்திச் சிறுநாணோசைசெய்து கணைமாரி பொழிந்தார்கள். அவர்களைப் படிப்பட்டவர்களென்றால் கோபாலனாகிய கோவிந்தன் கோபாலனஞ்செய்வதற்காகச் சுண்டு விரலிற்கோவர்த்தன கிரியைக் குடையாயெடுத்துத்தடுக்கப் பொழிந்த காளமேகத்திற் கொப்பாகியவர்கள் அவர்களெல்லோரும் ஒரேமுகமாகக்கூடி யுத்தஞ்செய்யும்போது வீமசேனன் வெகுண்டு வில்லிடத்திற் கடும்பாணங்களை விசையாகத்தொடுத்து வந்தடித்துப் போர்கொடுத்த வீரர்களைப் பார்த்து இனிமேலென்ன யோசனைசெய்யப்போகின்றீர்களென்று அவரவர்களேறிவந்த இரதங்களைமுடிய இடியச்செய்து அவரவர்கள் பிடித்திருந்த விற்களை முறித்து உடல்களிலும் கணைகளைநிறைத்துத் தொளைக்கவே ஒருவரும் எதிர்நிற்கமாட்டாமலிளைத்தனர். அந்தவேளையில் துரியோதனனுடைய தம்பிமார்கள் ஐம்பூதம்போல் ஐவர்வந்தெதிர்த்து வீமசேனனை வளைத்து அலைக்காற்றிலடிக்குஞ் சருகைப்போற் குலைந்தலையச்செய்தார்கள். அப்போது வீமசேனன் ஆங்கிரமித்துத் துரியோதனன் மேற்றொடுத்துவிடுத்த தன்மையைப்போல்வெற்றியையுடைய ஐந்துபிறைமுகக்கணைகளை எடுத்துவிடுத்தான். அந்தக் கணைகள்போய் மருமத்திற்றைக்கவே சேனாவிந்து சுதக்கணன் பிங்கலசன் சலாசநன் வீமவாகுவென்னும் பலம்பொருந்திய தம்பிமார்களைவரும் உயிர்துறந்தனர், வீமனவர்களைக்கூவி தம்பிமார்களே உங்கள் தமயனாகிய துரியோதனன் எங்களைவரையுங் கானாளவிடுத்துக் கசக்கிறான், அவன்தெரியாமற்செய்தாலும் நாங்கள்அதைக்குற்றமாயெண்ணிப்பாராமல் அந்தக்குறைகளை மனத்தில்வைக்காமல் உங்களருமைபெருமைக்குங் குறைவில்லாமல்மேலாகிய இடத்திற்கனுப்பிவைத்தேன், நீங்கள் புத்திசாலியாய் வானுலகத்திற்போயிருந்து மார்க்காயாசந்தீர்த்துக்கொண்டு இனிவரப்போகின்ற உங்கள்தமயன்தம்பியர்கள் முதலியவர்களுக்கு நல்லவாசஸ்தலமாக இடமேற்படுத்திக் கொண்டிருங்கள்; அப்பா என்சகோதரர்களே நீங்கள் அறியாதவராகையால் வீமசேனன் நம்மை பிரித்துவிட்டானே யென்று என்மேற் கோபம்பண்ணாதீர்கள் ? அண்ணா அவர்கள் முதலாகியவர்களை இன்னம் பத்துப்பதினான்கு நாளைக்குள்ளாக அனுப்பிவைக்கிறேன், நானப்படி அருமைதெரியாதவனல்லவே நீங்களாயாசப்படாமற்போங்கள் ஐயா அவர்களுக்கும் அம்மா அவர்களுக்குஞ் சஞ்சயனாற் றெரிவிக்கிறேனென்றுசொல்லி அம்பாரமாகிய நூறுபேர்களில் ஐந்துபேரைக் கதாயுதமென்னும் அளவுகோல்கொண்டு, இலாபம் என்று அளந்து நாய்நரி கழுகுகளுக்கு குடிவாரமுடலாகவு நமனுக்கு மேல்வாரமுயிராகவும் அனுப்பிவைத்து வளர்பிறை சதுர்த்தியில் விக்நேஸ்வரனைப் பிரார்த்தனைசெய்து முகூர்த்தங்கொண்டனன். துரியோதனனை இப்படிபோக்கிவிட்டுமற்றப் படைகள்மேற்றிரும்பி யுத்தஞ்செய்யும்போது தம்பியர்களிறந்தார்களென்னுஞ் சங்கதிதெரிந்துகொண்ட சர்ப்பகேது தளதளவென்றுகொதிக்குந் தாறுபோற் கொதித்து நாலுவிதச்சேனைகளும் ஆறுவிதப்படைகளும் தம்பிமார்களுந் தானுஞ்சகுனியும் தாலக்கொடியினனாகிய வீஷ்மரும் மன்னர்முதலிய நாதிபரும் வந்து சாகரம்போல்வளைந்துகொண்டனர். அக்காலத்தில் தருமராசனுடைய

படையிலிருந்து சகலவீரர்களுங்கூடிக்கலந்து ஒருபக்கத்தில்வீமன், ஒருபக்கத்தில்விஜயன், ஒருபக்கத்தில் அபிமன்னு, ஒருபக்கத்தில் நகுலன், ஒருபுறத்திற் சகாதேவன், ஒருபுறத்தில்அரவான், ஒருபுறத்தில்கடோற்கஜன், ஒருபுறத்தில் அஞ்சனவர்மன், ஒருபுறத்தில் இளம்பஞ்சபாண்டவர்கள்முதலிய புத்திரவர்க்கம், ஒருபுறத்தில் பாஞ்சாலன், ஒருபுறத்தில் துஷ்டத்தூய்மன், ஒருபுறத்தில் உத்தமபானு, ஒருபாரிசத்தில் விராடன், ஒருபாரிசத்தில் கீசகன்பிள்ளையாகிய பிரீதிவன், ஒருபாரிசத்தில் குந்திபோசன் பிள்ளையாகிய மந்தன் சுமந்தன், ஒருபாரிசத்தில் சராசந்தன் பிள்ளையாகிய சகாதேவன், காசிராஜன் பிள்ளை, மலயத்துவஜபாண்டியன் பிள்ளையாகிய பிரீதிப பாண்டியன், ஒருபாரிசத்தில் சிசுபாலன் பிள்ளையாகிய துஷ்டகேது, ஒருதானத்தில் கிராதர் அவுணர் ஆந்திரர் புண்டரீகர், ஒருதானத்தில் போஜர் பாஞ்சாலர் சோமுகர் சிரஞ்சேயர் மார்ச்சர் மாகதர் திரிகாலவாசுதேவர் திரிபுண்டர வாசுதேவர், ஒரு இடத்தில் சேரன் சோழன் பாண்டியன் முதலாகியபேர்களும் மொய்த்துக்கொண்டு போர்புரிந்தனர். இப்பெருங் கும்புகளினாலும் இவர்கள்விடும் அம்புகளினாலும் துரியோதனன் முதலியபெருஞ்சேனைகளெல்லா மடைந்து புறமுதுகிட்டு ஒழிந்து ஓடியொளித்தனர். இப்படிவாடியோடிய சேனைகளைக் கண்டு அஞ்சாதீர்களஞ்சாதீர்களென்று அதட்டிக்கொண்டேவந்தெதிர்த்தான்; அவனாரெனில் தேவர்கள் பொருட்டு அசுராதிபர்களைவென்று மண்டலத்தரசர்களுக்கு மகுட சிகாமணிபோன்று சூரியனைப் போற்றுலங்கி பஞ்சகதிகொண்ட பஞ்சகல்யாணப் பசும்புரவிபூட்டிய தேரினையுடைய பகதத்தனைவன், ஐயா! இந்தப்பகதத்த னென்பவன் ஆதிவராகமூர்த்திக்கும் பூமிதேவிக்கும்பிறந்த நரகாசூரனுடைய பிள்ளையென்றறி, இப்பகதத்தன் காற்றினால் அலைகளெறிந்தாடும் கருங்கடலைப்போல் கலங்காநின்ற யுத்தகளத்தில் உலகத்திலுள்ள மலைகளெல்லாம் காலும் வாலும் பெற்றுவருவதை யொத்த பதினாயிரம் யானைகளுடன் துதிக்கையுங் கொம்புங்கொண்ட மதத்தயானையின் மேலேறிக்கொண்டுவந்து வில்லைவளைத்து நீமுகப்பகழி திரிமுகப்பகழி யென்பன வற்றைத்திருத்தி விடுத்துச் சத்துருக்களின் தலைகளைக் கொத்துக் கொத்தாய்த் தறித்தனன். அவனெப்படிப் பட்டவனெனின், கொலைபுரியும் கோபக் கண்ணினையுடைய யானைக்கும், அப்படிப்பட்ட யானையைக்கொல்லா நின்ற சிங்கத்திற்கும் மானிடதேகமாகிய மன்னுயிர்களை வறுத்தும் இயமனுக்கும் இயமனாக விருக்கின்றவன், இப்பகதத்தனுடைய தோள்வலிமையையும் கணைவலிமையையும் விரபட்டமும்வெற்றிமாலையும்பெற்ற பதினாயிரம் யானைப் பெருக்கத்தையும் யுத்தகடக்குந் திறத்தையும் அவரவர்கள் மனவுறுதியையும் பாண்டவர்களுடைய படைகள்பறக்கும் பதர்போற் படும்பாட்டையும் கடோற்கசன் கண்ணாரப்பார்த்து பரிதாபங்கொண்டு அப்போதே மதங்கொண்ட நூறாயிரம் யானைகளும் மகாகாதகரைப்போற் கடுங்கோபமுடைய காலாட்களும் பாகராகிய மேலாட்களும் திவ்வியாஸ்திரங்களும் சிதையாத விற்களும் சேனைமுதலிய ஆயுதங்களும் கருங்கடல்போன்ற சேனைமுதலிய ஆயுதங்களும் தானாகி மாயவேடங்கொண்டு மலைநாட்டிலிருந்து வருவதைப்

போல்வந்து உலகமிருளும்படியாய் இருதிறப்படைகளும்மருளும்படியாய் முன் வந்த யானைப்படைகளெல்லாம் வெருளும்படியாய்ப்போர்மூட்டி வலம்புரிமுதலிய சங்குகள்முழங்க வெற்றிமுரசமார்ப்ப சச்சரியடிக்கத் தாரைபூரி யூதும்படியாய்ப் போர்முகத்திற்புகுந்தபோது ஆனைக்கும்புகள் வருங்காலையிலெழுந்த தும்புகள் தேவர்கள் பார்வைகுறையும்படி கண்களைப்புதைத்து திரையாழி நீர்வறளப் பள்ளத்தை சிதைத்துத் தாவியெழும் ஒரு சிங்கமானது மலைபோன்ற யானை மத்தகத்திலேறிவருந் தன்மையைப்போல் எவ்விடத்திலுந்தானாகவிருந்து பகதத்தனுடன் தகதத்த வென்றெதிர்த்து மலைந்தனன். இவ்வண்ணம் வீமசேனன் புத்திரனாகிய கடோற்கசக் காளையானவன் காளமேகம்போலெதிர்த்து ஒவ்வொருசரங்களை மும்மூன்றுதர மழைபோற்பொழிந்து முஷ்டிநிலைகாட்டி ஈட்டுக்கீடாய் எதிரொதிர்நின்று பெருமூச்சுவிடுத்து மெய்யைப்போற் கொடும்போர்செய்தனன். அந்தப்பகதத்தன்விடுத்த பதினாயிரம்யானைகளும் பொய்யானைப்போல் வந்துநின்று போர்புரிந்து பொரிந்து பொடிந்து ஒடிந்துமடிந்து குறைந்தன. ஆனால் மெய்யானைகள் குறைவானேன் பொய்யானைகள் நிறைவானேனென்றால் பொய் பூரணச்சந்திரன், ‘மெய் விளக்கொளி மழுக்கம்’ என்னும் பழமொழியைப்போற் குறைந்தன. இதன்றியும் நின்றார் நின்றபடி தேருக்குநேராக வோடிக்கொன்றனர். பதினாயிரம் யானைக்கும்புகளையும்வென்றனர். இந்தப்படி நடத்திய யுத்தத்தினால் வெற்றிபெற்ற மன்னவரியாவரும் அக்கினிக்கணையால் மடிந்தனர். யானைக்கும்புகளெல்லாமழிந்து குவிந்தன. இந்தப்படி பகதத்தனுடைய படைவீரர்களையும் யானைக்கும்புகள் யாவற்றையுங் கொன்றுவென்ற வீமசேனனுடைய குமாரனாகிய கடோர்க்கசன்செய்த மாயையினாலாகிய வீரர்களையும் அவர்களால் மாய்ந்த யானைகளையும் பகதத்தன்கண்டு கண்கலங்கிநல்லது இன்றையுத்தத்தில் நமது யானைகளெல்லாம் நாசமாயிற்றல்லவாவென்று நடநடவென்று பற்கடித்துபோனதுபோகப் பிழைத்திருக்கும் பிள்ளைகளும் போர்மன்னர்களும் பின்னிட்டுப் போங்களென்று இரைந்துசொல்லித்தானும் விரைந்துசென்றான் அப்போது அந்தச்சேனைமுதலிய வீரர்களெல்லாரும் திரும்பிவிட்டனர். அப்படி திரும்பிப் போகும்படியாகிய படைமன்னர்களைச் சூரியன்பார்த்து சரிதானே மெய்யைகொண்டால்வெல்லாம் பொய்யைக்கொண்டாற் செல்லலாமென்னும் பொருள்போற் கடோற்கசனுடையமாயைக்குஉயிர்தரிக்கமாட்டாமல் எல்லாரும்ஓடிப்போய் விட்டார்களே நான்மாத்திரம் இவ்விடத்தி லிருக்கப்போமோவென்று ஓடினவனைப்போல் சூரியனும் புறமுதுகிட்டுகொந்தியாகிய சிவப்புவஸ்திரத்தால் தேகத்தை மூடிக்கொண்டோடி மலைச்சாரின் மறைந்தனன்.

இப்பால் பாண்டவர்கள் நமக்குதவியாகவந்த இந்த யானைக்கும்புகளேதென்று சந்தேகங்கொண்டு நாடியிருக்குஞ்சமயத்தில் கடோற்கசன் இந்தமாயைகளையெல்லாமறைத்துவந்து தந்தைமாருடையகாலில்விழுந்து பகதத்தன் பதினாயிரம் யானைகளைக்கொண்டுவந்ததும் சொந்தப்படைகளழிந்துவருந்தியதும்பார்த்து மாயவேடங்கொண்டுதான்வென்றவகையும்சொல்லித்தாழ்ந்துநின்றனன். அவனைமார்போடணைத்துப்புகழ்ந்துமகிழ்ந்துவாழ்த்தி விசயம்பெற்றோமென்று

செங்கண்மாயனொடுபாண்டவர்களும் சேனாபதிமுதலியசேனைகளும் பாசறைப் போய்ச் சேர்ந்தார்கள். இப்பால் யானைக்கும்புகள் வம்பாய் மடிந்தன்மை யைக்கண்டும் தம்பிமாரிறந்த துன்பத்தைக்கொண்டும் வருந்திய துரியோதன னையும் மற்றச்சேனைகளையும் சேனாபதியாகிய வீஷ்மர், அழைத்துக்கொண்டு வாத்தியமுதலிய விருதுவட்டக் குடைகளுமில்லாமல் பாசறைக்குச் சென் றனர். அந்தப்பாசறைக்குப் போனவுடனே, தம்பியர்பட்ட தளர்ச்சியை நினைத்து அம்புவியாளும் அரசனுமழுதான் பம்பிமேகம்பரவிய வாறுபோல் தம்பியர் மாமன் சகலருஞ்சூழ்ந்தார்கள். கதிரவன்புதல்வன் கண்ணீருகுத்து எதிரினில் வரக்கண்டெழுந்து அண்ணாவென்றே கட்டியணைத்து கண்ணீர் சொரிந்து கட்டுக்குலைந்து காவலழிந்தேன் இட்டமாமுங்களை யென்மனங் கொண்டேன். நட்டமாய்த்தம்பியர் நலிந்தவர் மாண்டார் கலையாக் கட்டைக் கலுகலப்பாக்கினான் மலையாப்புயநேர் மாருதிமைந்தனினியெவண்போவேன் எவன்காணுவேன் கனிவுறுமன்பாங் கன்னனேயென்று பூமியிற்சாய்ந்துபுரண் டிடும்வேந்தை கங்காபுத்திரன்தேற்றி செம்மண்குழம்பெனச் சேந்தகண்ணும் தீயுக அம்புயநாதன் அருளிரியமகன் கன்னன் அரசனைநோக்கி அண்ணலே இனி எதிர்த்தவர் யாவரும் இறக்கச்சயிப்பேன் என்னைவிலக்கி தம்மிஷ்டப் படியே மன்னனேயுன்னை வஞ்சனைசெய்யும் அந்தப்பாண்டவர்பால் அன்பு ள்ள வீஷ்மன் தன்னையேசேனைத் தலைவனாக்கினீர், அவரவர்திறத்தை அறியு மென்னரசே, தம்பியரைவருந் தானையுமழித்தார், எம்பெருமானே இஃதிரு வினைப்பகுதி யாரையும்விடாது அரசே அனுபவம் தாரசையுமார்பா சஞ்சல மென்னே எனக்கொடையாளி இயம்பக்கேட்டு சித்திரப்பாவைபோற் சித்தங் கலங்கி சற்றுநேரத்தில் தைரியகுணனும் வேந்தவைநிறைந்த வேந்தனைக்குரு வைப்பார்த்து நகைத்துப்பார்த்திவன் பகர்வான்; இஃதென்னவீரமினியென்ன தீரம் இன்பமேன்படையேன் எழிலேன் முடியேன், பாண்டவர்முன்போம் படையினரிலையே மதியுளீர் வெகுவாய் மன்னர்மடிந்தனர் கதியுளிச்சித்ரவிற் கனிஷ்டர் முடிந்தாரந்தோ நீங்களரசரிற்பிறந்தும் சந்திரகுலத்தோன்றனக்குறு துணையாய் வந்த சொந்தமனிதரு மற்றை யாவரும் பிந்திவருந்திப் போயினர் குறையே இறந்தது வழுவல் எதிரதுதழுவல் என்னும்விதியா லினிமேலாகி லும் மாயன்தேர்விடவரும் அர்ச்சுனனை மாயும்படி மனங்கொண்டு உறுதி யாய் நானைநானை நலிந்தவர்தமக்கு ஆளும்போமென் றவனியையளிப்பேன் என்பொருளவர் பொருள் என்சுகமவர்சுகம் என்று சுயோதனன் இயம்பக் கேட்டு வீஷ்மரொருசொல் விளம்பினர்; ஐயனே அரசே அர்ச்சுனனுக்கெதி ரில் கைவில்லுடன்பொரக் கருதுநருளரோ கண்ணிலுங்காணேன் கதை யினுமில்லை நாங்கள் ஆதியிற்சொன்னோம் இன்னமுஞ் சொல்வோம் இனிமே லாகிலும் மன்னவரைவரும் நீர்மனமொத்து வாழ்வீரென்று காங்கேயன்இயம் பக்கேட்டு கன்னன்வெகுண்டு கழறினனோர்சொல் விருத்தனே நின்பால் வீர மில்லாவிட்டால் ஒருத்தரை நிந்தித்துரையாதிருப்பாய் வீணாய்ப்பேசில் வினை யுமேபாவம் ஆணாய்ப்பிறந்தும் அவமாயினையே நீ கொண்ட சேனைத்தலைமை யான் கொண்டால் காணுற்ற பாண்டவர் கால்சாய்ந்திருப்பார், அதிபதிதம்பி

யர் ஐவருமடியார் சதிபதியாகிச் சர்ப்பனைசெய்யும் விதிமுறைதப்பிய வேசியர்போலும் 'பானைக்குங்காவல் பூனைக்குந் தோழன்' என்னும் பழமொழிபோல் இருக்கின்றீர் பரமார்த்திகராகிய நீங்கள் நடத்துங்காரியம் தங்களுக்கே சரியாயிருக்கின்றதல்லவா ஏதோ அரசனுடையதுர்க்காலம் என்னைநீக்கி விட்டனர். ஆகட்டும் இப்பவுமென்ன நாளைக்கே வரும் நன்மையென்பதுபோல் அர்ச்சுனனைக்கொன்று அரசனுக்குப்பட்டம் அடியேன் அளிக்கின்றேன் ஆகாயவீதியிலிருக்குந் தேவர்கள்கண்டு களிக்கும்படியாய்வெற்றியும் பெருகிறேன் நீங்களே பார்க்கப்போகிறீர்கள் பாரும் வீஷ்மரேயென்ன அங்கதேசாதிபன்சொல்ல அங்ஙனமிருந்த அரசர்கள் முதலியயாவரும் தகுந் தகுமென்று சாற்றினர். அப்போது காங்கேயன் கலீரொனநகைத்து கன்னனே அர்ச்சுனன்விற்பிடித்து வெளிப்படஇதுவரையிலும் எத்தனைதரம் போர்கொடுத்திருக்கின்றான், நீஎத்தனைதரம்அவனிடத்தில்அகப்பட்டிருக்கின்றனை! என்றைக்காகிலும் அவனைச்சயித்தாயென்று ஒருவார்த்தையுண்டா எங்கேவிரலை முடக்குப்பார்ப்போம், என் வீணாய்ப்பேசி சோஷைபோகிறாய் அப்பா, நாளைநடக்கப்போகிற யுத்தத்திற்கு நான்போகாமல் நின்றுவிடுகிறேன் எனக்குப்பதிலாக நீ போயிருந்து ஐந்தாம் போரில்ஏதாகிலுங் கொஞ்சநன்மை காட்டுவாயானால் நானே உனக்கு வீரத்திறமும் சேனாதிபதிப்பட்டமுங் கட்டிவைக்கிறேன், விற்றிறமுஞ் சொற்றிறமுமுடையவீரனே நான்சொல்லிய இந்தவார்த்தை உனக்குச்சம்மதமாயிருக்குமாகில்இப்போதே புறப்படென்று வீஷ்மர்சொல்லஅந்தப்பேச்சைகேட்டுபெருமூச்சுவிட்டு மிகுகொடையாளன் வேறுவசனஞ் சொல்லாதிருந்தனன். அப்போது பக்கத்திலிருந்த அசுவத்தாமன் கன்னனைப்பார்த்து இருந்த இடத்திலிருந்துகொண்டு வெற்றியைப்பெற்ற உத்தமர்களைப்போல் வெகுவாய் அளப்பாய், வாக்கினாற் சொல்லியவண்ணம் வெற்றிபெறுவதற்குத் தெரியாமல் மயங்குவாய் இவ்வளவுலக்ஷண முன்னிடத்திலிருந்தும் நேற்று விராடபுரத்தில் விசயனாலடிபட்டு பிணமலைக்குள் ஒளிந்ததைமறந்து பூரணமாகக் கற்றுணர்ந்த புண்ணியனாகிய வீஷ்மனைப் பற்பலவிதமாய்ப் பேசுகின்றாய், இதெல்லாம் பொல்லாங்காகிய பாவமல்லவோ நிழல்சாய்ந்து மரம்பட்டும்போமா நீஎத்தனைபோதித்தாலும் துரியோதன மகாராசன் உன்புறமாய்ச்சாய்ந்து காய்ந்தாலும் வீஷ்மர்முதலிய பெரியோர்களுக்கொரு தாழ்ச்சிவருமா கன்னனே, என்றைக்கிருந்தாலும் நீ வேறு அவர்கள் ஒருகுளக்கமலம உறவாயிருக்கு முரியோர்கள் அக்குடும்பத்தை கெடுக்கும்படி நினைத்துசமயத்தில் இப்படிக்கெல்லாம் பேசிக்குலமானம்குணமானம்பாராமற்சொல்லுகின்றனையே, உன்னையின்னானென்று தெரிந்திருக்கும் இச்சபையில் நீ பேசும்போது உன்னுடம்பானது கூசாமல் வெட்கப்படாமலிருக்கின்றது இது உனக்கு முறைமையல்லவென்று அசுவத்தாமாசொல்ல, உடனே துரோணர்சொல்லுகின்றனர். 'இந்திரனும் குபேதிரனும் வந்திருக்குஞ் சந்திரகுலத்துதித்து, நற்குணம் நன்னடக்கை படைத்த பாண்டவர்களைத் துரியோதனராசனுக்குப் பகைவரென்று அநேகம் விதத்திற் சொல்லியிருக்கின்றாயே கன்னனே அவர்களொருக்காலும்பகைவரல்லர்; நல்ல குலத்திற்பிறந்த வணங்காமுடியோனுடைய நன்மனத்தையு நற்செய்கையையு

மாறுபடுத்தி வேறுகெடுத்து அண்ணன்தம்பிகள் ஒருவரோடொருவர் கலந்து பொருந்தி வாழவொட்டாமல் சிறுபிள்ளைகளாயிருந்த அந்நாள்முதல் இன்னாள் வரையிலும் கலகஞ்செய்து வைத்திருக்கும் சகுனிமாமனும் நீயும் இந்த அரசைக்கெடுக்கஏற்பட்ட கொடும்பகையாளிகள் முழுவிரோதிகள், உங்களைவிட இவர்களுக்கு விரோதிகளென்பவர்களில்லை, நீங்கள் இப்போதிறந்தாலும் இன்றுமுதல் என்றைக்கும் கலகமென்பது இந்த உலகத்தாருக்கும் விளையமாட்டாது, மூக்குள்ள வரையிலும் சளிப்பறாது முகமுள்ள வரையிலுங் களிப்பறாது என்பதுபோல் நீங்களிருக்கிறவரையிலுங் கலகமறாது, இவர்கள் சுகப்படப்போகிறதுமில்லை என்று துரோணாசாரியர் சொல்லவே, அங்கிருந்த கன்னனானவன் ஆவேசம் வந்தவரைப்போல் அங்கமெல்லாநடுங்கச் சுறுக்கென்றெழுந்து கடுக்கென்று வாளைக்கையிலுருவிக்கொண்டு கண்பொறிபறக்கக் கடைவாய்நுரைக்கப் பல்லைக்கடித்துப் பரக்கவிழித்து அவனிவனென்று அவமரியாதையாய்ப் பேசியவர்களுடைய வாயைக்கிழித்து நாக்கையறுக்கிறேனென்று ஓரடிபெயர்த்துவைத்தான் அந்தவேளையில் சமீபத்திருந்த அசுவத்தாமன் காளைவாகனனளித்த வாளாயுதங்கொண்டு மகாருத்ரமூர்த்தியைப் போல் இரண்டடிபெயர்த்துக்கன்னனுக்கெதிர்சென்றுநின்று குடும்பங்குலைத்து கலகஞ்செய்யுங்கொடியபாவிகளின் முடியைத்தரித்து இப்போதுகூறியெழுந்த நாக்கையும் அறுக்கிறேனென்றுபுகன்று எதிர்த்துக்கொண்ட அவ்விருவரையுந் துரியோதனராசன் கண்டு பெருவரைபோலெழுந்து இருவருக்கு நடுவிற்போய் நின்றுதான் கொண்டிருந்த சஞ்சலமுதலிய தம்பியர்களின் துக்கமும்விடுத்து இருவரெடுத்துப் பிடித்தவாளையுந்தடுத்து இருவரையும் இரக்கமாய்பார்த்து பெரியோரையுநோக்கி இதுநல்லகாரியமிதுநல்லகாரியம் இறைவர்களுக்கு இது வேதைரியமிதுவல்லவோ வீரியம் நால்வர் நகைக்கும்படியாய் நன்றாய்செய்தீர்கள், எனக்கு நன்மையுண்டாக்கவந்தவர்களே, நான் என்தம்பிமார்களையும் படைத்துணைவந்த தாஷ்டீகர்களையும் இழந்துமனந்தடுமாறி கவலைகொண்டு எனது துக்கம் உங்களாற் றீருமென்றெண்ணி என்மனக் குறைகளையெல்லாஞ் சொல்லி இறந்தவர்கள்போக இருப்பவர்களெல்லோருஞ்சேர்ந்து எப்படியாகிலும் நாளையுத்தத்தில் அர்ச்சுனனைக் கொன்றுமுடித்து நமக்கு வெற்றிவரும்படி உபாயந்தேடுங்களென்று நான்கேட்டுக் கொண்டதற்குக் கொல்லும்படியாகிய உபாயவிதத்தை எனக்கெதிரிலேதானே விளைத்தீர்கள் இதுநல்ல உபாயந்தான் இனிமேல் நான் வேறுவிதசூட்சி யோசிக்கவேண்டியதில்லை உங்களைத் துணையாகப்படைத்த எனக்கேஜயம் வருமல்லாமல் எதிரிகள் சயமுடைவார்களென் றியம்பலாமோ ஐயவென்று நகைத்து மனங்கூசி தன்னைத் தானேவெறுத்துக்கொண்டனன், தரணிபதியாகிய துரியோதனனந்தவேளையில் வீஷ்மரெழுந்து அப்பா! துரியோதனா, நான் சொல்லுவதை இப்போதாகிலும் யோசிக்கக்கடவை அஃதென்ன வெனில், மும்மூர்த்திகள் வந்தெதிர்த்தாலும் விசயனை வெல்லமாட்டார்கள் இந்தமொழியை என்னுயிருள்ள வரையிலும் உன்னுயிருள்ள வரையிலும் ஏமாறாமற் கெட்டியாய் மனத்துட்பதித்து விடு, அப்பால் என்னாலானவரையிலும் மனவஞ்சகமில்லாமற் போர்விளைக்

கிறேன் ஒருவேளை அருச்சுனன் மாளும்படியாகிய ஊழ்வினையு மொத்திருந்து முடிவானுலாகட்டும் அரசனே, மனத்தை பலபலவிதத்திற் சிதறவிட்டு வருந்தாதே, மற்றவர் கலைக்கும்வார்த்தைக்குட்பொருந்தாதே, கலைப்பார் வசனத்திற்றிரும்பாதே என்களிற்றின் கன்றேயென்று சொல்லி, தன்னுடைய பாடி வீட்டுக்குப்போயினுர் வீஷ்மர் அவர்போனபிற்பாடு அவ்விடத்தினெருங்கி இருந்தபடைமன்னர் முதலிய யாவர்களுக்கும் விடைகொடுத்தனுப்பிவிட்டு போஜனமுதலியவின்றி மங்களஉபசார வாத்தியங்களுமில்லாமலிருந்தவிசனமென்னுந் துணைவனுடன் தனித்து கண்விழித்திருந்தான் துரியோதனன். இப்பால், இந்த நான்காம்போரினடந்த தன்மைகளையும் ஐந்துபிள்ளைகளிறந்த தன்மைகளையுந் திரிதராஷ்டிரபூபதிக்கும், காந்தாரியம்மைக்கும் சஞ்சயன் போய்ச்சொன்னுன் அவன்சொன்ன வார்த்தையைக் கேட்டவுடனே இடிவிழுந்த புற்றரவேங்குந் தன்மைபோலேங்கி இருகரங்களானு முகத்திலறைந்துகொண்டு இறைக்தேங்கிப் புலம்பியழுதார்கள், ஐயோ மக்காள் சர்வாபரணமுநிறைந்த கிடக்ர்த்ர தீரசூரவீரபூரர்பில்வாகையாலையணிந்துசிங்காதனத்திருந்து செங்கோல்புரிந்து சிதைவில்லாமல் நூற்றுவருஞ் சீர்பெறுவீரென்று சிந்தைமகிழ்ந்திருந்தோம் அப்பா செல்வர்களே ! இந்தப்பூமியாசையையடுத்து எங்களைத்தெருவில்விடுத்து தேவபூமியை ஆளவேண்டுமென்னும் ஆசைகொடுத்துச் சென்றீர்களோ? என்செல்வர்களே என்று இருகண்களிலும் சலம்பெருகும்படியாயழுது, அருகிருந்த தூணின்மேற்சாய்ந்து, ஓய்ந்துசோர்ந்தார்கள். அவ்விடத்திலிருக்கும் உயிச்சன்முதலியவர்கள் உபசரித்துத்தேற்ற மறுபடியுமெழுந்து காந்தாரியானவள் வயிற்றிலறைந்துகொண்டு, மைந்தர்களே, குந்தி பெற்றபிள்ளைகள் கூட்டங்குலையாதிருக்க நான்பாவி பெற்றபிள்ளைகள் பாரில் மடியும்படியாய் நேரிட்டதே தெய்வமே அப்பா குழந்தைகளே ? ‘பந்திக்கு முந்தவும் படைக்குப்பிந்தவும்’ என்னும் பழமொழிமறந்து துள்ளுமான்குட்டிபோல் முன்னேபோய்விழுந்து ஏன்மடிந்தீர்களடா என்மைந்தர்களே? இந்தக் காக்ஷிகாணவோ நான்பாவி இறக்காதிருந்தேன் இந்தக்கேள்வி கேட்கவோ இருந்தது என்தலைவிதியென்று மின்னலாகிய இடையும், பின்னலாகிய சடையும், அன்னமாகியநடையும், சொன்னமாகியதொடையும், வன்னமாகிய உடையும், கன்னலாகிய மொழியும், இன்னலாகிய விழியும், செங்கிடையாகிய யிதழும், குங்குமமெழுதிய நுதலும், பங்கயமாகிய கரமும், மங்குலுலாவிய முகமும், கொங்கைகுலாவிய உரமும், தியங்கிகுலாவிய அகமுமுடைய காந்தாரியானவள் மெய்குலைந்து மண்மேல்வீழ்ந்தலைந்து என்செய்வேன் என்செய்வேனென்று இறைவனைக் கட்டிக்கொண்டழுது இருகாலையும் நீட்டிக்கொண்டு இருபுறத்திலும் ஏறிக்கரைபுரள்வதுபோற் கண்ணீர்பெருகும்படியாயிறைந்து இறந்தவர்கள் தேவியராகிய மருமக்களையுஞ் சேர்த்துக்கொண்டு ஒப்பனையிட்டழுவதற்கு முகூர்த்தநாள்வைத்துக்கொண்டனள். அவர்யாரெனின்மதிகுலத்தில்வந்து புகுந்து துதிமதிமிகுந்த முதன்மருமகளை, அதிபதியாகிய ஐவர் தேவியை பாஞ்சாலன்யாகத்தில் உற்பவமாகிய பத்தினிசிரேஷ்டமேலாகிய கற்புக்குவித்தாகிய பெண்கள்பெருமாளை மின்னற்கொடிபோன்ற பாஞ்சாலியை தம

யன் மனைவியாகிய தன்தாயை அநியாயமாய் அக்ரமமாய் அவமரியாதையாய்க் கெடுமதிகண்ணுக்குத்தோன்ருத கேடுகாலத்தினுல் முன்பின்யோசியாமல் இழுத்துவந்து ஏறக்கூடாத இராஜசபையில் ஏறிவையடா தம்பியென்று உத்தரவு செய்தனுப்பிய இராஜராஜேஸ்வரனுகிய துரியோதன மகாராசனைப்பணிந்து துச்சாதனனனவன் கொண்டானடித்துக்கொண்டு காந்தாரியிருக்கும் அரண்மனையிற் புகுந்துவந்து செண்டாயுதத்தாற் சிகையைப்பற்றிப் பாஞ்சாலியை இழுத்தகாலத்தில் மாமிமாமியென்று, வந்தடைந்த மருகியைத் தகுந்ததென்றெண்ணுமற் கையைப்பறித்துவிட்டு பாவபுண்ணியமெண்ணிப் பாராமலும் பச்சாத்தாபமில்லாமலும் நாளை விளையப்போகின்ற காலகதியை நாடித் தடுக்காமல் அடைக்கலமாகவந்த மருமகளை திடுக்கிடப்பார்த்து என்னடி! படாங்கடிக்கிருயென்றேசி மைத்துனர்வாழுஞ் சபைக்குப் போய்வரத் தடையென்னடியென்றுபேசி இழுத்துக்கொண்டுபோடாவென்று துச்சாதனனென்னுந் திருட்டுப்பேய்பிள்ளைக்கு வேலையிட்ட குருட்டுமாப்பிள்ளைக்கு மாலையிட்ட காந்தாரியானவள், கேளும் அரசனே அந்தக்காலத்தில் பத்தினியாகிய பாஞ்சாலியை ஒருநாளழச்செய்த துக்கமானது இந்தக்காந்தாரியை உயிருள்ளவரையிலும் அழும்படியாய் வைத்ததுபார் அரசனே யென்றுசொல்லி இந்தப்படி விசனமடைந்த ராஜனையும், ராஜபத்தினியையுந் தேற்றிச்செலவுபெற்றுக்கொண்டு மறுபடியும் போர்க்களத்திற்கு சஞ்சயனுனவன்வந்து விட்டனன். இப்பால் கொடிஸ்தலாதிபதியென்னும் துரியோதனனுடைய தம்பிமார்களின் பத்தினிகளும் மற்றவர்களும அன்றிராத்திரி யெல்லாம் அழுது கொண்டிருந்த பெருங்கூச்சலைக்கேட்டு இந்தரோதனத்திலிருந்து நானெப்படி பிழைப்பேனென்று ஓடிப்போய் விட்டதைப்போல் இருளானது விடியுமுன் ஓடியொளிக்க அந்தக்காலத்தில் தேவர்கள் சிரத்திலணிந்திருக்குஞ் சூடாமணியேபோற் சூரியபகவான் உதயமாயினன் என்று வைசம்பாயனர் சொல்ல, மகிழ்ந்துகேட்ட மகாராஜனுனவன் எழுந்து விழுந்துவணங்கி ஐந்தாநாளையுத்தத்தையும் அருள்செய்யவேண்டுமென்று அடிவணங்கிக் கேட்க! வைசம்பாயனர் சொல்லலுற்ருர்.

நான்காம்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

---

## ஐந்தாம்போர்ச்சருக்கம்.

---

**விருத்தம்.**

கருமாமுகிற்கோல நெஞ்சத்திருத்துங் கருத்தெய்துமேல்
அருமாதன்வருஉ மவன்முத்திதருகைக்கு மவனேகுரு
தருமாலை மணநாறுதாளானை வண்டேறுதண்ணந்துழாய்
மருமாலை புனைமேனி திருமாலை யல்லாது வல்லோர்கள்யார்.

அரசர்க்கரசனே ஐந்தாளுதயத்தில் யாவருமெழுந்து நித்தியவிதிகள்முடித்து யுத்தகோலங்கொண்டு மேன்மையாகிய சங்கமெங்கும் கறங்கவும் தாரைபூரி தொனிக்கவும் சின்னங் காகளம் ஊதவும் முரசமுதலிய வாத்தியம்அ

தாம் அதிரும்படியாய் ஆர்ப்பொலிசெய்யவும் முழவுவாத்தியம் விம்மிமுழங்கவும் கரைகளையுடைக்கும் அலைகளை அடைக்கும், நுரைகளில்வெடிக்குந் துளியினிற் றெறிக்குஞ்சிறிய திவலைக்கூட்டம்போல நால்வகைச்சேனைகளும் ராஜராஜர்களும் வீரயோஜர்களுஞ் சேர்ந்துவரத் தருமபூபதியும் சேனுபதியும் புறப்பட்டு இரணக்களத்திற்குவந்தனர். இப்பால் அநேகங்கோடி விருதுகளும் ஆயிரங்கோடி முரசவாத்தியங்களும் அநேகங்கோடி பேரி பூரி தடாரி தூரியங்களும் ஐயாயிரங்கோடி சில்லறை வாத்தியங்கள் அதிர்ந்துமுழங்கவும், பரபரப்போடும் நால்வகைச்சேனைகளுடனே நேற்றுப்புறமுதுகிட்டோடிய பூபாலரும் பொங்கிப்பொருந்தி எங்குஞ்சேனைகளாகவந்து நிறைந்தனர். இந்த இரண்டுவகைச்சேனையுந் திரண்டுபுரண்டெழுங்கடல்போனிற்கின்ற பெருக்கம் எப்படியிருந்ததென்றால், தசக்கிரீவனுகிய இராவணனுடைய கொடுஞ்சேனையும், ஸ்ரீராமமூர்த்திக்குப்படைத்துணை வந்த வானரமாகிய கடுஞ்சேனையும் எதிரெதிர்நின்றதைப்போல் அண்டர்கள் துன்றிய விண்டலமண்டல மெண்டிசைமுதலிய கண்டமுங் கலங்கும்படி அதிரப்பண்ணி ஆர்ப்பரித்துக்கொண்டிருந்தனர், அந்தவேளையில் அர்ச்சுனன்றேரில் அனுமக்கொடியாடியது எப்படியிருந்ததெனின், இராவண கும்பகர்ணுதிமுதலிய அரக்கரைச்சயித்த ஸ்ரீராமபிரானுக்கு அடிமைத்துணையாக விருந்து வெற்றிபெற்ற எழுபதுவெள்ளம் வானரப்படைகளும் எங்களவர்களே நான் அந்தக் கோதண்டமூர்த்தி குறைகழற்றூதனுகிய அனுமானே அந்த இலங்கைப்பெருக்காகிய அரக்கரைப் போல் உங்களையும் நாசப்படுத்தித்தொலைப்பதற்கு இங்குவந்தேன், என்னை நீங்கள் நன்குயறிந்து கொள்ளுங்களென்று துரியோதனன்முதலாகிய படைப்பகை வருக்குச் சொல்லித்தெரிவித்து நின்றுடியதைப்போல், அக்கினிதேவன் கொடுத்த அழியாரதத்தின்மீதேறி நின்று, அந்தரமுதலிய மந்தரங்கக்தொந் தொந் தொந்தொந் தொந்தமென்று படபடாகாரத்துடன் அசைந்தாடிக் கொண்டிருந்தது, அவ்விதமாக ஆடிக்காட்டிய அனுமக்கொடிநாட்டிய இரதத்திற் அவேதவாம்புரவிபூட்டி அலங்காரஞ்செய்து சர்வஜீவதயாபரநாதனுகிய ஸ்ரீகிருஷ்ணபிரான் கலங்கா மனத்தோனுகிய காண்டீபனுக் கெதிரிற்கொண்டுவந்து நிறுத்த அந்த இரதத்திலாரோ கணித்துக்கொண்டு, ஐவரைக் காப்பதற்குக் கங்கணங் கட்டிக்கொண்டிருக்கும் ஐயனுடனே காண்டீபனுங்கலந்து வார்த்தையாடிக்கொண்டு யுத்தபூமிக்குவந்தார்கள். அவ்விடத்தில் திரிபுரதகனஞ் செய்வதற்காகத் திசைமுகன் முதலிய தேவர்களாலமைந்த தேரின்மேல் வீற்றிருந்த சர்வசங்காரகால சிவபெருமானைப்போற் பேரணியிற்சிறந்த தேரணியிலுயர்ந்த சயந்தனத்திற்பொருந்தியிருந்த வீஷ்மாச்சாரியருக் கெதிரில் தேரைக்கொண்டுபோய் நிறுத்தி தேவதத்தத்தை முழக்கிவைத்துத் தானும் வலம்புரிச் சங்கை முழக்கி உரம்பெற்ற விஸ்விசயனை யுத்தஞ்செய்யும்படி விடுத்து ஓயாமற் சுழலுந்திகிரியைப்போல், தேரைநடத்தினுன் இது இவ்வாறிருந்த அழியாத இரத்தத்தை இடசாரி வலசாரி வலசாரி இடசாரி முன்னோட்டம் பின்னோட்டம் முன்னுட்டம் பின்னுட்டம், மூன்னோட்டமுதலிய இரதவேகக் கதிகளெல்லாஞ்செலுத்திக் கங்கைமைந்தனை யெதிர்த்து காண்

டைபாட்டிக் காலகாலாந்தக் கணைகளைப்பூட்டியகாலத்தில் கலிங்கதேசாதிப ரெல்லாம் புலிங்கசாலங்களைச் கண்களா லிறைத்துக் கணைகளைத்தெரித்து அருச்சுனனை மறித்து யுத்தஞ்செய்தனர். அந்த விசயனுடனே வெகுவாகிய போர்புரியுங் கலிங்கேசரை வெறுத்து நோக்கி அவரவர்கள் விட்ட வெங்கணைகளையெல்லாம் குங்குமமாக்கிச் சங்கரகெடுவாளிகளாற் றாக்கினன், அக்கணைகள் போய்ப்பிளந்து கரகரவென்றளைந்த புண்வாய்தோறுங் களகளவென்று மாமிசத்துடன் உதிரவெள்ளங் கலந்தோடிவர அந்தக் கலிங்கதேசாதிபரெல்லாந் தளர்ந்தாடிக் கலங்கலாகிய இரத்தங்களினால் கண்கலங்கிமூழ்கினர். இந்தப்படிக்கு எதிர்த்துப் போர்புரிந்த கலிங்கதேசரெல்லாரும் அலுத்து ஒளித்து இளைத்தோடி வரும்போது காளகண்டனைப்பொற் கண்சிலந்திருந்த காங்கேயன் கண்டுகடுங்கோபங்கொண்டு பூப்பாணம் தீப்பாணம்பொறிப்பாண முதலிய பல்லவங்களை மேன்மேலாகத்தொடுக்க அதைக்கண்ட அர்ச்சுனன் வீஷ்மருடைய பிராணனுக்குத் தீங்காக ஐந்துபாணங்களையெடுத்து அனலேறிய மனக்கொதிப்புடன் அஜேயமந்திரஞ்சொல்லி அதட்டிவிடுத்தனன், அந்த ஐந்து பாணங்களும் பஞ்சாக்கினி போற்சென்று வீஷ்மர் கைக்கொண்டிருந்த வில்லையும் அதிற்பூட்டியநாணியையும் அவர் தொடுத்துக்கொண்டிருக்கிற பலம்பொருந்திய பாணங்களையும் ஒரேதரமா யொடித்தறுத்துப்போட்டு கடுகடுத்தெரிந்து இன்னமும் அந்தப்பாணங்களினுடைய வேகமடங்காமல் பூகம்பமாகும்படியாய்ப் புதைந்தெழுந்து உருவித்துளைக்க அதனாற்சேனைகள் தத்தளித்து களைக்க இத்தன்மையாக இவ்விருவருமுனைந்து மெத்தக்கணைமாரி சுற்றப்பொழிந்து யுத்தஞ்செய்தனர். இப்படிக் கிவர்களிருவருங் கடுங்கோபத்துடன் முகமாறுமற் போர்செய்துகொண்டிருக்குங் காலையில் பெருங்காற்றெழுந்து பொங்கிய கடல்போற் பலதேய மன்னரும்வந்து சாமர்த்தியமுடைய வீமசேனனை மொய்த்துக்கொண்டு பலபலவிதமாகிய தேயுக்கணைகளைப் பலபலவென்றுதிர்த்தனர் அவர்கள் தொடுத்தகணைகளெல்லாம் பறந்து பறந்து வருவதை, அளகாபுரிக்குச்சென்று மணிமாலனைக்கொன்று அம்போருக்கமலைக் கைக்கொண்டு மூர்த்தண்ய தூர்த்தண்டனாகிய வீமசேனன்கண்டு முனைபெற்ற முள்ளம்பாகிய கவ்வம்புகளைத்தொடுத் தடுத்துவந்த மன்னவர்களுடைய மார்புகளுருவிவாட இரத்தவெள்ள மருவியோட விடுத்தபோது அவர்கள் யாவரும் கிட்டநெருங்கப்பயந்து முகஞ்சுருங்கிக்குலைந்து இரதமுதலிய சாரதிகளும் விலங்கித்தொலைந்துவேசாறினர். அக்காலை துச்சாதனனும் அவனுடைய தம்பிமார்கள்முதலிய புத்திரவர்க்கமும் சகுனியும் சல்லியராஜனும் அதிரதத் தலைவர்களாகிய முடிவேந்தரும் மித்ரவர்க்கமும் கொற்றவர்களும் மற்றவர்களும் கூடிக்கொண்டு வீமனுக்கெதிரேறிக் கொடியவன்னிக்கணைகளினாற் பின்னினர். இப்படியாகச்சீறி கணைகள்தொடுத்த யாவரையும் வீமசேனன்பார்த்து மனந்தேறி அசைவறப்பிடித்திருக்கும் வில்லில் அஸ்திரங்களைப் பூட்டி அவரவர்களுடைய அந்தஸ்துக்குத் தகுந்தபடியே அநேகஞ்சரங்களை அமோகமாகவிடுத்து ஓடிப்பிழைப்பதற்கு ஒதுக்கிடம்பார்க்கின்றீர்களோ வென்று ஒல்லாமையாகிய பொல்லாத இகழ்ச்சியைச் சொல்லிக் கொல்லாமனிற்

கும்போது பலத்துடன்வந்த படைமன்னர்யாவரும் உலைந்துவருந்தியோடினர். அப்படி வீமனுடன் பொருந்திப்போர்புரிந்து அடிபட்டிளைத்து அலைந்தோடி வரும் அதிவீரருடன் தன்தம்பியையும் பார்த்து மனம்பதைத்து மாற்சலி யங்கொண்டு மிடலொடுங்கி உள்ளங்கலங்கிக் கடைக்கண்ணிற் கனற்பொரிக் கற்றைநாறச்சீறி தம்பிமார்களே உங்களைவாட்டியோட்டி யுத்தஞ்செய்யும் வாயுவின்மதலையாகிய காளையைமறித்து மலைந்தின்றைக்கே அவன் பிராணனை வாங்குகின்றேனென்று கோபித்து உன்னதமாகிய தேரைச்செலுத்தி உரி யோர்களையுங் கூட்டிக்கொண்டு வந்தெதிர்த்தனன்.

இப்படி சொல்லிவந்த துரியோதனனைக்கண்டமாத்திரத்தில் வீமசேனன் சந்தோஷங்கொண்டு விற்பிடித்துப் பற்கடித்து விரைந்தெதிர்ந்தனன். அப்படி எதிர்ந்த வீமனைப்பார்த்து வணங்காமுடியோனாகிய மன்னவன் அசையாநிலை கொண்டுநின்றுபாரியவில்லை நாணியிறுக்கிச்சோர்வுபடாத பத்துவீரவாளிகளை யெடுத்துப் பேரொலியுடன்விடுத்தனன். அந்தத் துரியோதனன்விடுந்த பத்து பாணங்களும் வீமசேனனுடைய மருமத்தைத்துளைத்துக் கலக்கித்தரித்த மணிக்கவசத்தைக்கிழித்துவிலக்கி ஆண்மைபடைத்த அதிவீரர்களுக்கெல்லாம் துதிவீர மணிமகுடாபிஷேகத் துங்கச்சிங்கம்போன்ற வீமனுடைய அங்கத் தில்நுழைந்து உருவியபோது சற்றுவருந்தி வாயுபுத்திரன் வேறுதேரேறியெதி ர்ந்து அல்லிலும் பகலிலும் சுடலையிலாடுமுருத்திரமூர்த்திக்கு நேராகநேரிட்ட பஞ்சபாணனைப் பஸ்மீகரம்பண்ணிய நெற்றிக்கண்ணின் நெருப்பையொத்த ஓர்கங்கபத்திரத்தை விரைவுடனெடுத்து அபிமந்திரித்து நந்தியாவட்டமாலை யையணிந்த நரேந்திரனுடைய மார்பிற்குளித்து உதிரந்துளித்து வரும்படி பதிலுக்கு பதிலாகக் களித்துவிடுத்து முன்னரேகிநின்ற மன்னவரெல்லாருஞ் சின்னபின்னமாய்ப் பின்னேடும்படி மாரிக்கணைகளை வாரிப்பொழிந்தனன். அப்படியாகப்பொழிந்த மேகாஸ்திரத்தால் யாவருமருண்டு வாட்டமுற்றனர். அந்தத்தருணத்தில் பெரிய உலகேழுமுடைய துரியோதனனுக்கு வீமசேனன் விட்ட கணையானது போய்ப்பட்டு பட்டைகட்டை போற்றலைநட்டு நாக்கைத் துறுத்துக்கொண்டு வாடியபோது அந்தத்துரியோதனனுக்கெதிரிலே நாணியும் கணையும் நலம்பெறப்பூட்டி வில்லைப்பிடித்துக்கொண்டு இன்னம் வரத்தக்க வர்கள்வாருங்களென்று வீமசேனனிற்க ; அந்தவேளையில் பூமிக்குரிய தீரர் களும் பேரம்பிற்குரிய வீரர்களும் போர்மதத்தனென்று புகழும்படியாகப் பாடிய சோமதத்தனீன்று மகிழும் பிள்ளையாகக்கூடிய பூரிசிராவென்பவன் சுயோதன னிளைத்ததைக்கண்டு தன்மனமிளைத்துக் கணந்தரியாமல் தன்தே ருடன் சென்று எதிர்நின்று தறிக்குங்கணைகளிரண்டையெடுத்து தருமனுக் கிளையோன் மேல்விடுத்துத் தானும்படபடத்து நிற்கும்போது அவன்விடுத்த கணைகளிரண்டும் ஆலகாலவிஷம்போலிரண்டு அனற்கூட்டமாகப் புரண்டு வருவதை வாயுவேகமும் மாயும்படித் தேரூர்ந்து வருகின்ற ஸ்ரீவாசுதேவ னுடையதம்பி சாத்தகியாழ்வான்கண்டு அவன்விட்ட இரண்டுகணைகளையுமழி த்து அடாபாவி, இவருடைய ஆண்மையின்னதென் றுணராமலும் இப்படிப் பட்டவரொன்று தெரியாமலும் இரண்டுகணைகளை விடுத்தையே! என்னடா

துரோகி இதோபார் என்திராணியை உன்பிராணனை வாங்குகின்றேனென்று கலீரெனநகைத்து சிலீமுகமொன்றெடுத்துத் தொடுத்துவிட்டனன், இப்படியாகப்பேசிவிட்ட கணையானது விறுவிறெனச் சுழன்றுவருவதை நான்குவேத பாராயணனாகிய பூரிசிராவென்பவன் கண்டு இளைக்காமல் எதிர்க்கெதிராக வல்லவனாட்டிய பம்பரம்போலொத்த பல்லவங்களைப் பலமுகத்திலு நிறைத்தான். இந்தப்படி இவ்விருவர்களும் உடுபதியாகிய சந்திரனுந்தினபதியாகிய சூரியனும் ஒருவர்க்கொருவரெதிர்த்துப் போர்புரிவதைப்போல் யுத்தஞ்செய்வதைத் தேவர்கண்முதலிய மூவரும் மற்றயாவரும் காணபதற்கருமையாய்க் கரக்கம்பஞ் சிரக்கம்பஞ் செய்தார்கள். அப்போதிவர்க ளிருவரும் கொண்டலிடிக்குங் குமுறலுக்கொப்பாய் மண்டலமுதலிய வெண்டிசையடங்கச் சண்டப்ரசண்ட கடுங்கார்முகமாகிய வில்லைவளைத்து நாணிதொடுத்துக் கர்ணபரியந்த மிழுத்து டங்காரமடித்து கவலாமல் கலங்காமற் கணைகளைவிடுத்து கதிர்மதிமுதலிய கோள்களுமடங்க அதிபதிமுதலிய ஆள்களுமொடுங்க திரிபுவனங்களுநடுங்க திசைகண்முடங்க ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்று சத்துருமித்துருவாகிய பல்லவங்களைத்தூண்ட ஒருவர் விட்டபாணம் ஒருவர்மேற்படாமல் யுத்தியினாலுஞ் சத்தியினாலுந் தெய்வபத்தியினாலும் வெற்றியினாலுந்தடுத்துக்கிட்ட அடுத்துப்போர்செய்யுங்காலையில் மாதவப்பேர்சிறந்த சீதரனுக்குச்சோதரனென்னுஞ் சாத்தகியாழ்வானுடைய நாணியையும் வில்லையும் பூரிசிராவென்பவன் முறித்தான் உடனே, அந்தப்பூரிசிராவென்பவனுடைய வில்லையும் நாணியையும் சாத்தகியாழ்வானறுத்தான். இந்தப்படியிருவருங் குறைவில்லாமற் பூமியிற்குதித்து வலக்கரத்தில் வாளாயுதமும் இடக்கரத்திற் கேடகமும் கொண்டு வாசனை திணிந்த மாலையணிந்த மார்பினரிருவரு மண்டியிட்டு , சக்கர கதியாய்ச்சுழன்று சாதகஞ்செய்து இடப்பக்கம் வலப்பக்கம், வலப்பக்கம் இடப்பக்கம், இந்தவிதமாகப் பதுங்கியொதுங்கி ஒட்டியிருந்தெழுந்து ஒருவருக்கொருவர்கிட்டிவந்துவிழுந்து வாளினால்வீசிவஞ்சினங்கள்பேசி சந்திரனும் சூரியனும் எதிர்த்துச்செய்யும் சண்டையைப்போல் வாட்போர்புரிந்து ஒருவரையொருவர் வெட்டவேண்டுமென்னும் இஷ்டத்தினால் வாளாயுதத்தை யோங்கி வீசித்தட்டிக்கிட்டவரும்போது வட்டணையென்னுங் கேடயத்தால்மறைத்து வெட்டவந்த வெட்டைத்தட்டிக்கொண்டு மறுபடியும் கோணம் வட்டம் வளைவுமுதலிய குந்துச்சாரிகை முந்துச்சாரிகை உந்துச்சாரிகை குப்புறுசாரிகை ஒப்பறுசாரிகைகளெல்லாம் சுற்றித்தாங்களும் கரணமிட்டுச் சுழற்றிதலைக்கு லக்ஷயம்வைத்து எற்றிகஜசிங்கவியாக்கிர விருஷபகதியாய்த் தத்திப்பதறி மேகங்களுஞ்சுற்றிக்கதறி இடிகளுஞ்சிதறி மீனினங்களும் உதிர ஆகாயமும்படபடவென்று அதிரும்படியாக இவ்விருவருந் தோல்வி வெற்றியில்லாமல் நெடுநேரம்வரையிலுஞ் சீறி யமராடினார்கள். இப்பால் குதிரைகளுடன் குதிரைகள்குதிரைவீரர்களுடன் குதிரைவீரர்கள் காலாளுடன் காலாள் வில்லாளுடன் வில்லாள் தேர்களுடன் தேர்கள் முடிமன்னருடன் முடிமன்னர் யானையுடன் யானை சேனையுடன் சேனை சேனைத்தலைவருடன் சேனைத்தலைவர் யானைத்தலைவருடன் யானைத்தலைவர் யூகத்தலைவரு

டன் யூகத்தலைவர் படைத்தலைவருடன் படைத்தலைவர் இப்படிக் கைகலந்து போர்புரிந்தார்கள். இன்று இந்த இருதிறப்படைகளிலுமிறந்த சேனைகளை இவ் வளவென்றியம்ப வென்னாலாவதன்று, இப்படியாக யுத்தஞ்செய்ததில் யானைத் துதிக்கைகள் அறுபட்டு உதிரவெள்ளப்பெருக்கத்தில் விழுந்தோடுவது பெரிய வாளைமீனோடு கரியபனைமீனும் ஓடும்பான்மைபோல் ஒருபக்கத்திலிருந்தன. தலைக்குறைக்கவந்தங்களின்றாடுகின்ற போர்க்களத்தில் பேய்க்கூட்டங்களு டன் எதிரெதிர் நின்றாடிக்கொண்டு ஒருசாரிருந்தன. கும்புகும்புகளாய் அம்பு பிடித்தகரங்களும் விற்கொம்புபிடித்தகரங்களும் வாள்பிடித்தகரங்களும் வேல் பிடித்தகரங்களும் சூலம்பிடித்தகரங்களும் பிண்டிபாலம் பிடித்த கரங்களும் மழுப்பிடித்தகைகளும் கொழுப்பிடித்தகைகளும் உலக்கைபிடித்த வலக்கை களும் இடக்கயம்பிடித்த இடக்கைகளும் சக்கராயுதந்தாங்கிய அஸ்தங்களும் கதாயுதமேந்திய அஸ்தங்களும் வாகுவலயமணிந்ததோள்களும் வீரகண்டை யணிந்த தாள்களுமிவைகளெல்லாம் பலபக்கங்களிலும் விழுந்து குவிந்துகிடந் தன. மேலும் உதிரவெள்ளமோடிப் பரவியிருக்கும் யுத்தபூமியானது செவ்வா னம்போலுமிருந்தது. அந்தப்பூமியில் யானைத்தந்தங்கள் முறிபட்டுத் துண்ட மாய்க்கிடப்பது மூன்றாம்பிறைபோலுமிருந்தன, யானையினுடலங்களறுந்து மேடாய்க்கிடப்பது மேகசாலம்போலுமிருந்தன. கடலினிடத்திற் கதிர்விட் டொளிசெய்யும் பவளங்களைப்போ லிரத்தத்தில்மூழ்கி அலைகளினாலசைந்து கொண்டிருக்கும் தேர்ச்சக்கரங்களநேகவிடத்திலமிழ்ந்தன மழைபொழிந்துவ ரும்கல்ல சலப்பெருக்கற்றிருண்டுருண்டுவந்தநுரைகளைப்போல் உதிரப்பெருக் கத்தில்மிதந்து அலை எறிந்து ஓடிவரும் மூளைகளும் ஒருபுறத்திற்செறிந்தன. இதல்லாமலும் கூர்மையாகியவேலாயுதங்கள் கைவேல் எறிவேல் திருகுவேல் சொருகுவேல் கதிர்வேல்முதலியவேல்களையும் முட்படை வாட்படை முறட் படை இரும்புக்கணை சுரும்புக்கணை மருந்துக்கணை பருத்துக்கணை பிறைமுகக் கணை நறைமுகக்கணை தசமுகக்கணை விஷைமுகக்கணை எரிமுகப்பழி இரு முகப்பழி இலைமுகப்பழி கொலைமுகப்பழி தலைமுகப்பழி வலைமுகப்பழி இந்தி ராஸ்திரம் சந்திராஸ்திரம் மந்திராஸ்திரம் பர்வதாஸ்திரம் திரிமுகாஸ்திரம் தோமராயுதம் சக்கராயுதம் குந்தாயுதம் வாளாயுதம் கப்பணம் கவண்முதலிய கையாயுதங்களுந் துளைத்த புண்வழியில் கட்லாகிய முந்நீர்போற் செந்நீர் பொழிந்தோட தேகங்கள் ஆயிரம்விதமாகச் சிதைந்தாட இருவர்படைகளும் இத்தன்மையாகப் போர்புரிந்த ஐந்தாநாள்யுத்தத்தில் இருபத்தையாயிர முடி வேந்தர்கள் இவ்வுலகத்தைவிடுத்து அவ்வுலகத்தை யடுத்தார்கள். அவர்களுக் குரித்தாகிய நான்குவிதப் படைகளிற் காலாள்களும் மேலாள்களும் பட்ட வர்த்தனர் படைத்தலைவர் முதலியவர்களிற் பலருமிறந்தார்கள், இவ்வாறாக இருதிறச்சேனையும் எதிர்த்துப் போர்புரிந்திறந்து இந்திரனுலகிற்புகுந்தனர்கள். இந்தப் பெருங்கும்புகளுக்கு அவ்விடத்தி லிடமில்லாமல் ஒருவர்மேலொரு வர்விழுந்து நெருங்கி நாமிருப்பதற்கு இடமெங்கிருக்கின்றதென்று வெற்றியை யுடையவீரர்கள் சுற்றிக்கொண்டிருந்தார்கள். தேவர்வாழும்ஆகாயத்தைச்சுற்றி வருமார்க்கமுடையசூரியன்கண்டு நித்தியம் நாம்போயொடுங்குமிடத்தை ஒரு

வேளைவீரர்கள் கைக்கொண்டாலும் கொள்ளுவார்களென்று அதிசீக்கிரத்தில் ஓடி அவனைப்போல் செவ்வானமாகிய வஸ்திரத்தினாலே தன்னை மறைத்து மூடிக்கொண்டுமேற்குத் திசையிலிருக்கும் அஸ்தமானகிரியாகிய பழையஇடத்தைப்போய்ப் பிடித்துக்கொண்டான். இவ்விடத்திற் போது போவதென்று பொருள். இவ்வாறாகவே யுத்தங்கள்தோறு மனக்களிப்படைந்துவரும் மகுட மன்னர்முதலாகியவர்களையும் அவர்கள்கைக்கொண்ட ஆயுதங்களையும் இரத்த வெள்ளங்கள் கால்வாயாகஅடித்துக்கொண்டு போய்க்கடலிற்புகுந்துகலக்கியத னால் இன்று நடந்தபோரைக்குறித்து ஒப்புக்கூறவேண்டுமெனின் எப்படிப்பட்டவர்களாலுஞ்சொல்லப்படாது. இத்தன்மையாக சங்கிராமநடத்திய ரணகளத்தை இருதிறவரும்விட்டு நீங்கிச் சேனைகடலுடன் இடமகன்ற பாசறைக்குப் போய்ச்சேர்ந்தார்களென்று சஞ்சயன் திரிதராஷ்டிரனுக்குச்சொல்லி மறுபடியும் போர்க்களத்திற்குவந்தான். இவ்விடத்தில் யுத்தகளஞ் சுத்திசெய்பத்தக்க மனிதர்களெல்லாரும் உரியவர்கண்முதலிய படைவீரர்களை அவரவர்தரத்துக்குத்தகுந்தபடி பண்களிலேற்றி மற்றையர்களைக் குவியலாகக் குவித்துப் புதைத்து மறுநாள் யுத்தத்தில் அந்தக் குருக்ஷேத்திரத்திற்றானே மேவிடமேற்படுத்தி வைத்தார்கள்.

இப்பாலிராத்திரி யென்னுங் கரும்பாம்பான திருட்குழம்பா லேற்பட்ட வாயைத்திறந்து இளம்பிறையாகிய கோரப்பல்லைக்காட்டிச் சூரியனைப்பிடித்து விழுங்க வந்ததுபோல் இருள்மேலிட்டது. அப்படி வெகுண்டுவந்த அந்த இருளென்னுங் கரும்பாம்பைக்கண்ட சூரியன்பயந்து ஓட்டமாயோடி மேற்றிசைக்கடலில் ஒளித்துக்கொண்டிருந்தது சலத்துள்மூழ்கி நீந்தி அந்தக்கரும்பாம்பாகிய இருள்போய் விட்டவுடனே, கிழக்குச் சமுத்திரத்தில்வந்து தலையெடுத்துப்பார்த்து மெதுவாயெழுந்து கரையிலுயர்ந்த உதயகிரியின் மீதேறி நேற்றுத் தூரத்திக்கொண்டு என்னைவிழுங்கவந்த இருளென்னுங் கரும்பாம்பைக்கொளுத்தி விடுகின்றேனென்று யுத்தகோலங்கொண்டு தேரேறி ஆயிரங் கிரணக்கைகளையும் விரித்துக் கண்களுஞ்சிவந்து எழுந்தவனைப்போற் சூரிய பகவானுதயமாயினன் என்றுசொல்ல, ஜனமேஜயமகாராசன்கேட்டு சந்தோஷத்துடன் புகழ்ந்து தீர்க்கதண்டமாக விழுந்து பணிந்தெழுந்து சோடச மகா தானங்களும் கொடுத்து பிராமணர்முதலிய வேழைகளுக்கு அன்னதானங்களுஞ்செய்து பொய்சொல்லா மெய்யனாகிய வேதவியாசரையுஞ் சிந்தித்துவந்தித்துவாழ்த்தி மேல்நடந்த ஆறுநாள் யுத்தத்தையும் அருள்செய்யவேண்டுமென்றுகேட்க, வைசம்பாயனர் மகிழ்ச்சியாய்ச் சொல்லத்தொடங்கினர்.

ஐந்தாம்போர்ச்சருக்கம்

முற்றிற்று.

---

## ஆறாம்போர்ச்சருக்கம்.

கலிவிருத்தம்.

கோயிலா ளுடையபைங் கொண்டலார் கண்டுயில்
பாயலாய் வாழுநீ பாக்யமென் செய்தனை
தீயலா லுவமை வேறிலதெனுந் தீயநின்
வாயெலா நெஞ்சகால் வாளெயிற் றரகமே.

கலியோட்டி வையங்காத்து நவநிதி நிலைநாட்டுஞ் செங்கோ னீதிக்கதிப னாகிய, நிருபனே! இனிக்கிழக்குத்திசையில் ஆதித்தனுதித்தவுடனே பாசறையிற்றுயின்ற பாண்டவர்களும் படைமன்னர்களும் எழுந்து நித்தியவிதிகளைச் சற்றுநேரத்தில் முடித்துக்கொண்டு பசுந்துளப மாலையணிந்த பரந்தாமனைப் பணிந்தெழுந்து வாத்தியமுதலாகிய யாவுமுழங்க மன்னுயிரெல்லா மடிவதற்காகக் கொடிய நஞ்சுகளினால் ஏற்படுத்திய நானிலம்போன்ற குருக்ஷேத்திரம் போய்ச் சேர்ந்தனர். அவ்விடத்திற்சேர்ந்த உடனே பாஞ்சாலகுமாரனாகிய சேனாதிபதியானவன் ஸ்ரீகண்ணபிரானது திருவாய்மொழிகொண்டு மும்மதங்களைப் பொழியும் யானைப்படைகளையும் சேனைப்படைகளையும் தரந்தரமாகப் பிரித்து நிரந்தரமாகச் சத்துருக்களினாற் புறமிடாத *மகரயூகம்வகுத்தனன்.

இந்தப்படியாக பாண்டவ சேனாதிபதியாகிய துஷ்டத்துய்மன் சேனைகளைச்சேர்த்து மகரயூகங்கட்டி யிருக்கக்கண்டு வீஷ்மர் தம்முடைய படைகளையெல்லாந் தரம்பிரித்து நான்குதிசைகளிலும் நிறுத்தி †கிரிஞ்சமென்னும் கனயூகங்கட்டினர்.

இப்பால், சத்தியமுந்தருமமும் தானனுபவிக்கும் போகமென்றும் அவைகள் விண்ணுலகெல்லாம் விரியவும் புகழென்றும் மற்றப்போக பாக்கியமெல்லாம் மண்ணில் மறைந்துபோம் இகழென்று மன்த்திற்பதித்த தருமராசனும் அசத்தியமுதலிய பாவங்களினாற் பாக்கியமும் பெருமையும் படைக்கலாமென்றும் சத்தியத்தையும் புண்ணியத்தையுஞ் சார்ந்தாலோ தரித்திரம் உடனே சேருமென்றும் புத்திஸ்திரத்தைக் கொண்ட துரியோதனனும் வீராவேசம் பெற்ற வெற்றிப் படைகளுற்ற விற்படைதாங்கிய வீரர்களும் வேற்படையோங்கிய வேந்தர்களும் நால்வகைச் சேனையாகச் சேர்ந்தவர்களும் அவைகளுக்குத் தலையாகிய மாந்தர்களும் யுத்தபூமியினிறைந்து சேனாதிபதிகள் கட்டளையின்படி மேலாகிய சண்டையை விளைத்தார்கள். இந்தப்படியாக இருதிறப்படைகளுங் கைகலந்து போர்புரியவே ஆகாயத்தில் வேடிக்கைபார்க்கவந்த இந்திரன் முதலிய தேவரும் ஆகாயம் இடம்பெறாமல் ஒருவரோடொருவர் நெருங்கியோடினார்கள், பூலோகத்தார் யாவரும் வருந்திவாடினார்கள். இப்படியாக இருவகைப்படைஞரு மாறுபட்டுத் தேர்களைச் செலுத்தியும்

* மகரயூகமென்பது மகரமீனைப்போலவும் அம்மீனுலாவிய கடல்போலவுங்காட்டுவதென்றறிக.

† கிரிஞ்சமென்பது மகரமீனை மாய்க்குமீன், அந்த மீனைப்போல் புலால் செதிள்வால் இவைகளெல்லாஞ் சேனைகளாகநிறுத்தி அந்தந்த உறுப்புகள்செய்யும் வேலைகள் அவ்வவ்விடத்தில் நடக்கும்படியாய் செய்வதென்றறிக.

பதுங்கியும் பக்கத்தி லொதுங்கியும் பாணங்களையுந்தியும் நாணங்களால் முந்தியும் யுத்தஞ்செய்தனர்கள். அச்சமயத்தில் நால்வகைச் சேனைகள்சூழநான்கு வேதங்களையும் பரியாக்ப்பூட்டிய தேர்க்கொப்பான தன்தேரை விரைவாக முடுக்கி இருளுக்குப் பகைகொண்ட எல்லோனாகிய சூரியனைப்போல் விற்கை யாசிரியனாகிய துரோணர் வீமன்மேல் வந்தெதிர்த்து விற்குதை இரண்டுமொன்று படும்படியாய் நாணிழுத்துப் பற்பல வசனங்களைச் சொல்லிச் சீறினர். அப்போது நிலைபெற்றபுகழும் மலையொத்தபுயமுடைய வீமனேஆசிரியனென்னும் மரியாதைபற்றி நெஞ்சினி லஞ்சலிசெய்து வணங்கி, மலையினும் பெரியதேரும்,அந்தத்தேரை யூர்ந்துவந்த வலவனுங்குதிரைகளும் முடியற்றுப் படியில்விழும்படிகெடிபெற்ற கூர்ங்கணைவிடுத்து டங்காரவோசைகாட்டி யுத்தகளத்தில் மெத்தநெருங்கிய நால்வகைப் படைகளையும்வீட்டி அமோகமாகப் பாணங்களைத் தீட்டிமாட்டி அரசர்முதலாகிய யாவரும் அடிபட்டுப் புறமுதுகிட்டோடவோட்டி சேனாபதி தொடுத்த கணைகளையெல்லாம் நானாவிதமாக அறுத்துநாட்டி அந்தத் துரோணருடைய தேகத்தையுந் துளைத்து மனஸ்தாபத்தையும் விளைத்தனன். அச்சமயத்தில் கொடி குடை தேர் சாரதியுமழிந்து வீமனுக்கெதிரில்நிற்க வெட்கமுடையாராய்ப் பின்னிட்டுப் யொதுங்கிப் பதுங்கியபோது சல்லியனைக்கண்டுநாணமுற்று *என்தோழனே,இந்தவீமனைவளைத்தெதிர்த்து சற்றுநேரம் யுத்தம்பண்ணுவையானால் இதோநான் வருகின்றேனென்று ஒருதிசையினுழைந்து போயினர், இப்பால் தாரபதியாகிய சல்லியனை வீமனுக் கெதிர்விடுத்துச் சென்றவுடனே இந்தச்சல்லியனானவன் துரோணர் சொல்லியவண்ணம் படைமன்னவர்கள் புடைசூழந்து கடகடவென்றுதேரோட்டிவரவும் வாயுபுத்திரனிடத்திற் சமர்புரிந்து போரிற் செயம்பெறும்படி வந்தனன். அப்போது தன்மேலெதிர்த்துவந்த அம்மானாகிய சல்லியனைக்கொல்லும் வயப்பூலிபோன்ற வீமன்கண்டு வாவாமாமா என்றேடெதிர்த்துப் போர்புரிவதற்கு வல்லமையும் மனமுமிருக்குமானால் சீக்கிரத்திலோடிவாரும் மனமில்லாவிட்டால் முதுகுகாட்டி ஓடிப்போமென்று வீமன்சொல்ல ; அந்தவசனங்கேட்டுவெங்கடுப்பாகி வெகுண்டு சல்லியன் வில்லையெடுத்து நிறுத்தினன். உடனேவீமன் அந்தவில்லைப் புல்லாகச்செய்து போடவேண்டுமென்று கல்லாகியகணைகளைத்தொடுத்து முறித்துமறுபடியுஞ் சல்லியன்வேறு வில்லெடுப்பதற்கு முன்னமே சரேலென்று கீழ்குதித்துத் தன்னைவெல்லவந்த சல்லியனேறியிருந்த இரதத்தை இந்திரவிமானந்தாங்கிய அயிராவதத்தைப்போல் தோள்மேலெடுத்துக் கரத்தாற்பிடித்துச்சுழற்றி ஆகாயத்தில் வீசிவிடுத்து அவனுக்கு நால்வகைச் சேனைகளைத் துணைசேர்க்கும்படியாய் அநேகந் தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் பதாதிகளையும் குதிரைகளை நடத்தியும் யானைகளுடன் யானைகளை மூட்டிவிட்டும் ஒட்டியவாரிதியில் வாரியெறியும் அலைகளைப்போல் வாரிவாரி யெறிந்தனன். அந்தப்போர்க்களத்தில் அப்படி

* 'இது துரோணர் என்தோழனேயென்று விசேடித்துச்சொன்னவாக்கிய சிநேகவுரிமையைக் காட்டாமல் என்போல் வீமனிடத்தில் அடிபட்டோடப்போகின்ற அண்ணலாதலால் எனக்குத்தோழனென்னும் பெருமைதோன்றக்காட்டும்' என்பதுகருத்து.

யெறியவே முந்திச்சென்ற சல்லியனானவன் ஆகாயத்தில் உயர்ந்து தலை
கீழாகக் கிறுகிறென்று சுழன்று தானுந்தேரும் தரையில்வந்து விழுந்துவருந்
திச் சல்லியமாகி தாராகணவீதிவரைக்குஞ் சென்றுவிழும் ஜனங்களுடனே
கூடப்புரண்டு சஞ்சலமுற்றான். அந்தத்தன்மையை உள்ளங்கை நெல்லிக்
கனிபோல் தானேநேரிற் பார்த்திருந்த துரியோதன மஹாராசன் மன்
னுயிரெல்லாந் தன்னுயிரைப்போல் மதிக்கு மனமுடையவனாகவருந்திச் சல்
லியராசனுக்குச் சகலஉபசாரமும் நடத்தும் படியாய்த் தன்தம்பியர்களை
விடுத்து அனேகங்கோடி வாத்திய முழங்கிவர திரண்ட படைமன்னருட
னெழுந்து அநேகவிதம் நிறைந்த நந்தியாவட்ட மாலையணிந்த அரசர்க்கரச
னாகிய துரியோதனனும் வெற்றிமாலையணிந்த வீரர்களும் துச்சாதனன் முத
லியசிலதம்பிமார்களும் சகுனிமாமனும் மத்திரதேசத்தலைவரும் வீமனுக்கெதி
ரில்வந்து வில்லைவளைத்துக் கலமாறி பொழிவதுபோல் விண்மாரி பொழிந்து
ஆயிரமாயிர மென்னுங் கொடுங்கணைகளினாற் கடும்போர் விளைத்தார்கள். அச்
சமயத்தில் சிங்கக்கொடிதரித்த வீமசேனன் இவர்கள் சேர்ந்துவந்து போர்
தொடுப்பதைக்கண்டு உடல்பூரித்து தேரிலேறிக்கொண்டு நகுலசகாதேவர்
முதலிய தம்பியர் நெருக்கமும் உடலைவிட்டயரா நிழற்போல்வருங் கடோ
ர்க்கசன் முதலாகிய அரக்கரும் கலந்துவரும்படியாய்த் திடுக்கெனத் தேரைச்
செலுத்திச்சென்று எதிர்நின்று திசைகள் மறையும்படியாகத் திவ்யாஸ்திரங்
களைத்தொடுத்து அவர்கள்விட்ட அநேகமாயிரங் கணைகளையுமறுத்தகாலத்
தில் இருவர்சேனையிலு மிருந்த வீரர்கள் நேருக்குநேராகக் கைகலந்துபோர்
புரிந்தனர். அதெப்படியெனின் வேலாயுதங்களும் சூலாயுதங்களும் வாளா
யுதங்களும் பாலாயுதங்களும் குந்தாயுதங்களும் சக்கராயுதங்களும் தோமரா
யுதங்களும் சேமக்கணைகளும் பூமன்கணைகளும் இந்திரப்பகழியும் சந்திரபக
ழியும் மந்திரப்பாணமும் தந்திரப்பாணமும் முள்ளம்பு தளைதடி முதலியவை
களுங்கொண்டு அவரிவரென்று தெரியாமல் ஒருவர்படைக்கு ளொருவர் புகு
ந்து வருந்தப்போர்புரிந்து வரும்போது வில்லுக்கிசைந்த தோளும் வடிக்கணை
களுங்கொண்ட வீமசேனனும் விக்கிரமத்துடன் உக்கிரங்கொண்டு கொக்
கரித்து ஒருவருக்கொருவர் யுத்தஞ்செய்தனர்கள். அதென்னவெனின் மந்
திரகிரியும் மாவிந்த மலையும்போன்ற தேரை எதிரெதிர்செலுத்தி வாயுதேவ
னும் வடவாமுகாக்கினியும் எதிர்த்ததுபோ லெதிர்த்து இருவரும் வில்லை
வளைத்து ஷ்டங்காரமடித்துக் கணைகள்விடுத்து ஒருவர்மார்பை யொருவர்
கிழித்து, ஒருவர்தோளின்மேல் ஒருவரடித்து, ஒருவர்கொடியை யொருவர்
கிழித்து, ஒருவர்முடியை யொருவருடைத்து; ஒருவர் தேரை யொருவர்
பேர்நடத்திவருங் காலையில்கதை கழுமுட்கருவி வாள்முதலிய விற்றிறமை
யிற்சிறந்த வீமன், வேறுதேரேறி விரைந்துவந்து கடுஞ்சரங்களைச் சொரிந்தகா
லையில் வணங்காமுடிமன்னவனாகிய துரியோதனனும், வேறுதேரேறித் தொ
டர்ந்து சுரிமுகக் கணைகளைத்தொடுக்க அந்தக்கணைகளை வீமன் குறுமுகக்
கணைகளாற் குறைத்துக் கோடானுகோடி பாணங்களையுநிறைத்து நிறைத்தவ
னுடைய முன்பக்கத்தைத்துளைத்துக் கவசத்தையுநீக்கிய காலையில் சரவேகத்

திலுமிஞ்சியவேகத்தொடுந்தானேறியதேர் நேரோடே ஓடியசர்ப்பகேதுவைச் சாரத்திவென்று பொற்பமைந்த இரதத்தி னின்றவனுடைய பின்பக்கத்திலு மழற்கணையநேகம்துளைத்து விடுத்தனன். தம்பியர்முதலியவர்களுக்குங்கும்புகும்பாகக் கொலைக்கணையேவி அவர்களுடைய மார்பையும் தோளையும் உதிரம் வழியக்கொடிய குழிப்புண்ணாக்கி இன்னம்பற்பல பகழிவிடுத்துப் பின்னுஞ் சிற்சிலபேரைத்துளைத்து எவரெவர்கள் யமலோகத்திற் கனுப்பவேண்டுமோ அவரவர்களைப்பொறுக்கி அப்போதேயனுப்பி இவர்களல்லாமல் இன்னமும்பலரை இருந்தவிடத்தில் விட்டெழாமற்செய்து வேகங்கொண்ட குதிரைகளையும் பாகனேறியயானைகளையும் சூதன்விடுத்ததேர்களையும் கூவிநெருக்கும் பதாதிச்சேனைகளையும் பாழ்படத்தரித்து பலவாறுகமுறித்து அடியுடன்முடிசாய நெரித்துப் படாதபாடுபடுத்தும்போது குதிரையிழந்து தேரழிந்து பாகர் சிதைந்து யானையொழிந்து வில்முறிந்தசொன் மறந்து, வீரதீரப்புய வலிமையுங்குறைந்து ஆரவாரசேனைத் தலைமையுமறைந்து எவர்களும் முனைமுகத்தினில் நில்லாமற்பறிந்து முறிந்தோடச் சயங்கொண்ட வீமசேனனை தேவர்கள்கண்டு ஜயஜயவென்று, கணைமாரிபொழிந்தனர்கள், இந்தப்படிஅந்தப்படை நொந்து போகப்புரிந்த யுத்தத்தில் அலக்கழிந்து அடிபட்டுக் கலக்கண்ணீருகுத்தோடிய காவலன் முதலாகிய சேனைகளைக்கண்டு கண்ணில்லா வரசன் பெற்ற காளையர்களில் விகர்ணன் முதற்சிலரும் வெற்றிவேல்தாங்கிய வேந்தரிற்பலரும் சிவந்தகண்களுடையவர்களாய்ச் சேர்ந்து முதிர்ந்தசினங்கொண்டு முகிலெனத்திரண்டு அதிவேகத்துடனோடிவந்து வீமனெங்கே, யெங்கேயென்று அதட்டினார்கள். அப்போது வீமசேனன் அவ்விடத்தில் இல்லாமையால் அந்தஅதட்டுதலை அபிமன்னுகேட்டு, பரிசுத்தமாகச் சாணைபிடித்துத் தயில தூபஞ்செய்த பாணங்களும் வரிபொருந்திய வச்சிரக்கட்டுகளுடன் எட்டுவிருதுகளும் சிறுமணிபொற் பட்டமுங்கட்டிய விஜயகோதண்டத்திற் கொப்பாகிய வில்லைக்கைக்கொண்டு விரைந்தெதிர் வந்துநின்று விஷச்சுவாலையாகியபாணங்களைப்பொழிந்து உண்மையாகியஞானநிலைமைபெற்ற விகர்ணனுடைய மனங்கலங்கும்படியாயடித்துத் தேர்குதிரை சாரதி முதலிய யாவற்றையும் ஒடித்துமுடித்துவிட்டான், அக்காலத்தில்அப்போர்க்களத்தில்விரைந்து தாக்கலால் மாறாமல் வந்தவழியே அழிந்தோடி அருகில் வந்துகொண்டிருக்கிற தன்தம்பியாகிய சித்திரசேனன் ஏறியிருக்குந் தேரிற்போயேறி, உடனே மற்றத் தம்பிமார்கள் சிந்துதேசாதிபராகிய மைத்துனர் மத்தகஜங்களுக்கதிபதியாகிய பகதத்தன் வெற்றியையுடைய விகர்ணனும் முதலோருடனுஞ் சேர்ந்துவந்து மறுபடியும் இந்தஅபிமன்னுவை வளைத்துக்கொண்டு அளவில்லாத போர்கொடுத்து அம்புதொடுத்தனர். அப்போது அவரவர்களால் விடப்பட்டஅஸ்திரங்களையெல்லாம் அபிமன்னுஅழித்து அவரவர்கள் மார்புபுதையும்படியாய் விதையம்புகள்போல் உதையவிடுத்து மொய்த்து வந்தவர்யாவரும் எய்த்துநொந்தவராகியும் மயங்கித்தலைசுற்றி விழும்படியாய் மொத்தினான். இப்போர்க்களத்தில் இப்படியடிக்க அவரவர் பிடித்திருக்கும் வில்லானது அடிக்கடி நாணியறுந்துநிமிரவும் மளுக்கென்று விற்கள்தறிந்து குமுறவும் மேற்

கணைதொடுக்க விரைந்தும் பாற்கடலைப்போ லிறைந்தும் மேகமுழக்கென முழக்கியும் அண்டமுகட்டை யதிர்த்தும் தாராகணங்களுதிர்ந்தும் மண்சித றும்படியாய்க் கண்சுழன்று திண்சிலைவளைத்து சரமாரிபொழிந்து கடுங்கோபங் கொண்டு மறுபடியுஞ் சண்டைக்கு வந்தனர்கள். அப்படி மூந்திவந்தவர்களை அபிமன்னுவானவன் சிந்த அடித்துப் பிந்தவிடுத்துக் கொடுங்கணை பொழிந்து தன்னையெதிர்த்தகொடிய விகர்னனென்பவனைத்தகைந்துஅவன்தேகமுழுமை யுஞ் சல்லடைக்கண்களாய் உதிரம்வடியத் துளைத்து கவசத்தையு மறுத்துக் குடல் கலங்கிக் குருதிநீரோடவும் இரண்டுதோளும் ஓயவும் ஒருகொடி யினில் இடிமின்னலைவிளைக்கும் வடிக்கணையிரண்டு வயம்பெறவிடுத்து மன் னர்மன்னர்கள்வந்து வணங்கும் வீரகண்டாமணித்தாளையும் மணிவாசலையு முடைய வணங்காமுடியோன் றம்பியான விகர்னனை மறுபடியும்மடக்கி இடி யாஸ்திரத்தையெடுத்து மார்பினுழைந்து முதுகிலுருவிப் போம்படியாய் விடு த்து இன்னமும் வேலையுண்டோ வென்றுகேட்டு எவர்களு நிகரில்லாமல் மகா மேருவைப் போலோங்கி வாகுவலயந்தரித்த மணிப்புயங்களையுடைய அபி மன்னு இன்னம்வரத்தக்கவர்கள் வாருங்களென்று மதத்துநின்றான். இதைக் கண்ட விகர்னன்முதலாகிய சத்துருக்க ளெல்லாரும் விசனமடைந்து ஒற்றை இரதத்துடன் ஒருவனாயிருந்து உலைவாய் மெழுகேபோல் நம்மை உருக்கிக் கருக்கியுமிந்தஉத்தமனுக்குளப்பாக ஆரைச்சொல்லுவோம் இனியாரும் இல்லை எத்தனைநாள் யுத்தஞ்செய்தாலும் வெற்றிக்கும் நமக்கும் வெகுதூரமாயிருக் கும். அந்தச்சொல்லுக்குரிய அர்ச்சுனனுக்கும் அவன்பிள்ளைக்கும் வெற்றி யாகிய புருஷன் மெத்தக்கூட்டாளியாயிருக்கிறான், ஆகையால் இனிநாம் யுத் தஞ்செய்து என்னபெருமையைப்பெறப்போகிறோம் ஒன்றுமில்லைஇந்தமட்டும் பெரியோர்செய்த புண்ணியம் உயிர்பிழைத்தோம் இனி ஓடிப்பிழைப்பதே உத்தமமென்று ஒருவரோ டொருவர் சொல்லாமல் வெருவிப் பயந்தோடினர். அப்படி ஓடினவர்களில் கொஞ்சமானமும் கொஞ்சவீரமுமுடைய அதிரதர் முதலானோர்கள் சற்றுநின்று நிதானித்துநல்லது இன்றைப்போரில் நாமெல் லோரும் ஒன்றாகக்கூடி நெடும்பகழி குறும்பகழிமுதலிய நெட்டிலைவேல்களும் பட்டயக்கோல்களும் விடுத்துச் சண்டைசெய்தோமே. அநேகங்கோடி அஸ் திரங்களைப்பாழாக்கினோமே இந்தஅபிமன்னுவினுடையஅங்கத்தில் ஏதாயினுங் கொஞ்சம் பங்கமுண்டா அல்லது அவனுடலாகிய காயத்தில் எள்ளத்தனை காயங்கள் நம்மனோர்களால் ஏற்படுத்தினதுண்டா ஏன்வீணாய் உரங்கொடுத் துக் குறாலும்போகவேண்டும், ஐயையோ இந்தமட்டும் உயிர்ப்பிச்சையாக ஓடி பிழைப்பதே உத்தமமென்று முன்னோடின வர்களுக்கு முன்னாகப் பின் னோடினவர்களோடி பாசறைபோய்ச் சேர்ந்தனர்கள். அச்சமயத்தில் கார் முனை கொண்டதைப் போல்வந்து போர்முனைவென்று பேர்மிகக்கொண்டு, சீர்பெறநின்று தேர்விடுகென்று சாரதிக்குச் சொல்லிநின்ற அபிமன்னுவை நேரெதிர்சென்று மேலாகிய சந்தோஷநிறைந்த மனமும் வீரருக்குச்சிறந்த கனமும் வேந்தர்க்கு வேந்தனாகிய பெரியதனமுமுடைய தர்மராஜன் முத லியபாண்டவரென்னுந் தந்தைமார் அன்பொடுகண்டு சந்திரனைக்கண்ட சமுத்

திரம்போற்களித்து இரைந்து மகிழ்ந்து இறுகத்தழுவியணைத்து முத்தமிட்டுக் கொண்டு உத்தமவித்தகபுத்தியும் வித்தையுமுடைய புத்திரனுடன் வெற்றி வார்த்தையைப் பேசிக்கொண்டு போர்க்களத்தின் வேடிக்கையையும் பார்த்து பொம்மலாகிய எக்களிப்பா யிறுமாப்படைந்து பாசறைபோய்ச் சேர்ந்தனர். இப்பால்யுத்தகளத்தில் அநேகஞ்சேனைகள் குதிரைகள்யானைகளெல்லாமழிந்து உதிரவெள்ளம்வழிந்துஓடவும் அந்தவெள்ளத்தின் அலைகளில் தத்திவிழுந்ததலைகளைக்கழுகும் பருந்தும் காக்கையும் கொத்தியெழுந்தகாலையில் நரிகள்பறித்துக் கௌவிக்கொண் டோடவும், அதைக்கண்டசிறுபட்சிகள் மனவேக்கங்கொண்டு வாடவும் இப்படியாக யுத்தபூமியில் மலையினும் பெரியதலையினையுடைய யானைகளின் தந்தங்கள்பிடுங்குண்டு அந்தங்குலைந்து டொங்காகி மந்தரகிரிமலைபோலயர்ந்து தாரைதாரையாய்ச் செந்நீர்பெருகச் சாய்ந்துகிடப்பது எப்படியிருந்ததெனின், துவாரகையிலிருக்கும் ஸ்ரீகண்ணபிரான் தன்பட்டணத்திற் கழைப்பித்த கஞ்சனானவன் தன் நகரக்கோட்டை வாசலில் மதம்பொருந்திய பட்டத்து யானையைநிறுத்தி வெளியிலிருந்து வருவோர்களெல்லோரும் யானையின்வயிற்றில் நுழைந்துபோவதென்றும் ஸ்ரீகண்ணபிரான் நுழைந்து வரும்போது யானையினால்நெருக்கிக் கொன்றுபோடச் செய்யென்றும் தன்னுடைய கருத்தை மாவுத்தனுக்குச்சொல்லிவைத்த காலத்தில் யானையைக்காத்த ஆதிமூலமாகிய உளவறிந்தகள்வன் அநேகமாகிய இஷ்டருடன் யானைமுகத்துக்கு நேராகவந்தகாலையில் மணங்கமழ்ந்தகுணந்தழைந்தவன் நிறையுந்தேனுறைந்த திருத்துழாயணிந்த தோளுடைய சுவாமியை நெருங்கிக் கொல்லவந்த யானையின் இரண்டுதந்தங்களையும்பிடித்து அசைத்திழுத்துப் பிடுங்கியபோது சந்தங்குறைந்து அந்தங்குலைந்து சிந்தைநொந்து வருந்தி விந்தகிரிபோல் விழுந்திறந்த குவாலய பீடமென்னும் கொம்புபோன யானையின் கோலமெப்படியோ அப்படியிருந்தது. மேலும் ஓடிக்கொண்டிருக்கும் உதிரவெள்ளத்தில் பாதிதேகம் மறைந்தும் மற்றப் பாதிதேகம் வெளியிற்றெரிந்தும் துதிக்கையை மேலாகத் தூக்கிக்கொண்டும் வாய்விட்டலறியும் கால்களிற் சக்கரம்பட்டுக் கிடக்கவுமு இத்தன்மையாய் விழுந்திளைத்த வீரபட்ட நுதலணிகளையுடைய யானைகள் எப்படி இருந்ததெனின், மலைச்சார்பிலிருந்த சுனையில் தினசரியாய் நீருண்ணுவதற்கு அநேகம் பெண்ணானைகளுடன் வந்திறங்கிய யூதநாதனென்னுங் கசேந்திரனை முதலைபிடித்துக் கொண்டபோது பெருங்கூச்சலிட்டுக்கரையிலிருக்கும் யானைகளின் துதிக்கையைப் பிடித்துக்கொண்டு முதலையைக் கரையிலிழுக்க முதலையானையானையைச் சலத்திலிழுக்கஅக்காலத்தில் இறைவனைக்கூவிப் பாதிபாதியுடல் நீரில்மூழ்கியும் பாதிமூழ்காமலுமிருந்த நீலகிரியைப் போன்ற கசேந்திராழ்வானைப்போலுமிருந்தது. இதன்றியும் மேகத்தைப்போல் மதசலத்தைப்பொழியுங் கவுட்குழியும் சிறியவிழியும் இரண்டுசெவியும் தந்தக் கொம்பும் மத்தகத்தலையும் தும்பிக்கையும் தோலும்வாலும் நாலுகாலும்இவைகள்தவிரமற்ற மாமிசங்களையெல்லாம் பேய்கள் சுறண்டித்தின்றுபோட்டயானைத்தோல்கள் எவ்வித மிருப்பதெனின், நான்குவேதங்களும் மோனமென்னும் அகல்வானமென்னும் முழுஞானவநுபூதித்திருவுருக்கொண்டருளிய சிவபெரு

மானென்னும்வீரட்டேசுவரர் தாருகாவனத்து இருடிகளனுப்பிய யானையை யுரித்து அணிந்துகொண்ட யானையுரியைப்போன் றிருந்தது இன்னும் அறுபட்டுக்கிடக்கும் இராக்கதர்முதலிய சேனைகளின் தலைகளையும், தங்கள்தலையிற் கழிந்துகொண்டு வாய்களிற் கவ்விக்கொண்டு வரும்படியாகிய பூதங்கள் ஆகாய்த்திற்சென்ற வீரர்களுடைய தலைகளைக் கைக்கொண்டு உள்ளிருக்குந் தசைநிணமுதலிய வெல்லாவற்றையும் உறுப்புறுப்பென்று உறிஞ்சிக்குடித்துவருகிற சிலபூதங்கள் மடக்கித் தங்கள்தலையில் யானைத்தலைகளைக்கவிழ்த்துவருங் கண்தெரியாப் பூதங்கள்மேல்விழுந்து சண்டைகொண்டு ஒன்றுக்கொன்று விடாமற் போர்புரிவது எப்படியிருப்பதெனின், அநேகங்காலம் அரக்கரால் அவதிப்பட அமரர்க்கிறைவனாகிய தேவேந்திரனும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் கயிலாயபதியைக் குறித்துவருந்தித் தவமிழைத்த காலத்தில் இறைவன் உமாதேவியுடனெழுந்தருளிச் சித்திரமணி மண்டபத்தில் ஓவியமாகத்தீட்டியிருந்த பிரணவாகார வடிவத்தை எப்பொருட்கு மிறையென்னும் முதற்கடவுளாகிய விநாயகமூர்த்தியாகத் திருவுளங்கொண்ட சிவசத்தியி னருளுருவா யமைந்த விநாயகக் கடவுளானவர் தேவர்கள்முதலியவர்கள் குறைநீங்க கயமுகாசூரனுடனெதிர்த்து யுத்தஞ்செய்த காட்சிபோலிருந்தது, இப்பால் இரத்தங்களைக் குடித்து வெறியேறிச் சண்டைசெய்யும் நாய்களும் நரிகளும் பிரமானந்தப் பெருங்குடியனைப்போன்று திரிந்தது. காக்கை கழுகு பருந்துமுதலிய பட்சிகள் இச்சையடங்கத்தின்று அபிமன்னுவுடைய விசயத்தைப் படித்துக்கொண்டு நாளைக்கு வேண்டுமென்று புதைக்கும் லோப நாய் நரிகளைப்போல் தாங்களும் புதைத்துத் தடந்தெரியாமற் சஞ்சலப்பட்டன. இப்படி போர்க்களத்தில் இமயகிரிவரைக்கும் சயத்தம்பம்நாட்டிய விசயன் குமாரனாகிய அபிமன்னுவானவன் இன்றை யுத்தம் உங்களுக்குப் பேர்துமல்லவாவென்று எதிரியின் சேனைகளைக்கேட்டு தங்களுடைய சேனைபடைகளும் அரவான்முதலியவர்களியாவரும் சூழும்படியாய் விருதுமேளதாளங்களுடன், வெற்றிக்கொடி பிடிக்கத் தாமிருக்கும் பாடிவீட்டிற்குப்போய் பொருந்தி யிருந்தனரென்று திரிதராட்டிர மகாராசனுக்குச் சஞ்சயன் தெரிவிக்கப்போயினன். அப்போது அச்சஞ்சயனை வழிவிடுக்கப்போன வழித்துணைபோல் சூரியனும்மேற்குத் திசையிற்சென்று மறுபடியுஞ் சஞ்சயன் வரும்போது கூடத்தொடர்ந்து ஆறுக்கு ஏழு அதிகமல்லவோவென்று ஆசையாய்ப்பார்க்க வந்தவனைப்போல் கீழ்த்திசையி லுதயமாயினன். அச்சூரியன் அஸ்தமித்தவுடனே பாண்டவர்களுந் துரியோதனாதியருஞ் சண்டை போட்டார்களே அதைப்பார்ப்போமென்றுவந்ததுபோல் இராத்திரியும் சந்திரனும் இளைந்தோடிவந்து இரணகளத்தைப்பார்த்து பேய்க்கூற்றாக குருக்கக்கண்டு பேசாமலோடிப்போயினர், இப்பால் சஞ்சயன்இரணகளத்திற்கு வந்துவிட்டனன்; மகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டுவந்தனர்.

ஆறும்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

---

## ஏழாம்போர்ச்சருக்கம்.

### விருத்தம்.

உரலும்வேதமுந்தொடராநந்தகோனுடனசோதைகண் டுருகவாழ்வுகூர்
தரணிமீதுசெங்கையுமாமுழந்தாளும்வைத்துதைத்தழமமாயனூர்
விரகினூடுதாமருதினூடுபோய்மெத்தெனத்தவழ்ந்தருளிமீளவும்
புரியுநீள்கடைக்கண்ணும்வண்ணமும்போற்றுவார்கள்மெய்ப்புளகமேறுமே.

அரசனே ஏழ்பரியோனுதயமாகிய ஏழாநாட்காலமே இருவர்படையுமெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு யுத்தசன்னுத்தராய் வீரம்பேசி யெழுந்தவுடன் பிரயாணபேரி யுத்தபேரி முதலிய வாத்தியங்களெல்லாம் பெருங் கடல்போல்முழங்க ஆயுதங்களுட னுயுதமிழைய அதிபதிமுதலிய சேனுதி பதிகளுடைய சாமரை பீலிக்குஞ்சமும் கவிக்கப்புறப்பட்டும் நேற்றுப் போர்புரிந்த இடத்தில்வந்து சேனுபதியாகிய துஷ்டத்துய்மன் மரகத மலை போற் திருமேனிவாய்ந்த மாதவனைப்பணிந்து இன்றைக்கு என்னயூகங்கட்டுவதென்று உத்தரவுகேட்டு சகலபடைகளையுமமைத்து *வச்சிரமாசுண யூகங் கட்டினன். இப்பால் துரியோதனனுடைய படையிற் சேனுபதியாகிய வீஷ்மாசாரியர் தங்களுடைய நால்வகைப் படைகளையுங் கொண்டுவந்து †சகட யூகம்வகுத்து சகலவித வாத்தியங்களுமுழுங்கச் சகலவரசர்களு நெருங்கப் பலவிதக்கொடிகளும் பிடிக்கப் பகைமேற் கொண்டிருந்தனர்.

இந்தப்படி இருதிறப்படைகளும் யூகங்கட்டிவெற்றிக்கொடிநாட்டி விருது சின்னமுழக்கி சேனுதிபதியிருவரும் முனையில்வந்துநின்று முடிசாய்ந்து கொடிசாய்ந்தனர், உடனே, அந்த இருபடைகளுங் கைகலந்து எவர்களுக்கெவர்கள்மீதிற்பகையோ அவர்களை யவர்கள்போம் வழிமடக்கிக்கொண்டு அண்டர்கள்யாவருமொடுங்க எண்டிசைப்பரிவரு நடுங்க அவனிகுலுங்க விரைந்தோடி யுத்தஞ்செய்தனர். அதிரதர் மகாரதர்முதலியபேரும் செங்கண்களிற் றீப் பொரியுதிர அம்புகொண்டெய்தனர். யானைகளுங் குதிரைகளும் பதாதிகளுந் தேர்களும் இப்படி மாறிமாறிப் பகைவர்கள் சீறிசீறிப்போர்புரிந்துவருங் காலையில் சத்துருக்களழியவும் சகலவியாதிகளொழியவும் பூதப்பிரேதபிரமராக்கதப் பைசாசகணமுதலிய கிரகங்களெல்லாம் வாய்திறந்துமொழிந்துகழியவும் அறைத்துப்பூசினுல் அஸ்திபற்றிய ஆருப்புண்களெல்லா மாறவும் இன்னம் அநேகங் காரியங்களுக் குபயோகமாகவிருக்கிற வாசனைபொருந்திய வேப்பமாலையணிந்த புயத்தானு மீனக்கொடியோனுமாகிய வழுதி பஞ்சவன் மாறன் உசிதன் செழியன் தமிழ்நாடனென்றும் சங்கப்புலவர்களாற் காரணப்பேரிட்

* வச்சிரமாசுண யூகமென்பது, வச்சிராயுதத்தைப்போ லழிவற்றதாய் படமுதலிய உடலும் பாம்பைப்போல சேனைகளை அமைப்பதென்றறிக.

† சகடயூகமென்பது, வண்டிச்சக்கரம்போல் தொப்பைக்கட்டை, குடம், பழு, இலை, மேலவட்டசை, வளைவு, இருப்புக்கட்டுச்சட்டம், மத்தியிற்றுளை, உள்வாய் கட்டுமேலானி இவ்வளாக, அதிரதனை முனையினிறுத்தி நால்வகைச் சேனைகளையும் சக்கரமாயமைத்து நடுத்துளையில் நாயகனைவைத்துக் காப்பதென்றறியவும்.

டழைக்கும்படியாகிய புகழ்பெற்ற பாண்டியராஜன் தனது அம்புப்படைகளும் வளைதடிக்கம்புப் படைகளும் கும்புகும்பாகக்கூடிப் போராடும்படியாய்விடுத்துத் தானுஞ்சிலசில கணைகளைத்தொடுத்துத் துரோணாசாரியனை வளைத்து எல்லா அரசர்களிலும் மேலாகிய அக்கறைதனக் கிருக்கக்காட்டிக் கடும்போர் புரிந்தனன். அதெதினாலென்றால் பாண்டவர்களும்பஞ்சவரும் தானும் பஞ்சவனுமாகையால் பேர்ப்பங்காளி சம்பந்தம்வைத்துக்கொண்டு பாண்டவர்கள் பொருட்டு தன்பிராணனை எண்ணிப்பாராமற் படுகலப்படுத்தி யுத்தஞ்செய்து வில்தேர் சாரதிகுதிரை மீனக்கொடியாவும் விறுதாவிலிழந்து துரோணாசாரியனாலழிந்து உதிரம்வழிந்து உடலுடனுலர உள்ளுடைந்து காபிவரைக்கும் வறண்டுபோய் காத்தடுமாறிப்பயந்து வியந்தோடினான் அப்பால், நான்காம் போரில் இராக்கதமாயையாற்கம்பமுறிக்கும்யானைக்கும் மாயைவடிவெடுத்துப் பகதத்தனுடைய யானைக்கூட்டங்களையெல்லாம் பதறக்கதறங் சிதறவுதறி மாய்த்துப் புறமுதுகிடாமற் சயித்தவிக்கிறம மிகுந்த கடோற்கஜக் காளையானவனும் நேற்றைப்போரில் மாயைபோல்வந்த வீராள்முதலிய யானைப்படைகளையெல்லாம் நிமிஷத்திற்சயித்துப் பின்வாங்காமல் வெற்றிகொண்ட அபிமன்னுவும் கூடிவந்து துரோணாசாரியருக் கெதிரே சீறினார்கள். இதன்றியும் நீலமேகம்போன்ற காந்தியையுடைய நெடுமாலுக்குத் தம்பியாகிய சாத்தகியாழ்வான் போர்முகத்திற்புகுந்து நேரிட்டபேனை பிளந்துவருங்காலத்தில் சதாயுவென்பவனெதிர்த்துக்கணைகளைத்தாக்க அவைகளையெல்லாம்பொடியாக்கி அவனுடைய கிரீடமுடியும் தேரின்கொடியும் பூமியிற்படிய மிடநெடிய அம்புகளினா லறுத்துத்தள்ளி அவனுடைய தேகத்தையும் மோழையாக்கிய போது சற்றுநேரம் யுத்தபூமியில் நிலைத்துநிலைத்து நிற்கமாட்டாமல் அந்தச் சதாயுவென்பவன்பதாதியாயோடினான். மேலும்சகுனியும் அவன்சேனைகளும் வீமசேனனுடனெதிர்த்துப் போராடி வீமனாலடிபட்டோடிப்போனார்கள். அப்போது சல்லியராஜனோடிவந்து சமர்தொடுத்து வில்முதலிய வீரமும்விடுத்து வெறுங்கையோடு நிலம்பாய்ந்தோடும்படி வெற்றிகொண்டு வீரமாலையணிந்தான். அந்தப்போரில் இப்பால் மகமேருவைப் போலொத்த தேனை உலகளந்ததாளினையுடைய சாரதிசெலுத்த இந்திரகுமாரனாகிய சயந்தனைப் போல் அந்த இரதத்திலேறிவரும் அர்ச்சுனனானவன் நால்வகைச்சேனைகளுஞ் சூழும்படியாகச்சென்று திரிபுரதகனனைப்போனின்ற வீஷ்மாசாரியனை வளைத்துக்கொண்டு சரமாரிவிடுக்க அவருங் கணைமாரிதொடுக்க இருவருமெதிர்த்து இருவர்விற்களும் வளைத்து ஒருவர்விட்டபாணம் ஒருவர்மேற்படாமற்றடுத்து ஒவ்வொரு சரத்திற்கு ஒவ்வொரு சரம்விடுத்துக்கொடுத்து லகுவம்பு பிகுவம்புமுதலிய சத்துருமித்துருக் கணைகளுந்தாக்கி புத்திரமித்திரப் பேனையும் போக்கி இவரிருவரும் புரிந்தபோர்வல்லபத்தை இன்னவாறென்று எண்ணவும்படாது, ஒருவர்க்குச் சொல்லவும்படாது, ஆனாலும் ஒருவராகச்சொல்லி உவமிக்கலாமெனின், எனக்கு ஒருநாக்கும் ஒருவாயுமல்லதுவேறில்லை ஆனாலும் ஒரு உபாயமாய்ச்சொல்லுகிறேன், எப்படியென்றால், தேவர்சேனாதிபதியாகிய மயில்வாகனக்கடவுள் போர்புரிந்தகாலத்தில் மும்மதங்கொண்ட யானைமீதே

றிவந்த தாரகனைப்போலும் பாலசுப்பிரமணியசுவாமியைப்போலுமிருந்தது. மேலும் என்னுடையஉடங்க இன்னொரு உவமானஞ் சொல்லுகிறேன் அரசனே, அதென்னவென்றால், இராவணியும் இலட்சுமணரும் ஸ்ரீராமபிரானும் தசக்கிரீவனும் போர்புரிந்த தன்மைபோலிருந்தது. இப்படிப் போர்செய்யும்போது யானைப்படைக்குள் யானைப்படைகள் புண்பட்டு பிராணன் விட்டுப்போகவும், தேர்கிளைக்குள்ளே தேர்கிளைகள் சிதைந்து முறிந்துதைந்துபோகவும் குதிரைக்கூட்டத்துக்குள்ளே குதிரைக்கூட்டங்கள் குற்றுயிர் குறையுயிராய்ச் சுற்றிலும் கதறிச் செத்துவிழவும் சாரதிக்குட்சாரதிகள் தலைபோலெழுந்து தலைவிழ்ந்தழவும் இவ்விதமாக ரணகளத்திற்சேனைகளிறந்து இறைந்துபோகும்படியாய் வீஷமாசாரியரும் விஜயனும் புரிந்த யுத்தத்தைச் சொல்லுவதற்கு எட்டுத்திசைகளும் பசபசவென்று விழிக்கும் சொல்லவென்றாலோ நாவெழாது ஆகையால் குருபூமியிலிருபக்கத்திலும் நிறைந்து நின்ற இருவர்படைகளிலும் பொருந்திய வீரர்களில் இருவருடைய பாணம்பட்டிறவாதவர்களில்லை எதிர்த்துப் போர்புரிய மாட்டாம லோடினவர்களும் ஒற்றைக்கையற்றவர்களும் இரண்டுகை யற்றவர்களும், மார்புகிழிபட்டவர்களும் புயமறுபட்டவகளும் ஆயுதத்துடன் கரமற்றவரும், சிரமற்றவரும் போர்புரியும்போது கால்துணிந்தவரும் வல்லமைகெட்டவரும் வில்லழிபட்டவரும், பிணமலைகளிற்போய்ப் பதுங்கினவரும், பயந்தோடினவர்களும், அயர்ந்து வாடினவர்களும், உயிரழிந்தவர்களும், உடலழிந்த வர்களுமாய்ப் போர்க்களத்திலிறந்தார்கள். ஆனாலவர்கள் பட்டபாட்டை பலவாறாகச் சொல்லுவதிலும் ஒருவாறாகச் சொல்லுவதிலும் ஒருவாறாகச் சொல்லுகின்றேன், அதெப்படியெனின் ஈரம்வற்றிய ருகைப்போன்றது இருதிறச்சேனைகளும். அந்தச்சருகை யெரிக்கப்புகுந்த பெருநெருப்பையொத்தது இரண்டுவீரர்கள் தொடுத்தசரங்களும்; ஆதலால் இனிவேறு யுத்தஞ்செய்யவேண்டியதுமில்லை, இதைவிட வேறுயுத்தத்தின்பெருமையை நான்சொல்லத் தக்கதுமில்லை நான் சொன்னபோதிலும், நீர்கேட்கவேண்டுமென்னும் ஆசையுமிராது, தேவர்முதலிய யாவரும்பார்த்துச் சலிக்கும்படியாய் விஜயதீரனும் வீஷ்மவீரனும் முனைந்துபோர்புரிந்ததில் திக்குகளெல்லாம் இரத்தவெள்ளமாய் அவ்விடத்திற்பாய்ந்துசிவந்துவழிந்தோடியது அவ்விடங்களில்தலையறுந்த கவதங்கள் துகையிறந்தான இத்தன்மையாக சொல்லிய வெம்போர்களத்தில், குறைவிலாச்சண்டையை நிறைவுறச்செய்து அபரிமிதமில்லாமலழிந்த ஏழாநாட்போரையெடுத்துப் பேசுமிடத்து இந்த ஆறுநாளையிலுமிறந்தவரைப்பார்க்கிலும் ஆறுபங்கு அதிகமானபேரை இன்றழித்துக் கொன்றனர். அரசனே பாரிய வாளாயுதத்தாலும், கூரியவேலாயுதத்தாலும் பகபகவென்றெறியும் பகழியின் முனையாலும் கரகரவென்றுழலும் கதிர்நேமியினாலும் அடிபட்டு முடிபட்ட வீரர்முதலாகியவர்கள் வீரசொர்க்க வழிநடந்து மேனிவருந்தி இளைத்து வேதனைமிகுந்து மிகவுநெருங்கிப்போனார்கள்; ஆனால் நீங்களுமெத்தப் பிரயாசமெடுத்துக் கொண்டு உடல்வருந்தியிருக்கின்றீர்கள், ஓ! படைவீரர்களே உங்களுடைய பாசறைக்குப்போய்ச்சேர்ந்து இளைப்பாறி நாளைப்போருக்கு வந்துவிடுங்கள்,

காணும்போகிறேனென்று இருவகைப்படைகளுக்கும்சாக்ஷி பூதஎஜமானாகவிருந்த பெரியவன் ஆக்ஞாபித்துக் கரங்களைச் சரய்த்துக்காட்டிப் போனதைப் போல், ஆரவாரங்கொண்ட மேற்றிசையாழியிற்போ யடைந்தான் சப்தமா புரவித்தேரேறிய அருக்கனானவன். இந்தப்படி சூரியனஸ்தமித்தவுடனே மாலைக்காலத்தைக்காட்டச் செவ்வானம்வந்தது அந்தச் செவ்வானம் யுத்தகளத்திற் கொப்பாயிருந்ததென்று உவமிக்கலாம் அதெத்தன்மையென்னில் சமுத்திரம்போன்ற செந்நீர் சிவப்பினாலும் அரசரணிந்த ஆபரணகாந்திகளாகிய நட்சத்திரங்களினாலும் கறுத்த யானைப்பிணங்களென்னும் மேக ஜாலங்களினாலும் யானைத்தந்தங்களாகிய வானப்பிறைநிலவினாலும் போர்புரி பூமிநெடுந்தூரப் பார்வையினாற் புகைசூழ்ந்து தோன்று மாலைப்போதினாலும் யுத்தபூமி செவ்வானத்தை யொத்திருந்ததென்றுரைக்கலாம், அரசனே, இதன்றியும், இரணகளத்தினிறைந்திருக்கும் இரத்தவெள்ளங்களே பாற்கடலாகவும் இறந்துபோன அரசர்களுடைய உயர்ந்ததேகங்களே வானமளாவிய மந்தரகிரியாகவும் யானைகளின் மணிக்குடர்களே வாசுகியாகிய கயிறாகவும் வெள்ளைக் கொடிகட்டிய தம்பமே சந்திரனாகிய தூணாகவும், தேர்ச்சக்கரங்களே மந்தரகிரியைத்தாங்கும் கூர்மமாகவும், மாமிசமுதலிய நிணங்களே ஔஷதியாகவும், இருபுறத்திலுநின்று இழுத்துக்கடைகின்ற பிசாசுகளும் பூதங்களும் ஆதியில் அமுதங்கடைந்த தேவர்களும் இராக்கதருமாகவுந் நிலைபெற்றுநின்று அமுதங் கடைந்தபோது பிணங்களுடலிற் குடலிற்பொருந்திய பிச்சுகள் பெருகியதே வாசுகியினச்சாகவும் அப்படிச்சென்றுவந்த பிச்சாகிய நஞ்சைக்கண்டு அமரர் வருந்திய தன்மையைப்போல் அச்சங்கொண்டோடிய பேய்பூதங்களைப் பிச்சையெடுக்குங் கபாலங்கொண்டு துச்சனமாகப் பாம்பூக்கச்சையுடுத்தி பிச்சுப்பிடித்துத்திரியும் உருத்திரமூர்த்தியையொத்த வேதாளங்களோடிவந்து அகங்கையால்வாரி அந்தநஞ்சையுட் கொண்டப்பாற்செல்லவும் மறுபடியும் மதிக்கும்போது மூளைகளாகிய அமுதங்களெழ அந்த அமுதங்களை மோகினியவதாரத்திருமாலேபோல மோகினிகள்வந்து பைசாச பூதங்களுக்குப்பகுத்துக் கொடுக்க அதிற்சிலதுஷ்டப்பேய்கள் கிட்டநெருங்கி அமுதங்களைக் கையேந்த அப்போது சிலகுட்டப்பேய்கள் இது துஷ்டப்பேயென்று சொல்ல உடனே சட்டுவத்தாலடித்த அடியினால் சொட்டைத்தலைப்பேயென்று பேர்கொண்டு துள்ள மிகுதியாகிய அமுதமென்னும் மூளைகளை இந்திரலோகம் போன்ற சிங்கவாகினியாகிய காளியிருக்குந்தலத்தில் வைத்துக்கெட்டிசெய்த உடனே அதைக்கண்டு சிலபூதப்பிரேத பைசாசங்கள் எனக்கமுதமில்லை உனக்கமுதமில்லையென்று போர்புரிந்து தோலுரிந்து உடல்நெரிந்து கண்பொரிந்து கால்விரிந்து ஆகவத்தில்விழுந்தழிந்த அக்கிரமப்பேய்களனந்தமாய்த்திரிந்துநிணங்களருந்தி ஆடல்பாடலுடன் எங்கணும் பிரகாசித்துப் பேரொலிமுழக்கிக்கொண்டிருந்ததுகள் பின்னுங் குடல்சரிந்த பிணங்களின் குதத்துவாரத்தில் கூர்மையாகிய கோரப்பற்களையுடைய நாய்களும் நரிகளும் முகத்தைச்சொருகிக்கொண்டு பிடுங்கிக்கொள்ளமாட்டாமல் குரைத்துக் கூவுமுழக்கமும் அமர்களத்திலருந்துகிடக்குந் தலைகளையெடுத்து அம்மானையாடி அதற்கிசைந்த

பாட்டுகளைப் பாடிக்கொண்டிருக்கும், பெண்பேய்களினுடைய கூக்குரலும் கொலுக்கொண்டிருக்கும் பகவதியாருக்கெதிரிலே பைசாசகணங்கள் கைகோத்துக்கொண்டு விதம்விதமாகிய பவுரிக்கூத்தாடி வருமோசையும் துன்பத்தைவிளக்கும் நரிகளானவை வீரர்களைப்புகழ்ந்து துதிகூறிக்கூவுங்கூச்சலும் உகாந்தக்கடல் முழக்கம்போலிருந்தன. அப்பால்கழுகு, கூகை, காகம், பருந்துகள், இதுகளெல்லாஞ்சிறைவிரித்து நெருக்கமாய்ப்பறப்பது ஆகாயமளாவுத்படி அமைத்த பந்தலைப்போலவும் இரத்தினாபரணங்களை ஒளிமிகுந்த காடாவிளக்குப்போலும் யானைக்காதுகளை தலைவாழையிலைபோலும் யானைத்தும்பிக்கைகளை கெண்டிகைச்சொம்புபேலும் வில் வேல் வாள்முதலிய ஆயுதங்களால் எழுததுளைப் புண்வழியிலிருந்துவரும் வீக்ர்களுடைய மாமிசங்களை சட்ருசிபதார்த்த போஜனம்போலும் மூளைகிணங்களை பருப்புநெய்போலும் கொள்ளிவாய்ப்பசாசுகளை குத்துளக்கின்பிரகாசம்போலும் அக்களத்திலுலாவிய பரிசனப்பைசாசகணங்கள் உபசாரஞ்செய்து நெய்போன்ற மனத்தையுடைய அர்ச்சுனன் விசயம்பெற்றதைக்குறித்து வீரலட்சுமிக்குவிருந்துசெய்ததே போலுமிருந்தது பேய்க்கணங்களருந்திய போர்க்களம். இன்னமுமெப்படியிருந்ததெனின் கிழிந்தபேரிகைக்குள்ளே சிவந்தஇரத்தங்களோடும்போது குமுகுமு குங்குங் கும்மென்று முழங்கியவோசை முழவாத்தியம்போலும் பட்சிக்கூட்டங்க ளடித்துக்கொள்ளும் இறைக்கையினோசை வளைகதாளம் என்று சொல்லும் ஏழுதாளங்களைப்போலும் கொள்ளிவாய்ப் பேய்கள் பந்தம்பிடிப்போரைப்போலும் தொந்தயுத்தஞ்செய்த வில்வீரர்கள் முதலியவர்களின் ஆண்மையை யெடுத்துப்புகழ்வது இசைப்பாடலாகவும் தலையற்றகவந்தங்கள் கைநீட்டியாடுவது முன்னேவிருந்துசாப்பிட்டவீரலட்சுமிக்கு கச்சேரிவைத்து கணிகைமாதராடும் ஆட்டம்போலுமிருந்தது. இதல்லாமல்தாய்தந்தையர் பிளந்துகொடுத்த தலைமூளைகளைத் தின்றுக்கொண்டிருக்கும் பேயின்பிள்ளைகள் உதிரவெள்ளத்திலடித்துக் கொண்டுபோகாநின்ற யானைத்துதிக்கைகளையெட்டி யிழுத்துதறிப் பள்ளத்தில் விழுந்து இந்த வெள்ளத்திலழுந்தி கழிலகப்பட்டுக்கொண்டு வருந்தியபோது கரையிலிருந்தோர்கை கொட்டிப் பார்த்துத் தேர்த்தட்டுகளைப் படகுபோல்விடுத்து பாலா பல்லயுக் கொம்புகளை, ஊன்றுகோலாகப்பற்றிக் கிழியிலகப்பட்டு பேய்க்குட்டிகளைத் தடுத்தொடுத்து துன்பநீங்கி தாய்தந்தையர் கொஞ்சும் ஓசைகள் எல்லாமுகத்திலும் ஏழுபங்கதிகமா யிரைந்துகொண்டிருந்தது. அல்லாமலும்இரத்தங்களையள்ளி வாயாறக்குடித்துக் கண்ணின்வழியேவழியச்செரியும் வித்தையும்யானைத்தோலைக்கவசமாகவணிந்து கேடயமுதலியவாளாயுதமுங்கொண்டுநீங்கள் தேவர்களென்றும் நாங்கள் அரக்கரென்றும் அசையாயுத்தஞ் செய்வதும்ஒருவரோடொருவர்கதாயுத்தம் மல்யுத்தம்புரிவதும் வில்லைத்தாங்கிநாணிமாட்டிவெவ்வியகணைகளைப்பூட்டி அவ்விடத்தில்நிற்கவேண்டுமென்றுந் தேரிலேறிக்கொண்டு பிதாமகனாகிய வீஷ்மன் நீநானாகிய அர்ச்சுனன், நாமிருவரும் போர்பெறுவோம் வாருமென்று பொய்யாக விளையாடப்போய் அவ்வீரர்பேரைச்சொல்லவே மெய்யாம் யானைமூண்டு இருபக்கத்திலும் ஏராளமாய்ப் பசகள்கூடி யுத்தஞ்

செய்து பேய்ப்பிணங்கள் போர்போராய்க்குவிய வெற்றிபெற்று அன்றுமுதற் கொண்டு இரண்டு பிரிவாயிருந்து சாயங்காலம்வரையிலும் பாண்டவர்களும் துரியோதனாதியரும் போர்புரிந்து பாசறைக்குப் போனபிறகு இப்பேய்கள் பகைத்து ஆயோதனம் புரிந்து கட்சியிரண்டாக நிலைத்துவிட்டகாட்சியும் அலை கடலருந்திய அகஸ்தியமுனிவரால் கர்வமடங்கிய விந்தகிரியைப்போல் மேலோங்கிவளர்ந்துநின்ற பெரியடாகினியைநோக்கி ஒருசிறியடாகினி ஒருசெய்தி சொல்லுகின்றேன் ஒருவருமறியாமற்கேளென்றுகுனியச்செய்து அதினுடைய தலைமயிரைப்பிடித்திழுத்துத் தலத்திற்றள்ளக் கீழேவிழுந்து மெள்ளவெழுந்து கொழுத்துத்துள்ள அது ஓடி உதிரப்பள்ளத்தில்விழுந்துக்கொள்ள அது நெருங்கி இதை மெள்ளக்கிள்ள இருவருக்குஞ்சண்டைமூள எதிரெதிராகச்சாய்ந்து மாளவும், வானவரும் தானவரும் இன்றுநடந்த ஆர்ப்பைக்கண்டு மனங்கூசி வருந்தவும், காலதூதரோடியோடிப்பிடித்துக்கைசலித்துப் பொருந்தவும், இப்படியிருந்த யுத்தகளத்தில் இருவர்படைகளும் மன்னர்முதலியவரும் பெருங்கூச்சலுடனே போர்நிறுத்தும்படியாகிய பொம்மற்பேயாளியின் முழக்கங்கேட்டுச்சூலந் தோமரமுதலிய படைகளையும்விடாமல் தேவரும்இராக்கதரும் வென்று திரும்பியதுபோற்றிரும்பி இன்றுபுரிந்த இகலைப்போலென்றுமில்லை யென்று தேகவிடாய் தீர்த்துக்கொள்ளும்படியாய் திங்கள்குலத்திலுதித்த மன்னவரிருவரும் சேனைகளும் பாசறைபோய்ச்சேர்ந்தனர். சூரியபகவானானவன் இக்குருக்ஷேத்திரத்தை அடியிட்டளந்தவர்போற்சென்று ஆகாயத்தினளவையும்பார்ப்போமென்று மேருப்பக்கமுஞ்சுற்றி விரைவிற் கீழ்த்திசைக்கோடிவந்து இனிநடக்கப்போகின்ற யுத்தத்தையும்பார்க்கவேண்டுமென்று இரவென்னுஞ் சந்தடியைவிலக்கிக்கொண்டெழுந்ததுபோலுதயமாயினன். இந்த ஏழாநாட்கலகத்தின் திறங்களையெல்லாம் ஏந்தலாகிய திருதராஷ்டிரனுக்குங் காந்தாரிக்குஞ்சொல்லி, அவர்களாற் புத்திரர்களுக்குச் சொல்லும்படியாகிய யுத்தியையுங் கேட்டுக்கொண்டு மறுபடியும்யுத்தகளத்திற்குவந்துவிட்டனன் ஜனமேஜயமகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்ல, ஜனமேஜய மகாராசன் வபுஷ்டாதேவியுடனெழுந்துவணங்கிச் சோடசவுபசாரபூசையுஞ்செய்து மேல் நடந்த கதையின் விவரத்தைச் சொல்லவேண்டும் வேதவேதியனேயென்று விசுவாசித்துக்கேட்டனன்.

ஏழாம்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

---

## எட்டாம்போர்ச்சருக்கம்.

---

### விருத்தம்.

பூத்தநாபியந்தாமரைப்பூவில்வந்துபலபூதமும்
சேத்தநான்முகப்புனிதனும்முனிவர்யாவருந்தேவரும்
ஏத்தநாலுவேதங்களுந்தேடநின்றதாளெம்பிரான்
பார்த்தன்மாமணித்தேர்விடும்பாகனைதெப்பான்மையே.

கலிகடந்து செங்கோலைத்தாங்கிய கஜாததுரங்காங்கமேவிய காவலனே அங்கே நேற்றுநடத்தியபோரில் அர்ச்சுனனும், வீஷ்மரும் சமமாக யுத்தஞ்செய்து இருபடைக்குமிளைத்து நிலைதளர்ந்த தன்மையை இதயத்திற்கொண்டு இன்றைக்கு எதிரிகளுடைய சேனைகளைப் புறங்காட்டியோடும்படியாய் வெற்றிபெற வேண்டுமென்று கருதிஅட்டதிசையும்போற்றும் ஆதித்தனானவன்வீரபட்டயம்போற் பிரகாசித்து வரக்கண்டு காலைக்கடனை முடித்துக்கொண்டு தமது சேனைமன்னவர்களையெல்லாரையுஞ்சேர்த்து ஜயபேரிகைமுழங்கும்படியாய்சேனாபதியுஞ் செருநிலத்திற்குவரவும் செந்தூள் கருந்தூளெழுந்து ஆகாயகங்கை அறல்வறண்டு போகும்படியாகவும் அண்டர்முதலிய யாவருங் கண்டேங்கும்படியாகவும் தருமபூபதிமுனைந்து தூசிமுனையில்வரவும் ஸ்ரீகண்ணபிரானிஷ்டப்படி சகடயூகங்கட்டி சர்வவாத்தியங்களுமுழங்க ஆயுதபாணிகளாய்ப் பாண்டவர்கள்வந்தனர். இப்பால் ஏழாநாள்யுத்தத்தில் ஜயித்த இறுமாப்பினால் இன்றைக்கும் வெற்றி பெறுவோமென்று அளவிறந்த படைமன்னருடன் அமர்க்களமடைந்து ஐயாவாகிய வீஷ்மர் அனுமதிப்படியே தூசியூகமமைத்துத் தருநிறைந்த சுரருலகெல்லாந்தயங்கும்படியாய் தானே முன்னின்றான். அப்போது இரண்டு சேனைகளுமெதிர்க்க; சேனாதிபதிகள் இருவருஞ்சேனையின் யூகத்தைப்பார்த்துச் சிந்தைகளித்து யுத்தபேரிமுதலிய வாத்தியங்களை முழக்கிவைத்து வெற்றிக்கொடியேற்றி வீரர்கள் யுத்தஞ்செய்யும்படியாய்விளம்பினார்கள். அந்தவேளையில் வீரகண்டைதரித்து சிலைவிற்பிடித்து விசயம் பெறக்கருதிய புயபலத் தம்பிமார்களும் மிகுந்ததுணையாகிய வேந்தரும் சூறைவளிபோற் சுழன்றடித்திரைந்து கொலைசெய்யும் வில்லையேந்திப்பிறைமுகக்கூர்வாளி கொண்டு கொடிமுடித்தேரேறி மலைப்புயமுதலிய மார்பில் மணிக்கவசமணிந்து மடமடவென்றுதேர்செலுத்திவந்து வீமனைவளைத்துக்கொண்டுமலைப்பகழி மலர்ப்பகழி மணிப்பகழி மதிப்பகழிமறைப்பகழி முதலியசாயகங்களால் உடலுருவ எய்தனர், அவர்கள்விட்ட அம்புகளையெல்லாம் வீமசேனன் தும்புதும்பாகச்செய்து எதிரில்நின்ற துரியோதனனைப்பார்த்து ஆசையாலென்னைத் தேடியோடிவந்தாயோ அரசே இவ்வளவு அன்பாகஎன்னைநாடிஇத்தனை காலையில்வந்த உன்னைவெறுங்கையோடனுப்பாமல் கொஞ்சம்போணி பண்ணிவிடுகிறேன் இதோபாரென்று இருமுகமாகிய எட்டுச்சாயங்களையெடுத்து துரியோதனனே நீயானபடியால்வெண்ணெயைநீக்கிமோர்குடித்தாய் நாமப்படிபேதமாக நினைப்பதில்லைஉன்தம்பியென்றும், என்தம்பியென்றும், வித்தியாசநினைக்காமலும்நாமெல்லோரும் ஓரிடத்திலேயேகும்பாகயிருப்பது உத்தமமல்லவென்ற தேட்டத்தின்மேல் நாட்டம்வைத்துத் தேசஞ்செல்லென்னும் வாக்கியப்படிக் உமது தம்பியரெண்மர்களை சொர்க்கத்திற்கனுப்பி, அந்த ஊர்வளம் நீர்வளம் நிலவளம் தலவளமுதலிய யாவுமறிந்து உனக்கும் நல்லவிடம்பார்த்துவைக்கும்படியாக தம்பிமாரைப்போக்கி வைக்கிறேனென்று ஆக்கிரமித்து அந்த அம்புகளைத்தாக்கினன். இப்படியாகச்சொல்லிவிடுத்த எட்டுப்பாணங்களுந்துரியோதனனுக்கெதிரில் அவன்தம்பியாரில் எண்மருடையகழுத்தறுபட்டு தலைநட்டு உயிர்விட்டு நிலைகெட்டு விழச்செய்தனர். இப்படி வீமசேனனால்முடிந்த,

சுந்தரன் விசாலக்கண்ணன் வீரவாசி வெண்துண்டன்மகோதரன் மகாவிந்தன் அந்தணன் ஆதித்தகேது இந்த எண்மர்களினுடைய தலைகளானவை உயிருடனுகாயத்திலெழுந்துசெல்லவும், கைப்பிடித்தவில்லுடன்உடல்பூமியில்விழுந்து துள்ளவும், அதைக்கண்டு வணங்காமுடியோன், தேர்விட்டிறங்கித்தம்பியருடலைத் தழுவியழுது உள்ளுடைந்து ஊனழிந்து உயிர்சோர்ந்து உபசாரத்தாற்றேறி இரதமேறிக் குருகுலக்கோமானாகிய வீஷ்மர்நின்ற இடத்தை நோக்கிச் சென்றுசெங்கமலம்போன்றஅவருடையதிருவடியிற்றனது திகழ்முடிசூடிதேம்பித்தேம்பியழுது என்தெய்வமே, உமதுதந்தையாகிய சந்தனுமகாராசனிமித்தத்தில் சிறியதாயென்னும் பரிமளகந்தியம்மை பெற்றபாலன் விசித்திர வீரிய மகாராசனாகியதம்பிக்குப் பட்டாபிஷேக பாக்கிய மெல்லாங் கொடுத்தருளிய புண்ணியனே, பாரமார்த்தியனே, என்பாட்டனேஎனக்குத்தெய்வமும்தேசிகனும்செல்வமும் சீருந்தாயுந்தந்தையும் நீயேஎன்று நிசமாகநம்பிச் சத்துருக்களைவென்றுசகலவாழ்வும்பெறலாமென்றிருந்தேனே! ஐயா, என்கண்ணுக்கெதிரே எட்டுத் தம்பியர்களை இவ்வுலகத்தைவிட்டு அவ்வுலகத்திற்குக் குடியாக்கினன். மனுகுலத்துதித்த என்குலதெய்வமாகிய ஏந்தலே, இந்தப்போர் முகத்தில் தேவரீர் சேனாபதியாயிருப்பதினால் எனக்கும் என்தம்பிமார் முதலிய கும்புகளுக்கும் சாவென்பதேயில்லை என்றுதயிரியமாய்த் திடங்கொண்டிருந்தேனே, தாஷ்டீகனாகிய வீஷ்மனென்னுந் தன்னியனேயென்று சித்திரப்பாவைபோலத்தகவடங்கி தேகநிலைத்து மெய்யுணர்வழிந்துவிசனமேலிட்டு கடலிடத்திருந்து முத்துகளுதிருந்தன்மைபோற் கண்களிலிருந்துகலகலவென்றுகண்ணீருகுத்து மண்ணைத்துழாவி மதிமயக்கங்கொண்டு வணங்காமுடியோனாகியதுரியோதனன்வாடினன். அதைவீஷ்மர்கண்டு வலக்கரத்தாலணைத்தெடுத்துமண்ணைத்துடைத்து வாட்டநீக்கி மன்னனே! நீ இதற்காகக் கொஞ்சமேனும் விசனப்படாதை, என்பேரனாகிய குருகுலச் சிந்தாமணியே உத்தமக்ஷத்திரிய குலத்திற் பிறந்தவர்கள் பெறவேண்டிய செல்வ மொன்றுண்டு. அதாவது படையெடுத்துப் பகைத்துவருஞ் சத்துருக்கள் பலங்குன்றி உறிரஞ்சுண்டி மறைவிலொன்றி அப்பா இப்போது பிராணன் தப்பிப்பிழைத்தோமென்றுபுறமுதுகிட் டோடும்படியாய் மேலாகிய அஸ்திரபாணங்களினாலும் இலையாகிய வேலாயுதங்களினாலும் முத்தலையாகிய சூலாயுதங்களினாலும் சாணைபிடித்த வாளாயுதங்களினாலும் வென்று மிகுந்தஜயத்தைப் பெற்றுப் புகழ்பெறத்தக்கது. அப்படி வெற்றிபெறுவதற்குத் தைரியம்விட்டு வாடாமல் தானையுடன் போரைவிட்டு ஓடாமல் திடதீரனாகச் சண்டைசெய்துநின்று கரங்களால் தொடுத்துவிடுஞ் சரங்களால் உரம்வேறு சிரம்வேறு கரங்கள்வேறு உடலுங் குடலும் வேறுவேறாய்த் தாளுந்தோளுந் தாறுமாறாய் முன்காயம்வாங்கி எவர்களுங்காண முனைமுகத்தில் விழுந்துகிடக்கப் பெறும்பேறாகிய செல்வமேபுகழ்ச்சிகுன்றாப் பெருஞ்செல்வம், மற்றச் செல்வமெல்லாம் இகழ்ச்சிமறையாக் கொடுஞ் செல்வம் இறைவர்க் கிறையாகிய என்பேரனே, இன்னுங்கேள். இல்லாத பெருமைகளை இருக்கவிளக்குந் திரவியத்தை விசேடித்துப்பெற்ற மாந்தர்எல்லாம் இன்பங்களையும் அனுபவிப்பதற்குப் பயப்படமாட்டார்கள்.

வழித்துணையாகியவரும் மேலாகிய தருமத்தைச் செய்வதற்குப்பயப்படமாட்டார்கள் இதல்லாமல் கொலை களவு கள் காமம் கோபம் பாவம் லோபம் மாறு உரியாரையிகழ்ந்து பேசுந்துர்க்குணம் இவைகண்முதலிய பொல்லாங்கு செய்வதற்குப் பயப்படமாட்டார்கள். அதேனப்படி, புண்ணியவசத்தாற் பொருள் கிடைத்திருந்தும் தெளிவினுல் அருளைப்பெறுமல் மருளைப்பெற்று மதிமயங்குவதேனென்றால் 'மூந்திரைமேற் காணிமிருந்து மேற்கீழ்தன்னை இந்திரனுயெண்ணிவிடும்' என்றும், பொருளிலார்க் கிவ்வுலகமில்லை யென்றும், பொருளல்லவரைப் பொருளாகச்செய்யும்' என்றும், 'பொருளென்னும் பொய்யாவிளக்கென்றும், இருந்தனம்படைத்த மாந்தரின்பமு மறனுமஞ்சாரென்றும், செல்வந்துற்றகாலைத் தெய்வமுஞ் சிறிதுபேணுரென்றும், தான்கிடந்த கிடையும்-வலியன்குத்தும் வணிகன்வீட்டில், தவிடுவாங்கித்தின்ற கிலேயுமறந்து பொன்னைக்கண்டுபொங்கினோர்க்குப்போமே வாழ்வென்றும்கர்வத்திற்குமுதற்காரணமாகிய திரவியம்வரும்போது இல்லாத சிங்காரதத்தைக் காட்டிக்கூடப்பிறந்தவர்களையு மோட்டிவிட்டு மதமாகிய துணைவரைக் கூட்டிக்கொண்டு வாருமென்றும் இதல்லாமல் மூத்தவளாகிய மூதேவிக்குப் பஞ்சகோசனென்று ஒரு பிள்ளையுண்டு, அந்தப்பிள்ளையானவன் செந்தாமரைமலரிலிருக்குந் திருமாமகளிடத்தில் வளர்ந்துக்கொண்டுவருவான் சின்னம்மையானவள் ஒருவருக்கருள் செய்து செல்வந்தருவிக்குங் காலத்தில் மேற்சொல்லிய பஞ்சகோசனும் கூடப்போய் சின்னம்மை தயைசெய்ய மனிதனுடைய தோளிலேறிக்கொண்டு தனது பஞ்சகோசத்தையும் பிடித்து அவனுடைய இரண்டு கண்களில் இரண்டுகோசமும் இரண்டுகாதில் இரண்டுகோசமும் வாயிலொரு கோசமும் வைத்து அடைத்துவிடுவான், அதனுல்செல்வம் வந்தவர்களுக்குக் கண்ணுந்தெரியாமற் காதுங்கேளாமல் வாயும்பேசாம லிருப்பதென்று முன்னுலிற்சொல்லியிருப்பதனுல் அந்தப்பணக்கொழுப்பைப்பற்றி பாவபுண்ணியமெண்ணிப்பார்த்துப பயப்படமாட்டார்கள் என்பதுகருத்து, ஆனல் உலகமெல்லாம் இப்படிதானேவென்றால் 'அடக்கம் அமரருளுய்க்கும்' என்னும் நீதியின்படியும்' 'சக்கரச் செல்வம்பெறினும் விழுமையோ ரெக்காலுஞ் சொல்லார், மிகுதிச் சொல்' என்னும் நீதியின்படியும் செல்லப்பொருளுங் கல்விப்பொருளுஞ் சீர்பெறப்பெற்ற சீமானுகிய சத்திய நன்னெறியுந் தருமமுமுடைய கர்வமில்லாத உத்தமர்கள் சிலருண்டா யிருப்பதென்றும் ஒருவாறுகச்சொல்லவேண்டியதே மேலும் மேம்பாடாகிய நல்லறத்திற்குத் துணையாகும், இல்லறவாழ்க்கையை யுடையவர்கள்.எத்தனைபேர் விருந்தினர் வந்தாலும் உபசரித்து அன்னம் ஊட்டிவைப்பதற்குப்பயப்படவேமாட்டார்கள். அரசனே, இல்லறத்தானென்று விசேடப்படுத்திச்சொல்லியது யாதெனில், பெரியாரைப்பேணல் அதிதி சத்காரஞ்செய்தலென்னும் நற்குணநற்செய்கைவாய்ந்த பதிவிரதையும் அப்பத்தினிக்கிசைந்த புத்தியையுடைய நாயகனுமமைந்து இவர்களிருவருங் கூடிவாழ்கின்ற மனைவாழ்க்கையைப்பற்றிமேம்படவாழுமில்லையார் என்றூர்.

இல்லதென் னில்லவண் மாண்பானு லுள்ளதென்
இல்லவண் மாணுக்கடை.

மனைத்தக்கமாண்புடையாளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள்வாழ்க்கைத்துணை.

பெண்ணிற்பெருந்தக்கயாவுள்கற்பென்னுந்
திண்மையுண்டாகப்பெறின்.

சிறைகாக்குங்காப்பெவன்செய்யுமகளிர்
நிறைகாக்குங்காப்பேதலை.

இப்படிச் சொல்லிய அருமறைநீதியின் கருத்தென்னவென்றால், பெண் சாதி நற்குணநற்செய்கை யுடைத்தாய் தன்னையுங்காத்து தலைவனையுங் காத்து வாழ்க்கத்துணை நலமாயிருப்பாளாகில் அந்த லட்சுமியிருக்கும் வீட்டில் எல்லாப் பாக்கியங்களும் நிறைந்திருக்கும் நற்குணநற்செய்கை யில்லாமல் துர்க்குணந்துர்ச்செய்கை யுடையவளா யிருப்பாளாகில் அம்மூதேவி யிருக்கும் வீட்டில் எல்லாப் பாக்கியங்களுஞ் சுரக்கத்தக்கதா யிருந்தாலும் பசையற்ற எலும்பினையுடைய சுடுகாட்டுக்கொப்பாய் வசைபெற்றிருக்கும். அவளைக்கூடி வாழும்நாயகனுக்கு யாதொருபலனுங் கைகூடிவாராதுன்பமே விளையுமல்லது இன்பமிராது துர்க்குணமென்பதும் யாதெனில் 'புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை யிகழ்வார்முன்னேறுபோற்பீடுநடை' என்பதினாலும்'ஐயருக்கமுதுபடை என்று வந்தாய் நீயும் ஆண்பிள்ளையென் றெண்ணமோ' வென்றுரைக்கும் பலநூல்களினாலும் துர்க்குணங்களின்னதென் றறிந்துகொள்ளவும் கற்புடைத்து அன்ப முடைத்தென்பதினாலும், அடிசிற்கினியாளே யென்பதினாலும், மேற்கூறிய நன்னீதிகளினாலும் நற்குணங்கள் இன்னதென் றறிந்துகொள்ளவும், புண்ணியவானுக்குப் பெண்டுவாய்க்கும், பாக்கியவானுக்குப் பாலன்வாய்க்குமென்றும் தாரம்வாய்த்தது இராமருக்கென்றுசொல்லும் பழமொழியாலும் பொல்லாப் பெண்டிரைப் படைத்தவர்களுக்கு இல்லறதருமம் 'பொருள்படாதென்றும் விருந்தினர்வந்தாற்றளிக்கதவைச் சாத்துவார்களென்றும் நல்லமனைவியைப் படைத்தவர்களுக்கு இல்லறதருமமிசையுமென்றும் இத்தன்மையாகிய தருமபத்தினியைப் படைத்திருக்கும் அவர்கள்வாழ்கின்ற வாழ்வே மேம்பாடாகிய இல்லறவாழ்வென்று விளம்பியது, மேலும் விருந்தினரென்பது யாதெனின், இவ்வுலகத்தில் அண்ணன்தம்பி அத்தான் மச்சான் மாமன் முதலியோரை விருந்தினரென்று சொல்லுகின்றனர். இவர்களெல்லாம் நமக்குச் சமானவர்கள் சம்பந்தியாய்ப் புசிப்பவர்கள் சம்பந்தமாகக் கலந்திருப்பவர்கள் ஆகையால் இவர்களைவிருந்தினரென் றுரைத்தால் பிச்சைக்காரரென்னும்பொருளைத் தரும் அப்படி சொல்லப்படாது பின்னை யாரை விருந்தினரென்ன வேண்டுமெனின் அன்னமிடுங்களென்றுகேட்டு வருகின்ற ஆதுலர், அதிதி, அகதி முதலிய பாடி, பரதேசி, கூன், குருடு, ஊமை, செவிடு, மொண்டி, சப்பாணி, ஏழைகள் இவர்கள்தான் விருந்தினரென்று மேலோர் மொழிந்திருக்கின்றனர், அதற்குதாரணம், 'செல்விருந் தோம்பிவருவிருந்து பார்த்திருப்பான், நல்விருந்து வானத்தவர்க்கு' ஆகையால், இந்தத்தருமங்களைநீறறிந்துக் கொள்ளும்அரசனே! மேலும் ஜீவன்முத்தாளாகிய தத்துவஞானிகள்வினைப் போகத்தை யனுபவிப்பதற்குச் சேருகிய உடற்சுமைக்குப் பிறப்புவருமே

யென்று பயப்படமாட்டார்கள். அதேதெனெனில் விஞ்ஞானவந்தராகியமேதா மேதையோராகையால் இனி இப்பிறப் பில்லையென்னுந் திடங்கொண்டு பயப்படாரென்பது ஈதறிந்து கொள்ளுங்கோவே இதன்றியும் ஒற்றைக்காலில் இருந்துந் தலைகீழாயிருந்து சலத்தின்மூழ்கியும் பஞ்சாக்கினி மத்தியினின்றும் உடலபிமான நீத்து, உபாதியில்லாமல் எத்தனைவிக்கினம்வந்தபோதிலும் நிலை வந்தபோதிலும் நிலைதப்பாதிருந்து தவஞ்செய்வதற்கு முற்றத்துறந்தவர்கள் பயப்படமாட்டார்கள், அதேதெனெனிற் காரியமே கண்ணுனவர்களாகையால் பரப்பிரமத்தின் போரானந்த நிலையில்நின்றவன் தெரிந்துகொள் நிருபரோே! அரசகுலத்திற்பிறந்த உத்தமர்கள் எத்தனை அபஜயம் வாய்த்தபோதிலும் சாவுக்கும் பிழைப்புக்குந் தளராமல் ஒட்டியுத்தம் பண்ணுவதற்குப் பயப்பட மாட்டார்கள், அதேதெனெனில் சயம்பெற்றாலும் புகழுண்டு அபஜயம் பெற் றிருந்தாலும் வீரசொர்க்கமுண்டென்பதுகருத்து; இதல்லாமலுநீதநீவில்லாச் செல்வமே, இவைகளெல்லாம் பெரிதன்று இன்னொருகாரியஞ் சொல்லுகின் றேன், என்குலக்கொழுந்தாகிய இறைவனேநான் சொல்லும்படியான வாக் கியம் உன்னுடைய இரண்டுகாதும் ஏற்றுக்கொள்ள தாயினும் அறிந்தோன் றறியானெனினு முறைமுறைமை யிருந்தான், கூறல்கடனென்று நான்சொல்ல வேண்டிய கடமையும் முறைமையும் தர்மமு மிருப்பதினுற் சொல்லுகிறேன். அதாவது பூர்வத்தில் அரசாட்சி செய்துகொண்டுவந்து இக்குலத்தரசர்களி லும் முற்குலத் தரசர்களிலும் எவரோனு முறைதப்பி நடந்தவர்கள் அல்லது நடத்தினவர்களுமுண்டோ மூர்த்தண்ணியனுகிய முதல்வனே அப்படியிருக்க விதி விலக்காகிய கருமங்களை நீ நடத்தியிருக்கின்றனை அஃதியாதெனிற் பலதேசத் தரசர்களும் பங்காளிகள்முதலிய பலபாஷை மன்னர்களும் உன க்குப் பின்னருமாகிய "தம்பியரும் நெருங்கிநிறைந்து நிமிடீகரித்திருக்கும் இராசசபையில் குற்றமற்றஅருந்ததியாகிய குந்திமைந்தர் மனைவியை குருகுல பதியாகிய கோவேந்தன் மருமகளை குவலயமெல்லாம் வணங்காமுடிபெற்ற குமுதநாத குலவதிபதிமன்னன் துரியோதன மகாராசனென்னும் விற்பன்ன குணவானுகிய உனக்குத் தாய்போன்ற அண்ணியை இழுத்துவந்து நிறுத்தி அலமரக்க அலைத்து வஸ்திராபங்கஞ் செய்தகாலத்தில் அப் புண்ணியசாலியி னுடைய வயிறெரிந்து அவளழுத அக்கினிச் சலமானதுமது இராச்சபையில் விழுந்ததே அந்தக்கண்ணீர் இதுமாத்திரமாசெய்யும் ; அரசனே இன்னமெங் கேகண்டாய் தேருக்குள்ள சிங்காரம் முன்னும்பின்னுமிழுக்கிறது. இப்போது என்னமுடிந்தது ஒன்றுமில்லை ஒருமொக்தைக் கண்ணீர்போயிற்று இன்ன மொருமிடாதண்ணீரிருக்கிறது முதலவனே! இன்னம், பலவிளையப்போகிறது நீ என்ன நினைக்கிறாய் காற்றேபோல் வேகமுள்ள குதிரைபூட்டிய தேரோறி நடத்துங் கொடைக்கதிகாரியாகிய கன்னனும் மதப்பெருக்கங்கொண்ட பட் டத்துயானை யேறிவரும் மதியூகியாகிய சகுனிமாமனும் இளவரசாகிச் சகல கேள்விகளுங் கேட்டுணர்ந்த உன்தம்பி துச்சாதனும் எல்லாவற்றிற்கும் பெருந் தலையாய்க் கனவானுயிருக்கிற நீயும் நீங்கள்நால்வரும் யோசித்துக் கொண் டிருக்கும் உங்களெண்ணங்க ளெல்லாம் நாளைக்கே முடியப்போகின்றது நஷ்ட

யில்லாமற் கைவல்யமாம் காவலனே! ஆனால்உனக்குச் சிறியதந்தையாகிய
விதுரன் அவனுக்கு நீ மரியாதை யில்லாமற்சொன்ன கொடுஞ்சொல்லைக்கேட்
டுச் சகிக்கமாட்டாமல் வில்லையொடித்தெறிந்து மனஞ்சலித்து விரக்தனாகப்
போய்விட்டனன், அஃதல்லாமலும் கன்னனானவன் நானிறந்துபோன பிற்பாடு
தானே அதிரதத்தலைவனாகி யுத்தஞ்செய்வதன்றி இதனடுவிற் போர்புரியே
னென்று சபதம்பேசி நான்சாகிறவரைக்கும் எதிர்பார்த்துக்கொண்டு பாசறை
யிலிருக்கின்றான் பலங்கொண்ட அங்கதேசத் தலைவனாகிய அதரித்திரன்
நமக்குரியவர்கள் வேறே ஆரிருக்கின்றனர், ஆகையால் அப்பனே இப்போது
மேலிட்டுப் போர்செய்யும் விஜயனும், வீமனும் வெகுண்டெழுந்துவந்த காலத்
தில் எதிரிலிருக்கும் உன்னையும் என்னையும்விட்டு வேறுலக்ஷியம் வைக்கமாட்
டார்கள் வேந்தனே சத்தியமே நித்தியந் தர்மமேஜயமென்று வளர்த்துவரும்
நீதியையுடைய பொய்யில்லா மெய்யைப்பெற்ற தருமதேவதையும் அவ்விட
த்திலிருக்கின்றது. அந்தத் தருமத்திற்குஞ் சமயத்திற்குந் துணைக்காரண
மாகிய துளவமாலையணிந்த ஸ்ரீகண்ணபிரானும் அவ்விடத்திலிருக்கின்றனன்,
வெற்றிபெறுவதற்கு முதன்மையாகிய பொருளிரண்டும் அவர்களிடத்திற்குடி
கொண் டிருப்பதனால் இந்த யுத்தரங்கத்திற்றப்பி உயிர்பெற்றிருந்து வாழ்பவர்
கள் பாண்டவர்களென்றும் இவ்விடத்தில்வருந்தி யழிந்து மாய்ந்து போகின்ற
வர்கள் மற்றவர்களென்றும் தெரிந்துகொள்ளு மகாராஜனே நானிப்போது
நமக்குச் சொல்லியவாக்கின் வண்ணம் சீவன் முக்தராகவும் சிரஞ்சீவிகளாகவு
மிருக்கப்போகிற புண்ணியவான்களெவர்களோ, அவர்கள்காண்பார்கள். அப்
பனே அப்படியிருக்க, உன் நம்பியர்கள் இப்போ திறந்ததைக் குறித்து, விச
னப்படுகின்றாய் உன்தம்பிமாரை யிறக்கச்செய்து இவ்விடத்திலொளித் தப்பிப்
பிழைத்திருக்க நினைத்தவர்கள்யார் ஐயோ பிழைப்பாரொருவரு மில்லையே,
ஆதலால் துயரத்தைவிட்டுவிடு கவலைகொள்ளாதை உனக்கு முதன்மையாக வேண்
டிய காரியங்களை யெடுத்துச்சொன்னேன் நீ தவிரியம்விடாதை சாகிறவரை
யிலும் பிழைப்போமென்பது தேசசுபாவ மாதலால் உன்மனந்தளராமல்
முடுகிவந்தடிக்கும் பகைவருக்கு முன்சென்றுநின்று முனைந்துவரும்படியாகிய
முனைக்காரரை முனைமுகத்தில்வென்று ஜயம்பெறுவதொன்று அல்லது அவர்
களால் அபஜயமடைந்து அழியப்போகின்றதொன்று, இவ்விரண்டை விட
வேறொன்றுமில்லை; அதிசீக்கிரத்திற் புறப்படுகவாவென்று சொல்லிப்படைமுக
ங்கலக்கப் பரிபூட்டிய இரதத்தைச் செலுத்திக்கொண்டு சூரியனைப்போற்
றுலங்கிச்சென்றனர், அந்தவேளையில் தன்னிழலைப்பார்த்து நெடுமூச்செறி
ந்து, கோபித்துக் கருவிப்பாகனை அறிந்துகொற்றவர் படைகளைப்பற்றிக்
கிழிக்குங் கொடுமையையும் மதமாரிகளையு முடைய ஆனைகளின் மேலேறிக்
கொண்டுவரும் ஆயிரம் இராக்கதரும் இவர்களுக்கொரு தலைவனுமாகஉருவ
மெடுத்து துரியோதன இராசனுடைய பேரணிகளையெல்லாம் தேய்ந்துறைந்த
இருட் குழம்பைப்போன்ற சோனா மேகத்தைப்போல் வளைத்துக்கொண்டு
ஆகாயத்திலிருந்து நக்ஷத்திரங்களுதிர்வனபோல் மணியணி மகுடமோங்
கிய மன்னர்முதலிய படைகளை மாய்த்துவந்தான், கடோர்க்கஜக் காளையான

வன். இவ்வாறு இவனொருபக்கத்தில் இராக்கதமாயையினாலாகி அதைப் போல் இருதிறப்படைகளும் எலிகள்போலேங்கி மயங்கும்படி இரணகளமெல்லாம் பாம்புமயமாய்நிறைந்து துரியோதனனுடைய படைமன்னர் முதலிய வீரர்களெல்லாம் உருண்டு போம்படியாய் பாணப்பிரயோகஞ் செய்து வட்டமாக அட்டகாசஞ்செய்து ஒப்பற்ற யுத்தஞ்செய்து மடித்தனன், இவ்விடத்தி லிவர்களிந்தப்படி யுத்தஞ்செய்துகொண்டிருக்க சந்தியாவட்டமாலையணிந்த சசேந்திரனானவன் வீஷ்மர்கூறிய வார்த்தைகளைக்கேட்டு உடல்பதறி உயிருளைந்து உரங்குன்றி உகிர்ச்சுற்றின்மேல் அம்மிவிழுந்த உபத்திரம் போல்வருந்திஒருவருடனொன்றுஞ்சொல்லாமல் வீமசேனனுக்கெதிரிற்சென்று மிகு போர்விளைத்து அவன்கணையாற் றுளைப்புண்டுயிளைத்து அயர்ந்தகாலத்தில் வீமசேனன்வெகுண்டு ஒருபுறம்நுழைந்து இன்று பகற்போதைக் குள்ளாக எவரையும்வென்று முடிக்கிறேனென்று சமுத்திரத்தைக் காலிட்டுக் கலக்குந் தாளாண்மை யுடையவனைப்போற் கலங்கிக்கலங்கித் தத்தளிக்க யுத்தஞ் செய்து வருங்காலத்தில் பப்பரதேசாதிபன் பிள்ளைகளாகிய மகுடவேந்தர் பலபேரும் படையிற்கூடிவந்து வீமனுடனெதிர்த்து கடும்போர்புரிந்து இடும்பன் மகனு விளைந்தோடிப்போனான். அப்படிபோனவனைக்கண்டு பகாசூரன்தம்பியாகிய அலம்புதன் கொடியகோபங்கொண்டு தருமராசனுக்குத் துணைவந்த இராக்கதச் சேனைகளைநோக்கி, முன்னே ஏகசக்கரபுத்திலிருந்த என்தமையனாகிய பகாசூரனை தருமருக்கிளைய வீமன் கொன்றிருக்கின்றனன்; அப்பழிக்குப்பழி இவனுடைய வுடலைநான் பிளக்கிறேனென்று உறுதிசொல்லி அரக்கப்படைகள் உரக்கக் கூவிக்கொண்டுவர வீமனுக்கெதிரில் வெகுண்டோடி வளைய மின்னலுடன்கூடிய மேகமேபோல் அரவான்கொண்ட பலவுருவத்துடன்வந்துதகைந்தான், அவ்வரவானடித்த அடியினால் துரியோதனனுக்குத் துணைப்பட்டுவந்த அலம்புதன் வருந்தி அவதிப்பட, அவனைச்சார்ந்த அரக்கப்படையாவும் சிரக்கம்பஞ்செய்து அரவானைவளைத்துப் போர்புரிந்தனர். அத்தருணத்தில் அரவானு லடிபட்டோடிய அலம்புதன் மீளவுமெதிர்த்துப் பழுதற்றகுலத்துதித்த பாம்பின் குமாரனெடுத்த பாம்பாகியபல உருவங்களுடன் பகைத்துப் போர்புரிந்து அரவானெடுத்தமாயா வடிவத்தை வெல்லவல்லமையில்லாமல் அஞ்சிநடுங்கி அபயமிட்டோடினான். இப்படி பலவாறு அடிபட்டு ஒடுங்கியோடிய அலம்புதன் தனக்குள் தானேநினைத்து இவ்வரவான் மாயையினாற் பலகோடி பாம்புருக்கொண்டு போர்செய்கின்றானென்றுணர்ந்து இப்பாம்புகளைக் கொல்லும்படி பலகருடவுருவெடுத்து வெப்பமாகிய வேகத்துடன் விண்ணெலாநிறைந்து மேககர்ச்சனைபோலிரைந்து வட்டமிட்டுப்பறந்து நிழலைப்பரப்பி சிறைக்காற்றினால் மோதியடித்துக் கால்களினாலுராய்ந்த போது கொடிய விஷங்களைக்கக்கிக் கோரப்பற்களாற் கடித்துச் சேனைகளைக் கொன்று திரியும் புன்றலைப்பாம்புகளையெல்லாம் கிறுகிறு கிறுகிறு வென்று சுழன்று கறுகறுத்து எரிந்து கரிந்து பொரிந்து படம்விரித்து விடஞ்சொரிந்து மேதினியுரைந்து ஒன்றுக்குள் ஒன்றடங்கும் பஞ்சபூதங்களைப்போ லொடுங்கி மாயையடங்கிப் பாம்புக்கும்பெல்லா மடங்கிப்போக அரவானொருவன்மாத்

திரம் அசைவற்று மிருந்தபயங்கர நடுக்கத்துடனின்றான். அப்படி அடங்கிநிற்கும் அரவானை எதிரியாகிய அலம்புதன்கண்டு கூர்மைகொண்ட வாளாயுதத்தைக்கைக்கொண்டுவீசி அவ்வரவானைக்கொன்றனன். அந்த அலம்புதன் அரவானைவெட்டியவுடனே குருகுலாதிபனுடைய நால்வகைச்சேனைகளெல்லாம் பகைவென்றோமென்று கும்மிபாடிக் கொண்டாணடித்துக் குரவைகூத்தாடிக் கூவித்தொடரத் தொந்தோமென்று சந்திரனைக்கண்ட சமுத்திரமுழக்கம் போலிரைந்தனர். இந்தத்துரியோதனன் படைகள்வென்று சந்தோஷத்தை யடைந்தபோதிலும் அரவானானவன் அன்றைத் தினஞ்செய்த மாயாயுத்தம் போற் செய்யவல்லவர்கள்யார் அந்தயுத்தவல்லபத்தை எம்மனோராற்சொல்லத்தரமன்று.

இஃதிவ்வாறிருக்க; கணுக்கள் வெடித்தோடிவருங் கரும்பின் இரதத்தினால் நெற்பயிர்விளையும் நிலவளஞ்சேர்ந்த பாஞ்சாலநாட்டினர் பலரும் துரோணரும் அசுவத்தாமனும் காலமேதொடங்கிய போர்முனை குலையாமற் கடுங்கோபத்துடன் போராடுகையில் பாஞ்சாலரில் வெகுபேர்பட்டழியும்படியாய்ப் பாணப்பிரயோகஞ்செய்து மடிந்து மற்றவர்கள் புறமுதுகிட்டோட அடித்து கரங்களிற்கணையும் வளைந்த வில்லையும்பிடித்துக் கண்சிவந்து போர்த்தலத்திற் புலிபோற் புகுந்துவந்தனர். அச்சமயத்தில் அலம்புதனால் அரவான்பட்டானென்று செய்திகேட்டவுடனே பாண்டவர்பலரும் மனநொந்து பதைக்கஅபிமன்னு ஒருவன்மாத்திரம் பிறப்பதும் இறப்பதும் புகழ்வதும் இகழ்வதும் பொங்குவதும் மங்குவதும் உடற்சுமைக்குரிய பெருமையென்று தயிரியமாகத் தமையன் மேலிருக்கும்விருப்பத்தை தான் சொல்லிக்காட்டாமல் தான்செய்யுஞ்சண்டையைச் சொல்லிக்காட்டும்படியாய்த் தன்னு மணித்தேரை விரைவாகச்செலுத்தச்சொல்லி வரிபொருந்திய வில்வளைத்துக்கொண்டு அலம்புதன் மேல்அரப்படை முதலாகிய ஆயிராயிரம் ஐம்பதுகோடிஎண்பதுகோடி என்றிசைக்கும்படி விசையுடனிறுக்கும் வெகுபாணங்களை விதையைப்போல் விதைத்து விளைப்போர்கதித்து மெலியச்செய்யும்போ தசுரப்படைகள் பசலைபட்டழிந்து அலம்புதனும் மாயைவித்தையொழிந்து அலக்கழிந்துவாடி. அரசர் முதலிய நால்வகைப்படைகளுங் கூடி அபிமன்னுவிடும் பாணம்பட்டு யுத்தகளத்தைவிட்டுப் புறமுதுகிட்டோடினர். அப்போது அபிமன்னுவானவன் சுழற்காற்றேபோற் சுழற்றி யடித்துக்கொண்டு வரும்போது அலம்புதனால் அரவானிறந்தனனென்னுஞ்செய்தியைக்கேட்ட வீமசேனனொந்து தேகமுழுமையும் வெந்து மனத்திற் செந்தீயெழுந்து புளியமரப் புரணியிற்பற்றிய பொறிபோற் பொறிகளைச் சிதறிச்செங்கண்சுழலச்சீறி சிங்கத்தைப்போல் நிலம்புதையஓடி அலம்புதனைத் தேடிவருகின்றனன். அவ்வேளையில் துரியோதனன் கடுங்கோபங்கொண்டு யுத்தஞ்செய்ய வருகின்றானென்றறிந்து வேட்டையாடவந்தவர்கள்மேல் காட்டுப்பன்றி பலகும்பலைக் கூட்டிக்கொண்டு கோரப்பல்லைக் காட்டி யெதிர்ப்பட்டாலெப்படியோ அப்படிபோல் தன்னு தம்பிகளையும் மன்னர்முதலிய படைகளையுஞ் சேர்த்துக்கொண்டு பேரொலியுடன் ஆர்த்துக்கொண்டுசீறிப்புறப்பட்டனன். இப்படி லிங்கபலக்கோபமாகியதேர்களும்யானை

படைகளும் படைவீரர்களும் புற்றிலிருந்து ஈசற்பெரும்போக்குப் புறப்பட்டாற்போல் முன்னுக்வந்து 'பொன்மலைபோன்ற வீமனை வளைத்துக்கொண்டு பெரும்போர் விளைத்துப் பேருக்கொரு பாணம்விடுத்து அதிர்த்து வீமனுடைய உடம்பைச் சல்லடைக் கண்களாய்த் துளைத்தனர். அப்போது வீமசேனன் அழலெழுநகைத்துத்தழலெழவிரித்துத்தனுவைவளைத்துநாணியிறுக்கி எண்ணிறந்தபாணங்களை யெடுத்துத்தொடுத்து இழுத்துஅடுத்துப்போர்புரியும் எதிரிகள்மேல்விடுத்து இமைக்குமுன் அவர்களைக்கெடுத்து முடித்தனன். அவ்வீமனுல் வெருப்பேரழிந்து ஓடும்படியானதைத் துரியோதனனுடையதம்பிமார்கள்கண்டு கூரத்திரங்கொண்டு சங்காரகங்கபத்திரங்களை யெடுத்துத்தாக்கினர், அந்தப்பகழி யெல்லாம் நானுவித வழியாய்ப்பட்டொழியும்படியா யழித்துப் பம்பியசிருதிக்கணை யேழெடுத்துத் தொடுத்துத் தம்பிமார்கள் எழுவரைப் படுத்தனன். இந்தப்படி வீமன்விடுத்த ஏழுகணைகளினுல் தருமவாக்கியன், குண்டலபோசன், ஆதியக்கன், தீபாயனன், திம்மவாகு, குண்டலதரன், கருடத்துவசன் என்றுசொல்லு மெழுவருடைய தலைகள் துள்ளியெழுந்து அவ்விடத்தில் வேடிக்கை பார்த்திருந்த தேவர்களைத் தேவேந்திரனேக்கி இந்தத்தலைகளேழும் ஒன்றின்பின் னென்ருகவருந் தன்மையைப் பார்த்தீர்களா! இதற்கு உவமானமென்ன சொல்லுவீர்க ளென்றுகேட்க ஐயா, மேன்மையாகிய விசயலட்சுமியானவள் கைக்கொண் டெறிந்தாடுங் கழங்கெனச்சொல்லலா மென்றுசொல்லி இந்திரனுடன் கண்களித்திருந்தனர். இப்பால்துரியோதனனானவன் துயரக்கடலில்மூழ்கித்துன்பக்கரையேறிஒழியா விசனமென்னு மலைமீதிருந்து மனேதிடங்கொண்டு தம்பிமாருடன் நாமுமடிந்துபோவதேசத்தியமென்று சாதுரங்கபலமுந்திரண்டுவரும்படியாகத்தேரேறிவந்து வீமனுடனெதிர்த்து வெகுண்டு போர்புரிந்தனன். அப்போது வீமனனவன் சில அஸ்திரங்களைவிடுத்து அவனுடைய உடலைத் துளைத்தனன். அந்த அடியினற்களைத்துக் கண்கலங்கிநின்ற துரியோதனனைப்பார்த்து வீமன் சொல்லுகின்றனன். அடா துரியோதனு, சன்மார்க்கிர வினைவசத்தால் வரும் பாவபுண்ணியத்தைஅனுபவிப்பதற்காக எடுத்த உன்னுடலானது தருமமாகிய செல்வத்தைக் கூடியவரையிலும் பெற்றுவாழ்ந்த உன்னுடையவாழ்வு கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து வருகின்றது ஆயிற்று, இன்னங்கொஞ்ச நாளையில் அனுபோகமுடியப்போகின்றது; அப்போது நான்நாவினுல் இராசசபையிற் கூறியவஞ்சினமான அவுஷதத்தை உனக்குப்பலிக்கும்படியாய்என்கதையினுற் கொடுக்கிறேன், நீ உன்தம்பிமார்களுடன் துணையாகப்போய்ச் சுகப்படலாம், உன்னுலின்னங்கொஞ்சவேலையிருக்கின்றது, அதனுலுன்னை இப்போதுதானே யனுப்பப்படாதென்றஎண்ணினுல் நிறுத்தினேன், அடா வம்புசெய்தபாவி நீ பாசறைக்குப்போகலாம் போவென்று சிங்கக்கொடியையுடைய வீமசேனன் ஒரு மாசுணக் கணையினுல் சுயோதனன் ஏறிய தேர்குதிரைசாரதியையும்போக்கிப் பாதசாரியாய்ப் பூமியினின்று வருந்தும்படியாக்கி ஓட்டினன். அந்தமாசுணக் கணைப்பட்டுச் சுயோதனன்வருந்திதன்படைகள்முறிந்தோடினதைப்போல்தானும்புறந்தந்தோடினன். இவ்வாறு பொருத அமர்க்களத்தில் மந்திரிசாமந்திரர்

முதலிய மன்னவரும் நாற்படைகளும் முடிந்து விழும்பெருக்கத்தைக் கண்டு மதிமயக்கங்கொண்டு சாய்ந்தவனைப்போல் ஒற்றையாழித் தேரினையுடைய அருக்கன் மேற்றிசைக்கடலில்வீழ்ந்தான். இந்தப்படி சூரியனஸ்தமனமாகவே செவ்வானமு மிருளுஞ்சேர்ந்து போர்க்களம்பார்க்கப் புகுந்ததேபோல்வந்து மிகுந்தன. இப்பால் இரணக்களத்திலழிந்த வீரமன்னர்களுடைய மகுடங் களும் இரத்தினராசிகளும் ஆபரணங்களும் நெருங்கிநிறைந்து கிடப்பது எப் படியிருந்ததெனின், தருமதேவதையாகிய தருமநந்தனன் வீரமிகுந்த போர் வென்று விஜயமடைந்து முல்லை யரும்பைப்போன்ற பல்லையுடைய பூமிதேவி யைக் கலியாணம் பண்ணிக்கொள்ளு நிமித்தமாகப் பரியத்திற் கொடுத்துக் காட்டிய பற்பலவித ஆபரணங்களையொத்திருந்தது. மேலும் யானைத்தந்தத்தி னிறைந்திருந்த முத்துகள்முதலிய இரத்தினக் கொத்துகளெல்லாம் யுத்தபூமி யில் இராசிராசியாய்க்குவித்துச் சிறந்திருப்பது எத்தன்மையொக்குமெனின் பாணங்களினாற் பிளப்புண்ட யானைகளினுடைய வீரபட்டமணிந்த நெற்றி யென்னும் பெட்டியைத்திறந்து முத்துக்கொத்துகளைப் பத்தி பத்தியாய் வைத்திருப்பதை யொத்திருந்தது. இதன்றியும் வாளாயுதங்கொண்டு வீசிய போது வயிறுகிழிந்து விழுந்த வீரர்களுடைய ஈரல்களும் மணிகுடர்களும் நாணியறுந்து நிமிர்ந்து இரத்தவெள்ளப் பள்ளத்திற்கிடக்கும் வில்லுகளிற் சுற் றிக்கொண்டு பிரகாசித்திருக்குந்தோற்றமானது எத்தன்மையெனிற் பூமிதேவி யை, விவாகம் செய்துகொள்ளும் பொருட்டு முரசம்போற் கொடியுற்ற அர சர்க்குட் கொடிபெற்றமுதல்வன் அந்தக்கலியாணப் பெண்ணுக்குச் சூட்டிய குணங்கொண்டமணமாலையைப்யொத்திருந்தது. பின்னும் வீராபிமானத்தாற் சிறந்த வீரர்களுடைய வீரவாளியால் வெட்டுண்டிருந்த சுத்தவீரர்கள் இர த்தவெள்ளமானது பலவித பள்ளக்குழிகளிலே நிற்கின்ற தன்மையானது எதி ரிகளுக்குப் பயந்தோடாமல் அவ்விடத்திற்றானே நிலைத்துநின்று சத்துருக்கள் தடுமாறிப் பள்ளத்தில் விழுந்தால் உடனே பகையைமுடித்துக் கொள்ளுவோ மென்றிருக்குந் தன்மையைப்போலு மிருந்தது, மேலும்அந்த இரத்தப்பெருக் குகளெல்லாம் அனேகமுகமாகக் கால்விட்டோடி அலையடிக்குங்கடலிற்போ ய்க்கலந்து எப்படி யிருந்ததெனின், முகூர்த்தப் பெண்ணுக்கு நலங்கிட்ட சுந்தனுதி சுகந்தகளப கஸ்தூரி சாந்து சவ்வாது புனுகு முதலிய இங்குலிகக் குழம்புகளினால்நனைந்துசிவந்த வஸ்திரத்தைநீக்கி ஓமத்தீமூன்வந்திருப்பதற்கு நவமணிபதித்த நீலப்புடவையை நாடியதுபோலுமிருந்தது. இப்படியாகப் பூதபைசாச கணங்களுடன் நாய் நரிகளும் பேராராடிப் பிணங்களைத் தின்று கொண்டு கலியாணச்சந்தடி வீட்டைப்போலிருக்கும் போர்க்களத்தில் விட்டுப் பாசறைக்குப்போனான் வீமசேனனால் அடிபட்டுப் புறமுதுகிட்டோடிய காந் தாரிமைந்தன். இப்பால் மின்போலிலங்கும் போர்வில்லுந் தாங்கிய வீமசேனா னுடன் குந்திமைந்தனும் தம்பியருங் கோபாலனும் கொடிப்படைச் சேனை களுடன் பாடிவீடுபோய்ச்சேர்ந்தனர். பெரும்போரிலிறந்த மன்னர்களெல்லா ருங் கௌரவரிலிறந்த மன்னர்களெல்லாருந் தென்றிசையிலிருக்கும் எமலோக மாகிய பாடிவீட்டிலடைந்தனர். இப்பால் இருள்கவியக் குருக்ஷேத்திரத்

திற் குடிபடைகளை முடிக்கின்றேனென்று விசயங்கூறிவந்த அரவானானவன் மடிந்ததைக்குறித்து பாண்டவரும் ஸ்திரீஜனங்கள் யாவரும் அழுதுவருந்தி அன்னபானாதிமுதலியன அருந்தாமல் அயர்ந்து நித்திரையொழிந்து நெடுமூச்செறிந்திருக்கும் நிலைமையைக்கண்டு கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்துக் கோபாலனஞ்செய்தருளிய ஸ்ரீபகவானானவன் தருமராசன்முதலாகிய பாண்டவர்களுக்கும் துரோபதை சுபத்திரைமுதலாகிய ஸ்திரீகளுக்குந் தைரியஞ் சொல்லி நமதுபிள்ளை போனதைக்குறித்து நாம் விசனப்பட்டால் நமக்குத் துணைவந்தவர்கள் அவரவர் பிள்ளைகளையுந் தம்பிதமயனையும் பறிகொடுத்திருக்கின்றார்களே அவரவர்களுக் கெவ்வளவுவிசனமுண்டாகலாம், ஆகையால்விசனத்தைக் காட்டாதீர்கள் சந்தோஷகரமாய் நாளை நடக்கப்போகின்ற காரியங்களுக்குவேண்டிய யுத்திபுத்திகளை யோசியுங்களென்று ஒருவார்த்தை சொல்லித் தானுங்கூடவிருந்து சாப்பிட்டு தாசர்களுக்கு நேரிட்ட துன்பபாசத்தை நீக்குந் தயாநிதியாகிய இறைவன் தானுஞ் சஞ்சலப்பட்டவரோபோற் காட்டிப் பஞ்சவருடன் பஞ்சணையிற் படுத்திருந்தனன்.

துரியோதனனானவன் இந்த எட்டாம்போரிலிறந்த தன்னுடையதம்பியர்களை யெண்ணியெண்ணித் துக்கப்படும்போது அவனைத்தேற்றி நாமேதுயரப்பட்டால் எதிரிகள்நகைத்துத் தனிவந்துபகைத்து மேல்விழுவார்கள், நமக்குத் துணைவந்த அரசர்களெல்லாரும் திகைத்து மனமைந்துபோவார்கள், ஆதலால் தைரியம்விடாம லிருக்கவேண்டும் உரகக்கேதனனேயென்று வீஷ்மர்துரோணர் முதலிய மேலோ ரெல்லாருங்கூடி விசனத்தை யாற்றித்தேற்றி விடுத்தனர். இச்சங்கதிகளை யெல்லாஞ் சஞ்சயனானவன் திரிதராஷ்டிரனுக்குச் சொல்லக் கேட்டு காந்தாரியும் காவலர் மனைவிகளும் மற்றுமுள்ளவர்களும் முகத்திலறைந்துநிலத்தில்விழுந்து மூக்கைச்சிந்திபெறிந்து மோதியடித்துக்கொள்ளும் உபத்திரம் பொறுக்கமாட்டாமல் உலகமுய்க்க ஒப்புக்குஅழவந்த உடம்பை வருத்தாத உத்தமியானவள் தலையிரைச்சுருட்டி முடித்துக்கொண்டு சாளரக்கதவுகளைத்திறந்துவிட்டு சாடையாய் நழுவிப்போந் தன்மையைப்போல் கிழக்கு வெளுக்கப்பார்த்து அடிகெட்டேனென்று இருட்டாகிய பெண்ணானவளோட அந்தச்சமயத்தில், புத்திசாலியாகிய விவேகவிற்பனன் 'ஆண்டாண்டுதோறும் அழுதுபுரண்டாலும் மாண்டார்வருவரோ மாநிலத்தில் வேண்டாம்' சும்மாயிருங்களென்று சுடர் முகங்காட்டிச் சொல்லவந்தவனைப்போல் சூரியபகவான்கீழ்த்திசையிற் றோன்றினன். சஞ்சயனும் படிகளம் வந்துசேர்ந்தனன், நன்றாகக்கேள் ஜனமேஜய மகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டுவந்தனர். இந்தவிருத்தாந்தத்தைத்தம்பதிசமேதராகக்கேட்டுச் சகலவித உபசாரத்துடன் தன்னுடையகன்மந்தீரும்படியாய்த் தானந் தியாகம்ஹோம முதலாகிய மங்களஸ்நானம் யாவும் மாதவர்களுக்குச் செய்வித்து மேனடந்த ஒன்பதாநாள் யுத்தத்தையுஞ் சொல்லவேண்டும் என்னுயிர்த் துணையாகிய உயர்ந்தோனேஎன்று ஜனமேஜய மகாராசன் வணங்கினன்.

எட்டாம்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

## ஒன்பதாம்போர்ச்சருக்கம்.

கலிவிருத்தம்.

பேராறுமூழ்கிமறைநாலுணர்ந்துபெருவேள்விசெய்துபிறவித்
தூராறுமாறுநினையாமல்வேறுதொழிலேபுரிந்தசுமடர்
ஓராறுபேதசமயங்களுக்குமுருவாகிநின்றவொருவன்
ஈராறுநாமமுறைசெய்துமண்கொடிவோர்மெய்காணுமிமையோர்.

அரசனே! எட்டாநாள் யுத்தத்தில் முடிமன்னர் முதலியவர்களும் துரியோதனனுடைய தம்பியர்களும் புறமுதுகிட்டுப்போனதுமல்லால் அநேகம்பேரிறந்துபோயினர், நேற்றிருந்தவர்கள் இன்றைக் கில்லையேயென்று விசனங்கொண்டுநின்று தன்னைப்போற்றுயாப்படும் சகுனிமாமனையும் கேட்டுக்குத் துணைக்காரணமாகிய பாட்டைவழியைக்காட்டுந் துச்சாதனனையும் அழைத்துவைத்துக்கொண்டு அநேகம் யுத்திகளையெல்லாம் ஆலோசித்து என்னண்ணனாகிய கன்னராசன் வராமல் என்மனந்தேறுது, ஆகையால் அவனையழையுங்களென்று சொல்ல அப்படியே வீஷ்மர் சாகிறவரைக்கும் ஆயுதமெடுப்பதில்லையென்று பாசறையைவிட்டுப் புறப்படாமலிருக்குங் கன்னனிடத்திற்றூதர்சென்றுகண்டுவணங்கி கருணைக்கடலாகிய இறையே கருதலர்க்குப்பகையாகிய இறையே, உம்மை யழைத்துவரும்படியாய் காவலன் பணிங்கொண்டானென்று சொல்ல அந்தவார்த்தையைக்கேட்டு அதிசீக்கிரத்திலோடிவந்த கொடையாளியைக்கட்டிக்கொண்டு கூகூவென்றழுத துரியோதனனைத்தேற்றி அட்டா தெய்வமே, ஐயோ தம்பிமார்கள், எவ்வகையிலிறந்தார்களென்று கன்னன்கேட்க நானென்னவென்று சொல்லுவேன், அண்ணா பாரியவில்லைப்பிடித்து வீரியத்துடன்கணைதொடுத்து வீமனெதிர்ச்சென்றுநின்று போர்கொடுத்தனர். அப்போது சிவனுக்கெதிர்முந்திச்சிலமலர்ப்பகழிசிந்தியழிந்த மாயோன் மகனாகிய மன்மதனைப்போல மண்ணிலழியும்படியாய்ச்செய்தனன் விமனான் லன், அந்தோ அண்ணா அங்கதேசத்தலைவனே இனியென்னசெய்வேன் இதுவரையிலும் என்தம்பிமார்கள் இருபதின்மர் வரையிலுமிறந்தனரே அவர்களைப் பழிகொடுத்து நான் இருந்தென்ன இறந்தென்ன இறைவனே, என்றந்தைதாய் முதலியவருஞ் சிந்தைவருந்துவார்களே, நான் நிந்தனைக்காளாகி நொந்தேன் நொந்தேனென்று சோர்ந்துவிழுந்தனன் துரியோதனமகாராசன். அப்படிசோர்ந்த அரசனை எடுத்தணைத்து அதிசீதள சுகந்த பரிமள சந்தனப்பனிநீருடன் ஆலவட்டம் சாமரைமுதலிய வுபசாரங்களுஞ்செய்து சோபமாற்றியபோது பெருமூச்சுவிட்டு கண்ணைத்திறந்து கன்னனைப்பார்த்து அண்ணா, சத்துருவைவென்று வெற்றிபெறுவதற்காகவந்த உத்தமர்கண்முதலாகிய மித்திரபுத்திரருடன் யுத்தஞ்செய்ய எத்தனித்த எனக்குத் துணையாகியவர்களில் முதன்மையாகிய எங்கள்பாட்டன் வீஷ்மாசாரியர் சேனாதிபதிப் பட்டங்கட்டிக்கொண்டு வில்லெடுத்து நிற்பதினால் என்னபயனாம், நான்கு வேதங்களும் வல்லவர்களுக்குச் சொல்லவல்ல குருவாகிய துரோணாசாரியர் விற்பிடித்திருப்பதினாலென்னபயன்? இந்த எட்டுநாள்வரையிலும் இவர்களுடைய நிர்வாகங்

களையெல்லாம் பார்த்துவிட்டேன் இனிக்காரியமில்லை அண்ணா, நாளைமுதற்கொண்டு நீர் வில்லெடுத்துப் போர்புரிவீரானால், போனவர்கள்போக இருக்கிற நாங்களெல்லோரும் பிழைப்போம் பாண்டவர்களாகிய சத்துருக்களொருகாலும் வெற்றிபெறமாட்டார்கள், அதிரதமுதல்வனாகிய உம்மை நம்பியிருந்ததற்கு உம்மாலாகும் ஆகாதென்று இப்போதே சொல்லிவிடும் கர்னனாகிய அண்ணாவே என்று துரியோதனன் கேட்டனன். அச்சொல்லானது கர்னனுடையகாதில்நாராசம்போலேற மனக்கொதிப்பேறத்தேகம்படபடப்பேறக்கண்களிற்றீயேற வாயிலீயேறச் சத்துருக்களைமலைய கோபந்தலைக்கேற நாற்றழும்பேறநுரைத்துப் புகையுங் கோபக்குறிப்புடன் சொல்லுகின்றனன், துரியோதனமகாராஜனே உங்கள்பாட்டன் வீஷ்மாசாரியர் அருச்சுனனை வெல்லமாட்டாதவனென்று என்னை அர்த்தரதத்திற்போட்டதும் அதற்கு நான்சபதங்கூறியிருப்பதும் உனக்குத்தெரிந்திருந்தும் எவ்விதத்தில் என்னை யுத்தஞ்செய்யச் சொல்லுகின்றீர் கொற்றவனே உமக்கு நான் எப்போதும் வெற்றியைத்தருவதற்குச்சித்தமாயிருக்கின்றேன்,இந்தமொழியை நீர்சத்தியமாய்நம்பும்,திரிபுவனங்களும் ஓடித்திரியும்படியாகியதேரும் திசைகண்முழுதும்இச்சையுடன்பெறத்தக்கவில்லும், அண்டகூடம்வரைக்கும் உண்டெழும்படியாகிய கணையும் நான் வைத்திருக்கின்றேன்,இப்போதும் அந்தவீஷ்மாசாரியர் என்னைக்கண்டேக்கங்கொண்டுபோகும்படியாய் ஒருவிந்தைசெய்கின்றேன்; அதாவதுஇந்திரலோகம் எமலோகம் பிரமலோகம் இவ்விடங்களில் எங்கணைகளைத்தொடுத்துஆராய்ந்து இறந்துபோனஉன்தம்பிகளை இப்போதேஉயிர்த்துவரச்செய்கின்றேன்,நாளைப் போரில் பாண்டவரைமாளச்செய்து உலகமுழுமையும் நீயாளஉன்சொந்தமாக்குகின்றேன், ஆனால்வீஷ்மன்சாம்வரையிலும் யுத்தமுனையில்ஆயுதமெடேனென்றுசொல்லிய சபதம்வீணாய்ப்போமேயென்று எண்ணிப்பார்க்கின்றேன், ஆயினும் ஆபத்திற்குப்பாவமில்லை,அதற்கொருசாந்திபிருக்கின்றது,அப்படிவீஷ்மன் செய்வானாகில் நாளைஇந்நேரத்திற்கெல்லாம் பஞ்சாசத்கோடி பூமண்டலமுழுமையும் நாகக்கொடிபறக்கவும்நான்மணித்தோரணம்விரித்துச்சிறக்கவும் சந்திரவிம்பமணிமுரசந்தயங்கவுந் தரியலர்தலைகுனிகிறென்று மயங்கவுஞ்செய்கின்றேனென்றனன். இம்மொழியைக்கேட்ட சந்தோஷத்தால் விம்மிப்புடைத்து வேந்தர்வேந்தனானவன் விசனம்நீங்கி, மித்திரனே அதெப்படி ஜயம்பெறுவீரென்றுகேட்கக் குந்திமுதற்புத்திரனாகிய கன்னராசன்சொல்லுகின்றனன்.

கௌரவகுல முதல்வனே ஞாபகமாய்க் கேள், இந்தப்போர்க்களத்திற் கடல்போலிரைந்து நிறைந்திருக்கும் நமது படைவீரர்களுக் கெதிராகச் சேனாபதியாகிய வீஷ்மர்வந்துநின்று யாவரையுநோக்கி இரண்டுகரத்தையு மேலே தூக்கி தன்வாக்கினால் வீரர்களே, பலம்பொருந்திய பாண்டவர்களை நான் வெல்லமாட்டேன் இனியென்னால் முடியாதென்று சொல்லிக் குப்புறக்கவிழ்ந்து விழுந்து வில்லையொடித்துப் புல்லைக்கடிப்பானாயின் பொழுதுவிடியுமுன்னெழுந்துவந்து போர்புரிந்து உனக்குத்துன்பமும் பழிச்சொல்லும் விளையவைத்த துஷ்டப்பாண்டவர்களையும் அவர்களுக்குத் துணைவந்திருக்கின்ற கண்ணபிரான்முதலிய தோன்றல்களையுந் தேவலோகபோகத்தை அநுபவிக்கும்படி

யாய்ச்செய்துவிடுகின்றேன், நானிதுவரையிலுஞ்சொல்லிக்கொண்டுவந்த வார்த்தையைப்போலெண்ணாதீர் இதோநான்யுத்தத்திற்குச் சித்தமாயிருக்கின்றேனென்று கவசகுண்டலன்சொன்னான். துரியோதனன்முதலிய உரியோர்காதுகளில் தேவாமிர்தஞ் சொரிந்ததேபோல் அதைச்சிந்தை மகிழ்ந்துங்கேட்டுச் சகுனியோடுதம்பியர்களின் முகத்தைப்பார்த்து தானும்பிழைக்கான் பிழைப்பவனையும் பிழைக்கவொட்டானென்னுங் கதையாயிற்றுநமதுவீஷ்மர்செய்திருக்குங்காரியமானது, ஆனால்கன்னமகாராஜன்சொல்லியநீதி ஞாயமாயிருக்கின்றதல்லவா, வீரர்களே, அதிசூரர்களே, அடாதம்பி துச்சாதனா, வீஷ்மரிடத்திற்குப்போய் அங்கதேசாதிபதி சொல்லிய சங்கதிகளைச்சொல்லி உம்மாலானாலுஞ் செவ்வைப்படவேண்டும் அல்லது பிறராலாவது வெற்றிபெறவேண்டும், இந்த இரண்டுமில்லாமல் திரண்டுவந்த சேனைகளெல்லாம் இறந்து நூறுபேரொன்னுங் கணக்கில் இருபதின்மர்குறைந்து இப்படி நாளுக்குநாள் நொந்துபோகும்படியான காலம்வந்திருக்கிறதல்லாமல் வேறொன்றில்லை, மேலும் 'முகத்துக்கஞ்சி முறைமைதப்பினால்குலத்துக்கீனம்' என்பதுபோல் உம்மைப்பாட்டனென்று நம்பிப் பட்டங்கட்டிவைத்து நான் நஷ்டமாய்ப்போவேனோ, என்னையாவே எந்தப்புண்ணியவானைக் கொண்டானாலும் வெற்றிபெறுவது உமக்குச் சம்மதமா அல்லவென்றால் நீரேயிருந்துமுடித்துக்கொடுக்கிறேனென்று சொல்லுகிறீரா, அல்லது இரண்டாட்டி ஊட்டியகுட்டியென்பதுபோல நான்கெட்டுப்போகவா, உமது இஷ்டந்தானெப்படியிருக்கின்றது, இப்போதென்னசொல்லுகின்றீரென்று அவருடையஎண்ணத்தை அறிந்தோடிவாவென்று அரவகேதனனனுப்ப அந்தக்ஷணமே ஒப்பில்லாத ஆலகாலவிஷச் சந்துக்கொப்பாகிய துச்சாதனனானவன் ஒருநொடிப்பொழுதில் பாசறைக்குவந்து வாகைபணிந்தவிற்பிடித்து நெருங்கிய வேந்தர்கண்டு வில்அஞ்சுராணிபோல் நடுநாயகமாகநின்று நாளைப்போருக்கு வேண்டிய யுத்தியைப் பேசிக்கொண்டிருந்த வீஷ்மனைக் கண்டு கன்னன்சொல்லிய சங்கதியாவும் துரியோதனன் சொல்லச்சொன்னதாய்ப்புகன்றான். இம்மொழியைத் தன்பேரப்பிள்ளையாகிய துச்சாதனன்சொல்ல உரியோனாகிய பெரியோன்கேட்டு கையினால் வாயைமூடிக்கொண்டு கக்கடகக்கடநகைத்து அப்பா உப்பில்லாமல் முக்கலக்கஞ்சிகுடிக்கிறேனென்றே எனது துப்பற்றவீரத்தை நீங்கள் மெச்சும்படியாக நான்சொல்லி வயிறுவளர்த்து வாணாள்வகித்திருக்கப் போவதில்லை ஆங்காலமெல்லாம் ஆயிற்று போங்காலம்போயிற்று இன்றைக்கோ நாளைக்கோ சாங்காலமானது இனிநான் உங்களிடத்தில் என்வீரத்தையெடுத்துப்பேசுவதிற்பயனென்ன? ஆதலால் பாண்டவர்களில்அருச்சுனனை வெல்லவுங்கொல்லவும் என்னாலாகாது அவனுக்கு நானீடல்லஆனால் விந்தையாகியயுத்தங்களெல்லாஞ்செய்கின்றேன், இன்றைப்போரில் அரசரிடத் தன்பில்லாத மகுடாதிபர்கள் நூறுபேரைமுடியறுத்து முடியவைக்கிறேன். அதைவிட்டு வில்லைத்தள்ளிப் புல்லைக்கவ்வி வீரமில்லையென்று சொல்லச்சொன்ன வாக்கியம் நல்லதன்று, நானப்படிசெய்யப்படாது என்பேரனே இப்போது நீங்கள் நினைத்தகாரியம் நாளையே நிறைவேறுங்குறைவில்லை, இன்று ஒருநாள்மாத்திரம் நீங்கள் மனம்பொறுத் திருக்கவேண்டும்,

நாளைமுதற்கொண்டு உங்களை நாடாளவைக்க வரப்போகிறவர் தான்சொன்ன உறுதிவாக்கியப்படி, ஜவனைவென்று வாகைமாலைசூடுங் கைத்திறலையுடைய வர் தான் அப்படியாக வெற்றிபெற்ற உத்தமருடைய பேருதவியினுல் நமது குருநாடும் சுற்றிலுநிறைந்தவளநாடும் உங்களுக்குக்கிடைத்தது நீங்கள் பட்டாபிஷேகம் செய்துகொண்டு புத்திரமித்திரகளத்திரசுற்றத்தாருடன் கலந்து எள்ளுங்காய் முள்ளுமுறியாமற்பொருந்தி அநேகநாளிருந்து மிகுந்த சம்பத்துடன் நீடூழிவாழக்கடவீர்கள் குழந்தைகளேயென்று துச்சாதனனுக்குவிடைகொடுத்தனுப்பிவிட்டு அரசர்களுக்கும் உத்தரவுகொடுத்துத் தானும் விசனத்துடன் போய்ப்படுத்துக்கொண்டு நித்திரையில்லாமலிருந்து மறுநாட்காலையிலெழுந்து காலைக்கடனை முடித்துக் கொண்டு தானெண்ணிய வெண்ணப்படி சமானமாகிய அதிரதத்தலைவரும் சக்கரரக்ஷகரும் இணைக்குதிரைகளும் மன்னர் மண்டலீகர்முதலிய நால்வகைப்படைகளும் சூழ்ந்துவரப் பஞ்சமேளவாத்திய முதலாகிய விருதுந்தழைக்கப் பாருங்குலுங்கக் காருங்கலங்கப் பர்வதங்களெல்லாம் வேரறுந்தாட, தூளிப்படலங்களெல்லாங் கண்மறைந்தோட, திக்குகளும் திக்குயானைகள்தியங்கச் சேடன்முதலியவர்களுமொடுங்கத் திரண்டசேனைகள் புரண்டகடலெனப்பரந்து மிகுந்து, குருக்ஷேத்திரத்திற் புகுந்துகலந்து என்ன வியூகங்கட்டலாமென்று யோசித்துச் சத்துருக்களை வெல்லும்படியாகிய சயபத்திரவியூகங்கட்டினர். சயபத்திரமென்பது வெற்றிலையைப்போலச் சேனைகளை நிறுத்திவைத்து நாகக்கொடியோனுகிய ராஜாதிராஜனை வெற்றிலைக்காம்புக்கு மத்தியிலிருக்கும் பெருநரம்புக்கு நடுவிலிருத்தி அந்தநாடிநரம்புக்குப்பக்கத்திலிருக்கும் மற்றநரம்புகளுக்கெல்லாம் ஒருகோடிராஜர்களைநிறுத்தி அந்தச் சேனைகளுக்கு முனைக்காரராகப்பகதத்தன் சோமதத்தன் வாகுலீகன் இவர்கள்முதலியவர்களை யமைத்து மற்றவீரர்முதலிய கைக்காரரை அந்தவெற்றியாகிர்தியாகச்செய்து பூமிகுலுங்கும்படியாய் அலம்புதன் அலாயுதன்முதலிய அரக்கரையெல்லாம் முனையாகப்போக்கி யானை தேர் குதிரைகளைச்சுற்றிலும் வரம்பாக விடுத்து அடிக்காம்பில் சம்சத்தகர் கலிங்கேசர் மாளவர் சீனர் சோனகர் திராவிடர்முதலியயாவரையுங்கூட்டிக் கேடயம்போற் கவிப்பாயமைத்து தானும் தூசிப்படையில்நின்றார்.

இப்பால் பாண்டவரொழுந்து நித்தியக்கடனை முடித்துக்கொண்டு யுத்தசன்னத்தராய் நேற்றைப்போரில் சடாசூரனுடைய குமாரனென்னும், அலம்புதனுனவன் அரவானுகிய தங்கள்பிள்ளையைக் கொன்றானென்ற மனத்தாபத்தினுல் துரியோதனனுடைய தம்பியர்கள் பதினைவரைமடித்து அரக்கப்படைகளையெல்லாமுடித்துப் பலபலஅரசர்களினுடைய ஆவியையுமழித்து ஆறாப் புத்திரசோகங் கொண்டு தேரடி பட்டோடச் சயங்கண்டுநின்ற வீமசேனனும் தேவர்பகைகளைந்த வெற்றிவீர விஜயனும் நகுல சகாதேவரும் சத்தியவிரத உத்தமனுகிய தருமநந்தனனும் மற்றப் படைமன்னர் முதலானவரும் முன் பக்கங்களிலும் நெருங்கிவரவும், இடக்கை உடுக்கை தப்பட்டை தாரை பூரி மேளம் முரசுமுதலிய வாத்தியங்கள் முழங்கிவரவும், கொடி குடை சாமரம் பீலிக்குஞ்சம் மேற்கட்டி மகரதோரணம் விருது டால் வகைக

ளெல்லாம், மேகமண்டலத்தை யளாவிவரவும் காயாம்பூ மேனியையுடைய வாசுதேவன் போசகுலகேச விசுவார்களுடன்பேசிக்கொண்டு, தாசானுதாசர் களாகிய பாண்டவர்களும் புடைசூழ்ந்து வரும்படி யானை குதிரை தேர் பதாதிகளுந் துள்ளியோடி நடுங்கும்வேகத்தால் கொள்ளையாகியதூசிகள் படிந்து மாசிகள் மறையும்படி வீசிமூசிக்கொள்ளவும் விசனமிகுதியால் போர்க்களத்திற் கனற்பொறி தெறிக்கவும் யுத்தகளம் வந்துசேர்ந்து சிவந்த பதுமராக மணிகளாற் செய்யமகுடமும் பெரிய பதக்கமாகிய மதாணியும் முத்துத் தொங்கட்டமும் குண்டலங்களும் வாகுவலயங்களும் பொற்றுமனை வாசியாகிய திருமாமகளும்பொருந்திய திருமேனியையுடைய புண்டரீகக்கண்ணன் சேனதிபதியாகிய துஷ்டத்துய்மனையழைத்து பதுமராகவளை யூகங்கட்டச் செய்து வச்சிரா யுதனைப்போன்ற பார்த்தாமனிருக்கச் சேனதிபதியினால் இரண்டு படைகளும் கைகலந்து தொந்தயுத்தமாகிய போர்புரிந்தனர். அவ்வேளையில், இந்திரனும், தேவர்களும், ஆகாயமுதலிய அகண்டம் எட்டுத் திக்கும் அஷ்டகுலாசலமும் எட்டு நாகங்களும் படபட வென்றதிரும்படி அலம்புதனென்னும் அரக்கனானவன் அநேகம் இராக்கதப் படைகளுடன் ஆகாயமளாவிய தேரைச்செலுத்திஆக்கிரமித்துக்கொண்டுவெற்றிமாலைசுற்றிய கொற்ற வெம்புயத்தைப் பெற்ற வீமனுடன் போர்புரியும்படி வந்தெதிர்த்தனன். அப்படி வந்தெதிர்த்த அலம்புதனை மல்யுத்தத்தாற் கொல்லவேண்டுமென்றுமனங்கொண்டுவந்த வீமனைக்கண்டு இந்தவீமன் மற்போரினால் வெகுபேரைக் கொன்றிருக்கின்றனன். நமது தந்தையாகிய சடாசூரனையும்வென்றுவிட்டான், நம்மையும் அப்படியே வேலைமுடித்துப்போடுவான். ஆகையால், இவனோடுமற்போர் புரியலாகாது, இவனுக்கு மிகப்பழக்கமில்லாத விற்போர்புரிந்தேவெல்லவேண்டுமென்று வீமனைக் கண்சிமிட்டாமற் மீசைமுறுக்கிக்கனைத்து பற்கடித்து அடா வீமா, நீ மற்போர் கறைப்போரில்வழக்கப்பட்டவனேயல்லது விற்போர்தெரியாதவிழலப்பனேயல்லது என்னைப்போல் வில்லின் வல்லமையுடையனோ, அந்தப் பண்டவாளத்தையும் அறிகிறேனென்று வெகுண்டு வில்லெடுத்து பாணிபூட்டுவதற்கு முன்னமே வச்சிரக்கல்லுக் கொப்பாகிய புயவலிமையுடைய வாயுபுத்திரன் கார்முகமெடுத்து பாணி சேர்த்துக் கர்ணபரியந்தமிழுத்து காளகோடி விஷாக்கினிக் கணைகளைக் கன்மழையேபோல்வருஷித்து அலம்புதன் கைக்கொண்ட கனமலைக்குமேலாகிய வில்லை மளுக்கெனமுறித்து அடா அரக்கனே! மல்யுத்தத்தில் இடும்பனை பகனை ஒப்பில்லாக்கீசகனை தப்பிலிவேலைசெய்த உன்னப்பனை ஒருகுத்தினாலும் ஒருகாலுதையினாலும் உடல்சிதையச்செய்தவொருவனென்று நினையாமல்வில்லில் வெல்லவந்தனையோ! உன்கைவில்லெங்கே! அடாதுன்மார்க்கனேயென்று வீமசேனன் மேலும் மேலும் நாலுகணைகளை விடுத்து உடலைத் துளைத்தபோது ஆகாயவீதியிற்சென்றுமறைந்துபூமியிற்சுழன்றுவந்துபலங்கொண்டிருக்கும் மந்தரமலைக் கொப்பாகிய கந்தரமலையென்னும் பர்வதத்தையும் பெரியமரங்களையும் பிடுங்கி வந்தெதிர்த்து வீமசேனனுடைய தோளின்மேல் வீசியெறிந்தனன் அலம்புதனானவன். அப்படியாகவீசிய மலையுமரங்களும்

பொடிப் பொடியாய்ப்போம்படி வடிக்கணைகளால்வாட்டிப் பாலசுப்பிரமண்யக் கடவுள் கிரவுஞ்சகிரியைக்கிழிக்க விடுத்த வேலாயுதமென்று மேலோர்கள் சொல்லும்படியாகிய வேலைத்தாங்கிப் பூசித்துவணங்கி அபிமந்திரித்து விட்டான் வீமசேனன். அந்த வேலாயுதம் போய்ப்பட்ட மாத்திரத்தில் குமாரசுவாமியினது வேல்பட்டழியும் சூரனுருக்கொண்ட மாமரத்தைப்போல் இருகூறுய்ப்பிளப்புண்டுவிழுந்தான் அலம்புதனுனவன். அப்போது வீமசேனன் கதையைக் கையிற்கொண்டு கர கரவென்றுசுழற்றி அலம்புதனுடன் படைகூடிவந்த தொண்ணூற்று நாலாயிரம் அரக்கரும் மாறுபட்ட பாஷைகளையுடைய நூறுலக்ஷம் வடதேசத்து அரசரும்தலைகிழிந்து மூளைவிழுந்து தாரணியிற் சேருய்ப் பெருக்கெடுத் தோடும்படியாகச் சாடினுன் அநேக உருப்புகளினுல் மண்மேல் மூடினுன், இப்படி எலும்பு ஒடிய அடித்து பலபேர்கள் முடியமுடித்துப்பூமிநெளியாடித்துஉக்கிரவழுதிய னிவனென்றுரைக்குஞ்சிலாகிய அக்ரகண்யனென்று யாவரையும்போக்கிய வீமனுடைய வீரப்பிரதாபத்தைக்கண்டு முன்னுட்போரில் அரவானைக்கொன்ற அலம்புதனைப் பின்னுட்போரில் பீறுண்டழியக் கூர்கொண்டவேல்கொண்டு கிழித்தனன். இவனுரொனின், சத்தியநெறியுந் தமயனுகிய தருமராசனுக்கிளைய வீமசேனனென்றும் இரவுபகலில்லாத இந்திரலோகத்திலிருக்கும் இமையா நாட்டத்தவராகிய தேவராகிய தேவர்களெல்லாரும் இரைந்துமதித்து விரைந்து துதித்தார்கள். இவ்விடத்தி லிப்படியிருக்க காசிதேசாதிபதி போசதேசாதிபதி மாளவதேசாதிபதி கலிங்கதேசாதிபதி புளிந்ததேசாதிபதி அஜபதி கஜபதிமுதலிய எழுபதினுயிரம் அரசர்கள் நால்வகைப்படை விற்படை வேற்படையுடன் பொங்கி அருச்சுனனையெதிர்த்து அநேகங் கணைகளைத் தொடுத்து அகிலபுவனங்கள் யாவும்நடுங்க கிகிலசராசர கெட்டுயிர்ப்போங்க மட்டிலாயுத்தஞ்செய்து கேசவன்செலுத்துந் தேரிற்கிளர்ந்த வாசவன் மகனுகிய சுவேதவாசியன் பிளந்தவித்தகத்தேக வெதுப்பினுற் சாய்ந்து, கொத்தழற் கணைகளாற் பற்றறமாய்ந்து மற்றெருருபக்கத்திற் சுற்றிநெருங்கிய சேனைகளெல்லாம் வெற்றிபொருந்திய வீரவாகை விசயன்சொரியுங் கணைகளாற் பற்றியெரிந்துசாம்பராய்ப்படிந்தனர். இன்னெருபக்கத்தில் துரியோதனன் சேனைகளை வீமசேனன் தன்னுடைய கதாயுதத்தாற் காற்றிற்சிதறிக் கலங்குஞ் சருகைப்போற்பறந்து மடித்தனன்.

இந்தப்படி நாலுபக்கங்களில் நால்வகைச் சேனைகளையும் நலியச்செய்யுங் காலத்தில் கங்காபுத்திரனுகிய வீஷ்மாசாரியர்கண்டு கண்கள்சிவந்து முகங் கருகிக் கடுவேகங்கொண்டு பாரைக்கிழித்தோடுந் தேரைச்செலுத்திப் பாணங் களை வாரியிறைத்து பற்கடித்து வருவதை இராஜசூச்சியனுகிய தருமராசன் கண்டுகலங்கியோடுஞ் சேனைகளைக்கையமைத்துத்தன்னைச்சூழ்ந்த சதுரங்கச் சேனைகளுடன் வீஷ்மரைாத்தகைந்து வெற்றிமாலை சூட்டிய வில்லைவளைத்து வீரபாணப்பகழி மழைகளைப்பொழிந்து குதிரைகளுஞ் சாரதியுங்குழைந்து போகும்படியாய் அழுந்த அடித்தகாலத்தில் அந்தத்தருமராசன் தூற்றிய பகழிகளைத் தன்மேற் படவொட்டாமற் றடுத்து அவர்கைப்பற்றிய வில்லையு முறித்துத் தோரணத்தையும் மறுத்தார் வீஷ்மாசாரியர். அவ்வேளையில்

வீரபட்டந்தாங்கிய யானைகளும் வாயுவேகம் பிற்படத் தாவியோடுங் குதிரைகளும் மேகஞ்சிதையக்கிழிக்குங்கொடிநாட்டிய இரதங்களும் வகைவகையாகிய வீரர்களின் பேதங்களுமுடைய பாஞ்சாலன், துஷ்டத்துய்மன், சிகண்டி, உத்தமௌசா, உதாரமன், முதலானவர்களெல்லோரும் போர்க்களத்தில் விரைந்து வீஷ்மருக்கெதிர்வந்து போர்புரிந்தனர். அப்போது வீஷ்மரும் துரியோதனனுடைய தம்பியர்களும் இசைகள்பெற்று திசைகளெட்டிலு மிருந்து வந்திருக்குங் காவலரும் நேரிட்டுப் போரிட்டார்கள். இந்தவேளையில் வீஷ்மாசாரியானவர் தாஷ்டீகமாக வடிக்கணைகளை மந்திரபலத்துடன் வாரிவிடுத்த காலத்தில் தேருந் தேராளிகளும் யானைகளும் யானைவீரர்களும் காற்றிலுங்கடுவேகங்கொண்டகுதிரைகளும் குதிரைவீரர்களும் வேற்படைவிற்படை கதைப்படை வாட்படைதாங்கிய காலாள்களும் பட்டனர்கள். வீஷ்மர்விட்ட கணைகளுக்குத் தப்பிப்போன பாஞ்சாலர்களில்லையென்று தேவர்முதலிய யாவரும் சொல்லும்படியாகப் பிராணன் விட்டனர், சிலர் காயப்பட்டுப் புறமுதுகிட்டனர். இவ்வகையாக வீஷ்மர்முனைந்துகணைமாரிபொழிந்து வருங்காலத்தில் சிகண்டியானவன் தன்றேரெதிர்விடுத்து வீஷ்மனையடுத்து வீஷ்மனே! உன்னுடல்பூமியில் வீழவும் நீ விண்ணுலக மடையவும், ஒருகை பார்க்கவேண்டுமென்னும் ஆசைகொண்டு போர் செய்யவந்தேன். இப்போது பாஞ்சாலரிடங் காட்டிய சேவகமெல்லாம் என்னிடத்திற் காட்டென்று அநேக வீரவார்த்தைகளை இழிவாகப்பேசிக் கார்முகம்வளைத்து நேர்முகமாகக் காய்ந்த தீக்கணைகளையுந்தினன், அந்தவேளையில் திரிலோகமுங்கலங்க மோகம்விளைக்கும் மன்மதனுடைய ஐந்துகணைகளுக்குங் கலங்காத வீஷ்மாசாரியாரானவர் தன்மேல்விழும் பேதையின்பாணத்திற் கிலக்காகிச் சிகண்டியைநோக்கி நகைத்து அவன்மேற் பாணந்தொடுக்காமல் வில்லைக்கீழே வைத்துவிட்டு வீஷ்மாசாரியர் வெறுங்கையாயிருக்க, சிகண்டியின் பாணங்கள் தன் தேகமுழுமையுந்தைக்க அப்போது சன்மார்க்கிரவினையைச்சிந்தையினினைந்துவருந்திக்கொண்டிருக்குங்கிலையைத் துச்சாதனன்கண்டு துயரங்கொண்டு சுடுசரங்களைச் சோனைமேகஞ் சொரிதலைப்போற் பொழிந்து கோடைக் காய்ச்சலைப் போற்காய்ந்து பாஞ்சாலர் சோமுகர் முதலிய பல்லோருங் கெட்டழியப்படுத்தி மேகமளாவுங் கொடிநாட்டிய சிகண்டியேறிவந்த தேரையும்அவன்கைப்பிடித்தெய்யும்வில்லையும் சிதைத்தனன். இப்படிசிதைக்கும் அந்தத் தெப்பலினாற் தேகம்வருந்திக் காலோட்டமாயோடி உதயகிரிச் சாரலிலொடுங்கும் இருளைப்போலொளித்தனன் சிகண்டியானவன். இவ்வாறத் துரியோதனனுடையதம்பி துச்சாதனன் சிகண்டியைவென்று பாஞ்சாலப் படைகளைத்துரத்தி ஒருவர் போனவழியொருவர்போகாமற் பறக்கவடித்துவெற்றிகொள்ளும்போது தன்வில்லையெடுத்துப் பிடித்து நாணிபூட்டினார் வீஷ்மாசாரியர், அச்சமயத்தில் வீஷ்மருக் கீடில்லாதசிகண்டியைத் துச்சாதனன்வென்றுமேன்மைபண்டைத்தானென்று தேவர் முதலிய யாவருஞ் சந்தோஷமடைந்தனர். அப்போது துச்சாதனனாலும் வீஷ்மராலும் பாண்டவச்சேனைகளும் பாஞ்சாலப்படைகளும் படாதபாடும் பட்டுக்கெடுவதைப் பார்த்தன்கண்டு முகம்வியர்த்து ஸ்ரீகண்ணபிரானுடைய

முகத்தைநோக்கி பவனவேகத்திலு மிஞ்சிய இரதத்தைப் படைகளுக்கு நடு வில் விடச்சொல்லிவந்து சரமாரிபொழிந்து சாடுங்காலையில் சத்துருக்கள் யா வரும் பறந்து பறந்து தலைவிரிகோலமாய்ப் போய்விட்டனர். அப்படி ஆவே மிகமாய்வந்த அருச்சுனன் பாரியாய் தொடுத்துவிட்ட கணைகளினாற் பட்டுக் கெட்டவரைச் சொல்வதற்கு பிரமதேவன் பலகோடி நாவைப் படைக்கா மற் போயினன், என்னொரு நாவினாற்சொலத்தரமன்று. ஆனால் ஓர்கணக் குச் சொல்லுகிறேன்கேள் அரசனே அதெப்படியெனின், வெற்றிமாலையும்வீர பட்டமுமணிந்த யானைகளும் குதிரைகளும் பதாதிகளும் அழிந்து அவர்க ளுடலி லிருந்துவழிந்த இரத்த வெள்ளமோடி சமுத்திரத்திற் கலக்கவே அக் கடலானது தீக்குணமும் செந்நிறமுங்கொண்ட வடவா முகாக்கினிபோற் பிரகாசித்தக்கடல் முழுமையுந் தன்னிறமாக்கிக்கொண்டது, இவ்வளவுஇரத்த வெள்ளமோடினால் எவ்வளவு சேனைகளிறந் திருக்கவேண்டும் இது நிற்க, இவ்வாறு அருச்சுனன் பாணங்களினால் அழியாநின்றசேனைகளைக்கண்டு வீஷ் மர்மறுபடியும் விண்ணாணி யிழுத்துப் பகழிமாரி பொழிந்து பாண்டவசேனை களைப் பலபலவென்று நெல்லி யிலைபோலுதிர அடித்தகாலத்தில், இளம்பஞ்ச பாண்டவர்களுள் தருமராசன் புத்திரனாகிய தேவகனும், வீமன்புத்திரனான சர்வதேவனும், கடோற்சஜனும், அருச்சுனன் புத்திரனாகிய அபிமன்னுவும், நகுலன்புத்திரனாகிய விசயனும், நிர்மித்திரனும், சகாதேவன் புத்திரனாகிய விரசுகோத்திரனும் பாஞ்சாலன் பிள்ளையாகிய துஷ்டத்துய்மன் சிகண்டிசுமித் திரன், பிரியதரிசனன், சித்திரகேது, சுகேது, துவசேனன், உத்தமோசன், உதார்மனு முதலியவர்களும், விராடராசன்பிள்ளை பிரிதிவன் குந்திபோசன் குமாரர் மந்தன் சுமந்தன் தூமகீர்த்தி, அவன்குமாரன் மலையத்துவசன் அவன் பிள்ளை பிரதிபாண்டிய ஜயசேனன் ஜராசந்தன்பிள்ளை சகதேவன் சிசுபாலன் பிள்ளை துஷ்டகேது கிராதர்கள் அவுணர்கள் ஆந்தரர்கள் வடமர்கள் புண்டரீகர் கள்புருமிரன்முதலாகியபுத்திரவர்க்கங்களும்தேசராசபுத்திரப்பெருக்கங்களும் எதிர்த்துத் தங்கள்தங்கள் கைக்கிசைந்த ஆயுதங்களாலும்அடித்துபிரபலமாகிய நீண்ட விற்களைவளைத்து கற்களைப்பொழியுங் காளமேகம்போல் கமலாஸ்திரம் நாகாஸ்திரம் கருடாஸ்திரம் பிரமாஸ்திரம் நாராயணாஸ்திரம் உருத்திராஸ்திர முதலாகிய கணைகளைப்பொழிந்து சிங்கக்குட்டிகளெல்லாம் கிழச்சிங்கத்தைச் சுற்றிவளைத்துக் கொண்டதேபோல வீஷ்மாசாரியரை வளைத்துக்கொண்டு கரஞ் சிரங் கால்மேலென்று ஒன்றுந்தெரியாமல் மூடுபனியைப்போல் நெருங் கினர். அக்காலத்தில் வீஷ்மர் திக்குமுக்கிட்டுத் தேம்பிச் செல்லரிப்பிலகப்பட் டுக்கொண்ட செத்தையேபோற்சோம்பி அடடா என்ன இந்த அறியாப்பையங் ல்கள் கையிலகப்பட்டுக் கொண்டோமென்று சற்றுநிதானித்துச் சாரதிக்குச் சவுக்ஞைசெய்து தேரை நெடுந்தூரஞ் செலுத்திக் கொண்டுபோய்த் திரும்பி வந்து சிலையைவணக்கிச் சிலீமுகம்விடுத்து இளம்பஞ்சபாண்டவர் எதிரில் இளைத்தோட அடித்துபாண்டவர்கள் உபபத்தினி புத்திரர்களாகிய தேவகன் முதல் யாவருஞ் செத்துவிழும்படிப் பத்துபாணங்களைத் தொடுத்து, பிரியதரி சனன் சித்திரகேது இவர்களிருவரும் விண்ணுலகேற, வீரவாளிதாக்கிச் சங்க

னென்பவன் கிலத்தோடு சாயச்சாயகம்விடுத்து பிரிதிவன் பிராணன்போன தும் போகாததுமாகப் பகழிவிடுத்து புரட்டிமாய்த்து, வருணக்கணையால் மந்தனென்பவனை மாய்த்து மலையத்துவசனை மழைப்பர்ணம்விடுத்து மடக் கிச் செயசேனனை வென்று சகாதேவன்குன்றித் தண்ணீரொன்றோடத் தாக் கித் துட்டகேதுமேற் சோதிக்கணைதூவி, ஆந்திராள் முதலிய அவுணர்களை யடித்து, இராசர்கபுத்திராள் முதலாகியவர்களை யெல்லோரையும் ஒருநொடி யில்நாசப்படுத்தி, திரிகாலவாசுதேவாள், பவுண்டரவாசுதேவாள், சாத்தகியாழ் வான்முதலாகியயதுகுலத்தாயாதிகளையெல்லாம் புறமுதுகிட்டோடச்செய்து சங்கார ருத்திரமூர்த்தியைப்போல் வீஷ்மாசாரியர் இரதத்தைக்கரகரவென்று குயவன்றிகிரி போற் சுழற்றிக்கொண்டு வருங்காலையில், நகுல சகாதேவர்கள் கண்டு தாஷ்டீகமாக வீஷ்மாசாரியரைத் தகைந்து ஏமாஸ்திரம் பாசுபதாஸ் திரம் நக்ஷத்திராஸ்திரம் வருணாஸ்திரம் முள்ளம்பு முனையம்பு கிளையம்புபிறை வாயம்பு முதலாகிய பாணங்களைவிடுத்து வீஷ்மருடைய மேனியைத் துளை த்து விறுவிறுக்கச் செய்தபோது வீஷ்மர்கண்டு வெகுண்டு நகுல சகாதேவர் களுடைய தேர் குதிரை சாரதி வில்பாணம் விரபட்டமுதலிய எல்லாவற்றை யும் இடியாஸ்திரங்களினால் அடித்து இடித்து ஒடித்துப்பொடித்துப் பாண்டவ சேனையையும் சேனாபதியையும் படைவீரரையும்பறக்கவடிக்கும்போது இராம பிரானுக்கிளைய இலட்சுமணருக் கொப்பாகிய சத்தியவசன நித்தியவிரதபுத்தி மானான விராடராசன்தம்பி சதாநீகனெனவன் அவதிப்படுகின்ற தங்கள் சேனை களைக்கண்டு தன் தேரைச் செலுத்திக்கொண்டு படைவீரர்களும் பட்டவர் த்தனரும் படர்ந்துதொடர்ந்து நெருங்கும்படியாய் பெரியவில்லேந்தி காணி பிகிந்து, எட்டுதிசையும் பம்பரம்போலாடவும், அம்பர கூராழிபோற்சுழலவும் வீஷ்மருடைய பனைக்கொடிக்கம்பமுறிபட்டு விழும்படியாகக் கூர்மைதங்கிய அம்புகளும் பாணக்கொம்புகளும் விடுத்து அலக்கழித்து அழிந்த தன்சேனை களுக்குக் கடைக்கண்ணருளைநாட்டி களைத்துணையும் உயிர்த்துணையும்போ லிருந்து ஒருநொடியில்ஆற்றலுண்டாக்கிக்கொண்டு சத்துருக்களைக் காற்றினால் மூண்டெழுங் கனல்போன்றழித்து வீஷ்மருடைய முனைமுகத்தில்வந்துநின்று வெகுகோடி வீரர்களையும் யானைகளையும் வெதும்பச்செய்தனன். அச்சதா நீகனை வீஷ்மர்கண்டு, வெகுண்டோடிய தன்சேனைகளைத் தகைந்து அரவக் கணையை யெடுத்துத்தொடுத்து அதிர்த்தெதிர்ந்துவரும் சதாநீகன் தலையை அறுத்து அந்தரத்தி லோடச்செய்து அரவக்கொடியோன்முதலாகிய யாவரும் புகழ்ந்து மகிழும்படி தாம் வீராவேசங்கொண்டுநின்றனர்.

அப்போது பாண்டவ சேனைகளும் பாஞ்சாலப் படைகளும் விராடன் சேனைகளும் யாதவபோஜ குலங்களும் சதாநீகன் இறந்தனனென்று மெலிந்து வருந்தி வாடியோடினர். அப்படியிறந்த சதாநீகனுடைய தலையானது மேற் றிசையிற் றெறித்துவிழுந்த தன்மையைப்போற் சூரியன் மேற்குச் சமுத்திரத் தில் வீழ்ந்தனன், இவ்வாறு சேனைகளெல்லாம் அழிந்து செவ்வானம்போல் இரத்த வெள்ளமுஞ் சிவந்து இரணகளமும் இருண்டு போயிற்று. அப்போது அமர்க்களத்தைக்கண்டு பாண்டவக் கும்புகளும் விராடர்முதலிய பாஞ்சாலர்

களுஞ்சேர்ந்து சதாநீகன் இறந்ததைப்பார்த்துப்பலவாறுகச்சேர்த்து அந்தோ!
இதென்னகாரணம்! இந்த வீஷ்மாசாரியோ முதல்நாட்போரில் விராடனுடைய
மூத்தபிள்ளையாகிய சேனுபதி யென்னுஞ் சுவேதனுயிரை வாங்கிவிட்டான்,
இன்றுயுத்தத்தில் அந்த விராடனுடைய தம்பியாகிய சதாநீகனை அழித்து
விட்டான், இந்த மச்சகுலத்தவருக்கு இவனே நமன்போலுமிருந்து மாய்க்
கின்றான் ; இது ஜன்மாந்திரப்பழியோ அல்லது இதென்ன வழியோவென்று
ஏங்கி, எண்ணுபிரமிராச குமாரர்களையும் இன்று போக்கினுனென்று துய
ரோங்கிக் காலனைபொடுக்குங் கதிர்வேலைத்தாங்கிய காவலரெல்லாருங் கண்
கலங்கி விராடராசனுக்கு வேண்டிய தயிரியங்களைச் சொல்லித்தேற்றி நல்லது
இந்தமட்டும் போரை நிறுத்துங்களென்று பேரிமுழக்கிவைத்து புருவநெறிக்
குஞ்சிவந்த கோபக்கண்களையுடைய துஷ்டத்தூப்மன் முதலான புத்திரவர்க்
கத்தாரும் மித்திரவர்க்கமாகிய நிருபரும் போர்த்திற மேற்கொண்ட ஐவர்
களும் ஸ்ரீகண்ணபிரானும் சஞ்சலத்துடன் தங்களுடைய பாசறைபோய்ச்
சேர்ந்து விராடராசனுக்குத் திடஞ்சொல்லிக் கொண்டிருந்தனர்.

இப்பால் திங்கட்குடைகவிக்க செம்பொற் கவரிவீச விருது சின்னங்க
ளூத வீஷ்மாசாரியரும் துரியோதனனும் தம்பிமார்பலரும் சேனைகளும் வீரா
திவீர வேந்தர்களுந் திரண்டு வரும்படியாய்ப் பாசறைக்குப்போய்ப் பலவித
ஜயங்களையும்பேசி பாட்டனையும் புகழ்ந்து கொண்டிருந்தனர். இவ்விட
த்தில்நடந்த யுத்தங்களை யெல்லாம் திருதராட்டிர மகாராசனுக்குத் தெரிவித்து
மறுபடியும் போர்க்களத்திற்குவந்தான் சஞ்சயனெனவன். இந்த ஒன்பதாநாள்
யுத்தத்தில்மடிந்த இரத கஜ துரக பதாதிமுதலாகிய சேனைப்பெருக்கத்தைக்
கண்டு பூதப்பிரேத பிசாசகணங்களும் நாய் நரிகளும் கும்பலாகக் கூடிக்கொ
ண்டு கூடியவரையிலுந்தின்று களித்து சயம்பாடி நமதுவயிற்றை நிரப்பவோ
இந்த உயிர்களைப்படைத்தான் பிரமனென்றுகொஞ்சந்துயரமும் வெகுவாகிய
சந்தோஷமு முடைத்தாய்ப் புதிதாய்ச் செல்வமனுபவிக்கப் புகுந்த திருடரில்
முதற்றரமாகிய குருடனைப்போல் வேதாந்தம்பேசி வீணுகிய இடம்பங்கூறிக்
காணுதுகண்ட சுகவாழ்விதுவென்றிருந்தனர்.

இப்பால் போர்க்களத்திற் பொருந்தி துரியோதன மகாராசனினைவைப்
போலிருண்டஇருட்கூட்டத்தை நீட்டித்துநிற்கவொட்டாமல் தருமராசன்சத்
தியத்தைப்போன்ற சூரியபகவான் வித்துவான்கள் வாக்கினின்றும் பிரகாசிக்
கும் கற்பனை யலங்காரம்போற் கீழ்த்திசையி லுதயமாயினன், ஜனமே
ஜய மகாராசனேயென்று வைசம்பாயனர் சொல்லிக்கொண்டுவர, இச்சரித்திர
த்தை அரசன் மந்திரிகள்முதலாகிய யாவருங்கேட்டு அகமகிழ்ந்து அமுதகிர
ணக்குலத்துதித்த அரசனெனவன் தருமபத்தினியுட னெழுந்து சாஷ்டாங்க
நமஸ்காரஞ்செய்து மாளிகைக்குட் புகுந்திருந்து மறுநாட்காலமே யெழுந்து
ஸ்நான சந்தி பதப்முதலிய நித்தியக்கடனுகிய கிரியைகளெல்லா முடித்
துக்கொண்டு யாகமண்டபம்வந்துசேர்ந்து மகான்கள்முதலியவரையும் வைசம்
பாயனரையும் புகழ்ந்துபோற்றி ஆசீர்வசனங்கொண்டு சிந்துமுதலிற் கதித்து
வந்த இந்துமரபிலுதித்தெழுந்த தாஷ்டிகராகிய எங்கள்பாட்டனர் வீஷ்மாசாரி

யர் வசுபதமடையப்போகின்ற பத்தாநாளீதாகையால், சித்தசுத்தியுடன்தான தருமஞ்செய்யவேண்டுமென்றெண்ணி பெரியோர்களுக்கெல்லாம்தவிசளித்தல், கைகழுவநீர்தரல்,கால்கழுவநீர்தரல், முக்குடிநீர்தரல், ஸ்நானஞ்செய்வித்தல், வஸ்திரம்சாத்தல், முப்புரிநூல்தரல், சந்தனம்பூசல், புட்பம்அணிதல், அக்ஷதைசாத்தல், விளக்கேற்றல், தூபங்காட்டல், கற்பூரமேற்றல், நைவேத்தியம்வைத்தல், பாக்குவெற்றிலை அமைத்தல், மந்திரங்களால் மலரர்ச்சனை செய்தல், இவ்வகையாகிய பதினறுவித வுபசாரங்களும், அன்னதானம், வஸ்திரதானம், நவரத்னதானம், பொற்பாத்திரதானம், வெள்ளிப்பாத்திரதானம், செம்புப்பாத்திரதானம், அசதானம், கசதானம், இரததானம், பூதானம், கோதானம், கன்னிகாதானம், கிருகதானம், சயனதானம், சத்திரசாமரைதானம், பாதுகைதானம், இன்னலாகியகோடை மகாதானங்களும், ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத் தாருக்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப் பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம் சுண்ணம்,நோய்க்குமருந்து, வண்ணார், நாவிதர்,கண்ணாடி, காதோலை கண்மருந்து தலைக்கெண்ணெய் பெண்போகம் பிறர்துயர்காத்தல் தண்ணீர்ப்பந்தல் மடம் தடம் சோலை ஆவுரிஞ்சுதறி விலங்கிற்குணவு ஏறுவிடுத்தல்விலைகொடி துயர்க்காத்தல் தர்மக்கலியாணம்முதலிய முப்பத்திரண்டறங்களும்சற்பாத்திரங்களுக்குக் குறைவறச்செய்து புண்ணியதேக கண்ணியனுன ஜனமேஜய மகாராசன்மேல்நடந்த பத்தாநாள் யுத்தத்தைக்கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

இவ்வைந்தாம்வேதமென்னு மகாபாரதத்தைப் படிப்பவர்கள் கேட்பவர்கள்சுசி ஆசாரமாயிருந்து இப்படிப்பட்ட உபசாரங்களாலியன்ற மாத்திரஞ் செய்து ஸ்ரீகண்ணபிரானைத் துதித்துவந்தால் ஒன்றுக்குப் பத்துலாபமுண்டாம், நல்வினைசேரும் தீவினை தீருமென்று வியாசபகவா னுரைத்தவண்ணம் ஜனமேஜய மகாராசன்கேட்டுத் தன்வினைதீர்ந்தான். இது பிரமாணமாகக் கொள்ளவேண்டும். மேலும் படிக்கும்போது ஏடுதள்ளிப் பாட்டுத்தள்ளிக் கதைதள்ளிப்படிக்கவும், கேட்கவுங்கூடாது; அப்படிகேட்டால்பாவமும்பழியுமுண்டாமென்று வைசம்பாயனர் சொல்லிவந்தனர்.

ஒன்பதாம்போர்ச்சருக்கம்
முற்றிற்று.

---

## பத்தாம்போர்ச்சருக்கம்.

---

விருத்தம்.

வலியவன்றுதந்தைசென்றமைந்தனுக்குவந்தபேர்
நலிவெலாமகற்றுநாமநாலிரண்டெழுத்துடன்
பொலியுநாமமறைகள்சொன்னபொருள்விளக்குநாமமும்
கலியனெஞ்சுகண்மங்கையாதிகண்டுகொண்டநாமமே.

அரசர்க்கரசனே ! பத்தாநாட்காலமே பஞ்சசயனத்திற்பொருந்திய நித்திரைநீங்கியெழுந்த தருமராசன் காலைக்கடன்கழித்து யுத்தகோலந்தரித்து சக்கரதரனுகிய கோபாலனுடன் பேசவேண்டிய வசனங்களைப்பேசிப் போர்த்திறங்கொண்ட பூபாலர்சூழ யுத்தசன்னுத்தராய்ப் பொங்கி யெழுந்துவந்து தன்னைப்பணிந்த தம்பிமார்களுடன் புறப்பட்டு கடலோசையும் காரோசை கலங்கச்செய்யச் சேனைகளின் பேரோசையு தேவர்கள் செவிடுபடும்படியாய் முழங்கிய வாத்தியத்தொனியும் இமையவர்கண்கள் புதைத்துமெய்பதைக்கும் படியாய்ச் சேனைக்கும்புகளினுலெழுந்தபுழுதித்தும்புகளும் முன்னுடிச்சென்று பன்னககேதனனுகிய துரியோதனனைக்கண்டு இதென்னவேலை இனிக்காரியமில்லையென்று அவனுடைய காதுகளையு மடைத்துக் கண்களையு மறைத்ததே போற் கவிந்து பறக்கும்படியாய்த்திரண்டு புரண்டுவந்த சேனைப்படைகளெல்லாம் போர்க்களம்புகுந்துநேற்றுக்கட்டிய பத்மராகவனையூகமே இன்றைக்குங் கட்டி அந்த யூகத்தைச்சுற்றிலும் மதிற்சுவர்போற் படைகளை யமைத்து அண்டமுகடதிரும்படி பாண்டவச்சேனைகள் வெற்றிபெறநின்றனர், இப்படையின் சேனுபதியாகிய வீஷ்மர் உதயத்திலெழுந்து சூரியபகவானைக் கைதொழுதிருந்தபோது வலம்புரிமாலையணிந்த துரியோதனமகாராசனும் அவன் தம்பிமார்களும் சகுனி சல்லிய திரிகர்த்தர் சிந்துதேசாதிபர் முதலாகிய படைத்தலைவரும் வீஷ்மரைக்கண்டு வணங்கி நாள்தோறும் அழைத்துக்கொண்டு போகும் வழக்கப்படியே இன்றைக்கும்கொண்டு சேனுபதியின் பாசறைவாயிலிருபக்கத்திலும் மொய்த்துநின்றனர். இப்படியாக வந்துநின்ற அரவ்கேதனன் முதலாகிய அதிரதசமரத வரசர்களைக்கண்ட வீஷ்மர் அதிசீக்கிரத்தில் சல்லடந்தொடுத்து தட்டிகட்டிக் குச்சிவிட்டுக் கச்சைபிகிந்து பொற்கவசம் மற்கவசங்களிறுக்கி அண்டர்கோன் விதிக்கும் மகரகுண்டல மணிந்த முத்துவட்டம் இரத்தினவட்டம் வச்சிரவட்டம் உத்தரசஞ்சம் மோகனமாலை தும்பிப்பதக்கம் சரப்பளிமுதலிய ஆபரணங்களும் தோளணி வாகுவலயம் கடககங்கணம் விரற்சரடு காச்சரடு மோதிரங்கள்முதலிய ஆபரணங்களும் கொத்துச்சித்திர வேலையுடைய நவரத்தினகஜித கிரீடமும் வீரபட்டமும் பட்டைஞாணும் வீரகண்டாமணியும் அழகுக் கலங்காரஞ் செய்வது போல் அணிந்துகொண்டு கத்தி, கட்டாரி, சுரிகை, வாங்கு, வாள், கதை, சூலம், வேல், எழு, மழுமுதலிய தனுர்ப் பாணங்களுங்கொண்டு பூதிரேகையும் செந்தூரத் திலகமுமணிந்து சுகந்தபரிமள மலர்த்தார்புனைந்து அம்பை சூடிக்கொண்டு அம்பைவிரதநிறைவேறுங்காலமிதென்று சம்பராரியைப்போல் இம்பர்நடுங்க உம்பரொடுங்க் பகைகொண்டவம்பர் மடங்கசிங்கமாகிய மடங்கல்போற்சிறந்தெழுந்து பங்கசமுகம் பளபள வென்றிலங்க வெள்ளைக்குடை, வெண்சாமரை,யானைக்குடாரி,முரசு,சக்கரம்,கொடி,தோரணம், சங்குமுழங்க குடால்வகை வாத்தியக்குழுவோசை முதலாகியவெல்லாம் புடைசூழ்ந்துவர மந்திரிகள் சாமந்திரர் தந்திரியர் கட்டியர் பட்டுவான்கள் வந்திப்போர் புகழ்வோர் சகுனநூல்பூர்ப்போர் தூதுவர் பரதநாட்டியப்பெண்கள் இவர்கள் முதலிய அரசசின்னங்களுடன் புறப்பட்டு இன்றையுத்தங் தடையில்லாமல்

முடிக்கிறேனென்று வீரப்பிரதாப வார்த்தைகள் பேசிப்பனைக்கொடிநாட்டிய தேரிலேறிப்பலருஞ்சூழப்போர்முகத்திற்குவந்து நாணிபூட்டிய வில்லும் ஆணிப்பொற்கவசம்புனைந்த அம்பறாத்தூணியும் வெற்றியைத்தரும்வடிவாளும் சத்தியாற்சித்திபெற்ற கூர்வேலுமுடைய வீஷ்மரானவர்முரசவாத்திய முழக்கிவைத்து தமதுசேனைகளை கேற்று வகுத்த ஜயபத்திர யூகமாகவே இன்றமைத்து தூசிமுனையில்மாசிலா இதயமுள்ளவரேயென்னவந்துநின்றனர். அந்தக்கங்காபுத்திரனைக்கருணைவள்ளலாகிய ஸ்ரீகண்ணபிரான்கண்டு மனமகிழ்வுகொண்டு, மதித்துமுகமலர்ந்த காலத்தில் பற்குனன் பார்த்துப் பரந்தாமனைப்பணிந்து இந்தப்பத்தாநாட் போர்முனையில்தேவரீர் எழுந்தருளவேண்டுமென்று களித்து மகிழ்ந்தான்காரணமென்ன அடியேனுக்குத் தெரிவிக்கவேண்டும் ஸ்ரீநாதனே யென்று இறைஞ்சிக்கேட்க, இந்திரன்மதலையை நோக்கி வேறொரு திசயமில்லை விஜயனே இதோயுத்தமுனையில்வந்திருக்குங்கங்காபுத்ரனாகியதேவவிரதனுக்கு வானவர்வணங்கும் பழையவசுபதத்தைஇன்றைக்குக்கொடுக்க விருப்புற்றிருக்கின்றோம்; ஆகையால்நெடுநாளையமனிதன் இந்தக்கருமபூமியை விடவேண்டிய காலம்இன்றுநேரிட்டதல்லவாவென்றுவிந்தையாகநினைத்துசிந்தைகளித்தோம் வீரமோங்கிய விற்புயகரனே நாரிவாங்கிய நற்செயகரனே என்று நளினநாபியானுரைக்கக்கேட்டு காண்டீபவிஜயன் பலம்பொருந்திய தேரின்மேல்படபடாகாரத்துடன் ஜயம் ஜயமென்று பறந்து முன்னேசொல்லும்படியாகிய அனுமக்கொடிபெற்ற மேன்மையுற்றதீரன் சூல்கொண்டமேகம்போன்ற சுந்தரரூபமாரன் வனவாசஞ்செய்துவந்த மன்னனாகிய அர்ச்சுனராஜன் இந்திரவிமானம் போன்றஇரதத்திலேறிக் கொண்டுதாசரதிஎன்னும் ஸ்ரீராமபிரானுக்கு ஒப்பாகயிருந்தான். அப்படியிருந்த அர்ச்சுனனை ஸ்ரீராமபிரானுக்கு ஒப்பாகஎப்படிச் சொல்லலா மென்றால், ஸ்ரீராமபிரான் கடலைக்கடந்து அரக்கரையழித்து அமரரைக்காத்தார் இந்த அருச்சுனனும் கடலைக்கடந்து தோயமாபுரக்காலகேய நிவாதகவசராகிய அரக்கரைக் கொன்று அமரரைக்காத்தமையாலும் ஸ்ரீராமபிரானுக்கு சீதையென்னுங் கொடிநிமித்தமாக அனுமார்முன்னின்றபடி இந்த அருச்சுனன்றேரிலும் காந்தியையுடைய கொடி நிமித்தமாக அநுமான் முன்னின்றமையாலும் ஸ்ரீராமபிரான் மேகம்போன்ற திருமேனியுடையவராகையாலும், அர்ச்சுனனும் மேகம்போன்ற திருவுருவங் கொண்டமையாலும், ஸ்ரீராமபிரான் சிறியதாயின் வாக்கியநிமித்தமாய்ப் பட்டத்தைவிடுத்து வனம் போய் மீண்டமையாலும் இந்த விஜயனும் பெரியதாய்ப் பிள்ளைநிமித்தமாய் பட்டத்தைவிட்டு வனவாசம்போய் வந்தமையாலும், ஸ்ரீராமஜயமேஜய மென்பதினாலும் விசயன்விஜயமே விஜயமென்பதினாலும், ஸ்ரீராமபிரான்வில்லைவளைத்து பெண்கொண்டமையாலும் இந்த அருச்சுனனும் வில்லைவளைத்துப் பெண் கொண்டமையாலும், ஸ்ரீராமர் சிறுபோதில் விஸ்வாமித்திருடைய சபதநிறைவேற்றி யாகத்தை முடித்தமையாலும், அருச்சுனராசனும் சிறுபோதில் துரோணருடைய சபதத்தை முடித்தமையாலும், அவருஞ் செங்கதிர்குலமாதலினாலும், இவரும் வெண்கதிர்க் குலமாதலினாலும், அவருக்கு விஜய கோதண்ட மிருப்பதினாலும் இவருக்கு விஜயகாண்டீப மிருப்பதினாலும்,

ஸ்ரீராமபிரானைப்போல் நின்றனன் அருச்சுனராச னென்றுரைத்து அப்பால் நடந்த கதையுஞ் சொல்லத்தொடங்கினர் வைசம்பாயனர்.

இப்பால், அருச்சுனன் மனங்களித்து அந்தக்கலியாணனுடைய அருண் முகநோக்கி என்னையனே யான்பிடித்திருக்கு முறியாதவில்லும் அழியாதஇரத மும் மாளாத அம்பறாத்தூணியும் அசையாத அனுமத்துவஜமும் சளையாத சுவேதவாம்புரவியும் இவைகளெல்லாம் அக்கினிதேவன் கொடுக்கப்பெற்றிருக் கின்றேன்; இதுவுமல்லாமல் அப்படியாகப்பெற்ற இந்த அழியாத தேரைச்செ லுத்துவதற்கு என்னையாளவந்த தேவரீரைச் சாரதியாகப் பெற்றேன் ஆகை யால், இப்பூமியிற் பொருந்திய அரசர்கள் யாவரானபோதிலும், தேவரான போதிலும், இராக்கதரானாலும், இன்னும் மற்றெவர்களானாலும் என்னுட னெதிர்ப்பவர்களை இன்றைப்போரில் இறக்கச் செய்யாமற் பிழைக்கசெய்யப் போகிறதில்லை மலையைக் குடையாகப்பிடித்த மாதவனே பாரும்! இன்றை க்கு என்னுடைய பராக்கிரமத்தைப் பரந்தாமனாகிய சுவாமியே களங்கரகித மாகியமனமும் மிகுந்த உற்சாகமும் எனக்குமேலிட் டிருக்கின்றமையால் இக் காலத்தில் என்தந்தையானாலும் என்சகோதரரானாலும் பிள்ளைகளானாலும் பாட்டனானாலும் குருவானாலும் இன்னமெவர்க ளானாலும் இன்றைப்போரிற் கொல்லேனென்று ஒருக்காலுஞ் சொல்லேன் தேவரீர் திருவாய் மலர்ந்தரு ளினால் கண்டதுண்ட மிரண்டாகக் கொன்று போடுவேன்; முதன்மை யாகிய தத்துவஞான வேதாந்தப்பொருளை என்சிந்தைநிரம்பச் செவிவழியுரு த்து ஜனனமரண முதலாகிய தீவினைக் கட்டறுத்த செங்கண்மாலாகிய எங் கள்பங்குத் தெய்வமாயமைந்தமர்ந்த தேசிகனேயென்று வாசவன் மகன்வண ங்கிச் சொல்லக்கேட்டு மாயோன் மனமுவந்து பொன்மலைபோன்ற தேரை நடத்திப் பேர்நாகநாதத்தும் அருச்சுனனென்று தேவவிரதனின்ற யுத்தபூமி யில் தேரைக்கொண்டுபோய் நிறுத்தினர். அப்போது அருச்சுனன் பின்னால் அவ்விடத்தி னிறைந்துவந்த வெற்றியையுடைய கொற்றவரெல்லாம் சுற்றிலுஞ் செறிந்து ஒன்றுபட்டு கைகலந்து எதிரிசேனைகளுந் தாங்களுஞ் சேர்ந்துபோர் புரிந்தனர். அவ்வேளையில் அவர்களை யெல்லாம் அம்பரத்திலாட்டும் பம் பரம்போலாட்டி அவ்விடத்தில் நிலைக்க வொட்டாமலோட்டி தீரபோசரிற் சிறந்த வீரகேசரிபோலிருந்து வீஷ்மரை வளைத்துக்கொண்டு பாதாதிகேசம் வரையிலும் பாணங்களை நிரைத்து பலபலதிசைகளினிற்குஞ் சேனைகள், வில விலவென் றசைவற்று விழும்படி பாராளப் போராடியபோது பார்த்தன் முத லிய பலவீரர்தொடுத்த பாணங்களெல்லாம் பரம்படித்தசேற்றில் விதைந்த விதைபோலும் பள்ளத்தாக்கில் நட்டநாற்றினடவுபோதிலும் வீஷ்மருடைய மெய்முழுதும், துளைக்கும்போதில் நாவுலர்ந்து நாபிவறண்டு கண்புதைந்து வெந்து கவலைப்படாத உள்ளநொந்து கரங்களிளைக்க மனம்புழுங்கி உளைக்க மிகுந்த பனியினால் முகங்கருகிவருந்தி நிலமழிந்து குவிந்துவாடிய தாமரைக் கமலம்போல் மதிமுகம்வாடிநின்றனர். அவ்வேளையில் ஆயுதமுனைகள்கருகிப் புகையவும் யானை குதிரைகள் கண்ணீர்சொரியவும் அணிந்தமாலைகள் சருகா கவும் அலகைமுதலிய காக்கைகள் கழுக்கள் அடித்துமோதி தேரின்மேல்

விழவுமெழவும் அந்தரத்தினின்று உதிரமாரிதூறவும் குறைக்கொள்ளிக் கட்டையுதிர்ந்து குவியவும் கூக்குரலாக நாய் நரி கூவவும் தீப்பட்டெரிந்து சேனைகள் வேகவும் சித்தம் பிரமிக்கவும் யுத்தகிர்மிக்கவும் இப்படிப் பலவகை துர்ச்சகுனங்களைக்கண்டு சகுனநூல் வல்லோர் தடுக்க அவர்களை வீஷ்மர் தடுத்து இந்தச் சகுனங்களெல்லாம் எனக்கு நல்லகாலமென்று மனந்தெளிந்து தன் பூர்வோத்திரத்தைத் தானெண்ணிப்பார்த்து தன்னைநம்பிய மித்திரர்களுக்கு நகருமுதவிசெய்து நன்மையோன் தன்கரத்திற்பிடித்த வில்லிற்கணைகளைதொடுத்து அவர்கள்விடுத்த அஸ்திரங்களை யெல்லாந்தடுத்து அவர்களையுமுகமாற வடித்துவருங் காலையில்; துருபதேயர், மச்சநாடர், கலிங்கதேசர், சோனகர், சிஞ்சயர், கராடர், கௌசிகர், சாலுவர், சீனர்முதலியதேசபாஷை மன்னவர்கள் வந்தெதிர்க்க அவர்களையெல்லாங் கலகலக்கச்செய்து ஒருவர் போல் அனைவரும் உடல்வருந்தி இறக்கும் படியாகவும் முதுகிட்டோடும்படியாகவும் வின்னாணியிறுக்கி யுறுக்கினர். அவர் முன்னோடியடித்த அடியினால் சுத்தவீரர்களின் தலைதுணிந்து பின்னோடிவிழ அவர்களுடலானது முன்னோடி நடந்து கொடும்போர் விளைக்குங் குறைத்தலைக்கவந்தங்களுடன் கூத்தாடவும் இன்னஞ் சிலசூரர்கள் இரண்டுபாதங்களும் அறுபட்டுப்போகப் பூமியில் குந்திக்கொண்டு பூமாலைசூடிய வில்லைவணக்கிச் சரங்களைப் பொழியுஞ் சப்பாணிகளாய்த் தவழ்ந்தூரவும்,கொடியறுபட்டுக் குடைமுறிபட்டுக்கோலொடிபட்டுக் கால் தறிபட்டு வில்லொடிந்து பல்லொடிந்து சரந்தொண்ட காம்பிண்டு கட்கங்கண புயங்குறிந்து கலகலென்றெழும் அயமறந்து பயம்பிறந்து சோரிவெள்ளத்திற் சுழலவும் விஷக்காலத்தி லடிக்குஞ் சுழற்காற்றி லகப்பட்டுழலும் புழுதிபோல் சரந்தொடுக்க வந்தவர் சரந்தொடுத்து வந்தவர் போர்கொடுக்கவந்தவர் போர்கொடுத்து வந்தவர் இவர்களெல்லாருமடங்கிப் பறக்கவும் இடிமுழக்கங்கேட்டுப் படியில்விழுந்திறக்கும் பாம்புபோல் தலையுடைந்திறக்கவும் ஒருவன் ஓடுவதைக்கண்டு என் ஓடுகிறீரென்று கேட்டுக்கொண்டு இருவரோடவும் இவர்களை இன்னஞ்சிலர் வினவிக்கொண்டு முன்னும் பின்னுமோடும் அவர்களுடனோடவும் இவ்வேடிக்கையைப்பார்த்து நகைத்துக் கொண்டோடிய பலபேர்களைச் சிலர் தடுத்தோடவும் தடுத்தவர்களைப் பிடிக்கும்படியாய்ச் சிலர் அடுத்தோடவும் ஆவிகுன்றியவரைக் கூவிக்கொண்டோடவும் இந்தப்படி யுத்தமுனையில் நிற்கப் பயந்தவர்களாய் யாவரும் ஓடியொழியவும் வீரப்பகழிவிடுத்து அடுத்து அடித்து முடித்துவந்தார், இந்த வீஷ்மரானவர் வில்லைவளைத்து இன்றுபுரிந்த போராண்மையானது விசயனிடத்தி லுண்டென்று என்றைக்காகிலு நினைக்கத் தக்கதுண்டோ வெண்கதிர் குலத்துதித்த வேந்தனே ; மேலும் வீஷ்மர் மிக்கவாற்றல் கொண்டு விண்ணுமண்ணுங் கண்ணுங் கொன்றுந் தெரியாதென்று சொல்லும்படியா யுத்தம் பண்ணி வரும்போது அருச்சுனன்பேச்சு வைச்சது வைச்சதுபோல் அச்சுப்பதித்தாப் போலாச்சுது, அந்தவேளையில் துரியோதனன் சந்தோஷமடைந்து ஐயோ என்பாட்டனாகிய ஐயூவானவர் இந்தப்படி இரண்டுநாழிகை யுத்தஞ்செய்தால் நானீடேறிப் போவேனென்று எண்ணி மனமுங்களித்து இரண்டு மக

மேருவெழுந்ததையொத்த தடம்புயவீர தாஷ்டீகமுள்ள வீஷ்மாசாரியர் நிலை நின்று போர்செய்யு முனைமுகத்திற்கு சோழராசனுக்குற்ற மற்ற கிருபாசாரியும், துரோணாசாரியும், அசுவத்தாமனும், ஜயித்திரனும், திரிகர்த்தனும், துசுவாசன் முதலாகிய தம்பிமார்களும் சகுனியும் பகதத்தனும் சல்லியனும் துரியோதனராசனும் மேகசாலம் பொழியுமிடத்திற்கு குளிர்காயுந்தன்மை என்றும் இடியும் கூடக்கலந்து வீசியடிப்பதுபோல் வந்துகூடி மனோதிடங்கொண்டாடி இரதகஜதுரக பதாதியருஞ்சேர்ந்து தனஞ்செயனென்னுஞ் சிங்கத்தை வளைத்துக்கொண்டு வின்றுணியேற்றிச் சரமாரிதூற்றி வெகுண்டு போர்செய்தனர். அச்சமயத்தில் சம்வர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணமென் றுரைக்குஞ் சப்த மேகமும், சமுத்திரத்தையுறிஞ் சிக்கொண்டெழுந்த தன்மைபோன்ற நிறங்கொண்ட விசயன் தனக்கெதிரில்வந்து போர்புரிந்த வீராதிவீரர் யாவர்களையுங் கண்ணோட்டமிட்டு தன்கரத்தில் தரித்திருக்கும் ஒப்பற்ற கார்முகம்வளைத்து ஓரினமாகிய சரங்களை ஒவ்வொரு தடவைக்கு நூறுநூறு சரங்களாக வரிசையாய் மாலிகாயோகம் பிடிக்குந் தன்மைபோல்விடுத்து அவர்கள்தொடுத்த கொடும்பகழிகள் யாவையும் தடிபடிபோல் நொடியிற் பொடியாக்கிப் படியிற்செய்த முடியினையுடையோர் முடியும்படியாய் தேருடனுதயமாகிய தினகரனைப்போற்றிரிந்து சேனைகள் முதலியயாவரையும் அடைகிடக்கெழுந்து பொரிந்து சீருங்கருநாகம்போன்ற கணைகளைத்தொடுத்துப் பிளந்துவரும்போது அருச்சுனனுடன் போர்புரிந்து யுத்தபிச்சை கொண்டுநின்ற அரசர்களாகிய சமுத்திரஞ்சுவறிச் சேனையென்னுஞ் சலசரங்களெல்லாந் தீயும்படியாயும் ஆனைமுதலிய மலைகள் சாயும்படியாயும் இலைந்துவருஞ்சூறைகாற்றைப்போலும் அந்தக்காற்றின் சகாயனாகி யெரிந்துவருங் காலாக்கினியைப்போலும் கடவுண்மாருதி மைந்தனாகிய வீமசேனன் கதாயுதத்தைக் கைக்கொண்டு குதித்து தானொருவனாகப் புகுந்துமுடிகளுடன் சிரங்களும் கொடிகளுடன் உரங்களும் தீரமணிகளுடன் றோளும், வீரமணிகளுடன்றாளும் கவசங்களுடன் மெய்யுங்கங்கண துவசங்களுடன் கையும் சிதைபட்டழிந் துடைந்துவாடவும் முதுகிட்டொழிந்தகன்றோடவும் முடிக்கியடித்து மடித்து ஒடித்து முடித்துநடித்துக் கூத்தாடிதடுக்கி விழுந்தழிய மாட்டினன், மண்டையொடித்து உதிரம்வழியச் சிலரையோட்டினன். இதன்றியும், அதிரதர் மகாரதர் சமரதர் முதலானோர் ஏறிவரும் ஆணி மணிக்கொடிமுடியுடையஇரதங்களை ஆகாயத்தி லெடுத்தெறிந்தாடியும்யானைப் பாகர் முதலாகிய வீரருடன் யானைகளின் இரண்டு கொம்பையும் துண்டத்தையும் பிடித்துக்கொண்டு மண்டலாதிபதியாய் தும்பியைத் தும்பிசுற்றி அம்பரத்தில் வீசியோடி மல்லகதி மயூரகதி வியாக்கிரகதி வானரகதி விடபகதியாகிய இவ்வைந்துகதியும் பிற்பட்டுப்போகும்படியாக முந்திப்போகும் குதிரைகளைக் குதிரைவீரருடனெடுத்து வானுலகவீதி வலம்வரும்படியாய்ச் சுழற்றி விடுத்துவஞ்சனமனத்தில் வெஞ்சினங்கொண்டு அஞ்சாமல் மிஞ்சிவரும்படியாகிய வாளரசரேறிய இரதகஜதுரகங்கள் சாயும்படியாகவுநிலத்தில் விழுந்து மாயும்படியாகவும் இடக்காலாற் சிதைத்தும் வலக்காலா லுதைத்தும் வலக்

கரத்தாற் குத்தியும் இடக்கரத்தா லெற்றியும் வாட்டியப்போது, முதற்பட்ட மீனுறுமென்னும் பழமொழிக்கிணங்க மதப்பட்டவந்த படைவீரரெல்லாம் வீமசேனனுக் கெதிர் நிற்கமாட்டாமல் பாம்பைப்போ லேங்கிப் பின்வாங்கி முதுகிட்டோடு வதைக்கண்ட வணங்காமுடியோன் விசனமடைந்து நொந்து மிகுந்த கோபங்கொண்டு விற்றிறமையில் அருச்சுனனுக் கிணையாகிய பலவான்களென்னும் யானைவீரர்கள் குதிரைத்தீரர்கள் ஐந்நூறாயிரம் பேரை வீமசேனன்மேல் முடுகிவிடுக்க அவர்கள் யாவரும் ஏழுமேகமும் ஊழிமுகில் பொழிவதைப்போல் வாளிமழை பாணமழை சரமழைகளைப் பொழிந்து ஆக்ரமங்கொண்ட பராக்கிரமசாலிகள் தடுத்துப் போர்கொடுத்தனர். அந்த வேளையில் விஜய னெதிர்சென்றுநின்று விஜயகாண்டீபங்கொண்டு அவரவர்கள் தொடுத்துவிடுத்த கும்புகளாகிய அம்புகளுக்கு நேராக அந்த அம்புகளைத் தொடுத்தழித்தவர்கள் கைப்பிடித்த விற்களுமற்று காணிகளறுக்க வில்வாள் கதைகொண்ட கைத்தலமற்று ஏறிய குதிரைக்கல்லணையற்று கடிவாளமற்று கவசங்களற்று வீரகண்டைகளற்று கதியற்றிறக்கக்கலங்கிப்பறக்கக் கூர்ங்கணைகளேவினன் கிரீடியானவன். இவ்விடத்திலிப்படியிருக்க, துரியோதனன் தம்பிமார்கள், துச்சாதனன் முதலியவரும் வீஷ்மாசாரியா ரிடத்தில்நின்ற வீரர்தவிர மற்றப்பூபாலரும் கிருதவன்மன் கிருதவீரியன்முதலிய கோபாலரும்தேரேறிச் சென்று தருமராசன்முதலிய ஐவரையும் இன்றேவென்றுவிடுதுமென்றுவில்லை வளைத்துநின்று அருச்சுனனையும் வீமசேனனையும் வளைத்து பற்பல வார்த்தைகளைகூறி போர்புரியும்போது அருச்சுனனுடைய பாணங்களினாலும் வீமன் கதையினாலும் தலைவிரிகோலமாய்த்தளர்ந்து செத்தவர்போக மற்றவர்முதுகு கொடுத்தோடினர். அப்படி யோடத்தக்க சேனைகளை வீஷ்மர்கண்டு, உள்ளம் வெதும்பிக் கண்கள்சுருங்கி நெருப்பெழவிழித்து நெடியவில்வளைத்து ஆலகாலம்போற் சீறிவருங்காலத்தில் ஆகாயத்தில் வேடிக்கை பார்த்திருந்த தேவர்களில் அனலன், அணிலன், ஆபச்சைவன், சோதன், மரன், துருவன், பிரத்தியூசனென்னும் ஏழுவசுக்களும், எட்டாவது பிரபாசன வசுவாகிய வீஷ்மாசாரியரைக்கண்டு, வருந்தி மனஸ்தாபங்கொண்டு எங்களுக்குளொருவனுகி வசுபதத்திலிருந்த நீர் பூலோகத்தில்வந்து எத்தனைநாளாய் விட்டது ஐயா, இனி நீர் பதத்திற்கு வந்துசேரும் பாக்கியமே, உமது பூருஷோத்திரத்தை உற்றுநோக்கிப் பாருமென்று சொல்லவே, அந்தத் தேவரகசியத்தை வீஷ்மர்கேட்டு கண்களிகூர்ந்து முகமலர்ந்து நமக்கு இதுதான் கடைக்காலமென்றுணர்ந்து வேறுவகைகளைக் சருதாமல், சவலாமல் கரையாமல், சலங்காமல், கார்முகம் வணங்கிப் போர்முகங்குறுகி வெற்றிமாலைபூண்ட வித்தகரையும் சுற்றிலுஞ் சூழ்ந்த மற்றவரையும், உத்தமப் பாண்டவராகிய கொற்றவரையும் தகைத்துக்கொண்டு கோலாகலமாக்கி பலபல பாணங்களைப்போக்கி கூறுபடுத்தி மாமிசமழியத் தூறுபடுந் துவாரங்களாக ஊறுபடுத்தி உதிரவெள்ளம் ஆறுபடுத்தி தருமன்முதலாகிய இரதத்தலைவர் யாவருந் தளர்ந்துவருந்தச்செய்து ஒருவரையும்விடாமற் றன்னுடைய பாணக்குறியானது எல்லாருடலினு மிருக்கக் காட்டி கொடுமைமாட்டி எவர்களையும் விட்டியபோது எத்தனைகோடி முடித்

தலைகள், எத்தனைகோடி தோள்மலைகள், எத்தனைகோடி கரக்கமலம், எத்தனைகோடி யுடற்சுமைகள், எத்தனைகோடி அவயவங்கள், எத்தனைகோடி குழிகிணங்கள், எத்தனைகோடிக் குடல்வகைகள், எத்தனைகுவியல் மாமிசங்கள், எத்தனைவகைகள் நரம்பினங்கள், எத்தனைகிரிக ளெலும்புவகை எத்தனைகோடி அடித்தொடைகள், எத்தனைகோடி மணிக்கால்கள், இந்தப்பிரகாரம் இரணகளத்தில் இன்றுவிழுந்தவைகளை எத்தனைகோடி யென்றியம்புவேன். இன்னமும் கிழிந்துபிளந்த மார்புகளும் வெருண்டுதெளர்ந்த மனங்களும் கனைபுரண்டோடும் இரத்தவெள்ளமு மெரிந்துமுறிந்த எலும்புகளும் அழிந்துசிதைந்த கொழுத்த தசையும் நிமிர்ந்துவலிக்கும் நரம்புகளும் சரிந்துகிழிந்த பெருங்கடலும் துண்டம் இரண்டாகிய சிரங்களும் கனைபுரண்டு மெரியும் புருவங்களும் தழல்விட்டெரியுங் கண்களையுடைய முகங்களும் இடிந்து ஒடிந்த தேர்ப்படைகளும் இறந்துமறந்த வீரப்படைகளும் எல்லாம் அழிந்தபோது சோமகர் மச்சர் மராடர் அருபதேயாள் சோழர் சேரர் பங்காளர் குலிங்கர் சிஞ்சயர் பப்பரர் மகதர் குருதர் மகுடவர்த்தனர் பட்டவர்த்தனர் மண்டலீகர் முதலாகிய பாண்டவச் சேனைகளெல்லாம் வீஷ்மரிடத்தில் எதிர்த்துப் போர்புரிந்து, இறந்தவரன்றி இருந்தவர்களில் வாயுவுஞ் சூரியகிரணமும் மருவாத ஊருமில்லை இவருடைய கணைக்குட்கலங்கி மயங்காதவருமில்லை, இந்தப்படி வீஷ்மர் பாண்டவர் படையுட்புகுந்து, கொல்லுந்தன்மையைப் பரந்தாமன் கண்டு இரக்கமுற்றுக் கோபித்து வெண்ணெயுண்ட செம்பவள வாய்மலர்ந்து அருச்சுனனைநோக்கி என்மைத்துனா! இன்னும் சற்றுநேரம் நாம் சும்மாவிருப்போமானால், குருக்ஷேத்திரத்திற்கூடிய நமது படைகளெல்லா முடிந்துபோம், நாமும் குறைபடும்படி யிருக்கும், ஆகையால் நாமிரண்டு எதிர்சென்று இந்தக்காங்கேயனை இன்றுமுடித்துப் போடுவோம், அப்படிமுடிப்பதற்கு இதுவே நல்லகாலமா யிருக்கின்றது வாரும் அருச்சுனராசனே யென்று வாசந்தங்கிய துளபமணிந்த முகுந்தனானவன் சுவேதவாம்புரவி பூட்டிய சயந்தனத்தைத் தடதடவென்று செலுத்தி வீஷ்மருக்கெதிராகக் கொண்டுபோகவே பாரிய காண்டீபம்வளைத்து குணத்தொனிசெய்து, அழகாகிய பாணங்களை யேற்படுத்தித் தாரந்தாரமாக முடுக்கிவிட்டான், தனஞ்சயனானவன். அந்தக்கணைகளை யெல்லாந் தவிடுபொடியாக்கி அவனுடைய சாரதிதேகத்தையுஞ் சல்லடைக் கண்ணாக்கித் தனிச்சிங்கம்போன்று திரியும் வீஷ்மனைநோக்கி அருச்சுனன் சஞ்சலப்பட அப்போது ஸ்ரீபகவான் அருச்சுனா! தயிலமற்றதீபம் தயிலத்திற் றோய்ந்திருந்த வர்த்தியெரிந்து ஒளிபெருந்தணைவதுபோல முடிவுகாலங்கொண்ட உங்கள் பாட்டனாகிய முதியோன் பதை பதைக்கின்றான் பாரென்று மண்டலம் விண்டலமொன்றுபடச் சுழலவும், தொண்டர்கண் முதலிய அண்டர்களுழலவும், புண்டரீகன்முதலாகிய கண்டவரோங்கவும், கொண்டலாகிய எழுமேகமும் இடித்து முழங்கியிளைந்து பின்வாங்கவும் வேலையேழும் அலையெறிந்து மறிந்து விழுந்து எழுந்தலையவும், சர்வசம்ஹாரசலப்ரளய காலஞ் சார்ந்ததென்று தானவர்முதலிய வானவருலையவும், திக்கெட்டும் விக்கிட்டுச் செவிடுபட்டுப் போகவும், பேரண்டம் குலுங்கவும், பிரமாண்டங்

கலுங்கவும், சக்கரவாளத்தகடு தத்தளிக்கவும், தனபதியுலகஞ் சாயவும், சந்
திரசூரியர் கதிமேயாயவும், தானவரடங்கமாயவும், சேடன்முடி சடசடவென்று
திப்பிரமை கொள்ளவும், திருவிக்கிரமனாகிய ஸ்ரீஅரிபரந்தாமன் பரப்பிரமன்
பக்தவற்சலன் பக்தபராதீனன் பங்கயபாதன் பரமநாதன் ஜகதீசன் ஜகத்ரக்ஷ
கன் ஜகநாதன் ஜநார்த்தனன் ஸ்ரீயப்பதி ஸ்ரீதரன் ஸ்ரீநிவாசன் ஸ்ரீநாதன் மாத
வன் வாசுதேவன் கேசவன் திருத்துழாயணிந்த ஸ்ரீகண்ணபிரான் வீஷ்ம
ருடைய போரைக்கருதி, இவனை இன்றுக்கொன்று மேலுலகத்திற் கனுப்பவே
ண்டுமென்றுகொண்ட கருத்தின்படி தமது திருக்கரத்திற் பாஞ்சசன்னியத்
தையெடுத்துப் பவளமாகிய திருவாயில்வைத்து திம் திம் திம்கிர்தக தும் தும்
தும்கிர்தக, பொம்பொம்கிர்தக பொம்மெனமுழக்கினர். அந்தவேளையில்திடதீர
மேருப் புயகாத்திராதாஷ்டீக வீஷ்மரும் இதரமாகிய சேனைவீரர்களுஞ் சங்கத்
தொனிகேட்டுத் தயங்கி அங்கத்தைவிட்டு ஆத்மா வெளிபடும்படியாய் மயங்கி
அல்லலுற்றனர். அந்தவேளையில் இரண்டணிப் படையிலுமிருந்த அதிரத
அரசர்களுடைய சங்கநாதமும் சிங்கநாதமும் தோல்கருவி துளைக்கருவி நரம்
புக்கருவி மிடற்றுக்கருவி கஞ்சக்கருவி முதலிய வாத்தியங்களெல்லா முழங்
கிக்குமுறவும், வீராவேசங்கொண்ட அருச்சுனனானவன் தனது தேவதத்தைப்
பூரித்து நால்வகைச் சேனையுங்கலந்துவருஞ் சேனாமண்டலங்களுடன் சிகண்
டியை வீஷ்மருடைய கண்களுக்கெதிராய் முன்னணிமுனையிற் கூட்டிக்கொ
ண்டுபோய்ப் புராதனமாகிய உலகம் இன்றுபொன்றுமென்று பேசிக்கொள்
ளும்படியாய்ப் போர்புரியச் செய்தனன். ஆண்டொழின் மைந்தனாகிய அருச்
சுனன். அப்போது, சிகண்டியானவன் கூசாமனின்று கொடுமரமாகிய வில்லை
வளைத்துக் கொடுமைகொண்ட கொலைப்பகழிகளினாற் கோமானாகிய வீஷ்ம
ரை யடித்தனன், இப்படி அநேக அஸ்திரங்களினால் அடித்துச் சிகண்டி நிற்கு
நிலையை வீஷ்மர்கண்டு குளிர்ந்தநகைசெய்து அன்று அம்பையானவளுடைய
பகைஇன்று முடியவந்ததென்று தன்கரத்திலிருந்த தனுர்ப்பாணங்களைத் தே
ரின்மேல்வைத்துவிட்டு நிஷ்டாக நிஷ்டனாப்போல்வெறுங்கையோடிருந்தனர்.
அப்போதும் சிகண்டிகை போயாமல் அஸ்திரங்களினால் அங்கந்துளைக்க அடி
த்தபோது பேரப்பிள்ளையாகிய துச்சாதனன்கண்டு மனம்பொறுமற் பெருங்
கோபங்கொண்டுபோய்ப்பற்பலவகையாகியபாணங்களைவிடுத்து அடாபாவியென்
றுபலமுறைக்கடித்து வில்லைமுறித்து அவன்மெய்யையுந் துளைத்துஅவனேறிவந்த
தேர்குதிரை சாரதிமுதலிய கொடிகுடைகளையும் அழித்தனன். அப்போது
அந்தச் சிகண்டியானவன் சாகப்பயந்து யுத்தமுகம்விடுத்து தான்பிறந்துவந்த
வேலை முடியாதிருப்பதினால் வந்தவழியின்மேற் சிந்தை கொண்டோடினன்.
அந்தவேளையில் சந்தனுகுமாரனாகிய வீஷ்மாசாரியர் சாக்கிரதையாய் மறுபடி
யும் விலலைப்பிடித்து நாணியிறுக்கி மின்னலாஸ்திரமுதலிய விசிகங்களைத்தொ
டுத்து பாண்டவர்கட்டிய யூகத்தைப்பறக்க அடித்து பாஞ்சாலக் கும்புகளைப்
படுபாழாக்கி விபற்சேனனாம், விராடனுடைய சேனைமுற்றுமையும் அஸ்திரங்களா
த்து மெய், வாய், கையாட வொட்டாமற்செய்து தேர்ப்பாகனாகிய செங்க
ணெடுமாலுடைய கருங்கடலும் கறுத்தமேகமும் காயாம்பூவும் கருமணியும்

கறுத்தமையும் கருவிளமலரும் கலந்துபரந்து சிறந்திருக்கு மேனியிற் காலாக்கினி உருமுகக் கணைகளைப்பொழிந்து கால் முதற்சிரம்வரையிலுந் துளைத்து செம்பவளமும் செம்முருக்கெனமலரும் செங்காவியும் செங்கிடையும் செவ்வல்லியும் நிகராம்படி சிவக்கச்செய்தனன் துரியோதனனுடைய சேனாபதியாகிய தேவவிரதன்.

அந்தச்சமயத்தில் சேனைவீரர்கள் திடுக்கிட்டு முடுக்குண்டோட தேவேந்திரகுமாரனும் திருமாலும் சற்றுநேரஞ் சித்தப்பிரமை கொண்டிருந்துஉடனே மனந்தேறித் திடங்கொண்டு முன்வந்து அடிபட்டோடிய சிகண்டியைபின்னும் அழைத்துக்கொண்டு வந்து அவனுக்கநேகம் உறுதிகளையும் உபாயங்களையுஞ் சொல்லி அச்சிகண்டிக்கு மேற்றுணையாகத் தாங்களெல்லோரும் அடுத்து சமீபத்திலிருந்து பூசல்நடத்தியபோது சிகண்டியானவன் அவ்விடத்தினிற்கமாட்டாமற்றிரும்பிப்போட நினைவுகொண்டிருக்குந் தினத்தை திருமால்கண்டு நீயொன்றுக்கும் பயப்படாதை அஞ்சாதை ஓடாதை வாடாதை நாமிருக்கிறோமென்று உண்மைவாக்கியமாகிய உறுதிகூறிக் கூர்மையாகிய கொழுக்கணைகளைக் கொண்டல்போற் பொழியச்செய்து அருச்சுனராசன் அவனுக் கண்டையிலிருந்துகொண்டு அக்கினிதேவனளித்த காண்டீபத்தை வளைத்து சிகண்டிதொடுக்கும் அம்புகளுடன்கலந்து இதுவோ அதுவோவென் றுன்னும்படியாகப்பேதமில்லாமற் கலந்து வேதமந்திரம்விளம்பி செஞ்சாமாருதம்போற் செல்லும்படியாகிய தீகமுப்பாணங்களைத் தெறுத்தவுடனே காண்டீபத்தைவிட்டுப் புறப்பட்ட அந்தப்பாணங்க ளெல்லாம் பஞ்சபாணத்திற்குத் தப்பிப் பிழைத்துக் கொண்டிருந்த விவேகமுள்ள வீஷ்மருடைய பொன்மலைபோன்ற அருமைத் திருமேனியெல்லாம் சிறுமைப் படும்படியாய்த் தைத்துத் துளைக்கும்போது மேலும் மேலும் சில அர்த்தசந்திர பாணங்களை விடுத்தபோது கரகரவென்று சிரத்திலும் கரத்திலும் நெஞ்சிலும் மார்பிலும்புகுந்து பின்புறந்தடாரித்துவருத்தப்படுத்தி வாட்டி சாளரத்துவாரம்போற் சந்தாக்கி சாரைப்பாம்பேபோற் சரசரவென்று செல்லுகின்ற பாணங்களைக்கண்டு இதுவரையிலும் சுத்தவீரனென்றுபிழைத்த நான் பெண்பாலாகிய ஒருவன் கணையாலிறக்கும்படி நேரிட்டதல்லவாவென்று ஊழைநினைத்து சற்றுநேரந்துக்கப்பட்டு நமக்குச்சமானமானவன் கையாலிறக்கப் பாக்கியம்பண்ணுமற் பேனோமே யென்றெண்ணி நல்லது இப்படிப்பட்ட பாணந்தொடுக்கும் வல்லபம் இச்சிகண்டிக்கு எப்படியுண்டாகும் இவன்விடும்பாணம் நமதுதேகத்தை யிவ்வளவு வருத்தப் படுத்த மாட்டாதே ஆகையால் இதைப்பரிசோதிக்க வேண்டுமென்று தன்னுடைய மார்பிற்பட்ட அர்த்தசந்திர பாணத்தைப்பிடித்து அந்தப்பாணத்தின் அடியிலெழுதியபெயரைப் பார்க்கும்போது தனஞ்செயனென்றெழுதி யிருப்பதைக் கண்டுநான்செய்த தவத்தின்வாழ்வேவாழ்வென்று மனமகிழ்ந்துஉடலபிமானம் உயிரபிமானம் என்பதை உதறிகிரியாண வயிராக்யதீக்ஷை வகித்தவராய் பரிசுத்தவான்மா பிரியும்போது பூப்பரிசமாய்த் தர்ப்பாசனத்திற் சயனிக்கவேண்டுமென்று சான்றோ ருரைத்திருக்குந் தன்மைப்படித் தானேறியிருந்த இரதத்தை விட்டிறங்கி யிருந்த இளைப்பினை யுடையவராய்ப் பூமியிற் சந்திர

கலைபொருந்தச்சயனித்துக்கொண்டு ஆண்சிங்கம்போன்ற வீஷ்மாசாரியர் அரசர்க்கரசனாகிய துரியோதனனுடைய தம்பிமார்கள் தன் சமீபத்தினின்று இரங்குகின்றதைப் பார்த்துக்கையமைத்து அப்பா, பேரப்பிள்ளைகளே நீங்கள்விசனப்படாதீர்கள் நம்மாற்கூடியவரையிலும் போர்புரிந்து அநேகங்கோடி அரசர்களையும் படைவீரர்களையுங்கொன்று அவர்கள்தொடுத்தபாணங்களினால் நமது படைகளும் நாமும்நொந்தோம், இதல்லாமல் எனக்குப்பகையாகயேற்பட்ட அம்பையென்பவளுடையவஞ்சினம் நிறைவேறுங்காலமும்நெருங்கினமையால் இனிமேலென்னை நம்பவேண்டாம் இதுவரையிலும் இன்றுநடத்தும்யுத்தத்தை நிறுத்தி, அதிசீக்கிரத்தில் உங்கள் தமையனாகிய துரியோதனராஜனை யடுத்து அவன் பாதத்தில்வணங்கி தமையனுடைய வார்த்தைக்கிரண்டுசொல்லாயலிருந்து எந்தக்காலத்தில் யுத்தஞ்செய்யவேண்டியதோ, அந்தக்காலமுஞ் சமயமும் பலாபலமுதலியவற்றையும் அறிந்துபோர்புரிந்து பூமியிற் புகழ்படைக்கக்கடவீர்கள், மேலும் நீங்களெல்லாம் எப்படிப்பட்ட தந்திர எந்திர மந்திர சதுர்வித உபாயங்களையுங் கொண்டு போர் செய்தாலும் கைவல்யமாகுங் காரியமொன்றுமில்லை, தங்களுடைய ஆண்மையும் பெருமையுங்கெட்டு உலகத்திற் பழிக்குடம்பெடுக்க வேண்டுமல்லது பின்னைவேறொன்று நடவாது. காதுக்கினிமையாகச் சொல்லுவோர் வார்த்தையைக் களிப்பாய்க்கேட்டுக் கண்கலக்கப்படாதீர்கள், பூர்வத்திற் "பேரிகையோசை கேட்டிறந்த பெருநரியின்கதைபோல்" முடியும் ஆகையால் புத்தியாகப் பிழையுங்கள் நீங்கள் போங்களென்று செலவுகொடுத்தனுப்பினர். அந்தவேளையில் பரமாத்மாவாகிய ஸ்ரீகிருஷ்ண பகவான் பாஞ்சசன்யத்தை யெடுத்துப் பவளம்போன்ற தமது திருவாயில்வைத்து முழக்கினர். அந்தத்தொனியானது வீஷ்மாசாரியருடைய செவிகளிற் கேட்டவுடனே, சிந்தை நிலைத்துத் தத்துவசுவானுயோக நிலையில் நின்று சர்வாந்திரியாமியாகிய சநார்த்தனனுடைய திருவடியையுள்ளத்திருத்திச் சஞ்சல சித்தத்திற் கேதுவாகிய பிரபஞ்சமாயா விசித்திரத்தை மறந்து இனிமேலும் ஜனனவேதனைச்செய்யாத திருநாமங்களை நாத்தழும்பேறச் சிந்தனை செய்து தேகத்திலுருவியோடிய அம்புகள்போகத் தைத்துக்கொண்டிருக்கும் மற்றப் பாணங்களெல்லாம் நிரியாணயோக சயனமாகச்சாய்ந்த வீஷ்மாசாரியருடைய இருக்கையை இந்திரன்முதலாகிய தேவர்கள்கண்டு உவந்து தேவதுந்துபி முழக்கிவைத்து தேவவிரதனென்றும் காங்கேயனென்றும் வீஷ்மனென்றும் பேர்பெற்ற சித்தசுத்தியையுடைய வுத்தமன் தேகத்திற் செம்பொன்மலர்களைவாரி அம்புவிநிறையக்கும்பத்தாரையாய்ச்சொரிந்தனர். இவ்வாறு வீஷ்மர் சேனைவிட்டிழிந்த தன்மை யெப்படியிருந்ததென்றால் அருட்சலம் உட்கொண்டுநிறைந்த மேகம் மலைவிட்டிறங்கியதைப்போலும், ஆகாயத்திலூருஞ் சூரியன் இரதநீங்கி வழுவியதைப்போலும், கற்றூணைக் கிழித்துப்புறப்பட்ட நரசிங்கத்தைப்போலு மிருந்தது. அவ்வேளையில் குருகுலபுங்கவன் போர்முகத்திலிளைத்துப் புவியிற்சாய்ந்தானென்று துளபமாலையணிந்த ஸ்ரீகிருஷ்ண பகவானும் அருச்சுனராசனும் ஏங்கி மனமயங்கி உள்ளம்வருந்தி இருகண்களிலுஞ் சலம்பெருகும்படியாய் வாய்புலர்ந்து இரதம்விட்டறங்கி பாட்டனி

டத்திற்குவந்தனர். அப்போது இரணக்களநிறைந்த இருவகைச்சேனைவீரர்களுந்திரண்டுவந்து சேனைபதியாகிய வீஷ்மரைக்கண்டு நெஞ்சழிந்து நொந்து நைந்து வருந்தியிரங்கி வையகமெல்லாம் பேரோசை நிறையும்படியாய் வாய்விட்டுக் கதறினர். உடல்பதறினர். அச்சமயத்தில் தருமராசன் துரியோதனன் முதலாகிய அரசர்களும் பேரொலியுடன் பொங்கி உகாந்தகாலாக்கினியினால் உலகம்பொன்றும் உருப்படிதோற்ற, தம்மைத் தாமேமறந்து தளர்ந்தோடிவந்து ஆண்சிங்கம்போன்ற பிதாமகனுடைய பாதங்களைக் கரத்தாற்றடவி சிரமேற்கொண்டு கண்ணீர்வடித்து மண்மேல்விழுந்துபுரண்டழுதனர். அதெப்படியென்னில், வீரத்திறமும் வாகுவலியும் விற்படை தேர்ப்படையின் சாகசமும் திடதீரமும்அழகும் அஷ்டலட்சுமிவாசமும் சீருஞ்சிறப்பும் புகழும் மகிழ்வும் நல்லகேள்வியும் இரக்கமும் தாதுர்த்துவமாகிய ஈகையும், சீவகாருண்யமும், உணர்வும், பேரறிவும், நன்னெறியும், நன்னீதியும், சத்தியமும், நன்மையும், சித்தசுத்தியும், அன்பும், அறமும் இவைகளெல்லாம் இச்சந்திரகுலத்திற்றேவரீரிருந்த இந்நாள்வரையிலும்வளர்ந்துபடர்ந்துகொண்டிருந்தன அவைகளெல்லாம் இன்றைக்கே இறந்து தேவரீருடன் கூடத் திரும்பிவிட்டமையால் வேலியழிந்த பயிரானோம், மின்னலழிந்தமழையானோம், மாலையிழந்த மணமானோம், மதிபோயொழிந்த குணமானோம், எங்கள் வமிசபாக்கியமே என்றும் இந்தக் குலக்கோட்டைக்கு மதில்போலிருந்தருளிய கோவே! சத்தியநெறி படரும் கற்பகக்காவே! எங்களுக்கிஷ்டமாகிய தேவே! தாஷ்டீக மேருவாகிய தருமதேவதையே! தாயாய் தந்தைதாய்த் தமராய்த்தானுமாய்ச் சகலமுமாயமைந்தாண்ட தரியலரேறே! தேவரீருடைய தந்தை சந்தனுமகாராசன்முன் பரிமளகந்தியினிடத்தில் இன்பம் அனுபவிப்பதற்காகத் தவமே தனக்கின்பமென்று சிந்தைதெளிந்து விரதமேற்கொண்டு ஈடணாத்திரயங்களையும் விடுத்து மன்மதபாணத்தைமாற்றிய மாதவனே! ஞானச்செல்வமே! செஞ்சேவகமே! பழமையாகிய இந்தச் சந்திரமரபினுக்கு முதல்வனானவனே! இவ்வுலக முழுமைக்கும் எங்களை இறையாக்கிவைத்து இருகண்களுங்களிக்க விருந்து பார்ப்பாயென்றிருந்தோம் ஐயையோ தெய்வமே, இனி எங்களுக்கு ஆதரவு ஆரிருக்கின்றனர். எந்தையே! எங்கள்கோவே! இனி எங்களைப் பாராளச் செய்யும் பாக்கியரெவரோ எங்கள் பாவமே இப்படி பண்ணினையோவென்று பலபலவாறு முறையிட்டழும் பிள்ளைகளைப்பார்த்து அப்பா குழந்தைகளே கலங்காதீர்கள் பயப்படாதீர்கள் எனக்கொன்றுமில்லை இப்போது நானிறக்கவுமில்லை. அதேனெனில், பாதாதிகேசவரையிலும் பட்டிருக்கும் பாணங்களினால் வருந்திநொந்து அப்பாணசயனத்தின் மீதுசாய்ந்திருக்கிறேன், ஆனால் 'காண்டீபன் கணைக்குக் கல்லுங் கரையும்' என்னும் பழமொழியைப்போல் இந்த அர்ச்சுனனுடையபாணங்களினால் எப்படிப்பட்ட உயிரும்மாறிப்போம். அப்படிமாறாமல் யோகாப்பியாசஞ்செய்த பழக்கத்தினாலும் எப்போது உயிர் விடவேண்டுமென்று நினைக்கின்றையோ அப்போது உயிர்விடலாமென்று என்றந்தையாகிய சந்தனுமகாராசன் எனக்குக் கொடுத்திருக்கின்ற வரத்தினாலும் உத்தராயண புண்ணிய காலத்திலிறந்தால் மோக்ஷமென்றிருப்பதி

னுலு மிந்தப் பூததேகத்தைவிட்டுப் பிராணன் புறப்படா வண்ணம் நிறுத்திப் பூரண ஞானத்துடன் பொறிபுலன் குன்றாமற் பொருந்தி யிருக்கின்றேன், நீங்களெனக்காக வருந்த வேண்டாம், சிருட்டி கர்த்தாவாகிய பிரமனால் ஏற்படுத்தி விதித்த தொல்லைவினையைத் தொலைப்பவரொருவருமில்லை எந்தக் காலத்தில் எப்படி விளையவேண்டியதோ அப்படியெல்லாம் விளைத்து முறித்துவைக்கும் அந்த ஊழ்வினையென்பது ஆகலால் வினைக்குமிஞ்சிய தொன்றுமில்லை, இதை வேறாகக் கருதி மேல்வருந் தொல்லை வினையனக்குத் தானே நிகராய்ச் சொல்லும், மற்ற சாஸ்திர புராணாகமங்களையும் வெல்லுங் கணக்கும் வயித்திய நூலைக்கொல்லும் திரிகாலக்கடனையுணர்த்துஞ்சோதிடத்தைக் கெல்லும் வினைக்கு மிஞ்சிய தொன்று மில்லை, மேலும் "ஊழிற்பொருவலி யாவுள மற்றொன்று சூழினுந்தான் முந்துறும்" "வகுத்தான்வகுத்த வகையல்லாற்கோடி தொகுத்தார்க்குந் துய்த்தலரிது" என்று இப்படியெல்லாம் ஊழ்வினையைக் குறித்துப் பெரியோர்பேசியிருப்பதால் நாம் ஒன்றுக்கும் விசனப்படலாகாது பார்த்தீர்களா எனக்கு இந்தவயதுசென்ற இதுவரையிலும் ஒருவருடையபாணமும் படாமலிருந்து காலங்கழித்தேன் இப்போது என்றேகத்தி லழுந்தும்படியாகிய கொழுப்போலொத்த பாணங்கள் தைத்து வருத்தமுற்றதினால் உங்கள் கண்ணுக்கெதிரே வீழ்ந்திருக்கின்றேன் ஜன்மாந்திரத்திற் செய்த பாபத்திற்குத்தக்க பயனிதுவாகு மென்றுரைத்துப் பின்னும் பேரன்மாரைநோக்கிப் பரிதாபமடைந்து அப்பா நான் சொல்லும் படியாகிய வாக்கியத்தை அக்காலத்திற் கேளாமற் போனாலும் இக்காலத்தி லாயினும் யோக்கியமாகக்கேளுங்கள், அதனாற் சிலாக்கியப் படுவீர்கள் பாக்கிய வான்களே நீங்கள் இருதிறத்தவர்களும் வெகு சேனைகளைக் கூட்டிக்கொண்டு வந்து செய்த யுத்தத்தில் என்ன நலத்தைக் கண்டீர்கள், என்ன இன்ப மறிந்தீர்கள், என்ன பலன்பெற்றீர்கள், இன்னமெத்தனை கோடிகாலம் யுத்தஞ்செய்தாலும் நீங்களனுபவிக்கப் போகின்றது துன்பமேயன்றி இன்பமென்பது எப்போதுமிராது. ஆகையால் வஞ்சகங்களைப்போக்கி மனக்குறையைநீக்கிப் பொய்யைக்கெடுத்துப் பொறாமையை விடுத்து நீங்கள் நூற்றைவர்களும் நமது பெரியோர்கள் கலந்துபொருந்தியிருந்ததன்மையைப்போல் நால்வரும்புகழநாட்டைப்புரந்து நாளைக்கழித்து நலம்பெற்று வாழுங்கள் நற்குலப்பவுத்திரர்களே, இனிமேல் நானொன்றும் விசேஷித்துச் சொல்லவேண்டிய தில்லையென்று வீஷ்மர் பலவகையாகிய தர்மங்களைப்போதித்தனர். 'இப்படியாக ஒப்புரவொழுகு' என்னும் வாக்கியப்படி தருமநீதிசொல்லி உண்மைப் பொருளைத் தெரிவித்தகங்காபுத்திரருடைய வார்த்தையைக் கேட்டு போகவாரிப் புணர்ப்பிற் பொருந்திய தருமராசன் முதற்சத்தியவான்களென்னும் பாண்டவர்கள் வீஷ்மரைவணங்கி தேவரீரிஷ்டப்படி ஒருமையாயிருக்கச் சம்மதித்தோமென்றனர், அப்போது துக்க சமுத்திரத்தில் மூழ்கும்படியா யிறங்கி யிருக்கிற துரியோதன ராசனைப் பார்த்து உன்கருத்தென்னவென்று வீஷ்மர்கேட்க, ஐயா இந்தக்கர்மபூமியில் அனுபவிக்கும் ஆசைப்பெருக்கமாகிய மோகவாரியை விரும்பிய நான்பாண்டவர்களுக்குப் பூமியைப் பகுந்துகொடுத்து அவர்களுடன்கலந்து பொருந்தி

வாழ்வதற்கு எவ்வளவேனும் எனக்குமனமில்லை, போதுமான வரைக்கும் போர்புரிந்து இப்போர்முகத்தில் முடிந்து போனாலும் போவனேயல்லது இப்பஞ்சைகளாகிய பாண்டவர்களுக்குப்பயந்து இளைத்து இந்தப்பூமியைப் பகுந்துகொடுத்து அவர்களைப் பணிந்துவாழ்ந்தான் துரியோதனனென்று பார்த்திபர்முதலானவர்கள் நகைப்பகழியாகிய சொற்கேட்டு உயிர்வாழமாட்டேனென்றனன்.

அதை வீஷ்மனென்னும் பாட்டன்கேட்டு குறுநகைசெய்து சிரமசைத்து இன்னரின்னர், இக்காலத்தில் இப்படி அநுபவிப்பதென்றும் இவ்விதமா யிறப்பதென்றும் விதித்திருக்கும் வினையின் பயனையாவர் கடக்கத்தக்கவர்கள் 'விதியின்வழி மதிசெல்லும்' என்னும் மேலோர் வாக்கியப்படி ஊழின்பலிஷ்டமெப்படி யிருக்கின்றதோ அப்படிமுடியும் உத்தமனே உன்னை வெறுக்கவேண்டிய தில்லைஎன்று சற்றுநேரம் உன்னிப்பார்த்து ஏதேது இனிநாம் சொல்வதிற்காரியமில்லையென்று தெரிந்துகொண்டு குறைவில்லாத தாளாண்மை பூண்டு, பூரித்த புயபலபராக்கிரம சாலியாகிய வணங்கா முடியோனைநோக்கி, மன்னர்க்கு மன்னனாகிய மதிகுலவரசே, என்னுடைய முடியானது அடிக்கடிசாய்ந்து போவதினால் அந்தமுடி சாயாதிருக்க, ஒரு உபாயஞ் செய்யவேண்டு மென்று வீஷ்மாசாரியாகிய பாட்டன்சொல்ல, அந்த மொழியை கேட்டு இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தின்றூவி இவைகளாற் செய்த பஞ்சணைகளும் உயர்ந்த தலையணைகளும் பரியங்கமாகிய கட்டிலும் கொண்டுவரும்படி கட்டளை யிட்டனன். அந்தவார்த்தையை விரதசீலனாகிய வீஷ்மர்கேட்டு வெறுப்படைந்து உதட்டைப்பிடிக்கி நந்தியாவட்டமாலையணிந்த நரேந்திரனைப்பார்த்து, அடா குழந்தாய்? பரிமளகந்தியென்னுஞ் சிறிய தாய்க்காக தாசராசனுடைய கழிக்கரைநகரில் கையெடுத்து வீஷ்மம் பெற்றுக்கொண்ட பதினெட்டாம் வயதுமுதல் இதுவரையிலும் ஒழித்துப்போட்ட பஞ்சசயன முதலாகிய சுகபோக இன்பங்களை யெல்லாம் இப்போது நான் பெறத்தக்க மரியாதையுமுண்டோ அப்பனே, அப்படிநான் பெறுவேனாயின், ஆதியிற்கொண்ட என்வீஷ்ம விரதத்திற்குப் பங்கம் வருமே தங்கமாகிய சிங்கமே ஆதலால் எனக்கு வேண்டாமென்று அவைகளை மறுத்து மேலுஞ் சொல்லுகின்றார். மதிகுலதிலகனே! நான்கொண்ட வீஷ்மத்திற்கும் நிரியாண காலத்திற்குந் தகும்படியாய்ச் சரசயனங்கிடைத் திருப்பதினால் இந்தப்பாப்பானது பஞ்ச சயனத்திலு மேலாகிய சுகத்தைத் தரத்தக்கது, ஆகையால் வைதிகத்துக்குரிய இந்த இனமாகவே அமைத்து, என்சிரந்தாழா திருக்கச் செய்யுமென்று சொல்ல அம்மொழி கேட்டுப் பாணங்களினாற் றலைசாயுமற்செய்வதெப்படியென்று துரியோதனன்விழித்துக் கொண்டிருக்கும்போது வீரகண்டை தரித்து அண்டையில்நின்ற திண்டோள் விசயனைப்பார்த்துகுருகுலச்செல்வமே!என்முடியின் தாழ்வுநீக்கமாட்டுவையோவென்றுவீஷ்மாசாரியர் கேட்டமாத்திரத்தில் வரப்பிரசாதத்தால் உயிரைநிறுத்தி வைத்திருக்கும் மகானுபாவராகிய தேவவிரதன் சிந்தைகளிக்கும்படி யோகதண்டம்போன்ற மூன்றும்பிறைக்கொப்பாகிய அர்த்தசந்திர பாணத்தை யெடுத்து விடுத்து

அவருடையதலைசாயாம லுயரும்படியாய்செய்து உடனேசோமபாணந்தொடு த்து தலையுங்கழுத்தும் உருத்தாதிருக்கும் படியாய்ப் பக்குவம் பண்ணினன் அப்போது சாந்தமூர்த்தியாகிய தருமபுத்திர மகாராசனுனவர் நாலுபக்கத்தி லும் நவமணிக் கால்நாட்டி மேலாகப் பந்தல்மேற் கட்டியாலமைத்து திரைச் சீலையும்விடுத்து காவல்முதலிய உபசாரத்திற்கு ஆள்களும் அமைத்தனர், அக்காலத்தில் வீமசேனனும் நகுலசகாதேவரும் தர்ப்பாசனம் அமைத்து தளர்வுநீக்கினர், அப்போது வீஷ்மாசாரியானவர் துரியோதனராசனை அழை த்து அப்பனே, நான் இனியெது சொன்னாலும் உன்புத்தியிற் படவில்லை, சொல்லா திருப்போமென்றால் என்மனமுங் கேட்கவில்லை, இப்போதாயினும் நீ யோசிக்கத்தக்கது, என்னுடைய விரதமறிந்திருந்தும் மெத்தையுந்தலையணை யுங்கொண்டுவரச்செய்தாயே அருச்சுனனிடத்திற் சொன்னதற்கு ஒருபிறை முகப் பாணத்தினால் என்குறைகளை அகற்றினன் இப்போது நானிருக்குஞ் சவுக்கியத்தை நீயே அறிந்துகொள், இப்படிப்பட்ட வீராகிய பாண்டவர்களை நீங்களெப்படிவெல்லப்போகிறீர்கள், ஐயோ புத்ரமித்ர சகோதராளுடன் மாய் ந்து போவீர்களேயல்லது ஒருக்காலும் வெல்ல மாட்டீர்களே மதிமறப்பிற்றோன் றியும் மதியற்றவர்களே யென்று இரகசியமாகச் சொல்லவேண்டிய காரியங் களைச்சொல்லியும் அவ்வார்த்தையை காதிற் கொள்ளாமற்போன பேரனைக் கண்மலர்திறந்து உறுத்திப்பார்த்து வினையின்பயனேபயனென்று தருமராசன் முதலியவர்களால் வகுத்த சயனத்தில் நோவில்லாமல் நொடியில்லாமல் தே த்தி லுருவுநின்ற பாணங்களைப் பார்த்துக்கொண்டு இவ்வேளையி , லிறந்தால் முத்தியில்லையென்று சூரியன் வடபால்வரும் உத்தராயணபுண்ணியகாலம்வரை க்குமிருந்தனர், அவராரொனில் சிறுபோது முதற்கொண்டு கேள்வியென் னும் மந்தரகிரியாய் மதித்து வருகின்ற தெள்ளமுதாகிய முனிவாருடைய சொல்லமுதத்தைக் காதின் வழியாய் நுகர்ந்து. களங்கரகிதமாயிருந்த காங் கேயனென்னும் வீஷ்மாசாரியர். அவ்வேளையில் அங்கதேசாதிபதியாகிய கன்னன் ஓடிவந்து அலறிக்கதறி மோதிவிழுந்து ஐயாவென்று சோனமேகத் தூறலைப்போற் கண்ணீர்சொரிந்து காலடியிற்படிந்து புரூருவகுலப் போரே றே! சகலசாஸ்திரங்களு முணர்ந்து போரறிவிற்சிறந்த தாஷ்டிகபேருவே! சந் திரகுலதீதோன்றலே! நாயினுங்கடையேனுகிய நான்கல்லாத விவேகசூனியத் தால் துன்பத்தை விளக்கும் துஷ்ட அறிவினால் தேவரீரை மதியாமல் துதி யாமல் மனத்திற் பதியாமற் சொல்லிய சொற்பமாகிய அற்பச்சொற்களையெல் லாங் குற்றமாகக் கொள்ளாமல் நான் துதிபண்ணியதாய்க் கொள்ளவேண் டும். அன்றியும் முன்னாளில் நான்செய்த குறைவாகிய பொல்லாங்குகளை யெல்லாந் தேவரீருடைய மனத்தில் வைக்காமல் சமிக்கவேண்டுஞ் சாந்த மாணிக்கமே யென்றுமலரடியில் முடிசூடிவணங்கினன், அப்போது கண்ணை விழித்துப்பார்த்து ஆராவமுதினுக் கொப்பாகிய அருணிறைந்த கருணைக் கடல்போன்ற வீஷ்மாசாரியர் கன்னனைத்தேற்றி ,அங்கதேசத் தலைவனுகிய அப்பனே, உன்னுடைய சொற்றிறமையாலும் விற்றிறமையாலும் துரியோதன னுக்குத் தெரியச்சொல்லா முறைமையினாலும் உன்னை அர்த்தரதனுகச்சேர்த்

தேன், அப்படி நான்சேர்க்காமல் அதிரதத்தலைவனில் உன்னைவைத்து நீயும் விற்பிடித்துச் சத்துருக்களுக் கெதிரிற் செல்லையானால் உன்னை வெல்லத் தக்க வல்லமை பெற்றவர்களுண்டென்று சொல்லத் தக்கவர்களு முண்டோ நல்லவனாகிய கன்னனே இப்போதும் கௌரவகுல முதல்வனாகிய துரியோதனன் உன்னை வெகுவாக நம்பியிருக்கின்றான். நீ, எந்தப் பாடாகிலும்பட்டு ஏகசக்கர முடிசூட்டி இப்பாராளச் செய்யுங்கடமை உன்னுடைய தென்று சொல்லி துரியோதன மகாராசனை அழைத்து கன்னன்கையி லொப்பித்துக் காப்பதுன் கடனென் றுரைத்தனர். அப்போது துரியோதனன், கண்ணீர் சொரிந்து கவலைகொண் டிருப்பதைப்பார்த்து வீஷ்மர் தன்கையாற் கண்ணீர் துடைத்து, துரைமக்களிற்சிறந்த துரியோதனமகாராசனே வரிவிற்றாங்கிய இக்கன்னமகாராசன் அரசர்களுக்குத் தலைநோகச்செய்யுங் கோடைகாலத் திடிபோன்றவன் அதிபராக்கிரம வியாக்கிரம் போன்றவன், ஆகையாற் கால மறிந்து சேனாபதிபட்டங்கட்டி இவனைக்கொண்டு செய்யும்படியாகியசெய்கை களை நாளைப்போர் முதற்கொண்டு நடப்பித்துக்கொள்ளுமென்றுசொல்லினர்.

இப்படி யிருக்கும்போது துரோணாசாரியருங் கிருபாசாரியரும் அசுவத் தாமாவும்வந்து வீஷ்மாசாரியரைக்கண்டு மனநொந்து கண்ணீர்வடித்து அவருடைய கருணைப்பிரவாக வருளைப்பிடித்து ஐயா, வனத்தில் தவஞ்செய்து வைதிகனாகியிருந்த என்னை உங்களினத்திலொருவனாக்கிப் பேரும்பெருமையும் என் சபதத்தையு முடித்து என்னருமையைப் பாராட்டி அருளளித்தாண்ட சத்தியவிரத அரசனே, இனி யென்னை யாதரிப்பவ ரெவரோ, ஆர்முகம்பார்ப் பேன் நான் அவனியிலிருக்கேன் அடியேனும்வந்தேன் வந்தேனென்று துரோ ணாசாரியர் தரையிலறைந்து முறையிட்டுவிழுந்து குறைமொழிந்தனர், கிருபா சாரியருங் கிட்டிநிலத்திற் றலையை முட்டிக்கொண்டு நீதியையுடைய நிருபரே உம்முடைய தந்தையாகிய சந்தனுமகாராசன் என்னை யெடுத்துவளர்க்கஅவருடைய நினைவறிந்து என்னைக் காத்தருளிய நேயனே, நான் இப்போது உன்னைப்பிரிந்து பேயனாய்ப் போயினேனே பூரிக்கும்புயனே பொங்கிய அருளே பெருமைக்கணியே மலர்ந்தவதனமே மணிப்பிரவாளமே மதிகுலதிலகமே மானபூஷணமே வைராக்கிய மலையே சத்தியநெறியே தருமசொரூபியே உடல் வருந்தியதோ உன்னுடன் வாராமல் உற்றனன் பாவிஎன்று கலங்கியேங் கிச் சோர்ந்தனர். அப்பால், அசுவத்தாமாவும் ஆலைக்கரும்பென வுடைந்து, வேலைத்துரும்பென வலைந்து, சோலைச்சுரும்பென விரைந்து சோபித்தரும் பெனக்கரிந்து துயரங்கொண்டார். இப்படி சிந்தைநொந்த இவர்களைப்பார்த்து விசனமகற்றிக் காரணகாரிய நுட்பங்களைச்சொல்லி எல்லாந்தெரிந்த நீங்களே இப்படி விசனப் படலாமாவென்று அவர்களைத்தேற்றி வணங்காமுடி பெற்ற மன்னனைக்காட்டி, உங்களாலானவரையும் யுத்தஞ்செய்து வெற்றி பெற்று அரசனுக்கு முடிசூட்டக் கடவீர்களென்று உரைத்து இன்னம் பற் பல தேசாதிபதிகளாகிய அரசர்களையும் படைத்தலைவர்களையும் மன்னர் மண்டலீகர் மந்திர தந்திரத் தலைவரையும் பட்டுவான்கள் கட்டியர்முதலிய அரண்மனை வேலைக்காரரையுங்கண்டு விசனப் படாதீர்களென்று அன்புடன் ஆதரங்கூறிப் போர்முகத்தில்வருந்தி யதல்லது என்னாலும் விசனப்பட்டிருக் கின்றீர்கள், ஆகையால் நிலைபெற்றிருக்கும்படியாகிய பாடிவீடுபோய்ச்சேருங்க ளென்று யாவருக்கும் விடைகொடுத் தருளினர்.

இப்பால் சந்தனுவாகப் பிறந்திருந்த மேற்றிசைத் தலைவனாகிய வருணனைக் கண்டு இன்று உன்மைந்தனாகிய தேவவிரதன் பட்டானென்று சொல்வதற்காக விரைவிற் சென்றவனைப்போற் சூரியன் மேற்றிசை யடைந்தனன், அந்தச்சூரியனால் மகனிறந்த துயரங்கேட்ட வருணனானவன் பூமிமுழுவதும் நிறைய இரத்தக்கண்ணீர்விடுத்து அழுத தன்மைபோற் செவ்வானம் பரந்தது. வீஷ்மரிறந்த விசனம் யாவருக்கும் நிறைந்ததுபோல் இரணக்களமெங்கும் இருட்கலந்துற்றது, கங்காதேவி யானவள் களத்திற்சாய்ந்த தன்மகனைப்பார்க்க வந்ததைப்போற் சந்திரனுதயமாயினன், தாயாகிய கங்கைதன்கரங்களாற் றன்குமாரன் றேகத்தைத்தடவிப் பார்ப்பதுபோல் சந்திரகிரணங்கள் பரவியது, அந்தப்பிள்ளையின் தேகத்திற்பட்ட பாணங்களைப்பார்த்து பெற்றவயிறெரிந்து தேகமுழுமையும் பொங்கிக் கொப்புளங் கொண்டதைப்போல் நக்ஷத்திரங்கள் பிரகாசித் தரும்பியது, சந்திரனை வெள்ளைமேக மறைத்த தன்மையானது கண்கள் வழியினும் மூக்கின் வழியினும் பெருகும்படியாகிய சலங்களைப் பகீரதியானவள் வெள்ளை வஸ்திரத்தாற் றுவட்டிக்கொள்ளு முகத்தை யொத்திருந்தது, அந்தச்சந்திரனிடத்திற் களங்கந்தோன்றிய தன்மையானது கண்ணினுக்கிட்ட மைகலந்த களங்கம்போ லிருந்தது. அதல்லாமலும் நட்சத்திரங்க ளுதிர்வது கங்கையானவள் புத்திர சோபத்தால் மார்பிலறைந்துகொண்டபோது மணிவடமறுந்து உதிர்ந்தவாறுபோலிருந்தது. சமுத்திர விரைச்சலானது கங்காதேவியார் கூச்சலிட்டழுந் தன்மைபோன்றிருந்தது. இரத்தங்களினாற்சிறந்த இரணபூமியானது பகீரதியாகிய தாயார் மார்பிலறைந்துகொள்ள அந்த அறையினாற்சிவந்த அங்கம்போலிருந்தது. இத்தன்மையாக அன்றிராத்திரி வெகுநேரம் வரையிலும் யுத்தபூமியைவிட்டு ஒருவரும் போகாமலிருக்க அதைக்கண்ட வீஷ்மர் விசனப்பட்டு என்னேஎன்னே மன்னர்களே முன்னேபோய் இளைப்பாறுங்களென்று விடைகொடுக்கப் பெற்று பாண்டுபுத்திரரும் அவர்களைச்சேர்ந்த படைமன்னரும் பாசறைபோய்ச் சேர்ந்தனர், துரியோதன மகாராசனும் அவனைச்சேர்ந்த படைகளும் பாடிவீடுபோய்ச் சேர்ந்தனர், அந்தச்சமயத்திற் சஞ்சயன்வந்து வீஷ்மாசாரியரைக்கண்டு துயருறும்போது அவனைத்தேற்றி அப்பா சஞ்சயனே, கண்ணில்லாத காவலனாகிய திரிதராஷ்டிரனென்னும் என்காதலனுக்கு என்முடிவையுரைத்து துயரம்வராவொட்டாமல்தேற்றி அவ்விடத்திற்காலம்போக்காமல் தவத்தைச் செய்யச்சொன்னார் வீஷ்மரென்று சொல்லுமென்று விடைகொடுத்து விடுத்தார். அப்போது சஞ்சயன் துரியோதன மகாராசனிடத்தில் வந்துகண்டான். அந்தச்சஞ்சயமுனியைக்கண்டவுடனே நாகக்கொடியோன்கண்கலங்கியழுது காவலராற்றேறி ஓ சஞ்சயனே, எமதுவமிச முதல்வனாகிய பாட்டன் இறந்த மார்க்கத்தை எந்தையாகிய திரிதராட்டிர மகாராசனுக்குச் சொல்லக் கடவையென்று தாவிச்செல்லுங் குதிரைபூட்டிய தடந்தேரினையுடைய துரியோதன மகாராசன் அஸ்தினபுரத்திற்குச் சஞ்சயனை அனுப்பிவைத்தனன். வழக்கப்படி சஞ்சயன்போய்த் தக்கவனா யிருக்கினும் இதுபெருஞ் சாவாகையால்மிக்கவிரைவிற்சொல்லும்படி யனுப்பிவைத்தானென்று பொருள்கொள்ள வேண்டும். இந்தப்படி துரியோதனன் சொல்லி அனுப்பிவைத்த செய்திகளைத் தார்வேந்தனாகிய திரிதராட்டிரனுக்குச் சஞ்சயன் றனிமையிற் சொல்லினன், இதைக்கேட்டவுடனே அடியார்களுக்கு அன்பிற்பெருகுங்கருணைவெள்ளக்கண்ணீரானது ஆறாகப்பெருகியோடுவதைப்போலஅழுது அலறி வீழ்ந்து கடகடவென்று புரண்டு ஐய ஐய தேவரீருடைய துணையைப்பற்றி என்பிள்ளைகளை யனுப்பினேனே நடுத்தெருவிளக்கும் நட்டாற்றுக்கோரையு

மாய்விட்டிறந்தீரோ! இனியென்மக்களுக்கு உற்றதுணை யெவரிருக்கின்றனர். என்னப்பனே என்னையனே என்றேங்கிக் குளிர்ச்சிகொண்ட சந்திரனைக் கண்ட தாமரைமலர் எப்படி முகங்கூசிக் குவியுமோ அப்படிபோல் முகங் கருகி மொழிகுழறி அடிக்கடி மண்மேலடித்துமோதிவிழுந்து மறுபடியுமெழுந்து ஐயா குலமானம் குடிமானம் குணமானம்முதலிய மானங்களெல்லாம் போய்விட்டனவே என்வயிற்றிற் கொடியநெருப்பிட்டதே பாழாகிய தீவினையென்று இருகண்களிலும் முகத்திலும் வயிற்றிலும் மார்பிலும் பளபளவென்று அறைந்துகொண்டு இன்றுதான் என்னிருகண்ணுமிழந்தேன், இதுமுதற்கொண்டு கண்ணற்ற பாவியாயினேன், அந்தோ! அந்தோ! எங்களையாவைக் கண்டவுடன் ஆகாயத்திலிருக்குந் தேவர்களெல்லாருஞ் செல்வமோங்கி வீறுபெற்று மகிழ்ச்சியடைந்திருப்பார்களேயென்று அழிந்தபுண்ணினிடத்தில் அக்கினியிற் காய்ச்சிய வேலாயுதத்தைச் சொருகியதுபோற் பதைபதைத்துத் துடிதுடித்துக் கைநெரித்து நாவுலர்ந்து நாபிவரண்டு நானிலஞ்சேர்ந்தனன். இப்படியாகச் சேர்ந்த வேந்தனை அருகிலிருந்தாரனைவரும் கண்டு எடுத்தணைத்து உபசரித்துத் தேற்றினர். அப்போது பக்கத்திலிருந்த சவுபல ராச குமாரியாகிய காந்தாரியம்மையோ மாமா மாமாவென்று மண்மேல் விழுந்து ஐயோ தேவரீரை நம்பியிருந்த எங்களையும் எங்கள் சிறுவர்களையும் தெருவில்விடுத்துச் சேணுலகஞ் சென்றீரோ தெய்வசிகாமணியே எங்கள் குலதெய்வமே திங்கள்குலவிளக்கே ஐயா இவ்வுலகாளவேண்டுமென்று ஆசைகொண்ட பாண்டவரென்னும் பாவிகள் என்பிள்ளைகள் சிலரைக்கொன்று மற்றப்பிள்ளைகளை வருந்தச்செய்து வென்று என்மக்களுக்கு ஆதாரபூதமாயிருந்த பரிசுத்தமாகிய உம்மையுங்கொன்று போட்டார்களே மகாபாதகியாகிய குந்திமக்கள் ஏடியம்மா என்மக்களெல்லாம் ஏழைகளாயிற்றே இனியேது, நாங்கள் பிழைப்போமென்பது வீண் ஆயிற்றே உலகத்திற்குப் பழிப்பாயிற்றே மக்களால் உற்றுரிமைக்கடன்பெறாமல் ஒண்டியாய் இறக்கலாயிற்றே என்வயிற்றெரிச்சல் அந்தக்குந்திக்கிட்டாதோ என்பாவங்கொண்டு பெருக்கத் தவியாரோவென்று பற்பலவிதமாகிய தூர்ப்பாஷைகளைப்பேசித்தொண்டைவறண்டு கண்டங்கம்மிக் காக்கைபோற்கூவி அரசனும் அரசன்தேவியும் வெந்துயரால் வெதும்பிச் சோர்ந்தனர், அவர்களை உயிச்சன் சஞ்சயன் முதலானவர்களுந்தேற்றி விசனத்தை மாற்றினர். திரிதராட்டிரனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு மன்னர் நெருங்கிப் போராடும் போர்க்களத்தில் வாசஞ்செய்யக் கட்டிய பாசறைபோய்ச்சேர்ந்து துரியோதன மகாராசனுக்குச் செய்திதெரிவித்திருந்தனன் சஞ்சயனெனவன். இப்பால் பத்தாநாட்போரிலிறந்த வீஷ்மாசாரியருடைய தன்மையைச் சந்தனுவாகிய வருணனுக்குச்சொல்லப்போன சூரியன் அருச்சுனனுடைய செய்கையைத் தேவேந்திரனுக்குஞ் சொல்லவேண்டுமென்று வந்தவனைப்போல் இந்திரதிசைக்குவந்து சந்தேக மறப்புகன்று இருளைவென்று இரைந்துவிரைந்து வேர்தூண்டிக்கொண்டு அநேகமாயிரங் கரங்கள் பிரகாசிக்கும்படிக் கீழ்த்திசையிலுதயமாயினன் என்று ஜனமேஜய மகாராசனுக்கு வைசம்பாயனர் சொல்லிக்கொண்டுவந்தனர்.

பத்தாம்போர்ச்சருக்கம்

முற்றிற்று.

---



பர்வம் - முற்றிற்று.

---